ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:.

# ஸ்ரீமத்வால்மீகிராமாயணவசன-

# பாலகாண்டம்.

யாவரும் எளிதிலுணர்ந்துகொள்ளும்பொருட்டு

ஸ்ரீமத் உபயவேதாந்த

ஏமெரிம்படி திருமலை லக்ஷ்மிகுமார கோடிகன்னிகாதானம்,

வித்துவான் அஷ்டாவதானம்,

மேல்பாக்கம்,

ாததேசிக்தாதாசாரியசுவாமியவர்களால்,

வடமொழியினின்றும், தென்மொழியில் வசனநடையாய்

மொழிபெயர்த்து,



சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

கோமளபுரம்,

இராஜகோபால்பிள்ளையவர்களால்,

எழுத்துச்சொற்றொடர்க் குற்றங்களற

ஆராய்ந்து,

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பாலகாண்டத்தின் அட்டவணை.

பாலகாண்டத்தின் அட்டவணை

முற்றிற்று.



ஸ்ரீராமபிரான் திருவடிகளேசரணம்.



# ஸ்ரீமத் வால்மீகி ராமாயண வசனம்

## கடவுள்வணக்கம்.

శుక్లాంబరధరంవిష్ణుం శశివర్ణంచతుర్భుజమ్।
ప్రసన్నవదనంధ్యాయేత్సర్వవిఘ్నోపశాంతయే॥

சுகலாமபரதரமவிஷணும சசிவாணமசதுாபுஜம
பரஸனனவதனநதியாயேத ஸாவவிகனோபசாநதயே

(இதனபொருள) வெளளைவஸதிரநதரிததிருககினறவரும், சந்திரனுக கொபபான வெண்ணிறமுடையவரும, நானகு திருததோளகளையுடைய வரும, மஙகளகரமான திருமுகமணடல முடையவருமாய எழுநதருளியிரா நினற ஸ்ரீமஹாவிஷ்ணுவை எலலாவிகனஙகளும நிவாததியாகுமபொருடடுத தியானஞசெயயவேணடும.

## வால்மீகிவணக்கம்.

కూజంతం రామరామేతి మధురం మధురాక్షరమ్।
ఆరుహ్య కవితాశాఖాం వందే వాల్మీకికోకిలమ్॥

*கூஜந்தம் ராமராமேதி மதுரம் மதுராக்ஷரம்*
*ஆருஹ்ய கவிதாசாகாம் வந்தே வால்மீகிகோகிலம்*

(இ-ள்) கவித்துவமென்கிற மரத்தின் கிளைமேலேறி ராமராம என்று மதுரமாகவும், மதுரமான எழுத்துக்களுள்ளதாகவும், கூவிக்கொண்டிருக்கிற வால்மீகிமுனிவராகிய குயிலை நான் வந்தனஞ்செய்கிறேன்.

యః పిబన్ సతతం రామ చరితామృతసాగరమ్।
అతృప్తస్తం మునిం వందే ప్రాచేతసమకల్మషమ్॥

*யஃபிபந்ஸததம் ராம சரிதாம்ருதஸாகரம்*
*அத்ருப்தஸ்தம் முநிம் வந்தே ப்ராசேதஸமகல்மஷம்*

(இ-ள்) எவர் ஸ்ரீராமசரித்திரமாகிய அம்ருதசமுத்ரத்தை எப்போதும் பானஞ்செய்துகொண்டிருந்தும் திருப்தியடையாதவராயிருக்கிறாரோ, பரிசுத்தராகியும் வருணகுமாரராகியும் உள்ள அந்த வான்மீகிமுனிவரை நான் துதிக்கிறேன்.

వాల్మీకేర్మునిసింహస్య కవితావనచారిణః।
శృణ్వన్ రామకథానాదం కో న యాతి పరాం గతిమ్॥

*வால்மீகேர்முநிஸிம்ஹஸ்ய கவிதாவநசாரிண:*
*ச்ருண்வந் ராமகதாநாதம் கோநயாதிபராங்கதிம்*

(இ-ள்) கவித்துவமென்கிறகாட்டில் சஞ்சரிக்கிறவான்மீகராகிய முனிவர்களின் சிங்கத்தினுடைய ஸ்ரீராமகதையாகியத்வனியைக்கேட்கின்றவெவன்தான் மேலானகதியை அடையாமலிருக்கிறான். காட்டிலுள்ள சிங்கத்தின் த்வனியைக் கேட்கிறவன் மேன்மையான (நட்கிற) வழியை அடைவான் என்கிற உபமானப்பொருள் இதில் தோன்றும்.

---

இந்த ராமாயணஞ்செய்த முனிவருக்கு வால்மீகி என்கிற திருநாமம் எப்படி வந்ததென்றால் (வல்மீகம்) புற்று - அதிற்பிறந்ததனால் வால்மீகி எனவந்ததென்றறிக. ஒருகால் இவர் தவஞ்செய்துகொண்டிருந்தபோது இவர்மேல் புற்றுக்கட்டி மூடிக்கொண்டது. அதுமழைபெய்துகரைய இவர் தோன்றினது பற்றிப் புற்றிற் பிறந்தவர் என்கிறது அன்றியும் (பிராசேதஸர்) என்கிறபெருமுனி (பிரசேதஸ) வருணன், அவன் குமாரராதலால் (பிராசேதஸர்), புற்றுக்கரையும்படி மழைபொழிவித்தவன் வருணனாதலால் அப்படிச்சொல்லப்பட்டது இவருடையகுலம் பிருகுகுலமாதலால் இவருக்கு

# ஆஞசனேயா ஸதோததிரம.

ఆంజనేయమతిపాటలాననం కాంచనాద్రికమనీయవిగ్రహమ్।
పారిజాతతరుమూలవాసినం భావయామిపవమాననందనమ్॥

ஆஞசநேயமதிபாடலானனம காஞசநாதரிகமநீயவிகரஹம
பாரிஜாததருமூலவாஸிநம பாவயாமிபவமாநநநதநம

(இ-ள.) அஞசனாதேவிகுமாரரும, மிகசசிவநத திருமுகமுடையவரும, மஹாமேருவுககொபபான திவயசரீரமுடையவரும, பாரிஜாதவிருகஷததின கீழேவாசஞசெயகிறவருமான வாயுகுமாரரான அனுமானை தியானிககிறேன.

యత్రయత్రరఘునాథకీర్తనం తత్రతత్రకృతమస్తకాంజలిమ్।
బాష్పవారిపరిపూర్ణలోచనం మారుతిన్నమతరాక్షసాంతకమ్॥

யதரயதரரகுநாதகீரததநம ததரததரகருதமஸதகாஞஜலிம
பாஷபவாரிபரிபூரணலோசநம மாருதிநநமதராகஷஸாநதகம

(இ-ள.) எவவெவவிடஙகளில ஸ்ரீராமபிரானுடைய ஸ்தோததிரம நடககினறதோ அவவிடஙகளிலெலலாம சிரசிற கைகூபபிப பணிகினறவராயும, ஆநநதககணணீா நிறைநத திருககணகளுடையவராயும, இராகஷதருககு எமனானவராயுமிரா நினற வாயுகுமாரரைச சேவியுஙகள.

మనోజవమ్మారుతతుల్యవేగం జితేంద్రియంబుద్ధిమతాంవరిష్ఠం।
వాతాత్మజంవానరయూథముఖ్యం శ్రీరామదూతంశిరసానమామి॥

மநோஜவம மாருததுலயவேகம ஜிதேநதரியமபுததிமதாமவரிஷடம
வாதாதமஜமவாநரயூதமுகயம ஸ்ரீராமதூதமசிரஸாநமாமி

(இ-ள.) மனதின வேகததையுடையவராயும, வாயுவின வேகததையொதத வேகமுளளவராயும, இநதிரியஙகளையெலலாமஜயிததவராயும், புததிமானகளுககுளளே சிறநதவராயும், வாயுவினபுததிரராயும், வானரசேனாபதிகளுககுள முகயராயுமிருககிற ஸ்ரீராமதூதரான அனுமானை நானதலைவணஙகிவநதனஞசெயகிறேன. (மனதினவேகமாவது காரியததைவெகுசீககிரததில கணடுபிடிககுமபடியான சகதி.)

---

(பாரககவா) எனகிற திருநாமமுமுணடு. அநதபபிருகு வமிசததிறபிறநத (பிரசேதஸ) எனகிற ஒருவருககுப புததிரா ஆதலால (பார்கவா) எனறும (பிராசேதஸா) எனறும பெயரெனச சிலா சொலலுகினறனா.

சதுாமுக பிரமா தமது லோகததிலே நூறுகோடி சுலோகமாயிருககிற ஸ்ரீராம சரித்திரததைப பூமியிலுளளோருககு விளஙகுமபடிச சுருககமாகச செயவிககவேணடுமென்று திருவுளளமபறறித தமது புததிரராகிய நாரதமுனிவரை வாலமீகரிடம அனுபபினரென்று தெரிநதுகொளளத தககது.

## ஸ்ரீராமாயணத்தின் துதி.

వాల్మీకిగిరిసంభూతా రామసాగరగామినీ।
పునాతుభువనంపుణ్యా రామాయణమహానదీ॥

*வால்மீகிகிரிஸம்பூதா ராமஸாகரகாமிநீ*
*புநாதுபுவநம்புண்யா ராமாயண மஹாநதீ.*

(இ-ள்) வால்மீகியாகிய மலையிற்பிறந்து ஸ்ரீராமபிரானாகிய கடலைச் சேருகின்ற பரிசுத்தமான ஸ்ரீராமாயணமெனகிற பெரியநதியானது உலகத்தைப் பரிசுத்தம் பண்ணக்கடவது.

శ్లోకసారసమాకీర్ణం సర్గకల్లోలసంకులం।
కాండగ్రాహమహామీనం వందేరామాయణార్ణవం॥

*ச்லோக ஸாரஸமாகீர்ணம் ஸர்க்ககல்லோலஸங்குலம்*
*காண்டக்ராஹ மஹாமீநம் வந்தேராமாயணார்ணவம்*

(இ-ள்) சுலோகங்களுடைய சாரமாகிய தண்ணீர் நிறைந்ததும், ஸர்க்கங்களாகிய அலைகளோடு கலந்திருப்பதும், காண்டங்களாகிய முதலைகளையும் பெருமீன்களையு முடையதுமான ஸ்ரீராமாயணமாகிற சமுத்திரத்தைச் சேவிக்கின்றேன்.

వేదవేద్యేపరేపుంసి జాతేదశరథాత్మజే।
వేదఃప్రాచేతసాదాసీత్ సాక్షాద్రామాయణాత్మనా॥

*வேதவேத்யேபரேபும்ஸி ஜாதேதசரதாத்மஜே*
*வேதஃப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத்ராமாயணாத்மநா*

(இ-ள்) வேதத்தினாலே அறியும்படியான பரமபுருஷன் தசரதருடைய குமாரராக அவதரித்தபோது, அவரை அறிவிக்கிறவேதமும் வால்மீகமுனிவரினின்றும் நேராய ஸ்ரீமத்ராமாயண ஸ்வரூபத்தினாலே அவதரித்தது.

## ஸ்ரீராமஸ்தோத்திரம்.

ఆపదామపహర్తారం దాతారంసర్వసంపదాం।
లోకాభిరామంశ్రీరామంభూయోభూయోనమామ్యహం॥

*ஆபதாமபஹர்த்தாரம் தாதாரம்ஸர்வஸம்பதாம்*
*லோகாபிராமம் ஸ்ரீராமம் பூயோ பூயோ நமாம்யஹம்.*

(இ-ள்) தம்மை ஆசிரயித்தவர்களுக்கு நேர்ந்த சகல ஆபத்தையும் போக்கும்படியானவரும் சகலசம்பத்தையும் பிரசாதிக்கும் தன்மை

யுள்ளவரும், உலகங்களெல்லாஞ் சந்தோஷிக்கும்படியான திவ்ய கல்யாணகுணங்களுள்ளவருமான ஸ்ரீராமபகவானை நான் அடிக்கடி தெண்டனிடுகிறேன்.

రామాయ రామభద్రాయ రామచంద్రాయ వేధసే।
రఘునాథాయ నాథాయ సీతాయాః పతయే నమః॥

*ராமாய ராமபத்ராய ராமசந்த்ராயவேதஸே*
*ரகுநாதாய நாதாய ஸீதாயா:பதயேநம:*

(இ-ள) யாவருடைய இருதயங்களுமிவரிடத்திறபொருந்திக் களிக்கின்றதைபபற்றி (ராம) என்று வசிஷ்டமாமுனிவரால திருநாமஞ்சாத்தப்பட்டவரும, மந்திரிமாா முதலியவாகளால தங்களுக்குச சகலநன்மைகளையுஞ் செய்யும்படியான குணத்தைப்பற்றி அததிருநாமத்தோடு (பத்ர) என்கிற சொல்லையுங்கூட்டி ராமபத்திரா என்று கூறப்பட்டவரும, அப்படியே நாட்டிலுள்ளோரால பாரதமாத்திரத்திலே தாபங்களையெல்லாம்போக்கி ஆநந்தத்தை விளைப்பதனால (சந்திர) என்கிற பதத்தைக்கூட்டி (ராமசந்திரன) என்று கொண்டாடப்பட்டவரும், முனிவாகளால இவருடைய சொரூபவுண்மையையறிந்து மோக்ஷ விரோதிகளான சகலபாபங்களையும போக்குமவராதலால (வேதஸ்) என்று துதிக்கப்பட்டவரும, அந்த ரகுவமிசத்தாாகளுடைய பெருமை இவா திருவவதாரத்தாலேவிளங்கிக் காக்கப்பட்டதனால அக்குலத்தாரால ரகுநாதனென்று எடுத்துச்சொல்லப்பட்டவரும, சீதாபிராட்டியால தனபிராணநாதனைப்பற்றி நாதனென்று கூப்பிட்டு மகிழப்பெற்றவரும, ஜனகபட்டணத்தாரால இவா நமமுடைய சீதையின் நாயகரென்று கொண்டாடப்பட்டதனால சீதாபதி என்கிறதிருநாமமு பெற்றவருமான ஸ்ரீராமபிரானுக்குத தெண்டஞ் சமாப்பிக்கிறேன்.

నమః కోదండహస్తాయ సంధీకృతశరాయచ।
దండితాఖిలదైత్యాయ రామాయాపన్నివారిణే॥

*நம:கோதண்டஹஸ்தாய ஸந்தீக்ருதசராயச*
*தண்டிதாகிலதைத்யாய ராமாயாபந்நிவாரிணே.*

(இ-ள்.) கையில வில்லேந்தி அம்புகளை அதில தொடுத்து அசுரர்களையெல்லாம சங்கரித்து ஆபத்துக்களை நிவாரணஞ்செய்யவல்ல ஸ்ரீராமமூர்த்திக்குத தெண்டஞ்சமாப்பிக்கிறேன.

(அ)

ఆర్తానామార్తిహన్తారం భీతానాంభీతినాశనం।
ద్విషతాఙ్కాలదణ్డం శ్రీరామచంద్రనమామ్యహం॥

ஆர்த்தாநாமார்த்திஹந்தாரம் பீதாநாம்பீதிநாசனம்
த்விஷதாங்காலதண்டம் ஸ்ரீராமசந்த்ரமநாமயஹம்

(இ-ள்) துன்பப்பட்டவர்களுடைய துன்பத்தை நீக்குகிறவரும், பயந்தவர்களுடைய பயத்தை நாசம் பண்ணுகிறவரும், சத்துருக்களுக்கு யமதண்டம்போ லிருக்கிறவருமான ஸ்ரீசீதாபிராட்டியோடு கூடின ராமசந்திர சுவாமியை நான் தண்டனிடுகிறேன்.



ஸ்ரீ ராமர் துணை.




ஸ்ரீமத்ராமயணம்.

# பாலகாண்டம்.

## முதல்சருக்கம்.

### நாரதர் வால்மீகமுனிவருக்கு ஸ்ரீராமசரிததிர முபதேசித்தது.

ஒருகால, பிரஹ்மதியானததிலும, வேதவேதாநதஙகளையோது வதிலும, ஒழிவிலலாதவராய, வியாகரண முதலான சாஸ்திரஙகளை யறிநதவாகளுககுளளும போதிககிறவாகளுக குளளுஞசிரேஷ்டராய, அஞஞானததைப போககுந திறனுடையவ ராதலாலே நாரதரென் னுந திருநாம முளளவராய இராநினற சிறநதமுனிவரை, பலவிருதங களை அனுஷ்டிதது நிமல இருதயமுடையவராயும, பகவானுடைய சொருபசுபாவஙகளையறிய ஆவலகொணடவராயுமுள்ள வானமீக முனிவா தெணடன் சமாபபிதது வினவினா.

எப்படியெனில்-இவ்வுலகத்தில்-இக்காலத்திலே சகலகல்யாணகுண ங்களுமுடையவராயார்-தமக்குக்கீழ்ப்பட்டவர்களோடும (இவர் தாழ்ந்த வரென்று அலக்ஷியஞ் செய்யாமல்) கலந்து நேசிக்கின்றசவுசீல்யகுண முடையவராயார்-தமக்கொருதுன்பமு நேராமலே பிறரைவெல்லுந் திற முடையவராயார் - பொதுவாயுஞ் சிறப்பாயுமுள்ள சகல தருமங்களையு மறிந்தவர்யார்-ஒருவர், உபகாரமென்று நினைத்து ஒன்றைச்செய்தால் அதைப்பெரிய உபகாரமாக உணர்கிறவராயார்-எப்படிப்பட்ட சங்கடங் களிலும் தாம்சொன்ன பேச்சைத் தவிராதவராயார் - ஒருகாரியத்தைப் பிடித்தால் இடையில் அதைத்தளரவிடாமல் நிறைவேற்றும்படியான மனப்பிடிப்புள்ளவராயார்-தங்குலாசாரத்தை விடாமல் அனுஷ்டிப்பவர் யார்-சகல ஆத்துமாக்களுக்கும் நன்மைசெய்கிறவராயார்-சகலவேத சா ஸ்திரங்களையும் நன்று புணர்ந்திருக்கிறவராயார்-அந்தச்சாஸ்திரங்களின் அர்த்தங்களை யெல்லாமெடுத்து நிரூபிக்கும்படியான சாமர்த்திய முள் ளவராயார்-எப்படிப்பட்ட காரியத்தையும் நிறைவேற்ற வல்லவராயார்- என்றும் ஒருதன்மையாய் யாவர்க்கும் பிரியமான காட்சியுடையவராயார்- அசைக்கக்கூடாத தைரியமுடையவராயார் - கோபத்தைவென்று சுவா தீனமாக்கிக்கொண் டிருக்கிறவராயார்-ஒப்பில்லாத காந்தியுள்ளவராயார்- நல்லகுணங்களிலேயும் குற்றம் ஏறிடும்படியான பொறாமையில்லாதவர் யார், யுத்தத்திலே கோபங்கொண்ட எவனைக்கண்டால் தேவதைகளும் பயப்படுவார்கள்-இப்படிப்பட்ட புருஷனைக்கேட்டறிய அடியேன் விரு ம்புகின்றேன், இவ்விஷயத்தில் அடியேனுக்கு மிகுந்தகுதூகல மிருக் கின்றது-தேவரீர் மகிமைபெற்ற ரிஷியாகையாலே இப்படிப்பட்ட மகா புருஷனை யறியும்படியான சாமர்த்தியமுள்ளவர் ஆதலால் அடியேனு க்கு அருளிச்செய்யவேண்டும் என்று-இப்படி வினவிய வான்மீகியின் வசனத்தைக் கேட்டு மூன்றுலகமு மறிந்தவரான நாரதபகவான், ஓ! வால்மீகரே சொல்லுகிறேன் கேளுமென்றுசொல்லி ஸ்ரீராமஸ்மரணம் வந்து இதை நாம் சொல்லப்பெற்றோமே என்று மிகுந்தகளிப்புள்ளவ ராய் அருளிச்செய்யத் தொடங்கினார்.

ஓய முனிவரே! நீர்வினவிய குணங்கள் சிலவர் யிருந்தாலும் ஒவ் வொன்றிலும் பல அடங்கி யிருத்தலாலே அநேகங்களா யிருக்கின் றன, அன்றியும், சிருஷ்டிக்கு உட்பட்ட எவரிடத்திலுங் கிடைக்கத்தக் கனவல்ல, ஆதலால், முன்பு பிரமாவினிடத்திற்கேட்ட அர்த்தங்களை நினைத்து அந்தக் குணங்களோடு கூடினபுருஷனைச் சொல்லுகிறேன், கேளும்—இக்ஷுவாகு குலத்தில் அவதரித்த ஸ்ரீராமனென்பவனை நீரும் நீவிரே சகலஜனங்களும் அறிவார்களே, அவர்தாம மாறுதலில்லாம லொரேதன்மையானசொரூபமுள்ளவர்-எப்படிப்பட்டதையுஞ் சாதிக் கத்தக்க சக்தியுள்ளவர்-எல்லாவற்றையும் விளக்கும்படியான பிரகாச முள்ளவர் நிலையான ஆநந்தமுள்ளவர்-எல்லாவற்றையும் வசப்படுத்தி னிறபவர், சிறந்தபுத்தியுள்ளவர், கலங்காத ஏற்பாடுள்ளவர், சிறப்பூன

வாக்குடையவா, மேன்மையான ஐசுவரிய முடையவா, தம்பகையா யுள்ளவாகளை நாசஞ்செய்ய வல்லவா, அன்றியும், பரந்தோட பட டைகளும்திரண்டுருண்ட திருக்கைகளும்சங்குபோன்றகழுத்தும், கொ ஞசம உயபிய தாடைகளும், பரந்து உயாந்து அடினமா கிராகின்றமாா புமு, மிகவுமேன்மையான விலலைதததாஙகததககு திருமேனியும, சதைபி டிதது வெளிககாணுத கண்டதகினடியெலும்புகளும், சத்துருககளெல லாம ஒடுஙகிய போமபடியான திருமேனித தோறறமும, முழங்கால் வரைககுநதொஙகும படியான புஜஙகளும, வடடமான சிரசும்,பரந்து விளஙகாநின்ற நெற்றியும, யானைபோல கமபீரமான நடையும், மிகக வுமிரு மிககககுளளமுமிலலாமல தொணணூற்றுறஙகுல அளவுள்ள தேகமும, ஏறறககுறைவுகளிலலாமல சமமாயப பிரிநத அவயவங்க ளும, காண்போா கண்களைக கவரும்படியாய வழுவழுண்டு விளஙகுகிற நிறமும பொருநதினவா, மஹா தேஜசுள்ளவா; தாமரை யிதழ்போல விசாலமாயும நீண்டும செவவரியோடியு மிராநின்ற திருககண் களுளளவா, நலல காநதியுளளவா, சாமுததிரிக சாஸ்திரததிற் கூறிய படி சகல சுபலக்ஷணஙகளும பொருநதினவா; சகலதருமஙகளையு மறிந்தவா,பிரதிககினை தவிராதவா, சகல பிராணிகளுககும் நன்மை செயவதி லிருபபவா, இபபடிபபடட குணஙகளுளளவரென்று கீாததி பெறறவா, எலலாவறறையும ஒருமிகக அறியுந திறமுளளவா, மகாப ரிசுததா, அடுததவாகளுககு ஸவாதீனமா யிருப்பவா, தம்மை ஆசிர யிததவாகளை ரக்ஷிபபது முதலான நறகாரியஙகளையே யோசிபபவா, சதுாமுகனைபபோலே யாவாககும முககலவராயத தோனறுகிறவா, லக்ஷ்மீவிலாசம பொருநதினவா, யாவரையும போஷிககவலலவா, தமது அனபாககு விரோதிகளைக களையவலலவர். இன்னமுங்கேளும்- இனனுரிமையாளென றெண்ணுமற சகல பிராணிகளையும ரக்ஷிககிறவா, பாவிகளைத தணடிததுத் தருமததை நிலைபபடுததுகிறவா, தமது கட மைகளான தருமஙகளைத தவறாது நடததுகிறவா, தமமைபபறறின வாகளை விசேஷமாகக காபபாறறுகிறவா, சகல வேதஙகளின் உண மையான பொருளையும அபபடியே வேதாஙகமான வியாகரண முதலிய வைகளின உணமைபபொருளையுமறிநதவா,விசேஷமாயததனுாவேதத் தில வலலமைபெறறவா, இனனுமுளள தாமசாஸ்திர முதலான பல சாஸதிரஙகளின தததுவமுமுணாநதவா, ஒருகாறகண்டதையும மறவா மலிருககுமபடியான ஞாபகசகதியுளளவா, ஒவ்வொரு விஷயத்திலும் ஒன்றின்மேலொனறாயக கிளைககினற புததியின் தோறறமுடையவா, யாவாககும் பிரியமானவா, மிக நலலவா, கமபீரமான இருதயமுளள வா, நனறுயபபேச வலலவா, சமுததிரம நதிகளாலே அடையபபடு வதுபோலப பெரியோாகளால எபபோதும வநதடையபபடடவா, எவருநதமமிடம் வரும்படியான மேனமையுளளவா, பக்ஷபாதமிலலா லாமல நியாயததை நடததுகிறவா, எபபோதும யாவருககும் தமது தரிசனம விருபபமா யிருககும படியானவா, நானெத்தனைதா னெடுத்

துச் சொல்லமாட்டுவேன்,—இப்போ சொன்னவைகளுஞ் சொல்லாதவைகளுமான சமஸ்தகல்யாண குணங்களும் நிறைந்தவர், இப்படிப்பட்டவர் கௌஸல்யாதேவிக்கு ஆநந்தம்பெருகும்படி அவள் காப்பத்தில் அவதரித்தவர், இன்னும் லோகதிருஷ்டாந்தங்களாலே அவர் குணங்களைச் சொல்லுகிறேன் கேளும்-அவர் கம்பீரத்தனத்திலே கடலையொத்தவர், தயிரியத்திலே இமயகிரியை யொத்தவர், எதையுஞ் சாதிக்கும்படியான சகத்தியிலே விஷ்ணுவாகிய தமமோடே தாமொத்தவர், பார்க்கப்பார்க்க ஆநந்தமுண்டாக்குவதிலே சந்திரனுக்குச் சமமானவர், கோபம்வந்தகாலத்தில் பிரளயகாலத்து அக்கினியைப்போலே தகிக்கவல்லவர், பொறுமையிலே பூமியைப் போன்றவர், கொடுக்குங் குணத்திலே குபேரனை யொப்பானவர், சத்தியத்திலே தருமதேவதையே மற்றொரு ரூபங்கொண்டது போன்றவர், அல்லது எமதருமராஜனைப் போன்றவர், இப்படி ஒவ்வொரு குணத்தில் ஒவ்வொருவர் சமானரென்று சொல்லலாமே யல்லாமல் எல்லாகுணமும் நிறைந்த வேறொருவரில்லாமையால் இவருக்கு ஒப்பேயில்லை. *

இப்படிப்பட்ட குணங்களோடு கூடியிருப்பதனால் சிரேஷ்டராயும், மூத்தகுமாரராயும், தனக்குப்பிரியமானவராயும், இருக்கிற அந்த ஸ்ரீராம மூர்த்தியை ராஜ்யத்திலுள்ளவர்களெல்லாம் விரும்பியதனாலும், இளவரசனாக்கவேண்டுமென்று தசரத சக்கரவர்த்தி இச்சித்து அதற்கு வேண்டியவைகளைச் சேகரித்தார் அவைகளைக்கண்டு அந்த மஹாராஜாவினுடைய பாரியையாகிய கைகேசியானவள், பூர்வத்தில் சம்பராசுர யுத்தத்தில் தனக்கு அவர் இரண்டுவரங் கொடுத்திருந்ததனால்,ஒன்றுக்கு ஸ்ரீராமன் வனவாசஞ் செய்யும்படியாகவும் மற்றொன்றுக்குப் பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விக்கும்படியாகவும் அந்த

* வால்மீகி முனிவர் அயோத்தியின் சமீபத்திலேயே வாசஞ்செய்பவராதலால் தேசதேசங்களும் அறிந்துகொண்டாடுகின்ற ஸ்ரீராமபிரானையும் அவருடைய குணாதிசயங்களையு மிவருமறிந்திருக்க, இவ்விஷயத்தை தேவமுனியான நாரதபகவானைக்கேட்டறிய வேண்டுவதில்லை-அவரும், நான் நான்முகக் கடவுளிடம் கேட்டவைகளை நினைத்துச் சொல்லுகிறேனென்று சொல்லவேண்டுவதுமில்லை. ஆகவே வால்மீகி முனிவர் கேட்டது எதுவென்றால் இக்காலத்தி லிவ்வுலகத்தில் பகவானுடைய அவதாரபுருஷன் யார் என்பதே-அதை மற்றெவரிடத்திலும் காணக்கூடாத திவ்யகுணங்களின் முகமாகக் கேட்டார்-நாரதரும் அக்கருத்தையறிந்தே ஸ்ரீராமபிரானே திவ்யாவதார புருஷனென்று எடுத்து முதலில் பரத்துவத்துக்கு உரிய குணங்களையும்,பின்பு ஆசிரயிப்பதற்குத் தக்க சவுந்தரிய சவுசீல்யாதி குணங்களையும், மனுஷ்யாவதாரத்திலும் அக்குணங்கள் குறையாம லிருப்பதையுங் காட்டினாரென்று பெரியோர் சொல்லுகின்றனர். இக்குணங்களெல்லாஞ் செய்கைகளாலேயே வெளிப்படுமாகையால் அவற்றைத் திருஷ்டாந்தப் படுத்தும்படி நாரதர் ஸ்ரீராம சரித்திரங்களைப் பின்னெடுத்து உரைத்தார் இல்லாமற் போனால் வால்மீகி கேட்டதற்கு உத்தரஞ் சொல்லிவிடாமல் கேளாததைச்சொன்னது அசங்கதமாகுமன்றோ - அவர் சுருக்கிக்கேட்டதை இவர் விரித்து உரைத்ததும், சில குணங்களைப் பலவிதத்திற் கூறியதும், அதிகபக்தி விசேஷத்தாலேயாம். இது பற்றியே மிகவுங் களிப்படைந்து சொல்லத்தொடங்கினாரென்று முன் சொல்லியது,

ராஜாவைக் கேட்டாள். அதற்கு மஹாராஜா சத்தியமாகிற அபிறழல கட்டுண்டதனால, தாமகொடுத்தவாக்குத்தப்பாமல் தமக்குப்பிரியபுத்திர ரான ஸ்ரீராமரைக் காட்டுக்கனுப்பினார்-பராக்கிரமசாலியான ஸ்ரீராம ரானவர் பிதாவின வாக்கியப்படிக்குத் தாயாரான கைகேசியின் இஷ்டத்தை நிறைவேற்றும்படியாய வனத்துக்கு எழுந்தருளினார்.

அப்போது அவருக்குப பிரிய பிராதாவான லக்ஷ்மணர் சுமித்தி ரையினுடைய ஆநந்தத்தை விருத்திசெய்கிறவராய்த் தமையனிடத் திருக்கின்ற பக்தி மகிமையாலே, லோகத்திலே பிராதாவினிடத்து ஸ்நேகமிப்படிதா னிருக்கவேணடுமென்று காட்டுகிறவர்போலேவெகு விநயத்தோடு பினதொடாந்து சென்றார். ஸ்ரீராமபிரானுக்கு இஷ்ட பாரியையாயும, பிராணசமமானவளாயும, நன்மையே செய்கிறவளா யும, ஜனககுலத்தில அவதரித்தவளாயும, தேவமாயையே ஒரு பெண் ணுருக்கொண்டதுபோலே அதிக சவுந்தரிய முடையவளாயும, சாமுத்திரிக சாஸ்திரத்திறசொன்ன சகல சுபலக்ஷணங்களோடுங் கூடி னவளாயும், லோகத்திலுள்ள ஸ்திரீகளுக்கெல்லாம் உத்தமஸ்திரீயா யும, தசரத சக்கரவாத்திக்கு மருமகளாயும இருக்கிற சீதாபிராட்டி யானவள் ரோகிணீதேவி சந்திரனை எப்படி விடாமல தொடாந்து செல்லுவாளோ அப்படி ஸ்ரீராமபிரானைத் தொடாந்து சென்றாள். தர்மாத்துமாவான் ஸ்ரீராமபிரான பட்டணத்தி லிருக்கின்ற ஜனங்களி னாலேயும, பின்னே தொடரப்பட்டவராய கங்காதீரத்தில சிருங்கி பேர புரத்தில மந்திரியான சுமந்திரனை நிறுத்தி வேட்டுக்கெல்லாம ராஜா வாயும தமக்கு இஷ்டனாயு மிருக்கின்ற குகனையடைந்து தாமும இளை யபெருமாளும பிராட்டியும அந்தக்குகப்பெருமானுடைய உதவியால மிகுந்த ஜலமுள்ள கங்கை முதலான நதிகளைக்கடந்து, ஒரு வனத்தி னின்று மற்றொரு வனத்துக்கும அதினின்றுமற்றொன்றுக்குமாயஇப்ப டியே காலநடையாக உலகங்களையெல்லாம ரக்ஷிக்கும்பொருட்டு எழுந் தருளினார். அவ்விடத்தில பரத்வாஜ மகாரிஷியைக் கண்டு சேவித்து அவருடைய நியமனத்தினாலே சித்திரகூடபாவதத்தைச் சோந்துமன துக்கு ரம்யமான பாணசாலையைக் கட்டிக்கொண்டு அம்மூவரும தேவ கந்தருவரைப்போலே சந்தோஷத்துடனே அந்த வனத்திலேவாசஞ் செய்து கொண்டிருந்தார்கள். அப்படி ஸ்வாமி சித்திரகூடபாவதம போய்ச்சோந்தபின்பு புத்திரசோகத்தினாலே வருத்தமுற்றுத் தசரத மஹாராஜாவானவர் சுவாக்கலோகம் போய்ச்சோந்தார்.

அந்தத் தசரதமஹாராஜா சுவாக்கலோகத்தைச் சோந்தபின்பு, பரதனைப பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளும்படி வசிஷ்டர் முதலா கிய பிராமணோத்தமர்கள் பிரார்த்திக்க, அந்தப பட்டாபிஷேகத்தில் இச்சையில்லாமல தமையனாரான ஸ்ரீராமருடைய திருவடிகளைப்ப ணிந்து அனுக்கிரஹம பெறவேண்டுமென்று சித்திரகூட பர்வதத்துக் குப்போகப பிரயாணம் புறப்பட்டு அவ்விடத்துக்குப்போய்த் தமைய

ருக்குத் தெண்டன் சமர்ப்பித்து அவரைநோக்கி, சுவாமி! தேவரீர் ஜ்யேஷ்ட குமாரரான படியினாலே தேவரீரே ராசசியாதி காரியாவது நியாயம், தாமமறிந்தவரான தேவரீர் அடியேன் பிரார்த்தனையைத் தலைக்கட்டவேணும் என்று பிரார்த்தித்தார். அதற்கு மகாவுதாரத்து வமுடையவராயும், மலர்ந்த முகமுள்ளவராயும், பெருங்கீர்த்தியுள்ள வராயும், மகாபலசாலியாயுமிருக்கின்ற ஸ்ரீராமர் பிதாவாக்கியபரிபாலனார்த்தமாய் ராசசிய பாரத்தை இச்சியாமல் அந்தப் பரதனையே ராசசிய பரிபாலனம்பண்ணும்படி கட்டளையிட்டுத் தமக்குப் பிரதியாகத் தம்முடைய பாதுகைகளைத் தந்து தம்முடைய பிரிவைச் சகிக்க மாட்டாத அந்தப் பரதனைத் திருவயோத்திக்குப் போகும்படி நியமித்தார். அந்தப்பரதர் தம்முடையமனோரதம் நிறைவேறப் பெறாமல் அங்கேயிருந்து புறப்பட்டு ஸ்ரீபாதுகைகளைச் சிரஸா வகித்துக்கொண்டு ஸ்ரீராமபிரான் எழுந்தருளியிராத திருவயோத்தியில் பிரவேசிக்கிறதில்லையென்று சுவாமி மறுபடி எழுந்தருளுவதை எதிர்பார்த்துக்கொண்டு நந்திக்கிராம மென்கிற ஊரில் எழுந்தருளி யிருந்து அநுதினமும் ஸ்ரீராமருடைய பாதுகைகளைச் சேவித்துக்கொண்டு அவைகளையே ராஜாவாகப் பாவனைசெய்து தாம் பராதீனராய் ராசசிய பரிபாலனஞ் செய்து வந்தார்.

பின்பு ஸ்ரீமானும், சத்திய சந்தராயும், ஜிதேந்திரியராயும், இராநின்ற ஸ்ரீராமரானவர் நாம் இங்கே வாசஞ்செய்தால் திருவயோத்தியிலுள்ள ஜனங்கள் அடிக்கடி வருவார்களென்றெண்ணி தண்டகாரணிய ரிஷிகளுடைய அபிப்பிராயத்தையும் ஆலோசித்தவராய் அந்தச்சித்திரகூடபர்வதத்தைவிட்டுத் தண்டகாரணியத்தில்பிரவேசித்து அதின்காட்சியால் கண்மலர்ந்தவராய், தமக்கு விரோதியாக வந்த விராதனைச் சமஹாரஞ் செய்து சரபங்க மஹாரிஷியைக்கண்டு தெண்டன் சமர்ப்பித்து அவருடைய நியமனப் படிக்குச் சுதீக்ஷ்ண மஹாரிஷியைத் தெண்டன் சமர்ப்பித்து அகஸ்தியமஹா ரிஷியையும் சுதாசனரென்னுந் திருநாமமுடைய அவர் திருத்தம்பியாரையும் கண்டு தெண்டனிட்டு மிகவுஞ் சந்தோஷத்துடனே அவரிடத்தினின்றும் இந்திரன் கொடுத்த தனுசையும், அக்ஷய தூணீரங்களையும், கத்தியையும், அங்கீகரித்துச் சரபங்கருடைய ஆசிரமத்தில் வாசஞ்செய்தருளுங் காலத்தில், அங்கே தவஞ் செய்கிற ரிஷிகளும், சித்திரகூடம் பம்பாவன முதலான தண்டகாரணிய வாசிகளான பிரம்மரிஷிகளும் ஸ்ரீராமருடைய சந்நிதிக்கு வந்து ஓ! ஸ்ரீராமபகவானே! துஷ்டர்களான ராக்ஷசர்களை யெல்லாம் தேவரீர் சங்கரித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அப்போது ஸ்ரீராமர் அக்கினிக்குச் சமானமான தேஜஸையுடைய மஹாரிஷிகளைப் பார்த்து, உங்களிஷ்டப் பிரகாரம் அவசியம் அந்த ராக்ஷசர்களை யெல்லாம் சமஹாரஞ் செய்கிறேனென்று பிரதிக்கினை செய்து எழுந்தருளி யிருந்தார். இப்படியிருக்கையில் அங்கே ஜனஸ்தானத்தில் நித்தியவாசியும் நினைத்த

படி ரூபமெடுக்க வல்லவளுமான சூர்ப்பணகை யென்கிற ஒரு ராக்ஷசி யானவள் சுவாமியண்டைவந்து விரோதமான காரியஞ் செய்ததனால அவளை அவர் காதுமூக்குகளை யரிந்து விரூபப்படுத்தினார். பின்பு அவளுடைய வாக்கியத்தைக்கேட்டு யுத்தத்துக்குவந்த கரன, தூஷணன், திரிசிரன என்கிற ராக்ஷசாதிபதிகளையும அவர்களோடு வந்த பதினாலாயிரம ராக்ஷசர்களையும சம்மாரஞ்செய்து, பஞ்சவடீ என்னுமிடத்தில எழுந்தருளி யிருந்தார்.

இவ்விதமாய ஸ்ரீராமராலே ரிஷிகள நிருபத்திரவமானதையும, ராக்ஷசர்களுடைய வதத்தையும, இராவணனகேட்டு மிகுந்த கோபமடைந்து மாரீசனென்னும இராக்கதனைச சகாயமாக அழைக்க, அவன, மஹாபலிஷ்டரான ஸ்ரீராமருடைய விரோதம நமக்குத தகுதியல்ல என்று அநேகவிதமாயச சொல்ல, அதையும அதிக்கிரமித்து மிரட்டுதலினாலே ஏவப்பட்டபடியால அந்த மாரீசனை அழைத்துக்கொண்டு ஸ்ரீராமருடைய ஆச்சிரமத்துக்குவந்து அவனை மாயாமிருக மாகும்படி சொல்லி அவனைக்கொண்டு ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அதிதூரம விலக்கச்செய்து, அவர்கள விலகிய சமயத்தில ஸ்ரீராமருடைய தேவியான சீதாபிராட்டியை அபகரித்துக்கொண்டு போனான. போகும்போது இடையிலேமறித்த ஜடாயுவைக் குற்றுயிராக்க கொன்று போட்டுச சீதாபிராட்டியைக் கொண்டுபோய இலங்கையிலே சேர்த்தான. பின்பு சுவாமிவந்து பார்த்துத தன்தேவியைக் காணாமல தேடிக்கொண்டே போகும்போது ராவணனாலே அடிபட்டுக் குற்றுயிராயக்கிடந்த ஜடாயுவைக்கண்டு, அவராலே சீதையின செய்தியைத தெரிந்துகொண்டு சோகத்தினாலே பஞ்சேந்திரியங்களும கலங்கிப பரிதபித்து அந்த விசனத்துடனே அந்த ஜடாயுவுக்குப பிரமமேத ஸம்ஸ்காரஞ்செய்து மறுபடி அவ்வனத்திலே சீதையைத் தேடிக்கொண்டு போகும்போது, பார்க்கப் பயங்கரமான விகாரரூபத்தோடு கூடியிருக்கிற கபந்தனென்னுமொரு ராக்ஷசனைச சங்கரித்து அவனைத்தகித்துச சுவர்க்கலோகத்துக்குப போம்படி செய்தருளினார்.

அப்போது அவன சுவாமியைப்பார்த்து, சுவாமி! ஆசாரியார்களுக்குப பணிவிடை செய்பவளாயும, தாமத்தை நடத்துவதில சமர்த்தையாயும, தவஞ்செய்பவளாயுமுள்ள சபரசாதியிற்பிறந்த ஒரு பெண்ணினுடைய ஆச்சிரமத்துக்கு எழுந்தருளி அவளாலேசெய்யப்படும பூஜையைத் திருவுள்ளம பற்றவேண்டும என்று விண்ணப்பஞ் செய்தான். அப்படியே அந்தராகவகுலதிலகர் அங்கெழுந்தருளி அவளாலே ஆராதிக்கப்பட்டுப்பம்பை என்கிற ஒருபெரிய மடுவினகரையில வானரஜாதியான அனுமானோடுசேர்ந்து அந்த அனுமானுடைய பேச்சினாலே சுக்கிரீவமகாராஜனிடஞ் சென்று தம்முடைய செய்தியையும் விசேஷமாயச சீதையினுடைய செய்தியையும சொல்லி யருளினார். அதைச்சுக

கிரீவமகாராஜாக்கேட்டுத்தமமோடொத்ததுக்கமுள்ளவரென்றுணர்ந்து, சுவாமியோடு அக்கினிசாக்ஷிகமாயச் சினேகஞ் செய்துகொண்டு வாலி கருமத்தினக்கும் வந்த விரோதத்தை வினவுதலோடே சுவாமிக்கு விஞ்ஞாபனஞ்செய்ய, ஸ்ரீராமன் அந்த வாலியை நான் வதைசெய்கிறேனென்று பிரதிக்கினை செய்தருளினார்.

அதைச் சுக்கிரீவ மகாராஜாகேட்டு, வாலியினுடைய புஜபலங்களைமுற்றும் சொல்லி ஸ்ரீராமருடைய பராக்கிரமம் எத்தன்மையதாயிருக்குமோ வென்று சந்தேகித்து அது தீரவேண்டி, பர்வதத்துக்குச் சமானமாயப் பெருத்திராநின்ற துந்துபியினுடைய உலர்ந்த தேகத்தைக் காண்பித்தான். அதை மஹாபலிஷ்டராயும், ஆஜாநுபாகுவாயுமிருக்கும், ஸ்ரீராமபிரான் பார்த்துப் புன்சிறிப்புடனே திருவடிப் பெருவிரலினாலே பூர்ணமாயப் பத்துயோசனை தூரம்போய விழும்படி விட்டெறிந்தார்-அன்றியும், இது முன்பு ஈரமாயிருந்ததனால் அதிகபாரமாயிருக்கும், இப்போ உலர்ந்ததனாலே லகுவாயிருக்குமென்கிற சங்கை அவன் மனதிலிருப்பதை யறிந்து மறுபடியும் பிரமமாண்டம்போன்ற ஏழுமராமரங்களையும் அவற்றின் பக்கத்திலிருந்த மலையையும் அதின் அடிப்பூமியையும் ஒருபாணத்தினாலே பேதித்துத்தள்ளித் தம்முடைய பராக்கிரமத்தைக் காட்டிச் சுக்கிரீவ மகாராஜனுக்குச் சந்தேக நிவர்த்திசெய்து அவனுடனேகூட மதங்கபர்வதத்துக்கடுத்த குகையிலிருக்கிற கிஷ்கிந்தாபுரிக்கு எழுந்தருளினார்.

சுவர்ணகாந்தியைப்போ லிராநின்ற தேகத்தை யுடையவனும் வானரராஜாவுமான சுக்கிரீவனை வாலியோடு யுத்தத்துக்கு அனுப்ப, அந்தச் சுக்கிரீவனும்போய் வாலியை யுத்தத்துக்கு வரச்சொல்லிக் கர்ஜித்தான். அதை வானரருக்கெல்லாம் அதிபதியான வாலி அறிந்து யுத்தத்துக்குப் புறப்பட, அவனைத் தாரையானவள் தடுக்க, அவளுக்கு நல்ல வார்த்தையினாலே சமாதானஞ் சொல்லிச் சுக்கிரீவமகாராஜாவுடனே யுத்தஞ் செய்யவந்து எதிர்த்தான். ரகுவம்சத்தில் அவதாரஞ் செய்த சுவாமியானவர் ஒரு பாணத்தினாலே அந்த யுத்தத்தில் வாலியைச் சம்மாரஞ்செய்து அந்தக் கிஷ்கிந்தா புரியைச் சுக்கிரீவ மகாராஜாவுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார். பிறகு வானரசிரேஷ்டனைச் சுக்கிரீவமகாராஜன் ஸமஸ்தவானரர்களையும் அழைப்பித்து ஜனகபுத்திரியான சீதாபிராட்டியைக் கண்டுவரும்படி அவர்களைத் திக்குகளுக்குப் பிரயாணஞ்செய்து அனுப்பினான்.

அவர்கள் சீதாபிராட்டியை எங்குந்தேடிக்காணாமல் திரும்பி விட்டார்கள்-அதில் அதிகப்லசாலியான அநுமான் சம்பாதிசொன்னபடிக்கு நூறு யோஜனை விஸ்தீரணமான லவணசமுத்திரத்தைத்தாண்டி. த்ரிகூடபர்வதத்தின் கொடுமுடியில்இருப்பதும்ராவணனாலேரக்ஷிக்கப் படுவதுமான

இலங்கைக்குச் சமீபமாய் அசோகவனத்தில் ஸ்ரீராமபிரானையே தியானஞ்செய்துகொண்டிருந்த சீதாபிராட்டியைக்கண்டு திருவாழியைக்கொடுத்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய க்ஷேமங்களையுந் தெரிவித்து "சுவாமி இவ்விடம் சீக்கிரம் எழுந்தருளுவர்" என்று சொல்லிப் பிராட்டியைச் சமாதானப்படுத்திக் கோட்டைவாசற் கோபுரத்தை யிடித்தார். அதன்மேல் ராவணனால் அனுப்பப்பட்ட சேனாபதிகளைவரையும், மந்திரிகுமாரர்களெழுவரையும், அக்ஷயகுமாரனையும் சங்கரித்து இந்திரஜித்தினுடைய பிரம்மாஸ்திரத்தாற் கட்டுண்டு பிரம்மாவினுடைய அநுக்ரஹத்தினால் அந்த அஸ்திரத்தினின்றும் விடுபட்டதைத் தாம் தெரிந்தும் தன்னைக் கயிற்றாற் கட்டியிழுத்தும் ராக்ஷசர்களைப் பொறுத்துக்கொண்டு சீதாதேவி யெழுந்தருளி யிருந்தவிடந் தவிர மற்றவைகளோடு இலங்காபுரியைத் தீக்கொளுத்தி மஹாபலசாலியான அநுமான் சுவாமிக்குப் பிரியமானசெய்தி சொல்லும்பொருட்டுத் திரும்பிவந்து சுவாமியைப் பிரதக்ஷிணஞ்செய்து தெண்டனிட்டு "கண்டேன் சீதாபிராட்டியை" என்று விண்ணப்பஞ்செய்தார். பின்பு, ஸ்ரீராமபகவான் சுக்ரீவமகாராஜா முதலாகிய வானரர்களுடனே சமுத்திரதீரத்தி லெழுந்தருளி, சூரியனுக்குச் சமானமான பாணங்களினாலே சமுத்திரத்தைக் கலக்கச்செய்யவே அந்தச் சமுத்திரராஜன் தன் சுயரூபத்தோடு ஸ்ரீராமசன்னிதியில் வந்து நிற்க, சுவாமியானவர் அவன் சொன்னபடியே நளனைக்கொண்டு சேதுபந்தனஞ்செய்வித்து அதன்மேலாய் இலங்கைக்குச்சென்று இராவணன் கும்பகர்ணாதி ராக்ஷசர்களைச் சங்காரஞ்செய்து சீதையைக் கண்டவுடனே "பிறனுடைய சுவாதீனத்தில் நெடுநாளிருந்தவளைச் சேர்த்துக்கொள்வதெப்படி" என்று மிகுந்த வெட்கத்தையடைந்து தேவதைகளும் வானரர்களும் நிறைந்திருக்கிற சபையிலே சீதாதேவியைப் பார்த்துக் கடினவார்த்தை சொல்ல, அவள் மஹாபதிவிரதையானபடியினாலே அந்த வார்த்தையைச் சகிக்கமாட்டாமல் அக்கினியிலே பிரவேசித்தாள்.

உடனே அந்த அக்கினிபகவான் பயந்து பிராட்டியாரைக் கையிலேந்தி, சுவாமிசன்னிதியிற்கொண்டுவந்து சமர்ப்பிக்க, சுவாமி தேவியைக் களங்கமற்றவளென்று அங்கீகரித்து மிக்கசந்தோஷமடைந்தவராய் சகல தேவதைகளாலும் பூஜிக்கப்பட்டார். மஹாத்மாவான ஸ்ரீராமபிரானுடைய அசாத்தியமான ராவணசம்ஹாராதி காரியங்களுக்குச் சராசரங்களும் தேவரிஷிகளும் கூடின திரிலோகமும் ஆச்சரியத்தோடு சந்தோஷத்தை அடைந்தன.

பின்பு சுவாமி. விபீஷணாழ்வானை இலங்கையிலும் ராக்ஷதர்களுக்கு ராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்தருளி (விபீஷணாழ்வான் ராஜ்யத்தை அங்கீகரித்ததனாலும் பிரதிக்ஞை நிறைவேறினதனாலும்) மனஸ்தாபம் நீங்கி மஹாநந்தத்தையடைந்தார். பின்பு தேவர்களினாலே வரங்களைப்

பெற்று பிராணமடைந்த வானரர்களையும் எழுப்பிக்கொண்டு மித்திரவர்க்கங்களுடனே சக்கிரவர்த்தித்திருமகனார் புஷ்பகவிமானத்தின்மேலேறித் திருவயோத்திக்குப் பிரயாணமாய் வரும்போது பரத்துவாச மகாரிஷியினுடைய ஆசிரமத்துக்கெழுந்தருளி, தம்பியான பரதாழ்வானிடத்துக்கு அனுமானை முன்னே அனுப்பி, பின்பு சுக்கிரீவ மஹாராஜா முதலாகிய வானரர்களுடனே புஷ்பக விமானத்தின்மேலேறி முன் நடந்த கதைகளை அருளிச்செய்துகொண்டு நந்திக்கிராமத்துக்கெழுந்தருளித் தம்பிமார்களுடனேகூடி (முன் பரதர் தலையால் வணங்கிக் கேட்டுக் கொண்டதை நிறைவேற்றும்பொருட்டே) என்கிற வியசனந்தீர்ந்தவராய்ச் சீதாபிராட்டியுடனே பட்டாபிஷேக மஹோற்சவங் கொண்டருளினார்

ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகம் கொண்டருளியதனால் லோகத்தில் உள்ளோரெல்லாம் மிருந்தகளிப்படைந்து ஸ்ரீராம விரகத்தாலே இளைத்துப்போன தேகங்கள் பெருக்கப்பெற்று உற்சாகமுள்ளவர்களாய், வெறுப்பினால் முன்விட்ட நல்ல தருமங்களையும் அநுஷ்டித்துவந்தார்கள் மேலும் எவ்வித வியாதி உபத்திரவமும் பஞ்சமும் இல்லாமல் சுகமாயிருந்தார்கள். சுவாமி ராஜ்யபரிபாலனம் பண்ணுங்காலத்திலே பிதா முதலானவர்இருக்கப் புத்திரன் முதலானோர் இறப்பதில்லை ஸ்திரீகள் கற்புநிலை யழியாதவர்களாயும் கைம்பெண்களாகாதவராயுமிருப்பார்கள் ஜனங்களுக்கு பசி, திருடர், நெருப்பு, நீர், காற்று, இப்படிப்பட்டவைகளால் பயமுண்டாகமாட்டாது பட்டணங்களெல்லாம் தனசம்பத்து நிறைந்தும் தேசங்களெல்லாம் தானியசம்பத்து நிறைந்தும், கிருதயுகத்திலிருந்தவர்களைப்போலே ஜனங்கள் சுகமாயிருந்தார்கள்

அந்த ஸ்ரீராமசந்திரபகவான் அநேகம் அசுவமேத யாகங்களும், சகல சாமக்கிரியும் பொன்னுமிருக்கும்படியான பஹு-ஸ்வர்ணகமென்கிற யாகங்களும் மற்றுமுள்ள யக்கியங்களும் செய்தருளிப் பிராமணருக்கு அநேககோடி கோதானமுதலான தானங்களுங்கொடுத்து ராஜவம்சங்களை முன்னிலும் நூறுமடங்கு அதிகமாக ஓங்கச்செய்து பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்கிற நான்குவர்ணத்தாரையும் தங்கள் தங்களுக்கு உரிய தருமங்களை ஆசரிக்கும்படிசெய்து இவ்வாறு பதினொராயிர வருஷகாலம் பூலோகத்தில் இருந்து தருமஸ்தாபனை செய்தருளித் தமது லோகமான ஸ்ரீவைகுண்டத்துக்கு எழுந்தருளப்போகிறார்.

என்று ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை நாரதபகவான் சுருக்கமாக அருளிச்செய்து அதின் பலச்ருதியை அருளிச்செய்கிறார்.

ఇదంపవిత్రంపాపఘ్నమ్ పుణ్యంవేదైశ్చసమ్మితమ్
యఃపఠేద్రామచరితం సర్వపాపైఃప్రముచ్యతే॥

இதம பவிதரம பாபக்னம - புணயமவேதைசச ஸமமிதம
யஃபடேதராமசரிதம - ஸாவபாபைஃபரமுசயதே

இநத ஸ்ரீராமசரிததிரமானது, பரிசுததஞசெயயததக்கதும, பாவங களை நாசஞசெயயவலலதும, நனமைகளை விளைககததககதும, வேதஙக ளோடு சமானமானதுமா யிருக்கினறது இதை எவாகள நியமததோடு படிககினறாகளோ அவாகள் சகல பாபஙகளாலும விடபடுவாாகள.

ఏతదాఖ్యానమాయుష్యం పఠన్రామాయణంనరః
సపుత్రపౌత్రస్సగణః ప్రేత్యస్వర్గేమహీయతే॥

ஏததாகயான மாயுஷயம படனராமாயணநாஃ
ஸபுதர பௌதர ஸஸகணஃ பரேதயஸவர்கே மஹீயதே

வாழநாளை வளாபபதாகிய பாலராமாயண மெனகிற இநதச சரித திரததைப படிககினற மனிதா - புததிரன - பேரன - இஷடா முதலானு ரோடு இஙகே சுகிததிருநது சரீரமவிடடபினபு சொாககலோகததில அல லது நிததியசொாககமாகிய மோக்ஷலோகததிறசெனறு மேனமை யடை வாாகள இவருடைய சமபநதம பெறறவரும இபபடி யாவாாகள.

పఠన్ ద్విజోవాగృషభత్వమీయాత్
స్యాత్ క్షత్రియోభూమిపతిత్వమీయాత్
వణిగ్జనఃపణ్యఫలత్వమీయాత్
జనశ్చశూద్రోపిమహత్త్వమీయాత్॥

படன தவிஜோவாக ரிஷபதவமீயாத
ஸயாத க்ஷததிரியோ பூமிபதிதவமீயாத
வணிகஜநஃபணயபலதவ மீயாத
ஜநசச சூதரோபி மஹததவ மீயாத

படிககினறவாகள பிராமணாகளானால வேதவேதாநதஙகளை அறிந திருககுமவாகளில தலைவராவாாகள அறபக்ஷததிரியாகளானாலும பூமண டலாதிபதிக ளாவாாகள வைசியாகளானால தாஙகள செய்கிற வாததகங களில் அதிகலாபஙகளைப் பெறுவாாகள சூததிராகளானாலும சுவஜனங களில் சிரேஷடராவாாகள. இநதபபாலராமாயணததைப படிபபவாக ளுடைய பகதி தாரதமியததுககும, இஷடததின தாரதமியததுககும, ஏறறபடி இமமை மறுமைபபயனகளை நாரதபகவான அருளிச செய்தாா.

பாலகாண்டததில முதல சாககம்.

முறறிறறு.

# இரண்டாவது சர்க்கம்.

வால்மீகிமுனிவர் வேடன் கொன்ற கிரவுஞ்சபக்ஷியைக் குறித்துச் சொன்ன வாக்கியம் சுலோகமானதுகண்டு ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்க, சதுர்முகபகவான் எழுந்தருளி அவரை ஸ்ரீராமாயணம் பண்ணும்படி நியமித்தது.

பின்பு வாக்கியங்களின் திறத்தை அறியவல்லவரும், பகவத்குணங்களை அனுபவிப்பதிலே மனமுள்ளவருமான வால்மீகிமுனிவர் நாரதபகவானுடைய வாக்கியங்களை யெல்லாங் கேட்டு (நம்முடைய கருத்தையறிந்து நன்றாய் அருளிச்செய்தாரென்று) அந்த வாக்கியங்களைத் தம் சிஷ்யரோடு கூடக் கொண்டாடி அவரைத் தகுந்தபடி பூஜிக்க, அந்தத் தேவரிஷியும் அப்பூஜையைப் பெற்றுக்கொண்டு வால்மீகிமுனியிடம் விடைபெற்றுத் தேவலோகம்போய்ச் சேர்ந்தார்.

பின்பு வால்மீகிபகவான் ஒரு முகூர்த்தகாலம் ஆலோசனைசெய்து கங்காநதிக்குச் சமீபத்தில் இருக்கும் தமஸாநதிக்கு மாத்தியாஹ்நிகஸ்நானஞ் செய்கிறதற்காக எழுந்தருளி அந்த நதியின் துறை சேறில்லாமல் நன்றாயிருக்கக்கண்டு தம்முடைய பக்கத்திலிருக்கும் சிஷ்யரான பரத்துவாச மஹாரிஷியைப்பார்த்து ஐய பரத்துவாசரே! சேறில்லாமல் பெரியவர்களுடைய மனம்போலே கலக்கமற்று அதிரமணீயமாயிருக்கின்ற இந்தத் தீர்த்தத்தைப் பாரும் இந்தத் தீர்த்தத்தில் நான் ஸ்நானம் பண்ணப் போகிறேன் உம்முடைய கையிலிருக்கும் கமண்டலத்தைக் கீழேவைத்து எனக்கு மரவுரியைக் கொடுமென்று மகாத்துமாவான வால்மீகிபகவான் சொல்ல, அப்படியே பரத்துவாசர் பக்திவிநயத்தோடு அந்த மரவுரியைச் சமர்ப்பித்தார் அதை ஜிதேந்திரியரான அந்த வால்மீகிமுனிவர் வாங்கிக்கொண்டு அந்த நதிதீரத்தில் விராநின்ற விசாலமாகிய வனத்தைப் பார்த்துக்கொண் டிருக்கும்போது அதனருகே ஒரு விருக்ஷத்தின்மேல் இரண்டு கிரவுஞ்சபக்ஷிகள் ஒன்றையொன்று பிரியாமல் அதிமனோகரமான லீலாவிநோதங்களைச் செய்துகொண்டு இனிப்பாய்க் கூவிக்கொண் டிருக்கக்கண்டார் அப்படி இருக்கும்போது பாபகாமத்திலே மனமுடையவனும் இயற்கையாய்ச் சகல ஜந்துக்களிடத்திலும் பகைபாராட்டுகிறவனுமாகிய ஒரு வேடன் கிரீடித்துக்கொண்டிருந்த அந்தக் கிரவுஞ்சபக்ஷிகளைப்பார்த்து அவ்விரண்டில் ஆண்பக்ஷியை அலாக்கணைனுக்க கெதி

ரில் வதைத்தான். வதைக்கவே அந்தப்பறவை கீழேவிழுந்து உடம்பெல்லாம் உதிரந்தோய்ந்து பூமியிலேபுரளுகிறதை அந்தப் பெண்பக்ஷி பார்த்து, செஞ்சூட்டோடு அழகியதும், என்றும் தன்னைவிட்டுப் பிரியாததும், காமமத்தினால் தன்னைப் புணரவந்ததுமான அந்தச் சேவலின் பிரிவை ஆற்றமாட்டாததாய் யாவர்மனமும் இரங்கி உருகும்படி துக்கக்கூச்சல் கூவிற்று. அதைக்கேட்டும் வேடனாலே அடிபட்டு இறந்துகிடக்கிற ஆண்பறவையைப் பார்த்தும் அந்த வால்மீகிரிஷி தர்மசிந்தையுள்ளவராதலால் மிகவுமிரக்கமுற்று, நிரபராதியாய்க்கூடிக் கிரீடித்துக்கொண்டிருந்த இந்தக் கிரவுஞ்சபக்ஷியைக் கொன்றது மகா அதர்மம் என்று அந்த வேடனைச் சபிக்க நினைத்தபோது இந்தச் சுலோகம் அவர் வாக்கில் வந்தது.

మానిషాదప్రతిష్ఠాంత్వ మగమశ్శాశ్వతీస్సమాః
యత్క్రౌంచమిథునాదేక మవధీః కామమోహితమ్॥

*மாநிஷாதப்ரதிஷ்டாம்த்வ - மகமஶ்ஶாஶ்வதீஸ்ஸமா:*
*யத்க்ரவுஞ்சமிதுநாதேக - மவதீ:காமமோஹிதம்*

அடா நிர்ப்பாக்கியனான வேடா! நீ காமவேட்கைகொண்டு விலாசமாயிருந்த இவ்விரண்டு கிரவுஞ்சங்களில் ஒன்றை வதைத்ததனாலே நெடுநாள் வாழ்வுற்று துக்கத்தையடையக்கடவாய்

இதில் மற்றொரு பொருளும் தோன்றியது.

திருமகளுக்கிருப்பிடமான பகவானே! மந்தோதரியும் இராவணனுமாகிய இரண்டு ராக்ஷதர்களில் காமமயக்கங்கொண்ட ஒருவனை (இராவணனை) சங்கரித்ததனாலே நெடுங்காலமும் பெருங்கீர்த்தி பெற்று வாழ்வீர்-என்பது.

இவ்விதமாகத் தமது வாக்கில்வந்ததைக் குறித்து வால்மீகியானவர் ஆச்சரியப்பட்டு நாம் இந்தக்கிரவுஞ்சபக்ஷிக்காகத் துக்கத்தோடு சொன்னது சுலோகமானதென்னகாரணமென்று தமக்குள்ளே தாமே ஆலோசித்துக்கொண்டு தம்முடைய சிஷ்யரான பரத்துவாசரை அழைத்து.

ஏதோ ஒரு புராணத்தின்படி "கிரவுஞ்சவேஷந்தரித்த ஒரு ராக்ஷசனை விஷ்ணுவே வேடவேடம்பூண்டு சங்கரித்ததாகவும், அதைக்கண்டு வால்மீகி இந்தப் பக்ஷியைப்போலே நீயும், உன் ஸ்திரீயைவிட்டுப் பிரிந்து சிலகாலந் துக்கப்படக்கடவை என்று சபித்ததாயும், அதனாலே தான் ஸ்ரீராமன் சீதையைப்பிரிந்து சங்கடப்பட்டதாயும், இந்தச்சுலோகத்துக்கு ஒருவர் அர்த்தஞ்செய்திருக்கிறார் அது சரியன்றென்று பிறர் ஆக்ஷேபித்திருக்கிறார்

పాదబద్ధోక్షరసమః తంత్రీలయసమన్వితః
శోకార్తస్య ప్రవృత్తో మే శ్లోకో భవతు నాన్యథా॥

*பாதபத்தோ'க்ஷரஸம: தந்த்ரீலய ஸமன்வித:*
*சோகார்த்தஸ்ய ப்ரவ்ருத்தோ மே - ச்லோகோ பவது நான்யதா*

ஓ! பரத்வாஜரே, நான் கிரவுஞ்ச பக்ஷியினிடத்தில் கருணையாலே சொல்லியது, நான்கு பாதங்களுள்ளதும், சமமான அக்ஷரமுடையதும், வீணையில் வாத்தியங்களோடு இசைத்துப் பாடக்கூடியதுமான ஒரு சுலோகமானது சரியே வேறன்று நீர் பாரும் என்ன, அதைப் பரத்வாசரும் படித்துப்பார்த்து இது சுலோகமே யென்று சந்தோஷத்தை அடையவே வால்மீகரும் அதிக சந்தோஷத்தை அடைந்து அந்தத் தீர்த்தத்தில் நீராடி அந்தக் கிரவுஞ்சபக்ஷியினுடைய துயரத்தையும் தம்மாலே சொல்லப்பட்ட சுலோகத்தையும் அடிக்கடி நினைத்துக் கொண்டே தம்முடைய ஆச்சிரமத்துக் கெழுந்தருளினார். அவருடைய சிஷ்யரும் தீர்த்தபூர்ணமான கலசத்தைக்கையில் எடுத்துக்கொண்டு பக்திவிநயத்துடனே பின்னே நடந்துவந்தார். சகல தர்மங்களும் தெரிந்த வால்மீகிபகவான் ஆச்சிரமம்போய்ச்சேர்ந்த பிறகு ஆசனத்தின்மேலே உட்கார்ந்து கொண்டு அந்தச் சுலோகத்தையே நினைத்து வெகு ஆலோசனை உடையவராய் வேறே கதைகளைத் தம்முடைய சிஷ்யர்களுக்குச் சொல்லிக்கொண்டிருந்தார்.

அப்போது லோகசிருஷ்டி கர்த்தாவாயும் மஹாபிரபுவாயும் மஹா பிரபாவ சம்பன்னராயுமுள்ள சதுர்முகப்பிரம்மாவானவர் வால்மீகிபகவானைப் பார்க்கவேண்டி அவருடைய ஆச்சிரமத்துக்கு எழுந்தருளினார். அவரை வால்மீகிபகவான் கண்டு எதிர்கொண்டுபோய்ச் சர்வோபசாரங்களுஞ்செய்து தெண்டன்சமர்ப்பித்து உயர்ந்த ஆசனத்தில் எழுந்தருளியிருக்கச்செய்து கைகட்டி வாய்புதைத்து நிற்கும்போது பிரம்மதேவர் அந்த வால்மீகிபகவானுடைய குசலங்களை விசாரித்து அவரை உட்காரும்படி நியமிக்க அந்த முனிபுங்கவரும் அப்படியே உட்கார்ந்து, பெரும்பாவி அந்தப் பக்ஷியைக் கொன்றானேயென்று சோகத்தோடு தமது வாக்கிலுண்டான சுலோகத்தை மனதிலேயே பாடிக்கொண்டிருக்க, நான்முகக்கடவுள் அம் முனிவரை நோக்கிப் புன்சிரிப்புடனே அருளிச்செய்கிறார். ஓய் வால்மீகரே, நீர்சொன்னது சுலோகமே தவிர வாக்கியமன்று. நம்முடைய சங்கல்பத்தினாலேயே இந்தச்சரஸ்வதி உமது வாக்கிலிருந்து தோன்றினாள். நீர் ஒன்றும் ஆலோசிக்க வேண்டுவதில்லை, முன்னே நாரதராலே ஸ்ரீராமமூர்த்தியினுடைய சரித்திரத்தை சமக்ஷபமாக நீர் கேட்டிருக்கிறீரே, அந்தப்படியே ஸ்ரீராமகதையை ஒரு பிரபந்தமாகச் செய்யக் கடவீர்-அந்த மகானுபாவரான சக்கிரவர்த்தி திருமகனுடையதும், இளைய

பெருமாளுடையதும், பிராட்டியினுடையதும், இராக்கதருடையதுமான பல சரித்திரங்களும், உமக்கு நன்றாய்த் தோன்றக்கடவன.

న తేవాగనృతా కావ్యే కాచిదత్ర భవిష్యతి.

நதேவாகனருதாகாவ்யே - காசிதத்ரபவிஷ்யதி *

இன்னங்கேளும், ஸ்ரீராமவிஷயமாக நீர்செய்யுங் காவியத்தில் ஒரு சொல்லும் பொய்யாகாமலிருக்கும். இப்படி மனோஹரமாக நீர் செய்யு மிந்தக்கிரந்தம், மலைகளும் நதிகள் முதலானவை இருக்குமட்டும் உலகத்தில் விளங்கிவரும் அக்கதை விளங்குமளவும், கீழும் மேலுமுள்ள நம்முடைய லோகங்களில் நீர் கீர்த்தி சரீரத்தோடு இருப்பீரென்று அனுக்கிரஹஞ் செய்து அந்தக்ஷணமே அந்தர்த்தானமாய பிர்ம்மதேவர் சத்தியலோகத் துக்கு எழுந்தருளினர்.

பின்பு, வால்மீகிபகவானனவர் தம்முடைய சிஷியர்களுடனேகூட அதிக ஆச்சரியத்தை அடைந்து, அந்தச்சுலோகத்தை அடிக்கடி அவர்கள் பாடிக்களிக்க, தாமும் அதன் இலக்கண அமைதிகளைக்கண்டு களிப் படைந்து நாம் பிரமமாவின் நியமத்தாலே இப்படிப்பட்ட சுலோகங் களைக்கொண்டு ஸ்ரீராமசரித்திரத்தைச் செய்யக்கடவோம் என்று கருதி மனத்தைக்கவரும்படி கம்பீரமான விருத்தங்களும், சொற்களும், பொருள்களு முள்ளதாய ஸ்ரீராமருடைய திவ்யகல்யாணகுண கீர்த்தியை விளக்கும்படி யானதுமாகிய மகாகாவியத்தைச்செய்தருளித் தம்மாணாக்கர்களை நோக்கி.

తదుపగతసమాససంధియోగం సమమధురోపనతార్థవాక్యబద్ధమ్
రఘువరచరితమ్ మునిప్రణీతం దశశిరసశ్చ వధం నిశామయధ్వమ్॥

ததுபகதஸமாஸ ஸந்தியோகம ஸமமதுரோபநதார்த்தவாக்யபத்தம
ரகுவரசரிதம முனிபரணீதம தசசிரஸச்சவதம் நிசாமயத்வம்

என்றருளிச்செய்தார் (இ-ள) அந்தந்த இடங்களுக்கு ஏற்ற சொற் றொடர்களும் சந்திகளுமுள்ளதாய் ஒன்றுக்கொன்று விகற்பாசமில்லா மல் ஒருபடிப்பட்டுப் பொருள்விளங்கும் படியான வாக்கியக்கட்டுகளை யுடைத்தானதுமாதலால் கேட்கப்பிரியமானதும், நாரதமாமுனிவருடைய அனுக்கிரஹத்தால் உண்டானதால் மஹாமகிமையுள்ளதும், மஹாபாபி யான ராவணவதமுள்ளிட்ட பரிசுத்தமுமான இந்த ஸ்ரீராமசரித்திர பிர பந்தத்தைக் கேளுங்கள்.

பாலகாண்டம் இரண்டாவது சருக்கம்,

முற்றிற்று.

## மூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீமத்ராமாயணத்தை வால்மீகிமுனிவர் செய்தவிதம்.

---

அந்தப் பிராசேதசமுனிவர், கைகால் சுத்திசெய்து ஆசமனம் பண்ணிக் கிழக்கு நுனியான தருப்பைகளின்மேல் உட்கார்ந்து கைகூப்பித் தெய்வம் குரு இவர்களுக்கு வந்தனஞ்செய்து முன்கேட்ட விஷயத்தைப் பூரணமாய் ஆராய்ந்து, இராமர் - இலக்ஷ்மணர் - ஸீதை - தசரதர் - நாட்டார் - நகரத்தார் - இன்னம் அவரவர்கள் பேசியது சிரித்தது செய்தது வனவாசத்தில் நடந்தது முதலான சகலத்தையும், சதுர்முகக் கடவுளின் அனுக்கிரஹ பலத்தினாலே உண்மையாக அறிந்து நாரதர்கூறிய முறைப்படி லோகாபிராமரான ஸ்ரீராமருடைய சரித்திரத்தைச் செய்யத்தொடங்கி, தருமமோக்ஷங்கள் பிரதானமாகவும் அர்த்தமும் காமமும் அப்பிரதானமாகவும் தோன்றும்படியானதும் ரத்தினங்கள் நிறைந்த கடல் போன்றதும் யாவர்செவியையும் இதயத்தையும் கவருந்தன்மையுள்ளதுமான பிரபந்தம் செய்தருளினர்.

அதில் கதையின்முறை எப்படியெனில், ஸ்ரீராமபிரானுடைய திருவவதாரமும் அவருடைய அசாத்தியமான பராக்கிரமமும், அவராலே சகல ஜனங்களுக்கும் அனுகூலமும் பெருமையும் அவர் இவ்வுலகத்தில் சந்திரனைப்போலே எல்லாருக்கும் இஷ்டமாக விளங்கினதும் பக்திவினயத்தோடு நடந்ததும் சத்தியசீலங்களும் ஸ்ரீராமர் சித்தாசிரமத்துக்கு எழுந்தருளும்போது விசுவாமித்திரர் அவருக்கு அருளிச்செய்த நானாவிதங்களான விசித்திர கதைகளும், வில்லை ஒடித்துச் சீதாபிராட்டியைத் திருக்கலியாணஞ் செய்ததும், பரசுராமரோடு நேர்ந்த விவாதமும், தசரதசக்கிரவர்த்தி ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய எத்தனித்ததும், கைகேசியாலே அதற்கு விரோதம் வந்ததும், ஸ்ரீரகுநாயகரை வனத்துக்கு அனுப்பியதும், தசரதசக்கிரவர்த்தி புத்திரசோகத்தாலே சுவர்க்கலோகம் சேர்ந்ததும், ஜனங்கள் துக்கப்பட்டதும், அவர்களைவிட்டுப் போனதும், குகனுடனே சுவாமிகூடினதும், சுமந்திரரைத் திருவயோத்திக்குத் திருப்பினதும், கங்கையைக்கடந்ததும், பரத்துவாசரைச் சேவித்ததும், பரத்துவாசர் நியமனத்தினாலே ஸ்ரீராமர் சித்திரகூடம்போய்ச் சேர்ந்ததும், அவ்விடத்தில் பர்ணசாலை கட்டிக்கொண்டு வசித்ததும், அவ்விடத்தில் பரதாழ்வான் எழுந்தருளி ஸ்ரீராமரைப் பட்டாபிஷேகங் கொள்ளும்படி பிரார்த்தித்ததும், தசரதசக்கிரவர்த்திக்கு ஸ்ரீராமர் தர்ப்பணஞ் செய்ததும், பரதர் ஸ்ரீராமருடைய பாதுகாபட்டாபிஷேகஞ்செய்து நந்திக்கிராமத்தில் வாசம்பண்ணினதும், ஸ்ரீராமர் சித்திரகூடம்விட்டுத் தண்டகாரணியத்துக்கு எழுந்தருளினதும், விராதனைச் சம்மாரஞ் செய்ததும்,

சரபங்க மஹாரிஷியைக்கண்டு சேவித்ததும், சுதீக்ஷ்ணரிஷியைக் கண்டதும், சீதாபிராட்டியானவள் அநசூயை நல்ல பூச்சூழுதலியவைகளால் உபசரிக்கப்பட்டதும், ஸ்ரீராமர் அகஸ்தியமகாரிஷியைக்கண்டு தெண்டன் சமர்ப்பித்ததும், பஞ்சவடிக்கு எழுந்தருளியதும், ஜடாயுவுடனே சேர்ந்ததும், சூர்ப்பனகை ஸ்ரீராமருடனே சம்வாதஞ்செய்து இளையபெருமாளாலே விரூபப்பட்டதும், கரதூஷண திரிசிரசுகளின் சம்மாரமும், இராவணன் தண்டகாரணியம்வந்ததும், மாரீசனை வதைசெய்ததும், ஜானகியாரை இராவணன் அபகரித்துக்கொண்டுபோனதும், பத்தினியைக் காணாமல் சுவாமி விசனப்படும்போது இராவணனால் அடிபட்டுக்கிடந்த ஜடாயுவினாலே சங்கதிகளைத் தெரிந்துகொண்டதும், கபந்தனைக் கண்டதும், பம்பாதீரத்திற் சென்றதும், சபரியின் ஆச்சிரமத்துக்கு எழுந்தருளினதும், ஆஞ்சநேயனைக் கண்டதும், ரிசியமூகபர்வதத்தில் சுக்ரீவமகாராஜாவைக்கண்டு சினேகம்பண்ணிக்கொண்டதும், சுக்கிரீவ மஹாராஜாவுக்கு ஸ்ரீராமர் தம்முடைய பராக்கிரமத்தைக் காண்பித்ததும், வாலி சுக்கிரீவ யுத்தமும், வாலிவதையும், தாரைபுலம்பலும், சுக்கிரீவபட்டாபிஷேகமும், வருஷாகாலமெல்லாம் ஸ்ரீராமர் ரிசியமூக பர்வதத்தில் வாசஞ்செய்ததும், சுக்கிரீவ மஹாராஜாவின்மேல் சுவாமி கோபஞ்செய்ததும், சுக்கிரீவ மகாராஜா வானரசயினியங்களைக்கூட்டித் தேசங்களைத் தெரிவித்துச் சீதாபிராட்டியைத் திக்குகள்தோறுந் தேடவிட்டதும், ஸ்ரீராமர் அனுமான் கையில் திருவாழியைக் கொடுத்ததும், வானரர்கள் ஸ்வயம்பிரபையினுடைய பிலத்தில் பிரவேசித்ததும், வானரர்கள் மகேந்திரகிரியின் அடிவாரத்தில் பிராயோபவேசஞ்செய்ததும், அங்கே ஜடாயுவுக்குத் தமையனான சம்பாதியைக்கண்டதும், அனுமான் மகேந்திர பர்வதத்தினின்றும், சமுத்திரத்தைத் தாண்டினதும், அனுமான் சமுத்திர ராஜனுடைய ஏவலினாலே வந்த மைநாக பர்வதத்தைக்கண்டதும், சிம்மிகையைச் சம்ஹரித்ததும், இலங்கைக்கு அருகான சுவேலாதிரியில் ஏறி இலங்கையைக்கண்டு அதிசயித்ததும், சாயங்காலவேளையில் ஒருவராய் இலங்கையில் பிரவேசித்து ஜானகியாரைத் தேடினதும், இராவணனைக் கண்டதும், அவனுடைய அந்தப்புரத்தில் புஷ்பகவிமானத்தைக் கண்டதும், ராவணனுடைய மெத்தியபானசாலையையும் அந்தப்புரத்தையுங்கண்டதும், அசோகவனத்தில் பிராட்டியைக்கண்டு திருவாழியைத் தந்ததும், அங்கே இராவணனைக்கண்டதும், அங்கே அரக்கிகள் சீதாபிராட்டியை வெருட்டினதும், திரிசடை கனாக்கண்டதும்; சீதாபிராட்டி தன் சூடாமணியை அனுமான் கையில் கொடுத்து ஸ்வாமிக்குத் தரசொன்னதும், திருவடி [illegible] வனத்தை அழித்ததும், எண்பதினாயிரம் கிங்கரர் [illegible] நாசமானதும், இந்திரசித்தினுடைய பிரம்மபாசத்தாலே ஆஞ்சநேயர் கட்டுண்டதும், திருவடி இலங்காபுரிதகனஞ் செய்ததும், திரும்பி சமுத்திரத்தைக் கடந்ததும், வானரர்கள் மதுவனத்தையழித்ததும், அனுமான் சூடாமணியை [illegible]

சமாப்பித்து விருத்தாந்தங்களையெல்லாம் விண்ணப்பஞ்செய்து சுவாமி யைச் சமாதானப்படுத்தினதும், ஸ்ரீராமர் வானர சேனைகளுடனே சமுத்திரத்துக்கு எழுந்தருளினதும், சமுத்திரத்தில் நளனைக்கொண்டு சேது பந்தனஞ் செய்வித்ததும், அந்தச்சேதுவினாற்சென்று இராத்திரியில் இலங்கையை முற்றுகை செய்ததும், விபீஷணரோடு கூடினதும், அந்த விபீஷணர் ராவணாதியரைச் சங்கரிக்கும் உபாயத்தைச் சுவாமிக்கு விண்ணப்பஞ் செய்ததும், சுவாமி கும்பகர்ணனையும் இந்திரஜித்தையும் இராவணனையும் வதைசெய்ததும், சீதாபிராட்டியை ஸ்ரீராமபிரான் அடைந்ததும், விபீஷணருக்கு இலங்காராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்ததும், புஷ்பகவிமானத்திலேயேறித் திருவயோத்தியாபுரிக்கு எழுந்தருளினதும், பரதருடனே கூடினதும், ஸ்ரீராமருடைய பட்டாபிஷேக மஹோத்ஸவமும், சமஸ்தமான வானரர்களும் ராட்சதர்களும் பிரயாணப்பட்டுப் போனதும், ஸ்ரீராமசந்திரர் ராஜ்யபரிபாலனத்தில் சமஸ்த ஜனங்களையும் சந்தோஷப்படுத்தி வந்ததும், முந்திய ஆறுகாண்டங்களிலும் சொல்லி மேல்நடந்தவைகளைத் தெரிவிக்கும்படி உத்தரகாண்டமும் செய்தருளினார்.

பாலகாண்டத்தில் மூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

## நான்காவது சருக்கம்

வால்மீகிமஹாரிஷி தாம்செய்த ராமாயணத்தைக் குசலவருக்குக் கற்பித்துப் பாடும்படி செய்தது.

ஞானவீரிய சம்பன்னரான வால்மீகிமஹாரிஷி இந்த ஸ்ரீராமாயணத்தை எப்பொழுதெப்படிச் செய்தாரென்றால், ஸ்ரீராகவதிலகர் இராஜ்யாதிபத்தியஞ் செய்துகொண்டிருக்கும்போது, இருபத்துநாலாயிரம் சுலோகங்களும், ஐந்நூறு சருக்கங்களடங்கிய ஆறுகாண்டங்களும் உத்தரகாண்டமுஞ்சேர ஏழுகாண்டங்களுமாகச் செய்தருளினார்.* செய்தருளினபின் இதை

* (இப்போது வழங்கிவருகிற பாடப்படி ஸ்ரீமத்ராமாயணத்தில் உருகூ சுலோகங்களும் சில சர்க்கங்களும் அதிகமாயிருக்கின்றன. வெகுகாலமானதனால் இந்த வித்தியாசம் வந்ததென்றும், அல்லது முனிவரே எல்லையைக் கருதாமல் பிரதானமாகக் கூறியிருக்கலாமென்றும் நியாயஞ் சொல்லுகிறார்கள்.)

யார் நன்றாய்ப்பாடவல்லவர்கள் என்று சிந்தித்துக்கொண்டிருக்கையில் முனிவேடம்பூண்டவர்களும் பாடவல்லவர்களுமாகிய சிறுவரிருவர் வந்து அவர் திருவடிகளிலே தெண்டன் சமர்ப்பித்தார்கள்.

அவர்கள் எத்தன்மையரெனில், ஸ்ரீராமபிரானுடைய குமாரர்களாதலால் ஒரு பிம்பத்தினின்றும் எடுத்த பிரதிபிம்பம்போலே அங்கசாயல் முழுதும் பொருந்தினவர்கள் - மஹாபுத்திசாலிகள் - வேதங்களிலே நன்றாய்த்தேர்ந்தவர்கள் - சகல தருமங்களுமறிந்தவர்கள். இப்படிப்பட்ட அச்சிறுவரைக் கண்டு வால்மீகிமுனிவர் குதூஹலித்தவராய், ஸ்ரீராமசரித்திரமாயும் மேன்மையான சீதாசரித்திரமாயும் இராவணனுடைய வதத்தைக் குறித்ததாயும் தாமசெய்த இந்த மஹாகாவியத்தை வேதங்களின் தாற்பரியங்கள் நன்றாய் விளங்கும்பொருட்டு அவர்களுக்கு உபதேசித்தருளினர்.

சங்கீத சாஸ்திரத்தின் நுட்பங்களை அறிந்தவர்களும் ஸ்வரங்கள் நின்று ஏறுமிறங்குமிடங்களை யறிந்தவர்களும் மதுரமான கண்டத்தொனியுள்ளவர்களும் நல்லரூப லக்ஷணங்களுள்ளவர்களுமாகிய அந்தக் குசலவர்கள் வீணையின் ஓசைக்கும் தாளலயைகளுக்கும் ஒத்ததாயும் ஏழுஸ்வர ஜாதிகளாலே கூட்டப்பட்டதாயும் படிப்பதிலும் பாடுவதிலும் இனிப்பாயும் நவரசங்களோடு கூடினதாயுமிருக்கின்ற, இந்த ராமாயணத்தை அவ்வவ்விடங்களின் கருத்துக்கள் கேட்போர் மனதிற்படியும்படி தொனிக்குறிகளோடு மகாரிஷிகள் முதலானோர் கூடியிருக்குமிடங்களிலெல்லாம் நன்றாய்ப்பாடினார்கள். இவ்வாறு அழகாய்ப்பாடும் இந்த உத்தம சரித்திரத்தைக்கேட்டு அந்த முனிவரெல்லாம் அங்ஙகளித்துக் கண்களிலானந்த வெள்ளம்பெருக ஆச்சரியப்பட்டு ஓகோ! என்ன இந்தப்பிரபந்தமிருந்தபடி - சுலோகங்களின் மதுரமோ சொல்லத்தரமன்று - பாடுந்திறமோ அதிலுமேலாயிருக்கின்றது - இந்தக் காவியம் பின்வரும் கவிவாணருக்கு ஆதாரமாயிருக்கின்றது - இந்தச் சரித்திரம் வெகுகாலத்துக்குமுன் நடந்ததானாலும் இப்போதுதான் நம்கண்களுக்கு எதிரில் நடப்பதுபோற் காட்டப்படுகின்றது என்றிப்படி கூறிக்கொண்டாடினார்கள். அவர்களில் ஒருவர் அப்பிள்ளைகளுக்குக் கமண்டலமும் மற்றொருவர் முனிவருட்காரும் பீடியான ஆசனமும் இன்னொருவர் மரவுரியும் இப்படித் தந்தமக்கு இசைந்ததை வெகுமதியாக அளித்தார்கள். இப்படிக் கொண்டாடப்பட்டவர்களாய் அந்தப் பிள்ளைகள் மிக்கமதுரமான ஓரேஸ்வரமாய்த் திருவயோத்தியின் அநந்தத் திருவீதிகளிலும் ராஜமார்க்கங்களிலும் கருத்திற்புகுந்து பாடிக்கொண்டே வந்தார்கள். வரும்போது இவர்களை ஸ்ரீராமசந்திர பகவான்கண்டு, அன்பும் ஆனந்தமும் பெருகினவராய் அவர்களை மரியாதையோடு இட்டுக்கொண்டுபோய், இவர்களுடைய ரூபலக்ஷணங்களையும் பாட்டின்திறத்தையும் விலாசித்துச்சபையிலே லக்ஷ்மணர் பரதர் சத்துருக்னர் இவர்களைநோக்கி அருளிச்செய்கிறார்.

தேவகுமாரர்கள்போல விளங்குகின்ற இந்த முனிகுமாரர்கள் பாடுவதைக்கேளுங்கள் - இது விசித்திரமான சொல்லும்பொருளும் அமைந்தது - இவர்கள் பாடுவதோ இனிப்புள்ளதாய் நன்றாயமைந்த நீண்டதொனியுள்ளதாய் மனங்களையிழுத்துக் களிப்பிக்கின்றது என்றுசொல்லித் தாம்வீற்றிருந்த பொற்சிங்காதனத்திலிருந்து பலருங்கூடியிருக்கும் சபை நடுவில்வந்து வீற்றிருந்து தம்பிகள் முதலானோர்களைநோக்கி: ராஜலக்ஷணம்பொருந்திய இந்த ரிஷிப்பிள்ளைகள் பாடுஞ்சரித்திரம் மஹாபிரபாவமுள்ளது - எனக்கும் சீதையின் சரித்திரமாதலாலே க்ஷேமகரமாயிருக்குமென்று அப்பிள்ளைகளைப்பாட நியமித்தருளினார். அவர்களும் அந்த நியமனப்படி மார்க்கமென்கிற சாத்ரணவிதத்திற்பாட, சுவாமி மிக்க ஆஸக்தியோடே கேட்டருளினார்

பாலகாண்டத்தில் நான்காவது சருக்கம்
முற்றிற்று.

## ஐந்தாவது சருக்கம்.

### நகரத்தின் சிறப்பு

செல்வம்நிறைந்த இப்பூமிமுழுதும் மற்றயாருக்குமில்லாமல், மநுவைத்தொடங்கி ஜயசாலிகளான, எந்த இக்ஷ்வாகு வம்சத்தார்க்கே உரியதாயிருந்ததோ - எந்தக்குலத்தில் ஸகரசக்கரவர்த்திதோன்றி அறுபதினா

---

* இந்த நான்கு சருக்கங்களும் (உபோத்காதம்) பாயிரம் அல்லது முகவுரை- அதாவது "ஆக்கியோன் பெயரே வழியேயெல்லை" என்கின்ற விதிப்படி கிரந்தகர்த்தாவின் நாமதேயம், கிரந்தத்தின் வரலாறு, கிரந்தத்தின் பெயர், அதிற்கூறிய விஷயம், அதைக் கற்பதனால் வரும் பயன் முதலாகிய காரியங்களைத் தெரிவிப்பது. இப்பாயிரத்தைத்தாம் பிறகு நடக்கப்போகிறதை முன்னமேயோசித்து வால்மீகிமுனிவரே செய்தனர் அவர்சிஷ்யரில் ஒருவர் செய்ததாகவும் சிலர் சொல்லுகின்றனர் இதில் கிருகஸ்தன் நடக்கவேண்டிய ஆசாரமும், சத்தியத்தின் மேன்மையும், பிதாவினிடம் புத்திரன் நடந்துகொள்ளுமுறையும், சகோதரருடைய நிலையும், பதிவிருதாதருமமும், தருமநிலை தவறினால் எப்படிப்பட்டவனும் அழிந்துபோவானென்பதும் இவைமுதலான சாமானியதருமமும், ஸ்ரீராமபிரான் சகலகல்யாணகுண பரிபூரணமான பரத்துவமென்பதும், அவனைச் சரணமடைவதே சகல அபீஷ்டங்களையும் பெறுமுபாயமென்பதும், அடியார்கள் ஆசரிக்கவேண்டிய கய்ங்கரியமுதலானவற்றின் முறைகளும் ஆக இப்படிப்பட்ட விசேஷதருமங்களும், செம்பொருளாகவும் கருத்துப்பொருளாகவுங் காட்டப்பட்டிருக்கின்றன

இதனாலேதான் இது 'வேதோபப்பிரம்மணம்' என்னப்பட்டது உபப்பிரம்மணம் என்றால் பொருளை நன்றாய் விளக்கிக்காட்டுவது. அஞ்சாம்சருக்கத்திலேதான் ராமாயணாரம்பம் ராமாயணமென்கிற சொல்லுக்கு இராமனை அறிவிக்கும் பிரபந்தம் என்பதுபொருள் - சீதையை அறிவிக்கும் பிரபந்தமெனவும் சிலர் உரைத்திருக்கின்றனர்.

பிரமங்களைக்கொண்டு சாகரமென்னுங்கடலைத் தோண்டுவித்தீரோ அப்படிப்பட்ட மஹாகுலத்தைக்குறித்து அவதரித்தது இந்த ஸ்ரீமத்ராமாயணம். இது அறமுதலான நாற்பொருளையும் பயக்கும்படியானது. இதனைப் பொறுமைமுதலிய நற்குணங்களினின்றும் அன்போடுகேட்கவேண்டும்.

சரயூநதியின் இருகரைகளிலும் பரவியதான கோசலம் என்கிற தேசமொன்றிருக்கின்றது. அதுமிகுந்த சந்தோஷமுள்ள ஜனங்கள் நிறைந்ததும் தனதானியமுதலான செல்வமிகுதியுள்ளதுமானநாடு. அதில் அயோத்தியென்று பேர்பெற்ற நகரமொன்றுண்டு. அது வைவஸ்வதமநுவினாலே நிருமிக்கப்பட்டது - பன்னிரண்டு யோஜனை நீளமும், மூன்றுயோஜனை யகலமுமுள்ளதாய லக்ஷ்மீவிலாசம்பொருந்தி விளங்கும். பலவிடங்களிலிருந்து வரும் வழிகளெல்லாம் நிழல்பரந்த மரச்சாலைகள் வைத்து விசாலமாயிருக்கப் பெற்றது - மூலைமுடுக்குகளின்றி விசாலமும் நீட்சியுமான பலதெருக்களுள்ளது - அந்தப்பண்டங்கள் நிறைந்து தனித்தனியாயிராநின்ற நல்லகடைத்தெருக்களுள்ளது - தினமும் தண்ணீர்தெளித்து மலர் சிந்தப்பெற்ற ராஜமார்க்கமுடையது - உயரமும் அழகுமான கோட்டைவாசல்களும் கதவுகளும் ஸ்தம்பங்களுமுடைத்தாயப் பலவகை ஆயுத யந்திரங்களையும் பொருந்தியது - அதில் அந்தந்த வேலைகளிலும் கைதேர்ந்த பலசிற்பிகளும், அரசர்க்குக் காலந்தவிர்க்கும் மாகதர் முதலானோரும், நாட்டியம் கற்பிக்கவல்ல பரதசாஸ்திர நிபுணரும், பலராஜ்யங்களிலிருந்து இராஜகாரியம் பேசவந்திருக்கும் சாமந்தராஜாக்களும், பிறதேசத்துப் பலவகை வர்த்தகர்களும், வேதசாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்ற மஹாபிராமணர்களும், நிறைந்திருப்பதுமன்றி யானை குதிரை ஒட்டகம் கோவேறு கழுதை எருதுமாடு பசுமாடு முதலியவைகளும் நிறைந்திருக்கும் - மேலும் பிரசங்கசாலைகளும், பலர்கூடத்தக்க அழகிய மண்டபங்களும், மண்டபத்தின் மேன் மாடிகளும், அநேகம் பீரங்கிகள் வைக்கப்பட்டிருக்கின்ற மதிற்சுவர்க் கட்டடங்களும், எப்படிப்பட்டவரும் கிட்டக்கூடாத அகழிகள் சூழ்ந்த மதிற்சுவர்களும், கோபுரங்களும், பல அடுக்குகளுடையவாய்க் கண்ணைப்பறிக்கும்படி ரத்தினகாந்திகள் சூழ்ந்த அரசமாளிகை வரிசைகளும் அங்கே விஸ்தாரமாயுண்டு - திகைக்கும்படியான அநேகம் கிருகங்களும் சங்கீதசாலைகளும் பொன்முதலியவைகளால் செய்த செய்குன்றுகளும் மாமரங்களுடனே மற்றமரங்களும் பூங்கொடிகளும் விளங்காநின்ற தோட்டங்களும் பலவுமங்கேயிருக்கின்றன - இவ்வகையான வியவஸ்தைகளோடுகூடி அந்நகரமானது சொக்கட்டான் பலகையின் விதமாய்க் காணப்படுகின்றது - மேலும் அங்கே ஒவ்வொரு வீதியிலும் பெரும்பாலும் சங்கீதவாத்தியங்களும் வீணாநாதங்களும் பொருந்தி உச்சஸ்வரமாகவேயிருக்கும் - உத்தமமான தானியவகைகளும், உத்தமமான ரத்தினங்களும், உத்தமமான ஆண்பிள்ளை பெண்பிள்ளைகளும், சிற்பவித்தைகளும் சாஸ்திர வித்தைகளும் பரவி அந்நகரம் அமராவதி என்கிற

இந்திரபட்டணம்போல பிரகாசிக்கின்றது - மேலும் அது விசித்திரமான கொடிகளகட்டி விசித்திரமான பதுமைகள் அமைத்துப பறக்கின்ற தேவ விமானங்கள போன்ற வீடுகளின் வரிசைகளையுடைத்தாயிருக்கின்றது - கருப்பஞ் சாறபோறபோத்த உருசியுள்ள பல் தடாகங்கள் மடுககள் வாவி கள் முதலான ஜலாதாரஙகளுமிருக்கப்பெற்றது - சகல ஆயுதஙகளிலும கைதோ்நது ஒடுமிலககைகை எய்யவல்லவராஞலும, தனித்திருப்பவனையும, ஆயுதமின்றி இருப்பவனையும், சநததிககொருகுமாரஞ யிருப்பவனையும, அஞ்சரா யிருப்பவனையும் அமபுமுதலிய படைக்கலஙகளாலெய்யாத நன் னெறியுள்ள மஹாவீரா பலரும, அப்படிப்பட்ட யானை குதிரை முதலிய வாகனஙகளும நிறைந்த அனேக சேனைகளும அஙகே விஸ்தாரமாயுணடு. மேலும அது எபபோதும அககினிகளைக கைவிடாதவாகளாய ஸத்திய சவுசமுதலான நலல ஆசாரமும பொருநதி ஆறஙகஙகளோடு வேதங களைப பயின்றுகொணடு அன்னதானமுதலான நானாதானஙகளையும செயது கொணடு முனிவரென்று சொல்லும்படியான பெருமைபெறற ஜனஙக ளுள்ளதும முனிவாகள வருததும போககுமாய இருககுமபடியானதும ஒருவா தவஞ்செய்து சித்தியாகபபெறற ஒரு தேவவிமானமபோல தோன றுவதுமா யிருநதது - அப்படிப்பட்ட அயோத்தியாபுரியைத் தம நடக கையாலே ராசசியததைச செழிக்கச்செயயுந திறனுள்ள தசரதமகாராஜா வானவர் ஆணடுகொணடிருநதார.

பாலகாணடத்தில ஐநதாவதுசருககம

முற்றிறறு.

---

## ஆறுவது சருக்கம்.

அரசனுடைய ஆளுகைததிறத்தினால நகரம சிறநதிருககும

வகையைச சொல்லுகிறது.

---

அந்தத் தசரதமஹாராஜாவின குணஙகளைச சொல்லுகிறேன் - அவர் வேதவேதாந்தங்களை யறிநதவர் - எப்படிப்பட்டவர்களையும அனைத்துச சுவாதீனமாக்கிக்கொள்ளவலலவா - வருங்காரியங்களை முன்னதா யோசி த்து அறிநதுகொள்ளும்படியான திறமையுடையவர் - எபபடிப்பட்ட வீர ரும் அஞ்சும்படியான பராக்கிரமமுள்ளவர் - நகரங்களிலுள்ள யாவர்க் கும் பிரியமானவர் - வெகு யாகங்கள் செய்தவர் - தருமத்தையே முக்கிய மாகப் பார்க்கிறவா - இந்திரியங்களைச சுவாதீனபபடுததினவா - இக்ஷ்வா

வாகுகுலத்துக்குத் திலகம்போலே அதிரதர் என்னும்பேர் பூண்டவர் - மூவுலகங்களிலும் புகழ்ப்பட்டவர் - ராஜரிஷியானாலும் மஹாரிஷிகளுக்குச் சமானமானவர் - மஹாபலமுள்ளவர் - பகைவரையெல்லாம் வென்றுமேன்மைபெற்றவர் - பிராணனையுங்கொடுத்து உதவிசெய்யும்படியான அனேக மித்திரரைப் படைத்தவர் - தனங்களையும் அரசுக்கு வேண்டிய சேனைமுதலிய மற்றப்பொருள்களையும் பெற்றிருப்பதில் குபேரனையும் இந்திரனையுமொத்தவர் - மனுவைப்போலே லோகத்தை யெல்லாம் பொதுப்பட நன்றாய் ரக்ஷிக்கவல்லவர். அப்படிப்பட்ட அந்த ராஜா, தேவேந்திரன் அமராவதியைக் காப்பதுபோலே, அந்தப்பட்டணத்தைக் காத்து வந்தார்.

இவர் ராச்சியபரிபாலனஞ் செய்துவந்த காலத்தில் அந்நாட்டிலுள்ளாரெல்லாம் வெகு சாஸ்திரங்களைக் கற்றவரும், தருமமே கண்ணாயிருப்பவரும், சத்தியநிலையுள்ளவரும், தந்தம் பொருளிலே திருப்தி யடைந்து பிறர் பொருளை இச்சியாதவரும், மஹாதாதாக்களுமாய் மஹாசந்தோஷமுள்ளவராயு மிருந்தார்கள். அந்நகரத்திலே அற்பமான பணமுள்ளவனும், மாடுகுதிரைக ளில்லாதவனும், போகபாக்கிய மில்லாதவனுமாக ஒரு குடும்பத்தானும் கிடைக்கமாட்டான். அன்றியும், காமமயக்க முள்ளவனாகிலும், பெண்சாதி பிள்ளை தாய் தந்தை அண்ணன் தம்பிகள் முதலானவர்களையும் தன்னையுங்கூடப் போஷியாமலிருக்கிற லோபியாகிலும், கொடுஞ்செய்கை செய்பவனாகிலும், கல்வியறியாதவனாகிலும், நாஸ்திவாதஞ் செய்பவனாகிலும் காணுதற்குங் கிடைக்கமாட்டான். காதணி கழுத்தணி கையணி புஜத்தணி முதலிய பல அணிகளும், நல்லபூச்சு நல்லபூமாலை நல்லவஸ்திரம் இவைகளுமில்லாதானைத் தேடிப்பார்த்தாலுங் கிடைப்பதருமை. அக்கினிகாரியஞ்செய்யாதவர், யாகஞ்செய்யாதவர், வேதமோதாதவர், ஈனபோஜனஞ்செய்பவர், நல்லொழுக்கமில்லாதவர், பொருள்களின் திறமறியாதவர், வஞ்சனைசெய்பவர், இத்தன்மையான அயோக்கியரும் அகப்படமாட்டார்கள். ஆண்பிள்ளைகளும், பெண்பிள்ளைகளும், அவரவர்க்கு உரிய நிலையிலிருந்து ஆதுலர்க்கும் விருந்தினருக்கும் நல்ல போஜனமளித்துத் தாமுமுண்டு பகவானிடத்தும் பாகவதரிடத்தும் பக்தியுள்ளவர்களாய்க் காலங்கழிப்பார்கள். அற்பாயுசாய்ப் பிறப்பவரும், ரூபமில்லாதவரும், அங்கவிகார முள்ளவரும், நல்லெண்ணமில்லாதவரும், வீரத்தனமில்லாதவரும், ராஜபக்தி யில்லாதவரும், அங்கே இல்லவேயில்லை. பிராமணருக்கு க்ஷத்திரியரும், அவர்களுக்கு வைசியரும், இந்த மூன்றிறத்தாருக்கும் சூத்திரரும் அடங்கி வழிபட்டு மரியாதைகடவாமல் நடப்பார்கள். மேலும் சவுரிய தயிரியங்களோடு நீதியுமுள்ள சேனைவீரர்களால், சிங்கங்களால் குகை நிரப்பப்பட்டதுபோல், அந்நகர் நிரப்பப்பட்டிருக்கும். அயிராவத முதலான திக்கஜங்களின் குலத்திற் பிறந்த லக்ஷணமமைந்த யானைகளும், காமபோஜம் யவனம் பாஹ்லிகம் முதலான தேசங்களிற்பிறந்த மேன்மையான குதிரைகளும், குடநிரம்பப்பால் கறக்கும்படி

யான நல்ல பசுமாடுகளும், அநேக நாளுக்குநாள் செழிப்பாய் வளர்ந்து வரும். இத்தன்மையதாய அந்த அயோத்தியா நகரமானது தன் பெயர்ப் பொருளின்படி எவர்க்கும் வெல்லவொண்ணாததாய இரண்டு காதவழியிலேயே காண்போர்க் கண்கள் களிக்கும்படியும் கூசும்படியும் காணப்படுகின்றது. இவ்வண்ணமான அந்த மகா நகரத்தைக் குணங்களிலும் தருமத்திலும் நீதியிலும் மேம்பட்டவரான தசரதமகாராஜா மிக்க சிறப்போடு ஆண்டுவந்தார்.

பாலகாண்டத்தில் ஆறாவது சருக்கம்

முற்றிற்று.

## ஏழாவது சருக்கம்

இதிலும் தசரதமகாராஜாவின் துரைத்தனச்சிறப்பே

சொல்லப்பட்டிருக்கிறது

மேலான புத்தியும் மேலான கீர்த்தியுமுள்ள அந்தத் தசரதமகாராஜாவுக்கு, திருஷ்டி, ஜயந்தன், விஜயன், சித்தார்த்தன், அர்த்தசாதகன், அசோகன், மந்திரபாலன், சுமந்திரன் என்று எண்மர் மந்திரிகளிருந்தார்கள். அவர்கள் மந்திரித்தனத்துக்கு உரிய குணங்களுடையவர்கள் - காரியங்களை நிதானித்து ஆலோசிக்கும்படியானவர்கள்-மனக்குறிப்புகளை அறிந்துகொள்ளுந் திறமுடையவர்கள் - பரிசுத்தர்கள் - ராஜகாரியங்களின்மேல் எப்போதும் பாடுபடும்படியான அன்புள்ளவர்கள். அன்றியும், அவ்வரசனுக்கு வைதிகச் சடங்குகளுக்குரிய இருத்துவிக்குகளில் (யாகஞ்செய்விப்போர்) முக்கியராய் வசிஷ்டர் வாமதேவர் என்றிரண்டு மகாரிஷிகளிருந்தார்கள். இவர்களும் இன்னும் சிலரும் ராஜகாரிய சகாயமாக இருந்தார்கள். இவர்களெல்லாம் சாஸ்திரங்களைக் கற்றறிந்து காரியங்களை நடத்துவதில் சமர்த்தர் - ஜிதேந்திரியர் - எந்தக்கேடும் செய்ய அஞ்சுகிறவர் - மிகுந்த செல்வமுடையவர்கள் - மஹா பராக்கிரமசாலிகள் - பெரும்புகழ்படைத்தவர்கள்-பிறரால் அறியப்படாத அபிப்பிராயமுள்ளவர்கள் - அரசன் சொற்படி நடப்பவர்கள் - பொறுமையும் பிரகாசமுமுள்ளவர்கள் - முகமலர்ச்சியோடு பேசுகின்றவர் - காமக்குரோதங்களைக் கொண்டு வாய்மை தவிரமாட்டாதவர்கள் - தம்மவர்களிலாவது பிறர்களிலாவது அவர்கள் அறியாத காரியமொன்றுமில்லை-பிறர்செய்ய நினைத்திருப்பதையுமறிபவர்கள்-சகலதேசகாரியங்களையுமுணர்ந்தவர்கள்-பேசுவதிலுஞ் சாதுரியமுடையவர்கள்-தம் குமாரர்களானாலும் தண்டிக்க நேர்ந்தபோது

தாக்ஷிண்ணியமின்றித் தண்டிப்பார்கள் - பகைவரானாலும் குற்றஞ்செய்யாதவர் திறத்தில் ஓர் அபகாரமுஞ் செய்யார்கள் - சேனைகளையும் பொக்கசங்களையும் நன்றாய்ச் சேர்த்துவைப்பார்கள் - தமது நாட்டிலுள்ளோருக்கெல்லாம் நன்மையே தேடும்படியானவர்கள் ஆதுலர் முதலியோரைக் கிரமப்படி பாதுகாத்து வருகின்றவர்கள் - ஜனங்களை உச்சாகப்படுத்துகின்றவர்கள் - எப்படிப்பட்டவர்கள் செய்யும் வஞ்சனைகளுக்கும் உட்படாதவர்கள் - எந்தக்காரியத்துக்கும் ஒரேமனதாயுறுதியாய் நிற்பவர்கள் - சந்திவிக்கிரகமுதலான ராஜகாரியங்களின் நடபடிகளில் தேர்ந்தவர்கள் - தங்களாலோசனை சிறிதும் புறம்பொசியாதவர்கள். இப்படிப்பட்ட மந்திரிப்பிரதானி முதலியவரிருந்ததனால் அந்தக் கோசலநாட்டிலும் அயோத்தியாபுரியிலும் பொய் களவு வஞ்சம் விபசாரம் அனுசாரம் தேவதூஷணை முதலான யாதொரு தூர்ச்செய்கையுமில்லாமலிருந்தது. இவ்வண்ணமான சகாயசம்பத்தோடுகூடித் தசரதசக்கரவர்த்தியானவர் கிரணங்கள் சூழ்ந்த சூரியனைப்போலத் தமக்கு ஒத்தவருமிக்கவருமில்லாமல் துரைத்தனம் நடத்திவந்தார்.

பாலகாண்டத்தில் ஏழாவதுசருக்கம்.

முற்றிற்று.

## எட்டாவது சருக்கம்.

தசரதர் புத்திரனில்லாமையால் அசுவமேதயாகஞ்செய்ய

ஆலோசித்தது.

அந்தத் தசரதசக்கிரவர்த்தி இப்படிப்பட்ட மகாமகிமையுள்ளவராயிருந்தும் அவருக்குத் வம்சம் பெருகும்படியான குமாரன் உண்டாகவில்லை. அதற்காக அவர் பல தவங்கள்செய்தும் பயன்படாமையாலே தவித்துக்கொண்டு, எதுசெய்தால் சந்தானமுண்டாகுமென்று மந்திரிகளோடுகூட யோசித்து நாம் சந்ததிக்காக அசுவமேதயாகம் செய்யக்கடவோமென்று நிச்சயித்துச் சுமந்திரரைப்பார்த்து, நீ நம்முடைய புரோகிதரையும் மற்றுமுள்ள குருமாரையும் சீக்கிரம் இங்கே எழுந்தருளும்படி செய்யவேண்டுமென்றார். அதுகேட்டு அந்தச் சுமந்திரரும் துரிதமாய்ச்சென்று அவர்களெல்லாவரையும் அரமனைக்கு எழுந்தருளப்பண்ணினார். அவர்கள் யாரென்றால்: வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காசியபர், சுயக்ஞியர் என்பவர்களும் இவர்களோடு சேர்ந்த வேதநிபுணரான பிராமணருமே. பின்பு சக்கரவர்த்தியானவர் அந்த முனிவர்களை முறைப்படி பூசித்து அறம் பொருள்களுக்கு இசைந்ததொரு பேச்சை மெதுவாகச்சொன்னார்.

ஓ மஹரிஷிகளே! சந்தானத்துக்காகத் தவஞ்செய்து வருந்திக்கொண்டிருக்கிற எனக்குச் சுகமுண்டாகவில்லையே. ஆதலால் அசுவமேத யாகஞ் செய்யவேண்டுமென்று எனக்குத் தோன்றுகின்றது. சாஸ்திர விதிப்படி அவ்யாகத்தைச்செய்து அடியேன் இஷ்டத்தைப் பெறும்படியான உபாயத்தைத் தேவரீர்கள் யோசிக்கவேண்டும் - என்று அரசன் வாக்கிலிருந்து வந்தசொல்லைக் கேட்டு வசிஷ்டர் முதலானோர் யாவரும் அவனைச் சிலாகித்து, ஓய் மகாராஜாவே! அப்படியே செய்யலாம்-யாகத்துக்கு வேண்டியவைகளைச் சித்தஞ்செய்து இப்போதே குதிரையை விட்டுவிடலாம் - இப்படிப்பட்ட தருமபுத்தியுடையனாதலால் நீர் சந்தேகமில்லாமல் இஷ்டர்களான புத்திரரைப் பெறுவீர் என்று சொல்லினார்கள்

இவ்வாறு முனிவர் மொழிந்ததைக்கேட்டு ராஜா மிகுந்த சந்தோஷமடைந்து ஆனந்த பாஷ்பத்தால் கண்கள் கலுழ்ந்து மந்திரிகளைப் பார்த்து, ஓ மந்திரிமாரே! நம்முடைய குருமார் நியமித்தபடி வேண்டிய வஸ்துக்களைச் சேகரஞ்செய்யுங்கள் - வல்லவர்களாகிய காவற்காரரோடும் வசிஷ்டமா முனி முதலான பிரதான ருத்துவிக்குகளோடும் கூட்டிக் குதிரையைவிட் டனுப்புங்கள் - சரயூநதியின் வடகரையிலே யாகசாலை ஏற்படுத்துங்கள் - விக்கினங்கள் நாசமாகும்படியான சாந்திகளையும் விதிப்படிக் கிரமமாக நடத்துங்கள் - இந்த மேலான யாகத்திலே கஷ்டமான அபராதம் நேரிடாமலிருக்குமானால் எந்த அரசனும் இந்த வேள்வியை அனுஷ்டிப்பான்-அப்படியல்ல, இதில் அபராதங்கள் வெகுவாய் நேரும்-முக்கியமாய்ப் பிரமராக்ஷசர்கள் இதில் எங்கே சந்து அகப்படுமென்று தேடிக்கொண்டிருப்பார்களன்றோ? அப்படி ஏதாகிலும் தவறு நேர்ந்தால் அந்தப் பிரமராக்ஷசர் யாகத்தை அழிப்பார்கள்-யாகமழிந்தாலோ யாகஞ்செய்பவனுடனே நாசமடைவான்-ஆனதுபற்றி நீங்கள் நாம் செய்யும் யாகத்தில் யாதொரு பிழையு முண்டாகாதிருக்கும்படி தக்க ஏற்பாடுகளைச் செய்யவேண்டுகிறேன் - நீங்கள் அவ்வகை செய்யமாட்டீர் என்று எனக்கு நம்பிக்கை இருக்கின்றது - என்று அரசன் உரைத்ததற்கு அந்த மந்திரிமார் உடன்பட்டு அரசன்பேச்சைக் கொண்டாடினார்கள் முனிவரும் மகாராஜாவுக்கு ஆசீர்வாதங்கள் செய்து தந்தமிடங்களுக்கு எழுந்தருளினார்கள். சக்கரவர்த்தியும் அமாத்தியருக்கு யாககாரியத்தில் ஜாக்கிரதையாயிருக்கும்படி மறுபடியுங்கூறி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, அரமனைக்குட்சென்று தம்முடைய பத்தினிமாரை நோக்கி ஓ என் காதலிகளே! நான் புத்திரனுக்காக யாகஞ்செய்ய ஆரம்பித்திருக்கிறேன்-ஆதலால், நீங்கள் தீக்ஷையைக் கைக்கொள்ளுங்கள் என்றார். அது செவியுற்ற மாத்திரத்தில் அந்த ராஜபத்தினிகளுடைய முகத்தாமரைகள் இளவேனில் வந்தபோது தடாகங்களிலே தாமரைகள் விளங்குவதுபோலே மிகவும் விளங்கி நின்றன.

பாலகாண்டத்தில் எட்டாவதுசர்க்கம்

முற்றிற்று.

## ஒன்பதாவது சருக்கம்.

### சுமந்திரன் தசரதருக்கு முன் நடந்த சங்கதியைச் சொல்லுவது.

இங்ஙனம் சபையிற்பேசி அரசன் அரமனை சேர்ந்தபின் சுமந்திரரானவர் அரசருக்கு ரகசியத்தில் இந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தார். எங்கள் பிரபுவே! கேளுங்கள் இப்போது நம்முடைய குருமார் அசுவமேதயாகஞ் செய்யும்படி விதித்தார்களே - இதைப்பற்றி முன் மகாஞானவானான சநத்குமாரருடைய சன்னிதானத்தில் நடந்தவொரு சங்கதியை நான் கேட்டிருக்கிறேன், அதை விண்ணப்பஞ் செய்கிறேன் காசியப மகாமுனிக்கு விபண்டகர் என்கிற குமாரர் ஒருவர் இருக்கிறார் - அவருக்கு ரிசியசிருங்கர் என்று ஒரு புத்திரர் உண்டாகப்போகிறார் - அவர் வனத்திலேயே இருந்துகொண்டு பிதாவுக்குப் பணிவிடைசெய்து வருவார் - அதனாலே வேறொன்றையும் அறியமாட்டார் - உலகத்தில் பிரசித்தமான பிரமசரியம் (அதாவது, முஞ்சி மான்தோல் பலாசங்கொம்பு முதலான வைதீக கிருத்தியங்களைச்செய்துகொண்டு வேதமோதுதல்) பெண்களோடு சேராமலிருப்பதாகிய பிரமசரியமாகிய இவ்விரண்டும் அவரிடத்திலுண்டாயிருக்கும் - இப்படி அக்கினியின் பணிவிடையும் பிதாவின் பணிவிடையுமாகிய காரியங்களாலேயே அவருக்குக் காலம் கழிந்துவரும் - இப்படியிருக்குங் காலத்திலே மகாபலவானும் அங்கநாட்டதிபதியுமான ரோமபாதர் என்றொரு ராஜா இருப்பார் - அவர் தருமத்திற் சிறிது பிசகிப்பதனால் அவருடைய ராச்சியத்திலே மிகக்கொடியதான மழையின்மையுண்டாகும் - அதனால் அவருடைய நாடு துன்பப்பட அவ்வரசர்க்கு மிகுந்த மனக்கலக்கமுண்டாகி நன்றாய வேதங்களைக்கற்ற பிராமணரைக்கூட்டி ஓ சுவாமிகளே நான் என்ன அபராதஞ் செய்தேனோ தெரியாது; இப்படிப்பட்ட மழையின்மை சம்பவித்திருக்கிறது - இதற்கு நீங்கள் யோசித்து எனக்குப் பிராயச்சித்தம் விதிக்கவேண்டுமென்று கேட்பார் - அதற்கு அந்தப் பிராமணர்கள் அரசனைநோக்கி, ஓ மகாராஜனே! விபண்டகருடைய புத்திரரான ரிசியசிருங்கரை எப்படியாகிலும் நீர் இவ்விடத்தில் அழைத்துவந்து உம்முடைய புத்திரியான சாந்தை என்பவளை அவருக்கு விதிப்படித் தானஞ்செய்து கலியாணஞ்செய்விக்கவேண்டும் என்று சொல்வார்கள் - அதுகேட்டு அவ்வரசன் அவரை எப்படி இங்கே அழைத்து வரலாமென்று கலங்கித் தன் புரோகிதர் மந்திரி முதலானவரோடு சொல்ல, அவர்களும் அம்முனிவர் சபிப்பாரென்று அஞ்சித் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு நின்று பின்பொரு உபாயத்தைச் சொல்லுவார்கள் -

அதின்படி அவரை வேசிமார்களைக்கொண்டு தன் பட்டணத்தில் வருவித்துத் தன் மகளை அவருக்குக் கொடுத்து விவாகஞ் செய்விப்பார் - பின்பு அங்கே மழைபெய்து சுபிக்ஷமுண்டாகும் * உமக்கும் மருமகனாகிய அந்த கலைக்கோட்டுமுனிவர் உமக்குப் புத்திரர் உதிக்கும்படி செய்யப்போகிறார் - என்றிவ்வாறு சனற்குமார பகவான் அருளிச்செய்ததை விண்ணப்பஞ்செய்தேன் என்று சுமந்திரர் சொல்லியதைக் கேட்டு தசரத மகாராஜா மிகவும் களிப்படைந்து, அந்தக் கலைக்கோட்டிமாமுனிவரை எப்படி ரோமபாதர் தமது நகரத்துக்கு அழைத்து வந்தாரோ, அந்தச் சரித்திரத்தை எனக்கு விரிவாய்ச் சொல்லக்கடவீர் என்று சுமந்திரரை வினவினார்.

பாலகாண்டத்தில் ஒன்பதாவது சருக்கம்

முற்றிற்று

---

## பத்தாவது சருக்கம்.

ரிசியசிருங்கமுனியை நாட்டுக்கு அழைத்துக்கொண்டு

வந்தவிதம்

---

இவ்வகை ராஜா வினவ சுமந்திரர் சொல்லத்தொடங்கினார். கேளும் மகராஜாவே! ரிசியசிருங்கரை ரோமபாதர் கொண்டுவந்ததைச் சொல்லுகிறேன். அந்த அங்கதேசத்தரசன் புரோகிதரையும் மந்திரிகளையும் அம்முனிவரை இட்டுக்கொண்டு வரும்படி சொன்னபோது, அவர்கள் அந்த விபண்டகமுனிவருக்கு அஞ்சி, நாங்கள் அங்கே போகமாட்டோம் என்று அரசனை வேண்டிக்கொண்டார்கள்; பின் அரசனை நோக்கி, பிரபுவே! நாங்கள் ஒரு உபாயம் யோசித்திருக்கிறோம் அதைக்கேளும் அந்த விபண்டககுமாரர் எப்போதும் காட்டிலேயே வாசஞ்செய்துகொண்டு வேதாத்தியயனமே வேலையாயிருக்கிறவர்-பெண்பிள்ளைகளென்பதை அறியார்-அவர்களுடைய சுகமுந் தெரியாதவர் - மனிதர்களுடைய மனதை மோகிப்பிக்கும்படியான இந்திரிய விஷயங்களைக்கொண்டு அவரை நாங்கள் இங்கு வரும்படி செய்கிறோம் - அதனாலே யாதொரு தீங்குமில்லாதிருக்கும் படியுஞ் செய்கிறோம் - நீர் கலங்காதேயும் - நல்லரூபமும் பருவமுமுள்ள கணிகையர்கள் அலங்காரத்தோடு அங்கேசெல்லவேண்டும் - சென்று பலவகையில் அவர்க்கு ஆசைகொளுத்தி அவரை சுவாதீனஞ் செய்ய

---

* சாந்தை என்பவள் தசரதருக்கு மகள் - அவளை ரோமபாதர் தத்துவாங்கிக் கொண்டார். அதனாலே தான் கலைக்கோட்டுமுனியை உமக்கும் மருமகன் என்றது

வேண்டுமென்று சொல்லி அரசனுடைய அங்கீகாரத்தினால் புரோகிதர் முதலானோர் தக்க வேசிமாரை அலங்காரத்தோடு அங்கே அனுப்பினார்கள். அவர்களும் அப்படியே அந்த வனத்தினருகே சென்று இனிமையாய்ப் பாடுவதுமுதலான பலவினோதங்களைச் செய்தார்கள். அம்முனிவரோ நாடுநகரங்களிலுள்ள ஆண்பெண் ஒன்றையு மறியாதவர் - பிதாவின பரிசரியையும வைதிககருமஙகளும வேதமோதுவதுமாகிய காரியங்களிலேயே நினறவராதலால ஆசசிரமமவிடடு வெளியில வரவிலலை. இபபடிசசிலநாள் சென்றபின்பு ஒருநாள் தறசெயலாய்அவர் ஆச்சிரமததினினறும வெளியிலவந்தார்.

வநது தஙகளைககணடு நிறகிற முனிவரிடம் அநத வேசிப்பெண்கள் சென்று அவரைநோக்கி, ஓமஹாபிராமணரே! நீர்யார? இக்காட்டில் ஏன் இருக்கிறீர? இககாரியததை அறிய எங்களுக்கு விருப்பமா யிருப்பதனாலே அருளிச்செய்யவேண்டுமென் றுரைத்தார்கள், அதுகேட்டு அம்முனிவா ரூப யவவன அலஙகாரஙகளோடுகூடிய அப்படிப்படடவர்களை எபபோதும காணுதவராதலாலே கணடவுடனே அவாகளிடத்து அன்பு கூாநதவராய் ஓ முனிவாகளே! விபணடகா எனபவா என்தந்தை - நான் இஙகிருநது தவஞ்செய்கினறவன் - ருசியசிருஙகா என்பது என்பெயர் - ஓ அழகான காடசியுளளவாகளே! எமது ஆசசிரமம் கிட்டவே இருககின்றது - அஙகு நீஙகள எழுநதருளி யான்செய்யும பூஜையைக் கைககொள்ளவேணடும என்று சொன்னார். சொல்லவே அவர்களும் அபபடியே ஒத்துககொண்டு அவ்வாசசிரமததிற்செல்ல அத்தவசி அர்க்கியபாத்திய முதலியவைகளால பூசைசெயதனா. அந்தப்பெண்கள் அப்பூசையைப பெற்றுககொண்டு மனககளிபபு உடையவாகளாய் விபண்டகமஹாமுனி சபிப்பாரென அச்சஙகொண்டு விரைவில் அஙகு நின்றும் போகநினைதது கலைககோடடுமுனிவரை நோக்கி, சுவாமி எங்களுக்கும் ஒரு விரதானுஷடான முணடாதலால விடைதரவேண்டுமென்று சொல்லி அவரை ஆலிஙகனஞ் செய்துகொண்டு சந்தோஷத்தோடு இவைகளை நீர் திருவுளளமபறறி உண்ணவேண்டுமென்று இலட்டுவமுதலான பல சிற்றுண்டிகளை அவருக்குத் தந்தார்கள். அவர் அவைகளைவாங்கி, காட்டிலிருபபோர் ஒருபோது முண்டிராத அவைகளை ஒருவகைப்பழமென்றே நினைத்து வெகு சநதோஷமாக அமுதுசெய்தார். உடனே அக்கணிகையர் விபண்டகருக்குப்பயநது விரதமெனகிற சாக்குச்சொல்லி அவரிடத்து விடைபெற்றுப்போய்விட்டாகள். பிறகு அந்த ரிசியசிருங்கர் அப்பெண்களைப்பிரிந்து ஆற்றமாட்டாமல் மனதிற் குறைகொண்டு பயித்தியக் காரன்போல் அஙகுமிங்கும திரிந்துகொண் டிருந்தார். மறுநாள் மஹாசுந்தரிகளான அவர்களைக்கண்டவிடத்துக்கு அந்தத் தவசிவந்திருக்க, வேசிமாரும் அவா சுவாதீனப்பட்டதனால் தயிரியமும் சநதோஷமுங்கொண்டு அவர் இட்டப்போய், ஓ முனிவரே! எங்களாச

சிரமத்துக்கு நீர் வரவேண்டும், அங்கே உமக்கு நேற்றுச்செய்ததுபோல் நல்ல உணவுகளைக்கொடுத்து அதிதிசத்காரஞ்செய்வோமென்று அழைத்தார்கள். அம்முனிவர் அதற்கு இணங்கினதனால் அவரை ஓடத்திலேற்றிக் கங்கையைக்கடத்தி அங்கநாட்டுக்கு இட்டுக்கொண்டு போனார்கள். அவர் அந்நாட்டிற் பிரவேசித்த மாத்திரத்திலே மேகம் மழைபொழியத் தலைப்பட்டது - இவ்வாறு மழையோடுகூடவந்த அந்த முனிவரை ரோமபாத மகாராஜா எதிர்கொண்டுவந்து சாஷ்டாங்கமாய் அவர் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து ஷோடசோபசாரங்களினாலே ஆராதித்து, சுவாமி அடியேன் செய்த இந்த அபசாரத்தைப் பொறுத்தருளவேண்டும் - தேவரீர் திருத்தகப்பனார்க்கும் அடியேங்களிடத்தில் சீற்றமுண்டாகாமலிருக்கும்படி கிருபைசெய்யவேண்டும் என்று மிக்கவணக்கத்தோடு வேண்டிக்கொண்டார் - அந்த வேண்டிக்கோட்லை அந்த மஹானுபாவர் அங்கீகரித்துப் பிரசன்னராயிருந்ததனால் ராஜாவும் மனமகிழ்ந்து அவரைத் தமது அந்தப்புரத்துக்கு எழுந்தருளப்பண்ணித் தன் புத்திரியாகிய சாந்தையை அவருக்குக்கொடுத்து மனக்கவலை தீர்ந்திருந்தார் இவ்வாறு அந்தக் கலைக்கோட்டுமுனிவர் அங்கே மிக்க உபசாரங்களாலே ஆராதிக்கப்பட்டுச் சுகமாயிருந்தார் *

பாலகாண்டத்தில் பத்தாவதுசருக்கம்

முற்றிற்று

## பதினோராவதுசருக்கம்

கலைக்கோட்டுமாமுனிவரைத் தசரதமகாராஜா அயோத்திக்கு அழைத்துக்கொண்டு வந்தது

தசரத பூபதியை நோக்கிச் சுமந்திரர் மேலுஞ் சொல்லுகிறார். கேளும் மஹாராஜாவே? அந்தச் சனத்குமாரர் இங்ஙனமும் அருளிச்செய்தார். இக்ஷ்வாகுகுலத்திலே தசரதனென்கிற மஹாராஜா ஒருவருண்டாவார் - அவருக்கும் ரோமபாதமஹாராஜாவுக்கும் மிகுந்த நேசமும் சாந்தையென்கிற மகளாலே சம்பந்தமுமுண்டாயிருக்கும் - தசரதர் ரோமபாதரிடஞ் சென்று, நான் புத்திரனில்லாதவனாயிருப்பதனாலே என் குலம்

* அந்தக்கலைக்கோட்டுமுனிவர் மேலான பிரமசாரியானதனாலேயன்றோ மழை பெய்ததென்கிறது - அவர் வேசிமாருடைய பரிசமும் அவர்கள் பரிசித்துக்கொடுத்த உணவைப் பக்ஷித்ததுமாகிய அனாசாரத்தினாலே அந்தப் பிரமசரியத்துக்கு லோபம் வந்து விட்டதே என்றால் அறியாமையால் வந்த குற்றமாகாதலால் அவருடைய பெருந

விளங்கும்பொருட்டு நம்முடைய சாந்தையின் பர்த்தாவான ரிஷ்யசிருங் கரை நீர் எனக்குத் தரவேண்டும் - அவர் என் யாகத்தை நிறைவேற்றி எனக்குப் புத்திரர் உதிக்கும்படி செய்வாரென்று வேண்டுவர். அந்த அங்கராஜன் மனதிலே ஆலோசித்து நன்மனதோடு அம்முனிவரை அவ ருக்குத் தருவார் - அப்போது அயோத்தியரசர் அவரைக்கொண்டு புத்திரருக்காகவும் சொர்க்கத்திற்காகவும் யாகத்தை நடத்துவார். இதனால் அவருக்கு மஹா பராக்கிரமசாலிகளும் மஹா கீர்த்திமான்களுமாகிய குமாரர் நால்வர் அவ தரிப்பார்கள் என்று முன்பு சனத்குமாரர் அருளிச்செய்திருப்பதனால் நீர் இப்போது இதைக்குறித்து வசிஷ்டமா முனிவரிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு நீரே பரிவாரத்தோடு சென்று அம்முனிவரை எழுந் தருளப்பண்ணிக்கொண்டு வந்து யாகத்தை அனுஷ்டிக்கக்கடவீர். என்ற சுமந்திரர் உரைத்ததைக்கேட்டு அந்தக் கோசலாதிபதி வசிஷ்டமாமுனி வருக்குக் காரியமறிவித்து அனுமதிபெற்று மந்திரி புரோகிதர் முதலான வர்களோடு கூடப்புறப்பட்டு அநேகவனங்களையும் நதிகளையுங்கடந்து போய் ரோமபாதருடைய அருகில் ஜ்வலிக்கிற அக்கினிபோல வீற்றிரு ந்த அந்த விபண்டககுமாரரை முதலிலே கண்டு பணிந்து பின்பு அவ் வரசனைக் கண்டார் அவ்வரசரும், அருமையாக வந்த நேசரான தசரத சக்கரவர்த்தியைக்கண்டு களிகூர்ந்து செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து, இவரினொன்றும் தமக்கும் அவர்க்குமுள்ள சிநேகத்தையும் சம்பந்தத்தையும் அம்முனிவருக்கு விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்டு அந்தத் தபோதனர் சக்கரவர்த்திக்கு மரியாதைசெய்ய அதைப்பெற்று அந்தத் தசரதர் பிரியமாய் அவ்வரசராலே உபசரிக்கப்பட்டு ஏழெட்டு நாள் அங்கேயேயிருந்து ஒருநாள் தாம் வந்த காரியத்தை ரோமபாத ருக்குத் தெரிவித்துச் சாந்தையோடுகூட ரிஷ்யசிருங்கரைத் தம்மூருக்கு

---

தவத்தில் இது அழிந்தது என்கிறோம் - நல்லதிருக்கட்டும்-வேதசாஸ்திரங்களை நன்று யுணர்ந்த அவருக்குப் பெண்களென்பதும் அவர்களை நேசித்தல் விரதபங்கம் என்பதும் அதற்குப் பிராயச்சித்தம் இன்னது செய்துகொள்ள வேண்டுமென்பதும் தெரியாதி ருக்குமா என்றால் அவர் வேதம் ஓதினதேயன்றி அவற்றின்பொருளை யறியாரென்று சிலர் சமாதானஞ் சொல்லுகிறார்கள் மற்றுஞ்சிலர், பொருளுணர்ந்தவர்தாம்-ஆனாலு ம் அவர்களிப்படி யிருப்பார்களென்று பிரத்தியக்ஷமாய்க் கண்டவரன்று-அவர்களை ரிஷிக ளென்றே நினைத்திருந்தாராதலால், அது அறியாமையால் வந்த குற்றமே-அது பெரு நெருப்பில் ஒரு நீர்த்துளி வீழ்ந்ததுபோல அழிந்துவிடுமென்கிறார்கள். இன்னுஞ்சிலர், அவர் வேசிகளைப் பெண்களென்று அறிவார்-ஆயினும் நடக்கவேண்டிய கதிகளை யோக திருஷ்டியாலறிந்து அப்பெண்கள் மயமுற இருக்கும்படி ஒன்றும் தெரியாதவர் போலப் பாவனைசெய்தார் பரமஞான முடையவராதலால், அவரேதுசெய்தாலும் பாவமணுகாது என்று சொல்லுகிறார்கள் ஆயினும், வால்மீகருடைய கருத்துக்கும் நியாயத்திற்கும் ஒத்தது, நமேவிற்சொன்னதே என்று பலரும் அங்கீகரித்திருக்கிறார் கள். விபண்டகமுனிவர், யோகதிருஷ்டியினாலே நடந்ததை யறிந்து தம் குமாரர் பொறுத்ததனாலும் ஒரு பெரிய நாட்டுக்கு உபகாரமானதனாலும் பொறுத்துக் கோபி யாமலிருந்தாரென்றறிக.

அனுப்பும்படி கேட்டார். அவரும் அப்படியே ஒப்புக்கொண்டு முனிவரை மனையாளோடு தசரதர் மாளிகைக்குச் செல்லும்படி தெரிவிக்க, அம்முனிவரும் ஆகட்டுமென்று அங்கீகரித்ததனாலே, அவர்களைப் பிரயாணப்படுத்தினார். பின்பு அரசரிருவரும் ஒருவரையொருவர் மார்பில் தழுவிக்கொண்டு கைகூப்பிக் கும்பிட்டு விடைபெற்றுக்கொண்டார்கள். தசரதசக்கரவர்த்தி அங்கிருந்து புறப்பட்டவுடனே திருவயோத்தியை அலங்கரிக்கும்படி தூதர்களைக்கொண்டு பட்டணத்தார்க்குக் கட்டளையிட்டனுப்பினார். அக்கட்டளையின்படி நகரத்தாரெல்லாம் தெருக்களைச் சுத்தஞ்செய்து வாசனைநீர்தெளித்து மலர்தூவி தோரணங்களும் கமுகு வாழை முதலியவைகளும் நாட்டிப் பந்தல்போட்டுப் பதாகைகள்கட்டித் தீபங்களும் பூரணகும்பங்களும் வைத்துப் பட்டணத்தை வெகு ரமணீயமாய் அலங்கரித்தார்கள்.

அப்படி யலங்கரித்த நகரத்திலே தசரதமஹாராஜாவானவர் அம்முனிவரை முன்னிட்டுக்கொண்டு பேரிகாளை சங்கு முதலிய வாத்தியங்கள் ஒலிக்க மிகப்பெருமையாய்ப் பிரவேசிக்கும்போது அங்குள்ளாரெல்லாம் கண்டு களித்து மொய்த்துக்கொண்டார்கள். இப்படி நகரத்தை வலம்வந்து அந்தப்புரத்திற்போய் முனிவருக்கு வெகு விசேஷமாய் உபசாரங்களைச்செய்து ஆதரித்தார். அரமனைப் பெண்டிரும் சாந்தைக்குப் பலவகை உபசாரஞ்செய்து ஆதரித்தார்கள். இப்படி உபசரிக்கப்பட்டு அந்தத் தம்பதிகள் ஆனந்தத்தோடு அங்கே சிறிதுகாலம் வாசஞ்செய்து வந்தார்கள்.

பாலகாண்டத்தில் பதினோராவது சருக்கம்

முற்றிற்று.

## பன்னிரண்டாவது சருக்கம்.

யாகத்தின்முயற்சி

இவ்வாறு வெகுநாள்சென்ற பின்பு ரமணீயமான வசந்தகாலம்வந்ததனால், சக்கரவர்த்தி தான்முன் உத்தேசித்த அச்வமேதஞ்செய்ய நினைத்துக் கலைக்கோட்டுமுனிவரைப் போற்றிப்பணிந்து - தாஞ்செய்யும் யாகத்திற்குப் பிரம்மாவாயிருக்கும்படி பிரார்த்திக்க, அவரும் அதனை யொப்புக்கொண்டு, ஐய் அரசனே யாகத்துக்கு வேண்டுவனவற்றைச் சேகரித்துக் குதிரையை விதிப்படி விடக்கடவீர் என்றார். அதுகேட்டு அரசர் மனக்களிப்புக்கொண்டு சுமந்திரரைவிட்டு வசிஷ்டர்முதலியோரை அழைப்பித்துத் தமது எண்ணத்தையும், யாகத்தின் கஷ்டத்தையும், விண்ணப்பஞ்

செய்ய, அவர்கள் கொண்டாடி அப்படியே நடப்பிக்கிறோம். உமக்கு அவசியம் புத்திரர்கள் ஜனிப்பார்களென்று அநுக்ரஹஞ்செய்து தங்களிடத்துக்குச் சென்றார்கள். ராஜாவும் கல்பசூத்திரவிதிப்படி அந்தந்தக்காலங்களிலே வசிஷ்டர் முதலாயினோர் திருமாளிகைக்குச் சென்று அவரவர்களை அத்வர்யு முதலான ருத்விக்குகளாகப் பிரார்த்தித்து வாகனங்களிலேற்றிக்கொண்டுவந்து பூஜித்துச் சித்திரைநக்ஷத்திரத்தோடுகூடிய பௌர்ணமியாகிய சுபதினத்திலே (சாங்கிரகணேயஷ்டி) என்கிற யாகத்தின் ஆரம்பவிதியை அநுஷ்டித்தார்.

பாலகாண்டத்தில் பன்னிரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## பதின்மூன்றாவது சருக்கம்.

யாகத்தின் ஆரம்பகாரியத்தைக் குறித்தது.

முன்சொன்னபடி (சாங்கிரகணி) என்கிறவிதியை அநுஷ்டித்துச் சமர்த்தர்களாகிய நானூறு ராஜகுமாரர்களோடும் அத்வர்யு முதலான ருத்விக்குகள் நால்வரோடும் இருபத்துநாலடியளவான முஞ்சம்புற் கயிற்றால் கட்டிய குதிரையைவிட்டு அது போகுமிடங்களில் ஓமஞ்செய்துவர, ஒரு வருஷம் பூர்ணமாகி மறுபடியும் வசந்தகாலம் வந்தது. வந்ததும் தசரதமஹாராஜா யாகத்தை நடத்தும்படி அத்வர்யு ஆக வரிக்கப்பட்ட வசிஷ்டமஹாமுனிவரைத் தெண்டனிட்டு உபசரித்துக் கைகூப்பிக்கொண்டு சுவாமீ! அடியேன் ஆரம்பித்த அசுவமேதயாகத்தை நிறைவேற்றியருளவேண்டும். அதன் அங்கங்களில் விக்கினங்கள் வாராமற் காத்துக்கொள்ளவேண்டும். தேவரீர் அடியோங்களுக்குக் குருவும் சிநேகிதரும் சகல நிர்வாஹகருமாயிருக்கிறீரன்றோ. ஆதலால் இந்த யக்கியமாகிய பாரத்தைத் தேவரீர் தாங்கவேண்டும் என்று பிரார்த்திக்க, அவரும் அப்படியே ஆகட்டும் நீர் அஞ்சவேண்டாமென்று வாக்குக் கொடுத்துப் பின்பு அந்தயாகத்திற்காக வரிக்கப்பட்ட மற்றப்பிராமணர்களையும், அந்தந்த வஸ்துக்களோடு வீடுமுதலானவற்றை நிருமிக்கும்படியான சிற்பிகளையும், யாகபாத்திர முதலியவற்றைச் செய்யவல்ல தச்சர்களையும், கிணறுமுதலியவை தோண்டவல்ல பூமிக்காரர்களையும், பலகலைகளில் தேர்ந்தவல்லவர்களும் யாகவிதி அறிந்தவர்களுமாகிய வைதிகர்களையும், சித்திரகாரர் நாட்டமாடவல்லோர் கணக்கர் முதலான மற்றும் வேண்டியவர்களையும் அழைத்து இப்படிச் சொல்லலாயினர். ஓ முனிவர்களே மற்றுமுள்ள அதிகாரிகளே காரியகாரர்களே! நீங்களெல்லாம் மஹாராஜாவின் கட்டளைப்படி யாகத்துக்காக விருப்பத்தோடு முயலவேண்டும்.

அநேகவாயிரம் செங்கற்களும் * சுருக் சுருவம் முதலானவைகளும் மற்றும் வேண்டுமவைகளும் சீக்கிரத்திற் சித்தஞ்செய்யவேண்டும் வருமரசருக்கு வாசயோக்கியமாயும் காற்று மழை முதலானவைகளுக்குச் சலிக்காதவையாயும் தூபதீபாதி அலங்காரங்க ளுடையனவாயுமுள்ள ராஜகிரகங்களும், அப்படியே பிராமணர்க்கும் பிறர்க்கும் உபயோகமான மாளிகைகளும், சாலைகளும் நம்முடைய நகரத்தாரும் நாட்டாரும் இருக்கத்தக்க நல்ல கட்டடங்களும், வேண்டிய போஜனபானாதிகள் நிறைந்தவைகளாய் நிருமிக்கப்படவேண்டும் இவ்யாகத்துக்குவரும் நான்கு வருணத்தாரும் மேன்மையோடு மரியாதைபெறும்படி அவர்களுக்கெல்லாம் நல்லபோஜனங்கள் வஸ்திரங்கள்முதலினவை அளிக்கவேண்டும். எந்தெந்தக்காரியத்துக்கு எப்போதெப்போது எதெதுவேண்டியிருக்குமோ அதுவெல்லாம் குறைவற நிறைந்திருக்கவேண்டும் அந்தந்த வேலைகள் திருத்தமாய்ச் செய்யவேண்டும் யாருக்கும் ஒரு அவமானமும் நேரிடாமல் நடத்தவேண்டும் யாகத்தை நிறைவேற்றுவோர்க்கு விசேஷமாய் அன்னபான வஸ்திர பூஷணாதிகளாலே திருப்திசெய்யவேண்டும் வேண்டியமட்டும் தனமுங்கொடுக்கவேண்டும் ஒரு குறைவுமில்லாமல் சகலமும் சீராய்முடியும்படி நீங்களியாவரும் அன்போடும் சிரத்தையோடும் பாடுபடவேண்டும் என்று பிரீதியோடு கட்டளையிட்டார் அதைக்கேட்டு அவர்களியாவரும் அவர்வார்த்தையைப் பிரியமாயங்கீகரித்து, தேவரீர் நியமனத்தின்படி சகலத்தையும் செவ்வையாய் நடத்துகிறோமென்று சொன்னார்கள்! பின்பு வசிஷ்டபகவான் சுமந்திரரை அழைத்து, ஓ சுமந்திரரே, அங்கங்கேயுள்ள தருமசீலரான ராஜாக்கள் பிராமணர் வைசியர் சூத்திரர் என்கிறயாவரையும் வரவழையும் அன்றியும் சூரராயும் நம்மரசருக்குப் பழயபந்துவாயும் வேதசாஸ்திரங்களில் தேர்ந்தவராயும், மஹா தருமிஷ்டராயுமுள்ள ஜனகமஹாராஜாவை நீரே நேராகப்போய் உபசாரத்தோடு இட்டுக்கொண்டுவாரும் அப்படியே நம்முடைய ராஜாவுக்கு இஷ்டராயும் இஷ்டத்தையே பேசுகிறவராயு மிருக்கிற காசிராஜாவையும் நம்முடைய மஹாராஜாவுக்கு மாமனாரும் தருமநிலை தவிராதவரும் மூத்தவருமாகிய கேகயராஜாவையும் அவர் குமாரனையும் மஹாஸ்நேகிதரான ரோமபாதமஹாராஜாவையும் நீரே நேராகச்சென்று உபசரித்து இட்டுக்கொண்டு வரவேண்டும் அன்றியும், வங்கங்களிங்காதி கீழ்நாட்டரசர்களையும் சிந்து சவ்வீராதி மேனாட்டரசரையும் சோளபாண்டியாதி தென்னாட்டரசரையும் குருபாஞ்சாலாதி வடநாட்டரசரையும் தக்க தூதரைக்கொண்டு அழைப்பிக்கவேண்டும் என்றிப்படி நியமித்ததைச் சுமந்திரர் கைக்கொண்டு சந்தோஷத்தோடு நேரேசென்றும் தூதரைக்கொண்டும்

* சுருக் சுருவம் என்பவை நெய்யை எடுத்துவிடவும் அதை அக்கினியிற் பெய்யவு முபயோகமான அத்திக்கட்டையாற்செய்த கரண்டிகள்.

கிரமப்படி ராஜாக்களையும் பிரமஞானிகளான வேதியர்களையும் சிரேஷ்டர்களையும் அழைத்துவந்தார். அவர்களும் உத்தமவஸ்துக்களைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சிலநாட்களில் வந்து சேர்ந்தார்கள். அந்தந்த வேலைக்கு நியமித்த வேலைக்காரர்களும் சிற்பிகளும் மற்ற அதிகாரிகளும் தங்கள் தங்களுக்கு நேமித்தவைகளைச் சிறப்பாய் நிறைவேற்றி வசிஷ்டரிடம் வந்து வணக்கத்தோடு யாவும் சீராய் முடிந்ததென்று விளம்பினார்கள். இவ்வாறு யாவும் சித்தமானதைக் கண்டு வசிஷ்டபிரமரிஷி மஹாசந்தோஷ பூரிதராய் அரசரிடத்தில் வந்து, ஓ மஹாராஜாவே! உமது இஷ்டப்படி சகலமும் சம்பூர்ணமாயிற்று. ராஜாக்களும் காணிக்கைகள் கொண்டுவந்து சேர்ந்தார்கள். வந்தவர்களை முறைப்படி நானும் சரித்தேன். இவற்றையெல்லாம் கண்டு களித்து வேள்வியை ஆசரிக்கும் பொருட்டு நீர் யாகமண்டபத்திற்கு வரவேண்டும் என்று அறிவித்தார். அதைக்கேட்டுச் சக்கரவர்த்தி களிகூர்ந்து ரிஷ்யசிருங்கமாமுனிவரையும் வசிஷ்டரையும் முன்னிட்டுக்கொண்டு மனைவியர் மந்திரிமார் முதலானோரோடுகூடப் பலவகை வாத்தியங்கள் முழங்க, அந்தணர் * சொஸ்திவாசனஞ்சொல்ல, நல்முகூர்த்தத்தில் அரண்மனையினின்றும் புறப்பட்டு யாகசாலைக்கு வந்து சேர்ந்தார்.

பாலகாண்டத்தில் பதின்மூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

## பதினாலாவது சருக்கம்.

### அசுவமேதம் நடந்த சிறப்பு

---

இவ்வண்ணம் சகல சனௌகத்தோடு ராஜா யாகசாலையிற் பிரவேசித்தவுடனே முன்விட்ட குதிரையும் இடையூறின்றி வந்துசேர்ந்தது. அவ்யாகசாலையானது முன் அரசன் கட்டளைப்படி சரயூநதியின் வடகரையில் சிறப்பாகவும் சீராகவும் செய்யப்பட்டிருந்தது. அதில் ருத்துவிக்குகளும் மற்றவர்களும் பிரவேசித்து பிரவர்க்கியம் ஆதியாயுள்ள கருமங்களை நன்றாய் அனுஷ்டித்தார்கள். காலை பகல் மாலைகளிற் செய்யவேண்டிய ஓமங்களையும் விதிப்படிசெய்தார்கள். இந்திரன் சோமன் முதலானோருக்குச் செய்யவேண்டிய பூசை புரஸ்காரங்களும் மற்றக் கருமங்களும் சாஸ்திர

---

* சொஸ்திவாசனம் ஜனபதம் நன்மை வரும்படி சொல்லுகிற வேதத்தின் ஒரு பிரிவு.

விதிப்படி நடந்தன. (சோமன் என்பது ஆட்டாங்கொடியுமாம். ஆதலால், அதற்குச் செய்யவேண்டிய சடங்குஞ் செய்யப்பட்டது) ஒரு அற்பகாரியமும் தவறிப்போகாமல் வேதத்தின் கரைகண்டவர்களாகிய அந்தப் பிராமணோத்தமர்கள் நடத்திவந்தார்கள். அந்த மஹாயாகம் நடந்தபோது வேலைசெய்து அலுத்தவனும் பசியால் வருந்தினவனும் வேறு எவ்வகையிலாலும் அயர்ந்தவனும் காணப்படவில்லை. முனிவர்களும் மற்றப்பிராமணர்களும் சூத்திரர்களும் முதியோர் பாலியர் துறவிகள் பெண்கள் முதலானயாவரும் நன்றாய் அமுதுசெய்தார்கள். அங்கே இனைமாத்திரம் கிஞ்சித்துத்திருவுளம்பற்றி அமுது செய்தருளவேண்டுமென்கிற கோஷமும் யஜமானன் காதுக்கு எட்டிற்று. திருப்தியடைந்தோம் திருப்தியடைந்தோமென்கிற கோஷமும் பரவியிருந்தது. ஆனால் வஸ்துக்களுடைய ருசியோ எவ்வளவு உண்டாலும் திருப்தியில்லாமலிருந்தது. அங்கே மலைமலையாய அன்னராசிகளும் பக்ஷணராசிகளும் வியஞ்சனராசிகளும் நாநாவித ரசபதார்த்தங்களுடைய நதிகளுங் காணப்பட்டன. உயர்ந்த அணியாடைகளைத் தரித்த அநேகர் பரிமாறிவந்தார்கள். அவர்களுக்கு உதவிகளாய மற்றும் பலர் நல்லஅலங்காரத்தோடு ஓடிக்கொண்டிருந்தார்கள். வந்தவர் யாவருங்கந்தபுஷ்ப தாம்பூல வஸ்திராதிகளைப்பெற்றுக் களித்திருந்தார்கள்.

அங்கே வேதவேதாந்தங்களும் மற்றும் பல சாஸ்திரங்களுங் கல்லாதவரில்லை. நல்லொழுக்கமும் விரதாநுஷ்டானமுமில்லாதவருமில்லை. யாகச்சடங்குகள் செய்து ஓய்வாக உட்கார்ந்திருக்குங்காலத்தில் வித்துவான்கள் ஒருவரோடொருவர் பலவிஷயங்களைக் குறித்துந் தர்க்க வாதஞ் செய்துவந்தார்கள். அந்தந்தநாளுஞ் செய்யவேண்டிய கருமங்களை விதிப்படியும் நியாயப்படியும் ருத்துவிக்குகள் செய்துவந்தார்கள். யூபஸ்தம்பங்களை நாட்டும்படியாகிய நாள்வந்தபோது, அக்கினிக்கு எதிரிலே ஒரு தேவதாருயூபமும் அதற்கு இருபுறத்திலும் நறுவிலி மரத்தாற்செய்த யூபங்களிரண்டும் அவைகளுக்குத் தெற்குவடக்குகளில் மும்மூன்று கருங்காலியாற்செய்த யூபங்களும் அவைகளின் தெற்குவடக்குகளில் முன்போலவே மும்மூன்று பில்வ யூபங்களும் அவற்றின் இருதிசைகளிலும் மும்மூன்று பலாசயூபங்களும் ஆக இருபத்தொரு யூபங்களை ஒவ்வொன்றின் இடைவெளி மாரளவு இருக்கும்படியாகவும் ஒவ்வொரு யூபமும் நாற்பத்திரண்டடி உயரமுள்ளனவாயிருக்கும்படியாகவும் எட்டுமூலை[illegible]ந்தனவாகவும் சொரசொரப்பில்லாதனவாய்ப் பளபளப்பு உள்ளனவாகவும் செய்வித்து நாட்டிப் பொற்பட்டங்களணிந்து நல்ல வஸ்திரங்களாலும் கந்தபுஷ்பாதிகளாலும் அலங்கரித்தார்கள். அந்த யூபங்களெல்லாம் மூன்று சப்தரிஷி மண்டலங்கள் இணைந்தாற்போற் பிரகாசித்தன.

அன்றியும் கருடன் சிறகுகளை விரித்துக்கொண்டு பூமியைநோக்கி வருவதுபோல பிரமாணத்தோடு செய்திருக்கிற செங்கற்களாலேயும் சிறகுகளில் பொற்கற்களாலேயும் அக்கினிஸ்தானமாகிய (சித்த) ஒரு அடுக்கான இடம் செய்தார்கள். அதில் அக்கினி ஜ்வலித்துக்கொண்டிருக்க அந்தந்த தேவதைகளுக்கான விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வனவுமாகிய பசுக்களை அவ்வவ் யூபங்களிற் கட்டினார்கள். இப்பசுக்களெல்லாம் முந்நூற்றுக்கு அதிகமாயிருந்தன. பின்பு பிரதானபசுவாகிய அசுவரத்தினத்தையும் யூபத்திற் கட்டினார்கள். அதனை ராஜபத்தினியாகிய கௌசலியை கைகேயி சுமித்திரைகளோடுகூட, சொல்லவேண்டிய மந்திரங்களைச்சொல்லிப் புரோக்ஷணை முதலிய சம்ஸ்காரங்கள் செய்து மூன்று பொன்னூசிகளாலே ஆயுதநாட்டுப் பிடங்களைக் கீறி இடமெல்லாம் சுற்றிவந்து ஓரிரவெல்லாம் அதனோடுகூடவே யிருந்தாள். பிறகு அத்துவாயு ஹோதா உத்காதா பிரம்மா என்கிற முக்கிய ருத்துவிக்குகள் ராஜாவினாலே தக்ஷிணையாகக்கொடுக்கப்பட்ட ராஜபத்தினிகளைக் கைகளாற் பிடித்துக்கொண்டு அவர்களுக்காகப் பணம்பெற்றுக்கொண்டு அவர்களை அரசனுக்கே கொடுத்துவிட்டார்கள். பிறகு அக்குதிரையின் (மேதஜதி) என்கிற ஒருவகை உள்ளுறுப்பையெடுத்து அத்துவாயுவானவர் சுத்தமானமனதோடு பாகஞ்செய்து நெய் வழுசிக்கொம்பிறைப்பெய்த தடுக்கின்மேல்வைத்து ஓமம் பண்ண, அந்தப்புகையை ராஜாமோந்து பாவம்நீங்கிப் பரிசுத்தரானார். பின்பு ருத்துவிக்குகள் பதினாறுபேரும் அசுவத்தின் அங்கங்களை எல்லாம் விதிப்படி மந்திரபூர்வகமாக ஓமஞ்செய்துவிட்டார்கள். அந்த மகாயக்கியத்துக்குப் பலநாள் வேண்டியிருந்தாலும் பிரதானமாய் மூன்றுநாளுண்டு. அவைகளில் முதனாள் அக்கினிஷ்டோமமும் இரண்டாநாள் உக்தியமும் மூன்றாநாள் ஷோடசியுமாகிய மூன்றுகிரதுக்களும் சீராய் நடத்தப்பட்டன. மற்றும் பின்னாட்களில் ஜ்யோதிஷ்டோமம் ஆயுஷ்டோமம் இரண்டு அதிராத்திரம் அபிஜித் விசுவஜித் அப்தோர்யாமம் என்பவைகளும் இப்படிப் பிராமணங்களிற்கூறிய யாகவிசேஷங்களெல்லாம் நடத்தப்பட்டன. இவ்வாறு அசுவமேதயாகமானது சாங்கோபாங்கமாய் நடத்தப்பட்டு நிறைவேறியபின், தசரதமகாராஜா மனமகிழ்ந்து உத்காதாவுக்கு வடநாட்டையும் ஹோதாவுக்குக் கிழநாட்டையும் அத்வாயுவுக்கு மேனாட்டையும் பிரமாவுக்குத் தென்னாட்டையும் தக்ஷிணையாகக்கொடுத்தார். அவர்கள் அவற்றைப் பெற்றுக்கொண்டு அரசனைநோக்கி, மகாபிரபுவே உமது உதாரகுணத்துக்கு வியந்தோம்-ஆயினும் வேதமோதுதல் முதலான வைதிகநிஷ்டையிலேயே யிருக்கும் எங்களுக்குப் பூமியாலாகவேண்டுவதென்ன. நாங்கள் ஆளத்தகுமோ? சகல சாமர்த்தியமுமுள்ள நீரே ஆளத்தகும். ஆதலால் இதற்கு விலையாகப் பொன் மணி பசுமுதலான உமக்கு இசைந்தவைகளை எங்களுக்குக் கொடுத்துவிட்டு இப்பூமியை நீரே கைக்

கொள்ளவேணடுமெனறு சொலலினாாகள. சககரவாததியும அப்படியே யிசைநது அவாகளுககும அவாகளுடைய கணஙகளுககும அனேகமாயிரம பசுககளும மணி சுவர்ணாதிகளும கொடுதது அநத நாடுகளைப பெறறுககொணடாா அநத ருதது்விககுககெளலலாரும ரிசியசிருஙகருககும நியாயப்படி கொடுககததககக பஙகுகளைககொடுதது மறறவைகளைத தாங்கள விகிதபபடி பஙகிடடு எடுததுககொணடாாகள பினபு பூபதியானவா அநதச சபையிலிருநத பிராமணருககெலலாம அனேகம பொனனும வஸ்திர முதலானவைகளும தகூஷிணைகொடுதது அருகிலவநது யாசிதத ஒரு கிழவனுககு வேதியனுககுத தனகையிலணிநதிருநத ரததினகடகததை யளிததாா. இபபடி யாவருககும பூரணமாய தகூஷிணைகொடுதது மிகுநத சநதோஷமடைநதவராயக கணகளில ஆனநதபாஷபம பெருக யாவருககும பூமியில விழுநது சாஷடாஙகயாகத தெணடன சமாபபிததாா அநத ருதது்விககு முதலான சகல பிராமணரும மிகுநத திருபதியுடனே தரையில விழுநது தெணடனிடடுககொணடிருககிற ராஜாவுககு வேதவாககியஙகளைககொணடு பெருஙகோஷமாய ஆசீாவாதஞ செயதாாகள அவைகளைபபெறறுககொணடு எழுநது ராஜாவானவா கைகளைக கூபபிககொணடு கலைககோடடுமாமுனிவா சனனிதியில வநது அடியேனுககுச சநதானமுணடாகுமபடியான அனுககிரஹஞ செயயவேணடுமெனறு வேணட, அவரும அரசனே! அஞசவேணடாம நாலவா குமாரா உதிபபாாகளெனறு அருளிசசெயதாா.

பாலகாணடததில பதினாலாவது சருககம
முறறிறறு

# பதினைந்தாவது சருக்கம்.

## தேவதைகள் விஷ்ணுவை ராகூஷச நாசததுககாகப் பிராாததிததது.

அநத ரிசியசிருங்கமுனிவா, எதனால் இவ்வரசனுககு மககள பிறப்பாாகள எனறு யோகதிருஷ்டியால யோசிதது தெரிநதுகொண்டவராய்," ஓ தசரதமஹாராஜாவே? அதாவசிரசு எனகிற வேதததின பாகததிலே

அந்த யாகத்தில் வைதிகசசடஙகைககுறிததுச சொல்லியிருபபதனால் அவைகளுக்கு வேறுசொற்கள பிரயோகிக்கவகையில்லை ஆதலால அவறறையே பிரயோகிததோம-இதுபறறியே சுருககமாயும எழுதினோம-யாகம செய்விப்பவாக்கு (ருததுவிக) என்றுபேர் - அவாகளில முக்கியா நால்வா அததுவாயு ஹோதா உதகாதா பிரமமா

சொல்லப்பட்டிருக்கிற புத்திரகாமேஷ்டி என்பதை உமக்குப் புத்திரர் உண்டாகும்பொருட்டுச் செய்கிறேன் நீர் சந்தோஷமாயிரும் என்று சொல்லிவிட்டு அவ்யாகத்தை ஆரம்பித்து, சாஸ்திரவிதிப்படி அக்கினியில் ஒரு ஆகுதிசெய்தார். செய்துகொண்டிருக்கையில் பாகம்பெறுவதற்குப் பிறர் கண்களுக்குக் காணாமல் அங்கே சேர்ந்த தேவதைகள் சித்தர் கந்திருவர் முதலான யாவரும் லோககர்த்தாவான பிரமதேவனை நோக்கி, ஓ பகவானே, பூலோகத்தில் இராவணன் என்கிற ராக்ஷசன் தேவரீருடைய அநுக்கிரகத்தினாலே, மிக்க கர்வமடைந்து எங்களையெல்லாம் வருத்துகிறான். அவனுக்குத் தேவரீர் அன்போடு வரங்கொடுத்திருப்பதால் அதை நாங்கள் பாராட்டிக்கொண்டு அவனை ஒன்றுஞ்செய்யமாட்டாமலிருக்கிறோம்- அவன் என்ன செய்கிறானென்றால், உலகங்களையெல்லாம் நடுங்கும்படி வெருட்டுகிறான். உயர்ந்தவர்களைப் பகைக்கிறான். அமரர்க்கெல்லாம் அதிபதியான இந்திரனையும் திரஸ்கரிக்க நினைக்கிறான் ரிஷிகள் பிராமணர் முதலானவர்களை அலக்ஷியஞ்செய்கிறான் சூரியன் இவன்மேல் காய்வதற்கும்,வாயு இவன் பக்கத்தில் வீசுவதற்கும் அஞ்சுகிறார்கள். எப்போதும் அலைமோதிக் கொந்தளித்துக்கொண்டிருக்கிற சமுத்திரராஜன் அவனைக் கண்டால் அசையவும் பயப்படுகிறான். எங்களுக்கெல்லாம் அந்த ராக்ஷசனிடத்தினின்றும் மிகுந்த பயமுண்டாயிருக்கிறது. ஆதலால் அவனை வதைக்கும்படியான உபாயத்தைத் தேவரீரே யோசிக்கவேண்டும் என்று பிரார்த்திக்க, சதுர்முகபகவான் சிந்தித்து யோசித்துச் சொல்லுகிறார். கேளுங்கள் அந்த துராத்துமா நாசமாவதற்கு ஒரு உபாயமிருக்கிறது. முன் அவன் என்னிடத்தில் வரங்கேட்கையில் தேவர் அசுரர் கந்திருவர் இயக்கர் முதலானோராலே நான் சங்கரிக்கப்படாதவனாயிருக்கவேண்டுமென்று கேட்டான். நானும் அப்படியே ஆகட்டுமென்று சொன்னேன் அவன் அலக்ஷியத்தினாலே மனிதனைக் குறிக்கவில்லை ஆதலால் அவனுக்கு மனிதனாலே வதையுண்டாகும் என்றிப்படி பிரமா சொல்லியதைச் செவியுற்று யாவரும் ஆனந்தமடைந்தார்கள் இப்படியிருக்கையில் ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர் தமக்கு அடியாரைத் தாம் ரக்ஷிக்கும்படியான கருணம் வாய்த்ததென்கிற சந்தோஷத்தினாலே மஹா பிரகாசமுள்ளவராய் ஆசிருதரைக் காக்குங் கருவியாகிய சங்கசக்கிராதி ஆயுதங்களை யேந்திக்

---

என்பவர்கள்-யாகமனுஷ்டிக்கவேண்டிய விதிகளைச்சொல்லுகிறவர் அத்துவர்யு-அதின்படி ஓமஞ்செய்பவர் ஹோதா - அங்கு அழைக்கப்பட்ட தேவதைகளை அந்தந்த வாக்கியங்களாலே துதிப்பவர் உத்காதா - இவர்கள் யாவரும் தவறாமலிருக்கும்படி பார்த்துக் கொள்ளுகிறவர் பிரமமா-இந்த நாலவரில் ஒவ்வொருவருக்கும் உதவியாக மும்மூன்று பேருண்டு - இவர்களை அவரவர்களைச் சேர்ந்த கணம் என்று சொல்லுகிறது - பிராமணங்கள் என்பன வேதவிதிகள் - கல்பசூத்திரமாவது யாகம் செய்யும் வகையைக் குறித்த சாஸ்திரம் - நியாயம் என்பது மீமாம்ச சாஸ்திரம் - பிரவாக்கியம் முதலான சடங்குகளையும் அக்கினிஷ்டோமமுதலான யாகங்களையும் தெரிவிப்பது கடினம் (கிர்து) என்றால் யாகம்.

கொண்டு பிரமபுரம் விளங்கத் தாம் உலகத்துக்கெல்லாம் அதிபதியானு லும் அப்பெருமையைப் பாராட்டாமல் அங்கே யெழுந்தருளி நான்முகக் கடவுளிடத்தில் சேர்ந்தார். அவரைக்கண்டு பிரமருத்திராதி சகல தேவதைகளும் எழுந்து பணிந்து துதித்து விண்ணப்பஞ்செய்யத் தொடங்கினார்கள். ஓ சுவாமி ஸ்ரீ மஹாவிஷ்ணுவே உலகங்களின் நன்மைக்காக ஒன்று வேண்டுகிறோம். இப்போது இந்த மஹாயாகஞ்செய்த புண்ணியாத்துமாவாய் தேவரீர் அவதரிப்பதற்கு ஏற்ற சற்குணங்களான தருமமறிந்திருத்தலும் மஹாதாதாவாயிருத்தல் மஹாரிஷியோடொத்த தேஜசு இப்படிப்பட்டவைகளையுடைய தசரதமஹாராஜருக்கு அவருடைய பத்தினியார் மூவரிடத்திலும் நான்கு திருமேனியாகி அவதரிக்கவேண்டும். அவதரித்து, வரம்பெற்ற மேன்மையாலே செருக்கடைந்து உலகுக்கெல்லாம் ஒரு முள்போலிருக்கிற இராவணனைப் புத்திரமித்திராதியரோடு சங்கரித்தருளவேண்டும் அவனே அடியோங்களை மிகவும் துன்பப்படுத்துகிறான் அவனை ஜெயிக்க எங்களிலொருவருக்கும் சாமர்த்தியமில்லை அவன் செய்த உபத்திரவத்தைச் சுருக்கிச்சொல்லுகிறோம் நந்தனவனத்திலே விளையாடிக்கொண்டிருந்த கந்திருவர் அப்சரசுக்கள் முதலானோரையும் தவஞ்செய்துகொண்டிருந்த தவசிகளையும் இம்சைசெய்துவிட்டான் நாங்கள் அவனை வதைசெய்விக்கும்பொருட்டாகவே பூலோகத்துக்கு வந்தோம். தேவரீரைச் சரணமடைந்தோம். தேவரீரையன்றி எங்களுக்கு மேலான அடைக்கலம் வேறில்லை. ஆதலால், தேவரீர் எங்கள் பிரார்த்தனையைத் திருவுள்ளம்பற்றி இந்த மனுஷியலோகத்தில் அவதரித்தருளவேண்டும். என்றிப்படி வேண்டிக்கொண்ட தேவர்களை நோக்கி சுவாமியானவர் ஓ தேவர்களே இனி அச்சம் என்பதை விட்டு விடுங்கள் உங்களுக்கெல்லாம் நன்மையே உண்டாகும் அந்தத்துராத்துமாவான இராவணனை அவனுடைய பரிவாரங்களோடு சங்கரித்துப் பூலோகபரிபாலனஞ்செய்து கொண்டு பதினோராயிரம் வருடமிருப்பேன் என்று வரமளித்துத் தாமரைப்பூப்போலே திருக்கண்கள் மலர்ந்து விளங்க அவர்கள் வேண்டுகோளின்படியே நான்கு திருமூர்த்தியாயவதரிக்கத் தசரதமஹாராஜனைப் பிதாவாகத் திருவுள்ளம் பற்றினார்

சகல புவனகர்த்தாவாகிய பகவான் மஹாகிருபையினாலே தங்கள் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டதனால் தேவர்களெல்லாம் மிக்க ஆனந்தமடைந்து அந்தப்பகவானை வேதவாக்கியங்களாலமைந்த திவ்யஸ்தோத்திரங்களாலே ஸ்தோத்திரஞ்செய்து *ஆர்த்தியாலே மறுபடியும் அந்த ராவணனைச் சங்கரித்தருளித் திரும்பவும் தேவரீருடைய திவ்யலோகத்துக்கெழுந்தருளவேண்டுமென்று அவனுடைய துஷ்டத்தனங்களையெல்லாம் எடுத்துச் சொல்லிப் பிரார்த்தித்தார்கள்.

பாலகாண்டத்தில் பதினைந்தாவது சருக்கம்
முற்றிற்று.

---

* ஆர்த்தி என்றால் துன்பத்தைப் பொறுக்கமாட்டாத துக்கம்-நான்கு ரூபமாக அவதரிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தது, இராவணன் இந்திரஜித்து லவணாசுரன்

# பதினாறாவது சருக்கம்.

## பாயசங்கொடுத்தவிதம்.

இவ்வாறு தேவதைகளால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணமூர்த்தி சகலமும் அறிந்தவராயிருந்தும் அந்தத் தேவதைகளை நோக்கி மெதுவானதொருவாக்கியம் அருளிச்செய்கிறார். ஓ வானவர்களே! அந்தத் துராத்துமாவான ராவணனைச் சங்கரிக்கும்படி சொல்லினீர்களே அதற்கு நான் எந்த உபாயத்தைக் கைக்கொள்ளலாம் சொல்லுங்கள் என்று பகவான் அருளிச்செய்தது கேட்டு அந்த அமரர்கள், விண்ணப்பஞ்செய்கிறார்கள். சுவாமி! தேவரீர் மனுஷ்யத்திருமேனியாலேதான் அவனைத் தொலைக்கவேண்டும். தெய்வத்திருமேனியாகாது - ஏனெனில் அந்தப் பாவிராக்ஷசன் வெகுகாலம் கடினமான தவஞ்செய்து சதுர்முகக்கடவுளைச் சந்தோஷப்படுத்தி வரம் பெறும்போது தேவர் கந்திருவர் முதலான யாவராலும் தனக்குப்பயமில்லாமலிருக்கும்படி வேண்டி மனிதனை அலக்ஷியத்தினால் விட்டுவிட்டான். ஆதலின் மனிதத்திருமேனியைத் திருவுள்ளம்பற்றவேண்டுமென்றுஞ் சொல்லியதைக்கேட்டு ஸ்ரீபகவான், நல்லது அப்படியே இந்தத் தசரதனையே நான் பிதாவாகக்கொள்ளுகிறேனென்று பிரமதேவரோடு சொல்லிவிட்டு மஹாரிஷிமுதலானோர் ஸ்தோத்திரஞ் செய்துகொண்டிருக்க மறைந்தருளினார்.

துஷ்டர்கள் இருவர் ஆகிய இவர்களில் ஒவ்வொருவரையும் சங்கரிக்க ஒவ்வொரு அவதார புருஷன் வேண்டுமென்று அவர்களுடைய கொடுமைக்குத் தேவர்கள் அஞ்சியிருந்தனரென்று அறிக — சுவாமி அப்படியே திருவுள்ளம்பற்றினது, ஆசிருதருடைய இஷ்டசித்துக்காகவும் உத்தமரான [illegible] ஒழுக்கத்தையும் பகவத்கைங்கரியமே பிரதானமாக ஆசரிக்கவேண்டுவதையும் எம்பெருமான் திருவுள்ளப்படி அவருக்குப் பராதீனமாய் வர்த்திக்கவேண்டியதையும் பாகவத கைங்கரியத்தைப் பிரதானமாகக் கொண்டிருக்கவேண்டுவதையும் உலகத்தோர்க்குத்தாம் அனுஷ்டித்துக் காட்டுவதற்காகவும் எனப்பெரியோர் உரைக்கின்றனர். இல்லாவிட்டால் மதுகைடபர் முதலானோரை விளையாட்டாகச் சங்கரித்தவருக்கு இராவணனாதியர் ஒரு விஷயமல்ல.

பாற்கடலிற் சென்று வானவர் சுவாமியை இவ்விஷயத்தைக் குறித்துப் பிரார்த்தித்ததாய சில புராணங்களிருப்பதால் யாகஸ்தலத்தில் வந்தவனாத தேவர் வேண்டிக்கொண்டாரென்பது என்னவென்றால்-முன்பு பாற்கடலிற்சென்று பிரார்த்தித்தீர்களும் அதற்குப்பெருமாள் அசரீரவாக்கியத்தால் ஆகட்டுமென்றருளிச்செய்ததாகவும் இப்போ பிரத்தியக்ஷத்தில் எழுந்தருளியதனாலே விசேஷமாய்ப் பணிந்து பிரார்த்தித்ததென்றும் நியாயம் சொல்லுகிறார்கள் (இராவணவதத்திற்காகவே நாங்கள் பூலோகத்துக்கு வந்து தேவரீரைச் சரணமடைந்தோம்) என்கிற தேவதைகளின் வாக்கியத்துக்கு இதுதான் கருத்து என்கிறார்கள்.

அக்காலத்தில் தசரதமஹாராஜாவானவர் புத்திரநிமித்தமான ஒரு வைதிகச்சடங்கைக்கடத்தினார். அந்த ஹோமாக்கினியிலிருந்து மிகுந்த சக்தியும் மிகுந்த பலமும் சிவந்தவாயும் பேரிகைபோன்ற தொனியும் சிங்கத்தின் மயிர்போலே நெருங்கி விளங்குகிற உடம்பு மயிரும் மீசையும் தலைமயிரும் உள்ளதாய் நல்ல லக்ஷணம்பொருந்தினதாய்க் கறுப்பும் சிவப்புமான வஸ்திரமுடுத்தி திவ்யாபரணங்களணிந்து பெரியதொருமலையின் சிகரம்போலே உன்னதமாய் சூரியமண்டலம்போல பார்க்கக் கண் கூசும்படியாயும் அக்கினிச்சுவாலைபோல பிரகாசமுள்ளதாய ஒரு மஹாபூதம் அன்று திவ்யபாயசம் நிறைந்தும் மேன்மையானவெள்ளியால் செய்ததும் மேல்மூடியுள்ளதும் ஆச்சரியமானதுமான ஒருபெரிய பொற்பாத்திரத்தைத் தன் பத்தினியை அணைப்பதுபோல இரண்டுகைகளாலும் அணைத்துத் தாங்கிக்கொண்டு புலிபோலக்கம்பீரமான அடிவைப்போடு தோன்றி சக்கிரவர்த்தியைப்பார்த்து "நான் பிரமதேவனால் அனுப்பப்பட்ட புருஷனென்று" என்றது, அதுகேட்டரசன் எழுந்து வணங்கி, பகவானே உமக்கு நல்வரவாகக்கடவது அடியேன் என்னசெய்யவேண்டுமோ அதைக்கட்டளையிடவேண்டும் என்றுசொல்ல, அந்தப்புருஷன் இதுதேவநிர்மாணமாகிய பாயசம்-புத்திரனையுண்டாக்கத்தக்கது பெருமை ஆரோக்கியமும் தரத்தக்கது. நீ தேவதைகளை ஆராதித்த புண்ணியத்தினாலே உனக்கு வாய்த்தது. இதனை நீ வாங்கி உன்பத்தினிமார் கையில் புசிக்கும்படி கொடு. புத்திரனை அடைவாய், எதற்காக யாகஞ்செய்தையோ அந்தப்பயன் இதுவென்று சொன்னான். அரசர்பிரானும் அதை வாங்கித் தலைமேல்வைத்துக்கொண்டு வெகு சந்தோஷத்தோடு அந்தப்புருஷனைக் கும்பிட்டுப் பிரதக்ஷிணஞ் செய்தார். இப்படி தான்வந்த காரியத்தை நிறைவேற்றி, அந்தப்பூதம் அந்த அக்கினியிலேயே மறைந்துவிட்டது.

பின்பு தசரதர் யாககாரியத்தை முடித்து மகாதரித்திரன் நிதியைப் பெற்றாற்போல மஹாநந்தமுள்ளவராய் அந்தப்புரஞ்சென்று கவுசலியை முதலான பத்தினிமாரை நோக்கி, இதோ தேவநிர்மாணமான பாயசம் வந்திருக்கிறது-இதைவாங்கிப் புசியுங்களென்றுசொல்ல-அவர்களுடைய முகம் சந்தோஷகாந்திகளாலே சரத்காலத்துச் சந்திரன்போலே பிரகாசித்தது.

కౌసల్యాయైనరపతిఃపాయసార్ధందదౌతదా
అర్ధాదర్ధందదౌచాపిసుమిత్రాయైనరాధిపః
కైకేయ్యైచావశిష్టార్ధందదౌపుత్రార్థకారణాత్
ప్రదదౌచావశిష్టార్ధంపాయసస్యామృతోపమం
అనుచింత్యసుమిత్రాయైపునరేవమహీపతిః
ఏవంతాసాందదౌరాజాభార్యాణాంపాయసంపృథక్ ॥

கௌஸல்யாயை நரபதிஃபாயஸார்த்தம் ததௌ ததா
அர்த்தாதர்த்தம் ததௌ சாபி ஸுமித்ராயை நராதிபஃ
கைகேய்யை சாவசிஷ்டார்த்தம் ததௌ புத்ரார்த்தகாரணாத்
ப்ரததௌ சாவசிஷ்டார்த்தம் பாயஸஸ்யாம்ருதோபமம்
அநுசிந்த்ய ஸுமித்ராயை புநரேவ மஹீபதிஃ
ஏவம் தாஸாம் ததௌ ராஜா பார்யாணாம் பாயஸம் ப்ருதக்.

பின்பு அந்தத் தசரதமகாராஜா புத்திரநிமித்தமாய் அமுர்தத்துக்குச் சமானமாகிய அந்தப் பாயசத்தில் பாதியை எடுத்து கவுசலயாதேவிக்கும் மறுபாதியில் பாதியை (நாலிலொன்றை) சுமித்திராதேவிக்கும் மிகுதியில் பாதியை (எட்டிலொன்றைக்) கைகேயிக்கும் மிகுந்துவழுதுபோன பாயசத்திலெட்டிலொன்றை நினைத்துப்பார்த்துமறுபடியும் சுமித்திரைக்கும் வகுத்துக்கொடுத்தார். இப்படி பாகித்துக்கொடுத்த பாயசத்தைப் பட்டமகிஷிகளான அந்த மூன்றுபேர்களும் வாங்கிச்சமானமாக எண்ணிக் களிப்புற்ற மனமுடையவர்களாய் தந்தம்பாகங்களையுண்டு உடனே அக்கினிக்கும் சூரியனுக்கும் நிகரான ஒளிபொருந்திய கர்ப்பங்களைத் தரித்தார்கள். பின்பு தசரதசக்கரவர்த்தி, தன் தேவிமார்களை நன்றாகக் கண்ணுற்றுக் கவலைதீர்ந்த மனமுடையவராய் விண்ணுலகில் விண்ணவர் சித்தர் முனிவர்களின் கூழாங்கூடிய பூஜிக்கப்பட்ட தேவேந்திரனைப்போல் மனமகிழ்ந்தவராக வீற்றிருந்தார்.

பாலகாண்டத்தில் பதினாறாவதுசருக்கம்

முற்றிற்று.

---

* ராஜா பாயசத்தை மூவருக்கும் சமமாகப்பகிர்ந்து கொடாமல் வித்தியாசமாய்க் கொடுத்ததற்குக் காரணம் யாதெனில், கௌசலியை பட்டத்துக்கு உரிய மூத்த பத்தினியாதலாலேயும், சுமித்திரை இரண்டாவளாதலாலேயும், கைகேயி கடைசியவளாதலாலேயும், தருமத்தையும் முறையையும் யோசித்ததென அறிக. முதலில் கௌசல்யைக்குப் பாதிகொடுத்துப் பின் சுமித்திரைக்குப் பாதியிற்பாதி கொடுத்து அன்பினாலே மிகுந்ததைமுழுதும் கைகேயிக்குக் கொடுக்கப்போனவர் இது தகுதியன்றென்று நினைத்துத் தான் கைகேயிக்குக் கொடுக்கப்போனதில் சிறிது மிகுத்தி இரண்டாந்தரம் சுமித்திரைக்குக்கொடுத்தார். இக்கருத்தை (நினைத்துப்பார்த்து) என்பதனால் முனிவர் குறிப்பித்திருக்கிறார். இந்தப்பாயசம் பாகித்ததை வேறுவகையாகவும் சில புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது அது காலபேதத்தைப்பற்றி என்கிறார்கள். இந்தப்பாயசம் என்பது பார்வைக்கு அப்படி தோற்றியதேயல்லது உண்மைக்கு ஸ்வாமிக்குத் திருமேனியாக் கொள்ளத்தக்க சுத்தசத்துவமாம் - எந்த அவதாரத்திலும் அவர் திருமேனி பஞ்சபூதங்களாலாகியதன்று - என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

## பதினேழாவது சருக்கம்.

### பிரமதேவன் கட்டளைப்படி தேவர்கள் வானராதிகளைப் பெற்றது.

பின்பு மகிமைபொருந்திய தசரதச்சக்கரவர்த்திக்கு ஸ்ரீமஹாவிஷ்ணு புத்திரனாக அவதாரஞ்செய்ய ஒத்துக்கொண்டவளவில் - நான்முகக்கடவுள் தேவதைகளெல்லாரையும் நோக்கிக் கட்டளையிடுகிறார். ஓ தேவர்களே! நம்மெல்லோருடைய க்ஷேமத்தைக் குறித்தே அவதரிக்கும் விஷ்ணுவுக்குச் சகாயமாம்படிக் கருதியகாரியத்தை முடிக்கவல்லவர்களாய் நினைத்தபடி ரூபமெடுப்பவர்களாய் மாயங்களறிந்தவராய் சௌரியமுள்ளவர்களாய் வாயுவுக்கு நிகரான வேகமுடையவர்களாய் நீதியறிந்தவர்களாய் புத்திமான்களாய் விஷ்ணுவுக்குச்சரியான பராக்கிரமமுடையவர்களாய் பகையாளிகள் கொல்லவொண்ணாதவராய் பகையாளிகளைக் கொல்லுமுபாயம் அறிந்தவர்களாய் திவ்யதேகமுள்ளவர்களாய் அமிர்தமுண்டவர்களையொத்தவர்களாய் தம்தம் தந்தைகளுக்கு நிகரான பராக்கிரமமுடையவர்களாய் வானரரூபத்துடன் கூடிய மக்களை அப்ஸரசுகளிடத்திலும் கந்தருவஸ்திரீகளிடத்திலும் உண்டாக்கக்கடவீர்கள் நான் முன்னமே கொட்டாவி விடும்போது என்வாயினின்று கரடிகளுக்கு ராஜனான ஜாம்பவானென்பவன் உண்டாயிருக்கிறான் ஆதலால் என்கடமையை நான் தீர்த்துவிட்டேன் என்று பிரமதேவன் கட்டளையிட முனிவர் சித்தர் வித்தியாதரர் உரகர் நாகர் சாரணர் முதலான அநந்ததேவர்கள் யாவரும் வீரராயும் வனசஞ்சாரிகளாயுமுள்ள வானரர்களை உண்டுபண்ணினார்கள் இந்திரன் வானரர்களுக்கு ராஜனாயும் மகேந்திரமலைபோன்ற தேகமுள்ளவனாயும் மகாபலவானுமான வாலியென்பவனையும் சூரியன் சுக்ரீவனென்பவனையும் பிரகஸ்பதி சகலவானரப்படைத்தலைவர்களில் உயர்ந்த புத்தியுள்ள தாரனென்பவனையும், குபேரன் பொன்மிகுந்த கந்தமாதனனென்பவனையும், விசுவகர்மா, நளனென்பவனையும், அக்னிபகவான் தனக்குச்சரியான காந்தியுள்ள நீலனென்பவனையும் படைத்தார்கள் இந்த நீலன் ஒளியாலும் கீர்த்தியாலும் பராக்கிரமத்தாலும் மற்றெல்லோரையும் அதிசயித்திருந்தான் நல்லரூபமுடைய அசுவினீதேவரிருவரும் மைந்தன் துவிதன் என்னும் இருவர்களையும் வருணன் சுஷேணனையும் பர்ஜன்யன் மகாபலமுள்ள சரபனென்பவனையும் படைத்தார்கள். வச்சிரம்போன்ற திருமேனியுள்ளவரும் வேகத்தில் கருடனுக்குச் சரியானவருமாகிய அநுமான் என்பவர் வாயுபகவானுக்குப் புத்திரராய்ப்பிறந்தார் இவர்கள் அநேகமாயிரங் கணக்குடையராய் ராவணனைக்கொல்ல உறுதியுள்ளராய் அளவற்ற பலமுள்ளவராய் ஜயமுற்றவராய் நினைத்தரூபந் தரிப்பவராய் மேருமந்தரம் என்னும் மலைகளுக்கு நிகராய உயர்ந்ததேகமுடையவராய் கரடி வானரம் கொண்டமுசுந்த இவற்றின் ரூபமுள்ளவர்களாய் தந்தம்தந்தைகளுக்குச் சரியான ரூபவேஷங்களுடையவர்களாய் கல்லாலும் கரத்தாலும் நகங்க

ளாலும் பற்களாலும் போர்செய்பவராய்ச் சகலமான அஸ்திரங்களையும் அறிந்தவராய்ப் பெரியமலைகளையும் பேர்ப்பவராய் முதிர்ந்த மரங்களையும் முறிப்பவராய் வேகத்தினாலே கடலையும் கலக்க வல்லவராய்ப் பூமியைக் கையில் எடுப்பவராய்க் கால்களால் கடலைத் தாண்டத்தக்கவராய் ஆகாயத்தில் பறப்பவராய் மேகங்களைத் தாவிப்பிடிப்பவராய்க் காட்டில் மதம்பிடித்துத் திரிகின்ற யானைகளையும் பிடிப்பவராய்ச் சிங்கநாதத்தாலேயே பறவைகளைப் பயந்து கீழே விழச் செய்பவராகியும் இருந்தார்கள். இவ்விதமுள்ள காமரூபிகளான மகிமைபொருந்திய யூதபதிகளுக்கும் அநேக நூறாயிரம் புத்திரர்களுண்டாகி அவர்களும் அநேகம் யூதபதிகளைப் படைத்தார்கள். இவர்களில் சிலர் ரிக்ஷவானென்னும் மலையின் தாழ்வரைகளிலும் சிலர் அநேகவிதமான மற்றைமலைகளிலும் சிலர் காடுகளிலும் இருந்துகொண்டு நளன் நீலன் அனுமான் முதலிய யூதபதிகளையும் பிரதானர்களான வாலி சுக்ரீவன் என்னும் ராஜாக்களையும் சேர்ந்து அவர்களுடைய கட்டளைக்குள்ளாக நடந்து வந்தார்கள். அந்த யாவரும் கருடனுக்கு ஒப்பான பலமுள்ளவர்களாய்ப் போர்முகத்தில் தீர்ந்தவர்களாய்க் கொழுப்பால் சிங்கம் புலி பெரும் நாகங்களையும் பிடித்துக்கொண்டு நடப்பவர்களாய் இருந்தனர். நீண்ட புஜமும் மிகுந்த பலமுமுள்ள வாலி தன் புஜபலத்தால் கரடி குரங்குகொண்ட முகங்களினுருவமுள்ள இந்த யாவரையும் பார்த்துக்காத்து வந்தான். மலை, காடு, கடல்களுடன்கூடின இந்தப் பூமியானது சூரராய் வெவ்வேறு தேகமும் வெவ்வேறு தேகக்குறிகளும் மேகக்கூட்டம்போலும் மலைச்சிகரங்கள்போலும் தேசமும் எல்லோரும் பயமுறத்தக்க ரூபமும்பொருந்திய அந்த வானர யூதங்களால் ஸ்ரீராமருக்குச் சகாயநிமித்தமாக எங்கும்பரவி மூடப்பட்டதாயிற்று.

பாலகாண்டத்தில் பதினேழாவதுசருக்கம்

முற்றிற்று.

---

உத்தரராமாயணத்தில் வாலி சுக்கிரீவர்கள் தசரதராஜா யாகஞ்செய்யு முன்னமே இருந்ததாகக் கண்டிருப்பதால் பின் பிரமன் வார்த்தையைக்கேட்டுத் தேவர்கள் வாலி முதலானோரைப் படைத்தார்கள் என்று இருப்பது எப்படியெனில் தசரதர் முதலில் யாகஞ்செய்தபோதே தேவர்களுக்கு நான்முகன் சொன்ன வார்த்தையைக் கவி யிப்போது நடந்ததாகச் சொன்னாரென்றும் இந்திராதிகள் தற்செயலாய்ப்படைத்த வாலி முதலியவர்கள் ஸ்ரீராமமூர்த்திக்குச் சகாயமாமபடி சொன்னாரென்றும் தேவமானத்தையிட்டு ஒருவருஷம் என்றாரென்றும் பலவிதமாகச் சமாதானம் சொல்லுகிறார்கள் முன்பு நந்திகேசுவரர் இட்ட சாபத்துக்கு ஒத்து நான்முகக்கடவுள் வானரரை யுண்டு பண்ணக் கட்டளையிட்டார் உரகா நாகா என்பதில் ஒன்றுக்கு ஒன்றுகலையுள்ள பாம்பென்றும் மற்றொன்றுக்குப் பலசாலியுள்ளதென்றும் பொருள் இதிலிருக்கிற பல பதங்களிலொன்றுக்குத் தேகபலமும் மற்றொன்றுக்குச் சேனையும் பொருள் ரிக்ஷரஜசு என்னும் வானரன் ஒருநாள் மகாமேருவினருகில் சென்று அங்கொரு குளத்தில் மூழ்கித் தக்ஷணத்தில் பெண்ணாக அப்போ தங்குவந்த இந்திரன் சூரியனிருவரும் அந்தப் பெண்ணைக்காமுற்று அப்போதே வாலி சுக்ரீவர்களைப் படைத்தார்கள். அந்தப் பெண்ணுரு மறுநாள் முன்னுருவாகி யிவர்களை வளர்த்தபடியால் வாலி சுக்ரீவரிருவரும் சகோதரர்களானார்கள்.

## பதினெட்டாவது சருக்கம்.

### ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்கள் அவதரித்தது

தசரத சக்ரவர்த்தி செய்த அந்த அசுவமேதயாகம் முடிந்தவுடன் தேவர்கள் தந்தம் பாகங்களைக் கைக்கொண்டு தம்மிடஞ்சேர மகாராஜா வும்யாக நியமங்களை முடித்து பரிஜன பரிவாரங்களுடன்கூடிப் பட்டணஞ் சென்றார். தக்கபடி அவரால் பூஜிக்கப்பட்ட ராஜாக்களும் சந்தோஷமடைந்து கலைக்கோட்டுமாமுனியையும் வணங்கிச் சந்தோஷமுற்ற தம்சேனைகளுடன் புறப்பட்டுத் தம பட்டணங்களுக்குச்செல்ல, தசரதராஜரும் சாந்தையுடன் கலைக்கோட்டுமாமுனியை முன்னிட்டுக்கொண்டு, பட்டணஞ் சென்று மற்றுமுள்ள ரிஷி முதலானவர்களையும் சம்மானஞ்செய்தனுப்பி விட்டுச் சந்தோஷமடைந்து புத்திரனுண்டாவதை எதிர்பார்த்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்.

பிறகு யாகமுடிந்த தாறுபருவங்கள்கடந்து பன்னிரண்டாவதான சித்திரைமாசத்தில் நவமிதிதியில் புனர்வசுநக்ஷத்திரத்தில் சூரியன் குரு வெள்ளி செவ்வாய் சனி என்கிற் ஐந்து கிரஹங்களும் முறையே உச்சங்களான மேஷகடக மீனசிம்ம துலா ராசிகளிலிருக்கக் கடகலக்னத்தில் குருவும் சந்திரனும் கூடியிருக்கையில் நான்காம்பாதத்தில் சகல ஜகங்களுக்கும் நாதராய்ச் சகலலோகங்களாலும் வணங்கப்பட்டவராய்ச் சகல லக்ஷணங்களுடன்கூடினவராய ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய பாதி அம்சமுடையவராய்ச் மகாபாக்கிய சாலியாய இக்ஷ்வாகு குலத்தைச் சிறப்பிப்பவருமான ஸ்ரீராமனென்னுந் திருநாமமுடைய புத்திரனைக் கௌசலையாதேவிபெற்று வச்சிராயுதபாணியாய்த் தேவர்களுக்குத் தலைவனான இந்திரனைப்பெற்ற அதிதிபோல் அளவற்ற ஒளியுள்ள அந்தப் புத்திரனால் விளங்கினாள் பின்பு பூசநக்ஷத்திரத்தில் மீனலக்னத்தில் கலக்கமற்ற புத்தியையும் உண்மையான பராக்கிரமத்தையும் சகலமான குணங்களையுமுடைய விஷ்ணுவினது நாலிலொன்றில் பாதிபாகமுள்ளபரதர் என்பவர் கைகேயியினிடத்தில் அவதரித்தார். ஆயில்யநக்ஷத்திரத்தில் கடகலக்னத்தில் வீரராய் சகலமான அஸ்திரங்களில் வல்லவராய் விஷ்ணுவினுடைய நாலிலொன்று எட்டிலொன்றான பாகரூபிகளான லக்ஷ்மண சத்ருக்கினரென்னும் புத்திரர்களைச் சுமித்திரைபெற்றாள் மிகுந்த நன்மையு நற்குணமுமுடையவர்களாய் ஒருவர்க்கொருவர் தகுந்தவர்களாய்க் காந்தியால் இரட்டைகளான பூரட்டாதி உத்திரட்டாதி நக்ஷத்திரங்களுக்கு நிகரான இந்த நான்கு குமாரர்கள் தசரதராஜருக்கு அவதரிக்கையில் கந்தருவர் மதுரமாகப்பாடினார்கள். தேவவேசியர் ஆடினார்கள். தேவபேரி

கள் முழங்கின. ஆகாசத்தினின்று பூமழை பொழிந்தது. அயோத்தி
மாநகரில் ஜனங்களுக்கு ஒருபெரிய உச்சவமுண்டாயிற்று ராஜவீதிகளும்
ஜனங்களால் நிறைந்தும் ஆட்டமாடுகிறவர் ஆட்டிவிப்பவர்களால் நெருங்
கியும் பாடல்களாலும் வாத்தியங்களாலும் மற்றுமுள்ள லீலைகளாலும் விதா
னிபொருந்தியுமிருந்தன தசரதரும் ஸந்தோஷமாக தேவதைகளுக்கும் வெகு
மதிசெய்து பிராமணருக்கும் ஆயிரமாயிரமாக தனங்களையும் பசுக்களை
யும் தானஞ்செய்தார் நால்வரும் அவதரித்த பன்னிரண்டு தினஞ்சென்று
பதின்மூன்றாவது தினத்தில் வசிஷ்டமாமுனிவர் மிகவும் சந்தோஷமடைந்
தவராய்க் கௌசல்யா புத்திரருக்கு ராமனென்றும் கைகேயிபுத்திரருக்
குப் பரதனென்றும் சுமித்திரை குமாரர்களில் முதலவருக்கு லக்ஷ்மண
னென்றும் மற்றொருவருக்குச் சத்துருக்கனனென்றும் திருநாமஞ்சாற்றி
நாட்டிலும் நகரிலுமுள்ள பிராமணர்களுக்கு ஆராதனைஞ்செய்வித்து அள
வற்ற ரத்தினங்களை யவர்களுக்கு கொடுப்பித்து ஜாதகர்மம் முதலான
சகல கருமங்களையும் செய்வித்தார்

அவர்களுக்குள் மூத்தவரான ஸ்ரீராமர் துவஜம்போல் தன்குலத்தைத்
விளக்குபவராய்த் தன் தகப்பனுருக்குச் சந்தோஷகரமாகவும் பிரமதே
வர்போல சகல பூதங்களுக்கும் இஷ்டமுள்ளவராகவுமிருந்தார். எல்லோ
ரும் வேதம் வல்லவரும் சகலலோகஹிதங்களில் முயற்சியுள்ளவரும்
ஞானமுள்ளவரும் நற்குணங்களுள்ளவருமாக வளர்ந்தார்கள். இவர்க
ளுக்குள்ளும் ஸ்ரீராமமூர்த்தியானவர் மிக்க காந்தியையும் உண்மையான
பராக்ரமத்தையு முடையவராய்ச் சந்திரன்போல சகலலோகங்களுக்கு
மிஷ்டராகியும் யானையேறுவதிலும் குதிரையேறுவதிலும் தேர்மீதேறு
வதிலும் பழக்கமுடையவராய்த் தனுர்வேதத்திலும் தேர்ந்தவராய் தந்
தைதாய்களுக்குப் பணிசெய்வதிலும் ஆஸக்தியுடையவராய்ப் பிறந்தது
முதல் மிகவும் நட்புடன் தன்னுயிர்போன்ற லக்ஷ்மணரிடத்தில் தன் சரீ
ரத்தைப் பார்க்கிலும் மிகவும் அபிமானம்வைத்து அவரைவிட்டுத் தூங்
காமலும் நல்ல உணவுகளை உண்ணாமலும் குதிரையேறி வேட்டையாடப்
போகும்போதும் வில்லெடுத்துக்கொண்டு தன் பின்புறம் காத்துக்கொண்
டுவரும்வரைக் கண்பபோதாகிலும் விடாமலும் இருந்தார். இவ்வாறே
பரதரும் சத்துருக்கருரும் பிரியாமலிருந்தார்கள். பிரியமுள்ள இந்தப் பிள்
ளைகள் நால்வராலும் தசரதசக்கரவர்த்தி சகலதேவர்களால் பிரமதேவர்
போல மகிழ்ச்சியடைந்து இவர்கள் சகலவேதவேதாங்கங்களையும் ஓதிஉண்
மையான ஞானமும் நல்ல குணங்களும் பாபபயமும் கீர்த்தியும் பொரு
ந்தி வளர்ந்தமையைக்கண்டு இவர்களுக்கு விவாஹம் செய்யவேண்டு
மென்று மந்திரிகள் புரோகிதர் இனத்தார் முதலானோரை யழைப்பித்து
யோசனைசெய்துகொண்டிருந்தார். அத்தருணத்தில் விசுவாமித்திர மகா
முனிவர் தசரதராஜனைக் காணவேண்டுமென்று அரண்மனை வாசலில்வந்து

அங்குள்ள துவாரபாலனை நோக்கி ஓய் துவாரபாலனே! நீங்கள் மகாராஜரிடம்போய்க் காதிபுத்திரரான கௌசிக மகாமுனி வந்திருக்கிறாரென்று சீக்கிரமாகச் சொல்லுகவென? அவர்கள் உடனே பயந்தோடிவந்து மகாப்பிரபுவே! விசுவாமித்திர மகாமுனி அரண்மனை வாசலில் வந்திருக்கிறாரென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டு தசரத மகாராஜரும் மகிழ்ச்சியடைந்து இந்திரன் தேவகுருவுடன் பிரமதேவனை எதிர்கொள்வதுபோல வசிஷ்டமகா முனிவருடன் கூடி வணக்கத்துடன் எதிர்கொண்டுபோய்க் கௌசிக மகாமுனியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து அர்க்கியமுதலான பூஜைகளைச் செய்தார். விசுவாமித்திர மகாரிஷியும் விதிப்படி தசரத சக்ரவர்த்திசெய்த பூஜைகளை அங்கீகரித்து ஓய் தசரத மகாராஜரே! நீரும் உம்முடைய நகரமும் பொக்கசமும் தேசமும் பந்துக்களும் மித்திரர்களும் குசலமாயிருக்கிறீர்களா? சுற்றிலுள்ள ராஜாக்கள் உமக்குக் கீழ்ப்படிந்திருக்கிறார்களா? பகைவரெல்லாரும் ஜயிக்கப்பட்டிருக்கிறார்களா? தைவிகமாகவும் மானுஷமாகவும் நேரிடுங்கருமங்கள் நன்றாக முடிக்கப்பட்டனவா! என்று வினவி வசிஷ்டர்முதலிய மகாயோகிகளையுங் கிட்டி குசலப்ரச்னஞ்செய்ய எல்லோரும் ஒன்றுசேர்ந்து சந்தோஷமடைந்து மகாராஜாவினுடைய சிங்காரமண்டபஞ்சென்று முறைப்படி அவரவர்களுக்குத் தக்க ஆசனங்களில் உட்கார்ந்தார்கள்.

అథహృష్టమనారాజా విశ్వామిత్రమ్మహామునిం
ఉవాచపరమోదారో హృష్టస్తమభిపూజయన్
యథామృతస్యసంప్రాప్తిర్యథావర్షమనూదకే
యథాసదృశదారేషు పుత్రజన్మాప్రజస్యచ
ప్రణష్టస్యయథాలాభో యథాహర్షో మహోదయే
తథైవాగమనంమన్యేస్వాగతంతే మహామునే॥

அதஹ்ருஷ்டமனாராஜா விசவாமித்ரம்மகாமுனிம்
உவாசபரமோதாரோ ஹ்ருஷ்டஸ்தமபிபூஜயன்
யதாம்ருதஸ்யஸம்ப்ராப்திர்யதாவர்ஷமனூதகே
யதாஸத்ருசதாரேஷு புத்ரஜன்மாப்ரஜஸ்யச
ப்ரணஷ்டஸ்யயதாலாபோ யதாஹர்ஷோமஹோதயே
ததைவாகமனம்மன்யே ஸ்வாகதந்தேமகாமுனே.

பின்பு சந்தோஷமுள்ள மனமுடைய புளகாங்கிதரான தசரத சக்ரவர்த்தி விசுவாமித்திர மகாமுனியைப்பார்த்து ஓ ஸ்வாமி? தேவரீர் அடியேனுடைய வீட்டிற்கு எழுந்தருளினதை அமிர்தம் கிடைத்தது

போலவும், நீரற்றபாலைவனத்தில் மழைபொழிந்ததுபோலவும், பிள்ளையில்லாதவனுக்குத் தனக்குத்தக்க மனைவியிடத்தில் புத்திரனுண்டானதுபோலவும், பொருளிழந்தவனுக்கு அந்தப்பொருள்கிடைத்ததுபோலவும், மகோத்ஸவாதிகாலங்களிலுண்டாகும் சந்தோஷம்போலவும், யான் எல்லு இறேன் மஹாமுனிவரே உமக்கு நல்வரவாகக்கடவதென்று துதிசெய்து மேலும் உம்முடைய கோரிக்கையென்ன? அடியேன் என்னசெய்யவேண்டும்? தேவரீரே பூஜைசெய்யத்தக்க பாத்திரம் என்னுடைய பாக்யவசத்தால் தேவரீர் இங்கே எழுந்தருளியது, இப்போது தான் என்பிறப்பு பலனுள்ளது என் பிழைப்பும் நிலைபிழைப்பாயிற்று முன் ராஜராய், தவத்தால் ராஜரிஷியாய், அதற்குமேல் திடமான தவத்தால் பிரஹ்மரிஷியானபடியால், பலவிதங்களாலும் அடியேனுக்குத் தேவரீர் பூஜிக்கத்தக்கவர். ஆதலால் தேவரீரெழுந்தருளியது ஆச்சரியகரமாகவும் எனக்கு மிகவும் பவித்திரமாகவுமிருக்கிறது, தேவரீரை அடியேன் தரிசனம் செய்ததினால் புண்யக்ஷேத்திரங்களுக்கு யாத்திரைசெய்தவனானேன். தேவரீரெழுந்தருளினதற்குக் காரணமென்ன? அடியேன் செய்யவேண்டுவதென்ன? தேவரீர் திருவுள்ளத்தைப் பூர்த்திசெய்ய அடியேன் கோருகிறேன். அடியேன் செய்வேனோ மாட்டேனோவென்று சந்தேகிக்கவேண்டுவதில்லை, தேவரீர் அடியேனுக்குத் தெய்வம்போன்றவராதலால் தேவரீர் காரியமியாவும் அடியேன் தடையின்றிச் செய்யக்கடவேன், தேவரீர் எழுந்தருளியதனால் அடியேனுக்கு மிகவும் க்ஷேமமும் தர்மமுமுண்டு ஆதலால், அடியேனாலாகும் காரியத்தை யருளிச்செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, இன்பமாயும் மதுரமாயும் மிருதுவாயும் சொல்லப்பட்ட சக்கரவர்த்தியினுடைய வார்த்தையை அந்தக் கௌசிகமஹாரிஷிகேட்டு அளவற்ற களிப்புற்றார்.

பாலகாண்டத்தில் பதினெட்டாவது சர்க்கம்

முற்றிற்று.

---

கைகேயிக்குக் கொடுப்பதற்கு முன்னமே சுமித்திரைக்கும் பாயசங்கொடுத்திருக்க, இவள் கடையில் பிள்ளைபெற்றதற்குக் காரணம் சிலர் முன்னதாகப் பாகம் சுமித்திரை வாங்கினபோதிலும் கைகேயியுண்டபின்பு உண்டபடியால் பின்புபெற்றாளென்றார். இவளிரட்டைப்பிள்ளைகளைக் கர்ப்பந்தரித்தபடியால் உற்பத்திக்கிரமத்தில் பின்புண்டானது முன்புபிறந்து அதற்குப்பின் முன்னுண்டானது பிறப்பது முறையாதலால் இரண்டாவதுபாகம் கடையாதலால் கடையில் பெற்றாளென்பது சரியென்றுசொல்லுகிறோம், சூதர்—புராணஞ்சொல்வோர், மாகதர்—கட்டியஞ்சொல்வோர், வந்திகள்—துதிசெய்வோர்.

## பத்தொன்பதாவது சருக்கம்.

### கௌசிகர் ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கேட்டது.

---

கௌசிகமகாமுனிவர் ராஜசிங்கமான தசரதசக்கரவர்த்தி உரைத்த அந்தவார்த்தையைச் செவியுற்றுச் சந்தோஷத்தால் மயிர்ச்சிலிர்த்துப் புளகாங்கிதராகித் தசரதமஹாராஜரைநோக்கி ஓமஹாராஜரே! ராஜசார்த்தூலரும், சிறந்தகுலத்திற்பிறந்தவரும், வசிஷ்டமஹாமுனிவரால் திருத்தப்பட்டவரும், சிறந்த கீர்த்தியையுள்ளவருமான நீர் இப்படிச் சொல்லவேண்டும்; மற்றொருவிதமாகாது. நான் வந்தகாரியத்தைச்செய்வதாக ஸ்வயமாகவே ஒப்புக்கொண்ட உறுதியைத் தவறாமல் திடமாக நிச்சயஞ்செய்யும், யான் யோகசித்திக்காக ஒரு விரதம் தரித்திருக்கிறேன், அதற்குரிய காரியங்களைத்தொடங்கி முடிப்பதற்குமுன்னமே காமரூபிகளாய், வீரியமுடையவர்களாய், போர்செய்வதில் நன்றாகப் பழக்கப்பட்டவர்களாய், மாரீசனென்றும் சுபாகுவென்றும் பெயர்களையுடையவர்களுமான இரண்டு ராக்ஷசர்கள் மாம்ஸரக்தவர்ஷங்களை யாககுழியில் இறைத்து அந்த விரதம் முடியவொட்டாமல் தடைசெய்கிறார்கள். அப்படிச்செய்யினும் யான் கோபங்கொண்டு அவர்களைச்சபித்தால் அந்த விரதம் கெட்டுவிடுமாகையால் பட்டபாடெல்லாம் பலனற்று இடருற்றுத் தலம்விட்டு நலம்கெட்டு உம்மிடம் ஓடிவந்தேன். ஆதலால், உமக்குப் பிள்ளையாக இருக்கினும் ராஜாக்களெல்லோரினும் சிறப்புடையவராய் ராமரூபமாக அவதரித்திருந்தாலும் எப்போதும் தோல்வியுறாத பராக்கிரமமுள்ளவராய் ஜூலபார் என்னும் குழந்தைகளுக்குக் கன்னத்துக்குமேல் புறத்தில் வைக்கப்பட்ட குடுமியையுடைய பாலராகவிருந்தபோதிலும் சூரரும் உன்பிள்ளைகளுக்குள் மூத்தவருமான ஸ்ரீராமபிரானை எனக்கு நீர் கொடுக்கக்கடவீர். இவர் குழந்தையாதலால் இந்திராதிகளுக்கும் ஜயிக்கக்கூடாத நிசாசரர்களுடன் எப்படிப் போர்செய்வார் என்று ஐயமுற்றிவேண்டாம், என்னுடைய திவ்யதேஜஸ்ஸினால் பாதுகாக்கப்பட்ட இவர் மற்றுமுள்ள எல்லா அரக்கரையும் கொல்லவல்லமையுடையவராவார், இவருக்கு மற்றும் பலவிதமான நன்மையை உண்மையாகச் செய்வேன்; இதனால் மூன்றுலோகங்களிலும் கீர்த்தியடைவார், அந்த மாரீசசுபாகுக்களிருவரும் ஸ்ரீராமபிரானைக்கிட்டிப் போர்செய்ய நிற்பதற்கும் திறமையற்றவர் இவர்களைக்கொல்ல ஸ்ரீராமசந்திரனைவிட மற்றெவனும் வல்லவன் அல்லன், இவர்கள் வீரியத்தால் மதமேறினவர்களாகிச் சாங்காலங்கிட்டிக் கொடுமைசெய்கிறபடியால் ஸ்ரீராமபிரானுக்கு ஈடாகார்கள், வெகுகாலந் தவஞ்செய்துபெற்ற அருமையான பிள்ளையை ராக்ஷசர்களுடன் யுத்தஞ்செய்ய எப்படி அனு

ப்புவேனென்று யோசிக்கவேண்டாம்; நான் உறுதிசெய்து கொடுக்கிறேன் இப்போதே ஸ்ரீராமபத்திரனால் அந்த ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டவர்களாக நீர் நம்பக்கடவீர்.

అహం వేద్మి మహాత్మానం రామం సత్యపరాక్రమమ్
వశిష్ఠోపి మహాతేజా యే చేమే తపసి స్థితాః

அஹம்வேத்மிமஹாத்மானம் ராமம்ஸத்யபராக்ரமம்
வஸிஷ்டோபிமஹாதேஜா யேசேமேதபஸிஸ்திதா:

அநேககாலம் குருகுலவாஸஞ்செய்து கந்தமூல பலாசியாய்ச் சத்துவநிஷ்டனைச் மோக்ஷத்தையேகோரி யிடைவிடாமல் தவஞ்செய்த நான் ஸ்ரீராமபிரான் மஹாத்துமாவென்றும் எப்பொழுதும் நிலையான பராக்கிரமமுடையவனென்றும் நன்றாக அறிவேனே அல்லது உமக்கிவன் தன்மை யுண்மையாகவிளங்குமோ? என் சொல்லில் நம்பிக்கையில்லாவிடினும் என்னைப்போல் மிக்க தவஞ்செய்து மெய்ஞ்ஞானமுடையாரும், உம் குருவும் குருவுமாகிய இந்த வஸிஷ்டர்முதலான யோகிகளையும் கேளும். இவர்களும் இவன் தன்மையையறிவார்கள் மேலும் உமக்குத் தர்மலாபமும் கீர்த்தியும் நல்வாழ்வும் வேண்டுமாகில் ஸ்ரீராமபிரானை எனக்குக் கொடுக்கவேண்டும். வஸிஷ்டர்முதலான மந்திரிகளுடனும் யோசித்து அவர்கள் சம்மதித்தபின்பு ஸ்ரீராமபிரானைக்கொடும், நான் யாகஞ்செய்ய வேண்டிய காலம் சமீபித்திருப்பதால் சீக்கிரமாக யாகம் முடிக்கவேண்டிய பத்துத்தினமாத்திரம் ஸ்ரீராமபிரானை என்னுடன் அனுப்பவேண்டும், இப்படிச்செய்வதினால் உமக்கு மிகவும் நன்மையுண்டாகும். மனம் வருந்த வேண்டுவதில்லை என்று கூறினார். கௌசிகமகாரிஷி இவ்வாறு சொல்லக் கேட்டுத் தசரதமகாராஜா பயமடைந்து மனம்வருந்தி மிகவும் சோகத்தை யடைந்து சிங்காசனத்திலிருந்து நழுவினார்.

பாலகாண்டத்தில் பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

## இருபதாவது சருக்கம்.

தசரதர் கௌசிகர்சொல்லை மறுத்தல்.

தசரதச்சக்கரவர்த்தி கௌசிகமுனிவர் சொல்லியருளிய அந்த வார்த்தையைக்கேட்டு முகூர்த்தகாலம் மூர்ச்சையடைந்து பின்பு தெளிந்து கௌசிகரைப்பார்த்து மஹாமுனிவரே!

ఊనషోడశవర్షోయం రామోరాజీవలోచనః
నయుద్ధయోగ్యతామస్య పశ్యామిసహరాక్షసైః

ஊனஷோடஶவர்ஷோயம் ராமோராஜீவலோசந:
நயுத்தயோக்யதாமஸ்ய பஶ்யாமிஸஹராக்ஷஸை:

என்னுடைய இந்த ஸ்ரீராமன் யுத்தஞ்செய்யும் பருவமல்லாத பதி னாறுவயதுக்குங் குறைந்த பன்னிரண்டு வயதுள்ளவனும், செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவனுமாதலால் இவன் யுத்தஞ்செய்யத்தக்கவனென்று யான் நினைக்கேன். இப்படியிருக்க, கொடியமாயாவிகளாய் தேவாதிகள் பலர்கூடியும் வெல்லவொண்ணாத அநேக ராக்ஷஸர்களுடன் இவன் ஒருவனாக எப்படி யுத்தஞ்செய்யத் திறமையுள்ளவனாவான்? தேவரீருடைய விரதம் தலைக்கட்டவேண்டுவதே முக்கியமாதலால் நிறைந்த இந்த * அக்ஷௌஹிணி சேனைகளுடன்கூடி யானே நேராகவந்து அந்த ராக்ஷஸர்களுடன் போர்செய்கிறேன், என்னுடைய இந்தப்படர்கள் சூரர்களாகவும் வெற்றியுள்ளவர்களாகவும் அஸ்திரவித்தை தெரிந்தவர்களாகவுமிருப்பதினால் இவர்கள் அந்த அரக்கர்களுடன் போர்செய்யவல்லவர்கள். யானும் வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தரங்கத்தில் உயிருள்ளவரையில் அந்த நிசாசரர்களுடன் போர்செய்கிறேன், உம்முடைய நியமமும் தடையின்றித் தலைக்கட்டும், இவனையே யழைத்துக்கொண்டுபோகும் பக்ஷத்தில், இவன் சிறுபிள்ளையாகவும் வித்தையை முழுதுங் கற்காதவனாகவும், தன்பலம் பரபலங்களை யறியாதவனாகவுமிருக்கையால், கபடமாக யுத்தஞ்செய்யும் அந்த நிருதருடன் போர்செய்ய வல்லவனல்லன். மேலும் ஸ்ரீராமனைவிட்டுப்பிரிந்து க்ஷணப்பொழுதாயினும் உயிர்வைத்திரேன். ஆதலால் ஸ்ரீராமனைத் தேவரீர் அழைத்துக்கொண்டுபோவது நன்றன்று. ஸ்ரீராமனைவிட்டுப் போவதில்லையென்று உறுதியிருக்கினும் சேனைகளுடனும் என்னுடனும் ஸ்ரீராமனை யழைத்துக்கொண்டு போகக்கடவீர். நான் பிறந்து அறுபதினாயிரவருஷம் பிள்ளையில்லாமல் துக்கமடைந்து வெகு கஷ்டப்பட்டுப் பெற்றவனும் பிள்ளைகள் நால்வரில் எனக்கு மிகுதியும் அன்புள்ளவனும் பட்டாபிஷேகத்துக்குத் தக்க மூத்தவனும் மிகவும் தரும

---

* ஒரு தேர் - ஒரு யானை - மூன்று குதிரைகள் - ஐந்து காலாள்கள் - கூடியது பத்தியென்னப்படும் — பத்தி மூன்றுகொண்டது சேனாமுகம் — சேனாமுகம் மூன்று கொண்டது குல்மம் — குல்மம்மூன்றுகொண்டது கணம் — கணம்மூன்றுகொண்டது வாஹினி — வாஹினிமூன்றுகொண்டது பிருதனை — பிருதனைமூன்றுகொண்டது சமூ - சமூ மூன்றுகொண்டது அநீகினீ — அநீகினிபத்துக்கொண்டது அக்ஷௌஹிணி-எனப்படும். — இதற்கு மொத்தம் தேர்கள் - ௨௧௮௭0 ; யானைகள் - ௨௧௮௭0-குதிரைகள் - ௬௫௬௧0 - காலாள்கள் - ௧0௯௩௫0.

முள்ளவனுமாகிய ஸ்ரீராமனைத் தேவரீர் அழைத்துக்கொண்டுபோவது யுக்தமன்று. அந்த அரக்கர்கள் எவர் பிள்ளைகள்? எத்தனைபேர்கள்? எவ்வளவு பராக்கிரமமுள்ளவர்கள்? எப்படிப்பட்ட பலமுள்ளவர்கள்? என்ன பேருள்ளவர்கள்? அவர்களைக் காப்பவர் யாவர்? அவர்களுக்கு ஸ்ரீராமனாலாவது என் சேனைகளாலாவது என்னாலாவது பதில்செய்யத்தக்கது எப்படி? கொடியராகியும் மாயாவிகளாகியும் செருக்குள்ளவர்களாகியுமிருக்கும் அந்த ராக்ஷசர்களுக்கெதிராக யான் எப்படி நிற்கவேண்டியது, இதெல்லாம் தேவரீர் தெரியப்பட அருளிச்செய்ய வேண்டுமென்று கேட்க, அந்த வார்த்தையை விச்வாமித்திர மஹாமுனிவர் கேட்டு ஓய் தசரதச்சக்ரவர்த்தி! புலஸ்திய வம்சத்தில் பிறந்த குபேரனுக்குத் தம்பியாகவும் விச்ரவசு மஹாமுனிக்குப் புத்திரனுமான ராவணனென்பவன் பிரம்மதேவருடைய வரத்தால் அநேகராக்ஷச பலங்களுடன் கூடிக்கொண்டு சகல ராக்ஷசர்களுக்கும் ராஜனாகி மூன்றுலோகங்களையும் தன் வசப்படுத்திக் கொண்டிருக்கிறான். அவன் தான் போகாதவிடங்களில் செய்யப்பட்ட வைதிகயாகங்களைக் கெடுப்பதற்காக ஏவப்பட்ட மாரீச சுபாகுக்களிருவரும் வந்து என்னுடைய வேள்வியைக் கெடுக்கிறார்கள். என்று சொல்ல அதைக்கேட்டுத் தசரதர் கௌசிகரைப்பார்த்து கௌசிகமஹாமுனிவரே! மிக்கக்கொடியனாகிய அந்தத் தசக்கிரீவனுடன் யானும் யுத்தம்பண்ண வல்லவனன்று ஆதலால் என் பிள்ளையினிடத்தில் அருள்செய்யவேண்டும் அல்பபாக்கியனான அடியேனுக்குத் தேவரீரே தெய்வம், தேவரீரே குரு தேவ தானவ யக்ஷ கந்தருவ பதக பன்னகாதிகளுக்கும் வெல்லவொண்ணாத கொடிய அந்த ராவணனுடனாவது அவன் சேனைகளுடனாவது யான் சேனைகளுடனும் பிள்ளைகளுடனுங் கூடியும் யுத்தஞ்செய்யமுடியாது. ஆதலால் அழகுள்ள இந்தக் குழந்தையாகிய ஸ்ரீராமனை நான் கொடுப்பதில்லை, மாரீச சுபாகுக்கள் இருவரில் ஒருவனோடு யான் யுத்தஞ்செய்வேனே அல்லது இருவரோடும் ஏககாலத்தில் யுத்தஞ்செய்ய வல்லேனல்லேன் என்றனர். தசரதர் சொன்னவார்த்தையைக் கேட்டு கௌசிக மஹாமுனிவர் கடுங்கோபங்கொண்டு யாகவேதியில் எரிகின்ற நெருப்பில் நெய்யாகுதி பெய்தாற்போல எழுந்து ஒலித்தார்.

பாலகாண்டத்தில் இருபதாவது சருக்கம்

முற்றிற்று

## இருபத்தொன்றாவது சருக்கம்.

வசிஷ்டர் தசரதமகாராஜருக்குத் தைரியஞ்சொல்லல்.

சக்கரவர்த்தி பிள்ளையினிடத்தில் அன்பினருமையால் சொன்னவார்த்தையை விசுவாமித்திர மகாரிஷிகேட்டுக் கோபங்கொண்டு தசரதரை

நோக்கி ஓய் ராஜரே! முன்பு ஒருகாரியத்தைச் செய்வதாக உறுதி மொழிகொடுத்துப் பின்பு அதைத் தவறநினைக்கிறீர், ரகுகுலத்தில் பிறந்தோர்க்கு இது தகாது; இதுவரையில் இந்தக் குலத்தில் யாரும் இப்படிச் செய்ததில்லை யாதலால் இந்தக்குலத்திற்கே தீங்குவரும்; இது உமக்குத் தகுமென்றால் யான் வந்தவழிப் பார்த்து நடக்கிறேன்; நீர் சொன்னசொல்லைத் தப்பிப் பந்துக்களுடன் கூடிவாழ்ந்திரும்; என்று இவ்வாறு மிக்க கோபத்துடன்சொல்லப் பூமிமுழுதும் நடுங்கிற்று தேவர்களும்இவர் என்ன செய்வாரோவென்று பயந்து மூன்றுலோகமும் நடுங்குகின்ற நிலைமையை வசிஷ்டமஹாமுனிவர் கண்டு தசரதமகாராஜனை நோக்கி ஓய மகாராஜரே! நீர் மற்றொரு தர்மதேவனைப்போல் இக்ஷ்வாகுகுலத்திற் பிறந்து தைரியமுள்ளவராகவும், சொன்னசொல் தவறாதவராகவும், ஞானபல ஸாம்ராஜ்யமுள்ளவராகவு மிருந்து, இப்படித் தர்மத்தை விடலாகுமா? மூன்று லோகங்களிலும் தர்மாத்துமாவென்று கீர்த்திபெற்ற நீர் இப்போதும் தர்மத்தையே பற்றவேண்டுவதல்லது அதர்மத்தை மேற்கொள்ள வேண்டுவதில்லை.

సంశ్రుత్యైవం కరిష్యామీ త్యకుర్వాణస్య రాఘవ
ఇష్టాపూర్తవధో భూయాత్తస్మాద్రామం విసర్జయ

ஸம்ச்ருத்யைவம்கரிஷ்யாமீ த்யகுர்வாணஸ்யராகவ
இஷ்டாபூர்த்தவதோபூயாத் தஸ்மாத்ராமம்விஸர்ஜய

ஒருவருக்கு ஒன்றைச் செய்கிறேனென்று வாக்குத்தத்தஞ்செய்து பின்பு அதைச்செய்யாமல் தப்புகிறவன் *இஷ்டாபூர்த்தவதஞ்செய்த பாவத்தையடைவனாதலால், ஸ்ரீராமனை விசுவாமித்திரருடன் அனுப்பக்கடவீர். விசுவாமித்திரரால் காக்கப்படும் ஸ்ரீராமனை அஸ்திரங்களைக்கற்காவிடினும் அக்கினியால் காக்கப்பட்ட அமிர்தத்தைப்போல் இவனைக் கைக்கொள்ள ராக்ஷசர்களால் முடியாது, இந்த விசுவாமித்திரர் தருமமே உருக்கொண்டு வந்தவர்; வீரியமுள்ளவர்களுக்கெல்லாம் சிறந்தவர்; எல்லோரைப்பார்க்கிலும் புத்தியினுயர்ந்தவர்; தவங்களுக்கெலாம் பிறப்பிடம்; பலவிதமான அஸ்திரவித்தை அறிந்தவர்; மூன்றுலோகங்களிலும் இவர் தன்மையை எவனும் அறியான்; முன்னும் யாரும் அறியமாட்டார், இவர் பூமியாளும்போது பிருசாசுவர் என்னும் மகாமுனிவருக்கு ஆயிரவருஷகாலம் சேவைசெய்து, அவருக்குப் புத்திரர்களாயும் தக்ஷ பிரஹ்மாவின் பெண்களாகிய ஜயா சுப்ரபா என்கிற இரண்டுபெண்களின் பிள்ளைகளாயும், அநேகரூபங்களுடையவைகளாகியும், மஹாவீரியமுடையவைக

---

* இஷ்டம் யாகம் - பூர்த்தம் ஏரிகுளங் கிணறுகள் வெட்டுவித்தல்.

ளாயும், ஒளிபொருந்தினவைகளாயும், ஜயங்கொடுப்பவைகளாயு முள்ள அநேகம் அஸ்திரங்களைத் தெரிந்துகொண்டிருக்கிறார். அந்த ஜயா சுப்ரபா என்னும் பெண்கள் மிகவும் ஒளிபொருந்திய நூறு அஸ்திரசஸ்திரங்களை யுண்டுபண்ணுகின்றவை, முன்பொருகால் அசுரசேனைகளைக் *கொல்லுதற்காக அமேயங்களாயக் காமரூபிகளுமான ஐம்பது சிறந்த பிள்ளைகளை ஜயா என்பவள் பெற்றாள். சுப்ரபையென்பவளும் ஸம்ஹாரங்களென்னும் பெயருள்ள பிறருக்குக்கெடுக்கவும், தடுக்கவுங்கூடாத பலமுடைய ஐம்பது பிள்ளைகளைப்பெற்றாள். இவையெல்லாம் இந்த விசுவாமித்திரமுனி யறிந்திருக்கிறார், மற்றும் நூதனமாக அஸ்திரங்களை யுண்டுபண்ணவும் திறமையுள்ளவர், இப்படிப்பட்ட மஹாமகிமையுள்ள இந்த விசுவாமித்திரமஹாரிஷியுடன் ஸ்ரீராமனையனுப்புவதற்கு நீர் யோசனை செய்யவேண்டாம்; இவரே சகல ராக்ஷசர்களையும் கொல்லவல்லவராக இருந்தாலும் உம்முடைய புத்திரனுக்கு நன்மை செய்யவேண்டுமென்றே இவ்வளவுதூரம் வந்து உம்மை யாசிக்கிறார். என்றிவ்வாறு கூறிய வசிஷ்ட மஹாமுனி அருளப்பாட்டைக்கேட்டு சக்கரவர்த்தியார் தாமும் புத்தியினால் ஆலோசித்து இவர் சொல்வதெல்லாம் சரியென்று மிகவும் சந்தோஷமடைந்து ஸ்ரீராமபிரானை விசுவாமித்திரருடன் அனுப்ப உடன்பட்டனர்.

பாலகாண்டத்தில் இருபத்தொன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது சருக்கம்.

விசுவாமித்திரமஹாமுனிவர் ஸ்ரீராமபிரானையும் இளையபெருமாளையும் அழைத்துப்போய வழியில் ஸ்ரீராமபிரானுக்குப் பலை அதிபலையென்னும் வித்தைகளை யுபதேசித்தது.

---

அவ்விதமாகச் சொன்ன வசிஷ்டமஹாரிஷியின் அருளப்பாட்டைக் கேட்டுத் தசரதசக்கரவர்த்தியார் மனமகிழ்ந்து முகமலர்ந்து லக்ஷ்மணருடன்கூடின ஸ்ரீராமசந்திரனையழைப்பித்துத் தாமும் கௌசல்யாதேவியும் வசிஷ்டருமாகச்சேர்ந்து மங்களகாரியங்களால் மந்திரித்துப் பிரியமுள்ள பிள்ளையையுச்சிமோந்து மனமகிழ்ச்சியோடு கௌசிகமுனிவர்கையில் ஒப்புவித்தார். பின்பு செந்தாமரைபோன்றகண்களையுடைய ஸ்ரீராமபிரான் கௌசிகமுனிவரிடஞ் செல்லும்போது தூளிகளின்றிச் சுகமான மந்தமா

ருக்கமவிச்வும், தேவர்கள் பூமழைபொழியவும், தேவபேரியுடன் அயோத்தியில் பேரிசங்கங்கள் முழங்கவும் புறப்பட்டு விசுவாமித்திரர் முன்னும் ஸ்ரீராமசந்திரர் இடையிலும் இளையபெருமாள் கடையிலுமாக இம்மூன்று மஹாபுருஷர்கள் செல்லுகையில் ராமலக்ஷ்மண ரிருவரும் இருபக்கங்களிலும் தூணிரங்களை யுடையவர்களாதலால் மூன்று தலைகளுடைய பாம்புகள்போலவும், தனுஷ்பாணிகளாகிய பத்துத்திசைகளையும் தம்முடைய ஒளிகளால் விளக்கச்செய்பவர்களாய்ச் சதுர்முகன்பின் அசுவினீ தேவதைகள் செல்வது போலவும், உடும்புத்தோற் கட்டிச்செருகிய விரல்களை யுடையவர்களும் பட்டாக்கத்தியை யுடையவர்களும் மிகவும் காந்தியுடையர்களுமாய்ச் சிவன் பின் ஸ்கந்தவிசாகர்கள் போவதுபோலவும் விளங்கினார்கள் இந்தப்படி ஒன்றரைக்காதவழி நடந்தபின் விசுவாமித்திரமஹாரிஷி இவர்களுக்கு உண்டாகும் பசிதாகங்களைத் தணிப்பதற்காக சரயூநதியின் தென்கரையிற்சென்று ஓ! ஸ்ரீராமாவென்று இனிமையாக அழைத்து, குழந்தாய் சீக்கிரம் ஆசமனஞ் செய்துகொள் காலம் கழிக்கவேண்டாம்; மந்திரங்களின் கூட்டமான பலை அதிபலையென்னும் இரண்டு வித்தைகளை உபதேசஞ்செய்கிறேன், பெற்றுக்கொள்; இதனால் சிரமமும் ஜ்வரமும் உண்டாகமாட்டா; உருவம் மாறாது; நித்திரைபோனாலும் பிரமாதம் அடைந்திருந்தாலும் ராக்ஷசர்கள் ஒன்றும் செய்யமுடியாது; உன் புஜபராக்கிரமத்துக்குச் சரியாக மூன்று லோகங்களில் ஒருவனும் ஆகமாட்டான் அழகிலும் தாக்ஷிண்யத்திலும் ஞானத்திலும் புத்தியிலும் நிச்சயஞ் செய்வதிலும் விடைகூறுவதிலும் உனக்கு யாரும் ஒப்பாகமாட்டார்கள் இந்த இரண்டு வித்தைகளும் சகல ஞானங்களுக்கும் தாய்; வழிநடக்கும்போது இவைகளாற் சபித்தால் பசிதாகங்கள் உண்டாகா; இவைகளைக் கற்றால் கீர்த்தியுண்டாகும்; பிரஹ்மபுத்திரிகளான ஒளிபொருந்திய இவைகளை யுபதேசிக்கப் படுதற்குத் தகுதியுள்ளவன் நீயே தக்கவன்

కామంబహుగుణాస్సర్వే త్వయ్యేతే నాత్రసంశయః
తపసాసంభృతైశ్చైతే బహురూపేభవిష్యతః

காமம்பஹுகுணாஸ்ஸர்வே த்வய்யேதே நாத்ர ஸம்சய:
தபஸா ஸம்ப்ருதைச்சைதே பஹுரூபே பவிஷ்யத:

இந்த வித்தைகளா லுண்டாகத்தக்க பலகுணங்களும் உன்னிடத்தில் உண்டாயிருப்பதற்குச் சந்தேகமேயில்லை, ஆனாலும் தவத்தால் வளர்க்கப்பட்ட இந்த இரண்டுவித்தைகளையும் உனக்கு உபதேசஞ்செய்வதினால்; பஹுரூபங்களாகுமென்று சொல்லக்கேட்டு, ஸ்ரீராமபிரான் முகமலர்ந்து ஆசமனஞ்செய்து யோகியாகிய விசுவாமித்திரரிடத்தில் அந்த இரண்டு வித்தைகளையும் உபதேசம்பெற்று.—

విద్యాసముదితో రామశ్శుశుభే భూరివిక్రమః
సహస్రరశ్మిర్భగవాన్ శరదీవ దివాకరః॥

வித்யாஸமுதிதோராமஶ் ஶுஶுபே பூரிவிக்ரம:
ஸஹஸ்ரரஶ்மிர்பகவான் ஶரதீவ திவாகர:

அதிக பராக்கிரமசாலியாயினும் இந்த, வித்தைகளால் அதிககாந்தியுடையவராகி, ஆயிரங்கிரணங்களையுடைய சூரியபகவான் சரத்காலத்தில் அதிகமாக விளங்குவதுபோல விளங்கியருளினர். பின்பு மூன்றுபேர்களும் அந்தச்சரயூநதி தீரத்திலேயே அன்றைத்தினத் திராத்திரி சுகமாகவசிக்கையில், சக்கரவர்த்தியாருக்குச் சிறந்த பிள்ளைகளாயிருந்தும் தமக்குத்தகாத புல்லாலசெய்த படுக்கையில் படுத்தவர்களும் கௌசிகர் சொன்ன கதைகளால் லாலனைசெய்யப்பட்டவர்களுமான ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவருக்கும் அன்றிரவு சுகமாகவே விடிந்தது.

பாலகாண்டத்தில் இருபத்திரண்டாவது சருக்கம்.

முற்றிற்று

## இருபத்துமூன்றாவது சருக்கம்.

### விசுவாமித்திரமஹாமுனி ஸ்ரீராம லக்ஷ்மணர்களுக்கு அங்கதேசத்தின் வரலாறு அருளிச்செய்தது.

பொழுதுவிடிந்தவளவில் விசுவாமித்திரமஹாமுனி * பர்ணசயனத்தில் பள்ளிகொண்டிருக்கின்ற ஸ்ரீராமலக்ஷ்மணர்களை நோக்கி.

* முன்சருக்கத்தில் த்ருணசயனமென்றும், இதில் பர்ணஸமஸ்தரமென்றுமிருப்பதனால் இரண்டினாலும் செய்யப்பட்ட சயனமென்று கொள்ளவேண்டும். இருவரையும் பள்ளியுணர்த்த வந்த விசுவாமித்திரர் ஸ்ரீராமபிரானை மாத்திரம் எழுப்புதல் யாதெனின், இருவரையும் எழுப்பவந்தவராயினும் ஸ்ரீராமபிரானுடைய வடிவழகில் ஈடுபட்டு இளையபெருமாளை மறந்து ஸ்ரீராமசந்திரனைமாத்திரம் எழுப்பினர் என்றாவது, மன்றவில் பலரையும் ஒரு முறையிலேயே எழுப்புவதும், நேரில் ஒவ்வொருவரையும் தனித்தனி எழுப்புவதுமே உலகவழக்கமாதலால், அவ்வாறே ஸ்ரீதசரதாத்மஜனை எழுப்பினார். அவனை யெழுப்பும்போதே இளையபெருமாளும் எழுந்துவிட்டபடியால் இவரைத் தனியாக எழுப்பவில்லை என்றாவது கொள்க.

కౌసల్యాసుప్రజారామ పూర్వాసంధ్యాప్రవర్తతే
ఉత్తిష్ఠనరశార్దూల కర్తవ్యందైవమాహ్నికం

கௌஸல்யா ஸுப்ரஜாராம பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே
உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்.

கௌஸல்யாதேவிக்கு அருமருந்தன்ன குமாரனே! பூர்வசந்தியை மிகுதியும் வாத்திக்கின்றது, என் வேள்வியைக் காக்கவல்ல ஆண்புலியே! ஈசுவரனாலே விதிக்கப்பட்ட நித்யநைமித்திகாதியான அநுஷ்டானங்கள் செய்யவேண்டும்; ஆதலால் எழுந்திராயென்று திருப்பள்ளியுணர்த்தின அந்த விசுவாமித்திரமஹாரிஷியினுடைய பரமகம்பீரமான வார்த்தையைக்கேட்டுச் சக்கரவர்த்தி திருமகனும் இளையபெருமாளும் எழுந்திருந்து ஸ்நாநாசமன ஜபமுதலான நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு சந்தோஷத்தோடு விசுவாமித்திரமஹாரிஷியை வணங்கி அவருடன்புறப்பட்டு * திரிபதகையாகிய தேவகங்கையையடைந்து சரயூநதி சங்கத்தில் அநேகசஹஸ்ர வருஷகாலமாய்த் தவஞ்செய்து, தபோமகிமையால் மேன்மைபெற்ற ரிஷிகள் வாஸஞ்செய்துகொண்டிருக்கிற புண்ய ஆச்சிரமத்தைக்கண்டு களிப்புற்று, மஹாத்மாவாகிய விசுவாமித்திர மஹாரிஷியைநோக்கி, மஹாமுனிவரே! இந்த ஆச்சிரமம் யாருடையது! இங்கு வாசஞ்செய்பவர்யார்? இதை உணர்ந்துகொள்ள மிகுதியும் விருப்பங்கொண்டிருக்கிறோம்; அருளிச்செய்யவேண்டுமென்று வினவ, அவர்களுடைய வார்த்தையை அம்மஹாமுனிவர் கேட்டு மந்தஹாசத்தோடு சொல்லலாயினர். ஸ்ரீராமசந்திரா! முன்காலத்தில் காமனென்று சொல்லப்படுகிற மன்மதனென்பவன் சரீரமுடையவனாக இருந்தான். அவன் அப்பொழுது தேவர்களெல்லோரும் புகழும்படியாகப் பார்வதீதேவியை விவாஹஞ்செய்துகொள்ள வேண்டுமென்றும், நியமத்துடன் தவமும் யோகமுஞ்செய்துகொண்டிருந்த பரமசிவனைக் கெடுக்கவேண்டுமென்றும், கெடுமதியால் அவரைப் பீடிக்கையில் மஹாத்மாவாகிய அந்த மஹேசுவரர் கோபித்து ஹூங்காரஞ்செய்து கொடுமையான நெற்றிக்கண்ணைத் திறந்து பார்க்க, அதின் ஜ்வாலையால் அந்தக் காமன் சரீராவயவங்கள் சிதறுண்டு எரிந்துபோய் அசரீரியாகச் செய்யப்பட்டபடியால், அது

---

* தேவலோகம் பூலோகம் பாதாளலோகம் என்கிற மூன்று வழியையும் அடைந்திருப்பதினால் கங்காநதிக்குத் திரிபதகையென்று பெயருண்டாயிற்று. இந்தச் சருக்கத்தை நன்றாகயோசித்தால் ஸ்தாண்வாச்சிரமமென்றிருக்கவேண்டும் என்று தோன்றுகின்றது, இல்லாவிட்டால் எதில் எந்தரிஷிதவஞ்செய்கிறாரோ அந்த இடத்திற்கு அவருடைய ஆச்சிரமமென்று பெயரிடுவது வழக்கமாயிருக்க, இதில் தவஞ்செய்த மஹாரிஷியாகிய ஸ்தாணுவைவிட்டு அவர் தவத்தைக்கெடுத்த காமாச்சிரமமென்று பெயர் சொல்வதும் தஸ்யசிஷ்யா: என்னுமிடத்தில் தச்சப்தத்துக்குக் காமனென்றே பொருள்சொல்வது சரியாகையால் இந்த ரிஷிகளைக் காமன் சிஷ்யர்களென்று சொல்வதும் யோசிக்கவேண்டியதாக இருக்கிறது.

முதல் அவன் அநங்கனென்றும், அவன் அங்கம் இவ்விடத்தில் உதிர்ந்தபடியால் இதற்கு அங்கதேசமென்றும் பெயருண்டாயிற்று, புண்ணியகரமாகிய இந்த ஆச்சிரமம் அந்தக்காமனுடையது; இந்த ரிஷிகளும் அந்த ஸ்தாணுவினுடைய சிஷியர்கள்; அக்காலமுதல் இங்கிருந்து தவஞ்செய்கிறபடியால் அவர்களுக்குப் பாவமென்பதில்லை; ஸ்ரீராமபத்திரா! இன்றையராத்திரி இந்தக் கங்காசரயூமத்தியத்திலேயே வாசஞ்செய்து நாளைத்தினம் கங்கையைத் தாண்டிச்செல்வோம்.

అభిగచ్ఛామహే సర్వే శుచయః పుణ్యమాశ్రమం
స్నాతాశ్చకృతజప్యాశ్చ హుతహవ్యానరోత్తమ

அபிகச்சாமஹே ஸர்வே சுசய: புண்யமாச்ரமம்
ஸ்நாதாச்ச க்ருதஜப்யாச்ச ஹுதஹவ்யாநரோத்தம

இப்போது ஸ்நான ஜபஹோமங்களைச்செய்து பரிசுத்தர்களாய், இவ்வாச்சிரமத்துக்குள் புகுவோம் என்றிவ்வாறு சம்வாதஞ்செய்துகொண்டிருக்கையில், அங்கெழுந்தருளியிருக்கும் தவச்செல்வர்கள் யோகமஹிமையால் இவர்கள் வந்திருப்பதையறிந்து பரமசந்தோஷமடைந்து முன்பு கௌசிக மஹாரிஷிக்கும், பின்பு ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்கும், அர்க்கியபாத்யாதிகமான உபசாரங்களைச்செய்து அநேககதைகளால் இவர்களைச் சந்தோஷிப்பித்து நியமத்துடன் சாயங்காலத்தில் செய்யத்தக்க ஜபங்களைச் செய்து அந்தக் காமாச்சிரமத்துக்குள் இவர்களை எழுந்தருளச்செய்துகொண்டுபோய் இவர்களைச் சுகமாக வசிக்கச்செய்தனர்கள். கௌசிக மஹாமுனிவரும் இனிய கதைகளைக்கூறிப் பெருமாளையும் சந்தோஷிப்பித்துத் திருக்கண் வளரச்செய்தார்.

பாலகாண்டத்தில் இருபத்துமூன்றாவதுசருக்கம்.

முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது சருக்கம்.

விசுவாமித்திரமஹாமுனிவர் சரயூநதி மலதகருசதேசங்கள் இவற்றினுடைய வரலாறு கூறியது.

---

பின்பு உதயமானவுடனே சக்கரவர்த்தி திருமகனாரும், இளையபெருமாளும், நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு விசுவாமித்திரமஹாரிஷியைத் தொடர்ந்துசென்று கங்காநதியின் கரைந்துறைக்கு சேர, மஹாத்மாக்களாகிய அந்தக் காமாச்சிரமத்திலிருக்கிற தபஸிகளெல்லாரும் மங்

களகர்மான ஒரு படலைவகொண்டுவந்து விசுவாமித்திரமஹாமுனியை நோக்கி, மகாரிஷியே? தேவர் ஸ்ரீராமலக்ஷ்மணர்களோடு இந்தப்படவி லேறிக்கொண்டு தாமசஞ்செய்யாமல் சுகமாக ஆற்றைக்கடந்து எழுந் தருளக்கடவீரென்று, விண்ணப்பஞ்செய்தீனர்கள். விசுவாமித்திரமஹா ரிஷியும் அவ்வாறேசெய்கிறேனென்று அம்முனிவர்களுக்கு மரியாதை செய்தனுப்பிவிட்டு, ஸ்ரீராமபிரானோடும், ஸ்ரீராமாநுஜரோடும் படவேறிக கங்காநதியின் நடுவில வருகையில் சக்கரவாததிருமகனா ஜலவேகத்தா லுண்டான ஒரு கம்பீர ஓசையைச செவியுற்று விசுவாமித்திர மஹாமுனி வரைநோக்கி சுவாமி! மிகுதியும கம்பீரமாக ஒலிக்கிற இவ்வொலி யா தென்று கேட்டருள, காதிபுத்திரராகிய மஹாமுனிவா சொல்லுகிறா. ஸ்ரீராமசந்திரா அந்தச்சத்தம உண்டாவதற்குக காரணஞ்சொல்லுகிறேன் கேளாய்; முனனொருகாலத்தில சதுர்முகக கடவுள கைலாசமலையினமேல மானஸமெனகிற ஒரு ஸரஸைமனத்தாலேயே நிர்மாணஞ்செய்தார்; ஆகை யால், அம்மடுவுக்கு மானஸமெனபது பெயர்; அந்தம மானஸஸரசி உண டாகி ப்ரவகிககிறபடியால ஸரயூவென்று பெயர் பெற்று அயோத்தியரு கில் பாய்கிற இந்தநதி, இவ்விடத்தில கங்கையோடு கலககிறபடியால.—

తస్యాయమతులశ్శబ్దో జాహ్నవీమభివర్తతే
వారిసంక్షోభజోరామ ప్రణామంనియతఃకురు

தஸ்யாயமதுலச்சப்தோஜாஹ்ணவீமபிவாததே
வாரிஸம்க்ஷோபஜோராம பரணாமம்நியதஃகுரு

இரண்டுநதிகளும ஒன்றுடனொன்று தாக்குணணலால பெருந்தொனி யுண்டாகிறது; இது மிகுதியும புண்யதீர்த்தமாகையால இச்சங்கமஸ்தா னத்தை நமஸ்காரஞ்செய்யென்று கட்டளையிட்டனா. அக்கட்டளையினபடி ஸ்ரீராமலக்ஷ்மணரிருவரும நமஸ்காரஞ்செய்து நதியைத்தாண்டித் தென கரைசோந்து, மிகுதியும பயங்கரமாயும், ஜனசஞ்சார மில்லதாயுமிருக்கிற ஓ ரரணியத்தைக்கண்டு விசுவாமித்திர மஹரிஷியைநோக்கிச சுவாமி! இஃதென்ன ஆச்சரியம? இவ்வனமானது நடந்துசெல்வதற்குச சிறிதும வழியிலதாய் அடாந்தும, சிள்வீடெனனும பூச்சிகளின தொனியால நிறை ந்து, பயங்கரமாகிய துஷ்டமிருகங்களாலும, அச்சந்தருமபடி தொனிக கிற பலவிதப் பறவைகளாலும, சிங்கம புலி பன்றி யானை முதலியவற்று லும நிரம்பி, கொன்றை, ஆச்சா, மருது, வில்வம, பாதிரி, இலந்தை முத லிய மரங்களால நெருங்கி மிக்கபயத்தைத் தருவதாயிருக்கின்றது; இந்த வனம யாருடையது இதனபெயரென்ன? என்றிவ்வாறு வினவ, விசுவா மித்திர மஹாமுனிவா சொல்லுவாராயினா.

ஸ்ரீ காகுத்தா! இந்தவனத்தின் வரலாறு சொல்லுகிறேன் கேட்பாயாக: இந்தவனம் பூர்வகாலத்தில் மலதமென்றும், கரூசமென்றும் செழிப்புள்ள இரண்டு தேசங்களாய்த் தேவநிர்மிதமாக இருந்தது; முன்னொருகாலத்தில் தேவேந்திரன் விருத்திராசுரனைச் செய்த கொலையால் பிரம்மஹத்தி சுற்றிக்கொண்டதனால் மலத்தையும், பசியையும் அடைந்திருந்தமையால் தேவர்களும் முனிவர்களும் கூடிப் புண்யநதிகளிலிருந்து பூர்ணகும்பங்களில் தீர்த்தம் அழைப்பித்து, அவற்றால் ஆகண்டலனுக்கு ஸ்நானஞ்செய்வித்து இப்பூமியிலேயே அவனுடைய மலத்தையும், பசியையும் போக்கடித்துச் சந்தோஷமடைந்தனர். தேவராஜனும் மலம் நீங்கிப் பசிதீர்ந்து நின்மலனாகிப் பெருமகிழ்ச்சியடைந்து, இவ்விரண்டு தேசங்களிலும் என்னுடைய மலமும் கரூசமெனப்படும் பசியும் நீங்கிய காரணத்தால் இத்தேசங்களுக்கு மலதமென்றும், கரூசமென்றும் உலகத்தில் கீர்த்தியோடு பெயர்கள் வழங்கக்கடவனவென்று நியமிக்க, அதுகேட்டுத் தேவர்களும் அவற்றைச் சிலாகித்தபடியால் வெகுகாலமாக விருத்தியும் தனதானியங்களால் நிரம்பப்பெற்றுச் செழுமையாகி மலதமென்றும், கரூசமென்றும் புகழ்பட்டிருக்கையில் பலநாள் சென்றபிறகு, தாடகையென்னும் பெயருடையவளும், ஆயிரம் யானைப் பலமும் பெற்ற காமரூபியாகிய ஒரு யக்ஷஸ்திரீயானவள் இந்திரனை ஒத்த பராக்கிரமமும் நீண்டுருண்ட கைகளும், சிங்கமுகம் போன்ற முகமும், பருத்த சரீரமும் உடைய மிகப் பயங்கரனாகிய மாரீசனென்னும் புத்திரனைப் பிரியாமல், நிரந்தரம் சகல ஜனங்களையும் பயமுறச்செய்து, இத்தேசங்களிரண்டையும் நாசஞ்செய்துகொண்டு, ஒன்றரை யோஜனை தூரத்துக்குள்ளாகவே நாம் போகவேண்டிய வழியிலேயே வசிக்கின்றனள். கொடுமையுள்ள இவளாலாகிய அழிவு செய்யப்பட்ட இவ்வனமானது இக்காலத்திலும் நிலைபெறுதலில்லை; இவளோடெதிர்த்து நின்று போர்புரிய மற்ற எந்த ஆடவராலும் முடியாது; ஆகையால், என்னுடைய கட்டளையால் இந்தவழியே சென்று மிகவும் துஷ்டையாகிய தாடகையைக் கொலைசெய்து, இத்தேசத்தை நிருபத்திரமாகச் செழிப்பிக்கக் கடவாய்: இவ்வனத்தின் வரலாறு யாவற்றையும் கூறினேனன்றோ; இனிக் காலக்கழிவு செய்யவேண்டாவென ஸ்ரீராமபிரானுக்குக் கட்டளையிட்டருளினார்.

பாலகாண்டத்தில் இருபத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று.

# இருபத்தைந்தாவது சருக்கம்.

## விசுவாமித்திரமஹாரிஷி தாடகையின் வரலாறுகூறியது.

இவ்வாறுகூறிய அந்தவிசுவாமித்திர மஹாமுநிவர் வார்த்தையைக்
கேட்டபுருஷசார்த்தூலரான ஸ்ரீராமபிரான விசுவாமித்திரமஹாரிஷியை
நோக்கிச்சொல்லியருளுகின்றார். மஹாமுனிவரே! யக்ஷர் மிக்க வலியில்
லாதாரென நாம் கேட்டிருக்கிறோம; அதற்கு மாறாக வலியின்மையினா
லேயே அபலையென்றுபெயருடையபெண்பிறப்பால்யக்ஷஜாதியிற்பிறந்
த அத்தாடகை ஆயிரம யானை பலமுடையவளென்பது எவ்வாறுபொருந்
தும? என்ன, விசுவாமித்திரமஹாரிஷி ஸ்ரீராமபிரானை நோக்கி, ஸ்ரீராமா!
அத்தாடகைக்கு ஆயிரம்யானையின் பலமவந்தவாறு கூறுகிறேனகேளாய;
அவளுக்குச்சதுர்முகனுடையவரத்தினால்ஆயிரமயானைபபலமுண்டாயிற்று,
பூர்வம் சுகேது என்னும் நல்லொழுக்கமுள்ள யக்ஷனொருவன் பிள்ளையில
லாமல் பலநாள் தவஞ்செய்கையில நான்முகககடவுள் அவனுககுக கட்புல
னாகத்தோன்றிச் சுகேது! உனககுப் புத்திரனுண்டாவதில்லை; ஆயிரமயானை
யின் வல்லமையுடைய தாடகையென்கிற ஒருபெண் பிறககுமெனறு வரந
தனையசெய்தனர். அவ்வரத்தின்படி பெண்பிறந்து அதிரூபயௌவனமுடை
யவளாய் வளரக்கணடு, சுகேது இவளுக்குத தகுந்த நாயகன் யாவனென
விசாரித்துச் சர்ச்சனென்னும் யட்சனுக்குப்புத்திரனாகிய ஸுந்தனெனபவ
னுக்கு இவளை விவாஹஞ்செய்துகொடுததனன. சிலநாள் கழிந்தபினனா
மாரீசனெனனும் மிகச் சூரனாகியபுத்திரனைப்பெற்று,நாள்கள சிலசென்ற
பின் தன்பர்த்தா சுந்தன் இறந்தனன தனக்கு ஆயிரமயானையின் பலம
தனக்குண்டாயிருக்கின்றமையால், மிகசசெருககடைந்துயாவருக்கும நலி
வுசெய்யவேண்டுமெனத துர்ப்புத்தியுணடாகி, ஒருநாள தன் புத்திரனாகிய
மாரீசனுடன்கூடி அகஸ்தியமஹாமுனிவனைப் பக்ஷிககவேணடுமெனனும
அவாவால் கர்ஜ்ஜனைசெய்துகொண்டு அவருடைய ஆசிரமத்துககுசசென
றனள். அம்முனிவர் இவள் விரைந்து வருவதைககண்ணுற்றுச சினங
கொண்டு மாரீசனை ராக்ஷசனாகவும தாடகையைப் பிணங்களை உணவாகக
கொள்ளுமியல்புள்ள பயஙகரமும் கோரரூபமுமுளளபெருமபூதமாகவும
சபித்தனர். அவ்விருவரும அக்ஷணத்திலதானே அவ்விரண்டுருவஙகளையும
பெற்று அகஸ்தியர் தங்களைச சபித்தாரெனறுமிகுதியும வைரங்கொணடு,
அதுமுதல அகஸ்தியமஹாமுனிவருடையதாகியதெனதேசத்தை நாசஞ்
செய்துகொண்டு வருகிறாள. ஆதலால், கொடுமையும் கெட்டநடத்தையு
முடைய தாடகையை நீ கொலைசெய்யவேண்டும, சாபததால இவ்வளவு
கொடுமையுள்ள இவளைக்கொலலுஞ்செய்கை மூன்று லோகத்திலும உம
மைவிடமற்றயாவராலும் முடியாது,ஸ்த்ரீஹத்தியெப்படிசெய்யலாமென்று
நீ அருவருப்புக் கொள்ளவேண்டாம.

చాతుర్వర్ణ్యహితార్థాయ కర్తవ్యం రాజసూనునా
నృశంసమనృశంసం వా ప్రజారక్షణకారణాత్
పాతకం వా సదోషం వా కర్తవ్యం రక్షతా సతాం
రాజ్యభారనియుక్తానా మేషధర్మస్సనాతనః॥

*சாதுர்வர்ண்ய ஹிதார்த்தாய கர்த்தவ்யம் ராஜஸூநுநா*
*ந்ருசம்ஸமந்ருசம்ஸம் வா ப்ரஜாரக்ஷணகாரணாத்*
*பாதகம் வா ஸதோஷம் வா கர்த்தவ்யம் ரக்ஷதா ஸதாம்*
*ராஜ்யபாரநியுக்தாநா மேஷ தர்மஸ் ஸநாதந:*

சகல ஜனங்களையும் காக்கவல்ல ராஜகுமாரர் பிராஹ்மண க்ஷத்திரிய வைசியசூத்திராதிகளுக்கு ஹிதஞ்செய்யும்பொருட்டுக் கொடியசெயலானாலும், இனியசெயலானாலும், பாவசெயலானாலும் செய்துசாதுஜனங்களைக் காக்கவேண்டுமென்பது கடமையாகும். நீதிவழுவாமல் அரசுசெய்பவர்களுக்கு இதுதான் அநாதிகொட்டாகிவரும் ராஜதர்மம்; நற்செய்கை சிறிதுமில்லாமல் யாவரையும் வருத்திக்கொண்டிருக்கிற இத்தாடகையை நீ அவசியம் கொல்லவேண்டும்; அதர்மமுடைய ஸ்திரீகளிருப்பதினால் ஜனங்களுக்குக் கெடுதிவருமென்றுகருதி அப்படிப்பட்டவர்களைக் கலியுகவொழுக்கங்களிற்சிறந்த பெரியோர் கொல்வதுமுண்டு. முன்பு பூமிதேவியைக்கொல்ல விரும்பின விரோசனனுடைய புத்திரியான மந்தரையென்பவளை தேவராஜன் கொன்றதையும், உலோகத்தில் இந்திரன் கூடாதென எண்ணங்கொண்டு அவனைக்கொலைபுரியநினைத்த சுக்கிராசாரியினுடைய தாயாகிய பிருகு மகாரிஷியின் பத்தினியை ஸ்ரீமஹாவிஷ்ணு கொலைசெய்ததையும் நாம் கேள்விப்பட்டிருக்கவில்லையா? ஆதலால், நீ யாதும் யோசனைசெய்யாமல் இக்கொடியதாடகையைக்கொல்லக்கடவையெனக்கட்டளையிட்டருளினார்.

பாலகாண்டத்தில் இருபத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று

## இருபத்தாறுவது சருக்கம்.

ஸ்ரீராமபிரான் தாடகையைக் கொலைபுரிந்தருளியது —

விசுவாமித்திரமகாமுனிவருடைய கம்பீரமாகிய அந்தக்கட்டளையைக் கேட்டருளிச சக்கரவர்த்தி திருமகனார் அவரை நோக்கிக் கைகூப்பிநமஸ்காரஞ்செய்து, சுவாமி! அடியேன் தகப்பனார் அயோத்திமாநகரில் அடி

யேனை நோக்கி, ராமா! கௌசிகமகாரிஷிஎக்காலத்திலும்எக்காரியத்தைச் செய்யும்படி நியமிக்கின்றாரோ அவ்வக்காரியங்களை அலக்ஷியஞ்செய்யாமல் நீ! உடனே செய்யக்கடவையென்று வசிஷ்டமகாமுனிவர் முதலிய பெரியோர்கள் முன்பாக எனக்குக் கட்டளையிட்டபடியால்.

సోఽహంపితుర్వచశ్శ్రుత్వా శాసనాద్బ్రహ్మవాదినః
కరిష్యామి నసందేహ స్తాటకావధముత్తమం
గోబ్రాహ్మణహితార్థాయ దేశస్యాస్యసుఖాయచ
తవచైవాప్రమేయస్య వచనంకర్తుముద్యతః

ஸோஹமபிதுர்வச்சுருத்வா சாஸநாதப்ரஹ்ம வாதிந:
கரிஷ்யாமி நஸந்தேஹ ஸ்தாடகாவத முத்தமம
கோப்ராஹ்ம ணஹிதாரத்தா யதேசஸயா ஸ்யஸுகாயச
தவசைவாப்ரமேயஸய வசனமகாத்துமத்யத:

அந்தப்படி பிரஹ்மவாதியரான் நீதவருடையகட்டளையால தாடகையை இப்போதே கொல்லுகிறேன், சந்தேகமில்லை; பசுக்களுக்கும, அந்தணர்களுக்கும் நலந்தருவதாயும, இத்தேயத்தாருக்கு இன்பந்தருவதாயும், மஹா மகிமையுள்ள தேவருடைய நியமனமாயுமிருக்கிற இத்தாடகாவதம யான் செய்துமுடிக்கச் சித்தமாயிருக்கிறேன என்றிவ்வாறு திருவாய்மலர்ந்தருளி ஸ்ரீகோதண்டத்தைத் திருக்கரத்திலேந்தி நாணபூட்டிக் கம்பீரமாகத் தனுஷ்டங்காரஞ்செய்ய, அந்தத்தொனி பத்துத்திக்கிலும பரவினமையால், தாட்காவனத்திலிருக்கிற பிராணிகளெல்லாங் கேட்டுப் பயந்து நடுங்கி மூர்ச்சையடைந்தன. தாடகைக்கு அவ்வொலிசெவியிறபட மிகுதியுங் கலங்கிக்கோபங்கொண்டு தொனியுண்டான இடத்தைக் குறிப்பிட்டு அதிவேகமாய் ஓடி வருகையில சக்கரவர்த்தி திருக்குமாரரான ஸ்ரீராமசந்திரர் அவளைக்கண்டு இவளே தாடகையென்று துணிந்து இளையபெருமாளைப்பார்த்து அருளிச்செய்கின்றார். லக்ஷ்மணா! இத்தாடகையைப்பார், இவள் கடுஞ்சினமும், விகாரமாகிய தேகமும, முகமும் உள்ளவளாகவும,மிக்க பயத்தோடு விரைந்து வந்தவளாகவுமிருக்கின்றாள். கோரரூபமுடைய இத்தாடகையைப் பார்க்கும்போதே தைரியமில்லாதவர்களுடைய ஹிருதயங்கள் பிளந்துபோம். அதிக மாயபலமுடைய இவளது காதுமூக்குகளையறுத்து இவளைத் துரத்திவிடுகிறேன்; இவள் பெண்பிறப்பாயிருக்கின்றமையால் இவளைக்கொல்ல மனமெழவில்லை, ஆயினும் இவளுடைய செருக்கையும் வேகத்தையுமாத்திரம் போக்கி, உயிருடன் விட்டுவிட நினைக்கிறேனென்றருளிச்செய்தனர். என்றிவ்வாறு அருளிச்செய்துகொண்டிருக்கையில் தாடகை அதுகேட்டுக் கோபங்கொண்டு இரண்டுகைகளையு முயரத் தூக்கிக் கர்ஜனை செய்துகொண்டு ஸ்ரீராகவபிரானுக்கெதிரே ஓடிவருகையில்,விசுவாமித்திரமஹாமுனிவர் உங்காரஞ்செய்து அவளைவெருட்டி ஸ்ரீராம

லக்ஷ்மணர்களுக்கு மங்களமும் ஜயமும் உண்டாகக் கடவதென்று மங்களாசாஸநஞ் செய்தருளினர். தாடகையும் மிகத் தூளியெழும்படி செய்து, அதனால் இவர்களை ஒருமுகூர்த்தகாலம் திக்கு விதிக்குத் தெரிந்துகொள்ளாதவண்ணம் மோகிக்கச்செய்து, மாயாபலத்தினால் ஸ்ரீராமலக்ஷ்மணர்கள்மீது கல்மழை இடைவிடாது சொரிந்தனள். ஸ்ரீராமபிரான் அதுகண்டு சீறங்கொண்டு பாணவருஷத்தால் அவளெறிந்த சிலாவருஷத்தைத் தடைசெய்து, ரணரங்கத்தில் விரைந்துவருகிற தாடகையினுடைய இரண்டுகைகளையும் பாணங்களால் அறுத்தருள, இளையபெருமாளும், கையறுந்தும் கர்ஜனைசெய்துகொண்டு தம்மருகே ஓடிவருகிற அவளுடைய காதையும், மூக்கையும், அறுத்துவிடுதலும், அவ்வரக்கி தன் காதும் மூக்கும் ஒருசேர அறுப்புண்டதைச் சிறிதும் இலட்சியம்பண்ணாமல் கோபங்கொண்டு மாயையினால் அநேகரூபங்களைப்பெற்று இவர்களுக்குத் தோன்றாமல் அந்தரத்திலிருந்து மீண்டும் கல்மழை பொழியக்கண்டு, விச்வாமித்திர மகாமுனிவர் ஸ்ரீராமசந்திரனைநோக்கி, ரகுநந்தனா! இதென்ன? இவளுடன் விளையாடுகிறாய்? இவள் தீச்செயலே அன்றி நற்செயல் சிறிதேனும் செய்தறியாத கொடியவள் ஆதலால், இவள் பெண்பிறப்பென்று உபேக்ஷைசெய்யவேண்டா, விரைவாக இவளுயிரை வவ்வும்படி அஸ்திரத்தைப் பிரயோகி, சந்தியாகாலம் ஸமீபித்தது அதற்குள்ளாகவே இவளைக்கொல்லவேண்டும், சந்தியாகாலம் வந்துவிட்டால் ராக்ஷஸஜாதிகளுக்குப் பலம் அதிகமாதலால், அப்புறம் இவளை ஜயிக்கமுடியாதென்று சொல்லக்கேட்டு, ஸ்ரீராமபத்திரர் சப்தவேதியென்னப்படும் பாணங்களை ஸ்ரீகோதண்டத்திற் றொடுத்து அவளை யுத்தேசித்து விடுத்து அவள்செய்யும் மாயையைத் தடுத்துக் கண்ணுக்குத் தோன்றும்படி செய்த தாடகையும் சிம்ஹநாதம் செய்துகொண்டோடி வருகையில் ஸ்ரீராகவபிரானார் ஒருபாணத்தைத் தொடுத்து அவள்மார்பில் ஊடுருவும்படி செலுத்த, உடனே உயிர்மாய்ந்து தரையில் விழுந்தனள். அதுகண்டு இந்திரன்முதலிய விண்ணவர்கள் யாவரும் வந்துகூடிப் பல்லாண்டுகூறிப் பொலிகபொலிகவென்று ஸ்ரீபசுபதியாகிய ஸ்ரீதசரதநந்தனைத் துதித்து விச்வாமித்திர மெய்த்தவச்செல்வனை நோக்கி, மஹாமுனிவரே! ஸ்ரீராமசந்திரர் செய்த இந்தத் தாடகாவதத்தினால் நாங்களெல்லோரும் மிகுதியும் மகிழ்ச்சியடைந்தோம், இன்னமும், லீலாமாநுஷவிக்கிரஹஸ்வரூபராகிய இப்பெருமானால் நமக்கு அநேககாரியங்களாகவேண்டியிருக்கின்றன. அதைப்பற்றியும், இப்புருஷோத்தமர் உம்மோடுகூட நம்மிடம் வந்திருப்பதைப்பற்றியும், இவர் உம்மிடத்தில் உபதேசம்பெற்றுக்கொள்ளுதற்குரியராகத் தோன்றுவதைப்பற்றியும், நீர் இவரிடத்தில் அருள்புரிந்து க்ருசாச்வ பிரஹ்மாவினால் பெறப்பட்டவைகளாகவும், மகாபராக்கிரமமுள்ளவைகளாகவும், தபோபலத்தால் ரக்ஷிக்கப்பட்டவைகளாயுமிருக்கிற ஜிரும்பகமுதலிய மந்திரங்களை இவருக்கு உபதேசஞ்செய்யக்கடவீரென்று சொல்லிவிட்டுத் தம

கள் தங்களிடமே போய்ச் சேர்ந்தனர்கள். பின்பு விசுவாமித்திரமகாமுனி
வரும் ஸ்ரீராமபிரானை மார்போடணைத்து உச்சிமோந்து ரகுகுலோத்தமா!
சந்தியாகாலமாகிவிட்டபடியால் இன்றிரவு இங்குச் சுகமாக இருந்து நா
ளைத்தினம் என்னுடைய ஆச்சிரமத்துக்குப் போய்ச் சேருவோமென்று
உரைக்க, அறங்களை நிலைநிறுத்தற்குத் திருவவதரித்த ஸ்ரீராமபிரானார்
தாடகை இறக்கதலும் சாபம் நீங்கிச் சைத்திரரதமென்னும் குபேரனுடைய
பூங்காவனம்போலச் செழிப்பாகவுள்ளதாகிய அவ்வனத்தைக் கண்ணுற்று
மகிழ்ந்து, சுரநரர்களனைவராலும் பூஜிக்கப்பட்டவராகி, விசுவாமித்திரரு
டைய ஆச்சிரமத்துக்குப் போகவேண்டுமென்னும் அவாவால் உதயத்
தையே எதிர்நோக்கிக்கொண்டு விசுவாமித்திரர் இளையபெருமாள் இவர்
களுடன் அன்றிரவு சுகமாக வசித்தருளினார்.

பாலகாண்டத்தில் இருபத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

## இருபத்தேழாவது சருக்கம்

விசுவாமித்திரமஹாரிஷி ஸ்ரீராமசந்திரருக்கு அஸ்திரங்களை

உபதேசஞ்செய்தருளியது

அத்தினத்தினிரவில் அங்கே சுகமாக வாசஞ்செய்து, மறுநாள் உத
யத்திலெழுந்திருந்து மகாயசஸ்வியான விசுவாமித்திரமகாமுனிவர் புன்
னகையோடு சக்கரவர்த்தி திருமகனைப் பார்த்து இனியவார்த்தையொ
ன்று சொல்லுவாராயினர். மிக்க கீர்த்தியையடைந்த சக்கரவர்த்தி திருமக
னே ஸ்ரீராமா! யாவராலும் வெல்லவொண்ணாத தாடகாவதத்தை நீ செய்த
தமையால் மிகுதியும் உன்னிடத்தில் சந்தோஷமுடையனாயினேன்,
ஆதலால், யான் அறிந்துள்ள எல்லா அஸ்திரசஸ்திர மந்திரங்களையும்,
உனக்கு உபதேசஞ்செய்கிறேன், இதனால் தேவாஸுரகந்தர்வ உரகாதி
கணங்களும் ரணகளத்தில் கைவசப்பட்டுச் சரணமடையும்படியாக
ஜயிப்பாய், அந்த அஸ்திரங்களின் பெயர்களைச் சொல்லுகிறேன் கேளாய்,
மிகவும் பெரிய தண்டசக்கரம், தர்மசக்கரம், காலசக்கரம், மிக்ககொடிய விஷ்
ணுசக்கரம், ஐந்திராஸ்திரம், வஜ்ரமென்னும் அஸ்திரம், சைவமென்கிற
சூலம், பிரஹ்மசிரம் ஐஷீகம் என்னப்படும் இரண்டு அஸ்திரங்கள், தர்ம
பாசம், காலபாசம், வருணபாசம், வாருணாஸ்திரம், சுஷ்கம் என்றும்

ஆர்த்ரம் என்னும் பெயருடைய இரண்டு இடிகள், மைநாகாஸ்திரம், நாராயணாஸ்திரம், அக்னிதேவதாகமான சிகரமென்னும் அஸ்திரம், ப்ர தனமென்னும் வாயுதேவதாகமான அஸ்திரம், ஹயசிரம் என்னும் அஸ் திரம், இரண்டு சக்திகள் இவற்றின் மந்திரங்களையும், அசுரர் நித்யமும் தரித்துக்கொண்டிருக்கிற கங்காளமென்றும், காபாலமென்றும், கங்கண மென்றுஞ் சொல்லப்படுங் கோரமாகிய முசலங்கள், நந்தனமென்னும் வித்தியாதராஸ்திரமாகிய உயர்ந்த வாள், மானவம், பிரஸ்வாபனம், பிரச மனமென்னப்படும் காந்தர்வாஸ்திரங்கள், சௌரமென்னும் அஸ்திரம், தர்ப்பணம், சோஷணம், சந்தாபனம், விலாபனம், மதனம், கந்தர்ப்ப தைவதமாகிய அஸ்திரங்கள், மோஹனமென்னும் பிசாசாஸ்திரம், தாமசாஸ் திரம், சௌமனமென்னும் அஸ்திரம், ஸம்வர்த்தம், மௌஸலம், ஸத்யம், மாயாதரம், தேஜ:ப்ரபம், சிசிரமென்னப்படும் சோமதேவதாகமான அஸ் திரம், சுதாமனமென்னும் த்வஷ்டாஸ்திரம், தாருணமென்னும் பகாஸ் திரம், காருணமென்னும் பகாஸ்திரம், சீதேஷு என்னும் மானவாஸ்திரம், இவற்றின் மந்திரங்களையும் உபசேதருசெபக்கிறன் காமரூபிகளாயும், மஹாபலமுடையனவாயும், மிக்க உதாரங்களாயுமிருக்கிற அஸ்திரசஸ்தி ரங்களின் மந்திரங்களை நீ தாமதஞ்செய்யாமல் உபதேசம் பெற்றுக்கொள் ளென்று பிரியமாயருளிச்செய்து

స్నాతస్తు ప్రాఙ్ముఖో భూత్వా శుచిర్మునివరస్తదా
దదౌ రామాయ సుప్రీతో మంత్రగ్రామమనుత్తమమ్

ஸ்நாதஸ்து ப்ராங்முகோ பூத்வா சுசிர்முனிவரஸ்ததா
ததௌ ராமாய ஸுப்ரீதோ மந்த்ரக்ராமமனுத்தமம்

மஹாரிஷி பரிசுத்தராகிக் கிழக்குமுகமாக இருந்து மிகுதியும் முக மலர்ந்து முன்சொல்லிய அஸ்திரசஸ்திரங்களுடைய மந்திரஜாலங்களெல் லாவற்றையும் ஸ்ரீராமபிரானுக்கு உபதேசஞ்செய்தனர். இவ்வாறு தேவதைகளும் உணர்ந்துகொள்ளமாட்டாத மந்திரங்கள் யாவற்றையும், விசுவாமித்திரமஹாரிஷி ஜபஞ்செய்யுமளவில் அப்படைக்கலங்களின் தெய் வங்கள் எல்லாம் ஸ்ரீராமபிரான் திருமுன்பு ஒருசேரக் கட்புலனாக வந்து கைகூப்பி வணக்கஞ்செய்து பெருமகிழ்ச்சியோடு முதற்பெருந் தேவ ராகிய ஸ்ரீராகவபிரானைநோக்கி, ஸ்வாமீ ஸ்ரீரகுகுலநந்தனா! அஸ்திர தேவதைகளாகிய அடியோங்களெல்லோரும் விசுவாமித்திர மஹாமுனி வருளிய உபதேசமஹிமையால் உமக்கு அடைக்கலமாகித் தேவரீருடைய குற்றேவல்களை வழுவுதலில்லாது செய்யச் சித்தமாக இதோவந்து நிற்கி றோம், அடியோங்கள் செய்யவேண்டுவதைக் கட்டளையிட்டருளக் கடவீ ரென்று விண்ணப்பஞ் செய்துகொண்டன. ஸ்ரீராமபிரானும் அப்படை

களை அங்கீகரித்துச் செந்தாமரை மலர்போன்ற திருக்கரத்திலேந்திக் கொண்டு அஸ்திரதேவதைகளே! நீங்கள் எனக்கு மானசர்களாகவிருந்து யாம் நினைக்குங்காலையில் வந்து எம்முடைய காரியத்தை முடிக்கக்கடவீரென்று கட்டளையிட்டு அத்தெய்வங்களுக்கு விடைகொடுத்தருளி —

తతః ప్రీతమనా రామో విశ్వామిత్రం మహామునిం
అభివాద్య మహాతేజా గమనాయోపచక్రమే

ததஃப்ரீதமநா ராமோ விச்வாமித்ரம் மஹாமுநிம்
அபிவாத்ய மஹாதேஜா கமநாயோபசக்ரமே

பின்னர்ச் சந்தோஷமும் காந்தியும் மிகுதியுமுடையவராய விசுவாமித்திரமஹாமுனிவரை அபிவாதனம்பண்ணி நமஸ்காரஞ்செய்து பிரயாணப்படும்படி முயற்சிசெய்தருளினார்.

பாலகாண்டத்தில் இருபத்தேழாவது சருக்கம் முற்றிற்று.

## இருபத்தெட்டாவது சருக்கம்.

உபஸம்ஹாரமந்திரங்களை உபதேசஞ்செய்தது.

பின்பு சக்கரவர்த்தி திருமகனார் முன்பு உபதேசிக்கப்பட்ட மந்திரங்களையெல்லாம்பெற்று முகமலர்ந்து பரிசுத்தராக வழிநடந்துகொண்டே விசுவாமித்திர மஹாரிஷியைப்பார்த்து விண்ணப்பஞ்செய்கின்றார். பகவானாகிய மகாரிஷியே! தேவர் கிருபைசெய்து உபதேசித்த அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் யான் பெற்றதால் தேவர்களாலும் வெல்லக்கூடாத பராக்கிரமமுள்ளவனாக விளங்குகின்றேன். இப்படைக்கலங்களினது உபசம்ஹாரமந்திரங்களையும் அடியேனுக்கு உபதேசஞ்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். இவ்வாறு பிரார்த்திக்கப்பட்ட விசுவாமித்திர மஹாமுனிவரும் நியமத்தோடு பரிசுத்தராகி அம்மந்திரங்களையெல்லாம் தம்முள்ளத்தில் அமைத்துக்கொண்டு, சத்யவந்தம், சத்யகீர்த்தி, த்ருஷ்டம், ரபஸம், பிரதிஹாரதரம், பராங்முகம், அவாங்முகம், லக்ஷாக்ஷம், விஷமம், த்ருடநாபம், ஸுநாபம், தசாக்ஷம், சதவக்த்ரம், தசசீர்ஷம், சதோதரம், பத்மநாபம், மஹாநாபம், துந்துநாபம், ஸுநாபம், ஜ்யோதிஷம், கிருசனம், நைராச்யம், விமலம், யோகந்தரம், ஹரித்ரம், தைத்யம், பிரசனம், ஸார்சிர்மாலீ, திருதிமாலீ, விருத்திமான்,

ருசிரம், பித்ருசௌமனஸம், விதூதம், மகரம், கரவீரகம், தனம், தான்யம், காமரூபம், காமருசி, மோஹம், ஆவரணம், ஜ்ரும்பகம், ஸர்வநாபம், ஸந்தானம், வரணமென்னும் பெயர்களையுடைய பிருசாசுவபுத்திரர்களாகவும், காந்தியுள்ளவைகளாகவும், காமரூபிகளாகவுமிருக்கிற இவ்வுபஸம்ஹாரமந்திரங்களையெல்லாம் ரகுநந்தனா! நீ உபதேசம்பெற்றுக்கொள். உனக்கு மிக்கநன்மையுண்டாகும், நீயே இவைகளையெல்லாம் உபதேசம் பெற்றுக்கொள்ளுந் தகுதியுடையாயென்று ஆஜ்ஞையிட, ஸ்ரீராமபிரானும் அவ்வண்ணமே ஆகுகவென்று களிப்புற்ற திருவுள்ளமுடையாராய் அவைகளையெல்லாம் உபதேசம் பெற்றுக்கொள்ளுதலும், திவ்விய காந்தியுள்ள உருக்கொண்டு சுக்கரமாய்ச் சில அக்னிகணங்கள்போலவும், சில புகைத்திரள்போலவும், சில சந்திரர்போலவும், சில சூரியர்போலவும் ஆரவாரிக்கின்ற அவ்வுபஸம்ஹார தேவதைகளெல்லாம் வணக்கத்துடன்வந்து.—

రామం ప్రాంజలయో భూత్వా బ్రువన్ మధుర భాషిణః
ఇమేస్మ నరశార్దూల శాధికింకర వామ తే
మానసాః కార్య కాలేషు సహాయం మేకరిష్యథ
గమ్యతామితి తానాహ యథేష్టం రఘునందనః
అథ తే రామమామంత్ర్య కృత్వా చాపి ప్రదక్షిణం
ఏవమస్త్వితి కాకుత్స్థ ముక్త్వా జగ్ముర్యథాగతం

ராமம்ப்ராஞ்சலயோ பூத்வா ப்ருவன்மதுர பாஷிண:
இமேஸ்ம நரசார்தூல சாதிகிங்கர வாமதே
மானஸா: கார்யகாலேஷு ஸாஹாய்யம்மே கரிஷ்யத
கம்யதாமிதி தானாஹ யதேஷ்டம் ரகுநந்தந:
அததேராமமாமந்த்ர்ய க்ருத்வாசாபி ப்ரதக்ஷிணம்
ஏவமஸ்த்விதி காகுஸ்த முக்த்வாஜக்முர்யதாகதம்

கைகளைக்கூப்பி ஸ்ரீராமபிரானை நோக்கி, ரகுகுலோத்தமா! உபஸம்ஹார தெய்வங்களாகிய நாங்களெல்லாம் இதோ வந்திருக்கின்றோம், உமக்கு அடியேங்கள் செய்யவேண்டியது யாது? அருளிச்செய்யீர் என்று மதுரமாக விண்ணப்பஞ்செய்து கொள்ள, அவ்வார்த்தையை ஸ்ரீராமபிரான் கேட்டருளித் தேவதைகளே! நீங்கள் எம் மனத்திலிருந்து கொண்டு யாம் நினைக்குங் காலங்களில்வந்து எமது காரியங்களை நிறைவேற்றிவிட்டுப் போகக்கடவீர் இப்பொழுது நீங்கள் யதேச்சையாகப் போகக்கடவீரென்று கட்டளையிட்டருளினார். அத்தேவதைகளும் ஸ்ரீராமசந்திரனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சுவாமியை பிரதக்ஷிணஞ் செய்து தேவர் அருளிப்பாட்டின்படி திருவுள்ளத்தில் கருதியபோதுவந்து

தேவர் புலன்களை நிறைவேற்றிப்போகிறோமென்று ஒப்புக்கொண்டு வந்தவழியேசென்று தங்களுறைவிடம் சேர்ந்தனர். பின்பு ஸ்ரீரகுகுல திலகரும் அம்மந்திரங்களையெல்லாம் தனக்கு தெரிந்துகொண்டு நடந்தருளுகையில், கௌசிகமுனிவரை நோக்கித் தபஸ்சிரேஷ்டரே! இதோ நமக்கெதிரில் மலையினருகே கருமுகில்போல் இருண்ட ஒரு தோப்புத் தோன்றுகின்றதே; இது எத்தன்மையது? இதைக் காண்போமென்னும் விருப்பத்தை விளைக்கும் ஆச்சரியகரமாயிருக்கிறது; மான்முதலிய மனோஹரமான மிருகங்கள் மிகுதியும் பயமின்றித் திரிகின்றன. கிளி நாகணவாய்ப்புள்முதலிய பறவைகளும் செவிக்கு இன்பமாக ஒலிசெய்கின்றன. இதைக்காணுவேண்டியோ நாம் கோரமாகிய அத்தாடகாவனங் கடந்து வந்துவிட்டோமென்று நான் யூகிக்கிறேன் இல்லாவிடின் இப்பிரதேசம் இவ்விதமாகச் சுககரமாயிராதன்றோ? ஆதலால், இவ்வாச்சிரமம் யாருடையது? தேவருடைய யாகத்தைக்கெடுக்கிற அப்பாவியராக்கர்கள் இருப்பிடம் எது? தேவருடைய யாகபூமி எது? அடியேன் தேவருடைய யாகத்தைக்காத்து அவ்விராக்கதர்களைக் கொல்லவேண்டுமன்றோ? ஆகையால், அடியேனுக்குத் தேவர் இவற்றையெல்லாம் அருளிச்செய்யவேண்டுமென்று கேட்டருளினார்,

பாலகாண்டத்தில் இருபத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று

---

## இருபத்தொன்பதாவது சருக்கம்

ஸ்ரீவாமனாச்சிரமத்தின் சிறப்பைப்பற்றிச் சொல்லியது

---

பின்னர் மகாமகிமையுள்ள சக்கரவர்த்தி திருமகனார் அருளிச்செய்த வார்த்தையைக்கேட்டு விசுவாமித்திரமகாமுனிவர் அவ்வாச்சிரமத்தின் வரலாற்றை யருளிச்செய்கிறார். ஸ்ரீரகுகுலோத்தமா? இவ்விடத்தில் எல்லாத்தேவர்களுக்கும் முதற்பெருங்கடவுளாகவும், சகல ஜீவகோடிகளுக்கும் ரக்ஷகனாகவும், ஸ்ரீமதகிலமங்கள பரதாயக மஹாலக்ஷ்மீநாதனாகவும், சகல ஸ்ருஷ்டி ஸ்திதிசம்ஹாரகாரணனாகவும், நிரவதிக சௌந்தர்ய நிஜதிவ்ய மங்களவிக்ரஹ விசிஷ்ட ஸ்வரூபசுவயம்பிரகாசனாகவும், பூதபவிஷ்யத் வர்த்தமான காலவர்த்தி சர்வவ்யாபக மூர்த்தியாகவும், ஸ்ரீயப்பதியாகவும் விளங்காநின்ற ஸ்ரீமகாவிஷ்ணு அநேகமாயிரம் யுகங்கள் இங்குத் தவஞ்செய்துகொண்டு எழுந்தருளியிருந்து யோகசித்தியையடைந்து, பின்பு வாமனனாகத் திருவவதரித்து இங்குவசித்துத் தவ

நிஷ்டைபெற்றிருந்தமையாலும், இதற்குச் சித்தாசிரமமென்றும், வாமனாசிரமமென்றும் பெயர்வழங்கும். இவர் இப்படிச் சித்தியடைந்திருக்குங் காலத்திலேயே விரோசனனென்னப்படும் அசுரனுக்குக் குமாரனாகிய பலியென்பவன் தானவர்களெல்லோருக்கும் அரசனாகிச் சுவர்க்கத்திற் சென்று, இந்திரன்முதலிய எல்லாத் தேவர்களையும் வென்றுகொண்டு அவ்வமரர்கள் யாவரையுந் துரத்திவிட்டு, அவர்களுடைய நகரங்களையுந் தானே கைக்கொண்டு, செங்கோல் செலுத்திக்கொண்டு மூன்றுலோகங்களிலும் புகழ்பெற்றவனாகிய ஒரு யாகஞ்செய்யத்தொடங்கினன். அக்காலையில் ஆகண்டலன், அக்கினி முதலிய விண்ணவர்கள் யாவரும் ஒருங்குசேர்ந்து இவ்வாசிரமத்துக்கு வந்து இங்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீபரந்தாமனைத் தரிசித்து ஸ்வாமீ விரோசனன் புத்திரனாகிய பலியென்பவன் இப்போது * யாகஞ்செய்துகொண்டிருக்கிறான். அவ்யாகம் முற்றுப்பெறுவதற்குள் தேவர் எங்களுடைய காரியத்தைச் சாதனஞ்செய்து கொடுக்கவேண்டும், இவன் இப்போது எச்சமயத்தில் யாரொருவர் எது கேட்டினும் மறுக்காமல் அவரவர் வேண்டிய பொருளை யீந்து அவர்களைச் சந்தோஷப்படுத்தி வருகிறான், ஆகலால், தேவரீர் இப்போது தமது கிரியாசக்தியால் வாமனராகத் திருவவதாரஞ்செய்து எங்களுக்கு க்ஷேமம்

* யாகமென்பது இந்திரன் முதலிய அமரர்களை யுத்தேசித்து அவர்கள் பெயரோடுகூடிய மந்திரத்தால் அக்கினியில் ஹோமஞ்செய்யப் படுவதாதலால், அவர்களோடு இயற்கையாகிய பகைமையுள்ள இப்பலிச்சக்கரவர்த்தி அவர்களைக்குறித்து எவ்வாறு யாகஞ்செய்தனன்? எனின், இவன் இந்திராதியர்க்குப் பகைஞனாயினும், ஸ்ரீஹரிபக்தனென்னப் புராணங்கள் பலகூறுதலால் ஸ்ரீஜநார்த்தனனைக்குறித்தே யாகஞ்செய்தானென்னச் சமாதானம் சொல்லவேண்டும். இவன் தன் பக்தனாயிருக்க ஸ்ரீமுகுந்தன் இவனை இவ்வண்ணஞ்செய்யலாமோ எனின், இவன் தனக்குரிய பயனொன்றையே எண்ணித் தொண்டுசெய்தவனாதலாலும், எவ்வகையாகிய பக்திசெய்தானாயினும் தன்னுடைய ஏற்பாட்டையெல்லாம் கெடுத்துச் சாதுக்களாகிய தேவர்களைப் பீடித்து அறங்களைச்செய்தவனாதலாலும் அவ்வாறு செய்யலாயிற்றென்க

ஸ்ரீமஹாவிஷ்ணு திரிவிக்கிரமனாகி உலகத்தைத்தாவி அளந்தகாலையில் உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் சீபாதத்தால் மிதிபட்டுப்போயினவா? ஆகாயமெல்லாம் சீபாதமே நிரம்பும்படி அளந்தகாலையில் திருமேனி எங்கிருந்தது? மூன்றாவது அடியும் பெரியதாகையால் பலிச்சக்கரவர்த்தியைப் பாதாளத்தில் அழுத்துகையில் மற்றையோரும் அச்சீபாதத்தின் கீழ்ப்பட்டுக்கொண்டு அழுந்திவிடாமையாது? எனின், ஸ்ரீமஹாவிஷ்ணு முடிவிலாற்றலுடைமையாலும், பேரருளுடைமையாலும், எல்லாவற்றினும் நிறைவுடைமையாலும், பிராகிருதசம்பந்தமுள்ள உடம்பின்மையாலும், சத்துச்சித்தாநந்த திருமேனியுடைமையாலும், அகடிதகடனா சாமர்த்தியமுடைமையாலும், கருப்பைகளுள்ளும், முட்டைகளுள்ளும், கல்லுகளுள்ளும் உயிர்களுக்குத் தநுகரணபோகங்களை வினைக்கீடாக அளிக்கும் வல்லமையுடைமையாலும், அந்தக் கலியாண குணநிதியாகிய ஸ்ரீஹரிக்குச் செய்ய இயலாததியாது? ஆதலால், அப்பெருமானுக்கு யாவுஞ்செய்ய இயலுமெனக் கொள்க.

தைத் புண்டுபண்ணக் கடவீரென்று வேண்டிக்கொண்டனர்கள். அக்காலத்திலேயே அக்கினியையொத்த காந்தியுள்ள காசியப பிரஹ்மாவானவர் தம் பத்தினியாகிய அதிதியுடன்கூடித் தேவமானத்தால் ஆயிரவருஷகாலம் ஒரு விரதஞ்செய்து, அதுமுடிந்தவுடன் கண்களுக்குப் புலப்படும்படி எழுந்தருளிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைக் கண்களாரத் தரிசித்து, சுவாமி! தேவரீர் நிறைந்த தவத்தால் ஆராதிக்கத்தக்கவர், தேவரீர் அத்தவத்தின்பலனைத் தருபவர்; தேவரீர் ஞானாநந்தஸ்வரூபராய ஸ்ரீயப்பதியான பரப்பிரஹ்மம்; புருஷோத்தமராகிய தேவரை அடியேன் இவ்வளவு காலம் வருத்தப்பட்டுத் தவஞ்செய்தேனாகையால், கண்குளிரக் கண்டேன், தேவருடைய திருமேனியிலேயே இவ்வண்டங்கள் யாவற்றையுங் காண்கிறேன்; சொல்லவொண்ணாத மஹிமையும், அநாதியும், ஆதிமூலமுமான தேவரை அடியேன் சரணமாக அடைந்தேன். என்றிவ்வாறுகத் துதிசெய்கையில், முதற்கடவுளாகிய ஸ்ரீமகாவிஷ்ணு அது செவியுற்றுத் திருவுளமகிழ்ந்து காசியபமகாமுனியே! நீ செய்த தவத்தாலும், தோத்திரத்தாலும் யாம் திருவுளமகிழ்ந்தோம் ஆதலால், நினக்கு என்னவரம் வேண்டும் கேளாய், சித்தமாகத்தருகிறோமென்று திருவாய்மலர்ந்தருள, மரீசி பிரஹ்மபுத்திரரான காசியபபிரஹ்மாவும் ஸ்ரீ வேதமுதல்வனைப்பார்த்து ஸ்வாமீ! எங்களிடத்துக் கருணைகூர்ந்திருப்பது உண்மையாயின் தேவா என்னோடு கலம்புரிந்த இவ்வதிதியிடத்தில் அடியேனுக்குச்சிறுவனைத் திருவவதரித்து இந்திரனுக்குத் திருத்தம்பியாராக எழுந்தருளியிருந்துகொண்டு, அடிக்கடி கொடுமை செய்கிற தானவர்களைக்கொலைசெய்து இந்திராதியரைக் காக்கக்கடவீர் தேவருடைய கருணையால் இவ்வாச்சிரமத்துக்கும் ஸித்தாச்சிரமமென்று பெயருண்டாகவேண்டும், தேவருடைய யோகசித்தியும் முடிந்தபடியால் இனி நீட்டியாமல் எழுந்தருளக்கடவீர் இதுவே அடியேனுக்கு வேண்டும் வரமென்று இவ்வண்ணம் வேண்டிக்கொள்ள, ஸ்ரீமகாவிஷ்ணுவும் அவ்வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு அதிதியிடத்தில் வாமனராகத் திருவவதாரஞ் செய்து, பிரஹ்மசாரி உருக்கொண்டு, வேள்விசெய்துகொண்டிருந்த பலிசக்கரவர்த்தியிடஞ்சென்றருளி, மஹாபலிச்சக்கரவர்த்தியே! எம்முடைய காலடியால் மூன்றடிப்பூமி தானமாகக் கொடுக்கவேண்டுமென்று கேட்டு, அங்ஙனமே அவன் ஈந்த தானத்தை ஏற்று, உடனே பேருருவாய் வளர்ந்து ஓரடியால் பூமியையும், மற்றோரடியால் சுவர்க்கத்தையும் அளந்து, மூன்றாவது அடிக்கு இடமில்லாமையால் அவ்வடியைப் பலிசக்கரவர்த்தியின் தலைமேல் வைத்து, அவனைப் பாதாளலோகத்தி லழுத்திவிட்டு, மூன்றுலோகங்களையும் மீண்டும் தேவேந்திரனவசம் ஒப்புவித்தருளினர். அத்தன்மையுள்ள ஸ்ரீவாமனமூர்த்தியாய் ஸ்ரீமகாவிஷ்ணு இங்கு வசித்த காரணத்தால் யானும் சித்திபெறுவதற்காக இவ்வாச்சிரமத்திலேயே வசிக்கிறேன். இவ்விடத்தே அம்பரீச ஸுபாகுக்கள் முதலிய நிசாசரர்கள் வருவார்கள்;

இத்தானத்தில் தானே நீ அக்கொடியவர்களைக் கொல்லவேண்டும்; என்னாசிரமம் இதோ தோன்றுகிறதுபார்; இப்பொழுதே அங்குச்செல்வோம்; இவ்வாச்சிரமம் எனக்கெவ்வாறுரியதோ உனக்கும் அவ்வாறுரிமையுள்ளதென, இவ்வாறு சொல்லிக்கொண்டு நடந்து ஆச்சிரமத்துக்குப்போய்ச்சேர்ந்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரையும் பிரியாமல் சேர்ந்துள்ள அவ்விசுவாமித்திரமகாமுனிவர் பனிநீங்கிப் புனர்வசுநக்ஷத்திரங்களிரண்டுடன்கூடியிருக்கின்ற பூரணசந்திரன்போலவிளங்கினார். இவ்வாறு எழுந்தருளின விசுவாமித்திரரைக்கண்டு அந்தச் சித்தாச்சிரமத்திலுள்ள முனிவர்களெல்லோரும் பெருமகிழ்வுதூண்டுதலால் எழுந்தெழுந்து எதிர்கொண்டு வந்து மூவருக்கும் தக்கபடி உபசாரஞ்செய்தனர்கள். பெருமாள் இளையபெருமாளிருவரும் முகூர்த்தகாலம் இளைப்பாறி, விசுவாமித்திரரைநோக்கிக் கைகூப்பித்தண்டனசமர்ப்பித்து மஹாமுனிவரே! தேவரீர் இப்பொழுதே யாகதீக்ஷைசெய்துகொள்ளும்; தேவருக்கு இஷ்டசித்தி தடையின்றியுண்டாம். சித்தாச்சிரமமென்னும் இதன் பெயரும் யதார்த்தமாகக்கடவதென்று விண்ணப்பஞ்செய்தார். அப்படியே நியமத்துடன் தீக்ஷைதரித்த அம்மெய்த்தவச்செல்வரைக் கண்டு திருவுளமகிழ்ந்து அன்றைப்பகலும் இரவும் விழித்திருந்து காத்தது.

ప్రభాతకాలే చోత్థాయ పూర్వాంసంధ్యాంసమాస్యచ
స్పృష్టోదకౌశుచీజప్యం సమాప్యనియమేనచ
హుతాగ్నిహోత్రమాసీనం విశ్వామిత్రమవందతాం

ப்ரபாதகாலே சோத்தாயபூர்வாம்ஸந்த்யாம்ஸமாப்யச
ஸ்ப்ருஷ்டோதகௌசுசீஜப்யம்ஸமாப்யநியமேநச
ஹுதாக்னிஹோத்ர மாஸீநமவிசுவாமித்ர மவந்ததாம்.

மறுநாளுதயத்தில் நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பரிசுத்தர்களாய், நியமத்தோடு ஜபங்களைச்செய்து, அக்கினிஹோத்திரமுஞ் செய்து வீற்றிருக்கின்ற விசுவாமித்திரமஹாமுனிவரைக் கிட்டிவந்தனஞ் செய்தார்கள்.

பாலகாண்டத்தில் இருபத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

# முப்பத்தாவது சருக்கம்.

## ஸ்ரீராமபிரான் மாரீசாதியரக்கர்களை வெற்றிகொண்டு வேள்வியை நடத்தியது.

அநந்தரம் ஸ்ரீராமபிரானும் இலக்ஷ்மணனும் நிசாசரர்களோடு போர் செய்யவேண்டுமென் றவாக்கொண்டு காதிபுத்திரராகிய மஹாமுனிவரை நோக்கித் தபோநிதியே! அம்மாரீசஸுபாகுக்களிருவரும் எக்காலத்தில் வருவார்கள்? அதைமுன்னமே அடியேங்களுக்கு அருளிச்செய்தால் நாங்கள் விழிப்பாகவிருந்து தேவர் யாகத்துக்குத் தீங்குவராமல் முயற்சிசெய்வோம்; யாதேனும் ஒரு காரியம்முந்தி நடந்தபின் எண்ணுதல் பயனற்றதாதலால், இப்போதே அதை அருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர்கள். அங்குள்ள மற்றமுனிவர்கள் ஸ்ரீராமலக்ஷ்மணர்களைச் சிலாகித்து, நீங்களிருவரும் இன்றுமுதல் ஆறுநாள் வரையில் இரவும்பகலும் ஜாகரூகர்களாய் யாகத்தைக் காப்பாற்றக்கடவீர்கள். இவ்விசுவாமித்திரமஹாமுனிவர் தீக்ஷித்திருக்கிறார். இனி மௌனியாயிருப்பாராகையால், வார்த்தையாடமாட்டாரென்று கூறக்கேட்டு, அங்ஙனமே உறக்கமென்பது சிறிதுமின்றி இரவும்பகலும் ஊக்கத்தோடு விசுவாமித்திரமஹாரிஷியைப் பாதுகாத்துக்கொண்டு எப்போது நிசாசரர்கள் வருவார்களோவென்று திருக்கரத்தில் வில்லை ஏந்திக்கொண்டிருக்கையில், ஐந்துநாள்சென்றுமுடிவாகிய ஆறாவதுதினம் இன்று முடிவுதினமாதலால், தவறாமல் அரக்கர்கள் வருவார்களென்றெண்ணி ஸ்ரீபரமபதநிகேதநனாகிய ஸ்ரீராமபிரான் இளைய பெருமாளைப்பார்த்துத் தம்பிலக்ஷ்மணா! இன்றைத்தினம் மிகுதியும் கவனிப்பாயிருக்கக்கடவாய்; இராக்கதர்கள் வருவார்களென்று திருப்பவளந்திறந்து சொல்லிக்கொண்டு, தர்ப்பம் *சமஸம் ஸ்ருக்கு இவைகளுடனும், சமித்து புஷ்பஸமூஹங்களுடனுங்கூடியும், விசுவாமித்திரபுரோஹிதர்களால் வளர்க்கப்பட்டுமிருக்கிற யாகவேதியைப் பார்த்துக்கொண்டிருக்கையில் ஆகாயத்தில் மாரீசஸுபாஹுமுதலிய ராக்ஷசர்கள் கார்காலமேகங்கள்போல ஆகாயமெங்கும் பரவிநின்றுகொண்டு உதிரங்களையாகவேதியில் இறைக்க, அதைக் கண்ணுற்ற அருட்பெருங்கடலாகிய தசரதாத்மஜர் சேவடிசிவப்பப் பேறவிரைந்துவந்து லக்ஷ்மணா! இக்கொடிய அரக்கர்கள் செய்வதைப்பாராய்! இவர்

---

* சமஸம் என்பது பானஞ்செய்தற்குரிய பாத்திரம்; ஸ்ருக்கு என்பது ஹோமஞ்செய்தற்குரிய பாத்திரம், யாகஞ்செய்யுங்காலங்களில் வேதியர்கள் ராக்ஷசர்கள் வராமைக்காக, ரக்ஷோக்னம் என்னும் மந்திரத்தை ஓதுகிறபடியால் மாரீசாதி ராக்ஷசர்கள் யாகபூமியில் வரக்கூடாமல் ஆகாசத்தின்மேல் நின்று குருதிமழை பொழிவாராயினார்கள்

களை இப்போதோ மானவாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கோடைக்காற்று மேகங்களை மூலைக்குமூலை சிதறுண்டு பறக்க மோதுவதுபோல் யானடித்து விடுகிறேனென்று சொல்லியருளி, மானவாஸ்திரத்தைத் தொடுத்து மாரீசனுடைய மார்பைக் குறிவைத்தெய்தது, அவனை நூறுயோஜனத்துக்கப்பால், நடுக்கடலில் அமிழ்ந்து எண்ணங்குலைந்து தடுமாறச்செய்து, இளையபெருமாளைக் கடாக்ஷித்துத் தம்பி! இம்மானவாஸ்திரத்தைப் பார்த்தாயா? இது இம்மாரீசனை மோகிக்கச்செய்து ஆகாயத்திற்கொண்டுபோகிறது; இவனைக் கொன்றிலதாயினும் இனி இவன் இங்கு மீளமாட்டான்: ஆதலால், மற்ற அரக்கர்களைக்கொன்றுவிடுகிறேனென்று கடைப்பிடித்து ஆக்னேயாஸ்திரந் தொடுத்துச் சுபாஹுமார்பிலெய்து அவனைக்கொலைபுரிந்து, வாயவ்யாஸ்திரந் தொடுத்து மற்றுள்ள நிருதர்களெல்லோரையும் கொலைசெய்து, அசுரர்களைவெற்றிகொண்ட சசிமணாளனைத் தேவரிஷிகள் துதித்ததுபோல இங்குள்ள பரமவைதிக முனிகணங்களால் துதிசெய்யப்பட்டெழுந்தருளியிருக்கையில் விசுவாமித்திரமஹாமுனிவரும் நிர்விக்கினமாக யாகத்தைமுடித்து மௌனநிலைதீர்ந்து கண்விழித்து எல்லாத்திசைகளும் தூய்மையாக இருக்கக்கண்டு ஸ்ரீராமபிரானைப் பார்த்து.

కృతార్థోస్మిమహాబాహోకృతంగురువచస్త్వయా

సిద్ధాశ్రమమిదంసత్యం కృతంరామమహాయశః

க்ருதார்த்தோஸ்மி மஹாபாஹோ க்ருதங்குருவசஸ்த்வயா

ஸித்தாச்ரம மிதம்ஸத்யம் க்ருதம்ராம மஹாயசः

ஆஜாநுபாஹுவாய் எல்லையில்லாப் புகழாளனாகிய ஸ்ரீராமசந்திர! நானிப்பொழுது கிருதார்த்தனானேன். நீயும் ஆசாரியநியமனமதைப்பாதலஞ்ஞய; இந்த ஆச்சிரமத்துக்கும் சித்தாச்சிரமமெனனும் பெயர் யதார்த்தமாகச் செய்யப்பட்டதென்று மகிழ்ந்து புகழ்ந்தருளினார்.

பாலகாண்டத்தில் முப்பதாவதுசருக்கம்

முற்றிற்று

## முப்பத்தொன்றாவது சருக்கம்.

யாவரும் மிதிலாநகரத்துக்கு எழுந்தருளுகை.

பின்னர்க் கிருதார்த்தர்களாகிய பெருமாளும் இளையபெருமாளும் பெருமகிழ்ச்சியுடையவர்களாய் அன்றிரவு அங்கெழுந்தருளியிருந்து, மறு

'நாள் சூரியோதயத்துக்குமுன் பள்ளியுணர்ந்து நித்தியகருமானுஷ்டானங்களை முறையேமுடித்து, அநேகரிஷிகளுடனெழுந்தருளியிருக்கின்றவிசுவாமித்திர மகாரிஷிகளுக்குத்தீர்க்கப்ரணாமஞ்செய்துமஹாமுனிவரே! அடியோங்கள் தேவருக்குத் தொண்டுசெய்பவர்களாக இதோவந்து நிற்கிறோம், தேவர் திருவுளப்பாங்கின்படி ஆஜ்ஞைசெய்யக்கடவீர், உடனே அதைச்செய்து முடிக்கக் காத்துக்கொண்டிருக்கிறோமென்று இனிமையாக விண்ணப்பஞ்செய்துகொள்ள, அங்குள்ள ரிஷிகளெல்லோரும் விசுவாமித்திரமஹாமுனிவரை முன்னிட்டுக்கொண்டு ஓ ஸ்ரீராமலக்ஷ்மணர்களே! மிதிலாநகருக்கு அரசனாகிய ஜனகமகாராஜன் மிகுதியும் புண்ணியகரமாகிய ஒரு வேள்வி செய்ய முயல்கின்றான், அங்கே நாங்கள் போகின்றோம், நீங்களுமெங்களோடுவரக்கடவீர்கள். அங்கு மிகவியக்கத்தக்க ஒருகோதண்டமிருக்கின்றது, அதையும் நீங்கள் பார்க்கலாம், அக்கோதண்டம் முன்பொருகால் அந்த ஜனகமகாராஜனுடைய பெரியோர்களுக்குத் தேவர்களால் கொடுக்கப்பட்டது; அதன்வலிஅளவற்றது; அதைநாணேற்றுவதற்குத் தேவர்களாலும், கந்தர்வர்களாலும், அசுரர்களாலும், ராக்ஷஸர்களாலும் முடியாது; அப்படியிருக்க மனிதர்களால் முடியுமோ? அவ்வில்லின் வல்லமையை அளவிட்டறிய வேண்டுமெனத் தேவர்முதலியோரும் மஹாபலசாலிகளாய் அநேகராஜகுமாரர்களும் வந்து பார்த்துஅசைக்கமுடியாமற்போயினர். அத்தனுசை ஸ்வர்க்காதி பலன்களைவிடச் சிறந்ததென்று யாகத்தின் பலனாகக் கோரிப்பெற்றுக்கொண்டார்கள். ஆயுதபூசை செய்யுங்காலத்தில் அதையே முக்கியமாகச் சந்தனபுஷ்ப தூபதீபாதிகளால் பூஜிக்கிறார்களென்று இவ்வாறு அருளிச்செய்தார்கள். பின்பு விசுவாமித்திரமஹாரிஷி பிரயாணப்பட்டு.

సమీక్షసంఘస్య కాకుస్థ ఆమంత్ర్యవనదేవతాః
స్వస్తివోస్తుగమిష్యామి సిద్ధస్సిద్ధాశ్రమాదహం

ஸாக்ஷிஸங்கஸ்ஸ காகுஸ்த ஆமந்த்ரய வநதேவதா:
ஸ்வஸ்திவோஸ்து கமிஷ்யாமி ஸித்தஸ்ஸித்தா ஸ்ரமாதஹம்

வநதேவதைகளைப் பார்த்துத் தேவதைகளே! இந்த ஆச்சிரமத்தின் மஹிமையால்நான் சித்தியடைந்தேன்; உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது யான் போய்வருகிறேன்; உத்தரதிசையில் கங்காநதிதீரத்தில் தவஞ்செய்யப்போகிறேனென்று சொல்லி, அவ்வாச்சிரமத்தை வலம்வந்து வடதிசையைநோக்கிச் செல்லுகையில், இவருடன்கூட நூறுவண்டியின்மேல் அக்கினிஹோத்ரமுதலிய யாகப்பொருள்களை வைத்துக்கொண்டு, பிரஹ்மவாதிகளாகிய முனிவர்களும் ப்ரயாணமாகி வர, அங்குள்ள மிருகபக்ஷிகளும்இவர்கள்பிரிவை ஆற்றமாட்டாமல் பின்தொடர்வதைக்கண்டு, விசுவா

மித்திர மஹாமுனிவர் அவற்றையெல்லாம் நோக்கி, சமாதானப்படுத்தி மீண்டும் செல்லும்படி அனுப்பிவிட்டு, எல்லாருடனும் வழிநடந்து நெடுந்தூரஞ்சென்று சூரியாஸ்தமயகாலத்தில் சோணாநதிதீரத்திலிறங்கிச் சந்தியாசமயத்தில் எல்லோரும் ஸ்நானஞ்செய்து ஜபதபஹோமாதிகளை முடித்துக்கொண்டு, சுகமாகவீற்றிருக்கையில், அநந்த மங்களகரரான ஸ்ரீராமபிரானும் இளையபெருமாளுடன்கூடி அத்தபோதனர்களையெல்லாம் பூஜித்து விசுவாமித்திர மஹாமுனிவருக்கெதிரில் வீற்றிருந்து, அம்மஹாதவத்தினரை நோக்கிச் செழுமையுள்ள வனஞ்சூழ்ந்த இது என்னதேசம்? இதையான் அறிந்துகொள்ளவேண்டுமென விரும்புகிறேன், இதன் உண்மையை அருளிச்செய்யவேண்டுமென்று வினவியருளுதலும், மெய்ஞ்ஞானச் செல்வராகிய விசுவாமித்திர மஹாரிஷியும் அத்தேசத்தின் வரலாற்றைச் சொல்லியருளலாயினார்.

பாலகாண்டத்தில் முப்பத்தொன்றாவது சருக்கம்
முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது சருக்கம்.

### விசுவாமித்திரர் தம்மரபின் முறைமை கூறியது.

ஸ்ரீராமபிரானே! முற்காலத்தில் சதுர்முகன் புத்திரராகிய குசரென்பவர் தம் சஹோதரர்களுக்குள் சிறந்தவராகவும், மஹாதபஸியாகவும், அறத்தினொழுக்கம் வழுவுதலில்லாராகவும், எல்லா அறங்களையும் உணர்ந்தவராகவும், ஸ்ரீமத் பரமவைதிகாசாரத்தில் ஒழுகும் நல்லோர்களைப் பூஜிப்பவராகவும், மஹாத்துமாவாகவுமெழுந்தருளியிருந்து, தமக்கிசைந்த நற்குணநற்செய்கை வாய்ந்த மனைவியாரிடத்தில் குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸ், வஸு, என்னப்படும் நான்கு உத்தமபுத்திரர்களை அநுக்கிரஹித்தனர். பின்பு அவர்கள் நலந்தருவனவாகிய குணத்தையும், செய்கையும், மஹாபராக்கிரமத்தையும், உற்சாஹத்தையும் உடையார்களாயிருக்கக்கண்டு, க்ஷத்திரிய தர்மத்தை நிலைநிறுத்திச் செழிப்பிக்கவேண்டுமென்று கருதி அவர்களையழைத்து, அருமந்த புத்திரர்களே! நீங்கள் நால்வரும் நீதிவழுவாமலும், சத்தியந்தவறாமலும் லோகபரிபாலனஞ் செய்யக்கடவீர்கள். அவ்வாறு செய்யின் சிறந்த அறத்தைப்பெறுவீர்களென்று குசர் தமது குமாரர்களுக்குக் கட்டளையிட, அந்நான்கு சிறுவர்களும் தந்தையினுடைய ஆஜ்ஞைக்குக் கீழ்ப்படிந்து தாங்கள் வசிப்பதற்காக நான்கு நகரங்களை நிர்மாணஞ்செய்விக்கவேண்டுமென்று கருத்துக்கொண்டு, அவர்களுள் குசாம்பர் கௌசாம்பி எனவும், குசநாபர் மஹோதயமெனவும், ஆதூர்த்தரஜஸ் தர்மாரண்ணியமெனவும், வஸுவென்பவர் கிரிவிரஜமெனவும் கூறப்படும் நான்குபட்டணங்களை ஏற்படுத்தினார்கள். இப்

பூமி ஆர்நாலவருள வஸுவென்பவனுடையது, இதோ ஐந்துமலைகள் தோன்றுகின்றனவே இவ்வைந்து மலைகளின் நடுவில் மகததேசத்தில் மாகதியெனச் சொல்லப்பட்ட இச்சோணநதமானது மலர்மாலைபோலப் பெருகி அவ்வஸுவின் தேசத்தின் இருபுறத்திலும் கிழக்கிலிருந்து மேற்கு முகமாகப் பாய்கின்றது. இதற்குமேல் குசநாபருடைய குலமுறை சொல்லுகிறேன் கேளாய்.

அக்குசநாபருக்குக் கிருதாசியென்னும் பாரியை வயிற்றில் நூறு பெண்கள் பிறந்தனர்கள். அவர்கள் முறையே வளர்ந்து தக்கபருவம் வாய்ந்து ரூபயௌவனமுள்ளவர்களாய், ஒருநாள் ஆடையாபரணங்களால் அலங்காரஞ்செய்துகொண்டு கார்காலத்தில் ஒளிவிடுகின்ற மின்கொடிகள் போல உத்தியானவநஞ்சென்று, தங்களில் சிலர் நர்த்தனஞ்செய்ய, சிலர் யாழ்வீணைகளைக் கரத்திலேந்தி வாசித்துப் பாடவும், இவ்வண்ணம் யாவரும் பெருமகிழ்வுகொண்டு விநோதமாயிருந்தனர்கள். அக்காலையில் எல்லாப்பிராணிகளுக்கும் உயிராகியவாயுபகவான் நீருண்ட கார்மேகங்களுக்கிடையில் விண்மீன்கள்போல அவ்வுத்தியானவநத்தில் விளங்குகின்ற அந்நூறுமங்கையர்களையும் கண்ணுற்று மோகங்கொண்டு, பெண்மணிகளே! யான் உங்களை அணையவிரும்புகின்றேன். ஆதலால், நீங்கள் எல்லீரும் எனக்கு தேவிமார்களாகக் கடவீர்கள் மானிடரை மணஞ்செய்ய விருப்பமுறவேண்டா. என்னையே மணஞ்செய்துகொண்டால் நெடுநாள் வாழ்வீர்கள் அன்றியும் சுகாநுபவத்திற்குரிய யௌவனம் பெரும்பாலும் மனிதர்களுக்கு நீடித்து நிற்பதில்லை; இவற்றையெல்லாமுணர்ந்து தேவனாகிய என்னை மணஞ்செய்துகொண்டு, அழியாத இளமையை நிலைக்கப்பெற்று எப்பொழுதும் சுகமுற்று வாழக்கடவீரென்றுரைத்தனன். என்றிவ்வாறுரைத்த அந்த வாயுதேவனது வார்த்தையைக்கேட்டு அந்த நூறுபெண்களும் அவ்வார்த்தையை அவமதித்துப் பரிஹாசமாகச் சொல்லுகிறார்கள். வாயுபகவானே! நாங்கள் உம்மைச் சகல பூதங்களினும் உட்புகுந்துலாவுகின்ற பிராணபூதரென்றும் எல்லா வானவர்களுக்குள்ளும் சிறந்தவரென்றும், அறிந்திருப்பவர்களாயினும், பிதாவின் கட்டளைப்படி நடப்பவர்களென்று எமதுறுதியை உணர்ந்திருந்தும், நீர் ஏன் எங்களை இப்படிப் பரிசோதனைசெய்து அவமதிக்கிறீர்.

కుశనాభసుతాస్సర్వాః సమర్థాస్త్వాం సురోత్తమ
స్థానాచ్చ్యావయితుం దేవం రక్షామస్తు తపోవయం

குசநாப ஸுதாஸ்ஸர்வா ஸமர்த்தா ஸ்த்வாம ஸுரோத்தம
ஸ்தாநாச்ச்யாவயிதும் தேவம ரக்ஷாமஸ்து தபோவயம.

வானவர்களுள் உயர்ந்தவராகிய வாயுதேவரே! யாவும் அறிந்த நீர் எங்களைக் கெடுக்கவேண்டுமென எண்ணங்கொண்டு வந்தவராயினும், குசநாபர் பெண்களாகிய யாங்கள் எல்லோரும் சாபமிட்டு உம்முடைய நிலை

யைக்கெடுக்குந் திறமையுள்ளவர்களாயிருக்கின்றோம்; [illegible]னும், தந்தையின் கட்டளையின்றி ஸ்வயமாக ஒரு செய்லும் கன்னியர்கள் செய்யக்கூடாதன்றோ, ஆதலால் அத்தவத்தைக் காப்பதன்பொருட்டு நாங்கள் நீர்செய்த பிழையைப் பொறுத்தோம். தூயபுத்தி! சத்தியசந்தராகிய எங்கள் தந்தையாரை அவமானஞ்செய்யத்தக்க கேடு உமக்கு வரக்கடவதன்று, பிதாவின் கட்டளைப்படியே யாங்கள் கணவனை வரிக்கக்கடவோமேயல்லாமல் சுதந்தரமாய் ஒன்றும் செய்யக்கடவோமல்லோம்.

పితాహిప్రభురస్మాకం దైవతంపరమంహిసః
యస్యనోదాస్యతి పితాసనోభర్తాభవిష్యతి

*பிதாஹி ப்ரபுரஸ்மாகம் தைவதம் பரமம்ஹிஸ꞉*
*யஸ்யநோதாஸ்யதி பிதாஸநோபர்த்தாபவிஷ்யதி*

அன்றியும் கன்னிகைகளாகிய எங்களுக்குத் தந்தையாரே பிரபு; தந்தையாரே தெய்வமெனக்கொண்டிருக்கின்றோமாதலால், அவர் எங்களை யாவனுக்குக் கொடுக்கின்றாரோ அவனே எங்களுக்குப் பதியாவானென்றனர்கள். அந்த மங்கையர்களுடைய மொழிகளைக்கேட்டு வாயுதேவன் கடுங்கோபங்கொண்டு அம்மாதர்களுடைய உடம்பினுட்புகுந்து எல்லா வுறுப்புகளையும் முறித்து, அவர்களை முடக்கிவிட்டார். அம்மாதர்களோ பயமும் வெட்கமுமுற்றுக் கண்களில் நீர்சொரியத் துயரமடைந்து மெல்லத்தவழ்ந்துகொண்டு அரசன் அரண்மனையில் வந்து வீழ்ந்தார்கள். இவ்வண்ணம் வீழ்ந்து சுழன்று புலம்புகின்ற தம் அருமந்த பெண்களைக் குசநாபர்கண்டு அஞ்சி, என் அருங்குழந்தைகளே! இஃதென்னை? சொல்லக்கடவீர்கள்; யாவன் அறத்தைக்கெடுக்க நினைத்தான்; உங்களை இவ்விதம் கூனுண்டாம்படிச் செய்தவன் யாவன்? என்று வினவியும், அவர்கள் வாயு தம்மைமுடக்கினமையால், விடைகூறாதிருந்தனர், மனங்கலங்கி வருந்தாநிற்பதை யுணர்ந்து தாமும் வருந்தி, இவர்கள் கூறிய மறுமொழியை எதிர்பார்த்துக்கொண்டே இருந்தார்.

பாலகாண்டத்தில் முப்பத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## முப்பத்துமூன்றுவது சருக்கம்.

### குசநாபர் பெண்களின் திருமணத்தைக் குறித்தது.

குசநாபருடைய வார்த்தையைக்கேட்டு அந்நூறுபெண்களும்தெளிந்தெழுந்து தந்தையைவணங்கி எங்கள் தந்தையே! சர்வாத்துமாவாகிய

வாயுதேவன் [illegible]வ்வழியால் எங்களொழுக்கத்தை வேற்றுமைசெய்யக் கருதி அறவொழுக்கத்தைத் தவறினன். யாங்கள் பிதாவின் வசப்பட்டவர்களாயிருக்கின்றோமே யல்லது, சுதந்தரமுள்ளவர்களல்லோம்; ஆதலால், வாயுதேவரே! நீர் எங்கள் பிதாவின் முன்னர்சென்று அவரைக்கேட்கக் கடவீர். எங்களை மகத்து மணம் புணர்விப்பாராயின் நாங்கள் உம்மை மணப்பதற் கையமில்லையென நாங்கள் அவ்வாயுதேவனை வேண்டியும் அவர் உடன்படாமல், எங்கள்மேற் சினங்கொண்டு எங்களை இவ்வாறு முடக்கிவிட்டாரென்று அழுது கூறினர்கள். அச்சிறுமியர்களுடைய மொழிகளைக்கேட்டு அறத்தினொழுக்கங் குன்றாத குசநாபமஹாராஜரும் அப்பெண்களை நோக்கி, என்னருமைப் பெண்களே! எல்லோருக்கும் எக்காலத்திலும் விடாது கைக்கொள்ளத்தக்க குணம் பொறுமையே, அத்தன்மையதாகிய பொறுமையை நீங்கள் எல்லீரும் வேறுபடாது நின்று நம்முடைய குலமுறையறிந்து ஒருங்கு பாதுகாத்தீர்கள். ஆண்மக்களுக்காயினும், பெண்மக்களுக்காயினும், பொறுமையே அலங்காரமணியெனப்படும்; யௌவனமத மயக்கமுள்ள நீங்கள் வாயுதேவன் எதிரில்வந்து நின்றகாலத்தும் மனஞ்சலிக்காமலும், அவன்செய்த தீங்குக்குச் சாபமிடாமலும் பொறுமைபூண்டிருந்தது மிகுதியும் வியக்கத்தக்கதே.

క్షమాదానంక్షమాయజ్ఞఃక్షమాసత్యంహి పుత్రికాః
క్షమాయశఃక్షమాధర్మః క్షమయావిష్ఠితంజగత్

க்ஷமாதாநம் க்ஷமாயஜ்ஞ: க்ஷமாஸத்யம்ஹி புத்ரிகா:
க்ஷமாயச: க்ஷமாதர்ம: க்ஷமயாவிஷ்டிதம் ஜகத்

இந்த க்ஷமையே தானஞ் செய்வதினாலாகும் பயனையும், யாகஞ்செய்வதினாலாகும் பயனையும், சத்தியவாக்கினாலாகும் பயனையும், கீர்த்தியையும், தருமஞ்செய்வதினாலாகும் பயனையும், தரத்தகுந்தது. இந்த க்ஷமையில்லாவிடின் தானஞ்செய்தல் முதலிய யாவும் ஒருவனிடத்திருப்பினும் பயன்படா, க்ஷமையினாலேயே உலகமும் நிலைபெற்றிருக்கின்றது. பொறுமையை நீங்கள் சிறப்பாகக் கொண்டமையால் நீங்கள் வருத்தம் அற்றிருக்கக்கடவீர்களென் றிவ்வாறுரைத்து, அப்பெண்மணிகளை அந்தப்புரத்துக்குச் செல்லவிட்டு இவர்களைக் கலவியறிவொழுக்கங்களிற் சிறந்தோனுக்குத் திருமணஞ் செய்விக்க வேண்டுமென மந்திரிகளுடன் யோசனைசெய்து கொண்டிருந்தனர். அக்காலத்தில் சூளியெனப்படும் மஹாமுனிவர் ஜிதேந்திரியராய்ப் பிரஹ்மநிஷ்டராய்த் தவஞ்செய்து கொண்டிருக்கையில் ஊர்மிளையென்னும் கந்தருவ ஸ்திரீயின் தநயையாகிய ஸோமதை யென்பவள் அச்சூளிமஹா முனிவருக்குப் பணிவிடை செய்வதினால் தன்மேல் அவருக்குப் பெருமகிழ்வுண்டாகினள். ஒருநாள் அத்தபோ நிதியானவர் திருவுள மகிழ்ந்து ஸோமதை

யைக் கடாக்ஷித்துச் சோமதையே நீ செய்த பணிவிடையால் நாம் மிகு
தியும் களிப்புற்றோம், நினக்கு வேண்டியதோர் வரத்தைக் கேட்கக் கட
வையென அருளிச்செய்ய, சோமதையும் அவர் திருவுளமகிழ்ந்திருப்பதை
உணர்ந்துகொண்டு மனமகிழ்ந்து இனிதாக ஒரு விண்ணப்பஞ் செய்
கின்றாள். பெருந் தவவரசே! பிரமதேஜஸினால் நிறைந்து பரப்பிரஹ்
மம்போல விளங்குகின்ற தேவரைப்போலப் பிரமதேஜஸமைந்த தனய
னொருவனைத் தேவருடைய அருளால் அடைய விரும்புகின்றேன். அன்
றியும் யான் பதியில்லாதவளாயிருக்கின்றேன், யானோ இனி ஒருவனையும்
மணப்பதில்லை, இவ்வடியேனிடத்தில் அருள்செய்து, என் விண்ணப்பத்
தின்படி வரந்தரவேண்டுமென இரந்தனள். சோமதையின் விண்ணப்பத்
தைச் திருச்செவிசாற்றிப் பரமகருணையினால், பிரஹ்மதத்தனென்னும்
மானசபுத்திரனொருவனைச் சோமதையினிடத்து உண்டுபண்ணினார். சோம
தையின் திருக்குமாரராகிய பிரஹ்மதத்தர் காம்பிலியையென்னும் நகர
த்தில் சுவர்க்கலோகத்தில் ஆகண்டலன்போல வீற்றிருந்து அரசு நீதிவழு
வாமல் லோகபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தார். குசநாபர் மந்திரியர்
களோடு நெடுநாள் ஆராய்ந்து இப்பிரஹ்மதத்தரே தம் தநயைகளுக்குத்
தகுந்த கணவரென்று தேறி, உடனே அவரை யழைப்பித்துக் கரையில்
லாத பெருமகிழ்வுகொண்டு, தம் புத்திரிகாரத்தினங்களாகிய நூற்றுவரை
யும் அவருக்குத் திருமணஞ்செய்வித்தனர். பிரஹ்மதத்த மஹாராஜரும்
வைதிகமுறையில் இவ்வனிதையர்களைப் பாணிக்கிரஹணம் பண்ணிக்
கொண்டமாத்திரத்தில், அவருடைய தபோமஹிமையால் அந்நூறு மங்
கையர்களும் முடமும் கூனும் ஒருசேர நீங்கி நிமிர்ந்து, முன்போல ரூப
லாவண்ணியமுடையார்களாய் விளங்கினார்கள். அதைக்கண்டு குசநாப
மகாராஜரும் மிக உளமகிழ்ந்து தம் மருமகனாகிய பிரஹ்மதத்தரைத் தம்
பெண்களோடுகூட்டிப் பரிஜனபரிவாரத்துடன் அவரிருப்பிடத்துக்கு
அனுப்பினர். சோமதையும் தன் புத்திரன் நூறுபத்தினிமாரோடு வருத
லைக் கண்ணுமனமுங் குளிரக்கண்டு எல்லையில்லாத உவகைகொண்டு
தன் மருமக்கள் நூற்றுவரையும் முறையே தழுவியணைத்துக் குசநாபனை
யும் புகழ்ந்து மகிழ்ந்திருந்தனள்.

பாலகாண்டத்தில் முப்பத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

## முப்பத்துநான்காவது சருக்கம்.

*காதிநந்தனர் தம் தந்தையின் பிறப்பை யுரைத்தது*

பின்பு பிரஹ்மதத்தர் தம் பத்தினிமாரோடு நகரஞ்சென்றபின், குசநாபர் புத்திரோற்பத்தியின்பொருட்டுப் புத்திரகாமேஷ்டிசெய்துகொண்டிருக்கையில், குசரென்பவர் தம் புத்திரராகிய குசநாபரைநோக்கிக் குசநாப! உனக்குத் தகுதியான நற்குண நற்செய்கையுள்ள காதியென்னும் ஒரு புத்திரனுண்டாகக்கடவன். அவனால் நினக்கு மாபெருங் கீர்த்தியுளதாகுமென இவ்வண்ணங்கூறி; ஆகாயமார்க்கத்திலெழும்பிப் பிரஹ்மலோகம்போய்ச் சேர்ந்தனர். சென்ற சிலநாள் கழித்துக் குசநாபருக்குக் காதியென்றொரு புத்திரருண்டானார். அவர்தாம் என் தந்தையென்றருளிச்செய்தனர். என்றிவ்வாறுகூறியருளி விசுவாமித்திர மஹாமுனிவர் ஸ்ரீராமசந்திரனைநோக்கி ரகுநந்தன! குசருடைய திருவமிசத்திற் பிறந்தபடியால் எனக்குக் கௌசிகனென்ப பெயருண்டாயிற்று; மேலும் எனக்கு மூத்தவள் ஸத்தியவதியென்பவள், அவள் மிகவும் நற்குணமுடையாளாய் ரிசீகரென்பவரைத் திருமணஞ் செய்துகொண்டு வழுவாமலொழுகின்றபின் திண்மையால் சரீரத்தோடு தன்பதியுடன்கூடிச் சுவர்க்கலோகமடையலுற்றனள், அதுகண்ட ரிசீகருடைய ஆஞ்ஞைப்பூண்டு அவள் உலகத்தார்க்கு நலந்தருமபடித் தபோமஹிமையால் மிக்க புண்ணியகரமாயும், நின்மலமாயுமுள்ள கௌசிகியென்னப்படும் ஒரு மஹாநதியாக இமயமலையினருகில் பெருகிவருகின்றனள். யான் என்னுடன் பிறந்தாளாகிய கௌசிகியினிடத்துப் பிரிவில்லாத அன்பினால் இமயகிரியினருகில் வாசஞ்செய்வேனாயினேன்; மிகுந்த பாவனையாயும், மெய்மையினும் அறத்திலும் நிலையுள்ளவளாயும், கற்பொழுக்க முடையளாயுமுள்ள அக்கௌசிகி நதியையுமவிட்டு ஒரு நியமத்தை முடிப்பதற்காகச் சித்தாச்சிரமம்வந்து, உனது திருத்தோள் வலியால் யான் சித்தியடைந்தேன். ஸ்ரீதசரதநந்தன! நீ வினவியபடி என்மரபின் வரலாறும், இத்தேசத்தின் வரலாறும் விசதமாக உரைத்தேன்; இச்சரித்திரஞ் சொல்லிக்கொண்டிருந்தமையால் மிக்க காலங்கழிவாய்விட்டது. இந்துமதிநந்தனகுமார! நீ திருக்கண்வளரக்கடவாய் கண்விழித்தால் நோயுண்டாகிப் பிரயாணம் தடைபடும்; இங்கு இப்பொழுது மரங்களெல்லாம் காற்றினியக்க மின்மையால் அசைவற்றிருக்கின்றன; மிருகங்களும் பறவைகளும் தத்தம் உறைவிடஞ்சேர்ந்து உறங்குகின்றன. பத்துத்திசைகளும் இருளால்மூடப்பட்டன? சந்தியும் முறையே நீங்குகின்றது, அசுவினிமுதலிய நாண்மீன்களாலும், மற்ற விண்மீன்களாலும் ஆகாசம் பலகண்களுடையதுபோலத்தோன்றுகின்றது; சந்திரனும் உதித்துத் தன் நிலவினால் இருளை

நீக்கிப் பூமிமுற்றிலு மிருப்பவருடைய மனத்தை மகிழச்செய்கிறான். இரவில் திரிகின்ற பூதராக்ஷஸ பிசாசங்கள் முதலியவைகள் எங்கும் பயங்கரமாய்த் திரிகின்றனவென்றனர்; இவ்வாறு அருளிச்செய்ய, அங்குள்ள ரிஷிகளெல்லோரும் அது தகுந்தகுமெனப்புகழ்ந்து, விசுவாமித்திர மகாமுனிவரைச் சூழ்நின்று, குசிககுலத்தில் தோன்றினவர்கள் மிகத் தருமபுத்தியுள்ளவர்களாகவும், கமலோற்பவனுக்கு நிகரானவர்களாகவும், எல்லாரைப்பார்க்கிலும் சிறந்தவர்களாகவு மிருக்கின்றனர்கள். அவர்களுக்குள் தேவரே மிகுதியும் கீர்த்தியுண்டுபண்ணத்தக்கவரென்றனர்கள். என்றிவ்வாறு அம்முனிவர்களால் துதிக்கப்பட்ட விசுவாமித்திர மஹாரிஷி சூரியன் அஸ்தகிரியையடைவதுபோல நித்திரையையடைய, ஸ்ரீகௌசல்யாநந்தனராகிய பெருமாள் இளையபெருமாளுடன்கூடி ஆச்சரியமடைந்து கௌசிகமஹாமுனிவரைப் புகழ்ந்து, பல்லவசயனத்தில் திருக்கண்வளர்ந்தனர்.

பால்காண்டத்தில் முப்பத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாவது சருக்கம்.

### கங்காநதியின் வரலாறு கூறியது.

பின்பு விசுவாமித்திர மஹாமுனிவர் மற்றுமுள்ள முனிவர்களுடன் அச்சோணநதத்தின் தீரத்தில் உதயமவரையு மிருந்து பொழுதுவிடிந்தவுடனே தாரகநாமவாச்சியனை நோக்கி, மனுகுலதிலகா! பொழுதுவிடிந்தது, எழுந்திராயெழுந்திராய் உனக்கு மங்களமுண்டாகக்கடவது; பிரயாணப்படவேண்டுமன்றோ? என்று திருப்பள்ளியுணர்த்தினார் அது கேட்டுத் தாடகாதாடனரும் திருப்பள்ளியுணர்ந்து, இளையபெருமாளுடன் கூடி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பிரயாணமாய், விசுவாமித்திர மஹாமுனிவரை நோக்கி. காதிநந்தனரே! இச்சோணநதமானது வெள்ளம் வடிந்து மணல் மேடிட்டிருக்கின்றமையால் எவ்வழியால் யாமிதைக் கடக்கவேண்டுமென்றுவினவ? அதுகேட்டு கௌசிக மஹாமுனிவர் ஸ்ரீகோதண்ட ராமா! இதோ இத்தபோநிதிகள் நடக்கின்றார்களே அவ்வழியாயேயாமும் கடக்கவேண்டுமென்று அருளிச்செய்து, அம்முனிவர்களோடும், ஸ்ரீராமலக்ஷ்மணர்களோடும் அவ்வழியால் அந்நதியைக்கடந்து, நாநாவித அரணியங்களின் வழியாய் வெகுதூரஞ்சென்று, நடுப்பகலில் எல்லாநதிகளிலும் சிறந்த கங்காநதியை யடைந்தார். உடனே யாவரும்

அன்னப்பறவை, சாரசப்பறவை முதலிய நீர்ப்பறவைகளால் சூழப்பெற்றுப் பாவனமாயுள்ள புனல்நிரம்பிய அவ்யாற்றைக்கண்டு களிப்புற்று, அதன்தீரத்திலிறங்கி, நடந்துவந்த இளைப்பாறிப் பின்பு அதில் ஸ்நானஞ் செய்து தேவபிதுரு தர்ப்பணாதியாகிய நித்யகடன்களை முடித்துக்கொண்டு, அக்னிஹோத்ர ஹோமசேஷமாகிய ஹவிஸ்ஸை அமுதுசெய்து, விசுவாமித்திரமஹாயோகிக்கு நாற்புறமும் சுற்றி வீற்றிருந்தார்கள். அப்பொழுது ஸ்ரீதசரதாத்மஜர் அங்குப் பகீரதகுலத்தாருடைய நற்காரியங்களை உரைக்கவல்ல தம்மாசிரியரை நோக்கி ஸ்வாமீ காதிநந்தன! இக்கங்கை மூன்று உலகங்களிலும் பெருகி அலைகடலை எப்படியடைகின்றனள்? இதைக்கேட்டுணர விரும்புகிறேன், அருளிச்செய்யவேண்டுமென்று பணிவாக் வினவ, கௌசிகமஹாமுனிவர், கங்கையின் பிறப்பும் சிறப்புஞ் சொல்லத்தொடங்குவாராயினர். கேளாய்! ஸ்ரீதசரத தநூபவா! இமயமென்னும் மலையரையன் சகல தாதுக்களுக்கும் பிறப்பிடமாக இருக்கின்றான். அவனுக்கு நிகரில்லா ரூபமுள்ள இரண்டு பெண்களுள. மேருவின் பெண்ணாகிய மனோரமையென்பவள் இவ்விருவருக்குந் தாய். இவருள் மூத்தவள் இக்கங்கை இளையவள் உமையென்பவள். இக்கங்கையைத் தேவர்கள் வந்து தேவலோகத்துக்கனுப்பும்படி பர்வதராஜனிடம் வந்து இரந்துகேட்டு, கருதியவண்ணம் பெருகக்கெடுக்கவல்ல மகிமைதங்கிய இவளைத் தேவலோகத்துக்கு அழைத்துச் சென்றனர்கள். உமையென்பவள் தான் சங்கரனையே விவாஹஞ்செய்துகொள்ளவேண்டுமென்று கடுந்தவஞ்செய்ய, பர்வதராஜனும் இசைந்துணர்ந்து தன் தநயைக் கருகூலனாகிய சிவனுக்கே இவளைத் திருமணம் புரிவித்தனன். சைலராஜனுக்குரிய இவ்விரண்டுபெண்களும் மூவுலகத்தவராலும் வணங்கத்தக்க சிறப்புள்ளவர்கள்; இக்கங்காநதி முதலில் தேவலோகத்தையடைந்த சரிதம் முற்றுங் கூறினேன், இத்தெய்வநதி அக்காலத்தில் இவ்வுலகத்தைவிட்டுத் தேவலோகத்தை யடைந்திருந்தது.

பாலகாண்டத்தில் முப்பத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தாறாவது சருக்கம்.

### பார்வதியும் சிவனும் புணர்ந்தது.

---

இவ்வாறுகூறிய குசிகநந்தனர்மொழியைத் திருச்செவிசாத்தியருளித் தசரதநந்தனர்களிருவரும் அக்கதையை புகழ்ந்தும் நன்குமதித்துக் காதிநந்தனரே! மிக்க புண்ணியகரமாகிய இக்கதையைக்கேட்டுப் பெருமகி

ழ்ச்சியடைந்தோம்; மலையரசன் மூத்தமகளாகிய இக்கங்கை தேவலோ கஞ்சென்று மனிதலோகத்துக்கு மீண்டுவந்தமை முதலிய சரித்திரத்தைச் சுருக்கமொழியச் சாதித்தருளவேண்டும்; தேவரீர் இச்சரித்திரமெல்லாம் ஐயந்திரிபற நன்குணர்ந்தவர்; உலகங்களைத் தூய்மைசெய்கிற இக்கங்கை என்னகாரணத்தால் மூன்றுலோகங்களையும் அடைந்தது, திரிபதகையானது உலகமூன்றிலும் எச்செயலால் புகழ்பெற்றதென்றிவ்வண்ணம் வினவியதைக்கேட்ட விசுவாமித்திரமஹாமுனிவர் மாதவர்களுக்கு நடுவில் அக்கதையைப் பரக்கச்சொல்லலுற்றனர். ரகுகுலோத்வஹா! முன்பு மஹரிஷியாகிய நீலகண்டர் உமாதேவியைத் திருக்கலியாணஞ்செய்து மோஹங்கொண்டு அவளுடன் தேவமானத்தால் நூறுவருஷகாலம்புணர்ந்திருந்தனர் அவ்வளவுகாலங்கழிந்தும் பார்வதிதேவி வயிறுவாய்க்கவில்லை; அதுகண்டு நான்முகன் முதலிய தேவர்களெல்லோரும் இவர்களுக் கிங்குப் புத்திரனுண்டாவதாயிருப்பின், அத்தேஜஸ்ஸை யாவர் பொறுக்கவல்லர் இது மூன்றுலகையும் எரித்துவிடுமென்று அச்சங்கொண்டனர் உடனே தேவர்கள் வந்து நீலகண்டரை வணங்கி ஸ்வாமி! நீர் இவ்வுலகங்களுக்கு இதஞ்செய்பவராதலால், எங்களுடைய வந்தனத்துக்கிசைந்து அருள்செய்யக்கடவீர் உம்முடைய தேஜஸ்ஸை இவ்வுலகங்கள் பொறுக்கமாட்டா, ஆதலால் நீர் பார்வதிதேவியுடன் பிரஹ்மநிஷ்டராகித் தவஞ்செய்யக்கடவீர் மூவுலகும் நிலைபெறுதற்காக உமது தேஜஸ்ஸைத் தேஜஸ்ஸாலேயே நிறுத்தக்கடவீரென்றுசொல்லக்கேட்டுச் சிவமூர்த்தியானவர் விண்ணவர்களை நோக்கிச் சொல்லுகின்றார் வானவர்களே! உங்கள் கருத்துக்கிணங்க, மலையரையன்மகளோடு புணர்ந்து கலித்த மாத்திரத்தேஜஸ்ஸை யானே தரித்துக்கொள்ளுகிறேன். நீங்களெல்லீரும் மனங்களிக்கக்கடவீர்கள் ஒருகால் என்தேஜஸ்ஸு சிதறிவிழுமாயின் அதைத்தரிப்பவர் யாவரென்றுரைக்க, அதுகேட்டுத் தேவர்கள் மீளவும் சங்கரரைநோக்கிச் சாம்பசிவா! உம்முடைய வீரியம் சிதறுமாகில் அதனை இப்பூமி தரிக்குமென்றுசொல்ல, அவ்வாறே வாமதேவருஞ் சிதறியவீரியத்தைப் பூமிமீது விட்டுவிட்டார் அது பூமிமுழுதும் பரவுதலால் பூமி கொதிக்கக்கண்டு, தேவர்கள் இவ்வீரியத்தைத் தரணியால் தரிக்கமுடியாதென்றெண்ணி, அக்கினியை நோக்கி, ஹுதாசனா நீ வாயுவுடன் கூடி இத்தேஜஸ்ஸைத் தாங்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அக்கினி அதிலனுப்பிரவேசஞ்செய்தமையால் அது ஒரு சுவேதபருப்பதமாகவும், திவ்வியநாணற்காடாகவும் பரிணமித்துச் சூரியனைப்போலவும், அக்கினியைப்போலவும், மிகுந்தஒளியுள்ளதாயிருந்தது. அச்சரவணத்திலேயே மஹாகாந்தியுடையானாய், கிருத்திகாநக்ஷத்திரமாகிய அறுமீன்கள் பாலூட்டி வளர்த்தமையால் கார்த்திகேயனென்னப்படும், அக்கினிகுமாரனாகிய ஷண்முகன்பிறந்தனன். உமாமஹேசுவரர்களுடைய புணர்ச்சிக்கு இடையூறு தாங்கள்செய்த காரணத்தால் அவ்விருவரும் தங்கள்மேல் சீற

றங்கொள்ளாதபடி தேவர்கள் பூஜித்துத் துதித்தனர்கள். அங்ஙனம் அக் கடவுளர் செய்தும், பார்வதிதேவி கோபந்தணியாமல் அமரர்களை நோக்கி, நீங்கள் எனக்குப் பிள்ளைப்பேறுண்டாகாதபடி தடைசெய்தமையால், உங்களுக்கு உங்கள் பத்தினிமார்களிடத்துப் பிள்ளைப்பேறுண்டாகாமற் போகக் கடவது இதுபற்றி உங்கள் மனைவியர்கள் இதுமுதல் மலடிகளாகக் கடவர் களென்று சாபமிட்டு, பூமியை நோக்கி, பூமியே? எனக்கு மகப்பேறுண்டாவதைத் தடுத்து என் பர்த்தாவின் வீரியத்தை நீ தரித்தபடியால் நீ பல் பலவுருப்பெற்றவளாயும், பல அரசர்களால் ஆளப்பட்டவளாயும், மலடியாயும் இருக்கக்கடவையென்று சபித்தனள். இதைக்கேட்டு, நாணமுற்று வருந்துகின்ற தேவர்களுக்கு விடைகொடுத்து, பார்வதிதேவியுடன் சங்கரரும் அவ்விமயமலையின் மேற்குத்திசையிற் சென்று, அதன் வடபுறத்தில் கடும்பெருந் தவஞ்செய்யலாயினர். ஸ்ரீரகுகுலதிலகா! பார்வதிதேவி கதையைப் பரக்க வுரைத்தேனன்றோ? இனிக் கங்கையாற்றின் மஹிமையை விரித்துச்சொல்வேன்.

பாலகாண்டத்தில் முப்பத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தேழாவது சருக்கம்.

### குமாரஸ்வாமியின் உற்பத்தி

மேற்கூறியபடி சிவன் பார்வதியோடு தவஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து நம்முடைய படைகளைப

---

ஸ்ரீராமசந்திரர் கங்கையின் கதையைக் கேட்கக் கௌசிகர் பார்வதியின் கதையை இயம்பியது யாதோ எனின், மேலே கங்காநதியின் சரித்திரத்துக்கு இது வேண்டியிருக்கின்றமைபற்றி, ஸ்ரீராமபிரான் கேட்டிலரெனினும் இஃதை முன்பு கூறிப் பின்பு அஃதையுரைத்தாரெனக்கொள்க. சிலவைதிக புராணங்கள் ஸ்ரீமஹாவிஷ்ணு உலகமளக்கும்போது பிரஹ்மாண்டம் பேதித்து அளகநந்தையின் நீர்பெருகி, கங்கையாயிற்றென்றும், சில சாத்விக புராணங்கள் அப்பொழுது பிரஹ்மதேவர் தன் கமண்டலுஜலத்தால் திரிவிக்கிரமன் திருவடியைத் துலக்க அந்நீர்பெருகிக் கங்கையாயிற்றென்றும்,—சில உத்தமபுராணங்கள் ஸ்ரீமஹாவிஷ்ணு திருவடி நகத்தினின்றும் கங்காநதி பிறந்ததென்றுங் கூறுகின்றன. இங்கு இமயமலைக்குப் பிறந்தாளென்னல் யாதோ எனின், கல்பபேதங்களில் இவைநடந்தனவென வைதிகர் மூவரும் பரிஹாரஞ்சொல்லுகிறார்கள். அவருள் சிலர் கங்கைக்கே பல அவதாரங்களுண்டென்கிறார்கள். சிலர் அளகநந்தையின் தீர்த்தத்தையே பிரஹ்மதேவர் தம் கடத்திலெடுத்து ஸ்ரீபரந்தாமனுடைய சீர்பாதத்தை விளக்க, அத்தீர்த்தம் அத்திருவடி நகவழியாய்ப் பெருகித் தேவலோகத்தில் இக்கங்கையுடன் கலந்து ஒன்றாயிற்றென்பர்.

பாதுகாக்கவல்ல சேனாபதி நமக்குவேண்டுமே, பார்வதியின் சாபத்தால் நமக்கும் புத்திரப்பேறில்லையே என்செய்வோமென்ப பலபல தெரியா லாராய்ந்து, சதுர்முகனிடஞ்சென்று, அக்கமலாசனனை வணங்கி ஸ்வாமி! பிதாமஹரே எங்களுக்குச் சேனாபதியாக உம்மால் ஏற்படுத்தப்பட்ட மஹாதேவர் பார்வதியுடன் இடைவிடாது தவஞ்செய்யா நின்றார். இதன் மேல் யாங்கள் செய்யுங்காரியத்தை அருளிச்செய்யவேண்டும். தேவரே நீங்களுக்குத் தஞ்சம், தேவரே யாவும் அறிந்தவரென்று விண்ணப்பஞ் செய்து கொண்டனர்கள். அதுகேட்டுத் திசைமுகக்கடவுள் தேவர்களை நோக்கி, யருளிச்செய்கின்றார் அமரர்களே! உங்களுக்குப் பிள்ளையுண்டாவ தில்லையென்ப பார்வதியிட்ட சாபந் தப்புவதில்லை; இவ்வாகாய கங்கையி னிடத்தில் அக்கினிதேவன் சங்கரனுடைய வீரியத்தைவிட்டு, அதைக் கொண்டு ஒருபுத்திரனை யுண்டுபண்ணக்கடவன் இதைக் கங்காதேவியும் அங்கீகாரஞ்செய்வள், பார்வதிதேவியும் அப்புதல்வனை உகந்தெடுப்பாள் அச்சிறுவனே உங்களுக்குச் சேனாபதியாகக்கடவன். சந்தேகமில்லை யென்று சொல்லியருளக் கேட்டுத் தேவர்கள் யாவரும் பங்கஜனைவணங் கிப் பூஜித்து அவரிடத்தில் விடைபெற்று மீண்டு இமயமலை சேர்ந்து அக்கினிதேவனை நோக்கி, நான்முகக்கடவுள் கட்டளைப்படி சங்கரனுசுக் கிலத்தைக் கங்கையினிடத்தில் விடவேண்டுமென்று வேண்டிக்கொண்ட னர். அவ்வேண்டுகோளின்படியே செய்வேனென்று தீக்கடவுள் அவர் களுக்குறுதிகூறிக் கங்கையாற்றை அடைந்து கங்காதேவி! தேவர்களு க்கு ஹிதார்த்தமாய் என்னிடத்திலிருக்கின்ற சாம்பசிவனுடைய இந்திரி பத்தைப்பெற்றுக் கருப்பந்தரிக்கவேண்டுமென்று சொல்ல, அதைக் கேட்டுக் கங்கையும் பெண்ணுருக்கொண்டு நிற்க, அக்கினி அவளிடத்து அவ்வீரியத்தைவிட, அது எல்லாவிடத்திலும் பரவி வெள்ளங்களெல்லாம் நிறைந்துவிட, அதைத்தரிக்கமாட்டாமல் கங்காதேவி அக்கினிதேவனைப் பார்த்துச்சொல்லுகின்றாள் தேவதூதா! உன்னுடைய தேஜஸ்ஸைத் தரிக்க பான வல்லவளன்று அத்தேஜஸ்ஸு என்னைக்கொளுத்திவிடுகிறதென்று வியாகுலத்தோடு சொல்லக்கேட்டு, இக்கருப்பத்தை இப்பனிமலையினரு கில விட்டுவிடென்று அக்கினிதேவன் சொல்லினன். அவ்வாறே கங்காநதி கன வெள்ளத்தால் அக்கருவையொதுக்கிவிட்டாள். அக்கருப்பின் உப்புக் கூறு எஃகாகவும், செம்பாகவும், மலக்கூறு தகரமாகவும், ஈயமாகவும் மாறின, அவைகளே இத்தரணியை யடைந்து நானாவிதமாகிய தாதுக் களுமாயின. மேலும் அக்கருவை விழுத்தினவுடன் அதன் ஒளியால் சூழப்பட்ட அச்சுவேத பருப்பதத்தைச் சார்ந்த பூமிமுழுதும் சுவர் ணமாகியதனால் ஜாதரூபமெனனும் பெயர்பெற்று அக்கினிக்கு நிகரா கிய காந்தியுள்ளதாயிற்று, அங்குள்ள புல் மரம் செடி கொடி புதல் முதலிய யாவும் பொன்னாயின. பின் அங்குப்பிறந்த குமாரனை இந்திரன் முதலிய தேவர்கள் நோக்கி, அக்குமாரனுக்குப் பாலகொடுப்பதற்காகக்

கிருத்திகாதேவிகளை யேவ, அவர்கள் இப்பிள்ளை யெங்களுக்குப் புத்திரனாகவேண்டுமென அமரர்களிடத்தில் உறுதிகேட்கையில், அங்ஙனமே இதன் கார்த்திகேயனென்று மூன்றுலோகங்களிலும் கீர்த்தியடையக்கடவனென்று வரங்கொடுத்தனர்கள். கழுவிவீழ்ந்த இக்கருவை அக்கிருத்திகாதேவிகள் பாலகொடுத்து வளர்த்துவந்தனர் இக்கரு முற்றும் ஓரிடத்திலும் நிலைபெறாமல ஸ்கலிதமானபடியால இப்பிள்ளைக்குத் தேவர்கள் ஸ்கந்தனென்றும் பெயரிட்டனர்கள் இவ்விதமாக இப்பிள்ளைபிறந்தவுடன் கிருத்திகாதேவிகள் அறுவருடைய முலையையும் ஆறுமுகம்பெற்றுக்கொண்டு பாலுண்டமையால் ஒருதினத்திலேயே மிகப்பலமுள்ளவனாகப் பருத்து வளர்ந்து சகல தானவகணங்களையும் வென்றான். அதுகண்டு உடனே அக்கினிமுதலிய தேவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து இவனைத் தேவசேனைக்குச் சேனாபதியாக அபிஷேகஞ் செய்தார்கள் சக்கரவர்த்தி திருக்குமாரரே! இவ்வண்ணம் கங்காமஹிமையின் விரிவையும், மங்களகரமாகிய குமாரஸ்வாமியின் உற்பத்தியையுங் கூறினேன் ஸ்ரீகாகுத்தரே! இக்கார்த்திகேயனிடத்தில் யாவன் பக்திசெய்கிறானோ? அவன் நெடுநாள் வாழ்ந்திருந்து பிள்ளை பேரன்மார்களுடன் குமாரஸ்வாமியின் உலகத்தை யடைவான்.

பாலகாண்டத்தில் முப்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது சருக்கம்.

*பிருகுமஹாரிஷி சகரசக்கரவர்த்திக்குப் பிள்ளைவரந்தந்தது.*

விசுவாமித்திரமஹாமுனிவர் இவ்வாறு இக்கதையை யுரைத்து, ஸ்ரீராமபிரானை நோக்கி, மேலும் அருளிச்செய்கிறார் ஸ்ரீ அயிந்துமதேய நந்தனே! முற்காலத்தில் அயோத்திமாநகரில் சகரசக்கரவர்த்தியென்பவர் உலகாண்டுவந்தார் அவருக்கு இரண்டுபத்தினிமாருளர்; மூத்தவளாகிய கேசினியென்பவள் விதர்ப்பராஜன் பெண், இளையாளாகிய ஸுமதியென்பவள் அரிஷ்டநேமியென்பவன்பெண், பிள்ளையில்லாமையால் இவ்விருவரோடு கூடி இமயமலையில் பிருகுமஹாரிஷி தவஞ்செய்துகொண்டிருந்த தபோவனத்தையடைந்து, நூறுவருஷம் ஸகரபூபதியார் தவஞ்செய்தார். பின்பு சத்தியவாதியாகிய பிருகுமஹாமுனிவர் சகரசக்கரவர்த்தியாருடைய கருத்தையுணர்ந்து அவரைநோக்கி, கோதிலாக் குணமணியாகிய மஹாராஜரே! உமக்குப் பல சிறுவர்கள் உண்டாவார்கள். அவர

களால் உலகத்தில் பிறர்பெறவொண்ணாத புகழ்ச்சியடைவீர். உம்முடைய பத்தினிகளுள் ஒருத்திக்கு ஒருபிள்ளையும், மற்றொருத்திக்கு அறுபதினாயிரம் பிள்ளைகளும் பிறப்பார்களென்று வரங்கொடுத்தார். அதுகேட்டுச் சகரமகாராஜா தேவிகளிருவரும் அம்முனிவரைக் கைகூப்பிப் பணிவாகத் தண்டமிட்டு ஸ்வாமீ! ஒருபிள்ளையாருக்கு? பலபிள்ளையாருக்கு? இதை யருளிச்செய்யவேண்டுமென்று வினவ, யாருக்கு எந்தவரம் வேண்டுமோ அப்படியே பிள்ளைகள் தோன்றுவார்கள்; உங்கள் விருப்பம் எத்தன்மையதென்று பிருகுமஹாரிஷி கேட்டருளினார். அதுகேட்டுக் கேசினி யொருபிள்ளையையும், பக்ஷிராஜன ஸஹோதரியாகிய ஸுமதி பலபிள்ளைகளையும் வரமாகப் பெற்றுக்கொண்டார்கள். பின்பு சகரசக்ரவர்த்தியார் அவ்விருந்தவரை வலம்வந்து வந்தனஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு, மனைவிமாருடன் தம்நகரமே வந்து சேர்ந்தார். அநந்தரம் சிலநாள் சென்றபின் இருவரும் கருக்கொண்டு கேசினி, அஸமஞ்ஜஸனென்னும் பிள்ளையையும்; ஸுமதி சுரைக்காய்போன்ற ஒரு கருப்பப் பிண்டத்தையும் பெற்றார்கள். பின்பு அப்பிண்டம் உடைந்து அதிலிருந்து அறுபதினாயிரங்குமாரர்கள் பிறந்தார்கள். இவர்களைத் தாதிமார்களொடு நெய்க்கொப்பரையிலிட்டு வளர்த்துவர எல்லோரும் நாள் செல்லச் செல்ல யௌவனவயதுபெற்று, ரூபபலபராக்கிரமமுள்ளவர்களானார்கள். பட்டத்துக்குரிய அஸமஞ்ஜஸனென்பவன் அறிவழிந்து, நகரிலுள்ள சிறுவர்களெல்லோரையுமெடுத்துச் சரயூநதியில் எறிந்து,அவர்கள் நீர்குடித்து முழுகி இறக்கையில் பார்த்துப்பார்த்து நகைத்துக்கொண்டு, இவ்விளையாட்டால் சாதுஜனங்களுக்கெல்லாம் பீடையுண்டாகச்செய்து வந்தமைபற்றி அப்புத்திரனைச் சகரமஹாராஜா நாட்டினின்றுந் துரத்திக் காட்டிற் செல்லவிட்டனர். அவ்வஸமஞ்ஜஸன் புத்திரன் அஞ்சுமானென்பவன் மிக்க நற்குண நற்செய்கையுள்ளவனாகி, யாவர்க்கும் நண்பனாக விருந்தான். இங்ஙனம் நாள்கள் சில செல்லாநிற்கையில் சகரசக்கரவர்த்தியார்க்கு அசுவமேதயாகஞ் செய்யவேண்டுமென ஓர்விருப்பம் நேர்ந்திட்டேனனாகி, வசிஷ்டாமுதலிய மஹரிஷிகளோடும், மந்திரிகளோடும், நன்காராய்ந்து துணிந்துகொண்டு விதிப்படி யாகஞ்செய்யலாயினர்.

பாலகாண்டத்தில் முப்பத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று.

# முப்பத்தொன்பதாவது சருக்கம்.

## சகரசக்கரவர்த்தியார் அசுவமேதயாகஞ்செய்தது.

கௌசிகமஹாமுனி இவ்வாறுரைத்துக் கதையைமுடித்தவுடன், ஸ்ரீகௌசல்யாகுமாரர் அதுகேட்டருளி மீண்டும், எரிகின்ற தணல்போலவிளங்குகின்ற அம்முனிவரைநோக்கி, ஸ்வாமீ! இக்கதையை விரிவாகக்கேட்கவிரும்புகின்றேன். எங்களுக்கு முன்னோராகிய அந்தச்சகரசக்கரவர்த்தி அசுவமேதம் எவ்வண்ணஞ்செய்தார். அஃதருளிச்செய்யவேண்டுமென்று வினவியருளினார். காதிநந்தனர் அதுகேட்டு ஸ்ரீரவிகுலோத்தமா! சகரமஹாராஜருடையகதையைவிரித்துரைக்கின்றேன் கேளாயென்று சொல்லத்தொடங்கினார். சிவனுக்கு மாமனாகிய இமயமென்னும் மலையரையன் விந்தியமலையின் அருகில் அதற்கு நிகராக உயர்ந்திருக்கின்றது; அம்மலை இரண்டினடுவில் அச்சகரமஹாராஜனுடைய யாகம் நடந்தது, அவ்விடமே யாகஞ்செய்தற்குரிய சிறந்தநிலம். அவ்யாகத்தின்பொருட்டு விட்டகுதிரையைக்காப்பதற்குப் பாட்டனார் கட்டளையின்படி அம்சுமான் என்பவன் கவசம்பூண்டு விற்பிடித்துக்கொண்டு அக்குதிரையை மிகப்பாதுகாத்துக்கொண்டு நடந்தான். அப்பொழுது தேவேந்திரன் இச்சகரசக்கரவர்த்தி நம்மைப்போலச் சதக்கிருதுவாகிவிடுகிறானேயென்று மனம்பொறாமல் பருவதினத்தில் ராக்ஷசவேடங்கொண்டு மாயையால் ஒருவருக்குந்தெரியாமல் அவ்வசுவத்தைப் பிடித்துக்கொண்டுபோய்விட்டான். வசிஷ்டர் முதலிய முனிசிரேஷ்டர்கள் அதைக்கண்ணுற்றுச் சகரசக்கரவர்த்தியாரிடத்துச்சொல்லுகிறார்கள்: மகாராஜரே! இவ்வசுவமேதபரியை யாவனோஒருவன் கைப்பற்றிக்கொண்டு போகிறான். விரையில் அவனை வென்று குதிரையைமீட்டுக்கொண்டு வரல்வேண்டும்.

యజ్ఞచ్ఛిద్రంభవత్యేతత్సర్వేషామశివాయనః
తత్తథాక్రియతాంరాజన్యథాచ్ఛిద్రఃక్రతుర్భవేత్

யஜ்ஞச்சித்ரம்பவத்யேதத் ஸர்வேஷாமசிவாயநஃ
தத்ததாக்ரியதாம்ராஜ யதாச்சித்ரஃ க்ரதுர்பவேத்

இல்லாவிடின் இவ்யாகங் கெட்டுவிடுகிறபடியால் எல்லோர்க்குந் தீங்குண்டாகும். ஆதலால், யாகம் தடையின்றிமுடியும்படி நீர்முயலவேண்டுமெனக் கூறினார்கள். அப்புரோஹிதர்சொல்லக்கேட்டுச் சகரபூபாலர் அறுபதினாயிரம் தநயர்களையும் அழைத்துச் சொல்லியதாவது:—குமாரர்களே! யான் பேரனுடன் தீக்ஷைவஹித்திருக்கிறேன். ஆதலால், நீங்களெல்லீரும் புறப்பட்டு ஒவ்வொரு காததூரம் தனித்தனியாராய்ந்து, அத்துரகத்தையும், அதை அபஹரித்த இராக்கதனையுந் தேடக்கடவீர்கள். அத்துரகத்

தைக் கொண்டுபோன இடத்தையோ யாம் அறியோம். நீங்கள் பூமிமுழுதும் தேடி அகப்படாவிட்டால், பூதலத்தையும் அகழ்ந்தும் அகப்படுகிறவரையில் தோண்டக்கடவீர்கள். உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது. நீங்கள் வருகிறவரையில் யான் தீக்ஷையைவிடாமல் இவ்விடத்திலேயே யிருக்கி றேனென்று கட்டளையிட்டனர். அக்கட்டளையை மேற்கொண்ட அறுபதி னாயிரம் குமாரர்களும் மனமகிழ்ந்தவர்களாகிப் புறப்பட்டுத் தரணிமுழு தும் தேடி ஹயத்தைக் காணாமல் ஒவ்வொருவர் ஒவ்வொருகாதம் வீதமாக, அறுபதினாயிரம் காதமவரையில் வச்சிராயுதம்போலக் கடினமாகிய நகங் களாலும், சூலங்களாலும் கலப்பைகளாலும் அகழ்ந்தார்கள். இவ்வண் ணம் இவர்கள் அகழ்கையில் பூமி கிடுகிடென்று பேரிரைச்சலிட்டது. அதனகிலிருந்த நாக ராக்ஷஸாஸுராதிகளாகிய சேதனர்கள் புண்பட்டுக் கதறினார்கள். இவ்வாறு இவர்கள் இஜ்ஜம்பூத்வீபம் முழுதுந் தோண் டிக்கொண்டே அவனிமுழுதுந் தேடினார்கள். இதுகண்டு தேவகந்தர்வ தானவ பன்னகாதிகள் பயமுற்றுப் பிதாமஹரிடம் சென்று அவரை வணங்கித் துதிசெய்து, ஸ்வாமீ சதுர்முகக்கடவுளே! ஸகரசக்கரவர்த்தி குமாரர்களால் இத்தரணிமுழுதும் அகழப்படுகின்றது, பாதாளவாசிகளா கிய பல உயிர்த்தொகைகளும் கொல்லப்படுகின்றன. இவன்தான் எங்களு டைய யாகத்தைக் கெடுத்து வாஜியைக் கவர்ந்துகொண்டு வந்துவிட்டா னென்று எவனைக் கண்ணுற்றபோதிலும் அவனைப் பிடித்துக் கொலை புரிகிறார்கள். இதற்கு உபாயம் தேவரீர் அருளிச்செய்யவேண்டுமென்று முறையிட்டார்கள்.

பாலகாண்டத்தில் முப்பத்தொன்பதாவது சருக்கம்
முற்றிற்று.

## நாற்பதாவது சருக்கம்.

### சகரகுமாரர்கள் கபிலமுனிகோபத்தால் எரிந்துவிட்டது.

வேதாவும் அந்த வானவர் வார்த்தையைக்கேட்டுச் சகரதனயர்கள் நம்மையுங் கொல்லுவார்களென்று நடுங்குகிற அமரர்களை நோக்கி, உரைக்கின்றார் விண்ணவரீர்!—

యస్యేయం వసుధా కృత్స్నా వాసుదేవస్య ధీమతః
కాపిలం రూపమాస్థాయ ధారయత్యనిశం ధరాం.

யஸ்யேயம் வஸுதா க்ருத்ஸ்நா வாஸுதேவஸ்ய தீமத:
காபிலம் ரூபமாஸ்தாய தாரயத்யநிசந்தராம்

இவ்வண்டமும், இதுபோன்ற மற்றெல்லா அண்டங்களும் பராத்பர ராகிய ஸ்ரீமந்நாராயணருடையன அல்லவா? அமுதக்கடவுளானவர் இப்

பூதலத்துக்குத் தீங்கனுகாமல் ஸ்ரீகபிலாவதாரஞ்செய்து யோகமஹிமை யால், உலகமனைத்தும் பாதுகாத்துவருகிறார். அவருடைய கோபாக்கினி யால் அசசகரந்தனர்கள் எரிந்துவிடப்போகிறார்கள். இவர்கள் இப்பூமி யைத் தோண்டுவதும் இவர் ஸ்ரீகபிலர்கோபத்தாலிறப்பதும் அத்தெய்வசெயலே யென்று முன்னமே யான் ஞானதிருஷ்டியால் அறிந்திருக்கிறேனென்று மொழிந்தனர். வசுருத்திராதித்தியாசுவினிகளாகிய முப்பத்துமூவர் முதலிய தேவர்கள் வாணிமணாளன் வாக்கியத்தைக்கேட்டுப் பெருமகிழ்ச்சிகொண்டு அவரிடத்தில் விடைபெற்றுத் திரும்பித் தத்த மிருப்பிடம்வந்து சேர்ந்தனர்கள்.

இங்கு ஸகரகுமாரர்களும் பேரிடிபோல் ஒலியெழும்பும்படி இளைந்து பாரமுழுதும் பிளந்து பூமியை வலமாகச் சுற்றிப்பார்த்தும் பரிமாவைக் காணாமல் மீண்டு பிதாவினிடம்வந்து விண்ணப்பஞ்செய்தார்கள். ஸ்வாமீ! நாங்கள் தரணியெங்குந்திரிந்து, செருக்குள்ள தேவதானவ ராக்ஷஸ பிசாச கின்னர பன்னகாதிகளையும் பிடித்துக்கொண்டே முழுதுந் தேடிப்பார்த்தோம். அச்சுதிரையைக் கண்டோமில்லை, அதை யபஹாரஞ்செய்தவனையும் கண்டிலோம். யாங்கள் என்செய்வோம் தேவருக்கு மங்களமுண்டாகக் கடவது. இவ்விஷயத்தில் தேவர் தகுந்த யோசனைசெய்யவேண்டுமெனச் சிறுவர்கள் சொல்லக்கேட்டுச் சகரசக்கரவர்த்தி சினங்கொண்டு, அவர்களைநோக்கி; குமாரர்களே! நீங்கள் அதிகசூரர்களாயிருந்தும், கருதிச்சென்ற வினையை முடிக்குந் திறனில்லாராயவாளர் மீளுதல்தகுமோ? நீங்கள் மீண்டுசென்று அவ்வசுவத்தையும், அதைக்கவர்ந்து சென்றவனையும் கண்டு பிடிக்கிறவரையில் பூமியை அகழ்க்கடவீர்கள். உங்களுக்கு மங்களமுண்டாகுக, நீங்கள் செல்லுங்காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு மீளக்கடவீர்களென்று ஆக்ஞைசெய்தனர். தந்தையின் மொழியைக்கேட்டு அவர்களெல்லோரும் மீண்டு விரைந்துவந்து பண்டையவண்ணம் பூமியைத் தோண்டுகையில் அங்கு மலைபோன்ற விரூபாக்ஷமென்கிற திக்கஜத்தைக் கண்டனர்கள். அத்திக்கஜம், மலை காடு கடலோடுகூடிய இப்பூமியைச் சிரத்தில் தாங்கிக்கொண்டிருக்கிறது; அது பருவகாலங்களில் எப்பொழுது இளைப்பாறுவதற்காகத் தலையை அசைக்குமோ? அப்பொழுது பூகம்பமுண்டாகும்; அவ்வாரணத்தை அவர்கள் வலஞ்செய்து அதை வியந்து புகழ்ந்து கீழ்த்திசையினின்று தென்றிசைவரையும் பூமியைப் பிளந்துசென்று அங்கு மஹாபத்மமென்னும் திக்கஜத்தைக்கண்டு வியப்படைந்து, அதையும் வலஞ்செய்து, மேற்றிசைநோக்கிப் பூமியைப்பிளந்து சென்று, அங்கு ஸௌமனஸமென்னும் திசாகஜத்தைக் கண்ணுற்று, அதையும் வலம்வந்து குசலங்கேட்டு, வடதிசையைநோக்கிப் பூமியைப்பிளந்துபோய்ப் பனிமலைபோல வெண்மையாகிய பத்திரமென்னுந் திக்கியானையைக்கண்டு, அதையும் தழுவி வலம்வந்து, எங்குங் குதிரையைக்காணாமலதிகச் சினங்கொண்டு மறுபடியும் வடகிழக்காகப் பூமியைப்பிளந்து சென்று அங்கு ஸ்ரீவாசுதேவ

ராகிய ஸ்ரீகபிலமுனிவரையும், அவரருகில் மேய்ந்துகொண்டிருக்கிற அசுவமேதக்குதிரையையுங் காணுதலும் உள்ளத்தில் பெருமகிழ்வுகொண்டு, யககாரணாகிய அந்தக் கபிலமுனிவரே தங்கள் துரகத்தை வஞ்சனைசெய்துகொண்டு வந்துவிட்டதாக எண்ணிச் சினமூளமூளக் கண்கள்சிவந்து மண்வெட்டி, கலப்பை, கலமுதலியவைகளை யெடுத்துக்கொண்டு விரைந்தோடி நெருங்கிக் கபிலபகவானை நோக்கி, மதிகெட்டவனே! நில்நில்! எமது அசுவமேதக்குதிரையை நீயே களவாடி வந்துவிட்டாய்; எங்களைச் சகரதனயர்களென அறியென்று, அவ்வரும்பெருந்தவச்செல்வனை அவமதித்துவெருட்டினார்கள். அக்கணையில் தவநிதியாகிய ஸ்ரீகபிலபகவான் விழித்து ஒரு ஹுங்காரஞ்செய்ததும், அறுபதினாயிரவர்களும் எரிந்து சாம்பலாய் விட்டனர்கள்.

பாலகாண்டத்தில் நாற்பதாவது சருக்கம் முற்றிற்று.

## நாற்பத்தொன்றாவது சருக்கம்.

சகரசக்கரவர்த்தியார் யாகத்தை முடித்தது.

இது நடந்தபின் சகரசக்கரவர்த்தியார் பலநாட்கழிந்தும் சிறுவர்கள் பெயர்த்து வாராக்காரணத்தால் ஐயங்கொண்டு, தம்பேரனாகிய அஞ்சுமானையழைத்துச் சிரஞ்சீவி! இதுவரையும் உன் சிறியதந்தைகள் வாராமையால் நீ ஆயுதபாணியாகச்சென்று பகைஞர்களைவென்றும், பெரியோர்களை வணங்கியும், அங்கங்குத்தக்கபடி நடந்து சிறியதந்தைகள் சென்ற இடத்தையும் தெரிந்துகொண்டு அசுவமேதக்குதிரையைக்கண்டு பிடித்துக்கொண்டு வரக்கடவை. நின்னாலேயே என்யாகம் முடியவேண்டுமென வுரைத்தனர். அதைச்செவியுற்ற அஞ்சுமானும் வாள், கேடயம், வில் முதலியவற்றை எடுத்துக்கொண்டு உடனே புறப்பட்டு முழுதுஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டே ஸுமதிகுமாரர்கள் தோண்டியிருக்கிறவழியே வந்து தேவ தானவ ராக்ஷச பிசாச பன்னகாதிகளால் பூஜிக்கப்பட்ட திக்கஜங்களைக்கண்டு வலஞ்செய்து யோகக்ஷேமம் விசாரித்துத் திக்கஜங்களே! என்பாட்டனார் அசுவமேதப் பாய்மாவைத் தேடிக்கொண்டு என் சிறியதந்தைகள் வந்தார்கள். அவர்களையும் அக்குதிரையையும் நீங்கள் கண்டீர்களோவென்று கேட்டான். அந்தத் திக்கரிகளும் அஞ்சுமானே! நீ க்ஷேமமாய்த் துரகத்துடன் திரும்பி வருவாயென்று ஆசீர்வதித்தனுப்பின. அஞ்சுமானும் அவ

ழியேசென்று நீறுகிடந்திக்கிடக்கின்ற இளையபிதாக்களையும், அங்கு மேய்ந்துகொண்டிருக்கின்ற அசுவத்தையும்பார்த்து மிக்க சோகங்கொண்டு புலம்பி அழுது ஒருவாறு மனந்தெளிந்து, அவர்களுக்கு நீர்க்கடன் செய்யவேண்டுமெனக்கருதி நீர் தேடுகையில் எங்கும் அகப்படாமையால் அவ்விடத்தினின்று செல்லாநிற்கையில் அங்குத்தன் தந்தைகளுக்கு மாதுலராகிய பக்ஷிராஜனைக்கண்டான். அவரும் இவனைக்கண்டு மஹாபலசாலியாகிய அஞ்சுமானே! நீ சோகமடையற்க; உன் இளையபிதாக்கள் இறந்ததோ உலகத்துக்கெல்லாம் உபகாரமாயிருக்கிறது; இவர்கள் ஸ்ரீகபிலமஹாரிஷிகோபத்தால் எரிந்து இறந்தார்கள். இவர்களுக்கு இவ்வுலோகத்துள்ள நீரால் தருப்பணஞ்செய்வதினால் நல்லகதியுண்டாகமாட்டாது; இமயமலையின் மூத்தபெண்ணாகிய கங்காநதியைத் தேவலோகத்தினின்று இங்கேகொண்டுவந்து அந்நீரை இந்நீற்றின்மேற் படிவித்து அந்நதியிலேயே தருப்பணஞ்செய்தால் இவ்வறுபதினாயிரவர்களும் சுவர்க்கலோகத்தை யடைவார்கள். இவ்வளவுமகிமை அக்கங்கைக்கேயல்லது மற்ற நதிகளுக்குக்கிடையாது; அதற்குத்தக்க முயற்சிசெய்யவேண்டும். இப்பொழுது இப்பரிமாவைப்பற்றிக்கொண்டுபோய் உன்பிதாமகருடைய யாகத்தை முடிப்பிக்கக்கடவையென்று கட்டளையிட்டனர். அஞ்சுமானும் அதைக்கேட்டு விரைந்துவந்து, அசுவத்தைப்பற்றி மீண்டுவந்து முதாதையாரிடத்து நடந்தவண்ணம் யாவற்றையும் அறிவித்தனன். அதுகேட்டுச் சகரமஹாராஜரும் புத்திரசோகத்தால் மிகுதியுங்கலங்கி, ஒருவாறு தணிந்து, அவ்யாகத்தை விதிப்படிமுடித்து அயோத்திக்குவந்து கங்கைகொண்டுவரும்உபாயம் இன்னதெனத்தோன்றாமலே முப்பதினாயிரவருஷம் உலகத்தையாண்டு தேவலோகத்தை யடைந்தார்.

பாலகாண்டத்தில் நாற்பத்தொன்றாவது சருக்கம்
முற்றிற்று.

## நாற்பத்திரண்டாவது சருக்கம்.

### பகீரதமஹாராஜா தவஞ்செய்தமை.

ஸகரசக்கரவர்த்தியார் சுவர்க்கமடைந்தபின் சகல ஜனங்களாலும் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்ற அஞ்சுமானும் அரசநீதிவழுவாமல் தேசத்தைப் பரிபாலனஞ்செய்துவருகையில் சிலநாள் சென்றபின்னர்த் தனக்குப்பிறந்த திலீபமஹாராஜருக்குத் தருந்தவயதுவந்ததைக்கண்டு பட்டங்கட்டிவிட்டுக் கங்கையைக்கொண்டு வருவதற்காகப் பாவனமாகிய இமயமலையின் சிகரத்தில் முப்பத்தீராயிரவருஷங் கடினதவஞ்செய்தும், தமெண்ணமுற்றுப்பெறாமல் சுவர்க்கமடைந்தனர். திலீபமஹாராஜரும் தம் சிறியபாட்டனமார்களுக்கு மரணநேர்ந்தசெய்தியைக் கேள்வியுற்றுத்

துயர்க்கடலில் ஆழ்ந்த தேவர்களை எவ்வாறு இங்கிவ்வுலகில் இறக்கும்? அந்நதியின் நீரால் அவர்களுக்கு எங்ஙனம் நீர்க்கடன் முடித்தல் கூடுமென்று நிரந்தரஞ் சிந்தாகுலராய், நிஷ்டைகுலையாமல் பற்பல யாகங்களையுஞ் செய்துகொண்டு, முப்பதினாயிரமாண்டு அரசுபுரிந்து, அப்புத்திரராகிய பகீரதனுக்கு முடிசூடிக் கங்கைகொண்டுவரும் உபாயமொன்றுந் தோன்றாமல் மனக்கவலையாலே மேலாய தாம்செய்த புண்ணியம் வழியாகச் சுவர்க்கமே போய்ச் சேர்ந்தனர்.

பகீரதமஹாராஜரும் தமக்குப் பிள்ளைபிறந்தபின் அவனுக்கு முடியைச் சூட்டுவித்துத் தவஞ்செய்யவேண்டுமென்று நெடுநாள் கருதிக்கொண்டிருந்தும் பிள்ளைபிறவாமையால், ராஜ்ஜியத்தை மந்திரிகள்வசம் ஒப்புவித்துக் கோகர்ண மலைச்சாரலைச் சேர்ந்து நான்குபுறத்திலுந் தீயை வளர்த்து நடுவில் நின்று கதிரவனை நோக்கிக்கொண்டு கரங்களை உயர்த்தி மாசத்துக்கொருமுறை உணவுண்டு, இங்ஙனம் அநேகமாயிரம் ஆண்டு தவத்திலிருந்தனர். அந்தவுலகங்களுக்குந் தந்தையாகிய சதுர்முகக்கடவுள் இவர்செய்யுந் தவத்திற்குகந்தருளிச் சகல தேவகணங்களோடு கூடி இவர்க்குக் கட்புலனாக நின்று, திலீபகுலதீபா! நீசெய்த தவத்தால் யாம் மிகுதியும் உவந்தோம்; உனக்கு வேண்டும் வரத்தைக் கேட்கக்கடவை யென்று அருளிச்செய்ய, பகீரதமஹீபதி அதைச்செவியேற்றுப் பெருமகிழ்வுகொண்டு, கமலாசனரை வந்தனஞ்செய்து, சகல லோககர்த்தாவே! தேவா! அடியேனிடத்துக் கருணைகூர்ந்ததும், அடியேன் செய்த தவத்திற்குப் பயன்தருவதும் மெய்ம்மையாயின், வீரகுமாரர்கள் யாவரும் என்கரத்தால் நீர்க்கடன் பெறுதலுமன்றி, அவர்கள் வெந்து வீழ்ந்த சாம்பலில் சுரநதியின் புனல்பெருகி வந்து படிவதனால் அவர்கள் நற்கதியடைதலும் வேண்டும்; இக்ஷ்வாகுவம்சந் தழியாமல் செழிப்பதற்காக அடியேனுக்குப் புத்திரனுமுண்டாகல்வேண்டும். இவ்விரண்டையும் தேவர் அருளிச்செயல் வேண்டுமென விண்ணப்பஞ்செய்தனர். இவ்வாறு விண்ணப்பஞ் செய்துகொண்ட பகீரதர் வாக்கியத்தைத் திருச்செவிசாத்திய திசைமுகக்கடவுள் இக்ஷ்வாகுகுலநந்தனா! நீகேட்ட வரங்களிரண்டும் யாவரும் புகழத்தகுந்தனவே; உன் விருப்பத்தின்படியே வரங்கொடுத்தேன்; உனக்கு மங்களமுண்டாகுக; இமயமலையின் மூத்தமகளாகிய கங்காதேவி உன் எண்ணத்தின்படி கீழே இறங்குவள்; அவளிறங்குவாளாயின் அவளைத் தாங்கப் பூமியால்முடியாது, அவளைத் தாங்கச் சங்கரனாலாகுமே அல்லது மற்றியாவராலுமாகாது; ஆதலால் அவளைத் தாங்கும்படி நீ சூலபாணியையுடன்படுத்திக் கொள்ளக்கடவையென்று அருளிச்செய்து கங்காதேவிக்குங் கட்டளையிட்டுச் சகல தேவகணங்களோடுந் திவ்யலோகத்துக் கெழுந்தருளினர்.

பாலகாண்டத்தில் நாற்பத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

## நாற்பத்துமூன்றாவது சருக்கம்.

### பகீரதர் கங்கையைக்கொணர்ந்தவிதம்

சதுர்முகன் போயருளியபின் பகீரதமஹீபதி தம் பாதப் பெருவிரலினுனியால் தரணியையூன்றிக்கொண்டு ஒருவருடகாலம் உமாநாயகனைக் குறித்துத் தவஞ்செய்ய, உமாபதியுமுகந்து இவனைக் கடாக்ஷித்துப் "பகீரதா! நீ செய்த தவத்தால் யான் மகிழ்ச்சியடைந்தேன்; உன் கருத்துக்கிசையக் கங்காநதியைச் சிரத்தில் தாங்குகின்றேனென்று வரமளித்துக் கங்கையைத் தாங்கும்படி நிற்க, உடனே தேவகங்கையானவள் என்னைத் தாங்க இவன் எவ்வளவு வலியுள்ளவன்? வெள்ளத்தின் வேகத்தால் இச்சங்கரனையும் அடித்துக்கொண்டுபோய்ப் பாதாளத்தில் முழுகிவிடுகிறேனென்று செருக்குக்கொண்டு தடுப்பதற்கரிய ரூபவேகங்கொண்டு நின்மலமாகிய ஜடைமுடிச்சிரத்தில் வீழ்ந்தனள். இவளுடைய எண்ணத்தை ஐமுகனும் அறிந்து, மிகச்சினங்கொண்டு தன் மகிமையால் அவளைப்புறத்தில் தோன்றாதபடிச் சடைக்குள்ளடக்கிவிடுதலும், கங்கையும் இமயமலைபோல விரிவாகிய அச்சடையினின்றும் வெளிப்படப்பலவாக முயன்றும் பயன்படாமையால், அச்சிரத்திலேயே சுழன்று மயங்கிப் பலயாண்டு கழிந்தும் புறத்தே தோன்ற மீட்டாமல் தங்கியிருப்பதைக் கண்டு, பகீரதர் மீண்டுங் கொடுந்தவம்புரிந்து சம்புவைத்துதிசெய்ய, நந்திவாஹனனும் அதற்கு மகிழ்ந்து பரமஹாதேவராலியற்றப்பட்ட பிந்துஸரஸ்ஸு என்னுந் தடாகத்தில் தன் ஜடாமண்டலத்தினின்றும் கங்காநதியைப் பெருகவிட்டனன்.

கங்கையும் அங்கிருந்து எழுபிரிவாகப் பிரிந்துபெருகினள்; அவற்றுள் ஹலாதினீ, பாவனீ, நளினீயென்னப்படும் மூன்றுகங்கைகள் கிழக்காகவும், ஸுசக்ஷு, ஸீதை, சிந்துவென்னப்படும் மூன்றுகங்கைகள் மேற்காகவும், ஏழாவது பகீரதர்பின்னாகவும் பெருகியோடின. அதுகாலையில் பகீரதமஹாராஜரும் சிறந்தகோமீதிலேறி முன்னே நடக்க, இக்கங்கையும் பின்தொடர்ந்து ஆகாசத்தினின்று சங்கரன் சிரத்தில் வீழ்ந்து, அங்கிருந்து பூமியிலும் வீழ்ந்து மிகுதியும் பேரொலியுடையதாய் விரைந்துவருகையில் மீன், ஆமை, முதலை முதலியவைகளால் பூமிமுழுதும் நிறைக்கப்பட்டது. கங்கையின் பெருக்கைக் காணும்படிவந்த தேவ தானவ கந்தருவ யக்ஷ ராக்ஷஸ கின்னர சித்த சாரணாதியர்கள் வந்து கண்டு திகைத்து நின்றனர்கள். அவர்களுக்கு வாஹனங்களாகிய விமானங்களும், துரகங்களும், யானைகளும் அப்பெருவெள்ளத்தி லிழுபட்டுச் சுழன்று நின்றன. அவ்வானவர்கள்பூண்ட பூஷணங்களின் ஒளியால் அங்குள்ள ஆகாயமுற்றும் கோடிசூரியர்கள் உதயமானாற்போல் விளங்கிற்று. அன்றியும் நீரிலிருந்து துள்ளியெழுகின்ற மீன், முதலை இவைகள் சூழ்கின்ற தோற்றத்தால் அவ்விண்டலம் தாரகைகளால்

சுற்றப்பட்டதுபோலத் தோன்றிற்று. வெண்ணிறமாய் மேலெழுகின்ற தரங்கங்களாலும், அங்குத் திரிகின்ற அன்னப்பறவைகளாலும், வானம் நீரற்ற மேகங்களால் கவிந்துகொண்டதுபோல விளங்கியது. அந்நதியின் வெள்ளம் சிலவிடத்தில் விரைவாகவும், சிலவிடத்தில் வளைவாகவும், சிலவிடத்தில் மடிவாகவும், சிலவிடத்தில் உயர்வாகவும், சிலவிடத்தில் தட்டித் தட்டி மந்தமாகவும், சிலவிடத்தில் ஓரிடத்துக்கோரிடத்து இடிபட்டுக் கொண்டும், பலமுறை எழுந்தெழுந்து மடிந்தும், பெருகியும், கலக்கமற்று நின்மலமாகவே விளங்குகிறது.

తత్ర దేవర్షిగంధర్వా వసుధాతలవాసినః
భవాంగపతితం తోయం పవిత్రమితి పస్పృశుః

தத்ர தேவர்ஷிகந்தர்வா வஸுதாதலவாஸிந꞉
பவாங்கபதிதம் தோயம் பவித்ரமிதி பஸ்ப்ருசு꞉

அப்பூதலவாசிகளாகிய தேவகந்தருவர் முதலானோர் இக்கங்கை சங்கரன் சிரத்திலிருந்து விழினும் பவித்திரமுள்ளதன்றோவென, அந்நீரிலாடிப் புனிதராயினார்கள். இஃதன்றியும், சாபத்தால் வானுலகினின்று நீங்கிப் பூலோகத்தையடைந்த சில வானவர்களும் இதில் முழுகிச் சாபந்தீர்ந்து முன்னைப்படி வானுலகையடைந்தனர்கள். இவ்வுலகிலுள்ளவர்களும் தூய்மையதாகிய அத்தண்ணீரில் குளித்துத் தீவினைகளைத் தொலைத்துமகிழ்ந்தனர்கள். பகீரதமகாராஜரும் சிறந்த தேரின்மேல் முன்செல்ல, இக்கங்கையும் அவர் பின்றொடர்ந்து அவர் செல்லுகின்ற வழியைப்பற்றிப் பெருகிவர, தேவாசுர தானவ ராக்ஷஸ கந்தருவ யக்ஷ கின்னர மஹோரகர் முதலானோரும் தேவரிஷி பிரமரிஷி முதலானோரும், ஊர்வசி ரம்பை முதலிய தேவவேசிகளும், மற்றும் நீரினுறையுந் தேவர்களும் இவ்விநோதத்தைநோக்கி, வியப்படைந்து, மகிழ்ந்து இக்கங்கையின் பின்றொடர்ந்து வந்தனர்கள். இவ்வண்ணம்வருகையில் இடைவழியில் யாகஞ்செய்துகொண்டிருந்த ஜஹ்நுமஹாமுனிவராசிரமத்திற் கங்கைபாய்ந்து அங்குள்ள யாவற்றையும் முழுகவிட, அம்முனிவர் இக்கங்கையின் செருக்கையறிந்து, தமது தவத்திறமையால் இக்கங்கையினீர் முழுதும் பானஞ்செய்தனர். பகீரதமஹாராஜர் கங்கையைக் காணாமல், பட்டபாடெல்லாம் பயனற்றனவாயினவேயென்று துயருழந்து வருந்தி, அந்த ஜஹ்நுமஹாமுனிவரை வணங்கி வேண்டிக்கொள்ள, பின்றொடர்ந்துவந்த கடவுளர்களும் அன்புடையாராய், அம்முனிவரை நோக்கித் தபோநிதியே! இப்பகீரதர் இச்சுரநதியைக் கொண்டுவர மிகுதியும் உழந்து முயன்றார். அன்றியும் இஃது லோகோபகாரமாகவுமிருக்கும். ஆதலால் நீர் சினங்கொள்ளாமல் அருள்செய்து இந்நதியை மறுபடியும் புறத்தில்விடக்கடவீர். இக்கங்கை இப்பொழுது உம்மிடத்திலிருந்துவெளி

ப்படுகின்றமையால் இதற்கு ஜாஹ்நவியென்னும் பெயரும் வழங்கக்கடவதென்று கூறி, அவரது சிறந்தசித்தத் தணித்தனர்கள். உடனே அம்முனிவரும் உள்ளமகிழ்ந்து செவிவழியால் இக்கங்கையை ஒழுகவிட்டமையால் அதுமுதல் ஜாஹ்நவியென்று பெயரடைந்து, பகீரதமஹாராஜருக்குப் பின்சென்று கடலிலிறங்கி, அவ்வழியே பாதாளலோகமடைந்து, அங்கு நீற்றினகுவையாகமடிந்திறந்த அறுபதினாயிரம் ஸகரசக்கரவர்த்திநந்தனர்கள்மேல் பாய்ந்து, அந்நீற்றை முற்றும் நனைத்தது; அவர்களுடனே தீவினையடங்கலுந் தொலைந்து நின்மலராகிச் சற்கதிபெற்று மகிழ்ந்தனர்கள்.

பாலகாண்டத்தில் நாற்பத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்பத்துநான்காவது சருக்கம்

கங்கையின் மஹிமையைச்சொல்லி முடித்தது.

அந்தப் பகீரதமஹீபதியும் நீற்றின் திரளாகிய தம் தந்தை தந்தைதந்தைகளைக்குறித்துத் துயரப்படுகையில் இருவருக்குக் கட்புலனாகத்தோன்றித் திசைமுகக்கடவுள் அருளிச்செய்கின்றார். திலீபநந்தன! சகரகுமாரர்களாகிய இவ்வறுபதினாயிரவரும் உத்தாரகனான உன்னால் கரையேற்றப்பட்டவர்களாகிச் சுவர்க்கலோகத்தை யடைந்தனர். இப்பூமியில் அலைகடல் நீரிருக்குமளவும் அவர்களும் விண்ணுலகிலேயே இன்பமுற்றிருப்பார்கள். இக்கங்கையும் உனக்குமூத்தபெண்ணாகிப் பாகீரதியென்று

* இதிற்குறித்த சுலோகத்திற்குச் சிலர் கங்கை அரனசிரத்தில் தரித்தமையால் பவித்திரமாயிற்றெனத் தேவர்கள் இதில் மூழ்கினரென்று பொருளுரைக்கின்றனர். ஸ்ரீபாகவதத்திலும், ஸ்ரீமஹாபாரதத்திலும் ஸ்ரீஹரியினுடைய ஸ்ரீபாதத்தில் துருவன் தரித்துத் தூயதாகிய இக்கங்கையை அரனார் சிரத்தில் தரித்தே புனிதராயினரென்றிருக்கின்றமையால், அப்பொருள் சிறிதும் ஒவ்வாதெனச் சிலர் மறுக்கின்றனர். இக்கங்கை சங்கரனார்சடையில் அடங்கியகாரணத்தால் பரிசிக்கவொண்ணாத அசுத்தமாயினபோதிலும், அச்சடையிலிருந்து பூமியையடைந்து வேகம்பெற்றமையால் (நதீவேகேந சுத்யதி) என்கிற நீதிப்படி இது பரிசுத்தமாயிற்றென்று தேவர்கள் மூழ்கினரென்று சிலர் பொருள்கூறுவர். (ஹேஅங்க) கங்கையினீரே! நீ பதிதம் செவநிர்ம்மாலியமென்று யாவர்க்கும் விலக்காகப் பதிதமாய் விடினும் (பவித்திரம்) பரிசுத்தமாக (பவ) ஆகுக (இதி) என்று, (பஸ்ப்ருசு:) தம்முடைய திருமேனிசம்பந்தத்தை யுண்டுபண்ணினார்களென்று பொருள் கூறுவாருமுளர்.

புகழ்பெற்று இருக்கக்கடவது. உன்னால் இஃது மூவுலகத்திலும் பாய்ந்தமையால் இதற்குத் திரிபதகையென்றும் பெயருள்ளதாகக்கடவது. இங்கு இக்கங்காஜலத்தில் உன் தந்தைகளுக்கு நீர்க்கடன்செய்து பிரதிஜ்ஞையை முடித்துவிட்டுச் சுகித்திருப்பாயாக. இக்கங்கையைக் கொண்டுவர அஞ்சுமானும் திலீபனும் எவ்வகைமுயற்சிசெய்தும் கூறறுப்பெறாமல், உன்னால் நிறைவேறினமையால் இவ்வுலகில் நீமிகுதியும் புகழ்பெற்றுவாழ்க; உனக்கு மங்களமுண்டாகுக; யான் என்னுடைய உலகம்போய்ச் சேர்கிறேன். நீயும் இங்கு ஸ்நானஞ்செய்து புனிதனாகித் தருப்பணஞ்செய்து சுகமாக அயோத்திமாநகரம்போய்ச் சேர்ந்து செங்கோல் நடத்துவாயாக என்று இவ்வாறருளிச்செய்து நான்முகன் தம்முலகத்துக்கெழுந்தருளினர்.

பின்பு பகீரதசக்கரவர்த்தியும் விதிப்படிச் சாகரர்களுக்குத் தருப்பணஞ்செய்து புனிதனாகி, பெருமகிழ்வுகொண்டு தம் நகரம்சேர்ந்து முன்புபோல் அரசுபுரிய, நாடுநகரத்தோர் யாவருங்கண்டு களித்துப்புகழ்ந்தார்கள். கௌசல்யாதேவி குமாரனே? இவ்வண்ணம் தேவநதியின் சரித்திரத்தைச் சுருக்கமாக வகுத்துரைத்தேன். நீ மங்களத்தையடையக் கடவை; உனக்கு மங்களமுண்டாகுக. சந்திப்பொழுது நேர்ந்திருக்கின்றது. அநுஷ்டானஞ்செய்யவேண்டுமாதலால், இனி விளைவுதலொழிக. இக்கங்கையின் சரித்திரத்தை யாவனொருவன் பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் கேட்க உரைக்கின்றானோ? அவனுக்கு வரம்பிலாச் செல்வப்பொருளும், கீர்த்தியும், நன்மக்கட்பேறும், நற்கதியுமுண்டாகும். அவனுடைய பிதாக்களும் தெய்வங்களும் உண்மகிழும்.

ఇదమాఖ్యానమవ్యగ్రో గంగావతరణం శుభం
యశ్శృణోతి స కాకుత్స్థ సర్వాన్కామాన్స వాప్నుయాత్
సర్వేపాపాః ప్రణశ్యంతి ఆయుః కీర్తిశ్చ వర్ధతే

இதமாக்யாநமவ்யக்ரோ கங்காவதரணம் சுபம்
யச்ச்ருணோதி ஸ காகுத்ஸ்த ஸர்வான்காமான்ஸ வாப்னுயாத்
ஸர்வேபாபா: ப்ரணச்யந்தி ஆயு: கீர்த்திச்ச வர்த்தே

கங்காவதாரணமெனனும் இம்மங்களகரமான உபாக்யானத்தை யாவனொருவன் செவியுறுகின்றனனோ? அவன் கோரிக்கை யாவும் ஈடேறும், பாவங்களும் தொலைந்து ஆயிசுங் கீர்த்தியும் வளரும்.

பாலகாண்டத்தில் நாற்பத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்பத்தைந்தாவது சருக்கம்.

### கௌசிகர் கங்கையைக்கடந்து விசாலநகரைப்பற்றி அருளிச்செய்தது.

காதிநந்தனர் அருளிச்செயலைத் திருவுளம்பற்றிச் சக்கரவர்த்தித்திருமகனார் இளையபெருமாளுடன் வியப்படைந்து, மீண்டும் அத்தபோநிதியை நோக்கி, ஸ்வாமீ! தேவரருளிச்செய்த கங்காவதாரணமும், ஸாகரத்தின் நிறைவுங்கேட்டு வியந்தோமென்று புகழ்ந்து, அச்சிந்தையினாலே அன்றிரவைப்போக்கி, மறுநாளுதயம் நித்திரையொழிந்து, செய்கடன்களை முடித்துக்கொண்டு வீற்றிருக்கின்ற கௌசிகமஹாமுனிவரை வணங்கி, ஸ்வாமீ! இவ்விரவு இனிதாகக்கழிந்தது; செவியுறத்தக்க சரித்திரத்தையும் செவியுற்றனம். அதனால் இரவு கணப்பொழுதுபோலக் கழிந்தது. இங்குள்ள முனிவர்கள் தேவர் இங்கெழுந்தருளியிருப்பதை யுணர்ந்து ஓடங்கொண்டுவந்து காத்திருக்கின்றனர். ஆதலின் அதிலேறி இந்நதியைக்கடந்து நடப்போமென்று விண்ணப்பஞ்செய்தனர். அதனைத் திருச்செவிசாத்திய விசுவாமித்திரமஹாரிஷி எழுந்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களோடும், மற்றமுனிவர்களோடும், அந்நாவாயிலேறிக் கங்கையைத்தாண்டி, அக்கரையிலிறங்கி வீற்றிருந்து, எதிரில் விசாலையென்னும் பட்டணத்தைக் கண்ணுற்று, அங்கிருந்து புறப்பட்டு, அமராவதியை நிகர்த்த அந்நகரத்தை நோக்கி எழுந்தருளினர் அப்பொழுது ஸ்ரீராமபிரானார் அந்நகரைக் கடாக்ஷித்துத் தம் ஆசிரியரை நோக்கி, ஸ்வாமீ! இப்பதியில் எவ்வரசன் மரபினருறைகின்றனர் இதைக்கேட்டுணர என்மனம் அவாவுகின்றதென வினவியகாலையில்; கௌசிகமஹாரிஷி அதுகேட்டு விடைகூறுவாராயினர் ஸ்ரீரகுகுலநந்தன! முதலில் இந்திரன் கதையை யுரைத்து, அதைத்தொடர்ந்து இவ்விசாலையின் கதையைப் பின்னருரைக்கின்றேன். கிருதயுகத்தில் திதிபுத்திரர்களாகிய அசுரர்களும் அதிதிபுத்திரர்களாகிய தேவர்களும் மிக்க வலியுடையவர்களாயிருந்து, பிணி பசி மூப்பு இறப்பு அற்று உயிர்வாழவேண்டுமெனக் கருத்துக்கொண்டு, அதற்குத் திருப்பாற்கடலைக்கடந்து அமிர்தமெழச்செய்து பருகவேண்டுமெனத் துணிந்து, மந்தரமலையை மத்தாகநாட்டிப் பன்னக வரசனாகிய வாஸுகியைக் கயிறாகச்சுற்றி ஆயிரவருஷந் திருப்பாற்கடலைக் கடைந்தனர்கள். அப்பொழுது வாஸுகி மிக உடல்வருந்திப் பற்களால் கற்களைக்கடித்து விஷங்களைக் கக்குகையில் அங்கு ஆலாஹலமென்னுங் கொடியவிஷந் தோன்றித் தேவாசுர நராதிகளுள்ள உலகமெல்லாம் பற்றியெரியஅதைப் பொறுக்க வலியற்றவர்களாய்த் தேவர்கள் சங்கரனைச் சரணமடைந்து அடியேங்களைக் காக்கவேண்டுமென்று வேண்டித்துதித்தார்கள்.

ప్రాదురాసీత్తతో౽త్రైవశంఖచక్రధరోహరిః
ఉవాచైనంస్మితంకృత్వారుద్రంశూలభృతంహరిః
దైవతైర్మథ్యమానేతుయత్పూర్వంసముపస్థితం
తత్త్వదీయంహిసురశ్రేష్ఠసురాణామగ్రజో౽సియత్
అగ్రపూజామిమాంమత్వాగృహాణేదంవిషంప్రభో
ఇత్యుక్త్వాసురశ్రేష్ఠస్తత్రైవాంతరధీయత

ப்ராதுராஸீத்ததோத்ரைவ சங்கசக்ரதரோஹரி:
உவாசைநம்ஸ்மிதம்க்ருத்வா ருத்ரம்சூலப்ருதம்ஹரி:
தைவதைர்மத்யமாநேது யத்பூர்வம் ஸமுபஸ்திதம்
தத்வதீயம்ஹிஸுரச்ரேஷ்ட ஸுராணாமக்ரஜோஸியத்
அக்ரபூஜாமிமாம்மத்வா க்ருஹாணேதம்விஷம்ப்ரபோ
இத்யுக்த்வாஸுரச்ரேஷ்ட ஸ்தத்ரைவாந்தரதீயத

திருவாழி திருச்சங்கங்களைத் திருக்கையிலேந்திய முதற்பெரும் கடவுளாகிய ஸ்ரீபரந்தாமர் அங்கெழுந்தருளிக் கங்காதரனைப் புன்னகையோடு நோக்கிச் சூலபாணியாகிய சங்கரரே! நீர் இங்குள்ள இத்தேவர்களிற் சிறந்தவராதலால் இத்திருப்பாற்கடலில் முதலிற்பிறந்த இவ்விஷத்தை நீரே அங்கீகாரஞ்செய்து இதனை அக்ரபூஜையாகக் கொள்ளக்கடவீரென்று அருளிச்செய்து, கட்புலனாகாமல் மறைந்தனர்.

உடனே சங்கரபகவானும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அருளப்பாட்டைத் தலைமேற்கொண்டு அத்தேவர்களுடைய, ஆபத்தையும்பார்த்துக் கோரமாகிய ஆலாஹலத்தையெடுத்து அமுதுசெய்து; அவ்விண்ணவர்களைவிட்டுக் கைலாஸஞ்சென்றார். பின்னைத் தேவாஸுரர்கள் முன்போலக் கடையாநிற்கையில் மந்தரமலை கடலில் பாதாளமளவாயில் அழுந்திவிட்டத் தேவேந்திரர் முதலிய யாவரும் ஸ்ரீமதுஸூதனனைத் தங்கள் நெஞ்சக்கமலத்திலிருத்திக் கரகமலங்களைக் கூப்பி ஸ்ரீமந்நாராயணா! தேவரே ஸகல ஜகத்காரணப்பொருளன்றோ? அருட்பெருங்கடலே! தொண்டர்களுக்கு ஆராவமுதமே! அடியேங்களிடத்தில் மிகுதியும் அன்புடையீரன்றோ, இந்த மந்தரமலையை மேலெடுத்து அடியேங்களைப் பாதுகாக்குங்கடமை தேவர்க்குரியதன்றி மற்றொருவர்க்காகுமோவென்று வேண்டித் துதிசெய்தனர்கள். உடனே பிறப்பிலியாகிய திருமாலும் சார்ந்தவர்களாகிய வானவர்களுக்கிரங்கிக் கூர்மாவதாரஞ்செய்து மந்தரத்தை முதுகிற்றாங்கா நின்று, மற்றொருருத்தரித்து, அம்மலை மேலெழும்பொட்டாமல் திருக்கரத்தினால் அதன் சிகரத்தைப்பற்றித் தாமும் அவர்களோடு காக்து

றைந்து மடைந்தருளினார். இவ்வண்ணம் ஆயிரவருஷங் கடையாகிற்கை யில முதலில தனவந்தரி அதினின்றும அவதாரஞ்செய்தருளினார். பின ரஸமுண்டாகியதனுற் பிறந்தமையால் அப்ஸரஸ்ஸுக்களென்னும் பெய ருள்ள சிறப்பாகிய உருவமிக்க அறுபதுகோடி மாதர்களும, அவர்க ளுக்குப் பணிசெய்தற்குரிய எண்ணிறந்த தாதிமார்களும் பிறந்தார்கள். இவர்களைத் தேவாஸுரர்களுள் ஒருவரும மணஞ்செய்துகொள்ள இசை யாமையால் இவ்வெல்லோரும பொதுமகளிராயினார்கள். அதன்பின வரு ணனுக்குப் பெண்ணாகி வாருணியென்னப்படும சுரைகளுக்கு அரசியாகிய வனிதைபிறந்து; தான விசாஹவிருப்புக கொள்கையில அப்பெண்ணைத் தானவர்கள விரும்பாது தேவர்கள் மணம்புரிந்தமையால தேவர்கள் ஸுரர்களென்றும், தானவர்கள அஸுரர்களென்றும பெயர்பெற்றார்கள். கற்பகங்கள், ஐராவதம், உச்சைச்சிரவசு, சிந்தாமணி, காமதேனு, கௌஸ்த் துபம, திருமகள் முதலாயினவை தோற்றஞ்செய்தபின, அமிர்தம உண் டாயிற்று, உடனே அவ்வமிழ்தங் காரணமாகத் தேவதானவர்களுக்குப் பெரும்போருளதாகி ஒருவரையொருவர் படைகளால தாக்கி மடியாநிற் கையில ஸ்ரீஹரியானவர் நாசசியார் திருக்கோலமாகிய சர்வஜகந்மோ ஹனாகார திவ்வியசுந்தரி உருக்கொண்டு, அசுரர்களை மயக்கச்செய்து, அவ்வமுதைக் கைக்கொண்டு அமரர்களுக்கு ஈந்தருளி எதிர்த்த தான வாதிகளைக் கொலைபுரிந்து, சுவர்க்கராஜ்யத்தை மீண்டும இந்திரனவசஞ் செய்தருளினார். தேவேந்திரனும ஸித்தசாரண கந்தர்வாதிகளுடன மூவு லகையும கைப்பற்றிச் செங்கோலசெலுத்திப் பாதுகாத்துப் பெரும கிழ்ச்சிகொண்டிருந்தனன

பாலகாண்டத்தில நாற்பத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்பத்தாறுவது சருக்கம்.

### திதிதவம்செய்து அடைந்தகருவை இந்திரன அழித்தது.

இவ்வாறு அசுரர்கள் இமையவர்களாலடிபட்டு மடிதலும், அவர் களுக்குத் தாயாகிய திதியென்பவள் மிகத் துயரமடைந்து மரீசிமஹா முனிவர் குமாரராகிய காசியபரென்னும் தனபர்த்தாவை நோக்கி ஸ்வாமீ பிராணநாதரே! எனபுத்திரர்கள யாவரும் மடிந்தார்களே ஆதலால், இந்திரனைவென்று மூவுலகங்களையும் ஆளத்தக்க புத்திரனை தேவர் அருள் செய்யவேண்டுமென வருந்தி வேண்டிக்கொள்ள, அக்காசியபமகாமுனி

வர் தம் பத்தினியின் சோகத்தைத் தணிப்பதற்காக அவளைநோக்கிப், பிராணநாயகி! உன் கருத்துக்கிணங்க மூவுலகங்களையும் காக்கவல்ல புத்திரனுதிக்கும்படி யான் அருள்செய்கின்றேன். நீ இதுமுதல் ஆயிரமாண்டுவரையில் மிகத்தூயாளாய்த் தவஞ்செய்துகொண்டிருக்க வேண்டும், சிறிதாயினும் குறைநேரிடின் உன்னெண்ணம் ஈடேறாதென்று அருளிச்செய்து, தமது திருக்கரத்தினால் பரிசித்துத் துயராற்றி, அவளைத்தழுவி உனக்கு மங்களமுண்டாகுகவென்று வாழ்த்தி விடைகொடுத்து, அவளிடம் நீங்கித் தவம்புரிய வெழுந்தருளினர்.

தன்னாயகர் அவ்வண்ணஞ்செய்தலும், திதியும் உள்ளமகிழ்வெய்தி அவர்திருவாக்குக்கு வழுவுதலுண்டாகாதபடி தவஞ்செய்துகொண்டிருக்கையில், இந்திரன் இச்செய்தி கேள்வியுற்று இவள் தவத்தைக்கெடுத்துக் கருப்பத்தை யழித்துவிடவேண்டுமென வஞ்சங்கொண்டு, திதி தவம்புரிகின்ற குசப்பிலவனமென்னும் புண்ணியதலத்தில் வந்து சீடனாகவேடம் பூண்டு திதியைநோக்கி, அம்மா! நீ தவத்தை மேற்கொண்டிருக்கின்றமையால் உனக்கு வேண்டிய திருப்பணிகளைச் செய்கிறேனென்று இன்சொற்களால் அவளை நம்புவித்துத் தினந்தோறும் அவளுக்குவேண்டிய தருப்பை, புஷ்பம், நீர், தீ, சமித்து முதலிய வேள்வித்துணைக்கருவிப் பொருள்களை வேண்டும்போது கொணர்ந்து கொடுத்தும், அவள் சிரமப்பட்டுப் படுத்திருக்குங்காலையில் அவளுடைய பாதங்களை வருடிச் சிரமத்தைத் தீர்த்தும், அவள் மிகப் பெருங்களிப்படையச் செய்தனன். இவ்வண்ணம் ஆயிரவருஷத்திற்குத் தொள்ளாயிரத்துத் தொண்ணூறுவருஷங்கள் சென்று பத்தாண்டு மிகுதியிருக்கையில், திதி இந்திரனைநோக்கி மகிழ்ந்து சொல்லலுற்றனள்: விண்ணவர்கோனே? நினக்குப் பலமுறை பகைவேந்தர்களால் தீங்குவருகின்றதெனக்கருதி, நினக்குத் துணையாய்ப் பகைஞர்களை வெற்றிகொண்டு உன் ராஜ்யத்தை நிலைநிறுத்தத்தக்க உனக்குத் தம்பியுண்டாம்படி உன் தந்தை யருள்செய்திருக்கிறார். இன்னும் பத்துவருஷத்தில் தம்பி உதிக்கப்போகிறான், அவனோடுகூடி நீ சுகித்து வாழ்வாய். இதன்பொருட்டே யான் நின் தந்தையிடத்தில் வரம்பெற்று இங்குத் தவஞ்செய்யாநின்றேனென்று இந்திரனுக்கு இதம்போதுரைத்து, அன்றைத்தினத்து நடுப்பகலில் சிரமத்தால் தூக்கமேற்கொள்ளப் படுக்கையில் கால்நீட்டுமிடத்தில் தலையையும், தலைவைக்குமிடத்தில் காலையும் வைத்துக்கொண்டு கூந்தல்முடியாமல் தலைமயிர் காலில் சுற்றும்படி நித்திரித்தனள். இவ்வாறு இவள் அசுசியாயிருப்பதைப் பௌலோமி மணாளன் கண்டு இவள் தூய்மையில்லாளாயிருக்கின்றமையால் சமயம் வாய்த்ததென்று மகிழ்ந்தும், இவள் இவ்வண்ணம் வீண்செருக்கடைந்து மயக்கமுற்றனளேயென்று நகைத்தும் தன் யோகமகிமையால் அவளுடலுட்புகுந்து, அக்கருவை வச்சிரப்படையால், ஏழு

கூறு செய்தனன். அது செய்தகாலையில், அக்கருவின் இனிய அழுகுரலைக் கேட்டுத் துணுக்குற்றுத் திதியுங் கண்விழித்தனள். அஃதுணர்ந்து சக்கிரனும் அக்கருவை நோக்கி, அழவேண்டாம் அழவேண்டாமென்று கூறி, மீளவும் கூறுசெய்ய முயலுகையில், திதியுங் கொல்லவேண்டாங் கொல்லவேண்டாமென்று மறுக்க, உடனே ஆகண்டலன் வச்சிரபாணியாகி வெளியே வந்து திதியை வணங்கி நீ சீற்றங்கொள்ளற்க; என்மேற் குற்றமில்லை; நீ என்னைக் கொல்லத்தக்க புத்திரனைப் பெற வரம்பெற்றுத் தவஞ்செய்தமையால் யான் சமயம் நோக்கி அதை அழிக்குங் கருத்துடையனாய் நின் சீடனாகக் குற்றேவல் செய்து வந்தேன். இன்றைத்தினம் நீ அசுசியாய்க் காலிடத்தில் தலைவைத்துப் பகலில் நித்திரை செய்தமையால் யான் உன் சூலை ஏழுபங்காகப் பிளந்துவிட்டேன்; ஆதலால், இப்பிழையை நீ பொறுக்கவேண்டுமென வேண்டிக்கொண்டனன்

பாலகாண்டத்தில் நாற்பத்தாறாவது சருக்கம்

முற்றிற்று

## நாற்பத்தேழாவது சருக்கம்.

இந்திரன் திதியின் கருவைப் பிழைப்பித்துத் தன்னோடு

சேர்த்துக்கொண்டது

திதி இவ்வண்ணம் ஏழுகூறுசெய்த கருவினைக் கண்ணுற்று மிகத் துக்கமடைந்து, இனி இந்திரன்மேற் சினங்கொள்வதினால் பயனில்லையென்று எண்ணி, இந்திரனை நோக்கி, இனியவார்த்தை சொல்லுகிறாள். ஆகண்டலா! உன்மேல் சிறிதும் பிழையில்லை; யான் விரதங்கெட்டு அசுசியாயிருந்தமையால் நீ உய்யும்வகை தேடினாய்; யான் இதுவரையும் பிள்ளைபெறுதற்காக மிகுதியும் வருத்தமுற்றபடியால் நீ எனக்குப் பிரியமாகிய காரியமொன்று செய்யவேண்டும், இக்கருவின் ஏழுகூறுகளையும் காற்றின்திரள்களாய்ச் சஞ்சரிப்பவர்களாகவும், மாருதரென்னும் பெயருள்ளவர்களாகவும், திவ்விய ரூபிகளாகவும் ஆகக்கடவர்கள். இவர்களுள் ஒருவன் நான்முகக்கடவுளுலகத்திலும், ஒருவன் இந்திரலோகத்திலும், மூன்றாவான் வாயுவென்னும் பெயர்பெற்றுக் ககனத்திலும், மற்றைய நால்வரும் நான்கு திக்குகளிலும் கடவுட்டன்மையுடையவர்களாய்ச் சஞ்சரிக்கக்கடவர்கள். நீ இக்கருவை நோக்கி, (மாருத: மாருத:) என்றுரைத்தமையாலேயே இவர்களுக்கு மாருதரென்னும் பெயர் நிலைக்கக்கடவதென்றனள். என்றுரைத்த அத்திதியின்மொழியைத் தேவேந்திரன்

செவியுற்று, தாயே! நின் விருப்பின்படி இவர்கள் விண்ணவர்களாகி மூவுலகிலும் திரியக்கடவர்களென்ன வரங்கொடுத்தான். இங்ஙனம் இவ்விருவரும் தம்மில் முடிவுசெய்துகொண்டு, சுவர்க்கலோகம்போய்ச் சேர்ந்தார்களென்று யான் கேள்வியுற்றிருக்கிறேன். ஸ்ரீதசரதாத்மஜா! இத்தேசம் திதி தவஞ்செய்ய இந்திரன் பணிசெய்த இடம்.

பின்பொருகால் இக்ஷ்வாகுமஹாராஜருக்கு அலம்புஸையென்பவளிடத்தில் விசாலனென்னப்படும் ஒரு புத்திரன் தோன்றி, அரசுசெய்வதற்காக இவ்விடத்து விசாலையென்று தன்பெயரால் ஒரு நகரியைக் கட்டுவித்தனன். அவ்விசாலராஜன் குமாரன் ஹேமசந்திரனென்பவன்; அவன் புத்திரன் ஸுசந்திரன், அவன் நந்தனன் தூம்ராச்வன், அவன் தநயன் ஸிருஞ்சயன், அவன் சிறுவன் ஸஹதேவன்; அவன் மகன் குசாச்வன்; அவன் சுதன் ஸோமதத்தன், அவன் புதல்வன் காகுத்தன், அவன் மைந்தர் ஸுமதி, இந்த ஸுமதியென்பவரே இப்பொழுது இந்நகரில் அரசுசெய்கின்றனர். அவ்விக்ஷ்வாகு மஹாராஜனுடைய அருளினால் இவ்விசாலநகரில் உறைகின்ற அரசர்களெல்லோரும் நெடுநாள் உயிர் வாழ்பவர்களாகவும், பெருந்தன்மை யுடையார்களாகவும், பராக்கிரமமுடையார்களாகவும், தாமத்திபுடையார்களாகவு மிருக்கின்றனர்கள், ஆகலில் இன்றிரவு இங்குத்தங்கி நாளைத்தினம் காலையில் ஜனகமஹாராஜனைக் காணலாமென்று அருளிச்செய்தார் விசுவாமித்திரமஹாரிஷி —

సుమతిస్తు మహాతేజా విశ్వామిత్రముపాగతం
శ్రుత్వా నరవరశ్రేష్ఠః ప్రత్యుద్గచ్ఛన్మహాయశాః
పూజాంచ పరమాం కృత్వా సోపాధ్యాయస్సబాంధవ
ప్రాంజలిః కుశలం పృష్ట్వా విశ్వామిత్రమథాబ్రవీత్
ధన్యోఽస్మ్యనుగ్రహీతోఽస్మి యస్య మే విషయం మునిః
సంప్రాప్తో దర్శనం చైవ నాస్తి ధన్యతరో మయా

ஸுமதிஸ்து மஹாதேஜா விச்வாமித்ரமுபாகதம்
ச்ருத்வா நரவரச்ரேஷ்டஃ ப்ரத்யுத்கச்சன்மஹாயசாஃ
பூஜாஞ்ச பரமாங்க்ருத்வா ஸோபாத்யாயஸ்ஸபாந்தவஃ
ப்ராஞ்சலிஃ குசலம்ப்ருஷ்ட்வா விச்வாமித்ரமதாப்ரவீத்
தந்யோஸ்ம்யநுக்ரஹீதோஸ்மி யஸ்யமே விஷயம்முநிஃ
ஸம்ப்ராப்தோ தர்சநஞ்சைவ நாஸ்தி தந்யதரோ மயா

இவர்களெழுந்தருளுகையில் அவ்விசாலைநகராதிபதியாகிய ஸுமதி மஹாராஜரும் விசுவாமித்திரமஹாமுனிவருடைய வருகையின் செய்தி கேள்வியுற்று, உடனே புரோஹிதர் சுஜனர்களோடு எதிர்கொண்டு வந்து

அர்க்கியபாத்தியாதிகளை யீந்து, அர்சித்துக் கைகூப்பி நல்வரவை வினவிக் காதிநந்தனமஹாமுனிவரே! தேவர் அடியேனுடைய இருக்கை தேடிவந்து அடியேனுக்குச் சேவைசாதித்தபடியால் அடியேன் பாக்கியவானும், செய்யுங் கடமையின்பயனைப் பெற்றவனுமாயினேன், நல்வினை செய்தவர்களுக்குள் அடியேனுக்கு நிகராயாவருமில்லையென்று அக்கௌசிகமஹாமுனிவரை மகிழ்ந்து புகழ்ந்தனர்.

பாலகாண்டத்தில் நாற்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்பத்தெட்டாவது சருக்கம்.

### கௌதமமஹாமுனிவரது ஆச்சிரமத்தைப் பற்றியது.

அச்சுமதிராஜரும் யோகக்ஷேமங்களை விசாரித்து முடிந்தபின்னர் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை யுத்தேசித்து, ஸ்ரீகௌசிகமஹாமுனிவரை நோக்கி, ஸ்வாமி! விசுவாமித்திரமஹாமுனிவரே! இக்குமாரர்கள் இருவரும் கடவுளருக்கு ஒப்பாகிய பராக்கிரமமுடையவர்களாயும், யானை சிங்கம்போன்ற நடையுடையவர்களாயும், புலியும் மழவிடையும்போலும் வீரமுடையவர்களாயும், தாமரை இதழ்போலக்கன்ற திருக்கண்களை யுடையவர்களாயும், வாள், கேடயம், வில், தூணீரங்களைத் தரித்தவர்களாயும், அசுவினிதேவர்கள்போல உருவத்தி லொப்பிலாதவர்களாயும், இப்புவியில் சஞ்சரிக்க வேண்டுமெனக் கருத்துக்கொண்டு விண்ணினின்று வந்த தேவகுமாரர்கள் போன்றவர்களாயு மிருக்கின்றார்களே; இவ்விருவர் யாவர்? எந்த மஹானுபாவருடைய புத்திரர்கள்? பாதசாரிகளாக இங்கு வருவதற்குக் காரணம் யாது? ஆகாயத்தில் செங்கதிரோனும், வெண்கதிரோனும் தனித்தனியொளிவீசி விளங்குகின்றதுபோல இங்கு விளங்குகின்றார்கள். பிரமாணத்தாலும், இங்கிதத்தாலும், செயலாலும் ஒருவர்க்கொருவரே நிகர்பவராகத் தோற்றுகின்றார்கள். இவ்விதத் திவ்யமஹிமையுள்ளவர்கள் இக்கோரமாகிய நடத்தலரிய வழியைக்கடந்து வருவதற்குப் பயன் யாது? இவர்களது தன்மையை உள்ளபடி உணரவிரும்புகின்றேன், கருணைபுரிந் தருளிச்செய்ய வேண்டுமென்று வினவினர். அவ்வாறு வினவப்பெற்ற மெய்த்தவமஹாமுனிவரும் இவர்களுடைய குலமுறை முதல் அங்குவந்தவரையும் நடந்த சரித்திரம் யாவும் அருளிச்செய்யச் சுமதிமஹாராஜரும் அதுகேட்டு மிகுதியும் குதூஹலமடைந்து, தம்மரபினரெனவும், சுற்றத்தாரெனவும், இளமைப்பருவமுடையவர்களெனவும், தாடகைமுதலிய நிசாசரர்களைக்கொலை

புரிந்து, உலகத்து இடர்களைக் களைந்தவர்களெனவும், பரிவோடு தகுந்த விதியின்படியே உபசரித்துக் கொண்டாடினர். ஸ்ரீராமபிரானும் இளைய பெருமாளும் அவர் செய்த உபசாரத்தை ஏற்றுத் திருவுளமகிழ்ந்து அன்று ரவு அப்புரியிலேயே வசித்து, மறுநாளுதயத்தில் புறப்பட்டு மிதிலாநகரை நோக்கிச் சென்றார்கள் அப்பொழுது அம்மிதிலையைக் கண்ணுற்ற முனிவர்கள் யாவரும் நன்று நன்றென்று மகிழ்ந்து புகழ்ந்து செல்லாநிற்கையில் வழியில் அம்மிதிலையருகில் ஒரு வனத்திற் பழம்பதோ ராசிரமத்தைக் கண்டு விசுவாமித்திர தபோநிதியை நோக்கி, ஸ்வாமீ! இவ்விடம் ஆசிரமம் போலத் தோன்றுகின்றது; இஃது யாருடையது? இங்கு ஒருவரையுங் கண்டோமில்லையே, இதை அருளிச்செய்யவேண்டுமென்று சக்கரவர்த்தித் திருமகனார் வினவக் காதிநந்தனயோகியும் அதற்கு விடையருளிச் செய்பவராயினர்.

கேளாய் அசுரமர்த்தனா! இதன் சரித்திரத்தை இயம்புகின்றேன்; முன்பு ஒருகாலத்தில் இவ்வாசிரமத்தில் கௌதமனென்னப்படும் மகாமுனிவர் அகலிகையென்னும் தம்பத்தினியோடு தவம்புரிந்துகொண்டிருந்தனர். அப்பொழுது ஒருநாள் தேவராஜன் அவ்வகலிகையைக் கண்ணுற்று மதிமருண்டு இவளுடன் புணரவேண்டுமென்று தாபபுத்தி பிறந்து சமயம்பார்த்து, அக்கௌதமமாமுனிவரைப்போல வேடம்பூண்டு அப்பெண்ணரசியினருகில் வந்து பெண்மணியாகிய அகலிகையே! யான் இப்பொழுதே நின்னைப் புணரவிரும்புகின்றேன், காமபக்ஷத்தாற் பற்றப்பட்டவர்கள் ரிதுகாலத்தைத் திர்பார்ப்பார்களன்றோ? அதலால், இப்பொழுதே நீ இதற்குடம்பட்டு மகிழவேண்டுமெனப் பலவாறுவேண்டுதலைச் செய்ய, அகலிகையும் இவன் தேவேந்திரனே; என்நாயகரைப்போல வேடம்பூண்டுவந்தனனென்று சிற்குறிகளாலுணர்ந்தும், தேவர்களரசனே வந்து தன்னை விரும்புகிறானென மதிமயங்கி அவன் வேண்டுகோளுக்கிசைந்து அவனுடன் கூடி இன்பத்தை யனுபவித்துப் பெருமகிழ்வு கொண்டு, தேவர்கோனே! யான் செய்தற்குரிய கடமையை உம்மாலே செய்து முடித்தவளாயினேன் இனி இவ்விடம்விட்டு விரைந்து செல்லக்கடவீர், என் கணவர் இதையறிவாராயின் சாபமிட்டு இருவரையும் நிலைகுலையச்செய்வார் ஆதலால், அவர் கண்டுணராவண்ணம் என்னையும் உம்மையும் பாதுகாத்துக்கொள்ளக்கடவீரென்று சொல்ல, அது கேட்டு விண்ணவர்கோனும் அகலிகையைநோக்கி மங்கையர்க்கரசியே! யானுமுன்னுடைநலனிருந்தேன், இனியான்வந்தவழியே நோக்கிச் செல்கின்றேனென்று கூறி, விடைபெற்றுக் கௌதமருடையவருகையைக் குறித்து மனத்தில் அச்சங்கொண்டு விரைந்து அவ்வாசிரமத்திற்குப்புறம்பே வருகையில், எதிரில் வருகின்ற தேவதானவாதியராலுங் கேடுசெய்ய முடியாத தவச்சிறப்புற்ற கௌதமமஹாரிஷியைக் கண்டு அச்சுற்று, நலங்குலைந்து தன்னொளியிழந்தவனாயினன். உடனே கௌதமமஹாமுனிவரும்

தம்முடைய வேடந்தரித்த இந்திரனைக் கண்டு, யோக மஹிமையால் இவனது தீச்செயல்களையுணர்ந்து கடுஞ்சினங்கொண்டு இவனை நோக்கி அடா! புலனறிவற்றவனே! நீ உன்மத்தனாகிச் சிறிதும் அறத்தினெறியை யுணராமல் என்னுடைய வேடம்பூண்டு நல்லறிவாளர் செய்தற்கரிய இத்தீச்செயலை நீ செய்தமையால் காமத்தைப் பெருக்குகைக்குக் காரணமாகிய அண்டங்களிரண்டும் அற்று அலிபோலாகக்கடவை யென்று சாபமிட, உடனே இந்திரனுடைய அண்டங்களற்று வீழ்ந்தன. அவ்வாறு இந்திரனைச் சபித்து அகலிகையையும் பார்த்து அதி தீயொழுக்கமுடையாளே! நீ என் வேடங்கொண்டவன் இந்திரனென்றுணர்ந்தும் மதிகெட்டு மனந்துணிந்து கொடிய செயலுக்கிசைந்தமையால் நீ இங்குப் பல்லாயிரயாண்டு சிலையாகி உண்டியென்பதின்றிக் காற்றையுண்டு, இப்புழுதியின்மேலே புரண்டுருண்டு எல்லாப் பூதங்களுக்குந் தோன்றாமல் வீழ்ந்திருக்கக்கடவை எப்பொழுது இவ்விடத்திற்குப் பரப்பிரஹ்மமாகிய ஸ்ரீபரந்தாமர் ஸ்ரீரகுகுலதிலகராய ஸ்ரீதசரதச்சக்ரவர்த்தி திருக்குமாரராகத் திருவவதரித்து எழுந்தருளிவருவாரோ அப்பொழுது அவருடைய ஸ்ரீபாத தூளியால் புனிதையாவாய்

తస్యాతిథ్యేన దుర్వృత్తే లోభమోహవివర్జితా

మత్సకాశే ముదాయుక్తా స్వం వపుర్ధారయిష్యసి

தஸ்யாதித்யேந துர்வ்ருத்தே லோபமோஹவிவர்ஜிதா

மத்ஸகாசே முதாயுக்தா ஸ்வம்வபுர்தாரயிஷ்யஸி

எம் அரும் பெருங்கடவுளாகிய ஸ்ரீராமபிரானை வழிபட்டுப் பூசைசெய்து அதனால் சோகமோஹங்கள் தீர்ந்து, இயல்பாகிய உருவைப்பெற்று உவந்து என்பால் சேர்ந்து மகிழ்வடைவாயென்று தாமிட்ட சாபத்திற்கு முடிவுங் கூறி, இவ்வாச்சிரமத்தைவிட்டுச் சித்தசாரணர்களால் வணங்கத்தக்கதாய், பெறலரும் பேறு பயக்கத்தக்க இமயமலையின் சிகரமடைந்து தவஞ்செய்தலுற்றனர்.

பாலகாண்டத்தில் நாற்பத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று

## நாற்பத்தொன்பதாவது சருக்கம்.

அஹலிகை சாபந்தீர்ந்து ஸ்ரீராமபிரானைப் பூசித்தது.

பிறகு இந்திரன் "அடாதுசெய்தவர் படாதுபடுவர்" என்பதற்கிசைய அண்டமற்று வெட்கமுற்று வண்ணமிழந்து தலையிறங்கிக்கொண்டு அக்கினி

முதலாகிய ஸுரஸங்கின்னரஸித்த சாரணமுனிகணங்களை நோக்கித் "தேவர்களே! யாவராயினுமொருவர் கடுந்தவமியற்றின் அதை எவ்விதத்திலாயினுங் கெடுப்பதே நஞ்செயலாதலால், இதுகாலையில் கௌதமமாமுனிவர் தவத்திலிருந்தமையால் உங்களுக்காக அதைக்கெடுக்க முயன்று, ஒரு பாயத்தால் அதனைக்கெடுத்து, அவரிட்ட சாபத்தால் அண்டமிழந்து அலிபோலாயினேன். அவரைச் சாபமிடுவித்து அவர் தவத்தைக் கலைத்துவிட்டேன்; ஆகலால் நீங்களெல்லீர்களுமொன்றுசேர்ந்து உங்களுக்கு நன்றிசெய்த என்னை அண்டமுடையவனாகச் செய்யக்கடவீர்க"ளென விண்ணவர்களை வேண்டிக்கொண்டனன். அவ்வானவர்களும் அவ்விந்திரன் மொழியைச் செவியுற்று, அவனெல்லோரும் பிதிர்தேவர்பாற்சென்று "பிதிர்தேவர்களே! நமக்குப் புரந்தரனாகிய வலாரி நமகாரியத்தின்பொருட்டு அண்டமற்றவனாயினன்; ஆகலால் யாகங்களில் உமக்கு உபகற்பிதமாய்க் கட்டிய மேஷத்தின் அண்டங்களைக் கொய்து சீக்கிரம் இந்திரனுக்குப் பொருந்துவிக்குங் கடமையுடையீராயின், நீங்கள் அண்டமற்ற அஜங்களையே வேள்வியில் உண்ணக்கடவீர்கள். இவ்வாறு செய்வீர்களாயின், உமக்கும் எமக்கும் யாகம்பெற்றுப் பானத்தும் குறைவிலாப் பெருமகிழ்ச்சி சிறக்கு"மென்றுரைசெய்தனர்கள். உடனே பிதிர்தேவர்களும் அதற்குடன்பட்டு அவ்வாட்டின் அண்டங்களைக் கொய்து இந்திரனுக்குப் பொருத்தினர்கள். ரகுகுலத்திருத்தோன்றலாகிய ஸ்ரீராம! அன்றுமுதல் பிதிர்தேவர்களை நோக்கி நடாத்தும் வேள்விகளில் ஜாகத்தினது விருஷணங்களைத் துணித்து மற்றைய உறுப்புக்களைப் பானஞ்செய்து ஹோமஞ்செய்து வருகிறார்கள். பிதிர்தேவர்களும் அவ்வண்ணம் அற்ற யாகத்தின் பயனைத் தருகின்றார்கள். இந்திரனும் அதுமுதற்கொண்டே மேஷவிருஷணனாயினன். பதிதபாவனனாகிய ஸ்ரீராமசந்திர! இவ்வாச்சிரமத்துக்குட்புகுந்து கௌதமமஹாயோகியின் மனையாட்டியாகிய அகலிகையின் சாபத்தைத் தீர்த்து இவளைத் துயரக்கடலினின்றுங் கரையேற்றக்கடவை"யென் றருளிச்செய்தனர். இவ்வாறருளிச்செய்த விசுவாமித்திர மஹாமுனிவரது மொழியை ஸ்ரீரகுகுலநந்தனர் திருச்செவிசாத்தி இளையபெருமாளுடன் கௌசிகமஹாமுனிவரை முன்னிட்டுக்கொண்டு அவ்வாச்சிரமத்துக்குட் புகுந்து, தவமேன்மையால் சிறந்து விளங்குகின்றவளாயிருப்பினும், வானவர் தானவர் முதலானோர்க்குங் காணற்கரியவளும், நான்முகக்கடவுள் படைக்குந்தொழிலில் தனக்குள்ளதாகிய புலமையனைத்தையும் ஒருவழிப்படுத்தி ஊக்கத்தோடு நெடுநாள் முயன்று படைத்தனனென்னும்படி யாவரும் அவாவத்தக்க உருவமுற்றவளும் தேவமாயைபோலவும், அணிகளால் அணியப்பட்டுக் கார்முகிலிடையில் தங்கிய வெண்பிறைபோலவும், நீரில் தோற்றுகின்ற பிரதிபிம்பக்கதிரவன்போலவும் விளங்குகின்றவளும், கௌதமமுனிவர்மாற்றத்தால் மூவுலகத்தாருடைய கண்களுக்

கும், தாம் திருக்கண்மலர் சாத்துவனையும் புலப்படாதவளுமாயுள்ள அகலிகையைக் கண்ணுற்று வியப்படைந்தனர். உடனே அகலிகையும் சாபமொழிந்து தன் மெய்யுருவைப் பெற்றெழுந்திருக்க, பெருமாள் இளைய பெருமாளிருவரும் இவளே எல்லோரும் வணக்கம்புரியத்தக்க நிலைமையையாயினளென்பதை யாவருக்கும் அறிவிப்பதன் பொருட்டும், அறத்தை நிலைநிறுத்தற்குக்கொண்ட கோலத்தின்பொருட்டும் அவளை வந்தனஞ்செய்தனர்கள். அகலிகையும் தன் பதியின் சொல்லைக் கருதினள். இப்புரம் புருடரே ஸ்ரீரகுநந்தனரெனத்தேறி, ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரையும் பூசித்தனள். எம் அரும்பெறலடிகளாகிய ஸ்ரீராமபிரானும் அவள் உட்பரிவோடியற்றிய அர்க்கியபாத்தியாதியாகிய பூசனைக்குத் திருவுளம் பேரவுகந்து, ஏற்றுக்கொள்ளுகையில் ஆகாயமுற்றும் வானவர்கள் நிறைந்து துந்துபி முழக்கி மலர்மழை பெய்து மங்கலம்பெருக மங்கலம்பெருக வென அகலிகையைப் பூசித்தனர்கள். கௌதமமஹாயோகியும் யோகஞானத்தால் இச்செயல் யாவற்றையும் உணர்ந்து, தம் உறைவிடத்தை அணுகிய அகலிகையை அங்கீகரித்து ஆதரித்து, ஸ்ரீரகுநாதனைப் பூசனைசெய்து, மனைவியுடன் தவஞ்செய்வாராயினர். ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனாரும் கௌதமமஹாமுனிவர் இயற்றிய பூசனையைப்பெற்று மகிழ்ந்து யாவருடனும் மிதிலாநகர் நோக்கி எழுந்தருளினார்.

பாலகாண்டத்தில் நாற்பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

## ஐம்பதாவது சருக்கம்.

ஸ்ரீராமலக்ஷ்மண விசுவாமித்திர ஜனகசதாநந்தர்கள் ஒருவரையொருவர் கண்ணுற்று யோகக்ஷேமம் விசாரித்துக் கொள்வது

அநந்தரம் ஸ்ரீதசரதநந்தனர் திருத்தம்பியாரோடு காதிநந்தனரை முன்னிட்டுக்கொண்டு அவ்வாச்சிரமத்துக்கு வடகிழக்கிற்சென்று ஜனக மஹாராஜர்செய்யும் யாகசாலையையடைந்து விசுவாமித்திரமகாயோகியை நோக்கி ஸ்வாமீ மெய்த்தவச்செல்வரே! இந்த ஜனகமஹாராஜருடைய யாகசாலை வேள்விக்குரிய கருவிகளால் நிரம்பப்பெற்று, பலதேசங்களினின்றும் வருகின்ற வேதியர்கள் வீற்றிருக்கத்தக்க அநேகமாயிரம் பர்ணசாலைகளாலும், அவ்வண்ணம் வந்திறங்கிய முனிவர் முதலானோ

தேவர்கள் அறவொழுக்கத்தை மேற்கொண்டு, மறவொழுக்கத்தைக் கடிபவராக இருந்தும், பிறர்செய்யும் தவவொழுக்கத்துக்குக் கேடுசெய்வது என்னெனின் ஏவராயினும் தவம்புரிவாராயின் முடிவில் வரம்பெற்றுத் தம் பட்டத்துக்கு வருவார்களென அச்சுற்று அங்ஙனம் புரிகின்றனரென்றுணர்க.

ருடைய வணடிகளாலும நிறைககப்படடு வீதியும் பெருககவிப்பை விளைவிககினறது ; நாம எவருக்த ககசேவணடுமோ அதை ஆஜஞை செய்யவேண்டுமென விண்ணபபஞசெயதருளுகலும, அபபிரமரிஷியும ஸ்ரீகாகுததருடைய மாறறததைக கேடடருளிககூடடமின்றி ஏகாந்தமாயும, நீா நலவுமுளள இடமபாாதது வீறறிருநதனா. ஜனகமகாராஜா விசுவாமித்திரமகாமுனிவா எழுநதருளிய செயதி கேளவியுற றுச சதாநநதாமுதலிய புரோகிதாகளோடு ஆாககிய பாததியாதிகளை எடுபபிததுககொணடு அமமுனிவா வீறறிருககுமிடததுககுவநது விதி யினபடி பூசைசெயதனா: அவவாராதனையைக கௌசிகமஹாமுனிவ ருமஏறறு, யாஜஞவலகயாநதேவா ஸ்ரீ! உமககுக குசலமா ? உமமு டைய யாகமும, யாதொரிடையூறு மிலலாமல நடககினறதா ? என்று ஜனகமஹாராஜனை வினவிய பினனாமுறையே சதாநநதாமுத லிய முனிகணஙகளையும நோககிக குசலஙகளை வினவியபின, அமமிதி லாநகரபூபாலகா விசுவாமித்திர மஹாமுனிவரை முனிவாகளோடு ஆச நத்தில வீறறிருககவேணடுமென வேணடிககொளள, அமமுனிவரும அவவேணடுகோளினபடி மறறை முனிகணஙகளோடு ஆஸனத்தில முறை யே வீறறிருநதாா விதேஹராஜரும சதாநநதரியரோடு ஆஸனத்தில வீறறிருநது கௌசிகரை நோககி ஸ்வாமி காதிநநதனரே !—

అద్యయజ్ఞసమృద్ధిర్మే సఫలాం దైవతైః కృతా

అద్యయజ్ఞఫలంప్రాప్తం భగవద్దర్శనాన్మయా

அதயயஜஞஸமருத்திர்மே ஸபலா தைவதை: கருதா

அதயயஜஞபலமபராபதம பகவததாசநாநமயா

பகவானாகிய தேவருடைய தரிசனத்தால இபபொழுது தான என வேள்வி குறைவிலதாக எனகுல தெயவஙகளால செயயபபடடதாயிறறு ; இபபொழுதே யாகததின பயனும என்னால பெறபபடடதாயிறறு. தேவா அடியேனசெயயும யாகசாலைககு எழுநதருளினமையால அடியேன புனித னும், தேவாகருணையைப பெறறவனுமாயினேன. அடியேன செயயத தொடஙகிய இவ்யாகம முறறுபபெற இனனும பனனிரணடுநாளசெல லும். அபபொழுது ஹவிப்பாகம பெறறுககொளவதறகாக விணணவர் கள் வருவாாகள், அவாகளைத தேவா கடாகூஷிததருளவேண்டுமென விண் ணப்பஞ்செய்து, ஸ்ரீராமலக்ஷ்மணாகளை மனமும் கண்களும குளிரககண்டு வியப்படைந்து, ஸ்வாமீ காதிநநதனரே ! இவ்விரண்டு இளைஜஞர்களும் தேவருககு நிகராகிய பராக்கிரமமுள்ளவாகளாயும, மத்தயானைபோனற நடையும, சிஙகம்போன்ற பாாவையுமுளளவாகளாயும், புலிபோலவும், இடபம்போலவும, பகைஞர்மேறசெனறு போர்செய்தறகுரியவர்களா

யும், தாமரை இதழ்போல அகன்ற திருக்கண்களையுடையவர்களாயும், கட்க சாரங்க நிஷங்க தாரிகளாயும், இவ்வரணியங்களைக் கண்ணுறக்கருதி, விண்ணுலகம்விட்டுவந்த தேவகுமாரர்கள்போலவு மிருக்கின்றமையால், இம்மஹாபுருஷர்கள் அரசிளங் குமாரர்களைப்போலத் தோற்றுகின்றார்களே; இப்பெருந்தகைச் சிறுவர்கள் சீபாதங்கள் சிவப்பேறநடந்து இக்கானகம் வருதற்குக் காரணம் யாது? இவர்கள் புத்திரர்களைப் பெற்றவர்களில் எவனை உயர்ந்தவனாகச் செய்கின்றனர்கள். இவ்விருவரும் எல்லாவிதத் திலும் ஒருவனையொருவர் ஒப்பவராகவும், காகபக்ஷங்களை யுடையார்க ளாகவும் சந்திரசூரியர்களைப்போல விளங்குகின்றனர்களே. இவர்களு டைய வரலாற்றை யருளிச்செய்யவேண்டும்; இதனைக் கேட்டுணர விருப் பமுடையவனாக விருக்கின்றேனென வினவினர். அவ்வினாவைத் திரு வுள்ளத்துக்கொண்ட கௌசிகமஹாமுனிவர் வைதேகனைநோக்கி, ஜனக மகாராஜரிஷியே! இவர்கள் அயோத்திமாநகரத்துக்கு இறைவராகிய தசரதசக்கரவர்த்தியார் செல்வப்புதல்வர்கள், என் வேள்விக்கு இடை யூறு ஒழிவில்லாது செய்துவந்த நிசாசரர்களைக் கொலைபுரிவிப்பதற்காக இவர்களை உடன்கொண்டுவந்து தாடகையையும், மாரீசாதியரையும் கொலை புரிவித்து, வேள்வியை முற்றுவித்துச் சித்தியடைந்து, உம்முடைய யாகத் தைக் காணும்பொருட்டு அங்கிருந்து புறப்பட்டுவருகையில் வழிநடுவில், கௌதமமகாமுனிவரது ஆச்சிரமத்தையடைந்தோம். அங்குச் சாபத்தால் கல்லாகவிருந்த அகலிகையையும், ஸ்ரீராமசந்திரனுடைய சீபாதத்தூளியால் சாபந்தீர்ந்து தன் கணவருடன்சேர்ந்து மகிழ்வுற்றனள். உம்மிடத்திலிருக் கின்ற சங்கரசராசனத்தைக் கண்ணுற்று நாமேற்றிடவேண்டுமென என் னோடு இவ்விருவரும் இங்குவந்தனரென்று இவ்வாறு அருளிச்செய் தனர்.

பாலகாண்டத்தில் ஐம்பதாவது சருக்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்றாவது சருக்கம்.

*சதாநந்தர் விசுவாமித்திரமகாமுனிவரது மஹிமை கூறியது.*

---

விசுவாமித்திரர் கூறியதைக்கேட்டுக் கௌதமமகாமுனிவருக்கு மூத்த குமாரராகிய சதாநந்தமஹாமுனிவர் பேருவகைகொண்டு ஸ்ரீராமபிரானும் ராமானுஜரும் வீற்றிருப்பதைக் கண்ணாரக்கண்டு, கௌசிகமஹாமுனிவ ரே! அடியேனுடைய தாயாரை இந்த ஸ்ரீராமபிரானுக்குக் காட்டினீரோ? என்றாயும் சாபந்தீர்ந்தெழுந்து இப்பரமபுருஷனுக்குக் கனிகிழங்கு முதலியவைகளால் பூசனைசெய்தனளா? என்தாயின் திறத்தில்

இந்திரன்செய்த தீச்செயலை இவ்விருவருக்கும் அருளிச்செய்தீர் ? அடி
யேன் பிதாவுங் கோபந்தணிந்து என் அம்மனையை ஆதரஞ்செய்தனரா ?
என்றிவ்வாறு வினவினர். அதுகேட்டு விசுவாமித்திரமகாமுனிவர் சதாநந்த
யோகி ! யாது யாது செய்தற்குரியதோ அதையதைத் தவறாமல் தக்கபடி
செய்தேன் ; உம்முடைய ஜனனி சாபம் நீங்கினவளாய் உம்முடைய பிதா
வோடு சேர்ந்து, பிருகுபுத்திரராகிய ஜமதக்கினிமகாமுனிவரைப் பிரியாம
லுடனுறையும் இரேணுகையென்னும் பரசுராமன் தாய்போல விளங்குகின்
றனளென்று அருளிச்செய்தனர். அதுகேட்டுச் சதாநந்தர் பெருமகிழ்வு
கொண்டு ஸ்ரீகௌஸல்யாகுமாரரை நோக்கி இயம்புகின்றனர் மனுகுலதிலக
ராகிய ஸ்ரீராமசந்திரரே ! உமது வருகை நல்வருகையாகக் கடவது தெய்வ
வசத்தால் நீர் இங்கு எழுந்தருளலாயிற்று. இவ்விசுவாமித்திரமஹாமுனி
வரை முன்னிட்டுவந்தமையால் உமக்குச் சிறிதுஞ் சிறப்புக் குன்றாதவ
ரும் இவர் முன் ராஜரிஷியாக இருந்து தம் தவத்தின் மேன்மையினாலே
பிரமமுனியாயினர் ஆதலால் இவரை ஒப்பவராயாவருமிலர், இவரே உமக்குத்
தஞ்சம், மெய்ப்பெருந்தவத்தினராகிய இக்குசிகுலோத்தமரே உம்மைக்
காக்கும் முயற்சிபெற்றிருக்கின்றமையால் உம்மினும் பாக்கியவான்களியா
வருளர் ? இவருடைய சரித்திரத்தை நடந்தவண்ணங் கூறுகின்றேன் சதுர்
முகக்கடவுளுக்குக் குசனென்கிற ஒரு சற்புத்திரரிருந்தார் அக்குசருக்குக்
குசநாபனென்னப்படுமொரு குமாரர் அறத்தினவழியேசெல்லுமுணர்வுடை
யராயும், மிக்க ஆண்மையும், தோள்வலியுமுடையராயுமிருந்தனர். அக்
குசநாபருக்குக் காதியென்னுமைந்தனர் மிக்க புகழ்பெற்று இவ்வுலகத்தைப்
பாதுகாத்துவந்தனர் பின்பு இவ்விசுவாமித்திரர் அவதரித்துத் தம் தாதை
மூதாதை முதலியோரைத் தொடங்கி வந்தமுடியைத் தரித்துப் பார்முழு
தும் நீதிவழுவுதலில்லாமல் செங்கோல் நடாத்திப் பரிபாலனஞ்செய்துவந்
தார். அவ்வாறு அநேகமாயிரவருஷம் தரணியாண்டுவருகையில் ஒருகால்
தாரணிமுழுதும் வலமாக வரவேண்டுமென்று தேர் யானை குதிரை காலா
ளாகிய நால்வகைப் படையோடு புறப்பட்டுப் பற்பல நாடுநகரங்களையும்,
நதீநதங்களையும், மலைமேடு காடுகளையுங் கடந்து, பலமுனிவர்களது ஆச்சி
ரமங்களையுந் தாண்டி, மலர் காய்கனி நிறைந்து தழைத்தோங்கிய தருக்
களால் சூழப்பட்டதும், பலவகைப்பசுப்பறவை விலங்குகள் திரியப்பெற்ற
தும், சித்தசாரண தேவதானவகந்தர்வகின்னரபன்னகாதியர்களால் பூசிக்
கப்பட்டதும், புல்லையும், காற்றையும், சருகையும், கிழங்கு வேர் கனிகளையு
முண்டு ஐம்புலன்களையும் வென்று, சீற்றத்தை முற்றுங்கெடுத்து, ஜபதப

ஹோமங்களைச் செய்து, ஹம்ஸ பரமஹம்ஸ பகூதக குடீசக வானப்ரஸ்த வைகாநஸ வாலகில்யாதியாகிய பலபல பெயர்களைப்பெற்று, ராஜரிஷி பிரமரிஷி தேவரிஷிகளாகிய அந்தணர் குழுவால் வசிக்கப்பட்டதும், பிரமலோகமோ எனக்கண்டோர் ஐயப்படத்தக்கதுமாகிய வசிஷ்டமஹாமுனிவரது ஆசிரமத்தைத் அணுகிக் கண்குளிரக்கண்டு மகிழ்ந்தார்.

பாலகாண்டத்தில் ஐம்பத்தொன்றாவது சருக்கம் முற்றிற்று.

## ஐம்பத்திரண்டாவது சருக்கம்.

வசிஷ்டமஹாமுனிவர் விசுவாமித்திரரை ஆதித்தியத்துக்கு நிருத்தியது.

விசுவாமித்திரமஹாமுனிவர் வசிஷ்டாசிரமத்தை அணுகி, அங்குத் தவம் புரிந்துகொண்டிருந்த அருந்ததிமணாளரைக்கண்டு விநயத்தோடு தலைவணங்கி நிற்க, அம்முனிவரும் இவரைநோக்கி, நலவரவை வினவி, ஒரு தவிசில் வீற்றிருக்க நியமித்து, அவர் உடகாரந்த பின்னாக கிழங்கு கனி முதலியவற்றால் விதி முறைப்படி உபசரித்து ஆதரம் செய்தருளினர். இம்மெய்த்தவ மஹாமுனிவரும் அம்முனிவர்செய்த பூசனைகளைப் பத்தியோடு ஏற்றுக்கொண்டு, வசிஷ்டமஹாமுனிவரை நோக்கி, தேவருடையதவமும், அக்கினி ஹோத்திராதிகளாகிய வைதிக கருமங்களும், சீடவர்க்கமும் யாதொனுமோர் குறைவுமின்றி மேன்மை பெற்று வருகின்றனவா? மற்றும் தேவருடைய ஆசிரமத்திலுள்ள மரஞ்செடி மிருகபக்ஷிகளும் குசலமா? என்று வினவ, வசிஷ்டமஹாயோகியும், யாவையும் குசலமென்று மறுமொழியருளிச்செய்து, விசுவாமித்திரமஹாராஜரே! நீர் குசலமா? அறத்தினின்றி வழுவாது நீதி நடாத்திக் குடிகளைப் பாதுகாத்து வருகின்றீரா? படைவீரர்களும் நன்கு பாதுகாக்கப்பட்டு, உம்முடைய ஆணைக்குள் அடங்கி நடக்கின்றார்களா? பகையரசர்கள் யாவரும் உம்மால் வெற்றிகொள்ளப்பட்டுக் கீழ்ப்படிந்திருக்கின்றனர்களா? உம்முடைய சிறுவர், நட்பினர் மனைவி முதலியோர்களும் சுகித்திருக்கின்றனரா? உமது பொருள் வைப்புகளும் பொருளின் திரளால் நிறைந்திருக்கின்றனவா? என்று வினவ, அதற்கு இம்மாதவத்தினரும் தேவருடைய கருணையினாற் சிறிதுங் குறைவென்பதின்றி யாமெல்லோரும் தக்கவாறு சுகித்து நடந்து பெருகி வருகின்றனமென்று மறுமொழிகூறினர். இங்ஙனம் இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் நெடும்பொழுது விநோதமாகப் பற்பலவாறு வார்த்தையாடிக்கொண்டிருந்து, முடிவில், வசிஷ்டர் இவ்விசுவாமித்திரரை நோக்கி, மஹாராஜரே!

இப்பொழுது பரிஜன பரிவார சேனைகளுக்கும், உமக்கும் ஆதித்தியஞ் செய்ய விரும்புகின்றோம். நீர் அறவொழுக்கமுடையாராகிய அரசராகையாலும், என்னாச்சிரமந்தேடி அதிதியாகவந்தமையாலும், நீரே பூசை பெறுதற்குரியர்; ஆதலால் நீர் எம்மால் செய்யப்படும் விருந்தினை ஏற்றுச் செல்லக்கடவீரென முகமலர்ச்சியுடையராய் அருளிச்செய்தனர். அம்மாற்றத்தை செவியுற்று இவ்விசுவாமித்திர மஹாயோகியும் தேவர் பரிவுடையீராயருளிச்செய்த இனிய சொற்களாலே யான் பூசனையை ஏற்றுக்கொண்டேனாயினேன். தேவருக்கு இக்காட்டில் கிடைக்கத்தக்க கந்தமூல பல ஜலங்களினாலே யானே போரவுகந்தேன். கருதியவற்றையெல்லாம் இங்கிருந்தவண்ணமே இருந்து வருவிக்கத்தக்க திறமுள்ள தொண்டனென்றோ? தேவரைப் பலவாறாக ஆராதனை புரியவேண்டும், தேவருடைய சேவையே அடியேனை மனக்குறைவகற்றச்செய்ய வல்லது இனி அடியேனைப் பரிவோடு கடைக்கணித்து விடைகொடுத்தனுப்பக் கடவீரெனப் பணிவாக மொழிந்தனர். வசிஷ்டமஹாமுனிவர் அம்மொழிகளைக் கேட்டருளி, நீர் அவசியமாக என்னுடைய ஆதித்தியத்தைக் கைக்கொண்டே பின் செல்லக் கடவீரென, மீண்டும் பலவாறுரைத்து, அவரை யுடன்படுத்திப் பேருவகை கொண்டனராய்க் காமதேனுவை யழைத்து, அதை நோக்கி, விண்ணுலகத்துப் பசுவே! யாம் இவ்விசுவாமித்திரப் பேரரசருக்கும், அவரது ஏவலாளருக்கும், படைவீரருக்கும் அதிதிபூசைசெய்யக் கருத்துக்கொண்டிருக்கின்றோம். நீ எம்மாற்றத்தின்படி இவர்கள் யாவருக்கும் தித்திப்பு, புளிப்பு, துவர்ப்பு, காரப்பு, கைப்பு, உவர்ப்பு என்னப்படும் நல்ல அறுசுவையுண்டிகளையும், விரைவாகப் படைக்கக்கடவை. அறுவகைச்சுவைகளில் எவரெவர்க்கு எது எது விரும்பப்படுமோ அதையதைக் குறைவின்றி நிறைவாக உவந்து ஈயக்கடவை. உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்னப்பட்ட பலவகையுணவுகளையும் உண்டுபண்ணி யாவரையுங் களிப்புறச் செய்யாயென்று ஆஜ்ஞை செய்தருளினர்.

பாலகாண்டத்தில் ஐம்பத்திரண்டாவது சருக்கம்
முற்றிற்று.

## ஐம்பத்துமூன்றாவது சருக்கம்.

### விசுவாமித்திரர் வசிஷ்டர் பரிந்திட்ட உண்டிகளை யுண்டு காமதேனுவை யாசித்தது.

ஸ்ரீரகுநந்தனனே! இவ்வண்ணம் வசிஷ்ட பிரமரிஷியால் கட்டளையிடப்பட்ட தெய்வசுரபி உடனே விசுவாமித்திரமஹாராஜாது சேனைகளில்

யார் யார்க்கு யாது யாது வேண்டுமோ அவரவர்க்கு அதனை அதனை நிறைவாகப் படைத்துத் தந்தது; அவர்களுள் சிலருக்குக் கருப்பஞ்சாற்றையும், சிலருக்குத் தேனையும், சிலருக்குப் பொரியையும், சிலருக்குப் பலவகை மதுவையும், மற்றுஞ்சிறந்த பானவஸ்துவையும், மிக்க அறுசுவை யுணவுகளையும், அப்பொழுதே சமைத்தனபோலச் சூடுகையாறாமல், மலைகள்போலக் குவிந்த அன்னக்குவியலையும், அதற்குத் தக்க பருப்பு, பொரியல், வறல், தீயல், துவட்டல், பச்சடி முதலிய பற்பல கறி வகைகளையும், தயிர், மோர், பால், நெய், பானக முதலிய உணவின் வகைகளையும், இவற்றை யெல்லாம் அந்தந்தற் றகுதிய பலவகைப் பொற் கலங்களையும் செய்தமைத்தீத்தமையினால், விசுவாமித்திரப் புரவலர் முதலிய யாவரும் வயிறாரவுண்டு மனநிறைவடைந்து களிப்புற்றிரு மாந்தவர்களாயினார்கள். இவ்வாறு விசுவாமித்திரமஹாராஜரும், புத்திரர்களும், மித்திரர்களும், படைத்தலைவர்களும், படைவீரர்களும், மற்றும் பலரும் குறைவின்றி உண்டு களித்தபின், காதிநந்தனர் பெருமகிழ்வோடு வசிஷ்டமஹாமுனிவரைத் துதிசெய்து உரைக்கலுற்றார்: வசிஷ்ட மஹாயோகியே! அடியேன் செய்யும் விண்ணப்பத்துக்குத் திருச்செவி சாத்தியருளக்கடவீர்.

రత్నంహిభగవన్నేత ద్రత్నహారీచపార్థివః
తస్మాన్మేశబలాందేహి మమైషాధర్మతో ద్విజః

ரத்நம்ஹிபகவந்நேதத் ரத்நஹாரீசபார்திவ꞉
தஸ்மாந்மேசபளாம்தேஹி மமைஷாதர்மதோத்விஜ꞉

வசிஷ்டபகவானே! இக்காமதேநுவானது உலகத்துக்கு இன்றியமையாத சிறப்புவாய்ந்தபொருள், உலகத்தில் சிறந்தபொருளை அரசனே கைப்பற்றிக் கொள்ளத் தக்கவன், அவனே அவ்வியாபொருளும், இவ்வறத்தின் முறைப்படி இவ்வியாந்தப்பசு என் பொருளேயன்றி, முற்றத் துறந்த வேதியராகிய உமக்கு உரியதன்று; ஆதலினால் இதை எனக்குக் கொடுத்துவிடக்கடவீர். அன்றியும் உமக்கு இவ்வொரு பசுவின் பொருட்டு இலக்ஷம் பசுக்களை யளிக்கின்றேனென்றனர். இங்ஙனம் விசுவாமித்திரப்புரவலர் கூற, வசிஷ்டமஹாமுனிவர் கேட்டு, விசுவாமித்திரமஹாராஜரே! நீர் தருவன நூறாயிரம் பசுக்களே அல்ல; பலகோடி பசுக்களாயினும், யானோ இத்தெய்வப்பசுவைக் கொடுப்பதில்லை; நற்குண நற்செய்கையுள்ள பாகவதனைவிட்டுக் கீர்த்தி எவ்வண்ணமகலாதோ அவ்வண்ணம் இக்காமதேநுவும் என்னைவிட்டுப்பிரிவதன்று; இக்கடவுட்பசுவினால் தான் ஹவ்யகவ்ய பராணஹுதி பலிஹோமாக்கினிஹோத்திர தருப்பண ஸ்வாஹாகார வஷட்கார முதலிய சகல கருமங்களும் குறைவின்றி நடக்கின்றன. எமக்கு எல்லா வித்தைகளும், எல்லாப்பொருள்களும், எல்லாக்களிப்புகளும், இப்பசுவேயன்றி வேறில்லை; மற்றும் பல காரண

களாலும், இப்பசுவை உமக்குக் கொடுப்பதில்லையென்று மறுத்துரைத்தனர். அதுகேட்டு இவ்வேந்தர், சினங்கொண்டு அம்முனிவரை நோக்கி, வசிஷ்டமஹாமுனிவரே! பொற்சங்கிலி, நவரத்தினப்பணிகள், கிம்புரிப்பூண்களால் அலங்கரிக்கப்பட்ட பதினாலாயிரம் மதயானைகளையும், நான்கு வெள்ளைக் குதிரைகளைப்பூட்டிக் தங்கமணிகளால் கணகணவென்று ஒலிசெய்கின்ற எண்ணூறு பொற்றேர்களையும், சிந்துபாரஸீகாதி தேசங்களிலுண்டாகி உத்தமசாதியாகிய பதினாயிரம் அசுவங்களையும், நானாவித நிறமமைந்த முகலீற்றுக் கன்றுகளுள்ளவையும், மிகுதியும் பால் சுரப்பனவுமாகிய ஒருகோடி வெள்ளைப்பெரும் பசுக்களையும், யானுமக்குத் தருகின்றேன், இவ்வொரு காமதேநுவைமாத்திரம் எனக்கு நீர் கொடுக்கக்கடவீர் இவையுமன்றி எவ்வளவு இரத்தினங்களையாயினும், எவ்வளவு தங்கங்களையாயினும், மற்றும் எப்பொருள்களையாயினும், நீர் பெறவிரும்பிய எப்பொருளையாயினும் அளிக்கின்றேன். இப்பசுவைமாத்திரம் நீர் எனக்குக் கொடுத்துவிட வேண்டுமென்று பலவாறாக நெருக்கிக் கேட்டனர் இவ்வாறு இவ்விசுவாமித்திர நரபதி வேண்டிக்கொண்டும், அவ்வருந்ததி நாயகர் இவற்றையெல்லாம் சிறிதேனும் நன்குமதியாமல், விசுவாமித்திர மஹாராஜரே! நீர் எப்பொருளைத் தருவீராயினும் யாமோ இப்பசுவைத் தருவதில்லை, எமக்கு இதுவே இரத்தினம், இதுவே தனம், இதுவே எல்லாப்பொருள்களும், இதுவே எமதுயிர், இதுவே தர்சபூர்ணமாஸாதிகளாகிய ஸகல யாகங்கள், இதுவே எமக்குப் பற்பல நல்வினை பயக்குங் கிரியை, யாம் செய்யும் சடங்குகள் யாவும் இதனடியாகவே நடக்கின்றன இனிப் பலவாறுரைப்பதற் பயனென்ன? எவ்வகை நீர் இரந்து கேட்பினும் இக்காமதேநுவை யாமோ எவனுக்குங் கொடுப்பதில்லை, இதுவே எமது முடிந்த துணிவு, ஆதலால் இதனை விரும்பிக்கேட்டல் பயனற்றதென றிவ்வாறு மறுத்துரைத்தனர்.

பாலகாண்டத்தில் ஐம்பத்துமூன்றாவது சருக்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்துநான்காவது சருக்கம்.

### விசுவாமித்திரர் காமதேநுவினிடத்துத் தோன்றிய படைகளுடன் போர்செய்தது.

---

இவ்வகைப் பலபடவேண்டியும், வஸிஷ்டமகாமுனிவர் காமதேநுவைத் தருவதில்லையென ஒரே மொழியாக மறுத்துரைத்த காலையில் விசுவாமித்திரமகாராஜருடைய ஏவலால் போர்சேவகர் சினங்கொண்டு

வஸிஷ்டமஹாமுனிவரது பசுவைத் தம் வலிமையால் கொண்டுபோக நினைத்திழுத்தனர். இவ்வண்ணம் முறைவழுவி இழுக்கப்பட்ட அக்கடவுட் பசு துயரமடைந்து கண்ணீர் பெருக ஏங்கி, என்னைப் பாதுகாப்பவராகிய வஸிஷ்டமஹாயோகி என்னைக் கைசோரவிட்டாரோ? என்னவோ? இல்லாவிடின் விசுவாமித்திரன் படைவீரர்கள் ஏன் என்னைப்பற்றி வலிக்கின்றனர்? வசிஷ்டமகாமுனிவர்க்கு யான் ஏதேனும் தவறிழைத்தேனோ? இல்லையாயின் அவரையே உற்றதுணையெனத் தேறி இருக்கின்ற என்னை இவ்வாறு பராமுகஞ்செய்துவிடுவாரா? என இங்ஙனம் பற்பலவாறு கருதி உடனே தன்னைப்பற்றி வலிப்பவர்களை யுதறிப் பத்துத்திசைகளிலுந் தூரத்திவிட்டு வாயுவேகமாகக் கடுகி வசிஷ்டமகாமுனிவர் வீற்றிருக்குமிடஞ் சென்று, அவரது திருவடியிணையைக் கிட்டிக் கூவென்று புலம்பாநின்று; அடிகளே ஸ்வாமி பிரஹ்மபுத்திரராகிய வசிஷ்டமஹாமுனிவரே? என்னை விசுவாமித்திரனுடைய படைவீரர்கள் பற்றி இழுக்கின்றார்களே தேவர் என்னைக் கைநெகிழ விட்டீரோ எனக் துந்துபிபோலப் பெருமிதமாக வினவ, அதுகேட்டு வசிஷ்டமகாமுனிவர் மறுமொழி யருளிச்செய்கிறார். கேடவுட்பசுவே! எமக்குத் தங்கைபோல விருக்கின்ற உன்னை இங்ஙனம் மனம்வருந்தும்படி யாம் விடுவோமா? ஒருகாலும் விடுவதில்லை, நீயும் எமக்கு ஒரு சிறிது குற்றமும் செய்யவில்லையே, இவ்விசுவாமித்திரமஹாராஜன் தன் படைவலியால் செருக்குக்கொண்டு என்னை மதிக்காமல் உன்னைக் கொண்டுபோக முயல்கின்றான், இவன் வேந்தனாயிருக்கின்றமையால், யோகியான யாம் இம்முடிவேந்தன்போல வலியுடையோமாவோமா? இவன் அரசகுலத்தில் தோன்றினவனாகவும், அரசுபுரிபவனாகவும், ரதகஜதுரகபதாதிகள் நிறைந்த இவ்வக்ஷௌஹிணி சேனைகளுடையானாகவுமிருக்கின்றமையால், இவன் மிகுதியுந் திண்மையுடையானாக இருக்கிறான் இவனைத் தடுக்க எம்மா லெங்ஙனே மியலுமெனச் சொல்லி யருளினர். என்றிவ்வண்ண மருளிச்செய்ததைச் செவியேற்றுக் காமதேனு வஸிஷ்டப்பிரம ரிஷியை நோக்கி —

నబలంక్షత్రియస్యాహు బ్రాహ్మణోబలవత్తరః
బ్రహ్మన్ బ్రహ్మబలందివ్యం క్షత్రాత్తుబలవత్తరం

நபலம்க்ஷத்ரியஸ்யாஹு ப்ராஹ்மணோபலவத்தர:
ப்ரஹ்மன்ப்ரஹ்மபலந்திவ்யம க்ஷத்ராத்துபலவத்தரம.

பிரமவொளி யமைந்த தபோநிதியே! அரசருக்கு விப்பிரரினும் வலியிலதென்பார்கள். அந்தணரே சிறந்த வலியுடையவர்கள், ஆதலால் திவ்வியமாகிய வேதியர்வலி அரசர் வலியினும் மிக்கது, அன்றியும் தேவருடைய திண்மையோ எல்லையிலது, விசுவாமித்திரன் உம்மை ஒப்பவனல்லன், தேவருடைய தேஜஸை நெருக்க யாவர்க்கு மரிது.—

నియుఙ్క్ష్వమాంమహాభాగ త్వద్బ్రహ్మబలసంభృతాం
తస్యదర్పబలంయత్తన్నాశయామిదురాత్మనః

நியுங்க்ஷ்வமாம்மஹாபாக தவத்பரஹ்மபலஸம்ப்ருதாம்
தஸ்யதர்ப்பபலம்யத்தந் நாசயாமிதுராத்மநঃ

ஸ்வாமி மகானுபாவராகிய தேவருடைய பிரஹ்மபலத்தால் வளர்க்கப்பட்ட என்னை ரக்ஷி யருளக்கடவீர். தீயொழுக்கமுடைய அக்கௌசிகனுடைய செருக்கின்மிண்மை அனைத்தும் தொலைத்துவிடுகிறேன். என்றிங்ஙனம் பணிவாக விண்ணப்பஞ்செய்தது. அதுகேட்டு அப்பெருந்தவச்செல்வர் தேவசுரபியை நோக்கி, கடவுட்பசுவே! நின்மனத்தின்படியே அவ்வரசன் படைகளை யழிவுசெய்தற்கேற்ற படைவீரர்களை நீ படைத்துக்கொள்ளென்று கட்டளையிட, அவ்வாணையைக் கருத்திற்கொண்டு காமதேனு ஓங்காரஞ்செய்கையில், அதிலிருந்து பப்பரரென்னும் துருஷ்கஜாதிப் படைகள் பலவகையாய்த்தோன்றி, விசுவாமித்திரருடைய படைகளை அழிவுகண்டன. அதைக் கண்ணுற்றுக் காதிநந்தனர் கடுஞ்சினங்கொண்டு கண்சிவந்து தோமீதிவர்ந்து வரம்பில்லாத பலபல படைகளை யெய்து, அக்காமதேனுவின் படைகள் யாவற்றையுங்கொன்று வெற்றிகொண்டனர். உடனே கடவுட்பசுவுஞ் சீற்றம் விஞ்சி, செண்பக மலர்களின் தாதுக்கள்போலச் சிவந்து நீண்ட வாள் முதலிய படைக்கலங்களை ஏந்தி விளங்குகின்ற சகரென்வும், யவனரென்வும் பெயர்பெற்ற துருஷ்கஜாதிப் படைகளைப் படைத்தது. உடனே பாரெங்கும் பரவி நிறைந்து போர்செய்கின்ற அப்படைத் தொகைகளைக்கண்டு விசுவாமித்திரமஹாராஜனும் விரைவாகப் பற்பல தேவாஸ்திரங்களுரிய அம்புகளை வில்லில் தொடுத்து எய்யாநிற்கையில், அவற்றைத் தடுப்பதற்கும், பொறுப்பதற்கும் வலியிலராகி அந்த யவன காம்போஜ பப்பரவர்கள் சிதறுண்டு துன்புழந்து புறங்காட்டி யோடினார்கள்.

பாலகாண்டத்தில் ஐம்பத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று

---

## ஐம்பத்தைந்தாவது சருக்கம்.

### விசுவாமித்திரர் தோல்வியடைந்து தவஞ்செய்து மீண்டும் வஸிஷ்டருடன் போர்செய்தது.

---

இவ்வண்ணங் காதிநந்தனருடைய படைக்கலங்களினால் மோஹமடைந்த யவன, காம்போஜ, பப்பரர்களது ஆகுலங்களைக்கண்டு, வஸி

ஷ்டமகாமுனிவர் மீளவும் படைகளைப் படையென்த தெய்வப்பசுவுக்குக் கட்டளையிடுதலும், காமதேனு தன்னுடைய யோகமகிமையால் தானிட்ட முக்காரத்தினின்றும் கதிரவன்போல் ஒளிவிடுகின்ற காம்போஜர்களையும், மடியினின்றும் பப்பரர்களையும், யோனிப்பிரதேசத்தினின்றும் யவனர்களையும், (சகிருத்து) சாணம் போடுகின்ற வழியினின்றும் சகரென்பவர்களையும், மயிர்க்கால்களினின்றும் மிலேச்சர்களையும்; ஹாரீதர்களையும், கிராதர்களையும்படைத்தது அப்படைக்கப்பட்ட வீரர்களால் விசுவாமித்திரரது சேனைவீரர்கள்யாவரும் கொலையுண்டார்கள். இதைக்கண்டுவிசுவாமித்திரர் குமாரர் நூற்றுவரும் கடுஞ்சினங்கொண்டு, இவ்வெல்லாம் வசிஷ்டரால் விளைந்தனவென்று அம்மஹாமுனிவரைக் கொலைபுரியக்கருதிப் பலபல படைகளைத் தாங்கநின்று, வசிஷ்டமஹாமுனிவருக்கெதிரில் விரைந்து வருகையில், வசிஷ்டமுனிவரும் சாலச்சினந்து ஒரு ஹுங்காரஞ்செய்து அதிற்பிறந்த தீயினாலேயே இந்நூற்றுவரையும் படைகளுடன் எரித்துவிட்டனர். இவ்வாறு சாம்பலாகச் செய்யப்பட்ட நூறு மைந்தர்களையும் கண்டு மிக்க ஆற்றுத்துயரத்தையும், நாணத்தையு மடைந்து, பெறலரிய மக்களு மிறந்தனரே படைகளும் மடிந்தனவே யென்பு பலவாறுக உள்ளங்கவன்று, கரைபுரண்டு பொங்கிய கடல்போலவும், பற்பிடுங்கிய பாம்புபோலவும், இராகு கேதுக்களால் பற்றப்பட்ட சூரியன் போலவும், சிறகறுப்புண்ட பறவைபோலவும், செருக்கழிந்து முகத்தினொளிமாழ்கி, மனக்கிளர்ச்சியற்று, எதிர்செய்யுஞ் செயலற்று, தமது வலியையும், செல்வத்தையும், இகழ்ந்துரைத்துக்கொண்டு, மீண்டு தன்னகரமேவந்தடைந்து, அங்கு வசிஷ்டருடைய சினத்தியால் மடியாதுள்ள தநயனுக்குப்பட்டங்கட்டி, அரசாளும்படி நிறுத்தித் தவஞ்செய்து வரம்பெற்று வசிஷ்டமஹாமுனிவரை வெற்றிகொள்ள வேண்டுமென்று கானகஞ்சென்றனர். கின்னரர், விஞ்சையர், உரகர் முதலியோரால் வணங்கப்படும் இமயமலையினருகில் உமாநாயகரது அருளைப்பெறவேண்டிக் கடுந்தவம் நெடும்பகல் செய்கையில், ஐம்முகக்கடவுள் நந்திவாஹனராகி இவ்விசுவாமித்திரர் கட்புலனுக கெதிரே தோன்றி, விசுவாமித்திரரே! நீர் ஏன் தவம்புரிகின்றீர் உமதெண்ணம் யாது? அதை வெளிப்படவிளம்பக்கடவீர் உமக்குவேண்டுவனவற்றைத்தருதற்காகவே யாம் நந்திவாஹனாரூடராகி வந்து நிற்கின்றோமென்று சொல்லியருள, கௌசிகமகாமுனியும் கண்விழித்து மங்கைபாகனைத் தரிசித்து வந்தனஞ்செய்து ஸ்வாமீ சாம்பசிவனே! நீர் அடியேன்மீதருள்கொண்டிருப்பதுண்மையாயின், தேவருடைய கருணையினா லடியேனுக்குத் தனுர்வேத முழுதும் அங்கோபாங்க ரகசியங்களுடன் எனது அறிவினிடமாகத் தோற்றக்கடவன. மற்றும் தேவதானவாதியரிடத்துள்ள அத்திரங்களும் எனிடத்துண்டாகக்கடவன; இதுவே அடியேனுக்கு வேண்டும் வரம்; இதனைத் தேவர் அடியேனுக்கு அருள்செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்ட

னர். சங்கரும் அப்படியேயாகக்கடவதென்று வரங்கொடுத்துத் தமதிரு ப்பிடமே போய்ச் சேர்ந்தனர். விசுவாமித்திரர் ராஜரிஷியாகி அப்படைக் கலங்களை யாவற்றையும் பெற்றுப் பூரணைகாலத்தில் அலைகடல்பொங்குவ துபோல அகமகிழ்ச்சியாற்பெருகி, இறுமாப்புற்று,இனிவசிஷ்டர் இறந்து விட்டாரென்றே துணிவுகொண்டு, மீளவும் வசிஷ்டாச்சிரமமடைந்து, பற் பல கணைகளைத் தொடுத்தெய்தனர். அதனால் வனமுழுது மெரிந்துவிடக் கண்டு, அங்குள்ள ரிஷிகள் யாவரும் பயங்கொண்டு பலவழியாகவோடிப் போயினர்கள் அப்பொழுது பசுப் பறவை விலங்கு முதலிய யாவும் பய ந்து புறம்பே சென்றமையால்,வெறும் பாழாயுள்ள அவ்வாச்சிரமத்தைக் கண்ணுற்று வசிஷ்டமகாமுனிவர் மிகவெகுளிகொண்டு, ஆச்சிரமத்துள் ளீரே! நீயிர் அஞ்சலிமின் அஞ்சன்மின்; பாற்கரன் பனித் துளியை நாசஞ்செய்வதுபோல யாம் இக்கௌசிகனை நாசஞ்செய்து விடுகிறோ மென்று அவர்களுக்கு அபயங்கூறி, விசுவாமித்திரரை நோக்கி விசுவா மித்திர! நெடுநாளாக என்னால் காக்கப்படும் இவ்வாச்சிரமத்தை நீ அழி வுசெய்தமையால் இனிவாழ்ந்திராய்; இப்பொழுதே உன் செருக்கை யட க்கிவிடுகிறேன் பாரரென்று வீரவாதஞ்செய்து, விரைவாக புகை நீங்கிய காலத்தீயைப் போலவும், வேற்றுருக்கொண்ட யமதண்டத்தைப் போலவு மிருக்கின்ற பிரமதண்டத்தைத் திருக்கையானமேலெடுத்துக் கொண்டு நின்றார்.

பாலகாண்டத்தில் ஐம்பத்தைந்தாவது சருக்கம்.

முற்றிற்று.

## ஐம்பத்தாறுவது சருக்கம்.

### விசுவாமித்திரர் வசிஷ்டருடன் போர்புரிந்த விதம்.

வசிஷ்டமகாமுனிவரால் இவ்வாறு சொல்லப்பட்ட விசுவாமித்திர ரும் ஆக்கினேயாஸ்திரத்தைக் கரத்திலெடுத்து, வசிஷ்டர் நில் நில்லென் று சொல்லிக்கொண்டே, அதனை எய்யும்படி முயன்றார். அதுகண்டு வசி ஷ்டமகாமுனிவரும் பிரமதண்டத்தை மேலெடுத்து ஓ விசுவாமித்தி ர க்ஷத்திரியபந்துவே! நாமிதோ உன் முன்பே நிற்கின்றோம்; உனது வல்ல மையை முற்றும் செலுத்தக்கடவை. உன் சாஸ்திரங்களின் வலி மையை இப்பொழுதே நாசஞ்செய்து விடுகிறோம்.

క్వచ తేజః క్షత్రియబలం క్వచ బ్రహ్మబలం మహత్
పశ్య బ్రహ్మబలం దివ్యం మమ క్షత్రియపాంసన

க்வசதேஜக்ஷத்ரியபலம க்வசப்ரஹ்மபலமமஹத
பச்யப்ரஹ்மபலநதிவ்யம மமக்ஷத்ரியபாம்ஸந.

அடா க்ஷத்திரியாதமா ! உன்னுடைய க்ஷத்திரிய பலமெங்கே ? என்னறகரிய பிரமபலமெங்கே ? திவ்வியமாகிய எமமுடைய பிரமபலத்தை இப்பொழுது காட்டுகிறேம பாரென்று கடுங்கோபத்துடன அருளிச்செய்து, அவவாக்கினை யாஸ்திரத்தைப் பிரமதண்டத்தால் தடுத்தருளினா. அது தணணீரால தணிதத தீ வெகுந்தணிவதுபோலத் தணிந்து விட்டது. கௌசிகரும அதுகண்டு வெகுளிகொண்டு வாருணம், ரௌத்ரம, ஐந்திரம, பாசுபதம, ஐஷீகம, மானவம, மோஹனம, காந்தருவம், ஸ்வாபனம, ஜிருமபணம, மாதனம, ஸந்தாபனம, விலாபனம, சோஷணம, தாரணம, வஜ்ரம, பிரமபாசம, காலபாசம, வருணபாசம, பைநாகாஸ்திரம, தயிதம, சுஷ்காசனி, ஆர்த்திராசநி, தண்டாஸ்திரம, பைசாசம, கிரௌஞ்சம, தருமசக்கரம, காலசக்கரம, விஷ்ணுசக்கரம, வாயுவியம, மதநம, ஹயசிராஸ்திரம, இரண்டு சக்திகள, கங்காளம, முஸலம, வைத்தியாதராஸ்திரம, காலாஸ்திரம, தாருணாஸ்திரம, திரிசூலம், கோரம, காபாலம, கங்கணம என்றிவ்வகைப்பட்ட அஸ்திரங்களை இடைவிடாது வஸிஷ்ட பிரமரிஷிமீது பிரயோகஞ் செய்தனா. அம்முனிவரும அதிக சினங்கொண்டு பிரமதண்டத்தினுலே அவவஸ்திரங்கள எல்லாவற்றையும கவாந்து அடக்கியருளினா

கண்கூடாகக கணடிருந்த யாவரும வியப்புறும்படி அவ்வஸ்திரங்களெல்லாம பயனபடாது அழிந்துவிடுதலும, இவவிசுவாமித்திரா பெருங்கோபங்கொண்டு பிரமாஸ்திரத்தை எடுத்தெய்தனா அதுகண்டு அக்கினி முதலிய தேவாகளும, தேவரிஷிகளும, கந்தருவரும, மஹோரகாதியரும அச்சமடைந்தோட, மூன்றுலகங்களும நடுங்கின, அங்ஙனங் கலக்குங்காலையில் பிரம்மதேஜோமயமாகிய அவ்வஸ்திரத்தையும,பிரமதேஜோமயமாகிய தமது பிரமதண்டத்தினுலே விழுங்கியடக்கியருளுகையில,எரிகின்ற அம்முனிவரது திருமேனியைக்கண்டு மூவுலகத்தினரும மோகமடைந்தனாகள். அவரது திருமேனியின மயிர்க்கால்களினின்றும புகைசூழ்ந்த தீக்கணங்கள புறப்பட்டன வஸிஷ்டமஹாமுனிவா திருக்கையிலிருக்கினற பிரமதண்டமும், காலாக்கினிபோலவும், யமதண்டம்போலவும விளங்கியது. பின்னா முனிகணங்கள் அஞ்சுதலொழிந்து வஸிஷ்டமஹாமுனியை நோக்கி, ஸ்வாமீ பிரமமுனியே ! தேவருடைய இன்னம வரம்பிலது. தேவரால் விசுவாமித்திரா நிராகரிக்கப்பட்டார், ஆதலால், தேவர் திவ்வியதேஜஸை

உள்ளடக்கியருளவேண்டும்; முனிவர்பிரானாரே! தேவா, சினந்தணிந்து சாந்தியடையக்கடவீர். உலகங்கள் பயம் நீங்கி, மகிழக்கடவர்களெனப்பல வாறாகத் துதிசெய்ய, உடனே அதற்கிசைந்து சிறந்தணிந்து சாந்தராயினார். இவ்வகையா விஸ்விசுவாமித்திரரும், தோல்வியடைந்து நாணமும் ஆறாத்துயரமுங்கொண்டு நெட்டுயிர்ப் பெறியாநின்று,

ధిగ్బలంక్షత్రియబలం బ్రహ్మతేజోబలంబలం
ఏకేనబ్రహ్మదణ్డేన సర్వాస్త్రాణిహతానిమే

திகபலம்க்ஷத்ரியபலம் பிரஹ்மதேஜோபலம்பலம்
ஏகேநப்ரஹ்மதண்டேந ஸர்வாஸ்த்ராணிஹதாநிமே

க்ஷத்ரியபலமே அவமதிப்புக்கிடமானதென்றுணராமல் இதுவே உயர்ந்ததென்றெண்ணியன்றோ யானிப்பங்கத்தையடைந்தேன்; துறவிகளுக்குள்ள வேந்தன் ஒருமபெருமையை உணராமற்போனேனே, அந்தோ கெட்டேன்; பிரம தேஜோபலமே தன்னேறொப்புயர்விலது ஒருபிரமதண்டத்தினாலே என்னுடைய எல்லா அஸ்திரங்களும் வலிகுறைந்தழிந்தனவே. ஆதலால், இனி அரசத்தின்மையே பெரிதென்று எண்ணிய இறுமாப்பொழிந்து, கலக்கமற்றுத் தெளிந்த ஐயுணர்வோடு கூடிய தூயநெஞ்சுடையேனாகி, பிரம தேஜோபலம் பெறுதற்குக் காரணமாகிய கடும்பெருந்தவஞ் செய்வேனென? அங்குள்ளயாவருமுணர உரைத்துப் போர்க்களத்தினின்று மீண்டனர்.

பாலகாண்டத்தில் ஐம்பத்தாறாவது சருக்கம்
முற்றிற்று.

## ஐம்பத்தேழாவது சருக்கம்.

### திரிசங்குமஹாராஜன் யாகஞ்செய்ய முயன்றது.

விசுவாமித்திரப் புரவலர் வசிஷ்டமகாயோகி செய்தமானக்கேட்டைப் பலமுறை எண்ணி வெப்பங்கொண்ட மனமுடையாராய்ப் பெருமூச்செறிந்து, இனிப் பெரும்பயன் தரவல்லரல்லாத அரன் முதலியவர்களைக் குறித்துத் தவஞ்செய்வதினால் பயனிலதெனத் துணிந்து, தம் தேவியுடன் புறப்பட்டுச் சாரவதிக்குத் தென்புறத்தில் இடனமைத்துக்கொண்டு, கனி காய் கிழங்குகளை அருந்திப் பன்னெடுநாள் தவம்புரிந்தனர். அப்பொழுது ஹவிஷ்யந்தன், மதுஷ்யந்தன், திருடநேத்திரன், மஹாரதனென்னும் நற்குணமுடைய நான்கு புத்திரர்கள் பிறந்தனர்கள். அவ்வண்ணம் இல்லறந்தவறாது

வேள்விசெய்விக்கவல்லவெம்பெற்றோருந் தந்தைநின் இதத்தை நாடியிருக்க, அவருக்கு இகழ்வுண்டாமாறு யாங்கள் நின்காரியத்தை எவ்வாறு முயன்று முடிப்போம்; "கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது" என்பதுபோல நினக்குத் தோன்றவில்லை; நீ வீணே கெடவேண்டாமென்று சினந்து மறுத்துரைத்தனர். அம்மொழிகளைச் செவியேற்ற திரிசங்குப் புரவலனும் மேல் விளையுங் கேட்டை யுணராதவனாய்க் கடுஞ்சினங்கொண்டு அந்நூற்றுவரையும் நோக்கிக் குருகுமாரர்களே! என்னை ஆசிரியரும் மறுத்து, ஆசிரியர் சிறுவர்களாகிய நீயிரும் மறுத்துவிட்டமையால் இனி என்மேல் தவறிலது; யான் கருதியதைக் கருதியவாறு முடிக்கத்தக்க வேறாசிரியரைத் தேடி வேள்வியை முடித்துக்கொள்கிறேனென் றுரைத்து மீளுகையில், அந்நூறு சிறுவர்களும் இவனது இறுமாப்பையறிந்து வெகுண்டு அட்டா அறிவில்லானே! நீ இவ்வாறு நீசபுத்தி செய்ததனையால் நீ நீசனாகக் கடவையெனச் சாபமிட்டுத் தம்மாச்சிரமத்தினுட்புக்கனர்கள். பின்னர் திரிசங்கு மன்னன் அவர்களை எதிர்க்கும் வலியில்லானாய்ச் சாபவலியால் சண்டாளத்தன்மையடைந்து துயரமிகுந்து அக்கானகத்திலேயே அன்றிரவைப் போக்கி, மறுநாள் உதயத்தில் அயோத்தியா நகரமேவந்து, தான் தரித்த பீதகவாடை கரிச்சீலை யாகவும், யஜ்ஞோபவீதம் தோல்வடமாகவும், பொன்னணிகள் இரும்பணிகளாகவும், கலவைச்சாந்து சுடலைச்சாம்பராகவும், வெற்றிமாலை சவமாலையாகவும், நீண்டு கறுத்துக் கடைகுழன்ற கேசம் குறுகிய செம்மயிர்த்திரளாகவும் மாறி, அரசர்க்குரிய ஒளிமழுங்கிக் கொலையாளர்போல நிற்கின்ற அவ்வரசனைக் கண்ணுற்று அமைச்சர் முதலிய யாவரும் இவனை அணுகாமலோடிப்போயினார்கள். ஸ்ரீகாகுத்த குலதிலகரே! அதுகண்டு திரிசங்கு மன்னனொருவனும் தனியனாய்ப் புறம்போந்து, அல்லும்பகலும் சோகத்தால் உணர்வு மழுக்கமுற்று, காடுசெடி நாடுநகரங்கள் கடந்து, கௌசிகர் வசிஷ்டரைப் பகைத்தவராதலால் அவரைச் சரணமடைந்தால் நம்மைக் காப்பாரென எண்ணங்கொண்டு, அவர் தவம்புரியும் இடத்தைத்தேடி யெய்தினன். தம்மைத் தேடிவந்த திரிசங்குவை விசுவாமித்திரமகாமுனி கண்டு, அயோத்திமாநகருக்கு அதிபதியாகிய திரிசங்குராஜனே! நீ இங்குவந்த காரணம் யாது? நீ புலையனானதற்கு என்னகாரணம்? இவ்வாறு சபித்தோர் யாவர்? என உள்ளன்போடு வினவியருளுதலும், அரசன் அவர் நெஞ்சிரங்கும்படி விஞ்ஞாபனஞ்செய்யலாயினன். கௌசிக மகாமுனிவரே! யான் இம்மானுடவுடம்போடு விண்ணுலகேறவேண்டுமெனக் கருத்துற்று அதற்குரிய ஒரு வேள்விசெய்விக்கவேண்டுமெனப் பலவாறிரந்து கூறியும், அதற்கிசையாமல் வசிட்டரும் அவர் புத்திரர்களும் மறுத்துவிட்டதன்றியும், புலையனாம்படி சாபமுமிட்டனர்கள். என் கருத்து நிறைவுபெறாவிடினும், "பிள்ளையார்பிடிக்கக் குரங்காய் முடிந்தது" போல புலைத்தன்மையுறும்படி நேர்ந்தது: யான் இதுகாறும் அசுவமே

தம் நூற்றியற்றினேன், அவையும் பயன்படாதனவாயினவே; எவ்விடுக்கணே ர்ந்தகாலத்தும், யான் பொய்ம்மைகூறியறியேன். இனியேனும் பொய்ம் மைகூறக் கருதினும் என் நாவெழாதன்றோ; என் அரசிசறத்தின் திருவாணை மெய்ம்மையை அன்றிப் பொய்ம்மையை மறந்தும் கூறேனென்று துணிவு கொண்டிருக்கிறேன் இம்மட்டோ; மற்றும்பலவகைப்பட்டவைதிககருமங் களும் புரிந்தனன். என் ஆணைக்குள்ளடங்கி வாழும் குடிகளை அரசநீதி கோடாமல் பாதுகாத்துவந்தேன். தெய்வம், குரு, பிதிரா, விருந்தினா முதலியோரை விதிப்படி பூசனைபுரியறிவந்தேன். இவ்வண்ணம் அறத்தி னொழுக்கத்திலே சலியாமனின்று யாகஞ்செய்யமுயன்ற அடியேனை ஆசிரி யரும், அவர் திருக்குமாரர்களும் உகந்தருளாமலசீறறங்கொண்டனர்கள்.

దైవమేవపరంమన్యే మానుషంతునిరర్థకం

దైవేనాక్రమ్యతేసర్వం దైవంహిపరమాగతిః

தைவமேவபரம்மந்யே மாநுஷந்துநிரர்த்தகம்

தைவேநாக்ரம்யதேஸர்வம் தைவம்ஹிபரமாகதிஃ

யான் எல்லோரினும் ஸ்ரீ சர்வேசுரரே சிறந்தவரென்று எண்ணுகின் றேன். மனிதருடைய முயற்சிபயனற்றது, ஸ்ரீயப்பதியால் ஆகாதகாரியம் ஒன்றுமில்லை; அம்முகற்பெருங்கடவுளே யாவருக்குந் தஞ்சம்; இங்ஙன மில்லையாயின் என் முயற்சிகள் ஏன் பயனற்றனவாயின? ஆதலால்தெய்வத் தால் கெடுக்கப்பட்ட என் கருமத்தைத் தேவரே அருள்செய்து முடிக்க வேண்டும்; தேவர்க்குமங்களமுண்டாகுக. தேவரையானடைக்கலபுகுந்தபின் இனி வேறொருவரைத் தேடிச்செல்லேன்; அங்ஙனஞ் செல்லினும், தேவ ரைப்போன்ற வேறு தஞ்சமுமில்லையன்றோ; தேவர் புருஷகாரத்தால் என் தீவினையைத் திருத்தி நல்வினையாக்கி அருள்க்கடவீரெனப் பணிந்து இரந்தனன்.

பாலகாண்டத்தில் ஐம்பத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்பதாவது சருக்கம்.

### கௌசிகர் திரிசங்குவுக்கு யாகஞ்செய்விக்க ரிஷிகளை யழைப்பித்தது.

---

தன் குறைகளை எடுத்துச் சொல்லிச் சரணமடைந்த திரிசங்குவை நோக்கி, காதிநந்தனர் இக்ஷ்வாகு குலதிலகா! உன்வரவு நல்வரவாகக் கடவது. நீ மிகுதியும் அறவொழுக்கமுடையாயென யானறிவேன். நின்னை

வேள்விசெய்விக்கவல்லவனைப் பெற்றிருந்தும் தந்தையின் இதத்தை நாடியிருக்க, அவருக்கு இகழ்வுண்டாமாறு யாங்கள் நின்காரியத்தை எவ்வாறு முயன்று முடிப்போம்; "கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது" என்பதுபோல நினக்குத் தோன்றவில்லை; நீ வீணே கெடவேண்டாமென்று சினந்து மறுத்துரைத்தனர். அம்மொழிகளைச் செவியேற்றுத் திரிசங்குப் புரவலனும் மேல் விளையுங் கேட்டை யுணராதவனாய்க் கடுஞ்சினங்கொண்டு அந்நூற்றுவரையும் நோக்கிக் குருகுமாரர்களே! என்னை ஆசிரியரும் மறுத்து, ஆசிரியர் சிறுவர்களாகிய நீயிரும் மறுத்துவிட்டமையால் இனி என்மேல் தவறில்லை; யான் கருதியதைக் கருதியவாறு முடிக்கத்தக்க வேறாசிரியரைத் தேடி வேள்வியை முடித்துக்கொள்கிறேனென் றுரைத்து மீளுகையில், அந்நூறு சிறுவர்களும் இவனது இறுமாப்பையறிந்து வெகுண்டு அட்டா அறிவில்லானே! நீ இவ்வாறு நீசபுத்தி செய்தனையால் நீ நீசனாகக் கடவையெனச் சாபமிட்டுத் தம்மாச்சிரமத்தினுட்புக்கனர்கள். பின்னர்த் திரிசங்குமன்னன் அவர்களை எதிர்க்கும் வலியில்லனாய்ச் சாபவலியால் சண்டாளத்தன்மையடைந்து துயரமிகுந்து அக்கானகத்திலேயே அன்றிரவைப்போக்கி, மறுநாள் உதயத்தில் அயோத்தியா நகரமேவந்து, தான் தரித்த பீதகவாடை கரிச்சீலையாகவும், யஜ்ஞோபவீதம் தோல்வடமாகவும், பொன்னணிகள் இருப்பணிகளாகவும், கலவைச்சாந்து சுடலைச்சாம்பராகவும், வெற்றிமாலை சவமாலையாகவும், நீண்டு கறுத்துக் கடைகுழன்ற கேசம் குறுகிய செம்மயிர்த்திரளாகவும் மாறி, அரசர்க்குரிய ஒளிமழுங்கிக் கொலையாளர்போல நிற்கின்ற அவ்வரசனைக் கண்ணுற்று அமைச்சர் முதலிய யாவரும் இவனை அணுகாமலோடிப்போயினார்கள். ஸ்ரீகாகுத்த குலதிலகரே! அதுகண்டு திரிசங்கு மன்னனொருவனும் தனியனாய்ப் புறம்போந்து, அல்லும்பகலும் சோகத்தால் உணர்வு மழுங்கப்பெற்று, காடுசெடி நாடுநகரங்கள் கடந்து, கௌசிகர் வசிஷ்டரைப் பகைத்தவராதலால் அவரைச் சரணமடைந்தால் நம்மைக் காப்பாரென எண்ணங்கொண்டு, அவர் தவமுயலும் இடனைத்தேடி யெய்தினன். தம்மைத் தேடிவந்த திரிசங்குவை விசுவாமித்திரமகாமுனி கண்டு, அயோத்திமாநகருக் கதிபதியாகிய திரிசங்குராஜனே! நீ இங்குவந்த காரணம் யாது? நீ புலையனானதற்கு என்னகாரணம்? இவ்வாறு சபித்தோர் யாவர்? என உள்ளன்போடு வினவியருளுதலும், அரசன் அவர் நெஞ்சிற்பதியும்படி விஞ்ஞாபனஞ்செய்யலாயினன். கௌசிக மகாமுனிவரே! யான் இம்மானுடவுடலோடு விண்ணுலகேறவேண்டுமெனக் கருத்துற்று அதற்குரிய ஒரு வேள்விசெய்விக்கவேண்டுமெனப் பலவாறிரந்து கூறியும், அதற்கிசையாமல் வசிட்டரும் அவர் புத்திரர்களும் மறுத்துவிட்டதன்றியும், புலையனாம்படி சாபமுமிட்டனர்கள். என் கருத்து நிறைவுபெறாவிடினும், "பிள்ளையார்பிடிக்கக் குரங்காய் முடிந்தது" போல புலைத்தன்மையுறும்படி நேர்ந்தது: யான் இதுகாறும் அசுவமே

தம் நூறியறறினேன், அவையும பயனபடாதனவாயினவே;எவ்விடத்தே ரநதகாலததும, யான பொயயமமைகூறி யறியேன. இனியேனும பொய்ம மைகூறக கருதினுமஎன நாவெழாதன்றோ; என அரசிசறத்தின திருவாணை மெய்மமையை அனறிப பொயமமைமைய மறநதும கூறேனென் றுதுணிவு கொணடிருககிறேன இமமட்டோ;மறறுமபலவகைப்பட்டவைதிககருமங களும புரிநதனன என ஆளுகைககுளளடஙகி வாழும குடிகளை அரசநீதி கோடாமல் பாதுகாத்துவநதேன. தெயவம, குரு, பிதிரா, விருநதினா முதலியோரை விதிப்படி பூசனையியறறிவநதேன. இவ்வணணம அறநதி னொழுககத்திலே சலியாமனினறு யாகஞசெயயமுயனறஅடியேனை ஆசிரியரும, அவா திருககுமாராகளும உகநதருளாமல்சீறறஙகொண்டனாகள்.

దైవమేవపరంమన్యే మానుషంతునిరర్థకం
దైవేనాక్రమ్యతేసర్వం దైవంహిపరమాగతిః

தைவேமேவபரமமநயே மானுஷமதுநிராதகம
தைவேநாக்ரமயதேஸாவம தைவமஹிபரமாகதிः

யான எலலோரினும ஸ்ரீசாவேசுரரே சிறநதவரேனறு எணணுகின றேன. மனிதருடைய முயறசிபயனறறது, ஸ்ரீயபபதியால ஆகாதகாரியம ஒனறுமிலலை; அமமுதறபெருஙகடவுளே யாவருககும தஞசம; இஙஙன மிலலையாயின என முயறசிகளஏன பயனறறனவாயின? ஆதலாலதெயவத தால கெடுககபபடட என கருமததைத தேவரே அருளசெயது முடிக்க வேணடும; தேவாககுமஙகளமுணடாகுக தேவரையானபுகலபுகுநதபின இனி வேறொருவரைத தேடிசசெலலேன; அஙஙனஞ செலலினும, தேவ ரையேயனறி வேறு தஞசமுமிலலையன்றோ; தேவா புருஷகாரததால என தீவினையைத திருததி நலவினையாககி அருளககடவீரெனப பணிநது இரநதனன.

பாலகாணடததில ஐமபததெட்டாவது சருககம
முறறிறறு.

## ஐம்பத்தொன்பதாவது சருக்கம்.

கௌசிகர் திரிசஙகுவுககு யாகஞசெயவிக்க ரிஷிகளை
யழைபபித்தது.

தன் குறைகளை எடுததுச சொலலிச சரணமடைநத திரிசங்குவை நோக்கி, காதிநநதனா இக்ஷுவாகு குலதிலகா! உன்வரவு நல்வரவாகக் கடவது. நீ மிகுதியும் அறவொழுக்கமுடையாயென யானறிவேன். நின்னை

எவ்வகையாலாயினும் யான் பாதுகாத்து நின் எண்ணத்தை நிறைவேற்றுகின்
றேன். இப்பொழுதே மகத்தை இயற்றுவிக்கவல்ல முனிகணங்களை எல்
லாம் அழைப்பிக்கிறேன். அம்மாதவக்குழுவந்தபின்னர் நீயாகஞ்செய்வாய்;
அது முற்றுப்பெற்றபின் குருசாபத்தால் நேர்ந்த இச்சண்டாளச் சரீரத்
துடனே நீ பொன்னுலகை யடைவாய். இனி உனக்கு விண்ணுலகம் உள்
ளங்கையில் கிடைத்ததாகவே யான் துணிகின்றேன். குசிககுலதிலகரான
விசுவாமித்திரரைச் சரணமடைந்த பின்பு உனக்குத் துயரமும் நீங்காதிருப்
பதுண்டோ. நீ அஞ்சேலென்று தேறுதல்சொல்லி உடனே தம்மருகே
யிருந்த மைந்தர்களை நோக்கி, யாகத்துக்கு வேண்டிய பொருள்களைக்குறை
வறச் சேகரிக்கக்கடவீர்களென்று ஆஜ்ஞைசெய்து, மாணாக்கர்களை வருவித்து
நீவிர் பத்துத்திசைகளிலும் விரைந்து சென்று ஆங்காங்குறைகின்ற மாதவர்
களிடத்து, யாம் திரிசங்குவுக்கு வேள்விசெய்விக்கும் செய்தியையுணர்த்தி,
தத்தம் சீடர்களோடும், தநயர்களோடும், நட்பினரோடும் அவர்களை எழுந்
தருளச்செய்துகொண்டு வரக்கடவீர்கள். அவர்களுள் யாவனாயினும் இந்
நற்கருமத்தை நன்குமதியாமல் இகழ்ந்துரைப்பானாயின், அவனுரைத்தவ
ண்ணம் எமக்குரைக்கக்கடவீரென்று கட்டளையிட்டுச்செலவிடுத்தனர்.
அம்மாணவர்களும் ஆசிரியர் ஆணையின்படி முனிவருறைவிடங்களிலெல்
லாஞ் சென்று ஆங்காங்குள்ள தாபதர் யாவரையும் உடன் கொண்டுவந்து
நடந்தவாறு விஞ்ஞாபனஞ்செய்தனர்கள். மகோதயனென்பவனும் முனி
வொருவர் தவிர எல்லாக் காடுமலைகளிலும், மற்றிடங்களிலுமுள்ள அருந்
தவத்தினர் யாவரும் குழுக்கொண்டுவந்தனர்கள். வசிஷ்டபுத்திரர் நூற்று
வரையும் அழைக்கச்சென்ற சீடர்கள் வந்து ஸ்வாமீ! யாங்கள் தேவரீர் நிய
மனப்படி வசிஷ்டமாமுனிவருடைய புதல்வர்களை அழைத்ததற்கு அவர்கள்
சீற்றங்கொண்டு, ஓ! ஓ! இதுமிகுதியும் நன்றுநன்று; வேள்விபுரிபவனோ
புலையன்; புரிவிப்பவனோ அரசன்; அவ்யாகத்தில் வந்து தேவர்கள் தாமெங்
ஙனம் அவிசை ஏற்றுக்கொள்வார்கள்? சண்டாளனது அன்னமாகிய அவ்யாக
சேஷத்தை வாங்கி அருந்தும் அந்தணர்களும் எங்ஙனம் நற்கதியையடை
வார்கள்? அவர்களை நரகத்துக்குச்செல்லவிடாமல் விசுவாமித்திரன் காக்க
மாட்டுவனோ? என்றிவ்வாறாக இகழ்ந்து நகைத்தனர்கள் மஹோதயரும்
இவர்களோடு இணங்கி நின்று நகைத்தனரென்று விண்ணப்பஞ்செய்தனர்
கள். அச்சொல் தமது செவிப்படுதலும், கௌசிகமகாமுனிவர் கண்கள் சிவ
ந்து இதழ்துடிதுடிக்கச் சீற்றங்கொண்டு அடடா? தவவொழுக்கமுள்ள
எமது தவப்பெருமையைச் சிறிதேனும் நன்குணராமல் அவமதித்த அந்
நூற்றுவரும் சாம்பராய் மடிந்து, இன்றுமுதல் எழுநூறு பிறப்புகளில் புலை
யர்களாய்த் தோன்றி, முஷ்டிகரென்னுஞ்சாதியராகிப் பிணங்களையும், நாயி
ன்தசையையும் பிடுங்கித்தின்று, கருணையற்றவர்களாய்க் குரூபிகளாகவும், இ
ழிவுற்றவர்களாயும் நிலையற்று, உலகில் திரிந்தலையக் கடவர்கள். மஹோதயன்

னும் அவர்களுடன் சேர்ந்து என்னை இகழ்ந்தமையால் கொடிய வேடுவ சாதியிற்பிறந்து கொலைத்தொழில்புரிந்து, நெடும்பகல் நரகத்துன்பை நுகரக்கடவனென்று அங்கு வேள்வியின்பொருட்டுவந்த முனிகணங்களினடுவில் நின்று இவ்வாறு சாபமிட்டுக் கோபந்தணிந்து மௌனமடைந்து வீற்றிருந்தனர்.

பாலகாண்டத்தில் ஐம்பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபதாவது சருக்கம்.

### கௌசிகர் திரிசங்குவைச் சண்டாள தேகத்துடன் வானேற்றியது

இவ்வண்ணம் கௌசிகமஹாமுனிவர் வசிட்டபுத்திரர்களையும், மஹோதயனையுங் கடுஞ்சாபமிட்டு, அங்குள்ள ரிஷிகளைநோக்கி, அந்தணர்களே! இவன் இக்ஷ்வாகு மரபிற் பிறந்து திரிசங்கு என்னும் பெயர்பெற்று, ஈகையும் அறமுமுடையவனாயிருந்தனன். இவனிப்பொழுது என்னைச் சரண் புகுந்தமையால் இவன் இவ்வாக்கையோடு விண்ணுலகை அடைவதற்கு எவ்வாறு செய்யவேண்டுமோ? அவ்வாறு நீவிரும் எம்முடன் கூடி யாகத்தைச்செய்து முடிக்கக்கடவீரென ஆணைசெய்தனர். அவ்வுரையை அவ்வேதியர் யாவரும் செவியுற்று இக்கௌசிகர் கடுஞ்சினமே இயல்பாக உடையாராதலால் இவரது கருத்துக்கிணங்க நாம் செய்யாவிடின் நம்மையும் சபிப்பரென்பதற்கு ஐயமில்லையென்று ஒருவரோடொருவர் யோசனைசெய்து இவ்வேள்விக் குடன்பட்டே நலமெனக் கடைப்பிடித்து யாகஞ்செய்விக்கத் தொடங்கி, அதற்கு இன்றியமையாச் செய்வினைகள் யாவற்றையுஞ் செய்தனர்கள். ரித்துவிக்குகளால் தீவளர்க்கப்பட்ட அவ்வேள்வியில் இவ்விசுவாமித்திர மகாமுனி யாஜகராக இருந்துகொண்டு விதியின்படி யாகத்தை நடத்தாநின்று, கடவுளர் வரவேண்டுங்காலத்தில் விண்ணவர்களை வருமாறு மந்திரங்களாலழைத்தும், இவ்யாகம் மறைகளில் எடுத்துக் கூறப்படாதென்று அவிர்ப்பாகம் வாங்க வராமல் நின்றுவிடுதலும், முனிவர் கடுஞ்சீற்றங்கொண்டு கையகத்துடுப்பை உயரவெடுத்துப் பிடித்துத் திரிசங்குவைநோக்கித் திரிசங்குபூபாலனே! இவ்வானவர்கள் நம்முடைய வேள்வியை அணுகி, அவியை உண்ணாமல் நின்றனர்கள். அங்ஙனம் நிற்கினும் நிற்க, என் அருந்தவத்தின் தன்மையால் இதோ யாம் நின்னை இவ்யாக்கையோடு கற்பகநாட்டிடை ஏற்றுவிக்கின்றேன். யாவரேனும் அடைதற்குக்கூடாத இப்புல்லிய உடலையுடையாயாகி

விண்ணுலகை நீ யடை; நின்னை இங்ஙனம் வானுலகை யடைவிக்கவல்ல தவமேன்மை எமக்குள்ளதென்று அருளிச்செய்ததுடன், அங்கெழுந்தருளியிருந்த முனிவர்களுடைய கண்முகப்பே திரிசங்குமேலெழுந்து வானுலகெய்திடினன். அவ்வாறு இவ்வேந்தன் கிட்டுதலும், பண்ணவர்களோடு ஆயிரங்கண்ணன் இவனே வருகையைக்கண்ணுற்று, அடா திரிசங்கு! நீ கடுஞ்சாபத்தால் புலையனாய் விட்டமையால் நினக்கு இவ்வுயர் நிலத்தில் இடம் சிறிதும் கிடைத்தலரிது. நீ மீண்டு படிமிசைச் செல்லக்கடவை யெனத் தலைகீழாகத் தள்ளிவிடுதலும், தலைகீழாக வீழாநின்ற திரிசங்குப் பெருமான் காதிநந்தனரைநோக்கித் தவப்பெருஞ்செல்வரே! அருந்தவாக்கரசரே! உம்மைப் புகலடைந்தேனுகிய தொண்டனேனைக் காத்தல் தம்முடைய கடமையன்றோவென வாய்விட்டலறி முறையிட்டனன். அக்கூக்குரல் செவியுற்றுமுன் இம்முனியரசு கடுஞ்சினங்கொண்டு ஓங்கிநின்று. நில் நில்லென்று தமது தவத்திண்மையால் திரிசங்குவரசனை விண்ணினிடத்திலேயே நிறுத்தி, அங்கு வேறொரு சுவர்க்கமியற்றி அதற்குன்னையே அரசனாக்கித் தருகின்றேனென்ன உரைத்து, வேறு பிரமனைப்போலத் தென்றிசைக்கண் திரிகின்ற வேறு முனிவரெழுவரையும், விண்மீன் திரளையும், சுற்றிலும் சிறிய உடுக்களையும், திரிசங்குமன்னன் நிற்கின்ற தென்றிசைக்கண் புதிதுபடைத்தும், சினந்தணியாமல்.—

అన్యమింద్రంకరిష్యామి లోకోవాస్యాదనింద్రకః

దైవతాన్యపిసక్రోధాత్స్రష్టుంసముపచక్రమే

அன்யமிந்த்ரம்கரிஷ்யாமி லோகோவாஸ்யாதிந்த்ரக:

தைவதாந்யபிஸக்ரோதாத் ஸ்ரஷ்டும்ஸமுபசக்ரமே

இவ்வுலகத்திற்கு வேறோர் இந்திரனையும் படையாநிற்பேன்; அன்றில் இவ்வுலகுதன்னை இவ்விந்திரனற்றதாகச் செய்வேனென்று கட்டுரைத்து, வேறு புத்தேளிரையும் படைக்க முயன்றனர். அதுகண்டு விண்ணவர், தானவர், சித்தர், விஞ்சையர், சாரணர், நாகர், மக்கள், முனிவர் முதலியோர் வெருக்கொண்டு இக்கௌசிகமஹாமுனிவரைப் பலவாறு புகழ்ந்து கோபத்தைத்தணித்துக் காதிநந்தனரே! நீர் அறத்தின்னெறி இன்னதென்றுணராதவரோ; ஆசிரியருடைய சாபத்தால் புலையனான இத்திரிசங்குவை நீரே வானேற்றுவிக்க முயன்று, அறநெறியைக் கடக்கலாகுமோ? யாக்கையோடு விண்ணுலகைப் பெறத்தகுதியுடையானல்லனே யென வானவர் மறுத்தனரேயன்றி வேறன்றெனப் பலபல வண்ணம் வேண்டிக்கொண்டனர்கள். இம்முனிவரும் அவ்வானவர் முதலானோர் வேண்டுகோளுக்குக் கோபந்தணிந்து அவர்களை நோக்கிக் கடவுளர்களே! நுமக்கு மங்களமுண்டாகுக. இத்திரிசங்குவை உடலோடு சுவர்க்கலோகத்தை யடைவிக்கிறேனென்ன வஞ்சினஞ் செய்ததனாலே அதனைப்

பொய்க்க என் மனம் இசைந்திலது; ஆதலால் இப்பொழுது திரிசங்கு இருக்குமிடமே இவனுக்குச் சுவர்க்கமாகக்கடவது. யாம் படைத்த விண்மீன்களும், சூரியசந்திராதியருள்ளவரையும் அழிவின்றி நிலைபெற்று, இவனைச் சூழ்வரக்கடவன. இங்ஙனம் எம்மெண்ணம் கடைசெல்லும்படி நீவிர் யாவரும் கட்டளைசெய்யக் கடவீர்களெனக் கேட்டுக்கொள்ள, வானவர்களும் அதை அங்கீகரித்து, கௌசிகரே! இவ்வண்ணமே ஆகக்கடவது, உமக்கும் மங்களமுண்டாகுக. உம்மால் படைக்கப்பட்ட உடுக்களும் வைச்வாநரமார்க்கத்தின் புறத்தில் திரிசங்குவைப் பின்றொடர்ந்து செல்லக்கடவன. திரிசங்குவும் தலைகீழாகவே தேவர்களிலொருவன்போல நிலைத்திருக்கக் கடவனென்று இவ்வாறு வரமளித்தருளினர். குசிக குலாமிசமுனியும் அவ்வானவர்களை நோக்கி, அவ்வாறே யாகுகவென்றுரை செய்துகந்தனர். விண்ணவர்கள் இவ்வண்ணம் இத்தபோதனரைச் சினந்தணிவித்துக் கடவுட்டன்மைபெற்ற அத்திரிசங்குவின் வேற்றுருவமைத்து அவ்யாகத்தை முடிப்பித்து, அது முற்றுப்பெற்றவுடன் வானவர்களும், மாமுனிவர்களும், இம்முனிவரிடத்தில் விடைபெற்றுத் தத்தமிடம்போய்ச் சேர்ந்தனர்.

பாலகாண்டத்தில் அறுபதாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தொன்றாவது சருக்கம்.

அம்பரீஷமஹாராஜன் சுனச்சேபனை நரமேதஞ்செய்ய

விலைக்குக் கொண்டது.

இக்கௌசிகமஹாமுனி யாகத்திற்கு வந்த ரிஷிகள் யாவருஞ் சென்றபின்னர் மனக்கலக்கமொழிந்து, ஓ! ஓ! யாம் பிரமரிஷியாகவேண்டுமெனக் கருதிச்செய்த தவமெல்லாம் பயன்படாதழிந்துவிட்டதேயென்று துன்புழந்து அங்குறைகின்ற மாதவக்குழுவை நோக்கி, மெய்த்தவத்தோரே! இங்கு யாமியற்றிய தவத்திற்கு இடையூறெய்தினமையால், இனி இங்குத் தவம்புரிவது நலமன்று; மேற்றிசைக்கண் புஷ்கரமென்னுந் தீர்த்தம் தவம்புரிவதற்குத் தக்க இடமாதலின் அங்குச்சென்று இத்தவமியற்றுவோம்; நீவிரும் எம்மோடு வருகவென உரைத்து, அவர்களையும் உடன்கொண்டு அங்குச்சென்று கனிகிழங்குகளைப் புசித்துக்கொண்டு யாவராலும் கெடுக்கவியலாத கடுந்தவம்புரிந்து வந்தனர்.

அக்காலத்திலே அயோத்திமாநகரில் அரசுபுரிந்துவந்த அம்பரீஷ மஹாராஜன் அச்வமேதயாகஞ் செய்யத்தொடங்கினன். அதுகண்டு மகிமூர்த்த ஆகண்டலன் பொறாமையால் பரிமாவைக் கவர்ந்து சென்றமையால், அச்சுவத்தைக் காணுதயாத புரோஹிதர் புரவலர் பெருமானிடம் வந்து அரசனே! நீ ஊக்கமற்றிருந்தமையால் யாகப்பசு கெட்டுப்போய் விட்டது. இதனால் உனக்கு மிகுதியும் கேடுவிளையும்; ஆகலினால் இவ்வேள்வி கெடுவதற்குமுன்னமே அப்பசுவையாயினும் தேடிக்கொணர். அஃது கிடையாதாயின் அதற்கு மாறாக நரனொருவனை விலைக்குவாங்கித் தருக; பசுக்கெட்டுவிடின் நரமேதஞ் செய்வதே அதற்குப் பிராயச்சித்தமென உரைத்துவிடுத்தனர். அதுகேட்டு அம்பரீஷமஹாராஜன் பாய்மாவைப் பல இடங்களில் விரைந்துசென்று தேடியுங் கட்புலனாகாமையால், எல்லையில்லாத ஆனிரையைக் கூட்டிக்கொண்டு, ஆண்மகனொருவனை விலைக்கு வாங்கும் பொருட்டு அநேக நாடுநகரங்களிலும், காடுமலைகளிலும், முனிவருறைவிடங்களிலும் தேடித்திரிந்தும், எங்கும் நரப்பசுவாய்க்காமல் பிருகுதுங்கமெனனும் மலையடிவாரத்தில் மூன்று மைந்தர்களோடும், பத்தினியோடுங்கூடி வறுமைத்துன்பத்தால் வருந்துகின்ற இரிசிகரென்னும் மஹாமுனிவரைக் கண்டு பணிந்து, ஒருவர்க்கொருவர் அளவளாய யோக க்ஷேமங்களை வினவி யறிந்துகொண்ட பின்னர், அம்முனிவரை நோக்கி, ஸ்வாமீ! யான் அயோத்திமாநகர்க் காவலனாகிய அம்பரீஷன், யான் பரிமா வேள்வி செய்கையில் பசுக்கெட்டுப்போயினமையால் நரமேதஞ்செய்ய வேண்டுமெனக் கருத்துக்கொண்டு நரப்பசு நிமித்தம் யான் திரிந்தலையாத இடமில்லை; எங்கும் நரப்பசுவாய்க்கவில்லை; ஆதலால் நூறாயிரம் பசுக்களை யான் தேவருக்கு விலையாகக்கொடுக்கின்றேன், இச்சிறுவர் மூவருள் ஒருவனைத் தேவர் நரப்பசுவாய்த் தந்தருளவேண்டுமென்று பணிந்து வேண்டிக்கொண்டனன். அவ்வேண்டுகோளுக்கிணங்கி, அவ்விரிசிகமகாமுனி வேந்தனை நோக்கி அம்பரீஷ! யான் மூத்தோனை யொருகாலும் விலைக்குக் கொடேனென்றுரைசெய்ய, அதை அவர் பத்தினி கேட்டு அம்பரீஷனைப்பார்த்து மஹாராஜரே! என் கணவர் மூத்தமகனைக் கொடுப்பதில்லையென்றார் அதனால் மற்றிருவரையும் கொடுக்க விருப்புள்ளவரென்று நனகு விளங்குகின்றதன்றோ? யானோ இவ்விருவரினும் இளையோனாகிய சுனச்சேபனைக் கொடுப்பதில்லை

ప్రాయేణహినరశ్రేష్ఠ జ్యేష్ఠాఃపితృషువల్లభాః
మాతౄణాంతుకనీయాంస స్తస్మాద్రక్షేకనీయసం

ப்ராயேணஹிநரச்ரேஷ்ட ஜ்யேஷ்டா: பித்ருஷுவல்லபா:
மாத்ரூணாந்துகனீயாம்ஸஸ் தஸ்மாத்ரக்ஷேகனீயஸம்

அன்றியும், நராதிபரே! பெரும்பாலும் தந்தையர்க்கு முதற்பிள்ளை யிஷ்டத்தும், பெற்றதாயர்க்குக் கடைப்பிள்ளையிஷ்டத்தும் அன்பு இயல்பாக

உள்ளதன்றோ? ஆதலின் கடைப்பிள்ளை எனக்குரியனாகக் கடவனென்று மொழிந்தனள். உடனே சுனச்சேபனென்கிற நடுப்பிள்ளை அரசனை நோக்கி, மஹாராஜரே! என் தந்தை பெரியபிள்ளையையும், தாய் சிறியபிள்ளையையும் கொடுப்பதில்லையெனச் சொன்னமையால் என்னை விலைக்கு விற்கும் கருத்துடையாரென்பதற்கு ஐயமுளதோ? கைப்புண்ணுக்குக் கண்ணாடியா? அவர்கள் விருப்பின்படி என்னை நீர் நரப்பசுவாக்கக் கைக்கொண்டு போகக்கடவீரென் றியம்பினன். அதுகேட்டு அம்பரீஷமஹாராஜன் மனமகிழ்ந்து இலட்சம் பசுக்களை இரிசிகமுனிவருக்குச் செலுத்திவிட்டுச் சுனச்சேபனைப் பெற்றுக்கொண்டு தேர்மிசையேற்றி அச்சிறுவனோடு விரைவாக மீண்டு வந்தனன்.

பாலகாண்டத்தில் அறுபத்தொன்றாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்திரண்டாவது சருக்கம்.

சுனச்சேபன் கௌசிகமஹாமுனியைச் சரணமடைந்துய்ந்தது.

பின்பு அம்பரீஷமஹாராஜன் சுனச்சேபனை யழைத்துக்கொண்டு நடுப்பகல் வேளையில் புஷ்கரக்ஷேத்திரத்திற்கு வந்து ஓரிடத்தில் இளைப்பாற விறங்கினான். அதுகாலையில் சுனச்சேபன் அங்குச் சுற்றிலுஞ்சென்று பார்க்கையில் தனக்கு அம்மானாகிய விசுவாமித்திரப் பெருந்தவத்தினர் பல முனிகணங்களோடு கூடித் தவஞ்செய்துகொண் டிருந்ததலைக் கண்டு, பசிப்பிணியினாலும், நீர்வேட்கையினாலும், வெயிலில் வேசுற்ற இளைப்பினாலும், நரபலியாகும் மனத்துன்பத்தினாலும், மிகுதியும் வருந்தி

* பிருகுதுந்தமென்பதற்குச் சிலர் மலைச்சாரலிலுள்ள குகையென்றும், வேறு சிலர் பிருகுமஹாரிஷி தவம்புரிந்த இடமென்றும் பொருள்கூறுகின்றனர். இவ்விரிசிகமுனிவர் பிருகுமஹாமுனிவரது மரபிற்பிறந்தவராதலால், அவர் தவம்புரிந்த இடமென்று பொருள்சொல்வதே நன்கு, ஐம்பெரும் பாவங்களுள் பிரமஹத்தி கொடியதென்பது எல்லா நூல்களின் துணிபாதலால் சுனச்சேபனை விலைக்குக் கொடுத்த தாய் தந்தைக்கும், விலைக்குப் பெற்றுக்கொண்ட அம்பரீஷபுரவலனுக்கும் கொலைப்பாவமணுகாதோவெனின், முதனூல் விதித்ததை ஒழியினும், விலக்கியதைச் செய்யினும், தீவினைப்பயன் அணுகுமேயன்றி, விதித்தவிதிப்படியே செய்யின் பாவமணுகுதலெவ்வாறு? இங்ஙனமாதலினன்றே யாகத்தில் பசுவின்கொலை பாவத்திற் கிடமாகாமல் நல்வினையே பயக்கின்றது; விதி தவறிச்செய்த பசுவின் கொலையே நல்வினைப்பயனைத் தராமல், தீவினைப்பயனைத் தருகின்றது, நரமேதமும் வேதத்தால் விதிக்கப்பட்டமையால் பாவத்திற்கிடமாகா தாயிற்றென்றுணர்க.

ஓடி இம்முனிவர் படிமேல் வீழ்ந்து மாமா! எனக்குத் தாயுமில்லை; தந்தையுமில்லை; ஞாதிகளுமில்லை; அநாதனாகிய எனக்குச்சுற்றத்தாரேது? நான் இப்பொழுது தேவரையே சரணமடைந்தேன்; தேவரே என்னைக் காத்தருளவேண்டும்; தேவர் சரணமடைந்தோரெல்லோரையும் பாது காப்பவராதலினால்; இவ்வம்பரீஷமஹாராஜன் இஷ்டமும் குறைவின்றி நிறைவுபெறவேண்டும், யானும் உயிர்வாழ்ந்து நெடுங்காலந் தவம்புரிந்து சுவர்க்கமடையவேண்டும்; இவ்வண்ணம் கருணைசெய்து எம்மிருவரையும் பாதுகாத்தருளவீர். அகதியான எனக்குக் கதியாகித் தந்தைபிள்ளையைக் கைசோரவிடாமல் புரப்பதுபோல அடியேனைப் புரத்தல்வேண்டுமென்று பலவாறாக வாய்விட்டலறிப் புலம்பினன். அப்பொழுது இம்முனிவரும் அவனைத் தழுவியெடுத்து உன்னைக் காக்கின்றேன், அஞ்சேலென்று அபயஞ்சொல்லித் தன்புத்திரர்களை நோக்கி.

యత్కృతే పితరః పుత్రాన్ జనయంతి శుభార్థినః
పరలోకహితార్థాయ తస్యకాలోయమాగతః

யத்க்ருதே பிதரঃ புத்ரான் ஜநயந்தி சுபார்த்திநঃ
பரலோகஹிதார்த்தாய தஸ்யகாலோயமாகதঃ

மைந்தர்களே! நல்லதந்தையிய கருதுகின்ற தந்தையர்க்குப் பிறந்த சிறுவருடைய கடமை அவருடைய கருத்துக்கிணங்க ஒழுகி, அவர் சொன்னவண்ணஞ் செய்தலன்றோ? அங்ஙனமாகலின், பிதாவாகிய எம் சொல்லைக் கேட்டாமல் நடந்து, எம்மை மகிழ்வித்தற்குரிய காலமிதோ நேர்ந்திருக்கின்றது. இதனால் நுமக்கும் எமக்கும் நற்பேறுண்டாகும்? இளைஞனாகிய இச்சுனச்சேபன் என்னைச் சரணடைந்தனன். அதுபற்றி நற்கருணை நற்செய்கையுள்ள நீவிரெல்லீரும் இவன் துஞ்சாமலுயிர்வாழும்படி செய்வது எமக்கு மிகுதியும் களிப்புத்தருவதாகும் இம்மொழியை மறுக்காது செய்யக்கடவீர்கள். நும்மில் ஒருவன் அம்பரீஷபுரவலனுக்குக் காப்பசுவாகித் தீக்கடவுளுக்கு மனநிறைவுண்டாக்கி, வேள்வியை முடிப்பித்து இவனையும் உய்விக்கக்கடவன். இங்ஙனஞ் செய்வதனால் வானவர்களும் பெருமகிழ்வெய்திப் புகழாநிற்பார்கள். தந்தைசொல் கடவாத நல்வினைப்பயனு முளதாகும்; என்றிவ்வாறருளிச்செய்தனர். மதுச்சந்தர் முதலிய குமாரர்கள் அம்மாற்றங்களைச் செவியுற்று, உள்ளச்செருக்கால் தந்தையை நன்குமதியாமல் அவரைநோக்கி எம் தந்தையீரே! நீர் நுமக்குரிய மைந்தர்களை அன்பெனப்தின்றிக் கொலைபுரிந்து, அயலான் புதல்வனை உயிர் உய்விக்கக் கருதுகின்றீரே, இது நற்சுவையுணவைத் தள்ளி, நாயின் தீநாற்றத்தசையை அருந்த விரும்புகிறதுபோல இழி தொழிலெனத் தோன்றுகின்றது. ஆதலால் யாங்கள் இதற்குடன்படோமென்று சொல்லக்கேட்டுக் கடுஞ்சினமூண்டு கண்சிவந்து தீப்பொறி

பெழும்படிச் சிறுவர்களை விழித்து நோக்கி, அட்டா ஆச்சாரிகளே! சிறிது மனஞ்சுதலின்றி அறத்தின் முறைதப்பி, எம்மெதிராகவே எம்மொழியை இகழ்ந்து மறுத்துரைத்தமையால் நீயிரும் வசிஷ்டன் புதல்வர்கள் போல நாயின் புலாலைத்தின்னும் முஷ்டிகசாதிப் புலையர்களாகி, ஆயிரம் யாண்டு வரையில் ஞாலமுழுதும் திரிந்தலையக்கடவீர்களென்று கண்ணோட்டமின்றித் தம் பிள்ளைகளைச் சபித்துவிட்டுச் சுனச்சேபனுக்கு மந்திரத்தால் தீங்குநேராதபடி காப்புச்செய்து, இரண்டு விஞ்சைகளைச் செவியிற்கூறிச் சுனச்சேபா! நீ இங்கிருந்து அம்பரீஷன் வேள்விச்சாலையை அணுகி, அங்கு விஷ்ணுதேவதாகமான வேள்வித்தூணில் தூப்புறக்கயிற்றால் கட்டுண்டு, செஞ்சந்தனம்பூசிச் செந்துவராடையுடுத்து நிற்குங்காலையில், தீக்கடவுளுக்கு எதிராக இந்திர உபேந்திரர்களைக் கருத்திற்பதிய வைத்து, இவ்விரண்டு மறைமொழிகளையும் உருப்போட்டக்கடவை. அப்பொழுது அவ்விண்ணவர்களிருவரும் நின் கண்முகப்பே வந்து நின்னையும் உய்வித்து, யாகபலனைத்தந்து, அம்பரீஷனையும் காத்தருள்வார்களென அருளிச்செய்தனர். சுனச்சேபன் அவ்விரண்டு மந்திரங்களையும் பெற்றுக்கொண்டு மனமகிழ்ந்து இம்முனிவரை வணங்கி விடைபெற்று விரைந்து, அம்பரீஷபுரவலனிடம் வந்து, பெருமானே! ஏன் காலக்கழிவு செய்கின்றீர். விரைவாக வேள்விச்சாலை போய்ச்சேர்வோம். நீர் நோன்பை மேற்கொண்டு வேள்வியைச்செய்து முடிக்கக்கடவீரென்று தூண்டினன். அதுகேட்டு அம்பரீடக்குரிசிலும், இச்சிறுவனுடைய மொழிக்கு வியந்து, உடனே புறப்பட்டு யாகசாலை சேர்ந்து அங்குள்ள முனிவர்களது கட்டளைப்படி நோன்புக்குரிய முறைமையை மேற்கொண்டு, இந்நரப்பசுவைச் செந்துவராடையுடுத்துத் தருப்பைக் கயிற்றால் வேள்வித்தறியிற் புணைத்துக்கட்டினன். அக்காலத்துச் சுனச்சேபன் கௌசிகமுனிவரது ஆணையின்படி மந்திரங்களிரண்டினாலும், இந்திரனையும், உபேந்திரனையும் பலவாறு ஏத்துதல் செய்ய, அவ்விருவரும் அத்துதிக்கு மகிழ்ந்து அங்கெழுந்தருளி, அம்பரீட வேந்தனுக்கு வேள்விப்பயன் நூறுபங்கு மிகுதியாம்படி அருள்செய்து அவ்யாகத்தை முற்றுவித்து, சுனச்சேபனையும் மகிழுமாறு பிழைப்பித்து விண்ணுலகமே எழுந்தருளினார்கள். இக்கௌசிகமஹாமுனிவரும் அப்புஷ்கரக்ஷேத்திரத்திலேயே சுனச்சேபன் சென்றபின்பு மீளவும் தொடங்கி ஆயிரமியாண்டு தவம்புரிந்துகொண்டிருந்தனர்.

பாலகாண்டத்தில் அறுபத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று

## அறுபத்துமூன்றாவது சருக்கம்.

### விசுவாமித்திரர் புஷ்கரத்தைவிட்டுப் பனிமலை சேர்ந்து தவம்புரிந்தது

ஆயிரம்வருஷம் நிறைவாகி விரதஸ்நானஞ்செய்த இக்காதிநந்தன மஹாமுனிவருக்கு நான்முகக்கடவுள் விண்ணவர்குழுவொடு கட்புலனாக நின்று விசுவாமித்திர! நீ இதுகாறும் இயற்றிய தவத்திறமையால் ரிஷியாகினை; பிரமரிஷியாவதற்கு இன்னுந் தவஞ்செய்யவேண்டும், நினக்கு மங்களமுண்டாகுகவென வருளிச்செய்து தமதிருப்பிடத்துக் கெழுந்தருளினர். நான்முகக்கடவுள் இங்ஙனம் பணித்தருளித் தமதுலகுக் கெழுந்தருளியபின்னர், இக்கௌசிகப்பெருந்தவர் மீளவுந் தவம்புரியத் தொடங்கிச் செய்துவருகையில், ஒருநாள் மேனகையென்னுந் தெய்வப் பொதுமகள் அப்புஷ்கரதீர்த்தத்திலிறங்கி நீராடிக்கொண்டிருக்கையில், மின்னற்கொடிபோன்ற அவளுருவத்தைக்கண்டு காமுற்று மயல்பூண்டு அவளருகேசென்று, மங்கையர்க்கரசி! பெண்ணமுதே! நின்வரவு நல்வரவாகக்கடவது. இங்கு நீ என்னுடன் கூடியிருந்து வாழ்ந்து மகிழ்வுறக் கடவை; வேனிலாளியினுடைய கணைகளால் அலைப்புண்ட என் வருத்தத்தை நின்கடைக்கண்ணால் நோக்கிச் சிறிது கருணைகூர்ந்து பாதுகாக்க வேண்டுமென்று பலவகையாக வேண்டி, அவளையுடம்படுத்தித் தம் துறைவிட்டுச்சேர்ந்து இன்பக்கடலில் மூழ்கித் தவத்தை மறந்து பத்துயாண்டு காறுங்கொண்ட காதல்தணியாமல் மயங்கி வாளாக்காலத்தைப் போக்கினர். இவ்வாறு சிலநாள் கழிந்தபின்னை நெஞ்சிற் றெளிவுதோன்றித் தம முள் தாமே ஆராய்ந்து, தமது முன்னைய நிலைமையையும், இப்பொழுது தமது நிலைமையையுங் கருதி, நாணமும், கவலையும், துன்பமும் மிகுந்து ஓகோ இஃதென்ன மதிகேடு காமுகனாகிப் பயனில் பொழுதாக என் வாழ்நாளைக் கழித்தேனே; அந்தோ! மேனகையை என்பால் செல்லவிடுத்து, என் அரும்பெருந் தவத்தைப் பண்ணவர்களே குலைத்தனர்களென அறிந்து வெகுண்டு, இராப்பகலென மெல்லமெல்லச்சென்று பத்து வருடங் கழிந்தனவேயென நெட்டுயிர்ப்பெறிந்து, கழிவிரக்கங்கொண்டு நின்றனர் அதுகண்டு சாபமிடுவாரோவென அஞ்சி, நடுநடுங்கி, கைகூப்பி நிற்கின்ற மேனகையை இனியமொழிகளால் அச்சத்தைத்தவிர்த்து விடைகொடுத் தனுப்பிவிட்டு, இனி இவ்விடத்தில் தவம்புரிதல் "தகுதியன்றென்று" அங்கிருந்து வடதிசைக்கண் வரையரையனருகிற் கௌசிகையாற்றங்கரையில், ஐம்பொறிவாயில்களின்வழி மனத்தைச் செல்லவிடாது ஒருமைப்படுத்தித் தவஞ்செய்யத் தொடங்கி ஆயிரமியாண்டு கழிந்தன. அப்பொழுது விண்ணவர் முதலிய எல்லோரும் இவர் தவத்

தீயால் மூவுலகும் எரிந்துவிடுமோவென அச்சுற்று; நான்முகக்கடவுளைத் தொழுது கரங்கூப்பிநின்று, அடிகளே! விசுவாமித்திரர் நெடும்பகல் தவம்புரியாநிற்கின்றமையால் இவர் மஹாமுனியென்னும் பெயர்பெறலாமென்று விண்ணப்பஞ்செய்தனர். நான்முகன் அஃதொக்குமெனக்கொண்டு, அப்புத்தேளிர்களுடன் சென்று விசுவாமித்திரரிருப்பிடமடைந்து கௌசிகா! நீசெய்த தவத்தால் யாம் பெரிது மனமகிழ்வுற்றனம். நீ இன்றுமுதல் மஹாரிஷியாகின்றாய், இப்பேற்றை நினக்கு யாம் அளிக்கின்றோமென்று அருளிச்செய்தனர். அதுகேட்டுக் காதிநந்தனன் யோகி பிரமரிஷிப்பதங்கில்லையேயெனக் குறையுற்ற நெஞ்சுடையராயினும், மஹாரிஷியாயினேனென உளமகிழ்ந்து மண்பொருந்தத் தந்தையை வணங்கிக் கைகூப்பி, அடிகளே! தேவா! அடியேனை மஹாரிஷியென்றருளிச்செய்தமையால், அடியேன் ஐம்பொறிகளைக் கடந்தேனாயினேனெனச் சற்றுப் பெருமிதத்தோடு விண்ணப்பஞ்செய்ய, அதற்குத் திசைமுகக்கடவுளும் புன்னகைசெய்து, இம்மட்டில் ஐம்பொறிகளை வென்றோனாகமாட்டாய், ஐம்பொறிகளை வென்றோனாவதற்கு இன்னும் பெருந்தவஞ்செய்ய முயலவேண்டுமென அருளிச்செய்து உயர்நிலத்துக் கெழுந்தருளினார்.

இங்ஙனமருளிச்செய்து திசைமுகக்கடவுள் தமதுறையுளுக் கெழுந்தருளியபின்னர், இக்கௌசிகமஹாமுனி பிடிப்பின்றிக் கைகளை உயர வெடுத்துக் காற்றை உணவாகவுண்டு, கோடைகாலத்தில் ஐவகைத் தீயினடுவிலும், கார்காலத்தில் வெளியிடையிலும், கூதிர்காலத்தில் புனலினுள்ளிருந்து அல்லும்பகலும் இடைவிடாது ஆயிரமியாண்டு இவ்வகைக் கடுந்தவம் புரிகையில், நம்மில் யாவர் நமது தலைமை பெறுதற்காகத் தவஞ்செய்கின்றாரோவென விண்ணவர்கோன் தொடக்கமாகிய கடவுளர்களெல்லோரும் அச்சமுற்று, அரம்பையென்னும் பொன்னுலகப் பொதுமகளை யழைத்துத் தங்களுக்கு நலந்தருவதாகவும், இக்கௌசிகருக்குத் தீமை தருவதாகவும் ஒருமொழி உரைக்கலுற்றனர்கள்.

பாலகாண்டத்தில் அறுபத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

# அறுபத்துநான்காவது சருக்கம்.

கௌசிகர் அரம்பைக்குச் சாபமிட்டு வடதிசைவிட்டுக்

கீழ்த்திசையில் தவமியற்றியது.

திலீபகுலதீப! விண்ணுலகாளி அரம்பையையழைத்து மாதரசே! நீ சென்று விசுவாமித்திரமஹரிஷியை நின்மையலிற்படுத்தி, அவருந் தவத்தைக் குலையச்செய்யவேண்டும். அத்திறமை யுன்னிடத்தில் தானிருக்கின்றதென்று புகழ்ந்துரைக்க, அரம்பை நாணி இமையவர் வேந்தனை நோக்கிக் கைகூப்பிக் கடவுளர்பெருமானே! இவ்விசுவாமித்திரர் கடுஞ்சினத்தினாற்றலால் சாபமிடுவரேயென அஞ்சுகின்றேன், ஆதலின் என்னைச் செல்லவிடாது அருள்புரியவேண்டுமென வேண்டிக்கொண்டனள். அதுகேட்டுப் பொன்னகராக்கிறைவன் அரம்பையே! நீ அஞ்சற்க; நீ அம்முனிவர்பாற் செல்லாநிற்கையில் இளவேனிற்காலம் நேர்கின்றமையால் யாமும் ஐங்கணைக் கிழவனோடு அங்கு வந்து நினக்கு உதவிசெய்கின்றோம். நினக்கு மங்களமுண்டாகுக, நீ அங்குச்சென்று கண்டோர் காமுறத்தக்க உருப்பெற்றுக் குயிலோடொத்துக் கூவி, இனிதாகப் பாடி அம்முனியைக் காதல்கூரச் செய்யவேண்டுமென அவ்வரம்பையைத் தேற்றியனுப்பப் பின்னை அவள் ஆயிரங்கண்ணன் ஏவலின்படி மிக்க வடிவழகையுடையாளாய், இம்முனிவரிருக்கையைச் சார்ந்து, முகத்திற் புன்னகைதோன்ற இனிதாகப் பாடிக்கொண்டிருந்தனள். அப்பொழுது இம்முனிவரும் குயிற் கூவக்கேட்டு மனமகிழ்ந்து, உடனே தெய்வப்பண்ணையுங் கேள்வியுற்று, அரம்பையையும் பார்த்து, என் தவத்தைக் கெடுப்பதற்கே இவள் வந்தாளென ஐயமறத்தேர்ந்து, தவத்தின்பெருமையால், இஃது விண்ணவர்கோன் செய்கையென வுணர்ந்து, பெருமுனிவுகொண்டு அரம்பையை நோக்கி, அடீ கடவுட்பொதுமகளே! யான் இந்திரியங்களை முற்றும் வென்றொழிக்கவேண்டுமெனச் செய்யாநின்ற தவத்தை நீ கெடுக்க வந்தமையால் பத்துவருடம் கல்லாகக் கிடக்கக்கடவை, பின்னர் பிரமன் புதல்வராகிய வசிஷ்டர் நின் சாபத்தைத் தீர்த்தருள்செய்வரெனக் கோபத்தையடக்க இயலாமல் சாபமிட்டு, ஐயோ? காமவெகுளியை அடக்கவேண்டுமென்று தவஞ்செய்ததும், சினத்தின்வழியே சென்று விட்டேனேயெனக் கழிவிரக்கமடைந்து தம்மை வெறுத்துக்கொண்டனர். உடனே அரம்பையுங் கல்லாயினள். அதனை நோக்கிய இரதிகணவனும், இந்திராணி காதலனும் துணுக்குற்றோடி ஒளித்தனர்கள். விசுவாமித்திரர் இவ்வண்ணம் அரம்பைக்குச் சாபமளித்தமையால் அதுவரையில் செய்த தவம் பயன்படாது போயிற்றே, ஜிதேந்திரியனாக இல்லையேயெனத் துன்புழந்து.—

నైవక్రోధంకరిష్యామి నచవక్ష్యేకథంచన
అథవానోచ్ఛ్వసిష్యామి సంవత్సరశతాన్యపి
అహంవిశోషయిష్యామి హ్యాత్మానంవిజితేంద్రియః
తావద్యావద్ధిమేప్రాప్తం బ్రాహ్మణ్యంతపసార్జితం
అనుచ్ఛ్వసన్నభుంజాన స్తిష్ఠేయంశాశ్వతీస్సమాః

நைவக்ரோதம் கரிஷ்யாமி நசவக்ஷ்யேகதஞ்சந
அதவாநோச்வஸிஷ்யாமி ஸம்வத்ஸரசதாந்யபி
அஹம்விசேஷ யிஷ்யாமி ஹ்யாத்மானம் விஜிதேந்திரிய:
தாவத்யாவத்தி மேப்ராப்தம் ப்ராஹ்மண்யம்தபஸார்ஜிதம்
அநுச்சவஸந்நபுஞ்ஜான ஸ்திஷ்டேயம்சாச்வதீஸ்ஸமா:

இனி யான் சினத்தைப் பொருளாகக் கொள்வதில்லை; இனி எவ்வகையாலாயினும் வாய்திறந்து ஒரு சொல்லேனும் சொல்வதில்லை; நூறு தேவயாண்டு கடைசெலினும் மூச்சும் விடுவதில்லை; இவ்வாறு நின்று புலன்களையடக்கிக் காயத்தைப் போக்கி உலர்த்துவோம் யாம். இந்திரியங்களை வென்றவனாய்ப் பிரமமுனியென வரம்பெறுமளவும் உணவு நீங்கி, மூச்சடக்கிப் பல யாண்டுகள் தவமியற்றுவேனென இவ்வண்ணம் கடுமையான வஞ்சினங்கூறி, ஆயிரம் வருஷத்துக்கு விரதமேற்கொள்ள மனந்துணிந்தனர்.

பாலகாண்டத்தில் அறுபத்துநான்காவது சருக்கம்
முற்றிற்று.

---

## அறுபத்தைந்தாவது சருக்கம்.

சதாநந்தர் ஸ்ரீராமபிரானுக்கு விசுவாமித்திரர் பிரமரிஷியாகிய விதம் உரைத்து முடித்தது

---

ஸ்ரீசக்கரவர்த்தித்திருமகனே! பின்னை இம்முனிவர் அவ்விடமிருந்து, கீழ்த்திசையிற்சென்று முன்கூறியபடி ஆயிரம்வருடமட்டும், மவுனவிரதம் தரித்து மௌனியாய், யாவராலுஞ்செயற்கரிய கடுந்தவஞ்செய்துகொண்டு, இடையில் எத்தனைபேர் வந்து இடையூறுசெய்யினும் சிறிதும் மனஞ்சலிக்காமல்; சினத்தை முற்றுங்கெடுத்து, ஆயிரம்வருடம் நிறைவானவுடன் தம் விரதத்தை முடித்துத்தாம் அருந்துதற்குச் சமைத்துவைத்த அன்னத்தை அந்தணுருக்கொண்டு அதிதியாகவந்த இந்திரனுக்கிட்டு, அவ்வன்னத்தில் மிகுதி பெறாமையாலுண்ணாமலே மௌனத்தை

விடாமலும், சினத்தைவிட்டும், அவ்வேதியனைச் செல்லவிடுத்து, மீளவும் ஆயிரம் வருடத்துக்கு விரதம்பூண்டு, கையை மூக்கில்வைத்து, இடைகலையைப் பிங்கலையால் நைவித்து, உள்ளத்தில் மூலமாகிய ஓரெழுத்தை எண்ணி, மூச்சடக்கிக் கடுந்தவம்புரிந்தனர்.

அவ்வாறு உயிர்ப்புப்புறத்தே விடாமல் இம்மகாமுனி யாண்டாயிரம் அரும்பெருந் தவஞ்செய்கையில், இவரது தலையின் முகடுவிண்டு, அதினின்று புகையுடன் தீயெழுந்து மூவுலகிலும் சூழ்ந்து எரிக்க, யாவரும் அஞ்சி நடுக்கமுற்று மறுகுகையில், உம்பர், கந்தருவர், விஞ்சையர், பன்னகர், அசுரர், இராக்கதர் முதலியோரும் மயங்கி, இம்முனிவரது ஒளியினால் தங்களொளிமழுங்கி நான்முகத்தேவனிடஞ் சரண்புகுந்து, அடிகளே! நாமகள் கணவரே! விசுவாமித்திரர் காதல்கொள்ளவும், சினங்கொள்ளவும்; யாங்கள் பற்பல முயற்சிசெய்தும், அவற்றுள் ஒன்றும்பயன்படாதாயிற்று, அவரோ தமது தவநிலை குன்றாமல் நிற்கின்றார். அவரிடத்து ஒரு சிறிதேனும் தவறுகாணப்படவில்லை, ஆதலால் இப்பொழுது இவர் பிரமரிஷியாகலாம்; இவர்தம்மை அவருக்குத் தேவர் அளித்தருள்க, காலநீட்டித்தால், அவரது தவத்தீயால் இமைப்பொழுதில் மூவுலகையுஞ் சுட்டு நீறாக்கிவிடுவர். இப்பொழுதோ பத்துத்திசைகளும் இருளால் மூடப்பட்டு மழுக்கமடைந்திருக்கின்றன, ஏழுகடல்களும் கலங்கின, மலைகளுஞ் சிதறுண்டன, இப்பாரமுழுதும் நடுக்கமுற்றது, காற்றும் ஊழிக்காற்றுப்போல வீசுகின்றது, அடியேங்களுக்கு யாதொரு விரகும் தோன்றவில்லை, எல்லோரும் செய்கடன்களைச்செய்யாமல், கடவுளில்லையென்பாரைப்போல அலைகின்றார்கள். மூவுலகும் மயக்கமடைந்ததுபோல வாயின; இரவியும் அம்முனியினொளியால் ஒளியற்றவனாயினன் முன்பு ஊழிகாலத்தில் காலத்தீயால் உலகங்களெங்ஙனமெரியுமோ அங்ஙனமே இப்பொழுது எரிகின்றன. அவ்வருந்தவர் மூவுலகங்களையும் அழிவுகாணும்படி வெகுளிகொள்வதன் முன்னமே பற்றியெரிகின்ற பெருந்தீப்போன்ற அம்மஹாமுனியை இன்சொல்நயமாக உரைத்து உடன்பாடெய்தச்செய்யவேண்டும்; அவர் தேவருடைய உலகமேவேண்டினும், பிரமரிஷியாகவேண்டினும், மற்றும் வேறெதனைவேண்டினும் அவர்வேண்டியதைத் தந்து உலகங்களைப் பாதுகாத்தருள்வேண்டுமெனப் பணிவாக மொழிந்து, திசைமுகத்தேவருடன் புறப்பட்டு அவ்விசுவாமித்திரரருகே வந்து, கௌசிகமஹாமுனியை நோக்கிப் பிரமரிஷியே! உமக்கு மங்களமுண்டாகுக. நீர் செய்த தவத்தால் யாமெல்லோரும் மகிழ்வுற்றனம்; கடுமையாகிய இத்தவத்தால் நீர் பிரமரிஷியாயினீரென்றுரை செய்தனர்கள். அப்பொழுது மீண்டும் பிரமதேவனென்பவர் இம்முனிவனை நோக்கி, கௌசிக! நினக்கு நெடுங்காலம் உயிர்வாழ்நிலையும் அளிக்கின்றேன். நீ நன்மையையே யடைவாய்; நன்மையேயுண்டாகுக. இனி நீ இத்தவத்தொழிலை முடிவு செய்து, இனிது செல

வாயாகவென்றருளிச் செய்தார். அம்மொழிகளைச் செவியேற்று இத்தூயபுலமஹாமுனியும் மலராமிசையோன் முதலோரை வலம் வந்து வந்தனஞ்செய்து, உச்சிகூப்பிய கையினராய விண்ணவர்களே! அடியேன் பிரமரிஷியாகியதும், நெடுங்காலம் வாழ்பவனாகியதும் உண்மையாயின், ஓங்காரவஷட்காரங்களும், வேதங்களும் எப்பொழுதும் என்னெஞ்சில் தோன்றுகின்று, என்னை விரும்பி யடையுங்கடமை யுடையனவாகவும், ஞானவேதமுணர்ந்தவர்களுக்கும், பரப்பிரமத்தின் நிலைமையை நன்குணர்ந்து முபநிஷத்துக்களை ஐயந்திரிபறவுணர்ந்த மறைவலாளர்களுக்கும் அடியேன் தலைவனாகுங் கடமையுடையேனாகவும், நீவிர் செய்வதுமன்றி,

బ్రహ్మ పుత్రో వసిష్ఠో మామేవం వదతు దేవతాః
యద్యయంపరమః కామః కృతోయాం స్తుసురర్షభాః

ப்ரஹ்மபுத்ரோவஸிஷ்டோமா மேவம்வதது தேவதா:
யத்யயம்பரம:காம: க்ருதோயாந்து ஸுரர்ஷபா:

தேவர்களே! பிரமபுத்திரராகிய வசிஷ்டமஹாமுனியும் அடியேன் கருதியபடி என்னை நோக்கி நீ பிரமரிஷியாகிறாயென்று தம் வாயாலுரைத்தலும் செய்யவேண்டும், இதுவே அடியேனுக்குச் சிறந்த எண்ணம், இதை நீவிரெல்லீரும் என்னெண்ணத்தை முற்றுவித்துப் பின்னை நுங்களுறையுளை இனிதுசேரக் கடவீர்களென்று தம் கருத்தினைத் திருத்தமாக வெளியிட்டு வேண்டிக்கொண்டார். புத்தேளிர்களெல்லோரும் அவ்வேண்டுகோளின்படி வசிஷ்டமஹாமுனியை யழைப்பித்துத் தம்மொழிக்குடன்படுத்தி, இம்முனிவருடன் நட்புப்புரிவித்து விசுவாமித்திரர் பிரமரிஷியாகிறாரென்று அவர் வாயாலியம்புவித்துத் தாங்களும் நீர் பிரஹ்மரிஷியாகிறீர், உம்மெண்ணத்தின்படி யாவுங் கைக்கூடுமென வரமளித்து, விசுவாமித்திரரிடத்தில் விடைபெற்றுத் தத்தமிருப்பிடம்போய்ச் சேர்ந்தனர். கருமுகில்வண்ணனாகிய எம்மானே! இம்மஹாமுனிவர் இவ்வகைப் பல துன்புழந்து பிரமரிஷியாயினர். ஆதலின் இவரே எல்லா முனிவர்களிலும் சிறந்தவர். இவரே உருப்பெற்றெழுந்த தவம்; இவரே அறம்; இவரே வீரத்தன்மைக்குப் பிறப்பிடமென இங்ஙனம் விசுவாமித்திரமஹாமுனிவரைச் சதானந்தர் புகழ்ந்து மௌனியென்னும் பெயரைமெய்ப்பொருளுள்ளதாகச்செய்து கொண்டனர்.

இவ்வண்ணமுரைசெய்த அகலிகை மைந்தரது மாற்றத்தைச் செவியுற்ற மிதிலாபுரியிறையும் தூயபுலமஹாமுனியை நோக்கிக் கரங்குவித்து அடிகளே! மெய்த்தவர் கோமானே! தேவர் ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடன் அடியேன் யாகசாலைக் கெழுந்தருளிச்சேவைசாதித்தருளினமையால் அடியேனெல்லாப்பேறும்பெறப்பெற்றிருக்கின்றேன்; தேவருடையசேவையால் அடியேன் தூயனுமாயினேன். தேவரெழுந்தருளினமையால் பற்பல நற்குண

களையுமுடையேனாயினேன். தேவருடையசரித்திரத்தையுஞ்சுந்தரத்திருத்தோ ளண்ணலாகிய ஸ்ரீராமபிரானுடன் விரிவாகச் செவிகுளிரக்கேட்டு மகிழ்ந் தேன். இவ்வவைக்கணுள்ள மற்றெல்லோரும் தேவர் குணகணங்களாகிய அமிழ்தத்தைச் செவியாகிய வாய்மடுத்துண்டு, வரம்பில்லாதபெருங்களிப் பெய்தினர். தேவருடைய செய்தவமும் எல்லைகடந்தது; நுமது திறமையு மளவில்லது; நுமது நற்குணங்களுமளவிறந்தன; தேவருடையநற்குண நற்செயல்கள்கேட்கப்படுந்தோறும் வியப்பைவிளைப்பனவன்றிவெறுப்பி ன்றி மேன்மேலும் கேட்போமென்னும் வேட்கையைப்பெருக்குகின்றன; ஆயினும் நாட்கடன்செய்யும் அந்திப்பொழுதாயினமையால், அடியேனுக் கிப்பொழுது விடைகொடுத்து மீண்டு நாளையுதயத்தில் தேவர் அடியேனை க்கடாக்ஷித்தருளவேண்டுமென விண்ணப்பஞ்செய்தனர். காதிகுமாரரும் அம்மதிநன்மொழியை மனத்துக்கொண்டு உகந்து புகழ்ந்து விடைகொ டுத்தனுப்பிக் காமும் மஹாரிஷிகளால் பூசனைசெய்யப்பட்டவராய்த்தமக் கென அமைத்துள்ள உறைவிடஞ்சேர்ந்து, தினக்கடன்களையும் முடித்து, ஸ்ரீராமலக்ஷ்மணாதியர்களோடு பாங்காக வீற்றிருந்தனர்.

பாலகாண்டத்தில் அறுபத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

---

## அறுபத்தாறுவது சருக்கம்.

ஸ்ரீஜனகப்புரவலர் தமக்குச் சிவன்வில்வந்த வரலாறும், அது

சீதை திருமணத்துக்கு இலக்கானதுங் கூறியது.

---

அடுத்தநாள் வைகறையில் துயிலுணர்ந்து ஜனகப்பெருமான் நித்திய கருமங்களைமுடித்துக்கொண்டு, கௌசிகமகாரிஷியை எழுந்தருளச்செய்து விதியின் முறைமைப்படி பூசனைசெய்து ஸ்ரீராமபிரானுக்கும், ராமாநுஜ ருக்குந் தக்கபடி வழிபாடுசெய்து, விசுவாமித்திரமஹாயோகியைநோக்கிப் பகவனே! தேவருடைய வருகைநல்வருகையாகக் கடவது. தேவருக்கு அடியேன் செய்தற்குரிய பணியாது? அடியேன் தேவரது கட்டளைப்படி நடப்பவனாதலால், ஆஜ்ஞைசெய்தருளக்கடவீரெனமொழியலுறத்தாப்புல முனிவர் அம்மொழியைச் செவியேற்று மிதிலாதிபரே! உம்மிடத்திருக் கின்ற சிவன் வில்லைக்கண்ணுற்றுக் களிப்புறவேண்டுமென்று இத்தயரதன் செல்வமைந்தர்களிருவருங் காமுறுகின்றனர்கள். ஆதலின் அக்கோதண் டத்தைஇவர்களுக்குக்கட்புலனாம்படிசெய்விக்கக்கடவீர். அதனால் உமக்கு நன்மைவிளையக்கடவது. அக்கார்முகத்தைஇப்பெருந்தகைஆடவர்களுக்கு

முன் கொணர்வியும்; அதனை இவர்கள் கண்ணுறக்கண்டபின், தம் விருப்பத்தின்படி செய்வாரகவென அருளிச்செய்ததைக் கேட்டு, விதேஹமகிபாலரும் கௌசிகரை நோக்கி, அருளாழி மெய்ஞ்ஞானச்செல்வரே! இச்சநுகரன்வில் அடியேனுக்கு வாய்த்தவிதமும், இப்போது அது இங்கிருக்குங்காரணமும் உரைக்கின்றேன். அடியேன் குலத்தின் முதல்வராகிய நிமிச்சக்கரவர்த்திக்கு ஆறாவது தலைமுறையில் தேவராதனெனச் சிறப்பித்துச் சொல்லப்படும் மஹாராஜா இவ்வுலகிடத்தை அரசுபுரிந்து வருகையில், ஐம்முகனையழையாமல் தக்ஷப்பிரமா செய்த யாகத்தைச் சூலபாணி கெடுத்தி செய்து, அங்குள்ள வானவர்களை நோக்கி, வானவர்களே! நீயிர் எனக்குப் பாகங்கொடுப்பிக்காமலே இவ்வேள்வியில் அவி வாங்கி அருந்தினமையால், உங்கள் சென்னிகளைச் சரங்களால் துணித்துக்குவிக்கின்றேனென்று வீரவாதங்கூறி, இவ்வில்லில் நாணேற்றிடுங் கணையைத் தொடுக்க முயன்றார். அதுகண்டு அமரர்கள் யாவரும் அஞ்சித் துஞ்சினரைப்போலச் செயலற்றுத் தேறி, இன்சொல்கூறிச் சினத்தைத் தணிவிக்க, மங்கைபாகனுஞ் சினமாறி, தொடுத்த அம்பை வில்லினின்று எடுத்து, நாணையவிழ்த்து இச்சிலையை விண்ணவர்கள் கையில் கொடுத்துவிட்டு வெள்ளிமலை புகுதலும், இக்கொடுமரத்தைக் கடவுளர்கள் கையிலேந்திவந்து அத்தேவராதரிடத்தில் இதை வைத்திருமென்று கொடுத்தருளினார்கள். இச்சிலை அக்காலந்தொடங்கி இதுவரையில் எம்முன்னோர்களால் பூசனைசெய்து பாதுகாக்கப்பட்டு, இப்போது என்னால் அவ்வாறு காக்கப்பட்டு வருகின்றது.

பின்பொருகாலையில் அடியேன் வேள்வி இயற்றவேண்டுமென வேள்விக்காகக் குறித்த நிலத்தை யுழுவிக்கையில் உழுபடையின் முனை ஓரிடத்துத்தட்ட, அவ்விடத்தில் அகழ்ந்து பார்த்தனம், அங்கு ஒருபெண்மணி தோன்றினள். அப்பெண்ணரசியை அடியேன் பரிவோடெடுத்துச் சீதையெனத் திருநாமஞ்சாத்தி வளர்த்துவந்தேன். இப்பெண்ணுயகத்தின் தோற்றத்தையும், பண்பையும், ஒப்புயர்வில்லாத கட்டழகையும் வேந்தர்களெல்லோருங் கேள்வியுற்று, அடியேனிடம் வந்து இக்கன்னிகையை மணஞ்செய்து கொடுமென்பப் பலவாறு கேட்டனர்கள். அவர்கள் இச்சீதையை மணம்புரிந்து கொள்வதற்குத் தகுதி ஒரு சிறிதுமில்லாரகவென்னு நான் கருதி வேறுதலால், நேராக மறுத்துச்சொல்ல மாட்டாமல், கணேனுட்டதனால் இவ்வுருத்திரன்து சராசனத்தை யாவன் நாணேற்றி ஒலியெழுப்புவானோ? அவனுக்கே என் அருமைத்திருமகளைத் திருமணம் புரிவிப்பேனென்று உறுதிமொழிகூறி, இத்தநுவில்லைச் சீதாதேவியார் திருமணத்திற்கு இலக்காக வைத்திருக்கின்றேன். எல்லாப்புரவலர்களும் வெற்றிமொழிகளைக்கூறிக்கொண்டு வந்து, இத்தநுவை அசைப்பதற்கும் வலியில்லாராய் நாண்மேவிடுத்த தங்கள் தங்கள் தனுக்களைக் களைந்து வாளா சென்றனர்கள். இவ்வண்ணம் அரசர்கள் யாவரும் இச்சிலையை வளைக்கமாட்டாதவராய், என்னால் பெண்

கொடுப்பதில்லையென்று மறுக்கப்பட்டவர்களாய், ஜனகன் பெண் கொடுக்க மனமின்றி யாவராலும் வளைக்கவொண்ணாத வில்லாகிய ஒரு தடைசொல்லி எல்லோரையும் அவமதிப்புச்செய்தனுப்புகிறான்; ஆதலால் நாம் இச்சனகனுக்குத் தீங்குசெய்வோம்; அன்றியும், இவன் யோகமுயற்சியிலே நிற்பவனாதலால் படையெடுப்பதிலேயென இவ்வாறு ஒருவர்க்கொருவர் தம்முள் ஆராய்ந்துகொண்டு, மன்னவரெல்லோரும் ஒன்றுசேர்ந்து இம்மிதிலாபுரியைச் சுற்றிமுற்றுகைபோட்டுக்கொண்டு நாற்றிசையிலும் நின்று தடுத்து அடர்ந்தனர்கள் இவ்வாறு ஒருவருடங்காறும் தடுத்துப் பிழைசெய்தமையால் நகரின்கணுள்ள பண்டங்கள் முழுதும் குறைந்து, ஜனங்கள் படும் அலக்கணைக் கண்டு அடியேன் மிகுதியும் உள்ளங்கவன்று, அருந்திறமையால் வானவர்களை மகிழ்வித்து, அன்னோர்களை வணங்கிப் பகைவேந்தர்கள் சிதறுண்டோடுமாறு வேண்டிக்கொண்டேன். விண்ணவர்களும் என் வேண்டுகோளுக்கருள்புரிந்து, மருவலர்களை வெற்றிகொள்ளவல்ல நால்வகைப் படைகளை அளித்தனர். உடனே அந்தப் படைகள் மாற்றலர்களை எதிர்த்துப் போர்செய்து துரத்தியடிக்க, அத்தெவ்வேந்தர்கள் இத்தானையையெதிர்த்துச் சண்டைசெய்யத்திறனற்று, விரைந்து தனித்தனியே யோடிப்போயினார்கள் மேற்கூறியவண்ணம் பலவேந்தர்களாலும் அசைக்கவொண்ணாத இவ்வில்லைச் சக்கரவர்த்தித் திருக்குமாரர்களுக்குக் காண்பிக்கிறேன்; இதை இந்த ஸ்ரீராமசந்திர நாணேற்றிக் குணத்தொனியெழுப்புவராயின், கருவிற்றங்கிப் பிறவாத தூயாமையளும், அடியேன் செல்வத்திருமகளுமாகிய சீதையை இச்சக்கரவர்த்தியின் திருக்குமாரருக்குத் திருமணம் புரிவித்து அளிக்கின்றேனென்று உரைத்தனர்

பாலகாண்டத்தில் அறுபத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தேழாவது சருக்கம்.

### சக்கரவர்த்தித் திருமகனார் அரன்வில்லை முறித்தது.

அம்மைதிலன் மாற்றத்தைச்செவியுற்றகோதற்றதவச்செல்வர் ஜனகவேந்தே! அவ்வில்லையழைப்பித்து ஸ்ரீரகுகுலோத்தமருக்குக் காட்டுபல ஞக்குவியுமென வருளிச்செய்ய, விதேகராஜரும் தமதருகிலுள்ளவரை நோக்கி, நீவிர் அவ்வில்லைக் கொண்டுவருகவென்று கட்டளையிட்டனர். உடனே அவர்கள் விரைந்தோடி அவ்வில்லை வைத்திருக்கின்ற எட்டுச் சக்கரங்கள் பூட்டிய எஃகுப்பெட்டியை இழுத்துக்கொண்டு வந்தனர்கள்.

నృణాంశతానిపంచాశ ద్వ్యాయతానామ్మహాత్మనాం
మంజూషామష్టచక్రాంతాం సమూహుస్తేకథంచన

நருணாம்சதாநிபஞ் சாசத்வ்யாயதாநாம் மஹாத்மநாம்
மஞ்ஜூஷாமஷ்டசக்ராம் தாமஸமூஹுஸ்தேகதஞ்சந:

அப்பெட்டகத்தை ஐயாயிரம் மல்லர்கள் ஒருங்குகூடி வருந்தமுற்று வலித்துவந்து சேர்த்தனர்கள். அவ்வில்லை அமைச்சர்கள் மிதிலாநகரப் பெருமானுக்கு முன்னர் நிறுத்தி எம்மரசனே! இதோ வில்லைக்கொண்டு வந்து சேர்த்தோமெனத் தெரிவிக்க, மிதிலாதிபர் விசுவாமித்திரருக்கெதிரில் கைகூப்பி ஸ்வாமீ மெய்யறிவாளரே! இதோ மதியணிசடைமுடியோன் வில் வந்திருக்கின்றது; கடைக்கணித்தருளும்; ஸ்ரீசக்கரவர்த்தி திருக்குமாரர்களே! நீயிரும் கேண்மின்; இவ்வில்லைத்தான் குனித்து நாணேற்றவலியில்லாமல் வீரர்களாகிய அரசர்கள் பங்கமடைந்தனர்கள் அன்றியும் இதனை எடுத்து வளைக்க, தேவதானவ ராக்ஷஸ யக்ஷ கந்தர்வ கின்னர பன்னகாதிகளாலு முடியாதிருக்க, மனிதர்களால் இதை எடுத்து நிறுத்தவும், நாண் பூட்டவும் சரந்தொடுக்கவும், நிறையையறியும்படி நிறுத்தி யசைக்கவும், காதளவும் நாணையிழுக்கவும் முடியுமோ? அத்தன்மையதாகிய இச்சிலையை நீங்களே நோக்கி, உய்த்துணருங்கோளென்றனர். இங்ஙனம் வில்லின் பெருமிதத்தைச் சனகர் பலவாறெடுத்துக் கூறக்கேட்ட கௌசிகமுனிவர் ஸ்ரீரகுநந்தனரைக் கடாக்ஷித்து அடா குழந்தாய்! வில்லைப்போய்ப்பாரென்றருளிச்செய்தனர். அவ்வருளிச்செயலை நீலமேகவண்ணன் கருத்துட்கொண்டு அந்த வில்லினருகிற்சென்று அப்பேழையைத் திறந்து ஹரகோதண்டத்தைக் கண்ணுற்றுத் தமதாசிரியரை நோக்கி, ஸ்வாமீ! இதோ அரனுடைய வில் விளங்குகின்றது, தேவர் கட்டளையாயின் இதைக் கையிலெடுத்துக் குனித்து நாணேற்றி இழுத்தெய்யமுயலுகின்றேனென்றுகந்தோது திருவாய்மலர்ந்தருளினர். கௌசிக ஜனகர்களிருவரும் ஸ்ரீராமபிரானுடைய திருமொழியைச் செவியுற்று வியப்படைந்து, நின் எண்ணத்தின்படி செய்யென அநுமதிசெய்தனர்கள். ஸ்ரீகோதண்டதீக்ஷன் தனதாசிரியர்களுந் துதிக்கிணங்கப் பெட்டியினின்றும் அக்கார்முகத்தை வருத்தஞ்சிறிதுமின்றி எளிதாகவெடுத்து, அநேகமாயிரம் புரவலர்கள் இமையாமல் நோக்கிக் கொண்டிருக்கையில் நாணேற்றிக் கணைதொடுத்துச் செவியளவும் இழுக்கருளினர்.

తద్బభంజధనుర్మధ్యే నరశ్రేష్ఠోమహాయశాః
తస్యశబ్దోమహానాసీన్నిర్ఘాతసమనిస్వనః
భూమికంపశ్చసుమహాన్ పర్వతస్యేవదీర్యతః
నిపేతుశ్చనరాస్సర్వే తేనశబ్దేనమోహితాః
వర్జయిత్వామునివరం రాజానంతౌచరాఘవౌ

*தத்பபஞ்ஜதநுர்மத்யே நரச்ரேஷ்டோமஹாயசா:*
*தஸ்யசப்தோமஹாநாஸீந் நிர்காதஸமநிஸ்வந:*
*பூமிகம்பச்சஸுமஹாந பர்வதஸ்யேவதீர்யத:*
*நிபேதுச்சநராஸ்ஸர்வே தேநசப்தேநமோஹிதா:*
*வர்ஜயித்வாமுநிவரம ராஜாநந்தௌசராகவௌ*

நாணைச் செவிவரையும் வாங்குகையில், அச்சிலை ஸ்ரீராமபிரானுடைய திருத்தோள் வலிக்குத் தாங்ககில்லாமையால் அந்நடுவில் இரண்டாக முறிந்து, பெருமானுக்குப் பெருங்கீர்த்தி தந்தது. அஃது முறிந்த ஒலி, ஊழிக்காலக்காற்றின் பெருமுழக்கம்போல அச்சந்தருவதாயிருந்தது. பெருமலைபிளக்குங்கால் உண்டாகும் பேரொலிபோலவுமிருந்தது. ஸ்ரீராமலக்ஷ்மண கௌசிக ஜனகர் நால்வர் தவிர, ஆங்குள்ள மற்றெல்லாரும் அவ்வில்லிழோசையால் மயங்கிப் பார்மிசை வீழ்ந்தனர் —

ஒரு முகூர்த்தகாலங் கடந்தபின்பு யாவரும் மயக்கந்தீர்ந்து தெளிந்தெழுந்து தம்முள் வியப்படைந்திருக்க, நிமிகுலநந்தனன் குசிககுலநந்தனனை நோக்கிப் பகவரே! அடியேன் ஸ்ரீரகுநாயகனுடைய திருத்தோளின் வல்லமையைக் கண்டறிந்தேன், இச்சுந்தரத் திருத்தோளண்ணல் இச்செயல் புரிவானென்று அடியேன் கனவிலுமெண்ணங்கொண்டவனல்லேன், இஃது யாவரும் வியக்கத்தக்கதே; தொண்டேனின் திருமகளாகிய சீதை ஸ்ரீராமபிரானைத் திருமணம் புணர்கின்றமையால் அடியேன் மரபுக்குப் பெரும்புகழை விளைவிப்பவளாவாள்; அடியேனுடைய உறுதிமொழியும் கெடாது ஈடேறிற்று; என்னுயிரினுஞ் சிறந்த ஜாநகியை ஸ்ரீராமசந்திரனுக்குத் திருக்கலியாணம் புரிவிக்க வேண்டுமாதலின், மந்திரிமார் தேர்மீதிவர்ந்து விரைந்து அயோத்திமாநகருக்குச்சென்று ஸ்ரீராமபிரானும், இலட்சுமணனும் தேவராற் பாதுகாக்கப்படுகின்றதையும், ஆடவர் பெண்மையை அவாவுந்திருத்தோளுடைய இப்பெரியான் ஐம்முகன்வில்லை முறித்தெறிந்ததையும், அதன் பயனாகப் பெண்ணருங்கலமாகிய சீதாபிராட்டியைத் திருமணம் புரிகின்றதையுந் தெரிவித்துத் தசரதப்புலவர் பெருமானை மகிழ்வித்து, இங்கு அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்றுவென விண்ணப்பஞ் செய்தனர். அங்ஙனமே செய்கவெனக் கௌசிகர் அருளிச்செய்ய, ஜனகப்புரவலரும் அவருடைய கட்டளையை மேற்கொண்டு அமைச்சர்களை நோக்கி, நீவிர

கடுகிச்சென்று அயோத்திமாநகரில் அரசபுரியின்றதசரதசக்கரவர்த்தியா ரை அணுகி, நடந்த செய்திகளை யாவும் அறிவித்தது, உடனே அவரைகளை ஞரோடும், நட்பினர் முதலியோரோடும் உடன் கொண்டுவரக் கடவீர்களெ னக்கட்டளையிட்டு விடுத்தனர்;

பாலகாண்டத்தில் அறுபத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தெட்டாவது சருக்கம்.

தசரதசக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானது செயலைச் செவிகுளிரக் கேள்வி யுற்று மிதிலைக்குச் செல்லும்படி முயன்றன.

ஜனக மஹாராஜருடைய ஏவுதலைப்பூண்டு, தூதர்களும் விரைந்து நடந்து மூன்றுநாள் வழிக்கதைகிநான்காநாள் ஸாகேதநகரத்தையடைந்து, அரணமனைவாயிலில் நின்று தாம் கொணர்ந்துவந்த நற்செய்தியை அரச பிரானுக்குத் தெரிவித்து, அரசன் கட்டளையால் அரணமனையுட்புகுந்து, தசரதமஹாராஜரைக் கண்டு வணங்கி, கைகூட்டி வாய்பொத்திய புரவலர் பெருமானை நோக்கிப் பணிவாகவும், இனிமையாகவும் விண்ணப்பஞ் செய்யலாயினர் அரசர்க்கரசரே! மிதிலாநகரக் காவலராகிய ஜனகமஹா ராஜர், அக்கினிஹோத்திர, புரோஹிதர், உபாத்தியாயர், ருத்விஜர், பரி வாரங்களுடன் தேவரீருக்கு மேலவருநன்மை உள்ளநன்மைகளை வினவி, விசுவாமித்திர மஹாமுனிவருடன் கூடி, எங்கள் முகத்தால் பணிவாக மொழிகின்றார் யாவரையும் நமது குடைக்கீழடங்கி யொழுகும்படிப் பார்முழுதும் ஆளாநின்ற தசரதமஹாராஜரே! சிவனவில்லை யாவன் வளைக்கின்றானோ அவனுக்கே என் அருமைத்திருமகளை மணம்புரிவிப்பே னென்று முன்னமே யான் செய்த வஞ்சினத்தையும், அதைக் கேள்வியுற்ற வெற்றியாளராகிய பற்பல வேந்தர்கள் வந்து அவ்வில்லை அசைப்பதற்குந் திறமையற்றுப் பங்கமடைந்து நாணிச்சென்ற செய்தியையும் நீர் நன் குணர்வீரன்றோ? விசுவாமித்திர மஹாமுனிவருடன் வந்த உம்முடைய மூத்த திருக்குமாரராகிய ஸ்ரீராமசந்திரர் ஆசிரியர் கட்டளைப்படி சிவன் வில்லை எடுத்து வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்து முறித்தது, என் அருமைச் செல்வக் காதலியைத் திருமணம் புரியும்படி வெற்றிகொண்ட னர். ஆதலால் என் அருந்தவப்பேறாகிய செல்வச் சிறுமியை ஸ்ரீராம பிரானுக்கு மணஞ்செய்வித்து என் கடமையை முடிக்க, நினைக்கின் றேன். இதற்கு நீரும் உடன்பட்டு, உறவினர் நண்பினரோடும், அந்தணர் முதலியவரோடும் விரைந்து இங்குவந்து, உமதருமைத் திருமக்களிரு வரையும் கண்குளிரக்கண்டு பேருவகையோடு என் விருப்பையும் நிறைவு

செய்து, ஆண்டகைச் சிறுவரிருவரோடும், மருமகளிரோடும் கூடி, உள்ள மகிழ்வீரென இவ்வண்ணம் ஜனகமஹாராஜா கௌசிகசதாநந்த முனிவர்கள் முன்னிலையில் நம்மிடத்து விண்ணப்பஞ்செய்யக் கட்டளையிட்டு எம்மை விடுத்தனரெனத் தேர்ச்சித் துணைவராகிய தூதர்கள் கூறினர்கள். அவர்கள் கூறிய திருமணச்செய்தியைத் தசரதமஹாராஜா தம் செவியிற் சார்தலும் பேரவுகந்து, வசிஷ்டவாமதேவாதி முற்றத்துறந்த முனிகணங்களையும், சுமந்திரன் முதலிய தேர்ச்சித்துணைவரையும், கிளைஞரையும் வரவழைத்து, அவர்களை நோக்கி, என் அன்பர்களே! கௌஸல்யைத் திருக்குமாரனாகிய என் காதலன் இளையானோடு கௌசிகமுனிவரால் பாதுகாக்கப்பட்டவனாகி, மிதிலாநகர் சேர்ந்து, சிவனது குனிசிலையை வளைத்து முறித்து, ஜனகமஹாராஜனது வருத்தத்தை மாற்றுவித்து, வரம்பற்ற பெரும்புகழ் பெற்றிருக்கின்றானாம்; அவ்வில்லை வளைத்தது காரணமாகத் தமதருமைச் செல்வக்காதலியாகிய சீதையைப் பெறலரிய செல்வச்சிறுவனாகிய ஸ்ரீராமனுக்குத் திருமணஞ்செய்து கொடுக்கவேண்டுமென்றும் அதற்காக நீர் யாவருடனும் புறப்பட்டுக் கடுகிவரவேண்டுமென்றும் ஜனகமஹாராஜா தூதனுப்பி இருக்கின்றார்.

యదివోరోచతేవృత్తం జనకస్యమహాత్మనః
పురీంగచ్ఛామహేశీఘ్రం మాభూత్కాలస్యపర్యయః

யதிவோரோசதேவ்ருத்தம ஜநகஸ்யமஹாத்மந:
புரீங்கச்சாமஹேசீக்ரம மாபூத்காலஸ்யபர்யய:

ஆதலால் ஜனகப்பெயரப் புலவலருடைய மரபும், செயலும் நாம் உடன்சேர்ந்து கலப்பதற்குத் தகுந்தனவென உங்கள் திருவுளத்துக்குகப்பாக இருந்தால், ஒல்லையில் புறப்பட்டு நாமெல்லோரும் மிதிலாபுரிக்குச்செல்வோம்; காலக்கழிவு செய்யலாகாது; இது உங்களுக்கு உகப்பாகத் தோற்றாதாயின் அதையுஞ்சொல்லியனுப்பிவிடுவோமென உரைத்தனர். அதுகேட்டு அவ்வவைக்களத்துள்ள யாவரும் மாசற ஆராய்ந்து துணிந்து; நாம் ஜனகவேந்தரோடு கலந்துறவு கொண்டாடல் மிகுதியுந் தகுதியுள்ளதென்று எல்லோரும் ஒருகருத்தாகவே மகிழ்ச்சியுடன் உடன்பாடு கூறினர்கள். இந்துமதி நந்தனரும் அவர்களுடைய நெடுமொழியைக்கேட்டு எல்லையிறந்த மகிழ்வு பெரிதுமடைந்து, ஜனகமஹாராஜாது மந்திரிகளைநோக்கி, அமைச்சர்களே! நாம் அனைவரும் நாளைத்தினம் மிதிலாநகரத்துக்குப் பயணப்படுவோமென உணர்த்தி, அவர்களுக்குத் தக்கவாறு நன்கொடையளித்து, வந்தவிடாயாறும்படி செய்துவிடுத்தனர். தூதர்களும் தசரதமஹாராஜா கட்டளையின்படி மிகுதியும் அன்போடு உபசரிக்கப்பட்டவர்களாகி மனக்களிப்புற்று அன்றிரவை நன்கு கழித்தனர்கள்.

பாலகாண்டத்தில் அறுபத்தெட்டாவது சருக்கம்
முற்றிற்று.

## அறுபத்தொன்பதாவது சருக்கம்.

### தசரதசக்கரவர்த்தி மிதிலாபுரிசேர்ந்து ஸ்ரீராமபிரானைக் கண்டு மகிழ்ந்தது.

---

அன்றிரவு கழிந்த வைகறையில், தசரதமஹாராஜர் காலைக்கடனை முடித்துக்கொண்டு, உபாத்தியாய புரோஹிதாதிகளை வரவழைத்துச் சுமந்திரனென்னும் மந்திரத்தலைவனை நோக்கி, ஸுமந்திரரே! பொருள் வைப்புச்சாலையாளரெல்லோரும், பொருள் வைப்புகளிலுள்ள பொன் மணி முதலிய பொருள்களையும் மெய்ப்பித்துக்கொண்டு, காவலாளர்களுடன் இப்பொழுதே புறப்பட்டு முன்செல்லக் கடவர்கள். நால்வகைப் படைஞர்களும், இன்றே புறப்பட்டுச் செல்லக் கடவர்கள். சிவிகை, தேர், வண்டிகள் முதலிய வாஹனங்களும் பயணத்துக்கு ஆயத்தமாய் நிற்கக் கடவன. வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காசிபர், மார்க்கண்டேயர், காத்தியாயனர் முதலிய அந்தணர்கள் முந்தி எழுந்தருளக்கடவர்கள். என்னுடைய தேரையும், அணிவித்துக்கொண்டு வரக்கடவீர். இனிக் காலநீட்டித்தல் ஆகாதென இத்தூதர்கள் என்னைத் தூண்டுகின்றனரென்று கட்டளையிட்டனர். அங்ஙனமே எல்லோரையும் பயணப்படுத்தி சுமந்திரர் தேரை அலங்கரித்துக்கொண்டுவந்து நிறுத்தி, அரசர் பிரானுக்குத் தெரிவிக்க, உடனே தசரதமஹாராஜர் தம்மைந்தர், நட்பினர், மனைவியர் முதலியவரோடு புறப்பட்டுத் தாம் தேரேறி முன்செல்ல, யாவரும் பின்தொடர்ந்து வந்தனர்கள். இவ்வண்ணம் சென்று நான்குநாள் வழியில் தங்கி ஐந்தாநாள் யாவரும் மிதிலாபுரிபோய்ச் சேர்ந்தனர்கள். ஜனகமஹாராஜர் சக்ரவர்த்தியாருடைய வருகையை ஒற்றர்களால் கேள்விப்பட்டு எதிர்கொண்டுவந்து கையுறைப்பொருள் செலுத்திக் கண்டு அளவளாய், அழைத்துவந்து ஓரிடத்தில் தேரினின்றும் இழியச்செய்து, பெருங்களிப்போடு தசரதமஹாராஜரை நோக்கி, மஹாராஜரே! உமது வரவு நல்வரவாயிற்று; ஸ்ரீராமபிரானை திருத்தம்பி இவ்விருவருடைய திருத்தோள் வலியால் நீர் ப்ரீதியும் மகிழ்ச்சியையும், புகழையும் பெரிது பெற்றீர். விண்முழுதாளி பிரகற்பதியோடும், விண்ணவர்களோடும் வந்தாற்போலும்; வசிஷ்டமுனிவரோடும், அரசர்களோடும் எழுந்தருளினமையால் என் பாக்கியமே பாக்கியம்.

దిష్ట్యామేనిర్జితావిఘ్నాః దిష్ట్యామేపూజితంకులం
రాఘవైస్సహసంబద్ధం వీర్యశ్రేష్ఠైర్మహాత్మభిః

திஷ்ட்யாமேநிர்ஜிதாவிக்நா: திஷ்ட்யாமேபூஜிதங்குலம்
ராகவைஸ்ஸஹஸம்பந்தம் வீர்யச்ரேஷ்டைர்மஹாத்மபி:—

சிறந்த தோள்வலிபெற்றவர்களும், அவதாரபுருஷர்களும், ரகுகுலத்திற் றோன்றினவர்களுமாகிய அரசர்களுடன் எனக்குக் கொள்வது கொடுப்பது கிடைத்தமையால், என் தீயவினைகளெல்லா மறறுங்கேட்டு, என் குடியும் சிறந்து யாவராலும் ஏத்தி வணங்கப்பட்டதாயிற்று, அரசர் கோமானே! நாளைத்தினம் வைகறையில் எட்டுவகை மணங்களுள் பிரமமணமென்னும் விவாகத்திற்குரிய செய்கைத் துணிந்துகொள்ளக்கடவீர். என்னுடைய யாகம் நான்காவது தினத்தில் முற்றுப்பெறுமாகலின் அது முடிந்தவுடன் திருமணம் புரிவிக்கின்றேனென்றுரைத்தனர். அதைச் செவியுற்றுகந்து அயோத்திமாநகரக்காவலராகிய தசரதசக்கரவர்த்தி விதேஹராஜனைநோக்கித் தோழரே! ஈவது ஈவோன் வசமென்று நான் கேட்டிருக்கிறேனாதலால், நீர் எவ்வண்ணம் உரைசெய்யினும் அவ்வண்ணம்செய்ய, யாம் அவாக்கொண்டிருக்கின்றோமென மொழிந்தனர். அம்மொழியைக்கேட்டு மிதிலாராஜா மிகவியப்பும் உவப்புமடைந்தனர் பின்னை வஸிஷ்டர் ஸதாநந்தர் முதலிய மெய்த்தவமுனிகணங்க ளெல்லோரும் ஒருவரையொருவர் கண்ணுற்று, அளவளாய மகிழ்ந்து, உள்ள நலத்தையும், மேல்வரு நலத்தையும் விரும்பி, அன்றிரவை இனிதாகக் கழித்தனர்கள். ஸ்ரீசக்கரவர்த்தியாரும் ஜனகரால் வழிபாடு செய்யப்பட்டவராய், பெருமானையும், இளையபெருமானையுங் கண்குளிரக்கண்டு தழுவியெடுத்து அணைத்துப் பெருமகிழ்வு கொண்டனர். ஜனகமஹாராஜரும் வேள்விக்குரிய கருமங்கள் யாவற்றையுஞ்செய்து, தாம்பெற்ற திருமகளாகிய ஊர்மிளையை இளையபெருமாளுக்குத் திருமணஞ்செய்து தரவேண்டுமென்று தமக்குள் துணிந்துகொண்டு, ஸீதை யூர்மிளையெனனும் செல்வப் புதல்விய ரிருவருக்குந் திருக்கோலத்துக்குரிய செய்கைகளையுஞ்செய்வித்து, அன்றிரவை இன்றுயிலசெய்து போக்கினர்.

பாலகாண்டத்தில் அறுபத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

## எழுபதாவது சருக்கம்

வஸிஷ்டர் ஜனகருக்கு மனுகுலத்தோர் குலமுறை யுரைத்தது.

பிற்றைநாள் வைகறையில் துயிலுணர்ந்து ஜனகமஹாராஜர் செய்கடன்களை முடித்து, பல முனிவர்குழாமோடு கூடிச் சதாநந்தரை நோக்கிப் புரோஹிதரே! அறவொழுக்கமும் தோள்வலியுமுள்ள என் தம்பியாகிய குசத்துவஜன் இக்ஷுமதிநதியை அழகாகவுடைய புட்பக விமா

னம்போன்ற ஸாங்காசியை யெனனும் நகரத்தை முறைவழாது அரசு புரிகின்றனன். அவனையான கண்டுகளிக்க நினைக்கின்றேன்; அவனும் இங்கெய்தி, யான் செய்கின்ற வேள்வியையும் முடிப்பித்து, சீதையின் திருமணத்தின் விழவையும் கண்ணுற்று, என்னோடொக்கப் பெருமகிழ் வடைவான். ஆதலால் அவனை உடன்கொண்டுவரத் தூதனுப்பவேண்டு மென, உடனே அவர் கட்டளையிடுதலும், வினையுரைப்போர் பரிமாமீ திவர்ந்து விரைந்து சென்று, ஸாங்காசியாபுரியை அணுகிக் குசத்துவசராஜ னைக் காணலுற்று, நிலமிசைவீழ்ந்து வணங்கிக் கைகூப்பி நின்று, ஜனக மஹாராஜா கட்டளையை அவர் செவிக்கினிதாக உரைசெய்தனர்கள். திரு மணச்செய்தி தம் செவியிற்சார்தலும், குசத்துவஜரும் தம்மையுணராத பெருங்களிப்புடையாராய் உடனே புறப்பட்டு மிதிலைசேர்ந்து சதாநந்த ரையும் ஜனகமஹாராஜரையும் வணங்கிச் சிங்கஞ்சுமந்த அணையில் ஜனக மஹாராஜரருகில் வீற்றிருந்தனர். அப்பொழுது இவ்வுடன் பிறந்தோ ரிருவரும் ஸுதாமனென்னும் மந்திரித்தலைவரை நோக்கி, ஸுதாமனரே! நீர் தசரதசக்கரவர்த்தியாரிடஞ்சென்று, அவரை வசிஷ்டாதிகளுடனும், திருமைந்தர்களுடனும், நட்பினர் முதலானோருடனும் சேர அழைத்துவாரீ ரென விடுப்ப, ஸுதாமனரும் ஸ்ரீசக்கரவர்த்தியாருறையுளைச் சார்ந்து தலைவணங்கி அரசர் பெருமானே! ஜனகமஹாராஜா தம்பியுடன் சிங்கார மண்டபத்தில் வீற்றிருந்து சுற்றத்தாரோடும், ஆசிரியர், புரோஹிதர் முதலிய வேதியர்களோடும், தேவர் எழுந்தருளும்படி வேண்டுகின்றன ரென்று விண்ணப்பஞ்செய்ய, பத்துத்தேரராகிய சக்கரவர்த்தியாரும் அம்மந்திரியின் விண்ணப்பத்தைக் கேட்டமாத்திரத்தில், உடனே யாவ ரையுமுடன்கொண்டு ஜனகமஹாராஜ ரிருக்கையைச்சேர்ந்து, அவரால் செய்யப்படும் பூசனையை ஏற்றுக்கொண்டு, அரியணையின்மேல் வீற்றிருந் நது விதேஹாதிபரைநோக்கி, ஜனகரே! இவ்வசிஷ்டமஹாமுனிவரே எமக்குக் குலதெய்வமென்பதை நீரும் உணர்வீரன்றே? ஆதலின் எம் அரும்பெறல் அடிகளாகிய அருந்ததி மணவாளரே! கௌசிகமுனி முதலானோருடன் ஆராய்ந்து எவ்வெக்காலங்களில் எவ்வெவ்விதி முத லியவற்றை உரைக்கவேண்டுமோ அவ்வக்காலங்களில் அவ்வவ்விதி முத லியவற்றை அருளிச்செய்வாரென உரைத்தனர். அதுகேட்டருளிய வசி ஷ்டமகாமுனிவர் சதாநந்தருடன்கூடி, ஜனகமஹாராஜரை நோக்கி ஜனக ராஜரே? திருமணத்துக்கு முன் திருமணப்பிள்ளையின் குலமுறை கூறல் மரபாதலால், சக்கரவர்த்தித் திருமகன் மரபின் முறையே புகலுகின் றேம்; கேண்மின்; முதலிடையோ டீறிலலாமல், எல்லாவண்டங்களுக் கும், மன்னுயிரெல்லாவற்றுக்கும் இறைவனாகிய ஸ்ரீமந்நாராயணன் ஒன் றுந்தேவு மூலகு முயிரும்மற்றும் யாதுமில்லா, அன்று நான்முகக்கடவுளைப் பண்டத்தான், அந்நான்முகற்கு மரீசியெனபவர் பிறந்தார்; மரீசிமகனார் காசியபர், காசியபர் மைந்தர் விவஸ்வான்; விவஸ்வான் குமாரர் மனு; மனு

புதல்வன் இக்ஷுவாகு; இந்த இக்ஷுவாகு ராஜரிஷி அயோத்திமாநகரில் முதலில் அரசுசெய்தவர்; இக்ஷுவாகு தனயர் குக்ஷி; குக்ஷிகுமாரர் விகுக்ஷி; விகுக்ஷிபிள்ளை பாணர்; பாணர் காதலர் அநரண்ணியர்; அநரண்ணியர் சுதர் பிருது; பிருது நந்தனர் திரிசங்கு; திரிசங்கு தோன்றல் துந்துமாரனென் வேறு பெயருடைய யுவனாசுவர்; யுவனாசுவர் சிறுவர் மாந்தாதா; மாந்தாதாவின் பாலர் ஸுஸந்தி, ஸுஸந்தி பிள்ளைகள் துருவஸந்தி, பிரஸேனஜித்து என்னுமிருவர்; துருவஸந்திக்குப் பரதனென்பவர் பிறந்தார்; பரதருக்கு அசிதனென்பவர் தோன்றினர்; அந்த அசிதர் தாம் தம்மோடு போர்குறித்து வந்த ஹைஹய, தாலசங்க, சூரஸேன, சசிபிந்து தேசத்தரசர்களோடு போர் பொருது தோல்வியுற்று, தம்மிரண்டு மனைவிமார்களையு முடன்கொண்டு, பனிமலைச் சாரலில் பிருகுதுங்க மென்னப்படும் இடத்தை அணுகித் தவஞ்செய்துகொண்டிருக்கையில், தெய்வவசத்தால் மனைவிகளிருவரும் வயிறு வாய்த்தார்கள். அக்காலையில் இளையாள் தன் மாற்றாளும் தன்னோடொக்கச் சூல்கொண்டாளென்னும் பொறாமையால் அவள் கருவை யழிக்கநினைத்து, உணவில் நஞ்சுகலந்து கொடுத்தனள். அவ்வஞ்சமுணராத மூத்தாள் அவ்வுணவை யுண்டபின்னர், இளையாள் செய்த தீச்செயலை யுணர்ந்து கடுந்துயருழந்து, அங்குத் தவம்புரிந்துகொண்டிருந்த பிருகுகுலத்தலைவராகிய சியவனமஹாமுனிவரைச் சரண்புகுந்து, தனக்கு நேர்ந்த துன்பத்தைச் சொல்லிக்கொண்டனள். அம்முனிவரும் இவளிடத்தில் அருள்சுரந்த நெஞ்சுடையராய், பெண்மணி! நீ துயரற்க, நின்வயிற்றில் தோளாண்மையினால் விளங்கும் சிறுவனொருவன், இளையாளிட்ட கரத்தோடுகூடிச் சகரனென்னும் பெயர் பெறுமாறு விரைவிலுதிப்பான், (கரம் - விஷம்) நீ உள்ளங்கவலற்க, மகிழ்கவென இனிதுவாழ்த்தி விடுத்தனர். மூத்தாளும் பேருவகையெய்தியிருந்தனள். அங்ஙன நிகழுங்காலையில், அசிதர் உடலோடு கூடிவாழும் வினைமுடிந்து பொன்னுலகடைந்தனர். களிந்ததேசத்தரசன் மகளாகிய காளிந்தியென்னும் பெயருள்ள அம்மூத்தாளும் கணவனது பிரிவாற்றாமையால், உள்ளமறுகிக் கலன்றுகொண்டிருக்கையில், சூல்முதிர்ந்து, இளையாளிட்ட கரத்தோடு பிறந்தமையால், சகரனென்னும் காரணக்குறி வாய்ந்த ஸகரச்சக்கரவர்த்தியைப் பெற்றனள். அச்சகரருக்கு அஸமஞ்சன் தோன்றினன், அஸமஞ்சனுக்குத் திலீபன் உற்பவித்தான், திலீபனுக்குப் பகீரதன் உதித்தான், பகீரதனுக்குக் ககுத்தன் அவதரித்தான், ககுத்தனுக்கு ரகுமகாராஜன் தோன்றினன், ரகுவுக்குப் பிரவிருத்தனென்றும், புருஷாதகனென்றும், கல்மாஷபாதனென்றும் பெயர்பெற்றவன் முளைத்தனன்; அவனுக்குச் சங்கணனும், சங்கணனுக்குச் சுதரிசனனும், சுதரிசனனுக்கு அக்கினிவர்ணனும், அக்கினிவர்ணனுக்குச் சீக்கிரகமனனும், சீக்கிரகமனனுக்கு மருவும், மருவுக்குப் பிரசுச்சுருக்கனும், பிரசுச்சுருக்கனுக்கு அம்பரீஷனும், அம்பரீஷனுக்கு நஹுஷனும், நஹுஷனுக்கு யயாதியும், யயா

திக்கு நாபாகனும், நாபாகனுக்கு அஜனும் இம்முறையே பிறந்தனர்கள். அவ்வஜமஹாராஜனுக்கு இத்தசரதச்சக்கரவர்த்தியாருதித்தனர். இவருக்கு இந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் திருவவதரித்தனர்கள். இதன்னமாகும் இம்மரபின்முறை; இம்மரபினர் தொன்றுதொட்டு ஆகமப்ரமோக்கத் தூய்மையுள்ளவர்களாயும், அறவொழுக்க முள்ளவர்களாயும், வீராண்மையுள்ளவர்களாயும், பொய்புரையாதவர்களாயும் இருக்கின்றனர்கள்.

రామలక్ష్మణయోరర్థే త్వత్తో వైదేవ యాచ్ఛతః
సదృశాభ్యాం నరశ్రేష్ఠ సదృశే దాతుమర్హసి

ராமலக்ஷ்மணயோரர்தே த்வத்தோ வைதேவ யாசதோ
ஸத்ருசாப்யாம் நரச்ரேஷ்ட ஸத்ருசே தாதுமர்ஹஸி

அத்தன்மையர்களாகிய இந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்காக உம்முடைய பெண்களிருவரையும் கேட்கின்றேன், ஜனகபூபாலா! என் கருத்துக்கேற்க, இவ்விரண்டு பிள்ளைகளுக்குந் தக்க தகுதியுள்ள நும்மிரண்டு பெண்களையும் மணம்புரிந்து கொடுக்கவேண்டுமென அருளிச்செய்தனர்.

பாலகாண்டத்தில் எழுபத்தொன்றாஞ் சருக்கம்

முற்றிற்று.

---

இரகுபுத்திரர் முதலில் பிரவிருத்தரென்னும் இயற்பெயருடையவராகி, ஒருகால் வசிஷ்டர் சாபத்தால் ராக்ஷஸராகிப் புருஷாதகர் (நரமாமிசம் உண்பவர்) என்னும் பெயர் பெற்று, அப்பொழுது தாம் வசிஷ்டரைச் சாபமிடும்படி எடுத்த நீரைத் தம் இல்லாள் கூறிய நல்வார்த்தையால் தம் காலிலேவிட்டுக் கொண்டதனால், காலுருகி நானாநிறம் பொருந்தினமையால் கல்மஷபாதரென்னும் பெயர் பெற்றாரென்றுணர்க.

இக்குலமுறை சில புராணங்களில் இதற்கு வேறுபட்டிருக்கின்றது. அதற்குக் காரணம் சிலர் கல்பபேத மென்கிறார்கள். வேறு சிலர் சிலவிடத்தில் இன்றியமையாதவர்களை மட்டும் எடுத்துக்கூறி, மற்றவர்களை யுரையாது விட்டிருக்கின்றதென்பார்கள்; இம்மட்டோ? மூத்தோர் முறையும், இளையோர் முறையும் கலந்து கூறப்பட்டிருக்கலாமெனவும், மூத்தோர் முறைமட்டுங் கூறப்பட்டிருக்கலாமெனவும், முடிமன்னவர் முறைமட்டும் உரைக்கப்பட்டிருக்கலாமெனவும், செல்வோர் சிலவில் வந்தவர்களையே கூறியிருக்கலாமெனவும் அவ்வெழுத்துக்குச் சமாதானஞ் சொல்வார்கள்

## எழுபத்தொன்றாவது சருக்கம்.

ஜனகர் தம்மரபின் முறைமையை யுரைத்தது.

மிதிலாதிபரும் இவ்வண்ணம் மனுகுலத்தோர் முறைமையை யருளிச்செய்த வஸிஷ்டமஹாயோகியை நோக்கிக் கைகூப்பி எம் அடிகளே! பெருந்தவச்செல்வாக்கிறைவே! அடியேனுடைய குலமுறைமையையும் விண்ணப்பஞ்செய்கின்றேன் கேட்டருளவேண்டும் —

ప్రదానే హి మునిశ్రేష్ఠ కులం నిరవశేషతః
వక్తవ్యం కులజాతేన తన్నిబోధ మహామునే

ப்ரதாநே ஹி முநிச்ரேஷ்ட குலம் நிரவசேஷத:
வக்தவ்யம் குலஜாதேந தந்நிபோத மஹாமுநே.

முனிவர்களுக்குட் பெருந்தகையாகிய வஸிஷ்டபகவானே! கன்னிகையை மணஞ்செய்து கொடுப்பவன் தன் மரபின் முறைமையைச் சிறிதும் விடாதுரைக்கவேண்டுமாதலால், யானுரைக்கின்றேன், இதற்கும் தேவர் திருச்செவிசாத்தக்கடவீர். எங்கள் குலத்துக்கு முதல்வர் நிமியென்பவர்; அவர் தமது தோளாற்றலாலும், முறைவழுவாத ஒழுக்கத்தாலும், மூவுலகிலும் மாசற்ற பெரும்புகழுடைந்து, அரசர்களெல்லோரிலும் சிறந்தவராக விருந்தனர். அவர் மைந்தர் மிதியென்பவர், இவர்தாம் இம்மிதிலாபுரியைப் படைத்து, இங்குத் தனிக்கோல் செலுத்தி, முதன்மை பெற்று ஜனகர் என்னும் பெயர் பெற்றனர். அவருக்கு உதாவஸுவும், உதாவஸுவுக்கு நந்திவர்த்தனரும், நந்திவர்த்தனருக்கு ஸுகேதுவும், ஸுகேதுவுக்குத் தேவராதரும், தேவராதருக்குப் பிருஹத்ரதரும், பிருஹத்ரதருக்கு மஹாவீரரும், மஹாவீரருக்கு ஸுத்ருதியும், ஸுத்ருதிக்குத் திருஷ்டகேதுவும், திருஷ்டகேதுவுக்கு ஹரியச்வரும், ஹரியச்வருக்கு மருவும், மரு என்பவருக்குப் பிரதிந்தகரும், பிரதிந்தகருக்குக் கீர்த்திரதரும், கீர்த்திரதருக்குத் தேவமீடரும், தேவமீடருக்கு விபுதரும், விபுதருக்கு மஹீத்திரகரும், மஹீத்திரகருக்குக் கீர்த்திராதரும், கீர்த்திராதருக்கு மஹாரோமரும், மஹாரோமருக்குச் சுவர்ணரோமரும், சுவர்ணரோமருக்கு ஹ்ரஸ்வரோமரும், முறையே தோன்றித் தோளாண்மையும், கலங்குதலில்லாத நிலைமையும், நுண்ணறிவும், நற்குண நற்செய்கையுமுடையார்களாய், உலகத்தை யாண்டுவந்தனர்கள். அந்த ஹ்ரஸ்வரோமருக்கு அடியேனும் இக்குசத்துவஜனுமாகிய இரண்டு சிறுவர்கள் பிறந்தோம், எனக்குத்தக்க பருவம்வந்தபின் என் தந்தை எனக்கு முடிசூட்டிக் குசத்துவஜனை எனக்குக் காட்டிப் பரிவுடன் பாதுகாக்கக்கடவையெனக் கூறித் தபோவனஞ்சென்று சிலநாள் தவம்புரிந்து பொன்னுலகு சேர்

நால்வர்களும் திருமணஞ்செய்துகொள்ளக்கடவர்கள். நாளையின்னுமொருத்தினம் திருமணப்பிள்ளைகளின் பேறைப் பெருக்கத்தக்க பகன் என்பவனைத் தேவதையாகவுடைய உத்தரபங்குனி நட்சத்திரத்திலே செய்ய வேண்டுமென இவ்வாறு விளம்பி, மீண்டும் எழுந்து கைகூப்பி நின்று அருந்தவப் பெருந்தலைவர்களே! நீயிர் தொண்டனேனுக்கு நல்லறந் தீலகக்கடுமபடி இனிதுரைத்தருளினீர்கள் தேவர்களுக்கு அடியேன் சிஷ்யனாகின்றேன்; தசரதர்க்கரவாததிக்கு இமமிதிலாநகரம் எவ்வாறுரிமையுள்ளதாயிற்றோ? அவ்வாறு அடியேனுக்கும், அயோத்திமாநகருரிமையுள்ளதாயிற்று ஆதலால், அடியேனுக்கும், தம்பி குசத்துவஜனுக்கும், தசரதப்புலவர் பெருமானுக்கும் நீயிரே விதிப்பவர்களாதலால், எங்களுடைய மடங்கல் சுமந்த ஆதனமூன்றிலும் தேவர்கள் வீற்றிருந்து ஏவுதல் செய்யுமின்னென்றிங்ஙனம் பணிவாக உரைத்தனர் இவ்வாறுரைத்த ஜனகமகாராஜா மொழியை இந்துமதிமைந்தர் கேட்டு, மகிழ்ந்து, புகழ்ந்து ஜனகமன்னனை நோக்கிப் பூபாலசிகாமணி! தம்பிதமையனமாரிருவர்களும் அளவற்ற நற்குணமுடையவர்களாயப் பற்பல மஹாரிஷிகளையும் பூஜைசெய்திருக்கின்றீர்கள். ஆதலால், நீர் இவ்வண்ணமுரைசெய்வது அரிதா! உமக்கு மங்களமுண்டாகுக. யான் உறைவிடம் போய்வருகிறேன், பிள்ளைகளுக்கு முன்னதாக்குரிய செய்கடன்களையுஞ் செய்விக்கிறேனென மொழிந்து, ஆங்குள்ளவர்களிடத்து விடைபெற்று வசிஷ்ட விசுவாமித்திரர்களை முன்னிட்டுக்கொண்டுறையுளைவந்தணுகி, திருமணத்திற்குரிய நாந்தி சிராத்தத்தை விதிப்படி நடாத்தி, மறுநாள் வைகறையில் துயிலுணர்ந்து, மைந்தர்களுக்குத் திருமுடி விளக்கஞ்செய்வித்து, ஒவ்வொரு சிறுவனையுங் கருதிக்கொண்டு பொன்குப்பி பூட்டிய கொம்புகளையுடைய இளங்கன்றுகளோடு நூறாயிரம் ஆன்களையும், பால்கறப்பதற்குரிய வெண்கலக் குடங்களையும், அருமறைக்கிழவர்களுக்குத் தானங்கொடுத்து, மேலும் அளவற்ற பொருள்களையும் மணிகளையும், மற்றுமுள்ள கானப்பொருள்களையும், மற்றும் பல அந்தணர்களுக்கும் ஈந்து, செல்வச் சிறுவர் நால்வராலுஞ்சூழப்பட்டவராய், இந்திர யம வருண குபேரர்களால் சூழப்பட்ட நான்முகக் கடவுள்போலத் திகழ்ந்து வீற்றிருந்தனர் *

பாலகாண்டத்தில் எழுபத்திரண்டாவது சருக்கம்.

முற்றிற்று

* உடன் பிறந்தவர்களுக்கு ஓர் யாண்டுக்குள் மணஞ்செய்யக் கூடாதென்று சோதிட நூலில் விதித்திருக்க, ஸ்ரீராமாதிகள் நால்வருக்கும் ஒரே வருஷத்தில் திருமணஞ் செய்யலாகுமோவெனின்? மற்றும்பல ஜோதிட நூலில் உடன் பிறந்தார்களுக்கும் ஒருதினத்திலே ஒரு லக்கினத்தில் விவாஹஞ்செய்யலாகுமென விதித்திருப்பதினால், ஒருவருஷத்துக்குள் உடன் பிறந்தார்களுக்குத் தனித்தனித்திருமணஞ்செய்யலாகாதென்பது கருத்தே அன்றி, ஒருதினத்தில் செய்யலாகுமென்பது கருத்தெனக் கொள்க

## எழுபத்துமூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீராமலக்ஷ்மண பரதசத்ருக்கனர்கள் சீதை ஊர்மிளை மாண்டவி ச்ருதகீர்த்திகளைத் திருமணம் புரிந்தது.

கோதானமுதலிய தானங்கள் செய்த அன்றே பரதருக்கு அம்மானும், கேகயமஹாராஜர் மைந்தரும், சூரருமாகிய யுதாஜித்து என்பவர் மிதிலாபுரியையடைந்து, தன்னுடன் பிறந்தாள் கணவராகிய தசரதசக்ரவர்த்தியாரைக் கண்டு, நலவாழ்வை வினவி, எல்லாக்கிடைத்த திருவினையகரே! என் தந்தையாகிய உம்முடைய மாமனார் உமக்குக் குசலஞ்சொல்லிப் பேரப்பிள்ளையாகிய பரதனைக் காணவேண்டுமென்னும் வேட்கையால், அழைத்துவாவென்றென்னைவிடுக்கத்தனர் நானும் அயோத்திமாநகருக்கு வந்து அங்குத் தேவரைக் காணாமல், திருமணத்திற்காக இங்குற்றனையதினைக் கேள்வியுற்று, நும்மைக்கண்டுபோகவேண்டுமென விரைந்து புறப்பட்டிங்கு வந்தேனென்ன உரைத்தனர். அதுசெவியுற்ற சக்ரவர்த்தியும் மைத்துனர் வந்தாரெனப் பேருவகையடைந்து பரிவோடு தக்கபடி உபசாரஞ்செய்வித்துத் திருமணம் முடிந்தபின் போகலாமெனநிறுத்திக்கொண்டு, அன்றிரவுகழிந்து மறுநாள் விடியற்காலையில் எழுந்து, காலைக்கடன்களை முடித்து, முனிகணங்களை முன்னிட்டுக்கொண்டு, சீரிய சிங்காரமண்டபம் போய்ச்சேர்ந்து வீற்றிருந்தனர். பின்னர் வசிஷ்டபகவானும் மறைமொழிப்படிக்குச் சிறந்த முஹூர்த்தத்தில் எல்லா அணிகளையும் அணிந்தவர்களாகிய ஸ்ரீராமலக்ஷ்மண பரதசத்ருக்கனர்களுக்குக் கையில் கங்கணநூல்களை மந்திரித்துக்கட்டிப் பலர் வந்தவர் நிறைந்துள்ள இடத்தில் அழைத்துவந்து, ஒரு பீடத்தில் வீற்றிருக்கச்செய்து, தாம் ஜனகராஜரிடம் வந்து மஹாராஜரே! தசரதசக்ரவர்த்தி திருமணத்திற்குரிய அலங்காரம்பூண்ட திருமணப்பிள்ளைகளுடன் வந்து, திருமணப்பெண்களைத் தருபவராகிய உம்மை எதிர்நோக்கிக்கொண்டிருக்கின்றார் நீர் அவரைத் தகுந்த வழிபாட்டோடு அழைப்பித்துத் திருமணத்தை நிறைவேற்றிப் பெரும்புகழையும், பேறுகளையும்பெறக்கடவீரெனக் கூறினர். அதுகேட்ட ஜனகமகிபாலரும், கௌதமமஹாமுனிபாலரும் வசிஷ்டமஹாமுனிவரை நோக்கி,—

కశ్చిత్తైఃప్రతిహారో మే కస్యాజ్ఞాంసంప్రతీక్ష్యతే
స్వగృహే కోవిచారోస్తి యథారాజ్యమిదంతవ

கஸ்சித்தை:ப்ரதிஹாரோமே கஸ்யாஜ்ஞாஸம்ப்ரதீக்ஷ்யதே
ஸ்வக்ருஹே கோவிசாரோஸ்தி யதாராஜ்யமிதந்தவ.

பெருந்தவமுனிவர்க்கரசே! யாவராவது வாயிற் காப்போருள் தடை செய்தனரா? யாருடைய ஏவலை நீவிர் எதிர்நோக்கவேண்டும்? ஒருவன் தன் வீட்டில் ஒன்றுசெய்வதற்கு மற்றொருவனை வினவவும்வேண்டுமோ? இந்நாடு முழுதும் நம்முடையதாதலால், இதற்கு என்னை எதிர்நோக்கவும் வேண்டுமோ? என்னால் யாதொரு தடையுமில்லை; பெண்கள் நால்வரையும் அணிவித்து இதோ திருக்கோல வேதிகைமீது ஆயத்தமாய் உட்கார வைத்திருக்கின்றேன்; யானும் நுங்களையே எதிர்நோக்கிக்கொண்டிருக்கின்றேன்; தசரதசக்கரவர்த்தியார் தங்களின்றியாவும் நடத்தக்கடவர் அவரெனக்காலக் கழிவு செய்கின்றாரென விண்ணப்பஞ் செய்தனர். இவ்வண்ணம் ஜனகவேந்தர் உரைத்த மொழிகளைக் கோசலாதிபர் கேள்வியுற்றுத் தம்பிள்ளைகளையும், முனிவர்களையும், இனத்தோரையும், தம்முடன்கொண்டு திருமண மண்டபம் வந்து சேர்ந்தனர். அப்பொழுது விதேஹாதிபதியார் பிரமபுத்திரரை நோக்கி, வசிஷ்டபகவானே! தேவரீர் மற்றுமுள்ள முனிவர்களுடன்கூடி ஸ்ரீராமசந்திரனுக்குச் செய்தற்குரிய திருக்கோலச் செயல்கள் யாவும் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்ய, அருந்ததிபதியும் அவர் வேண்டுகோளின்படி விசுவாமித்திர சதாநந்தர்களுடன்கூடித் திருக்கோலப் பந்தரின் நடுவில் சந்தனம் புஷ்பம் அக்ஷதை இவை முதலிய மங்கலப் பொருள்களினால் அலங்காரஞ்செய்து, நவதானிய முளைகள் நிரம்பிய பொற்பாலிகைகளையும், அம்முளைகளுடன் கூடிய மடக்குகளையும், தூபம் புகைகின்ற தூபபாத்திரங்களையும், சங்கங்களையும், சுருக்கு சுருவங்களையும், அர்க்கிய பாத்திய ஆசமனீய பாத்திரங்களையும், நெற்பொரி நிறைந்த பாத்திரங்களையும், மஞ்சளூட்டிய அக்ஷதை நிரம்பிய பாத்திரங்களையும், தூப்புல்லையும் பரப்பி, அதன்மேல் முறையே மந்திரித்து வைத்து, நடுவில் மந்திரபூர்வமாகத் தீயை வளர்த்து, அதில் விதிப்படி ஓமஞ்செய்தனர்; அங்ஙனம் நடக்கையில் ஜனகப்பெருமான் எல்லா அணிகலன்களாலும் அணியப்பட்ட சீதையை அழைப்பித்து, வேள்வித்தீயினுக்கெதிராக நிறுத்திக் கௌசல்யாதேவி பெற்ற செல்வப்பிள்ளையை நோக்கித் திருமணப்பிள்ளாய்!

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சீதாபிராட்டியார் திருக்கலியாணம்.

ఇయంసీతామమసుతా సహధర్మచరీతవ
ప్రతీచ్ఛచైనాంభద్రంతే పాణింగృహ్ణీష్వపాణినా

இயம்ஸீதாமமஸுதா ஸஹதர்மசரீதவ
ப்ரதீச்சசைநம்பத்ரந்தேபாணிங்க்ருஹ்ணீஷ்வபாணிநா.

கருவின் தொடர்பில்லாமல், உழுபடையால் உழுத வேள்விநிலத்தில் தோன்றி, நிலமகளுக்குத் திருமகளானமையால், மாதா மாதாமரபினேற்றமுடையவளாயும், நானெடுத்து வளர்த்தமையால் பிதாமரபினேற்றமுடையவளாயும், உமக்கேற்ற கட்டழகமைந்தவளாயுமுள்ள இந்தச் சீதாதேவி எஞ்ஞான்றும் இணைபிரியாமல், நீர் செய்யும் அறங்களைத் தானுந் துணையாக நின்று செய்துமுடித்து, உம்முடைய திருவுளத்துக்கு உகப்பாக ஒழுகுவாள். இவ்வியல்புள்ள என் அருமைத் திருமகளை நீர் உள்ளத்தோடு பொருந்த ஏற்றுக்கொண்டு உம்முடைய திருக்கையால் இவளது திருக்கையைப்பற்றித் திருமணஞ்செய்துகொள்ளக் கடவீர். உமக்கு மங்களங்கள் உண்டாகுக. அன்றியும், இவள் நிழல்போல் எப்பொழுதும் உம்முடன் றொடர்ந்து குலமகளொழுக்கத்தைச் சிறிதும் வழுவாது பாதுகாத்து, உமக்குப் பெரும் புகழை உளதாக்கித் தானும் பெருமகிழ்வுகொண்டிருப்பாளென்றுரைத்து, மந்திரித்த புனலை ஸ்ரீராமபிரான் கையில் அளித்து, சீதாபிராட்டியின் திருக்கரத்தை ஸ்ரீராமபிரான் திருக்கரத்தில் பிடித்துக்கொடுத்தனர். அப்பொழுது பொலிக பொலிக பொலிகவென்று விண்ணவர்களும், முனிவர்களும், அதனைப் புகழ்ந்து கொண்டாடத் தேவபேரிகள் முழங்க, பூமழைபொழிய, கடவுட் பொதுமகளிர் நடம்புரிய, அந்நகர மக்களெல்லோரும் பெருங்களிகூர, சக்கரவர்த்தி திருமகனார் சீதாபிராட்டியாரது திருக்கரத்தைப் பற்றியருளினர். இவ்வண்ணம் ஜனகவேந்தர் ஸ்ரீராமபிரானுக்கு சீதாபிராட்டியாரைத் திருமணம் புணர்வித்து, ஊர்மிளையைக் கையிற்பிடித்துக் கொண்டு இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மண! இவ்வூர்மிளையை அங்கீகரித்துக் கையைப்பற்றி அழைத்துக்கொள்ளும்; காலக்கழிவுசெய்யவேண்டா; உமக்கு நன்மையுண்டாகுக என்று வாழ்த்திக் கொடுத்துவிட்டு, இம்முறையே மாண்டவியின் கையைப்பிடித்துப் பரதாழ்வானுக்கும், சுருதகீர்த்தியின் கையைப்பிடித்துச் சத்ருக்நருக்குங் கொடுத்துவிட்டு, நான்கு திருமணப்பிள்ளைகளையும் நோக்கி, நீங்களெல்லீர்களும் சதிகளுடன்கூடித் [illegible]கலியாணச் சடங்குகளனைத்தையும் முடித்துக்கொள்ளக் கடவீர்கள்

என்றுரைத்தனர். உடனே நான்கு குமாரர்களும் தத்தம் பத்தினியின் கரத்தைப் பற்றிக்கொண்டு வஸிஷ்டமஹாமுனிவருடைய அனுமதியின்படி அவ்வக்கினியையும், திருக்கோலப்படியையும், ஜனகவேந்தனையும், அங்குள்ள முனிகணங்களையும் வலஞ்செய்து; மற்றுஞ்செய்தற்குரிய திருமணச் செயல்களையும் விதிமுறைப்படி செய்தனர்கள். அக்காலையில் பண்ணவர்கள் கற்பகமலர்மழை சொரிய, தேவபேரி முழங்க, தேவவேசியர்களாட, கந்தருவர்களினிமையாகப்பாட, யாவரும் பெருவகை கொள்ளும்படியாக அந்நால்வரும் பத்தினிமார்களுடன் தீயை மூன்றுமுறை வலஞ்செய்து, திருமணச் செயல்களை முடித்துவிட்டுத் தங்களுறையுளுக்கு ஏகுகையில் சக்கரவர்த்தியும், அருந்தவத்தினர் குழாமோடும், சுற்றத்தார் நட்பினரோடும் பின்றொடர்ந்து தம் திருமக்களையும், மருமக்களையும் கண்குளிரக்கண்டு மகிழ்ந்துகொண்டே உறைவிடம்போய்ச் சேர்ந்தனர்.

பாலகாண்டத்தில் எழுபத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

இயம்ஸீதா என்னும் சுலோகத்தின் கருத்துரை

பெருமாள் வில்லையொடித்ததும் ஆசிரியன் வயப்பட்டவராகையால், வணக்கமொடுநிற்க, ஸ்ரீஜனகசக்கரவர்த்தி இந்நம்பி என் வஞ்சினத்தை ஈடேற்றி, என்னைக் கவலைக் கடலினின்றுங் கரையேற்றினரென்னும் உவகையினாலும், இப்புருடோத்தமனைத் தம் அருமைப்பெண்ணுடன் சேர்த்து, அச்சேர்த்தித் திருக்கோலத்தைத் தன் கண்ணாரக்கண்டு மகிழ்ந்தாலல்லாமல் வாளாநிற்க வொண்ணாமையாலும், சீதாபிராட்டியாரைப் பெருமாள் திருக்கையிலே பற்றிக் கொடுத்துக் கவலை சிறிதுமின்றி வாழ நினைத்துச் சொல்லுகிறார் "இயம்ஸீதா" என்பதனால், பெருமாள் ஆடவருங் கண்டு காமுற்று மயல் கொள்ளத்தக்க தம் வடிவழகில் தாமும் ஈடுபட்டு இறுமாந்திருக்கையாலும், விசுவாமித்திர ராசிரமத்தில் சீதாபிராட்டியாரது வடிவழகைச் செவியுற்றது முதல் எப்பொழுதும் அவளையே நினைந்து மையல்கொண்டு எங்கும் சீதை நிறைந்தாகக்கண்டு திகைக்கையாலும், திருமணமண்டபத்தின் மணி இழைத்த தூண்களிற் பிராட்டியாருடைய நிழலைக்கண்டு, இவள் தான் சீதையோவென்று நாலுதிக்கும் நோக்கி மயங்குகையாலும், மின்னலைக்கண்டாற்போலச் சீதாபிராட்டியாரைக் கண்டவுடன் கண்கள் ஒளிமழுங்கி, ஒன்றுங்காணாமல், சீதை எங்குநிற்கின்றாளோவென்று மருளுகையாலும், அங்குத் திருமணக்கோலம் பூண்ட மாதர்களுள் சீதை யாவளோ? அவளல்லது வேறொருத்தி கையைப் பற்றுவோமாயின் பிறர் மனைப்ப[illegible]டமாவதுமன்றி, பாவமுஞ் சேருமேயென ஐயமுற்றிருந்தமையாலும், வேறொரு கன்னிக்கு மணவணியணிந்து, கலியாணப்பெண்ணென்று மணவாளனிடமனுப்பி மோசஞ்செய்தமைச்சினிமார்கள் பரிகாஸஞ்செய்வது உலகவழக்க மாகையால், அப்படி மோசஞ்செய்திருக்கிறார்களோவென்று ஐயமுற்றிருந்தமையாலும், இவன்

தான் சீதை பாருமென்று சுட்டிக் காட்டுகிறார் "இயம்" என்று "இயம்" இவள் நான் மணம்புரிவதற்குரிய கட்டழகியோ? அல்லளோவென்று ஐயப்படவேண்டா, கண்ணுற்றப்பார்க்கும் உமக்கிஷ்டமான அழகினளே இவள், "இயம்" எல்லாமிருந்தும், "லக்ஷணயாம் ஸ்திரிய முதவஹேரத" என்னும் வசனமிருப்பதால இவள் நல்லபெண் லக்ஷணங்களுள்ளவளோ இல்லளோ என்று நினைக்கவேண்டா, நல்ல லக்ஷணமுடையவளே இவள் "இயம்" நாம பரமபுருஷனாகிய நாராயணனாதலால், பெரியபிராட்டியாரல்லது வேறொருத்தியைக் கைப்பிடியாம், இவள் யாவளென்னவேண்டாம் "ராகவத்வேப வைதேஹீ" என்றபடி அவதரித்த பெரியபிராட்டியாரே யிவள். "இயம்" நாம கோசலாதிபதியாகையால் "இங்கித ஜ்ஞாஸ் ஸ்ஸ்கோஸலா:" என்கிறபடி, நம்மைப்போல நுண்ணறிவுள்ளவள்தானோ என்று எண்ணற்க, எந்த விஷயத்திலும், நமக்கு நிகர் யாருமில்லையென்னும் அபிமானமுடையவளே யிவள், சீதா இவளுக்குப் பிறப்பிலேற்றமுண்டோவென்று நினைக்கவேண்டா, கலப்பையின் நுனியடியாகப் பூதேவியிடத்திற் பிறந்தமையால உபமைய பார்க்கிலும் பிறப்பிலேற்றமுடையவள் சீதா, (தாயைக்கண்டு மகளைக் கொள்ளென்று) பழமொழியிருப்பதால இவள் தாயின் புண்பெற்றனமையதோ என்று நினையற்க "ஸஹமஸ்ஸஹே" என்னும் "க்ஷமை" யென்றும் பெயரால தாமன தன்பண்பை யாவர்க்கும் அறிவிக்கத்தக்க ஸ்ரீபூதேவியின் திருமகளாகப் பிறந்தவள் சீதா, தேவி சீதைசிற பிறந்தவளாகையால பிறப்பு முதல தருமபுத்தியுடையவள் சீதா, தாயறவென்னற பிறநம அனுப்செய்யும்படி பூமியைக் கீண்டுகொண்டு பிறந்தவள், சீதா! உபமுடைய திருநாமம் முதல்ல சகல ஜனங்களும் புகழும்படியாக உச்சியற்பிறந்த தாய்க்கும் பின்பு அதாசம்பந்தத்தால தலைமை குலைந்து, மாரீசாதியர் வேறரகரத்தை முதலிலுள்ள சொற்களைக்கட்டும் அஞ்சும்படியான தாகுமலது இவள் திருநாமம் அதத்னமையதாகாதுகாண். சகல துவிஜகணங்களாலும் உரைக்கப்பட்டுத் தன்னிலே குலையாமல, யாவருக்கும் இனிமையாகிய திருநாமத்தை யுடையவள் "துவிஜம்" என்ற தந்தம், அந்தணர்; சீதா, ஸகாரத்தற்கும், சகாரத்திற்கும் வேற்றுமையில்லை "நகசசிநநாடராதயதி" என்று கொடுந்தன்மைசெயதவர்களையும், பாதுகாக்கும்படியாகிய தண்மையையுடையவள், பெருமானே இந்தப்பெண்ணுக்குத் தாயதான் மிசநாக யாருமில்லையே, தந்தையாகிலும் ஒருவருளரோவென மறுக்கவேண்டா, பிறப்பிடத்து சிறந்ததாயினும் வளர்ந்த இடம் தீயதாயின பயனெய் செவிறு நினைப்பாரென்றோ, நாம சக்கரவர்த்தித் திருமகனாதலால், இவளும் சக்கரவர்த்தி திருமகளாகில், "விஷாதச்ச விஷாதுச் ஸமயோச்ர வம்சோபம்த" என்றபடி தருதியாகும், இவள் தந்தை சக்கரவர்த்தியாவென நினைப்பார் என்றும் கருதி, அவ்வண்ணம் எண்ணுறவேண்டா, "மமஸுதா" என்பெண் என்னுடையவளென்கிறார்.—மம - இனிபெற்றமையால, ஜனகனென்னும் பெயர் சிறப்புற்ற என்னுடைய, மம - "தபஸ்ஸவஹிஸமஸ்ததி ஆஸ்ததாஜநகா தயா" என்றபடி நல்லொழுக்கமுடைய என்னுடைய, மம - "மிதிலாயாம பரதிபதா யாம் கம்மக்ஞசித பாணசயதி" என்றுரைத்த என்னுடைய, மம-சக்கரவர்த்தியென்று பெயர்பெற்றமையால உம்முடைய பிதாவுக்கு நிகரான என்னுடைய பூமியிற்பிறந்த பெண் உமக்கு மட்டும் என்ன உரிமையென்று நினைப்பாரென்று, ஸுதா-பெண் என்றார்; ஸுதா-என்பூமியில பிறந்தவளாதலால மகள், ஸுதா-அருமையாய் வளர்த்த பெண்; மமஸுதா-உம்முடன் செய்யுங் கருமங்களைப் புதுமையாகப் பழக்கவேண்டாதபடியான செய்யும் வைதிகச்செயல்களைப் பார்த்துப் பழகிய என்பெண், மமஸுதா-எவ்வாலம்போனாலும் கணவனை விட்டுக் கணப்பொழுதும் பிரியலாகாதென்று கற்பினறத்தை உரைத்த யாஜ்ஞவல்கியர் சிஷ்யனுடைய என் பெண்; இப்படி நீர் சொல்லு

னின்றீர், இவளுக்கு யானோ மணஞ்செய்துகொள்ள மனமோவென்றெண்ணுவாரென்றும், உமக்காக என்னை யுணர்ந்து பின்பு மனம்வருந்தி, செய்வதற்குரிய கடன்களைச் செய்யாரோவென் றெண்ணுவாரென்றும், இவளுக்கு என்மேல் மனமின்றி யான் மணஞ்செய்யின் "ஏகத்வைவாநுராகஸ்ய சேத்ரஸாடாஸஸ்ஸ உச்யதே" என்கிறபடி ரஸாபாஸமாகுமேயென்று நினைப்பாரென்றும், நீர் நல்லவராயினும் நீர் வளர்த்த பெண்ணாகையால் இவள் ஒழுக்கம் எத்தன்மையதாகுமோ? இவனென்னை இசைந்து கூடுவாளோ என்றெண்ணுவாரென்றும், தான் ராஜகுமாரியென் றிறுமாந்து யானிட்ட தொழிலைச் செய்யாளோவென்று நினைப்பாரென்றும் "தவஸஹ தாமசரீ" அப்படிக் கல்லாமிராள், உம்முடைய திருவுளத்தின்படியே உம்முடன்கூடி, இல்லறவொழுக்க நெறிகளைச் செய்வாளென்கிறார் தவ "நதயிஜயம" "ஏசதவரதமம" என்று அறத்திலொழுக்கத்திற் சிறந்த உம்முடைய, ஸஹசாமசரீ - பொருட்செல்வ விருப்பமுடையாளாகாமல், கற்பினறத்தையே கைக்கொள்ளுமிவள், நீர் கொடுத்தாலன்றோ? யான் கைக்கொள்வதென்று நிற்கின்றீர் என்றும், "ததயாந்ந பரதிக்ரஹணியாத்" என்கிறபடி அன்றோ என் விரதம், அதையிட்டு நானே முற்கிப்போபேனென்று நிற்கின்றீர் என்றும், "பரதீச்ச" அங்கீகாரஞ் செய்யவேண்டுமென்கிறார் இவளை ஏற்றுக்கொள்வதனால் எனக்குப் பேறென்னவென்று நினைக்கின்றீர் என்று, சு-(அனுபூய க்ஷுவ) ச - அறம்பொருளின்பமென்னும் மூவகைப் பேற்றினையும் அடையக்கடவீர் என்கிறார் புதியமணவாளர் லோகபாலம், இளமை நீங்காமையாலும் வெட்கமடைந்து நிற்கின்றீரென்றும், மனமகிழ்ச்சி தலைக்கேறினமையால் நாணமியமென்று சுட்டிக் காட்டியதை மறந்தீரோவென்றும், ஆநந்தக் கண்ணீர்ப்பெருகி வருகின்றமையால், இவளைக்காணாது நிற்கின்றீரோவென்றும் (ஏஷா) இவளேயென்று குறித்து, மீளவும் காட்டுகின்றார் "கல்லனைத்தடப்பிருந்த கண்ணனைத்தப்பாதென்று" பழமொழி யிருப்பதினால், இவ்விருவர் சேர்க்கையின் றிலைகண்டு நாட்டார் திகைத்துப் பார்க்கினுங் கண்ணெறு நீங்கவேண்டுமேயென்று (பத்ரந்தே) உனக்கு மங்களமுண்டாகுக என்கிறார் (பத்ரமேத) "ஆதங்கோதநிதயா பாகேய வ" என்கிறபடி இப்பேறு உம்முடையதே "கன்னியாபித்ருத்வ தூக்காய" என்கிறபடி இனி இவளைப் பிரிந்து போகலால், துன்பமெனக்கே யன்றி, இன்பம் உம்முடையதே, இராமா ஒருகால் "சாமாது ராஜ்ஞீ ஙயம் நலஜ்ஜா" என்கிறபடி இவர்தம் கட்டழகில் ஈடுபட்டுக் காமமயக்கங்கொண்டு இவளைத் தழுவிக்கொள்வீரோ என்றஞ்சி 'பாணிங் க்ருஹ்ணீஷ்வ பாணிநா" திருக்கரத்தால் இவள் கையைப் பிடித்துக்கொள்ளுமென்கிறார் பிடித்துக்கொள்ளுமென்று முதலிற் கூறின் எதனைப் பற்றுவரோ என்று கருதி கையையென்று முற்படக் கூறினார். கையாலென்பதை இடையிற் கூறின் என்னசேஷ்டை செய்வாரோ என்று கடையிற் கூறினார் பிடித்து என்று விசேஷமாகக் கூறின், மேலும் அக்கரத்தைத் தம திருக்கரத்திலுஞ் சேர்த்துக்கொள்வாரோ என்று கருதி, பிடித்துக்கொள்ளு[மென்]று முற்றாகக்கூறினார் 'பாணிம்+பாணிநா" பிராமணருக்குத் திருமணத்தின் விதியின்படி கையால் கையைப் பிடித்துக்கொள்ளும், "பாணிம்+பாணிநா" குலமகளுக்கு நாணம் அணியாதலால், இவள் பிடியாள் நீர் பிடித்துக்கொள்ளும், "பாணிம்+பாணிநா" யான் மிகவும் அருமையாக வளர்த்தமையால், கையைப்பிடிப்பது மெல்லியளானீரே பற்றிக்கொள்ளும், "பாணிம்+பாணிநா" அம்மி மிதிக்குப்போதன்றோ? காலைப் பற்றவேண்டும், இப்பொழுது கையைப்பற்றக் கடவீர், "பாணிம்+பாணிநா" நாணத்தால் கும்மெனயிருக்கு மிவளைக் கோபத்தால் இவ்வண்ணமிருக்கின்றாளோவென்று முகவாயையும், காலையும் பிடிக்கவேண்டா, கையைப் பிடித்துக்கொள்ளும், மனம் வாய், காயமென்னும் மூன்று கரணங்களாலும் தானஞ் செய்யவேண்டு மாதலால்,

வில்லை முறித்தவுடனே மனத்தால் தானஞ்செய்து, இப்பொழுதிந்தச் சுலோகத்தாலே வாசிகதானஞ் செய்து அவ்விருவர் திருக்கரங்களையுந் தன் கையால் பற்றிப் பிடிப்பித்துக் காயிகதானமுஞ்செய்தார், ஜனகசக்கிரவர்த்தியென்றுணர்க

---

திருமண நடக்குங்காலையில் அந்தணர் கையைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்றும், அரசர் கணையையாயினும், வாளையாயினும் பிடித்துக்கொள்ளவேண்டுமென்றும், வைசியர் தாழியல்லது, ஜாடி, தாற்றுக்கோலைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்றும், சூத்திரர் முன்றானையைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்றும் விதியிருப்பதினால், ஸ்ரீராமபிரான் புரவலராயிருந்தும் கையைப் பற்றியது யாதெனின், புரவலரும் புரவலப்பெண்ணை மணங்கொள்ளின் கையைப் பற்றவேண்டுமென்று வேறுவிதி விதித்திருக்கின்றமையால், பற்றலாமெனக் அன்றியும், அரசர்கள் வேறு சாதிப்பெண்களை மணம்புரியுங் காலையிலே வாள்முதலியவைகளைப் பற்றவேண்டுமென்றி முற்கூறிய விதியின் கருத்தென்க் கொள்க

---

## எழுபத்து நான்காவது சருக்கம்.

எல்லோரும் அயோத்திக்கு வரும் வழியில் ஸ்ரீபரசுராமனைக் கண்டது.

---

அநந்தரம் அன்றிரவுகழிந்து மறுநாளுதயகாலையில் விசுவாமித்திர மஹாமுனிவர் தயரதமஹாராஜனையும், ஜனகமஹாராஜனையும் கண்டு வேந்தர் கோமான்களே! எம்முடைய எண்ணம் முழுதும் கடைசென்றமையால், இனி யாம் தவம்புரியப் போயவருகின்றோமென்றருளிச்செய்து, அவர்களிடத்து விடைபெற்றுக்கொண்டு, இமயமலைநோக்கி எழுந்தருளினார். கௌசிக மஹாமுனிவரெழுந்தருளியபின், தசரதசக்கரவர்த்தியாரும், ஜனகமஹாராஜரிடத்தில் விடைபெற்றுத் தம் நகரியைநோக்கிப் புறப்படுகையில், ஜனகமஹிபதியும் தக்கபடி வழிபாடுசெய்து, சிறிது தூரம் பின்றொடர்ந்துவந்து செலவிடுத்துத் தம் அருமைத் திருமக்கள் நால்வர்களுக்கும் வெவ்வேறாகச் பத்துநூறாயிரம் பசுக்களையும், பலவகைப்பட்ட சிறந்த கம்பளங்களையும், வெண்பட்டுகளையும், மற்றும் சிறந்த பூந்தொழில்செய்த பற்பல பொன்னுடைகளையும், தேர், யானை, குதிரை, காலாட்படைகளையும், விலையேறப்பெற்ற அணிகளாலணிந்து மேம்பாடுள்ள அழகியர்களாகிய சில தாதிகளையும், அகத்தமையராகிய குற்றேவல்செய்யும் ஆண்பிள்ளைகளையும், எல்லைகடந்த பொன், முத்து, பவளங்களையும், மற்றுமுள்ள நவமணிகளையும், சிறந்த வேறு பொருள்களையும், பரிசாக அளித்து, விடைகொடுத்தனுப்பித் தமதரண்மனையுட்புகுந்து மகிழ்ந்து வாழ்ந்துகொண்டிருந்தனர்.

இங்குத் தசரதசக்கரவர்த்தியாரோ பெருமகிழ்வுகொண்டு அருந்தவச் செல்வர்களாகிய அருந்ததி கணவனாமுதலியோரைமுன்னிட்டுக்கொண்டு,

தம் சிறுவர்கள், மருகிமார்கள், தம தேவிகள், இனத்தார், சுற்றத்தாரகளுடன் புறப்பட்டு வருங்காலையில், பறவைகள் மிகவும் அச்சமாக ஒலிசெய்கின்றனவே? மிருகங்கள் வலம் வருகின்றனவே? என் மனமும் துன்பமிகுந்து மாரிபின்பட்டபடென்று துடிக்கச்செய்கின்றதே? இவற்றுக்கெல்லாம் காரணம் யாதென்று வினவ, வசிஷ்டமஹாமுனிவர் அதை யாராய்ந்து வேந்தர்பிரானை நோக்கி, மஹாராஜரே! இவற்றுள் வினாவதை உரைசெய்கின்றேன், பறவைகள் விண்ணினிடத்தில் அச்சமாக ஒலிக்கின்றமையால், ஊண்ணெணும் பேரச்சம் விளைவிலே நேரிடும் விலங்குகள் வலம் வருகின்றமையால், அது உடனே நீங்கிவிடும், ஆதலின், நீர் துன்பமுறவேண்டாமென் றிவ்வாறு அருளிச்செய்துகொண்டிருக்கும்பொழுதே ஒருபெருங் காற்றுண்டாகி, நிலத்தைமுற்றும் நடுங்கச்செய்து, மரங்களையும் முறித்துத் தூளியெழச்செய்தது, அதனாலுண்டாகிய இருளினால், செங்கதிரோனும் மறைக்கப்பட்டனன், திசைகளும், இன்னதெனக் குறிக்கவொண்ணாதபடி விளக்கமற்றிருந்தன. அரசர் பெருமானுடன் வந்த படைகளும் தூளிகளாற் சூழப்பட்டு மயக்கங்கொண்டனபோலாயின; அப்பொழுது வசிஷ்டர் முதலிய மஹாரிஷிகளும், சக்கரவர்த்தியாரும், ஸ்ரீராமலக்ஷ்மண பரதசத்துருக்கனர்களும், கலக்கமுற்றவர்களாக இருந்தனர்களேயன்றி, மற்றையோரெல்லோரும் ஐம்பொறியுங் கலங்கினார்கள் அக்கணமே யாவரும் அஞ்சியோடத்தக்க திருமேனியையும், பரவிவளர்ந்து நீண்டசடைகளையும், அரசர்களைக் கொலைசெய்து, வெற்றிபெற்ற கோளாண்மையையுமுடையாரும், கைலைமலைபோல யாவராலும் அசைக்கவொண்ணாதவரும், காலாக்கினிபோல எவராலும் பொறுக்கக்கூடாத ஆற்றலுடையாரும், கதிரவனைப்போலச் சுடர்விரிந்து ஒளிசெய்கின்றமையால், புல்லியமாந்தர்களாற் கண்ணுறக் காண்பதற்கரிய கோடாலியையும், மின்னல்களின் திரட்சிபோன்ற வில்லையும், தோளில் தாங்கிக் கையில் சிறந்த கணைகளைப்பிடித்துக்கொண்டு, முப்புரமெரித்த சிவன் போன்றவருமாய் வருகின்ற பிருகுகுல திலகராகிய பரசுராமனைக் கனகனவென் றெரிகின்ற அனலைக் கண்டாற்போலக்கண்டு, வசிஷ்டமஹாமுனிவர் முதலானோர் யாவருக்கும் நன்மையுளதாகுக வென்று தம முள்ளத்திலுள்ளே ஜபஹோமங்கள் செய்துகொண்டு விளங்கினார்.

సంగతామునయస్సర్వే సంజజల్పురథోమిథః
కచ్చిత్పితృవధామర్షీ క్షత్రంనోత్సాదయిష్యతి
పూర్వంక్షత్రవధంకృత్వా గతమన్యుర్గతజ్వరః
క్షత్రస్యోత్సాదనంభూయో నఖల్వస్యచికీర్షితం.

ஸங்கதாமுநயஸ்ஸர்வே ஸஞ்ஜஜல்புரதோமிதః
கச்சித்பித்ருவதாமர்ஷீ க்ஷத்ரமநோத்ஸாதயிஷ்யதி
பூர்வம்க்ஷத்ரவதம்க்ருத்வா கதமந்யுர்கதஜ்வரః
க்ஷத்ரஸ்யோத்ஸாதநம்பூயோ நகல்வஸ்யசிகீர்ஷிதம.

யாவரும் ஒன்றுசேர்ந்தாராயினும், முன் கார்த்தவீரியன் தம் தந்தையாகிய ஜமதக்கினிமஹாமுனிவரைக் கொன்றானென்கிற கோபம் இன்னுந் தணியாமல் மற்றுமுள்ள அரசர்களைக் கொல்ல, இவர் வந்தாரோவென்றும், முன்னமே மன்னவர்களைக் கொலைபுரிந்து அவர்களதுகுருதியை மடுவாகத் தேக்கி, அம்மடுவில் நீர்க்கடன் செய்து, தம் வஞ்சினத்தை முடித்து, வெகுளி தணிந்து, சாந்தமுள்ளவராகி விட்டமையால், மீளவும், வேந்தர்களைக் கொல்ல எண்ணங்கொள்ள மாட்டாரென்றும், ஒருவருக்கொருவர் சொல்லிவிட்டு, விரைவாக அர்க்கியபாத்தியங்களாதியாகிய பூசைக்குரிய பொருள்களை எடுத்துக்கொண்டு, ராமாராமாவென்று இனிமையாகக் கூறிக்கொண்டு அன்போடு வழிபட்டு வணங்கினார்கள். மிகுதியும் தோற்றமும் புகழுமுடைய அப்பரசுராமரும், அவ்விருடியரீந்த பூசைகளைக் கைக்கொண்டு சக்கரவர்த்தித் திருமகனாராகிய ஸ்ரீராமபிரானை நோக்கி, ஒருமொழி அருளிச்செய்கின்றனர்.

பாலகாண்டத்தில் எழுபத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று.

## எழுபத்தைந்தாவது சருக்கம்.

பரசுராமர் ஸ்ரீராமசந்திரரை நோக்கி யுரைத்தது.

அடா ராமராமா! தசரதநந்தனா! யாவரும் வியப்புறத்தக்க உன்னுடைய தோளாண்மையைப் பலவாறுகச் செவியிற் படுகின்றது; நீ தாடகை முதலானோரை வதைசெய்ததும், ஐம்முகன் சிலையை முறித்ததும், முற்றும் என்னால் கேட்கப்பட்டன. நீ அவ்வில்லை முறித்தது மிகுதியும் வியக்கத்தக்கதும் இன்னதென எண்ணுதற்கரியதுமாக இருக்கின்றது; இதை யான் வியக்கேன், வேறொரு சிறந்த வில்லைக்கொண்டு இங்கெய்தினேன்; இவ்வில்லானது யாவரும் வெருவத்தக்கது, இஃது என் தந்தையினிடத்திலெனக்குக் கிடைத்தது, இதனையுங் கையிற்பற்றி, நாணேற்றிக் கணைதொடுத்து, நின்னது தோள்வலியை எனக்குக் காட்டுவை அப்பொழுது யான் நினது தோளாண்மையையுணர்ந்து, நின்னோடு அறத்தின்வழியாகப் போர் புரிவேனென்றிவ்வாறுகடுஞ்சினத்தோடுரைசெய்துகொண்டிருக்கையில், தசரதசக்கரவர்த்தியார் அக்கடுமொழியைக் கேட்டு, நம் செல்வக்காதலனை யாதுசெய்வாரோவென்றஞ்சி முகம் ஒளியிழந்து, நெஞ்சுமறுக முற்றுக் கைகூப்பிப் பரசுராமனை நோக்கி, எம் அடிகளே! நீர் முன்செய்த வஞ்சினத்தை முடித்து, அரசர்கள்மேற் கொண்ட சினந்தணிந்து அந்தணர்க்கியல்பாயுள்ள அமைதித்தன்மையையடைந்து பெருங்கீர்த்திபெற்று மகிழ்

வுற் றிருக்கின்றீரன்றோ? இப்பொழுது நீர் இளம்பிள்ளையாகிய கொண்ட
னேன் சிறுவன்மேல் சீற்றங்கொட்டாமல் முகமலர்ச்சியோடு புகலிடமாகக்
கட்டீர். அன்றியும், எஞ்ஞான்றும் அருமறைகளை யோதி, முறைதவிராத
பிருகுமஹாமுனிவரது மரபில் தோன்றினவராயும், இனிப்பூண படைக்கலந்
தொடுவதில்லையென விண்ணவர்கோனிடத்து உறுதிமொழிகூறிய படைத்
தொழிலை முற்றும் விட்டவராய் இருக்கின்றீர்; இம்மட்டோ அறநெறி
யையே பற்றியொழுகிக் காசியபமஹாமுனிக்குப் பாரமுழுதும் தானப்
பொருளாகத் தந்து கானகஞ்சென்று, மஹேந்திரமலைமிசை நிலைகொண்டு
தவம்பூண்டும் இருந்தீரன்றோ? இப்போது மீண்டிங்கு எழுந்தருளியது
எங்களனைவரையுங் கொலைக்குறித்தோ கன்னக்கருதி? அஞ்சாநின்றோம்; என்
உயிரினுஞ் சிறந்த இவ்விராமனொருவனை வருத்தினும், அடியேங்களெல்
லோரும் உயிர்மாய்ந்தோமெனப் பலவாறாக இரந்து வேண்டிக்கொண்ட
னர், என்றிவ்வண்ணம் தசரதசக்கரவர்த்தியார் வேண்டா நிற்கையிலும்,
அவர் வேண்டுகோளை உள்ளமிளகி ஏற்றுக்கொள்ளாமல், ஸ்ரீ வைதேஹி
மணாளனை நோக்கிக் கேட்டாய் ராமா! நீ முறித்ததிலும், என்கையி
லிருக்கின்ற இவ்வில்லினும், விசுவகருமாவினால் சமைக்கப்பட்டன
இவை மிக்க வென்றியும் வலியுமுடையன. இவைகளுக்கு நிகராகிய வில்
இவ்வுலகில் எங்குமில்லை, இவ்விரண்டில் ஒன்றை, முன்னம் முப்புரமெரிந்த
காலையில், தேவர்கள் அரனுக்களித்தனர்கள். அதுதான் நின்னால் முறிக்கப்
பட்டது, இதோ என்கையிலுள்ள இக்கோதண்டம் ஸ்ரீமஹாவிஷ்ணுவி
னுடையது, இது ஐம்முகன் வில்லோடொத்தது, முன்பு உமைகேள்வன்
முப்புரமழித்தபின்னர், வானவர்களெல்லோரும் ஒருங்குகூடி, நான்முகக்
கடவுளருகிற்சென்று, வணக்கஞ்செய்து, மலர்பொதுத் தந்தையே! அடி
யோங்களுக்கு ஐயமொன்று தோன்றிற்று, அதனை அடிகளே! தீர்த்தருள
வல்லீர்; அஃதென்னவெனில், அடியோங்கள் இதுகாறும் ஸ்ரீமஹாவிஷ்ணு
வே அனைத்துலகங்களுக்கும், முதற்பெருங்கடவுளெனவும், முதலிடை
யீறில்லாரெனவும், தம்மின் மிக்காரும் ஒப்பாரு மில்லாரெனவும்,
நமக்கும் அத்தனி முதல்வரே தந்தையெனவும், சிவன் முதலிய யாங்க
ளெல்லோரும், அம்மஹாவிஷ்ணுவினுக்குக் கீழ்ப்பட்டவராயுள்ளோ
மெனவும் துணிந்திருந்தோம்; இப்பொழுது யாவராலும் அழிக்கவொண்
ணாத புரமூன்றையும், சங்கரனே அழிவுகண்டமையாலும், ஸ்ரீமஹாவிஷ்ணு
கணையாக மாத்திர மிருந்தமையாலும், ஸ்ரீமஹாவிஷ்ணுவினும், சிவனே
உயர்ந்தவனெனக் கருதும்படி இருக்கின்றது. ஆதலால், இவ்விருவருள்
உயர்ந்தவர் யாரோ? அதனை ஐயமற நன்கு தேற்றியருளவேண்டுமென்று
வினவினார்கள். மலர்மிசையோனும் விண்ணவர்களது கருத்தையுணர்ந்து
ஸ்ரீஹரி ஹரர்களுக்குப் பகைமையைக் கற்பித்து, ஒருவரோடொருவர்
போருக்கு விளைவித்தனர். அப்பொழுது விண்ணவர் யாவர்க்கும் புன
கெழும்படி அவ்விருவருக்கும் நெடுநாள் பெரும்போர் விளைந்தது.—

காணத்தக்க இவ்வைணவக் கணை வாளாயிராதென்று அருளிச்செய்ததும், இவ்வியப்பைக் காணுதற்பொருட்டாக முனிவர், சித்தர், சாரணர், வித்தியாதரர், கந்தருவர், யக்ஷர், ராக்ஷஸர், கின்னரர், பன்னகர் முதலிய தேவர்களுடன் திசைமுகத் தேவன் வந்து கண்டு திகைத்து நிற்க, பரசுராமனும், ஸ்ரீராமபிரானது வரம்பில்லாத பேரொளியின் ஒரு கூறாகிய ஒளியை உடையாராதலால் இயக்கமற்று நின்று, செந்தாமரைக் கண்ணராகிய ஸ்ரீரகுநாயகரை நோக்கி, ஸ்ரீபரந்தாமா! முன்பு நான் கசியபமஹாமுனிவருக்கு இப்பாருமுற்றும், தானங்கொடுத்த காலையில்; அவர் பரசுராமா! இவ்வகலிடமெல்லாம் என்னுடைய தாயினமையால், இனி என்னுடைய பூமியில் நீ வாசஞ்செய்யக் கூடாதென உரைத்தனர். அதற்கு யானும் உடன்பட்டு இனி உமது நிலத்தில் நான் இராக்காலங் கழிப்பதில்லையென உறுதிமொழி கூறிவிட்டுப் பாருமுழுதும் அவருக்கே ஒப்புவித்துவிட்டு, அதுமுதல் யானுரைத்த உறுதிமொழியின்படி கங்குற்போது தங்காமலிருக்கின்றேன்; இப்போது உள்ளத்தின் விரைவினும் விரைந்து சென்று, மகேந்திரப் பொருப்பைச் சார்வேன், நீர் இக்கதியைக் கெடுப்பது நன்றன்று; தவத்திறமையால் சிறந்த உலகங்கள் என்னால் பெறப்பட்டிருக்கின்றன; அக்கதியை இக்கணையால் தகைந்துவிடக்கடவீர். காலக்கழிவு செய்யற்க,—

అక్షయంమధుహన్తారం జానామిత్వాంసురేశ్వరం
ధనుషో௨స్యపరామర్శాత్ స్వస్తితే௨స్తుపరన్తప

அக்ஷயம்மதுஹந்தாரம் ஜாநாமித்வாம்ஸுரேசுவரம்
தநுஷோஸ்யபராமர்சாத் ஸ்வஸ்திதேஸ்துபரந்தப

ரவிகுலசோமராகிய ஸ்ரீராமபிரானுரே! நீர் இவ்வில்லை உமது திருக்கையால் எளிதாக ஏந்தினமையால், அடியேன் தேவரை எல்லாக்கடவுளர்களுக்கும் இறைவனும், முதலிடை கடையில்லாத பரஞ்சுடருமாகிய மதுஸூதனனென்று அறிந்து கொண்டேன்; தேவருக்கு நலம்பெருகுக; நாமகள் கணவன் முதலிய விண்ணவர்கள் குழாங்கொண்டுவந்து, தேவரை எல்லா ஆற்றலு மமைந்த பராற்பரப் பொருளாகிய பரப்பிரம்மமென்பதைக் கண்கூடாகக் காணுற்றுக் களிக்கின்றார்கள். மூவுலகங்களுக்குந் தலைவராகிய நும்மிடத்து யான தோல்வி யடைந்ததினால், எனக்குச் சிறிதும் நாணமுறக்காரணமில்லை, ஆதலால் விணுக்கல்கூடாத இக்கணையை நீர் எய்யக்கடவீர். அதையும் யான் கண்ணுற்று மகேந்திர மலையைப்போய்ச் சேர்கின்றேனென உரைத்துக்கொண் டிருக்கையில், மெய்ம்மையின் மகிழ்வுபெற்ற ஸ்ரீகோதண்ட ராமபிரானும், அக்கணையை விடுத்துப் பரசுராமனுடைய நற்கதியைத் தொலைவுகண்டு, அதைக் கண்

றைந்தப் பரசுராமனும், ஸ்ரீராமபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மகேந்திரப்பொருப்பைச் சார்வதற்குக் கருத்துடையாராய் நிற்க, அப்பொழுது பத்துத் திசைகளும் மாசற்று விளங்கின. தேவகந்தர்வ முனிவர்களும் பெருமகிழ்வெய்தி, ஸ்ரீராமபிரானைப் புகழ்ந்தனர்கள். ஜமதக்னி புதல்வரும், மனுகுலதிலகனைப் புகழ்ந்து மகிழ்ந்து வலஞ்செய்து, தன் வழி நோக்கிச் சென்றனர்.

பாலகாண்டத்தில் எழுபத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

## எழுபத்தேழாவது சருக்கம்.

### தசரதர் தம் திருக்குமாரர்களோடு தனனகரஞ்சேர்ந்து மகிழ்ந்தது.

பரசுராமன் மகேந்திரமலை நோக்கிச் சென்றபின்னர், சக்கரவர்த்தித் திருமகனாரும், தாம் சிறிதுகொண்ட சீற்றமாறி, அமைதியுடையாராகி, அவ்வில்லையும், பாணத்தையும் வருணனிடத்திற் கொடுத்துவிட்டு, வசிஷ்டர் முதலிய அருந்தவர்களை வணக்கஞ்செய்து, பரசுராமன் தம் மைந்தனை யாதுசெய்வானோவென்று வெருண்டு, சோர்ந்து கிடக்கின்ற தம் தந்தையை நோக்கி, ஐயனே! பரசுராமன் தன்னுறையுளை நோக்கி,

---

* முன்பு தக்ஷப்பிரசாபதி வேள்விசெய்தவுடன் சிவன் தன்வில்லை வானவர்களிடத்துக் கொடுத்ததாகவும், பின்பு சிவன் தனவில்லைத் தேவராஜரிடத்தில் கொடுத்ததாகவும், விசுவாமித்திரராசிரமத்தில் முனிவர்கள், விண்ணவர்கள் ஜநகமஹாராஜருக் களித்தனர்களென்று கூறியதாகவும், மேல ஸ்ரீஸீதாதேவி யநஸூயையுடன் சிவன் வில்லைத் தன் தந்தைக்கு வருணன் கொடுத்ததாகக் கூறுவதாகவு மிருக்கின்றமையால், இதன்முறை எவ்வண்ணமெனின், முப்புரத்தையழிக்கச் சிவன் முயலுகையில், உம்பர்கள் விசுவகருமனைக்கொண்டிரண்டு விற்களைச் செய்வித்து, ஒன்றைச் சிவனுக்களித்து, அதனால் முப்புரங்களை யழிவுசெய்வித்தனர்கள்.

பின்பு தக்கன் வேள்வியில் சிவன் தங்களைச் சின்னமடைவித்தமையால், இவனையும் யாமே பங்கப்படுத்தவேண்டுமென்று கருதி, ஸ்ரீமந்நாராயணருடன் பகைமை விளைத்து, மற்றொருவில்லை அப்பரமபொருளுக்குக் கொடுத்துப் போர்மூட்டினர்கள். அப்பொழுது சிவன் சின்னமடைந்து, தன்வில்லைக் கடவுளர்பொருட்டுத் தேவராதரிடத்தில் வைத்தனன். அப்பண்ணவர்கள் ஜனகருக்கு உரிமையாக வருணனைக் கொண்டு கொடுப்பித்தனர்களாதலால், இதன்முறை இதுவாமென்க

மீண்டெய்தினன். இனி இறைவராகிய உம்மால் காக்கப்படும், இந்நால் வகைப் படைஞர்களும், உமது கட்டளையின்படி அயோத்திமாநகரை நோக்கிச் செல்லக்கடவர்களென்று அறிவிக்கத் தசரதசக்கரவர்த்தியார் அவ்வினிய மொழியைக்கேட்டுத் தம்மை யறியாப் பெருமகிழ்வுகொண்டு தம் செல்வக் காதலனைக் கைகளால் வாரியெடுத்து அணைத்துத் தழுவி உச்சிமோந்து, பரசுராமன் போயினனோவென்று, பலமுறை கேட்டுத் தம் உயிரினும் சிறந்த தம் பெறலரும் புதல்வனாகிய ஸ்ரீராமபிரான் முதலிய யாவரையும் இறந்து, மீண்டும் பிறந்தவர்களாக எண்ணிக்கொண்டு, முன் செல்லும்படி படைகளுக்குக் கட்டளையிட்டு, தாமும் யாவருடனுஞ் செல்லுகையில், அரசர் பெருமான் வருகின்றனனென்று, அயோத்திமா நகரத்தார் ஒருங்கு சேர்ந்து, புறமெங்குந் தோரணங்கள் கட்டி, வாழை மரங்கள் நாட்டி, மங்களவாத்தியங்களை முழக்கி, வழிமுழுதும் நறுஞ் சாந்தந்தெளித்து, மலர்களைத்தூவி, பொற்சுண்ணத்தாலும், நவமணிகளாலும் கோலங்களிட்டு, மற்றும் பலவகை அலங்காரஞ் செய்து, நெடுந் தூரம் எதிர்கொண்டுவந்து அழைத்துக்கொண்டு சென்றனர்கள். வேந்தர் பிரானும் உவகைகொண்டு, தம் சிறுவர்களுடனும், மருமக்களுடனும், தம்மனைவிமார்களுடனுங்கூடிப் பற்பல அணிகளோடு எங்கும் நெருங்கி, ஈட்டம் ஈட்டமாக நிற்கின்ற, மாந்தர்களைக் கண்ணுற்றுக் களித்துக் கொண்டே நகரத்துட்புகுந்து, பனிமலைபோலுயர்ந்து வெளுத்து ஒளி செய்கின்ற மணிமாடங்கள் சூழ்ந்த தன்னரண்மனை சேர்ந்து, பெருமிதத் தோடு வாழ்ந்திருந்தனர்.

கௌசலியை, சுமித்திரை, கைகேயி முதலிய தசரதர் மனைவிமார்களும், சீதை, ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி என்னும் நான்கு மருமக்களை, விலைவரம்பறியலாகாத அணிகளால் அணிந்து, மண்டபத்தில் உட்காருவித்து, மங்களப்பாட்டுப் பாடிக் கோயிலுக்கழைத்துச்சென்று, ஆயிர மௌலிப் பெருமானைப் பலவாறு ஏத்தி வணங்குவித்து, பெரியோர்களையும், வந்தனஞ் செய்வித்தனர்கள். மருமக்கள் நால்வரும் வேற்றுமையின்றி மாமியார் கருத்துக்கிணங்கக் குறிப்பறிந்து நடந்து, தத்தம் கணவருடன் சேர்ந்து, இன்புற்று மகிழ்ந்திருந்தனர்கள். ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்துருக்கனர்களும், தத்தம் மனத்துக்கினிய தேவிமார்களுடனுங் கூடி இன்பமடைந்து, நான்மறைத் தொடக்கமாகிய பல நூல்களையுங் கற்று, நுண்ணிதாக ஆராய்ந்து, மெய்ப்பொருள்களை உணர்ந்து, அருமறையாளர்களுக்கு நன்கொடை அளித்துத் தந்தை தாய் குரு தேவதாதி பூசனைகளில் சிறிதும் தவறு வாராதபடி ஊக்கமுற்றவர்களாகி, யாவர்க்கும் இனியராகி வாழ்ந்திருந்தனர்கள். இவ்வண்ணஞ் சிலநாள் கழியாநிற்கையில், தசரதசக்கரவர்த்தியார் பரதாழ்வானை அழைத்து, அப்பா பரதா! நினக்கு அம்மானும், கேகயராஜன் மைந்தனுமாகிய

யுதாஜித்தென்பவன், நின்னை உடன்கொண்டுசெல்வதற்காகக் காத்திருக்கின்றனன்; ஆதலின், நீ இவனோடுசென்று, முதாதை உள்ளிட்டார்களைக் கண்டு, வணங்கி, சிலநாள் தங்கி, அங்குள்ளோர்களை மகிழ்வித்து வாவென்று கட்டளையிட்டனர். பரதாழ்வானும் தந்தையின் சொற்படி சத்துருக்கநருடன் கூடித் தந்தை தாய் முதலானோரை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு, யுதாஜித்துடன் புறப்பட்டுக் கேகயநாடுசேர்ந்து, மாதாமகனைக்கண்டு வந்தனஞ்செய்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தனர்.

பரதாழ்வான், சென்றபின்னர், சக்கரவர்த்தித் திருமகனாரும் இளைய பெருமாளுடன் தந்தைதாயர்களது மனத்துக்கொக்க நடந்து, அவர்களுக்குச் செய்தற்குரிய குற்றேவல் வழுவுதலின்றிப் புரிந்துகொண்டு, தந்தை ஆணையின்படி அரசுத்தொழிலைப் பற்றிய காரியங்களை முற்றும் ஒரு சிறிது குறைவுமின்றி, நடாத்திக்கொண்டும், இடையிடையே தந்தைதாய் குரு முதலிய பெரியோர்களுக்குத் தக்கப்படி வழிபாடு செய்துகொண்டும், யாவர்க்கும் அன்பாகவும், நலமாகவும், நடந்துகொண்டும், முறைகெடாமல் ஒழுகினமையால், அந்நாட்டிலுள்ள யாவரும் ஸ்ரீராமபிரானிடத்தில், அன்புகூர்ந்து வந்தவர்கள். ஸ்ரீராமபிரான் இவ்வாறு ஒழுக்கம் வழுவாது ஒழுகி, நெடும்புகழ்பெற்று, வாய்மைதோளாண்மையுடையாராய், இசைமடந்தை கொழுநன்போல எல்லா மன்னுயிர்களுக்கு மினியராகிக் தம்மனைவியையன்றிப் பிறமாதர்களையும் உள்ளத்திற்கொள்ளாது, தம்மேல் பேரன்புபூண்ட ஸ்ரீசீதா பிராட்டியாருடன் கூடி, நற்குணமும், நற்செய்கையுமுள்ள இச்சானகியை எனக்கு முதியோர்கள் அன்புகூர்ந்து, மணம்புரிவித்தனர்களேயென்று தம்முள் வியந்துகொண்டு, பிராட்டியினிடத்தில் வைத்த அன்பை, சீதாதேவியின் நல்லொழுக்கத்தாலும், வடிவழகினாலும், பெருமையாலும் பெருகச்செய்து, குறிப்புகளினால், தம்மீது ஜானகியார்க்கிருக்கும் காதலைப் பலவாறு கண்டறிந்து தாதரஞ்செய்து பிராட்டியாரை மகிழ்வித்தனர். இங்ஙனம் தம் கணவர் செய்யும் ஆதரத்தால், தம் கொழுநர்மேல் தமக்குள்ள காதல் இருமடியாகப் பெருக்கி, இவள் கடவுள் மடவரலோ? உலகினில் அழகென்னும் சொற்பொருளே இப்பெண்ணுருக்கொண்டு வந்ததோ வென்னத் தம் கணவனார் [illegible]மைக் கண்டு காமுறும்படியாகப் பிராட்டியார் விளங்கினர்.

తయాసరాజర్షిసుతో౽భిరామయా సమేయివానుత్తమరాజకన్యయా

అతీవరామ శ్శుశుభేతికామయా విభుశ్శ్రియా విష్ణురివామరేశ్వరః

தயாஸராஜர்ஷிஸுதோ௽பிராமயா ஸமேயிவாநுத்தமராஜகந்யயா

அதீவராமச்சுசுபேதிகாமயா விபுச்ரியாவிஷ்ணுரிவாமரேசவர:

தசரதசக்கரவர்த்தித் திருமகனாராகிய ஸ்ரீராமபிரானார் ஜனகப்பெருமான் திருமகளாய்த் தம்பால் பெருங்காதல் கொண்ட ஸ்ரீசீதாபிராட்டியாருடன் வீற்றிருந்து, நித்திய முக்தர்களுக்கும், விதி சிவவாசவாதி தொண்டர்களுக்கும் இறைவனாகிய ஸ்ரீமந்நாராயணர் பெரியபிராட்டியாரோடு கூடி, வீற்றிருந்தார்போல விளங்கியருளினார்.

பாலகாண்டத்தில் எழுபத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.

---

# பாலகாண்டம்

முற்றுப்பெற்றது

---

தாரகமந்திரவாசசியாயநம:

---

ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணு மயம ஜகத்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீமத்வால்மீகிராமாயணவசனம்

# அயோத்தியாகாண்டம்.

யாவரும எளிதிலுணாநதுகொளளும்பொருட்டு
ஸ்ரீமத உபயவேதாநத
ஏடுரிம்படி திருமலை லக்ஷ்மிகுமாரா கோடி கனனிகாதாஸம,
விததுவான அஷடாவதானம,
மேல்பாககம,
**தாததேசிகதாதாசாரியசுவாமியவர்களால,**
வடமொழியினின்றும், தெனமொழியில வசனநடையாய
மொழி பெயாபபிதது,

சென்னைச சாவ கலாசாலைத் தமிழபபணடிதர்,
கோமளபுரம.
**இராஜகோபால்பிள்ளையவர்களால்**
எழுத்துசசொறறொடாக் குற்றங்களற
ஆராயவித்து,

**ஆவுல - கிருஷ்ணசாமிநாயுடு,**
**நகர் - அந்தல - மூர்ததிநாயுடு,**
**குளததூா - முத்துசாமிநாயுடு,**
எனனும மூவாகளால,

சென்னை மவுணடுரோடு காாடியன் அசசுககூடததிற
பதிபபிக்கபபடடது

**கலி. சகூஅக க்கு - ப்ரமாதி௵ - சிமமீ.**
**1879.**

ஸ்ரீ

# பட்டத்தின் அட்டவணை.

ஸ்ரீராமஜெயம்

# அயோத்தியாகாண்டத்தின் அட்டவணை

# அட்டவணை

அயோத்தியாகாண்டத்தின் அட்டவணை

முற்றிற்று

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ ரகுநந்தன பரப்ரஹ்மணே நம:

## ஸ்ரீமத்வால்மீகிராமாயணம்

# அயோத்தியாகாண்டம்.

### கடவுள்வணக்கம்

నీలాంభోదనిభంనిశాచరచమూ నిర్మూలనోద్యోగినం
కోదండంశరధింశరంసునిశితంవిస్త్రింశమాబిభ్రతం
వైదేహీసహితంజటాలమజినంచీరంవసానంశుభం
తాదృక్షేణచలక్ష్మణేనసహితంశ్రీరామచంద్రంభజే

*நீலாம்போதநிபம்நிசாசரசமூ நிர்மூலநோத்யோகிநம்*
*கோதண்டம்சரதிம்சரம்ஸுநிசிதம் நிஸ்த்ரிம்சமாபிப்ரதம்*
*வைதேஹீஸஹிதம்ஜடாலமஜிநம் சீரம்வஸாநம்சுபம்*
*தாத்ருக்ஷேணசலக்ஷ்மணேநஸஹிதம் ஸ்ரீராமசந்த்ரம்பஜே.*

## முதலாவது சருக்கம்

ஸ்ரீராமபிரானுக்குத் திருமுடி சூட்டச் சபை சேர்த்தது

ஸ்ரீபரதாழ்வான் தம் அம்மான் நகரத்திற்குச் செல்லுங்காலையிலும், உட்பகைகளாகிய காமாதிகளையும், பகைவேந்தர்களையும் வென்றவரும், தம்முடன் வருவதிலே பெருமகிழ்வுகொண்டவருமாகிய சத்துருக்கனாழ்வானையும் உடன் கொண்டு சென்று, அசுவபதியென்னும் தம் அம்மானராகிய யுதாஜித்தென்பவரால், அவர் தமது செல்வச்சிறுபிள்ளையிடத்துச் செய்வதுபோல அன்பு கூர்ந்தாதரஞ் செய்யப்பட்டவராகி வாழ்ந்திருந்தனர். ஆயினும், இவ்விளைஞரிருவரும், மூப்பினராகிய தந்தையாரையே கருதிக்கொண்டும், அவரது செயல்களையே ஒருவருக்கொருவர் புகழ்ந்து சொல்லிக்கொண்டுமிருந்தனர்கள் தசரதப்புரவலர் பெருமானும், இந்திரவருணர்களைநிகர்த்த இம்மைந்தர்களிருவரையும், நினைந்துநினைந்து எம்புதல்வர்கள்; இப்பொழுது எங்குறைகின்றனர்களோ? என்செய்கின்றனர்களோ வென்றும், இவர்களது நற்குண நற்செய்கைகளையே புகழ்ந்து மகிழ்ந்து கொண்டுமிருந்தனர். இவ்வண்ணம் நான்கு திருக்குமாரர்

களும தமதுடலிற்றோன்றிய நான்கு தோள்களில் பரிவுசெய்வதுபோல அனபுசெய்வதற் குரியாகளாயினும், அந்நால்வருள்ளும், அளவில்லாத நற்குண நிறைவுள்ளவராகிய ஸ்ரீராமசந்திரனே சேதனர்களுள் பிரமதேவன் தலைமையானவன் போலத் தந்தைக்கு மிகுதியும் சிறந்த பிரியமுள்ளவராக இருந்தனர்.—

సహిదేవై రుదీర్ణస్య రావణస్య వధార్థిభిః
అర్థితో మానుషే లోకే జజ్ఞే విష్ణుస్సనాతనః

ஸஹிதேவைருத்ர்ணஸய ராவணஸயவதாாதிபி:
ஆாதிதோமாநுஷேலோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸஸநாதந:

அந்தச் சக்கரவர்த்தித் திருமகன் தவத்திறமையா லிறுமாந்து யாவரையும் வென்று, நீதிவழியை யழித்த இராவணனைக் கொலைபுரிவிப்பதன் பொருட்டுப் பிரமன், சிவன, விண்ணவரரசன் தொடக்கமாகிய வானவர்களால், பிரார்த்தனை செய்யப்பட்டவனுய்த் திருவவதரித்த தொல்லை மூலப் பரஞ்சுடரும், எல்லாப் பொருளகளுக்கும், அகமும் புறமுமொக்கக் கரந்துறைபவனும், எல்லாம் வல்லோனுமாகிய ஸ்ரீமந்நாராயணனுதலால், இப்பெருமான் மற்றவரினும் சிறந்த நற்குணங்கள் நிறைந்து எல்லாச் சேதனர்களிடத்தும் அன்பினராக வளர்வதொரு வியப்போ? சிறந்த ஒளிதங்கிய இத்திருக்குமாரனுல், கௌஸல்யாதேவியும் உம்பர்களுக்குள் முதன்மைபெற்ற இந்திரனுல் திதிதேவி விளங்குவதுபோல விளங்கினள். இச்சக்கரவர்த்தித் திருமகனுர் பல்லாயிர ஐங்கணைக் கிழவருமொவ்வாத கட்டழகர்; வீரியமுடையார்; மாறசரிய மில்லார்; இவ்வுலகத்து இளைஞர் யாவரும் ஒப்பாகாதார்; குணங்களினுல் தந்தைக்கு நிகரானவா; எப்பொழுதும் அமைதிக் குணமுடையார்; எல்லாரிடத்தும் இனிமையாகவும், மேன்மையாகவும் வார்த்தையாடு மியல்பினர்; எவரோனும் சினங்கொண்டு வனமொழிகூறினும், தாமும் கடுஞ்சொல் உரையாது பணிவாகப் பேசுபவா.—

కథంచిదుపకారేణ కృతేనైకేన తుష్యతి
న స్మరత్యపకారాణాం శతమప్యాత్మవత్తయా

கதஞ்சிதுபகாரோண க்ருதேநைகேநதுஷயதி
நஸமரதயபகாராணும் சதமபயாதமவததயா.

உட்பகையறுவருக்கும் பகைஞராதலால், யாவராயினும் ஒருவர் எழுநூறு பிழைசெய்யினும், அவற்றுள் ஒன்றையும் திருவுளத்தில் கொள்ளாமல், அவர் அறியாதுசெய்த யாதேனுஞ் சிறிய உதவியையே பெரிதாக நினைத்து, அவர்களைப் பாதுகாத்தளிக்குந் தன்மை யுடையார், கைவிடு படை கைவிடாப்படைகளைப் பயிலுங்காலமல்லாத காலத்தில், நல்லொ

ஒழுக்கமுடையாரோடும், மெய்ஞ்ஞான முடையாரோடும், முதுமைப பருவ முடையார்களாய், முன்னோர் மொழிந்த முறை தப்பாதாரோடும், நாள்தோறும் அவரவர்களுக்குத்தக்க நூல்களின் நுண்ணிய கருத்தைத் தெளிவாக உரையாநின்று, காலத்தைப்போக்கு மியல் புடையார்; கூரிய நுண்ணறிவுடையார்; தம் பேதைமையால் பிழைசெய்தவர்களிடத்தும், அப்பிழையைப் பாராட்டிப் பெருமிதமாயிராமல், அவர்கள வார்த்தை யாடுதற்கு முன்னதாகவே முகமலர்ந்து முகமன்கூறி, இனிதாக வார்த்தை யாடும் இயல்புடையார், கேட்போருடைய செவிவழியே நுழைந்து உள்ளத்தைக் குளிர்ப்பிக்கும் இன்சொல் உரைபபவர்; பேராண்மை யுடையாராய்த் தாமிருந்தும், 'அதுபற்றிச்' சிறிதாயினும், இறுமாப்புக் கொள்ளாதவா, விளையாட்டுக்காயினும் பொய்ம்மொழி தம் திருவாயால் சொல்லியறியார; உலகவொழுக்கமோடு அருமறையொழுக்கமும் முற்று முணர்ந்தவா; பெரியோர்கள் வருகையைக கண்டமாத்திரையில், தம் மிருக்கையினின்று பொருக்கெனவெழுந்து, அவரவர்களுக்குத் தக்க வழிபாடுசெய்பவா; எல்லாராலும் அன்புசெய்யப்பட்டவா; அவவாறே அவர்களிடத்துத் தாமும் பரிவுசெய்பவர், சிறந்த அருளுடையார்; சினத்தை முற்றும் வெற்றிகொண்டவா, அந்தணர்களைப பணிபவர்; வறிஞர் கள் வேண்டியவற்றை வேண்டியவாறு குறிப்பறிந்து ஈந்து, அறங்களை யுணர்ந்து, அதற்குத்தக்கபடி ஒழுகுவோா; பிறாபொருளுக காசைகொள ளாதார்; தம் மரபுகருத்தகக பேரறிவுடையார், அரசாக்குரிய அறவொழு க்கத்தை நன்குமதிப்பவர்; தத்தம் வருணத்துக்குரிய செங்கடன்களை வழுவாமல் புரிவதனால், ஒருவா பெரும்புகழ இம்மையில் பெறுவாரா யின் அவர்கு மறுமையில் நற்கதியுண்டாமென உணர்த்தும் முதனூலை நன்றென்று எண்ணுபவர், புகழதராத செயல்களை ஒரு சிறிதுஞ் செய் யார்; பகைமைவிளைதற கிடமாகிய செய்தியை ஒரு காலத்தும் கூறார்; வியாழப்பகவானைப்போல யுத்திகளகூறி, தீயோருடைய வாதங்களை மறுக்க வல்லாா; பிணியில்லார்; இளம்பருவமுள்ளாா; சிறந்த வாக்குடை யார்; கட்டழகமைந்த திருமேனியுடையாா, தேசகாலங்களுக்குத் தக்க வாறு நடப்பவர்; ஒருமுறை நோக்குங்காலையிலே பிறர் கருதகை இன்ன தெனக் குறிப்பாக உணரவல்லாா, யாவுமறிந்தும் அறியாதாாபோல் அறி மடம்பூண்டு நிற்பவர்; மற்றுமளவில்லாத மேம்பாடுள்ள குணங்களையுடை யார்; ஆதலால், பிரஜைக ளெல்லோர்க்கும உடலைவிட்டு வெளியே உருக கொண்டுலாவுகின்ற உயிரெனக் கருதுதறகுரியராயினா, ஆசிரியருழை யுளிலுறைந்து வேதவேதாங்க முதலிய வித்தைகளை வரலாற்று முறை மையோடு கற்றுத் தேர்ந்தவர்; படைக்கலக் கல்விகளிலும், தந்தையா ரினும் சிறநதவர்; சகல மங்களங்களுக்கு மெல்லாவற்றுக்கும் பிறப்பிடமாயிருப் பவர்; வேதத்தைப் பிரமாணமாக நிலைநிறுத்துபவா, எவ்வகைத் துனப நேரிடினும் கலங்குதலில்லாத ஊக்கமுடையாா, எஞ்ஞான்றும் வாயமை

தவறாதவர், வஞ்சமில்லார், அறநூலின்முறை முற்றுமுணர்ந்த அருமறை யாளர்களோடு பயில்பவர், அறம்பொருளின்பங்களினுடைய உண்மை நிலை யறிந்தவர்; ஒருமுறை உணர்ந்ததைக் கனவிலும் மறவாதவர்; கற்பனையுடையார், பெரியோரொழுகிய ஒழுக்கநெறிகளை நிலைநிறுத்துந் தன்மையுடையார், பணியத்தக்காரிடத்துப் பணிந்தொழுகுபவர்; தமது திருவுளத்துக் கருதியதைப் பிறர் அறியாவண்ணம் அடக்குந் திறமையுள்ளார்; தாம் செய்துமுடிக்க எண்ணியதொன்று முற்றுப்பெறுமளவும், பிறர் அறியாவண்ணம் அம்முயற்சியை மறைப்பவர், சிறந்த துணை வலியுடையார்; பயன்படத்தகுந்த சினமும், களிப்புமுடையார், வரையாது கொடுப்பதற்குரிய இடமின்னதென்பதும், இறைவாங்குதற்குரிய இடமின்னதென்பதும் குற்றமறவுணர்ந்தவர், பேரறிஞரிடத்து உறுதியாகிய பத்திமையுடையார், கலக்கமற்றுத் தூயதாகிய நிலைகெடாத நல்லுணர் வுடையார்; நான்மறையொழுக்கங் கடந்தொழுகுந் தீயோரைத் தம்மருகே சேர விடாதவர், சோம்பலில்லார்; மனக்கிளர்ச்சியுள்ளார்; பிறர் குற்றம் போலத் தமது குற்றத்தையும் அறிபவர், சாஸ்திரங்களெல்லா மொருங்குணர்ந்தவர், செய்ந்நன்றி மறவாதவர்; உயர்மக்கள் கீழ்மக்களுடைய தன்மைகளைக் கண்டுணர வல்லவர், நீதிப்படி ஒருவரை நட்புக்கொள்வதிலும், பிறகு தீங்குவராது பாதுகாத்துக் கொள்வதிலும் அவாவுள்ளார்; நட்புக்கொள்ளாமல் மெல்ல நழுவவிடும் இடமறிந்தவர், பொருளை ஈட்டுவதிலும், தக்காரை அறிந்து ஈதல் செய்வதிலும், மற்றுமுள்ள அறுபத்து நான்கு கல்விகளிலும் பேரறிவாளரென்று அறிஞர்களால் புகழ்பெற்றவர்; அறம்பொருள்களுக்குக் குறைவுவாராதபடி இன்பத்தை நுகர்பவர்; பாடல்களிலும், பாடலுக்குரிய தோற்கருவி முதலியவற்றிலும், சித்திரமெழுதுவது முதலிய கைத்தொழில்களிலும் ஒப்பற்றவர், யானையேற்றத்திலும், குதிரையேற்றத்திலும், பயிற்சியுடையார், வில்லின் விஞ்சையிலும் அதிரதமஹாரதர்களால் கொண்டாடப்பட்டவர், பகைவேந்தர்மே லெதிர் சென்று பொருது வெற்றிகொள்பவர், அணிவகுப்பதிலும் நிகரில்லாதார்; பெருஞ்செருவில் விண்ணவர்களும் தானவர்களும் சினந்து சமர்செய்யினும் வெல்லவொண்ணாதவர், பொறாமை, சினம், செருக்கு, பகைமை கொள்ளல் முதலிய தீயவியல்பில்லாதார், இழிமக்களையும் அவமதிப்புச் செய்யாதார்; காலத்துக்கு வயப்பட்டு நடவாதவர், இவ்வகையாகிய மேன்மைக் குணங்களையுடையாரா யிருந்தமையால் மூவுலகிலுமுள்ள யாவர்க்கும் பிரியராகவே இருந்தனர். அன்றியும், பிறர் குற்றங்களைப் பொறுத்துக் கொள்வதில் நிலமகளையும், அறிவில் பிருகற்பதியையும், விறலில் வானவர் வேந்தனையும், உலகத்தை மனுமுறை கோணாதாண்டு, தம் கவிகைக்குள் தங்கிய யாவரையும் மகிழ்விப்பதில் தம் தந்தையையும் ஒப்பவராய், கதிரவன்போல ஒளிபெற்று விளங்கினர். இவ்வளவில்லாக் குணங்களை யுடையாராய், எத்தன்மையோராலும் வெல்லவொண்ணாத தோளா

ன்மை யமைந்து உலகபாலர்போன்ற ஸ்ரீராமபுத்திரனை நிலமகளும் திருமணம்புணர விருப்பமுற்றனள். சக்கரவர்த்தியாரும் இத்தன்மை வாய்ந்த தமது பெறலரிய செல்வப்புதல்வனைக் கண்ணுற்று, இவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, தொன்றுதொட்டுவந்த மணிமுடிசூட்டிக் கண்குளிரக் காணவேண்டுமென்னும் விருப்பம் எனக்கு மிகுகின்றதே, யான் உயிர் உய்ந்திருக்கையில் இவன் எங்ஙனம் நிலவேந்தனாகலாம், உலகினைப் பெருகவாழவிப்பதில் பெருவேட்கையுள்ளவனும், மன்னுயிர்களிடத்துத் தண்ணளியுடையானும், மழைபொழியும் கருமுகில் விருப்பமாயிருப்பதுபோல யாவர்க்கும் என்னினும் விருப்பமாயிருப்பவனும், தோளாற்றலின் கூற்றுவனுக்கும், விண்ணவராஜனுக்கும் ஒப்பானவனும், அறிவால் வானவராசிரியனுக்கு நிகரானவனும், துளக்கலாகாத நிலைமையினால் மலைக்கு நேரானவனும், என்னினும் உயர்குணங்களை யுடையவனுமாகிய என் அருமைத்திரு மைந்தனுக்குப் பட்டங்கட்டி, அவன் அரசுபுரிவதைக் கண்ணாரக்கண்டு பேராவுகந்து, இம்முதுமைப்பருவத்தை யுடையேனாய் விண்ணுலகை எங்ஙனமடைவேனென இவ்வாறு பலபடக் கருதி, தேர்ச்சித் துணைவரைத் தம்பால் வருவித்து, அவர்களோடு தமதெண்ணத்தைத் தெரியக்கூறி, ஆராய்ந்து, இளவரசுப்பட்டங் கட்டுவிக்க வேண்டுமெனத் துணிவு செய்துகொண்டு, மண்ணுலகத்திலும், விண்ணுலகத்திலும் தீய நிமித்தங்காணப் படலையும், தாம் முதுமைப்பருவ முடையராயிருத்தலையும், அவ்வமைச்சர்களுக்குணர்த்தி, மறுநீங்கிய முழுமதிபோன்ற திருமுகமண்டலமுடைய ஸ்ரீராமசந்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தாலல்லது தம்மனமின்புறாதெனபதை யுறுதிகொண்டு, இது தமக்கும், மற்ற மன்னுயிர்களுக்கும் நன்கென்றும், இதுவே தக்க காலமென்றும், அனைவோர்க்கும் தெரிவித்து எல்லோரையும் உடன்படுத்திப் பின்னைத் திருமுடி சூட்டவேண்டுமெனப் பற்பல நகரத்தரசர்களையும், அவ்வந்நகர நாடுகளிலுறைகின்ற குடிகளில் தலைமையானவர்களையும், அழைப்பித்தனர். அப்பொழுது சக்கரவர்த்தியார், கேகயநாட்டுப் பெருமானையும், ஜனகப்புரவலனையும் வருவித்தால், காலதாமஸமாகுமாதலால், அவர்கள் பின்பு இம்மங்களச்செய்தியைக் கேள்வியுற்று மகிழ்வார்களென்று, அவ்விருவரை மாத்திரம் அழைப்பிக்கவில்லை, பின்பு விரைவாக வந்த வேந்தர்களுக்குத் தக்கவாறு முகமன்கூறி வழிபாடுசெய்து, தாம் கொலுமண்டபத்தில் சிங்கஞ்சுமந்த அணையின்மீது வீற்றிருந்து அவரவர்க்குத் தகுந்த தவிசளித்து இருக்கச்செய்ய, அவர்களெல்லோரும் தசரதசக்கிரவர்த்திக் கிருபக்கங்களிலும் உரியதவிசுகளிலுட்கார்ந்து தமது திருமுகத்தையே நோக்கி வணக்கமாகச் சூழ்ந்துகொண் டிருக்கையில், அமராவதியில் சுதர்மாசபையில் அமரர்களால் சூழப்பட்ட இந்திரன்போல விளங்கினர்.

அயோத்தியாகாண்டத்தில் முதலாவதுசருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது சருக்கம்.

### நகரத்தாரெல்லோரும் ஸ்ரீராமசந்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதற் குடன்பட்டது.

அநந்தரம் சபையிலுள்ள யாவரையும் அழைத்துப் பேரிமுழங்கியது போலவும், கருமுகில் கர்ஜ்ஜனை செய்ததுபோலவும், தன் தொனியால் சபை யெங்கும் பிரதிதொனி எழும்படியாகக் கம்பீரமாகிய தொனியுடன் தசரத சக்கரவர்த்தி யுரைசெய்யத் தொடங்கினார். சபையார்களே! எம்முன்னோர்கள் குடிகளைத் தம் மக்களைப்போலப் பரிவுடன் பாதுகாத்து வந்தார்களென்பது உங்களுக்குத் தெரியவருமல்லவா? அவ்வாறு எம்பெரியோர்களால் காக்கப் பட்ட இவ்வுலகனைத்துக்கும் நலத்தையே செய்தற்கு யாமும் விரும்பியிருக்கின்றனம், அதுபற்றி யாமும் முன்னோர்கள்செய்த கட்டளைக் கழிவு வாராதபடி எம் ஆற்றலுக்கு இயன்றமட்டும் வஞ்சமின்றி இதுகாறும் பரிபாலனஞ் செய்துவந்தோம். எம்முடைய சரீரமும் இவ்வாறு அரசாட்சிக் குக் குறியான வெண்குடையின் நிழலிலே மூத்து நரை திரையுற்ற தன்றே? இவ்வண்ணம் அறுபதினாயிரவருஷம் உயிர்வாழ்ந்து முதிர்ந்த எம்முடைய உடலுக்கு இவ்வுலகின் பெருஞ்சுமை சுமக்கும் வருத்தந்தீர்ந்து, இளைப் பாறிச் சந்தோஷமுறுவிக்க எண்ணுகின்றோம், அரசின் பெருமை வாய்க்கப்பெற்று, ஐம்புலவாசையில் மூழ்கினவர்களால் பொறுக்க முடியாத உலகப் பாதுகாப்பென்னும் பெருஞ்சுமையை நீதிவழுவாமல் இது வரையில் தனியே சுமந்து மிகவும் இளைப்புற்றவனாயினேன்; ஆதலால், எம் அருகிலிருக்கின்ற இந்த வேதியர்களெல்லோரையும், உடன்படுத்தி எம் மூத்த அருங்காதலனுக்குப் பட்டங்கட்டி உலகாளச்செய்து, யாம் இளைப் பாற விரும்புகின்றனம். எமது மூத்த திருமகனாகிய ஸ்ரீராமனும் எல்லாக் குணங்களாலும் என்னை நிகர்த்தவனாக இருக்கின்றனன்; வீரியத்தில் புரந் தரனை யொத்தவன், தெவ்வேந்தர்களது நகரங்களை வென்று வெற்றிகொள் ளுந் திறமையுள்ளவன், தருமகுணமுள்ளவர்களுள் சிறந்தவன், அவன் இளவரசுப்பட்டம்பெற்று பூசநக்ஷத்திரத்தோடுங்கூடிய சந்திரனைப்போல விளங்குபவனாகச் செய்யக் கருதுகின்றோம்; ராஜலக்ஷ்மியுடன் கூடியும், இளையபெருமாளுக்கு மூத்தவனுமான இவ்விராமசந்திரனே உங்களுக்குத் தகுந்த நாதனாவான்; இவன் மூன்றுலகங்களுக்கும் ஏகநாதனாயினும், அது வும் அவனுக்கு மிக்க தகுதியாயிருக்குமாயின், இப்பூதலமொன்றுக்கும் நாத னாகுதல் தகுதியற்றதாகுமோ? இத்தன்மையனாகிய ஸ்ரீரகுகுலதிலகனுக்கு மணிமுடிசூட்டி, ராஜ்ஜியபாரத்தை யவனது புஜத்திலிறக்கிவிட்டுக் களிப்புற நினைக்கின்றோம், இவ்வாறு யாம் யோசனைசெய்தது நன்றென்றும், தகுமென் றும், உங்களுக்குத் தோற்றுமாயின் நீங்களிதற் குடன்பாடு கூறக்கடவீர்கள்.

இது நன்றும், தக்கது மல்லதாயின், யாம் இனி யாது செயல்வேண்டும்; இதனையும் விளம்புவீர்களாக, எமது கருத்து இத்தன்மையது; இதனினும் சிறந்ததும், நலமுள்ளதுமாக வேறுவகை உள்ளதேல் அதனையும் இயம்புவீர்களாக; பலர் சேர்ந்து ஒருபொருளைப் பற்றிப் பேசிக் கடையில், எது தேறுகின்றதோ அதுவே சிறந்ததாவதல்லது எம் கருத்து மாத்திரம் நன்கு மதிப்பதற்குத் தக்கதன்று என்றிவ்வண்ணம் உரைசெய்த காலையில், அங்குள்ள அரசர்களெல்லோரும், மேக கர்ஜனையைக்கேட்டு மயில்கள் மகிழ்வதுபோல அரசர்பெருமான் மொழியைக் கேட்டு மகிழ்ந்து புகழ்ந்தனர்கள். அக்காலையில் அச்சபையில் அன்புகூர்ந்து பிரதித்தொனி பொருந்திய ஜனங்களின் ஆநந்தத்தால் எழுந்த நாதமானது அந்த விமானம் கிடுகிடென்று நடுங்குமபடியாகத் தோன்றி யொலித்தது.

அப்பொழுது அங்குள்ள அறுதொழிலாளர்களும், மற்றை வருணத்துத் தலைவர்களும், நாட்டார் நகரத்தார்களோடு வேற்றுமையின்றிக் கூடிப் பல்வழியாலும் ஆய்ந்து தங்களுக்குள் துணிவுசெய்துகொண்டு, சக்கரவர்த்தி மூப்பினராதலால், இனி யுலகப் பாதுகாப்பின்கண் ஆற்றலற்றவரென்பதைத் தங்களில் நன்குணர்ந்து தேறித் தசரதமஹாராஜரை நோக்கிச் சக்கரவர்த்தியாரே! நீர் அறுபதினாயிரவருஷம் வாழ்ந்து மூப்புற்றீர்; இனி ஸ்ரீராமசந்திரனை இளவரசாக்கலே நலமென் றுரைத்தனர்.

ఇచ్ఛామోహీమహాబాహుం రఘువీరమ్మహాబలం
గజేనమహతాయాంతం రామంఛత్రావృతాననం

இச்சாமோஹிமஹாபாஹும் ரகுவீரமமஹாபலம
கஜேநமஹதாயாமதம ராமம்சத்ராவருதாநநம

அரசுபெறுதற்குமுன் ஆடும் மங்கைளிரோட்டம் கண்டருளி, மணிமுடி சூட்டி, அனைவோரையும் மகிழ்விக்கும் தன்மை இயற்கையா யுள்ளோனும், முழந்தாளளவு நீண்ட திருக்கைகளையுடையானும், உலகனைத்தையும் ஒருசிறிது நீங்கும் நேராதவண்ணம் புரத்தல்செய்யும் தோளாற்றலுடையானும், எளியாரிடத்துத் தண்ணருளுடையானும், அடியோர்களைக் காக்கும் ஊக்கமுள்ளவனும், விளங்கும் ஸ்ரீராமபத்திரன் தேர் கரி பரி காலாட்படைகளால், சூழப்பட்டவனாகவும், தன் பேரழகினுக்குக் கண்ணேறுபடாமைக் காகவும், வெயில் தாக்காமைக்காகவும், தெருவினக்கெழும் தூளிகள் படியாமைக் காகவும், பெருங்கூட்டத்தி லிவனே ஸ்ரீராமனென்று தாண்போர் கண்டு கொள்வதற்காகவும், ஒருவரையும் வணங்காமல் தனிக்கோல் நடாத்தும் அரசர்பிரானெனனும் வெற்றிக்குறி தோற்றுதற் காகவும், பிடிக்கப்பட்ட

முச்சகிற்றும் முழுமதிவெண்குடையால் மறைக்கப்பட்ட திருமுகமண்டல முடையவனாகவும், எல்லோருக்கும் ஒருதன்மைத்தாகச் சேவைசாதிப்பவனாகவும், முன்னோர் முறைமை தவறாதவனாகவும், மத்தமாதங்க காமியான தனக்கு மத்தமாதங்கமே தக்குமென்பதற்காகப் பருத்துயர்ந்த சத்துருஞ்சயமெனும் பட்டத்து யானையின்மீதேறி, முடவர், முதியர் முதலானோரும் கண்டு களிப்புறும்படி ஊர்கோலமாக ராஜவீதியில் வீடுகள்தோறும் நின்று நின்று திருஷ்டிகழித்து மகிழ்ந்து வரும் பேரணியைக் கண்டு யாங்க ளெல்லோருங் களிக்க முன்னமே அவாவுற்றிருக்கின்றனம்; ஆயினும் உமது கருத்தறியாது எமது அவாவை விளம்பலாகாதென்று உள்ளத்திலடக்கி யிருந்தனம். இப்பொழுது உமது கருத்தைப் புறத்தே காட்டினமையால் எம் விருப்பை வெளியிட்டனம்; எங்கள் வாய்ச்சொல்லால் பயனென்ன? மணிமுடி சூட்டுந் திறமை யுமமிடத்தல்லவோ இருக்கின்றதென யாவரும் ஒருதன்மையராய்ப் பேரவாவோ டுரைசெய்தனர்கள். இவ்வாறுரைத்த அச்சபையோரது கட்டுரையைச் செவியேற்று, அறிந்தும் அறியார்போலச் சக்கரவர்த்தியார் அவர்களை நோக்கி, அவைக்களத்தோர்களே! எமக்கோர் ஐயமுளதாயிற்று; அதனை நீங்கள் கேட்டுத் தீர உரைக்கக்கடவீர்கள் அதென்னெனில்? யாமோ இதுவரையில் சிறிதும் நீதிவழுவாமல் அரசாட்சிசெய்து வராநிற்கவும், எம்மை நனகுமதிப்பில்லாமல் சிறுவனாகிய எம் அரும்புதல்வனை இளவரசாக்க வேண்டுமென விருப்புக்கொண்டீர்களே என்னென வினவினர். அவ்வினாவை யுள்ளத்துக்கொண்ட சபையினகணுள்ள அறிஞர் யாவரும் திருவயோத்தி மன்னர் மன்னனை நோக்கிப் புரவலர் பிரானே! அழிவில்லா நற்குண நிலயனாகிய கடவுள் போன்ற உம்முடைய மைந்தனிடத்தில் யாவரும் விருப்புக் கொள்ளத்தக்க அளவற்ற திவ்ய கலியாண குணங்கள் நிறைந்திருக்கின்றன; அவற்றை எம் அறிவினுக் கியலுமளவுங் கூறுகின்றோம் கேட்டுணரக்கடவீர்

ஸ்ரீராமனானவன் திவ்வியகுணங்களினால் இந்திரனுக்கு நிகரானவன், உண்மையான பராக்கிரமமுடையவன், நீர் ஒருவரோ அன்று, இக்ஷுவாகு குலத்தில் பிறந்த எல்லா அரசர்களினும் உயர்ந்தவன்; உலகில் இவனொருவனே ஸத்புருஷன்; ஸத்தியத்திற்கும் தருமத்திற்கும் பிறப்பிடமாயினவன், அறம் பொருளிரண்டும் இவனிடத்தில் தோற்றஞ்செய்து பெருகி, இஞ்ஞாலத்தில் முறைமையோரிடத்துச் சென்றன, உலகத்தை மகிழ்விப்பதில் சந்திரனுக்கும், பொறுமையில் பூதேவிக்கும், புத்தியில் பிருஹஸ்பதிக்கும், வீரத்தன்மையில் ஆயிரங்கண்ணனுக்கும் நிகரானவன்; தருமமறிந்தவன், சொன்னசொற்றவராதவன், நல்லொழுக்கமுற்றவன், பொறாமையற்றவன், பொறுமையுள்ளவன், சினங்கொண்டவர்களையும் சமாதானஞ்செய்பவன், யாவரிடத்தும் இன்சொல் கூறுபவன், செய்ந்நன்றி மறவாதவன், ஐம்புலன்களை வென்றவன், தஞ்சமடைந்தவரைப் புறம்போக விடாதவன், மாறுதலற்ற மனமுடையவன், எப்பொழுதும் தன் தொண்டர்களுக்கு இணக்கமாய் நடப்பவன், பிறர் தன்பால் பொறாமை கொள்ளுதற்கிடமீகாதவன்,

ప్రియవాదీచ భూతానాం సత్యవాదీచ రాఘవః
బహుశ్రుతానాం వృద్ధానాం బ్రాహ్మణానాముపాసితా

பிரியவாதீசபூதாநாம் ஸத்யவாதீசராகவஃ
பஹுச்ருதாநாம் வ்ருத்தாநாம் ப்ராஹ்மணாநாமுபாஸிதா.

(ஸத்யம்ப்ரூயாத்ப்ரியம் ப்ரூயாந்ந ப்ரூயாத்கிஞ்சித்ப்ரியம்)

என்கிறபடி தன்னைப் புகுந்தவர்களிடத் தன்றியும், ஏனையோர்களிடத்தும் இனிமையாகப் பேசுதலன்றிக் கடுமையாகப்பேச அறியான், உரைக்க உள்ளம் எண்ணினும் நாவால் மெய்ம்மை யல்லாமல் பொய்ம்மை உரைக்க வறியான்; இத்தன்மைகள் யாவும் மரபின் சிறப் பியல்பாயுற்றனவே யன்றிப் புறத்தே பாவனைசெய்வனவல்ல; இனைய சிறப்புத் தன்னுழையுளதென் றிறுமாப்புறுமல், பல வாசிரியர்களிடத்தும்சென்று பலவாறாகப் பலநூல்களையுங் கற்றுங் கேட்டும் கலக்கமற்ற மனத்தினராகி மெய்யுணர்வினாலும், பருவத்தினாலும், ஒழுக்கத்தினாலும் முதிர்ந்த பற்பல அந்தணர்களை நாடிப்போய்க் காத்துப் பலவாறாகப் பலநூல்களின் கருத்தினை யறிபவன். அதனாலிவனுக்கு இவ்வுலகினில் ஒப்பற்ற கீர்த்தியும், சூரனென்னும் தோற்றமும், பராக்கிரமமும் பெருகிவளர்கின்றன; தேவதானவமானவாதிகளின் அஸ்திரங்களையு முணர்ந்தவன், முறையாகவே வேதாங்கங்களை உணர்ந்து நியமத்தை முடித்தவன், காந்தருவ வேதங்களிலும் சிறந்த ஞானமுள்ளவன், நன்மையுமான தாய தந்தைகளின் மரபுடையவன், பிறப்புமுதல் பரிசுத்தமான மனமுடையவன், சிறந்த மதியுள்ளவன், அறம்பொருளுணர்ந்த சிறந்த செந்தீவளர்ப்பவர்களால் பழக்கப்பட்டவன், எப்போதாயினும் ஊரையாவது, நகரையாவது, பகையாளிகள் தகைந்தால் அப்போது இளையபெருமாளுடன்சென்று அவர்களுடன் போர்செய்து அவர்களை வென்று வெற்றிகொள்ளாமல் திரும்புவதில்லை, திரும்பிவருங்காலையிலும் களிற்றின்மீதாவது தேர்மீதாவது ஏறிக்கொண்டு வழியில் காணப்படும் நகரத்தவரெல்லோரையும், தன்னினத்தாரைப் போலப் பரிவுடன் அழைத்து நலத்தைக் குறித்துப் பலவாறு வினவி, நும சிறுவர் மனைவிமார் பிணிமிடியின்றி இன்புற்றிருக்கின்றனர்களா? அக்கினி காரியங்கள் முதலிய செய்கடன்கள் இடையூறின்றி நடக்கின்றனவா? சீடர்கள் முதலானோரும் குசலமா? மாணாக்கர்கள் நுமது கட்டளைக்குள்ளடங்கிப் பணிவிடை செய்கின்றனர்களா? என்றிவ்வண்ணந் தந்தை தன் மக்களைக் கண்ணுற்றுக் கேட்பதுபோல எங்களைக் காணும்போதெல்லாம் கேட்கின்றான். எங்களுக்குள் யாவனுக்காயினும் மனக்கவலையுளதாயின், அது தனக்குள்ளது போல மிகுதியும் உள்ளம் வருந்துகின்றான்; ஒருவனுக்குச் சந்தோஷம்வருங்காலையில் தந்தைபோல இவன் மிக்க களிப்புறுகின்றனன், உயிர்போகுங் காலையிலும் பொய்யுரையான், சிறந்த கோதண்டமுடையவன்; பெரியோர்

களைப் பணியு மியல்பினன், புலன்களை வென்றவன், முகமலர்ந்து புன்னகை யுடன் பேசுபவன், தருமத்தவறாதவன், நன்மை பயக்கும் தன்மையன, ஐல்ப விதண்டா வாதங்களில் அவாவற்றவன், மேன் மேலும் யுக்தி சொல்வதில் பிருஹஸ்பதிபோன்றவன், சிறந்த அழகுவாய்ந்த புருவமுடையவன்; நீண்டு செவ்வரிபரந்து சிவந்து அருள் சுரந்து மடைதிறந்த திருக்கண்களை யுடைய வன், ஸ்ரீமந்நாராயணனேயென்று சொல்லத்தக்கவன், ஆதலால் இந்த ஸ்ரீரா மன் சௌரியவீரிய பராக்கிரமங்களால்,லோகாபிராமன், அரசுபுரியுமசெயல் இன்னதென மாசற உணர்ந்தவன், பிறர்பொருளை வெளவக் கருதாதவன், இத்தன்மையனாகிய இவன் மூவுலகையும் ஆளத்தக்க திறமையுள்ளவன், என்று விபூமியாளுந . திறமையுள்ளவனென்பது வியப்போ ? இவனது சினமும் மகிழவும் பயனற்றதல்ல. பிழைசெய்தவரிடத்துச் சினங்கொண்டு தண்டனைசெய்யாது விடுவதில்லை; பிழைசெய்யாதவரிடத்துச் சினங்கொள்ள வதேயில்லை; யாரிடத்து மகிழவுறுகின்றனனோ ? அவருக்கு மிக்க பொரு ளளிக் கின்றனன், கதிரவன் கிரணங்களால் விளங்குவதுபோல ஸ்ரீராமன் இவ்வகையான அளவிலாக கலியாண குணங்களால உலகத்துக்குத் தான் தனி யனாக விளங்குகின்றனன், இந்த ஸ்ரீகோதண்டராமனைப் பாரமகளும் விரும் பினளன்றோ ? நீர் செய்த நலவினையா லுமக்கு நன்மைபயக்கத் தக்கவனாக இப்புதல்வன் திருவவதரித்தனன்; உம்முடைய நல்வினையால் மரீசிபுத்திர ராகிய காசியபர்போலச் சிறந்த புத்திரகுணங்களால் நிறைந்தவராயினீர், இவருக்குப் பலமும், ஆரோக்கியமும்,ஆயுசும,மேனமேலும் பெருகவேண்டு மென்று விண்ணவர், அசுரர், மக்கள், கந்தருவர், பன்னகரும், தன்னுடு பிற நாட்டார்களும, தன்னகர் பிறநகரத்தார்களும், இளத்தார் முயல்வரும், கிழவி தருணிகளும தினந்தோறுங் காலைமாலைகளில், விரதம பூண்டவர்களாகிச் சக்கரவர்த்தித் திருமகனுக்கு நலமபெருகுகவென்த் தத்தம தெய்வங்களை வணங்கி வேண்டுகின்றார்கள். அவர்களுடைய கோரிக்கையெல்லாம் இப் பொழுது உமதருளினால் முடிவுபெறக்கடவன. ஆதலால், ராஜாதிராஜனாக உம்முடைய திருமகனும, கருநெய்தல் மலர்போலக் கரியதிருமேனியனும, பகைஞர்களை வெல்லுந் திறலுடையவனுமாகிய ஸ்ரீராமன் இளவரசுப்பட்டம பெற்று, மணிமுடிபூண்டு வீற்றிருப்பதைக் காணக் கருதுகின்றனம. ஆத லால், தேவதேவர்களுக்குத் தலைவனை ஒத்தவனாகியும, எல்லாவுலகத்தாருக் கும நலலவனாகியும, பெரியோர்களால் சூழப்பட்டவனாகியுமுள்ள உம திரு மகனுக்கு எங்கள் நன்மையின் பொருட்டு நீர் மகிழவுகொண்டு திருவபிஷே கஞ் செய்யக்கடவீரென்று வேண்டி மொழிந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் இரண்டாவது சருக்கம

முற்றிற்று.

## மூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரானுக்கு அபிஷேகஞ்செய்யும்படி முடிவு செய்தது.

இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்த சபையாருடைய செங்கமல மொக்குகளைப்போன்ற அஞ்சலிசெய்வதை ஏற்றுக்கொண்டு தசரதசக்கரவர்த்தியார் மீளவும் அவர்களுக்கு அன்பாயும், இனிதாகவும், ஒருசெய்தி மொழியலுற்றனர். அவையின்கணுள்ள நல்லறிவாளர்களே! எம்முடைய பாக்கியமேயாக்கியம், அளவுகடந்த பெருமகிழ்வை யடைந்தோம்; எமது பெருமையும் ஒப்பற்றதாயிற்று, நீங்களெல்லோரும் ஓரேமனமாக என்னருமைப் புதல்வனாகிய ஸ்ரீராமன் யுவராஜனாகவேண்டுமென அவாவுற்றீர்களோவென்று அவர்களைப் புகழ்ந்து அவர்களுக்கெதிரிலேயே வசிஷ்டமஹாமுனிவரையும், வாமதேவ முனிவரையும் நோக்கி, ஆசிரியர்களே! இத்திங்கள் சித்திரைத்திங்களாதலால், எல்லா மரங்களுந் தளிர்த்துப் பூத்து, எங்கும் மணம்பரப்பித் தழைத்துச் சீர்பொருந்தி இருக்கின்றது. அன்றியும், வேள்வி முதலிய நற்செயல்செய்தற்கும் இத்திங்களே தலைமையானது, அதுபற்றி ஸ்ரீரகுகுல திலகனுக்கு இளவரசுப் பட்டாபிஷேகத்துக்குரிய பொருள்களைக் குறைவின்றிச் சேகரிக்கக் கடவீர்களென உரைசெய்து மௌனமாகவிருந்தனர். அச்சொல்லைக்கேட்டவுடனே ஸ்ரீராமருக்குத் திருமுடிதரிக்கிறதென்பதைப்பற்றி மாந்தர்கள் பெருமகிழ்வுகொண்டு மன்னர் மன்னனைப் புகழுவதும், ஸ்ரீராமன் குணங்களைப் பாடுவதும், உலகத்தார் நல்வினையை வியப்பதும், மற்றும் பலபல கூறுவதுமாகப் பேரிரைச்சலிட்டனர்கள். அப்பேரொலியும் அடங்கிய பின்னர், தசரதப்பெயர்ப்புரவலர் தலைவர் வசிஷ்டமகாயோகியை நோக்கி ஸ்ரீபகவானே! ஸ்ரீராமனுக்கு அபிஷேகத்துக்கு வேண்டுவன யாவற்றையும் இப்பொழுதே தேவர் ஆஜ்ஞைசெய்யல் வேண்டுமென உரைத்தனர். அம்மொழியை அருந்ததி நாயகனுஞ் செவிசாய்த்து வேந்தனுக்கெதிரிலிருந்த மந்திரிகளைநோக்கி, வாரீர் அமைச்சர்களே! ஸ்ரீரகுகுலதிலகனுடைய பட்டாபிஷேகத்துக்குச் செம்பொன், வெள்ளி, நவரத்தினங்கள், நவதானியங்கள், வெண்ணிற மலர் மாலைகள், பொரிகள், தேன், நெய், புதிய வஸ்திரங்கள், வெண்குடை, துவஜம், நூறு பொற்குடங்கள், பொற்குப்பி கட்டிய காளை, முழுப்புலித்தோல், மற்றும் வேள்விக்குரியனவற்றை எல்லாம் நாளைத்தினம் பொழுதுவிடியுங்காலையில் மஹாராஜாவின் செந்தீவளர்க்கும் வேள்விச்சாலையில் நிரப்புவிக்கக் கடவீர்கள். அரண்மனை வாயிலிலும், மற்றும் புரமுழுதிலும் பனிநீர் தெளிப்பித்து நறுஞ்சுண்ணப்பொடி தூவுவித்து, தோரணமாலைகள் தூக்குவித்து, மலர்கள் சிதறுவித்து, அகிற்புகைகள் கமழ்வித்து, நகரமெங்கும் அலங்காரஞ்செய்விக்கக் கடவீர்கள். மிகவுங் குறைதலுமில்லாமல் சமைக்க அமைந்த அறுவகைச்சுவையுள்ள சிற்றுண்டி

கூளையும், நெய் பால தயிர் காய் கறிகளையும், பற்பல உணவடிகளையும், சிறந்த பலவகை அடிசில்களையும் ஆயத்தஞ்செய்து, பல்லாயிரம் அந்தணர்களுள் யார் யாருக்கு எவ்வெவ்வுணவில் விருப்புள்ளதோ அவரவருக்கு அவ்வவ்வுண வை அவரவர் அவாய் கெடுமளவு மிட்டு, மிகுதியாகக் காணிக்கைகளுங் கொடுத்து மகிழ்விக்கக் கடவீர்கள் நாளைத்தினம் கதிரவன் குணதிசையில் தோற்றும்போழுதே ஸ்வஸ்திவசன மெனப்படும், நன்மை பெருகுவதற்கப் பாடும் பழமறையின் இசைப்பாடல் பாடுவிக்கவேண்டும், அதற்காக அந்த ணர்கள் காலந்தவறாமல் வரும்படி இன்றே தெரிவிக்கவேண்டும், அவர்கள் வீற்றிருக்கும் பீடங்களையும் ஆயத்தஞ் செய்வீர்களாக. புரமெங்கும் பதா கைகளைக் கட்டுக. ராஜவீதியில் பனிநீர் தெளித்துத் தூளியெழாமல் செய் யக் கடவீர்கள். வேசியர்களும் சிங்காரித்துக்கொண்டு தாளம், மத்தளம் முதலிய மேளத்தோடு அரசனது இரண்டாவது கோட்டை வாயிலில் நிற்கக் கடவர்கள். கடவுளர் கோயில்களிலும், நற்சந்திகளிலும், அன்னபான கந்த புஷ்பாதிகள் சித்தப்படுத்தக் கடவன. படைவீரர்களும் தூய்மையாகிய உடுப்புகளை யுடுத்து நீண்ட கத்திகளை இடையி லிறுக்கிக் கட்டிக்கொண்டு அரசன் அரண்மனையுட் புகக்கடவர்கள். மற்றும் பற்பலவாறு கட்டளையிட்டு வாமதேவருடன் செய்யத்தக்க சடங்குகளை அரசர் பெருமானுக்குத் தெரி வித்து முறையே முடித்துவிட்டு, எல்லாம் ஆயத்தஞ்செய்தோமென வேந் தர் வேந்தனுக்கு அறிக்கைசெய்து மகிழ்வோடு வீற்றிருந்தனர். அப்பொ ழுது சக்ரவர்த்தியார் சுமந்திரனைத் தம்பால் வரச்செய்து, சுமந்திரரே! நீர் கடுகிச்சென்று, ஸ்ரீராமனை உடன் கொண்டு வாருமென ஆஜ்ஞைசெய்ய, அதுகேட்டுச் சுமந்திரர் அங்ஙனமே ஆகுகவென விரைந்து சென்று, ஸ்ரீராம பிரானைத் தேர்மிசை ஏற்றிக்கொண்டு மீண்டு ராஜவீதியில் வருகையில், தசரதசக்கரவர்த்தியார் தம்மைச் சூழ்ந்திருக்கின்ற கிழக்கு மேற்குத் தெற்கு வடக்குத் திசைகளிலுள்ள அரசர்களோடு கூடி, சகல தேவகணங்களுடன் கூடிய இந்திரன்போல விளங்குகின்றவராகித் தாம் வீற்றிருந்த மாளிகை யின் மேனிலையிலிருந்து, கந்தருவர் வேந்தன்போல அழகுள்ளவரும், உலக மெங்கும் புகழப்பட்ட பராக்கிரமமுடையாரும், முழங்காலளவும் நீண்டுரு ண்ட திருத்தோளுடையாரும், அளவற்ற தோள்வலி யுள்ளவரும், மதக் களிற்றுக்கு நிகர்த்த நடையுடையவரும்,—

చంద్రకాంతాననంరామ మతీవప్రియదర్శనం
రూపౌదార్యగుణైఃపుంసాం దృష్టిచిత్తాపహారిణం

சந்த்ரகாந்தாநநம்ராம மதீவப்ரியதர்சநம
ரூபௌதார்யகுணைஃபும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்.

முழுமதிபோல விளங்குகின்ற திருமுகமண்டல முடையவரும், தம் குணங்களால் யாவரையும் மகிழ்விப்பவரும், பலமுறை சேவித்தவர

களுக்கும் மேன்மேலும் சேவிக்கவேண்டுமெனக் காதல் பெருக்கத்தக்க சேவையுள்ளவரும், தம் வடிவழகினாலும் யாவருந் தம்மை அனுபவிக்கும் படி செய்யும் எண்மையாகிய தன்மையினாலும், யாவரும் எப்பொழுதும் கருதுதற்குரிய நல்லொழுக்கத்தாலும், இளகாத நெஞ்சுள்ள ஆண்மக்களும் இவரைக்கண்டு உள்ளமுருகி யாங்களும் பெண்ணுருவாயினோமல்லோமே, பெண்ணாகயிருந்தால், ஒருகாலிவரைக் கட்டியணைத்து இன்பமுறும் நல்வினையுள்ளதாயினு மாகுமேயெனக் காமுறத்தக்க திருவழகை யுடையாருமாகி, ஆண்பெண்ணலி முதலிய யாவரும் விருப்புக்கொண்டு திகைத்து நிற்கச்செய்யும் ஸ்ரீராமபிரானை மருகாந்தாரத்தில் கொடிய வெயிலில் நெடுங்கால மடிபட்டு, நீர் நிழலற்று, வருந்தித் தவிக்கின்ற பிரஜைகள் மழைபொழிந்துகொண் டெழுகின்ற கருங்கொண்டல் வரக் கண்டாற்போலத் தாம் கண்குளிரக் கண்டு திருப்திபெறலுற்றவராயினர். அக்காலையில் சுமந்திரரும் திருத்தேரை அரண்மனை வாயிலில் நிறுத்தி, அதினின்றும் சக்கரவர்த்தித் திருமகனையிறக்கித் தந்தைக்கெதிராகச் சென்றருளும் அவர் பின்கை குவித்துத் தொடர்ந்து சென்றனர். கோசலையின் பெருஞ்செல்வமகனாரும் தந்தையைக் காண்பதற்காகக் கைலைமலையின் சிகரம்போல வெண்ணிறமா யுயர்ந்த அத்திருமாளிகையின் மேல் மாடத்தின்மீதி வர்ந்து பிதாவைக் கண்ணுற்று வணக்கத்துடன் அருகிற்சென்று தன் குலகோத்திர சாகா சூத்திரங்களைச் சொல்லி வந்தனஞ்செய்து, திருக்கைகளை முகிழ்த்து நின்றனர். சக்கரவர்த்தியாரும் பெறலருஞ் சிறப்பமைந்த மைந்தனைக் கண்ணாரக்கண்டு கரத்தைப்பற்றி மார்பொடணைத்து, நவமணிகள் குயின்ற உயர்ந்த ஓராசனத்தின் மீதிருக்க ஆஜ்ஞைசெய்ய, அக்கட்டளையின்படியே சக்கரவர்த்தித் திருமகனார் ஸ்வாமியும் மேருமலைமீது உதயமாகின்ற சூரியன் தன்னொளியினாலே அனைத்தையும் பிரகாசிக்கச் செய்து தானும் விளங்குவதுபோலத் தம் திருமேனியி னொளியினால், தாமே அவ்வாசனத்தை விளங்கச்செய்து, கார்த்திகைத் திங்களில் பூர்ணமி இரவில் ஒன்பது நவக்கிரஹ நக்ஷத்திரங்கள் சூழ்ந்த ஆகாசத்தைச் சந்திரன் மிக விளங்கச் செய்வதுபோல வேந்து, அமைச்சு முதலியோர்களால் சூழப்பட்ட அச்சபை தன்னையும், சிறப்பாக விளங்கச் செய்தனர். அப்பொழுது வேந்தர் பிரானாரும் கண்ணாடியிற் றோற்றுந் தம முருப்போன்ற இவ்வருமைத் திருமைந்தனை நோக்கிச் சில வார்த்தைகள் உரைத்து, அதன்மேல் புன்னகையோடு "மைந்தா! ஸ்ரீராமாவென்றழைத்து நீ எனக்கு முதல் பத்தினியினிடத்தில் எனக்குத் தக்க நற்குண நற்செய்கை யுள்ளவனாகவே பிறந்தாய்; ஆதலினாலே, இச்சபையிலுள்ள யாவரும் உன்னுடைய அளவிலிகளாகிய கல்யாணகுணங்களி லீடுபட்டுப் பெருமகிழ்வுகொண்டு, நீயே அரசனாகவேண்டுமென விரும்புகின்றனர்கள். ஆதலின் பூசநக்ஷத்திரத்தில் நீ அவ்வரசை யடையக்கடவை. நீ இயற்கையிலேயே மிகுதியும்

நமகுண நற்செய்கை யுணர்வன்; ஆயினும், அன்பினால் நலந்தருவதைக் கூறுகிறேன்; நீ அபிஷேகம்கொண்ட பின்னும், மிக வினயமுடையவனாய்க் காமக்குரோதாதிகளாலுண்டாகும் துன்பங்களைக் களைந்து, ஐம்புலன்களையும் வென்று, அகத்தும புறத்தும் எதிரிலும் மறைவிலும் ஒரே தன்மையனாகி, மந்திரிகள முதலிய பிரஜைகளை மகிழ்விக்கக் கடவை. யாவனொருவன் தனதானியங்களையும், ஆயுதங்களையும், மேன் மேலும் குவித்துக்கொண்டு பிரஜைகள மகிழ்ந்து அன்பு செய்யும்படி யரசுசெய்கின்றனனோ ? அவனை வேந்தனாகப் பெற்று, அப்பிரஜைகள தேவர்கள அமிர்தத்தைப் பெற்று மகிழ்வதுபோல மகிழ்வார்கள. ஆதலின் நீயும் உன்னுடைய தன்மையை இவ்வண்ணம் பழக்கிக்கொண்டு அரசுசெய்யக் கடவையென்று ஹிதங்கூறினர். இம்மொழியைக்கேட்டு அங்குள்ள சில நட்பினர் மகிழ்ந்தோடிக் கௌஸலையுடன் உரைசெய்கையில் அவள மிகக் களிப்புற்று, அவர்களுக்குச் சிறந்த பசுக்களையும், தங்கங்களையும், பற்பல மணிகளையும், வெகுமதி செய்தனள பின்பு ஸ்ரீரகுநாயகராகிய ஸ்வாமியும் தந்தையை வந்தனஞ்செய்து விடைபெற்று மீண்டு தேர்மிசையேறி யங்கங்குள்ள குழாங்களால் புகழப்பட்டவராகித் தம் மனைவந் தெய்தினர். பிறகு அச்சபையிலுள்ளோரும அம்மஹாராஜர் வார்த்தையைக் கேட்டுச் சிறந்த லாபங் கிடைத்ததுபோ லெண்ணி அரசனைப் புகழ்ந்து விடைபெற்றுக கொண்டு தத்தமிடம் வந்து சேர்ந்து மகிழ்வுகொண்டு தத்தங் குலதெய்வங்களுக்குப் பூசனை செய்தனர்கள்

அயோத்தியாகாண்டத்தில மூன்றாவது சருக்கம

முற்றிற்று

## நான்காவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரான் தமக் கபிஷேகமென்பதைத் தாய் முதலானோர்க் குரைத்தது

அநந்தரம் நகரத்தோர் தத்தமிடஞ் சென்றபின் தசரதசக்ரவர்த்தி மந்திரிகளுடன் கூடி யோசனைசெய்து நாளைத்தினமே பூசநக்ஷத்திரமாதலால், நாளைத்தினமே ஸ்ரீராமபிரானுக் கபிஷேகஞ்செய்யவேண்டும், செந்தாமரைமலர்போலச் சிவந்தகண்களையுடைய ஸ்ரீராமபிரான் நாளைத்தினம் யுவராஜனாகக் கடவனென்று நிச்சயஞ் செய்துகொண்டு தன் மனைக்குட் புக்குச் சுமந்திரனையழைத்து மறுபடியும் ஸ்ரீராமனை இங்கழைத்துவாரு

மென்று கட்டளையிடச் சுமந்திரரும் விரைவாகச் சென்று ஸ்ரீரகுநாயகனை வாயிலில் நின்று வாசல் காப்பவருடன் தாம் வந்த செய்தியைச் சொல்லி யனுப்பினர். ஸ்ரீகோதண்டராமனும் அச்செய்திகேட்டு மீண்டும் நம்மைத் தந்தை யழைப்பதற் கேது என்னமோவென்று ஐயமுற்றுச் சுமந்திரரை யுள்ளே யழைப்பித்துச் சுமந்திரரே ! நீர் மீண்டும வந்தென்னை யழைக் கும் விதமென்ன அதனை யுண்மையாக முழுதலும உரைசெய்யக் கடவீ ரென்று வினவினா. சாரதி யதுகேட்டு ஸ்ரீரகுராமா ! நான் வேறொன்றும் அறியேன், மஹாராஜா உமமைப பாாககவேண்டுமெனறு அழைத்துவரச சொல்லின ரென மொழிந்தனா ஸ்ரீராமபிரான் அம்மொழியைக கேட்டு உடனே புறபபடடுத் தந்தை மனைவாயலில் நின்று தான வநத சேதியைத் தந்தைக் கறிவித்து அவரது கடடளையின்மேல் உளளே சென்று தந்தை யைக் கண்ணுறறுக கைகூபபிப் பிரணாமஞ்செய்து நிறக, இறையும் புதல்வனை எடுத்துத் தழுவி யாதரஞ்செயது ஓராசனத்தில் வீற்றிருக்கச் செய்து மகனைநோககி ஸ்ரீராமா! நான் நெடுநாளவாழ்ந்து கோரின போகங் களை யெல்லாம் அனுபவிததுச் சிறந்த அநநதானங்களுடனும நிறைந்த தட்சிணைகளுடன் கூடிய யாகங்கள பல நூறுகள செய்து புகழுகொண்டே மூபபினனாயினேன், இப்பொழுது எனககு ஒப்பாருமிககாரு மில்லையென் னும்படி நீ எனக்குச் சதபுத்திரனாகப் பிறந்தமையால், பிள்ளையில்லாக் குறைநீஙகினேன், பற்பல தானஙகளுஞ்செயதேன், பல வேளவிகளுமிய ற்றினேன, பறபல நூலகளும் ஓதினேன, வேண்டு மினபங்களை யனுப வித்தேன், ஆதலால் யாகததால தேவாகள கடனேயும, ஓதுதலால் ரிஷி களின் கடனையும், மக்கட்பேறுடைமையால் பிதிாகள கடனையும, தானங் களால் வேதியர்கள கடனையும், இன்பமுறுவிததலால் உடலின் கடனையுந் தீர்த்துவிட்டவ னாயினேன

ஆதலின் உனக கபிஷேகஞ் செய்விப்பதொன்று நீங்கலாக வேறொ ரு வேட்கையு மெனக்கில்லை, ஆதலால் யான் யாதுரைககின்றேனோ அத னை நீ கேட்டு கப்புறசெய்யக் கடவை. மேலும் எல்லாப் பிரஜைகளும் நீயே யுவராஜனாகவேண்டுமென்று கோருகின்றனாகள. ஆதலின் உனக்கு யானிபபொழுது யுவராஜப் பட்டாபிஷேகஞ் செய்யப் போகிறேன்; மேலு மிப்பொழுது நித்திரையில் கொடிய கனவுகாண்கின்றேன், ஆகா யத்து நின்றும் இடியுடன் கொள்ளி முழக்கங்கொண்டு வீழகின்றது, நான் பிறந்த நக்ஷத்திரமும் ஞாயிறு செவவாய் ராகு என்னும் கொடிய கிருஹங்களால் பீடிக்கப் படுகின்றதெனச் சோதிடரு முரைககின்றனர். இவ்வாறு கெடடசகுன மாவதற்கு ராஜனிறக்கவாவது வேண்டும், இறப் புக் கொப்பான கொடுங் துன்பத்தையாவ தடையவேண்டும், ஆதலால் என்மனங் கெடுவதன்முன்னமே அபிஷேகஞ் செய்துகொள்ளக் கடவை. பிராணிகளின் மனம் நிலையற்று நிமிஷந்தோறும் மாறுபடுகின்றதன்றோ ?

இன்று சந்திரன் புனர்வசு நக்ஷத்திரத்துடன் கூடியிருப்பதால் நாளைத் தினம் பூசநக்ஷத்திரத்துடன் கூடுகின்றானென்று தெய்வஜ்ஞாக ளுரைக்கின்றனர்கள், நாளைத்தினமே உனக்கு அபிஷேகஞ்செய்ய என்னை மனந் துணை செய்கின்றதுபோல வாக்கொண்டிருக்கின்றது, ஆதலின் நாளையத் தினம் அபிஷேகஞ் செய்வேன், ஆதலால் இன்றிரவு மனையாளுடன் தூய்மையனாகி யுண்டி நீங்கி யுபவாஸமாகத் திருப்புல்லணையில் துயிலுறக் கடவை. உன்னுடைய நேசத்தார்களும் இன்றிரவு முழுதிலும் உனக்குத் திங்குவராவண்ணம் ஊக்கத்துடன் காக்கக் கடவர்கள். இவ்வகையான நற்செயல்களுக்குப் பலவகையாக இடையூறுகள் வருகின்றனவன்றோ? பரதனிப்பொழுது தேசாந்தரம்போ யிருக்கின்றானே அவன் திரும்பி வருவதற்கு முன்னமே உனக் கபிஷேகஞ் செய்யவேண்டுமென்பது என் கருத்து, உனக்குப் பிராதாவாகிய பரதன் நல்லொழுக்கமுடையவனும், அன்னவன் உன்னுடைய மனதுக்கினியவனும், தர்மமுடையவனும், தயை யுள்ளவனும், பற்றற்றவனும் ஆகின்றான். ஆகிலும் மனிதர் மனம் நிலையற்ற தாதலால், ஒருக்கால் எப்படி இருக்குமோவென்றெனக்குத் தோற்றுகின்றது, ஆனால் சற்புருஷர்களுடைய மனமோ வெனில், நன்றியால் விளங்கும் தன்மையுடையது, ஆதலால் நீ என் சொற்படி நியமங்கொள்ளப் போவென்று ஆஜ்ஞைசெய்யப்பட்டு ஸ்ரீராமபிரானும் அவனை வணங்கி விடைபெற்றுத் தம் மனைவந்து சேர்ந்தனர்.

இந்தச் செய்தியைத் தம்மைப் பெற்ற தாய முதலானோருடன் கூற வேண்டுமென்றுடனே புறப்பட்டுக் கௌஸல்யாதேவி யரண்மனைக்கு வந்து பார்க்குங் காலையில், கோசலை இச்சேதியை முன்னமே கேட்டுணர்ந்தவ ளாதலால், சுமித்திரை, லக்ஷ்மணன், சீதை, இவர்களை யழைப்பித்துக் கொண்டு பிரியமுடைத்து அவர்களுடன் கூடித் தன் புதல்வனுக்கு நன்மை யுண்டாவதற்காக நீரிலாடி வெண்பட்டுடுத்துத் தூய்மையளாகி, மனவு விரதம்பூண்டு நன்மை பயக்கவேண்டுமென்று தன் குலதெய்வத்தைப் பணிந்து தியானஞ்செய்துகொண் டிருந்தனள். பட்டாபிராமனும் வணக்கங்கொண்டவளருகிற் சென்று பணிந்து தாயே என்றந்தை எனக்கு நாளைத்தினம் பட்டாபிஷேகஞ் செய்கிறேனென்றும், அதற்காக நீ சீதையுடன் இன்றிரவில் உபவாஸஞ் செய்யவேண்டுமென்றும், என்னை யழைப்பித்து அருளிச்செய்தனர். ஆதலால் அதற்காகச் செய்யவேண்டும் மங்கள காரியங்களை எனக்கும் வைதேஹிக்கும் செய்விக்கக் கடவை யென்று விளம்பினர். நெடுநாளாயத் தான் விருப்பங்கொண்டிருந்த இச்செய்தியைச் செவியுற்று ஆநந்த நீர் பெருகக் களிப்புக்கொண்டு ஸ்ரீராமசந்திரனை நோக்கி அப்பா என் மகனே! நீ நெடுங்காலம் வாழ்க, உன் பகைகள் ஒழிந்தவர்களாகக் கடவர்கள். நீ பட்டாபிஷேகங்கொண்டு என்னைச் சேர்ந்தவர்களையும், சுமித்திரையைச் சேர்ந்தவர்களையும் மகிழ்விக்கக் கடவை. நீ என்னிடத்தில் நல்ல நாளிற்பிறந்தவன்;

இல்லையாகில் உன்னுடைய குணங்களைக் கண்டு உன்பிதா களிப்புக்கொண்டு தானே முடிசூட்ட முயல்வரோ? யான் செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீமந்நாராயணனைக் குறித்துச் செய்த தவங்களும் பயனுள்ளனவாயின! ஆதலாலே நீ அபிஷேகங்கொண்டு மணிமுடி பூண்டு கொள்வதைக் கண்டு ஆனந்தமடையப் போகிறேனென்று மகிழ்ந்து இனிமையாக மொழிந்தனள். சக்கிரவர்த்தித் திருமகனாரும் தாய் மொழிந்த மாற்றத்தைச் செவியுற்று, அருகில் வணக்கமாய்க் கையைக் குவித்து நிற்கின்ற இளையபெருமாளை நோக்கிப் புன்னகை கொண்டு தம்பி லக்ஷ்மணா! யான் அபிஷேகங் கொண்டேனாயினும், இப்பூமிமுழுதும் என்னுடன் கூடி, நீயே அரசாட்சி செய்யக்கடவை. இந்த ராஜ்ய லக்ஷ்மி வெளியே வேறுருக்கொண்டு உலாவுகின்ற என்னுயிர்போன்ற உன்னைச் சேர்ந்ததே யன்றோ? ஆதலால் விரும்பிய போகங்களையும், அரசின் பயன்களையும், நீ அனுபவிக்கக் கடவை. ராஜ்ய செல்வத்தையும், உயிர்வாழ்வையும், உன் பொருட்டே யான் விரும்புகிறேன்; என்றிவ்வண்ணம் பிரியமொழி யுரைத்துக் கோசலை சுமித்திரைகளையும், வந்தனஞ்செய்து விரதம்பூண்டு உபவாஸ மிருக்கும்படி, ஜானகி தேவிக்கும் ஆஜ்ஞைசெய்து விடைபெற்றுக்கொண்டு மீளவும் தன்னரண்மனை வந்து சேர்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நான்காவது சருக்கம்

முற்றிற்று.

## ஐந்தாவது சருக்கம்.

சக்கரவர்த்தி புரோகிதனைக்கொண்டு ஸ்ரீராமபிரானுக்கு நியமஞ்செய்வித்து அந்தப்புர மெய்தியது.

இங்குத் தசரதசக்கரவர்த்தியும் ஸ்ரீரகுநந்தனனை அனுப்பிய பின்னர் வசிஷ்டமஹாமுனிவரை யழைப்பித்துப் பெருந்தவச் செல்வரே! தேவர் ஸ்ரீராமனிட மெழுந்தருளி ஸ்ரீரகுநாயகனுக்கும், சீதாபிராட்டிக்கும், நியமந் தரிப்பித்து உபவாச மிருக்கச்செயல் வேண்டும்; இங்ஙனஞ் செய்வித்தால், பொருளும், புகழும், ராஜ்ஜியமும், நிலைபெற்றிருக்குமன்றோ? என்றுரை செய்தனர். புரோஹிதரும் மன்னன் மொழியைக்கேட்டு அவ்வாறே செய்விப்போமென்று உறுதிகூறி, ஸ்ரீராமபிரான் திருமாளிகைக்கு முனிவர்கள் ஏறுவதற்குரிய சிறந்த தோர் தேறிக்கொண் டெழுந்தருளி, மூன்று கோட்டை வாயில்களையும் அத்தேருடனே கடந்து செல்லுகையில், வசிஷ்டர் வருகின்றாரென்கிற செய்தியை ஸ்ரீகோதண்டராமன் செவிசார்த்தி விரைவாக எதி

கொண்டு ரதத்திற் கெதிர்க வந்து, தானே அம்முனிவரைத் தேரினின்றும் இறங்கி வந்தனஞ்செய்து நிற்கையில், ஆசிரியரும் ஆசீர்வாதஞ்செய்து நல்வாழ்வு வினவி, மீண்டும் சக்கரவர்த்தித் திருக்குமாரனை நோக்கி ஸ்ரீரகு குல திலகா! உன் தந்தை உன்மீது மிக வன்புகூர்ந்து இருக்கின்றனர். ஆதலின் நீ நாளைத்தினம் யுவராஜ்ஜிய பட்டாபிஷேகங்கொண்டரசுசெய்யப்போகின்றாய், ஆதலால் நீ இன்றைத்தினம் பிராட்டியுடன் உபவாசஞ் செய்யக் கடவை யென றருளிச்செய்து சீதாதேவியுடன் ஸ்ரீரகுநாதனுக்கு விதிப்படி மந்திரபூர்வமாக உபவாஸ விரதஞ் செய்வித்து, ஸ்ரீராமபிரான் செய்த பூஜைகளைப் பெற்றுக்கொண்டு, பின்றொடர்ந்து வழிவிடும் ஸ்ரீகோதண்ட தீக்ஷனை மீளச் செல்லவிட்டு, அம்மாளிகையி னின்றும் புறப்பட்டு எழுந்தருளினார்.

சக்கரவர்த்தித்திருமகனும் அங்குள்ள அன்பர்களுடன் கலந்துபேசி, அவர்களால் துதிசெய்யப்பட்டவராய், அவர்களிடத்தில் விடைபெற்று மனைசகுட் புகுந்தனர். அப்பொழுது ஸ்ரீராமபிரான் திருமாளிகை ஆணபெண்கட்கலும், பெருமகிழ்வு கொண்டதனால், மதுவுண்டு மதமேறிய பெண்கள் பாடும வண்டு மடவன்ன முதலிய பறவைகளுடனும அன்று மலர்ந்த கமலங்களுடனும் கூடிய தாமரை யோடைபோல விளங்கியது. வசிஷ்டமா முனியும் தசரத மாளிகைக் கொப்பான ஸ்ரீராமபிரான் திருமாளிகையினின் றும் வெளியே வந்து ஸ்ரீரகுநாயகருக்க பிஷேகமாகப் போகிறதென்று ஜனங்களெல்லாரும் தெருவெங்கும் கூட்டங்கூட்டமாகநிறைந்து,செல்வதற்கும் வழியின்றி நெருங்கி, மேனமேலும் பெருகி, ஆனந்தத்தால அலைகடல் பொங்கி மேலெழுந்தாற்போலப் பெருந்தொனிசெய்து மகிழ்வதையும், புரமெங்கும் பனிநீர்தெளித்து விளக்கித் தோரணங்கள கட்டி, வீடுகள் தோறும் பதாகைகள கட்டி விளங்குவதையும, அப்புரத்திலுள்ள ஆணபெண் அலி பல விருத்தர் முதலிய யாவரும் துயிலுமுறாமல, எப்பொழுது ஆதித்தன் உதயகிரியி லுதயஞ் செய்வான் ? யாம எப்பொழுது ஸ்ரீராமாபிஷேக மஹோற்சவத்தைக் கண்குளிரக் காணபோம்; இன்றிரவும் ஒரு யுகம்போல வளருகின்றதே யென்று பலவாறாகச் சிந்தை செய்துகொண்டு காத்திருப்பதையும், கண்ணுற்று அந்த ஜனங்களை முறைமுறையே விலக்கிக் கொண்டு மெல்ல மெல்ல அரசன்மனை சேர்ந்து வெண்முகில்போல வெளுத்த துயர்ந்த மாளிகைமேலேறி, பிரஹஸ்பதி இந்திரன அருகிற சேர்வதுபோல தசரத மஹாராஜனருகிற்சேர்ந்தனர். தாவேந்தரும ஆசிரியர் எழுந்தருளுவதைக் கண்டு ஆசனத்தினின் றெழுந்து வழிபாடு செய்து சுவாமி ஸ்ரீராமனுக்கு உபவாஸ விரதஞ் செய்வித் தருளினீரோ வென்று வினவ, யாவுஞ் செய்வித்தோமென்று வசிஷ்டமாமுனிவர் அருளிச்செய்த விடையை யுள்ளத்துக் கொண்டு மகிழ்ந்து தானெழுவதற்கு முன்னமே எழுந்து நிற்கின்ற அச்சபையாருக்கு விடைகொடுத் தனுப்பி, வசிஷ்டமஹாயோகி யிடத்துத் தாமும விடைபெற்றுக்கொண்டு அவர் தம்மாசிரமத்துக்கு எழுந்தருளியபின், ஸ்ரீ

ந்திரந்த சிங்கம், மலைக் குகைக்குட் புகுவதுபோல அந்தப்புரத்துக்குட் புகுந்து, சிறந்த வஸ்திகள் பூண்ட தாழ்குழலார்களால் சூழப்பட்டுத் தேவேந்திரனந்தப்புரம்போன்ற தன் மனையைத் தன்னொளியால் விளங்கச் செய்பவராகி, விண்மீன்களின் குலங்களால் நிறைந்த ஆகாயத்தைச் சந்திரன் விளங்கச்செய்ய அடைவதுபோ லடைந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐந்தாவது சருக்கம்

முற்றிற்று

## ஆறாவது சருக்கம்.

நகரத்தார் சக்கரவர்த்தித் திருமகனார் அபிஷேகத்துக்காகத்

திருவயோத்தியை அலங்கரித்தது

இப்பால் ஸ்ரீரகுகுலதிலகரும், வசிஷ்டமஹாமுனிவர் எழுந்தருளிய பின்பு ஸ்நானஞ்செய்து தெளிவுற்ற மனமுடையவராய், நீண்டு மலர்ந்த திருக்கண்களையுடைய சீதாபிராட்டியுடன் ஸ்ரீமந்நாராயணனைத் தொழுது ஹவிஸ்ஸு நிறைந்த பாத்திரத்தைச் சிரத்தி லெடுத்து வந்து, அக்கினியை வளர்த்து முதற்பெருந் தேவராகிய ஸ்ரீமந்நாராயணனை யுத்தேசித்து ஹோமஞ் செய்து மிகுதியைப் புசித்து இஷ்டங்களை விரும்பிக்கொண்டு தர்ப்பசயனத்தில் வீற்றிருந்து, ஸ்ரீமந்நாராயணராகிய ஸ்ரீரங்கநாதனைத் தியானஞ்செய்து கொண்டு மவுனியராகிச் சீதாதேவியுடன் ஸ்ரீரங்கநாயகர் கோயிலிலே தாமே துயில்கொண்டு பொழுது விடிய ஒரு யாமப்பொழு திருக்கும் நேரத்திலே துயிலுணர்ந்து அம்மனை முழுதும் அலங்காரஞ் செய்வித்து ஸூதமாகதவந்திகளினியவாக்கியங்களைச் செவியுறக்கொண்டே நித்திய கருமானுஷ்டானஞ் செய்து முடித்து.—

తుష్టావప్రణతశ్చైవ శిరసామధుసూదనం
విమలక్షౌమసంవీతో వాచయామాసచద్విజాన్

துஷ்டாவப்ரணதச்சைவ சிரஸாமதுஸூதநம்

விமலக்ஷௌமஸம்வீதோ வாசயாமாஸசத்விஜாந.

வென்பட் டணிந்தவனாகி மதுசூதனனையும் பணிந்து துதிசெய்து வேதியர்களை யழைப்பித்துத் துஸ்வஸ்திவாசனஞ் செய்வித்தனன. அவ்வந்தணர்களின் மதுரகம்பீரமாகிய புண்ணியாஹகோஷமானது தூரியகோஷத்துடன் கலந்து அவ்வயோத்தியெங்கும் நிறைந்தொலித்தது. திருவபிஷேகஸ

கொள்வதற்காக ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியுடன் விரதங் கொண்டனரென பதை நகரத்தோர்கேட்டு களிப்புக்கொண்டு பொழுது விடியுங்காலையில், புர மெங்கும் அலங்காரஞ்செய்ய முயன்றனர்கள். உயர்ந்த தேவதா மந்திரங்களி லும், நாலுசந்துகளிலும், வீதிகளிலும், புத்தாலயங்களிலும், கோட்டைச சுவர்களின் மேற்புறங்களிலும், பலவகைப் பண்டங்கள் நிறைந்த கடைத்தெ ருக்களிலும், பொருண் மிகுந்த இல்லறத்தோர் மனைகளிலும், பற்பல சபா மண்டபங்களிலும், உயர்ந்த மரங்களிலும், குறிப்புள்ளனவு மில்லனவுமாகிய பதாகைகள் உயரமாகக் கட்டப்பட்டன. நடனர்த்தக காயகர்களும் அங்கங்கு ஆடிப்பாடி மகிழ்ந்தனர்கள். ஜனங்களும் அங்கங்குக் கூட்டங் கூட்டமாக ஸ்ரீராமாபிஷேகத்தைப் பற்றிய கதைகளையே எடுத்துரைத்துக்கொண் டிருந் தனர்கள். வழியெங்கும் பனிநீர் தெளித்து நறுமலர் தூவித் தூபங் கமழ் வித்து மணக்கச்செய்யப்பட்டன. பெருங்கூட்டத்தாலிருள்கொண்டதிலை இரவு நீங்கவில்லையோவெனச் சிலர் ஐயங்கொண்டு குத்துவிளக்கேற்றிய புர மெங்கும் வைத்தனர்கள். இவ்வண்ணம் புரத்திலுள்ளோர் புரமெங்கும் அலங்காரஞ் செய்து, ஸ்ரீராமபிரானுக் கபிஷேகம் எப்போதாகுமென்று அதனையே கருதிக்கொண்டு அங்கங்கு கும்புசோந்து கேளீர் அன்பர்களே! தசரதச்சக்கரவர்த்தி மிகவும் நற்குணமுடையவர்; அவர்தான் மூப்பினொன் றுணர்ந்து ஸ்ரீராமபிரானுக் கபிஷேகஞ் செய்விக்கப் போகிறாரன்றோ! நாமெ ல்லோரும் இதனையே கருதிக்கொண்டிருக்கின்றனம்; ஸ்ரீராமபிரான் அனைவ ருடைய தாரதம்மியத்தை நன்றாகக் கண்டறிந்தவர், செருக்குக்கொள்ளாத மனமுடையவர், யாவுமறிந்தவர், தருமமுடையவர், உடன்பிறந்தாரிடத்துப் போல நம்மிடத்தும் அன்பு செய்பவர், இத்தன்மையராகிய ஸ்ரீராமபிரானை நமக்கரசனாக அருள்செய்தமையால், தசரதமஹாராஜா நெடுநாள் வாழ்ந் தின புறக்கடவரென றிவ்வாறாகத் தசரதமஹாராஜனைப் புகழ்ந்தனர்கள். இச்செய் தியை நாட்டாருஞ் செவியுற்று, ஸ்ரீராமாபிஷேகத்தைக் கண்டு களிப்போ மென்று கூட்டங்கூட்டமாகவந்து நிறைந்தனர்கள். இவ்வகையாகவந்து நிறை ந்த ஜனங்களின் கோஷமானது, பருவகாலத்தில் பொங்குகின்ற கடலொலி போல வெழுந்தது. தேவேந்திரன் நகருக்கொப்பான அந்தத் திருவயோத்தி யானது ஸ்ரீராமாபிஷேகத்தைக் காண்பதற்காக வந்த நாட்டார் நகரத்தார் களால் பல நதிகளாலும், ஜலஜந்துக்களாலும், பெருங்கடல் நீராகுலமாவது போல ஆகுலமாயிற்று

அயோத்தியாகாண்டத்தில் ஆறாவது சருக்கம்

முற்றிற்று.

## ஏழாவது சருக்கம்.

### கைகேயி ராமாபிஷேகத்தைக் கேட்டு மகிழ்ந்து மந்தரைக்கு வெகுமதி செய்தது.

சக்கரவர்த்தித் திருமகனார் உபவாச விரதங்கொள்ளும் தினத்திலே, கைகேயிக்குத் தாதியாகிய மந்தரையென்னும் கூனி கைகேயி மனையின் மேல்மாடத்திலேறித் தற்செயலாய்ப் புரத்தின் நான்கு புறத்திலும் பார்க்கையில் எங்கும் நீர் தெளித்து மலர்கள் தூவிச் சூளிகைகள் கட்டி, அகிற்புகை போட்டுக் கமழ்ந் திருப்பதையும், நீராடி மாலைகளையும், மோதகங்களையும், கையிற்கொண்டு நிற்கின்ற வேதமோது மந்தணர்களாலும், மற்றுமுள்ள நாநாஜாதி ஜனங்களாலும் நிறைந்திருப்பதையும், தேவாலயங்களில் துவாரங்களிலும் சுண்ணம்பூசி, மேளதாளவாத்தியங்கள் முழங்குவதையும், ஜனங்கள் உவகையொலி செய்வதையும், ஆனைகள், குதிரைகள், பசுக்களும், மகிழ்ச்சிகொண் டிருப்பதையும், எங்கும் மகரதோரணங்கள் கட்டியிருப்பதையுங்கண்டு, இவ்வண்ண மிருப்பதற் கென்ன காரணமோ, வென்று மகிழ்வும் வியப்புங்கொண்டு சமீபத்தில ஆநந்தத்தால் மலர்ந்த கண்களை யுடையவளும், நின்மலமான வெண்பட்டை யுடுத்தவளும், சிறந்த அணிகளை யணிந்தவளுமாகி நிற்கின்ற ஸ்ரீராமபிரானுடைய வளர்த்த தாயைக்கண்டு அடி! ஸ்ரீராமசந்திரருடைய பெற்றதாய் பெருமகிழ்வுடையவளாகி, ஜனங்கள் பொருட்டுப் பொன்களைக் கொடைசெய்கின்றனளோ? ஜனங்க ளெல்லோரும், மிக்க களிப்புற் றிருக்கின்றனர்களே ? இதற் கென்ன காரணம் அதனை எனக்கு உரைசெய்யக் கடவை. மஹாராஜர் சந்தோஷத்தால் ஏதாவது நற்செயல் செய்யப் போகின்றாரோ ? என்று வினவினள்.

அதனை யுபமாதா கேட்டு ஆநந்தக் கடலில் மூழ்கினவளாகி, கேளடி மந்தரை! இச்செயதி உனக்குத் தெரியாதா ? நாளைத்தினம் புஷ்யநக்ஷத்திரத்தில் நற்குண நற்செய்கையுள்ள ஸ்ரீராமபிரானுக்கு மஹாராஜா யுவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்விக்கப்போகின்றார். ஆதலால் எல்லோருக்கும் இவ்வளவு சந்தோஷம் உண்டாயிற்றென்று உரைத்தனள். கூனி அவ்வுரையைக் கேட்டவுடனே கடுஞ்சினங்கொண்டவளாய்க் கைலைமலையின் சிகரம்போன்ற அம்மாடத்தினின் றுஇறங்கிக் கீழறையில்படுத்திருக்கின்ற கைகேயி யண்டையில் வந்து, கொடிய மனமுடையவளாய்க் கைகேயியைப் பார்த்து அடி கைகேயி! ஏன் படுத்திருக்கின்றாய்; அடிமடங்கொண்டவளே எழுந்திராய், உனக்குக் கொடுந்துயரம் நேருகின்றது; இதனை நீ அறிந்திலையே, நானேகட்டழகியென்றும், அரசனென்னிடத்தே மோகங்கொண் டிருக்கின்றானென்றும், அடிக்கடி பிதற்றுகின்றாய்; ஆராயுங்கால்

அரசனுக்கு நீ இஷ்டமுள்ளவளென்று இதுவரையும் அவரது தேன்மொழியைக் கேட்டு நம்பி மோசம் போயினை, உண்மையாக நீ அழகியாயினும், முதுவேனிற் பருவத்தில் ஆற்றிலோட்டம் குறைவதுபோல உன்னுடைய அழகும் பருவந்தாண்டினால் குறுகிவிடுமன்றோ வென்று படபடவென்று உரைத்தனள். இவ்வாறாகப் பாவியாகிய கூனியின் வாக்கியத்தைக் கைகேயி கேள்வியுற்று என்ன தீங்கு வாய்த்திருக்கின்றதோ வென்று துயரமுற்றுக் கூனியை நோக்கி அடி மந்தரையே! உன் முகத்தைப் பார்த்தால் மிகவுந் துயருற்றவள்போலத் தோற்றுகின்றது, அஃதென்ன, உரைசெய்வாயென்று வினாவினள். மதுரமாக உரைசெய்த அந்தக் கைகேயி மொழிதனைச் செவியுற்று மந்தரை இருமடங்கு சினங்கொண்டு, மனக்கவலையும் மிகுதி கொண்டவளாகி, கேகயன் மகளை நோக்கி, அவளுக்கு ஸ்ரீராமசந்திரன் மீது பொறாமையுள்ளதாகும் வண்ணமும், அதனாற் றுயரமுள்ளதாகும் வண்ணமும் மொழியத் தொடங்கினள் கேளாய் மஹாராணி! உனக்கு நீங்காத கவலையொன்று நேர்ந்திருக்கின்றது; மஹாராஜா ஸ்ரீராமனுக்கு நாளைத்தினம் யுவராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்யப்போகின்றார். ஆதலால், ஆழ்ந்தகன்ற சோகக்கடலில் முழுகிவிட்டவளாகின்றாய். இது செவியுற்றுத் தீப்பற்றி எரிக்கப்படுகின்றவள்போல வருந்தி, உனக்கிதமுரைப்பதற்கே இங்கெய்தினேன், உனக்குத் துன்பம் வரினும், அஃதும் என்றனுக்கே, உனக்கின்பம் வரினும், அஃதும் என்றனுக்கே யன்றோ? இவ்விஷயத்தி லையமில்லையே, நீ ராஜகுமாரி யாகவும், ராஜமஹிஷியாகவு மிருக்கின்றனை; ஆகிலும், அரசின் தன்மை கொடியதென்பதை நீயேன் அறிந்திலை, உன்னுடைய பர்த்தா புறத்தே தருமமுரைக்கின்றார், அகத்தே வஞ்சனைகொண்டிருக்கின்றார்; வாயினா லினிய மொழி மொழிகின்றார், செயலால் கொடியராகின்றார் ஆகிலும், நீ கசடற்ற மனத்தினளாதலால், களவினித்தன்மையனென்பதை யறிந்திலை போலும்; அதனால், நீ இவ்வண்ணம் வஞ்சனைசெய்யப்பட்டவளாயினை; உனக்குக் கேடுசெய்யு மினிய மொழிகளாலே உன்னை யுடன்படுத்திச் செல்வப் பெருமைதனைக் கோசலைபாலாக்கிவிடப்போகின்றார் உன் கணவர்; இந்த எண்ணத்தினாலேதான் உன்னருமைப் பிள்ளையாகிய பரதனை அம்மான் வீட்டுக்கு முன்னமே யோட்டி விட்டனர். நீ மடப்பெண்ணாதலால், பகையென்றறியாமல் கணவனென்று நம்பிப் பாம்பினைப்போல மடியிலேற்றுவித்துக் கொண்டனையே யன்றித் தூக்கவில்லை; பகைவரா யாயினும், பாம்பையாயினும், வேரோடு களையாமல் வளர்த்தால் அவர்கள் வளர்த்தவனுக்கு யாது செய்வர்களோ? அஃது உன் கணவனால் அருமையாக ஒரு பிள்ளையைப் பெற்று வைத்திருக்கின்ற உனக்கு நேர்ந்தது. தாம் செய்யும் தீச்செயலை உனக்குத் தோன்றாத வண்ணம் மறைத்து, உனக்குப் பொய்ம்மொழிகளை இனிதுரைத்து ஸ்ரீராமபிரானுக்கபிஷேகஞ்செய்கின்ற ராஜனால் நீ உன் இனத்தாரோடு வஞ்சனைசெய்யப்பட்டவளாயினை;

ஆதலால், கைகேயி காரியம் முந்துவதற்கு முன்னமே தக்கவாறு உனக்கு இதத்தைத் தேடிக்கொள்ளக் கடவை அதனால், உன் பிள்ளையையும், உன்னையும் பாதுகாத்துக்கொள்பவளாவா யென இவ்வகையாக உரைத்தனள். மந்தரை உரைசெய்யக் கேட்டும், கைகேயி மனம் சிறிதும் வேறுபாட்டைப் படாமல் பெருமகிழ்வுகொண்டவளாய்ப் படுக்கையினின்று பொருக்கென வெழுந்திருந்து, கூதிர்ப்பருவத்தில் எழுந்த தும்பை வெண்பிறைபோலக் களங்கமற்றவளாய், மங்கலமொழி யுரைத்தனளே யெனப் பெருமகிழ்வெய்தி, மந்தரைக்கு ஓர் பொன்னணியைப் பரிசாகக்கொடுத்து மந்தரையை நோக்கி,—

ఇదంతుమంథరేమహ్య మాఖ్యాసిపరమప్రియం
ఏతన్మే ప్రియమాఖ్యాతః కింవాభూయఃకరోమితే
రామేవాభరతేవాహం విశేషంనోపలక్షయే
తస్మాత్తుష్టాస్మియద్రాజా రామంరాజ్యేభిషేక్ష్యతి

*இதந்துமந்தரேமஹ்ய மாக்யாஸிபரமம்ப்ரியம*
*ஏதன்மேப்ரியமாக்யாத: கிம்வாபூய:கரோமிதே*
*ராமேவாபரதேவாஹம விசேஷம்நோபலக்ஷயே*
*தஸ்மாத்துஷ்டாஸ்மியத்ராஜாராமம் ராஜ்யேபிஷேக்ஷ்யதி.*

அடி மந்தரை! ஸ்ரீரகுகுலதிலகனுக்குப் பட்டாபிஷேகமாவதை எனக்குப் பிரியமன்றெனக் கருதுதுக் கொண்டாயே, அவ்வண்ணம் எண்ணற்க, எண்ணற்க, எனக்கு மிகுதியும் களிப்பைப்பெருக்குகின்ற இம்மங்கலச் செய்தியை நீ கூறினை யாதலால், உனக்கு மற்றும் வேண்டுவதை யெல்லாம் தருவேன்; கேட்டுக்கொள், அடி கூனி! ஸ்ரீராமனென்றும், பரதனென்றும், அவ்விரண்டு சிறுவர்களில் எனக்கு வேற்றுமை யுண்டோ? யான் ஒருக்காலும் அவ்விருவரினும் வேறுபாடு கொள்ளேன், ஆதலின் சக்கரவர்த்தியார் ஸ்ரீரகுநாயகனுக்கு அபிஷேகஞ் செய்ய முயல்கின்றாரெனபதனால், யான் மிகுதியும் மகிழ்ச்சி கொண்டவளாகினேன்; அன்றியும், எனக்கு இதனைப் பார்க்கினும் வேறு பிரியமுள்ளது, இதுவரையும் உண்டாகியது மில்லை, இனி உண்டாகப் போகிறது மில்லை, ஆகையால், மிகுதியும் பேருவகை தரத்தக்க இந்நன்மொழியை நீ கூறினமையால், உனக்கு வேண்டுவன வற்றைத் தருவேன், விரும்பிக் கேட்டுக்கொள்ளென மகிழ்ந்து மொழிந்தனள்.

அயோத்தியாகாண்டத்தில் ஏழாவது சருக்கம்
முற்றிற்று.

---

* சர்வஸ்வாமியாகிய ஸ்ரீரகுநாயகர் யாவர்க்கும் இனியராக இருக்க, மந்தரைக்குமாத்திரம் அப்பெருமான்மேல் பொறாமையுண்டாவதற்குக் காரணமென்னெனில்,*

# எட்டாவது சருக்கம்.

மந்தரை கைகேயியை வேற்றுமை யுண்டாகச் செய்கின்றது.

அநந்தரம் மந்தரை கைகேயி கொடுத்த ஆபரணத்தையும், கையிற் கொள்ளா தெறிந்து விட்டு, நான் சொல்லிய நலந்தருவதாகிய மொழியை ஏற்றுக்கொள்ளவில்லை யென்பதனால், கோபத்தையும், ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகமாகிவிடின் இவளுக்குக் கௌசல்யா தேவியினால், இகழ்வு வருமென்னும் பயன்பற கருத்தினால், துயரத்தையும் அடைந்து, கைகேயியை நோக்கி, அந்தோ? இஃதென்ன வியப்பு? கேடுவருங்காலையில் மகிழ்வு கொண் டிருக்கின்றனையே, நீ மதியற்றவளாதலால், துயரக்கடலில் மூழ்கியிருப்பதையுந் தெரிந்து கொள்ளவில்லையே, ஆதலால், நானதனை அறிந்து துயரமுற்று, நீ இதனை அறியாவிடினும், சொன்னாலும் கேட்டுணர்ந்து கொள்ள வில்லையே யென்ன என் மனத்தில் உன்னை இகழ்ந்து பரிகாசஞ் செய்கின்றேன் துன்பம் நேரிடுங் காலையிலும், நீ மகிழ்ந்திருப்பதைக் கண்டு மிகுதியும் வருந்து கின்றேன், அந்தோ! இக்காலத்திலும் மதியுள்ள பெண் மகிழ்வளோ? தருமகுணமுள்ளவர்களும் பகைவனிடத்திற கருணைசெய்வரோ? ஸ்ரீராமபிரான் நற்குணமுள்ளவனென்ன நீ நினைத்தாலும், அவன் சக்களத்தி பிள்ளையாதலால், உனக்குப் பகைவனல்லனோ? அவனுக்கு *அபிஷேகமாவதை யறிந்தும், நீ மகிழ்வதாகுமோ? மேலும் ஸ்ரீராமனுக்கு நேரிளையவன் பரதனாதலால், பரதன் ஒருகாலத்தில் தான்

* சர்வாந்தர்யாமியாகிய ஸ்ரீராமபிரானார் பட்டாபிஷேகங்கொண்டு திருவயோத்தியிலே தானே அரசுசெய்துகொண்டு இருப்பாராயின், இராவணாதியர்களைக் கொலைசெய்வது இயையாதென்று தேவர்களொன்றுசேர்ந்து யோசனைசெய்து, நாமகளை ஏவி, மந்தரையும் ஸ்ரீராமபிரானாரிடத்தில் பேரன்புடையவளாயினும், அவள் மனத்தை வேறுபடுத்தி அபிஷேகத்துக்கு இடையூறு செய்து, ஸ்ரீரகுநாயகரைக் கானகமுறுவித்து, முறையே அரக்கர்களைக் கொல்வித்துத் தாங்கள் வழிபாடுசெய்து வேண்டிக்கொண்டு, இவ்விறைவனை அவதாரஞ் செய்வித்த பயனை முடிவித்துக் கொள்வதற்காக, விண்ணவர்கள் இவ்வண்ணஞ் செய்வித்தார்களென்ன வேறு வைதிக நூல்களில் இருப்பதை இங்குணர்ந்துகொள்ளுக. இக்கவிஞர் பெருமான் பிரமன் முதலிய விண்ணவருலகங்களுக்குச் செய்தருளிய இராமாயணங்களில் சரித்திரத்தில் ஒரு சிறிதும் ஒழியாது அருளிச்செய்தவராயினும், இந்த ஸ்ரீமத்ராமாயணத்தில் தேவரகசியமாகிய செய்திகளைப் பல விடத்தும் வாய்ப்பக் கூறாமல், அக்கருத்தினை மொழியினாலாயினும், பொருளினாலாயினும், முன்பின் தொடர்ச்சியினாலாயினும், ஆங்காங்குக் குறிப்பித்திருக்கின்றனர். இங்கும் சருக்கத்தின் முதலில் (யதோஜாதா) என்பதனாலும், (யத்ருச்சயா) என்பதனாலும், இக்கருத்துக் குறிப்பிக்கப்பட் டிருக்கின்றது. (யதோஜாதா) என்பதனால், ஸ்ரீராமபிரான்மேல் சினங்கொள்வதற்கு, இங்கு யாதொரு பற்றும் அற்றவளெனவும் (யத்ருச்சயா) என்பதனால், அது தெய்வச்செயலாலன்றி, இவளது செயலாலன்றெனவுங் கருத்தாகின்றது.

அரசனாவதற்காகத் தீங்கு நினைப்பானெனக் கருதி, ஸ்ரீராமனும் பரத னிடத்தில் அச்சந்தோன்றிப் பரதனைக் கெடுக்கவே முயற்சி செய்வா னன்றோ? தனனைக் கண்டு பயங்கொண்டவரிடத்தினின்றுந் தனக்கும் பயம்வருதலன்றோ உலகவழக்கம்; இலக்ஷ்மணன் ஸ்ரீராமசந்திரனுடைய சொல்லுக்கு வேறுபட்டு நடவாதாதலாலும், சத்துருக்கனன் பரதன சென்றவழி செல்லுந் தன்மையனாதலாலும், அவ்விருவரிடத்தும் ஸ்ரீராம பத்திரனுக்கு அஞ்சுதலில்லை; மேலும் அவ்விருவரும் பரதனினும் சிறுவ ராகையாலும், ஸ்ரீராமனுக்குப்பின் பரதனே பட்டத்துக் குரியவ னாகையாலும், ஸ்ரீராமனும் அரசுமுறை அறிந்தவனும், காலத்துக்குத் தக்கபடி நடப்பவனு மாதலாலும், பரதனுக்கே பொல்லாங்கு செய்வா னென்று கருதி, மிகுதியும் வருந்துகின்றேன்; கௌசலையன்றோ நல்வினை செய்தவள், நினக்குச் சக்களத்தியாகிய கௌஸலை மகன் நாளைத்தினம பூசநட்சத்திரத்தில் யுவராஜ பட்டாபிஷேகங் கொள்ளப் போகின்றான பின்பு சக்களத்திக்கே நீயும் தாதிபோலப் பணிசெய்யவேண்டும், இங்ஙன மாயின நாங்களும் உனக்குப் பணிவிடை செய்வது தவிர்ந்து, நீயும் எங்களுடன் கூடி, அவளுக்கல்லவோ கைக்கட்டி வாய்பொத்தி நின்று குறறேவல்கள் செய்யவேண்டும், உன் பிள்ளையும் சக்களத்தி பிள்ளைக் கன்றோ சேடன்போலப் பணிசெய்வான; இவவண்ணமாயின், ஸ்ரீராம னைச் சேர்ந்த சீதை முதலிய பெண்களும் இது கண்டு மகிழ்வுற்றுப் பரிகாசஞ் செய்வார்களே; பரதன இவவண்ணம அவ திப படைந்த பின்னா உன மருமக்கள முதலானோர் மகிழ்வெனபது சிறிதுமின்றி, மனக்கவலைகொண்டு வருந்துவாகளோ என்றிவவகையாக மொழிந்தனள இங்ஙனம் மனக்கலக்க முறும்படி மொழிந்த கொடிய மந்தரையினது குறளைச் சொறகளைக் கைகேயி செவியுற்றும் உள்ளம் வேற்றுமை கொள்ளாமல், சக்கரவாத்தித் திருமகனுருடைய குணங்களையே கருதிக் கருதிப் பெருமகிழ்வெய்தி, மந்தரையை நோக்கி, அடி கூனி! நீ ஸ்ரீராம னுடைய நறகுணங்களை உணராமையால், வாளா இவவாறுரைக்கின்றனை, ஸ்ரீரகுகுலதிலக னொருககாலும் எனக்காயினும், பரதனுக காயினுந் தீங்கு நினையான்; ஸ்ரீராமன் தருமமுணர்ந்தவன், ஆசிரியர்களால நல் லொழுக்கத்தில் நன்குபயின்றவன், நனறிமறவாதவன், எக்காலத்தும் பொய்ம்மைமொழி யுரையான்; கசடற்றவன், அன்றியும், இவன் வேந்த னுக்குத் தலைமையாகிய புதல்வனாதலால், இவனே யுவராஜனாவதற குரி யனேயன்றி, பரதன் இதற்குரியனல்லனே? மேலும் ஸ்ரீராமன் நிறைவுள்ள ஆயுளுண்டயானாய், உடன் பிறந்தோர்களையும், அடியார் களையும், தந்தை போலப் பாதுகாப்பானே அல்லாமல், தீங்குசெய்யக் கருதவே கருதான்; அடி கூனி! இத்தன்மையனாகிய கௌஸல்யை திருக்குமாரனுக்கு அபிஷேகமென்னுமொரு செய்தி கேட்டு, மகிழாது ஏன வருந்துகின்றனை?

நூறுண்டான பின்னர் ஸ்ரீராமசந்திரனுக்குப் பின்பு பரதன் பட்டத்துக்
குரியவனுவான்; ஆதலால் ஸ்ரீராமசந்திரனுக்கு நடக்கும் அபிஷேகமென்
பதோ எங்களுக்குத் திருவிழாப் போலவும், திருமணம் போலவும் மகி
ழ்ந்து கொண்டாடத்தக்கதே யல்லது, துன்புறத்தக்கதன்றே, எனக்குப்
பரதன் எத்தன்மையனே? ஸ்ரீராமன் அப்பரதனினும் பதின்மடங்கு
மிகுதியாக மகிழ்ந்தன்பு செய்யுந் தன்மையன், ஏனென்று கேட்பாயோ?
அவன் கௌஸலியைக்குச் செய்வதினும் பதின்மடங்கு என்னை மதித்துப்
பணிசெய்கின்றானே, நீ கண்ணாரக்கண்டுணரவில்லையா? அரசுரிமை
ஸ்ரீராமபிரானுக்கு வருமாயின் அப்பொழுதே அது பரதனுக்கும் உரிய
தன்றோ? ஸ்ரீராமசந்திரன் தன்னை எண்ணுவது போலவே உடன் பிறந்த
வர்களையும் எண்ணுபவனன்றோ? என்றிவ்வண்ணம் புகழ்ந்துரைசெய்த
னள். மந்தரை இம்மொழியைக்கேட்டு மிக வருந்தி, வெப்பமாக நெடு
மூச்செறிந்து கைகேயியை நோக்கி, என் அம்மனையாகிய கைகேயி! நீ மடத்
தன்மையால் இதத்தை யாராய்ந்துணராமல் கெடுவதையே நன்குமதித்து
உன் நலத்தையும் நீ உணராதிருக்கின்றாய், கெடுமதிகண்ணுக்குத்
தோன்றுதன்றோ? பரதனுக்கு இனி வரும் தீங்கினால் விளையும் துயரத்
தாலும், நினக்கின்பமின்மையாலும், சக்களத்தியாகிய கௌஸலியைக்கு
நீ குற்றேவல் இனிச்செய்யும் கொடிதாகிய துன்பமென்னும் பெருங்கடலில்
வீழ்ந்தழுந்தி அழிகின்றனையே, அடி கைகேயி! கௌஸலியை புத்திரன்
அரசனாகின்றான். உன் செல்வமைந்தனோ? அவனுக்கு அடிமையாவான்,
ஸ்ரீராமசந்திரனுக்குப் பின்பு அவனுக்குப் பிறக்கும் மகன் அரசுரிமை
பெறுவானே அல்லது, உன் பெறலரிய மைந்தன் பெறுவானோ? ஆத
லால். பரதன் அரசுரிமை பெறானாயின் நகரத்தினின்றும் அரணியத்தில்
துரத்திவிடப்படுவானே, அரசனுக்குப் பல பிள்ளைகளிருக்கினும் யாவரை
யும் அரசுக் குரியராகச் செய்வதில்லையே, எல்லோருக்கும் பட்டங்கொடு
த்தால் ஒருவரோடொருவர் ஒருமைப்படாமல் நீதிகெட்டு நகரத்தை
யழித்துவிடுவார்களெனக் கருதி, முதற் புதல்வனுக்கே பட்டங்கட்டுவது
வழக்கமல்லவா? மற்ற பிள்ளைகள் திறமையுள்ளவர்களாயினும், அவர்
களுக்குப் பட்டங்கட்டுவதில்லை யென்பதை உணராயோ? ஆகையால்,
உன்பிள்ளை மிகுதியும் இகழவுற்றவனுவான்: அதுபற்றி நான் இதனை
முன்னுணர்ந்து வருத்தமுற்று, உனக்கு நன்மைக்காகவே யான் இங்கு
வந்து முன்னதாகத் தெரிவித்தேன்; இந்நலத்தை நீ யறிந்து கொள்ளா
மல் மதிமயங்கி என்னையும், என் மொழியையும், இகழ்கின்றனை, உன்
சக்களத்திக்குப் பெருமைவருவதைக் கேட்டும், நீ எனக்கு வெகுமதி
செய்வது எத்தன்மையது; சக்கரவர்த்தித் திருமகன் ராஜியத்தை யடை
ந்தவுடன் பரதனைக் கொலைபுரிவான், அஃதல்லாவிடின் துரத்திவிடுவா
னென்பதில் ஐயமேயில்லை,—

బాలఏవహిమాతుల్యం భరతో నాయితస్త్వయా
సన్నికర్షాచ్చ సౌహార్దం జాయతేస్థావరేష్వపి

பாலஏவஹிமாதுலயம ப்ரதோநாயிதஸதவயா
ஸந்நிகாஷாசசஸௌஹாா்தம ஜாயதேஸதாவரேஷ்வபி,

அன்றியும், நீ பரதன் சிறியனு யிருக்கும் காலையிலேயே அம்மானகத்திற்குச் செல்ல விடுத்தாய், எதிரிலிருந்தால்தான மரஙகளினிடத்தும் நட்புண்டாகின்றது; மறைவிலிருப்பவர்களிடத்து நட்புளதாகாதனறே? சத்துருக்கனனுயினும இங்கிருப்பானுயின், அவனைப் பற்றியாவது அரசனுககுப் பரதன்மீதன்புநிலை பெற்றிருக்கும், அவனும் பரதனுடன் போய்விட்டானே, லக்ஷ்மணன் இஙகிருப்பதனுல், ஸ்ரீராமனுககு அடஙகி இருக்கும் அவனும ஸ்ரீகோதண்டராமனுககே உதவியாவான.—

శ్రూయతేహి ద్రుమః కశ్చి చ్ఛేత్తవ్యో వనజీవిభిః
సన్నికర్షాదిషీకాభి ర్మోచితః పరమాద్భయాత్

சரூயதேஹிதருமஃகசசிச சேததவயோவனஜீவிபிஃ
ஸனனிகாஷாதிஷிகாபிர்மோ சிதஃபரமாதபயாத.

காட்டில் கட்டை வெட்டுபவாகள் ஒரு மரத்தைககண்டு வெட்ட வந்தாலும, அதனைச சுற்றி யிருக்கின்ற முளைகளா முதலியவற்றுல் உட்புககூடாத புதாகளா அம்மரத்தை வெட்ட வொட்டாமல் காபபாற்றுகின்றனவெனறு கேட்டிருககினறே மனறே? ஆதலால், ஸ்ரீராமலக்ஷ்மணாகளிருவரும் ஒருவரை யொருவர் பாதுகாததுககொண்டு நட்புடையார்களாய் அச்சுவினி தேவர்களா போல இணைபிரியா திருககினருர்களெனபது உலகமெங்கும் தெரிந்ததனறே? அஙஙனம் இணைபிரியாத லக்ஷ்மணனமீது ஸ்ரீராமன ஒருகாலத்தும தீங்கு செய்ய நினையான, பரதன்மீது தீங்குசெயய நினைபபானென்பதில் ஐயமேயில்லை யனறே? ஆதலால், ஸ்ரீராமனுக்குப் பட்டமாகும் பட்சத்தில் உனபிளளை இந்நாட்டைத் துறநது காட்டிற் சென்று உறைவது நலமென்று எனக்குத் தோற்றுகின்றது, இஙஙனமாயின உன் சக்களத்தியைச் சோநதவர்களுக் கெல்லாம் நன்மை பெருகுகின்றது; பரதன் தந்தை கட்டளையினுல் அபிஷேகங்கொண்டு நகரத்துரிமையை யடைவானுயின் உனனைச் சோந்தவாகளுக் கெல்லாம் பெருமகிழ்வு சிறக்கும்; உன அருந்தவச் செலவனுகிய பரதன் ஸ்ரீராமனுக்கு இயற்கைப் பகைஞனு யிருந்து ஸ்ரீராமன் பட்டங்கட்டிககொண்டு மகிழ்ந் திருப்பதைக் கண்ணுற்று எவ்வண்ணம் உயிருய்ந் திருப்

பானே! கானகத்தில் சிங்கத்தா லெதிர்க்கப்பட்ட மதயானைபோலக் கௌச ல்யா தேவித் திருக்குமாரனால் பிடிக்கப்படும் பரதாழ்வானை முன்னதாக நீயு எடுத்துப் பாதுகாத்திடாய்; நீ முன்பெல்லாம் மிக்க கட்டழகுடை யோமெனச் செருக்குக்கொண்டு கௌசலியையை மதிககாமல் அரசனை நினவசஞ் செய்துகொண்டு, அவளை அவமதித்தனையே அப்பகையை அவள் இபபொழுது "காறறுளளபோதே தூற்றிக்கொளளறபடி" பரத னுக்குத் தீங்குசெயவித்துத் தீரத்துக்கொளளாமல் விடுவளோ? அலை கடல மலை காடு நாடு நகரங்களடங்கிய இப்பூமிக்கு ஸ்ரீராமன எப்பொ ழுது அரசனுகின்ருனே? அப்பொழுதே நீ பரதனேடும், உனனைச் சார்ந் தவாகளோடும், நீ மிகுதியும் யாவராலும் இகழபபட்டு நனகுமதிப்பை யிழப்பாயென்பதில் சிறிதேனும் ஐயப்பாடுளதோ? ஆகையால் ஸ்ரீராமன அரசுரிமையைப் பெற்றுப பரதனைக் கெடுபபதற்கு முன்னமே உன செல்வப்புதல்வனை யுவராஜனுகவும், ஸ்ரீராமனே காட்டுககுப்போகவும், தக்கவாறு யோசனைசெயது பகையைக களைந்து மகிழநது வாழவடையக் கடவை யெனறு மொழிந்து அறிவுமயங்கச செயதனள.

அயோத்தியாகாண்டததில எட்டாவது சருககம

முற்றிறறு

---

இச்சருககததில (ஹ்ருஷ்டா:கலுபவிஷயநதிராமஸய பரமாஸஸதிரியஃ) என றும், சுநதரகாணடததில (ஸதரீபிசசமனயே விபுலேக்ஷணபி:) எனறும், உயுதத காணடததில (புஜை:பரமநாரீணம) எனறும, உததரகாணடததில (மாதரசசைவ ஸா வாமேகுமாராஸஸதரீகணுநிச) எனறும இருபபதினலே, சககரவாததித திருககுமார னுகிய ஸாமிககுச சீதாபிராட்டியாரோடு மறறும பல மனைவிகளுளரொனறு தோறறு கினறது, ஆகையாலே பிராட்டியாரைக காடடில விட்டிருககுங காலேயிலும, அசுவமேதயாகஞ செயதாரொனபது இதறகு இசைகினறது, ஸவாமிககுப பிரா ட்டியாராகிய சீதையொருவரோ மனைவியாரொனபதும, யாகஞ செயவதறகாகச சீதா பிராட்டியாககுப பதிலாகத தஙகததால செயவிததுககொணடதும, பிராட்டியாரிட ததிலேயே ஸவாமிககு மிக்க காதல இருபபதைப்பறறி, யெனச சிலா கருததுக கொளளுகினறனா. இங்கு (ஸதிய:) எனபதறகுச சீதை முதலிய மனைவிகளெனபது பொருளனறு, மறறுந தாதிகள் சேடிகள முதலிய எல்லாப பெணகளு மெனபதே பொருள். சுநதரகாணடத்திலும, பிராட்டியாருடைய வாககிய மாதலால, தானிங்கு இலங்கையில சிறையிருக்கினறமையால, ஸவாமியாகிய ஸ்ரீராமபிரான வனவாசந தீரநது, அயோததிக்குச் சென்று, அபிஷேகஙகொணடு பல ராஜகுமாரிகளைத திரு மணஞ் செயதுகொண்டு எனனை மறநது இன்பக்கடலில் மூழகி யிருபபாரொனறு தாம் கருததில கொண்டுரைதத வாக்கியமாதலால், அக்கருதது உணமையனறு; உயுத்தகாணடத்திலும, வால்மீகிபகவான, ஸ்ரீராமபிரான் ஸ்ரீமநநாராயணனே யென் றறிந்த அம்முனிவர், ஸ்வாமி தர்ப்பசயனத்தில படுத்திருநத நிலையைப் பிரமன் வரத தால் கட்புலனுகியதுபோல உணர்நது, ஸ்ரீபூமி நீளாதேவிகளின திருத்தோள்களால

## ஒன்பதாவது சருக்கம்

### திருமுடிசூட்டுதலைக் கலைப்பதற்காக மந்தரை கைகேயிக்குத் தசரதர் கொடுத்திருந்த இரண்டு வரங்களை எடுத்துரைத்தது.

இவ்வண்ணம் மந்தரை உரைத்த வார்த்தையைக் கைகேயி கேட்டு நல்லறிவு மயங்கி, அஃதுண்மையென்னக் கருதிக் கடுஞ்சினத்தால் முகஞ் சிவப்புற்று, வெப்பமாக நெட்டுயிர்ப்பெறிந்து, கூனியை நோக்கி, அடி கூனி! நீ யுரைசெய்தன யாவும் உண்மைதான்; யான் இப்பொழுதே ஸ்ரீராமன் திருமுடி பெறாக்காமல் காட்டுக்குச் செல்லும் வண்ணமும், என் அருந்தவக் காதலனாகிய பரதன் திருமுடி பெற்றுக்கொண்டு அரசுசெய்யும் வண்ணமும் செய்கின்றேன்; இவ்வாறு அரசன் தவறாமல் உடன்படும் வகையாதுளது? அதனை நீ நன்காராய்ந்து உரைசெய்வாயாகவென வினவினள்.

தழுவி யனுபவிக்கப்பட்டவனும், அனைத்துலகங்களுக்கும் ஆதியாகி, சகல லோகங்களாலும் தஞ்சமென்றடையப் பட்டவனுமாகிய ஸ்ரீமந்நாராயணனே கபடநாடக சூத்திரதாரனாகிச் சக்கரவாத்தித் திருமகனாக அவதாரஞ்செய்து, தன் தெய்வத்தன்மையை மறைத்து எளியாரைப்போல இக்கட்டிற்கட்டுள் அருளை விரும்பித் திருப்புல்லாணியில் படுத்திருக்கின்றானேயென்று வியந்து மகிழ்ந்தருளிச்செய்த வாக்கியமாகையால் அதனால் ஸ்ரீராமனுக்குப் பல தேவியரொன்னுங் கருத்து வெளிப்பட விளங்காது, உத்தரகாண்டத்திலும், ஸ்ரீராமன் சீதாபிராட்டியாரைக் காட்டில் விட்டுவிட்டபடியால், தமக்கும் பிள்ளையில்லாமையால் (குமாரா:) என்பதற்குப் பரதாதிகளின் குமாரர்களென்றே பொருள் கூறவேண்டுமாதலால், அதற்கு மேலிருக்கின்ற (ஸ்திரீகணாஃ) என்கிற பதத்திற்கும், பரதாதிகளுடைய மனைவிகளென்பதே பொருளாகவேண்டும், தங்கத்தால் பிராட்டியைச் செய்துகொண்டமையால், ஸ்ரீராமன் சீதாபிராட்டியாரைக் காட்டில் விட்டபொழுதும் யாகஞ்செய்வதற்குத் தடையில்லை, ஆதலால் ஸ்ரீராமனுக்குச் சீதாபிராட்டியா ரொருவரே மனைவியாரன்றி, வேறொருவரும் இல்லையென்று சிலர் சமாதானம் கூறுகின்றனர். எமது கருத்திற்கும் சக்கரவாத்தித் திருமகனுக்குச் சீதாபிராட்டியார் ஒருவரே மனைவியாரென்பது இசையும், ஸ்ரீராமபிரானுக்கு வேறு மனைவிகளிருக்கையிலும் சீதாபிராட்டியாரிடத்தே காதல் மிகுதியுமுள்ளதெனில், அந்தரென்றுவது, சட்டென்றுவது இகழவுவரும், அன்றியும், ஸ்ரீராமசந்திரன் சீதாதேவியாரிடத்து வைத்த காதலால், தங்கச்சீதை செய்துகொண்டாரெனின், முன்பே செய்திருக்கவேண்டும், யாகஞ்செய்யத் தொடங்கும்போது செய்துகொண்டதினால், வேறு மனைவிகளில்லையென்றல் ஒரு சிறிதும் ஒவ்வாது, இக்கருத்தினையே பவபூதிமஹாகவி உத்தரராமசரித நாடகத்தில் (அநுபாசரிதோனயயாராம பாஹுரூபதானமேஷதே) எனும் சுலோகத்தாலும் (வாஸந்தி + பரிணீதமபி) (ஆத்ரேயீ + கஹிகஹி-ஹிரண்மயீ ஸீதா ப்ரதிக்ருதி:) எனும் வினாவிடைகளாலும் வெளிப்பட உரைத்திருக்கின்றனர்; இக்கருத்து ஸ்ரீமத் ராமாயணத்திலேயே பலவிடங்களில் நன்றாக விளங்குகின்றது, இங்கு எடுத்துரைக்கின் விரியுமாதலின் உரையாதொழிந்தனம்.

கூனியும அம்மொழியைச் செவியுற்று, மகிழ்ந்து கேகயன் புதல்வியை நோக்கி, கேகயி! இப்பொழுது மதிமயக்கமற்று உறுதியுணர்ந்து வினவு கின்றமையால், அதற்கு விடை யுரைக்கின்றேன்; முன்பு நடந்த செய்தியை நீ மறந்தனையோ? அறிந்திருந்தும் மறைக்கின்றனையோ? முன்பு நீயே எனக் கதனை உரைத்திருக்கையில், இப்போது அதனை யான் சொல்லிக் கேட் டுணர என விரும்புகின்றனை? யான் உரைக்க, நீ கேட்கவேண்டுமென்று உனக்கு விருப்பமிருக்கினுமாசெய்கின்றேன்; கேட்டுணர்ந் தாராய்வாயாக வென உரைக்கக்கேட்டு, பஞ்சியணையினின்றும் பொருக்கென வெழுந்து, அடி தோழி! பரதன் அரசுசெய்யவும், கௌசலியாதேவி மைந்தன் அரசிழ ந்து கானகத்துக் கேகவும் செய்ய ஒருபாயமும் எனக்குத் தோற்றவில்லையே; அதனை நீயே உரைத்தறிவியாயென வேண்டிக்கொள்ள, கூனி மீளவும் கைகேயியை நோக்கி, என் அரசி கைகேயி! முன்பொருகால் தேவாசுர யுத் தத்தில் விண்ணவரரசனுக்கு உதவி செய்யும் பொருட்டு உன் கணவர் உன் னையும் உடன்கொண்டு அநேக ராஜரிஷிகளுடன் தென்றிசையில் தண்டகா ரணியத்தில் திமித்துவஜனெனவும், சம்பரனெனவும் பெயர்பெற்றுப் பற் பல மாயைகள் செய்து, தேவகணங்களால் வெல்லவொண்ணுமல் இந்திர னுடன் போர் செய்துகொண்டிருந்த வைஜயந்தமெனனும் அவ்வசுரனது பட்டணஞ்சென்று, அத்தானவர்களுடன் நெடுநாள் போர்செய்தனர். அப் பொழுது இராக்காலத்தில் படைவீரர்கள் துயின்றுகொண் டிருக்கும் காலே யில், நிசாசரர் வந்து வீழ்ந்து கொலைசெய்வார்கள். அவ்வகைப்பட்ட கொடியவர்களாகிய அவ்வரக்கர்களோடு உன் கணவர் வெகுளிகொண்டு அவர்களைப் போரில் சஸ்திராஸ்திரங்களால் துணித்துக் கொலைசெய்து, தாமும் அவர்களுடைய கொடியபடைகளால் சிதறுண்டு, மூர்ச்சை யடைந் தனர். அப்பொழுதும் தருமந்தப்பி அசுரர்கள் பற்பல ஆயுதங்களை எய்ய, அவற்றை உன் கொழுநர் மீது படவொட்டாமல் தடுத்து, இவரைப் பாது காத்து மோகந்தீர உபசாரஞ் செய்தனை; உன் கணவரும் உடனே மயக்கந் தீர்ந்தெழுந்து, நீ செய்த பேருதவிக்குப் பேரவுவந்து, உன்னை நோக்கி, என் பிராணநாயகி! யான் உனக் கிரண்டு வரமளிப்பேன்; அதனை நீ கேட் டுக் கொள்ளென்றுரைத்தனர். அதற்கு நீயும் அவரை நோக்கிப் பிராண நாதரே! இவ்விரண்டு வரங்களையும், எனக்கெப்பொழுது வேண்டுமோ அப்பொழுது கேட்டுக்கொள்வேன்; அக்காலத்தில் அவற்றைத் தடையின்றி, நீர் கொடுத்தருளவேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கு, மன்னவரும் அதற்குடன்பட்டு அங்ஙனமே செய்வேனென வுஞ்சினங் கூறினார்.

இச்செய்தியை யான் அறிந்திலேனாயினும், நீயே எனனுடன் மொழிந் தனை; இதனை நீ மறந்து விடினும், உன்னிடத்து யான் வைத்துள்ள பேரன் பால் இதனை மறவாது நினைவில் வைத்திருந்தேன்; ஆதலால் இவ்விரண்டு வரங்களையும் தருமபடி உயிர்த்துணைவரைக் கேட்டு முன்னே உறுதிசெய்து

கொண்டு, பின்பு ஒருவரம் பரதனுக்குத் திருமுடி சூட்டவேண்டுமென்றும், மற்றொன்று ஸ்ரீராமன் பதினான்குவருஷம் வனவாசஞ் செய்யவேண்டுமென்றும், கடையில் வாய்விட்டுரைசெய்வாயாக; பதினான்குவருடம் ஸ்ரீராமன் வனத்துக்குப் போய்விட்டாலன்றோ, நாடு நகரத்தோரெல்லோரும் ஸ்ரீகோதண்டராமனை மறந்து விட்டுப் பரதனது நற்குணங்களைக் கண்டு பரதனிடத்தே மிகுதியும் அன்புகூர்ந் திருப்பார்கள். அதன்மேல் உன் பிள்ளைக்கு அரசுரிமை உறுதியாய் நிலைத்துவிடும், ஆதலின் நீ இப்பொழுதே பின்க்கு வருங் காலையில் உறையும் அறைவிற்சென்று அணிகளைக் களைந்தெறிந்து, அழுக்காடைதரித்து, நறுமலர்ப்பணையைத் தள்ளித் தரையிலேதானே பிணக் குடையாள் போலப் படுத்திருக்கக் கடவை. உன் கணவர் அருகிலவந்து யாது கூறினும், அவரை நீ முகமெடுத்து நோக்கவேண்டாம்; விடைமொழிகளுமுறை செய்யவேண்டாம்; அவரைக் கண்ணுற்றபோதினும், கண்ணீர் பெருக்கி அழுது புழுதியில் புரண்டு துன்புற்று இருக்கக் கடவை. சக்கரவாத்திக்கு நீ மிக்க பிரியமுள்ள காதலியாதலால், உன்பொருட்டு நெருப்பில் விழச்சொல்லினும், அவர் வீழ்ந்து விடுவரென்பதில் ஐயமில்லை, உன்னைச் சினங்கொள்ளுமபடி செய்யவும், நீ சினங்கொள்ளுங்காலையில், அதைத் தணிக்காமல் உன்னை எதிர்த்துப் பார்க்கவும் அவர் மனந் துணியமாட்டாது, அவர் உயிரைவிடுவது உனக்கு விருப்பமாயின், அதையும் விடுவாரென்பதை யான் சொல்லவும் வேண்டுமோ?

న హ్యతిక్రమితుం శక్త స్తవ వాక్యం మహీపతిః
మందస్వభావే బుధ్యస్వ సౌభాగ్యబలమాత్మనః

நஹ்யதிக்ரமிதுமசக்தஸ்தவ வாக்யமமஹீபதிః
மந்தஸ்வபாவேபுத்யஸ்வ ஸௌபாக்யபலமாத்மநః

பேதைமையுள்ள என் பேரரசியே! உன் மொழியை நின்கொழுநர் ஒருகாலத்துந் தவிரமாட்டார், உன் கட்டழகின் வணமையை நீயே ஆராய்ந்துணர்வாயாக; உன் கணவர் உன் நிலையைக் கண்டு உன் சினத்தைத் தணிப்பதற்காக நவரத்தினங்களையும், முத்து வடங்களையும், பொன்னணிகளையும் கொடுப்பார். அவற்றிலோ நீ மனம் சிறிதும் வைக்கவேண்டாம்; முன்பு வானவர்களுக்கும், தானவர்களுக்கும் நடந்த அமரில் அவர் கொடுத்த வரங்களிரண்டையும் நினைப்பூட்டி, அவ்விரண்டு வரங்களையும் இப்போது தரும்படி உறுதி செய்துகொள்; அவரதற்கு உடன்பட்டு அப்படியே ஆகுகவென்று உன்னை யெடுத்து அணைத்து நன்மொழி யுரைக்குங் காலையில், கௌசலையாதேவி குமாரனைப் பதினான்குவருஷம் வனவாசம் போக்கவேண்டுமென்றும், பரதனுக்கு திருமுடிசூட்டவேண்டுமென்றும், இவ்விரண்டு வரங்களையுங் கேட்டுப் பெற்றுக்கொள்ளக் கடவை.—

చతుర్దశహివర్షాణి రామేప్రవ్రాజితేవనం
రూఢశ్చకృతమూలశ్చ శేషంస్థాస్యతితేసుతః

சதுர்தசஹிவர்ஷாணி ராமேப்ரவ்ராஜிதேவநம
ரூடச்சக்ருதமூலச்சசேஷம ஸ்தாஸ்யதிதேஸுதஃ

பதினான்குவருஷம கௌசலியா குமாரன கானகஞசென்றானாயின உன பிள்ளையினது செங்கோல நகரததில நிலைபெறறு வேரூனறி, ஸ்ரீராமன மீண்டு வந்தானாயினும், வெலலவொண்ணாமல் ஏஙகி நிறக, மறற காலஙகளி லும நிலைத தரசுசெயவா னுதலால, இவவாததை நீ உறுதியாகக கேட்டுக கொளளவேண்டும்; இவவண்ணஞ செயவாயாயின, உன திருமகனுககு விரு பபமெல்லாங்கைககூடும; இஙஙனம ஸ்ரீராமன துரததபபட்டால காடுசேர்நது, துயரடைநது, தனியனாகி, மீணடு எதிரகக வலியில்லா னாகிவிடுவான; உன் செலவப புதலவன் பரதனும, ஸ்ரீராமன வருவதறகுள அரசுரிமையில் நிலை பெறறு, பல பெரியோருடைய துணையுமபெறறு நிலைததுவிடுவான. ஆத லால், இக்காலத்தில சோர்ந்திருபபாயாயின காரியம முநதிவிடு மாதலால், காரியம முறறுபபெறுவதறகு முன நாணமுறாமலும, அசசங்கொளளா மலும, இவவகையாக அரசனிடததில வரமபெறறு, ஸ்ரீராமனது பட்டாபி ஷேகமுயறசியை நிறுததி விடுவாயாக வென றிவவணணம உணாததது முடித தனள. ஓகேகயி இககூனியின மொழி நலநதருவதனறாயினும, நலநதருவ தெனவே தனனுட்கொணடு மகிழவுறறு, அறிவிலலாச சிறுபெண போல வும, பெண்குதிரை போலவும, முறைகெட்ட வழியிறசென்றவளாகி, மிகுநத வியபபடைநது, தாதியை நோககி, அடி கூனி ! இதுவரையும யான உனனை அறிவில சிறந்தவளெனவும், மேல் விளையும விளைவை முன உணாபவ ளெனவும, காலததுககுத் தககவாறு ஆராயசசிசெய துரைப்பவளெனவும், என் பேதைமையால அறிநதிலேன; உலகத்தில கூனிகளே நுண்ணறிவுளள வர்கள, அவர்களுககுளளும் நீயே சிறநதவள; நீதான எபபொழுதும எனக குப பெரும்பேற்றையே கருதுயவள; அடி கூனி ! இதுவரையில யானோ அரசனுடைய எண்ணத்தையும, இராமனுககுத் திருமுடி சூட்டும முயறசி யையும் சிறிதும அறிநதிலேன்; உலகததில கூரறிவில்லாமல், உடலுறுப்பு மட்டும்வளைந்து விகாரவடிவினராயப பலகூனர்களுளா. நீ முளரிமலர்போல வாயுவின் செயலால் வளைநதிருநத போதிலும், பார்ககப பிரியமாயிருககின் றாய்; உன்னுடைய மார்பு தோள்களுடன் பகைகொண்டாறபோல உயாந திருபபதைப் பொறுககாமல, கூனும் தோளளவு முயர்நதிருக்கின்றது, சிறநத காபியுடைய வயிறும, உயர்நத மார்பைக் கண்டு நாணமடைநதது போல இளைத்துள்ளடங்கி யிருக்கின்றது; தொடையினுடபககமும் பருத் திருக்கின்றது; கொங்கைகளும் மிகவும பருத்திருககினறன. உன முகமோ, மாசில்லாத சநதிரன் போன்றது; அடி கூனி! பேரழகுடையாளாய விளங்கு

'இன்றாய; உன்ஜகனமும் ஒட்டியாணசசதங்கைகளால் ஒளிகொண்டு விளங்கு கின்றது; கணைகால்களும் மிகுதியும இசைநதிருக்கின்றன; இரண்டு காலகளும் நீணடிருக்கின்றன; நீணட தொடைகளுடனகூடி வெண்பட்டுப் புடவையுடுதது என்னெதிரில் செல்லுகையில் அன்னவரசுபோலத தோறறு கின்றனை; சம்பராசுரனிடத்திலுள்ளமாயைகளும, மறறுமுள்ள பறபலமாயை களும் உன்னிடததி லிருககின்றன; சிறந்த பேரறிவுகளும, வஞ்சககல்வி களும், பறபல மாயைகளும் உன நெஞ்சில் நிறைநதிருககின்றமையால் தான உனமார்பு தோநததட்டின முனைபோல மேன்மேலும உயாநதிருக கின்றது. அடீ கூனி! ஸ்ரீராமன் காட்டுககுசசென்று பரதனுககுப பட்ட மானபினபு உன்மார்புககுச சிறநத சநதிரஹாரமும், மேலுஞ் சிறநத தங் கததை யுருககிசசெய்த அணிகளும, தஙகச்சரிகைகளால் நெயத ரவிக்கை யும பூட்டி, நறுஞ்சாநதும அப்பி, உன்னை மகிழவிப்பேன. உன முகத்திலும தஙகததிலகமிட்டுச சிறநத ஆடை அணிகளையும அளிப்பேன்; அவைகளை யெல்லாம் நீ அணிநதுகொண்டு தெயவகன்னிபோல் உலாவப்போகின்றாய. சந்திரனபோன்ற முகமுடைய நீ இவவாறு சிங்காரஞ்செய்துகொண்டு என மாறறுட்டிகளுக கெதிரில செருக்கோடு குலுககிக குலுககி அடிவைத்து நடக்கப்போகின்றாய; நீ எனககுக காலவருடுவதுபோல உனககும் பல கூனிகள சிறநத ஆடை அணிகளை அணிநது காலவருட்டச செய்கின்றே னென்றிவவகையாகவுரைத்து மநதரையை மகிழ்வித்தனள. மநதரையும் அம்மொழிகேட்டு மகிழநது வேளவிமேடையில தீகொழுநதுபோலச சிறநத மலரணையில படுத்திருககின்ற கைகேயியைநோககிக கைகேயி!

గతోదకే సేతుబంధో నకల్యాణి విధీయతే
ఉత్తిష్ఠ కురు కల్యాణి రాజానమనుదర్శయ

கதோதகே ஸேதுபந்தோ நகல்யாணி விதீயதே
உத்திஷ்ட குருகல்யாணி ராஜாநமநுதர்சய.

கல்யாண முடையவளே! மஙகளமுண்டாகச செய்பவளே! வெள்ளம் சென்றபின, ஆறறில அணைகட்டுவதிற பயனில்லை; நீ பொழுது கழிவு செய்யாமல எழுநது, யான சொல்லியவண்ணம செயது, அரசர்பிரானை எதிர் பார்த்துக்கொண்டிருவென்று மொழிந்தனள. உடனே கைகேயி விரைந் தெழுநது கூனியுடன் சென்று, கோபககுறி யுணர்த்தும, சிறறறையிற் சென்று, சிறநத முததுவடஙகளையும, பறபல பொனமணி அணிகளையும் கழறறி யெறிநது, கூனிமொழிககு வசபபட்டவளாய்த தரையிற படுத்துக் கொண்டு, அடிகூனி! நீ என்னை இவவிடததிலே இறநதவளாகப புரவல னுககு நீ தெரிவிக்கப்போகின்றாய்; அல்லது சககளததி மைநதன கானகஞ் சென்று, என்பிள்ளை அபிஷேகஞ கொளவதையாயினும நீ பார்க்கப்போகின

ருய, எனக்குப பொன்னிலுலும, மணிகளினுலும், அணிகளினுலும் பய னில்லே, ஸ்ரீராமன திருமுடிபெறுவானுயின, அதுவே எனனுயிர்ககு இறுதி சூழவதெனக கொளவாயென முடிவுகூறிப் படுத்தனள அதுகேட்டுக் கூனியும, கைகேயி எண்ணத்தை உறுதிசெயயககருதி, மீண்டும அவளை நோககி, என அரசி கைகேயி? ஸ்ரீராமன் திருமுடி கவிபபானுயின நீயும் பரதனும அவமதிபபையப பெறுவீர்களெனபதில் ஐயமேயில்லே; ஆதலால் கௌசலியை மைந்தன காடுசெனறு, பரதன திருமுடி தாங்கும் வண்ணஞ் செயதுகொளளாய், இவவுறுதியை நீ யாதுநேரினும் விடவேணடாவெனறு பலமுறை யெடுத்துரைதது அவள கருததை உறுதிசெயதனள. கைகேயி யும இவவாறு அடிககடி தூணடபபடடவளாய், மேனமேலும கடுஞ் சினம்பெருகிக கைகளே மார்பிலவைததுப படுத்தபடியே கூனியைநோககி, அடீ நீ என பலமுறை பன்னுகினறுய, யானுவது இறததல வேண்டும்; ஸ்ரீராமனுவது காட்டுககுச செலலலவேண்டும, இததுணிவைவிட்டு, என ககு ஆணிமுததுத தாழவடமுதலிய அணிகளாலும, மறறெவறறினுலும் பயனிலது, ஆதலின அவறறை யான விருமபுவதேயில்லே, ஸ்ரீராமன நகரம் நீஙகிக கானகம புகானுயின, யான உயிரமாயவதே துணிவென்றுரைதது, அணிகளேககழற்றி யெறிந்துவிட்டுச சாபமடைந்து பூமியில்வீழநத கின் னரிபோலத் தரையில படுத்தனள. இவவாறு வருவிததுககொண்ட கோப மென்னு மிருளாற சூழபபடட முகமுடையவளும், சிறநத அணிகளேக கழறறினவளும, துயரமடைநதவளும ஆகிய கைகேயி இருளமூடி விண் மீனகள கீரமேகங்களால மறைநதுளள ஆகாயம்போல விளககமறறவ ளாயினள.

அயோத்தியாகாணடததில ஒன்பதாவது சருககம

முறறிறறு

## பத்தாவது சருக்கம்

தசரதா கைகேயி முகஞ்சுளிததிருககக்கண்டு நனமொழி கூறியது.

இவவண்ணம் கைகேயி கூனியினுல எபபொழுது கடுமொழி யுரைககக் கேட்டனளோ அப்பொழுதே விடநதோய்நதகணையால தைபபுணட கின்னரி போல நிலத்தில்வீழ்நது ஸ்ரீராமசந்திரனுடைய திருவபிஷேகததைக் கெடுப் பதையே மனத்தில் பதியவைத்து வெப்பமாக நெட்டுயிர்ப்பெறிநது ஒளி யிழநத முகத்தினளாய, நெடும்பொழுது ஆராயநது துணிநது மநதரை யோடும் இததுணிவை மீண்டும் உரைசெய்து படுத்திருந்தனள். பொரு ளின் பெருவேட்கையுள்ள அக்கூனியும் இவளுறுதியை அறிந்து தனக்குப்

பேறுகிடைத்ததுபோலத் தன்னையறியாத பெருமகிழ்ச்சியினால் பலவாறு புகழ்ந்தனள். பின்பு தசரதர் தேவியும், அவ்வுறுதியையே இருதயத்திற் கொண்டு,கோபமிகுந்து புருவத்தை நெறித்துக்கொண்டு தனாயிலபடுத்துப் பற்பல மணிமாலைகளையும், பொன்னணிகளையும் அறுத்தெறிந்தனள், அம் மாலைகளும், அணிகளும், உடுக்கள் விண்ணகத்தைத் விளங்கச்செய்வது போல அம்மனையை விளங்கச்செய்தன. அந்தக்கைகேயியும் அழுக்கடைந்த ஆடையையுடுத்துக் குழலை ஓரேபுரியாகத் திரித்துக்கட்டி மகிமை நீங்கிய கின்னரிபோலப் புவியில் படுத்திருந்தனள்.

இங்குச் சக்கரவர்த்தியாரும் பரந்தாமனாகிய ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விப்பதற்குரிய காரியங்களை இடையூறின்றி நிறைவேற்றும்படி கட்டளைசெய்துவிட்டு, வசிஷ்டாமுதலிய சபையாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, தம்மனைக்குட்புகுந்து, ஸ்ரீராமனுக்கு அபிஷேகமென்னுஞ் செய்தி இப்பொழுதுதான் எல்லோர்க்குந் தெரியுமாதலின் அந்தப்புரத்திலிருக்கின்ற கைகேயி அறிந்திராள், ஆதலின் இந்நற்செய்தியை அவளுக்குரைத்து அவளையும் மகிழ்விக்கவேண்டுமென்று எண்ணி, சிறந்து வெளுத்துயர்ந்தழகாய், கைகேயியுடன் கூடிய அவ்வீட்டில் வெள்ளணிறமேகங்களை யுடையதாகி, ராகுவுடன் கூடிய, விண்ணினிடத்துச் சந்திரன்செல்வதுபோலச் சென்று, கிளிகள் ஒன்றோடொன்று கொஞ்சிக் கொஞ்சிப் பேசுதலும், மயில்கள் கூவி யாடுதலும், அன்னப்பறவை வெண்ணாரைப்பறவை முதலியவை சிலம்புதலும், நிருத்தகீத வாத்தியங்கள் முழங்குதலும் அமைந்ததும், கூனர்களாலும், குறளர்களாலும் நிறைந்ததும், லதாமண்டபங்களாலும், சித்திரமண்டபங்களாலும், சம்பகம், அசோகம், புன்னாகம், மருவகம், குரவகம், தவன முதலியவைகளினால் எப்போதும் தளிர்த்துப் பூத்துப் பழுத்துச் செழித்து வளர்ந்த பற்பல மரங்களாலும் சூழப்பட்டதும், தந்தத்தினாலும், வெள்ளியினாலும் இயற்றப்பட்ட திண்ணைகளோடும், தவிசுகளோடும் கூடியதும், நடைவாவிகளால் குளிர்ந்ததும், நாநாவிதங்களாகிய அன்னபானங்களாலும், பலவகை பக்ஷிய போஜிய காதிய லேஹிய பேயங்களாகிய உணவுகளாலும், குறைவற நிறைந்ததும், விலையுயர்ந்த ஆடையாபரணங்களால் நிறைவுள்ளதுமாகி, விண்ணுலகுபோலக் கைகேயி மாளிகை விளங்கக்கண்டு, காமவேட்கை மிகுந்து அவள் படுக்கையறையிற் சென்று, அங்குக் கைகேயி படுத்திருத்தலைக் காணாமல் துன்புற்று அங்குள்ளோரை நோக்கித் தாதிகளே! என் பிராணநாயகி எங்கெய்தினள். முன்பு எப்பொழுதும் இக்காலையில் இங்கிருந்து என்னை எதிர்கொள்ளாதிருப்பவளல்லளேயென்று வினவினார். அதுகேட்டு வாயில்காப்பவள் பயத்தினால் நடுக்கங்கொண்டு கைகூப்பி வேந்தர்கோமானை நோக்கி மகாப்பிரபு, மஹாராணி சினமுடையாளாய்க் கோபமனையுள் எய்தினள். அதன் காரணம் யானறிந்திலேனென்று விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டுச் சக்கரவர்த்தி

யார் மிகத் துன்பமுற்றுப் புலன்கள் நைந்து மனங்குன்றிக் கோப இல்லத் திற சென்று, அங்கு வேரறுந்த பூங்கொடிபோலவும், சாபத்தால் புவியில் வீழ்ந்த தேவகன்னி போலவும், பிழைசெய்யப்பட்ட கின்னரி போலவும், விண்ணினின்றும் வீழ்ந்த அப்ஸரசு போலவும், கெடுதியடைந்த மாயை போலவும், கட்டுண்ட பெண்மான் போலவும் தரையில் வீழ்ந்து படுத்திருக் கின்றவளும், இளம்பருவமுடையவளும், தம்முயிரினும் மிகப் பிரியமுள்ள வளுமாகிய அக்கைகேயி தன்னைக்கண்டு தாம் ரூபமுடையாராதலின் மிக்க காதல்கொண்டு அவளது கெட்ட எண்ணத்தை அறியாதவராய் அவளைத் தேற்றுவோமென்று அடர்ந்தகாட்டில் வேடுவரால் நஞ்சூட்டிய அம்பினால் எய்யப்பட்ட பெண்யானையை ஆண்யானை கிட்டித் துதிக்கையினால் தடவி யணைப்பதுபோலத் தம் கரத்தால் தடவிப் புழுதியைத் துடைத்துக் காம வேட்கை பெருகினவராய் ஆணைத்து, ஏன் சுளித்தனளோவென்று அச்சங் கொண்டு கைகேயியை நோக்கி, அடி என் பிராணநாயகி! நீ என்மீது சினங் கொள்ளுங் காரணத்தைச் சிறிது மறியேன்; யாவராயினும் உனக்குக் குற்றஞ்செய்தனரோ? யாவராயினும் உன்னை அவமதித்தனரோ? யான் உயிருள்ளவரையும் உன் மனப்படி நடக்கச் சித்தமாயிருக்கையில், நீ ஏன் இவ்வண்ணம் நிலத்தில் படுத்திருக்கின்றனை? அன்றி, பேய்பிடித்திருக் கின்றதோ? வேறே யாதேனும் பிணியுற்றிருக்கின்றதோ? அதனை நீ உரை செய்வாய், என்னிடத்தில் சிறந்த வைத்தியர்களிருக்கின்றனர்கள். அவர்களை அழைப்பித்து நொடிப்பொழுதில் அந்நோயைத் தீர்த்துவிடச் செய்கின் றேன்; யாருக்காயினும் நீ நன்மை செய்யவேண்டுமோ? யாராயினும் நினக் குத் தீங்குசெய்தனரோ? யாவனுக் கிப்பொழுது நன்கு செய்யவேண்டும்? யார்க்கு நீ தீங்குசெய்யவேண்டும்? அதனை யுரைசெய்; வீணுக அழுது என்னையும் துன்புறச் செய்யவேண்டா; எவனை இப்பொழுது கொலைபுரிய வேண்டும்; கொலைசெய்வதற்குரிய யாவன் இப்பொழுது விடுவிக்கக்கடவன்? பொருளின்றி வருந்துகின்ற யாவன் மிகப் பொருளுடையவனாகக்கடவன்? யானும் என்னைச் சார்ந்த மற்றெல்லோரும் உன் கட்டளைப்படி நடப்பவர்க ளாக உன் வசத்திலிருக்கின்றோமன்றோ? நினது விருப்பம் சிறிதாயினும் அதனை மறுக்க எனக்கு மனமில்லை; என்னுயிர்மேலாணையிட்டுரைக்கின் றேன்; ஆதலின் உன்னுடைய எண்ணத்தை உரைசெய்வாய்,—

బలమాత్మని జానంతీ నమాంశంకితుమర్హసి
కరిష్యామి తవ ప్రీతిం సుకృతేనాపి తే శపే

பலமாத்மநிஜாநந்தீ நமாமசங்கிதுமர்ஹஸி
கரிஷ்யாமிதவப்ரீதிம் ஸுக்ருதேநாபிதேசபே.

நீ கருதியபடி செய்யுந் திறமை எனக்கிருப்பதையும், செய்வித்துக் கொள்ளுந் திறமை உனக்கிருப்பதையும் உணர்ந்திருந்தும், என்னிடத்தில

நீ ஐயப்படுவது முறையன்று; உனக்கு விருப்புள்ள காரியத்தைத் தவறாமல் செய்கின்றேன்; என்னுடைய நல்வினைமேல் ஆணையாகச்சொல்லுகின்றேன்; பிராசீன, சிந்து, ஸௌவீர, ஸௌராஷ்ட, தக்ஷிண, வங்காங்கதமகத, காசி, கோஸலாதிகளாகிய பூமியுள்ளவரையுமுள்ள தேசங்களெல்லாம என் ஆளுகைக்கு உட்பட்டிருக்கின்றன. அத்தேசங்களில் பற்பல சிறந்த தன தானியங்களும், ஆடையாபரணங்களும், மற்றும் பல சிறந்த பொருள்களும் உண்டாகின்றன. அவற்றுள் உனக்கு வேண்டுவதியாதோ? அதனை உரை செய்வாய்; அடி என்னாருயிரே! ஏன் வீணாக் வருத்தமுற்றுப் படுத்திருக்கின்றாய்? எழுந்திரு எழுந்திரு; உண்மையை நீ எனக்குரைப்பாய்; எதனால் உனக்கு அச்சந்தோன்றியது? வெய்யோன் பனித்துளியைப் போக்கடிப்பது போல அப்பயத்தை யான் ஒழிவுசெய்வேன், என்றிவ்வகை இன்சொற்களைச் சொல்லித் தேற்றினார். இவ்வாறு சக்கரவர்த்தி உரைத்த மொழிகளைக்கேட்டுக் கேகயராஜன் மகளும் உள்ளந்தேறி மிகுதியும் கொடியதாகிய தன்னெண்ணத்தை உரைத்து, அவரைப் பெரிதும் வருத்தமுறச் செய்யத் தொடங்கினள்.

அயோத்தியாகாண்டத்தில் பத்தாவது சருக்கம்

முற்றிற்று.

## பதினொன்றாவது சருக்கம்.

கைகேயி ஸ்ரீராமனைக் காட்டுக்கனுப்ப வரங்கேட்டது.

அநந்தரம் கேகயநாட்டரசன் மகளும் மன்மதன் கணைகளாற் சிதறுண்டு காமவெறி தலைக்கேறி வேண்டுகின்ற தசரதப்புரவலர் பெருமானை நோக்கி, என் உயிர்க்காதலரே! யான் இப்பொழுது பிணியுற்றவளுமல்லேன்; ஒருவராலும் அவமதிப்படைந்தவளுமல்லேன், எனக்கொரு விருப்பமுளது; அதனை நீர் முடித்துக் கொடுக்கவேண்டுமென விரும்புகின்றேன்; அதனை நீர் முற்றுவித்துத் தரவேண்டும்; அதனை நிறைவு செய்ய உமக்கு மனமுள்ள துன்மையாயின் செய்வேன் செய்வேனென வஞ்சின முரைக்கக் கடவீர். உரைத்ததன்மேல் என் விருப்பம் யாதோ அதனை உரைசெய்வேனென வஞ்சமாகக் கொஞ்சி உரைத்தனள். தார் வேந்தர்பிரானும் அம்மொழியை நெஞ்சில் அமைத்துப் புன்னகை கொண்டு காதல்பெருகித் தம்கரத்தால் கைகேயியினது சுரிகுழல்த்தடவி வெண்ணகைகொண்ட அப்பெண்களிற் கொடியாளை நோக்கி, அடி என் கண்மணியே! கட்டழகின மதமயக்கினளே! இச்செய்தி நீ அறிந்திலையா? எனக்கு மாதர்களில் உன்னினும், மக்களில் ஸ்ரீராமனிலும் விருப்ப

மீனவாகளுளரோ ? ஒருவருமில்லையே; யாவராலும் வெல்லவொண்ணாத வெற்றியாளனும், யாவரினும் சிறந்தவனும், ரகுகுலதிலகனும், யாவரினும் மேம்பாடுடையானும், என்னுயிர் வாழ்க்கைக்குக் காரணனுமாகிய ஸ்ரீராமன்மேல் ஆணையாக நீ சொல்லுங் காரியத்தை முடித்துக் கொடுப்பேன்; இவ்விராமனை விட்டுப் பிரிந்து இமைப்பொழுதாயினும், உயிர்வைத்திரேனன்றோ ? என்னுயிரையாயினும், மற்றுள்ள பிள்ளைகளையாயினும், மனைத்தாரா சுற்றத்தார்களையாயினும் விட்டுப் பிரியினும், பெறலரிய காதலனாகிய இந்த ராமனைவிட்டுப் பிரிவேனோ ? அந்த ராமன்மேல் ஆணையாக உன் விருப்பத்தைச் செய்வேன்; அதனை நீ உணர்க்க கடவை. அழகு நன்மையே செய்பவளே ! என் உள்ளம் இத்தன்மையதென்பதை நீ நன்காராய்ந்துணர்ந்து உன் விருப்பத்தை உரைத்து, என்னை உயிர்வாழ்ந்திடப் புறச் செய்வாயாக; நீ என் மனங் கவருங் கட்டழகி என்பதை உணர்ந்தும் என்மீதையமுறலாகாது; உன் விருப்பத்தைத் தடையின்றிச் செய்வேன், என் நல்வினை ஆணையாக வஞ்சினங்கூறுகின்றேனென்றிவ்வாறு கெஞ்சி உரைசெய்தனர். கைகேயி அவ்வுரையைக்கேட்டுக் கணவர் தன்னெண்ணத்திற் கிசைந்தாரென்று தேறிப் பரதன்மீதுகொண்ட அன்பினாலும், ஸ்ரீராமபிரான்மீதுகொண்ட பொறாமையினாலும் பெருமகிழ்வடைந்து, பகைவருமெடுத்துரைத்தற்கரிய வன்மொழியை மொழிவதற்குச் சற்றுநேரமயோசனைசெய்து, தசரதசக்கரவர்த்தியாரை நோக்கித் தற்செயலாய் எதிர்த்த கொடுங் கூற்றுவன்போன்ற கொடிய கடுமொழிகளை உரைக்கத் துணிந்தனள். சக்கரவர்த்தியாரே ! முறையே வஞ்சினமுங்கூறி, வரமளிப்பதாக ஒப்புக்கொள்ளுகின்றீர், இதனைத் தேவர்கள் முதலிய முப்பத்துமூன்று கடவுளர்களும, சந்திரசூரியர்களும, விண்ணும், நவக்கிரஹங்களும், இரவும, பகலும், திசைகளும், விண்ணுலகும், இம்மண்ணுலகும், கந்தர்வராட்சசாதியர்களும், இரவில் திரிகின்ற பூதங்களும், மனைகளிலுள்ள கிருஹதேவதைகளும், மற்றைப் பூதங்களும் அறிந்திருக்கக் கடவர்கள். சொல்லியசொல் தவறாதவரும, பெருந்தோற்ற முடையவரும், தருமமறிந்தவரும், கலக்கமற்றவரும, நிலையுள்ளவருமாகிய இப்பேரரசர் எனக்கு வரமளிக்கின்றார். இதனைத் தேவதைகளெல்லோருங் கேட்கக்கடவீர்களென்று இங்ஙனம் உரைத்து, அரசர்பெருமானைச் சொல்லியசொல் தவறவொட்டாமல் நிலையில் நிற்கச்செய்து தேவர்களை சாட்சியாகக்கூவிப் பின்பு காமவேட்கை மிக்கவராகிய மன்னர்மன்னனை நோக்கி, என் உயிர்த்துணைவரே ! முன்பொருகால் தேவாசுரயுத்தத்தில் நடந்தசெய்தியை நினைந்துணரக்கடவீர். அக்காலையில் சம்பராசுரன் சமயம்பார்த்து உம்மை மோகமடையும் வண்ணம் கணைதொடுத் தெய்தானன்றோ ? அப்பொழுது யான் சோம்பலின்றி ஊக்கத்தோடு உம்மை உபசரித்துப் பாதுகாத்து, மோகத்தைத் தணித்தேன்; அப்பொழுது நீர் மோகந்தெளிந்து எழுந்து என்மீது மகிழ்ந்து

எனக்கிரண்டுவரம் அளித்தீரல்லீரோ? அவ்விரண்டு வரங்களையும் வேண்டும்போது யான் பெறுக்கொள்ளுவேனென உம்மிடத்திலே, இருப்பாக வைத்திருக்கின்றேனன்றோ? அவ்விரண்டு வரங்களையும் கொடுப்பேனென்று வஞ்சினஞ்செய்தது நெடுநாளாயினும் இப்பொழுது தருமவழிதவறிக்கொடாமற்போவீராயின் இந்நொடிப்பொழுதிற்றானே உமக்கெதிரில் உயிர்மாய்த்துக்கொள்வேனென மொழிந்தனள்.

వాగ్యన్త్రేణతదారాజా కైకేయ్యాస్స్వవశేకృతః
ప్రచస్కన్దవినాశాయ పాశంమృగఇవాత్మనః

வாகமாதரேணததாராஜா கைகேயயாஸவவசேகருதஃ
பரசஸகந்தவிநாசாய பாசம மருகஇவாதமநஃ

வேடனுடைய வாயினால் பாடப்பட்ட தொனியினாலே தன்வசமழிந்து மான் தானிறப்பதன்பொருட்டே வலையுள்வந்து அகப்பட்டுக்கொள்வதுபோலத் தசரதசக்கரவர்த்தியாரும் கைகேயியினால் முன் கொடுத்த வரங்களைக் கேட்டமாத்திரத்திலே தம்வசமழிந்து, தம் உயிருக்கு இறுதிதருமென்பதை உணராமலே நீ கேட்ட வரங்களைத் தருவேனென்று ஒப்புக்கொண்டு தருமமென்னும் வலையில் சிக்கிக் கொண்டனர். பின்னர் இவ்வண்ணங் காமவிடாய்ப்பட்டுத் தன் வலைக்குள்பட்ட சக்கரவர்த்தியாரை நோக்கிக் கேகயன்மகள் சொல்லலுற்றனள். கேளீர் என் உயிர்க்குத்தலைவராகிய அரசர்க்கரசரே! முன்பு எனக்கு நீர் இரண்டுவரங்களை அளித்திருக்கின்றீரன்றோ? அவ்விருவரங்களையும் யான் விரும்பி உரைக்கின்றேன்; இன்று ஸ்ரீராமனுக்கு அபிஷேகத்தின்பொருட்டுச் சேகரிக்கப்பட்ட பொருள்களினால், பரதனுக்கு இப்பொழுதே அபிஷேகஞ்செய்விக்கக்கடவீர் இது முதல்வரம், ஸ்ரீராமனை இப்பொழுதே மரவுரியுடுத்துச் சடைதரித்துத் தவசியாகி ஒன்பதும ஐந்துங்கூடிய வருடங்கள் கழியுமளவும் கானகஞ்சென்று வாசஞ்செய்யக் கடவன். இது இரண்டாவது வரம்; இவ்விரண்டுமே எனக்கு முதன்மையாகிய விருப்பு; நீர் முன்புகொடுத்த வரங்களைத்தான் இப்போது கேட்டேன்; அல்லது புதியதாக யான் ஒன்றுங் கேட்கவில்லை, ஆதலால் இப்பொழுதே ஸ்ரீராமனைக் காட்டுக்கனுப்பிவிட்டுப் பரதனை அழைப்பித்து அவனுக்கு அபிஷேகஞ்செய்வித்து, சொன்னசொல் தவறாமல் சத்தியவாதியராகி, நல்லொழுக்கத்தையும் உயர்குடிப் பிறப்பையும் காத்துக் கொள்ளக்கடவீர். வாய்மையே மக்களுக்கு இம்மை மறுமை இன்பங்களுக்குக் காரணமென்று மகாரிஷிகள் அருளிச்செய்கின்றனரன்றோ? என்றனள்.

அயோத்தியாகாண்டத்தில் பதினொராவது சருக்கம் முற்றிற்று.

## பன்னிரண்டாவது சருக்கம்.

### தசரதசக்கரவர்த்தியார் கைகேயியைப் பலவாறு வேண்டிக்கொண்டது.

இவ்வண்ணம் உரைத்த கைகேயினுடைய கொடிய கடுமொழிகளைச் சக்கரவர்த்தியார் செவியுற்றுச் சற்றுப்பொழுது எண்ணி எண்ணிச்சால மனக்கலக்கங்கொண்டு ஒன்றுந்தோன்றாமல், இஃது கனவோ? நனவோ? அல்லது மோகமோ? அல்லது முற்பிறப்பில் நடந்தது இப்பிறப்பில் நினைவில் தோன்றியதோ? அல்லது மூப்புப்பசி பிணிகளாலாகிய அறிவுமயக்கமோ? என்றிவ்வகைப் பலவாறாராய்ந்தும் உள்ளந்தேறாமல் சிறிதின்புமில்லாராகி மயக்கமடைந்து, நெடும்பொழுதுசென்று மூர்ச்சை தெளிந்து எழுந்து, புலியைக்கண்டமான்போலக் கைகேயியைக்கண்டு பயந்து, வருந்தி, மந்திரத்தால் கோட்டிக்குள் தடைகட்டப்பட்ட பெரும்பாம்புபோலக் கட்டுண்டு; யாதோராசனமுமின்றி வெறுநிலத்திலுட்கார்ந்து நெட்டுயிர்ப்பெறிந்து அந்தோ! அருமை யருமையென்று கடுஞ்சினத்தோடு உரைசெய்து மீளவும் மூர்ச்சையாய், மறித்தும் நெடுநேரங்கழித்து மூர்ச்சை தெளிந்து, எழுந்து, கொடுஞ்சீற்றத்தால் கண்கள்சிவந்து கண்ணுலெரிப்பவர்போலக் கைகேயியைநோக்கி உரைக்கின்றார். அடிசண்டாளி! உன் விஷயத்தில் கண்மணியாகிய ஸ்ரீராமனாலாயினும், என்னாலாயினும் என்ன தீங்குசெய்யப்பட்டது? அடிகைகேயி! ஸ்ரீராமன் கௌசலியைக்குச் செய்வதினும் நினக்குப் பணிவாக ஒழுகி, வழிபாடுசெய்கின்றானே, அவன் விஷயத்திலே நீ ஏன் கேடுசெய்ய முயலகின்றனை; கொடிய நச்சரவோ டுறைவதுபோல உன்தன்மையை உணராமல் யான் காதலின்பொருட்டே உன்னை மணஞ்செய்து வீட்டுக்குள் வைத்துறைந்தேன்; இவ்வுலகில் ஒருவர் தப்பாமல் எல்லோரும் ஸ்ரீராமனுடைய கல்யாணகுணங்களை எடுத்துப் புகழ்கின்றார்களே; அத்தன்மையனாகிய ஸ்ரீபரந்தாமனிடத்தில் என்ன தவறுசாற்றிக் காட்டுக்குத் துரத்திவிடுவேன். கௌசலையையாயினும், சுமித்திரையையாயினும், இவ்வுலகாட்சியை யாயினும், மற்றுமுள்ள செல்வத்தையாயினும் விட்டாலும் விட்டுவிடுவேன்; கடையில் என்னுயிரையாயினும் விடுவேனே அல்லாமல், நற்குண நற்செய்கையின் வைப்பாகிய ஸ்ரீரகுநாயகனை நான் மனமிசைந்து ஒரு நொடியும் விட்டுப்பிரிந்துய்யேன். என்னருமை மைந்தனாகிய ஸ்ரீரகுகுலதிலகனை எதிரில்கண்டால் என்மனங்களிசிறக்கின்றது. மாத்திரைப்பொழுதாயினும் காணாமல் பிரிந்தால் அறிவுகலங்கி மெய்ம்மறந்து விடுவேனே அன்றி உய்யேன் உய்யேன்; சூரியனின்றி உலகமிருப்பினுமிருக்கும்; நீரின்றிப் பயிர்செழிக்கினுஞ் செழிக்கும்; ஸ்ரீராமசந்திரனாகிய என் கண்மணியை நீங்கிச் சிறிதுபொழுதும்

என்னுயிர் என்னுடலுள்ளிருக்கமாட்டாதென்பது திண்ணம்; ஆகையால், அடி கெட்ட எண்ணங்கொண்ட கைகேயி! இவ்வெண்ணத்தை நீ விட்டு விடக்கடவை, உன் காலைப்பிடித்துக்கொண்டு தலையின்மேல்வைத்துவேண்டு கிறேன், நீ இதனை யநுக்காரஞ்செய்து திருவுளமிரங்கி அருளசெய்யக் கடவை. அடிபாபி! நீ இதென்ன எண்ணங்கொண்டாயடி? கைகேயி! நீ முன்பு பரதனைப்பற்றி என்னைக் கேள்வி கேட்டிருக்கின்றாயன்றோ? அவ் வாறே இப்பொழுதும் பரதனுக்கு நலஞ்செய்யவேண்டி அவனுக்கு அபி ஷேகஞ்செய்யவேண்டுமெனக் கேட்ட கேள்வியை ஒருவாறு ஒப்புக்கொள்ளு கிறேன், நீ இதற்கு முன்னெல்லாம் ஸ்ரீராமனைக்குறித்து என்னுடன் பலமுறை, ஸ்ரீராமன் உமக்கு மூத்தபிள்ளையாதலால் அறத்தின் முறையில் எனக்கும் அக்கௌசலை திருமகன் மூத்தபிள்ளையென்று நீ சொல்லியிருக் கின்றாயன்றோ? அது ஸ்ரீராமன் உன்றிறத்தில் செய்யும் வழிபாடுகளுக்குகந் ததோ? என் கருத்தின்படி இனியமொழிகூறி என்னை மகிழ்விக்கக் கருதி யோ? சொல்லியிருக்கலாம். ஸ்ரீராமனுக்கு அபிஷேகமென்றுகேட்டு நீ உள் ளங்கவன்று என்னையும் வருத்துவதும், ஸ்ரீராமனை ஒருபிழையுமின்றிக் காட்டுக்குச்செலுத்தி விடவேண்டுமெனக் கேட்பதும் சிறிதும் நலமென்று தோற்றவில்லையே. இங்ஙனம் யாவரேனும் நினக்குக்கற்பித்தார்களோ? அல் லது உன்மத்தங்கொண்டிருக்கின்றனையோ? பேய்க் கோட்பட்டு ஆடுகின் றனையோ? தெரியவில்லையே, அடிகைகேயி! நீ இப்பொழுது அறிவுகெட் டால் கொண்டஎண்ணமானது இக்ஷ்வாகுகுலத்திற்குப் பெருங்கேடுவிளைக் கத்தக்க கொடிய தீச்செயலாய் விடியுமே. முன்பு ஒருபொழுதும் எனக்குக் கெடுதியையாயினும், என்மனத்திற் கிசையாச்செயல்களையாயினும் நீசெய்த தில்லையே; ஆதலால் இப்பொழுதும் நீ எனக்கு நன்மைசெய்தலொழிந்து தீமைசெய்வாயென்று நான் நம்பேன்; நீ முன்பு பலமுறைகளில் எனக்கு ஸ்ரீராமனும் பரதனும் ஒத்தவரே அன்றி வேற்றுமை யுடையாரல்லரென என் னுடன் பலமுறைசொல்லியிருக்கின்றனையன்றோ? அங்ஙனம் நினக்குவிருப் புள்ள செல்வன் பதினான்குவருடம் அச்சந்தருவதாகிய காட்டில் உறைதல் செய்யவேண்டுமென்று நீ என் நினைக்கின்றனையே; மிகுதியுங் கோரமான கானகத்தில், மிக்க மென்மையானவனும், சிறுவனும், அறத்தையே கருது பவனுமாகிய ஸ்ரீகோதண்டராமன் எங்ஙனம் உறைந்து பிழைப்பான்? கௌ ஸலைகுமாரன் உன்குமாரனைக்காட்டிலும் உனக்குச் சாலக்குற்றேவல் செய் கின்றனனே; அதுபற்றி ஸ்ரீராமனை பரதனிடத்தில் ஒருவிசேஷ முந் தோற்றவில்லையே; ஸ்ரீராமசந்திரனை அடவிக்குச்செல்ல விடுப்பா யாயின் பின்னர் நினக்குக் குற்றேவலையும், பெருமையையும், வழிபாட்டையும் எவன் செய்வானோ? என்னரண்மனைக்குள் பல்லாயிரம்பெண்களும் ஆண் களும் இருக்கின்றனர்கள், இவர்களுள் ஒருவராகிலும் ஸ்ரீராமன் நற்குண முடையவனல்லனென்றாவது, நற்செயலுடையவனல்லனென்றாவது இக ழ்வாரில்லையே; கசடறுத்தூய்மையுள்ள உள்ளமுடையோனாகிய ஸ்ரீராமன்

சீற்றங் கொண்டவர்களையும் இன்மொழிகளுரைத்துச் சீற்றத்தை ஆற்றி, அமைதியுறச்செய்து, இந்நாட்டிலுள்ள யாவரையும் தன்னிடத்தில் அன்புள்ளவர்களாகச்செய்து கொண்டிருக்கின்றனனே.---

సత్యేన లోకాన్ జయతి దీనాన్ దానేన రాఘవః
గురూన్ శుశ్రూషయా వీరో ధనుషా యుధి శాత్రవాన్

ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:
குரூந் சுச்ரூஷயா வீரோ தநுஷா யுதி சாத்ரவாந்

ஸ்ரீராமன் வாய்மையினால் சுவர்க்காதி உலகங்களையும், நன்கொடையினால் வறுமையாளர்களையும், தொண்டுசெய்தலால் பெரியோர்களையும், வில்லினால் பகைஞர்களையும் தன்வசஞ்செய்து வெற்றிகொண்டனனே. ஆதலால் ஸ்ரீபரந்தாமனிடத்தில் ஸத்தியமும் கிரகணாதிச் சிறந்தகாலங்களில் நூன்முறைப்படி தானமும், தவமும், காலதேசத்தை எதிர்நோக்காமல் தன்னைக் கண்டவர்களுக்கு அவ்வப்பொழுதே அவர்கள் மகிழும்படிசெய்யும் கொடையும், யாவர்க்கும் நேசனாக இருப்பதும், எப்பொழுதும் தூய்மையுடையானாக இருப்பதும், வஞ்சமற்றிருப்பதும், எல்லாக்கல்விகளையுங் கற்றிருப்பதும், பெரியோர்களுக்குக் குற்றேவல்செய்வதும், மற்றநற்செயலும், நற்குணமும் எப்பொழுதும் நிறைந்திருக்கின்றனன. அடிகைகேயி! தேவதைபோலவுருவமாகியவனும், மகாவிருடியர்போல மெய்ஞ்ஞானமுமுடையானுமாகிய ஸ்ரீராமன்விஷயத்தில் நீயேன் பாவஞ்செய்யத் துணிவுபெறுகின்றனை? அவன் ஒருக்காலும் யாரைக்குறித்தாயினும் பிரியமல்லாச்சொல் உரைக்க யான்கேட்டதுமில்லையே. அவ்வண்ணம் யாவர்க்கும் பிரியனாகிய ஸ்ரீராமனை நோக்கி, யான் உன்பொருட்டு என்னருமைச்செல்வனாகிய ஸ்ரீராமா! நீ அரசுபுரிதலை விட்டுக் காட்டுக்குப்போவென்று என்வாக்கினால் எங்ஙனம் உரைசெய்வேன்? பொறுமையும், ஐம்பொறிகளினடக்கமும், கொடையும், வாய்மையும், நன்றியறிதலும், அறமும், தயையும், எவனிடத்தில் நிலைபெற்றிருக்கின்றனவோ? அந்நம்பியைவிட்டு எனக்கு வேறுஉய்யும் வழியாது? நான் முதுமையுடையானும், எளியானும், உனக்குக் கணவனுமாதலால் என்வேண்டுகைக்கு நீ உடன்பட்டு என்னிடத்தில் அருள்செய்யக் கடவை; நாற்கடல்களுக்குட்பட்ட இப்பூமிக்குள்ளிருக்கின்ற எப்பொருளை நீ விரும்பினும் அதை உடனே அழைப்பித்துத்தருவேன். நீ சினங்கொள்ளவேண்டா; நான் உனக்குக் கைகூப்பிக் காலைப்பிடித்துவேண்டிக்கொள்ளுகிறேன். நீ ஸ்ரீராமனை அருள்செய்துகாத்து, என்னையும் அறமல்லாத வழியினின்றுங் காக்கக்கடவையென்றிவ்வகையாக உரைத்து மனம்நொந்து மதிமயங்கிப்புலம்பி மூர்ச்சைகொண்டு சுழன்று துன்பக்கடலின் கரைகாணாமல் கிடந்தனர். இங்ஙனம் வேண்டுகின்ற சக்கரவர்த்தியானை நோக்கிக் கைகேயி மிகவுங்கொடியாளாதலால் இனியமொழிகூறாமல் மறு

படியும் வன்மொழியே மொழியலாயினள். அரசரேறே! எனக்கு முன்பு இரண்டுவரங்களைக் கொடுத்துப்பின்பு அதைக் கொடுப்பதில்லையென்று கூறி விட்டுவாய்மைதவறுகின்றீரோ? இனி இவ்வுலகினில் யாம் அறமுடையோ மென எவ்வண்ணஞ் சொல்லிக்கொள்வீர்?

அறவொழுக்கமுடைய ராஜரிஷிகள் பலர்கூடி உம்மை யழைப்பித்து நீர் கைகேயிக்கு வரமளித்து மீளவும் கொடாமல் ஏன் தவறினீரென்று வினவின், அவர்களுக்கு நீர் யாது விடைமொழி உரைப்பீர்? யாவருடைய அருளால் யான் பிழைத்தேனோ? யாவள் என்னைப் பாதுகாத்தனளோ? அக் கைகேயியின் திறத்தில் யான் மெய்ம்மை தவறிப்போயினவனாயினேனென் றன்றோ சொல்லவேண்டும், இதனால் அரசர்களெல்லோரும், பொய்ம்மை யாளனானும் ஒரு இகழ்மொழியை இவ்வுலகில் நிலைக்கச்செய்கின்றீரோ, முதலில் வரத்தைக்கொடுத்துப் பின்பு வெவ்வேறு மறுமொழி உரைக்கின்றீரோ; இதனினும் மிகுதியும் கடோரமாகிய செயல்களைச்செய்து வாய்மையொன்றும் தவறாமல் புகழைப் படைத்தார்களன்றோ? முன்னோர்கள், முற்காலத்தில் சைபியனென்னும் பேரரசன் சத்திரிசந்தனைக் உலகாண்டுவந்தனன், அப் பொழுது விண்ணவரரசனும், தீக்கடவுளும் இவனுடைய மனவுறுதியை ஆராயவேண்டுமென்று இந்திரன் பருந்துருவமும், அக்கினி புறாவுருவமுங் கொண்டு, புறாவைப் பருந்து துரத்திக்கொண்டு வருவதுபோல வந்தனர்கள். அப்பொழுது அப்புறா அச்சுற்று ஓடிவந்து அச்சைபியன் மடிமீது வீழ்ந்து சரணமடைந்துநிற்க, உடனே பருந்து விரைந்துவந்து, சைபியனை நோக்கிப் புரவலனே! எனக்குணவாயுள்ள அப்புறாவைக் கொடுக்கவேண்டு மென்று வினவியது அரசர்பிரான் அதுகேட்டுப் பருந்தைநோக்கி இப்புறா என்னைச் சரணமடைந்தமையால் இதனை உனக்கு நான்கொடுப்பதில்லை, இதற்குமாறாகவேறுணவு அளிப்பேனென்று முடிவுகூறினன் பருந்து அரசன் இன்மொழியைச் செவியேற்று, மன்னவர்மன்னனே! நீர் இப்புறாவைக்கொடா விடின் இப்புறாவை ஒருதட்டில்வைத்து மற்றொருதட்டில் உம்முடையதசை யைக்கொய்துவைத்துச் சமனாக்கி நிறுத்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்க, அரசனும் அப்படியே தன்உடலை அறுத்துக்கொடுத்தனனன்றோ? அளர்க்க னென்னும் ஒருமன்னனும் தன் கண்ணையே கொடுக்கும்படிகேட்ட கட்புல னில்லாத ஓர் அந்தணனுக்குக் கேட்டவண்ணமே தன் கண்ணைக்கொடுத்து நற்கதி யடைந்தனனன்றோ? ஸமுத்திரராஜனும் கரைகடந்து செல்வதில்லை யென விண்ணவர்களோடு பிரதிஜ்ஞைசெய்து, இப்பொழுதும் அவ்வாறே தன் னிலையில் நிற்கின்றனனன்றோ? நீரும் உண்மைதவறவேண்டா; முன்னோர்க ளுடைய நல்லொழுக்கத்தை ஆராய்ந்துணரும்; நீர் அறத்தைத்தவிர்த்து ஸ்ரீராம னுக்குத் திருமுடிசூட்டிக் கௌசலியைவுடன்கூடி எஞ்ஞான்றும், இன்புற நினைக்கின்றீர், நான்கேட்டவரம் அறமோ? அறமல்லதோ? சத்தியமோ? அசத்தி யமோ? அஃது எவ்வண்ணமாயினும் ஆகுக. நீர் எனக்கு வரமளித்தபடி நான்

கேட்டதில இனி மாறுதலில்லை ஸ்ரீராமனுக்கு நேர்பட்டதைக்கட்டுவதாயிருக்கின் இப்போதே உம்மெதிராக நஞ்சுண்டு இறப்பேன்; உமது செல்வமைந்த னுக்கு அபிஷேகஞ்செய்யும் பட்சத்தில அரசனதாயென்று எல்லோரும கௌசலையையே கைகுவித்து வணங்கி, என்னை யுபேக்ஷைசெய்வார்களாத லால ஒருநாளாயினும், அதனைக்கண்ணினாலேகண்டு வருந்துவதினும இப பொழுதே இறப்பது நலமன்றோ ? ஸ்ரீராமனை வனத்துக்கு ஓட்டிவிடுவதினா லல்லாமல வேறொருவிதத்தினாலுமநானசந்தோஷமடைவதேயில்லையென்று உமமீதும்,பரதாழ்வான்மீதும ஆணையாகவஞ்சினஞ்செய்கின்றேனென்ன றிவ வண்ணமாகக் கைகேயிஉரைசெய்து, பேசாமற்நின்றதையாயினள். சக்கரவர்த்தி யாரும கைகேயியின இகழ்மொழிகளைக்கேட்டு, நாம எவ்வளவுநயந்துவேண் டியும இவள உள்ளம இளகாமல ஓரே உறுதியா யிருக்கின்றனளே யென்ப பெருந்துன்பமுற்றுக்கைகேயிக்குமாறுகூறென்றும கூறாமல, முகூர்த்தகால மயங்கி,'மீண்டுமகண்களைவிழித்து, கொடியவளாகிய கைகேயியைப்பார்த்து அவளுடைய பிடிப்பையும, தாம வரமளிப்பதையும, ஆராய்ந்து, சோக மதிகமாய ஆ!ராமா!!ராமா!!!என்றுசொல்லி, வேரற்றமரம்போலத் தரையில வீழ்ந்து உன்மத்தங்கொண்டவன்போலவும, சனியாற பிடியுண்டவன்போல வும, பலபிடுங்கின அரவுபோலவுமமெய்மமறந்து,அறிவுகுலைந்து,மகிழ்விழ ந்துகிடந்தனர். பின்பு தெளிந்தெழுந்து மீளவும கைகேயியைநோக்கி-அடி கைகேயி! இக்கெடுவகையை நல்லவகையென்று உனக்கு யாவர் துர்ப் போதனைசெய்தனர்கள ? பேய்பிடிக்கப்பட்டவன்போலும என்னிலைமையை க்கண்டும இங்ஙனம உரைசெய்ய உனக்கு நாணந்தோன்றவில்லையா ? நீ இவ வண்ணம நன்னடக்கையற்றக் கொடியாளாவாயென்பதை, நான உன்னை மணம்புரிந்துகொள்ளும் காலையிலேயே அறியாமற்போனேனே. அச்சோ! இப்பொழுது வயதுமுதிர்ந்தபின்பு முன்னைய ஒழுக்கமெல்லாம மாறுகின றனையே. நீ எதற்காக அச்சங்கொண்டு பரதன் அரசனாக வேண்டுமெனவும், ஸ்ரீரகுகுலதிலகனை வனத்துக் கேகவேண்டுமெனவும வரங்கேட்கின்றனை ? நானும் இவவுலகமும் பரதனும் இன்பமுறவேண்டுமென்பதே உனகருத்தா யின், இக்கெட்ட எண்ணத்தை விட்டுவிடக்கடவை, அடிகொடியாளே!கெடு நினைப்புடையாளே ! புல்லறிவுடையாளே ! பாவச்செயல செய்பவளே ! என னிடத்தாவது ஸ்ரீரகுநாயகனிடத்தாவது என்ன குற்றத்தைக்கண்டு நீ இவ வெண்ணங்கொண்டனை ? அன்றியும், ஸ்ரீராமனைப்பார்க்கினும் பரதன மிக்க தருமபுத்தியுடையானாதலால ஸ்ரீராமசந்திரனைவிட்டுப் பரதன ஒருக்காலும் திருமுடி பொறுத்துக்கொண்டு நகரத்திலிருக்க விருப்பமுறான ? துன்பம் ஒருசிறிதும்அறியாத ஸ்ரீரகுகுலதிலகனைநோக்கி, அப்பாஸ்ரீராமா! நீ வெங் கானகத்துக்குச்சென்று உறையக் கடவையென நான் கட்டளையிடின், அப பொழுது கிரகணம்பிடித்த முழுமதிபோல வண்ணம்மாறிய அவன திருமுக மண்டலத்தைக்கண்டு நான் எவ்வாறு உயந்திருப்பேன. நாட்டாநகரத்தார் அமைச்சர் புரோஹிதர்முதலிய பல அன்பர்களுடன் கூடித் துணிவுசெய்த

ஸ்ரீராமனுடைய அபிஷேகம் பகைஞர்களால் அடிபட்ட படைபோலக்கெட்டதைப்பார்த்துப் பொறுத்திருப்பேனோ? பலதேசங்களிலிருந்து வந்திருக்கின்ற புரவலர்களும், நெடுநாள் அரசுபுரிந்தும் இவன் பெண்ணேவல் செய்பவனென்றும், ஆ! ஆ! சிறுவனாகிய ஸ்ரீராமன் அபிஷேகங்கொண்டு நெடுநாள் அரசாட்சிசெய்தானென்றும், என்னைக்கண்டு அவமதித்துச் சிரிப்பார்களே? பலபெரியோர்கள் ஒன்றுகூடி என்னைநோக்கி, ஸ்ரீராமனை என்னகுற்றத்தால் கான்கூத்துக்கு ஓட்டினையென்று வினவின்! அதற்கு யான் என்னவிடை உரைசெய்வேன்? கைகேயிக்கு நான் முன்வரம் கொடுத்திருந்தேன், அவளிப்போது ஸ்ரீராமனைக் காட்டுக்குச் செலுத்த அவ்வரத்தைக் கேட்க, அதற்கு இணங்கி அவள் செய்த வருத்தத்தாலென்று உண்மையைத் தெரிவித்தாலும், அதனை அவர்கள் உண்மையென நம்பாமல் பெண் அறிவினைக்கேட்டு ஸ்ரீரகுநாயகனைக் கானகத்துக்குச் செல்லவிடுத்து, இப்பொழுது பொய்கூறித் தன் குற்றத்துக்குப் போக்குரைக்கின்றானென்றே நினைப்பார்களோ? ஸ்ரீராமன் காட்டுக்குச் சென்றபின்பு கோசலை என்னைநோக்கி யாதுரைப்பள்? யானும் அவளைக்கண்டு ஏதுரைப்பேன்? கௌஸலியை என்னிடத்தில் எக்காலத்திலும் எவ்வண்ணம் இருக்கவேண்டுமோ? அக்காலத்துக்குத் தக்கபடி, அடியாளைப்போலவும், தோழியைப்போலவும், மனையாளைப்போலவும், உடன்பிறந்தாளைப்போலவும், தாயைப்போலவும், அவரவர்கள் செய்யும் செயல்களைச் செய்து, முகக்கோட்ட மில்லாமலும், மனவருத்த மில்லாமலும், உபசாரஞ் செய்பவளாயிருந்தும், உன்பொருட்டு அவளைப் பலவாறு உபேட்சை செய்துவிட்டேன், இப்பொழுது உன் கொடுமையையும், அவளது நன்மையையும் எண்ணி, அபத்தியஞ்செய்தோமே யென்று பிணியாளர் உன்னுவதுபோல யானும் அவளை யுபேக்ஷைசெய்து உனக்கு நன்மை செய்துவந்தேனே யென்று எண்ணி எண்ணி, என்மனம் இப்போது தவிக்கின்றதே; நான் ஸ்ரீராமனுக்கு அபிஷேகத்தை நிறுத்திக் கானகத்துக்குச் செல்ல விடுப்பதைக் கண்டு சுமித்திரை என்னிடத்தில் எவ்வண்ணம் நம்பிக்கைகொண்டு என்னை விரும்புவாள்? சீதாதேவியும், மாமனுமிறந்தானென்றும், நம் கணவர் கானகஞ்சென்றனனென்றும், இவ்விரண்டு வன்மொழிகளைக்கேட்டு மனம்வருந்தி, பனிமலையருகில் கணவனை விட்டுப் பிரிந்த கின்னரிபோலப் புலம்பி உயிரைவிட்டுவிடுவாள். ஸ்ரீபரந்தாமனாகிய ஸ்ரீராமன் வனத்துக்குச் செல்வதைக் கண்ணுற்று, நானும் சீதாதேவியும், உயிருடனிருப்போமென யாரை நம்பவேயில்லை, பின்னர் நீ கைம்பெண்ணாகிப் பிள்ளையுடன் அரசாட்சிசெய்யப் போகின்றாய, முன்புன்னை நல்லாளென்றெண்ணி மணம்புரிந்தேன், பின்பிப்பொழுது நின்னடக்கை அறிந்து கெட்டவளென்று, நஞ்சுகலந்தகள்ளைக்குடித்தவன் இறக்கத்தக்க மயக்கங்கொள்ளுங்காலையில், அதுவிடஞ் சேர்ந்ததென்று தேறுவதுபோலத் துணிந்தேன்; இனியகுழலோசையினால், மானை நிற்

கச்செய்து, வேடன் அதனை எய்வதுபோலப் பொய்யான பல நல்வார்த்தைகளால் என்னை நின்வசப்படச்செய்து கொல்லுகின்றாயே; கள்ளைப் பருகிய அந்தணனைப் பழிப்பதுபோல என்னையும் பெரியோர்கள் அருமையாகப் பெற்றெடுத்து வளர்த்த செல்வமகனைக் காட்டிலோட்டியாவது புணர்ச்சியின்பத்தை நுகர்தலேபெரிதென்று கருதினனென்று என்னைப் பழிப்பார்களோ? அந்தோ? என்னதுன்பம்நேரிட்டது, ஐயோ? என்ன வருத்தம் நேர்ந்தது? வாய்மைக்குக் கட்டுப்பட்டதினாலன்றோ? உன்னுடைய கடுமொழிகளையெல்லாம் கேட்டும் பொறுத்திருக்கின்றேன்; அடி பாவி! உன் கொடுமையைத் தெரியாமையினாலன்றோ?கழுத்தில் ஒருவன் தானே கயிற்றைச் சுருக்குப்போட்டுக் கொள்வதுபோல உன்னை நெடுநாளாய் அன்புபாராட்டி வளர்த்துக் காத்தேன்; உன்னுடன் புணர்ந்து இன்பமடைந்ததெல்லாம் உன்னைக் கூற்றுவனென்ன உணர்ந்துகொள்ளாமையினாலன்றோ? சிசு கரும்பாம்பைக் கையினால் பற்றுவதுபோல உன் கையையான மேல்விளைவை உணராமல் பற்றினேன்; கொடியனாகிய நான் பிழைத்திருந்தும், என் அருஞ்செல்வப் புதல்வனாகிய ஸ்ரீராமன் தந்தையில்லாதானைப்போல ஆயினான்; இவ்வுலகத்தாரெல்லோரும் என்னைக் காமுகனென்னவும், பெண்வழிச்சென்று ஸ்ரீராமனைக் கானகத்துக்குச் செல்லவிட்டானென்னவும், ஸ்ரீராமன் பிரஹ்மசரிய முதலிய விரத ஒழுக்கங்களினாலும், ஆசிரியர்களுக்குத் திருப்பணி செய்வதினாலும் வருத்தமுற்று, இன்பமுறுங் காலையிலேனும், இன்பத்தை நுகராமல் காட்டில் வருத்தமுழப் போயினானேயென்னவும், அறிஞர் என்னைக்கண்டு பழிப்பார்களோ.—

నాలందిద్వితీయంవచనం పుత్రోరామంప్రతిభాషితుం
సవనంప్రవ్రజేత్యుక్తో బాఢమిత్యేవవక్ష్యతి
యదిమేరాఘవఃకుర్యా ద్వనంగచ్ఛేతిచోదితః
ప్రతికూలంప్రియంమేస్యా న్నతువత్సఃకరిష్యతి

நாலமதவிதீயம்வசனம் புதரோமாமபரதிபாஷிதும்
ஸவநமபரவரஜேதயுகதோ பாடமிதயேவவக்ஷ்யதி
யதிமேராகவஃகுர்யா தவநமகசசேதிசோதிதஃ
ப்ரதிகூலமப்ரியம்மேஸ்யாந நதுவதஸஃகரிஷ்யதி.

நான் ஸ்ரீராமனையழைத்து அடா ராமா! நீ காட்டுக்குப்போவென்று கட்டளையிடின், உடனே அப்படியே ஆகட்டுமென்று சொல்வானே அல்லாமல், என்னை நோக்கி இரண்டாவதுசொல் சொல்லான்; நான் காட்டுக்குப்போவென்று கட்டளையிட்டும், ஸ்ரீராமன் நான் செல்லேனென மறுத்துரைப்பானாயின் அது எனக்கு மிகுதியும் விருப்பமாயிருக்கும், என்

பெற்றலரிய குழந்தை அவ்வண்ணஞ்செய்யானோ? நான கைகேயி நிர்ப்பந்தத்துக்காக ஸ்ரீராமனை அழைத்து அடா, நீ காட்டுக்குப்போவெனவே னுயின், என கருத்தறியாமலே போகினறேனென்றே சொல்வான; இவ வண்ணம் ஸ்ரீராமன அரணியத்தை யடைந்தால், எல்லா உலகத்தாராலு மிகழ்ப்பட்ட நான இறப்பேனே அல்லது, உயயேன் உய்யேன; மனுஜ சார்த்தூலனுகிய ஸ்ரீராமன் வனஞ்சென்று, யானும் மரணமடைந்த பின னா, நினற என்னிஷ்டஜனங்கள விஷயததில் எனனகொடுமைசெய்ய நினைக்கின்றனேயோ? சுமித்திரையும், கோஸலேயையும, என்னேயும, ஸ்ரீராமனேயும, தனபிள்ளைகளேயும் விட்டுப் பிரிவாராயின எனனுடன அனுமானஞ்செய்திறப்பாரல்லது உய்யார, ஆதலால் கௌசலியையும, சுமித்திரையையும், எனனேயும் மூன்றுபிள்ளைகளுடனகூட நரகத்தில் விழ வித்து, நீ மாத்திரம் இன்பமுற்று வாழவாய், எனனேயும, ஸ்ரீராமனேயும் துறநது துன்பமுறுகின்ற இக்ஷுவாகுகுலத்தை நீ நனகு பரிபாலனஞ் செய்யப்போகின்றாய்; ஸ்ரீராமன் இவவாறு காட்டுக்குசசெல்வது பரதனுக்கு விருப்பமாயின், அவன லோகாந்தரமடைநத எனக்குச் சரமகைங்கரியஞ்செய்யக்கடவனல்லன். அடி துராமமாககி! எனககுப் பகையானவளே! நானிறந்து ஸ்ரீராமன் வனமடைந்து வருந்த நீ மட்டும கைம்பெண்ணுகிப் பிள்ளையுடன் பாராண்டு மனங்களித்து வாழக, என் குலத்திறகுற்றது அபகீர்த்தியோ? நிலேத்த இகழவோ? கேகயன் பெண்ணென்றும், கைகேயியென்றும் பெயா வாயககபபெற்று என் வீட்டில் குடியிருநததே அல்லது, நீ என் மனைவி அல்லே, பாவஞ்செயதவனுககு எல்லா உயிாகளிடத்தும் அவமதியுண்டாவதுபோல எனககும நீ அவமானக கூற்றயினே; அடி சண்டாளி! என குழந்தை தோமீதும, பரிமாமீதும, மதமாமீதும், ஏறிசசெல்லவேண்டு மிடங்களிற் சென்றும, கலமுள மலே மரங்களால் அடர்ந்த பெருங்காட்டில் செந்தாமரைமலாபோனற கழல்கள சிவக்க எப்படி திரிவான்? எந்த என் மைந்தனுககு மணிகுண்டலாதிக ளாகிய நவமணியணிகளே அணிந்த பாசகாகள நான்முன நானமுன் னென்று ஒருவருககொருவா முந்தவேண்டுமெனக் கருதி, அறுவகை யுணவுகளே யமுதுபோலச செய்துவைத்துக காத்திருககினறனாகளோ? அந்த என் செல்வபபுதல்வனே காடுதிரிநது, கைப்பாகவும், உவாபபாக வும், காரமாகவுமுள்ள பல நீாகளேக குடித்தும், வேளைகடநது காய கிழங்குகளேத் தின்றும், எங்ஙனம் உயிாவாழவான.

இதுவரையும் பொன்னுடையுடுத்து இன்பமாக வாழ்ந்து, காட்டில் காவியுடையுடுத்து எங்ஙனம் என்பிள்ளை இவவுலகினில் வாழவான்; ஸ்ரீராமன் காட்டுக்குப் போகவேண்டுமென்றும், பரதனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டுமென்றும், யாரும் எண்ணத்தகாத இம்மாற்றம் யாருடையது? யார் சொல்லத்தக்கது? தீயமடந்தையர்களெல்லோரும் வஞ்சமுள்ள

வர்களும், அறத்தின்முறை தவறியாயினும் தங்களுடைய காரியங்களையே முடித்துக்கொள்வதில் ஊக்கமுடையார்களும், ஆதலால் அவர்கள், யாவராலும் இகழச்சிசெய்யத் தக்கவர்களே, ஆ! ஆ! மற்றபெண்களெல்லோரும் இத்தன்மையர்களாவார்களோ? ஆகமாட்டார்கள். பலர் தருமசிந்தையுடையார்களாய்க் கொழுநன் உள்ளத்துக் கினியர்களாய், யாவராலும் புகழத்தக்கவர்களுமுள்ளர், ஆதலால் எல்லாமாதர்களையும் யான் பழிக்கேன், பரதன்தாய் ஒருத்தியைக்குறித்தே யான் பேசுகின்றேன்; அடிகெடுமதியுடையாளே! பொருளாசையுடையாளே! கொடியவளே! எப்பொழுதும் என்னை வருத்தும் வகையிலே மனமுடையாளே! நலமுடையவள்போலப் பாவனைசெய்த சண்டாளி! என்னிடத்திலாவது ஸ்ரீராமனிடத்திலாவது என்னகுற்றத்தை நீ கண்டு எங்களை அழிக்க இவ்வாறு முயன்று வரங்கேட்கின்றனை? ஸ்ரீராமன் கானகஞ்செல்வதைக் கண்டால், தந்தைகள் பிள்ளைகளையும், பிள்ளைகள் தந்தைகளையும், கணவர்கள் மனைவியர்களையும், மனைவியர்கள் கணவர்களையும் துறந்து விடுவார்கள். மேலும், உலகமெல்லாம் உன்மேல் சினங்கொண்டதாகும்; ஆதலின் ஸ்ரீராமன் காட்டுக்குச் செல்வானாயின், உனக்கு அரசாளுகை நிலைப்பதும் அரிது; யானும் தேவகுமாரன்போன்ற நாநாவிதமாகிய திருவாபரணங்களையணிந்த ஸ்ரீராமன் உலாவும்பொழுது கண்குளிரக்கண்டு மகிழ்ந்து, மூப்பினனாயினும், பதினாறுவயதுள்ள பாலகுமாரன்போல ஆகின்றேன், சுதிரவன் தேர்நடத்துஞ்செய்யாவிடினும், மழைபொழியாவிடினும், இவ்வுலகம் ஒருகால் பிழைக்கினும் பிழைக்கும், ஸ்ரீராமன் வனம்போவதைக் கண்ணுற்று இங்கு ஒருவரும் பிழைக்கமாட்டாரென்று நான் நம்புகின்றேன், கெடுபுத்தியுள்ள உன் தன்மையை அறியாமலே நெடுநாளாய் மனையில் வைத்து, நச்சரவத்தை வளர்த்தாற்போல வளர்க்கப்பட்டுக் கடையில் கூற்றாகி என்னைக்கொன்றனையே, உன்னால் நான் நாநாவிதத்திலும் கெடுதியடைந்தேன்; ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடன் வனஞ்செல்ல, யானும் உயிர்மாய, பின்பு என் பந்துஜனங்களையும், இத்தேசத்தாளுகையையும், இந்நகரத்தையும் நிலைகெடுத்து, பரதன் உன்னுடன்கூடி இவ்வுலகினை ஆளுவான், நீயும் என் பகையாளிகளை மகிழ்விப்பாய், அடிபாவி! மணஞ்செய்த கணவனாகிய என்னையும் சிறிதும் மதிக்காமல், யாவரும் இகழச்சி செய்யத்தக்க இக்கொடிய மாற்றத்தை நாணமென்பது சிறிது மிலளாயுரைத்தனையன்றோ? உன் பற்கள் ஆயிரம்பொடிகளாகச் சிதறுண்டு உன் முகத்தினின்றும் ஏனோ? இன்னும் கீழே உதிர்ந்து வீழாமலிருக்கின்றன. இஃது வியக்கத்தக்கதே; ஸ்ரீராமன் இன்னாமையாயாவது, விருப்பமல்லதாயாவது ஒருபொழுதும் மொழிந்ததில்லையே; கடுஞ்சொல் சொல்வதையே அவனறியான், இவ்வண்ணம் எஞ்ஞான்றும் இனியசொல்லினனாகிய ஸ்ரீராமன் திறத்தில் ஏனோ? பாவஞ்செய்கின்றனை; நீ வருந்தினும் வருந்துக, நீ எரியினும் எரிக, நீ இறக்கினும் இறக்க, நீ ஆயிரம் சிறு

துண்டுகளாகச் சிதறுண்டு தரையில் விழினும் விழுக; அடி கேகயன் குலத்திற்பிறந்த கொடும்பாவி! நீ எப்பாடுபடினும், யாவருக்கும் நலந் தராத உன் பாழ்த்த எண்ணத்தை யானே ஒருகாலும் செய்ய உடன் படேன்; வாளைபோலக் கூர்மையுள்ளவளும், எப்பொழுதும் விரும்பத் தகாதவற்றை மொழிபவளும், கெடுமனமுடையவளும், தன் குலத்தைக் கெடுப்பவளும், என்மனத்தை ஓழிவில்லாமல் வருத்துகின்றவளுமாகிய நீ பிழைத்திருக்க யானே பொறுத்திரேன்; ஸ்ரீராமன் காட்டுக்கேகின் நான் உயிர்வைத்திரேன், இனி மகிழ்ச்சியேது ? இன்பமேது ? என் மனைவியாயிருந்து எனக்கு விருப்பமல்லாத காரியத்தை நீ செய்ய முயல்வது நலமன்று; உன் பாதம்பணிந்து வேண்டுகின்றேன்; அருள்செய்யக் கடவையென்றிவ்வண்ணமாகக் கைகேயியை நோக்கிக் கொடுமையாகவும், இனிமையாகவும் மொழிந்து பயமுறுத்தியும், வேண்டியும், விகாரம் பிறந்தவர்போலக் கைகேயியின் கால்களைப் பிடிக்கச்சென்று, அது செய்யாமலே தரையில் தவறிவீழ்ந்து வருந்தினர்.

அயோத்தியாகாண்டத்தில் பன்னிரண்டாவது சருக்கம் முற்றிற்று.

## பதின்மூன்றுவது சருக்கம்

தசரதசக்கரவர்த்தியார் கைகேயியை வருந்தி வேண்டல்

அநந்தரம் கைகேயி நாணமற்றவளும், கொடியவளும் ஆதலால், நல்வினை தீர்ந்தவுடன் விண்ணுலகத்தினின்றும் வீழ்ந்த யயாதி அரசன் போல மகிழ்வற்று ஒளிகுலைந்து வருந்துகின்ற சக்கரவர்த்தியின் வேண்டுகோளுக்கு இணையாமல், மீளவும் அப்புரவலர் பெருமானை நோக்கி, அரசரேறே! நாம் வாய்மையாளரென்றும், சொல்லியசொல் தவறாதவரென்றும், அடிக்கடி உம்மை நீரே புகழ்ந்து கொள்ளுகிறீரன்றோ? அத்தன்மையுடையீராயின், எனக்கு வரமளித்து மறுபடி அதனைத் தடுத்துரைக்கின்றீரோ ? இஃது பெரியோர் பெருந்தன்மையோவென்று இகழ்ந்துரைத்தனள். அதுகேட்டு மீளவும் கைகேயியை நோக்கி, அடி கொடியசண்டாளி! யானிறந்து, ஸ்ரீராமனும் வனவாசஞ்சென்றபின்னர், நீ மட்டும் தனியே மகிழ்வுறக்கடவை. நானிவ்வுலகிலும் மகிழ்வற்று, விண்ணுலகஞ்சென்றும், அங்குள்ளோர் என்னை நோக்கித் தசரதரே ! நீர் பெண்ணறிவு கேட்டு, ஸ்ரீராமனை அரணியத்துக் கனுப்பலாகுமோ ? என வினவின், யான் அம்மொழிக்கு யாதுவிடையுரைத்து மகிழவெய்துவேன்; நெடுநாள்

மக்கட்பேறின்றிப் பற்பல ஜபதபங்களால் நற்குண நற்செயல்கள் நிறைந்த ஸ்ரீராமனை அருமைச் செல்வமைந்தனாகப் பெற்று, இப்பொழுது அவனை எங்ஙனம் காடுசெல்லவிடுவேன்; சூரனும், பற்பலகலை வல்லவனும், வெகுளியென்றவனும், பொறுமையுள்ளவனும், செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களுள்ளவனும், கருநெய்தல்போன்ற திருமேனியுடையவனும், முழங்காலளவுநீண்ட சுந்தரத் திருத்தோள்களுடையவனும், சிறந்த திண்மையுடையவனும், எக்காலும் வருத்தமென்பதறியாமல் இன்பமுற்றவனும் ஆகிய ஸ்ரீராமசந்திரனைக் கானகம் போகவிட்டு, அவன் வருத்தமுறுவதைக்கண்டு பொறுத்திருப்பேனோ? ஸ்ரீராமன் வனவாஸம் போவதைக் கண்ணுற்று வருந்துவதற்கு முன்னமேதானே எனக்கு மரணம் நேரிடுமாயின், யான் விண்ணுலகையடைந்து மகிழ்வுற்றிருப்பேன்; அடிபாவி! கொடிய கைகேயி! என்னருமைத் திருப்புதல்வனாகிய ஸ்ரீராமனை என்னகாரணம்பற்றிக் காடுசெல்லக் கருதுகின்றனை? எனக்கிவ்வுலகினில் அபகீர்த்தியும், அழியாப் பழிப்பும் உண்டாகின்றனவேயென் றிவ்வகையாகப் புலம்பி மயக்கங்கொண்டு வருந்துகையில், கதிரவனும் குடதிசை சேர்ந்து சக்கரவர்த்தியாரது சோகத்தைக்கண்டு உள்ளம்பொறாதவன்போல அலைகடலில் வீழ்ந்து மூழ்கினான்; இவரது மயக்கவிருளே இவ்வுருவாகத் திரிந்ததோவென்று கண்டோர் ஐயுறும்படியாக இருளெழுந்து இராவளர்ந்து சந்திரனுடன்கூடி யொளிபெற்றதாயினும், சக்கரவர்த்தியார்க்கு ஒளியற்றதாகி, முச்சாமமுடையதாயினும் காளராத்திரிபோல மேன்மேல் பெருகியது; பேரரசர்பிரானும், இடையிடையே மையல் தெளிந்தெழுந்து, புலம்பி, இரவைக்குறித்து அடி இராவே! நீ ஒழிந்துபோகாமல், இவ்வாறே வளர்ந்துகொண்டிருப்பாயாயின், யானும் இவ்வாறே புலம்பிக்கொண்டு வருந்தியபோதிலும், ஸ்ரீராமனை அழைத்துக் காட்டுக்குப்போவென்னுங் காலம் நீ அல்லாமையால், அத்துன்பத்தை யடையேன்; ஆதலின், யான் உன்னைக் கைதொழுது வேண்டுகின்றேன்; நீ என்மீதருள்செய்து இந்நிலையிலேயே வளர்ந்து விடியாமலிருக்கக்கடவை. கோளாய ராத்திரியே! நீ விடிகின்றதாயிருக்கின் விரைவாக விடியக்கடவை. இப்பாவி சண்டாளியாகிய கைகேயி முகத்தைப் பார்த்துக்கொண்டிருக்க மனமில்லை; நீ விரைந்து விடிந்து போவாயாகில், யானும் இவள் முகத்தில் விழியாமல் வெளியே போய் விடுவேன்; என்றிவ்வண்ணமுரைத்து, மீண்டுங் கைகேயியை நோக்கிக் கைகூப்பி, அடி கைகேயி! நற்செய்கையுடையையாதலின் இப்பொழுது வருத்தமுற்றவனும், உனக்கு வசப்பட்டவனாதலால் இறக்கும்படியான துயரங்கொண்டவனும், வயதுசென்றவனும், சக்கரவர்த்தியும், உனக்குக் கணவனுமாகிய என் திறத்தில் நீ அருள்செய்யக்கடவை. அடி கைகேயி! இதுவரையில யான் உன்னைப் பழித்தேன், துயரம் மிகுந்தமையால் என் மனமும் மருள்கொண்டிருந்தது; யான் தனியே அன்றிச் சபைகளில

ஸ்ரீராமனுக்குத் திருமுடி சூட்டுவேனென்று சொல்லிவிட்டேன்; அதனைப் பொய்யாகச்செய்வது இகழ்வு; யான இதுவரையிலுரைத்ததையெல்லாம் காட்டில அழுகையாக நினையற்க; என்மீதருள்புரிந்து, களிப்புறுவிப்பாய், நான் அரசுசெல்வ முற்றும உனக்களித்ததாகக்கடவது. ஆதனை நீயே ஸ்ரீராமனுக் கருள்செய்தளிப்பாய ? இவ்வகை நீ செய்யின், பெரும்புகழ் பெறுவாய; எனக்கும, ஸ்ரீராமனுக்கும, ஆசிரியர்களுக்கும், பரதனுக்கும, நீ இவ்வகைசெய்வ துகப்பாகும்; என்றிவ்வண்ணம் வஞ்சமின்றிச் சக்கர வர்த்தியார் வேண்டிக்கொண்டும, கெடுமதியுள்ள கொடியபாவியாகிய கைகேயி அவ்வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளாமல, ஒருபிடியாக நிற்கை யில, சக்கரவர்த்தியார் தரணியில் வீழ்ந்து மூர்ச்சையடைந்து வருந்தி, விடியுங்காலையில, தம்மை எழுப்புவதற்காக முழக்கும, வீணை முதலிய வாத்தியங்களையும, வந்திகள பாடுவதையும மறுத்து, மகிழ்வற்றுக் கடுந் துயர் கொண்டிருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில பதின்மூன்றாவது சருக்கம
முற்றிற்று

## பதினான்காவது சருக்கம்.

*தசரதச்சக்கரவர்த்தியாரது கருத்தையுணர்ந்து ஸ்ரீராமபிரானை அழைத்துவரக் கைகேயி கட்டளையிட்டது.*

இவ்வண்ணம் புத்திரவியோகத்தின் அச்சங்கொண்டு தரையில வீழ் ந்து மூர்ச்சையடைந் துழலுகின்ற சக்கரவர்த்தியாரை நோக்கிக் கைகேயி மீளவும சக்கரவர்த்தியாரே ! எனக்கு வரமளிப்பேனென்று பிரதிஜ்ஞை செய்து பின்பு அதனை நிறைவேற்றாமல ஏனோ?தரையிலவீழ்ந்து வருந்து கின்றீர்;—

ఆహుస్సత్యంహిపరమం ధర్మంధర్మవిదోజనాః
సత్యమాశ్రిత్యహిమయా త్వంచధర్మంప్రచోదితః

அஹுஸ்ஸத்யமஹிபரமம தர்மம்தர்மவிதோஜநா:
ஸதயமாச்ரித்யஹிமயா தவஞ்சதர்மம்ப்ரசோதித:.

* அறநெறியைக் கடைப்பிடித்த பெரியோர்கள மெய்ம்மையே சிறந்த அறமென்று உரைக்கின்றனர்கள். யானும உண்மையாகிய அறத்தை மேற்கொண்டே உம்மை, வினவினேன், சைப்யமஹாராஜனும் தான் புறாவுக்குச் சத்தியஞ்செய்து, தன் உடலை யறுத்துக்கொடுத்துப் புகழ

பெற்று நற்கதியையு மடைந்தனனன்றே? அளர்க்கமஹாராஜனும் ஒரு வேதியனுக்குத் தன் கண்களை அகமகிழ்ச்சியோ டளித்தனனன்றோ? பெருங்கடலும் சத்தியத்தினாலன்றோ? சிறிதேனும் தன் கரைகடந்து செல்வதில்லை; சத்தியமே பிரஹ்மம்; சத்தியத்திலே தருமம் நிலைபெற்றிருக்கின்றது; சத்தியமே அழிவற்ற வேதங்கள்; சத்தியத்தினாலே மோட்சம் வாய்க்கின்றது. ஆதலின் நீர் அறம்வழுவாத நெஞ்சுடையீராயின், சத்தியந்தவறாமல் அவ்வழியில் செல்லக்கடவீர். நீர் எனக்களித்தவரம் பயனுள்ளதாகக் கடவது. அறத்தை வளர்ப்பதன்பொருட்டு யான் உம்மைத் தூண்டுகின்றமையால், ஸ்ரீராமனைக் காட்டுக்கனுப்பிவிடக் கடவீர். மூன்றுமுறை யுரைத்தேன், இவ்வண்ணம் நீர் செய்யாவிடின் உம் மெதிரிலே உயிர்மாய்த்துக் கொள்வேன், என்றிவ்வண்ணம் சிறிதேனும் நாணமின்றிப் படபடவென்றுரைசெய்தனள். அரசர்க்கரசரும் அது கேட்டு இந்திரனிட்ட பாசத்தை அவிழ்த்துக்கொள்ளப் பலிசக்கரவர்த்தி திறனற்று நின்றதுபோலக் கைகேயியிட்ட தருமபாசத்தை விடுவித்துக் கொள்ளத் திறனற்றவராகி, மனஞ்சுழன்று, நுகத்தினிடையி லிறுக்கிக் கட்டி அடிக்கப்படுகின்ற காளைபோல வருத்தமுற்று நடுநடுங்கிக் கடையில ஊக்கத்தோடு கண்கள் சுழன்று, காணுதார்போலக் கைகேயியை நோக்கி, அடிபாவி கைகேயி! யான் முன்பு திருமணம் புரியுங்காலையில் மந்திரபூர்வமாக உன் கையைப் பிடித்தனனன்றே? அந்தக் கைகேயியையும் விட்டுவிட்டேன்; இனி எனக்கு நீ பகையே அன்றி, மனையாட்டி அல்லை; ஆதலின் பரதனோடு நின்னையும் விட்டுவிட்டேன், இரவுகழிந்தது வைகறை வந்தது; இனி வசிஷ்டமாமுனி முதலானோர்கள் வந்தென்னை ஸ்ரீராமனுக் கபிஷேகஞ் செய்வதற்காகச் சித்தஞ்செய்த சாமான்களைக் கொண்டே ஸ்ரீராமன் எனக்குப் பிரேதகாரியங்களைச் செய்யக்கடவன். நீயாவது உன்பிள்ளையாவது எனக்குச் செய்கடன்களைச் செய்யவேண்டுவதேயில்லை; அடி தீச்செயலுடையாளே! ஸ்ரீராமனுக் கபிஷேகஞ் செய்வதைத் தகைவாயானால், முன்பு என் கண்மணியாகிய ஸ்ரீராமனுக்கு அபிஷேகமென்று பெருமகிழ்வுகொண்ட மாந்தர்களெல்லோரும் மகிழ்வற்றுத் தலைவணங்கி வருந்துவார்களே; அவர்களை யான் பார்த்து எவ்வண்ணஞ் சமாதான முரைப்பேன், என்றிவ்வண்ணம் புலம்பிக்கொண்டிருக்கையில், மதி விண்மீன்களாலழகாகிய இரவுகடந்து பொழுது விடிந்தது. சிறிதும் இளகுதலில்லாமல் பாவமே குடிகொண்ட நெஞ்சையுடைய கைகேயி கடுஞ்சினங்கொண்டு சக்கரவர்த்தியாரை நோக்கி, மன்னவா மன்னரே! பரவிய விஷம்போலவும், பெரும்பிணிபோலவும், என் உள்ளத்தை வருத்தும்படி யுரைக்கின்றீர்; விரைவில் ஸ்ரீராமனை இங்கழைத்து வரச்செய்து, காடுசெல்லக் கட்டளையிட்டனுப்பிவிடும், என் பிள்ளைக்குப் பட்டங்கட்டிவிடும், என்னைப் பகையற்றவளாகச்செய்து, வாய்மையைப் பாதுகாத்துப் பின்பு மகிழ்வுறக்கடவீர் என்று சொல்லினள். அத்

தீயசொல்லைக்கேட்டுக் கசையினலடிக்கப்பட்ட சிறந்த பரிமாபோல்
மேன்மேலும் துயர் தூண்டப்பட்டவராகிக் கடுங்கோபங்கொண்டு, கை
கேயியை நோக்கி, அடி பெண்களில் தீயாளே! நான் அறமென்னும் வலை
க்குள்ளகப்பட்டுக் கட்டுண்டேன்; என்னுணர்வும் என்னின்றும் குடிபோயி
னது; அறமுறை தவறாதவனும், என்னருமைபெருந் திருமகனுமாகிய
ஸ்ரீராமன் திருமுகமண்டலத்தைக் காணவிரும்புகின்றேன்; என்றிவ்வகை
யாக ஊளைசெய்கையில், பொழுதுவிடிந்து வெய்யோன் உதயாசல சிக
ரஞ்சேர்ந் தொளிசெய்ய, நல்ல முகூர்த்தத்தில் நல்ல நக்ஷத்திரத்தில் வசி
ஷ்டமஹாமுனிவர் தம்மாணாக்கர்களோடு அபிஷேகத்துக்குரிய பொருள
களை எடுப்பித்துக்கொண்டு வழியெங்கும் பனிநீர் தெளித்து விளக்கிப்
பதாகைகட்டி, மகரதோரணங்கள் நாட்டி, மலர்கள் தூவிப் பூமாலைகள்
தொங்கவிட்டு, சிங்காரிக்கப்பட்டுப் பெருமகிழ்வுகொண்ட மக்கள் நிரை
நிரையாய் நிறையப்பெற்றுப் பற்பல பண்டங்கள் நிரம்பிய கடைத்தெருக்க
ளோடு கூடியதாகி, சந்தனப் புகைகளும், அகிற்புகைகளும் கமழச்செய்து,
எங்கும் பெருமகிழ்வுகொண்டாடுகின்ற அத்திருவயோத்திமாநகரைக்
கடாட்சித்துக்கொண்டு; அமராவதிநடுவில் விளங்குகின்ற தேவேந்திர
னரண்மனைபோலச் சிறந்து, பொருள்கள் நிறைந்தும், பற்பல பறவைக
ளுடன் கூடியும், நாட்டார் நகரத்தார்களாலும், வேதவேதாந்தங்களறிந்து
உயர்ந்த வேதியர்களாலும் நிறைந்த சக்கரவர்த்தியாரது அந்தப்புரத்தி
னுட்புக்கு, அங்குச்செல்லுகின்ற சுமந்திரனென்னுஞ் சாரதியைக் கண்
டழைத்துத் தோப்பாகரே! நீர் விரைவாக வேந்தர்பெருமானிடஞ்சென்று,
யாம் இங்கு வந்திருக்கின்றோமென்றும், நாற்றிசைகளிலுமுள்ள கடலி
னின்றும், கங்கைமுதலிய மஹாநதிகளினின்றும், பொற்குடங்களில்
தீர்த்தங்கள் நிறைத்துக்கொண்டுவந்து வைக்கப்பட்டன. அதிற்கட்டை
யாற்செய்த பத்திரபீடமும், அபிஷேகத்தின்பொருட்டு அமைப்பிக்கப்
பட்டது; நவதானியங்களின் விதைகளும், நவரத்தினங்களும், கந்தபுஷ்
பங்களும், தேன், தயிர், நெய், பொரி, பால், தருப்பைகளும், அமைப்
பிக்கப்பட்டன. எட்டுக் கன்னிப்பெண்களும், மதமாதங்கமும், நாலு
குதிரைகள் கட்டி, அலங்காரஞ்செய்யப்பட்ட தேரும், வாள் கோதண்டம்
கணைகளும், காவுகாரர் சிவிகையும், முழுமதிபோன்ற குடையும்,
வெண்மைபொருந்திய சாமரைகளும், தங்கக்கிண்ணியும், தங்கச்சங்கிலி
பூட்டி வெளுத்துயர்ந்த காளையும், நான்கு கோரைப்பற்களுடைய சிங்க
மும், சிறந்த பரிமாவும், சிங்காசனமும், புலித்தோலும், எரிகின்ற அக்கி
னியும், எல்லாவாத்தியங்களும், அலங்காரஞ்செய்துகொண்ட பொதுமட
ந்தையரும், ஆசிரியர்களும், வேதியர்களும், தேனுக்களும், அறம் விளக்
கத்தக்க மற்றுள்ள விலங்கு பறவைகளும், நாட்டார் நகரத்தார்களும்,
மற்றுமுள்ள பலவகை வருணத்தார்களும், ஸ்ரீராமாபிஷேகத்தின்பொரு
ட்டுக் களிப்புடன் சித்தமாயிருக்கின்றனர்கள் எனவும், நாற்றிசை வெற்றி

மன்னர்களும், காத்திருக்கின்றனர்களெனவும், சக்கரவர்த்தியார்க்குத் தெரிவித்து, அவரைக் கடுகச்செய்து அழைத்துவருவீராக; ஸ்ரீராமன் நல்லகாலந்தப்பாமல் அபிஷேகங்கொண்டு இராச்சியபரிபாலனஞ் செய்யக்கடவனென்று கட்டளையிட்டனர். சுமந்திரரும் வசிஷ்டமஹாமுனிவரது ஆஜ்ஞையைச் சிரமேற்கொண்டு, சக்கரவர்த்தியாரைத் துதிசெய்து கொண்டே அரசர்பிரானிருக்குமிடஞ் செல்லுகையில், வாயில்காப்பவர் இவரைக்கண்டு, சக்கரவர்த்தியார்க்கு இவர் மிகவேண்டியவரெனத் தடை செய்யாதிருந்தமையால், இவர் வேந்தர் வேந்தனருகிற்சென்று, சக்கரவர்த்தியினது மனக்கவலையை உணராமையால், வழக்கப்படித் தோத்திரஞ் செய்யத்தொடங்கி, சூரியனுதயமாகுங்காலையில், (பூர்ணசந்திரனுதிக்கையில்) பெருங்கடல் மகிழ்ந்து பெருகுவதுபோல அன்புடையராகித் தேவரும் எங்களை மகிழ்விக்கக்கடவீர். இக்காலையில் மாதலி தேவேந்திரனைத் துதிசெய்தனன். வாஸவனும், எல்லாத் தானவகணங்களையும் வென்று, ஜயங்கொண்டனன். அவ்வண்ணம் யானும் தேவரைத் துதித்து எழுப்புகின்றேன், வேதங்களும், வேதாங்கங்களும், சுயம்புவாகிய பிரமதேவனை எழுப்புவதுபோல யானும் தேவரை எழுப்புகின்றேன்; சூரியன் சந்திரனுடன்கூடி, இந்நிலத்தை இப்பொழுது எழுப்புவதுபோல யானும் தேவரை எழுப்புகின்றேன்; அளவிலாப் பெருஞ்செல்வராகிய தேவர் துயிலுணர்ந்து அலங்காரஞ் செய்துகொண்டு, மேருவினின்றெழுந்த செங்கதிரவனைப்போல ஒளிபெற்றுலாவக்கடவீர். செங்கதிர் வெண்கதிர்களும், சிவவைசிரவணர்களும், அக்கினி வருணர்களும், இந்திரோபேந்திரர்களும், தேவருக்கு வெற்றிதந்தளிக்கக்கடவர்கள். ராஜசார்த்தூலரே! பொழுது இனிதாக விடிந்தது; தேவர் கட்டளையின்படி செய்யத்தக்க செயல்களுஞ் செய்யப்பட்டன. ஆதலின் தேவர் துயிலுணர்ந்து கண்விழித்து மேற்செய்யத்தக்க செயல்களைச் செய்யக்கடவீர். ஸ்ரீராமாபிஷேகத்துக்குரியன ஆயத்தமாயின; வசிஷ்டபகவானும், நாட்டார், நகரத்தார், வேதியர் மாணாக்கர்களுடன் சித்தமாக எழுந்தருளியிருக்கின்றனர். ஆதலின், தேவர் ஸ்ரீகோதண்டராமனுக்கு அபிஷேகஞ் செய்யும்படி கட்டளையிடக்கடவீர். மேய்ப்பவனில்லாது திரிகின்ற பசுக்களைப்போலவும், சேனைத்தலைவனில்லாத படைகள்போலவும், சந்திரனீங்கிய இராத்திரிபோலவும், ரிஷபமில்லாத ஆனிரைபோலவும், அரசனில்லாத தேசம் விளங்காதன்றோ! என்றிவ்வண்ணம் இனிமையாகத் துதிசெய்கையில், தசரதசக்கரவர்த்தியார் இன்புறாது, துன்பம் மிகுதியுமடைந்து, துயிலற்றமையினாலும், சோகத்தினாலும், கண்கள் சிவந்து சூதனை நோக்கிச் சுமந்திரா! இம்மொழிகளினால், என் மார்பை ஏன்றாக்கின்றனையென்று தீரமாக உரை செய்கையில், தேர்ப்பாகர் அம்மொழியைக்கேட்டு, அரசர்பிரான் வருந்தியிருப்பதையுங் கண்ணுற்று, என்னகாரணமோ! என்றையமுற்றுக் கைகுவித்துக்கொண்டு அவ்விடம்விட்டுச் சென்றனர். அப்பொழுது

சக்கரவர்த்தியார் ஸ்ரீபரந்தாமனாகிய ஸ்ரீராமபிரானை அழைத்துவரச் சுமந்திரருக்குக் கட்டளையிடவேண்டுமெனக் கருதினாராயினும், துன்பமிகுதியினால், வாய்திறந்து பேசத்திறமையற்றுக் கிடக்கின்றமையையறிந்த கைகேயி அவரது கருத்தையறிந்து, 'சுமந்திரரை யழைத்து, சுமந்திரரே! அரசர்பெருமான் இராமுழுதும் துயிலின்றி, ஸ்ரீராமனையே நினைந்து கொண்டிருந்தமையால், இப்பொழுது துயில்கொண்டிருக்கின்றனர். ஆதலின் நீர் விரைந்து சென்று, ஸ்ரீராமனை இங்கழைத்துவரக்கடவீர் உமக்கு நன்மையுண்டாகக்கடவது; இவ்விஷயத்தில் சிறிதும் யோசனைசெய்ய வேண்டுவதில்லை யென்று கட்டளையிட்டனள். சுமந்திரர் அம்மொழியைக் கேட்டுக் கைகேயியின் கருத்தின் தன்மையறியாமையினால், ஸ்ரீராமபிரானுக்கு அபிஷேகஞ்செய்விப்பதற்கே அழைத்துவரச் சொல்லினளென்றெண்ணி, உள்மகிழ்ந்து, அங்கிருந்து புறப்பட்டு, ஸ்ரீராமபிரானைக்கண்டு களிக்க வேண்டுமென்று விரைந்து, ஸ்ரீராமாபிஷேகத்தைக்கண்டு களிப்புற வேண்டுமென்று அவாவுற்றுக் கோட்டைவாயில் முதல் எங்கும் அடர்ந்து நிறைந்துள்ள, நாட்டார், நகரத்தார், சுற்றத்தார், வேதியர், வேந்தர், சூதமாகதவந்தியர், நட்நாதகக்காயகர்கள், சேடி, சேட, விதூஷகர்கள் முதலிய பற்பல சாதியோரையும், சதுரங்க சேனைகளையும் கண்டனர்

அயோத்தியாகாண்டத்தில் பதினான்காவது சருக்கம்

முற்றிற்று.

## பதினைந்தாவது சருக்கம்.

சுமந்திரர் ஸ்ரீராமபிரானை எழுந்தருளச் செய்துகொண்டு

வரச்சென்றது.

அந்தணர்களும் இரவைப்போக்கித் துயிலுணர்ந்து செய்கடன்களை முடித்து வசிஷ்டர் முதலிய புரோகிதர்களுடன் கூடிச் சபாமண்டபஞ் சேர்ந்து, அமைச்சர்கள், படைத்தலைவர்கள், நகரத்தலைவர்களுடன் ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகங்கண்டருளும் வைபவங்களைக் கண்ணுறும்படி பெருமகிழ்வுகொண்டு இரவி தூயனாக உதயமாகி ஒளிர்கையில் பூசநட்சத்திரத்தில் கடகலக்கினத்தில் ஸ்ரீராமாபிஷேகத்துக் குரியனவாகிய தங்கத்தாற் செய்த பூரணகும்பங்களும், சிங்காரிக்கப்பட்ட மங்களாஸனமும், சிறந்து புலித்தோல் தைத்தழகாகிய தேரும், கங்காயமுனா சங்கமத்தினின்று மழைப்பித்த தீர்த்தமும், மற்றுள்ள பாவனமாகிய வாபிகூப தடாகங்களினின்றும் நாற்கடல்களினின்று மழைப்பித்த தீர்த்தங்களால் நிரப்ப

பட்டுக் கமலம், காந்தள், குவளைகளுடன்கூடி நறுமணம் வீசுகின்ற பொற் குடங்களும், தேன், தயிர், நெய், பொரி, தருப்பை, மலர், பால்களும், வேசிகளும், தர்திகளும், சந்திரகிரணங்கள்போல வெளுத்துத்திரண்டு நீண்ட வெண்சாமரைகளும், முழுமதிபோன்ற வெண்குடையும், வெண் மையிறமுள்ள கொழுத்தகாளையும், வெள்ளைக்குதிரையும், பட்டத்துக் குரிய சிறந்த மத்தமாதங்கமும் பலவகை யணிகளணிந்துலாவுகின்ற அட் டகன்னியர்களும், பலவகை வாத்தியங்களும், வந்திமாகதர்களும் மற் றும் மனுகுலத்திற் பிறந்தோர்க்குச் செய்யும் முறைப்படிக் கட்டளை யிட்டுச் சித்தஞ்செய்துகொண்டு சக்கரவர்த்தியார் பொழுதுவிடிந்துந் துயிலெழவில்லையே? சூரியோதயமாகியும் மஹாராஜதிலகரோ! திருவபிஷே கத்துக்குரியன யாவுஞ் சித்தமாயினவே? இச்செய்தியை வேந்தர் பெரு மானுக் கறிவிக்கத் தக்கவன், யாவனுங் கட்புலனாகிலனேயென எண்ணிக் கொண்டிருக்கையில், சுமந்திரர் அங்கெய்தி, அங்குள்ள வேந்தர்களை நோக்கி, யான் அரசர் தலைவன கட்டளையின்படி ஸ்ரீராமபிரானை யெழுந்த ருளப்பண்ணிக்கொண்டு வருவதற்காக, யான் புறப்பட்டுச் செல்லுகின் றேன்; நீங்கள் புரவலர்பிரானுக்கும், ஸ்ரீராமசந்திரனுக்கும் மிகுதியும் இஷ்டமுள்ளவர்களாதலின், உங்களுக்கு யான் இப்பொழுது செய்யவே ண்டுவதென்னவெனவினவ? அவ்வேந்தர்களும் சூதனைநோக்கிச் சுமந்தி ரரே! முன்பு மஹாராஜனை எழுப்பி யாங்கள் காத்திருப்பதைத் தெரிவித் துப் பின்பு சக்கரவர்த்தியார் கட்டளையின்படி செய்வீராகவென மொழிந் தனர்கள். சுமந்திரர் அதுகேட்டு அதுவே ஒக்குமென அவர்கள் சொல்லைப் பெற்றுக்கொண்டு மீண்டும் அந்தப்புர வாயிலில் சேர்ந்து அதனுட்புகுந்து புரவலர் பெருமான் படுத்திருக்கு மிடத்தருகில் திரைக்குவெளியேநின்று பூமண்டலா கண்டலர் குலத்தைப்புகழ்ந்து பார்த்திவேந்திரனையுந் துதி செய்து, சோமசூரிய சிவகுபேர வருண வைசுவான ரேந்திரோ பேந்திரர் கள் தேவருக்கு நன்மையாக்கக் கடவர்களென; ஆசீர்வாதஞ்செய்து, மேலும் அவனி மணாளனைக்குறித்து ராஜராஜேந்திரா! பொழுது விடிந் தது; தேவரீருடைய கட்டளைப்படி யாவுஞ் சித்தஞ் செய்யப்பட்டன. ஆதலின், தேவர் எழுந்து மேலே செய்யத்தக்க காரியங்களைச் செய்யக்கட வீர்; அந்தணர்களும், படைத்தலைவர்களும், நாட்டார் நகரத்தார்களும், நாற்றிசைவேந்தர்களும், வந்து காத்திருக்கின்றனர்கள், எனறிவவண்ணம் புகழ்ந்துரைத்தனர். வெற்றித்தார் மன்னர் கோமானும் துயிலுணர்ந்து சுமந்திரனை நோக்கிச் சுமந்திரா? ஸ்ரீராமசந்திரனை அழைத்துவாருமெ ன்று இக்கைகேயிகட்டளையிட்டனளன்றோ? அது என் கட்டளையென்று தெரியுமன்றோ? அந்த என் கட்டளையைச் செய்யாது மீளவும் இங்கு வந்து நிற்பதற்குக் காரணம் யாது? யான் துயில் கொண்டவனல்லேன் கண்விழித்தே யிருக்கின்றேன். நீ பொருக்கெனச் சென்று, என் அரு மைத்திருமகனை இங்கழைத்துவரக் கடவீரென்று மறுபடியும் ஆஜ்ஞை

செய்து அனுப்பினார் தேர்வல்லவரும் அவ்வாணையைத் தலைமேல் தாங்கித் திருவபிஷேகத்தின்பொருட்டே ஸ்ரீபரந்தாமனாகிய ஸ்ரீராமபிரானை அழைப்பிக்கின்றார், மஹாராஜனெனக்கருதித் தம்மையறியாத களிப்புக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு அரசர் மறுகிலுள்ள விநோதங்களையும், மஹாஜனங்களையும் கண்டு மகிழ்ந்தவராய், ஸ்ரீராமபத்திரன் திருக்கலியாண குணங்களையே யாவருமெடுத்துப் புகழ்வதைச் செவியுற்றும், இந்திரன் அரண்மனைபோல அழகாகியும், கைலைமலையின் நுனிபோல வெளுத்துயர்ந்து பெருங்கவாடம் நாட்டியும், பல திண்ணைகளினால் விளங்கிப் பொன்னுஞ் சிகரங்கள் கட்டிப் *பொன்னம்பாவைகளை அமைத்துச் செய்த முனையுடையதாயும், நவமணிகளிழைத்துப் பவளக்கொடிகளினாலியற்றிய தோரணங்களாற் பூட்டப்பட்டு, மாரிகாலமேகம்போலவெளுத்து, மேருகிரியின் குகைபோல எங்கும் பொன்மணிகணங்கள் நிறைந்து விசாலமாயும், நவமணி மாலைகளால் அலங்கரிக்கப்பட்டும், முத்துகளால் பரப்பப்பட்டும், சந்தன அகிற்கட்டைத் தூபங்கள் கமழ்ந்தும், தாரதரமென்னுஞ் சந்தன மலையின் சிகரம்போல எங்குஞ் சந்தனச் சாந்தின் வாசனை சூழ்ந்தும், வெள்ளன்னம் மயில் முதலிய பறவைகளின் ஒலி பரவியும், உயிருள்ளனபோலச் செய்வித்த செந்நாய் முதலிய பதுமைகளால் நிறைந்தும், காண்போர்களுடைய மனத்தோடு கண்களையும் தன்னுள் கவர்ந்து கொண்டும், குபேரன்மாளிகைபோலப் பலவகை நிதிகள் நிறைந்தும், இந்திரன் திருமனைபோலச் சகலபோகங்களும் பொருந்தியும், நாநாவித மிருகபக்ஷி நிறைவுள்ளதாகியும், வச்சிரபதுமராகாதி மணிகளினொளியினால், சந்திர சூரியர்களைப்போல இலங்கியும், ஸ்ரீராமபிரானை ஏத்திப் பணிகொள்வதன் பொருட்டுக் கைகூப்பி நிற்கின்ற மக்களாலும், ஸ்ரீராமபிரானைக் காண்பதற்காகக் காணிக்கை கைக்கொண்டு நிற்கின்ற நாட்டார் நகரத்தார்களாலும், கூன் குறளர் கஞ்சுகமாக்களாலும் சூழ்ந்தும் அழகாய் விளங்காநின்ற சர்வசுவாமியாகிய ஸ்ரீராமசந்திரன் திருமாளிகையைக் கண்ணுற்றுத் துரங்கங்கட்டிய தேர்மீதேறி ஸ்ரீரகுகுலதிலகனைத் திருமுடி சூட்டுதற்பொருட்டு அழைக்கப்போகின்றானென்று பார்ப்போர் மகிழ்ச்சென்று, தேவேந்திரன் மாளிகைபோன்ற அத்திருமாளிகை சேர்ந்து, அங்குள்ள விநோதங்களையும், காத்திருக்கும் மஹாஜனங்களையுங் கண்ணுற்று, ஸ்ரீராமாபிஷேகத்தைப்பற்றிய கதைகளையும், மங்களவாத்திய கோஷங்களையுஞ் செவியுற்று, சதுரங்க சேனைகளையும், சத்துருஞ்சயமென்னும் பட்டத்துக்குரிய யானையையுங்கண்டு களிப்புற்றுப் பெருங்கடலில் மகரமீன் தடையின்றி உட்புகுவதுபோல ஸ்ரீரகுநாயகர் திருமாளிகைக்குள் தடையின்றிப் புகுந்து மகிழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் பதினைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## பதினாறுவது சருக்கம்.

*சக்கரவர்த்தித் திருமகனாைச் சுமந்திரா அழைத்தது.*

சுமந்திரர் ஜனங்கள் நிறைநத எல்லாவாயில்களையுந்தாணடி, அந்தப் புரவாயில் சோந்து, அங்கு வில்வாள கேடயமுதலிய படைகளைக் கைப்பிடித்துச சிறந்த அணிகளை யணிந்து, ஊக்கத்துடன் காக்கின்ற படர்களும், மூபபினராய்க் காவித்துணியுடுத்துப் பிரப்பங்தடி யிடித்து நிறகினற கஞ்சுகமாக்களும் தம்மைககண்டு விரைவாக வெழுந்து வினயத்துடன் நிறகக் கண்டு, அவர்களையழைத்து வாயில் காப்பாளாகளே! நீங்கள ஸ்ரீராமபிரானிடங் கடுகிசசென்று, சுமந்திரன வாயிலில் வந்து நிற்கினறனென்று தெரிவிப்பீர்களாகவென மொழிநதனா, அவாகளதுகேட்டு விரைநது சீதாபிராட்டியுடன வீற்றிருக்கின்ற ஸ்ரீரகுலதிலகனைக் கிட்டிச சுவாமீ! சுமந்திரா வாயிலில் வந்து நிறகினறாரென வுரைசெய்தனர்கள. உடனே ஸ்ரீராமசந்திரரும், இவர் நம தந்தையார்க்கு மிகுதியும் அந்தரங்கரெனக் கருதிக் கௌரவஞ்செயதழைப்பித்துக கொண்டனர். சூதரும், அங்கெய்திச சித்திராசனம்போட்ட பொற்பீடத்தில் எல்லா அணிகளாலும் அலங்கரிக்கப்பட்டு வைசிரவணனபோல விளங்குகினறவரும, ஏனத்தின குருதிபோலச சிவந்த பரிமளகந்தம்பூசி, வெணசாமரை பிடித்து அருகில் நிறகின்ற ஸீதாதேவியுடன சேர்ந்தவருமாயச் சித்திரையெனனும் நாணமீனேடு கூடிய சந்திரன்போலவும், ஒளியினுல் கோடி சூரியர்போலவும் ஒளிசெயகினற ஸ்ரீராமசந்திரர் திருவடித் தாமரைகளிலே தண்டஞ் சமர்ப்பித்துக் கைகுவித்துககொணடு, விஹாரசயநாஸநாதிகளில் குசலம் வினவி, சக்கரவாத்தித் திருமகனுரே! கோசலையின நற்புதல்வரோ! தேவருடைய திருத்தகப்பனார் கைகேயி மஹாதேவியுடன வீறறிருந்து, தேவரீரைக்கண்டுகக்க அவாக்கொணடிருக்கினறனர்; ஆதலின காலநீட்டியாமல் எழுந்தருளவீராகவென இனிமையாக விண்ணப்பஞ் செய்தனா. சக்கரவர்த்தித் திருமகனுரும் அதனைத் திருச்செவிசாத்தி உளளமகிழ்ந்து ஸீதாபிராட்டியாரைக் கடாக்ஷித்து என பிராணநாயகி! என் திருத்தந்தையரும், கைகேயியும் கலநது, எனக் கபிஷேகஞ்செய்வதைப்பறறி, ஆலோசனை செயதுகொண்டிருக்கினறனாகள். கைகேயிதேவியும், பர்த்தாவின் திருவுளளத்தை உணரந்து நடப்பதினுலும், எனமீதுளள அனபினுலும், என்னை அழைத்துவரும்படி சுமந்திரருக்குக் கட்டளைசெய் தனுப்பினள்; வேந்தர்பிரான் எனக்கிப்பொழுது யுவராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்விப்பதறகாகவே என்னை விரைவாக அழைப்பிக்கின்றனரெனக் கருதுகின்றேன்; ஆதலின், யானிப்பொழுதே சென்று, தந்தையாரைக்கண்டு சேவித்து வருவேன்; நீ இங்கு தோழி தாதிமார்களுடன் சுகமாக வீற்றிரு

ந்து இன்புறுவாயென்றிவ்வணணம் அருளிச்செய்தனா. சீதாபிராட்டியா ரும் மகிழ்வுகொணடு ஸ்ரீராமபிரானை எழுந்தருளுகையில், தாமும் அந்தப் புரத்துவாயிற் வரையில் பின் சென்று, இராஜசூயயாகஞ் செய்வதற்குரிய சிறந்த அந்தணர்களுடனகூடிய தேசத்தை நான்முகக்கடவுள் தேவேந்தி ரனுக் களித்தாப்போல அரசர் பெருமானும் தேவருக்களித்து, இனிது செய்யக்கடவர். யாகதீக்ஷைபூண்டு விரதந்தரித்து நீராடித் தூயமையராகி, மானுரியுடுத்துக் கலைக்கோட்டைத் திருககரததில் பற்றி, வீற்றிருககினற தேவரை அடியாளடைந் தின்புறுவேன்; தேவருககுக கீழ்த்திசையை வச்சிரபாணியும், தென்திசையை இயமனும், மேற்றிசையை வருணனும், வடதிசையைக் குபேரனும் பாதுகாககக்கடவாகளென்று, தியானஞ் செயதுகொண்டிருந்தனர் ஸ்ரீகோதணடபாணியும், ஜனக நந்தனுக்கு விடைகொடுத்துளளேபோகவிடுத்துச சுமநதிரருடன தம் திருமாளிகை விட்டுச சிங்கக்குருளை மலைகருகையைவிட்டுப புறபபட்டாறபோலப் புறப படடு வாயிலில் கைகுவித்து வணகசத்துடன நிறகினற இளையபெருமா ளையும் கடாக்ஷித்துக்கொணடு, நடுபபிராகாரததில் கூட்டங கூட்டமாக நிற்கின்ற நட்பினாகளுடன கலநதுபேசி, இரவலாகளையும் கணடு, அவர வர்களுக்குத் தக்கவாறு இனிமையாகச சமாதானமொழி அருளிசசெயது, வெளளியினுற் செய்யப்பட்டுப் புலித்தோல தைத்து, நவமணிமாலைகளினு லலங்காரஞ்செயது, மேகம்போலக் கம்பீரமாயத் தொனியுடையதாகி, தங்கமிழைத்து, விசாலமாய், மினனல் மின்னினுறபோலக் கணணுறறுப பார்த்தறகரியதாய விளங்குகினற யானைககன்றுகள போலப பருத்துவலி யதாயுயர்ந்த குதிரைகள் கட்டிய திருத்தோமீது ஏறிச செலலுகின்ற தே வேநதிரன்போலவும், ஆகாயததில காசசனை செயகினற நீாகொணடகொ ணடல் போலவும், மஹேநதிரமலை நீஙகி எழுந்த பூரணசநதிரன்போல வும் எழுந்தருளினா இளையபெருமானும அத்திருத்தோமிசையேறிப பினபுறத்தினின்று, ஒரு திருககையினுல் வெணகுடைபிடிதது, மற்றொரு திருக்கையினுல் பொற்சாமரை வீசிககொணடு, தமையனுரைப பாதுகாத் துச் சென்றனர். ஸ்ரீராமபிரான் எழுநதருளுகினருரென மகிழவுகொ ணடு, மக்களெல்லோரும் பேரிரைசசலிட்டுககொணடு பின செல்லுகை யில், பற்பல அணிகளணிந்து அலஙகாரமாயுள்ள நால்வகைப்படைகளும முன்னும பின்னுமாகச் சென்றன. அப்பொழுது பலவகைவாத்தியங்க ளின் ஒலிகளும, வந்திமாகதாகள் துதிசெயயும ஒலியும், சூராகளுடைய சிங்கநாதங்களும், யானைகள் பிளிறலும், குதிரைகளின கனைப்பும், கலந் தெழுந்து ஒலித்தன. நகரிலுள்ள பெண்களெல்லோரும், பெருமகிழவு கொண்டு நீராடி யாடையுடுத் தணிகளணிந்து, மேல் நிலையிலேறிச் சாள ரத்தின் வழியாக ஸ்ரீபரந்தாமனைக்கண்டு உவகைகொண்டு மலர்மழைசொரி ந்து, ஸ்ரீராமபிரான் தங்களைக் கடாட்சித் தருளசெய்ய வேண்டுமென்று வந் தனஞ்செய்து, கோஸலை திருக்குமாரரே! தேவருடைய பெற்றதாயாகிய

கோஸலை அபிஷேகங்கொண்டு வீற்றிருக்கின்ற தேவனைக்கண்டு பெருமகிழ்ச்சி யுறப்போகின்றனளென்று துதித்து, சீதாபிராட்டியின பாக்கியமே பாக்கியம், அவள காமகோடி சுந்தரரான இநத ஸ்ரீராமசந்திரனைக் கணவராகப பெற்றனளன்றோ? நம்முள எவளும அப்பாக்கியம பெறவில்லையே; ஆதலின் இவள முற்பிறப்பில்சிறந்ததவஞ்செய்தவளா யிருத்தல்வேண்டும்; அவவருந்தவம் செய்தமையினலன்றோ? உரோகிணி சநதிரனைச் சேர்ந்தது போல இவளும, ஸ்ரீராமசந்திரனைச் சேர்ந்தனளெனறு சீதாபிராட்டியையும புகழநதனர்கள. ஸ்ரீரகுகுலநந்தனரும், இம்மடந்தையர்களது இனியமொழிகளைத் திருசசெவிசாத்திச் சென்றனர். இந்த ஸ்ரீராமபிரான தந்தையின அருளுபபாட்டால் அபிஷேகங்கொண்டு நம்மெல்லோரையும பாதுகாத்தருளப்போகின்றனர். நமக்கிதனினும் மகிழவுயாதுளது?—

లాభో జనస్యాస్య యదేష సర్వం ప్రపత్స్యతే రాష్ట్రమిదం చిరాయ
నహ్యస్య ప్రియం కించన జాతు కశ్చిత్ పశ్యేన్న దుఃఖం మనుజాధిపేऽస్మిన్

*லாபோஜநஸயாஸயயதேஷஸாவம் பரபதஸயதேராஷடரமிதமசிராய*

*நஹ்யப்ரியமகிஞ்சநஜாதுகசசித பசயேநதுஃகமமனுஜாதிபேஸமின.*

இந்தச் சக்கரவர்த்தித்திருமகனர் நெடுநாளைக் கிந்த ராஜ்ஜியத்தை யுவராஜனகி யடையப்போகின்றனனெனபதே நமமெல்லோருகுஞ் சிறந்த பயனன்றோ? இமமஹாபுருஷர் மஹாராஜனயிருககையில், இவ்வுலகில் ஒருவரும துனபத்தையாயினும், வெறுப்பையாயினும நுகரமாட்டாரன்றோ? என்று மஹாஜனங்கள செய்யுந் துதியையுங் கேட்டு மகிழந்து, கர்ஜ்ஜனை செய்கின்ற சதுரங்கசேனைகள் சூழவெழுந்தருளி, சூத மாகதவந்திவாதக காயகர்களாலும புகழப்பட்டு, ரதகஜதுரகங்களாலும், மஹாஜனங்களாலும் நெருக்கமாய், நவரத்தினங்களினலும், பற்பல சிறந்த பண்டங்களினலும் நிறைந்து விளங்குகின்ற பெரிய ராஜமார்க்கத்தைக கடைக்கணித்துக் களிப்புக் கொண்டனர்.

அயோத்தியாகாண்டத்தில் பதினறாவது சருக்கம் முற்றிற்று.

## பதினேழாவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரான் தம் தகப்பனரிடத் தெழுந்தருளியது.

அநந்தரம் சக்கரவர்த்தித் திருமகனரும், பெருமகிழ்வெய்திய சுற்றத்தாரால் சூழப்பட்டவராகி, சிறந்த அகிற்புகை கமழ்வித்து, உயர்ந்த பதாகைகள நாட்டி, நாநாஜனங்கள் நிறைந்து, கூதிர்ப்பருவத்தில் விளங்கு

கின்ற வெண்முகில்களினிரையோவென ஐயமுறத்தக்க வெள்ளைமாடங்கள் சூழ்ந்தழகாகி, சிறந்த சந்தன அகலின கந்தங்களினாலும், வெண்பட்டுப் பீதாம்பரங்களினாலும், வாயில்கடோறும் குவித்திருக்கின்ற நித்திலங்களினாலும், சிறந்த படிகங்களினாலும் வேறுவேறாக நிறைந்தும், பலவகைப் பண்டங்களினாலும், பக்ஷிய போஜ்ஜியங்களினாலும், தயிர், அக்ஷதை, ஹவிசு, பொரி, தூபம், அகில் சந்தனங்களினாலும், பலவகை மலர் மாலைகளினாலும், எஞ்ஞான்றும் மணமவீசுகின்ற நாற்சந்தியுடையதாய் விளங்குகின்ற ராஜமார்க்கத்திற்சென்று, அன்பர்கள் செய்யும் ஆசீர்வாதங்களையுந் திருவுளத்துக்கொண்டு, அவ்ரவர்களுக்குத் தக்கவாறு வழிபாடுசெய்து, பித்ருபிதாமஹ ப்ரபிதாமஹாதிகள் செய்த முறையைச் சிறிதுந் தவறாது யுவராஜனாகி, எங்களைப் பாதுகாத் தருளவீர் இனி போகங்களினாலும், ஜப்தப ஹோமாதிகளினாலும் பயனேது மிலது; ஸ்ரீரகுநாயகர் திருவபிஷேகங்கொண்டு எழுந்தருளுகையில், கண்குளிரக்கண்டு பேரானந்த மெய்துவோமன்றோ? ஸ்ரீராமபிரான திருவபிஷேகங்கொண்டு நமக்கரசனாவதினும வேறு விருப்புள தொன்றுமிலலை, என்றிவ்வகை மாந்தர்கள் கூறும் மொழிகளைக்கேட்டுந் திரோதாதத கம்பீரத் திருக்கல்யாண குணமுடையவ ராதலால் சிறிதும் உள்ளம வேறுபடவில்லாமல், விருப்பும வெறுப்புங்கொள்ளா தெழுந்தருளினர். அப்பொழுது ஸ்ரீராமசந்திரருடைய வடிவழகிலீடுபடடோருள, ஒருவனாகிலும, ஸ்ரீராமபிரான் திருமேனியினின்றும கண்களிரண்டையும, இழுத்துத் தனவசமாக்கிக்கொள்ளத் திறனுடையவனாயினானல்லன்.—

యశ్చ రామం న పశ్యేత్తు యం చ రామో న పశ్యతి
నిందితస్సర్వలోకే స్వాత్మాప్యేనం విగర్హతే

*யச்சராமம்நபசயேதது யஞ்சராமோநபச்யதி*

*நிந்திதஸ்ஸவஸேல்லோகே ஸவாதமாபயேநம்விகாஹதே.*

யாவனொருவன ஸ்ரீராமபிரானைக் கண்ணாரக்கண்டுகேந்திலனோ? யாவனொருவனை ஸ்ரீராமபிரான கடாக்ஷித் தருளசெய்திலனோ? அவவிருவரும, இவர்கள் கொடியபாவிகள; இவர்கள முயற்சியில்லாதிருக்கையிலும், ஸ்ரீராமபிரான தாமே எழுந்தருளிச் சேவைசாதித்தும, அவர் தம்மைக் கடாக்ஷிக்குமாறு தாமவந்து சேவித்திலரன்றோ வென உலகத்தாரால் பழிக்கபபட்டவாகளாவது மன்றி, ஸ்ரீராமபிரானை நாம சேவிககாமல், உலகநிந்தைக்கும ஆளாகி, இகமுங்கெட்டு நற்பேறு மிழந்தோம; அந்தோவென்று தம்மைத் தாமே இகழ்ந்துகொளவார்கள. சக்கரவர்த்தித் திருமகனார்? அந்தணா, அரசர், வைசியர், சூத்திரர், இந்நால்வரிடத்தும், அவரவர்களுக்குத் தக்கவாறு கருணைசெய்கின்றாரன்றோ? அதுபற்றியும, யாவரும் இவரிடத் தன்புகூர்ந்திருக்கின்றனர்கள். ஸ்ரீசீதாபிராமரும் நாற்சந்தி தேவாலயம், நற்சந்திகளி

லுள்ள அரசமரமுள்ள பூமி; பெரியோர்கள் வீற்றிருக்கும் சபை இவைகளை யெல்லாம் வலமாக வெழுந்தருளி, வெண்முகில்களினிரைபோலவும், கைலைமலையின் சிகரங்களைபோலவும், திவ்யவிமானங்களைப்போலவும், வெளுத் துயர்ந்த மணிமாடங்கள் சூழ்ந்து, தேவேந்திரன மாளிகைபோன்ற தமது தந்தையாருடைய திருமாளிகையைக்கண்டு, ரணதீரபடர்களால் காக்கப் பட்ட மூன்றுகோட்டை வாயில்களைக் கடந்து, திருத்தேரினின்று இறங்கி, மற்றிரண்டு கோட்டைவாயில்களையுந் தம திருவடிச் சமபந்தத்தால் பரி சுத்தஞ்செய்து, தமமுடன தொடர்ந்துவந்த மக்களெல்லோரையும் நிறுத்தி விட்டு, அந்தப்புரத்துக்குள எழுந்தருளித் தம் தாதையருகிற் சென்றருளி னர். வெளியே நின்ற ஜனங்களும் பெருமகிழவுகொண்டு, சந்திரனுதய மாயினபொழுது, பொங்கியெழுந்த பெருங்கடல் அவன் மறையுங்கால், மீளவும அவனுதிப்பதையே கோருவதுபோல, ஸ்ரீராமசந்திரர் எப்பொழுது வெளியே எழுந்தருளுவரெனப் பெருவேட்கையோடு காத்திருந்தனர்கள.

அயோத்தியாகாண்டத்தில் பதினேழாவது சருக்கம்

முற்றிற்று.

---

( * யசசவென்னும் சுலோகததின பதசாரம் )

ஸ்ரீராமசநதிரருடைய திருமேனியி லீடுபட்டோா ஆனநதககடலில் மூழகிய பரவசமாவது வியப்பனறெனபதை, இவா பரப்ரஹ்மமெனறும், இவரைத தரிசிததுத தன்னியராகாதாா பழிப்படைவாரென்றும், வயதிரேகமுறைதது உறுதிசெய் கினறனா. "யசச" எனனுஞ் சுலோகததினால, வழுவில்வநது வாய்நத பேரினபததை யிழநத பாவியின் பெயரைக் கூறினும், பாவமணுகுமெனறு குறித்துக் கூறுது, (யஃ + யம்) என்று பொதுபபடக் கூறினா. (யசச + யஞச) எனனும இரண்டு சகாரங் களும, (காகாக்ஷி) நியாயததால் இருபுறமும் சேருகினறன. அதனால், (யச்ச) எனவும், (ராமஞ்ச) எனவும, (யஞ்ச) எனவும், (ராமச்ச) எனவும், சோககபபடுகின்றன. (யச்ச) ஸ்ரீசக்கரவாத்திக திருமகனைககண்டு, களிபபுறததக்க கோசலநாட்டில் மொண்டி முடன் குருடன இவர்களன்றித திறலுங் கட்புலனுமுடைய ஆணாயினும், பெண்ணாயி னும், அலியாயினும், பசுபக்ஷி முதலிய ஜநதுக்களாயினும், (ராமஞச + யதாயதாஹிதா மஸ்யக்லா நிர்பபவதி பாரத + அப்யுததான மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாமயஹம்) எனவும், (பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம், தாமஸம் ஸ்தாபநார்த் தாய சீர்த்தாய ஸமபவாமியுகேயுகே) எனவும், ஸ்ரீமந்நாராயணன தானே அருளிச செய்தபடி யோகிகளும் காண அரியனாயினும, சேதனர்கள் தன்னைத தரிசித்துப் பேறு பெறக்கடவர்களென அருள்செய்து ஆனுஷங்கிகமாகத் துஷ்ட நிக்கிரஹஞ் செயது, அதருமவழியடைத்துத் தருமத்தை நிலைககசசெய்து முக்கியமாக பக்த ஜனங்களைக் காத்தருள்வதன்பொருட்டே (ரமந்தே யோகிநோநந்தே ஸத்யாநந்தே சிதாத்மநி + இதிராமபதே நாஸௌபரம் ப்ருஹ்மாபிதீயதே) என்கிறபடி தன் பரத்து வந்தோற்றுமாறு அவதாரஞ் செய்தருளிய ஸ்ரீராமபிரானையும்,—ராமஞ்ச (ரூபௌ தார்யகுணைபும்ஸாம் த்ருஷ்டிசித்தா பஹாரிணம்) என்றும், (சந்த்ரகாந்தாநநம்ராம மதீவப்ரியதர்சனம்) என்றும், (ஸ்ரீயோசமணலாமர்த்யாத் ஸௌந்தர்யகுண கௌர

வாத - ஸ்ரீராம இதிர்மேதம அஸயவிஷ்ணோ: பராசீததிதம்) என்றும், (கந்தர்ப்ப கோடிலாவண்ய:) என்றும் சொல்லுகிறபடி நித்தியநிரவத்திய நிரதிசய நிருபம ஸௌந்தர்யமுடைய ஸ்ரீராமபிரானையும், (ராமஞ்ச + ரக்ஷிதா ஜீவலோகஸ்ய) என்றும் (அபயம் ஸர்வ பூதேப்யோததாம்யேதத்வ்ருதம்மம) என்றும, (அர்ருதம் ஸோகதஹூர வம் மோசவக்ஷுயேகதாசன) என்றும், (ததயாகந பரதிகருஹ்ணீயாத) என்றும சொல்லுகிறபடி பிரதிபலன சிறிதும் கோராது, பகதஜன பரிபாலனததில் தீக்ஷை கொண்டிருக்கின்ற ஸ்ரீராமபிரானையும, (ராமஞ்ச) சீதாதேவியையாயினும், (நபச யேதது) ராமபிரானே ஸ்ரீபரதெய்வமென றுணராவிடினும, பசுபக்ஷிகளபோல வாவது காணவிருமபுதறகுரிய உருவமெனறு கணடுகொதிலரோ ? கறகணடென றுணரா துணபவாகருங் கறகணடு தித்திக்குமேயனறிக கைககாதிறே, (நபசயேதது) ஒருககாலுங் கணடேயிலரோ ? (நபசயேதது) குருடராயினும, கனவிலுமகண்டே யிலரோ ? (நபச்யேதது + நபசயேச்ச) கேட்டுமிலரோ ? நினைதது மிலரோ ? தியா னஞ் செயதுமிலரோ ? (யஞ்ச) குருடு செவிடு கூன முடமாயினும, ஸ்ரீராமபிரான தானே வெளியே எழுந்தருளுங்கால அவா கடாக்ஷத்துககுப பாததிரமாகாமல திவா பீதம்போல அகததுளிருந்த யாவனொருவனையும, (ராமசச) பகதபரிபாலனததின பொருட்டே அவதாரஞ்செயது (நஸ்மரதயபகாராணும் சதமபயாதமவததயா - கதஞ சிதுபகாரோண கருதேனைகேொதுஷயதி) எனகிறபடி சேதனா செயயும பலகோடிக கொடிய அபராதஙகளையும் திருவுளத்திறகொள்ளாது, அவாகள அபுததி பூாவமா யாவது செயயுஞ சிறிய உபகாரததையே நனகுமதிததருளபுரியும் பேரருளாளனாகிய ஸ்ரீராமபிரானும (நபசயதி) கடாக்ஷிககவிலலையோ, (ஸ:) பெரும புகலவொணணுத அபபெரும் பாவிகளாகிய அவவிருவரும (லோகே) இவவுலகினில (லோகே) மஹாஜன கோஷ்டியில (நிநதித:) நிநதை செயயபபட்டவாகளாகி (வஸேத) இருபபாாகள. (ஏனம) இவாகளை, (ஸவாதமாபி) தானும, (ஸவாதமாபி) தனககும, அநதாயாமி யாகிய பொதுவாயுள்ள ஸ்ரீமநநாராயணனும, (விகாஹதே) மிகவும இகழ்ச்சியைதுவா, இவவிகழவுககு முடிவிலலையெனபது தோறறககவி (விகாஹதே) எனறு நிகழ்காலமாக அருளிசசெயதனா. இதுகாறும, அனபுளராயிருநது இபபொழுது மாததிரம் கெடுமதி கொணடு ஸ்ரீராமபிரானைககணடு களிககாமலும், ஸ்ரீராமபிரானால போரவுகநது கடா க்ஷிககப்படாமலு மிருநத மநதரை கைகேயி இருவரும, நீஙகா நிநதைக காளாயி னாகளனறோ ? ஒருகாலும காணுதாரும், கடாக்ஷிககபபடாதாரும், நிநதைககுள ளாவாரெனப திலையுமுளதோ ? கறகணடுதினனக கூலிகொடுக்கவேணடுமோ ? வலு வில நிலவி மகிழவிககினற நிலவினை மடையரும ஆடையினால மறைததுககொளவாா களோ ? ஆதலின ஸ்ரீராமபிரான திருமேனியழகி லீடுபட்டோரெலலோரும் பரவச மாயினரென்பது வியப்பிலதென உறுதிசெயயபபட்டது.—

## பதினெட்டாவது சருக்கம்

### கைகேயி ஸ்ரீராமபிரானை வநத்துக்கேகக் கட்டளையிட்டது.

அநந்தரம் ஸ்ரீராமச்சந்திரர் தம திருத்தமப்பனாருகிறசென்றுமுனபு இருந்ததைக்கும், பினபு கைகேயிக்கும தனடம்சமாப்பித்துச் சக்கரவர்த் தியார் கடுந்துயரங்கொண்டவரா யிருப்பதைக்கண்டு, இதற்குக் காரணம்

யாதோவெனச் சிந்தைசெய்துகொண் டிருக்கையில், அரசர்பெருமானும் ஸ்ரீராமாவென றழைத்துச் சோகமதிகரித்துக் கண்ணீர் ததும்பி நின்றமை யால், மேலே செய்திசொல்வதற்கும் பார்ப்பதற்கும் திறமையற்று நிற்கை யில், ஸ்ரீராமபிரான இஃதென்னவென அரவையடியினால் மிதித்தவனபோல அச்சமடைந்து, புலன்களின் திறமைகுலைந்து, சோகஸந்தாபத்தாபத்தால் வருந்தி நெட்டுயிர்ப்பெறிந்து மனஞ்சுழன்று ஒருவராலுங்கலக்கவொண்ணு அலைகடல் கலக்கமுற்றதுபோலவும், கிரகணத்தை யடைந்த கதிரவன்போல வும, பொய்ம்மொழியுரைத்த முனிவனபோலவும் துயரங்கொண்டு கலங்கி யிருக்கின்ற மன்னர் பெருமானைக்கண்டு, பருவகாலத்தில் பனிக்கடல் கலக்க முறுவதுபோலக் கலங்கி, இதுவரையும் ஒருகாலும என்னைக்கண்டு சக்கர வர்த்தியார் இவ்வண்ணமிருந்திலரோ! சினங்கொண்டிருக்கினும் என்னைக் கண்டவுடன சினந்தீர்ந்து மகிழ்வரோ? இப்பொழுது எனனைக்கண்டு ஆயா சங்கொள்வதேனோவெனச் சிந்தைசெய்து மிகவருந்தி ஒளியிழந்து கைகே யிக்கு வந்தனஞ்செய்து தாயாரே! யான அறிவினமயக்கத்தால் மஹாராஜ ருக்கு யாதேனும அபராதஞ்செய்திருக்கின்றேனோ? என்தந்தை எனனைக் கண்டு சினங்கொண்டிருக்கக் காரணம்யாது? அதனை நீர்எனக்கு அருள்செய் தருளிச் செய்வீர்; யான் ஏதேனும குற்றஞ்செய்திருக்கினும் நீர் இவரைச் சமாதானஞ் செய்து சீற்றத்தைத் தணித்தருளவீர்; மஹாராஜா என்னைக் கண்டு மனம் வருந்தி இனியமொழி ஏன அருளிச்செய்திலர்; ஆதிவியாதிக ளிவரை யணுகிப் பீடைசெய்யாம லிருக்கின்றனவா? கர்மானுகுணமாகத் துன்பவின்பங்கள் மாறிமாறி வருமேயன்றி இன்பமே நிலைபெற்றிருப்ப தரு மையன்றோ? என அருமைத் தம்பியாகிய பரதனுக்காவது, சத்துருக்கனுக் காவது, என்தாய்களுள யாருக்காவது யாதேனுந் துன்பமநேரிட்டிருக் கிறதோ?

అతోషయన్మహారాజ మకుర్వన్వాపితుర్వచః
ముహూర్తమపినేచ్ఛేయం జీవితుంకుపితేనృపే
యతోమూలంనరఃపశ్యే త్ప్రాదుర్భావమిహాత్మనః
కథంతస్మిన్నవర్తేత ప్రత్యక్షేసతిదైవతే

அதோஷயனமஹாராஜ மகுர்வனவாபிதுர்வச:
முஹூர்த்தமபிநேச்சேயம் ஜீவிதுமகுபிதேநருபே
யதோமூலஙநர:பச்யேத ப்ராதுர்பாவமிஹாத்மந:
கதம்தஸமிநவர்த்தேத ப்ரத்யக்ஷேஸதிதைவதே.

மஹாராஜனை மகிழ்வியாமலும் அவர்கட்டளைப்படி நடவாமலும், அவர் சினங்கொண்டிருக்கையில, ஒரு கணப்பொழுதாயினும் யான் உயிர் வாழ்வதை நன்குமதியேன்; ஒருவன்தான் இவ்வுலகினில பிறப்பதற்கு

முதற்காரணம் யாரோ? கட்புலனாகிய பரதெய்வமென்னப்படும் அத்தந்தைக்கு நலலறிவும், நன்றியறிதலுமுடையவன ஏன உடபடடு நடவான?. அன்னையாரே! நீர் ஏதாயினும் இவர்மீது சீற்றங்கொண்டு, இவருள்ளம் வருந்துமாறு வனமொழியுரைத்தீரோ? புரவலாபெருமானுக்கு இதுகாறு மிலலாமல இபபொழுது இததனமையதாகிய மனககவலை வாயததறகுக காரணம்யாதோ? அதனை இனனதென அருளிசசெயவீரெனப பலமுறை வேணடிககொணடனா.. இவ்வண்ணம கோசலைதிருககுமாரர் அருளிச செயத இனமொழிகளைக கைகேயி செவியேறறு நாணமென்பது சிறிது மிலலாளாயத தன்னலததையே கருதித தீரஙகொண்டு, ஸ்ரீராமபிரானை நோககி, ராமா! மஹாராஜர் சினஙகொணடது மிலா, துனபஞ் சிறிதும் கொண்டது மிலா, இவருளளததில ஒன்னணமுளது; உன அசசததா லதனை யருளிசசெயதிலா போலும; மிகப பிரியனாகிய உனனை நோககி, உனககுப பிரியமாகா மொழியுரைகக இவாககு வாயெழுந்திலது, இவா எனககு ஒருகாரியஞ் செயதுகொடுப்பதாய வஞசினங்கூறி யிருககினற னர்; அதனை நீ தவறாது செயயவேண்டும், இவா எனககு முனபு வரமளி ததுப பினபு அதனைசசெயவதறகுப பேதைனைப்போலத் தவிககின்றார், இவா எனககு வரமளிபபேனென றுறுதிகூறி, ஆறறுநீா வெள்ளததில பெருகிப்போனபின்பு அதறகு அணைகட்ட முயலவதுபோலத் தடுகக முயலகின்றா, இவ்வுலகில தருமமேமூலமென்பது பெரியோாகளா லறிந திருக்கின்றனரன்றே? இவா உன்பயனைககருதி எனமீது சினங்கொண்டு அவவாயமையைததவற நினைககின்றா. இவர் வாயமைதவறாதவண்ணம நீ இவரைப பாதுகாககக கடவை, இவர் நினககு நன்மை யுரைசெயினும், தீமையுரைசெயினும், நான வழுவாமல செயவேனென நீ முனபு உறுதி சொலவாயாயின் பினபதனை யானுரைசெயவேன. இவா ஏவியதை நீபய னறறதாகசசெயயாயாயினும், அதனைஇவா உரைசெய்யார்; யானேஅதனை மொழிவேன? எனறிவ்வண்ணம் ஸ்ரீராமபிரானிடததும் முன்பு உறுதி மொழிபெற்றுக் கொளள வேண்டுமென்று கூறினள. சக்கரவாததிதிரு க்குமாரர் அம்மொழியைத திருசசெவிசாததி மனம்வருந்திக் கைகேயி யைநோக்கித் தாயரே! என் தன்மையுணாநத நீரும்என்னைநோககி இவ் வண்ணமமொழிவதுதகுதியறறது; குருவும்,தாயரும்,மஹாராஜரும, என் நலத்தைநினைபபவருமாகிய இவர்கள் எனனைத தீயிலவிழுவாவது, நஞ சுண்ணவாவது, பெருங்கடலில் மூழ்கவாவது கடடளையிடினும் உடனே தடையினறி அவ்வாறேசெயவேன.

తద్బ్రూహి వచనం దేవి రాజ్ఞో యదభికాంక్షితం
కరిష్యే ప్రతిజానే చ రామో ద్విర్నాభిభాషతే

*தத்ப்ரூஹி வசநம்தேவி ராஜ்ஞோயதபிகாங்க்ஷிதம*
*கரிஷ்யேப்ரதிஜாநேச ராமோத்விர்நாபிபாஷதே.*

மஹாராஜருடைய திருவுள்ளம் யாதோ? அதனை நீரே அருளிச்செய்யும்; அதனை யான் அவசியம் செய்வேன்; ப்ரதிஜ்ஞையும் செய்கின்றேன்; ராமன் முன்பொன்றுரைத்துப் பின்பொன்றுரையான். என்றிவ்வகையாக வஞ்சமின்றி யுரைசெய்த ஸத்தியவாதியாகிய ஸ்ரீராமபிரானைநோக்கி, அடா ராமா! முன்பொருகால் விண்ணவர்க்கும், அசுரர்க்கும் நடந்த போரில் உன்தமப்பனார் மிகுதியும் அடிபட்டு மூர்ச்சையடைந்திருந்த காலையில் யான் அவரைப்பாதுகாத்து உபசரித்தேன். அப்பொழுது அவர் மூர்ச்சைதெளிந்து என்மீது மகிழ்ச்சிகொண்டு எனக்கிரண்டு வரமளித்திருந்தனர். இப்பொழுது யான், பரதன் அபிஷேகங்கொள்ள வேண்டுமென்றும், நீ இப்பொழுதே வனத்துக்குச்செல்ல வேண்டுமென்றும், அவ்விரண்டுவரங்களையும் கேட்டேன். ஆதலின் தந்தையையும் சத்தியஸந்தராகச்செய்து, நீயும் ஸத்தியஸந்தனாக எண்ணங்கொள்வாயாயின், என் சொற்படிகேட்டுத் தந்தையார் எனக்கு வரமளித்தபடி நீ பதினான்குவருடம் வனவாஸஞ்செய்யக் கடவை? உன்பொருட்டுச் சித்தஞ்செய்த இந்த அபிஷேகப் பொருள்களைக்கொண்டே பரதன் அபிஷேகம் கொள்ளக்கடவன். நீ இந்த அபிஷேகங்கொள்வதைவிட்டு, மரவுரியுடுத்துச் சடைதரித்துப் பதினான்குவருடம் வனமேகக்கடவை. சதுரங்க சேனைகளுடன் கூடிய பலவகைப்பொருள்கள் நிறைந்த இவ்வயோத்தியில் பரதன் அரசு செய்யக்கடவன். மஹாராஜர் நின்னிடத்து மிக அன்புடையாராதலின், இச்செய்தியை நினக்கு மொழிவதற்கும், நின்னைப்பார்ப்பதற்கும் அச்சமுற்று வருந்துகின்றனர்; ஸ்ரீராமா! நீ இவ்வண்ணஞ்செய்து தந்தையாரைச் சத்தியத்தினால் நிலைநிறுத்தக்கடவை. என்றிவ்வண்ணம் கைகேயி உளமிசைந்து வன்மொழிகூறினள். சச்சிதானந்த ஸ்வரூபராகிய ஸ்ரீராமபிரான் இவ்வகையாகிய கைகேயியின் வன்மொழிகளைத் திருச்செவிசாற்றியும் சிறிதும் துன்பமுற்றிலர்; மஹானுபாவராகிய தசரதசக்கரவர்த்தியார்மட்டும் புத்திரவியசனத்தால் தாபங்கொண்டவராய் மிக வருத்தமெய்தினர்.

**அயோத்தியாகாண்டத்தில் பதினெட்டாவது சருக்கம்**

**முற்றிற்று.**

## பத்தொன்பதாவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரான் கைகேயியினது சொற்படி வனத்துக்கேக உடன்பட்டுக் கௌசலியா தேவியின்பால் விடைபெற்றுக் கொள்ளச் செல்லுகை.

சக்கரவர்த்தித் திருமகனார் இறப்புக்கொப்பாகிய அவ்வன்மொழியைத் திருச்செவிசார்த்தியும், சிறிதேனும் மனக்கவலைகொள்ளாமல் கைகேயியைநோக்கித் தாயரே! உமது கட்டளையின்படி என்பிதாவின் பிரதிஜ்ஞையைப் பரிபாலனஞ்செய்பவனாகி, சடையையும், மான்தோலையுந்தாங்கி, யான் வனத்துக்குச் செல்கின்றேன்; இவ்விஷயத்தில் நீர் சிறிதும் ஐயமுறற்க; அடியேன் தேவரை வினவவேண்டிய தொன்றுளது; மஹாராஜா என்னைக்கண்டு முன்போல மகிழ்ச்சிகொண்டு ஏன் வார்த்தையாடிலர்; இதை எனக்குத் தெரிய உரைத்தருளும்; நீரென்மீது காணக மெய்தானோவென வையுற்றுச் சினமுறற்க. இப்பொழுதே உமது கண்முன்பாக மரவுரியுடுத்துச் சடைமுடித்து, வனமெய்துகின்றேன், நீர் மகிழ்ச்சியுறுமின்; ஹிதரும், குருவும் இறைவனும் நன்றியுணரும் தந்தையுமாகிய இவர் எனக்கு எதனைக் கட்டளையிடினும், அதனை யான் தவறாது ஏன்செய்யேன்; என்னருந்தம்பியாகிய பரதாழ்வானுக்கு அபிஷேகஞ்செய்விப்போமென்று என்னைநோக்கி மஹாராஜா மகிழ்ந்துரைசெய்து, என்னையும் மகிழ்வித்திலரேயென்னும் ஓர்மனக்கவலை என்னையெரிக்கின்றது; ஒருவர்சொல்லாவிடினும் நானே பரதாழ்வான்பொருட்டுச்சீதையையும், ராஜ்யத்தையும், உயிரையும், பொருள்களையும், மகிழ்ந்தளிப்பேன்; மஹாராஜா கட்டளைசெய்யின் யான் பரதாழ்வானுக்கு இந்தராஜ்யத்தை யளிப்பேனென்பதில் ஐயமுளதோ? ஆதலின் உமக்குப் பிரியஞ்செய்வதன் பொருட்டும், தந்தையின் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுவதன் பொருட்டும், யான் வனத்துக்குப்போவதிற் சிறிதும் காலம் நீட்டியேன்; புரவலர்பெருமான் தலைகுனிந்து கண்ணீர்பெருக்கி ஏனோ? வருத்தமுறுகின்றனர், நீர் இவரை வருந்தாது ஸமாதானஞ்செய்யக்கடவீர். இப்பொழுதே அம்மானமனையில் வாழும் பரதாழ்வானை அழைத்துவரத் தூதர்கள் சிறந்த பரிமாமீதேறி மஹாராஜர் கட்டளையினால் செல்லக்கடவர்கள். நானும் தந்தையின் வாக்கியத்தின்படி இப்பொழுதே புறப்பட்டுப் பதினான்குவருஷம் வனவாஸஞ் செல்வேனென் றருளிச்செய்தனர். கைகேயி இவ்வாறு அருளிச்செய்த ஸ்ரீராமன் திருவாய் மொழியைக் கேட்டுப் பெருமகிழ்வுகொண்டு, ஸ்ரீராமபிரானைநோக்கி ராமா! நீ மொழிந்தவாறு பரதனை அழைத்துவரத் தூதர்கள் செல்வார்கள். நீயும் வனத்துக்கேகக் மனமுடையாயாதலால் நீ காலக்கழிவுசெய்வது நலமன்று, நீ

இப்பொழுதே புறப்பட்டு வனஞ்செல்லக்கடவை. உன்னைநோக்கி வனம் போவென்றுசொல்ல வெட்கமுற்று, வேந்தர்பிரான் பேசாது தலைவணங்கி யிருக்கின்றனர்; இதைப்பற்றி நீ சிந்தைகொள்ளற்க; நீ வனவாஸம்போகும் வரையும், உனது தந்தை நீராடவும் ஆடார், உண்ணவும் உணார் ஒன்றுஞ் சிறிதும் கூசுதலின்றியுரைசெய்தனள். மன்னர்பெருமான் இதனைக்கேட்டு இச் சண்டாளி இவ்வாறு பொய்யுரைத்து என் அருமைச்செல்வப் புதல்வனாகிய ஸ்ரீராமனை இப்பொழுதே காட்டுக் கனுப்புகின்றனளே; ஐயோ! யாது செய்வேனெனக் கடுந்துன்ப மெய்திப் பொன்னலங்கவிசின் மிசைவீழ்ந்து பெருமூச்செறிந்து மூர்ச்சையடைந்தனர். உடனே கைகேயியினது வன்மொழியா லேவப்பட்ட ஸ்ரீராமசந்திரர் சவுக்காலடிக்கப்பட்ட சிறந்த பரிமாப்போல அன்போடு விரைந்து, அரசர்பெருமானையெழுப்பி உபசாரஞ் செய்து ஆசனத்திலமர்த்தி நமஸ்காரஞ்செய்து, கைகேயி மொழியைக்கேட்டு மிகவருந்தி, அவளைநோக்கி அன்னையாரே! நீர் என்னைப் பொருளாசை கொண்டவனெனவும், இவ்வுலகினை அரசாட்சிசெய்ய விருப்பமுற்றவனெனவும் எண்ணற்க, யான் அத்தன்மையனல்லேன்; நீர் என்னை அறமொன்றனையே மேற்கொண்டவனெனவும், முனிவர்களுக்கு நிகராகப் பற்றற்றவனெனவும், எண்ணக்கடவீர். நான் உயிரைவிடுவது இம்மஹாராஜருக்கு விருப்பமாயின் அதனையும் யான் செய்பவனாகவே எண்ணுக.

> నహ్యతో ధర్మచరణం కించిదస్తి మహత్తరం
> యథా పితరి శుశ్రూషా తస్య వా వచనక్రియా

> நஹ்யதோ தர்மசரணம் கிஞ்சிதஸ்தி மஹத்தரம்
> யதா பிதரி சுச்ரூஷா தஸ்ய வா வசனக்ரியா

தந்தைக்குவேண்டிய திருப்பணிசெய்வதையும், அவர் ஏவிய கட்டளையைத் தவறாது செய்வதையும்விட வேறு சிறந்த அறமென்பது ஒன்றுமில்லையன்றோ? சக்கரவர்த்தியார் நேரில் எனக்குக் கட்டளைசெய்யாவிடினும், உம்முடைய வசனத்தால் பதினான்குவருஷம் காட்டில் வாசஞ் செய்வேன்; நீர் அடியேனுடைய தன்மையை நன்கறிந்திலீர்போலும். நீர் என்னைக் கட்டளையிடும் முறைமையுள்ளவராயினும் நேரில் எனக்கு ஆஜ்ஞைசெய்தால் யான் மனமகிழ்ந்து பரதாழ்வானுக்கு இந்நாட்டுப் பெருஞ் செல்வத்தையளித்துத் தடையின்றி வனமேகுவேனென்று என் தன்மை உணராமல், யான் உமது சொற்படி செய்யேனென்றெண்ணி மஹாராஜரை வருத்தமுறச்செய்தீரன்றோ? நான்போய் என்னை ஈன்ற தாயைக்கண்டு செய்திசொல்லி, அவளிடத்தில் விடைபெற்றுச் சீதையையும் நன்மொழி கூறிச் சமாதானப்படுத்திவிட்டு, உடனே வனமேசெல்வேன். பரதாழ்வான் விரைவில் அபிஷேகங்கொண்டு தந்தைக்குத் திருப்பணிகள்செய்து

கொண்டு அரசாட்சிசெய்யும்படி நீர் முயற்சிசெய்யக்கடவீர்; அவ்வாறு செய்வது அநாதியாகிய அறமன்றோ? என்று கேட்டுக்கொண்டனர், இவ்வாறு மொழிந்த ஸ்ரீராமபிரானுடைய மென்மொழிகளை மஹாராஜர்கேட்டு மிகவும் சோகத்தால் பீடிக்கப்பட்டவராய், அதிகமும் கண்ணீர்பெருக்கி வாய்விட்டுப் புலம்பினார்; ஸ்ரீராமபிரான் தந்தையார் இவ்வண்ணம் புலம்பி அறிவுகலங்கி யிருக்கையிலும், அவர் திருவடிகளைத் தொழுது, கொடியளாகிய கைகேயிக்கும் வந்தனஞ்செய்து, இருவரையும் வலம்வந்து அந்தப்புரத்தினின்றும் வெளியேபுறப்பட்டு, அங்குக்காத்திருக்கும் தம இஷ்டஜனங்களையுங்கண்டு, அபிஷேகத்துக்குரிய பொருள்களின்மீது கண்களைச் செல்லவிடாது, அவற்றுக்கு வலமாக வெழுந்தருளினார். இளையபெருமாளும் ஸ்ரீராமபிரானருகில் நின்று கைகேயியின் வன்மொழிகளைக் கேட்டு ஊழித்தீயைப்போலக் கடுஞ்சினங்கொண்டெரிகின்றவராயினும் தமையனார் திருவுளத்துக்கிசையாதவைசெய்வது நலமற்றதெனக் கருதிச் சினத்தைஉள்ளடக்கி, ஐயனுக்குக் கொடுவிதியுற்றதேயெனக் கடுந்துயரங்கொண்டுகண்ணீர்பெருக்கி, ஸ்ரீராமபிரான் பின்றொடர்ந் தெழுந்தருளினர். லோகாநந்தனாகிய சந்திரனுக்குப் பகல்நீங்கி, இரவுவருவதினால் ஒளிகுன்றுதல்வளர்வதுபோல ஸ்ரீராமசந்திரனாகியஸ்வாமிக்குமஅரசாட்சியினிழவு வாய்த்தகாலையிலும், முகத்தில் மகிழ்ச்சி மேன்மேலும் வளர்ந்ததேயன்றிக் குன்றவில்லை; பாரிழந்து வனம்போகுகையிலும் பற்றற்ற மஹாயோகிக்குப்போல மனஞ்சிறிதும் விகாரமுறவில்லை; வெண்குடையையும், வெண்சாமரைகளையும் வேண்டுவனவல்ல வென்று தடைசெய்து, திருத்தேரையும் நிறுத்திவிட்டு இனத்தார் சுற்றத்தார் நாடுநகரத்தாரையும் திருப்பிவிட்டுத் துன்பமென்பது சிறிதுமுறாதடக்கி, ஐம்புலன்களையும் வென்று, கோசலாதேவியாரது திருமாளிகையுட் புகுந்தெழுந்தருளினர். எழுந்தருளிய ஸ்ரீராமபிரானுடைய திருமுகமண்டலத்தில் ஒருவாக்காயினும் சிறிதும் விகாரந்தோற்றவில்லை, சந்திரன் தன்னுடன் பிறந்த நிலாவினை யெப்பொழுதும் பிரியாததுபோல ஸ்ரீராமபிரானும் தமக்கியல்பாயுள்ள பேராநந்தத்தை விட்டிலர். அங்குத் தம்மைக்கண்டவர்க்கும் இன்மொழிகூறி வழிபாடுசெய்து, தீரமுடையராகவே தம்தாயாருகிற்சென்று, கடுந்துயரம்வந்து வாய்த்திருக்கினும், தாம்சோகங்கொள்ளின் தாய்முதலானோருஞ் சோகங் கொள்வாரகளென்று திருவுளத்திற்கொண்டு சோகத்தை யடக்கிக்கொண்டனர், இளையபெருமாளும் கடுந்துயரையுள்ளடக்கிப் பின்சென்று நின்றனர்.

### அயோத்தியாகாண்டத்தில் பத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

## இருபதாவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரான் வனவாசம் போகின்றேனென்று திருவாய் மலர்ந்தருளக் கோசலை புலம்பல்.

ஸ்ரீராமபிரான் அந்தப்புரத்தைவிட் டெழுந்தருளுங்காலையில், ஸ்ரீராமபிரான் வனவாசம் போகின்றானென ஸ்ரீசக்கரவர்த்தியாரது தேவிமார்களெல்லோருங் கேட்டுக் கடுஞ்சோகங்கொண்டு வாய்விட்டலறிப் புலம்பத்தொடங்கினார்கள். தந்தை கட்டளையிடாவிடினும், நம்மெல்லோருடைய காரியங்களையுந் தடையின்றி முடித்துத் தஞ்சமும் ரக்ஷகனுமாகிய சக்கரவர்த்தித் திருமகன் வனம்போகின்றானே! பிறந்தது முதல் கோசலையிடத்தும், அவளிடத்துப்போல நம்மிடத்தும் பக்தி விசுவாசம்வைத்து, நம் குற்றேவல்களைச் செய்கின்றனனே! யாவரேனும் ஒருவர்சினங்கொண்டுரைத்தாலும், தான்சீற்றமென்பது சிறிதுங் கொள்ளாமல், ஒருவர் சினங்கொள்ளத்தக்க செயல் நீங்கி, சினங்கொண்டவர்களையும், நன்மொழிகூறிச் சமாதானஞ் செய்கின்றனனே! நம் புரவலர்பெருமான் மதியிலராகி, சகல பூதங்களுக்குந் தஞ்சமாகிய ஸ்ரீராமசந்திரனைக் காட்டுக்குச்செல்ல விடுக்கின்றாரே! இனி இவ்வுலகினை யழிக்கின்றாரே யன்றி, இவ்வுலக மின்புறுமென் றிவ்வகையாக மஹாராஜனை யிகழ்ந்து, நெடுங்குரலிட்டழுதனர்கள். இவ்வழுகுரல் கேட்டு, வேந்தர்பிரானும், யாவரும் பழிக்கவும், நகைக்கவும், இடமாயினேனேயென்று துயரமும், நாணமுங்கொண்டு, அந்த ஆசனத்தின்மீதே அடங்கியொடுங்கி வருந்தினர். சக்கரவர்த்தித் திருமகனும் தாம் வனவாசம் போவதில் சிறிதும் துயரமுறாவிடினும், தம்பொருட்டெல்லோரும் இவ்வண்ணம் வருந்துகின்றார்களேயென மிகவும் துக்கங்கொண்டு, இரும்புச் சங்கிலிபோட் டிறுக்கிக்கட்டிய களிறுபோல நெட்டுயிர்ப்பெறிந்து, புலன்களையடக்கித் தம்பியுடன் கோசலைதேவியி னந்தப்புரவாயிலிலெழுந்தருளி, அங்குள்ளவர்களால், ஜயவிஜயீபவவென்று வாழ்த்தப்பட்டவராகி, முதற் பிராகாரந்தாண்டி, இரண்டாவது பிராகாரத்தில், வேதமோதும் வேதியர்களைக்கண்டு வந்தனஞ்செய்து, மூன்றாவது பிராகாரம் புகுந்து, அங்கு வாயில்காக்கும் பாலவிருத்தர்களாகிய பெண்களாலும் ஜயவென வாழ்த்தப்பட்டு, அவர்களைத் தம் வரவைத் தெரிவிக்கும்படி தாயிடம் முன் விடுத்துத் தாமு முடனே பின்புகுந்து மாதாவைக் கண்டருளினார். அப்பொழுது கோசலை நீராடி, வெண்பட்டுடுத்து விரதநியம முடையவளாய், தன் திருமகன் நன்மையைக் கருதி, ஸ்ரீமஹாவிஷ்ணுவைத் துதிசெய்து பூசித்துத் தயிர், அக்ஷதம், நெய், மோதகம், அவிஸ்ஸு, பொரி, வெண்மலர்மாலை, பாயசம், எள்ளோரை, சமித்து, பூர்ணகும்பம் இவற்றைச் சித்தஞ்செய்து, வேதியர்களைக்கொண்டு தீவளர்த்தி ஓமஞ்செய்வித்து, தீர்த்தத்தால் விண்

னவர்களுக்குத் தருப்பணஞ் செய்துகொண் டிருந்தனள். ஸ்ரீராமபிரான் அவற்றையெல்லாம் கடாக்ஷித்துக்கொண்டு, அருகே எழுந்தருளுகையில், தாயும் தன்னைப்பிரிந்து மீளவும் தன்னருகில் வருகின்ற தன் கன்றைக் கண்டு, பெண்குதிரை மகிழ்ந்து எதிர்கொண்டோடுவதுபோல, எதிர்கொண் டழைத்துவந்து தனக்கு தண்டம்சமர்ப்பித்தபின் கைகளாலெடுத்தணைத்து உச்சிமோந்து ஞானத்தினாலும், பருவத்தினாலும், நல்லொழுக்கத்தினாலும், விருத்தர்களாகியும், தரும சீலர்களாகியும், மஹாத்துமாக்களாகியும், ராஜ ரிஷிகளுமாகியு மிருந்த முன்னோர்களுடைய நிறைந்த ஆயுளையும், கீர்த்தி யையுமு, குலத்துக்குரிய அறத்தையும் பெற்று வாழ்வாயாகவென வாழ்த்தி, உன திருத்தமப்பனார் மிகவும் சத்தியமுடையவர், தர்மாத்துமா, முன்புரை செய்தபடி இப்பொழுதே உனக்கு யுவராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்விக் கப்போகின்றனரன்றோவென மகிழ்ந்துரைத்து, போஜனஞ்செய்வாயென வீற்றிருக்கத் தவிசு அளித்தனள். நடந்த செய்தி யறியாமல், தாய் இவ் வகை மகிழ்ந்தளித்த திருத்தவிசைபபற்றி நின்று, இயற்கையிலே வினய முள்ளவராயினும், தாயே! முதற்றெய்வமெனனும கன்ணியத்தால், மிக வணக்கமுடையவராய், ஸ்ரீராமசந்திரர் கோஸலையை நோக்கி, என் தாயரே! நீர் நடந்த சங்கதியை யறியீர் போலும்; உமக்கும, சீதைக்கும், லக்ஷ்மண னுக்கும், பெருந்துயரம நேர்ந்திருக்கின்றது; நான இப்பொழுதே தண்ட காரணியம் செல்கின்றேன்; ஆதலின், இப்பொன்மணையாலெனக் கென்ன செய்யத்தக்கது? ரிஷிகளுக்குரிய இருபத்தைந்து தருப்பைகளாற் செய்யப் பட்ட விட்டரமென்னும ஆசனத்தி லுட்காருங்காலமன்றோ? எனக்கு வாய்த்திருக்கின்றது; இதுமுதல் பதினான்குவருஷம முனிவர்போல மனத் துக்கினிய அரசுணவுகளைவிட்டு, கந்தமூல பலாதிகளைப் புசித்துக்கொண்டு, ஜனஸஞ்சாரமற்று, அச்சந்தருவதாகிய வனத்தில் வாசஞ்செய்யப் போகி றேன்; என் திருத்தமப்பனார் எனக்குரிய யுவராஜ்ஜியத்தைப் பரதனுக்குக் கொடுத்து என்னைத் தண்டகாரணியம்போகும்படி விடுத்தார். ஆத லின் யான முனியாகி, ஆறுமெட்டுமகூடியவருஷங்களில் வனத்தில்வாசஞ் செய்வேனென்று அருளிச்செய்தனர். உடனே கோஸலராஜன் திருமகள் குடாரத்தினால்வெட்டுண்ட ஆச்சாமரத்தினகிளைபோலவும், சாபத்தால்விண் ணுலகத்தினின்றும் வீழ்ந்த தேவதைபோலவும், வெட்டிச்சாய்த்த வாழை மரம்போலவும, தரையில்வீழ்ந்து மூர்ச்சையடைந்தனள். உடனே ஸ்ரீராம பிரானெடுத்து, சுமையைச் சுமந்திறக்கிநிலத்தில்புரணடெழுந்த பெணகுதி ரைபோன்ற தம் தாயின திருமேனியில் படிந்திருந்த துகள்களைத் தமது திருக்கையால் துடைத்துத்தேற்றினர். கோஸலையும தெளிந்தெழுந்து இளையபெருமாளுங் கேட்டுக்கொண்டிருக்கையில் தன்னருமைமைந்தனை நோக்கி, என்செல்வத்திருமகனே! கர்னமிகுதியும துயரப்படுவதன்பொ ருட்டே நீயெனக்குத்திருமகனாகப்பிறந்தனை; நீபிறந்திலையேயாயின் நான் மல டியாயிருந்து இவ்வகையான கடுந்துன்பங்களை யடையேனன்றோ?

ఏక ఏవ హి వంధ్యాయాః శోకో భవతి మానసః
అప్రజాస్మీతి సంతాపో న హ్యన్యః పుత్ర విద్యతే

*ஏகஏவஹிவந்த்யாயாச சோகோபவதிமானஸஃ*

*அப்ரஜாஸ்மீதிஸந்தாபோ நஹ்யந்யஃபுத்ரவித்யதே.*

மலடிக்கும் மனத்தில ஒருசோகமேஅன்றோ ? இருக்கும். பிள்ளை யில்லையே யென்பதைவிட்டு வேறேதொரு வியஸனமும், அவளுக்கிராதன் றோ ? உன்பிதாவினால் நானிதுவரையிலும் சிறந்த ஆடையாபரணங்களா யினும், அவனுடன் கலவியின்பத்தையாயினும், பெற்றறியேன்; நீபிறந்த பின் உன்னைப்பற்றியாவது அவைகளைப்பெற்று மகிழ்வடைவேனென எண்ணங்கொண்டிருந்தேன். நான் எல்லோர்க்குள்ளுந் தலைவியாயிருந் தும் இனிமேல நான் சக்களத்திச சிறுக்கிகளின் இகழ்வான மொழிகளைக் கேட்டுக்கொண்டேயன்றோ ? காலத்தைப போக்கவேண்டும், பெண்டு களுக்குச சக்களத்திகளிடத்தில தாழ்மைப்பட்டுப பிழைப்பதினும் வே றேதுக்கமென்பது மொன்றுண்டோ ? நீ எதிரிலிருந்த காலையிலும, சக் களத்தி யென்னைத்தாழ்மைப்படுத்தியதை யறியாயோ ? நீயும் வனவாசம் போயப பரதனுக்கும்பட்டமானபின் சக்களத்தி என்னை அவமதிப்புச செயவளென்பதில் ஐயமுண்டோ ? நீவனம்போனபின் நான்மரணமடைய வேண்டியதே அல்லாமல வேறேதுணையில்லை. பாத்தாளென்னை உபேக்ஷை செய்து கைகேயியை முதன்மையாகச செய்தமையால, நான் அவளுக்கு உயர்ந்தவளாகவோ அல்லது நிகரானவளாகவோ இருந்தும், கைகேயி யைசசேர்ந்த ஒருவெள்ளாட்டியும என்னை மதியாமல அவமதிப்புச் செய் தாள். இனிமேல் அரசனாகிய பரதன் கணேட்டத்தால என் ஏவலாளர் களும் எனக்குக் கீழமைந்து பணிவிடைசெயயாரகளே ! எனக்குஇதமாக என்னோடு பேசிக்கொண்டிருந்தவர்களும என்னுடன் பேசார்களோ. எப பொழுதுங் கோபமேயன்றி மகிழவென்பது சிறிதுமின்றி வன்மொழி யுரைக்கின்ற கைகேயியின்முகத்தில நான எப்படிவிழிப்பேன்.

దశ సప్త చ వర్షాణి తవ జాతస్య రాఘవ
ఆసితాని ప్రకాంక్షంత్యా మయా దుఃఖ పరిక్షయం

*தசசப்தசவர்ஷாணி தவஜாதஸ்யராகவ*

*ஆஸிதாநிப்ரகாங்க்ஷமத்யா மயாதுஃகபரிக்ஷயம்.*

நீ அவதாரஞ்செய்து ஏழுவருஷஞ்சென்றபின் எட்டாவதாகியகர்ப்ப வாசம் முதலொன்பதாவதாகிய பருவத்தில் உனக்கு உபநயனஞ்செயயப பட்டதன்றோ? அது உனக்கு இரண்டாவது பிறப்பாயிற்று; அதுமுதலாக

இதுவரையில் உனக்குப் பதினேழுவருடங்களாயின. ஆக உனக்கு இருபத்துமூன்று வயதுசென்று, இருபத்துநான்காவது வயதன்றோ? இது இதுவரையும், நான் துக்கமெல்லாந்தீர்ந்து இன்பமடைவேனென்றே எண்ணி எண்ணிக் காலத்தைக் கழித்தேன், இவ்வண்ணம் சக்களத்திகளுக்குக் கீழ்ப்படிந்திருந்தே மூப்பையடைந்தும, இனிமேலும் நீங்காத துன்பத்தை நான் பொறுத்திரேன்; முழுமதிபோன்ற உன் திருமுகத்தையுங் காணமல யான் எங்ஙனம் உயிர்த்திருப்பேன, விரதங்களினாலும், யோகங்களினாலும், மற்றும் பற்பல வருத்த முயற்சிகளினாலும, உன்னை நான மிகுதியும் அருமையாகவளர்த்தேனன்றோ? மழைக்காலத்தில மேன்மேலும் பெருகிவருகின்ற சிறந்த நதியின வெள்ளந் தாக்கின மாத்திரையில அதினகரையிடிந்து கரைந்து அழிவதுபோல இந்நீங்காத துன்பவெள்ளத்தால மோதப்பட்ட என்னுள்ளமும, இடிந்து கரைந்து நைந்தன்றோ போய்விடல வேணடும், அவ்வண்ணம் போகாமையினால, இவ்வுள்ளம் அழிவற்ற சிலைபோன்றதென நினைக்கினறேன், இறப்பெனபதே எனக்கில்லையோ? யமனுலகத்தில எனக்கு இடந்தானில்லையோ? இல்லாவிடின துயரங்கொணடு கூவுகின்ற பெண்மானைச் சிங்கம்பிடித்து முறித்துக்கொண்டு போவதுபோல யமன் என்னையேன கொணடுபோகவில்லை; என மனம் எஃகினாலே செய்யப்பட்டதோ? அல்லாவிடின, ஏன பிளந்தாவது சிதறியாவது போகவில்லை; இவ்வகைத துன்பங்களையடைந்து மழியாதோ? காலமல்லாக் காலத்தில, யாவர்க்காயினும் மரணங்கிடைக்குமோ? களர்நிலத்தில விதைத்த விதைபோல நான செய்த தவங்களும், விரதங்களும, தானங்களும், தருமங்களும, பலனற்றன வாயினவே; மனிதர்களுக்கு நினைத்தபொழுதே இறக்குந் திறமையிருக்குமாயின, கன்றுவிட்டுப்பிரிந்த பசுபோல, உன்னைவிட்டுப்பிரியும யானும் உயிரைவிட்டு, யமலோகம்போய்ச் சேர்வேன், உன்னைவிட்டு நானமாத்திரம் இங்குப் பிழைத்திருப்பதில பயனயாது? பசு கன்றுசென்றவழியே போவதுபோல நானும் உன்னுடன் காட்டுக்கு வருகின்றேன; என்றிவ்வண்ணம பிடித்துக் கட்டப்பட்ட தன பிள்ளையை நோக்கிக் கினனரி புலம்புவதுபோல வாய்விட்டுப் புலம்பியழுதாள.

அயோத்தியாகாண்டத்தில இருபதாவது சருக்கம்

முற்றிற்று

---

இந்தச்சருக்கத்தில (தசஸப்தசவாஷாணி தவஜாதஸ்யராகவ)என்று ஸ்ரீராமபிரானை நோக்கிக் கௌஸலை பதினேழுவயதுள்ளவராகக்கூறினள. (ஊனஷோடசவர்ஷோமே ராமோராஜீவலோசனஃ) என்று பாலகாண்டத்தில சக்கரவர்த்தி விசுவாமித்திரரை நோக்கி,ஸ்ரீராமபிரான் பதினறுவயதுக்குங் குறைந்தவனென்றுரைத்தமையால,விவாஹத்திற்கு முன்பே, ஸ்ரீராமபிரானுக்குப பனனிரணடு வயதுக்கு மேலாகி இருக்க

வேண்டுமென்பதில் ஐயமேயில்லை; (பாலோதவாதசவர்ஷோயம் அக்ருதாஸ்த்ரச்ச ராகவ:) என்று மாரீசன் ராவணனைக் குறித்து, ஸ்ரீராமபிரான் விசுவாமித்திரர் யாகத்திற்கு வருங்காலையில், பன்னிரண்டுவயதுள்ளவனென்று கூறினான். (உஷித்வாத்வாதசஸமா இக்ஷ்வாகூணும் நிவேசநே) என்றும், (தத்ரத்ரயோதசேவர்ஷே ராஜாமந்த்ரயதப்ரபு:) என்றும், (மமபர்த்தாமஹாதேஜா வயஸாபஞ்சவிம்சக:) என்றும், (அஷ்டாதசஹிவர்ஷாணி மமஜன்மநிகணயதே) என்றும், சீதாபிராட்டியார் வனவாசம் புறப்படும்போது ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதென்றும், தமக்குப் பதினெட்டுவயதென்றும், அருளிச்செய்கின்றார். இவற்றுள் சீதாபிராட்டியாரது வாக்கியத்தையும், மாரீசன் வாக்கியத்தையும் பற்றி, ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதெனவும், கோஸலையின் வாக்கியத்தைப்பற்றிப் பதினேழு வயதெனவும், சக்கரவர்த்தி வாக்கியத்தைப்பற்றி, இருபத்தெட்டு வயதெனவும், தோற்றுகின்றமையால், இவ்வேறுபாட்டிற்குக் காரணம் யாதோவெனின், சீதை மாரீசர்களின் வாக்கியப்படி இருபத்தைந்து வயதென்பதே உண்மை; கோஸலை வாக்கியத்திலும், (ச) என்றிருப்பதினால், மற்றொரு (ஸப்த) என்னும் பதத்தைச் சேர்த்து, இருபத்தொன்கு சென்று இருபத்தைந்தாம் வயதென்றே பொருள் கூறவேண்டு மாதலால், விரோதமில்லை; கர்ப்பவாசம் முதல், எட்டாவது வருஷத்தில் அந்தணர்களுக்கும், பதினொன்றாவது வருஷத்தில் க்ஷத்திரியர்களுக்கும், பன்னிரண்டாவது வருஷத்தில் வைசியர்களுக்கும், உபநயனம் செய்யவேண்டுமென்று விதியிருக்கின்றமையால், உபநயனத்துக்குமுன் ஏழுவருஷங்கள் சென்றனவென்றும், பின் பதினேழுவருஷங்கள் ஆயினவென்றும் பொருள்; கோஸலை வாக்கியத்துக்குக் கூறுவது சரியோவெனில், பதினொன்றாவது வருஷமென ஒருமையாற்கூறாது, வருஷங்களிலெனப் பன்மையாற் கூறினமையால், ஒன்பதாவது பத்தாவது வருஷங்களிலும், ராஜாக்களுக்கு உபநயனஞ் செய்யலாகுமெனப் பொருள் கொள்ளவேண்டு மாதலால், விரோதமில்லையெனக் கொள்க. சக்கரவர்த்தியார் வாக்கியத்திலும், பதினாறுவயதுக்குங் குறைந்தவனென்பதனால், பன்னிரண்டு வயதுள்ளவனென்றே மாரீசன் வாக்கியத்துக் கிசையப் பொருள் கூறினமையால், விரோதமில்லை, ஆதலின் ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதும், சீதாபிராட்டியார்க்குப் பதினெட்டுவயதுஞ் சென்றனவெனக் கொள்க. இங்ஙனமாயின், திருக்கல்யாண காலத்தில், சீதாபிராட்டியார்க்கு ஆறுவயதும், ஸ்ரீராமபிரானுக்குப் பன்னிரண்டு வயதும் ஆயினவெனக் கொள்ளவேண்டுதலால், (பதிஸம்யோகஸுலபம் வயோதருஷ்டவைவமேபிதா) என்று தமக்கு விவாஹஞ்செய்வதற்கு முன்பே யௌவனம் வந்ததாகக்கூறிய சீதாபிராட்டியாரது வாக்கியம் பொருந்துமோவெனின், ஸ்ரீமஹாலக்ஷ்மியே அயோநிஜையாகிப் பூமியிற் பிறந்திருக்கின்றமையால், அவளுக்கு ஆறுவயதிலே இளமைப்பருவம் வருவது வியப்பன்றெனக் கொள்க. ஸ்ரீமஹாலக்ஷ்மி இலங்கையில் ஓர் தடாகத்தில் தாமரை மலரிற்பிறந்து, அங்கிருந்து பூமிக்குள் பிரவேசித்து, மூன்றுவருஷமிருந்து, பின்பு மிதிலையில் பூமியினின்று, வெளியே அவதாரஞ்செய்தனளென; வேறு புராணத்திலிருக்கின்றமையால், அக்கணக்கின்படி சீதாபிராட்டியார்க்குத் திருமணக்காலத்தில், ஒன்பதுவயது சென்றமையால், யௌவனம் வரக்குறையில்லையே; பதினெட்டுவயது என்றது, மிதிலையில் அவதாரஞ்செய்தது முதல் கணக்கிட்டு அருளிச்செய்தமையால் விரோதமில்லை; சிலர் ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தெட்டு வயதென மொழிவார்கள். அவர் மொழி சீதாபிராட்டியாரது வாக்கியத்தோடும், மாரீசன்வாக்கியத்தோடும் பேதப்படுகின்றமையால், உண்மையல்லனவெனக் கொள்ளவேண்டு மாதலால், அங்ஙனங் கூறுவோர் கருத்தியை யாதெனவுணர்க.

# இருபத்தொன்றாவது சருக்கம்.

## ஸ்ரீராமபிரான் வனம்புகத் தடைசெய்த தம்பிக்குந் தாய்க்கும்

## நீதி யருளிச் செ

அவ்வண்ணமாகப் புலம்புகின்ற கோஸலையரசனைத் திருமகனை நோக்கி, இளையபெருமாள் தம்மெண்ணத்தை வெளிப்பட உரைசெய்ய இதுவே சமயமெனச் சொல்லலுற்றனர்: தாயீரே! ஸ்ரீராமபிரான் கைகேயிக்காக ராஜ்ஜியலக்ஷ்மியை விட்டுவிட்டு, வனவாசத்துக் கெழுந்தருளுவது எனக்குந் தகுதியாகத் தோற்றவில்லை; வயது சென்றவரும், காமவிகாரங் கொண்டவரும், போக விருப்புடையவரும், அறிவி னிலைகுலைந்தவருமாகிய சக்கரவர்த்தியார் கைகேயியினால் லேவப்பட்டவராய், எதுதான் கட்டளைசெய்யார்? ஸ்ரீராமபிரானை நாட்டிலிராமல் காட்டுக்கு ஓட்டிவிடும்படி இவரென்ன அபராதஞ்செய்தார்? என்ன குற்றஞ்செய்தார்? எப்பொழுதும்பிரியாதிருக்கின்ற நானுமிவர் சிறிதுங் குற்றஞ்செய்யக் கண்டிலேன்; பகைஞனாயினும் புறத்தில், ஸ்ரீராமபிரானைத் துதிசெய்கின்றானே யன்றிச் சிறிதும் பழிக்கக் கேட்டிலேன், கடவுள் போன்றவரும், வஞ்சம் சிறிது மறியாதவரும், ஐம்புலன்களையும் வென்றவரும், மருவலரிடத்தும் அன்புசெய்பவருமாகிய சற்புத்திரனைக் காரணமின்றி, தருமமுணர்ந்தயாவனாயினும், காடுசெல்லவிடுப்பனோ? மிகுதியும் மூப்பை யுடையாராயினும், மீண்டும் பாலன்போலக் காமவேட்கைகொண்டு மெய்ம்மறந்து கிடக்கின்ற வேந்தர் வேந்தர் மொழியை அரசுநெறியுணர்ந்த எந்தப்புத்திரனாகிலும் இதயத்திற் கொண்டு, அதற்குட்பட்டு நடப்பானோ? இச்செய்தியை மன்னர்பெருமான் அறிவதற்கு முன்னமே என்னுடன் கூடித் திருவபிஷேகங்கொண்டு, இந்நகரத்தை ஸ்ரீராமபிரான் தம்வசஞ் செய்து கொள்ளக் கடவர். வில்லைக் கையிலேந்தி யருகிலிருந்து, என்னால் பாதுகாக்கப்பட்டு, காலாந்தகன்போல எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமபிரானை எதிர்த்து, ஆஜ்ஞையை மீறி நடக்கவல்லவன் யாவன்? பரதனைச்சேர்ந்த யாவராயினும், ஒருகால் தடைசெய்வாராயின், அவர்களை யெல்லாங் கூர்மையுள்ள கணைகளால், துணித்துக் கொல்வேன்; சூரனாயினும், எப்பொழுதும் பொறுமைபூண்டு சாதுவாக இருப்பானாயின், அவன் யாவராலும், அவமதிசெய்யப் படுகின்றானன்றோ? கைகேயி வார்த்தையைக் கேட்டு, இம்மஹாராஜரும் தீங்குசெய்வாராயின், அவரையுங் கொல்வோம்; அல்லது பிடித்துக் கட்டிவிடுவோம்;—

గురోరప్యవలిప్తస్య కార్యాకార్యమజానతః
ఉత్పథంప్రతిపన్నస్య కార్యంభవతిశాసనం

குரோரப்யவலிப்தஸய கார்யாகார்யமஜாநதஃ
உத்பதம்ப்ரதிபனனஸய கார்யம்பவதிசாஸநம்.

செய்யத்தக்கதும் செய்யததகாதது மறியாமல, கர்வததினுல் அல் வழியில செலலுகின்றவன் குருவாயிருந்தாலும், அவனைத் தீசசெயல செயயவிடாமல தடைசெயது, அடககவேணடியதே தருமசசெய்கை; ஸ்ரீராமபிரானுககுரிய இநத ராஜ்ஜியததை என்னபலத்தினல, என்னகாரணத்தினல, கைகேயிககுககொடுகக நினைககிறீர். மஹாராஜா ஸ்ரீராமபிரானையும, என்னையும் பகைதது, அரசுப பெருஞ்செல்வததைப பரதனுக்குக கொடுககும்படி அவருக்கு என்னதிறமை யிருககின்றது ? எனதாயே ! நான் உளளுற உம திருமகனுரிடததில பததிதலைககொண்டு, இவர் திருவுளத்துக கிசைய நடபபதே என கருதது. இவ்வணணம சததியத்தின் மேலும், என் விலலின மேலும், தானததின் மேலும், யாகத்தின மேலும் ஆணையிடடு, உமககு உறுதிசெய்து கொடுககினறேன,—

దీప్తమగ్నిమరణ్యంవా యదిరామఃప్రవేక్ష్యతి
ప్రవిష్టంతత్రమాం దేవిత్వంపూర్వమవధారయ

தீபதமக்னிமரணயம்வா யதிராமஃப்ரவேக்ஷயதி
பரவிஷ்டம்தத்ரமாம்தேவி தவமபூர்வமவதாரய.

ஸ்ரீராமபிரான் எரிகின்றதீயில விழுவராயினும, தண்டகாரணியம் புகுவராயினும, என்னையவர்ககு முன்பே தீயில வீழ்ந்தவனாகவும், அரணியம புகுந்தவனுகவும், நீ நம்புவீராக இனி உமமுடைய துயரத்தைச சூரியன் இருளை நீக்குவதுபோல அடியேன நீககி, இன்பமுறச செய்வேன்; என் திறமையை நீரும் கண்ணுரககாண்க; ஸ்ரீராமபிரானுமகாண்க; என்றிவ்வண்ணம் அருளிசசெய்தனர். இவ்வாறு அருளிசசெய்த இளைய பெருமாளுடைய மொழியைககேட்டுக கோஸலைதேவியார் ஸ்ரீராமபிரானை நோககி, அடா என்னருமைத திருமகனே ! என் சக்களததியின் நீதியற்ற சொல்லைக்கேட்டுப பெற்றதாயாகிய என்மொழியைக் கேளாமல், என்னை விட்டுக் கானகஞ்செல்வது நலமன்று; தம்பி லக்ஷ்மணன் மொழியைக கேட்டுணர்ந்தாயன்றே ? இதன்மேல் உன் உள்ளத்துக்கு யாது நலமெனத் தோன்றுமோ அவ்வண்ணம் ஆராய்ந்து செய்வாய்; நீ தருமமுணர்ந்தவனாதலால், தருமஞ்செயயவேணடு மென்பதே உன்னெண்ணமாயின், தாயக்குத் தொணடுசெயவதே சிறந்த தருமமாதலால், நீ என்

சொற்படி இங்கிருந்தே எனக்குப் பணிசெய்வாயாக. காசியபமஹா முனிவர் இல்லறம் வழுவாமல், தம் திருமாளிகையிலிருந்தே தம் தாய்க்குத் தொழும்புசெய்து, அதனால் நற்பேறு பெற்றாரன்றோ? மஹாராஜர் பிதாவாதலால், அவர் சொல்லைத் தவறலாகாதென்பது உனக்குக் கருத்தாகில், நான் மாதாவாதலால், என் சொல்லையும், தவறலாகாதன்றோ? நானுனக்கு வனம்போகும்படி அனுமதி கொடுப்பதில்லை; நீ இவ்விடந் துறந்து வனம்போகக் கூடாதென்று மறுக்கின்றேனாதலால், நீ இவ்விடத்தைத் துறந்து போகக்கூடாது, உன்னைப் பிரிந்தபின் இன்புறுவதினும், உயிர் பிழைப்பதினும், எனக்குச் சிறிதும் பயனில்லை; உன்னுடன் கூடிப் புல்லைத் தின்று பிழைத்தாலும் எனக்குத் துன்பமில்லை, என்னைவிட்டு நீ வனம்புகுவாயாயின், நானிங்குப் பரமபதத்தைக் கருதி, இறத்தலை நோக்கிக்கொண்டு, உயிர் மாய்வேனே யல்லாமல், உயிர் வைத்திரேன்; அனந்தரம் இந்த அதர்மத்தால் பிப்பலாதமுனிவர் திறத்திற்செய்த அதர்மத்தினாலும், மாதாவின் பணி தவறிய அதர்மத்தாலும், சமுத்திரராஜன் பிரஹ்மஹத்திசெய்தவனடையத்தக்க துன்பத்தை யடைந்ததுபோல நீயும் உலகமெல்லாமறியத்தக்க துன்பத்தையடைவாய்; என்றிவ்வண்ணம் புலம்பாநின்றனள். அங்ஙனம் புலம்புகின்ற தம்மாதாவை நோக்கி, ஸ்ரீராமபிரான் தருமவழி கோணாமல் அருளிச்செய்கின்றார். தாயாரே! தந்தையார் ஏவுதலைக் கடந்து நடக்க எனக்குத் திறமையில்லை; நான் உம்மைத் தலைவணங்கி வேண்டிக்கொள்ளுகின்றேன்; நான் வனவாசம்போக எண்ணங்கொண்டிருக்கின்றேன்; கண்டுமஹாமுனிவர் தந்தையின் வாக்கியத்தின்படி பசுக்கொலை செய்தனர். நம்பெரியோர்களாகிய சகரர்கள் அறுபதினாயிரம் பேர்களும், பிதாவின் மொழியினாலே நிலத்தைத் தோண்டிப் பாதலஞ்சென்று, கபிலமஹாரிஷியால் மரணத்தையு மடைந்தனர்கள். பரசுராமருந் தந்தையின் வாக்கியத்தின்படிக் கோடாலியால், தம்மை ஈன்றாளாகிய ரேணுகையை வெட்டிக் கொலைசெய்தனர் மற்றும் பல பெரியோர்கள், பிதாவின் வாக்கியத்தைப் பாதுகாப்பதற்காகப் பற்பல செயல்களைச் செய்திருக்கின்றார்கள். நானும் தந்தையின் சொற்படி நடப்பேனே யன்றி அதைச் சிறிதும் வழுவேன், நானொருவனே இப்பொழுது புதிதாக உமக்கு விரோதமாகத் தருமத்தைக் கற்பித்துரைசெய்யவில்லை, மேற்சொன்ன இவர்களெல்லோருஞ் செய்தே யிருக்கின்றார்கள், பெரியோர்கள் நடந்து தேய்ந்த வழியிலே நானுஞ் செல்லுவேனல்லது அதை வழுவிநடவேன்; பிதாவின் வாக்கியத்தின்படி நடப்பவன் ஒருவனும் இவ்வுலகில் இகழ்வையடையான், புகழ்ச்சியையே யடைவானென்றிவ்வகையாக நீதியருளிச் செய்து, இளையபெருமாளையும் நோக்கி, லக்ஷ்மணா! உனக்கு என்மேலுள்ள பக்தியையும், விசுவாசத்தையும், உனதாண்மையையும், வலிமையையும், சௌரியத்தையும், நான் நன்கறிந்திருக்கின்றேன், என் தாயானவர் தருமத்தின் நுட்பத்தையறியாமல் மிகத் துன்பமடைகின்றார். யாவுமுணர்ந்த

நீயும், அதற்கிணங்கி யுரைப்பது தகுமோ? உலகத்தில் தருமமன்றோ சிறந்தது; தருமத்திலன்றோ வாய்மை நிலைமைபெற்றிருக்கின்றது, நம் பிதாவின் வாக்கியம், தருமத்தைச் சார்ந்ததேயன்றித் தருமத்தைச்சாராத தன்று; தந்தைமொழியையாயினும், தாயின் மொழியையாயினும், அந்தணர்மொழியையாயினும், செய்வேனென முன்பு வஞ்சினஞ்செய்து, பின்பு செய்யாமல் தருமத்தையுணர்ந்த நான் தவறுவேனோ? நான் பிதாவின் வாக்கியத்தின் வரம்புகடந்து ஒருகாலும் நடவேன். தந்தையின் சொல்லின்படி கைகேயியார் எனக்குக் கட்டளைசெய்தனர். நானு மதனைச்செய்வேனென வொப்புக்கொண்டேன். அம்மொழியை நான் பொய்யமையாகச்செய்யேன். வஞ்சகத்தை மேற்கொண்ட இத்தீயவெண்ணத்தைவிடுக் கொடுமைநீங்கிச் சமம் பூண்டு தருமத்தை மேற்கொண்டு என்கருத்துக்கிணங்க நடப்பாயாகவென்றிவ்வண்ணம் அன்புகூர்ந்தருளிச்செய்து, மீளவும் கோஸலையைநோக்கிக் கைகூப்பி வந்தனஞ்செய்து, என்தாயே! நான் வனஞ்செல்லுகின்றேன்; நீர் அருள்செய்து கட்டளைசெய்யக்கடவீர். என உயிரின்மேலாணையிட்டு வேண்டிக்கொள்ளுகின்றேன். இதற்குக் குறுக்குச்சொல்லாமல் வழியிலெனக்கு நன்மையுண்டாகும்படி ஆசீர்வாதஞ்செய்தருளவீர். நான்பதினான்கு வருஷம் வனவாஸஞ்செய்து என் பிரதிஜ்ஞையை முற்றுவித்துச் சுவர்க்கத்தினின்றும் வீழ்ந்த, யயாதிப்புரவலன் மீண்டும் விண்ணுலகஞ்சேர்ந்து மகிழ்ந்ததுபோல மீண்டு வந்திங்கு மகிழ்ச்சியுடன் உமக்குப் பணிசெய்து உம்மொழியையும், நிறைவேற்றுவேன்; சோகத்தை யுள்ளடக்கிக்கொள்வீர், துன்பமுறவேண்டாம்; பிதாவின் மொழியைப் பாதுகாத்து மறுபடி இங்கு வருவேன்; தாயீரே! நீரும், நானும், சீதையும், லக்ஷ்மணனும், சுமித்திரையும் எல்லோரும், என் தந்தையின் கட்டளையின்படியே நடக்கவேண்டும்; இவ்வாறுநடப்பதே அநாதியான சிறந்ததருமம், தாயரே! துன்பத்தையுள்ளடக்கிக்கொண்டு தந்தையின்சொற்படி நான்வனவாசம்போவதற்கு அனுமதிசெய்யக் கடவீரென் றிவ்வண்ணம் தருமநெறிகோணுமல் ஒரேபிடியாக வுரைசெய்தனர். கோஸலை அதுகேட்டு மைந்தனைப்பிரியும் பிரிவைச்சகிக்கமாட்டாமல், உடனே மூர்ச்சையடைந்து சிறிதுபொழுதுகழித்து, மூர்ச்சை தெளிந்தெழுந்து, ஸ்ரீராமபிரானை நோக்கி, அடா என்னரும்புதல்வனே! உனக்குத் தந்தைபோலத் தாயாகிய நானும் குருவன்றோ? நான் உன்னை அன்பினால் வளர்த்தமையினாலும், தேகசம்பந்தத்தினாலும், நீ வனம்புக நான் விடைகொடுப்பதில்லை; துன்பமடைந்த என்னைவிட்டு, நீ போவது தகுதியற்றது, உன்னைப் பிரிந்தபின், நான் பிழைத்திருப்பதனாலென்ன? பிதிருலக மடைவதினாலாகிலும், தேவருலகமடைவதினாலாகிலும், என்னே! உன் திருமுகத்துக்கெதிரில் முகூர்த்தகாலம் வாழ்ந்திருந்தாலும், அதுவே இன்பங்களிலுஞ் சிறந்ததென் றிவ்வண்ணஞ் சோகத்தோடுரைசெய்தனள். ஸ்ரீராமச்சந்திரர் அவ்வுரையைத் திருச்செவிசாத்தியும் மனிதர் பலர்கூடிக் கொள்ளிக்கட்டைகளைக் கையிலெடுத்துக்கொண்டு,

நாட்டில் தன்வழிப்பற்றிச் செல்லுகின்ற மதயானையைத் தடைசெய்யினும்,
அது மீளாமல், தன்வழியே செல்லுவதுபோலத் தன் மனதில் குன்றாமல்,
வனஞ்செல்லவே துணிவுகொண்டு, சோகங்கொண்ட தம் திருத்தாயையும்,
தம்பியையும்நோக்கித் தனித்தனி இன்சொல்கூறித் தேற்றுபவராயினர்.
இலக்ஷ்மணா! என்மீது உனக்குள்ள பத்தியையும், வலிமையையும், நான்
நன்கறிவேனாயினும், என் கருத்தினை நீயுணராமல் என்மாதாவுடன்கூடி,
நீயும் என்னைத் துன்பமுறச்செயலாகுமோ? இவ்வுலகினில் தருமம் அடியாக
வுள்ள நற்பயன்களுக்குக் காரணமாகத் தருமப் பொருளின்பங்களன்றோ?
காணப்பட்டன. அவற்றுள்ளும், அறமின்றிப்பொருளின்பங்கள்மட்டும், பயன்
படா; தருமமொன்றே முதற்காரணமாகும், மனத்துக்கினியாளும், கட்டழகி
யும், நன்மக்களைப் பெற்றவளுமாகிய மனையாளொருத்தியே முறையே
அறம்பொருளின்பங்களெனனும் மூன்றுபேறுகளையும் தருகின்றனளன்றோ?
அல்லாவிடின், ஒருதருமத்தால் அர்த்தகாமமோக்ஷங்கள்சித்தியாகாவிடினும்,
தருமம் வளருமே? அத்தன்மையதாகிய அறத்தைச்செய்ய முயற்சிசெய்ய
வேண்டும்; தருமத்துக்கிசையாத பொருளின்பங்களை ஒருகாலும் செய்ய
லாகாது; பொருளின்பங்களை மாத்திரம் தேடுவோர் யாவர்க்கும் பகைஞரா
கின்றனர்களல்லரோ?

గురుశ్చ రాజా చ పితా చ వృద్ధః క్రోధాత్ప్రహర్షాద్యది వా౽పి కామాత్
యద్వ్యాదిశేత్కార్యమవేక్ష్య ధర్మం కస్తన్న కుర్యాదనృశంసవృత్తిః

குருச்சராஜாசபிதாசவ்ருத்த: க்ரோதாத்ப்ரஹர்ஷாத்யதிவாபிகாமாத்
யத்வ்யாதிசேத்கார்யமவேக்ஷ்யதர்மம் கஸ்தன்னகுர்யாதந்ருசம்ஸவ்ருத்தி:.

ஆசாரியனும், புரவலனும், தந்தையும், மூப்பினருமாகிய ஒருவர் சீற்ற
த்தினாலாயினும், பெருமகிழ்வினாலாயினும், காமத்தினாலாயினும், வாய்மை
தவறாமையாதியாகிய அறத்தைக் காக்கும்பொருட்டு யாதேனுமொரு காரிய
த்தைச் செய்யக்கடவையெனத் தம் புத்திரனை நோக்கி ஏவுவாராயின்,
தீச்செயல் புரிபவனல்லாத யாவன் அக்காரியத்தை யாவலுடன் செய்து,
தந்தையைப் பாதகத்திலழுந்தாமல் பாதுகாவான்? அடா என்னருமைத்
தம்பி! ஆதலின் நான் நம் தந்தையாருடைய கட்டளையை முறையேசெய்து
முடிக்காமல் தவறிவிட்டேன்; புரவலர் பெருமான் நம்மிருவருக்கும் குரு;
என் தாய்க்கும் பர்த்தா? ஆதலின் நம்மூவருள் ஒருவரும் அவர் கட்டளைக்
குக் கேடு நினைப்பது தகுதியன்று; அவரே நமக்கு தருமம்; அன்றியும்
வாய்மையுள்ளாரும், அறநெறி யொழுகுபவரும், மன்னர் மன்னருமாகிய
மஹாராஜா உய்ந்திருக்கையில்; என் தாய், கணவனில்லாத கைம்பெண்
போல் வேறு தஞ்சமின்றி, மகன் போகுமிடமே போவதுபோல அரசர்பிரானை
விட்டு, என்பின் வனம் வருவேனென்பதும் தகுதியாமோ? என்தாயே

னென வனம் செல்ல விடைகொடுத்து, ஆசிர்வாதஞ்செய் தனுப்புவீராக; வாயமையினால், யயாதி மீளவும பொன்னுலக மடைந்தாற்போல யானும் மீளவும மீண்டு வருவேன்.—

యశోహ్యహం కేవలరాజ్యకారణాత్ నపృష్ఠతః కర్తుమలం మహోదయం
అదీర్ఘకాలేనతు దేవి జీవితే వృణేవరామద్య మహీమధర్మతః

*யசோஹ்யஹம்கேவலராஜ்யகாரணாத நப்ருஷ்டதஃகர்த்துமலம்மஹோதயம்*
*அதீர்க்ககாலேநதுதேவிஜீவிதே வ்ருணேவராமத்யமஹீமதர்மதஃ.*

யாக்கையென்பது அழியுந் தன்மையுடையதேயன்றி, நெடுநாள் நிலை பெற்று வாழ்வதன்று; அதன்மேற்கொண்ட விருப்பினால், இழிவாகிய இவ் வரசுச் செல்வத்தின பொருட்டு, உடலழிந்தும், உலகமுள்ளளவாயும அழி வற்று நிலைபெற்று மேன்மைபயக்கும் புகழினைப் பின்புறத்து நிறகச்செய்து நில்லேன; ஆதலின தருமவழிசென்று, புகழினைப் பெறுவேனேயல்லது, தருமத்தைத்தவறி அற்பமாகிய இ[illegible] பூமியையாள நான விருப்பமுறேன்; எனறிவவண்ணம, தாய்க்கும, தம்பிக்கும், நீதிமொழி யருளிச்செய்து, மனந்தேறறி, பேராற்றலுடைமையால், தண்டகாவனம் புகுவதிலே துணிவு கொண்டு, தம திருத்தாயைத் தமமிதயத்துள் வலம்செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தொன்றாவது சருக்கம்
முற்றிற்று.

## இருபத்திரண்டாவது சருக்கம்.

சக்கரவர்த்தித் திருமகனார் இளையபெருமாளைத் தேற்றியது.

அநந்தரம் திருத்தமையனருளிச்செய்த நீதிமொழிகளைக் கேட்டுணர்ந் தவராயினும், அவர்மீதுள்ள பத்தியின் மிகுதியினால், அவருக்குக் கடுந் துயரம் வாய்த்ததேயெனச் சோகமும், கைகேயி இவ்வண்ணஞ்செய்தனளே யெனக் கடுஞ்சினமுங்கொண்டு, கண்கள் சிவந்து, கட்டுண்ட மதயானை போலப் பெருமூச்செறிந்துநிற்கின்ற இளையபெருமாளைக்கடாக்ஷித்து, சக்கர வர்த்தித் திருமகனார் தமமீதுள்ள அன்பினால், இவ்வண்ண மிருக்கின்றா ரெனத் திருவுளத்துணர்ந்து, ஊக்கத்தையும், தோளவலியையும் மேற்கொ ண்டு, அடா தம்பி ! இதென்ன அறிவிலர்போல வருந்துகின்றனை; சினத் தையுஞ் சோகத்தையும் உள்ளடக்கித் தீரமொன்றையே மேற்கொண்டு, என்னபிஷேகத்துக்குத் தடைநேர்ந்ததுமன்றி, வனவாசமும் போகும்படி

சேரிட்ட இவ்வவமானத்தைச் சிறிதும் பாராட்டாமல், இயல்பாயுள்ள மகிழ்வையே கைப்பிடித்து, என்னபிஷேகத்துக்காகச் சேர்த்த பண்டங்களை யெல்லாமெறிந்துதறிவிட்டு, இகழ்விலாச் செய்கைகளைச் செய்யக் கடவை.' அடா லக்ஷ்மணா! சுமித்திரைபெற்ற நற்காதலனே! என்னபிஷேகத்தின் பொருட்டு மனமகிழ்ச்சியோடு பண்டங்களைச் சேர்த்ததுபோல நான் காடு றையப் போவதற்குரிய கருவிகளையும், உள்ளமகிழ்வோடு சேர்க்கக்கடவை. எனக்கு அபிஷேகம் ஆகவில்லையேயென மனம் நெகிழ்கின்ற என் அன்னை யார் வருந்தாதவண்ணம், நீயும் துன்பங்கொள்ளாமல் மகிழ்வுடனிருந்து அவரையும் மனந்தேறும்படி செய்யக்கடவை. நான் வனம்போகாதவரையில் எனக்கு அபிஷேகமாகிவிடுமோவென்று கைகேயியார் தவிக்கின்றார். அவருக்கு இவ்வண்ணஞ் சங்கையுறாதபடி முயலக்கடவை. அன்றியும், நான் இதுகாறும் பிதாவினிடத்திலாவது, மாதாக்களிடத்திலாவது, அறிந்தாயினும், அறியாமலாயினும், அபராதஞ்செய்ததாக எனக்குச் சிறிதுந் தோற்ற வில்லை, பொய்ம்மொழி யுரையாதவரும், சொல்லியசொல் தவறாதவரும், சிறந்த பராக்கிரமமுடையவருமாகிய தம்பனா கைகேயிக்கு வரங்கொடு த்தபடி யான் செய்யாவிடின் நரகம் நேரிடுமேயென அஞ்சுகின்ற அந்த அச்சந்தீர்ந்து மனமகிழக்கடவர். நான் அவர் வரமளித்தபடி அபிஷேகங் கொள்வதை நிறுத்தி, வனவாசம் போகாவிடின், வாய்மை வழுவிப் போயி னுமேயென என் தந்தையார் மனந் தவிப்பாரல்லது உகந்தருளார், அவர் மனம் வருந்துவதினால், என் மனமும் மிக வருத்தமுறுமேயல்லது சிறிதும் மகிழ்வுறாது, லக்ஷ்மணா! ஆதலால், அபிஷேகங்கொள்ளும் முயற்சியைத் தவிர்த்து, இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டு வனம்புக விரும்புகின் றேன்; என்னை வனத்துக்குச்செல்ல விடுவதினால், கேகயராஜன்மகள் மன மகிழ்வுகொண்டு, பரதனை யழைப்பித்து அபிஷேகஞ் செய்விப்பார், நான் மரவுரியுடுத்துச் சடை திரித்துக்கொண்டு தவசியாகிக் கானகஞ்சென்றால் அல்லது கைகேயியார் மனமகிழ்வுறார்; நான் வனவாஸம் போகவேண்டுமெ ன்று யார் போதனை செய்தார்களோ? அதைக்கேட்டு யாருக்கு அவ்வெண்ண மொக்குமெனத் தோன்றியதோ? அவர்களையும், சத்தியத்திற் கட்டுண்ட சக்கரவர்த்தியாரையும் வருத்தமுறச்செய்ய என் மனந் துணிவுகொள்ள வில்லையே, எனக்கும் இவ்விஷயத்தில் சிறிதும் துன்பமும் தோற்றவில்லை; இனிக் காலநீட்டியாமல், நானிப்பொழுதே புறப்பட்டு வனஞ்செல்வேன்; தம்பி! நான் கானுறையப் போவதற்கு விதியே காரணமன்றி, வேறுகாரண மில்லை; அங்ஙனமல்லாவிடின், என்பால் மிக்க அன்புள்ள கைகேயியார்க்கு என்னைக் காடு செல்லவிட வேண்டுமென எண்ணமுண்டாவதற்குக் கார ணம் யாது? லக்ஷ்மணா! நான் பெற்றதாயாரிடத்துப்போலவே மற்ற தாயர்களிடத்தும் வேற்றுமையின்றிக் குற்றேவல் செய்துவந்தே னென் பதையும், கைகேயியாரும் பரதனிடத்துப்போல என்னிடத்திலும் மிக

அன்புள்ளவரா யிருந்தனரென்பதையும், நீ நன்கறிந் திருக்கின்றனையன்றோ? அத்தன்மையராகிய கேகயன் திருமகளாரோ? என்னபிஷேகத்தை ஏன் தடைசெய்யவேண்டும்; நான் காடுறைதல் செய்யவேண்டுமென எண்ணங்கொண்டு, மொழிவதற்குங்கூடாத வன்மொழிகளை யுரைத்தாரென்பதற்கு விதியேயன்றி, வேறொன்றுங் காரணமாகாதென நான் நம்புகின்றேன்; இங்ஙனமன்றி, நற்குண நற்செய்கையுடைய கேகயராஜன் மகளும், தன் பர்த்தா முன்பாக இவ்வண்ணம் கொடுமொழிகளை நாணமற்று, மொழிவரோ? யாவராலுந் தடுக்கவொண்ணாத அவ்விதியே என்மீதும், கைகேயியார்மீதும், வீழ்ந்ததெனபதில் சந்தேகமேயில்லை; சுமித்திராதேவி குமாரா! பலனால் ஆழ்ந்தாராயப்பட்டுக் கட்புலனாகாமலெங்குந்திரிகின்ற விதியை எதிர்த்து அதனோடு போர்செய்யவல்லவன யாவலுளன? இன்பந்தருவதும், துன்பந் தருவதும், அச்சமுறுவிப்பதும், சினமுறச்செய்வதும், பயன் பெறுவிப்பதும், பயனை இழப்பிப்பதும், படைப்பதும், துடைப்பதும், இவை முதலிய செயல்களெல்லாந் தெய்வச்செயல்களேயன்றோ? ஐம்புலன்களையுமவென்று கடுந்தவஞ்செய்கின்ற முனிவர்களும், தெய்வத்தால் பீடிக்கப்பட்டவர்களாகிக் காமமுஞ் சினமுங்கொண்டு விடுதலரிய நியமங்களைத் தவிர்ந்து, தவந்துறந்து, நிலைகுலைந்தனர்களன்றோ? ஒருவன் ஒருகாரியத்தைச்செய்து முடிக்கத் தொடங்குகையில், அதற்கு யாரும் எண்ணங்கொள்ளா திருக்கையிலே தற்செயலாய்த் தடைநேர்ந்து, மாறாகத்துன்பமோ இன்பமோ விளைவதென்பது தெய்வத்தின செயலே யன்றி, வேறொன்றினாலன்று; என றிவ்வண்ணம் கூறினானும், உண்மையாக ஆராயுங்கால் எனக்கு அபிஷேகம் நின்றுவிட்டதேயெனச் சிறிதும் துன்பமுண்டாகவில்லை; நீயும் சிறிதும் மனம் வருந்தாமல், என் கருத்துக்கிசைந்து, என்னபிஷேகத்தின் முயற்சியை விட்டுவிடக்கடவை. அடா லக்ஷ்மணா! அபிஷேகத்தின்பொருட்டு சித்[illegible]செய்யப்பட்ட இந்த பூர்ணகும்பங்களை நான் தவசியாக விரதஸ்நானஞ்செய்வதற்கு பயன்படக்கடவன. அன்றியில், இவை அரசன் உடைமைப் பொருள்களெனப் படுதலால், இவற்றால் நான் விரதஸ்நானஞ்செய்வதில்லை; நானே வனத்திற்சென்று, என் கையினாலே கொண்டுவரப்பட்ட தீர்த்தமே விரதஸ்நானத்துக் குபயோகமாகக்கடவது. தம்பி லக்ஷ்மணா! அரசுச்செல்வம் போயிற்றேயென நீ சிறிதும் துன்பமுறல்வேண்டாம்; இராச்சியமேயாயினுலென்ன? வனமேயாயினுலென்ன? ஆராயுங்கால், அரசுச்செல்வத்திலும், காடுறைதலே சிறந்தது, செங்கோல் வழுவாமல், உலகத்தாரெல்லோர்க்கும் இனியனாகி, அரசுசெய்து எல்லோரையும் மகிழ்விப்பதென்பது மிகுதியும் வருத்தமாகியதன்றோ? வனத்துக்குப்போனால், ஒருசிந்தையு மின்றிப் பற்பல விநோதங்களைப் பார்த்துக்கொண்டு, சிறந்த தவங்களையும், விக்கினமின்றிச் செய்துகொண்டு மகிழ்வுறலாகுமன்றோ? இதனை உணர்ந்து நீ உள்ளங்கவலற்க.

న లక్ష్మణాస్మిన్ ఖలు కర్మవిఘ్నే మాతా యవీయస్యతిశంకనీయా ।
దైవాభిపన్నా హి వదత్యనిష్టం జానాసి దైవం చ తథాప్రభావం

நலக்ஷ்மணாஸ்மின்கலுகர்மவிக்னே மாதாயவீயஸ்யதிசங்கனீயா

தைவாபிபன்னாஹிவததயநிஷ்டம் ஜாநாஸிதைவஞ்சததாப்ரபாவம்.

அடா இலட்சுமணா ! நம்மிளையதாயார் அபிஷேகத்தைத் தடைசெய்த வரேயெனச் சிறிதும் அவர்மீது சினங்கொள்ளற்க; தெய்வத்தினால் ஏவப் பட்டவராகி, அவர் அநிஷ்டமுரைத்தனரேயன்றி வேறில்லை; தைவம் அத் தன்மையதாகிய மகிமையுடையதென நீ யறியாயோ ? இனியாயினும், நீ கோபசோகங்களை நீக்கி, மனமகிழ்வுறக் கடவையென் றிவ்வண்ணம் நீதி கூறி, மனந்தேற்றி யருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## இருபத்துமூன்றாவது சருக்கம்.

ஸ்ரீராமபிரானை வனம்போகவேண்டாமென இளையபெருமாள்

மறுத்தது.

இவ்வண்ணஞ் சக்கரவர்த்தித்திருமகனார் அருளிச்செய்தலும், அதிலு டன்பாடின்மையால், இளையபெருமாள் தலைகுனிந்து அதனைக்கேட்டுத் திருத்தமையனார் யார்சொல்லியுங் கேளாமல், தருமத்தையே கடைப்பிடித் தனரேயென மகிழ்ச்சியையும், ராஜ்ஜியம் பாதுகாக்கவல்ல இவர்க்குக் காடு புகும்படித் துன்பம் நேரிட்டதேயெனக் கடுந்துன்பத்தையு முற்றவராகித் திருவபிஷேகத்தைத் தடைசெய்தவர்மீது சினம் பெருகப்பெருகப் புருவங் களை நெரித்துப் பெட்டியிலடைத்துக் கோல்கொண்டு தூண்டிய நச்சரவம் போலப் பெருமூச்செறிந்து, சினங்கொண்ட சிங்கம்போலப் பார்ப்பவர்கள் அச்சங்கொள்ளத்தக்க முகமுடையவராய், மதயானையின் துதிக்கைபோன்ற தம் திருக்கரத்தின் நுனியை யுதறிக்கொண்டு, கழுத்தைத் தோள்மே லெடுத்துக் கடைக்கண்ணினால் தமையனை நோக்கி, என்னையனே ! தந்தை யின் வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்யாது விட்டாரென உலகத்தார் பழிப் பார்களென்று நினைத்துத் தேவர் வனவாஸஞ்செல்ல முயற்சிசெய்வது மிகத் தகுதியற்றது, இவ்விஷயத்தில் தேவர் மயக்கங்கொண்டிருக்கின்றீரோ ? அன்றியில், தேவரைப்போன்ற மஹாசூரர்கள், தேவர் அருளிச்செய்த வண்ணம் முறைசெய்வார்களா ? சௌரியமுள்ளவர்களிடத்துத் தெய்வமென் பது தாழ்ந்ததேயன்றி, வீரமுடையதாகாதன்றோ ? நம் விஷயத்தில் இறைமை

யற்று, ஒடுங்கிக்கிடக்கின்ற தெய்வத்தைத் தேவர் எடுத்துப் புகழ்வதென்ன புதுமை? தாய் தந்தையர்களது சொல்லைத் தவறுவது குற்றமென நினைக்கின்றீரோ; அது தவறாகாது. அவர்கள் சாதுக்களாகித் தருமமாக வாஜ்ஞை செய்து, அதைச் செய்யாவிடின் பாவமுண்டாகுமேயன்றி, அவர்கள் வஞ்சங் கொண்டு முறையல்லாதன வுரைசெயில், அதனைச் செய்யாதொழியின் பாவமுண்டாகுமோ? அவ்விருவர்களும் நியோகமென்று தேவருக்கேன் சங்கை தோற்றவில்லை; இவ்வுலகில் அகத்திற் கசடுகொண்டு புறத்தில் தருமமுள்ளவர்கள்போல நடிப்பவர்களும் பலருளரெனத் தேவர் அறிந்திலீர்போலும், அவ்விருவரும் கசடற்றவர்களாயின், தேவருடைய திருவபிஷேகத்தை ஏன் தடுக்கின்றனர்கள். அன்றியும், இவர் கைகேயிக்கு முன்பே வரங்கொடுத்திருந்தாரென்பதும் பொய், அஃது உண்மையாயின், அவள் முன்னமே வரத்தைப் பெற்றுக்கொண்டிராளோ? இவரும் வரங்கொடுத்துவிட்டிராரோ? ஆதலின், அது பசும்பொய்; இவர்க்குக் கைகேயிமீதுள்ள காதலினால், அவள் சொற்படி தேவரைக் காட்டிலோட்டக் கருதி, உலகத்தார் முன் தம் பழியைக் கழித்துக்கொள்வதற்காக, இருவருங்கூடி இவ்வண்ணம் ஆலோசனை செய்துகொண்டனர்களெனவே நம்பவேண்டும்; மூத்த திருக்குமாரராகிய தேவர் எழுந்தருளியிருக்கையில், தேவரைவிட்டு மற்றொருவனுக்குத் திருமுடிசூட்ட முயற்சிசெய்தது, உலகநீதிக்கு விரோதமாகியதன்றோ? என்னய்யனே! தேவரைவிட்டு மற்றொருவன் திருமுடிசூட்டிக்கொள்வதைக் கண்ணுற்று, அடியேன் சிறிதுபொழுதும் பொறுத்திரேன்; இவ்விஷயத்தில் அடியேன் செய்யும் பிழையைத் தேவர் பொறுத்தருளவேண்டும், எவ்விதத்திலும் தந்தையின் மொழியைப் பாதுகாப்பதே தருமமென வேற்றுமைகொண்டு வனம்புகுவேனல்லது, திருமுடி பொறுக்கேனென்ன மருள்கொண்டருளிச்செய்கின்றீர்; அது தருமமாயினும், எனக்குப் பகையேயன்றிச் செய்யத்தக்க தாகாது? தேவர் கருதியவாறு செய்து முடித்துக்கொள்ளுந் திறமையுடையாராயினும், பெண்ணறிவுக்கு வசப்பட்டு மயங்கிய தந்தையின் நீதியற்ற வாக்கியத்தைச் செய்ய ஏன் முயலுகின்றீர்; தாய் தந்தைகள் பரதனுக்கு அபிஷேகஞ் செய்விப்பதன்பொருட்டே கபடஞ் செய்து நம்மைக் காட்டிக்குச் செல்லவிட நினைத்தார்களெனத் தேவர் நன்குணராவிடின், என்னய்யனும்? தருமமல்லாததைத் தருமமென மருள்கொண்டு, கடுந்துன்பத்தை யுறுகின்றீரோ வென்னும் துன்பம் எனக்கு ஒருபொழுதும் நீங்காது; அவ்வண்ணந் தேவர் செய்வதும் இகழத்தக்கதேயன்றித் தருமமாகாது; காமாதுரர்களாயும், நமக்குத் தாய் தந்தையரென்னும் பெயருடையர்களாயிருந்தே பகைஞர்களுமாகிய அவ்விருவர்களுடைய எண்ணத்தைத் தேவர் எவ்வண்ணஞ்செய்ய முயல்கின்றீர், இவ்வண்ணம் நேர்ந்தது, தெய்வத்தின் செயலேயன்றித் தாய் தந்தைகளின் செயலன்றெனத் தேவருக்கு நம்புதலிருப்பினும், அது செய்யத்தக்கதாக அடியேனுக்குத் தோற்றவில்லை; அஃது தேவரால் நீக்கத்தக்கதே யாகும்.

విక్లబో వీర్యహీనో య స్స దైవమనువర్తతే
వీరాస్సంభావితాత్మానో న దైవం పర్యుపాసతే
దైవం పురుషకారేణ యస్సమర్థః ప్రబాధితుం
న దైవేన విపన్నార్థః పురుషస్సోవసీదతి.

விக்லபோவீர்யஹீநோயஸ ஸதைவமனுவாததே
வீராஸஸம்பாவிதாதமாநோ நதைவமபாயுபாஸதே
தைவம்புருஷகாரேண யஸஸமாததஃபரபாதிதும
நதைவேநவிபன்னார்த்தஃ புருஷஸஸோவஸீததி.

யாவனொருவன பயமுற்றவனும, திறமையற்றவனுமா யிருப்பானோ அவனே தெய்வந் தெய்வமென்று தெய்வத்தை யனுசரிப்பான்; யாவர் ஊக்கமுற்றுப் பயமற்றவரும, திறமையுற்றவருமாயிருப்பார்களோ அவர்கள தெய்வமெனபதைச சிறிதும் மதிக்கமாட்டார்கள தம திறமையினால தெய்வத்தைத் தடுக்கவல்லவா, ஒருகாலுந் தெய்வததால கெடுதியடைந்து வருந்தார்கள. ஊழின் திறமையையும், ஆண்மையின் திறமையையும், ஜனங்கள இப்பொழுதே காணபபோகின்றாகள ஊழினவலி ஆண்மகன்வலி இவற்றின ஏற்றத்தாழ்சசி இப்பொழுது வெளிபபட விளங்கப்போகின்றன. மதமேறித் தடையினறிக் கொழுத்துத திரிகின்ற களிறுபோனற தெய்வமன்றோ? தேவருடைய ராஜ்ஜியாபிஷேகத்தைத் தடைசெயததென வருளிச் செயதீர்; அத்தெய்வத்தை யான் ஆண்மையினால் தடுத்தோட்டி விடுகின்றேன கடாக்ஷித தருளவீராக. அஷ்டதிகபாலாகளும, மற்றும் மூவுலகிலுமுள்ள சூராகளுங்கூடி எதிர்தது, தேவருடைய திருவபிஷேகததைத தடைசெயய முயற்சிசெயயினும், தடுக்க வலலவராகாாகள. அங்ஙனமாயின நம்பிதீரொருவன தடுக்க வலலவனாவானோ? யாவாகள கூடித துர்யோஜனைசெயது தேவரை அரணணியத்திற கெழுநதருளிப பதினான்கு வருஷம் வாஸஞ்செயய வேணடுமெனறாகளோ? அவர்களே பதினான்கு வருஷம் அரணியஞ்சென்று வாஸஞ்செயயககடவாகள கைகேயிக்கும், மஹாராஜனுக்கும், தேவரைக காட்டிலோட்டிப பரதனுக்குப பட்டங கட்ட வேண்டுமென்பதன்றோ? எணணம், அவ்வெணணததை யான்கெடுததுவிடுகின்றேன். தெய்வமும என ஆணமைக்கஞ்சி நடக்குமாதலால என் ஆண்மையோடு பகைததவர்களுக்கு ஊழினவலி ஒருகாலு முண்டாகாது, எனது கொடிஆண்மை எவ்வணணங் துன்பந்தருமோ? அவ்வண்ணம் இனபந்தருவதற்குத தெய்வம் திறமையுளளதாகாது, அநேகமாயிரம்வருஷங்கள் தேவா லோகபரிபாலனஞ் செயததனமேல தேவருடைய திருக்குமாராகளே இவ்வுலகததை யாளககடவாகள, அப்பொழுது திருக்குமாரர்களிடததில இவ்விராஜ்யத்தை நிலைக்கச்செய்து, மூன்னோர்கள் நடந்தவாறு தேவரும வனவாசத்துக் கெழுந்தருளக்கடவீர்; நம்தந்தை

நிலைமையற்ற மனமுடையாராதலால் இப்பொழுது நாம் அபிஷேகங்கொண்டபின் குறைவுநேரிடின் பெருநகைப்புக இடமாகுமெனக் கருதி இப்பொழுது இவ்வபிஷேகங்கொள்ள விருப்பமுற்றிலீரோ? இக்காரியத்தில் தேவர் ஐயங்கொள்ளற்க. கடலைக்கரை காப்பதுபோல அடியேன் தேவருடைய ராஜ்யத்தைப் புரளவிடாமல் காத்தளிப்பேன். இவ்வண்ணம் வஞ்சினஞ்செய்து கொடுக்கிறேன். இவ்வஞ்சினத்தைத் தவறினேனாயின், வீரலோகம்பெறுமல் நரகில்விழக்கடவேன். ஆதலின் மங்களகரமாகிய இத்திரவியங்களைக்கொண்டு அபிஷேகஞ் செய்துகொள்ளக்கடவீர். ராஜ்யபரிபாலனத்தில் தேவர் ஊக்கமுடையீராகக் கடவீர். அடியேனொருவனே இதற்கெதிர்த்துவரும் வேந்தர்களைத் தடுத்தடித்து மடித்துத் துரத்திவிடவல்லேன்.

నశోభార్థావిమౌబాహూ నధనుర్భూషణాయమే
నాసిరాబన్ధనార్థాయ నశరాస్తంభహేతవః
అమిత్రమర్దనార్థం మే సర్వమేతచ్చతుష్టయం

நசோபார்த்தாவிமௌபாஹூ நதனுர்ப்பூஷணாயமே
நாஸிராபந்தநார்த்தாய நசராஸ்தம்பஹேதவ:
அமித்ரமர்த்தனார்த்தம் மேஸர்வமேதச்சதுஷ்டயம்.

எனது இவ்விரண்டுதோள்களும், அழகுசெய்வன மாத்திரமேயல்ல இக்கோதண்டமும், அலங்காரஞ் செய்வதன்பொருட்டேயன்று; வாளும் அழகுக்குச்சட்டிக்கொள்ளும் பொருட்டன்று, இக்கணைகளும் ஊன்றிநட்பதின்பொருட்டல்ல இந்நான்கும் பகைவர்களைக் கொல்வதன்பொருட்டன்றோ ஒளிசெய்கின்றன. சாணைபிடித்துக் கூர்மையாகிய இவ்வாளைக்கையிற்பிடித்து யான் போர்முகத்திற் செல்லுகையில் தேவேந்திரனே எதிர்த்துவரினும், அவனையும், மதிக்காமல்வென்று வெற்றிகொள்வேனே யல்லது பொறுத்திரேன். போர்க்களமும் என கூரியவாளினல் வெட்டுண்டு சிதறிக் கிடக்கின்ற நால்வகைப்படைகளின் உடல்களினுருப்புகளினல் நிறைந்து நடப்பதற்குமிடமின்றிப் பயமுறுவிப்பதாகும்,என்வாளின்முனையினல் வெட்டுண்டு வாள்எலும்புகளில் தாக்குகையில் தீக்கணங்களினல், ஒளியுள்ளனவா யெரிகின்ற குன்றுகள்போலவும், மின்னுடன்கூடிய காளமேகங்கள்போலவும் விளங்குகின்ற பகைஞர்களது களிறுகள் தரையில் விழப்போகின்றன. யான் உடும்புத்தோலினல் கைவிரலை மறைத்துக்கட்டிக் கோதண்டத்தைக் கையிலேந்திப் போர்முகத்தில் நிற்கையில் யாவனென்னை யெதிர்த்து ஆண்மைகாட்ட வல்லவன், பலகணைகள் தொடுத்தொருவரையும், ஒரேபாணந்தொடுத்துப் பல வீரர்களையும், கொல்லுமாறு தோயானை குதிரைகாலாள்களின் நடபுறுப்புகளில் சரங்களைத் தொடுத்தெய்வேன். இப்பொழுதுதான்என துகணைபபயிற்சித்திறமையின்

பிராயம், தந்தையினாசாளுகையைக் கெடுப்பதற்காகவும், தேவரீருக்கதனை நிலைக்கச்செய்வதற்காகவும், வெளிப்பட விளங்கப்போகின்றது. நற்சாந்தமப் புரிவதற்கும், தோளவளைகளணிவதற்கும், இரவலர்களுக்குப் பொருள்களையீவதற்கும், அன்பர்களைப்பாதுகாத்தல் செய்வதற்கும், தகுந்தனவாயினும், அடியேனுடைய இவ்விரண்டுகரங்களும், தேவருக்குக் குற்றேவல்செய்யக்கடவன. அடியவர்களுக்கு மெய்யாகிய என்னைப் பனே தேவருடைய திருவபிஷேகத்தைத் தடைசெய்பவர்களைத் தடுக்கும் விஷயத்தில் இப்பொழுதே எவரேயாயினும், அவர்களது யிளையும் மாய்த்துக் கீர்த்தியையும், கெடுத்து உறவினரையும், வேரறுத்து அவமானஞ் செய்யக்கடவேன் இந்தவேலைத் தேவா அடியேனுக் கருளிச்செய்யக் கடவீர். இந்த வியனுலகமுழுதும், தேவருக்கு வயப்பட்டு நிலைத்திருக்குமாறுசெய்யும்படி அடியேனுக்குக் கட்டளைசெய் தருளக்கடவீர் அடியேன் தேவருக்குக் குற்றேவலாளனன்றோ ? என்றிவ்வண்ணம் சினத்தோடும், சோகத்தோடும், விண்ணப்பஞ்செய்தனர். சக்கரவர்த்தித்திருமகனார் அவ்விண்ணப்பத்தைத் திருவுளத்திற் கொண்டவராயினும், சிறிதும் மனந்தளராமல் இளையபெருமாளைக் கடாக்ஷித்துத் தம் திருக்கரத்தால் அவரது கண்ணீரைத் துடைத்து நன்மொழிகூறித் தேற்றி, அடா என்னருமையிளையனே ! நீ எங்ஙனமுறைசெயினும், என்மனம் வேறுமைப்படாது, நான் பிதாவின்மொழியைப் பரிபாலனஞ் செய்வதிலேயே உறுதியுள்ளவனென நம்பக்கடவை இதுவே நல்லவழியாகுமல்லது நீயுரைப்பது சிறிதும் நல்லவழியாகாது இனிநீ என்னை மறுப்பதையொழிந்து என்கருத்துக்கிசைந்து நடந்துகொள்ளக் கடவையென முடிவு அருளிச்செய்தருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று

---

## இருபத்துநான்காவது சருக்கம்.

ஸ்ரீராமபிரான் தான்வனம்போகத் தாயைச் சம்மதிக்கச்செய்தது.

---

ஸ்ரீசக்கரவர்த்தித் திருமகனார், இவ்வண்ணம் யாவாசொல்லியும், கௌசல்யை பித்ருவாக்கிய பரிபாலனத்திலேயே உறுதிகொண்டிருப்பதைக் கோசலராஜன் திருமகள் நன்குணர்ந்து இனி இவனைத்தடுப்பதில் பயனில்லையெனத் தேர்ந்து, கண்ணீர்ப்பெருக்கி அந்தோ, என்னருமைத்திருமகன் சக்கரவர்த்திக்குப்பிறந்து, எல்லாவுயிர்களுக்கு மினியனாகவு மிரு

ந்து, திக்கற்றவன்போல் வனஞ்சென்று பிச்சையெடுத்து எங்ஙனம்பிழைத்திருப்பான், இவனுடைய ஏவலாளர்களும், அடுத்தவர்களும், அறுவகையுண்டிகளையுமுண்டு மகிழ்ந்திருக்கையில் இவன்மட்டும் காடுசேர்ந்து கந்தமூலபலங்களை எப்படி உண்ணலாம்? ஸ்ரீராமன் வனவாஸம்போகின்றானென்பதைக்கேட்டு யாவன்தான் இஃது ஒக்குமென உடன்படுவான். இதைக்கேட்ட யாவர்க்குத் தான் அச்சந்தோன்றாது. நற்குண நற்செய்கையுடையனாகி, யாவர்க்கு மினியனாகிய ஸ்ரீராமனும் காட்டிலோட்டப்படுகின்றானன்றோ? ஆதலின் தெய்வமென்பது மிகச்சிறந்தது அதைத்தடைசெய்ய யாவராலும் முடியாது. என்னருமைத் திருமகனாகிய ஸ்ரீராமா! நீ லோகாபிராமனாகவிருந்து என்னைப்பிரிந்து கானகத்துக்குச் செல்லுகையால் என் உள்ளத்திலுள்தோன்றிய சோகமென்னுந் தீயானது உன்திருமுகத்தைக்காணாமை யென்னுங் காற்றையுடையதும், புலம்புவதனா லாகிய துயரமென்னும் ஓமவிறகையுடையதும், அழுவதினாலாகிய கண்ணீரென்னும், ஓமஞ்செய்யப்பட்ட ஆஹுதியுடையதும், கவலையினாலாகிய கொதிப்பென்னும், மிகுந்த புகையுடையதும், நெட்டுயிர்ப்பினா லாகிய ஆயாசத்தினால் வளர்க்கப்பட்டதுமாகிப் பனிகாலம் நீங்கிய பின்னர் புதல்களைக்காட்டுத் தீப்பற்றி யெரிப்பதுபோல என்னைப்பற்றி யொடுக்கியெரித்துவிடுமே நீ என்னும் கார்முகில் ஆனந்தமென்னும் மழைபொழிந்தாலல்லது அத்தீயணையாதே யான் எவ்வண்ணம் பொறுத்திருப்பேன். ஒரு பசுவானது தன் கன்று சென்றவிடம் செல்லாமல் எவ்வாறு பார்த்து நிற்கும், என் திருமகனே! நானும் நீ செல்லுமிடமே வருவேன். என்றிவ்வகையாக மிகுதியும் துயர்கொண்டுரைசெய்தனள் கோஸலை தன் திருமகனாரும், தம்தாயின் மொழியைக்கேட்டு மீளவுந் தாயைநோக்கி, என் தாயீரே மஹாராஜர் கைகேயிதேவியினால் வஞ்சனைசெய்யப்பட்டு, மிகவுந் துன்பமுற்றிருக்கின்றனர். யானும் ஆரணியஞ்சென்று, நீரும் அவரருகிலிருந்து உபசாரஞ்செய்யாமல் என்னுடன்வந்து விடுவீராகில் அவர் கணப்பொழுதாயினும், உயிருய்ந்திரார் என நான் உறுதியாயுரைப்பேன்.—

భర్తుఃకిలపరిత్యాగో నృశంసఃకేవలంస్త్రియాః
సభవత్యానకర్తవ్యో మనసాఽపివిగర్హితః

பர்த்து:கிலபரித்யாகோ ந்ருசம்ஸ:கேவலம்ஸ்திரியா:
ஸபவத்யாநகர்த்தவ்யோ மனஸாபிவிகர்ஹித:

குலமகள் கணவனைவிட்டுப் பிரிந்துபோவதென்பது மிகக்கொடியது ஆதலால் நீர் உலகத்தார் பழிப்புக்குள்ளாவீர் அதுபற்றி மனத்திலும், அவ்வண்ணங் கொள்ளலாகாது. என்தந்தையார் ஜீவித்திருக்குமளவும், நீர்

அவர்க்குப் பணிசெய்யக்கடவீர். இதுதான் பெண்களுக்குத் தொன்மை யான தருமமென்று மேலையோர் அருளிச்செய்தனரென்றனர். கோஸலை யும், தன் திருமகன் வாக்கியத்தைக் கேட்டு, நன்காராய்ந்து, மிக மகிழ்ச்சி கொண்டவளாகி, அடா என் பெறலரும் புதல்வனே! நீ யுரைசெய்த வண்ணமே யான் நடந்துகொள்வேனென உடன்பா டுரைத்தனள்.

ஸ்ரீராமசந்திரர் மீளவும் கௌஸல்யாதேவியை நோக்கி, என்தாயீரே! மஹாராஜர் எல்லோர்க்கும் இறையும், குருவும், போஷகருமாயிருத் தலால், நீரும் நானும் சக்கரவர்த்தியார் கட்டளையை வழுவாமல், பாது காக்கவேண்டுமேயல்லது தடைசெய்வது தகுதியாகாது; தகுதியாக யான் ஒன்பதும் ஐந்துங்கூடிய இவ்வருஷங்களை யரண்யத்தி லெளிதில் கழித்துவிட்டு, மீண்டிங்கெய்தி நின் கட்டளையின்படி மகிழ்ந்து வசிப்பே னென உரைசெயல்கேட்டும், ஸ்ரீராமபிரானது பிரிவைப் பொறுக்க மாட் டாமல், அடா என் திருமகனே! இச்சக்களத்திகளி னடுவில் நான் வாசஞ் செய்துய்வது தகுதியன்று, ஆதலின், என்னையும் பெண்மானைப்போல அணைத்துக்கொண்டு போகக் கடவையென்று, கோஸலை யழுது புலம்பு தலும், ஸ்ரீராமபத்திரருஞ் சோகங்கொண்டவராய்த் தாயை நோக்கி, அம்மா! நீரும் இவ்வண்ணம் உரைசெய்வது தகுமோ? குலமகளுக்கு நாயகனே தெய்வம், நாயகனே பிரபுவாயிருத்தலின், உமக்கும் எனக்கும் மஹாராஜரே பிரபுவாவார், லோகநாதராகிய மஹாராஜா பிழைத்திருக் கையில், நாம் அநாதர்களல்லோம், அன்றியும், நான் வனஞ்சென்று, பரதன் அபிஷேகங்கொண்ட போதிலும், உனக்குக் குறைவுநேரிடாது; கைகேயியார் மனம் வேறாகயிருக்கினும், பரதன் அத்தன்மையனல்லன், அவன் தருமசிந்தையுடையவனும், தார்மிகனும், எல்லாவுயிர்களுக்கு மினியனுமாகுவான், ஆதலின், அவன் உமது திருவுளத்தின்படி நடப்பா னல்லது, வேறாக நடவான்; நான் வனம்போனபின்பு மஹாராஜா புத்திர சோகத்தால் வருந்தாதவண்ணம் நீர் ஊக்கத்துடன் அவர்க்கு உபசாரஞ் செய்து பாதுகாத்துத் தேற்றக்கடவீர் மிகக் கொடிய இச்சோகம் அவரைப் பற்றி எரிக்காதவண்ணம் நீர் பாதுகாக்கக்கடவீர்.

వ్రతోపవాసనిరతాయా నారీపరమోత్తమా
భర్తారం నానువర్తేత సాతుపాపగతిర్భవేత్
భర్తృశ్శుశ్రూషయా నారీ లభతేస్వర్గముత్తమం
అపియానిర్నమస్కారా నివృత్తా దేవపూజనాత్

வ்ரதோபவாஸநிரதாயா நாரீபரமோத்தமா
பர்த்தாரம்நாநுவர்த்தேத ஸாதுபாபகதிர்பவேத
பர்த்துச்சுச்ரூஷயாநாரீ லபதேஸ்வர்க்கமுத்தமம
அபியாநிர்நமஸ்காரா நிவ்ருத்தாதேவபூஜநாத.

யாவளொருத்தி விரதோபவாசங்கள்செய்து, பரபுருஷனைக்கண்ணுற் பாராமல, பரிசுத்தளாகி யிருந்தும், தன் பர்த்தாவை மதிக்காமல், அவ னுக்கிசைந்து நடவாளோ? அவள் நரகத்தை யடைவளே யலலது, நற்கதி யடையாள; யாவளொருததி தேவதாபூசை செய்யாதவளும், பெரியோர் களைத் தொழாதவளுமாயக் கொடியளாகியிருந்தும், தன் பர்த்தாவின் மனததுக்கிசைநதபடி ஏவலசெய்து, தன பாததாவை மகிழ்விப்பாளோ? அவள் சிறந்த வானுலகததையே யடைவாளலலது, கெடுதி யடையாள; ஆதலின், குலமகள பாததாவுக்குப பணியே செய்யக்கடவள். இதுவே அநாதியாகிய தருமமென வேததகிலும்ஓத ப்படுகின்றது; ஸ்மிருதிகளிலுங் கூறப்படுகின்றது; ஆதலின், என தாயரே! நீரும் மஹாராஜாக்குத திருத் தொண்டு செய்துகொண்டே, என் பொருட்டு வேளவிமுதலிய காரியங் களில நனமலர்களினால தேவதைகளைப பூசனைசெய்து, வேதியர்களுக் கும் பொருளளித்து, எனக்கு நன்மையுண்டாகவேண்டுமெனப பிரார்த் தனை செய்துகொணடு நான மீணடு வருங்காலததையே எதிர்பார்த்திருக் கக்கடவீர். இவ்வண்ணம் நீர் நியமமுடையீராய, கணவருக்குத் தொண்டு செய்து வருவீராயின, மஹாராஜரும் என சோகததைப பொறுத்துப் பிழைததிருப்பார், நான மீண்டு வந்தபின்னர், நீர் மிகுதியும் மகிழச்சியை யடைவீரொன்று மனந்தேறறி யருளிச்செயதனர். கௌஸல்யாதேவி அதனைக்கேட்டுப புத்திரசோகத்தால பீடிக்கப்பட்டவளாயத தன் திரு மகனைநோக்கி, ஸ்ரீராமா! காடுசெலவதில உனக்குறற உறுதியைத தவிர்க்க யான வலலவளலலள். விதியைத் தடுப்பதற்கு யாராலும முடியாதன்றோ? ஆதலின, என திருமகனே! நீ மிகுதியும ஊக்கததுடன் போயவரக் கடவை. உனக்கெப்பொழுதும் நன்மையே யுண்டாகக்கடவது. நீ வனஞ் சென்று, தந்தைமொழியை நிறைவுசெய்து, பெரும்பேறு பெற்றவனாய மீண்டு வந்தபின்னர், உன்னைக்கண்டு நான பெருமகிழ்வுகொண்டு வாழ் வேன; தெய்வகதி யாவர்க்கும் எணணுவதற்கு மரியது. தெய்வமன்றோ? என்னையும் போயவாவென்று விடைகொடுக்கும்படி செய்கின்றது; ஆத லின், என திருமகனே! நீ சுகமாகச செலலக்கடவை. திரும்பிவந்தபின் என்னை மகிழ்விப்பாய்; இந்தக் காலமே அந்தககால மாகுமா? ஆகுமாகில், நீ ஜடாஜினதாரியாகித் திரும்பிவரக்கண்டு மகிழ்வுறுவேனன்றோ? என் றிவ்வண்ணம மொழிந்து, நான் சோகங்கொணடு தடைசெயினும, புலம் பிக் கதறினும், ஸ்ரீராமனுக்கு நன்மை பயக்காதெனவும், பயனுமிலதென வுந் தேர்ந்து, சோகததை யுள்ளடக்கி, மகிழ்வுடன் போய்வாவென விடை யுதைது, ஸ்ரீராமபிரானுக்கு நன்மையையே மனத்தில் கருதிக்கொண்டு கவலையுற்று வீற்றிருந்தனள்.

அயோத்தியாகாண்டததில இருபத்துநான்காவது சருக்கம்

முற்றிறறு.

# இருபத்தைந்தாவது சருக்கம்.

## கோஸலை ஸ்ரீராமபிரானுக்கு ஆசீர்வாதஞ்செய்து செல்லவிடுத்தல்.

அநந்தரம் கோஸலை சோகத்தை யுள்ளடக்கிக் கால் கைகளைச் சுத்தி செய்து, ஆசமனம்பண்ணித் தூயளாகி, ஸ்ரீராமபிரானுக்கு ஆசீர்வாதஞ் செய்யலாயினள். அடா! என்னருமைத் திருமகனாகிய ஸ்ரீரகுகுலதிலகா! உன்னுள்ளத்தினுறுதியைத் தடைசெய்ய யாராலும் முடியவில்லை யாதலால், நீ சுகமாக வனஞ்சென்று, விரைவில் மீண்டு இனிது வரக்கடவை. ஒருபொழுதும் நல்லொழுக்கம் வழுவாமலிருக்கக்கடவை. அடா ராகவ சார்த்தூலா! எவ்வளவு துன்பம் நேரிடினும், எத்தருமத்தைக் கைவிட லாகாதென்று நீ இடைவிடாது காத்துவருகின்றனையோ? அத்தருமம் உன்னைப் பாதுகாக்கக்கடவது. என் அழிவில்லாப் பெருவாழ்வே! நாற் சந்திகளிலும், தேவாலயங்களிலும், நீ தினந்தோறும் எத்தேவதைகளுக்கு வந்தனஞ்செய்கின்றனையோ? அவர்களும் நீ காட்டில் மஹரிஷிகளுடன் வாசஞ்செய்கையில், உன்னைக் காத்தருளக்கடவர்கள். விசுவாமித்திரமகா முனிவர் உனக்கருள்செய்தளித்த கணைகளும் உன்னைக் காக்கக்கடவன. மாதாபிதாக்களுக்குத் திருப்பணிசெய்ததினாலும், சத்தியத்தினாலும், காக்கப்பட்டவனாகி, நீ நெடுநாள் வாழ்வாயாக; ஸமித்துகளும், தருப்பங்களும், பவித்திரங்களும், ஓமம் வளர்த்து மிடங்களும், கடவுளர் மந்திரங்களும், தேவதாபூசைக்காகச் செய்த இடங்களும், மலைகளும், மரங்களும், கிளைகளும், மடுக்களும், பறவைகளும், பன்னகங்களும், சிங்கங்களும், உன் திருமேனியைக் காக்கக்கடவன. சாத்தியதேவர்களும், விசுவதேவர்களும், மருத்துக்களும், மஹரிஷிகளும், தாதாவிதாதா பூஷா பகன் அரியமன் என்னுந் தேவர்களும், இந்திரன் முதலிய லோகபாலர்களும், பக்ஷம், மாசம், ரிது, ஸம்வத்ஸரங்களும், இரவும், பகலும், முகூர்த்தமும், உனக்கெப்பொழுதும் நன்மையையே பயக்கக்கடவார்கள். தியானமும், யோகமும், தருமமும், உன்னை இடைவிடாது காக்கக்கடவன. ஸநத்குமாரரும், ஷண்முகனும், சோமனும், பிருஹஸ்பதியும், ஸப்தரிஷிகளும், நாரதரும், உன்னை எல்லாவிடங்களிலும் காத்தருளக்கடவர்கள். மற்றும் எல்லாவிடங்களிலும், நன்கறியும்படி யுள்ளவர்களும், திக்குக்கும் விதிக்குக்கும் இறைவர்களும், என்னால் துதிசெய்யப்பட்டவர்களுமாகிய தேவர்களெல்லோரும், வனத்தி லுன்னை அல்லும் பகலும் பாதுகாத்தருளக்கடவர்கள். ஏழுகுலாசலங்களும், ஏழுகடல்களும், வருணனும், குபேரனும், தேவலோகமும், ஆகாயமும், பூமியும், எல்லாநதிகளும், நக்ஷத்திரங்களும், நவக்கிரஹங்களும், அவைகளுக்குத் தலைவர்களும், இரா

பகல்களும், காலைமாலை, சந்திகளும், வனவாசியாகிய உன்னைப் பாது காக்கக் கடவர்கள். ஆறு ரிதுக்களும், பன்னிரண்டு மாசங்களும், வருஷங்களும், முகூர்த்தங்களும, நாழிகைகளும், விநாடிகளும், திசைகளும், உன் பொருட்டு நன்மையளிக்கக்கடவன. முனிவேஷங்கொண்டு நீ வனத்தில சஞ்சரிக்கையில, தேவர்களும், தைத்தியாகளும், உனக்குச சுகத்தையே பயக்கக்கடவர்கள. அரக்காகளிடத்தும், பிசாசர்களிடத்தும், கணடவர்கள அச்சமுறத்தக்க தீசசெயல புரியும், மற்றுமுளள மாம்ஸததைத தின்னுந் துஷ்ட ஜந்துக்களிடததும், உனக்கு ஒருக்காலும் அச்சந்தோன்றாமை யுண்டாககக்கடவது. வானரங்களும், தேளகளும், காட்டீககளும், கொதுகு களும், மலைப்பாம்புகளும், புழுககளும், கொடி, செடி, புதாகளிவை யிருணடு, கோரமாகிய வனததி லுனககுப பீடைசெய்யாதன வாகக கடவன. பெரிய யானைகளும், சிஙகங்களும், புலிகளும், கரடிகளும், காட்டுப்பனறிகளும், காட்டெருமைகளும், உனககுப் பீடைசெயவதற றிருககககடவன. அடா என திருமகனே ! மற்றும் மானிடரைக கொலை புரிந் துண்ணும் தியவிலங்குகளும் எனனாலிங்கு வழிபாடு செய்யப்பட் டனவாகி, உன்னை வருததாதிருக்ககககடவன. நீ செலலும் வழிகளும் மங்கலகரஙகளாககககடவன. உனது தோளவலிகளும் பயனபெறக்கடவன. என்னருமைத திருமகனே ! பேறுகளெல்லாம் கைக்கூடுவதனபொருட்டு நீ நனகுசென்று, மீணடெழுந்தருளுவாயாக. ஆகாயத்திலும், பூமியிலும், இருக்கின்ற தேவர்களெல்லோர்களிடததினின்றும், உனக்கு மஙகல முண்டாகக கடவது. உனககுப பகைஞாகளாராயினும், அவர்களும் உனககு நன்மையே செய்யககடவாகள. தேவகுருவும், சோமனும், சூரி யனும், குபேரனும், யமனும், என்னால பூசனைசெய்யப்பட்டவர்களாகித் தண்டகாரணியத்தில வாஸஞ்செயகினற உன்னைப் பாதுகாததருளக் கடவர்கள் அககினியும், வாயுவும, புகையும், ரிஷிகளுரைககின்ற மநதிரங களும், உன்னைக காக்கககடவன. எலலா உலகஙகளையும படைககும் பிரமனும், அவற்றையளிககும ஸ்ரீமநநாராயணனும், மஹாரிஷிகளும், மற்றுமுள்ள தேவர்களும், வனவாசியாகிய உன்னைப பாதுகாததருளக கடவர்களென ஆசீர்வதித்தனள. இவ்வணணம் கோஸலராஜன் திரு மகள் கந்தபுஷ்ப தூபதீபாதிகளினாலும், தோததிரஙகளினாலும், தேவ தைகளெல்லோரையும் பூசனைசெயது, பெரியானாகிய அநதணனைக கொணடு தீவளர்த்தி, நெய், வெணமை நிறமுளள மாலைகள், ஸமித்துககள், வெள்ளைககடுகு முதலியவற்றால் ஒமஞசெய்விதது, மிகுந்த ஹவிஸ்ஸி னால், வெளியிறசெயயததக்க பலியையச செய்விததுத் துனபம் விலகச செயயும் கன்மஙகளையும், நன்மை பெருகும்படிசெய்யும் கன்மங்களையும், தேன், தயிர், அக்ஷதை, நெய்களால் முடிப்பித்து, வேதியர்களைக்கொண்டு நலந்தருமொழிகளை ஓதுவித்துப் புரோஹிதருக்கும், மற்றுள்ள வேதியர் களுக்கும், தக்கபடி தக்ஷிணைகொடுத்து, அவர்களையும் மகிழ்வித்துத்,

தன் திருமகனை நோக்கி, ஸ்ரீராமா! தேவேந்திரன் விருத்திராஸுரனைக் கொலைசெய்யப் புறப்படுகையில், அவனுக்குண்டாகிய மங்கல முனக்கு முண்டாகக்கடவது. வைநதேயன் அமிர்தம்கொண்டுவரப் புறப்படுகையில், விநதாதேவி அவன்பொருட்டுச் செய்த மங்கலமு முனக்குண்டாகக் கடவது. அமிர்தம் மதனஞ்செய்யுங் காலையில், தைத்யர்களுடன் போர்செய்ய முயன்ற தேவர்களுக்கு அதிதிசெய்த மங்கலமும், உனக்குண்டாகக்கடவது. ஸ்ரீமந்நாராயணன் வாமனாவதாரஞ்செய்து, மூவுலகங்களையும், மூன்றடியாக அளக்க முயற்சிசெய்கையில், அவருக்குண்டாகிய மங்கலமும், உனக் குண்டாகக்கடவது. மங்கலங்களுக்கும் மங்கலம் செய்யும் ரிதுக்களும், சாகரங்களும், தீவுகளும், வேதங்களும், உலகங்களும், திசைகளும், உனக்கு மங்களமளிக்கக்கடவன. என்றிவ்வண்ணம் ஆசீர்வாதஞ்செய்து, சிரத்தில் அக்ஷதையிட்டுச் சந்தனம் பூசி இடுக்கண் யாவையும் போக்கவல்ல மூலிகையைக் கையிலகட்டி மந்திரித்து ரக்ஷை செய்து, மனத்தில் சோகங்கொண்டவளாயினும், புறத்தில் சிறிதுந் தோன்றாமல் மகிழ்வுகொண்டவளாகி, ஸ்ரீகோதண்டராமனை எடுத்தணைத்து உச்சிமோந்து மகிழ்ந்து, ஸ்ரீராமா! நீ குறைவின்றி மகிழ்ந்தவனாகிச் சுகமாகப் போய்வருவாயாக. நீ வனவாஸந்தீர்ந்து திரும்பி இங்கயோத்தியில் அபிஷேகங்கொண்டு அரசநீதிவழுவாமல் ராஜ்ஜியபரிபாலனஞ் செய்கையில், நான் கண்கள் குளிரக்கண்டு மகிழ்வேன்; நீ யவ்வண்ணம் அரசுசெய்துகொண்டு சீதாதேவியினுடைய காதலையும், என்னுடைய விருப்பத்தையும், நிறைவுறச்செய்க. அடா ஸ்ரீராமா! இப்பொழுது நீ சுகமாக வெழுந்தருளக்கடவை. என்னால் பூசனைசெய்யப்பட்ட ஹரிஹராதி தேவகணங்களும், மஹாரிஷிகளும், பூதங்களும், தானவ தைத்யமஹோரகர்களும், பத்துத் திசைகளும், நெடுநாள் வனவாஸஞ்செய்யும், உன கருத்துக்கிணங்க நலங்களை செய்யக்கடவர்களென்று ஆசீர்வதித்தனள். என்றிவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரனுக்கு ஆசீர்வாதம் முதலிய விதிகளை முறைப்படி செய்து முடித்துச் சோகத்தை யடக்கியும், புத்திரவாத்ஸல்யத்தால் சோகத்தையடக்க முடியாமல், கண்ணீர் பெருகத் தன திருகுமாரனை வலம் வந்து, பலமுறை எடுத்தணைத்துத் தழுவிக்கொண்டனள்.

తథాచ దేవ్యాస్సకృతప్రదక్షిణో నిపీడ్య మాతుశ్చరణౌ పునః పునః
జగామ సీతానిలయం మహాయశాః స రాఘవః ప్రజ్వలితస్స్వయా శ్రియా

ததாசதேவ்யாஸக்ருதப்ரதக்ஷிணோ நிபீட்யமாதுச்சரணௌபுந:புந:
ஜகாமஸீதாநிலயம்மஹாயசா: ஸராகவ:ப்ரஜ்வலிதஸ்ஸ்வயா ஸ்ரீயா.

சிறந்த புகழ்பெற்றவரும் இயற்கையாகிய தமது திருமேனியொளியால் விளங்குகின்றவரும், பிதாவின் வாக்கிய பரிபாலனத்தில் உறுதிகொண்ட

வருமாகிய, அந்த ஸ்ரீராமசசந்திரா தம்மாதாவினுல் அவ்வண்ணம் ஆசீர் வசனஞ்செயது வலஞ்செய்யப்பட்டவராகி; அவளது திருவடிகளைப் பல முறைபணிந்து விடைபெற்றுக்கொண்டு, சீதாபிராட்டியினரன்மனைநோக்கி எழுந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபததைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## இருபத்தாருவது சருக்கம்.

சக்கரவாத்தித் திருமகனுர் தம்செயதியைச சீதாதேவிக்கு அருளிசசெயதது.

ஸ்ரீராமபிரான் தண்டகாவன மெழுந்தருளுவதறகாகத் தம்மாதாவைப் பணிந்து, அவளால் ஆசீர்வசனஞ்செய்யப்படடவராய விடைபெற்றுத்தரும நெறிவழுவாமல் நின்று மக்கள நிறைந்த நெடுந்தெருவைத் தமதிருமேனி காநதியால் விளங்கசசெயபவராகித் தாம மிக நறகுணமுடையவ ராதலால் இவர் வனவாஸம் எழுந்தருளுகின்ருரேயெனத் துயரங்கொண்ட அம்மக் கள் மனத்தை முறிப்பவாபோலச் சீதாபிராட்டியாா, அரண்மனைக் கெழுந் தருளினர். சீதாபிராட்டியார், இங்குநடந்த சரித்திர மொன்றினையு முணா ராதவளாதலால் தம் பாத்தாவுககுத் திருவபிஷேகமாகபபோகின்றதேயென எண்ணித் தேவகாரியங்களை விதிப்படிமுடித்து அரசுக்குரிய தருமங்களை யுணர்ந்தவளாதலின் மனமகிழ்ச்சியுடையவளாகி, ஸ்ரீராமபிரானை இங்கெழுந் தருளுவாரென்றே எதிர்பாாத்துக்கொண்டிருந்தனள. அத்தருணத்தில் சக் கரவர்த்தித திருமகனுர் அங்கெழுந்தருளித் தமக் கபிஷேகமென மகிழ் வுறறு நிறைந்திருக்கின்ற மாந்தர்களைக்கண்டு, வெட்கத்தால் குனிந்து கீழ நோக்கிச செல்லுகையில், சீதாபிராட்டியாா, தம்பதி சிந்தைகொண்டு சோக முமம, கோபமும், கொண்டவர்போல எழுந்தருளுவதைக்கண்டு, தாமும் சிந்தையுஞ் சோகமுமடைந்து பர்த்தாவைநோக்கி, என் பிராணநாதரே ! மகிழ்வடையத்தக்க காலையில் தேவா சோகங்கொண்டிருக்கின்றீரோ ! இதற் குக் காரணமென்ன? இப்பொழுது பிருஹஸ்பதி தைவதமாகிய புஷியநக்ஷத்

* இச்சருககததிலகூறியது கூறலெனனும குறறம பலசுலோககங்களிலதோறறு மெனபாா; சிலர், கோஸலை தன திருமகனமீதுளள அன்பினுலும், ஆதுரத்தினுலும், தேவாமுதலானோா தாமே தீமைசெய்யாமைககாகவும, தீமைசெயபவர்களை மறுபப தறகாகவும், நனமைசெய்வதறகாகவும், தன்மகன பிழைசெய்யினும், அதனைப் பொ றுபபதறகாகவும், சிலரைப் பலவாறு வேண்டிக்கொண்டமையால் அஃது ஒருபொழு தும, குறறம ன்றாகாதெனவுணர்க.

திரம் வந்திருக்கின்றதேனப் பண்டிதர்களாகிய அந்தணர்கள் சொல்லுகின்றார்களே ? ஆதலின இது திருவபிஷேகங்கொள்ளுங் காலமன்றோ ? இப்பொழுதும் துன்பமடைந்திருக்கக் காரணம் யாது ? அதனை யருளிச்செயல் வேண்டும், தேவர் திருமுகமண்டலமும், நூறு சலாகைகளுடைய நுரைபோல வெண்மைநிறமுள்ள திருக்குடையால் மறைக்கப்பட்டதாக வின் விளங்கவில்லை ? நூறிதழத் தாமரைபோன்ற திருக்கண்களையுடைய திருமுகம் முழுமதிபோலவும், அன்னம்போலவும், நிலவுகின்ற வெண்சாமரைகளால் வீசப்பட்டதாகி, ஏனொளிசெயயவில்லை ? சிறந்த சூத மாகதவந்திகளுந் துதிசெயகினறவர்களாகி, ஏன் தேவருடன் வரவிலலை ? வேதம்வல்ல மறையவர் அபிஷேகங்கொண்ட தேவருடைய திருமுடியில் விதிப்படி தேன் தயிர் முதலியவற்றா லேன் அபிஷேகஞ்செய்யவில்லை ? நாடுநகரத்தவரொல்லோரு மேன் பின்றொடர்ந்து வந்திலர் ? நான்கு சிறந்த குதிரைகள கட்டி அலங்காரஞ்செய்யப்பட்ட உற்சவத்தின்பொருட்டுச் செயயபபட்டுப் புஷ்யரதமென்னுந் தேர் தேவாமுன்பாக ஏன் செல்லவில்லை ? நீருண்டமேகம போலவும், அஞ்சனமலைபோலவும, விளங்குகின்ற சத்துருஞ்சய மென்னும், யானை ஏன் முன்னடந்திலது ? பத்திராஸனமுதலிய அபிஷேகத்துக்குரியன யாவுஞ் சித்தமாயிருககத் திருவபிஷேகங்கொளளாமல இவவண்ணம் இஙகெழுந்தருளுவதறகுக் காரணம்யாதோ ? அதனை யருளிசசெய்ய வேண்டும்; இதுவனாயில் தேவர் திருமுகமண்டலம் இங்ஙனம் வேறறுமையடைநததேயில்லை; திருவுளத்தில் மிகச்சோகமுற்றதுபோலத் தோற்றுகின்றதேயென் றிவவண்ணமுரைத்துப் புலம்பினா. சக்கரவர்த்தித் திருமகனா அதுகேட்டுப் பிராட்டியாரைநோககிக கேளடிஜானகி ! ஸத்தியவஸந்தராகிய என்தந்தை கைகேயியார்க்கு முன்பு இரண்டுவரமளித்தனர். இபபொழுது குலமுறைப்படி சக்கரவர்த்தியார் எனக்கபிஷேகஞ்செயவிககமுயற்சிசெயததைக்கண்டு, நான் பதினான்குவருஷம் வனவாஸஞ் செயயவேண்டுமென்றும், பரதன் யுவராஜனாக வேண்டுமென்றுங் கைகேயியார் அவவிரண்டு வரங்களையும் விரும்பினர். வாய்மை தவறலாகாதெனச் சக்கிரவர்த்தியார், என்னைப் பதினான்குவருஷம் காடுறையச்செல்லும்படி கட்டளையிட்டனர். ஆதலின் நான் வனம்போகபபுறப்பட்டு நின்னைக கண்ணுற்றுப் போவதற்காக இங்குவந்தேன், நீ நம்குலத்திற்பிறநதவளும், தருமமுணர்ந்தவளும், நல்லொழுக்க முடையவளுமாதலால், இஃது, நலமேயென் றுடன்பட்டுக் கேட்கக்கடவை.

బుద్ధియుక్తాహిపురుషాః నసన్తేపరస్తవం
తస్మాన్నతేగుణాఃకథ్యాః భరతస్యాగ్రతోమమ

ருத்தியுக்தாஹிபுருஷா ந்ஸஹந்தேபரஸ்தவம்
தஸ்மான்னதேகுணாஃகத்யா பரதஸ்யாக்ரதோமம.

மிகச்செல்வச்செருக்குடையவர்கள, பிறருடையபெருமையைப் பொறுத்திராாகளாதலால் பரதன், இங்கு அபிஷேகங்கொண்டு இளவரசாயிருக்கையில், அவனருகில் என்னுடைய குணங்களை யெடுத்துப் புகழ்ந்துரைசெயயவேண்டா; அவனேகொடுக்கும் ஆடையணிகளை ஏற்றுக்கொண்டு மகிழ்ந்திருப்பாயே அல்லாமல், விசேஷமாக ஒன்றையும் ஒருகாலும் விரும்பிக்கேட்கவேண்டா, சக்கரவர்த்தியார் இளவரசுப்பட்டத்தை அவனுக்களித்தமையால், அவன்மனததுக் கிசைந்தபடியிருந்து, அவன்சினங்கொள்ளாமல் அன்புகூர்ந்திருக்குமாறு ஒழுகக்கடவை. யானும் இப்பொழுதே தந்தையார மொழியை நிறைவேறறுபடிஆறு, வனஞ்செல்லுகின்றேன்; நீ மனமவருந்தாமல் சோகத்தையுள்ளடக்கித்தீரமாகவாழ்ந்திருக்கக்கடவை. யான் கானகஞ்சென்றபின்பு நீவிரதோபவாசங்களில் ஊக்கமுடையவளாய்த் தினந்தோறும் காலையிலெழுந்து முறைப்படி தேவதாபூசனைசெயது சக்கரவர்த்தியாரையும், என்னைப்பெறறதாயரையும், மற்றுமுள்ள தாயர்களையும், வந்தனஞ்செயது அவர்களுக்குத் திருத்தொண்டு செயயக்கடவை. நேசத்தினாலும், அன்பினாலும், இதஞ்செய்வதினாலும், என்தாயர்க ளெல்லோருஞ் சமமாகியவர்களேயன்றிப் பேதமில்லை; என்னுயிரினும் பிரியமுள்ள பரதசத்துருக்கன ரிருவர்களையும், பிள்ளைகளைப்போலப் பார்த்தருளசெய்யக்கடவையல்லது, பகையென எண்ணறக. பரதன் இக்குலத்துக்குந் தேசத்துக்கும் அரசனாதலால் அவனுக் கொருபொழுதும், தீங்குசெயயற்க; அரசர்கள தமக்கிசைந்தவர்களிடத் தருளசெயது, தமக்கிசையாதாரிடத்துச சினங்கொள்ளுகின்றார்க ளல்லரோ?

ఔరసానపి పుత్రాన్ హి త్యజన్త్యహితకారిణః
సమర్థాన్ సంప్రగృహ్ణన్తి జనానపి జనాధిపాః

ஔரஸாநபிபுத்ராநஹித்யஜந்த்யஹிதகாரிண:
ஸமர்த்தாநஸம்பரக்ருஹ்ணந்தி ஜநாநபிஜநாதிபா:

அரசர்கள் தமக்கு நலமல்லன செய்பவர்கள் தம் மைந்தர்களாயினும், அவர்களை விட்டுவிடுகின்றார்கள; தமக்குநலஞ்செயயும் பிறரையுந் தம்மோடு சேர்த்துக்கொள்ளுகின்றார்கள. அடி வைதேஹி? ஆதலின் யுவராஜனாகிய பரதாழ்வானுக்குக் கோபம்வாராதவண்ணம் நடந்துகொண்டு, தருமத்திலும், மெய்ம்மையிலும், நோன்புகளிலும், விருப்புடையாயாகி யிருக்கக்கடவை. நான் இப்பொழுதே வனஞ்செல்லுகின்றேன்; நீயிவ்விடத்திலேயேயிருந்துகொண்டு, ஒருவருக்கும் ஒருதீங்குஞ்செயயாமல், என்சொற்படி தவறாமல் செய்து வாழ்ந்தின்புறக் கடவையென அருளிச்செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

## இருபத்தேழாவது சர்க்கம்.

### சீதாபிராட்டியார் தாம் வனத்துக்கு கூடன் வருவேனென்ன வருளிச்செய்தது.

சீதாபிராட்டியார், இவ்வண்ணந் தம்பர்த்தாவினுலுரைக்கப்பட்ட மொழிகளைக்கேட்டலும், ஊடல்கொண்டு தம்நாயகரைநோக்கி, என் பிராணநாதரே! தேவரும் இவவண்ணம் அடியேனிடத்துச் சிறுமொழிகளை ஏன் அருளிச்செய்கின்றீர? இம்மொழிகள பெண்ணுகிய அடியாளுக்கும், நகைப்புசெய்யுத் தகுந்தனவாகத் தோற்றுகின்றன. என்பிராணநாதரே!

ఆర్యపుత్రపితామాతా భ్రాతాపుత్రస్తథాస్నుషా
స్వానిపుణ్యానిభుఞ్జానా స్వంస్వంభాగ్యముపాసతే
భర్తుర్భాగ్యన్తుభార్యైకా ప్రాప్నోతిపురుషర్షభ
అతశ్చైవాహమాదిష్టా వనేవస్తవ్యమిత్యపి
నపితానాత్మజోనాత్మానమాతానసఖీజనః
ఇహప్రేత్యచనారీణాం పతిరేకోగతిస్సదా

ஆர்யபுத்ரபிதாமாதா ப்ராதாபுத்ரஸ்ததாஸ்நுஷா
ஸ்வாநிபுண்யாநிபுஞ்சாநா ஸ்வம்ஸ்வம்பாக்யமுபாஸதே
பர்த்துர்பாக்யந்துபார்யைகா ப்ராப்நோதிபுருஷர்ஷப
அதச்சைவாஹமாதிஷ்டா வனேவஸ்தவ்யமித்யபி
நபிதாநாத்மஜோநாத்மா நமாதாநஸகீஜன:
இஹப்ரேத்யசநாரீணாம் பதிரேகோகதிஸ்ஸதா.

தந்தைதாய உடன்பிறந்தார மக்கள் மனையாள முதலானோர்கள் தத்தம் நல்வினையின்படித் தத்தம் வினைப்பயன்களை யனுபவிக்கின்றார்களேயன்றி ஒருவர் வினைப்பயன் மற்றொருவரைச்சாராது. பர்த்தாசெய்த நல்வினைப்பயனையோவெனின் மனைவியொருத்தியே கணவனுடன்கூடி யனுபவிக்கின்றனளன்றோ? ஆதலின் கானகஞ்செல்லவேண்டுமென்று சக்கரவர்த்தியாரால் தேவர் ஆஞ்ஞை செய்யப்பட்டபடியால், அடியாளுக்கு வேறு கட்டளை செய்யவேண்டுவதில்லை; அதனாலேயே அடியாளும், அக்கட்டளையை ஏற்றுக்கொண்டவளாயினேன். பெண்களுக்குத் தந்தை மக்கள் தாய தோழி இவர்களொருவரும், இம்மையிலும் மறுமையிலுந்தஞ்சமாகார்கள். கொழுந

னொருவனே எப்பொழுதுந் தஞ்சமாவான். புகுதற்கரியகாட்டிலே வாஸஞ் செய்யத் தேவர் புறப்பட்டது உண்மையாயின் வழியில் முளைத்திருக்கின்ற தருப்பை முனையிலுள்ள முள்ளுகள் தேவர் திருவடிகளில் தைக்காமல் மிருதுவாகும்படி நான் முன்னடந்து அவைகளை மிதித்துக்கொண்டு செல்வேன்; ஜகதேகவீரராகிய என்பிராணநாதரே! பானஞ்செய்து மிகுந்ததீர்த்தத்தை வெளியில் கொட்டிவிடுவதுபோல இவளும் மேன்மையடைகின்றனளேயெனப் பொறாமையையும், என்சொல்லை மறுத்துரைக்கின்றனளேயெனக் கோபத்தையும், திருவுளத்திற்கொள்ளாது புறத்திற் செல்லவிட்டு அடியாளை உம்முடனழைத்துக்கொண்டெழுந்தருளக்கடவீர். என்னை விட்டுவிட்டுப்போகத்தக்க பாவம் என்னிடத்தில் சிறிதுமில்லை; பர்த்தாவை விட்டு மணிமாடத்தின்மே லிருப்பதினும், தேவவிமானத்திலேறிச் செல்வதினும், எண்வகைச் சித்தியையும் பெற்று ஆகாயத்திற்சென்று முனைத்துக்கினியபடி திரிவதினும்விட பர்த்தா இன்பமுற்றின் தானும் இன்பமுற்றுத் துன்பமுற்றின் தானுந் துன்பமுற்றுப் பர்த்தாவுடன் பின்சென்று, பர்த்தாவின் திருவடிநிழல்போலப் பிரியாதிருப்பதே குலமகளுக்கு நலமென்று விதிக்கப்படுகின்றதன்றோ? நான் எப்பொழுது எவ்வாறு நடக்கவேண்டுமோ? அவ்வகையை என் தாய்தந்தைகள் எனக்குப் பலவாக உபதேசஞ்செய்து தெரிவித்திருக்கின்றார்கள். ஆதலின் இப்பொழுது புதுமையாக எனக்கு உபதேசஞ் செய்யவேண்டுவ தொன்றுமில்லை, நான் தேவருடன் புலி, செந்நாய் முதலிய பலவகை மிருகங்கள் நிறைந்து, மானிட ஸஞ்சாரமின்றிக் கோரமான வனஞ்சேர்ந்து, மூவுலகங்களின் சிந்தையை நீக்கிப் பதியின் விரதத்தையே மேன்மையாக வெண்ணிப் புலன்களை யடக்கித் தினந்தோறும் திருப்பணிசெய்து பசரித்து, என் திருத்தாதையின் திருமாளிகையில்போலச் சுகமாகவாழ்ந்து, எங்கும் பூத்து மலர்ந்து மதுப்பொழிந்து மணங்கமழ்ந்த தழகாயுள்ள அவ்வனங்களில் இன்பமடைந்து வாசஞ்செய்வேன். தேவர் திருத்தோளின் பராக்கிரமத்தினால் பற்றொன்றுமில்லாதாயும், பாதுகாத்தருள வல்லமையுடையீரன்றோ? தேவர் திருவடிகளையே தஞ்சமென நம்பிவந்த அடியாளைப் பாதுகாத்தருளீரோ? என்னைத் தேவருடன் செல்லவிடாமல் திருப்ப யாவராலுமுடியாது; ஆதலின் இப்பொழுதே தேவருடன் வருவேன்; தேவர் அமுதுசெய்து மிகுந்த கந்தமூலபலங்களையே புசித்து மகிழ்ந்திருப்பேன்; தேவருக்கு ஒருவிதத்திலும் துன்பமுண்டாகச் செய்யேன்; புதுமையாகிய நதிகளையும், மலைகளையும், குளங்குட்டை முதலியவற்றையுங்கண்டு சந்தோஷமடையவும் அன்னப்பறவை முதலியவற்றால் நிறைந்து, தாமரைகள் மலர்ந்து அழகாயமைந்துள்ள தீர்த்தங்களில் தேவரீருடன்கூடித் தினந்தோறும் நீராடவும் விரும்புகின்றேன். இவ்வண்ணம் அநேக நூறாயிரம் வருஷங்களாயினும், சிறிதுந் துன்பப்படாமல் மகிழ்வேன்; தேவரைப்பிரிந்து தேவலோகம் வாய்க்கினும் நான்விரும்பேன்,

అహంగమిష్యామివనంసుదుర్గమం మృగాయుతంవానరవారణైర్యుతం
వనేనివత్స్యామియథాపితుర్గృహే తవైవపాదావుపగృహ్యసంయతా
అనన్యభావామనురక్తచేతసం త్వయావియుక్తాంమరణాయనిశ్చితాం
నయస్వమాంసాధుకురుష్వయాచనాం నతేమయాతోగురుతాభవిష్యతి

அஹங்கமிஷ்யாமிவனமஸுதாககமம் ம்ருகாயுதம்வாநரவாரணைர்யுதம்
வநேநிவத்ஸ்யாமியதாபிதாக்ருஹே தவைவபாதாவுபகருஹ்யஸமயதா
அநநயபாவாமனுரக்தசேதஸம தவயாவியுகதாம்மரணாயநிசசிதாம
நயஸவமாமஸாதுகுருஷ்வயாசனாம நதேமயாதோகுருதாபவிஷயதி.

ஆதலின் வானரவாரணாதி மிருகங்கள் நிறைந்தவனத்தில் தந்தையின் திருமாளிகையில்போல மகிழ்ந்து வாஸஞ்செயது தேவருடைய திருவடிகளையே தஞ்சமெனக்கொண்டு நியமந்தரித்து வாழவுற்றிருபபேன, தேவரீரைவிட்டு வேறொருவனையும, கனவிலும விருபபமுறாதவளும, தேவரிடத்திதே பேரவாக்கொண்ட மனமுடையவளும், தேவனைவிட்டுப பிரியுங்கால் இறக்க நிச்சயங் கொண்டவளுமாகிய அடியாளையும், உடனகொண்டெழுந்தருளுக. அடியாளுடைய விண்ணப்பத்தை நிறைவேற்றி யருளுக. இப்படிச் செய்தருளுவதில் அடியாளால் தேவருக்குச் சிறிதும பாரமாகாதென்று பலவாறாக விண்ணபபஞ்செயதனள சககரவர்த்தித் திருமகன அதைத் திருச்செவிசாத்தியும, சீதாபிராட்டியை வனத்துக்க கழைத்துக கொண்டுபோகத் திருவுளமபற்றாமல் வனவாஸஞ்செயவது பலவிதத்திலுந் துனபத்துககிடமெனறு ஜனகராஜன திருமகளைநோககி நினறுவிடும்படிப் பலவாறாக அருளிச்செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் பதினேழாவது சருக்கம்

முற்றிற்று

---

இதிலகுறிததிருககினற இரணடுசுலோகஙகளாலும், ஸீதாபிராட்டிககு வனததில் மாரீசன மானுருககொணடு வருவதும், ராவணன வநது தனனையெடுததுக்கொண்டு போவதும, லஙகையில் அசோகவனததில ஸ்ரீராமசநதிரனையே சிநதிததுககொணடிருநது உயிரைவிட முயறசிசெயவதும, ஸ்ரீமத அநுமான அஙகெழுநதருளித தமமைச் சமாதானஞசெயவதும, சககரவாததித திருமகனொழுநதருளி ராவணாதிராக்ஷஸர்களைக்கொனறு தமமை மீட்டுககொணடெழுநதருளுவதும, முனனமேதெரியுமெனத்தோறறுகின்றது. ஆகிலும், (ஆதமானம மானுஷம மனயேராமந தசரதாதமஜம்) என்று ஸ்ரீராமபிரா னருளிச்செயகிறபடி தாம பெரியபிராட்டியாரெனப பிறர்க்குத் தோறறாமைக்காகவும, குலமகளிரகள ஒழுகவேணடும் விததனைத தாம் அனுஷ்டித்துக் காட்டி வெளிப்படுததுகைககாகவும, பொதுப்பட வருளிசசெயதனளெனக்கொள்க (மிருகாயுதம்) மாயாமிருகததுடன் கூடியது (வானரவாரணை:)

# இருபத்தெட்டாவது சருக்கம்.

### ஸ்ரீராமசந்திரர் பிராட்டியார்க்கு வனவாஸத்தின் வருத்தத்தை யருளிச்செய்தது.

ஸீதாபிராட்டி இவ்வண்ணம் விண்ணப்பம் செய்யினும், ஆரணியத்தில் பலவிதத்திலும் துக்கம் நேரிடுமென்பதை ஸ்ரீராமபிரான் ஆலோசித்துத் தேவியாரை யழைத்துக்கொண்டுபோக மனமில்லாமல் திருப்பி விடவே நிச்சயித்துக் கண்ணீர்பெருக்கி யழுகின்ற பிராட்டியை நோக்கி, அடி ஸீதா! நீ உயர்குலத்தில் பிறந்தவளும், தருமத்தில் நிலையுள்ளவளுமாகின்றாய்; ஆதலால், நீ இவ்விடத்திலேயிருந்தே என்சொல் தவறாமல், என் மனம் சந்தோஷமுறும்படி தருமஞ்செய்யக்கடவை. அடி ஜானகி! நான் சொல்லுகிறபடியே நீ செய்யத்தக்கது; கானகத்தில் பலவகைத் துன்பங்கள் நேரிடும்; அவைகளை யுரைக்கின்றேன் கேள், நானும் உடன்வருவேனென்னும் எண்ணத்தை விட்டுவிடக்கடவை. பற்பல குற்றங்களையுடைய காடே வனமெனப்படுகின்றது; நான் உனக்கு இதங்கருதி இப்படி யுரைக்கின்றேனல்லது வேறில்லை; வனமென்பது எப்பொழுதுந் துன்பத்தையே தருமன்றி, இன்பந்தராது; மலைகளில், குகைகளில் வாஸஞ்செய்கின்ற சிங்கங்கள் எப்பொழுதும் கர்ஜ்ஜனஞ்செய்யும்; அந்த நாதங்கள் மலையருவிகளின் தொனியுடனும், குகைகளில் பிரதித்தொனியுடனுஞ் சேர்ந்து, கேட்பதற்கு மிகவும் தீவிரமாயிருக்கும்; ஆதலின், வனமென்பது துன்பந்தருவது, மானிடஸஞ்சாரமின்றிக் கோரமான விடங்களில் மதமேறித் திரிகின்ற சிங்கம், புலி, யானை முதலிய மிருகங்கள் நம்மைக்கண்டு தின்பதற்கோடிவரும், ஆதலின், வனமென்பது துன்பம்; அங்குள்ள நதிகளும், பெருமுதலைகளுடன் கூடியும், சேறு மிகுந்தும், மதயானைகளுந் தாண்டிச்செல்வதற்கரியனவாகவு மிருக்குமே; ஆதலின், வனமென்பது மிகத் துன்பந்தருவது, காட்டுவழிகளும் முள்ளுக்களால் நிறைந்தும், கொடிகளால் சூழ்ந்தும், காட்டுக்கோழிகளால் தொனிக்கப்பெற்றும், பலவிடங்களில் பானஞ்செய்வதற்கும் நீரின்றியும், நடப்பதற்கும் கூடாமலுமிருக்குமே; ஆதலின்

---

யானைபோன்ற வானரர்களாகிய அனுமான் முதலானோர்களால்," (வனே) அசோக வனத்தில் என்று கூட்டார்த்தத்தில் பொருள்கொள்க. மற்றுப்பதங்களுக்குப் பொருளில் வேற்றுமையில்லை சக்கரவர்த்தித்திருமகனும், தான் உலகமனைத்துக்கும், முதற்காரணமாகிய ஸ்ரீமந்நாராயணனாதலால் பிராட்டியின் கருத்தை யறிந்தவராயினும், பதிவ்விரதைகளின் மனவுறுதி யிவ்வாறே யிருக்கவேண்டுமென்பதையே ஸீதாபிராட்டி மூலமாய் உறுதிப்படுத்துவதற்காகவே தாமும் மறுத்து அருளிச்செய்தனரெனக் கொள்க.

வனமென்பது துக்கமே; பகலில இடமின்றி வெயிலில திரிந்து வருந்தி, இராததிரியிலும் தழைகளையே யொடித்துப பரபபி, அதில நித்திரை செய்ய,வேண்டும்; கேளாய் சீதா ! எப்பொழுதும் மரங்களில் தானே பழுத்து விழுகின்ற கனிகளையே புசிததுப பிழைககவேணடும்; அடி மிதிலைராஜன் மகளே ! சததியுளளவளாயில உணவுநீங்கி யுபவாஸஞ செயது, யற்பல நியமஙகள் செயயவேண்டும்; மரையுரியுடுககவேண்டும்; ஜடை திரிததுககொளளவேண்டும்; தேவர்களுககும், பிதிரர்களுககும், அடிக்கடிவரும் அதிதிகளுககும், மிகவும் பததியுடன் விதிபபடி பூசனை செயயவேணடும்; தினந்தோறும நியமநதரித்து, மூன்று வேளையிலும் ஸ்நானஞ்செய்யவேணடும; தானே நேராக பூ முதலிய உபஹாரங்களைக கொண்டுவந்து ஓமவேதியில சித்தஞசெயயவேணடும்; ஆதலாலும், வன மென்பது உனககு மிகவுந் துன்பததைப பயககும், மேலும, தறசெய லாயக் கிடைதத உணவுகளையேயுணடு சநதோஷமடைநது ஆஹாரததை யொடுககவேணடும்; காறறு மிகவும கோரமாகவீசும, இருள மிகுதியுந தோறறும், பசி எப்பொழுதுந் தணியாமல் வருத்தும், பயநதரும் ஜந்துககளும் பலவாகவுளளனவாகும்; பலவகைப்பட்ட மலைபபாம்பு களும், எங்கும் இடைவிடாது திரியும், நதிகளில வாசஞசெயதுகொண்டு, நதிகள்போலவே குடிலமாகசசெலலும் நாகஙகளும் வழிகளைத தடுத்துக் குறுக்கிட்டுப படுததிருககும், விட்டிறபறவைகளும், மினமினிப பூசசிகளும், தேளகளும, புழுக்களும், காட்டீககளும், கொசுக்களும், எப்பொழுதும் பீடைசெயயும், முளளுக்களையுடைய பல மரங்களும், தருப்பைகளும், நாணறபுறகளும், எஙகும் நெருஙகிக காற்றிலசைந்து கொணடிருககும்; பலவிதமாகப பயமுணடாகும், பலவிதத்திலும் சரீரம் வருத்தமடையும்; ஆதலின், வனததில வாஸஞசெயவது அரிது, கோபத தையும், ஆசையையும், விட்டுவிடவேண்டும்; தவஞசெய்வதிலே மனம் நிலைபெற்றிருககவேணடும, பயமடையததகக வைகளைக்கண்டும, பய மடையாமல தீரமாயிருககவேணடும; ஆதலின், நீ வனஞசென்ற போதும; உனககு வனம மிகுதியுந் தகுதியன்று, நானிங்கேயிருககினும், ஆராயுங்கால வனம மிகவுந் தோஷமுடையதென்று யோசிககினறேன்; என்றிவ்வண்ணம பலவாறுகத் தடுததருளிச்செய்து, காட்டுககுத் தம் முடன் அழைததுக்கொண்டுபோக உடன்படாது நிறகையில, ஸீதாபிரா ட்டியும் அதைககேட்டு மிகவும் துன்பமடைந்து, அவ்வணணஞசெய்ய உடன்படாமல, ஸ்ரீராமசந்திரரை நோக்கி, விணணப்பஞசெய்துகொளவா ளாயினள்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## இருபத்தொன்பதாவதுசர்க்கம்.

சீதாபிராட்டி மறுபடியு முடன் வருவேனென வேண்டியதும் ஸ்ரீராமசந்திரர் உடன்படாது மறுத்தருளியதும்.

இவ்வண்ணம் அருளிச்செய்த சக்கரவர்த்தித் திருமகன் வாக்கியத்தைக்கேட்டு, மிகவும் துன்பமடைந்து, ஸீதாபிராட்டிக் கண்ணீர் பெருக்கித் தம் பர்த்தாவை நோக்கி, என் பிராணநாதரோ! வனவாசஞ்செய்வதில் தேவரால் அருளிச்செய்யப்பட்ட தோஷங்களெல்லாம் எனக்குக் குணங்களென்றே அறியக்கடவீர். காட்டிலுள்ள மிருகங்கள், சிங்கங்கள், யானைகள், புலிகள், சாப்பங்கள், மலைப்பாம்புகள், பறவைகள், மற்றும் வனத்திலிருக்கும் ஜந்துக்களும், இதுவரையிலும் காணாத தேவருடைய திவ்விய ரூபத்தைக்கண்டு பயமுற்று ஓடிப்போகுமேயன்றி, எனக்குப் பயந்தருவனவாகா? அச்சமுறத்தக்க உருவத்தைக்கண்டு, யாவும் அச்சமுறுகின்றனவன்றோ? அன்றியும், என் தாய் தந்தைகள் என்னை நோக்கி, அடி! உன் நாயகன் எங்கே எழுந்தருளினபோதிலும், நீயும் அவரைப்பிரியாமல் உடன் செல்லக்கடவையெனக் கட்டளையிட்டிருக்கின்றார்கள் ஆதலாலும் தேவருடனேவருவேனேயல்லது இங்கிரேன்; என்னைவிட்டுத் தேவர் எழுந்தருளும்பக்ஷத்தில் நான் உயிரை இங்கே விட்டுவிடுவேன், தேவருடைய திருவடிப்பிக்கலிலிருக்கும் என்னைப்பிரிவுசெய்யத் தேவர்களுக்கெல்லாம் ஈசனாகிய இந்திரனும் வல்லவனாகான்; குலமகள் கணவனைவிட்டுப் பிரிந்து பிழைக்க விருப்பமுறாளென்று தேவரே எனக்கு உபதேசஞ் செய்தருளினீரன்றோ? அன்றியும், நான் கன்னிகையாகத் தந்தையின் திருமாளிகையிலிருக்கையில், சோதிடநூலை முற்றுமுணர்ந்த அந்தணர்கள் என்னுடைய ஜாதகத்தைப் பார்த்து நான் வனவாஸம் போகும்படி கோசார மிருக்கின்றதென வருளிச்செய்தனர்கள். யானும் அதைக்கேட்டது முதல் வனவாஸம் போகவேண்டுமென்றும், அங்குள்ள விநோதங்களைக் கண்டு களிப்புறவேண்டுமென்றும், தினந்தோறும் எண்ணிக்கொண்டிருந்தேன்; யானும் அந்த வேதியர்களுடைய கட்டளையின்படியும், என் தந்தை தாய்களுடைய கட்டளையின்படியும், தேவருடன் கூடி வனவாஸஞ் செய்யவேண்டுவதே கடமை. அதுபற்றி, நானும் தேவருடன் வனம் வருவேனல்லது நில்லேன்; அந்த வேதியர்களின் வாக்கியம் பயன்படுங் காலமிப்போது நேர்ந்திருக்கின்றது; ஆதலின் தேவருடனே யானிப்போதே வருவேன்; அந்த வேதியர் வாக்குப் பொய்யாகக்கடவதல்ல; அன்றியும், தேவர் அருளிச்செய்தபடி வனவாஸஞ்செய்வதில் பற்பல துக்கங்களுள்ளனவென்பதையும் யானறிவேன்; அந்தத் துக்கங்கள் பெரி

யோர்களிடத்தில நல்லொழுக்கம் பழகாத தன்மையுடையவர்களுக்கு நேருமேயன்றி, என்னைபபோன்றவர்களுக்குச சிறிதும துன்பம் மனததில தோன்றாது; அன்றியும், நான் கன்னியாயிருக்கையிலேதானே என் தந்தையின் திருமாளிகையில, என தாய முன்பாக ஒரு துறவறம் பூண்டு, பிச்சையெடுத் துண்பவள வந்து என்னை நோக்கி, இவள வனவாஸம செய்வாளென உரைத்திருக்கின்றனள. நானும் தேவரைப் பிரியாமல் வனத்தில் சிலநாள் வாசஞ்செயது அங்குள்ள புதுமைகளைக்கண்டு மகிழந்து வருவோம்; அருள செயயவேண்டுமென்று தேவரைப் பலவாறாகவேண்டிககொண்டிருக்கின்றே னன்றோ ? ஒப்பாரும மிக்காருமில்லாத ரணசூரராகிய தேவர் வனத்துக் கெழுந்தருளுங்கையில, அடியாளு முடன்றொடர்ந்துவநது கைஙகரியஞ் செய்துகொண்டிருப்பதே நலமெனறு தோறறுகினறது; இவ்விஷயத்தில் சிறிதும, துனபமெனபதின்றி மகிழசசிகொண் டிருக்கின்றேன; இதனால் தேவருக்கும, நன்மையுளதாகுமல்லது துனபமிலது; நித்திய நினமல நிரஞ்சன நிர்விகாரநிருபம நிரதிசயதிவவியரூபா ! யான் எப்பொழுதும, தேவரிடத்தில் பரபத்தி தலைககொண் டிருககினறேனன்றோ ? ஒருவிததது லும்; சிறிதும அபராதஞ்செய்திலேன, பதியே எனககுத் தெய்வமனறி, வேறுதெய்வமில்லை; அடியாளிவவண்ணம் முறுதிகொண்டு தேவரே தஞ்சமென நமபியிருககினறமையால் மறுபிறப்பிலும, எனககுத் தேவரே பதியாகுவீரல்லது வேறில்லை.

శ్రుతిర్హి శ్రూయతేపుణ్యా బ్రాహ్మణానాంయశస్వినాం
ఇహలోకేచపితృభిర్యా స్త్రీయస్యమహామతే
అద్భిర్దత్తాస్వధర్మేణ ప్రేత్యభావేఽపితస్యసా

சுருதிரஹிசரூயதேபுண்யாப ராஹமணாநாமயசஸவிநாம
இஹலோகேசபிதருபிர் யாஸதிரீயஸயமஹாமதே
அதபிரதததாஸவதாமேண பரேதயபாவேபிதஸயஸா

இவவுலகில் யாவளொருபெண்ணை யாவனொருவனுககுத் தாயதந்தைகள் மனோவாக்காயங்களினாலும, நீருடன தானஞ்செயது கொடுககின்றார்களோ ? அந்தப்பெண் மறுபிறப்பிலும, அநதபபுருஷனுககே பததினியாககடவளல்லது இம்மையிலாகிலும், மறுமையிலாகிலும, மனத்திலும் வேறு புருஷனைக் கணவனெனக் கருததுககொளளக் கடவளல்லளென்று சிறந்த புகழுடைய வேதியர்கள வேதத்தி லோதுகின்றனர்களல்லரோ ? இவவண்ணம், விதியினமுறைப்படி தேவருககே உரியவளும், நனனடக்கையுடையவளும், பதிவிரதை யாகியவளும, பத்தியுடையவளும், தேவரைவிட்டுப் பிரியுங்கால் மிகத்துனபமுறுந் தன்மையளும, தேவருக்குத் துன்பம் வருங்கால் துனபத்தையும, இனபம் வருங்கால் இன்பத்தையும்

அடைந்து, தேவனை விட்டுப்பிரியு மாற்றலிலலாதவளுமாகிய என்னை என்னகாரணத்தால் விட்டுவிட்டுத் தனியே எழுந்தருளத் திருவுள்ளங் கொண்டிருக்கின்றீர்; என்னை விட்டுப்போகுங் காரணமொன்று மில்லை; யாதலால், என் வேண்டுதலைத் திருவுளம்பற்றி என்னையு முடன்கொண் டெழுந்தருளக் கடவீர். என்னை விட்டுவிட்டே போகவேண்டுமென்று தேவர் உறுதிகொண்டிருக்கும் பக்ஷத்தில், நானிப்பொழுதே விஷத்தையுண் டாவது, தீயில் விழுந்தாவது, நீரில் மூழ்கியாவது, இறந்துவிடுவேன்; என் றிவ்வண்ணம் பலவாறாகத் தன்னையுட னழைத்துக்கொண்டு, வனத்துக் கெழுந்தருளும்படி திருவடித்தொழுது வேண்டிக் கொண்டனள். சக்கர வர்த்தித் திருமகன் இவையாவற்றையும், திருவுளத்தில்கொண்டவராகிலும், தாமே பரதெய்வமென்பதை மறைத்து, உலகத்தார்போலப் பாவனைசெய்து அத்தருமங்களில் அவரவர்களுக் கிருக்கவேண்டும் மனவுறுதியை வெளிப் படுத்துவதன்பொருட்டு ஸீதாதேவியைக் கோரமாகிய காட்டுக் கழைத்துக் கொண்டுபோக மனமிலாதார்போலத் தாமுமுடன்படாமல் தம் தேவியை நோக்கி, அடி நீ என்னசொன்னாலும், உன்னை நான் அழைத்துக்கொண்டு செல்லேனென அருளிச்செய்தனர். பிராட்டியார் அதுகேட்டுக் கடுந்துன்பங் கொண்டு, கண்ணீர்பெருக்கி இவ்வண்ணம் ஏன இவர் அருளிச்செய்கின் றார்; நான் இனி செயத்தக்கது யாதென்று சிந்தைகொண்டு அசைவற்று நிற்கையில்; ஸ்ரீராமபிரான் மறுபடியும் பிராட்டியைச் சமாதானஞ்செய்ய வேண்டுமென்று திருவுளங்கொண்டு பலவாக அருளிச்செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தொன்பதாவதுசருக்கம் முற்றிற்று.

## முப்பதாவதுசருக்கம்.

ஸ்ரீராமபிரான் பிராட்டியாருடைய உறுதியையறிந்து அழைத்துக் கொண்டுபோக உடன்பட்டது.

ஸ்ரீராமச்சந்திரனால் இவ்வண்ணம் பலவாறாக நல்வார்த்தை யருளிச் செய்து, இறகும்படி வேண்டப்பட்டவராகியும், சீதாபிராட்டி அதைத் திரு வுளத்தில் கொள்ளாமல் தம்மை விட்டுவிட் டெழுந்தருளி விடுவாரோ வென்னும் சந்தேகத்தாலும், பதியைவிட்டுப் பிரியுங்கால் தம்முயிர் நிலைப்பதரிதென்னு முறுதியாலும், தம்மை யழைத்துக்கொண்டுபோய்ப் பாதுகாக்குந் திறமையுள்ளவராகியும், உடன்படாமல் வீம்புசெய்கின்றாரோ வென்னும் கோபத்தாலும், (ஸ்வர்மத்யபகாராஜேம் சதமப்யாத்மவத்தயா)

என்னும் விருதுள்ளவராதலால் நாமெதிர்த்துக் கடுஞ்சொல் சொல்லினும், திருவுளங்கலங்கானென்னும் நம்புதலாலும், இதுவரையில்வேண்டியும், உடன் படாமையால் நிந்தனைசெயின ரோஷங்கொண்டாவது உடன் படுவானென்னுங் கருத்தாலும், மடந்தையின தன்மையேயன்றி தீரத்தன்மை இவளுக்கில்லையேயென்று நினைத்து இவர் அழைத்துக்கொண்டுபோகச் சந்தேகப் படுகின்றாரோவென்று பதியையும், கடுமைகூறி எதிர்த்துப் பேசுவதினால் தமக்குள்ள தீரத்தை இவர்க்கறிவிக்க வேண்டுமெனபதினாலும், பதியின் கருத்தினை யறிந்தவராதலாலும், ஒருகால் திருவுளங் கலங்குமோவென்று அச்சத்தால் நடுக்கமுற்றவளாகி அவரைநோக்கிககடுஞ்சொலகூறுகின்றனள.

కింత్వామన్యత వైదేహః పితా మేమిథిలాధిపః
రామజామాతరంప్రాప్య స్త్రియంపురుషవిగ్రహం
అనృతంబతలోకోయ మజ్ఞానాద్యద్ధివక్ష్యతి
తేజోనాస్తిపరంరామే తపతీవదివాకరే

கிந்த்வாமன்யதவைதேஹ: பிதாமேமிதிலாதிப:
ராமஜாமாதரம்ப்ராப்ய ஸ்திரியம்புருஷவிக்ரஹம்.
அந்ருதம்பதலோகோயம ஜ்ஞாநாத்யத்திவக்ஷ்யதி
தேஜோநாஸ்திபரம்ராமே தபதீவதிவாகரே

விதேஹவம்சத்தில பிறந்து, ஜனகனென்னும புகழ்பெற்று, மிதிலாபுரியையாளுகின்ற என்தந்தை ஸ்ரீராமபிரான்தம்மனையாளையும் வனத்தில காத்துககொள்ளத் திறமையற்று; புருஷவுருவங்கொண்டு, பெண்போலப் பயந்துவிட்டுபபோயினானெனக கேளவிப்படுவாராகில, அவர் அழகிய மணவாளராகிய தேவரை என்னநினைப்பார். அடியாளையும, ஆளத்திறமையின்றி விட்டுபபோகுந்தேவரைககண்டு, தேவர்தன்மையறியாத இவ்வுலகும, ஒளிபொருந்திவிளங்குகின்ற வெய்யோனிடத்திற்போல, ஸ்ரீராமபிரானிடத்தில சிறந்த தேஜஸ்ஸு இப்பொழுது இலலையென்றும, உளதாயின சீதையை ஏன் விட்டுபபோயினானென்றும, பொய்யாக நிந்தனைசெய்யுமாகில அதைவிடத துன்பமும், மானத்தாழ்வும, வேறுளவோ? தேவர்திருவுளத்தில என்ன நினைத்து இவ்வண்ணம் துன்பமுறுகின்றீர், தேவருககுப பயமெனபது எதனாலுளதாகின்றது. வேறு தஞ்சமின்றி நம்பியிருக்கின்ற அடியாளை ஏன் விட்டுப்போகத் திருவுளம் பற்றுகின்றீர் ? தியுமத்ஸேனன் குமாரனாகிய ஸத்தியவந்தனென்பவனையே ! ஸாவித்திரியெனபவள தஞ்சமெனக்கருதி நம்பியிருந்தனளன்றோ ? தேவர் அடியாளையும், அவள்போன்றவளெனவே திருவுளத்தறிவீராக. குலத்தைக கெடுக்கும் குலவொழுககந் தவறினவள் போல நான ஒருக்காலும், தேவரைவிட்டு வேறொருபுருஷனை மனத்திலும நினையேன; ஆதலின தேவருடன வருவேனலலது நிலலேன், நலல பருவ

ழுடையவளும், நெடுநாளாய் தேவரைசசேரநது பழகியவளும், கற்புடையாளும், மனததுக்கினிய மனையாளுமாகிய என்னை மனையாளைப பிறர்க்குக் கூட்டிககொடுத்து பிழைப்பவனபோலப பிறர்பாலாகககி கொடுககநினைக்கின்றீர். என்மாமியாருககு இதமாக எனனை யவளுககுப் பணிவிடை செய்துகொண்டிங்கிருவென அருளிசசெயகின்றீர். தேவரோ அவளுக்குப பணிவிடை செய்துகொணடு வசபபட்டிருககக கடவீர். பரதனுக இதங் கருதி வளருசெனறு எனனை அவனிடததில இசசகம்பேசிப பிழையெனவருளிசசெயகினறீர். தேவரோ! அவனுககு வசபபட்டு இசசகம்பாடிப்பிழைககக்கடவீர்; நான வனத்தில அஞசுவேனெனக கருதி, நிற்கும்படி எனக கிதங்கூறுகின்றீர்; தேவர் தனியே வனமபுகின், மிக வருத்தமுறுவீர்; ஆதலின, யானும் உடன வந்து தேவருககுக குற்றேவலசெயது கொண்டிருப்பேனென இதஙகூறுகினறேன; தேவரோ என் வார்த்தைக்கு வசபபடடு, என்னை யுடனகொண்டெழுந்தருளக கடவீரல்லது, நான தேவர்சொற்படி பிரிநதிரேன; தவமாகிலும், வனவாசமாகிலும், விண்ணுலகமாகிலும், தேவருடன் எனககும் வேண்டு மலலது, தேவரைவிடடு எனககு ஒனறும வேணடுவதிலலை; எனனைவிட்டு ஒருபொழுதும தேவர் எழுந்தருளக கூடாது; தேவர் திருவடி நிழலைபபறறிப பின தொடர்ந்து வருகினற எனககு உபவனததில விநோதமாக நடபபது போலவும், இஷ்டபபடி படுததிருபபதுபோலவும், மகிழவு தோற்றுமேயன்றிச் சிறிதும் துன்பம் தோறறுது. தருப்பை, நாணல, சிறு மூங்கில, பெரு மூங்கில, மறறுமுளள முளளுடைய மரஙகள இவையாவும் எனககு இலவம் பஞசு மானதோல முதலியனபோல மெதுவாகும். பெருங காற்றில் பறந்து, தூளிகள் என சரீரததினமேல படிந்தாலும, அவை மணமுளள சிறந்த சந்தனச சாந்தமென றெணணபபடும; தேவருடன இரம்புலவுளள பூமியில படுககினும், படடினால தைதத மெததையுளள கட்டிலினமீது படுததாறபோல மிகவும் இனபநதருவதறகு எனன ஐயமுண்டு? இலையாயினும், வேராயினும, கனியாயினும், கிழங்காயினும், மறறெதுவாயினும், தேவருககுக கிடைபபது அறபமோ வெகுவோ அதைத தேவர் எனக்களித்தருளவீராகில, அதுவே எனககு அமிர்தம்போலாகும். அந்தந்தப் பருவங்களில் கிடைக்கும் கனியையும், பூவையும் புசிதது, மகிழ்ந்திருப்பேனே யனறித் தாயையாயினும், தந்தையையாயினும், நம்மனையையாயினும், அங்கு புசித்த நலவுணவையாயினும் நினைந்து, சோகங் கொண்டு, தேவரையும் சோகமுறச்செயயேன; ஆதலின, எனக்காகத் தேவருக்குத் தீமையாவது, சோகமாவது நேராது; என்னைக் காபபது தேவருக்கு அருமையனறு; தேவருடன் வாஸஞ்செய்வதென்பதே எனக்கு நற்பேறு; தேவரைப் பிரிந்திருப்பதே எனக்கு நரகு; இவ்வண்ணம் என்னுறுதியைத் தெரிந்து, என்னையும், உடன்கொண்டெழுந்தருளக்கடவீர். இப்படி நான வேண்டியும், என்னை யழைத்துக

கொண்டு போகாதபட்சத்தில, நான் இப்பொழுதே விஷத்தையுண்டு இறப்பேனல்லது, ஒருபொழுதும் பகையாளிகளுக்குக் கீழ்பபட்டுப பிழைத்திரேன்; தேவர் என்னைவிட்டுப போன பின்னராவது, சோகத்தால நான் இறபபேனென்பது நிசசயம், அதைவிட இபபொழுதே உயிரை விடுவது நலமன்றோ?தேவர் வனஞ்செலலாமல, செல்வேனென்று இபபொழுதே இந்தச சோகத்தைப பொறுக்க என்னால் முடியவிலலை; பததுவருஷம் மேலே மூன்றுவருஷம், ஐயையோ ? அதுககுமேல ஒருவருஷம், அந்தோ ? இவ்வளவுககாலமும நான் பிழைத்து, தேவர் விரகத்தைப் பொறுத்திருபபேனோ ? ஒருபொழுதும் பிழைததிரேன; என்று மிகவும் சோகங்கொண்டு, ஆயாஸமடைந்து, பர்ததாவை யாலிங்கனஞ் செயது கொண்டு கூவென்று கேவியழுது, விஷமூட்டிய பாணங்களா லடிககப பட்ட யானைபபேடுபோல முன்பருளிச்செய்த ஸ்ரீராமபிரானுடைய கொடிய வாககியங்களால பீடிககபபட்டவளாகி, நெடுநாளாக உளளடங்கி யிருநத அக்கினியைக் கடையும்பொழுது, வனனிககடடை வெளிப படுததுவதுபோல இதுவரையில, உளளடககிய கணணீரை முழுதும் வெளியே பெருககிவிடுகையில், படிகம்போன்ற அந்தக் கணணீர்த துளிகள் அவள் திருககணணிணையினின்றும் விழும்போது செந்தாமரை மலர்களினின்றும், நீர்த்துளிகள விழுநதாறபோல ஒளிகொணடு விளங்கின.

நீண்ட கண்களையுடைய முழுமதிபோன்ற பிராட்டியாரது அந்தத் திருமுகமண்டலமும், நீரினின்றும பறிதது, வெளியில போட்டபட்ட கமலம்போல வாடி, ஒளியிழநததாயிற்று; இவ்வணணம் பலவாறாக மூர்சசைகொணடவளபோல வாடி, வருநதிககிடககின்ற பிராட்டியாரைப பேரருளாழியாகிய ஸ்ரீராமசநதிரர கடாக்ஷிததுத தம் திருககைகளால், அவளை யணைததெடுதது, அவள மனந்தோநது மகிழவு கொளளும்படி அருளிசசெயகின்றார். கேளடி என பிராணநாயகி ! நீ துன்பப்படடுக் கொண டிருக்கையில, உன்னைவிட்டு விணணுலகம பெறினும, அதனை நான் நன்குமதியேன. நானமுகதேவனுககும்போல எனககும ஒருவ ரிடத்தும் ஒருகாலும பயமெனபதிலலை, மற்றெனனெனின், உனனுடைய உளளத்தின் கருததை முழுதுமுணராமல, உன்னை யழைததுககொண்டு போகலாகாதென்று, உனனுறுதியை யறிவதறகாக நான மறுத்தேனே யனறி வேறிலலை; காட்டி லுன்னைக காகக எனககுத திறமையறறிலது; என்னுடன் வருவதில, நீ உணமையாக நிசசயஙகொணடவளாகில, சீல முள்ளவன் கீர்ததியை விடாததுபோல உன்னையும யான விட்டிருபபது அரிது; பத்தினியுடன வனஞ்செல்வது இனபமடியாக வந்தது மன்று, முன்னோர்களாகிய ராஜரிஷிகளும்; வானபபிரஸ்தாசசிரமத்துக் குரிய தென்று தாம் அநுஷ்டித்திருககின்றமையால், தருமமடியாக வந்ததே

ஆதலின், சுவர்ச்சலாதேவி சூரியனைப்பிரியாது உடன் செல்வதுபோல என்னையும் நீ தொடர்ந்துவரக்கடவை. சத்தியவாதியாகிய என் தந்தை யின வாக்கியம் என்னைக் காடுசெல்ல விடுகின்றமையால், நான் இப்பொழுதே வனத்திற்குப் புறப்படுகின்றேன்;—

ఏషధర్మస్తుసుశ్రోణి పితుర్మాతుశ్చవశ్యతా
అతస్తుతంవ్యతిక్రమ్య నాహంజీవితుముత్సహే

ஏஷதாமஸதுஸுசரோணி பிதுர்மாதுச்சவசயதா
அதஸ்துதம்வ்யதிக்ரம யநாஹம்ஜீவிதுமுதஸஹே.

தாய தந்தைகளுககு வசபபடடு நடபபதெனபதே தருமமன்றோ? ஆதலின, அதனைச செய்யாது தவறி, நான கணப்பொழுதும பிழைத்திருக்க விருப்பங கொள்ளேன, நமககு ஸ்வாதீன மாகவும, பிரத்தியக்ஷமாகவுமிருககின்ற தாய, தந்தை, குரு என்னுந தெயவங்களைவிடடு, உபேக்ஷை செயது, அசுவாதீனமாகவு மறைந்து மிருககின்ற தெயவத்தைப பலவிதமாகப் பூசைசெயவதிலும் பயனுளதோ? தந்தையின் திருவுளத்தின்படி பணிவிடைசெயவதினலாகும பயன, சததியததாலும், தானத்தாலும, மானத்தாலும, சிறந்த தக்ஷிணையுள்ள யாகத்தாலும பெறலரிது; தாய தந்தை குரு வெனனும் மூவர்களே மூவுலகஙகள; அவாகளுககுக குறறேவல செயவதைவிட, வேறு நறசெயலதறகு நிகரானதிலலை; ஆதலின, யாவராலும் அதுவே முதன்மையாகச் செயயபபடுகின்றது. இதனல், விண்ணுலகமாயினும, பொருளாயினும், தானியமாயினும, வித்தைகளாயினும், மககட்பேறாயினும, பலவகை இனபங்களாயினும, கிடைப்ப தருமையனறு; தாய தந்தைகளுககுப பணிவிடைசெயத பல மஹாத்துமாக்கள, தேவகந்தருவ சூரிய சநதிராதியா லோகங்களையும், பிரஹ்மலோகத்தையும அடைநது, மகிழவெயது கினறார்கள ஆதலின, என தநதை என்னை எவ்வண்ணஞ்செயயக கடடளையிடுகினறனரோ அவ்வண்ணமே செயய நான் நிசசயஙகொணடிருக்கினறேன; இதுவே தொலலையான தருமம; எனனுடன வனததில வாஸஞ்செயவேனென்று என்னுடன்வர நிசசயங்கொணடிருக்கின்றனை யாதலால, இபபொழுது உன்னை யழைத்துக்கொணடுபோக என் மனந் திடமுளதாயிறறு; ஆதலின் என்னல் ஆஜ்ஞைசெய்யபபடடவளாகி, என்னுடன தொடர்ந்து வரக கடவை. ஆரணியத்திலும் நான செய்யுந் தருமங்களுக்குச் சஹாயமாகக் கடவை; அடி ஸீதா! எனக்கும உனக்கும நம்முடைய குலத்துக்குந் தகுமாறு என்னுடன் தொடர்ந்தே வருவேனென்னும் நிசசயங்கொண்டனை யன்றோ? இது மிகவும் நன்கு, உன மனவுறுதி யறிந்தபின் னிப்பொழுது உன்னைவிட்டு விண்ணுலகும் என் கருத்தில் பெரிதெனத்தோற்று

தாதலின், நீ வனவாஸம் புறப்படுவதற்குமுன் நற்செயல்களைச்செய்ய முயற்சிசெய்யக்கடவை. சிறந்த வேதியர்களுக்கு ரத்தினங்களையும், பிக்ஷை மெடுப்போர்க்குப் போஜனத்தையும், விரைவாகக்கொடுத்துத் தாமசஞ் செய்யாமல் புறப்படக்கடவை. சிறந்த ஆடையாபரணங்களையும், மற்றுங் கண்ணுறத்தக்க சிறந்த விலையுள்ளபண்டங்களையும், கட்டில்மெத்தை முதலிய படுக்கைகளையும், சிவிகை முதலிய வாஹனங்களையும், மற்றும் என்னுடைய பொருள்களையும், பிராஹ்மணர்களுக்குக் கொடுத்த பின்பு, நம்மை யடுத்த பரிஜனங்க ளெல்லோர்க்கும் கொடுத்துவிடக்கடவை. என்றிவ்வண்ணம் மனமகிழ்ந்து உடன்பட் டருளிச்செய்த தம் பாத்தாவின் திருவாய்மொழியைக் கேட்டு, ஆநந்தக்கடலில் மூழ்கினவளாகிச் சீதாபிராட்டியார் உடன் செல்வதில் விரைவுகொண்டவளாகித் தம் பாத்தாவின் கட்டளைப்படி தருமமுணர்ந் தொழுகிய வேதியர் முதலானோர்களுக்குத் தனம், ரத்தினம் முதலிய யாவற்றையும் கொடுக்கமுயன்றனள்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பதாவது சருக்கம்
முற்றிற்று.

---

கிருத்வாமன்யத என்னும் சுலோகத்தின் கருத்துரை.

(வனவாஸோ மஹோதய:) என்று வனவாஸ ஸமுகரான சக்கரவர்த்தித் திருமகனார் ஸ்ரீஜனகராஜன் திருமகளுடைய ஸுகுமாரமாகிய திருமேனியின் மென்மையைத் திருவுளம்பற்றி, அவளையும் தண்டகாரணியத்தில் செல்லவிட்டு, விட்டுத் திருவுளமின்றி, நாம் மீண்டு வருமளவும் திருவயோத்தியிலே திருமாமனார் மாமியார் முதலானோரைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருமென்று வேண்டிக்கொள்ள, அவ்வார்த்தை புண்மேல் உபபுரீ தெளித்தாற்போலப் பிராட்டிக்கு மிகவும் பொறுக்கக் கூடாமல், பதிபத்தினிகளுக்குப் பிரணயத்திலும், பிரணயகோபத்திலும், (ஸுரதேவகளும்) என்கிறபடி மரியாதை மாறுபாடுள்ள தாகுதலால், பிராட்டி தம் பாத்தாவை நோக்கி, இகழ்கின்றார். கிருத்வா என்பதனால், (த்வா) (ரூபமே ஒருவருடைய மகிமையைத் தோற்றுவிக்கின்றது) என்கிற சுருதியின்படி வடிவழகுடைய தேவரை (த்வா) (குணக்ராமா விஸ்ம்வாதி நாமைவஹி மஹாத்மனும், யதாஸுவாணச ஸ்ரீகண்டரதநாகர ஸுதாகரா:) என்கிறபடி திருக்கல்யாண குணங்களுக்குத் தக்க, ஸ்ரீராமபிரானென்னுந் திருநாமமுடைய தேவரை (த்வா) (கன்யாவரயதேரூபம் மாதாவித்தம்பிதா. ச்ருதம் பாந்தவா: குலமிச்சந்தி மருஷ்டான்னமிதரோஜனா:) என்கிறபடி ரூபதனவித்யாபிஜன விதரணதிகுணங்கள் நிறைந்த தேவரை (த்வா) ராஜராஜர்களாலும் முடியாத சங்கரன் வில்லை முறித்த, ராஜராஜேந்திர னென்னும்படியான தேவரை (த்வா) குருகுலவாஸம்பண்ணிச் சகல தாமானுஷ்டானங்களையு மறிந்த தேவரை (த்வா) (அபயம் ஸர்வபூதேப்யோதாதாம் தேதத்வரதமமம) என்று ஸர்வபூதங்களையுங் காக்கக் கங்கணங்கட்டி நிற்கின்ற தேவரை (கிம் அமன்யத) என்னினைப்பார், என்னசொல்வார், தோளாண்மையற்றவ னென்னவொண்ணாதே, ராஜநீதியறியீ ரென்னவொண்ணாதே, குலமகளை யுபேக்ஷைசெய்யாமைக்கு முதற்காரணமாகிய ஏகதாரவ்ரதம

தேவருக்கில்லை என்னவொண்ணாதே, அற்பர்போல என்னையஞ்சி விட்டுப்போயினீ ரென்னவொண்ணாதே, பர்த்தாவைவிட்டுப் பிரிந்தால், குலமகட்கு உயிர்நிலை குலையு மென்பதை யறிந்திலீ ரென்னவொண்ணாதே, (ஆர்த்தார்த்தே முதிதாஹ்ருஷ்டாப்ரோஷிதே மலிநாக்ருசா ம்ருதேம்ரியேத்யாபத்யௌசாஸ்த்ரீஜ்ஞேயாபதிவ்ரதா) என்கின்ற மனுஸ்மிருதியில் கூறப்பட்ட பதிவ்விரதாலக்ஷணத்தை என்னிடத்தில் கண்டிலீ ரென்னவொண்ணாதே, (வைதேஹ꞉) நிமிசக்கரவர்த்தி தொடங்கிக் குற்றமென்பதின் றிப் புகழடைந்த நற்குலத்தவர் (வைதேஹ꞉) ஜனகரென்றும் வைதேஹரென்றும் சுருதியிலும் புகழப்பட்டவர் (வைதேஹ꞉) பறைகொட்டி நாடெங்கும் நவைப்பிக்க வல்லமையுள்ள விதேஹநாட்டுக்கிறைவர், (வைதேஹ꞉) தாமோரிடத்திருந்தும் நாடெங்கும் காத்தருளவல்லவர், (மேபிதா) (கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்திதா ஜனகாதய꞉) என்று கணப்பொழுதும் இல்லறம் தப்பாமலொழுகு மென்தந்தை (மேபிதா) திருமாமனார்போல்த் தேவருக்குக் குருவென்னப் படும்படியாகிய என் தந்தை (மேபிதா) (ஜாமாதாவிஷ்ணுவத்பூஜ்ய꞉) என்று தேவரைப்பூஜித்து மரியாதைசெய்யத்தக்க என் தந்தை (மிதிலாதிப꞉) தாம் அஸ்திர மொன்றுமையிலும் தன்னகரைத் தகைந்த பகையாளிகளைத் தவத்தின் திறமையால் வரம்பெற்றாயினும் படைகளால் அடித்துத் துரத்திவிட்டு மிதிலையைப் பாதுகாத்தவர், (மிதிலாதிப꞉) எப்பொழுதும் ராஜபோகங்களையடைந்து துன்பமென்பது சிறிதுமறியாதவர், (கிந்த்வாமன்யதமேபிதா) என் தந்தை தேவரை என்ன நினைத்திருப்பர், திருமாமனார் தசரதச்சக்கரவர்த்தியார் கையிலாவது, ஸ்ரீகோஸலையார் கையிலாவது, மற்று வேறொருத்தர் கையிலாவது, என்னைப் பிடித்துக்கொடுத்தாரோ (இயம்ஸீதாமமஸுதா) என்கிறபடி தேவர் திருக்கரத்திலன்றோ? என்னைப் பிடித்துக்கொடுத்தது. அப்படியிருக்க, என்னை நீர் விட்டுப்போவீராகில், அவர் தேவரை அறப்பொன்றன்றோ நினைப்பர், பெரியோர்களால் இகழப்படுவதைவிட வேறே துன்பமென்பது மொன்றுளதோ? இதுவரையில் அவர் துன்பமென்பதை யறிந்திலராயினும் (கன்யாபித்ருத்வம்துக்காய) என்று என்னைப் பெற்றதனாலன்றோ? அவர்க்கு இந்தத் துன்பம் நேர்ந்ததந்தோ (ஜாமாதாதசமோக்ரஹ꞉) என்று தேவராலன்றோ? அவர்க்கு மீளாத்துன்பம் (மேபிதா) என் தந்தை கொடிய பிரதிஜ்ஞைசெய்துவிட்டு எப்படியாவது பெண்ணுக்குக் கணவனாம் ஆனால் போதுமென்று உம்முடைய தன்மையறிந்து கொடுத்துவிட்டாரோ, (மிதிலாயாம ப்ரதீப்தாயாம் நமேகிஞ்சித் ப்ரணச்யதி) என்றுரைத்தவராதலால், என்பேரில் (விக்ரஹம்) அபிமானமின்மையை (ப்ராப்ய) அடைந்து (அமாதரம்) தாயற்ற (ஸ்த்ரியம) பெண்ணாகிய என்னைப்பற்றி (கிந்து-ஆமன்யத) நன்றாக ஆலோசனைசெய்தாரா என்ன) சற்றும ஆலோசனைசெய்திலர், ஆங்காயின புறத்தில் ஆண்தோலணிந்து அகத்தில் பெண்தன்மையுள்ள தேவருக்கு என்னைக் கட்டிக்கொடுப்பாரோ (த்வா) உருத்தவில்லை யொடித்து உலகத்தாரை யூமத்தங்காய தீற்றிமெய்ப்பித்த தேவரை - மேபிதா - பரமயோகியாகிய என் தந்தை அழகிய மணவாளனென்றும், ஆணென்றும், பெண்ணென்றும், அறிந்தாரோ (ராமஜ) லீலார்த்தமாக அவதாரஞ்செய்தவரென்றும (அமாதரம்) பிறப்பிலராதலால், தாயுதந்தை யில்லாரென்றும், (ஸ்த்ரியம்) மோஹினிவேஷம் பூண்டவரென்றும், சச்சிதானந்த ரூபியான பரமபுருஷனென்றுமன்றோ அறிந்தார், (மேபிதா) ஸர்வஜ்ஞராகிய என் தந்தையும் (த்வா) பெண்டாட்டியையுங் காக்க வல்லமையற்று, விட்டுப்போவேனென்கின்ற தேவரை (ப்ராப்யஸ்த்ரியம்) எப்பொழுதும் அடையத்தக்க மனையாளுடையீரென்றும், (புருஷவிக்ரஹம்) அகத்திலும் ஆண்மையுள்ள தன்மையுடையவரென்றும், (ராமஜாமாதரம்) நமக்குத்தக்க அழகிய மணவாளரென்றும் (கிம் அமன்யத) என் பிரமங்கொண்டார்.

இவ்வண்ணம் தம் தந்தை நகைப்பாரென்று இடித்துக்காட்டி உலகத்தோரும் நகைப்பார்களேயென்றருளிச்செய்கின்றாள் (அநருதம்)என்பதனால், ஸ்ரீராமபிரானிடத்தில் வெய்யோனிடத்தில்போல விளங்குமொளி இப்பொழுது காணப்படவில்லையென்று தேவருடைய ஆண்மையின்மையை உலகம் உரைசெய்யுமாகில், அது மிகவுந் துன்பமன்றோ? அநருதம் (ஆண்மையின்மை) இவ்வுலகத்தோர் ஸ்ரீராமபிரானிடத்தைப் போலச் சூரியனிடத்திலும், தேஜஸ்ஸு இல்லையென்பார்களே இப்பொழுது காணப்படாமையால், அது மிகவும் பொய், (திவாகரோ) விண்ணுலகுக்கும் ஆதாரபூதனாகிய ஸ்ரீராமபிரானிடத்தில் சிறந்த சோதி (அஸதி) உள்ளதோ) (நதபதிவ) விளங்கவில்லை போலும்* (அஜ்ஞாநாத்) காணப்படாமையால் என்று இவ்வுலகம் நகைக்குமாகில (அநருதம்) ஆண்மையின்மை (பத) கஷ்டம், வானுலகுக்கும் ஆதாரமாகிய ஸ்ரீராமபிரானிடத்திலல்லால் வேறு சோதி எங்குமில்லையென்று இவ்வுலகம் (அஜ்ஞாநாத) தேவர் ஸ்ரீமந்நாராயணனேயென்கிற எண்ணத்தால் (அநருதம்) மானிடத்தன்மையற்றவரென்று தேவரைப்பற்றிப் புகழ்ந்து மகிழ்கின்றாரோ, அது (பத) மிகவும் வியப்பு, அத்தன்மையராகில் தேவரோ தஞ்சமென்று நம்பிய என்னைவிட்டுக் கானகம் புகத் திருவுளங்கொள்வீரா என்று பிராட்டி இகழ்ந்தருளிச்செய்தனள்.

## முப்பத்தொன்றாவது சருக்கம்

ஸ்ரீராமபிரான் இளையபெருமாளையும் உடன்வர வருளச்செய்தது.

பிராட்டியாருடைய திருமாளிகைக்குச் சக்கரவர்த்தித்திருமகனார் முன்னமே எழுந்தருளியிருந்த இளையபெருமாளும், இவ்வண்ணம் தமையன், பிராட்டியார், இருவருடைய ஸம்வாதத்தையும் செவியுற்றுத் தமையனுடைய விரஹதுக்கத்தைப் பொறுக்கத் திறமையற்றுக் கண்ணீர் பெருக்கித் துன்பங்கொண்டவராகி,—

సభ్రాతుశ్చరణౌగాఢం నిపీడ్యరఘునందనః
సీతామువాచాతియశాః రాఘవంచమహావ్రతం

ஸப்ராதுச்சரணௌகாடம் நிபீட்யரகுநந்தந:
ஸீதாமுவாசாதியசா: ராகவஞ்சமஹாவ்ரதம்.

ஸ்ரீரகுகுலதிலகனென்று சொல்லும்படியாகிய தமையன் திருவடிகளைத் திடமாகப் பற்றிப் பிராட்டியாரையும், தம் வேண்டுகோளுக்கு அபிமுகராகும்படி செய்துகொண்டு, ஐயனை நோக்கி, ஐயனே! கோரமாகிய காந்தாரத்துக் கெழுந்தருள வேண்டுமென்று, தேவர் திருவுளம் உறுதிகொண்டிருக்குமாயின், அடியேனும் வில்லுங்கையுமாகத் தேவரைப் பின்தொடர்ந்து, வனத்தில் முன்னேசென்று, வழிகாட்டிக்கொண்டு செல்

ஷேவை; தேவருடன் பற்பல பறவைகளின் தொனிபொருந்தி விநோத மாகிய திருவாரணியத்தில் சஞ்சாரஞ்செய்வதைவிட்டு, இறப்பற்ற தேவதையாய்த் தேவலோகமடைந்து, பற்பல போகங்களை யனுபவிப்ப தையும், கனவிலும் நன்கும்தியேன்; தேவரின்றி, மூவுலகினையும் ஆளத் தக்க தேவேந்திரன் பட்டம் பெறினும், பிரஹ்ம பட்டம் பெறினும், அவற்றைச் சிறிதும் மதியேனென்றிவ்வண்ணம் வேண்டிக்கொண்டனர். பின்பு, ஸ்ரீராமசந்திரனால பலவாறாக நிற்கும்படி மறுக்கப்பட்டவராகி, மீளவும் ஸ்ரீராமசந்திரனை நோக்கி, என்னையனே! (உபக்லுப்தஞ்சயத் கிஞ்சி தபிஷேகாத்தமத்யமே ஸர்வஸ்விஸர்ஜ்யக்ஷிப்ரம் குருகார்யம் நிரத்யம) என்றும், (தஸ்மாதபரிதாபஸ்ஸன த்வமப்யனுவிதாயமாம் ப்ரதிஸம்ஹாரயக்ஷிப்ரம் ஆபிஷேசநிகிம்க்ரியாம்) என்றும், அடியேனை யுடன்வர மறுக்காமல, முன்னமே அனுமதி செய்திருக்கின்றீர்; (பராத்ரு புத்ராஸமௌசாபித ரஷ்டவ்யௌசவிசேஷத: த்வயாபரதசத்ருக்னௌ ப்ராணை:ப்ரியதரௌமம)என்று, பிராட்டியாருடன் பரதசத்துருக்கனர்களை மாத்திரம இங்குப் பாதுகாத்துக்கொண்டிருக்கும்படி கட்டளையிட்டமை யால, அடியேன தேவருடன வருவது சித்தமாயிற்றன்றோ? அப்படி யிருக்க, இப்பொழுது அடியேனை மறுப்பதற்குக் காரணம யாதோ அதனை யருளிச்செய்யக்கடவீர். இதைத் தெரிந்துகொள்ள விரும்பு கின்றேன; எனக்கு மிகச் சந்தேஹமுண்டாயிருக்கின்றதென்று வேண்டிக் கொண்டு வினவினர். சக்கரவர்த்தித் திருமகனர் இளையபெருமாள் விண் ணப்பத்தைத் திருச்செவிசாத்தி அவரைக் கடாக்ஷித்துக் கேளடா தம்பி! நீ எனக்கு மிகவும அன்பனும, தர்மசிந்தையுடையவனும், சூரனும், நல் லொழுக்கமுடையவனும், பிரியமுடையவனும், என்னுயிர்க்கு நிகராகிய வனும, எனக்கு அடங்கியவனும, தோழனும், எனக்குச் சகோதரனும் ஆகி னறனை; நீயும் என்னுடன வனவாஸம வருவாயாகில, கோஸலையாரையும, சுமித்திரையாரையும, யாவர் பாதுகாத்துத் தேற்றுவார்கள். மேகம் மழை பொழிந்து இப்பூமியை மகிழ்விப்பதுபோல வேண்டியவைகளை யளித்துப் பாதுகாத்து மகிழ்விக்கத்தக்க மஹாராஜா காமவேட்கைகொண்டு கைகேயியாருக்குத் தொண்டாகி யிருக்கின்றாரோ? அந்தக் கைகேயியாரும், ராஜ்யத்தைப்பெற்று, மதங்கொண்டவளாகியிருப்பாளாதலால், சக்களத்தி கள் துன்பப்படுவதைக் கண்டு,மகிழ்வெய்துவளேயன்றி,நன்மைசெய்யாள; பரதனும ராஜ்யத்தைப் பெற்று, இறுமாப்புற்று, கைகேயிக்கு வசப்பட்டு அவள் தாக்ஷிணியத்துக்கு நந்தாயர்களை நெஞ்சாலும் நினையான்; ஆதலின், நீ இங்கிருந்து சக்கரவர்த்தியாரது அனுமதியாலாவது, நீயே சுயமாயாவது, கோஸலையாரைப் பாதுகாத்துக்கொண் டிருக்கக்கடவை. இதை மறுக்காமல் இப்படியே செய்வாயாக; இப்படி செய்வாயாகில், உனக்கென்னிடத்திலுள்ள பத்தியும், வெளிப்பட விளங்கியதாகும்; மாதா வுக்குப் பணிவிடைசெய்வதனால, ஒப்பற்ற சிறந்த தருமமும், செய்யப்

பட்டதாகும், நாம் வனமேகியபின் நம் தாயார்களுக்குச் சுகமென்பது சிறிதும் உண்டாகாது; ஆதலின், நீ என்பொருட்டு இவ்வண்ணஞ் செய்யக்கடவை யென்று அருளிச்செய்தனர். இளையபெருமாள், அவ்வருளிச் செயலைக் கேட்டு, ஸ்ரீரகுநாயகனை நோக்கி, எனையனே! தேவருடைய திருக்கல்யாண குணங்களை நினைந்தாராய்ந்து நேர்நடத்தியினாலாயினும், தேவருடைய தோள்வலியை நினைந்து, அதனால் உண்டாகிய பயத்தினாலாயினும், பரதன் அபிஷேகம் கொண்டபோதிலும், மிகவும் விநயமுள்ளவனாகி, நம் அன்னையர்களையளித்துப் பாதுகாப்பானென்பதில், சிறிதும் ஐயமேயில்லை, ஒருகால் அவன் உபேக்ஷைசெய்வானாகிலும், என்னைப் போன்ற ஆயிரம்பேர்களையும், கோஸலையார் பாதுகாக்கவல்லர்; அவர் வசத்தில் ஆயிரம் கிராமங்களிருக்கின்றனவன்றோ? அதுகொண்டு, கோஸலையார் தம்மையும், என்னன்னையையும், என்னைப்போன்றவர்களையும், பாதுகாத்துக்கொள்ளவல்லார்; அடியேனைக் கைங்கரியம் செய்யும்படி யருளிச்செய்யக்கடவீர். இவ்விஷயத்தில் தகுதியற்றதொன்றுமில்லை, கோஸலையாரைப்பாதுகாக்க, அவரே வல்லவராதலால், நானிங்கிருப்பதில் பயனில்லை; தேவர் அடியேனுக்கு மூத்தோராதலால், தேவருக்கு அடியேன் தொண்டுசெய்வதிலும் இகழ்ச்சியில்லை; நித்தியதாஸனாகிய அடியேனை விட்டுப்போவதே தகுதியற்றது; அடியேன் உடன்வருவதனால், *தேவருக்கே நன்மை, வனத்தில் அடியேன் தேவர்க்குக்காய் கிழங்கு முதலிய நல்லுணவுகளைக் கொண்டுவந்தளித்தும், பர்ணசாலைகள் கட்டியும், எப்போதும் துயிலுமின்றித் தீங்குநேராமல் காத்துக்கொண்டிருப்பேன்; நிருபாதியாகிய கைங்கரியத்தையே நற்பேறாகக்கருதிய அடியேனும் அந்தக்கைங்கரியத்தைச்செய்து தன்னியனாகுவேன், வில், பாணம் முதலிய ஆயுதங்களையும், மண்வெட்டி, புட்டிற்கூடை முதலிய கருவிகளையும் எடுத்துக்கொண்டு, தேவருக்கு வழிகாட்டும்பொருட்டு முன்னே செல்வேன்; காட்டிலும், ரிஷிகள் புசிக்கத்தக்க காய் கனி கிழங்கு வேர் முதலியவற்றைத் தினந்தோறும் தேவருக்குக் கொணர்ந்தளிப்பேன்;—

భవాంస్తు సహ వైదేహ్యా గిరిసానుషు రంస్యతే
అహం సర్వం కరిష్యామి జాగ్రతస్స్వపతశ్చ తే

* பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா கிரிஸானுஷு ரம்ஸ்யதே
அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதச்சதே.

தேவர், சீதாபிராட்டியாருடன் மலைத்தாழ்வரைகளில் இன்பத்தையநுபவித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கக்கடு ஒருவனே தேவர் விழித்திருக்கையிலும், துயில்கொண்

ஸர்வவித கைங்கரியமும் செய்துகொண்டு காத்திருப்பேன்; என்றிவ்வுண்ணம் உறுதியாக விண்ணப்பஞ்செய்தது வேண்டினா. பேரருளாளரும் அவரது விண்ணபபத்தைத் திருவுளம்பற்றி, மிக மகிழநது, அடா என்னருமைத் தம்பி! நீ என்னுடன் வருவதில திடமுள்ளவனுதலால், யானும் உடன் பட்டேன், நீ சீககிரஞ்சென்று, உனககு வேண்டியவாகளுடன் விடைபெற்றுக்கொண்டு வரககடவை. ஜனகமஹாராஜர் யாகஞ்செய்யுங் காலேயில, வருணதேவன் தானே எதிராக வநது, இரண்டு சிறந்த கோதண்டயகளேயும், பிறர் பிளக்கமுடியாத இரண்டு கவசங்களேயும, பாணங்கள் எப்பொழுதும் குறையாமல் நிறைநதுள்ள இரண்டு அமபறுத்தூணிகளேயும், சூரியன்போல விளஙகுகின்ற தஙகத்தால் சிங்காரிககப்பட்ட இரண்டு வாளகளேயும் அளித்தனரன்றே? அவைகளே நமமாசிரியராகிய வஸிஷடருடைய ஆசிரமத்து நின்றும் எடுத்துவரக்கடவை, எனக கட்டளேயிட, இளேயபெருமாள உடனே விரைந்து சென்று, தம்பந்துஜனங்களேககண்டு, அவர்களிடத்தில் விடைபெறறுககொண்டு, வஸிஷடர் திருமாளிகை சென்று, ஆயுதஙகளேயெல்லாம் எடுதகதுக் கொண்டுவநது தம்மையனுக்குக் கட்புலனுககி யறிவித்தனா. ஸ்ரீரகுகுலதிலகா அதைக்கண்டு மகிழ்ந்து, அடா லக்ஷ்மண! நலல சமயத்தில் வநதனே, யானும் உன்னேயே எதிாபார்த்திருநதேன், எனக்குளள பொருள்கள் யாவறறையும், உன்னுடன் கூடித் தவசிகளுக்கும், வேதியர்களுககும் கொடுததுவிட்டுப போக விருமபுகின்றேன்; யாவரும் இங்கு வந்து நிறைந்திருககின்றனாகள. நீ விரைவாகச் சென்று, நம் மாசிரியா குமாரராகிய ஸுயஜ்ஞரை எழுநதருளப பண்ணிக கொண்டு வரக்கடவை. பின்பு, பொருள்கள் யாவற்றையும், அவர் முதலிய யோகிகளுககும், வேதியர்களுக்கும், நம் பரிஜனங்களுக்கும், அளித்து விட்டுப போவோமென் றருளிசசெயதனர்.

அயோத்தியாகாணடத்தில் முபபதநொனறுவது சருக்கம்

முற்றிற்று.

---

* ஸபராதுசசரணெள எனனும் சுலோகததின் கருததுரை.

சக்கரவாததித்திருமகன வனவாஸோனமுகனுகி, இளேயபெருமாளே நோக்கித தாம மீண்டுவருமளவும், திருவயோததியில தாயாகளேப பரிபாலனஞ்செயதுகொணடிருக்குமபடி யருளிசசெயகையில, காட்டிலுங்கூடப்போயக கைங்கரியஞ்செயவதிலுணடாகும், ஆனநதாதிசயததிலுணடான ருசியாலே, அநத வார்ததை தமககு அஸஹியமாகிக் கூடபபோகவேணடுமெனறு பிராட்டி முனனிலாகப பெருமாள திருவடிகளிலே சரணம புகுகினறுர். (ஸ:) நிததிய விபூதியில் (நிவாஸசயயா ஸனபாதுகாமசுகோ பதானவாஷாத பவாரணுதிபி:) என்றும,—

சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாந் திருமாற் கரவு.....................

என்றும் பெருமாளுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யமுஞ் செய்துகொண்டிருந்து சேஷிலோகானுக்கிரஹார்த்தமாக லீலாவிபூதியில் லீலாமானுஷ விக்கிரஹனாக அவதாரஞ்செய்கையில், அந்த விச்லேஷம் பொறுக்கக் கூடாமையாலும், விபவத்திலும் அந்தக் கைங்கரியங்களைச்செய்து தமக்குற்ற சேடனென்னும் திருநாமம் யதார்த்தமென்பதை மூடர்களுக்கு அறிவித்து, அவர்களுக்கும் கைங்கரியத்தில் ருசியை யுண்டுபண்ணுகைக்காகவும், பகவத் பாரதந்திரியமும், தக்க ஹேதுவே யாதலால், நிரதிசயானந்த ரூபமாகிய மோக்ஷத்தில், அது ஒவ்வாதென்று பிதற்றுகிற சிலதார்வாதிகளுக்குத் தான ராஜ்ஜிய போகாதிகளையும்விட்டுப் பரதந்திரராகி, நித்திய கைங்கரியத்திலே ருசிகொள்வதினால், இதுவே நிரதிசயானந்த ஹேது வென்பதை விளங்கச்செய்வதற்காகவும், (ஜ்யேஷ்டபராதா பித்ருஸம:) என்கிறபடி தந்தை தமையனார் திருவுள்ளத்துக் கிசைந்தபடியே யாவரும் நடக்கவேண்டு மென்பதைத் தாம் அனுஷ்டித்துக் காட்டுவதற்காகவும் அவதாரஞ்செய்து (பால்யாத்பர ப்ருதிஸுஸ்நிக்த:) என்கிறபடி எல்லாவவஸ்தைகளிலும் பிரியாமலிருந்து (நசஸீதா த்வயாராம நசாஹமபிராகவ, முஹூர்த்தமபிஜீவாவோ ஜலான்மத்ஸ்யாவிவோத் த்ருதௌ) என்கிறபடி ஸமச்லேஷத்தில் உயிர்வாழ்பவரும், விச்லேஷத்தில் இறக்குந் தன்மையை யுடையவருமாகிய இளையபெருமாள் (பராத்ரு:) தாம் தொண்டு செய்வதற்குரிய திருமேனி சம்பந்த முடையவர், (பராத்ரு:) தாம் செய்யும் சரணாகதிக் கிரங்கி பரணஞ்செய்யவல்லவர், (பராத்ரு:) தம்மையன்றிய ஸ்ரீமந்நாராயணனுடைய (மாதா பிதா ப்ராதாநிவாஸச் சரணம்ஸுஹ்ருத், கதிர்நாராயண:) என்கிறபடி யாவர்க்கும் சர்வவித பந்துவும் நாராயணனிறே, இதனால் த்வயத்தினுடைய பூர்வவாக்யத்தி லுள்ள காம்பத்தத்தினுடைய விக்கிரஹார்த்தத்தை வெளியிட்டாரிறே, நாராயணஸ்ய சரணௌ, என்றதாயிற்று, (சரணௌ) சரகதிபக்ஷணயோ: என்கிறத்தால், பலனை யடைவிப்பதும் பலனுமாகிய திருவடிகளை (சரணௌ) கைகளைப் பிடித்து வேண்டினால், மறுக்கலாம் மறுக்கவொண்ணாத பரமோபாயமாகிய திருவடிகளை (சரணௌ) முகம் வாய் கை முதலியவற்றைப் பற்றிக்கொண்டு, தம்மிலும் கீழ்மக்களையும், தமக் கொப்பாயினோரையு மிவரோ வேண்டிக்கொள்ளத்தக்கது, பெருமாள் தமக்கொப்பா ரும் மிக்காரும் இன்மையால், தமது சுபுகத்துக்கும், கரத்துக்கும் கூட ஒருக்காலும் பெறலரிய ஸ்வஸமாச்சரணீயதா விருத்துள்ள திருவடிகளை (காடம் நிபீட்ய) தம் முடைய அபிநிவேசம் மிகத் தோற்றும்படி பற்றி, (காடம் நிபீட்ய) அங்கங்களுள் ஏதுங்குறையின்றிப் பூர்ணபிரபத்திபண்ணி ஸர்வபலன்களுக்கும் சரணாகதியேயிறே பரமோபாயம், (ரகுநந்தன:) ஜ்யேஷ்டானு விருத்தியை யுகந்தருளும் ரகுகுலத்தா ரெல்லோரையும், தம்முடைய அனுவிருத்தியா லுகப்பித்தவர், (ஸீதாமுவாச) (யதப்ரு பங்காப்ரமாணம ஸ்திரசரசஞ்சாரதமயே முராரோ:) என்கிறபடி பெருமாள் பிராட்டியின் கண்ணோக்கின வழியே செல்லு மியல்பின ராதலால், தாம் செய்த சரணாகதிக்குப் பெருமாள் இரங்கும்படி கடாக்ஷித்தருளுமென்று பிராட்டியுடன் விண்ணப் பஞ்செய்தார். ஸீதாமுவாச (பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச்ச புண்டரீகச்சபுண்யக்ருத் ஆசார்யவத்தயாமுக்தௌ தஸ்மாதாசார்யவான்பவேத)(ஆசார்யவான்புருஷோவேத) என்றும், (குருமுகாதஸ்ரீ சம்ப்ரபத்யாதமவான்) என்றும் சொல்லுகிறபடி ஆசார்ய

வுதைை யன்றியில் செயயும் பிரபததி ஸாவாதிகாரிக மாகாதென்று, பிராட்டியாரை யாசார்ய வரணஞ்செயது தம் பிரபததி தலைக்கட்டும்படி செயவிககவேண்டுமென்று விஜ்ஞாபனஞ்செயதார. (அதியசா:) அனுகூலனென்றும், பிரதிகூலனல்லனென்றும், சொலலும்படியான சரணாகதிக்கு முதனமையான அங்கங்களையுடையாரென்று புகழ்பெறறவன், (ராகவஞ்ச) புருஷகாரம் வேண்டாதபடி சரணாகத பரிபாலனத்தையே தலைமைபாகக் கொண்டவரை (மஹாவரதம்) (அபயமஸாவபூதேப்யோ ததாம்யேததவரதமமம) என்று சரணாகத ரக்ஷணத்தையே விரதமாகவுடைய தம்மையும் பாராதது, தாம் செய்த பிரபததி தலைககட்டும்படியாக விஜ்ஞாபனஞ்செய்கிறார். அதியசா, ரகுநநதன, ஸ, பராது, சரணௌ, காடம் நிபீட்ய, ஸீதாமுவாச, மஹாவரதம் ராகவஞ்ச (உவாச) என்று அனவயங் கொளக.

* பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா, என்பதின கருததுரை.

(ஸபராது:) எனகிற சுலோகததால பண்ணின சரணாகதிககுப் பலன் கைங்கரியமே யென்று இதனால் வெளிபபட வருளிசசெயகிறார. இளையாழ்வான (பவாம்ஸது) (தாஸபூதாஸஸவதஸஸாவே ஹ்யாதமான: பரமாதமன:) எனகிறபடி ஸர்வசேஷியான தேவரீரோவென்றால (வைதேஹ்யாஸஹ) (ஈசவீதாதவயாராம) எனகிறபடி அடியேனைப போலவே தேவருடைய வியோகததைப பொறுதவராகிய பிராட்டியுடன (வைதேஹயா) காட்டில சீதோஷ்ணங்களைப பொறுததுப பணிவிடைசெயயுந திறமையும, பழககமுமின்றிச் சுகமாக ஜனகமஹாராஜன திருமகளாகிச செலவமாய வளரந்து ஸுகுமாரமாகிய திருமேனியையுடைய பிராட்டியுடன (கிரிசானுஷு) நாநாதாது விசித்திரமாகி நவமணி மாடமபோலுயாநதழகாகிய மலையடிவாரஙகளில(ரம்ஸ்யதே) திருவயோததியில போலவே இன்புற்று வீறறிருககககடவீர. (அஹம்) தேவர் கைங்கரியத்தின்பொருட்டே பிறநத அடியேன, (அஹம) நிரநதர கைஙகாய விரோதியான பாரியை யனறியில, அடியேனொருவனே (ஸாவம) உசிதாநுசிதவிசாரமினறி, எலலாக கைங்கரியஙகளையும் ஸாவாவஸதையிலுமம செயது காததிருபபேனென்றபடி (ஸாமநத ஒளி மணிரஞ்சிதசாஸநாஙக மேகாதபதர மவனோநததாப்ரபுத்வம், அஸ்யாஸஸ கேச ரணயோரஹமதயகாநத மாஜ்ஞாகரதவ மதிகமயயதாகருதாநததா:) என்று ஸாவஜ்ஞரான கவிஸாாவபௌமா மண்டலாதிபதியாகி ஸாவஸவ தநதிரராகியிருபபதிலும் அபிமததமாளுக்குப பரதநதிரராயிருநது பணிவிடைசெயவதே பரமானநதமென்று உரைசெயதனரிறே; ஆதலின, பரமாபிமதராகிய ஸ்ரீமநநாராயணருககுக கைஙகரியஞ்செய்வதே மோக்ஷாநநதமென்று இளையபெருமாளும் ததவாரதத்தை யருளிசசெயதனரெனவுணாக.

---

## முப்பத்திரண்டாவது சருக்கம்.

### ஸ்ரீராமபிரான் தமக்குள்ள பொருள்களையெல்லாம் வேதியா முதலானோர்க் களித்தது.

---

அநந்தரம் இளையாழ்வார் தம்மையனார் கட்டளையின்படி ஸுயஜ்ஞருடைய ஆச்சிரமஞ் சேர்ந்து, அக்கினிஹோத்திரஞ் செய்துகொண்டிருக்கிற அவரைக்கண்டு தன்னிடம் சமர்ப்பித்து, 'வாரீர், தோழரே! தேவரை

அயயர்எழுந்தருளப்பண்ணுகின்றார் அங்கெழுந்தருளிச்செயற்கரியசெயல்களைச்செய்கின்ற ஸ்ரீராமசந்திரனைக் கடாக்ஷித்தருளக்கடவீர் என்றுவிஜ்ஞாபனஞ்செய்ய, ஸுயஜ்ஞரும்உடனே நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு இளையபெருமாளுடன் ஸ்ரீராமபிரானுடைய திருவாஸல்மனைக் கெழுந்தருளி அத்திருமாளிகையின் அழகினைக் கடாக்ஷித்துக்கொண்டு உள்ளே புகுகையில், நெய்யாகுதியால் விளங்கிக்கொண்டிருக்கின்ற அக்கினிபோல ஒளிபொருந்திய இவரைக்கண்டு, சக்கரவர்த்தித்திருமகன் பிராட்டியாருடன் கையைக் கூப்பிக்கொண்டு எதிர்கொண்டுவந் தெழுந்தருளப் பண்ணிக் கொண்டுபோய் ஓராஸனத்தில் வீற்றிருக்கச்செய்து, நவரத்தினங்களிழைத் தழகாகிய தோள்வளைகள், குண்டலங்கள், அரைஞாண், புஜகீர்த்தி, தோடாக்கள் முதலிய அணிகளாலும், மற்றும் பற்பல மணிகளாலும் பூசைசெய்து, ஸீதாபிராட்டியினால் ஏவப்பட்டவராகி, சிறந்த முத்துவடத்தையும், ஒட்டியாணத்தையும், தங்கத்தால்செய்த மின்னூலையும், அவர்கையிற்கொடுத்து, ஆசிரியர் திருக்குமாரரே! இவைகளைத் தேவருடைய பாரியைக்குக் கொடுக்கும்படி ஸீதையளித்தாள் இவைகளைப் பாரியைக்குக் கொண்டுபோய் கொடுத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து, மீளவும் சீதாதேவியால் ஏவப்பட்டு, வங்கி, பாஜிபந்து முதலிய அணிகளையும், சிறந்த இலவம் பஞ்சிமெத்தையுடன் கூடிய கட்டிலையும், தமக் கம்மானால் கொடுக்கப்பட்ட சத்துருஞ்சயமென்னும் யானையையும், ஆயிரம் யானைகளுடன் ஸமர்ப்பித்துகப்பித் தருளினார். ஸுயஜ்ஞரும் அவை யாவற்றையும் பெற்றுக்கொண்டு ஸ்ரீராமலக்ஷ்மண ஸீதைகளுக்கு ஆசீர்வாதஞ்செய்து வாழ்த்தியேத்தியருளினார். ஸ்ரீராமபிரான் பின்பு இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! அகஸ்தியமாமுனியையும், கௌசிகமாமுனியையும் எழுந்தருளப்பண்ணி, நவமணிகளாலும், மற்றும் வேண்டியவைகளாலும், பூசைசெய்யக்கடவை, அநேகமாயிரம் பசுக்களையும், வெள்ளி, தங்கம், மணி முதலிய வைகளையும் கொடுக்கக்கடவை. நந்தாயாராகிய கௌஸலையாரை யடுத்தவரும், தைத்திரீய வேதமோதுகின்றவர்களுக் கெல்லாம் குருவும், கொடைக்கு நல்ல பாத்திரருமாகிய வேதியரை யழைப்பித்து, அவருடைய வேட்கை தீருமளவும், வாஹனங்களையும், தாதிகளையும், வெண்பட்டுகளையும், மற்றும் பலவகையாடை யணிகளையும் கொடுத்து மகிழ்விக்கக்கடவை. அன்றியும், நெடுநாளாய அடுத்தவரும், அமைச்சரும், ஸூதவமிசத்தில் பிறந்தவருமாகிய சித்திரரதர் என்பவர்க்கும், ஆடையாபரணங்களையும், மற்றும் சிறந்த மணிகளையும், சில்லறைப்பசுக்கள் யாவையும், சிறந்த வைகளில் ஆயிரம் பசுக்களையும் கொடுத்து மகிழ்விப்பாயாக; கடசாகையையும், கலாபிசாகையையும் ஓதிக்கொண்டு, உண்டிலும் அபேக்ஷையின்றிப் பலாசம் தண்டங்களைக் கையிலேந்திப் பிரஹ்மசரிய விரதங்கொண்டு விளங்குகின்ற எண்பது பிரஹ்மசாரிகளுக்கும், எண்பது ஒண்டை ரத்தினங்களையும், ஆயிரம் பொதிமாடுகளையும், இருநூறு உழவுமாடுகளையும், ஆயிரம் பசுக்களையும்

அளிக்கக்கடவை நந்தாயானை யடுத்த பிரஹ்மசாரிகளும் பலருளர், அவர்களுக்குந் தனித்தனி ஆயிரமாயிரம் பசுக்களைக் கொடுத்தருளவாயாக; மற்றுமுள்ள வேதியர்களுக்கும், எவ்வண்ணம் தானஞ்செய்தால் நந்தாயாருகந்தருளவரோ ? அவ்வண்ணம் கொடுக்கக்கடவை. என்று பிரஹ்மா தேவேந்திரனுக்குக் கட்டளைசெய்வதுபோலக் கட்டளையிட்டருளினர். இளையாழ்வாரும் உடனே தமையன் கட்டளைப்படி எல்லா வேதியர்களுக்கும், குபேரன்போல அளவின்றிக் கொடைசெய்து, கண்ணுங் கண்ணீருமாகாநிற்கின்ற தம்பரிஜனங்களுக்கும், மற்றொருவனையடுத்துப் பிழைக்காமல், இன்புறும்படியாக மிகக பொருள்களையீழு தனித்தனி யளித்துவிட்டு, அவர்களை நோக்கி, நாங்கள் திரும்பிவருமளவும், நீங்கள் துன்பமடையாமல் மகிழ்வுற்று, நந்திருமாளிகைகளைப் பாழடையாமல் காத்திருக்கக்கடவீர்களென வருளிச்செய்துவிட்டுத் தம்முடைய கோசாதிகாரியையழைத்து என்னுடைய பண்டாரத்திலுள்ள பொருள்கள் யாவற்றையும் கொண்டுவரக் கடவீரகளெனக் கட்டளையிட்டு, உடனே மலைபோலக் குவைகுவையாகக் கொண்டுவந்து கொட்டப்பட்ட பொருள்களெல்லாவற்றையும், அங்குள்ள பாலகர், மூப்பினர், பிணியாளர் முதலிய பொருளற்றவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டருளினர். அத்தருணத்தில், பொருளின்மையால் பிங்களவர்ணமுடையவரும், உஞ்சவிருத்தியால் ஜீவனஞ்செய்பவரும், மூப்பினையுடையவருமாகிய திரிஜடரென்பவர், தன்பாரியையால் ஸ்ரீராமபிரான் எல்லோர்க்கும் வேண்டிய பொருள்களைக் கொடுத்தருள் செய்கின்றாராம்; ஆதலால், தேவர் ஸ்ரீராமபிரானைப்போய்க் கண்டுவாரும், அவர் தேவர்க்கும் ஏதேனும் அளித்தருள்செய்வர், இந்தக் கோடாலியையும், மண்வெட்டியையும், விட்டெறிந்துவிடும், என் வாக்கியத்தைக் கேட்டருளுமென்று ஏவப்பட்டவராகி, ஒரு கந்தற்றுணியையெடுத்து உடுத்திக்கொண்டு புறப்பட்டு, ஸ்ரீராமபிரான் திருமாளிகை சேர்ந்து, ஒருவராலும் தடுக்கப்படாமல், ஸ்ரீராமபிரானருகில் வந்து, ஸ்ரீராமசந்திரரைக் கண்டு, சக்கரவர்த்தியார் திருக்குமாரரே ! யான் பெரிய குடும்பியாகியும், பொருளின்றிக் காட்டில் தினந்தோறும் உஞ்சவிருத்தி செய்து பிழைக்கின்றேன்; என்னைக் கடாக்ஷித்தருளுமென்று அருளிச்செய்தனர். சக்கரவர்த்தித் திருமகனார் அதுகேட்டாராய்ந்து, வெளியிலுள்ள அநேகமாயிரம் பசுக்களில், ஓராயிரமும், ஒருவருக்கும் அளிக்கவில்லை, அதைக் கொடுக்கலாமென்று மனத்தில் உத்தேசித்து, இவர் மூப்பினராயினும், மிகவுந் தேஜ்பலமுள்ளவராகத் தோற்றுகின்றதென்று, அவர் திருமேனியைக் கண்டறிந்து, ஆகிலும் அதைக் கடாக்ஷிக்கவேண்டுமென்று குதூஹலத்தால், அம்மஹாத்துமாவை நோக்கி, "ஸ்வாமி அடியேன் குதூஹலத்தால் ஒரு விண்ணப்பஞ் செய்கின்றேன்; சீற்றங்கொள்ளற்க வென்று, அவரிடத்தில் நியமனம் பெற்றுக் கொண்டு, மஹாயோகியே ! நீர் இந்தக் கோலைச் சுழற்றிக் கோட்டைக்கு வெளியிலுள்ள என் பசுக்கூட்டத்தை நோக்கி, எறிந்தருளக்கடவீர். அது

எவ்விடத்தில் வீழ்கின்றதோ ? அதற்குட்பட்ட பசுக்கள் யாவற்றையும் தேவர் திருவுளம்பற்றி எழுந்தருளக்கடவீரென் விஜ்ஞாபனஞ் செய்தருளினர். திரிஜடர் அம்மொழியைக்கேட்டு, உடனே இடுப்பில் உத்தரீயத்தைச் சுற்றி இறுக்கிக் கட்டிக்கொண்டு, அக்கோலைத் தம்பலமுள்ள வரையில் சுழற்றி எறிகையில், அந்தக் கோல ஸரயூநதியின் கரைக்கப்புறத்திலுள்ள அநேகமாயிரம் பசுக்கூட்டங்களைத்தாண்டி எருதுகளின் கூட்டத்தருகில் விழுந்தது; ஸ்ரீராமபிரான் அதைக் கடாக்ஷித்து அவரை யணைத்துக் கொண்டு மகிழ்ந்து, அக்கோல் விழுந்தவரையிலுள்ள பசுக்களையெல்லாம் மேய்ப்பவர்களுடன் திரிஜடருடைய ஆச்சிரமத்துக் கனுப்பிவிட்டு, இவரையும் நோக்கி, ஸ்வாமி ! தேவர் சிற்றங்கொள்ளற்க, விநோதமாக அடியேன் இவ்வண்ணம் தேவரை வருத்தினேன், தேவருடைய சிறந்த தேஜோபலத்தை யறிவதன்பொருட்டிவ்வண்ணஞ் செய்தேனே யன்றி, வேறில்லை; ஆதலால் இந்த அபராதத்தைப் பொறுத்தருளக் கடவீரென்று, மறுபடியும், அவரை நல்வார்த்தையினால் மகிழ்வித்து, மற்றுந் தேவருக்குவேண்டிய பொருள் யாதோ அதையும் கேட்டருளவீராக, அடியேன் பொருள் யாவும் வேதியர்களுக் களிப்பதன் பொருட்டே யன்றி, வேறில்லை, இதுவே என் பொருட்டு நலந்தருவது, இது விஷயத்தில் தடையில்லை, யோசனைசெய்யாமல் அருளிச்செய்யக்கடவீ ரென்றும், பலவாறாக வேண்டி யருளினர். திரிஜடரும் பத்தினியுடன் அப்பசுக்களைப்பெற்று மகிழ்ந்து, கீர்த்தி, பலம், பிரீதி, இன்பம், இவைகள் மேன்மேலும் வளரும்படி ஆசீர்வாதஞ்செய்து எழுந்தருளினர். ஸ்ரீராமபிரானும் மற்றுமுள்ள பொருள்களையும், அங்குள்ள வேதியர், நட்பினர், பணிசெய்பவர், இரவலர் முதலிய யாவர்க்கும் அவரவர்களுக்குத் தக்கபடி சம்மானஞ்செய்வித் தருளினர். அப்பொழுது அங்குள்ள யாவரும் மனக்குறையின்றி மகிழ்ந்து புகழ்ந்து உகந்தனரேயன்றி, ஒருவரும் மகிழ்வுற்றிருந்திலர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

---

சக்கரவர்த்தித்திருமகன் திரிஜடரை யவ்வாறு பரிஹாஸஞ்செய்தது என்னெனில் ஸ்ரீராமபிரான் தமக்கு ராஜ்ஜியமின்றி வனம்போகிறோமேயென்று மனக்கவலை சிறிதுமில்லை யென்பதை வெளிப்படுத்துவதற்காகவும், தம்மை யடுத்தவர்கள் நமக்கிவ்வளவு பசுக்களை யளித்திலரோ, நூதனமாய் வந்த திரிஜடருக்கு மாத்திரம் எல்லாப் பசுக்களையும் கொடுத்துவிட்டாரோயென்று அசூயைப்படாமைக்காகவும், சுகப்படுகிறவர்களைவிட வருத்தப்படுகின்றவர்களுக்கே தேஜோபலம் மிகவுள்ளதென்பதை வெளிப்படுத்தியதனால், தாம் அரணியத்தில் வருத்தமுறினும், வலிமைகுன்றாதென்பதைத் தாயார் முதலானோர்க் கறிவிப்பதற்காகவும், இவ்வண்ண மருளிச்செய்தனரென வுணர்க.

## முப்பத்துமூன்றாவது சர்க்கம்.

### ஸ்ரீராமபிரான் ஸீதா லக்ஷ்மணர்களுடன் சக்கரவர்த்தியைக் காண எழுந்தருளியது.

இவ்வண்ணம் ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும், ஸீதாபிராட்டியாருடன் வேதியர்களுக்கு மிகப்பொருட் கொடை செய்துவிட்டுத் தந் திருத்தந்தையைக் கண்டு, மூவரும் வனமேகும் செய்தியை யறிவித்து, விடைபெற்றுக் கொண்டு, வனவாசமெழுந்தருளநிச்சயங்கொண்டு, காணமகிரிதாய்ச்சிறந்து விளங்கியும், ஸீதாபிராட்டியால் மலர் மாலை முதலியவற்றால் அலங்காரஞ் செய்யப்பட்டு மிருக்கின்ற வில் முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டு வீதியில் எழுந்தருளினார்கள். இச்செய்தி யறிந்து, 'அத்திரு வயோத்தியிலுள்ள ஜனங்களெல்லோரும், அரசர்களின் மாளிகையி னுச்சியிலும், தேவாலயங்களின் கோபுரத்திலும், நற்செல்வர்களின் மேன் மாளிகையிலும், ஏழுமாடியுள்ள உயர்ந்த வீடுகளின் மீதும் ஏறிக்கொண்டும், புறத்திலிருந்து வந்தவர்கள் வீதிகள் தோறும் எள்ளினமுனை நுழையவு மிடமின்றி, நெருங்கி நின்றுகொண்டும், கண்ணிழந்தவர்போலவும், பொருளிழந்தவர்போலவும், மக்களைப் பறிகொடுத்தவர்போலவும், இடிவிழுந்தவர் போலவும், முதங்குலைந்து மனங்கலைந்து நொந்தவர்களாகி, அரசற்குரிய வாஹனங்களின்றி, அம்பாபோலத் திருவடித் தாமரை யிணைகள் சிவந்து நோவநடந்தும், இளவரசுக்குரிய முச்சக நிழற்று முழுமதித் திருக்குடையின்றி, வெயிலின் வெப்பத்தால் திருமேனிவாடியும், யாவர்க்கும் அன்பரு மின்பருமாகிய ஸ்ரீராமசந்திரர் பெரியபிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் எழுந்தருளுவதைக்கண்டு, சோகஸாகரத்தில் மூழ்கினவர்களாகிப் பலவாறாகப் புலம்பலுற்றனர்கள். எம்பெருமான் வீதியில் எழுந்தருளுகையில், இதுவரையில், நால்வகைப்படைகளும் அலைகடல் பொங்குவது போலச் செல்லுமே, இப்பொழுது அவர் சீதாதேவியுடன் செல்லுகையில், இளையாழ்வானொருவரோ பின் செல்லுகின்றனரோ, இவர் நற்செல்வத்தின் நிலைமையறிந்தவரும், கேட்போர்க்குக் கேட்டவாறு கொடுத்தருளு மியல்பினரும், தருமநுட்ப மறிந்தவரு மாதலால், தந்தையைப் பொய்யராக்கக் கூடாதென்னும் திருவுள்ளத்தாலன்றோ ? பிறர்செயற்கரிய வனவாஸம் செல்லத்துணிந்தனர். அந்தோ ! யாவளொருத்தியை இதுவரையில் ஆகாயத்திலுஞ் செல்லும் வல்லமையுள்ள பூதபிசாசாதிகளும், கண்ணுற வல்லமையற்றன வாயினவோ ? அந்தச் சீதாதேவியும், யாவருங் காணும்படி எழுந்தருளுகின்றனளே ? நற்சாந்த மப்புவதற்கே யுரிய இவள் திருமேனியை வெம்மையுங் குளிர்மையுமாயுள்ள மழைத்துளிகளும், மண்ணிலெழுந் தூளகளும்படிந்து, மலினமாகச்செய்யு மந்தோ ! இப்பொழுது மஹாராஜா

பேய் பிடித்துப் பித்தெழுந்து மதிமாறினா போலும், அவவாறிலராயின், மிகப பிரியமுள்ள நற்புதல்வனாக காட்டிலோட்ட விருப்புறுவார், மைந்தனொருவன் நற்குணமுடையானல்லனாயினும், அவனையும் பெற்றார் ஓட்டார்களே ? இந்த ஸ்ரீராமபிரானுடைய திருக்கலயாணகுணங்களில் ஈடுபட்டு இவவுலகமெல்லாம ஸ்ரீராமா ராமாவென்று ஏததிபபுகழந்து, ஸ்ரீராமமயமாகியிருக்கின்றதே ? இத்தன்மையனாகிய நற்செல்வத் திருமகனைச் சககரவர்த்தியார் ஏன் வனஞ்செல்ல விடுகின்றார்.

ఆనృశంస్యమనుక్రోశ శ్శ్రుతం శీలం దమశ్శమః
రాఘవం శోభయన్త్యేతే షడ్గుణాః పురుషోత్తమం॥

ஆந்ருசம்ஸயமனுகரோசச சருதமசீலந்தமசசமஃ

ராகவமசோபயந்தயேதே ஷட்குணாஃபுருஷோத்தமம

நல்லோரைக் கொல்லாமை, துன்பமடைந்தார்மேலருள்செயதளித்தல், பெரியோரிடத்துப பறபல நூலகளைக்கற்று ஆராயந்து தேறுதல், நற்செய்கை உடைமை, புலனகளை யடககித தன்வசமாககிககொள்கை, பிழைசெயதோரிடத்தும் சீறறங்கொளளாது பிழைபொறுத்தல, என்னு மிவவாறு குணங்களும, (யஸமாத்கூரமதிதோஹ மகூராதபிசோததமஃ, அதோஸ்மிலோகேவேதேசப ரதிதஃபுருஷோததமஃ) என்கிறபடி ஸாவாநதாயாமியாகவும், சகல ஜகத்காரணனாகவும, சகல ஜகதசரண்யனாகவும், சர்வவியாபியாகவு மிருக்கின்றமையால், புருஷோததமனென்று திருநாமத்தையும, (அஹந்தாசரதிர்பபூதவா) எனகிறபடி சககரவாததித் திருமகனாக அவதாரஞ்செய்து, ராகவதுரந்தரனென்னும விருதுபெறற ஸ்ரீராமபிரானை விளங்கச்செய்கினறனவன்றே ? அததன்மையனாகிய ஸ்ரீராமபிரானுககுப பீடைநேரநதமையால், அவனையே தஞசமாகவுடைய நாமெல்லோரும, முதுவேனிறபருவத்தில நீர வறறுகையில், அநநீரிலுறையுஞ சநதுககளபோல மிகவும் பீடைசெயயபபடுகின்றே மல்லோமோ ? இந்த ஜகததுககெல்லா மிவரோ நாயகராதலால, இவாககுத துனபம நேர்நதமையால், உலகமெல்லாந் துன்புற்றன. ஒரு மரததின் வேரை யறுதது விடின, அம்மரம் பூ கனி காய்களுடன செழிதது வளருமோ ? தரும தேவதை யாகிய ஸ்ரீராமசநதிரரே இவவுலக மனைத்துக்கும், வேராகின்றனரன்றே ? மற்றுள்ள உயிரகளெல்லாம், அவவோககுப பூ கனி காய் இலை கிளைகளாகின்றாகளே, ஆதலினா நாமெல்லோரும, இளையபெருமாள போலப் புறப்பட்டு, புத்திர மித்திர களத்திராதியாகளுடன், ஸ்ரீராமபிரானைெழுந்தருளும் அரணியத்துக்குடன் சென்று மகிழவோம், பூநதோட்டங்களாலும, நிலங்களாலும், மசசுமாளிகைகளாலும பயன்யாது? அவைகளைவிட்டு, ஸ்ரீராமபிரானுடன்சென்று,

இவர் இன்பமுறின் இன்பத்தையும், துன்பமுறின் துன்பத்தையும், அடைந்து வாழ்வோம், நம்மால் விடப்பட்டும், புதைபெலெடுக்கப்பட்டும், அங்கணங்கள் முறிக்கப்பட்டும், பறிக்கப்பட்ட தனதானிய பசு முதலியன வாகியும், எடுத்துக்கொள்ளப்பட்ட சிறந்த வஸ்துக்களையுடையனவாகியும், புழுதிகள் படிந்தும், கிருஹதேவதைகளால் விடப்பட்டும், எல்லா விடங்களும், எலிகளால் துவாரஞ் செய்யப்பட்டும், நீர் தெளியாமலும், அகிற்புகை கமழ்வியாமலும், துகள்போக விளக்காமலும், பலி யாகம் ஜப ஹோம மந்திரங்களின்றியும், உடைந்த பாஜனங்களை யுடையனவாயும், "நெடுங்காலத்தா லிடிந்து முள்ள நம்மனைகளைக் கைகேயி யடைந்து, மகிழவுறக் கடவள். நாம் செல்லுங் காட்டிலுள்ள பாம்புகள் பிலங்களையும், சிங்கங்கள் தாழ்வரைகளையும், யானைகள் காடுகளையும், விட்டோடக் கடவன. இந்நகரே காடாகக்கடவது. கிடே நகராகக்கடவது. வனத்திலுள்ள ஜந்துக்கள் யாவும் நம்மால் விடப்பட்ட இந்தத் தேசத்தையேயடையக்கடவன. புலி கரடி நாய் நரி மான பாம்பு முதலிய ஜந்துக்கள் நிறைந்து, புல்லெழுந்து பாழடைந்த தேசத்தைக் கைகேயி பிள்ளையுடனும், பந்துஜனங்களுடனுங் கூடிப்பெற்று மகிழ்க. நாமெல்லோரும், ஸ்ரீராமபிரானுடன் அரண்யத்தில்வாழ்ந்து மகிழ்வோம்; என்றிவ்வண்ணம் பலவாறாகப் புலம்பினர்கள். இவ்வாறுரைக்கின்ற ஜனங்களின் வாக்கியங்களைச் சக்கரவர்த்தித் திருமகன் திருச்செவி சாத்தியும், சிறிதேனும் திருவுள்ளத்தில் விகாரங் கொள்ளாமல், மத்தமா தங்கம் போன்ற விக்கிரம முடையவராய, கைலைமலையின் சிகரம்போல வெளுத்துயர்ந்த தந் திருத்தந்தையின் திருமாளிகையை நோக்கி எழுந்தருளித் தம்பியைக்கொண்டு வினயமுடையராய நிற்கின்ற படாகைகளையுடைய அத்திருமாளிகையி னுட்புகுந்து, மிகவுந் துன்பமுஞ் சிந்தையுங்கொண்டு வருந்துகின்ற சுமந்திரனைக் கடாக்ஷித்துத் தாம் வனவாஸ மெழுந்தருளுவதற்காகவே இவர் துன்பமுற்றிருக்கின்றாரென்று திருவுளத்தறிந்தும், மகிழ்ச்சிகொண்டவர்போலப் புன்சிரிப்புக்கொண்டவராகி, மஹாராஜருடைய நியமனத்தைத் தடையின்றி விதியின்படி செய்யவேண்டுமென்று நிச்சயங்கொண்டவராய தந்தையிடத்தில் விடைபெற்றுக்கொண் டெழுந்தருளவேண்டுமென்று திருவுளம்பற்றிச் சுமந்திரனை நோக்கி, வாரீர் சுமந்திரரே! நீர் சக்கரவர்த்தியாரிடஞ் சென்று, நாமிங்கு வந்திருப்பதைத் தெரிவித்து, சன்னிதியில் வரும்படி அனுமதிகேட்டு வரக்கடவீரென்று கட்டளையிட்டனுப்பி யருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்து மூன்றாவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்துநான்காவதுசருக்கம்.

### சக்கரவர்த்தியார் திருமகனுக்கு விடை கொடுத்தது.

அநந்தரம் புண்டரீக பலாச விசாலாக்ஷரும், நீலமேகசியாமள திவ்வியத் திருமேனியாரும், ஸ்ரீதாமோதரரும், புருஷோத்தமருமாகிய ஸ்ரீராமசந்திரர், நாம் வந்த செய்தியை மஹாராஜருக்கு அறிவியுமென்று கட்டளையிடுதலும், ஸுமந்திரர் அவ்வாஜ்ஞையைச் சிரத்தில் கொண்டு மிகச் சந்தாப முடையவராய் உள்ளேசென்று, கட்டுண்ட மஹாநாகம்போலப் பெருமூச்சிட்டும், இராகு கேதுக்களால் பிடிக்கப்பட்ட சூரியன்போல ஒளிகுலைந்தும், நீறு பூத்த நெருப்புப்போல உள்ளே வெப்பங்கொண்டும், நீர் வற்றிய தடாகம்போல ஸாரம் வற்றியும், ஐம்புலன்களின் திறமை குலைந்தும் வருந்துகின்ற மஹாராஜரைக் கண்டு, இருமடங் கான சோக முடையராகி யருகிற்சென்று, மஹாராஜரை நோக்கிக் கைகுவித்து ஜய விஜயீபவ என்று வாழ்த்தி, கேட்டருளீர் மஹாப்பிரபு? தேவருடைய திருமகனார் பிராஹ்மணர்களுக்கும், பரிஜனங்களுக்கும், பொருளனைத்தையும் கொடை செய்துவிட்டு, தேவரைக் காணும்படி அரண்மனை வாயிலில் வந்து நிற்கின்றார். சூரியன் கிரணங்கள் சூழ்ந் தொளிர்வது போல ராஜகணங்கள் நிறைந் தொளிர்பவரும், ஸத்தியவாதியும், தாமமாத்துமாவும், சமுத்திரம்போலக் கம்பீரமுடையவரும், ஆகாசம்போலக் களங்கமுறாதவரும், இவ்வுலகங்களுக் கெல்லாம் அரசருமல்லவோ? தேவர் ஆதலின், ஸ்ரீராமசந்திரர் தேவர் நியமனப்படி வனவாஸஞ் செல்லத் துணிவுடையராகித் தம் பந்து ஜனங்களிடத்தில் விடைபெற்றுத் தேவரிடத்திலும் நியமனம் பெற்றுக்கொண்டுபோக வந்து நிற்கின்றார்; ஆதலால், அவர் தேவரைக்கண்டு களிக்கக்கடவர். தேவருக்கும் நன்மை யுண்டாகக் கடவது. தேவரும் அத்திருமகனைக் கடாக்ஷித் தருளக்கடவீரென்று, பயத்தால் தடுமாறியும், மெதுவாயும் விண்ணப்பஞ்செய்தனர். மஹாராஜர் அதைக் கேட்டுச் சுமந்திரரே! நான் என் பத்தினிமார் அனைவர்களுடனும் கூடித் திருமைந்தனைக்காண விரும்புகின்றேன்; ஆதலின், விரைவாக என் மனைவியரெல்லோரையும் இங்கழைத்து வாருமென்று கட்டளையிடுதலும், சுமந்திரர் அவ்வண்ணமேசென்று, தேவிகள் யாவரையும் அழைத்து வருகையில், மஹாராஜா கட்டளையின்படி முன்னூற்றைம்பது தேவிகளும் கோஸலை, ஸுமித்திரைகளைச் சூழ்ந்துகொண்டு, மஹாராஜருடைய சமீபத்தில் வந்து சேர்ந்தனர்கள். சக்கரவர்த்தியும் உடனே சுமந்திரரை நோக்கி, ஸூதரே! நீ சென்று, ஸ்ரீராமபிரானை யழைத்துக்கொண்டு வாருமென்று ஆஜ்ஞைசெய்தவுடன் தக்ஷணமே சுமந்திரர் ஸ்ரீராமசந்திரரைச் சீதா லக்ஷ்மணர்களுடன் அழைத்துக்

கொண்டு, மஹாராஜர்க்கெதிராக வருகையில, சககரவாததியா ஸ்ரீராம
பிரா னெழுந்தருளுவதைக் கணடு, விரைவாகச சிஙகாஸனம் விட்டெழு
ந்து எதிர்கொணடோடிச சோகவேகததால ஸ்ரீராமபிரானைத தழுவாமலே
தரையில தவறி வீழ்நது மூரசசை யடைந்தனா. உடனே ஸ்ரீராமபிரான
இளையபெருமாளுடனும, பிராட்டியாருடனும் பறறி எடுத்தருளினா.
அபபொழுது ஆ! ஆ! ராமா ராமா வெனனுந தொனி ஆபரண தொனி
யுடன் கலநதெழுந் தொலிததது. ஸ்ரீராம லக்ஷ்மணாக ளிருவரும், மஹா
ராஜரைக கட்டி யணைததுச் சீதாதேவியுடன கட்டிலினமீ தெழுநதருளச
செயதனர்கள். பினபு முகூாததகாலஞ் சென்று மூாசசை தெளிந்து,
சோககடலில் மூழகியிருக்கினற தந்தையை நோககிக கைகூபபி வநத
னஞ்செய்து, எந்தநதையரே! அடியேன வனவாஸம போகுமபொருட்டுத
தேவரை விடைகேடகின்றேன, அடியேனைக குளிரக கடாக்ஷிதது வாழ
ததி விடைகொடுத் தனுபபக்கடவீா. எங்களெலலோர்ககுந் தேவரே
இறையவரலலீரோ? இளையோனும, ஸீதையும், என்னுடன வருவே
னென்று வீம்புசெய்கினறனாகள. இவ்விருவாகளுககும் என்னுடன
வருமபொருட்டு விடைகொடுத்தருளககடவீா அநேககாரணஙகளையிட்டு
வெகுவாக நான் தடுத்துரைசெயதும இவாகளோ கேட்டிலர்; ஆதலின,
துனபததை விட்டு விட்டு மகிழவுகொணடு, எங்களை யனுபபி யருளக்
கடவீா. எலலா வுயிர்களும், பிரஹமாவின கட்டளையை எதிா்நோககி
யிருபபதுபோல ஸீதாலக்ஷ்மணாகள அடியேன மூவரும தேவருடைய
கட்டளையே எதிர்நோககிககொண டிருககினறோம, என்று இனிமையாக
விணணபபஞ்செயதனா. இவ்வணணந திருமகனருளிசசெயத வாசகி
யத்தைககேட்டு, மஹாராஜா ஸ்ரீராமபிரானை நோககி, அடா எனனருமைத
திருமைந்தா! நான கேகயினுடைய வரதானததால மோகங்கொண்டிருக
கினறமையால், நீ என்னை நிராகரிததுவிட்டு, சுயமாகவே அபிஷேகங
கொணடு அரசனாகி, இபபூமியையாணடு வாழவுறககடவையென்று உரை
செய்தனா. ஸ்ரீராமபிரான அவவுரையைக கேட்டுக கைகூபபிககொணடு
மீணடுந தந்தையை நோககி, மஹாராஜரே! தேவரே அநேகமாயிரம
வருஷஙகள இபபூமிககு இறையாக வீறறிருககககடவீா அடியேன ஆர
ணியததில சுகமாக வாஸஞ்செய தினபுறுவேன்; எனபொருட்டுத தேவா
பொய்யராகககடவீ ரலலீா, பதினான்குவருஷம காட்டில விநோதமாக
வாஸஞ்செயது பிரதிஜ்ஞையை நிறைவேறறி, மீணடிஙகுவநது தேவர்
திருவடிகளைத தொழுது, மகிழவுறுவே னென்று அருளிசசெயதனர்.
இவ்வண்ணமாக ஸ்ரீராமபிரானுடைய அருளிச்செயலைககேட்டு, கைகேயி
யால அடிக்கடி நிர்ப்பந்தஞ் செய்யப்பட்டு மஹாராஜர் மிகச் சோகங்
கொண்டு புலம்பி சத்தியமென்னுங் கயிறறினால பிணைத்துக கட்டபபட்ட
வராகி, மிகவும் பிரியமுள்ள திருமகனை நோக்கி, அடா என் பெறலரிய
நறபுதலவா! மறுமையிலும், இம்மையிலும், நனமை பெறுவதன பொரு,

டும், மீண்டெய்துவதன் பொருட்டும், ஊக்கமுடையவனாகி, அச்சமின்றி நல்வழிபற்றி எழுந்தருளக்கடவை அடா என் திருமைந்தா! நீ ஸத்திய ஸ்வரூபியும், தருமசிந்தை யுடையவனு மாதலால், உன்னுடைய மனவுறுதியைத் திருப்ப யாராலும் முடியாது; ஆயினும், இன்றிரவுமாத்திரமாவது இங்கிருந்து, நாளைத்தினஞ் செல்லக்கடவை இந்த ஒருதினமாவது உன்னைக் கண்டு மகிழ்வுற்றுத் திரிவேன், ஆதலின், இன்றிரவுமாத்திரம் என்னையும், உன் தாயையுங் கண்டு, மகிழ்வுறுவிப்பாயாக, நாளைத்தினம் சகல போகங்களுடனுங்கூடி யினஞ்சேர்ந்து மகிழ்வுறுவாயாக, அடா என் திருமகனே! என் பொருட்டுப் பிரியமுள்ளன வெல்லாந் துறந்து, கோரமான கானகஞ்செல்ல முயல்வது யாவராலுஞ் செயற்கரியது, குல முறையைக் கெடுக்கின்ற இக்கொடிய கைகேயியால், வஞ்சனைசெய்யப் பட்ட என்னை நீ மெய்ம்மொழியனாகச் செய்து, கரையேற்றத் துணிவு கொண்டிருக்கின்றனை, நீ எனக்கு மூத்த திருமகனாதலால், நீ என்னைச் சத்தியவாதியாகச் செய்ய முயற்சிசெய்வதும் வியப்பன்றென்று, விடை கொடுத்து மகிழ்ந்து புகழ்ந்தனர் சக்கரவாத்தித் திருமகனாரும், சோகங் கொண்டிரைத்த தந்தையின் வாக்கியத்தைத் திருச்செவிசாத்தி, இளைய பெருமாளுடன் கூடித் தாமுஞ் சோகங்கொண்டவராகித் தந்தையை நோக்கி, என் திருத்தமப்பனாரே! இன்றைத்தினம் தேவரருளால், இஷ்ட போகங்களைப்பெறினும், இனி யடவியில் அவைகளை யார் கொடுப்பார்கள் ஆதலி னிப்பொழுதே இங்கிருந்து புறப்படுப் போக வேண்டுவதையே யான் மிகவும் விரும்புகின்றேன், தனதானியங்கள் நிறைந்து ஜனங்களுடன் கூடி விளங்குகின்ற இந்த ராஜ்ஜியத்தை யான் திருப்பிக்கொடுத்து விடுகிறேன், இதைத் தேவர் பரதன் பொருட்டுக் கொடுத்தருளக்கடவீர். தேவர் மனமகிழ்ந்து கைகேயிக்கு முன்பு வரமளித்திருக்கின்றமையால், அதைப் பரிபாலனஞ்செய்வதன் பொருட்டு, வனவாஸம்போக நிச்சயங் கொண்ட என் உறுதி ஒருக்காலும் மாறாது, ஆதலின், எல்லாவற்றையும் பரதனுக் களிப்பதனால், தேவருடைய வாக்கியம் உண்மையாகக்கடவது அடியேன், தேவருடைய நியமனத்தின்படி பதினான்கு வருஷம் வனசரர்களுடன் கூடி யரணியத்தில் வாழ்ந்து மகிழ்வேன், இவ்விஷயத்தில் தேவர் ஆலோசனைசெய்ய வேண்டுவதேயில்லை, இப்பூமியைப் பரதனுக் களித்தருளக்கடவீர்.

నహిమేకాంక్షితంరాజ్యం సుఖమాత్మనివాప్రియం
యథానిదేశంకర్తుంవైతవైవరఘునన్దన॥

நஹிமேகாங்க்ஷிதம்ராஜ்யம ஸுகமாத்மனிவாப்ரியம்
யதாநிதேசம்கர்த்தும்வை தவைவ ரகுநந்தன.

அடியேனுக்குத் தேவருடைய ஆஜ்ஞையை முறைப்படி செய்வதே பிரியமாகு மல்லது, இந்த இராஜ்ஜியமும அதனடியாக வந்த சிற்றின்பங் களும் பிரியங்களாகா; ஆதலின், தேவருடைய துன்பந் தொலையககடவது. இவ்வண்ணம் அழுது கண்ணீர்களால் நனைந்து வருந்தககடவீரல்லீர்; எல்லாநதிகளுக்கும பதியாகிய ஆழகடல கலக்கமுறுவதுண்டோ ? என திருததந்தையாரே ! அடியேன ராஜ்ஜியததையாயினும, இன்பங்களையாயி னும், ஜானகியையாயினும, இம்மையிலுண்டாகுங் காமங்களையாயினும, வானுலகத்தையாயினும, உயிர்வாழ்வையாயினும, ஒருபொழுதும் நன்கு மதியேன்; தேவரைச சத்தியவாதியாரகவும், பொய்யுரையாதவருமாகச செயவதொன்றையே நனகுமதிப்பேன, தேவர் திருமுனபாகவே இவ்வ ண்ணம சததியத்தின மீதும, நலவினையின மீதும, ஸததியஞ்செயது கொடுப்பேன; ஆதலின, கணப்பொழுதாயினு மினிமே லிங்கிருக்க விருப்பமுறேன, தேவர் துனபததை யடக்கிககொளளக கடவீர். என உறுதிககு மாறுதலிலலை; அன்றியும, கைகேயியாராலும், அடியேன், வன வாஸஞ் செலலுமபடி யாஜ்ஞைசெயயப்பட்டேன; போவேனென்று யானும பிரதிஜ்ஞை செயது கொடுத்தேன; ஆதலின, என்னுடைய பிர திஜ்ஞையைப பரிபாலனஞ் செயயும பொருட்டும, இப்பொழுதே வனஞ் செலவேன, தேவர் சிறிதுந் துனபுறலறக; யாங்கள் அரணியத்தில் விநோதமாய வாஸஞ்செய்து மகிழவோ மலலது, துனபுறோம; பற்பல மிருகங்களும, பக்ஷிகளும, நிறைநத வனததில விநோத முணடாவதற கும ஐயமுண்டோ ?

ಪಿತಾಹಿ ದೈವತಂತಾತ ದೇವತಾನಾಮಪಿಸ್ಮೃತಂ
ತಸ್ಮಾದ್ದೈವತಮಿತ್ಯೇವ ಕರಿಷ್ಯಾಮಿಪಿತುರ್ವಚಃ

*பிதாஹிதைவதந்தாத தேவதாநாமபிஸ்ம்ருதம*

*தஸ்மாததைவதமித்யேவ கரிஷ்யாமிபிதுர்வசஃ.*

எல்லாத்தெயவங்களையும்விடத் தந்தையாரே முதன்மையான தெய்வ மென்று ஓதப்படுகின்றாரே ? ஆதலின, தெயவமென்கிற எண்ணத்தாலே தேவருடைய வாக்கியத்தை யடியேன பரிபாலனஞ் செய்வேன்; பதினா ன்கு வருஷங்கள் சென்றபின் மீண்டுவந்த அடியேனைத் தேவர் கடாக்ஷித தருளப்போகின்றீர்; ஆதலின் பயனற்ற இந்த சந்தாபததை விடக்கடவீர். கண்ணீர் பெருக்கி அழுகின்ற இங்குள்ள யாவரையுந் தேறறவல்ல தேவரே இவ்வண்ணம் ஏன் பிகாரங்கொண்டு வருத்தமுறுகினறீர்; இந்தத் திருநகரியும், நாடும் கூடிய இப்பார் முழுதும், என்னா லளிக்கப் பட்டது; இதை பரதனுக்குக் கொடுத்தருளக்கடவீர். அடியேன், தேவ ருடைய நியமனத்தை நியமத்துடன் செய்வதன் பொருட்டு வனவாஸஞ்

செல்வேன்; என்று விளிக்கப்பட்ட, காடு மலை யாறு கடலடங்கலுமுள்ள இப்பூமியைப் பரதன் பரிபாலனஞ் செய்யக்கடவன். தேவருடைய வரங்களிரண்டும் யதார்த்தங்களாகக் கடவன. அடியேனுக்குத் தேவருடைய நியமனத்தைப் பரிபாலனஞ்செய்யும் விஷயத்திலுள்ள மகிழ்வு ராஜ்ஜிய போகங்களில், சிறிதும், தோற்றவில்லை, ஆதலின், தேவா சோகத்தை விட்டு, சந்தோஷமடையக் கடவீர் தேவரைப் பொய்யராக்கி அடியேன் ராஜ்ஜியத்தையும், போகங்களையும், சீதையையும், உயிர்வாழ்வையும், ஒருபொழுதும் விரும்பேன்; ஆதலின், தேவருடைய விரதம், சத்தியமாகித் தலைக்கட்டக்கடவது. அடியேன் வனஞ் சேர்ந்து, பல மூலங்களைப் புசித்து, ஆறு மலை முதலியவற்றைக் கண்ணுற்றும், பற்பல புதுமைகளைக் கண்டும், சுகத்தையே யடைவேன், தேவர் இனப்புறக் கடவீரென்று விண்ணப்பஞ்செய்தருளினர் மஹாராஜா இவ்வண்ண மருளிச்செய்த தம் திருமகனை யாலிங்கனஞ் செய்து கொண்டு, சோகம் பொறுக்காமல் மூர்ச்சை யடைகையில், கைகேயி நீங்கலாக, மற்றுள்ள யாவருங் கூவியழச் சுமந்திரரும், மூர்ச்சைகொண்டு விழ, அங்குள்ள யாவரும் ஐயோ ஐயோ வென்று, கூவியழுது புலம்பினர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்துநான்காவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தைந்தாவது சருக்கம்

சுமந்திரர் கைகேயியைப் பழித்துரைசெய்தது.

அநந்தரம் மூர்ச்சை தெளிந்தெழுந்த சுமந்திரர் கைகேயிமீதுற்ற கோபத்தினால், தலையை யசைத்து அடிக்கடி பெருமூச்சிட்டுக் கைமேல் கையை வைத்து முறுக்கிப் பற்களைக் கடகடவென்று நெரித்துக் கண்களிரண்டுஞ் சிவன்று, முன்புற்றவண்ணம் மாறிக் கடுந்துன்பமும், கோவமுங்கொண்டு, மஹாராஜருடைய திருவுளத்தையும் அறிந்து, கைகேயியின் மனம் நடுக்கமுறுமாறு கொடிய நிகரற்ற வச்சிராயுதங்களைப்போலவும், கூர்மையான விஷமூட்டிய சரங்கள் போலவுமுள்ள கொடிய வாக்கியங்களால், கைகேயியின் மர்மங்களெல்லாவற்றையும், பிளப்பவர்போலக் கைகேயியை நோக்கி, அடி பாவி கைகேயி! இவ்வுலக மனைத்துக்கும் பர்த்தாவாகியும், உனக்குப் பதியுமாகிய இந்த மஹாராஜனையே நீ விட்டுவிட்டமையால், உனக்கிவ்வுலகினில் செய்யத்தகாத தீச்செய்கையொன்றுமில்லை; நீ இவ்வண்ணஞ் செய்வதினால், பதியின் கொலையும், கடையில்

இக்குலத்தின் கொலையும், உன்னைச் சேருமென்று நம்புகின்றேன்; இல்லையாகில், மகேந்திரனைப்போல வெல்லவொண்ணாதவரும், வரையரையனைப் போல அசைக்க வொண்ணாதவரும், பெருங்கடலைப்போலக் கலக்க வொண்ணாதவருமாகிய மஹாராஜரை இவ்வண்ணந் தாபமுறச் செய்வாயோ? நீ கோரியவற்றை யெல்லாங் கொடுப்பவரும், பர்த்தாவுமாகிய இவரை நீ யவமதி செய்யற்க; பெண்களுக்குப் பாத்தாவின் இஷ்டப்படி நடப்பதே யன்றோ? பிள்ளையின் இஷ்டப்படி நடப்பதைக் காட்டிலும் சிறந்தது, மஹாராஜர் தபோவனஞ் சென்றபின்னர், வயதின் முறைப்படி ராஜகுமாரர்கள் ராஜ்யத்தைப் பெறுவதென்னும் மிகுகுல முறைமையை நீ கெடுக்கக் கருதுகின்றாயே? உன்னுடைய எண்ணத்தின்படி பரதனே ராஜனாகி யரசாட்சி செய்யக்கடவன். நாங்களெல்லோரும், ஸ்ரீராமபிரானெழுந்தருளும் வனத்திற்கே செல்லுகின்றோம், உன்னுடைய தேசத்தில் பிராஹ்மணர்களில் ஒருவராகிலும் வாஸஞ்செய்யக் கடவர்களல்லர், அத்தன்மையதாகிய செயலையே நீசெய்ய நினைக்கின்றனையே, உன்னுடைய இத்தன்மையதாகிய நடக்கையைக் கண்டு, மிகவும் ஆச்சரிய முறுகின்றேன், உன் சரிதையைக்கண்டு, இந்த மேதினியும் பிளந்திலதே; வசிஷ்டர் முதலிய பிரஹ்மரிஷிகளால் அருளிச்செய்யப்பட்டு, உன்னைக் கண்டு, சிச்சிச்சீ என்னும் சாபவாக்கியங்களுன்னை எரித்திலவே? மதுரமான கனியைப்பழுக்கும் மாமரத்தைக் கோடாலியால் வெட்டிச்சாய்த்துவிட்டு, வேப்பமரத்தைப் பாலவார்த்து வளர்த்தாலும், அதில் மதுரரஸமுண்டாகுமோ? உன்னுடைய தன்மையை, உன் மாதாவின் தன்மையைப் போன்றதென்றே யான் நம்புகிறேன், வேம்பினின்றுந் தேன் ஒழுகுமோ? தாயின் குணமே மகளுக்கும் வருமென்றும், "தாயைப் பார்த்து மகளைக் கொள்ளென்று" பழமொழி யுள்ளனவன்றோ? உன் தாயினுடைய தீச்செயலை நாம் நன்றாகக் கேட்டிருக்கின்றோம், உன் தந்தைக்கு ஒரு மஹாயோகி எல்லாவுயிர்களின் பாஷைகளை யறியும்படி வரமளித்திருந்தனர் ஆதலால், எறும்பு முதலிய உயிர்களின் வாக்கியங்களையும், அவர் அறிந்துகொண்டிருந்தனர். ஒருநாள் படுக்கையறையில் படுத்திருக்கையில், அங்கோர் எறும்பின் வாக்கியத்தின் பொருளை யுணர்ந்து, ஹா? ஹா? வென்று பலவாறாக நகைத்தனர்.

அப்பொழுது உன் தாய், உன் தந்தையை நோக்கித் தன்னைக் குறித்தே நகைத்தனரென் றெண்ணி, கடுஞ்சினங்கொண்டு, நீர் சிரித்ததற்குக் காரணம் யாதென வினவினள். உன் தந்தை அதுகேட்டு, உன் தாயை நோக்கி, அடி என் பிராணநாயகி! நான் உன்னைப்பற்றி நகைத்திலேன்; நகைத்த காரணத்தை விளம்பினால் க்ஷணமே யான் மரணமடைவேனென்பதில் ஐயமேயில்லை; ஆதலின், நீ இவ்விஷயத்தில் சீற்றங்கொள்ளற்க வென்று வேண்டிக் கொண்டனர். உன் தாய்

அம்மொழி கேட்டும் மாதான மடையாமல், மீளவும் உன் தந்தையை நோக்கி, மஹாராஜரே! நீர் என்னைப்பற்றியே நகைத்தீர். அதுபற்றி நீர் உண்மைசெய்யீர், நீர் பிழைக்கினும் பிழைக்க, இறக்கினு மிறக்க, நீர் நகை செய்த காரணத்தைச் சொல்லியே தீரவேண்டு மென்று கடுமையாகக் கூறினள். உன் தந்தை யவ்வா மொழியைக் கேட்டு மூனைசெய்யாமல், இச்செய்தியை வரமளித்தவருடன் சொல்லினர். அம்முனிவரு மிதைச் செவியுற்று, உன் தந்தையை நோக்கி, கேளிர் கேகயமஹாராஜரே! நீர் மனையாளென்று அவள்மேல் அன்பினு லிதை யுரைத்து மரிக்கக்கடவீரல்லீர்; அவளோ இறக்கினு மிறக்க, வருந்தினும் வருந்துக, நீர் அவளை மதிக்கவேண்டாமென் றருளிச்செய்தனர். உன் தந்தை அதுகேட்டு, உன் தாயை நிராகரித்து விட்டுக் குபேரன்போல விஹாரஞ் செய்துகொண்டிருந்தனரன்றோ? அடி தீயொழுக்க முடையாளே! நீயும் உன் தாயைப் போல இவ்வண்ணந் தீயளாகிப் பாத்தாவைக் கொலைசெய்யவே நினைக்கின்றனை,—

సత్యశ్చాద్యప్రవాదోయం లౌకికః ప్రతిభాతిమా
పితౄన్ సమనుజాయన్తే నరామాతరమఙ్గనాః॥

ஸத்யச்சாத்யப்ரவாதோயம் லௌகிகஃப்ரதிபாதிமா

பித்ரூன்ஸமனுஜாயந்தே நராமாதரமங்கநாஃ.

பிள்ளைகள் தந்தையைப் போலவும், பெண்கள் தாயைப் போலவும் பிறக்கின்றனரென்ன இவ்வுலகில் வழங்கும் பழமொழி என்கருணைமையெனவே இப்பொழுது தோற்றுகின்றது, ஆகிலும், நீயும் தாயைப் போலக் கொடியளெனப் பெயர் பெறுமல், இந்த எண்ணத்தை விட்டுவிடு, இம்மஹாராஜா அருளிச்செய்வதைக்கேட்டுனா, பாத்தாவின் திருவுளத்தின்படி நடந்து எங்களெல்லோர்க்குந் தஞ்சமாயிரு, நீ பாவிகளின் துர்ப்போதனையைக் கேட்டு, தேவராஜன்போல இவ்வுலகமனைத்துக்கு முன்கூம் பாத்தாவாகிய இம்மஹாராஜரை, மூத்தோனையொழித்து இளையோனுக்குப் பட்ட மளித்தாரென்று யாவரும் பழிக்கும்படி செய்யற்க; உன்பொருட்டளித்த வரத்தையும், மஹாராஜா பொய்யாகச் செய்யார், இவர் மண்டலாதிபதி யாதலின், உனக்கிந்த ராஜ்ஜியத்துக்குத் தக்க விலையை யாயினும், மற்றுள்ள தேசங்களை யாயினும், கொடுத்தருள் செய்வார்; ஸ்ரீராமபிரான் மூத்தோனும், கொடையாளனும், வல்லமையுடையோனும், தருமங்களைப் பாதுகாப்போனும், எல்லா வுயிர்களையும் காக்கவல்லவனும், சிறந்த தோள்வலியுள்ளவனு மாதலால், இத்திருவயோத்திக்கு இப்புருஷோத்தமனே அபிஷேகங்கொண்டரசனாகக்கடவன். அம்மா கைகேயி! ஸ்ரீராமபிரான் தந்தையைவிட்டு, வனத்துக்கெழுந்தருளி

விடுவானாகில், உனக்கு அழிவில்லா இகழ்வு இவ்வுலகமெங்கும் பரவு மன்றோ? ஆதலின், அரசுக்குரிய அந்த ஸ்ரீராமபிரானே இந்த ராஜ்ஜியத்தைப் பாதுகாத்து வரக்கடவன். இதுவிஷயத்தில், நீ பொறாமையையும், துன்பத்தையும், அடையவேண்டாம்; ஸ்ரீராமபிரானை விட்டு, வேறொருவனும், இவ்வயோத்தியை யாள வல்லவனல்லன; இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரன் இளவரசாகி யிருக்கின், மஹாராஜா முன்னோர் நடந்த முறையை நினைந்து தவமியற்றமனமகிழ்ந்து வனம்புகுவாரென்றனர். என்றிவ்வண்ணம் நல்வார்த்தைகளாலும், வன்மொழிகளாலும், சக்கரவர்த்தி முன்பாக்ச சுமந்திரர் கைகுவித்துக்கொண்டு, கைகேயியைப் பலவாறாகக் கலக்கிப் பயமுறுத்தியும், கைகேயி சிறிதேனும் மனக்கலக்க முற்றிலள், சிறிதுந் துன்பமுமுற்றிலள், அவளது முகத்திலும் சிறிதும் நாணத்தாலாயினும், அச்சத்தாலாயினும், விகாரமுந் தோற்றவில்லை.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தாறாவது சருக்கம்.

தசரதமஹாராஜா கைகேயியை இகழ்ந்து பயமுறுத்தியது.

இவ்வண்ணம் சுமந்திரர் சொல்லியவார்த்தையைக் கேட்டும் மனமிரங்காமல், கைகேயி யொரேபிடியா யிருப்பதைக்கண்டு, தசரதமஹாராஜர் சத்தியத்தால் கட்டுண்டமையால், அவளை நிராகரிக்க வகையின்றிச் சுமந்திரரை நோக்கிக் கண்ணீர் ததும்பப் பெருமூச்சுவிட்டுரைக்கலுற்றனர். ஓ சுமந்திரரே! மிகப் பொருள்களுடனும், இரத்தினங்களுடனும், மற்றுமுள்ள சிறந்த பண்டங்களுடனுங் கூடி, நால்வகைப் படைகளும், இப்பொழுதே ஸ்ரீராமபிரானுடன் செல்லும்படி சித்தஞ்செய்யக்கடவீர். மிகுதியும் அழகுடைய பொதுமகளிர்களும், மிகச் செல்வமுடைய வர்த்தகர்களும், நந்திருமகனுடைய படைகளை மகிழ்விக்கும்படி செல்லக்கடவர்கள். நந்திருமைந்தனை யடுத்துப் பிழைப்பவர்களுக்கும், இவன் கண்டுகக்குந் தோளாண்மையுள்ள சூரர்களுக்கும், மிகப் பொருளளித்து உடன் செல்லும்படி திட்டஞ்செய்யக் கடவீர். சிறந்த படைக் கருவிகளையும், திறமையுள்ள நகரத்தார்களையும், வண்டி முதலிய வாஹனங்களையும், கானகத்தில் திரியவல்ல வேடர்களையும், உடனனுப்பக் கடவீர். ஸ்ரீரகுகுலதிலகன் இவ்வண்ணம் கானகஞ் சென்றும், அங்குள்ள மிருகங்களையும், யானைகளையும், சிங்கம், புலி, கரடிகளையும், மற்றுமுள்ள ஜந்துக்களையும், வேட்டையாடி யடித்தும்,

அங்குள்ள தேன்களை நுகர்ந்தும், பற்பல நதிகளைக் கண்ணுற்றும், மகிழ்வுறுவானல்லது, நம்மை நினைந்து வருந்தான். அன்றியும், இப்பொழுது நமயிடத்திலுள்ள தானிய வகைகளும், பொன் வெள்ளி முதலிய நாணயங்களும், ஸ்ரீராமபிரானுடன் செல்லக்கடவன. என அருமைச்செல்வனாம் தனி வனத்திலும், யஜ்ஞயாகங்கள் செய்துகொண்டும், பூரி தக்ஷிணை கொடுத்துக் கொண்டும், பற்பல ரிஷிகளைச் சேவித்துக் கொண்டும், சுகமாக வாஸஞ் செய்வான்; பரதனும், இவ்வயோத்திமாநகருக் கிறைவனாகிப் பரிபாலனஞ் செய்யக்கடவன். ஆதலின், ஸ்ரீராமபிரானைப் பிரயாணஞ்செய்ய தனுப்பி விடக் கடவீரென்றனர். • என்றிவ்வண்ணம், சக்கரவர்த்தியார் உரைசெய்த வளவில், கைகேயி இதுகேட்டுப் • பயமுற்று முகம்வாடித் தொனியொடுங்கி நடுக்குற்றுத் துன்பமடைந்து, மகாராஜருக்கெதிராக நின்று, அவரைநோக்கி மஹாராஜரே! ஓ ஓ? இது நல்ல அழகு, ஸாரத்தைப் பானஞ் செய்து, மிகுந்த ஸாரத்தின் தேட்டைபோலச் சிறந்த பண்டங்களையும், படைகளையும், பொருள்களையும், ஜனங்களையும், ராமன் பின் செல்லவிட்டு, ஸாரமின்றி யுறங்கிக் கிடக்கும் இந்த ராஜ்ஜியத்தைப் பரதன் மாத்திரம் விருப்புற்றுப் பெறுவனோ? ஒருக்காலும் பெறானென்று சிறிதும் நாண மின்றியுரைசெய்கையில், சக்கரவர்த்தியார் அக்கைகேயியைநோக்கி, அடிகொடி யாளே! தீச்செயலினளே! உன் சொல்லின்படியே ராமனைக் காட்டி லோட்டவும், பரதனுக்குப் பட்டங் கட்டவும், முயற்சிசெய்கின்ற என்னை மறுபடி யும் மேன்மேலும் ஏன் எதிர்த்து வருத்துகின்றனை; நீ ஸ்ரீராமன் வன வாஸம் போகவேண்டுமென்று வரங்கேட்டனை யன்றி, அவனுடன் ஒரு வரும் போகக்கூடாதென்று வரங்கேட்க வில்லையே, ஆதலின், ஸ்ரீராமபிரா னுடன் சேனைகள் போகக்கூடாதென்று ஏனோ தடுக்கின்றனையென்று மிக்க சினமுற்றுரைத்தனர். கேகயியும் அதுகேட் டிருமடங்கு கோபங்கொண்டு, பர்த்தாவை நோக்கிக் கேளீர் மஹாராஜரே! உங்களுடைய குலத்தில் சிறந் தவராகிய சகரசக்கரவர்த்தியார் தமக்கு மூத்த குமாரனாகிய அசமஞ்சனைக் காட்டிலோட்டிவிட வில்லையா? அவ்வண்ணமே நீங்களும் ராமனைத் தனியே காட்டி லோட்டிவிடக் கடவீரகளென் றுரைத்தனள். அதைக்கேட்டு மஹா ராஜா சீச்சீ அரிதரிது, உன் ஜன்மத்தைச் சுடுகவென்று இகழ்ந்தனர். சுற்றுமுள்ள ஜனங்களும், இவள் வெட்கமுறும்படி சீசீ என்றிகழ்ந்தார்கள். புத்தியில்லாதவளாதலால், இவள் அதை யறிந்திலள். அப்பொழுது மிக மூப்புற்றவரும், மந்திரிகளுள் சிறந்தவரும், மஹாராஜருக்கு மிகவும் பிரிய மானவருமாகிய சித்தார்த்தரென்பவர், கைகேயியை நோக்கி, அடிமதிகெட்ட வளே! அசமஞ்சன் ஊரிலுள்ள பாலகர்களெல்லாரையும் எடுத்துச் சரயூநதி யில்போட்டு அவைகளமுழுகி நீர்குடித்திறப்பதைப்பார்த்து நகைத்து மகிழ்ந் துகொண் டிருந்தனன். அதனால் நகரத்தாரெல்லோரும் சினமும், சோக முங் கொண்டு, சகரமஹாராஜரைக் கண்டு, மஹாராஜரே! அஸமஞ்சனை யாவது வைத்துக்கொள்ளும், எங்களையாவது வைத்துக்கொள்ளும், அவ

னிருக்கும்பக்ஷத்தில நாங்கள ஓடிபபோகின்றோமென்றுமுறையிட்டார்கள. சகரசககரவர்த்தி அதுகேட்டு, அவர்களை நோக்கி, நீங்கள் இவவண்ணம் முறைப்பதறகுக் காரணம யாது ? உங்களுக கென்ன பயமுறறதென்று வினவ ? ஜனங்கள ராஜனை நோக்கி, எம்மரசே ! உமமுடைய மூததகுமாரன விளையாடிக்கொண்டிருககிற எங்கள குழந்தைகளையெடுததுச் சரயூநதியில போட்டு, மடமையால மகிழவுகொளளுகினறான. இளவரசு செய்வதை நாங்கள எப்படி தடைசெயவோம, இதற்குத் தேவரே தஞ்சமெனறனர்கள. சகரசக்கரவர்ததி அதுகேட்டு, ஜனஙகள நனமைக்காகப பிழைசெயதோரைத தணடிககவேண்டுமெனனும நீதியினபடித் தன பிளளையைப் பத்தினியுடனும, பரிஜனங்களுடனும, தேர்மீதேற்றி, உயிருளளவரையில, காட்டிலேதானே திரியுமபடியாக ஓட்டிவிட்டார. அதனால அவன காட்டில, காய் கிழங்குகளைத் தினறு திரிந்தனன. தருமசிநதையுள்ள, அரசன பிளளையையாயினும் பிழைசெய்யின காட்டிலோட்டிவிடுவான; அஸமஞ்சனைபபோல ஸ்ரீராமபிரான என்னகுற்றஞ் செயதான்? அதனை யாவரு மறியுமபடி சொலலி, அதன பிறகு ஸ்ரீராமபிரானைக காட்டிலோட்டி விடக்கடவை. ஸ்ரீராமபிரானிடத்தில சிறிதேனும துர்ககுணததை நாங்கள கணடிலோம ? சந்திரனிடததில களஙகமபோல ஸ்ரீராமசநதிரனிடததில ஒருபொழுதுங் களஙகமுணடாக மாட்டாது அமமா கைகேயி ! நீ சிறிதாயினும, ஸ்ரீராமபிரானிடததில தோஷததைதக கணணுறறனையாகில, அதனை யுரைசெய; இபபொழுதே ஸ்ரீராமபிரானை யோட்டிவிடுவோம; சிறிது குற்றமுமின்றி, நற்குண நற்செய்கை யுடையவனைத துரததுவது சிறந்த பாவம, அது செய்பவன இநதிரனாயினும, அவனும தன பட்ட மிழநது, நரகில வீழ்ந்துழலவன்; ஆதலின, அமமா கைகேயி ! ஸ்ரீராமபிரானுடைய அபிஷேகததைத தடைசெய்யறக; உனககுத தருமசிநதை யில்லாவிடினும, உலகததார்க்காயினும, அஞ்சவேணடாமா ? ஆதலின, இனி இநதக கெடுமதியை பறறற விட்டு, உலகததார் உன்னை இகழாமல காததுககொளளக கடவை யெனறிடிததுரைத்தனா மஹாராஜரும அதுகேட்டு மீளவும கைகேயியை நோக்கி, அடி பாவீ ! இநதச சிததாரததருடைய வார்த்தையையும, இதமெனக கொணடிலையா ? உனக்கும, எனககும, யாவாககும, இதமித்தனமைய தென்பதையும் அறிந்திலையோ? உன செயலைககண்டு, நலலோர்களெலலோரு மிகழ்ந்து நகைககுங்காலம நேர்ந்ததன்றோ ? அடி பாதகீ ! நானும் ராஜ்ஜியத்தையும, போகத்தையும, செல்வத்தையும விட்டு, என திருமகனுடன் வனமே செலவேன்; நீ பரதனுக கபிஷேகஞ்செய்வித்து இருவரும் உலகாண் டின்புறறு வாழுங்கோளெனறு கடுநதுன்பமும, சினமுங் கொண்டு, கடுங்க வுரைசெய்தனர்

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தாறாவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தேழாவது சருக்கம்.

ஸ்ரீசீதாபிராட்டியாரை மரவுரி யுடுக்கவேண்டாமென்று வஸிஷ்டர் கைகேயியை யிகழ்ந்தது.

சக்கரவர்த்தித் திருமகனாரும் சித்தார்த்தர் வாக்கியத்தைத் திருச்செவிசாத்தித் தம் திருத்தாதையை நோக்கித் "தந்தையரே! போகங்களைத் துறந்து, காடுசேர்ந்து, காய் கிழங்குகளை யுண்டு, மூவகைக்குற்றமும் அற்று ரிஷிபோல இருக்கப்போகின்ற எனக்குப் படைகளாலும், பொருள்களாலும், பரிஜனங்களாலும், பயனியாதுளது?—

యో హి దత్వా ద్విపశ్రేష్ఠం కక్ష్యాయాం కురుతే మనః
రజ్జుస్నేహేన కిం తస్య త్యజతః కుఞ్జరోత్తమం

யோஹிதத்வா த்விபச்ரேஷ்டம் கக்ஷ்யாயாம் குருதேமன:
ரஜ்ஜுஸ்நேஹேந கிம் தஸ்ய த்யஜத: குஞ்ஜரோத்தமம்

யாவனொருவன் யானையை விற்றுவிட்டு, அதைக்கட்டுங் கயிற்றைக் கொடுப்பதில்லை யென்று அதில் ஆவலுறுகின்றானோ? அவனுக்கு யானையைவிற்றபின், அக்கயிற்றினால் என்னபயன்? அதுபோலத் தவசியாகி வனம்போகின்ற எனக்கும் இத்தானைகளினால் என்னபயன்? ஆதலின், இவையெல்லாம் பரதனுக்கே உரியனவாகக்கடவன. யான் அனுமதி கொடுக்கின்றேன்; பதினான்குவருஷம் யான் வனவாசஞ்செய்யப் போகின்றமையால், மரவுரிகளையும், மண்வெட்டி, புட்டிற்கூடைகளையும் கொடுத்தருளக்கடவீர்கள். இவையே எனக்குவேண்டுங் கருவிகள்" என்றருளிச்செய்தனர். உடனே கைகேயி அந்தச் சபைநடுவில் சிறிதும் நாணமின்றித் தானே நேராக மரவுரிகளைக் கொணர்ந்து, ஸ்ரீராமபிரானை நோக்கி, "இதனை உடுத்துக்கொள்" என்று அளித்தனள். ஸ்ரீராமசந்திரரும் அவைகளை வாங்கிக்கொண்டு, பீதகவாடையை அவிழ்த்து விட்டு, ரிஷிகள்போல அம்மரவுரியையே யுடுத்துக்கொண்டனர். இளையபெருமாளும் அவ்விடத்திலே தானே தன் பீதாம்பரத்தையு மவிழ்த்துவிட்டு, மரவுரிதரித்து நின்றனர். அநந்தரம் ஸீதாபிராட்டியாரும் தாமுடுப்பதற்காகக் கைகேயியால் அளிக்கப்பட்ட மரவுரியைக்கண்டு, பெண்மான் தன்னைப்பிடிப்பதற்காகப் போட்ட வலையைக் கண்டாற்போல நடுக்கமுற்றுப் பழக்கமில்லாமையால், அதை யுடுக்கத் தெரியாமல் பிறர் நகைப்பார்களே யென்று வெட்கமுற்றும், பதிவிரதா தருமத்தை யறிந்தவராதலால், அதைத் தம் பர்த்தாவைப்போல தாமும் உடுத்துக்கொள்ளத் துணிந்து,

கீந்தருவராஜன்போன்ற தன் நாயகனை நோக்கி, என் பிராணநாதரே! வன த்தில வாஸஞ்செய்கிற ரிஷிகள் மரவுரியை எப்படி யுடுத்துக் கொள்ளு கின்றார்களோ? எனக்குத் தெரிந்திலதே யென்றுரைத்து, அதிலொன் றினைத் தம கண்டத்தில் போட்டுக்கொண்டு திகைத்து வெட்கி நின்றனள். ஸ்ரீராமபிரானார் உடனே யதனைப் பிராட்டியாரிடையில் வெண்பட்டினமே லுடுத்தருளினார். உடனே அங்குள்ள கோஸலையார் முதலிய தாயமார்கள் கண்ணீர்விட்டழுது, ஸ்ரீராமபிரானை நோக்கி, அடா எம அருமைத்திரு மைந்தா! பாவி கைகேயி உன்னை மாத்திரம வனம்போகும்படி வரங்கேட் டாளே யன்றிச ஸீதையும வனம்புகும்படி வரங்கேட்டிலளே? ஆதலின், தந்தையின வாக்கியத்தின்படி நீ வனம சென்றாலும இவளை இங்கு விட்டு விட்டுச் செல்லுக. இவளைக் காணப்திலாயினும், எங்களுடைய கண்கள் பயனபெற்று மகிழவுற்றிருக்ககடவன. லக்ஷ்மணனைத துணையாகக கொண்டு, நீ வனஞசெல்லுக. ரிஷிபோல இவள் வனத்தில வாஸஞ் செய யத்தக்கவளல்லளே! ஸீதை இங்கே நிற்கக்கடவள்; எங்களுடைய வேண்டு தலைப் பயனுள்ளதாகச் செய்க; தருமசிந்தை யுடையவ னாதலால, தடை செயயினும நீ நில்லாயென்று வேண்டிக்கொண்டனர்கள் அருளாளனாகிய ஸ்ரீபரந்தாமன இவர்களுடைய மொழியைக் கேட்டும் தம்மைப பிரிந்து ஸீதைநில்லாளென்னு முறுதியால், அதற்குடன்படாமல, அம்மரவுரியைக கட்டிவிட்டனர். இவ்வண்ணம ஸீதாதேவியார சீரத்தையெடுத்து உடுத்துக் கொள்ளும்படி நிற்கையில, வஸிஷ்டமஹாமுனிவர் மிகத்துன்பமும் கோப முங்கொண்டு, அதைத்தடுத்து உடுக்கற்கவென்று, பிராட்டியாரைத்தடுத் துக்கைகேயியை நோக்கி, அடி மதிகெட்டவளே! குலத்தைக் கெடுக்கப பிறந்து புகுந்தவளே! அச்சம நாண மிரண்டுமின்றி, நீதி தப்பி நடப்ப வளே! அடி பாவீ! என்னவரம்புகடந்து செல்லுகின்றனை? மஹாராஜனை வஞ்சனைசெய்து, ஸ்ரீராமபிரானை வனஞ்செல்ல விடுத்ததது மன்றிச ஸீதை யையும், மரவுரியணிந்து வனஞ்செல்ல விடுகின்றனையே! அடிகெடுஞ்செய லினளே! ஸீதாதேவி யொருககாலும் வனஞ்செல்லத் தக்கவளல்லளே! ஸ்ரீராமபிரானுக்குரிய சிங்காஸனத்தில, ஸீதாதேவியே யிருந்து அரசு செய்யக்கடவள்.—

ఆత్మా హిదారాస్సర్వేషాం దారసంగ్రహవర్తినాం
ఆత్మేయమితిరామస్య పాలయిష్యతిమేదినీం

ஆத்மாஹிதாராஸ்ஸர்வேஷாம தாரஸங்க்ரஹவர்த்தினாம்
ஆத்மீயமிதிராமஸ்ய பாலயிஷ்யதிமேதினீம்.

இல்லறம்பூண்ட யாவர்க்கும் பத்தினியென்பவள ஆத்துமாவன்றோ? ஆதலின், ஸீதாதேவியே ஸ்ரீராமபிரானுக்குரிய இப்பூமிதனக்கு முரி யதேயென்று பரிபாலனஞ் செய்யப் போகிறாள். ஒருக்கால் ஸீதாதேவி

யும், ஸ்ரீராமபிரானுடன் வனமே செல்வாளாகில், நாங்களும் உடன் செல்வோம், இந்நகரிலுள்ளவரெல்லோரும் செல்வார்கள்; சேனைபதிகள் முதலானோரோடு படைகளும் செல்லும், இவ்வண்ணம் யாவருடனும், ஸ்ரீராமபிரான் வனத்தில் எழுந்தருளியிருக்கையில், பரதனும் சத்ருக்கனனுடன் இச்செய்திகேட்டுத் தமமையனிடஞ்சேர்ந்து, தானும் மரவுரியுடுத்து, ஸ்ரீராமபிரானுக்குப் பணிவிடைசெய்து இருப்பானேயல்லது, உன் சொல்லின்படி அபிஷேகங் கொள்ளான் இவ்வகையாக யாவர்க்கும் தீமைசெய்து ஒருவருமின்றிப் பாழடைந்த இவ்வயோத்தியிலிருந்து, மரங்களுடன் கூடி நீ யொருத்தியே அரசுபுரிய தினபுறுவாய

నహితద్భవితారాష్ట్రం యత్రరామోనభూపతిః
తద్వనంభవితారాష్ట్రం యత్రరామోనివత్స్యతి

நஹிததபவிதாராஷ்டரம யதரராமோநபூபதிஃ
ததவனமபவிதாராஷடரம யதரராமோநிவதஸயதி.

மபிரான அரசாகிப பரிபாலனஞ் செய்யாத தேசம, காடாகு ாகாது, ஸ்ரீராமபிரான எவ்விடததி லெழுந்தருளி வாஸஞ்செய ? அது காடாயினும, திருநாடாகு மலலது, காடாகாது, நவுள மகிழந தளிததருளாத இநத ராஜ்ஜியததைப பரதனு மொருக்காலும், அரசாகிப பரிபாலனஞ் செய்யான; அவன உனனிடததில மஹாராஜருக்கே பிறநதிருபபானாகில, உனனிடததிலும பிள்ளைபோலிருந்து, உன சொல்லைக்கேட டரசுசெய்யான, அடி பாவீ! நீ பூமியிலிருந்து, ஆகாசததில எழும்பி விழுந்தாலும, (துள்ளிப பறந்தாலும) தமமுனனோர் முறைமையை நனகுணாநது தோந்த அந்தப பரதன தந்தையின திருவுளததிறகு வேறுகச் செய்யான, ஆதலின, உன பிள்ளைக்கு நலஞ்செய்ய நினைததுக கெடுதியையே விளைததனை;—

లోకేహిసనవిద్యేత యోనరామమనువ్రతః
ద్రష్టుస్యద్యైవకైకేయి పశువ్యాళమృగద్విజాః
గచ్ఛతస్సహరామేణ పాదపాంశ్చతదున్ముఖాః

லோகேஹிஸநவித்யேத யோநராமமனுவரதஃ
தரக்ஷ்யஸயதயைவகைகேயி பசுவயாளம்ருகதவிஜாஃ
கச்சதஸ்ஸஹராமேண பாதபாமசசதனமுகான.

அடி கைகேயி! ஸ்ரீராமபிரானே தஞ்சமென்று அவன் திருவுள்ளத்திற்கிசையாது நடப்பவர் இவ்வுலகினில் நீ யொருத்தி தவிர வேறொரு ஜந்துவுமில்லை யன்றோ? ஸ்ரீராமபிரான் இப்பொழுதே அரணியத்துக் கெழுந்

தருளுகையில், பசு பக்ஷி ஸர்பபாதிகளாகிய அஃறிணையுயிர்களும், பிராஹ்ம க்ஷத்திராதிகளாகிய உயர்திணை உயிர்களும், ஸ்ரீராமபிரானுடைய பிரிவைப் பொறாமலுடன் செல்வதையும், மரம் முதலிய அசையா வுயிர்களும், உடன் செல்லத் திறமையின்மையால, தளிர்கள் வாடி, மலர்கள் கருகிக் கனிகள் சூம்பி, ஸ்ரீராமபிரானெழுந்தருளுந் திசைநோக்கிச் சாய்ந்து கிடப்பதையும் கண்டு, என்சொல்லுண்மையென்று நீயே அறிந்துகொள்ளப் போகின்றாய, ஆதலின், நீ இந்தக் கொடுமையை விட்டு, உன் செல்வமருமகளாகிய ஸீதாதேவிக்குச சிறந்த ஆடையாபரணங்களை யளித்து, இம்மரவுரியை யுடுக்காமல் தடுக்கக்கடவை. மரவுரி இவளது திருமேனிக்குத் தகுதியற்றது என்று அம்மரவுரியை உடுக்காமல் தடுத்தருளி, மீளவும் கைகேயியைநோக்கி, அடிநீ ராமனொருவனே வனம் செல்லக் கடவனென்று வரங்கேட்டாயேயன்றிவேறிலலை, ஆதலால், ஸீதாதேவி சிறந்த வாடையாபரணங்களை யணிந்து சிங்காரஞ் செய்துகொண்டு, சிறந்த வாஹனங்களுடனும், பரிஜனங்களுடனும், சிறந்த தனதானியாதி வஸ்துக்களுடனும் கூடி, ஸ்ரீராமபிரானுடன் வனம் செல்லககடவள். இது கூடாதென்று நீ முன்னே வரங்கேட்டிலையன்றோ?என்றருளிச்செயதனர். ஒன்றிவவண்ணம் குலகுருவாகியவஸிஷ்டமஹாயோகி யருளிசசெய்கையிலும், பாத்தாவுடுத்த துடுத்து, உன்ப துண்டு, மகிழ்வதேகற்புடையாளுக் குரியதென்று தருமத்தைக் கருதியும், கைகேயி யுடன்பட்டிலளே யென்றுஞ் பிராட்டியார் அமமரவுரியை யுடுப்பதில், மனங்கொண்டில ளாகிலள்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பதேழாவது சருக்கம்
முற்றிற்று

## முப்பத்தெட்டாவது சருக்கம்.

கைகேயியையிகழுகின்ற தந்தையைநோக்கி ஸ்ரீராமபிரான் தன் மாதாவைப் பாதுகாக்கும்படி வேண்டி விண்ணப்பஞ் செய்தது.

அருளுருவாகியபிராட்டியாா இவவண்ணம் அநாதைபோல மரவுரியை யுடுக்கையில், அங்குளள ஜனங்களெல்லாருந் தசரதனைச் சீயென்றிகழ்ந்து புலம்பினாகள். அதனைச் செவியுற்றுமஹாராஜரும் மிகவுஞ்சோகங்கொண்டு, உயிர்வாழுவதிலும், தருமத்திலும், புகழிலும் ஆசையற்று, வெப்பமாக நெட்டுயிர்த்து,அந்தக் கேகயியை நோக்கி, அடிபாவீ கைகேயி! சீதாபிராட்டி மரவுரியுடுத்துச செல்லத்தக்கவளல்லள்; காட்டுவாகைப பூவினும் மென்மையுடையாளும், சிறுவயதுடையாளும், சுகத்தையே யல்லது, துக்கத்தைஇதுவரை யடையாதவளு மாதலால், ஸீதை வனவாஸஞ் செய்யத் திறமையுள்ளவளல்லளென்று வஸிஷ்டமஹாமுனி யருளிச்செய்த துண்மையே?

ஜனகமஹாராஜன் திருமகளாகிய இவள் யார்க்கு என்ன அபகாரஞ் செய்தனள்? அநாதைபோலாகித் துறவறம் பூண்டவளைப்போல மரவுரியுடுத்து இச்சபை நடுவில் நிற்கும்படி ஏன் செய்கிறாயடி பாவி! சீதை மரவுரிகளை விட்டுவிட்டுச் சிறந்த ஆடையணிகளை யணிந்து மகிழ்ந்து தன் கணவனுடன் வனமே செல்லக் கடவள். இவள் மரவுரியுடுக்கும்படி நான் வரமுங் கொடுத்திலேன்; நானிறக்குங்காலங் கிட்டினமையால், நீ கேட்டவரங் தருவேனென்று முதலில், பிரதிஜ்ஞைசெய்து கொடுத்து விட்டேன்; நீயும் மடமையால், இதமென்பதறியாமல் என்னுடனிழைந்து இக்கொடிய வரங் கேட்டு, மூங்கி லொன்றோடொன்று இழைந்து தீப்பொறியுண்டாக்கி எரிந்து விடுவதுபோல, நீயுங் கெட்டு என்னையுங் கொல்லுகின்றனை, அடி பாவி! ஸ்ரீராமபிரான் உன் விஷயத்தில் கிஞ்சித்தாயினும் அபராதப் பட்டிருக்கின்றனனோ? அடி கெட்டவளே! சீதையிடத்திலாவது ஏதேனுங் குற்றங்கண்டிருக்கின்றனையா? மான்பேடுபோல நீண்டகன்று மலர்ந்த திருக்கண்களையுடையவளும், யாவரும் புகழத்தக்க நற்குண நற்செய்கை யுடையவளுமாகிய சீதை என்ன அபகாரஞ் செய்தனள்? அடி பாவி! ஸ்ரீராம பிரானைக் காட்டிலோட்டின பாவமொன்றுமே நீ ஊழிகாலம் வரையும், கும்பீபாக முதலிய மஹாநரகங்களில் மூழ்கி மீளாமைக்குப் போதுமான தாயிற்றே; மேன்மேலும் இவ்வண்ணம் சீதை மரவுரியுடுக்கச் செய்வது முதலிய கொடும்பாவங்களையும் ஏன் செய்கின்றனை? இவற்றா லுனக்குப் பயன் யாது? ஸ்ரீராமபிரான் முதலில் இங்கபிஷேகத்தின் பொருட்டு வருகையில், நீ என் முன்பாக ஸ்ரீராமபிரானை நோக்கி, என்னகட்டளையிட்டனையோ அது மாத்திரமே நான் உனக்கு வரங்கொடுத்தது, அதைவிட்டு ஸீதையும் மரவுரியுடுக்கும்படி செய்கின்றமையால், நரகத்தையடையவே நினைக்கின்றனை என்றனர். என்றிவ்வண்ணம் மஹாராஜர் வெகுவாகப்புலம்பிச் சோகக் கடலிலழுந்தி அதன் கரைகாணாமல், ஸ்ரீராமபிரானுக்குற்ற துன்பத்தையே நினைந்து தரையில்வீழ்ந் தழுதனர். இவ்வகையாகத் தரையிலுட்கார்ந்து தலைகுனிந்து புலம்புகின்ற தந்தையை நோக்கி, ஸ்ரீராமபத்திரர் வனமேகத் துணிந்து, என் திருத்தாதையரே! இதோ இருக்கின்ற என் தாயாகிய கோஸலையார் மிகவும் மூப்புடையவர், கபடம் அறியாதவர், தேவர் இவரை யுபேக்ஷைசெய்யுங்காலும், தேவரை இகழாமல் மகிழ்ந்திருந்த கற்புடையவர், இவர் என்னைப் பிரிந்தவுடன் சோகஸாகரத்தில் மூழ்கி, இதுவரையில் துன்புறாதவ ராதலின், மிகவும் வருத்தமுறுவர், ஆதலின், இவர் வருந்தாத வண்ணம் தேவர் தேற்றியருளக்கடவீர் தேவர் செய்யுந் தேற்றுதலால், இவர் என்னை நினைந்து வருத்தமுறினு முயிர்வாழ்ந்திருப்பர், எந்தந்தையரே! இவர் நான் வனஞ்சேர்ந்தபின், என்னை நினைந்து துன்புற்று உயிரை விட்டு லோகாந்தர மடையாவண்ணம், தேவரிவரைத் தேற்றி யருளக் கடவீரென்று வேண்டி விண்ணப்பஞ் செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தொன்பதாவது சருக்கம்.

### மஹாராஜர் கட்டளையின்படி சுமந்திரர் திருத்தேர் கொணர்ந்து ஸ்ரீராமபிரானைப் பிரயாணப் படுத்தியது.

இவ்வண்ணமருளிச்செய்த ஸ்ரீராமபிரானுடைய திருவாய்மொழியைக் கேட்டும், அவர் பூண்ட முனிவேஷத்தைப் பார்த்தும், மஹாராஜா பத்தினிகளுடன் மதிமயக்கமுற்றுச் சோகக்கடலில் மூழ்கித் தலைகுனிந்து, மறுபடியும் இவரைப் பார்க்கவும் பேசவுந் திறமையற்று, வருந்தி மூர்ச்சையடைந்து பின்பு தெளிந்தெழுந்து ஸ்ரீராமபிரானையே நினைந்து,—

మన్యేఖలుమయాపూర్వం వివత్సాబహవఃకృతాః
ప్రాణినోహింసితావాపి తస్మాదిదముపస్థితం.

மன்யே கலு மயா பூர்வம் விவத்ஸா பஹவஃ க்ருதாஃ
ப்ராணினோ ஹிம்ஸிதா வாபி தஸ்மாதிதமுபஸ்திதம்

அந்தோ நான் முற்பிறப்பில் பல பசுக்களைக் கன்றுகளுடன் சேரவிடாமல் பிரித்தோட்டினேன்போலும், அநேகமுயிர்களை வருத்தினேன்போலும், அப்பாவத்தினாலேதான் இவ்வகைத் துன்பம் எனக்கு நேர்ந்தது, காலமல்லாக் காலத்தில் உடலினின்று முயிர்போவதில்லையே, ஆதலின், கைகேயியால் பீடிக்கப்பட்டும், எனக்கு மரணம் நேர்ந்திலதே, மண்ணாசையே மேலெனக்கொண்ட கைகேயியின் பொருட்டு, என் திருமகன் பீதாம்பரத்தைவிட்டு, மரவுரியுடுத்து என்முன் நிற்க, என்னுடலெல்லாம் துன்பத்தீ பற்றி யெரிகின்றதே நான் என்செய்வேன்? என்றிவ்விதமாகப் புலம்பி, ராமா வென ஒருதரமுரைத்து, மேல் சொல்லத் திறமையற்று மூர்ச்சை யடைந்து, பின்பு தெளிந்தெழுந்து, கண்களில் சோகநீர்பெருகச் சுமந்திரரை நோக்கி, ஸாரதி! நீ ஸ்ரீராமபிரான் எழுந்தருளத்தக்க திருத்தேரைக் கொண்டு வந்து, ஸ்ரீராமபிரானை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு இக்கோஸல நாட்டுக்கு வெளியேவிட்டு வரக்கடவீர். நற்குணத்தோர்களின் நற்செயலின்பலன், இவ்வண்ணம் வருத்தமுறுவதென்று நான் நினைக்கிறேன்; ஸ்ரீராமபிரான் நற்குண நற்செய்கை யுடையவனாகியும், தாய் தந்தைகளாலே பிழையின்றி, காட்டிலோட்டிவிடப் படுகின்றானன்றோ? என்று கட்டளையிட்டனர். உடனே தேர்ப்பாகரும் விரைந்து சென்று, திருத்தேரில் சிறந்த நான்கு குதிரைகளைக் கட்டிச் சிங்காரித்துக் கொணர்ந்து, ஸ்ரீராமபிரானிடம் வந்து வந்தனஞ்செய்து கைகுவித்து, ஸ்ரீராமச்சந்திரரே! திருத்தேர் சித்தமாயிருக்கின்றதென விண்ணப்பஞ்செய்தனர். மஹாராஜர் உடனே கோசாதிகாரியையழைத்து, நீ விரைவாகச் சீதாபிராட்டி பதினான்கு

வருஷங் காட்டிலிருக்கு மளவும், போதுமான சிறந்த ஆடையாபரணங் களைக் கணக்கிட்டுக் கொணர்ந்து கொடுக்கக் கடவையென ஆஜ்ஞை செய்த லும், உடனே அவன் பொருட்சாலைக்குள் சென்று, யாவுமெடுத்துவந்து, ஸீதாபிராட்டிக்குச் சமர்ப்பணை செய்தனன். ஸீதாதேவியும், தந்திரு மேனிக்குத் தகுதியாயுள்ள அந்தச் சிறந்த அணிகளை யணிந்து கொண்டு, காலையிலுதித்த கதிரவ னொளிபோல அவ்வந்தப்புரமெல்லாம விளங்கச் செய்பவளாகி, வனம்புகுவதில் பெருமகிழ்வுகொண்டு நின்றனள். கோஸலா தேவி தன் செல்வமருமகளுடைய நற்குண நற்செய்கைகளைக் கண்டு, மகிழ்ந்து, அவளைத் திருக்கைகளால் தழுவியணைத்து உச்சிமோந்து அவளை நோக்கி, அடி என் கண்மணி! உலகத்திலே வனிதையர்கள் தந்தம் பர்த்தாக்கள் குறைவின்றி, நற்செல்வராயத் தாம வேண்டுமவற்றையளித்து மகிழ்ச் செய்யு மளவும், அவர்களுக் கிசைந்து நடந்து, முன் வினைப்பால் பொருளிழந்து துன்பமுறுங்கால் அவர்களைத் துறந்து, தமமிச்சையின் படித் திரிவார்களல்லரோ? பதி குறைவின்றி யிருக்குமளவும்,கூடியிருந் தின் புறுப பின்பு அவனுக்குச் சிறிதேனும் ஆபத்துவருங்கால், வேறுபட்டுப் பதியை நீங்கித் தமமிச்சையின்படி திரிந்தழிவ தென்பதே பெண்களின் பண்பு, பெண்களென்போர்கள் எப்பொழுதும் பாவசிந்தையுடையவர்கள் ஒரு கணப்பொழுதில் தானே பதியை வெறுத்துவிடத்தக்கவர்கள் பதியின் உயர்குலத்தையாயினும், உபகாரத்தையாயினும், கல்வியையாயினும், வெகுமதியையாயினும், அக்கினிதேவன் முன்பாகச் செய்துகொண்ட சத்தி யத்தை யாயினும நினைந்து, பதியை நன்குமதியார்கள் அவர்கள் சபல சித்தர்களல்லரோ? முற்செய்த நல்வினையால், சில பதிவிரதாதரும முடையவர்களது மனமோ வெனில், நற்செயலிலும், சத்தியத்திலும், தருமநூல்களைக் கேட்பதிலும், புலன்களை யடக்கிப் பொறாமை கொள்ளா மல் பொறுமை கொள்வதிலும், பதியைப் பிரியாது அவனே தஞ்சமென நினைத்து, அவன் சென்றவிடஞ் சென்று, வாழ்ந்திருப்பதிலும், நிலைகொண் டிருக்கும், கா்ந்தையர்களுக்குத் தெய்வங்களிலும் பதியே சிறந்தவ னல்ல னே? ஆதலின், நீ யொருகாலும், பதியை இகழ்ந்துவிடாயாக; அவன் செல்வம் பெறினும், வறுமைகொண் டிருக்கினும், அவனே உனக்குத் தெய்வமாகக் கடவ னென்று நற்செய லுரைசெய்தனள். சீதாபிராட்டி யாரும் அந்தப் பாசுரங்களைக்கேட்டுத் தம திருமாமியாரை நோக்கிக் கைகு வித்துக் கோஸலையாரே! தேவரருளிச்செய்தபடியே அடியாளும நடந்து கொள்வாள், பர்த்தாவினிடத்தில், எவ்வெக்காலங்களில் எவ்வெவ்வகையாக நடந்துகொள்ளவேண்டுமோ? அவ்வவ்வகையை அடியாளு மறிந்திருக்கின் றாள். தாய் தந்தையர்களிடத்தில் கேட்டு மிருக்கின்றாள். தேவர் அடியாளை யும், குலங்கெடுக்கும் குலடையென எண்ணவொண்ணாது; நிலவைச் சந் திரனின்றும் பிரிப்ப தரியதுபோல, அடியாளுந் தருமநிலையி னின்றும் பிரிக் க அரியளாகுவ ளென்று நம்புக;—

నాతన్త్రీవాద్యతే వీణా నాచక్రోవర్తతే రథః
నాపతిస్సుఖమేధేత యాస్యాదపిశతాత్మజా
మితన్దదాతిహిపితా మితమ్మాతామితంసుతః
అమితస్యహిదాతారం భర్తారంకానపూజయేత్ ||

*நாதந்த்ரீவாத்யதேவீணா நாசக்ரோவர்த்ததேரத:*
*நாபதிஸ்ஸுகமேதேத யாஸ்யாதபிசதாத்மஜா*
*மிதந்ததாதிஹிபிதா மிதம்மாதா மிதம்ஸுத:*
*அமிதஸ்யஹிதாதாரம் பர்த்தாரங்காநபூஜயேத்*

மணிகளிழைத்துப் பொன்கட்டுப்போட்டுச் சிங்காரிக்கப்படினும், வீணைதக்க தந்தியின்றி, வாசித்தல்செய்யப்படாது, தேர் மற்ற உறுப்புகள் நிறைந்திருந்தும், சக்கரமின்றிச் செல்லாது, அவ்வாறே ஒருத்திக்கு நூறு பிள்ளைகளிருக்கினும், பதியின்றி இன்பமடையாள்; பெண்ணுக்குத் தந்தை யாடையாபரண முதலிய வேண்டு மவற்றை யளிக்கினும், அவையும், அற்பமேயன்றோ ? தாய் சிற்றுணடிகளை யளிக்கினும், அவையும் அற்பமேயன்றோ ! பிள்ளை வேண்டியபடி குற்றேவல்கள் செய்யினும், அவையும், அற்பமேயன்றோ ? இம்மையில் பேரின்பத்தையும், மறுமையில் நற்போகங்களையும் கொடுக்கவல்லவா பர்த்தா வொருவரே யன்றோ ? இப்படி பெரும்பயன்தரும் கணவனை விவேகமுள்ள யாவள் பூசனைசெய்தின்புற்று மகிழ்ந்திராள்; ஆதலின், பெரியோர்களிடத்தில் தருமங்களை முற்றுமுணர்ந்த அடியாள் பர்த்தாவை ஏன் அவமதிசெய்வாள், பெண்களுக்குப் பர்த்தாவே தெய்வமன்றோ ? என்று திருவாய் மலர்ந்தருளினர். இவ்வண்ணம் பிராட்டியாருடைய அருளிச்செய்கையைக்கேட்டு, ஆநந்தமும் சோகமுங் கொண்டு, கண்ணீர்பெருகத் துன்புற்று நிற்கின்ற கோஸலராஜன் திருமகளை நோக்கி, ஸ்ரீராமபிரான் வலஞ்செய்து கைகூப்பி அம்மா ! என்னன்புகூர்ந்த மாதாவே ! நீர் துன்புறற்க; என் திருத்தந்தையைக் காத்தருள்வீராக, இந்தப் பதினன்குவருஷ வனவாஸமும், தூங்கியெழுந்தாற்போல விரைவில் கடந்துவிடும், பின்பிங்கு யான் அன்பர்களுடன் கூடிவருவதைக் கண்ணுற்று மகிழ்வா யென்று சுருக்கமாக அருளிச் செய்துவிட்டு, மற்றுமுள்ள முந்நூற்றைம்பது மாதாக்களையும், முறையே கண்டு வணங்கி, அவர்களை நோக்கி, என் ஜநநியர்களே ! யான் அதிபரிசயத்தாலாயினும், அறியாமையாலாயினும், ஏதேனும் பிழைசெய்தேனாயினும், அதனைப் பொறுத்தருளக் கடவீர்கள். அன்றியும், வனவாஸம் செல்ல விடைகேட்கின்றேன்; விடையுடனாசீர்வாதஞ்செய் தனுப்பக்கடவீர்க ளென்று அருளிச்செய்தனர். இவ்வண்ணம் அருளிச்செய்த ஸ்ரீராமபிரான் வாக்கியத்தைக்கேட்டு, அவ்வந்தப்புரத்திலுள்ள மஹாராஜர் பத்தினிகள் யாவரும், கிரௌஞ்சபக்ஷியின் பேடைகள்போலப் புலம்பி யழுதனர்கள். இதுவரையில் முரஜ பணவா முக

வேணு வீணு ஸாரங்கி சல்லரி முதலிய வாத்தியங்களின் தொனிகளாலும், ஸங்கீத நாதங்களாலும், விநோதகரமாயிருந்த அவ்வந்தப்புரம் புலம்பல் அழுதல், வெதுத்தல், இகழுதல் முதலிய தொனிகள் நிறைந்து, துன்பந் தருவதாயிற்று.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தொன்பதாவது சர்க்கம் முற்றிற்று.

## நாற்பதாவது சருக்கம்

சக்கரவர்த்தி திருமகனார் சீதாபிராட்டியாருடனும் இளையபெருமாளுடனும் திருத்தேரூர்ந்து எழுந்தருளுகையில் மஹாராஜா பின்சென்று புலம்பியழுதது.

அநந்தரம் ஸ்ரீராமபிரான் சீதாதேவி இளையபெருமாள் இம்மூவரும் மஹாராஜனை வந்தனஞ்செய்து வலம் வந்து தேற்றி விடைபெற்றுக் கொண்டு, கோஸலையாரையுஞ் சுமித்திரையாரையும் வந்தனஞ்செய்து நின்றனர். அப்பொழுது சுமித்திராதேவி தன் மைந்தனையணைத்தெடுத்து உச்சிமோந்து அவனை நோக்கி, அடா என்னருமை நற்புதல்வா! உலகனைத்துக்கு முறைவாகிய ஸ்ரீராமபிரானிடத்தில் பத்திவலைக்கொண்டு கணப்பொழுதும் பிரியாமல் அவர்க்குக் குற்றேவல் செய்வதன்பொருட்டே நீ பிறந்திருக்கின்றமையால், அவருடன் வனவாஸஞ் செய்வதன் பொருட்டு என்னாலும் விடைகொடுக்கப்பட்டவனாகின்றனை, ஆதலின், நீ வனஞ்செல்லுகையில், ஒருகாலும் ஸ்ரீராமபிரான விஷயத்தில் ஊக்கமற்றிருக்கக்கடவை யல்லை, அவர் இப்பொழுது ராஜ்ஜியமு மிழந்து, செல்வமு மின்றி யிருக்கின்றாரே, இவரால் என்னபயனென்ன நினைத்து, உபேக்ஷை செய்யற்க;—

వ్యసనీవాసమృద్ధోవా గతిరేషతవానఘ
ఏషలోకేసతాంధర్మో యజ్జ్యేష్ఠవశగోభవేత్ ||

வ்யஸனீவாஸம்ருத்தோவா கதிரேஷதவாநக
ஏஷலோகேஸதாந்தர்மோ யஜ்ஜ்யேஷ்டவசகோபவேத்.

இவர் பொருளற்றவராயினும், மிகப் பொருள் பெற்றவராயினும், இவரே உனக்குத் தஞ்சமெனக் கருதி, பய்பத்தியுடன் திருப்பணி செய்து வாழ்க; தம்முன் பிறந்தார்க்கு வயப்பட்டு நடப்பதென்பதே இவ்வுலகினில்

பெரியோர்களால் புகழப்பட்ட சிறந்த தருமமாகும், மூத்தோர்களுக் கீழ்ப் படிந்து நடப்பது, கொடை செய்வது, யாகதீக்ஷை வகிப்பது, போரில் முன்னிட்டகால் பின்வாங்காமல் உயிரை விடுவதிலும் துணிந்து போர் செய்வது, இவையாவும் இவ்விக்ஷ்வாகு குலத்திற் குரிய குணங்களெனப் படும், என்றிவ்வண்ண மிதங்கூறி, நிலலேல் போபோவென விடை கொடுத்து,—

రామం దశరథం విద్ధి మాం విద్ధి జనకాత్మజాం
అయోధ్యామటవీం విద్ధి గచ్ఛ తాత యథాసుఖం

*ராமந்தசரதம்வித்தி மாம்வித்தி ஜநகாத்மஜாம்*

*அயோத்யாமடவீம்வித்தி கச்சதாத யதாஸுகம்.*

அடா என்னரும் புதல்வா! ஐயரைப் பிரிந்தோமேயென்று எண்ணற்க, ஸ்ரீராமபிரானையே ஐயராக நினை, என்னைப் பிரிந்தோமேயென்றும் வருந்தற்க, பிராட்டியையே நானெனவுணர், படைவீட்டைவிட்டுப் போந்தோமே யென்றும் உன்னற்க, காட்டையே படைவீடெனவுணர்ந்து சுகமாக ஸ்ரீராமபிரானுடன் போய்வரக் கடவையென வாதரத்தால் மீளவு மிதமுரைத்து வாழ்த்தி விடைகொடுத் தனுப்பினள். அநந்தரம் விநயமறிந்தவரும், விநயமுடையவருமாகிய சுமந்திரரும் தேவஸாரதியாகிய மாதலி தேவேந்திரனை நோக்கி, விண்ணப்பஞ் செய்வதுபோல ஸ்ரீராமசந்திரனை நோக்கிக் கைகுவித்து, சக்கரவர்த்தித் திருமகனாரே! இந்தத் திருத்தேர்மீதேறி வீற்றிருந்தலங்காரஞ் செய்தருளவீர் தேவர் திருவுள முகந்தருளிய விடத்தில் விரைவி லெழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோய் விடுவேன்; கைகேயி வரங் கேட்டுக்கொண்டபடி பதினான்குவருஷம் தண்டகாரணியத்தில் தேவர் வாஸஞ்செய் தருளவேண்டு மன்றோ? என்று விண்ணப்பஞ் செய்தனர். உடனே ஸீதாபிராட்டி தம் மாமனாரளித்த ஆடையாபரணங்களை யலங்காரஞ் செய்து கொண்டு, சூரியன்போல விளங்குகின்ற அத்திருத் தேரின் மீது திருவுளமகிழ்ந்து முன்னமே ஏறியருளினள். பின்னர் சக்கரவர்த்தி திருமகனாரும், இளையபெருமாளும், தங்கத்தால் சிங்காரிக்கப்பட்டு அக்கினிபோல ஜொலிக்கின்ற அத்திருத்தேர்மீதிலேறி வீற்றிருந்தருளினர்கள். இவர்கள் வனவாஸஞ் செய்யும், பதினான்கு வருஷத்துக்குக் கணக்கிட்டு மஹாராஜரால் அளிக்கப்பட்ட ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும் தேர்மிசை வைத்துக் கொண்டு, சுமந்திரர் சிறந்த ஜாதியிற் பிறந்து வாயுவேகமுடைய குதிரைகளை யோட்டித் திருத்தேரை நடாத்தினர். இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் நெடுந்தூரம் பிரயாணமாகிப் புறப்படுகையில், அங்குள்ள நாட்டார் நகரத்தார்களும், யானை, குதிரை, பசுக்கள் முதலிய மிருகங்களுடனும், பலவகைப் பக்ஷிகளுடனும், பாலவிருத்தர்களுடங்களும், துன்பம் மேற்கொண்டு மூர்ச்சையடைந்து பின்பு தெளிந்தெழுந்து,

மனமும் புலன்களுங் கலங்கியும், துன்பத்தால் பித்தேறிய மதயானைகளின் பிளிறல்களையும், கட்டுவாரற்றுத் திரிகின்ற குதிரைகளின் பூஷண கோஷங்களையும், தங்களுடைய புலம்பலின் கோஷங்களால் பெருகியெழுந் தொனிக்கச் செய்பவர்களாகி, ஆண் பெண் அலி கூன் குருடு முடம் இளைஞர் மூப்பினர்கள் அடங்கலும், முதுவேனிற் பருவத்தில் வெயிலிலடிபட்டு, நீர்வேட்கை கொண்டவர்கள், நீரைக்கண் டோடுமாபோலே ஸ்ரீராமபிரானையே பின் தொடர்ந்தோடி, இரதத்தைப் பக்கங்களிலும் பின்னும் பிடித்துக்கொண்டு மிகவும் வருத்த முற்றவர்களாகிக் கண்ணீர் பெருக்கி சுமந்திரனை நோக்கித், தோப்பாக்கரே! நீர் குதிரைக் கடிவாளங்களின் கயிறுகளை இழுத்துப் பிடித்து மெல்ல மெல்லத் தேரையோட்டி யருளக்கடவீர் ஸ்ரீராமபிரானுடைய திருமுகமண்டலம் இனி எங்களுக்குக் காணவரிதாகு மாதலின், யாங்கள் சற்றுநேரங் கண்டு மகிழுவோம், ஸ்ரீராமபிரான் மாதாவாகிய கோஸலையார் மனம், எஃகினால் செய்யப் பட்டதுபோலும், இல்லாதிருந்தால், தேவகுமாரன்போன்ற திருமகன் வனவாஸ மெழுந் தருளுகையில், உடனே பிளந்திற்றுச் சிதறுண்டழியாதோ? ஸீதாதேவி யன்றோ? நல்வினையினள். அவள் பதிவிரதா தருமத்தைத் தவறாமல், சூரியன் காந்தி மேருகிரியை விட்டு நீங்காததுபோல ஸ்ரீராமபிரானை விட்டு நீங்காமல் உடன் செல்லுகின்றனள் அல்லளோ என்றும், ஓய லக்ஷ்மணா! நீ யொருவனே யன்றோ? நல்வினையன், நீ எப்பொழுதும் இணைபிரியாமல், ஸ்ரீராமபிரானுடன் சென்று, கைங்கரியஞ்செய்து மகிழ்வுற்று வாழ்கின்றனை யன்றோ? நீ ஸ்ரீராமபிரானை விடாது தொடர்ந்து செல்லுவதென்பதுவே உனக்குச் சிறந்த நற்பேறும், சிறந்த நல்வாழ்வும், சிறந்த நற்கதியும், நல்வழியு மாகின்றதென்றும், இவ்வண்ணம் புலம்பி யழுது கண்ணீர் பெருக்கி, ஸ்ரீராமபிரானைப் பிரிந்து துன்பத்தைப் பொறுத்திருக்கத் திறமையிலர்களாகிப் பின்றொடர்ந்தே சென்றனர்கள் பின்பு மஹாராஜரும், மிக வருத்தமுற்றவராகி, மிகத் துயரங்கொண்ட தேவிகளுடன் ஸ்ரீராமபிரானைக் கண்ணாரக் காண்போமென்று வெளியே புறப்பட்டு வந்து பூதப்பதியைப் பதுங்கு போட்டுப் பிடித்துக் கட்டி விடுகையில், யானைப்பேடுகள் புலம்புமாபோல புலம்புகின்ற வனிதையர்களது புலம்பலைக்கேட்டு, இராகுவினால் பிடிக்கப் பட்ட பூரண சந்திரன்போல வொளியிழந்து, மகிழ்வழிந்து, துன்பக்கடலில் விழுந்து வருந்தினர் ஸ்ரீராமபிரான் இவர்களைக் கடாக்ஷித்து இவர்கள் படுந் துன்பத்தைக் கண்டாற்றலற்றுத் தோப்பாக்கரை நோக்கிக் குதிரைகளைக் கடுகவோட்டு மென்னும், அந்த ஜனங்களெல்லோரும், ஐயோ சுமந்திரரே! தேரை நிறுத்து மென்றும் வேண்டுகையில், சுமந்திரர் தேரை யோட்டவும் நிறுத்தவுங்கூடாமல், வருத்தமுற்று நிற்கையில், இந்த மகாஜனங்களில் திரள்களின் பாதவைப்புகளினெழுந்த துகள், அத்திரள்களின் கண்ணீர்ப் பெருக்கால் நனைக்கப்பட்டுச் சேறாகி யழுந்தி யடங்கியது; இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் புறப்படுகையில், அந்நகரியெல்லாம் புலம்பலுற்

றும், கண்ணீர் பெருக்கியும், ஹாஹா! காரங்கொண்டு மதிமயங்கியும், மிக வருத்தமுற்ற தாயது. அப்பொழுது வனிதையர்களது கண்களினின்றும் கண்ணீரானது மீனங்களின் கலக்கத்தால், கமலங்களினின்றும் ஒழுகும் தேனை போலப்பெருகின. இவ்வாறு புரமெங்கு மொரோதனமையாயிருப்பதை மகா ராஜா கண்டு, வேரொவெட்டிச் சாய்த்த மரம்போல விழுந்து மோஹமடைகை யில், ஸ்ரீராமபிரானைத் தொடர்ந்து செல்லும் ஜனங்களெல்லோரும் மஹா ராஜனைக் கண்டு, கூவென்று கூவியழுது, ஐயோ ராமா! என்று சிலரும், ஐயோ கோஸலையேயென்று சிலரும் புலம்பி, முன்னமே புலம்பியழுகின்ற அந்தப் புரத்தோரை மேன்மேலும், அழச் செய்தனர்கள். ஸ்ரீராமபிரானும் இவ்வண்ணம் வருந்தி, உடனே தொடர்ந்து வருகின்ற தாய் தந்தையர்களைக் கடாக்ஷித்தும், தருமபாசத்தில் கட்டுண்டவ ராதலின், வலையிலகப்பட்டு மானகுட்டிபோல அவர்களைக் கிட்டி, இன்புறவிக்கக் கூடாமையால், மீளவும், அவர்களைக் கண்ணுறாமல், திருத்தேர் மீதெழுந்தருளத் தக்கவர்க ளாகியும், பதாதிகளாகியும், சுகத்தை யநுபவிக்கத் தக்கவர்களாகியும், துன் புற்றவர்களாகியும், தாய் தந்தையர்கள் வருவதைக் கண்டு பொறாமல், தேரைக் கடிது ஓட்டும்படி பாகனைத் தூண்டி யருளினர். பின்பு கௌஸலை யார் பகலில் மேய்வதற்குச் சென்று, மாலையில் கட்டுண்டு தானீன்ற கன் றினை நினைந்து, கற்று வீட்டிற்குத் திரும்பி யோடிவருமாபோலவே ஓடி, ஸ்ரீராமபிரான் திருத்தேரையே நோக்கி, ராமா! ராமா!! என்றும், அடி சீதை! சீதை!! என்றும், லக்ஷ்மணா! லக்ஷ்மணா!! என்றும் கூவிக்கொ ண்டு, இவர்கள் பொருட்டே கண்ணீர் பெருக்கி, இங்கு மங்கு மலைந்து திரிந்து வருந்திச் செல்வதைக் கண்டு, மஹாராஜர் தேர்ப்பாகனை நில்லும் நில்லுமென்றும், ஸ்ரீராமர் செல்லும் செல்லும் என்றும், கூவிக் கட்டளை யிடுகையில், இரண்டு சக்கரங்களினிடையி லகப்பட்டுக் கொண்டாற் போலத் திகைத்து நிற்கையில், ஸ்ரீராமபிரான் அவனை நோக்கி, சுமந்திரரே! ஒருகால் மஹாராஜா ஏன் சொற்படி ஏன் கேட்டிலீரென்று கோபங்கொள் ளினும், நான் தேவர் கட்டளையைக் கேட்டிலேனென்று சொல்லக்கடவீரல்லீர். இப்பொழுது இவர்களுடைய துன்பத்தை நான் பொறுப்ப தரிது, ஆதலின், தேரை விரைவாகச் செல்லவிடுமெனத் தூண்டி யுரைசெய்தருளி னர். உடனே ஸ்ரீராமபிரான் அருளிச் செயலின்படி சுமந்திரர் உடன் தொடர்ந்துவந்த ஜனங்களுக்குத் திரும்பிச் செல்ல விடை கொடுப்பித்து, குதிரைகளை விரைவாகவே ஓடிக்கொண் டிருக்கினும், மிகவும் விரைவாக ஓட்டினர். மஹாராஜனைச் சேர்ந்த ஜனங்களெல்லோரும் விடை பெற்றுக் கொண்டு, ஸ்ரீராமபிரானை வலஞ்செய்து சரீரத்தால் திரும்பினவர்க ளாயி னும், மனத்தினாலும், துன்பத்தினாலும், மீண்டில ராயினர்கள்.

యమిచ్ఛేత్పునరాయాంతం నైనం దూరమనువ్రజేత్॥

- யமிச்சேத்புநராயாந்தம் நைநந்தூரமநுவ்ரஜேத்.

யாவனொருவன் தேசாந்தரஞ்சென்று, சுகமாக மீண்டு வரவேண்டுமென்று இச்சிக்கப் படுகின்றானோ? இஷ்டபந்துக்கள் அவனுடன் நெடுந்தூரஞ் சென்று விடுவிட்டலாகாதென்று, மந்திரிகள் மஹாராஜருக்கு இதங்கூறினர்கள். சக்கரவர்த்தியும், மிக நன்மை விளைக்கத்தக்க அவ்வசனத்தைக் கேட்டு இதமெனக் குறித்து, மிகத் துன்பமுற்றவராயினும், மனைவிகளுடன் நின்றுகொண்டு, ஸ்ரீராமபிரானைக்கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பதாவது சருக்கம் முற்றிற்று.

---

இவன் இளமைப்பருவமுடையானாதலாலும், நல்லுணவுகளையும், நற்போகங்களையுந் துறந்து, வனம்புகுவது முனிவர்க்கு மரிதாதலாலும், ஸ்ரீராமபிரான் பேரருளாளனென்பதையும், பிராட்டியார் பெரியபிராட்டியாரே யென்பதையு மிவனறிந்திலனோ வென்னு மையத்தால், இவனொருகால் ஸ்ரீராமபிரானுடன் செல்லாமல் நின்றுவிடுவனோ வென்று ஸந்தேஹித்தும், நமக்குப் பாத்தாவின் விட்டத்திலுள்ள பாரதந்திரியமும், ஸ்ரீராமபிரானுடன் செல்லாமைக்குக் காரணமாகித் தடுத்துவிட்டதே நந்திருமகனை யாவது அவருடன் செல்லவிட்டுக் கைங்கர்யம் பெறுவோமென்று ஆதரங்கொண்டும், (வாசாதாமமவாபநுஹி) என்கிறபடி இவன் சுயமாகவே ஸ்ரீராமபிரானுக்கு நித்திய கைங்கரியத்தில் முயற்சியுடையவனாகி யிருக்கினும், அனுமதி செய்வதினாலாயினும், அதன் பலனைப்பெற்று நற்கதி யடைவோமென்று எண்ணியும், (ஸஹிதத்பவிதாராஷ்டரம் யத்ரராமோநபூபதி: தத்வனமபவிதாராஷ்ட்ரம் யத்ர ராமோ நிவத்ஸ்யதி) என்று வஸிஷ்டமாமுனி யருளிச்செய்ததை நினைந்து அவ்வாறேயாகுமென்று நம்பியும், ஸ்ரீராமபிரானை விட்டு இவரும், இவரை விட்டு ஸ்ரீராமபிரானும், பிரியுங்கால் இருவரு மின்புற நிராரென்பதைப் பிறந்தது முதல் நிகழ்ந்ததை யாராய்ந்தும, கைகேயிபோல மகனுக்கு நன்மையெனத் தீமைசெய்யாமல், தீமையென மூடர்க்குத் தோன்றினும், நன்மையேசெய்து பெரும்புகழ் பெறக் கருதியும், சுருக்கமாக யாவுமுணர ஓர் சுலோகத்தால் தன் திருமகனை நோக்கி, மீளவும அருளிச்செய்கின்றனள்.

రామం దశరథం విద్ధి మాం విద్ధి జనకాత్మజాం
అయోధ్యామటవీం విద్ధి గచ్ఛ తాత యథాసుఖం

ராமந்தசரதம்வித்தி மாம்வித்திஜனகாத்மஜாம
அயோத்யாமடவீம்வித்தி கச்சதாதயதாஸுகம.

அடா என் பெற்றலரு மைந்தா! ஸ்ரீராமபிரானையே (ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம:) என்கிற நியாயத்தால் தந்தை யெனவும், ஸீதாதேவியையே அந்த நியாயப்படியே என்னைப்போலவே தாயெனவும், ஸ்ரீராமபிரானெழுந்தருளியிருக்கும் ஆரணியத்தையே அயோத்தியெனவும நினைத்துச் சுகமாக மகிழ்ந்து செல்லக்கடவை. க—

அன்றி, ஸ்ரீராமபிரானையே (தசரதம்) கருடவாஹனராகிய ஸ்ரீமந்நாராயணனென நினைத்துப்போ, சீதாபிராட்டியையே (மாம்) ஸ்ரீமஹாலக்ஷ்மியென நினைத்துப்போ, அடவியையே (அயோத்தியாம்) ஸ்ரீவைகுந்தமென நினைத்துப்போ. ௨—அன்றி, "பெற்றாரு பெற்றொழிந்தார்" என்கிறபடி ஔபாதிக பந்துக்களாகிய எங்களைக் குவலாக நினைத்திராதே (தேவதேவோஹரிஃபிதா) என்றும், (பிதாத்வம்) என்றும், ஒளியுள்ளார்தாமே யன்றே, தந்தையுந் தாயுமாவார் என்றுஞ் சொல்லுகிறபடி நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீராமபிரானையே தஞ்சமென வெண்ணிப்போ, அவ்வண்ணமே ஔபாதிக மாதாவாகிய என்னைக் குவலாக நினையாமல் (த்வம் மாதா ஸர்வலோகாநாம்) என்றும், (அகிலஜகன்மாதரம்) என்றும், (ஸ்ரீயமகில லோகஸ்ய ஜனநீம்) என்றுஞ் சொல்லுகிறபடியே பிராட்டியையே தஞ்சமாக நினைத்துப்போ. ௩—அன்றி, கஷாய பானம்போலே சாஸ்திரவசியராய வார்த்திகைகை யன்றி, பாலே மருந்தாமாப் போலே (ராமோரமயதாம்வர:) என்கிறபடி பேரின்பந்தருமையின் ராலகையாலே, அதற்கடியான குணவத்தையில் (குணைர்தசரதோபம:) என்று உங்களையரோடொப்பனென நினைத்துப்போ, கைகேயிபோலன்றிக்கே நானுங்களையர்க்கு அனுகுணையா யிருக்குமாபோலே இவளும் உனக்கேற்குங் கோல மலர்ப்பாவையென்றும், (துல்யசீலவயோவ்ருத்தாம்) என்றுஞ் சொல்லுகிறபடியே பெருமாளுக்கநுகுணமான ஆகாரத்தாலே உம்மை யுகப்பிக்குமென நினைத்துப்போ, இத்திருவயோத்தி (ராமாபிஷேகஸம்யுக்தா:) என்று படைவீடாக அனுகூலமா யிருக்குமாபோலே திருவரணியமும் (மங்களாபிப்ரயுஞ்சாநா:) என்று அனுகூலமாயிருக்குமென நினைத்துப்போ. ௪—அன்றி, உங்களைப் பிரிந்த ஐயரினி உளராகார், இனிமேலெல்லாவுறவுமுறையும் பெருமாளென நினை, (அஸ்தஸமாவிதவா) என்கிறபடி நானுமொருத்தியுண்டென வெண்ணற்க, அந்த வுறவும் பிராட்டியெனவே நினை, இனிப் படைவீடு மொன்றுண்டென நினைக்கவேண்டா, புலலென்றெழுந்தென சொல்லென்று படைவீடு மின்றே காடெழுந்ததென நினைத்துப்போ ௫—அன்றி, உங்களையர் கைகேயி வார்த்தையைக் கேட்டு, உங்களைக் காட்டேறப் போகவிடுமாபோலே ஸ்ரீராமபிரானும் பிராட்டியார் வார்த்தையைக் கேட்டு, மாயா மாரீசன் பின் போகத் தொடங்குவாரிறே, ஆதலின், ஸ்ரீராமபிரானைத் தசரதமஹாராஜனெனவே நினைத்திரு, நானும்மை இப்பொழுது போகவிடுமாபோலே பிராட்டியும், உன்னை ஸ்ரீராமபிரான் பின் நிர்ப்பந்தித்துப் போக விடுங்கிறோ, ஆதலின், பிராட்டியையும், என்னைப்போலவே நினைத்துப்போ, இப்படைவீட்டில் நிற்கப்பெறுமல், காட்டேறப் போகிறாப்போலே அக்காடுதன்னிலும் நிற்கப்பெறுமல், கடற்கரையிலே போகக்கூடுங்கிறோ, ஆதலின், அடவியையு மிவ்வயோத்தியைப்போலவே நினைத்துப்போ. ௬—அன்றி, ஸ்ரீராமபிரான் வெறும் வடிவழகனொன்றிராதே ராக்ஷஸரோடே வினையொத்த காலங்களிலே உங்களையனைப் போலவே தனிவீரம் செய்யவல்ல ஆண்சிங்கமென நினைத்திரு, பிராட்டியையும், அப்பூசல் நிழ்ந்தம் பயப்படுகை யன்றி, தேவாஸுரயுத்தத்தில் உங்களையருடைய வீரப்பாடுகண்டால் நிற்குக ளுகக்குமாபோலே அவ்வாண்பிள்ளைத் தனங்கண்டால் (தந்த்ருஷ்ட்வா சத்த்ருஹந்தாரம்) என்கிறபடி மதித்துப் பாரிதோஷிகங் கொடுப்பாளொரு வீரபத்தினியென நினைத்திரு, அப்போ திவளைப் பேணுகைக்கு மதிளுஞ் சிறையுமாயிருப்பதொரு படைவீடில்லையென நினைத்திராதே காட்டோடு நாட்டோடு வாசியில்லை புலிநின்ற தூறெனுமாபோலே நிற்கிறவன் பக்கல் மதிப்பாலே அக்காடுதானே யொருவராலும், மேலிடவொண்ணாதென நினைத்துப்போ. ௭—அன்னையன்றி, உங்களைப் பிரிவிலாடாற்ற மாட்டாதாப்போலேயிரேர், உங்கள் தமையனும் (ரஜ்ஜீவேயம் க்ஷணம்

விரதாமவிதேக்ஷஞம்) என்றும, (அதயைவாஹங்கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாஞ் கதிம்) என்றும், உங்கள் பிரிவில பாடாறற மாட்டாதாரென நினைததிரு, நானிப்போ துங்களைப் போகவிட்டு எறறுகடுென பிளளையைப போக்கினேனெலலே பாவமே யென்று அநுதபிக்கப போகிறுபபோலே இவளு முஙகளைப போககி யனுதபிபப ளெனறிரு, இப்படைவீடு உஙகளைபபிரிநது (அபபராஷடமனுஷயாச தீனநாகதுரங கமா) (ஆாததஸவரபரிக்லாநு) என்று படபபோகிறுபபோலே உஙகளோடு பிரிவுண்டா ஞல (பரிசுஷகபலாசாநி) என்றும, (அபிவருக்ஷாஃ பரிமலாநுஃ) என்றும, அககாடு தானும் பாடுபடுமென நினைததுபபோ. அ—அஙஙனனறி, பெருமா ளொரு ஞானறு மிப்படி பாரிழநது திரியுமோவென்று நினைததிராதே உஙகளையயரோ பாதி முடியுஞ சூடிப பததுத திசைகளிலும், ஆணையுஞ செஙகோலும, நடாததுமென நினைததிரு, பிராட்டியு மபபடி யுடன கேடாகத திரிகையனறி, நான பட்ட மஹிஷியாகி இருக்குமாபோலே அபிஷேகஙகொணடு மஹிஷீபததிலே யிருநது, நிரவஹிஞசெயயுமென நினைததிரு, இபபடிககுத திருவபிஷேகம பணணின வனா தரம் (அபிஜனஸ்தானமபோடவிகனம லபதவாஸமாரபததநவோடஜாநி அததயா ஸதேசிரபருதோயதாஸவம சிரோசசிதானயாசரமமணடலாநி) என்றிக காடுதானும படைவீடோ பாதி நிறைகுடியென்று நினைததுபபோ. கூ—அனறி, (ராமநதசரதம வித்தி) (பதாதிவாஜ்ஜிதசசதரம) என்றும, "தேரொழிநது மாவொழிநது வனமே மேவி யென்றும, கலையுஙகரியும பரிமாவுந திரியுங் கானங கடநதுபோய" என்றும், அநுசந திததவாகள வயிறு பிடிககுமபடி, யென்றும் இககால நடையோவெனறிராதே, பநதுத திககுகளிலும புஷபகந தொடககமாகிய தேர்களினமீதேறித திரிவரென நினைத திரு, (மாமவிததி) "துனனுவையிலவறுததவெமபறமேற பஞசடியாள மனனனி ராமனபின வைதேகி யென்றுரைககும அனனநடை யவணஙகு நடநதனளே" என்று பிராட்டியும திரிவதறகரிய காட்டிலேயென்றுந திரியுமென நினையறக, நானுங்க ளைய ருகே தோததடடி யிருககுமாபோலே இருககுமென நினைததிரு இககாட்டிலே யுருவததிரிநதுவிடப புகுகிறதென்றிராதே? இதிலிபபோது நிததியஸஞசாரம்பண்ணப் புகுகிறுபபோலே மீணடு புகுநது இபபடைவீட்டிலே நிததியஸஞசாரம பணணப புகுகிறதென்று நினைததுபபோ. ய—ஆக இபபடி போகிறவிடததில அஸவாஸதி யதையை யநுஸநதிததுப பிறகாலித திளையபெருமாளோடேறறி வாாததைசொலலிற ருக இறே ஆபாததிறரேுறறுகிறது, இது (பராகேவதுமஹாபாகஸ ஸெளமிதரிாமித தாநநதனஃ பூாவஜஸயாநுயாதராாததேத ருமசீாைரலஙகருதஃ) (பாஷபபாயாகுல முகச சோகமவோடுமசகனுவன) என்றும், (குருஷவமாமனுசரம வைதாமயநேஹ விதயதே) என்றும், வியதிரேகததில நிலைமையைபபிடித திலலையாமபடியாயப போரு கைககு முறகோலிநிறகினற இளையபெருமாள நிலைககுசசேராது; இது சேருமபோது இஙஙனே பொருளாகவேணடும, (ராமநதசரதமவிததி) (அஹநதாவனமஹாராஜே பிதருதவநரோபலக்ஷயே) என்றுஙகளையரளவில நீா நெகிழநது நிறகினற தொனு றுணடு அததைவிடடுப பெருமாளைப பெறருமெனனு மாகாரததாலே யாகிலும், அவ ரோபாதி இவரு மொருததருணடென்று நினைததிருக்கவேணடும், எனனையும் அவர் கைபிடிததாரெனனு மாகாரததால நெகிழநதிராதே பெருமாள ஸம்பநததாலே பிரா ட்டியிடததில பிரபததி பணணியிருக்கினற மாததிரம அவா குடறறுவககாலே நானு மொருததியுணடென்று நினைததிரு, (வனமநகரமேவாஸது யேநகசசதிராகவஃ) என்று பெருமாளவிரும்பின காட்டையே படைவீடாகநினைதது இவ்வூாைநெகிழநதிருககினற தொனறுணடு, அதைவிட்டு அவா தஙகளையாசொல மாறுலமககாக்க காட்டை விரு மபினுபபோலே நம்பிசொல் மாறுலமககாக இபபடை வீட்டையும விரும்புவா, இத

றதையும் அவரோ பாதி உகந்தேசியமென்று நினைத்துப்போ. ௰௧—இப்படி இளைய பெருமாள் திருவுள்ளம் திடவேயானாலும், ராமவாத்சல்யத்தாலே கலங்கிச்சொல்லுகின்றுளாகையால், முன்பு சொன்னவையும் பொருளாகக் குறையில்லை; அன்றி, நீங்கள் நாட்டேறச் சென்றபின்னர், உங்களையர் (ராமம்) ஒழிந்தவரொன்றுணர்; என்னை கண்வருமிறந்து, மகனும் பிரிந்து, பகைமுன் பிழைத்தலரிதாதலால், தந்தை மனை சோர்ந்தவளென்றுணரும், திருவயோத்தி யுங்களையும் பிரிந்து, உங்களையரும் நெகிழ்ந்த பின், புலலெழுந்த டவியாமென்று முணர்ந்து, இங்கு நிற்கில இவ்வகையாகத் துன்பமேயன்றி, இன்பமுறுதென்று தோந்து சுகமாக ஸ்ரீராமபிரானுடன் போய்வா. ௰௨—அங்குள்ள குறைகளை நினைத்து நெஞ்சாறப்பட்டிராதே, அவ்வோரிடங்களுக்குத் தக்கபடியே பேணிக்கொண்டு போகப்பார், (கச்சதாதயதாசுகம்) நித்லுமடி தாழுமாறுமென்று சொல்லுகிறபடியே தொடர்ந்து குற்றேவல் செய்யப்பார், (கச்ச) அந்தமில் பேரின்பத்தடியரோ டிருந்தமையென்று சொல்லுகிறபடி இருந்தவிடத்தேயிருந்து கைங்கரியஞ் செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை, பின் சென்றுவில்லியென்று போற்றப் பார், (தாத) பகவான் விஷயத்தில் பக்தியுளைக்கொண்டவர்களைக் கௌரவஞ்செய்து வார்த்தைசொல்லக் கடவதென்கிற மரியாதையாலே ஐயரென்று சொல்லுகின்றுள், (யதாசுகம்) நன்மைகளும் வந்தது வரக்கண்டு போகப்பார், இவர் ஸுகத்துக்குக் குறைவென்பது (பவாமஸ்துஸஹவைதேஹ்யா கிரிஸானுஷு‑ரம்ஸ்யதே அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்று அசோத்தியிலே அடிமைசெய்யப் பாரித்து அவருக்கு அது கிடையாதே அம்மிதுனம் அக்கரையும் இக்கரையும் ஆகப்பிரிந்து, ஏகதேச கைங்கரியமாகையிறே, அங்ஙனன்றியிலே, (யதாஸுகம்) ஸ்ரீராமபிரானுக்கு எவ்வண்ணம் சுகமாகுமோ அவ்வண்ணம் (பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தாமஜ்ஞேந சலக்ஷ்மண த்வயாபுத்ரேண தாமாதமா நஸம்வ்ருத்தஃபிதாமம) என்று அவர் உம்மை யுடையவராகையால், யாதொரு வித்த்திலும் நெஞ்சிற் குறையறிருந்துக்குமாறு (யதாஸுகம்) (ஐசவர்யம் வாபிலோகானாம் காமயேந த்வயாவிநா) என்று பெருமாளைப் பிரியாமையிறே உமக்கின்பம், அப்பேரின்பம் வழுவா திருக்குமாறு (யதாஅஸுகம்) சோமயேறி மெய்வருத்தார் கைங்கரியத்தை நழுவவிடாமல் மெய்வாட்டத்திலும் கைங்கரியருசியால் துன்பங்களைப்பொறுக்குமாறு (கச்சதா) காடேற வெழுந்தருளும் ஸ்ரீராமபிரானுடன் (அத) இடைவிடாது செல்லுக. (ஸுகம்) நல்ல மனமுடைமையை (யதா) அடவியிலும் திருவயோத்தியிலே போலவே (கச்ச) அடையக்கடவை. அன்றியில், (ராமம்வித்தி தசரதம்வித்தி) ஸ்ரீராமபிரானையும் பார், தசரதரையும் பார், உங்களையரைவிட உம் தமையரோ மேலல்லரோ? (மாம்வித்தி ஜனகாத்மஜாம்வித்தி) என்னையும் பார், பிராட்டியையும் பார், என்னைவிடப் பிராட்டியே மேலல்லளோ? (அயோத்தியாம்வித்தி அடவீம்வித்தி) அயோத்தியையும் பார், அடவியையும் பார், இத்திருவயோத்தியைவிட ஸ்ரீராமனெழுந்தருளுந் திருக்கானகமே மேலன்றோ? (அயோத்தியா ஆம்வித்தி) அயோத்தியின் துன்பத்தையுமுணர், (அடவீ ஏம்வித்தி) அடவியின் அழகினையும் உணர், ஸ்ரீராமபிரான் சென்றவிடமே அழகுற்றும், அவர் பிரிந்தவிடமே துன்புற்று மிருக்குமென உணர்ந்து அவ்வின்பங் குலையாவண்ணமுடன் செல்லுக. ௰௩—என்று சுமித்திரையார் ஸ்ரீராமபிரானிடத்திலுள்ள வாத்சல்யத்தாலும், இளையபெருமாளிடத்திலுள்ள ஹிதபரதையாலும், இவ்வண்ண மிதங்கூறி விடைகொடுத்து வாழ்த்தி யனுப்பினாளொன்றுணர்க.

## நாற்பத்தொன்றாவது சருக்கம்

ஸ்ரீராமபிரான் எழுந்தருளியபின் அயோத்தியிலிருந்தோரும் அவனையே நினைந்து வருந்தியது.

அநந்தரம இவவண்ணம சக்கரவர்த்திதிருமகனார் தந்தைதாய்களை நோககிக் கைகூப்பிக்கொண்டு புறப்பட்டெழுநதருளி விடுகையில, அநதப் புரத்திலுள்ள ஸ்திரீகளெல்லோரு மொன்று சோநது, அந்தோ! திககற்ற நம்மெல்லோர்க்கும் யாவனொருவன தஞ்சமாயிருந்தனனோ? அவன இப்பொழுது நம்மை விட்டுவிட் டெங்கே போய்விடுகிறான? அவன தனனை யொருவர் வன்மையாகச சொல்லினும் அவாமேல் கோபங்கொளளாமலும், ஒருவா கோபங்கொளளத்தகக செயல்களைச செயயாமலும், சீறினோர்களைச சமாதானப் படுததிககொண்டு, பிறா துககமுறின் துக்கத்தையும், சுகமுறின் சுகத்தையும் அடைந்தும் இருந்தானே, அவன இப்பொழு தெஙகுச செல்கின்றான். அவன் தன்னைப பெறறெடுதத கோஸலையாா பககலிறபோல நம பக்கலிலும் பத்தியுடன பணிவிடை செயதனனே? அவனிப்போழு தெங்கேகின்றான். அந்தோ! இநதப பாவி கைகேயியா லேவப்பட்டு, மஹாராஜர் சொல்கேட்டுக கடுங்கானகஞ்சேர்ந்து எங்குந்திரிநது வருந்துவானோ? அந்தோ! மஹாராஜா மிகவும் மதியறறவா இலராகில் தருமமுடையவனும், ஸத்தியமுடையவனும் ஆகிய எம்மபி ராமனைக் காட்டேறச செல்லவிடுவரோ? என்றிவவண்ணம கனறினைவிட்டுப பிரிநத பசுககளபோலத்துனபத்தால் வருந்திக கூவென்று புலம்பியழுது பழிததனாகள. முனனமே புத்திர சோகத்தால் பீடிக்கபபட்ட மஹாராஜா அவர்களி னழுகுரலைககேட்டு மிக வருந்தி மருள்கொண்டனா. அபபொழுது வேதியாகள அக்கினிஹோத்திரம் முதலிய வைதிகச சடங்குகளையுஞ் செயதிலாகள. இல்லறத்தோர்கள அதிதிகளைப் பூசிப்பதற்காகச சமைத்து மிலா, மறறுமுளள ஜனங்களும், தந்தமக்குரிய செயகைகள் ஒன்றையுஞ் செயதிலா; சூரியனும இத்துயரத்தைக் கண்டு, பொறாதானபோல மறைந்தனன. மதயானைகளும் கவளங்களை விட்டு நின்றன, பசுக்களும் கன்றுகளுக்குப பால்கொடாமல் உதைத்தன, நெடுநாள்மலடாயிருந்தவள நறபுதலவனைப்பெறறும்மகிழ்ந்திலள், திரிசங்கு, அங்காரகன், புதன், பிருஹஸ்பதி முதலிய கிரஹங்களும், சிலர் சந்திரனுடன் ருஜுகதியாலும், வக்ரகதியாலும் சோந்தும், சிலர் ஏழாமிடத்திலும் மூன்று பத்து நான்கு எட்டு திரிகோணம என்னு மிவ்விடங்களுள ஒன்றிலிருந்து சந்திரனைப்பார்த்தும, உலகத்துககுத் துன்பத்தை விளைப்பவர்களாகிநின்றனர்கள். மற்றுமுளள கிரஹதேவாகளும், நக்ஷத்திரங்களும், ஒளியற்று மலினமாயினாகள. இக்ஷ்வாகுகுல நக்ஷத்திரங்களாகிய விசாகைகளும, வழிதப்பித் தூமகேதுவுடன கூடி ராஜனுககுத் தீங்கினைத் தோறறுவிப்பனவாக ஆகாயத்தில் காணப்பட்டன. மழைமாரியுடன் பெருங்காற்

தெழுந்து பெருங்கடலும் மேலெழுந்து கலங்கிப் பொங்கியதுபோல அத்திருவயோத்தியும் நடுக்கமுற்றது; பத்துத் திசைகளும், இருள் கொண்டனபோலத் தோற்றமில் மலினமாயின; நவகக்கிரஹங்களும், நக்ஷத்திரங்களும், விளக்கமற்றன, காரணமின்றியே நகரிலுள்ளவர்க ளெல்லோர்க்கும் பெரும்பயமுண்டாயிற்று; ஒருவரும் உணவிலும், உலாவுதலிலும், மனங்கொண்டிலர். யாவரும் நெட்டுயிர்ப்புக்கொண்டு துன்புற்று மஹாராஜனைக் குறித்தே சோகங்கொண்டனர்கள். பரிஜனங்களும், கண்ணுங் கண்ணீருமா யழுது வருந்தி நின்றனர்களே யன்றி, ஒருவரும் மகிழ்ந்திலர்; காற்றும் குளிர்ந்து வீசிலது, சந்திரனும் அழகுற்று நிலாவீசியிலன, சூரியனும் முன்போல ஒளிகொண்டு காயந்திலன, தாய்களைப் புதல்வரும் முலையுண்டு மகிழ்வித்திலர். மனைவியர்களைக் கணவர்களும் இன்பந்தந்து கலந்து மகிழ்வித்திலர். உடன்பிறந்தோர்க ளுடன்பிறந்தோர்களையும், தத்தமக்குரியபடி நடந்து மகிழ்வித்திலர்கள். எல்லோருமெல்லாவற்றையுந்துறந்து, ஸ்ரீராமபிரானையே நினைந்து வருந்தினார்கள் ஸ்ரீராமபிரானுக்கு நட்பினர்கள் யாவர் நின்றனர்களோ? அவர்களெல்லோரும் மோஹங்கொண்டு வருத்தமுற்றுப் படுக்கையைவிட் டெழுந்திலர். இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் நீங்கி எழுந்தருளிவிடுகையில், அத்திருவயோத்தி புரந்தரன் நீங்கி விடுகையில், பூமி முழுதும் பர்வதங்களுடன் கூடி நடுக்கமுறுவதுபோல யானை, குதிரை, தேர், பதாதிகளுடன் கூடிய பயத்தாலும் சோகத்தாலும் பீடைகொண்டு நடுக்கமுற்றொலித்தது.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தொன்றாவது சருக்கம் முற்றிற்று

---

## நாற்பத்திரண்டாவது சருக்கம்.

### சக்கரவர்த்தி திரும்பிக் கோஸலையார் அந்தப்புரஞ் சேர்ந்தது.

---

அநந்தரம் மஹாராஜர் ஸ்ரீராமபிரான் கட்புலனுக்காவிடினும், அவரெழுந்துகையிலெழுந்த தூளி எவ்வளவில் காணப்பட்டதோ அவ்வளவில் கண்கொட்டாமல் பார்க்கையில், மஹாராஜர் இவ்வளவு ஆதரத்தால் பார்க்கின்றமையாலும், மீண்டுவுடன் மிக வருந்துவ ராதலாலும், இன்னும் சில நேரமாயினும் என்னைக்கண்டு மகிழ்வுறக் கடவதென்று என்னைக்கொண்டு பூமியிலெழுந்த தூளி மேன்மேலு மெழுந்ததுபோலும், அப்பொழுது மஹாராஜர் வலப்புஜத்தைச் சார்ந்து, கோஸலையாரும் இடப்புஜத்தைச் சார்ந்து, கைகேயியும் வருகையில், அவர் நீதியையும், தருமத்தையும், விநயத்தையு மறிந்தவ ராதலின், கைகேயியைக் கண்டு வெறுப்புக்கொண்டு

அவளை நோக்கி, அடிபாவி கைகேயி! கொடியாளே! நீ என்னங்கங்களைச் சாரற்க; உன்னைக் காண்பதிலும் யான் விருப்புற்றிலேன்; நீ எனக்கு மனைவியுமல்லை; பந்துவுமல்லை; உன்னைச் சார்ந்தவர்கள் யாவருளரோ? அவர்களும் என்னைச் சார்ந்தவர்களல்லர்; யானும் அவர்களுக்கு உறவினனல்லேன்; மிகவும் பொருளையே முதன்மையாகக்கொண்டு தருமங்களைத் துறந்த உன்னை யானும் இப்போழுதே துறந்து விடுகின்றேன்; முன்பு யான் உன் கையைப் பற்றித் தீவலஞ்செய்து விவாஹஞ் செய்துகொண்டேனென்பதையும், இம்மை மறுமை இரண்டிலும் துறந்து விடுகின்றேன்; பரதனும் ராஜ்ஜியங் கிடைத்ததேயென்று மகிழ்ந்து, முன்னோர் முறைமை தவிர்ந்து பெறுவானாகில், அவன் செய்த தருப்பணமும் என்னைச் சேராதொழியக் கட்வது. என்றிவ்வண்ணம் புகழ்ந்து தூளியுங் கண்ணுக்குக் காணாமையால், தரையில் வீழ்ந்து புரண்டு துக்கப்படிந்து மயல்கொண்டு வருந்தினர். உடனே கௌஸல்யாதேவி மஹாராஜரைக் கைகளாலணைத்தெடுத்து மஹா சோகங்கொண்டு திருமபினுள் சக்கரவர்த்தியும் மனமறிந்து பிரஹ்மஹத்தி செய்தவன்போலவும், எழுந்தெரியுந் தீயில் கையிட்டவன்போலவும், தந்திருமகன் தவசியாகி வனஞ்சென்றதை நினைந்து மிகவுந் தாபங்கொண்டு அடிக்கடி திரும்பித் திரும்பி நோக்கித் திருக்குமாரனை யுன்னி வருந்தி, ராஹுவின்ல் பீடிக்கப்பட்ட சூரியன்போலக் காந்தியற்றவராகித் திருமகன் நகரங்கடந்து சென்றதைக் கேட்டு, அந்தோ! என் திருமகனேறிச் செல்லுகின்ற தேர்க் குதிரைகளி னடிகள்மாத்திரம் வழியில் காணப்படுகின்றனவே அம்மஹாத்துமா காணப்பட்டிலனே? என்னருமைத் திருமகனல்லனோ இதுவரையில் இலவம்பஞ்சின் மெத்தையில் மெதுவாகிய தலையணைகளில் சிரத்தை வைத்துக்கொண்டு, சிறந்த தாதியர்களால், விசிறிகளால் வீசப்பட்டுத் துயில்கொண்டு, இனிக் காட்டிலோர் மரத்தடியில் ஒரு சிலையையாயினுங் கட்டையையாயினும், தலைக்கணையாகக்கொண்டே துயில்கொள்வானந்தோ? இதுகாறுங் குளிர்சாந்தம் மப்பிக்கொண்ட என் மகன் இனிக் காட்டி யானைபோலப் புழுதிபடிந்தன்றோ துயினறெழுவான். காட்டிலுறையும் மனிதர்கள் என் திருமகனை லோகநாதனாகியும், அநாதன்போலத் திரியக்காண்பார்களோ? அந்த ஜாநகியும், மிகவும் செல்வமாய் வளர்ந்து வனமென்பதையு மறியாதவளாதலால், கல்லிலும் முள்ளிலும் நடந்து கால் சிவந்து கொடிய மிருகங்களின் தொனியையுங் கேட்டு, மிகப் பயமுற்று வருந்துவளந்தோ? அடி சண்டாளி கைகேயி! நான் என்னருமைத் திருமகனைப் பிரிந்தும் பிழையேன்; ஆதலின், நீ கைம்பெண்ணாகி இவ்விராஜ்ஜியத்தை யாண்டு கோரிக்கை யீடேறி மனங்குளிர்ந்து வாழ்க, என்றிவ்வண்ணம் புலம்பியழுது மரிதவர்க்காகத் தலைமுழுகினவன்போல ஒளியற்ற தன் மனையை நோக்கிச் சென்று, புரமெங்கும், மனைவாயில்களிலும், நாற்சந்திகளிலும், ஜனங்களின்றி வறியதாயும், கடைகளையுந் தேவாலயங்களையுந் திறவாமல் மூடியும், வாடியும், வலிமை குன்றியும், துன்பத்தால் வருந்தியும், ஒவ்வோரிடங்

களில் ஜனங்களிருக்கவும் கண்டு, ஸ்ரீராமபிரானையே சிந்தித்தவராகிப் புலம்பிக் கதிரவன மேகஜாலத்தைப புகுவதுபோலத் தன் அந்தப்புரம் புகுந்து பயங்கொண்டொளித்த பன்னகங்களைக் கருடன் பறறிப பிடித்துப்போன பின்னர், பெரிய மடுக்களிருப்பதுபோல ஸ்ரீராமர் ஸீதை லக்ஷ்மணர் இவர்கள இல்லாமையால், வாளாக்கிடக்கு மந்தப்புரத்தைக் கண்ணுற்று மீளவும் புலம்பி யருகிலுள்ளோரை நோக்கி, நீங்கள விரைவாக ஸ்ரீராமபிரானைப் பெற்றெடுத்த கோஸலையி னந்தப்புரத்தி லென்னைக்கொண்டு சேர்க்கக் கடவீர்கள். வேறோரிடத்திலும் என் மனத்துக்குத தேறுதல பிறவாதென்று மெதுவாக உரைசெய்தனர். உடனே துவாரபாலாக ளிவரை யழைத்துக் கொண்டு வந்து கோஸலையார் திருமாளிகை சேர்த்துச சென்றனர்கள். பின்பு மஹாராஜர் கோஸலையார் திருவணையில படுக்கினும், மன மின்புறாமல் வருந்தி, அம்மூவர்களு மின்றிச சந்திர னழிந்த ஆகாசம்போன்ற அம்மனையைக்கண்டு கையை மேலெடுத்துக்கொண்டு ஐயையோ ராமா! என்னை விட்டு நீ போய் விடுகின்றனையே யென்றும், நீ மீண்டு வருமளவும், பிழைத்திருந் துன்னைககண்டு கட்டியணைத்து மகிழ வெய்துவார்களன்றோ? நல வினை செய்தார்கள என்றும் புலம்பி யழுதனர். அநந்தரம் தமக்குக காள ராத்திரிபோன்ற இரவாகி வளருகையில, தசரதமஹாராஜர் அர்த்தராத்திரி வேளையில கோஸலையாரை நோக்கி,—

రామమ్మేనుగతాదృష్టి రద్యాపిననివర్తతే
నత్వాపశ్యామికౌసల్యే సాధుమాంపాణినాస్పృశ

ராமம்மேனுகதாதிருஷ்டி ரதயாபிநநிவாததே
நதவாபசயாமிகௌஸலயே ஸாதுமாபாணிநாஸபருச.

அடி என பிராணநாயகி! என்னுடைய கண்ணுக்கு (ரூபௌதார்ய குணைஃபும்ஸாந த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடி அபிராமனாகிய ஸ்ரீராமபிரான பின சென்று அங்கே நின்று விட்டது. என்னருமைத் திருமகன கட்புலனகடந்து செலலினும், இப்பொழுதும் மீண்டிலது; ஆதலின அருகிலுள்ள உன்னையும் காண்கிலேன, நீ என்னைக் கரத்தால் நன்கு பற்றிக்கொள் என்றனா. இவவண்ணம் ஸ்ரீராமபிரானையே நினைந்து வருந்துகின்ற மகாராஜனைக்கண்டு கோஸலைதேவியும் அருகிலுட்கார்ந்து அவனைக் கைகளால் பற்றிக்கொண்டு சோகம் மும்மடங்கு பெருகி நெட்டுயிர்த்து மிகவும் தீனமாகப புலம்பலுற்றனள்.

அயோத்தியாகாண்டத்தில நாம்பத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

---

(ராமம்மேனுகதாத்ருஷ்டிஃ) என்பதின் கருததுரை.

சக்கரவர்த்தியினுடைய கரணங்கள் பெருமாள் பக்கலிலே அநன்யார்ஹசேஷமானபடியைச்சொல்லுகிறது (ராமம்மேனுகதாதிருஷ்டிஃ அத்யாபிநநிவர்த்ததே

(ஸமுத்ர இவகாம்பீரயே) (ஸமஸ்தகல்யாண குணம்ருதோதிஃ) (ஸுஹாமாக ரோம ஹாஸ்) என்று பெருமாளைக் கடலாகச் சொல்லுகையால், கடல்கொண்ட வஸ்து மீளப்பெறலாகுமோ ? (ராமம X ஷடிஃ) (ராமோரமயதாமவரஃ) என்கிறபடி சேதநா சேதன விபாகமறததுவட்டுகின்ற அவா மீனுமினுககைக கொடுபோக்கியதாருறறமோ? (ராமம் X ஷ்டிஃ) கணருபமுடையதைக கிரஹிககும ரூபமுடையவர் கண்ணைக கிர ஹிப்பதே, (அறுகதா) ஒருபொருளைக காணபதறகுரிய கண, காலின தொழிலான பின் செல்வதைப பறறுவதே, (ராமம -- ஷ்டிஃ) பின செலவதெனபது ஒருசேதனன் செய லாகி யிருக்க, அசேதனமாகிய கண செயவதே, (ராமம -- ஷடிஃ) கணணுவா னென்றும், மணணோ விணணோரகரும்என்று சொல்லுகினற உலகமனைத்துககும் கணணுகிய து முன் செல்லுகையில, மறறுள்ள கணகளும அதன்பின செலவது வியபபோ ? (திருஷடிஃ)திருசில பிரோக்ஷணே எனகினற விணைபபொருளினபடியே சாரராசார விவே கஞ செயய வலலமையுள்ள தாதலி னனறோ?அவா பின தொடாநதது, (மேத்ருஷடிஃ) அழகியதக நெடுஙகாலம பழகிய என கணணுகியும, எனனைத தொடராது ஸ்ரீராம னைத தொடாநததேன, (மேதருஷடிஃ) இதுதான சுதந்திரமாறு லிப்படி செயயலாம் என கண கணடீா, (மே) கைகேயி கணணுகி லிபபடி செயயாதிறே, (மேதருஷடிஃ) சபலனுன எனனுடையது,(மேதருஷடிஃ)என சமபநதமுளள கைகேயிபோலக கருணை யறறிராமல, சீதாபிராட்டிபோலப பின சென்றதேன,(மேதருஷ்டிஃ)(சுநதரம்புருஷந தருஷடவா பராதரமபிதரமஸஹதம) எனகிறபடி என கணணுகியும, என திருமகன பின செலவதே (மேதருஷடிஃ) (கலலைறை தபபினுங கணணறை தபபாது) (ராஜதரு ஷடி கொடியது) எனகிற பழமொழிகள பொயயாகுமோ ? சககரவாததியாகிய என கணணறையே என் திருமகனமீது தாஙகிறதே, ஆதலாலனறோ ? இததீஙகு நோ நதது,(தருஷடி-மேராமம)எநதப பாவிகணணோ என திருமகனமீதுதாஙகிறதே, (மே அதருஷடிஃ) பாவியாகிய எனனுடைய தீவினை ஸ்ரீராமபிரானையும்பினசென்று வரு த்துகினறதே, (மேஅதருஷடிஃ) எனனுடைய நலவினை ஸ்ரீராமபிரான பினனே சென்று விட்டது, இனி யான உயயேன, (ராமம கதாதருஷடிஃமேறு) ஸ்ரீராமபிரான பின றொடாநத கண எனனுடையதா?எனனுடையதாகில, ஸ்ரீராமபிரான பின செலலுமா? (மேதருஷடிஃ ராமஙகதாறு) என கண ராமனபின சென்றதோ?(மேதருஷடிஃ) என் ஞானம ஸ்ரீராமபிரான பினனே சென்றது, அநநதரம மீளாதோ வென்னில, (அதயாபி நிவாததததே) (அதிகராநதேபிராகவே) எனறு அவா தநககைக் கடந்தெழுநதரு ளிய இபபொழுதும மீணடிலது, (தருஷடிரதயாபி நிவாததததே) இஙகேவரின கைகேயி முகததில விழிககவேணடி யிருககுமே யெனறு பயந்தா லிபபோழுதும மீளுகினறிலது. (மேதருஷடிரதயாபி நிவாததததே) ஒருவாக கொருதுனபம நோநதால, அவரைச சோநதவா அருகிலவந துதவித தேறறி யுபகாரஞ செயயவேண்டு மிறே, நான ஸ்ரீராமபிரான விரஹததா லிபபடி துனபமுறற இவ்வளவிலும என கண் மீள வநதெனக் குதவிசெயதிலதே, (மே + நிவாத்ததே) நெடுங்காலம்பணணின வாசனையெலலாம் விடடு விடடு, (நோபஜனமஸ் மரநநிதம் சரீரம்) என்கிறபடி நம்மை நேராக மறநது வாரா தொழிவதே, (தருஷடி + ரததே) என திருமகனை மீட்க மாட்டா தாகிலும், தான மீளததட்டென்ன ? (ராமம்மே + நிவாத்ததே) பரப்ரஹ்மமாகிய ஸ்ரீராமபிரான பின சென்றமையால், (புநச்சநா வர்த்த தே) என்கிறபடி மீட்சியிலதாயிறறிறே, (அதயா + தே) மீளுஙகால உன துன்பத்தைப் பார்த்துப் பொறுக்க ஆறறலின்றியோ மீள்கினறிலது; (அதயாபி + வர்த்ததே) காமுகி யாகிக் கட்டுதன் பின சென்றவளும், மீளுவளோ?(அத்யாபி + தே) திருஷ்டிகழியா ...........................மீளாதிறே, (அத்ருஷ்டி X நிவர்த்ததே) தீவினை இப்போழ்து

மென்னைக் கொலை செய்யாது மீளாதே, (அத்ருஷ்டந்தந்தே) என்னவியை என் திருமகன் மீண்டானன்றே ? அவனுடன் மீள்வது, (த்ருஷ்டி:) கண்ணும், (அத்யா) சுவையினை யுணர்விக்கும் ரஸநமும், (அபி) மற்றுமுள்ள புலன்களும் (ராமமநுகதா நிவர்த்தந்தே) இவை யாவும் ஸ்ரீராமபிரான் பின்சென்று மீண்டிலவே, (த்ருஷ்டிர் நநிவர்த்ததே) என் நினைவு இப்போழ்தும் ஸ்ரீராமபிரானை விட்டு மீண்டிலதே, மீட்சியில்லையாவதென், அது உம்மைவிட்டுப் போயிற்றே மீளுகைக்கென்ன, அது ராமன்பின் சென்றதற்குக் குறியென்ன, என்று வினவின. அதற்கு விடையுரைக்கின்றார். (நத்வாபச்யாமி) கட்புலன் கட்புலனாகாமையாலும் அதன் காரியத்தா லதனை யூஹைசெய்யவேண்டுமாதலாலும், அருகிலிருக்கின்ற உன்னைக் காணகிலேனாதலால், என் கட்புலன் ஸ்ரீராமபிரான் பின் சென்றதே, (நத்வா) குளிர்ந்தபிராகினறேனாகிலும், கண் மீண்டு வரக்காணகிலேன், (நத்வாபச்யாமி) நமஸ்காரஞ்செய்து தியானஞ்செய்கின்றேனாகிலும் மீளுகின்றிலது., (நத்வாபச்யாமி) ஒரு பொருளையும் நன்றாகக் காணகிலேனே, (நத்வாபச்யாமி) காணகிலேனாகிலும் கேட்கின்றேன், (வசஸாஜ்ஞாதஸவ்யேனாம்கம்) என்கிறபடி வார்த்தை சொல்லுகையால், அருகிலிருக்கின்றனை யென்று ஊஹித்தேன், (நத்வாபச்யாமி) அவர் முகத்திலே விழிக்கப் பெறு தொழிந்தாலும், அவரைப் பெற்ற உன் முகத்திலே யாகிலும், விழிக்கலாமென்றிருந்தேன்; அதுவுங் கிடையா தொழிவதே, (நத்வாபச்யாமி) "அண்டாகோ னணியரங்க னென்னமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்னுமாபோலே அவ்விஷயத்திலே ஆழங்கால் பட்டு வேறொன்றைக் காணவைத்தேனென்கிறான், இப்படி சக்ஷுரிந்திரியந் தனக்குதவாமையாலே வாகிந்திரியத்தைக் கொண்டாகிலும் மனந்தேறுவோமென்று அவன் பேரைச் சொல்லி யாறுகின்றான்; (கௌஸல்யே) (கௌஸல்யாலோகபாத்தாரம் ஸுஷுவேயம்மனஸ்வினீ) என்கிறபடியே நீ நாடுவாழ மனோரதங்கொண்டு பிள்ளை பெற்றபடியும், அதெல்லாங்கிடக்க, நாட்டோடு என்னோடு வாசியறக் கெடும்படியாவதே' கௌஸல்யே (இங்கிதஜ்ஞாச்சகோஸலா:) என்று அவரவர்கள் கருத்தினைக் கோஸல நாட்டார் இங்கிதத்தினாலே யறிகின்றாரக ளல்லரோ ? ஆதலின், கோஸலநாட்டா ரெல்லோர்க்கு மிறைவன் திருமகளாகிய நீ இங்கித மறிந்தவளென்பதிலையமுள தாகுமோ ? ஆதலின், என் மனக் கருத்தறிந்த நீ என்மீது சினமுறாமல் அருள் செய்யக் கடவை. இவளிப்படி தன் தளர்ச்சி தோற்ற, கௌஸல்யே என்றழைத்தவாறே இயங்கின இவரையும் இழக்கலாகாதே புகுகின்றோம் என்று துணுக்கோடே கிட்டவந்து செய்யவேண்டுவது என்னென்று கேட்க, (ஸாதுமாபாணிநாஸ்ப்ருச) அணிமிகு தாமரைக் கையை யந்தோ ? அடிச்சியோந் தலைமிசை நீ யணியாயென்று அவ்விஷயத்தில் சொல்லக்கடவ பாசுரத்தை அது கிடையாமையாலே ததீயவிஷயத்திலே சொல்லுகின்றார். என்னுடைய க்லேசமெல்லாந் தொலையும்படி உன்னுடைய குளிர்ந்த திருக்கையாலே தடவி மகிழ்வுறச் செய்யக்கடவை. (ஸ்ப்ருச) அருகிலிருக்கின்ற உன்னைக் காணாமையால், கட்புலன் என் திருமகன் பின் சென்றதென்றறிந்தோம், உன்னுடைய இன்மொழி கேட்கின்றமையால், செவியுளதென் றுணர்ந்தோம், கௌஸல்யே என்று உன்னுடைய திருநாமத்தை யுரைக்கின்றமையால், வாய் வாய்த்ததென்று தேர்ந்தோம், நாற்றமறியாமையால் அவனை உச்சிமோந்த மூக்குப்போயதென்று தெரிந்தோம், ஸ்பருசம் உளதோ வென்பதை அறிவோமென்று விரும்புற்றோம், அஃதறியலாம்படி என்னை அணைத்துக் காணாய், கள்ளர் புகுந்துபோன அகத்திலே கிடந்ததும் கிடவாததும் ஆராய்வாரைப்போலே வந்து போனவர் தாம வஞ்சக் [illegible], என்னையும் புன்மொழி [illegible] [illegible] மூர்த்தனிப் போன புவிதொன்றுமிறே, (ஸாதுஸ்ப்ருச) இத்தனைபொழுதும் [illegible]

## நாற்பத்துமூன்றாவது சருக்கம்.

### கோஸலையார் மஹாராஜருடன் தன் குறைகளைச் சொல்லிப் புலம்பியது

அநந்தரம் புத்திரசோகத்தால் மனந்தளர்ந்து மகிழ்வற்றுக் கவலையிலழுந்தித் திருப்பள்ளியில் ஒடுங்கிப் படுத்து வருந்துகின்ற மஹாராஜரைக் கண்டு கோஸலையாரும், மிகவும் சோகக்கடலி லழுந்தி, மஹாராஜரை நோக்கிப் பிராணநாதரே! என், சக்களத்தியாகிய கைகேயி! புருஷசிங்கமாகிய என் திருமகனிடத்தில் கபடமென்னும் விடத்தை விதைத்துத் தோலுரித்த நச்சரவுபோல அச்சமற்றுத் திரிவளே? அன்றியும், என் திருமகனைக் காடேறவோட்டி ராஜ்ஜியத்தையும் பெற்றுக் குறையற்று மகிழ்வுற்றுக் கொடிய பன்னகிபோல இம்மனையிலிருந்து அடிக்கடி என்னையுமச்சமுறச் செய்வளே? ஸ்ரீராமன் பிச்சையெடுத் துண்டாயினும், இந் நகரில் வாஸஞ்செய்து, பரதனுக்கு அடிமை செய்யும்படி நீர் வரந் தந்திருப்பீராயினும், அஃதெனக்கு நலமாகும், அங்ஙனமுஞ்செய்யாது கைகேயி மூலமாய் என் திருமகன் கெடுக்கப்பட்டு நிலைபோந்து பர்வகாலத்தில் தேவர்க்குரிய ஹவிர்ப்பாகம்போல ராக்ஷஸர்பா லாக்குவிக்கப்பட்டானந்தோ? இப்பொழுது என் திருமகன் மதகஜம்போல நடந்து முழங்காலளவும் நீண்டிருண்ட திருக்கையில் கோதண்டத்தை யேந்தி, ஸீதாதேவியுடனும், இளையபெருமாளுடனும், வனத்திடைப் புகுவானே, ஐயோ? கைகேயியின் பொருட்டுத் தேவரால் காட்டிலோட்டப்பட்ட அவர்கள் இதுவரையில் துன்பமென்பதை யறியா ராதலின், இப்பொழுது எப்பாடுபடுவார்களோ? இன்பமுறுங்காலத்தில் பொருளிழந்து, இனந்துறந்து, வனமுறைந்து வருந்தி, காய் கனிகளை யுண்டு, எவ்வண்ணம் பிழைப்பார்கள். என் திருமகன்

---

ஒருப்பட்டாய அவனைக் காடேறப்போகவிட்டு இப்பொழுதாகின்றது ஆரோதமமடியா நின்றுன என்று நினைத்திராதே, அவிதயாஸபருசத்தாலே இக்கலக்க மிவனுக்கு வந்ததின் இப்பாவி என் செய்வானென்று நெஞ்சிரக்கத்தோடே தொடவேணடும், (பாணிஸ்பருச) அன்று அக்கினி ஸாக்ஷிகமாக நன் முகூர்த்தத்தில கௌதகத்துடன் பிடித்த அக்கையாலே அநந்நினைவுடன் தொடு, (பாணிஸபருச) எல்லா வவயவங்களாலும் என்னை மீண்டத்து வெள்ளக்கேடாகாமல தணியும்படி கையொன்றிலுமே தொடு, (ஸாதமபாணிஸ்பருச) பெருமாளை எடுப்ப தொய்ப்பதாய் அவருடைய அங்கஸபருசத்தாலே பரிமளிதமான அக்கையாலே தொடவேணடும், (மாஸபருச) ராமஸபருசம் பெறின உஜ்ஜீவித்தும, பெறுமையில முடியும்படியுமிருக்கின்ற என்னை அவரைப்பெற்ற உன்னுடைய அக்கையாலே யன்னை, பெருமாளுடைய திருமேனி ஸம்பந்தம் நேராக் கிடையா தொழிந்தால அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகளின் திருமேனி ஸம்பந்தங்கொண்டு உஜ்ஜீவிக்கக்கடவதாயிற்றே [illegible] (ஸம்பந்த [illegible] ஸபருச) என்றவர் தாமும் [illegible] [illegible] இப்படி பட்டாரிறே.

ஸீதையுடனும், இளையபெருமாளுடனும வனவாஸந் தீர்ந்து, மீண்டு தூங்கி யெழுந்தவர்போல இத்திருவயோத்திக்கு எழுந்தருளக்கண்டு, நான் சோகந்தீர்ந்து மனமகிழ்ந்து, வாழுங்காலமும் நேருங்கொலலோ ? இத்திருவயோத்தியானது மனமகிழ்ந்த ஜனங்களுடையதும், நன்குயாத்திக் கட்டப்பட்ட துவஜபடங்களை யுடையதும், நன கலங்கரிக்கப்பட்டதுமாகி, திருவரணியத்து நின்றும், மீண்டெழுநதருளும், என்னரும் புதலவர்களை எப்பொழுது மகிழுவிக்குங்கொலோ ? என் திருமகன திருத்தேரின மீது பிராட்டியை முன்னிட்டுககொண்டு, பசுவை முன்னிட்டுவரும் காளைபோல இத்திருவயோத்திக்கு என்றுதான் எழுநதருளுங்கொல்லோ! என் திருமைந்தர்கள இங்கெழுந்தருளுகையில, அநேகமாயிரம் ஜனங்கள, ராஜமார்க்கங்களில், பூமலாகளையும், பொரிகளையும், எபபொழுது தூவுங்கொல்லோ! என் புதலவாகள சிறந்த வாளகளைத் திருக்கரத்திலேந்தி, முடியுடைய மகிதரங்களபோல விளங்கி நின்மலமாகிய குண்டலம் முதலிய திருவணிகளை யணிந்து இத்திருவயோத்தியில் புகுகையில், நானெப்பொழுது கண்குளிரக் காணபேன்கொல்லோ! நல்வேதியாகளும், கன்னியர்களும், நனமலாகளையும், கனிகளையும்மகிழநது, உபகாரமாககொடுகக என்னருஞ்செலவமைந்தாகள அவைகளை யுவகைகொண்டு அங்கீகரித்து ஆனந்தமுற்று, இத்திருவயோத்தியை எக்காலம் வலஞ்செய்வாகொலலோ ? நல்லறிவு சிறந்தவனும், வயதினாலும், வடிவழகினாலும், தேவகுமாரன் போன்றவனும், தருமமுணர்ந்தவனுமாகிய என திருமகன் மூன்றுவயதுள்ள குழநதைபோல என மனமகிழச் செய்பவனாய், எப்பொழுதிங்கு எழுந்தருளுஙகொல்லோ! முற்பிறபபில் நான் கொடியளாகிக கன்றுகள பசிகொணடு, தாய் முலையுண்ண முயலுகையில், அவைகளை யுண்ணவிடாமல் தடுத்துப் பிரித்தோட்டினேன போலும, இவ்விஷயததில் சந்தேகமேயில்லை; அன்றேல், சிங்கத்தினால் பசு கன்றைவிட்டுப பிரிககப்படுவதுபோல, நான் என் திருமகனைவிட்டுப பிரிக்கப்பட்டு வருத்தப்படுவேனோ ? கேளீரோ என் பிராணநாயகரே ! கொடியஇக் கைகேயியினால், இளங்கன்றினைத் தாயைச் சேரவிடா தோட்டுவதுபோல என் திருமகனும் வலுவிலோட்டப்பட்டனனந்தோ ? அளவற்ற நறகுணங்களிருந்தும், பறபல கலை கறறுணாந்தும், யாவர்க்கும் தணணளியுடையானுமுள்ள என் திருமகனைநீங்கி, ஒரு கணப்பொழுதாகிலும் உயிர்வாழ்ந துய்யேன்; ஆஜானுபாகுவாகியும், பகைவர் வெல்லவொணாத் தோள்வலி பொருந்தியுமுள்ள என்னருமைத் திருமகனைக் கண்ணாரக் காணேனாகில் உயிர்வாழுந் திறமை எனக் கெஙகுளது ! எனக்கிந்தத் திருமகன் பிரிவாலுண்டாகிய சோகச செழுந்தழல், முதுவேனிற் பருவத்தில் கதிரவன் கதிராயிரத்தையும் விரித்து, இப்பார் மடந்தையை எரிப்பதுபோல என்னைப் பற்றி எரிகின்றதந்தோ ! என்றிவ்வண்ணம் புலம்பியழுது வருந்தினள்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்துமூன்றாவது சருக்கம்

## நாற்பத்துநான்காவது சருக்கம்.

### ஸுமித்திராதேவி கௌஸல்யாதேவியைத் தேற்றியது.

இவ்வண்ணம் புலம்புகின்ற கௌஸல்யாதேவியை நோக்கி, தருமநிலையுள்ள ஸுமித்திராதேவி தருமநிலை தவறாத இதமுரைத்துத் தேற்றலுற்றனள். கேளாய மகாதேவி! சிறந்த நற்குணங்களை நிறைந்த மானிடசிங்கமாகிய உன் திருமகன் தருமவழி நோக்கிச் செல்லுகையில, நீயேனிவ்வண்ணம் புலம்பியழுது வருந்துகின்றாய், அம்மா கோஸலே! உன் திருமகன் தன் தந்தையை மெய்மமொழியராக்கக் கருதி, ராஜ்ஜியத்திலும் பற்றற்றுத் துறந்து, காட்டேற வெழுந்தருளி நற்செயலேயே செய்தனன். இஃது பறபல நல்லோர்கள் நடந்து தேய்ந்த நல்வழியே யன்றோ? ஆதலின், ஸ்ரீராமபிரான் பொருட்டு ஒருபொழுதும வருந்தறக அன்றியும், என் திருமகனாகிய லக்ஷ்மணன ஸாவதேச ஸாவகால ஸர்வாவஸ்தைகளிலும், ஸாவவித கைங்கரியங்களைச் செய்யத துணிவுகொண்டு பிழையெனபது நீங்கி, எப்பொழுது மூககத்துடன் பின்றொடாநது சென்றிருக்கின்றனனன்றோ? எல்லாவுயிர்களிலும அன்புகூர்ந்த இவன இவவண்ணங் குற்றேவல செயயப புகுந்தது, உன திருமகனுக்கு நறபேறன்றோ? இதுவரையில் துன்பமறியாத வைதேகியும, வனவாஸத்தில் மிகத துயரம் நேருமென்பதையறிந்தும, உன் திருமகனை இனபுறுவிக்குமாறு பின்றொடாநது எழுந்தருளினள். ஆதலின், கீர்த்தியெனனும பதாகையை மூவுலகிலும் நாட்டுவிக்கும் உன திருமகன் எவவித நறபயனை யடைநதிலன? உன திருமகனுடைய தூயமையையும், மகிமையையும, உண்மையாக அறிந்த சூரியனும், உன் திருமகன திருமேனி வாடாமாறு காயான, எல்லாக் காலங்களிலும், மிகக் குளிர்மையும, மிக வெப்பமு மின்றி, காட்டிலுண்டாகிய மந்தமாருதமு முன் திருமக னினபமுறுமாறு வீசும, இரவிற் பல்லவசயனத்திற் பவளித்திருக்கின்ற உன திருமகனைத் தண்மதி தந்தைபோலக் குளிர்ந்த கரங்களால் தழுவி யணைத்து சநதோஷமுறச செய்யும்; உன் திருக்குமாரன் திமித்துவஜனென்கின்ற பாணஸுரனுடைய மகனைப் படைகளுடன் போர்சலியவழித்து மடித்து வெற்றி கொள்ளுகையில், நானமுகத்தேவன மகிழ்ந் தெழுந்தருளி, உன திருமகனுக்குக கௌசிகமஹாமுனிவர் உபதேசஞ் செய்யாதொழிந்த பற்பல திவ்வியாஸ்திரங்களையு முபதேசஞ் செய்தருளி இருக்கின்றனனன்றோ? ஆதலின், உன திருமகன் தன் தோள்வலியினாலே தானே பாதுகாக்கப் படடவனாகி, பயமென்ப தின்றி, கானகத்திலும், தனகத்திற்போலவே மனமகிழ்ந்து வாழ்வான்; எவ்வகைப் பகைஞரும், யாவருடைய பாணத்துக் கிலக்காகில் வேறு தஞ்சமின்றி, கெட்

டழிந் திறக்கின்றார்களோ ? அந்த உன் திருமகனுக்கு இப்பாரிலுள்ள யாவர்தாம் [illegible]ப்பட்டு நடவாராகள் ? உன் திருமகன அழிவற்ற திருமேனி யழகையும், பிறரை வெல்லுந் திறமையும், பிறர் வெல்லவொண்ணாத் தோளாண்மையையு முடையவ னாதலால், விரைவில் வனவாஸந் தீர்ந்து, மீண்டிங் கெழுந்தருளித் திருவபிஷேகங் கொள்வான; உன் திருமகன் சூரியனுக்குஞ் சூரியனும், அக்கினிக்கும் அக்கினியும், இறைவனுக்கும் இறைவனும், இலக்குமிக்கும் இலக்குமியும், கீர்த்திக்குங் கீர்த்தியும், பொறுமைக்கும் பொறுமையும், தெய்வங்களுக்கும சிறந்த தெய்வமும், பூதங்களுக்கு முள்ளும் புறமும் நிறைந்துள்ள சிறந்தபூதமும் ஆகுகின்றனன்; அவனுக்கு நாடென்றுங் காடென்றும் வாசியுண்டோ ? அவனுக் கெவ்விடத்தில் குணங்களாகாவையாவை ? ஆதலின், சீக்கிரத்திலேதானே ஸ்ரீராமசந்திரன் பார்மடந்தையுடனும், பூமடந்தையாகிய ஸீதையுடனும், ஜெயலக்ஷ்மி யுடனுந் திருவபிஷேகஞ் செய்யப்படுவான; அவனைக்காணாது வருந்துகின்ற இத்திருவயோத்தியிலுள்ள ஜனங்களெல்லோரும், சோகநீர்பெருக்கி அழுகின்றமையால, மரவுரியுடுத்து மகிழ்ந் தெழுந் தருளின உன் திருமகனை ஸீதாபிராட்டிபோல இத்திருவயோத்தியின் திருவழகும் பின்றொடர்ந்து சென்றதுபோலும், அன்றியுந் திருக்கரத்தில் சிறந்த வில்லையும், சரத்தையும், வாளையு மேந்தி, லக்ஷ்மணன் தானே முன்னடந்து பாதுகாக்கின்றமையால், உன் திருமகனுக்குப் பெறலரும்பொரு ளிப்புவியில் யாதுளது? ஆதலின, வனவாஸந் தீர்ந்து, மீண்டெழுந்தருளும் உன் திருமகனை நீ கண்குளிரக்கண்டு மகிழ்வாய்; இச்சோகத்தையும், மோகத்தையும் விட்டு மகிழ்க; இவ்விஷயத்தில் சந்தேகமில்லை, யான சத்யமாக உரைக்கின்றேன்; பூர்ணசந்திர னுதித்தாற்போல மீண்டிங் கெழுந்தருளி, நிலாவுமுன் திருமகன் உன் திருவடித் தாமரைகளைத் தொழக்கண்டு, சந்தோஷமடைவாய்; உன் திருமகன் மீளவு மிங்கெழுந்தருளி, திருவபிஷேகங்கொண்டு செங்கோல் நடாத்தக்கண்டு, ஆனந்தநீர் பெருகி மகிழ்வாய்; ஸ்ரீராமபத்திரனிடத்தில் சோகமாயினுந் துக்கமாயினுந் தீமையாயினு மொருகாலையிலும் நேரா; விரைவிலே ஸீதாலக்ஷ்மணர்களுடன் திரும்பி எழுந்தருளின திருமகனைக் காண்பாய்; இங்குள்ள ஜனங்களெல்லோரையும், நீ அன்றோ தேற்றியருளவேண்டும்; அங்ஙனமாக, நீரிவண்ணம் மனதில் துயரங்கொண்டு வருந்துவ தென்ன, உமக்கு ஸ்ரீராமனே திருமகனா யவதரித் திருக்கையில், நீயு மிவ்வண்ணஞ் சோகமுறுவது தகுமோ ? இவ்வுலகினில், ஸ்ரீராமனை விட, வேறொருவரும் நல்வழி தவறாது நடப்பவருளரோ ? ஸீதாலக்ஷ்மணர்களுடன் உன் திருமகன் மீண்டெழுந்தருளி, உன் திருவடியைத் தொழக்கண்டு, மழைகால மேகம்போலக் குளிர்ந்த வானந்த நீரைப்பெருக்குவாய்; [illegible] பருத்துள்ள திருக்கரங்களால், ஸ்ரீராமன் [illegible] மகிழ்ந்து, ஆனந்தநீர் பெருக்கி [illegible] [illegible]

பற்பல வாக்கியங்களால், ஸுமித்திராதேவி கோஸலையாதேவியை யுபசாரஞ் செய்து தேற்றி மௌனமடைந்தனள். கௌஸல்யாதேவிக்கு அவ்வாக்கியங்களைக் கேட்டவுடன், மனத்திலுள்ள சோகமானது சரற்காலத்தில் மேகம் போலத் தேய்ந்தழிந்துவிட்டது.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்துநான்காவது சருக்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாவது சருக்கம்.

*பிராஹ்மணர்கள் முதலானோர்கள் ஸ்ரீராமபிரான் பின்றொடர்ந்து தமஸாநதிதீரஞ் சேர்ந்தது.

இப்பால் சக்கரவர்த்தித்திருமகன் பிராட்டியுடனும், இளையபெருமாளுடனும், திருத்தேரை யலங்கரித்து எழுந்தருளுகையில், அந்நாடு நகரத்தவர்களெல்லோரும், ஸ்ரீராமசந்திரனைவிட்டுப் பிரியமனமின்றி, அவருடைய திருமேனியழகிலும், திருக்கல்யாணகுணங்களிலுமீடுபட்டு, அவரைச் சேர்ந்த சுஹிருத்துக்களும், மகாராஜருங் கூட வலுவில் திருப்பப்பட்டுத் திருவயோத்திக்கு மீண்டுசென்ற காலையிலும், தாங்கள் திரும்பாமல், தாமும் ஸ்ரீராமன் திருவரணியத்தி லெழுந்தருளி யிருக்கு மளவும், அவருடன் வாழுந் தினமுமடைவோமென்று உறுதிகொண்டு, அத்திருத்தேரின் பின்றொடர்ந் தோடினார்கள். அத்திருவயோத்தியிலுள்ள எல்லோர்க்கும் சிறந்த நற்குணங்களையுடைய ஸ்ரீராமசந்திரன் பூர்ணசந்திரன்போல மிகவும் பிரியராக இருந்தன ரன்றோ? அவ்வண்ணம் அன்புகூர்ந்த அம்மஹாஜனங்களால், பலவாறாக வேண்டப்பட்டும், ஸ்ரீராமபத்திரர் தம் திருத்தந்தையை ஸத்தியவாதியாகச் செய்வதன்பொருட்டு வனமே நோக்கி எழுந்தருளினாரன்றி மீண்டிலர்; கௌஸல்யாதேவி குமாரரும், தம்மைத் தொடர்ந்து வருகின்ற பிரஜைகளைத் தம் பிரஜைகளைப்போல அன்பு கூர்ந்து குளிரக் கடாக்ஷித்து அவர்களை நோக்கி, அன்பர்களே! என்மீது உங்களுக்கு எவ்வளவு அன்பும் நன்குமதிப்பு முளவோ? அவ்வளவும் என் பரதன்மீது வைத்து மீண்டு சென்று மகிழ்வீர்களாயின், அஃது எனக்கு மிகவும் பிரியமாகும். பரதனும் மிக்கவும் நற்குண நற்செய்கை யுடையவனாதலால், உங்களுக்குத் தக்கபடி பிரியங்களையும், இதங்களையுஞ் செய்து, பாதுகாப்பான், ஞானத்தால் முதிர்ந்தவனும், வயதினால் பாலனும், பொறுமை யானும், சிறந்த தோள்வலியனும், ராஜநீதி யறிந்தவனுமாகிய அவனே உங்களுக்குத் தக்க ராஜனாகுவான்; அன்றியும், அவனே யுவராஜனாக மஹாராஜரால் நிய

மிக்கப்பட்டிருக்கின்றனன்; மஹாராஜருடைய கட்டளைப்படி நீங்களும் நாங்களும் மற்றெல்லோர்களும் செய்யவேண்டுவதே கடமை யன்றோ? ஆதலின், வனவாஸஞ் சென்ற என்னை நினைத்து மஹாராஜா வருந்தா வண்ணம் நீங்களெல்லீரும் அவரருகிலிருந்து தேற்றி யவரைப் பாதுகாப்பீர்களாகில், அதுவே எனக்கு மிகவும் இதமாகும்; என்றிவ்வண்ணம் அருளிச்செய்தனர். மஹாஜனங்களும் அவ்வருளிச்செயலைக் கேட்டு, ஸ்ரீராமனை நோக்கி, ஸ்ரீராமச்சந்திரரே! மஹாராஜா முதலில் எங்களை யழைப்பித்து, ஸ்ரீராமபிரானுக்கே இளவரசுப்பட்டங் கட்டுகின்றேனென்று அருளிச்செய்தனர். இதுவும் மஹாராஜருடைய கட்டளையாதலால், இதை நீரும் நாங்களும், மற்றெல்லோரும் செய்யவேண்டு மன்றோ? ஆதலின், தேவரே எங்களுக்கு இறையன்றி, மற்றொருவருமாகார்; ஆதலின், உம்மை நாங்கள் விட்டுப் பிரியோமென்று உரைத்து, ஸ்ரீராமசந்திரன் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்வதில் உறுதிகொண்டாற்போல் இவர்களும் ஸ்ரீராமபிரான் பின்றொடர்ந்து செல்வதிலே யுறுதிகொண்டனர்கள். இவ்வண்ணம் ஸ்ரீராமன் இளையபெருமாளுடன் தம்முடைய திவ்வியகல்யாண குணங்களாகிய கயிற்றினாற்கட்டுண்டு, கண்களிற் சோகநீர்பெருக்கி வாடிவருந்துகின்ற அத்திருவயோத்தியா ஜனங்களெல்லோரையும் பற்றி, இழுத்தருளினார் போலும்; அவர்களுள் ஞானத்தினாலும், வயதினாலும், தவத்திறமையினாலும் முதிர்ந்த வேதியர்கள் மூப்பினால் தலைநடுங்க வோடிவந்து, ஸ்ரீராமனுடைய திருத்தேர்க் குதிரைகளை நோக்கிக் கேளீர் நற்குலத்திற்பிறந்து சிறந்த துரங்கங்களே! நீங்கள் மீண்டு திருவயோத்திக்கே வரக்கடவீர்கள். வனம் புகக்கடவீரல்லீர், எல்லா வுயிர்களுக்கும் வாயாற்பேசுந் திறமையில்லையாயினும், செவிப்புலனுள்ளதன்றோ? ஆதலின், எங்களுடைய வேண்டுதலுக் கிரங்கி, உங்களுடைய மஹாராஜருக்கும் இதத்தைச் சிந்தித்து, மிகவுந் தருமசிந்தை யுடையவரும், நிர்மலரும், சூரரும், மஹாதீரருமாகிய வுங்களுடைய பர்த்தாவை இங்கே திருப்பி, எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வரக்கடவீரல்லது, செல்லக்கடவீரல்லீர்; என்றிவ்வண்ணம் பலவாறாகச் சோகத்தால் துக்கமுற்றுரைத்துக்கொண்டோடிவந்தனர்கள். அவ்வாறு ஓடிவருகின்ற அவ்வந்தணர்களை ஸ்ரீராமசந்திரர் கடாக்ஷித்து, சீதாலக்ஷ்மணர்களுடன் திருத்தேரினின்று மிறங்கிக் கிட்டக்கிட்டத் திருவடிசாத்தி நடந்தெழுந்தருளினாரல்லது, பெரியோர்களாகிய அவ்வேதியர்கள் நடந்தெழுந் தருளுகையில், தாம் திருத்தேர்மிசை யெழுந்தருளி விரைவாகச் செல்லத் திருவுளங்கொண்டிலர்; இவ்வண்ணம் நடந்தெழுந்தருளும் நம்பெருமாளைக் கண்டு, சில அந்தணர்கள் மிகவும் சோகமடைந்து, ஸ்ரீராமபத்திரரை நோக்கி ஸ்வாமி செந்தாமரைக்கண்ணா! ஆழிவண்ணா! எம் கண்ணா! மணிவண்ணா! சிறந்த வேதியர்களின் திரளெல்லாம் தேவரைப் பின்றொடர்ந்து வருகின்றன; கார்ஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணம் என்னும் மூவகையக்கினிகளும், பிராஹ்மணர்களின் தோளின்மீதிலேறித் தேவர்பின் வருகின்றன; கூதிர்ப்பருவத்தி

லுள்ள மேகங்கள்போன்ற வாஜபேய யாகஞ்செய்து பெற்றபட்ட எங்களுடைய குடைகளைக் கடாக்ஷித்தருளீர், முசசகிழற்று முழுமதித் தனிக்குடையின்றி, வெயிலிலே வாடி வருந்தி எழுந்தருளும், தேவருக்கு இக்குடைகளை அடியோங்கள் பிடித்துக்கொண்டுவந்து இருதாரத்தர்களாகின்றோம்; ஸர்வகாம ஸமாராத்தியா, ஸர்வலோக சரண்யா, அடியோங்களுக்கு வேதமோதுவதிலும், மந்திரம ஜபஞ்செய்வதிலும், தவம் புரிவதிலுமுள்ள மனவுறுதி தேவர் பொருட்டு இப்போழுது தேவருடன் வனவாஸஞ் செல்வதில் நிலைகொண்டிருக்கின்றது, எங்களுக்குப் பொருளென்பது வேதமேயாதலின், அஃது எங்களுடைய இதயத்தில் தானே நிலைத்திருக்கின்றது, எங்கள் பத்தினிகளும், தங்கள் கற்பினால் காக்கப்பட்டவர்களாகிக் குடில்களிலேயே தானே சுகமாக வாழ்ந்திருப்பார்கள். தேவருடன் பின் வருவதில், முன்னமே நாங்கள் நிச்சயங்கொண்டிருக்கின்றமையால், இப்போழுது தேவர் மீட்கின்றீரேல் மீளோம், தேவரைத் திருப்பி எழுந்தருளப் பண்ணவேண்டுமென்று யாங்கள் நிச்சயங்கொண்டிருக்கின்றமையால், தேவர் மீளின், அடியோங்களும் மீள்வோம், தேவர் தருமத்தைப் பாதுகாக்க வனமெழுந்தருளி விடின், அடியோங்களுக்குத் தேவரே தருமமாதலின், வேறு தருமங்கள் விட்டுவிடக் கடவன வல்லது, செய்யக்கடவனவல்ல, மூப்பினால் நரைத்த சிரங்களால் தரையில் வீழ்ந்து வேண்டுகின்ற அடியோங்களுடைய வேண்டுகோளுக் கிரங்கி, மீண்டெழுந்தருளக்கடவீர் மிக விரிவுள்ள எங்களுடைய யஜ்ஞங்களெல்லாம் தேவரைத் திருப்பும்பொருட்டே நிறுத்தப்பட்டன. தேவர் திரும்பி எழுந்தருளாவிடின், அந்த யாகங்கள் தேவராலே தானே கெடுக்கப்பட்டனவாகும், ஜங்கமா ஜங்கமங்களாயுள்ள உயிர்களெல்லாம், தேவரிடத்தில் பத்திதலைக்கொண்டு வருந்துகின்றன, ஆதலின், வேண்டுகின்ற அடியேங்களுடைய பத்திக்கிரங்கித் திரும்பி எழுந்தருளக் கடவீர் காலின்மையால், தேவரைத் தொடர்ந்துவரத் திறமையற்ற பாதபங்களும், வாயுவேகத்தால் நிமிர்ந்து, தேவரைக் கண்டு, கூவி யழுகின்றன போலத் தோன்றுகின்றன, பறவைகளும், உணவுநீங்கி, மரத்தின்மீது அசைவற்று உட்கார்ந்து சோகங்கொண்டு, தேவரை மீளும்படி யாசனை செய்கின்றன போலக்காண்கின்றன, இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரனை வேண்டிக்கொண்டே வருகையில், நின்மலமாகிய தமஸையென்னும் மஹாநதி, ஸ்ரீராமபத்திரனை வனவாஸ மெழுந்தருள வேண்டாவென்று தடுப்பதுபோலக் குறுக்காகித் தோற்றிற்று; ஸுமந்திரரும் உடனே நெடுந்தூரம் நடந்து வாடிய திருத்தேர்க் குதிரைகளை யவிழ்த்துப் புரண்டெழச் செய்து, நீர் குடிப்பித்துக் குளிப்பாட்டித் தேய்த்து இளைப்பாற்றித் தமஸையினருகில் மேய்த்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்பத்தாறுவதுசருக்கம்.

ஸ்ரீராமபத்திரன் இரவு யாவரையும் தமஸாதீரத்திலேவிட்டுவிட்டு ஸீதாலக்ஷ்மணர்களுடனே திருத்தேரின்மீதேறிக்கொண்டு காடுபோயச் செழுந்தருளி விட்டது.

அநந்தரம் மிகவும் அழகிய தமஸாநதியின் கரையை யடைந்து, சக்கரவர்த்தித் திருமகன், பிராட்டியாரைக் கடாக்ஷித்துக் கொண்டு, இளைய பெருமாளை நோக்கித் தம்பி! இன்றிரவும் நாம் வனவாஸம் புறப்பட்டபின் முதலில் இனியதாக நேர்ந்தது, ஆதலின், உனக்கு மங்கலம் உண்டாகக் கடவது படைவீடு விட்டு வந்து விட்டோமேயென்று நீ வருந்தற்க; இப்பொழுது மிருகபக்ஷிகள் தத்தமுறைவிடம் சேர்ந்து உறங்குகின்றன; இவ்வரணியமெங்கும் செயலற்றிருப்பதாலும், இங்குற்ற பறவை முதலிய வற்றின் தொனியாலும், நம் துன்பத்தைக் கண்டு இதுவும் கூவியழுது வருந்துகின்றது போலும்; இப்பொழுது திருவயோத்தியில், ஆண்பெண்ணடங்கலும் பிரிந்துவந்த நம்மை நினைந்து வருந்தி யழும், இவ்விஷயத்தில் ஐயமில்லை; அந்நகரியிலுள்ள யாவரும் மஹாராஜரிடத்திலும், உன்னிடத்திலும், என்னிடத்திலும், பரதசத்துருக்நர்களிடத்திலும், மிகஅன்புகூர்ந்தவர்களல்லரோ? மஹாராஜரும், என் மாதாவும், அடிக்கடி என்னை நினைந்தழுது மதிமயங்கி, அந்தகராகிச் சோகக்கடலில் மூழ்கிக் கிடப்பார்களோ வென்றெண்ணி யான் மிகவும் சோகிக்கின்றேன்; துன்பமுற்ற தாய் தந்தையர்களைப் பற்பல நல்வாக்கியங்களால் தேற்றிச் சோகத்தை யாற்றும் பரதனல்லனோ நல்வினையினன், பரதனுடைய நற்குண நற்செய்கைகளை யடிக்கடி யாலோசித்துத் தாய் தந்தையர்களைக் குறித்து யான் துன்புற்றிலேன், நீ என்னுடன் வந்தது நற்செயலாயிற்று இவ்வரண்ணியத்தில் ஜானகியைப் பாதுகாக்கும் விஷயத்தில் நீ யுதவி செய்ய வேண்டுமன்றோ? இவ்விடத்தில் பற்பல கனி காய் கிழங்கு முதலிய நல்லுணவுகள் உள்ளனவாயினும், நீரையுண்டே இன்றிரவைச் சுகமாகப் போக்குவோம், இஃது புண்ணியக்ஷேத்திரமாகையால், இவ்வண்ணம் க்ஷேத்திரோபவாசஞ் செய்வதே நல்லதெனத் தோற்றுகின்றது என்றருளிச்செய்து, ஸுமந்திரரையும் நோக்கி, ஸாரதி! நீவிர் வசுவங்களைப் புறப்பாடின்றி, ஊக்கத்துடன் பாதுகாத்தளிக்கக்கடவீர் என்று கட்டளையிடுதலும், ஸுமந்திரருஞ் சூரியாஸ்தமயமான பின்னர், துரகங்களை ஓரிடத்திற்கட்டி, மிகுதியும் புற்குவை கொணர்ந்திட்டு, மாலைப் பொழுதில் செய்யத்தக்க நீர்க்கடன்களை முடித்து, இளையபெருமாளுடன் கூடித் தளிர்களினால் ஸ்ரீராமபத்திரனுக்குத் திருப்பள்ளி யியற்றினார்

சக்கரவர்த்தித் திருமகனுஞ் செய்கடன்களைச் செய்தருளிப் பிராட்டியா
ருடன் அத்திருத்தளிர்ப்படுக்கையில், இனிதுபடுத்துத் துயின்றருளினர்.
இளையபெருமாள் ஹம்ஸதூளிகாமஞ்சத்தில் யோகநித்திரை செய்யத்
தக்க, தம்மைய ணிப் பல்லவ சயனத்தில், பிராட்டியாருடன் துயிலுவதைக்
கண்டு மிகச் சோகங்கொண்டு, ஸுமந்திரருடன் தம்மையனுடைய பற்பல
திருக்கல்யாண குணங்களை எடுத்துரைத்துப் புகழ்ந்து மகிழ்ந்து, துயி
லாது விழித்திருக்கையில், இரவுகழிந்து பொழுது விடிந்து, ஆதித்தனு
முதித்தனன். பசுக்கூட்டங்கள் நிறைந்த அத்தமஸாதீரத்தில், அம்மஹா
ஜனங்களுடன், கூடி யோகநித்திரை செய்து, ஸ்ரீராமன் நடுப்பொழுதி
லெழுந்து, ஜனங்கள் துயிலுவதைக் கடாக்ஷித்து, இளையபெருமாளை
நோக்கி, ஸுமித்திரானந்தனே! இம்மஹாஜனங்கள், மண்ணாசை பெண்
ணாசை பொருளாசைகளையுந் துறந்து, நம்மிடத்தில் பேரன்புகொண்டு,
மெய்வாட நடந்து வருந்தி, இம்மரத்தடிகளில் படுத்து மெய்ம்மறந்து
துயிலுகின்றார்கள் பார்த்தாயோ? இவர்கள் நம்மைத் திருப்புவதில்
உறுதிகொண்டு பின்றொடர்ந்தார்கள் உயிரைவிடினு மிவ்வுறுதியை
விடார்கள் ஆதலின், இவர்களெழுவதன் முன்னமே நாம் தேரேறி வழி
பற்றி விரைந்து செல்வோம், நம்மெண்ணத்தை யாராயினு மறிந்தால்,
மீளவு மிவர் தூங்காமல் காத்திருப்பார்கள். இவர்களை நாமுடன்கொண்டு
போய் இவ்வண்ணம் வருத்துவது திருத்தமன்று, நாட்டாரைக் காட்டா
ராக்கி வாட்டார் வேந்தர்கள் என்றருளிச் செய்யக்கேட்டு, இளையபெரு
மாளும், இஃதொக்குமென் றடியேனுக்கு முகப்பாருமென்று விண்ணப்
பஞ்செய்தனர். உடனே ஸ்ரீராமபத்திரன் தேர்ப்பாகனையழைத்து, ஸுமந்
திரரே! நாமிப்பொழுதே காடுநோக்கிச் செல்லக்கடவோம், நீர் விரைவாக
ரதத்தைக் கட்டி ஸித்தஞ் செய்யுமென்று கட்டளையிட, ஸூதரும் விரை
வாகத் திருத்தேரிற் குதிரைகளைக் கட்டி, ஸ்ரீராமரிடம் வந்து கைகூப்பித்
தண்டம் ஸமர்ப்பித்து, ஸ்வாமி மகாரதிகரே! திருத்தேர் ஸித்தஞ் செய்
யப்பட்டு நிற்கின்றது; தேவருக்குச் சுபமுண்டாகக்கடவது, பிராட்டியுட
னும், இளையபெருமாளுடனு மித்தன்மிசையேறி யலங்கரித்தருளக்கடவீர்.
என்று விண்ணப்பஞ்செய்ய, சக்கரவர்த்தித் திருக்குமாரரு மதிலெழுந்
தருளி விரைந்து சூழ்த்தலைத்துப் பெருகும், அத்தமஸா நதியைத்
தாண்டி அக்கரையிலிறங்கி, அச்சமுறுவோ ரஞ்சத்தக்க நல்லதோர்
பெருவழியைப்பற்றி யெழுந்தருளி, அந்நாட்டாரை மோஹிப்பதன்
பொருட்டு, ஸுமந்திரரை நோக்கி, ஸாரதி! நீரித் திருத்தேரை வடக்கு
முகமாகக் கொஞ்சந்தூரஞ் செல்லவிட்டு, மீளவுந் திருப்பி விரைவாகத்
தென்முகஞ் செலுத்தி, நகரத்தோர் நம்மைக்கண்டு பிடியாவண்ணஞ்
செய்யக்கடவீ ரென்று கட்டளையிட்டருளினர். ஸுமந்திரரும் அவ்வரு
ளிச் செயலைக்கேட்டு, அவ்வண்ணமே திருத்தேரை வடக்கே கொண்டு
போய், பிறரறியாவண்ணந் தெற்கே திருப்பியவர் தேரிடத்தில் நிறுத்தி,

ஸ்ரீராமசந்திரனுக்கு விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீராமலக்ஷ்மணர்கள்பிராட்டியாருடன் அத்திருத்தேரை யலங்கரித்தருளினார்கள். உடனே ஸுமந்திரர் தேசாந்தரஞ் செல்வோர் முதலில், எத்திசைநோக்கிச் செல்லுவார்களென்று, திருத்தேரை வடக்குமுகமாகச் செல்லவிட்டு, மறுபடியுந் தெற்கே திருப்பிக் குதிரைகளைத் தூண்டியோட்டினார். ஸ்ரீராமன் இவ்வாறு விரைவாக நெடுந்தூர மெழுந்தருளித் தபோவனத்திடை சேர்ந்து திகழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தாறாவது சருக்கம் முற்றிற்று.

## நாற்பத்தேழாவது சருக்கம்.

ஸ்ரீராமன் பின் சென்ற மஹாஜனங்கள் தூங்கியெழுந்து
ஸ்ரீராமனைத் தேடிக் காணாமல் திருவயோத்தி
திக்கித் திரும்பியது

இங்கு தமஸாதீரத்தில் துயில்கொண்ட மஹாஜனங்களும், பொழுது விடிந்தெழுந்து, ஸ்ரீராமசந்திரனைக்காணாமல், மிகவுஞ் சோகித்துச் செயலற்று, மனஞ் சோர்ந்து கண்ணீர்பெருக்கி, அங்குமிங்கு மோடித் தேடித் தேரையாயினுந் தேர்முனையையாயினுந் தேரிலெழுந்துகளையாயினுங்காணாமல்; அவர் சென்ற திக்குமுணராமல், முகமவாடி ஒளியிழந்து மனம் நைந்து, அந்தோ! இப்பாழுந் துயிலன்றோ? நம்மைக் கெடுத்தது, கவாடம்போலகன்ற திருமார்பையும், முழங்கால்வரை நீண்ட திருத்தோள்களையும், செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுமுடைய நீருண்டிருண்ட கொண்டல்வண்ணனை இப்பொழுது காணப்பெறறிலோமே? தந்தை தன் மக்களைப்போல இதுகாறு மெம்மைப் பாதுகாத்தளித்தருள்செய்த எம்பெருமானும், பக்திகொண்டு தஞ்சமென்று வந்தடைந்த எம்மை விட்டகன்று நெடுந்தூர மெழுந்தருளி விட்டனரோ, ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்தபின் யாமுயிர்வாழ்வது என்னத்துக்கு? ஆகையின், இவ்விடத்தில் பிராயோபவேசஞ்செய்திறப்போம் அன்றி, மகாபிரஸ்தானஞ்செய்திறப்போம்; அன்றி, இவ்விடத்தில் மிகுதியாயுள்ள உலர்ந்த கட்டைகளை யீட்டிச் சிதையடுக்கிச் செழுந்தழல் வளர்த்தி, அதில் வீழ்ந் திறப்போம்; யாமிங்கிருந்து திரும்பிப்போய் நம்மைக்கண்டு, ஸ்ரீராமனெங்கேயென்று கேட்போர்களுக்கு என்ன பதிலுரைப்போம்; பொறுமையினறி, இனியமொழி கூறும் ஸ்ரீராமனைக் காடுசெல்ல விட்டு

வந்தோமென்று, எவ்வண்ணம் விடுத்துணைப்பது, ஸ்ரீராமபிரானினறித் தனியே உறங்கிவரும் நம்மைக்கண்டே அத்திருவயோத்தி ஆண்பெண்ணவின் இளைஞர் மூத்தோ ரடங்கலும் மகிழவுற்று வருந்துவரென்பதி லையமில்லை, நாமும் மஹாவீரருடன் புறப்பட்டு நடுவழியி லவனை யிழந்து பாழடைந்த வந்நகரி லெவ்வண்ணம் புகுவோமென்றி வ்வண்ணங் கைகளை யுயரவெடுத்துக் கன்றினைப் பிரிந்த தேனுவைப்போல ஒவ்வொன்று புலம்பி யழுது, தோ சென்றவழி பற்றிச் சிலதூரஞ்சென்று மேலே வழிகாணாமையால், மிகவும் வருந்தித் திரும்பி வந்து, அந்தோ! இதென்ன யாது செய்வோம்? தெய்வமெம்மைப் பகைத்துக் கெடுத்ததே யென்று பலவாறாகப் புலம்பி வேறுவகை யில்லாமையால், சென்றவாறே திரும்பிவந்து மிக வருந்தும் ஸஜ்ஜனாகளையுடைய அத்திருவயோத்தியை யடைந்து, எங்குமுறங்கியிருப்பதைக் கண்டு, கருடனு லெடுக்கப்பட்ட பன்னகங்களையுடைய பெருமடுப்போல ஸ்ரீராமசந்திரனின்றிவருந்து மிந்நகரி மிகத் திகழ்ந்திலதே? சந்திரனற்ற வாகாசம்போலவும், நீரற்ற கடல்போலவு மாயிற்றே என்றுசோகங்கொண்டுமோஹித்து மகிழ்வற்றமையால, மிகப் பெருகுளள தத்தந்தம மனைகளை யடைந்தும், இஃது நமதெனவும, இவரினத்தாரெனவும, இவா சுற்றத்தாரெனவும, இவா பிறரெனவுந் தோந்துணரு மறிவற்று, அல்லும பகலுந் தத்தேகசிந்தரா யிருந்தனா.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று

## நாற்பத்தெட்டாவது சருக்கம்.

### திருவயோத்தியிலுள்ளோர் ஸ்ரீராமனை நினைந்தே வருந்தியது

இவ்வண்ணஞ் சோகத்தால மிகவும் வருந்தி கணகளில சோகநீர் ததும்பி, இறப்பதிலு முறுதி கொண்டு, ஸ்ரீராமன பின சென்று திரும்பி நகரஞ் சேர்ந்தவாகளது உயிாகள மேலெழுந்தனபோல மூர்ச்சையடைந்தனர்கள அவாகள தத்தமமனை சோந்து, புத்திர மித்திர களத்திராதிகளுடன கூடி, இஷ்டபந்துவை யிழந்து வந்தவாகளபோலக் கண்ணீர்விட்டழுதனாகள. வாத்தகாகளும மகிழவற்று, உவகை குன்றி, கடைகளைப் பரப்பியிலாகள, இல்லறத்தோரு மதிதிபூஜையின பொருட்டுத் தளிகை செய்திலர், ஒருவருங் கெட்டுப்போன பொருளைப பெற்றும், மிகுந்த லாபமடைந்துஞ் சந்தோஷப பட்டிலர், மலடியும நன்மகனைப் பெற்றெடுத்தும் மகிழ்ந்திலள்; மனைகளதோறு முள்ள வனிதையர்களும,

ஸ்ரீராமனை விட்டுத் திரும்பி வந்த பர்த்தா முதலானோரைக் கண்டு, ஸ்ரீராமபத்திரனைக் கண்டு களிக்காமல், ஏன மீண்டீர்கள்; உங்களுக்கு இம்மனைகளினாலாயினும், இம மனைவியர்களினாலாயினும, இம்மக்களினாலாயினும், இச்சிற்றின்பங்களினாலாயினு மென்ன பயன்? இவ்வுலகினில் இளையபெருமாள் ஒருவரோ யன்றோ? ஸத்புருஷர்; அவர் ஸீதையுடன் கூடிய ஸ்ரீராமசந்திரருக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கரியங்களையும செய்யத்துணிந்து, ஸ்ரீராமசந்திரனுடன் மீளா தெழுந்தருளினரன்றோ? காட்டிலுள்ள நதிகளும, தாமரைத் தடாகங்களும், ஆம்பலோடைகளும நல்வினைசெய்தன; அவைகளில், ஸ்ரீராமனிறங்கி நீராடியருளுவரன்றோ? மரங்கள் தழைத்த தழகாகிய காடுகளும், புளினமுடைய நதிகளும, தாழ்வரையுள்ள மலைகளும், ஸ்ரீராமபத்திரனை விளங்கச்செய்துமகிழ்விக்குமே; காடாயினும, மலையாயினும், மற்றுமுள்ள எவ்வஸ்துவாயினும, பிரியமுள்ள அதிதியாகி வரும ஸ்ரீராமபத்திரனைப் பூஜைசெய்யா திருக்குமோ? விசித்திரங்களாகிய மலர்களென்னும சிரோபூஷணங்களையும, பலவகைப் பூங்கொத்துக்களையும், வெறிகொள் வண்டு பண்களபாடும் பாதபங்களும, ஸ்ரீராமசந்திரனைக்கண்டு மகிழ்விக்கும; ஸ்ரீராமனைக்கண்டு அன்பினால மஹீதரங்கள அகாலத்திலும், பூ கனி காய கிழங்கு முதலிய வற்றை யுண்டாக்கியும, அமிழ்தம்போன்ற நறுசுனை நீரைப்பெருக்கியும, ஸ்ரீராமனுக்குப் பூஜைசெய்யும ; மலைமிசையிலுள்ள பாதவங்களும், ஸ்ரீராமபத்திரனை இன்புறச்செய்யும் ,—

యత్ర రామో భయం నాత్ర నాస్తి తత్ర పరాభవః
సహి శూరో మహాబాహుః పుత్రో దశరథస్య చ.

யத்ரராமோபயந்நாத்ர நாஸ்திதத்ரபராபவஃ
ஸஹிசூரோமஹாபாஹுஃ புத்ரோதசரதஸ்யச.

இவ்வண்ணம அசேதனங்களும, ஸ்ரீராமசந்திரருடைய திருக்கல்யாண குணங்களுக்கு ஈடுபட்டு, ஸ்ரீராமபத்திரனுக்கு உபசாரம் செய்யுமாதலின், ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளியிருக்கு மிடத்தில், பயமாகிலும, அவமதிப்பாகிலும் உண்டோ? ஒருகாலும உண்டாகா? அவர் ஒப்பாரு மிக்காரு மற்ற மஹாவீரரும், மிகவும சூரராகிய தசரதமஹாராஜர் மூத்த திருக்குமாரருமாகி, நமக்கும் மூவுலகினுக்கும், மும்மூர்த்திகளுக்கும், முக்குணங்களுக்கும், மூலமாகின்றனரன்றோ? நாம் தாமஸஞ் செய்தால நெடுந்தூர மெழுந்தருளி விடுவாராதலின், நாமெல்லோரும் விரைவாகப் பின் செல்வோம்; அத்தன்மையராகிய மஹாபுருஷருடைய திருவடி நிழலே நமக்குச் சுகந்தருவ தன்றோ? அவரோ நம்மெல்லோர்க்கும் இறைவர்; அவரோ தஞ்சம், அவரோ அடைக்கலம்; நாம் ஸீதாபிராட்

டியார்க்குப் பணிவிடை செய்வோம்; நீங்கள் பெருமானுக்குக் குற்றேவல் செய்யுக்கடவீர்கள். இங்கேன் வந்தீர்கள்? என்று கஜங்களை யங்குசத்தால் இடித்தது நல்லறிவு மூட்டுவதுபோல, இவ்வண்ணமாகிய வாக்கியங்களை யிடித் திகழ்ந்து, மேலும் அவர்களைநோக்கி, நாதர்களே! உங்களுக்கு ஸ்ரீராமசந்திரரும், எங்களுக்குப் பிராட்டியாரும், யோகக்ஷேமங்களைச் செய்தருள்வர்கள் ஒளியற்றுப் பாழடைந்து சோகங்கொண்ட ஜனங்களுடைய இவ்வீட்டில் வாழ யாவனாயினும் இச்சைகொண்டு மகிழ்வனோ? இவ்விராஜ்ஜியம் நாதனற்றதுபோல் நீதிதப்பிக் கைகேயியாலாகிய பெண்ணரசாகுமாயின், நாங்க ளுயிர்விட்டிழப்போ மல்லது, உய்யோம்; அப்பொழுது இவ்வுயிர்களினாலும், வீட்டினாலும், பொருளினாலும், மக்களாலும், பயனயாதுளது, அவள் பொருளையே பெரிதாக எண்ணிப் பர்த்தாவையும், ஸ்ரீராமபத்திரனையுமிழந்தனளன்றே? குலங்கெடுக்குமபாவியாகிய அக்கைகேயி! மற்றெவனைவிடத் துணிவுகொள்ளாள்; அவளுடைய ராஜ்ஜியத்தில் அடிமைப்பட்டு கூலிக்காரராகிப் பிழைத்திரோம்; அவள் பிழைத்திருக்கு மளவும், நாங்கள் இவ்விராஜ்ஜியத்தில் பிழைத்திரோம்; எங்கள் பிள்ளைகள்மே லாணையிட்டுச் சொல்வோம், யாவனொருத்தி அத்தன்மையனாகிய சக்கரவர்த்தித் திருமகனைக் காட்டுக் கோட்டினனோ? அப்படிப்பட்ட கொடிய பாவியாகிய அவளை யடுத்து யார் பிழைத்திருப்பார்கள் கைகேயியின்பொருட்டே இவ்விராஜ்ஜியமெல்லாம் பீடைசெய்யப்பட்டும், ஆதாரமற்றும், நாதனின்றியும், நாசமடையப் போகின்றது; ஸ்ரீராமபத்திரர் வனவாஸ மெழுந்தருளிய பின், மஹாராஜா பிழைக்கப் போகின்றதில்லை, மகாராஜரிறந்தபின், யாவரும் புலம்புவாரன்றிப் பின்பதிலுமையமில்லை, ஆதலின், நாயகர்களே! இங்கிருந்து இவ்வண்ணம் நல்வழியற்றவர்களாகுவதைவிட, விஷத்தையுண்டாயினும் இறக்க; ஸ்ரீராமசந்திரனையாயினுந் தேடிப் பின்றொடர்க, ஸமாசாரமும் எட்டாத தூரதேசத்திற் காயினும் ஓடிவிடுக; வஞ்சனை செய்து, ஸீதாலக்ஷ்மணர்களுடன் ஸ்ரீராமன் காட்டி லோட்டப்பட்டு, ஊன் விற்போனிடத்தில் பசுவை விட்டுவிட்டாற்போல நாங்கள் பரதனிடத்தில் கொடுக்கப்பட்டோமோ? பூர்ணசந்திரன்போன்ற திருமுகமண்டலமும், நீர்கொண்ட மேகம் போன்ற திருமேனியும், எலும்புமறைந்து பருத்ததோள்களின் ஸந்தியும், பகைகளைக் கொல்லுந் திறமையும், நீண்ட திருக்கைகளும், செந்தாமரை போன்ற திருக்கண்களும், செருக்கின்றி முன்னமே பேசுவிக்கும் நற்குணமும், அணிகளின்றித் திகழும் கட்டழகும், ஸத்தியமும், சிறந்த தோள்வலியும், யாவர்க்கு மினிமையும், சந்திரன்போன்ற குளிர்ந்த காந்தியும், மதயானைபோன்ற நடையும் பொருந்திய ஸ்ரீராமசந்திரன் இளைய பெருமாளுடனும், ஸீதாபிராட்டியாருடனுங் கூடி, ஸஞ்சரிப்பவராகித் திருவாரணியங்களை விளங்கச்செய்வாரென்பதில் ஸந்தேஹமில்லை; நாமிங்கேன் வாடி வருந்துகின்றோமென் றிவ்வண்ணம் புலம்பி மரணமடையுங்

காலையிற்போல மிகத் துன்புறுக கூவி யழுதனர்கள் இவ்வண்ணம் இவர் கள ஸ்ரீராமசந்திரனையே நினைந்தழுகையில, கதிரவனு மித்துனபத்தைக் கணணுறப பொறுதவனபோல அத்தமயகிரியையடைய இரவுந்தோன் றிறறு; அபபொழுது அத்திருவயோததியும் ஒருவரும் அக்கினிஹோத் திரஞ் செயயாமலும், பாகஞ்செயயாமலும், தீபமேறறுமலு மிருநதமை யால விளககமறறும, வேதகோஷமும, புராணகதைகளு மினறியும், இருளமூணடு மருளகொணடதுபோலாகிக கடைததெருககள் மூடப படடும, ஜனஙகளின ஸஞசாரமறறும், விண்மீனகளின ஒளியறறு, மேகஙகளா லிருளகொணட ஆகாயம்போலத தோறறியது; அவ்வநிதை யாகளும தமபிளளை யுடனபிறந்தார்களை யோடடிவிறறபோல மிகவருநதி மதிமயஙகிக கோவெனறு கேவியழுதனாகள ஸ்ரீராமபத்திரர் அவாதளுக் குப பிளளையைவிடப பிரியமுளளவராக இருநதன ரலலரோ? அப்பொ ழுது அயோததியும், ஆடடமபாடட மினறியும், வேதாதிகோஷ மினறி யும,தொனியற்று ஊழிகாலததில பிரளயகாலாக்கினியால சோஷிபபிககப படட நீரையுடைய மஹாாணவம்போலாயிறறு.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தெட்டாவது சருக்கம் முறறிறறு.

## நாற்பத்தொன்பதாவதுசருக்கம்.

ஸ்ரீராமன பலநதிகளைககடந்து எழுந்தருளியது.

இப்பால சககரவாத்தித திருமகனும், அனறிரவில பொழுது விடி வதன முனனமே, தந்தையின வாககியத்தைத தலைககடடுவதில உறுதி கொண்டு, பினறொடாநது வநதவர்களைத தமஸாநதியின கரையில விடடு விடடு, அவரறியாவணணம் நெடுநதூர மெழுந்தருளி, உதயமான பினபு ஒருநதியில நீராடி, நிததியகருமஙகளை முடித்துககொண்டு, உத்தர கோஸல தேசததின தெனபுறத தெலலை சோந்து, புறபல ஊர்களையும், விதை விதைபபதனபொருட டுழுபபடட நிலஙகளையும், தளிாதது மலர்ந்த வனஙகளையும், விளைந்தெழுந்தருளியு மிவ்வவ்விஷயங்களின அழுகி னில மூழ்கிய மனமுடையவ ராதலின், மெலலெனச சென்றேமென றுணருமாறு கடாக்ஷித்துக்கொண்டு, அவ்வவ்வூர்களிலுள்ள ஜனஙகள் தசரதமஹாராஜர் மிகவுங் காமவிடாயகொண்டு மதிமயக்கமுள்ளவ ராயினா. அந்தோ ! பாவி கைகேயியுங கொடும்பாவஞ் செய்யத் துணிந்து, மரியாதை தப்பிக கெட்டவளாயினள். இல்லையாயின, மிகவும்

நல்லறிவினனும், தயாளுவும், புலன்களி னடக்க முடையவனும், தரும சிந்தை யுடையவனுமாகிய இத்திருமகனைக் காட்டேற செல்லவிடுவோர் களோ? ஜனகமஹாராஜன் திருமகளாகிய ஸீதாதேவியும் இதுவரையி லொரு துன்பமு மறியாதவ ளாதலின், இப்பொழுது இக்கானகத்தின் கொடுந்துயரங்களை எவ்வண்ண மனுபவித்து வாழவுறுவள்? அந்தோ! மஹா ராஜரும் மிகக் கருணையற்றவர், யாவாக்கு மினிய இத்திருமகனைத் துரத்தி விடவுந் துணிந்தன ரன்றோ? எனறிவ்வண்ணம் புலம்பிக் கூறுகின்ற வாக்கியங்களைத் திருச்செவி சார்த்திக்கொண்டும், அக்கோஸல நாட்டைக் கடந்தெழுந்தருளி, வேதச்ருதியென்னும் புண்ணிய நதியையுந் தாண்டித் தென்றிசை நோக்கி, நெடுங்கால் மெழுந்தருளிப் பற்பல பசுக்கூட்டங்களை கூடிய கரையுடைய கோமதீநதியையும், மயூரஹம்ஸஸாரஸாதிகளினு லொலி க்கப்பட்ட ஸ்யந்திகா நதியையுந் தாண்டி, முன்பு மனுமஹாராஜனால் இக்ஷ்வாகு மஹாராஜனபொருட் டளிக்கப்பட்டுப் பற்பல நாடுகளுடன் கூடி, நீர்வள நிலவளங்கள் பொருந்திய பொருள் மிகுந்த தேசத்தைக் கண்டு, ஸீதாதேவிக்குக் காண்பித்து, ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! யான் வனவாஸந் தீர்ந்து, மீள வந்து, தாய தந்தையாகளுடன் கலந்து மகிழ்ந்து, ஸரயூநதியின் தீரத்திலுள்ள மலர்ந்து மணங்கமழ்கின்ற மஹா வனத்தில் வேட்டையாடுங் காலமும், எப்பொழுது நேருங்கொலோ? இவ் வுலகத்தில் காட்டில் வேட்டை யென்பது மனமகிழ்வின் பொருட்டும், கொடிய மிருகங்களின் பீடையைப் போக்குவதின் பொருட்டும், கற்பிக்கப் பட்டிருக்கின்ற தன்றோ? அஃது ராஜ்ஜிய காரியங்களையும் விட்டு, நிரந்தர மாகச் செய்யப்படின், (ஸ்த்ரீத்யூதமிருகயாமத்யவாக பாருஷ்யோக்ரதண் டதா: அர்த்தஸ்ய தூஷணஞ்சேதி ராஜ்ஞாமவியஸனஸப்தகம்) என்று நிந்திக்கப் படுகின்றமையால், அதை நிரந்தரமாக யான் கோருகின்றிலேன்; ச்ராத்தாதி காலங்களில், வேதியர்களாலும் ஓரிடத்திலும் நிலைகொள்ளாத குறிகளை யடிக்குந் திறமை கற்கும் காலத்திலும், கொடிய மிருகங்களின் பீடை வளரும் காலத்திலும், அரசர்களாலுங் கோரப்பட்ட அவ்வேட்டை யை விநோதமாக யானு மொருகால் வேண்டுகின்றேன்; இவ்வண்ணம் வேட்டையாடுவதில் ராஜரிஷிகளுக்கு விருப்பு மிகுதியு முளதாகு மன்றோ? என்றிவ்வண்ண மினிதாகப் பலபல வருளிச் செய்துகொண்டே வழிநடந் தெழுந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தொன்பதாவதுசருக்கம

முற்றிற்று.

## ஐம்பதாவது சருக்கம்.

### குகப்பெருமான் சக்கரவர்த்தித் திருமகனைக்கண்டு இனிது ம அருளிச்செய்தது.

அனந்தரஞ் சக்கரவர்த்தித் திருமகன் ஸீதாலக்ஷ்மணர்களுடன் விரிந்தகன் றழகிய தக்ஷிணகோஸல நாட்டையுங் கடந்தெழுந்தருளித் திருவயோத்திக்கு எதிராக நின்று, கைகுவித்துக் காகுத்தர்களினால் பரிபாலனஞ் செய்யப்பட்ட திருவயோத்திமாநகரே! உன்னையும், உன்னைப் பாதுகாக்குந் தேவர்களையும், உன்னிடத்தில் நித்திய வாஸஞ் செய்யுந் தெய்வங்களையும், யான் வனவாஸஞ்சென்று மீண்டு வருவதன்பொருட்டு விடைகேட்டுக் கொள்ளுகின்றேன்; வனவாஸஞ் செய்து தந்தையின் கட்டளைத்தீர்த்து, மீள வந்து, தாய் தந்தைகளுடன் கூடி, உன்னைக்கண்டு மகிழ்வுறக்கடவேனென்று, தேசாந்தரஞ் செல்வோர் செய்யும் முறைமைப்படி கருஹக்ராம நகராதி தேவர்களை வேண்டிக்கொண்டு தமக்குற்ற துன்பத்தை யறிந்து வருந்துகின்ற அந்நாட்டிலுள்ளோரை நோக்கி, வலதுகையை யுயரவெடுத்து நாட்டிலுள்ளோர்களே! உங்களால் என்மீது அருளு மன்பும் நன்கு செய்யப்பட்டன. ஆதலின், இப்பொழுது என்னை நெடுங்காலங் காண்பது துன்பத்திற்கிடமாகு மாகையால், உங்கள் செயல்களைச் செய்யச் செல்லக்கடவீர்களென்று, விடைமொழி யருளிச் செய்தனர். அந்நாட்டார்களும், அவரருளிச்செயலைக் கேட்டும், பிரிய மனமின்றி, தீனமாகப்புலம்பி, ஸ்ரீராமனுக்குத் தண்டஞ் சமர்ப்பித்து, அத்திருத்தேரை வலம்வந்து, அங்கங்கு நின்றுகொண்டு, ஸ்ரீராமன் மறையுமளவும், பார்த்துக்கொண்டிருந்தனர்கள். சக்கரவர்த்தித் திருமகனும் அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, சூரியன் மாலைப்பொழுதில் மறைவதுபோல அவர்களுக்குக் கட்புலனாகாமல் மறைந்து, தநதான்னியங்கள் நிறைந்தும், மிகவுங் கொடையாளர்களுடன் கூடியும், பயமென்பதற்றதும், பற்பல தேவாலயங்களாலும், யூபஸ்தம்பங்களாலும் விளங்கியும், பூஞ்சோலை மாஞ்சோலைகளாற் செழித்தும், குளிர்ந்த நன்னீர்கள்நிறைந்த வாபீகூப தடாகங்கள் பொருந்தியும், துன்பமற்று மின்பமுற்றும், மகிழ்ந்த ஜநங்கள் திகழ்ந்தும், கற்றுநிரைகள் நிறைந்து அரசர்கள் கண்டு மகிழ்வுறத்தக்கதும், வேதகோஷங்களால் ஒலித்தும், புண்ணிய காங்களுங் காணற்கினியனவும், ராஜர்களின்புறத்தக்கனவும், மகிழ்ந்து திகழ்ந்து விளங்குவதுமாகிய அழகிய அக்கோஸலநாட்டின் சிறப்புகளைக் கடாக்ஷித்துக்கொண்டே நடுவழியே நெடுந்தூர மெழுந்தருளிக் கடையில், நற்பேறளிக்கு நல்நீரச் சிறப்புற்றும், பாசிகளற்றும், மகரிஷிகளின் ஆசிரமங்களினால் திகழ்ந்தும், தெய்வப்பெண்களால் மகிழ்ந்து ஜலக்கிரீடைசெய்யப்படும், தேவதானவ

கந்தர்வ கின்னர கிம்புருஷோரகாதிகளினால் ஆச்சரியிக்கப்பட்டும், பற்பல தேவர்க ளின்புறத்தக்க, மலைகளினாலுஞ் சோலைகளினாலுஞ் சூழப்பட்டும், வானவர்களினபொருட்டுப் பொனனுலகம் மன்னியும், தேவர்களுக்குரிய தாமரைத்தளமலர்ந்து, சிலைகளி லலைமோதியெழுந்த பேரொலியினட்ட ஹாஸ, த்தால் பயந்தருவது. நுரையெனனும நிர்மலமாகிய புனனகைபொரிந்தியும், சில மேடுபள்ளங்களில கூந்தல்களின் பின்னல்போனற நீரினு பெருக்குடையதும், சில விடங்களில கொபபூழ போன்ற ஆழ்ந்த சுழிகள சுழித்தும், சில விடங்களில் அசைவற்று கம்பீரமாகியும, சிலவிடத்தில் வேகம் பொருந்தியும், சிலவிடத்தில் துவனியுற்றும, சிலவிடததில் துவனியற்றும், தேவகணங்களால் மூழ்கபபட்டும, நெயதல தாமரை முதலிய கொடிகளடர்ந்தும், சிலவிடததில் அகன்ற நொயயமணற குனறுகளும, சிலவிடத்தில் பெருமணற குவையுந் தோறறியும, மதங்கொண்ட ஹம்ஸஸாரஸ சக்கரவாகாதி நீரப பறவைகளால் துவனிசெயயப்பட்டும், சிலவிடத்தில் இருகரையிலும் முளைதத மரஙகளினிரைகளால மாலை பூண்டதுபோலும், சிலவிடத்தில் கமல குமுத கைரவஙகளினால மறைந்தும, சிலவிடததில் பலவகை மலர்களின் பராகஙகளினால படரபபட்டு மதங்கொண்டது போலும, சிலவிடத்தில் கல்மஷமின்றி வைடூரிய மணிபோல நிர்மலமாகியும், மதமேறித் திரிகின்ற திசாகஜஙகளினாலும, வனகஜஙகளினாலும், தேவ வாஹனங்களினாலும், அடிக்கடி தொனிசெயயப்பட்ட தீரஙகளையுடையதும், கனிகளாலும், மலர்களாலும், தளிர்களாலும, புதர்களாலும், பறவைகளாலும, நீர் யானைகளாலும், முதலைகளாலும், நீர் நாகஙகளாலுஞ் சூழப்பட்டும், பலவகை யணிகள பூண்டும, மதங்கொண்ட மததகாசினிபோலும் விளங்குவதும்;—

విష్ణుపాదచ్యుతాం దివ్యాం మహాపాపప్రణాశినీం
సముద్రమహిషీంగంగాం సారసక్రౌఞ్చనాదినీం
ఆససాదమహాబాహుః శృంగిబేరపురంప్రతి.

விஷ்ணுபாதசயுதாந்திவ்யாம் மஹாபாபப்ரணாசிநீம
ஸமுத்ரமஹிஷீமகங்காம ஸாரஸகௌஞ்சநாதிநீம
ஆஸஸாதமஹாபாஹு꞉ ஶ்ருங்கிபேரபுரம்ப்ரதி.

மூவுலகங்களையும் மூவடிகளாலளந்து மாவலியையடக்கி வானவர்களைப் பாதுகாத்த ஸர்வலோக சரண்யனான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவடிகளினின்றும் அவதரித்து பொன்னுலகில்வீழ்ந்து பாவமற்றும், பிறர்களின் பாவங்களைப் போக்கியும், பகீரதன் பொருட்டாய மண்ணுலகிலும், பன்னகாலயத்திலும பெருகி, ஸமுத்திரராஜனுக்குப் பட்டமஹிஷியாகியும், ஸாரஸக்ரௌஞ்சாதி நீர்ப்பறவைகளால் ஒலிக்கப்பட்டும் விளங்குகின்ற

கங்காநதியின் ருகிலுள்ள சிருங்கிபேரமென்னும் குஹப்பெருமான் பட்டணத்தைக் கிட்டி எழுந்தருளிப் பேரலைமோதி யொலிக்கின்ற அந்த கங்காநதியைக் கடாக்ஷித்து, ஸுமந்திரனை நோக்கி, ஸாரதி ! இன்றிரவினை இங்கிருந்து போக்குவோம்; இந்நதியினருகில் தளிர்களடர்ந்தும், மலர்கள் கமழ்ந்தும், உயர்ந்தும், படர்ந்தும், தழைத்தும், செழித்து முள்ள இவ்விங்குணமரம் மிக வழகியதாக விருக்கின்றது; இதனடியிலே யிறங்குவோம்; யாவராலும் புகழப்பட்ட இந்நதியையுங் கண்ணுற்று மகிழுவோம்; என்றருளிச்செய்தனர். இளையபெருமாளும், சுமந்திரரும், அவ்வண்ணமே யாகுகவென்று உடன்பாடு கூறி, அம்மரத்தினடியில் திருத்தேரை நடாத்தி ஸ்ரீராமசந்திரரை இறங்கும்படி விண்ணப்பிஞ்செய்ய பெருமாளும், பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும், அத்திருத்தேரினின்று மிறங்கி, அம்மரத்தடியில் வீற்றிருந் தருளினர். சுமந்திரரு மிறங்கிக் குதிரைகளை யவிழ்த்து ஓரிடத்தில் கட்டி, ஸ்ரீராமபத்திரரிடம் வந்து கைகட்டி நின்றனர். அவ்விடத்தில் ஸ்ரீராமனுக்கு உயிர்போன்றவரும், தோழரும், வேடுவசாதியிற் பிறந்தவரும், சிறந்த பலமுடையவரும், அந்நகரத்திற்கு இறையவரும், ஸ்ரீராமபக்தரென்றும், பரமபாகவதரென்றும் புகழப்பட்டவருமாகிய குஹப்பெருமான், ஸ்ரீராமபிரா னெழுந்தருளியதைக் கேட்டுப் பெருமகிழ்வுகொண்டு சிறந்தமந்திரிகளுடனும்,தன்னினத்தா சுற்றத்தார்களுடனுங் கூடிப் புறப்பட்டு, ஸ்ரீராமசந்திரா வீற்றிருக்கு மிடம் நோக்கி நடந்து வந்தனர். பக்தவத்ஸலரான ஸ்ரீராமசந்திரரும் அவர் வருவதைக் கண்டு எதிர்கொண்டழைத்து வந்து, இளையபெருமாள்போலவே இவருமொரு தம்பியெனனும்படி நட்புச் செய்தருளினர். குஹப்பெருமானும், ஸ்ரீராமபத்திரருக்குற்ற துன்பங்களை யறிந்து மிகத் துயருழற்று, ஸ்ரீராமசந்திரரை ஆலிங்கனஞ் செய்து கொண்டு அவரை நோக்கி, ஸ்வாமி ரகுகுலநந்தனரே !

యథాయోధ్యాతథేయంతే రామకింకరవాణితే
ఈదృశంహిమహాబాహో కఃప్రాప్స్యత్యతిథింప్రియం.

யதாயோத்யாததேயந்தே ராமகிங்கரவாணிதே
ஈத்ருசம்ஹிமஹாபாஹோ கஃப்ராபஸ்யதயதிதிம்பரியம்.

தேவருக்குத் திருவயோத்தி எவ்வண்ண முரியதோ ? இந்நகரும் அவ்வண்ணமே தேவருக் குரியதன்றி, என்னுடையதன் றதலின், தேவரே இங்கபிஷேகங்கொண்டு, அடியோங்களைப் பாதுகாத்தருளக் கடவீர், அடியேனும் தேவருக்கு நித்திய கைங்கரியஞ் செய்து, ஆனந்தமடையக் கடவேன்; லோகநாதரான தேவரே இவ்வண்ண மருள்செய்து பரியாதிதியாக வெழுந்தருளப்பெற்ற நல்வினையும் யாவனுளனாகுவான் என்று வெல்லப் பம்பல அன்னம் முதலிய கல்லுணவுகளையும், அர்க்கிய

பாத்யாதிகளையும், விண்ணப்பித்து, மீளவும், ஸ்ரீராமபத்திரனை நோக்கி, இக்ஷ்வாகுகுலநந்தனரே! தேவர் வரவு நல்வரவாகக் கடவது. அடியேனுடையதென் றபிமானிக்கப்பெற்ற இவ்விராஜ்ஜியமெல்லாம் தேவருடையதே? அடியோங்களெல்லோரும் தேவரடியார்களே? தேவரே யாவர்க்கும் பர்த்தா? அடியோங்களை யங்கீகரித்து, இவ்விராஜ்ஜியத்தை நன்கு பாதுகாத் தருளக்கடவீர். வியஞ்சனம் முதலிய பக்ஷியமும், அன்னம் முதலிய போஜநமும், பானகம் முதலிய பேயமும், ரஸாயனம் முதலிய லேஹ்யமும், சிறந்த சயனங்களும், குதிரைகளுக்குத் தக்க நல்லுணவுகளுஞ் சித்தஞ்செய்யப்பட்டு இருக்கின்றன, இவைகளையு மங்கீகரித்து, அடியேனை யளித்தருளக் கடவீர். என்றிவ்வண்ணம பக்திமையால் வேண்டுகின்ற குஹப்பெருமானைச் சக்கரவர்த்தித் திருமகனும நோக்கித் தோழா! நீ நெடுந்தூர மென்பொருட்டு நடந்து வந்தமையாலும், அன்புக்குத் தக்கபடி இனிமை கூறுகின்றமையாலும், நாமுமமால நன்கு பூசிக்கப்பட்டோம், சந்தோஷமு மடைந்தோமென்று அருளிச்செய்து, பருத்து நீண்டிருண்ட திருக்கைகளினால் அவனை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, நிஷாதராஜனே! பந்துக்களுடன் பிணியற்று மகிழ்வுற்ற உன்னை யானும் தெய்வாதீனமாகக் கண்டேன்; உனக்கும், உன்னாட்டுக்கும், சேனைகளுக்கும், பொருள்களுக்கும் குறைவற்று, நலம் வளருகின்றதா? என்னிடத்திலுள்ள அன்பினால் நீ விசித்தஞ் செய்யப்பட்ட இவ்வுபசாரங்களைக் கண்டு, மிகவுஞ் சந்தோஷமடைந்தேன், இவையாவையும நீ திருப்பிக் கொள்ளக் கடவை இப்பொழுது யான் தானம் வாங்கிக்கொள்ளும் தருமத்தை மேற்கொண்டிலேன், இப்பொழுது யான் குசசீராஜிநங்களை தரித்துக் கந்தமூலபலங்களை புசித்து வனத்தில வசித்து தவசியாகிப் பித்ருவாக்கிய பரிபாலனம பண்ணுகையில், ஊக்கமுடையேனென வுணர்க இப்பொழுது இக்குதிரைகளுக்கு உணவளிக்கும் விஷய மொன்றிலுமே நான யாசகனாகி யிருக்கின்றேனன்றி, மற்றெவ் விஷயத்திலும யாசகனல்லேன், இவ்வொன்றினாலே யான பூஜிக்கப்பட்டேனாகுவேன; என்றருளிச்செய்து குதிரைகளுக்கு நீரு முணவுங் கொண்டளிக்கும்படி கட்டளையிட்டருளினார். குஹப்பெருமானு முடனே அங்கிருந்து விரைவாக மனிதர்களை யனுப்பி, இக்குதிரைகள் தசரதமஹாராஜருக்கு மிகவும் பிரியமுள்ளன வாதலின், இவைகளை மகிழ்விப்பதே சக்கரவர்த்தித்திருமகனார் திருவுளத்திற்கு உகப்பென்று, நல்லுணவுகளைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டு, ஸ்ரீராமபத்திர கட்டளைப்படிசெய்வித்தனர். அநந்தரஞ் சக்கரவர்த்தித் திருமகன் மரவுரியை யஜ்ஞோபவீதமாகத் தரித்து, வெய்யோன் அஸ்தகிரியை யடைகையில், ஸந்தியாவந்தனாதிகளை செய்தருளி, இளையபெருமாள் கொணர்ந்த கங்கோதகத்தையே யமுது செய்து, கால்கைகளை சுத்திசெய்து, ஆசமனம் பண்ணிப் பிராட்டியுடன் அம்மரத்தடியில் சயனங்கொண்டருளினர். இளையபெருமாளும் தமக்குரிய கைங்கரியங்களைச் செய்து முடித்து, மற்றொரு மரத்தினடியில், குஹப்

பெருமானுடனும், சுமந்திரருடனுங் கூடி நின்றனன்; குஹப்பெருமானும் வில்லுங் கையுமாக நின்று, இளையபெருமாளுடன் ஸ்ரீராமர் குணங்களையே புகழ்ந்து கொண்டு தூக்கமின்றி, ஊக்கத்துடன் ஸ்ரீராமபத்திரனைப் பாது காத்து வந்தனர். இவ்வண்ணம் துன்பமறியாதவரும், இன்புறத்தக்கவரும், நன்மதிபெற்றவரும், புகழ்பெற்றவரும், மகாத்மாவுமாகிய சக்கரவர்த்தித் திருமகன் அவ்வண்ணந் துயில்கொண்டிருக்கையில், அன்றிரவு நெடியதாக வளர்ந்து, தேய்ந் தொழிந்தது.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பதாவது சருக்கம்

முற்றிற்று.

---

சிலர் கங்கை ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவடியினின்றும் பிறந்ததென்றும், விஷ்ணுபதியென்னும் பெயர், விஷ்ணுபதமென்று ஆகாசமாதலால், ஆகாயத்தில் உறைகின்றமையால், வாய்த்ததென்று மொழிகின்றனர்கள். அஃது மிகுதியுந் தகுதியற்றது, விஷ்ணுபதமென்று ஆகாசத்துக்குப் பெயருளதாயினும், விஷ்ணுபதீயென்று பெயர், அதனடியாக வருவதற்கு ஈகாராந்தமாவது பொருந்தாது, அவ்வண்ணமாவதற் கிலக்கணசூத்திரமில்லை, ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஸ்ரீபாதத்திலுண்டாகியதென்று பொருள் சொல்லின், (பாதோந்யதரஸ்யாம்) என்னும் பாணிநிஸூத்திரத்தால், ஏகபதீ - த்விபதீ - என்னுமாபோல விஷ்ணுபதீயென்று ஈகாராந்தமாவதற்குக் குறையில்லை, ஆகாசத்திற்கு விஷ்ணுபதமென்று பெயருளதேயன்றி, விஷ்ணுபாதமென்று பெயர் நிகண்டுகளிலு மில்லை, லோக வேதங்களிலு மில்லை, ஆதலின், அவ்வண்ணம் மொழி செய்பவர்களுக்கு விஷ்ணு பாதச்யுதாமென்று இச்சருக்கத்திலிருப்பது ஒருபொழுதும் ஒவ்வாது, மற்று மிவ்விஷயத்திலுள்ள சங்கைகளைப் பாலகாண்டத்திலே பரிஹாரஞ் செய்துவிட்டோம், (ஹீநஸேவாயம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம்) என்று ஈனருக்கடிமை செய்வதும், அவர்களுடன் நட்புச் செய்வதும், அவர்களின் வீட்டிற்செல்வதும், உபபாதகங்களென் றருளிச்செய்யப் படுகின்றமையால், புருஷோத்தமனான ஸ்ரீராமபிரான் இழிகுலத்தோனாகிய குஹப்பெருமானுடன் நட்புச் செய்தது தகுமோ வெனின், தகும், (நிஷாதஸ்தபதிம் யாஜயேத்) என்று, வேடுவ ராஜனும், யாகஞ் செய்விப்பதற் குரியவனென் றிருப்பதாலும், (ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ்ம்ருதா: ஸர்வவர்ணேஷு தேசூத்ரா யேஹ்யபக்தா ஜநார்தநே) என்றிருப்பதாலும், பாகவதர்களல்லாத வேதியர்கள், சூத்திரர்களைப்போல நட்புக் கொள்ளத் தக்கவர்களல்லரென்றும், பாகவதர்களாகிய சூத்திரர்கள் வர்ணாச்ரம நியதங்களான கொள்வது கொடுப்பது முதலிய ஸம்பந்தம் செய்துகொள்ளத் தகாதவர்களாயினும், நட்புக்கொள்ளத் தடையில்லையிறே? இவ்விஷயத்திலுள்ள பல சங்கைகளையும், ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் திருமந்த்ரார்த்தத்தில் சுடரப் பரிஹாரஞ் செய்தருளி யிருக்கின்றார்.

* யதாயோத்யா என்னும் சுலோகத்தின் கருத்துரை.

ஸ்ரீராமதேவர்க்குத் திருவயோத்தி எவ்வண்ணம் ஸ்வாதீனமோ? இந்நகரு மவ்வண்ணமே ஸ்வாதீன முடையது, அடியேன் தேவர்க்குத் தொண்டனாகையால், தேவர்க்கு நித்திய கைங்கரியஞ் செய்வதே அடியேனுக்குரியது, தேவரை யதிதியாகப

# ஐம்பத்தொன்றாவது சருக்கம்.

## இளையபெருமாளும் குஹப்பெருமானும் ஸ்ரீராமனைக் குறித்து வியாகுலப்பட்டுக்கொண்டே துயில்கொள்ளாமல் விழித்துப் பாதுகாத்திருந்தது.

அநந்தரம் கபடமின்றி, யூக்கத்துடன் விழித்திருந்து, ஸ்ரீராமசந்திரனைப் பாதுகாத்தருளும், இளையபெருமாளைக் குஹப்பெருமான் நோக்கி, மிகவுஞ் சோகமடைந்து, சக்கரவர்த்தி குமாரா! உமக்காக இவ்விடத்தில் தளிர்களாலும், மலர்களாலும், இனிய படுக்கை செய்யப்பட்டிருக்கின்றது; இதில் நீர் படுத்துத் துயில்கொள்ளக் கடவீர். அடியோங்கள் காட்டு மனிதர்களாதலால், தூங்காமல் விழித்திருப்பது முதலிய வருத்தங்களைப் பொறுப்போம்; நீர் மஹாராஜா திருமகனாதலாலும், இதுவரையில் துன்புற்றறியீராதலாலும், நீர் இன்புற்று வாழத்தக்கவர், ஸ்ரீராமபத்திரரைப் பாதுகாப்பதன் பொருட்டு, நாங்களெல்லோரும் விழித்திருக்கிறோம்; எனக்கு இவ்வுலகினில், ஸ்ரீராமபத்திரனை விட, வேறொருவரும் பிரியமுள்ளவராகார்; இவ்விஷயத்தை நான் ஸத்தியமாகச் சொல்ல ஆணையுஞ் செய்வேன், நான் ஸ்ரீராமசந்திரருடன் நட்புக்கொண்டு இவரது அநுக்ரஹத்தால் சிறந்த புகழ்ச்சியுறக் கோருகின்றேன், இவரது அருளினாலேதான் அறம்பொருளின்பம் வீடுகள் கிடைக்கின்றன, ஆதலின், அடியேன் என்னினத்தார்களுடன் வில்லுங் கையுமாகச் சூழ்ந்து நின்று, யோகநித்திரைகொண்டு பிராட்டியாருடன் சயனங்கொண்ட பேரருளாளனை விழித்துக் காத்திருப்பேன், இவ்வனத்தில் யான் எப்பொழுதுந் திரிந்தலைகின்றமையால், யானறி

---

பெற்ற யாவன் தேவர்க்கடிமை செய்யாது ராஜ்ஜியத்தை விருப்புறுவான், இந்நகரத் திருவயோத்திபோலக் கைகேயிபோன்றவர்களால் தடைசெய்யாவண்ண மடியேன் அடிமைசெய்து பாதுகாப்பேன், ஆதலின், மஹாராஜாபோல முன்பு ராஜ்ஜியத்தை யளித்துப் பின்பு அபகரித்துக் காட்டேறச் செல்ல விடுவேனோ வென்று ஐயமுற்றக, தேவர் விஷயத்தில் இவ்வண்ணம் யாவன் செய்வான், (இயம்யதா அயோத்தியா ததா ஙிகராவாணீ) என்று அந்வயம். உ—இயம், இந்நகர் யதா அயோத்தியா எவ்வண்ணந் திருவயோத்திபோலாகுமோ? அவ்வண்ண மடியேன் செய்யக்கடவேன், இங்கு இவ்விஷயத்தில் தடைசெய்பவன் யாவனுளன், இதற்கரசனாகிய யானே மகிழ்ந்தளிக்கையில், இதற்குத் தடை செய்பவர் ஒருவருமில்லை. ௩—தேவர் பதினான்கு வருஷம் நகரம் புகாமல், வநவாஸஞ் செய்வேனென்று பிரதிஜ்ஞைகொண்டு எழுந்தருளினமையால், திருவயோத்திபோல இந்நகரமும் புகவொண்ணாத தாயிற்றே, அடியேன் என்னசெய்வேன், இந்த பாக்கியத்தை யாவன் பெறப்போகின்றான்; அடியேனே பெருமையால், ராஜ்ஜியத்தில் விருப்பமுற்றே நட்புக்கொண்ட சுக்ரீவனும், விபீஷணனும், இந்தப் பாக்கியத்தைப் பெறுவார்களோ? அவர்களும் பெறுவர்கள். ச—

யாதது ஒன்றுமில்லை; பிறர் நால்வகைப் படைகொண்டுப் போர்செய்ய வெதிர்க்கினும், அவர்களை வெற்றி கொள்ள வல்லோம், என்று இனிமை யாக வேண்டுகையில், இளையபெருமாள் அவரை நோக்கிக் கேளீர் நிஷாத ராஜரே! எம்மைப் பாதுகாக்க நீரும் வல்லீர், இவ்விடத்தில் யாங்களும் பயமுற்றிலோம; ஆகிலும், நீர் சற்று தருமத்தை ஆராய்ந்து பாரீர், சக்கர வர்த்தித் திருமகனும், லோகநாதனுமாகிய எம்மையன, ஸீதாபிராட்டியா ருடன தரையில் படுத்திருக்கையில், யான் நித்திரையையாயினும், நன்குயிர் வாழ்வையாயினும், இன்பங்களையாயினு மெவ்வண்ணமுறுவேன்? யாவ ரொருவர் தேவாஸுரர்களெல்லோரு மொன்று சேர்ந்து எதிர்த் தடர் செய் யினும, பின்வாங்காது வெற்றிகொள்ளுந் திறமையுள்ளவரோ? அந்த இவ வையரும், ஸீதாபிராட்டியாருடன் புல் அணையின்மீது படுத்திருக்கின்றன ரன்றோ? யாவர் மந்திரஜபங்களாலும், தவங்களாலும், பற்பல நியமங்க ளாலும் பிறப்பற்று, மஹாராஜருக்கு முதற்குமாரரும், மிகப் பிரிய முடையவரும, யாவரும புகழத்தக்க நற்குண நற்செய்கை யுடையவரு மாயினரோ? அத்தன்மையராகி, இவவையா பிரிந்து வனமேற வெழுந் தருளினமையால, மஹாராஜா நெடுநாள் வாழ்ந்திரார், விரைவி லிப்பார் மடந்தை அரசின்றிக் கைமபெண்போலாகு மென்பதில் ஐயமில்லை; மஹா ராஜர் திருமாளிகையில, தாய முதலிய வனிதையாகள யாவருங் கூவிக் கூவி யழுது மூர்சசைகொண்டு ஒழிவார்களென என்னுகின்றேன, கோஸலையாரும், மஹாராஜரும், இன்றிரவு பிழைத்திருப்பார்களென நான் நம்புகின்றிலேன; என் மாதா! சத்துருக்கனைக் காணபோமென்னு மாசை யினால், ஒருககா லுயயினு முய்வள; சிறந்த ஒரு திருமகனையே பெற்றிழந்த கோஸலராஜன திருமகள இத்துனபத்தை எவவண்ணம் பொறுத் துயிர வாழ்வாள, மிகவு மன்புடைய ஜநங்கள நிறைந்து, மிகவுங் கணணுறத்தக்க அத்திருவயோத்தி, மஹாராஜருடைய சோகத்தால் பீடிக்கப்பட்டு மிகவு மழியும், முக்கட்டனகளையுந் தீரப்பவரும், தெய்வத்தன்மை யுள்ளவரும், மூத்தவரும், பிரியமுள்ளவருமாகிய எமமையனைக் காணுமல், மஹாராஜ ருடைய உயிரோ? அழியுந் தனமையுடைய அவா திருமேனியில் எவவாறு நிலைத்திருக்கும், இவவண்ணம் மஹாராஜர் மரித்த பினனர், கோஸலை யாரு மிறபபர், உடனே என மாதாவும் மரணமடைவள், என் தந்தை எம மையனுக்கு அபிஷேகஞ் செயது பட்டங்கட்டாமல், தங்கோரிக்கை யீடே றாமல் விரைவில் மரணமுறுவா ரன்றோ? நிகழ்ந்தது நிகழ்ந்ததேயன்றி, நிகழுமதாகுமோ? மஹாரா்ஜர் மரணமுறுங்கால், அருகிலிருந்து சரம கைங்கரியஞ் செயவோர்க ளன்றோ? பாக்கியசாலிகள், யாங்களந்த பாக்கி யத்தையு மிழந்து பிரிந்தோமன்றோ? அழகிய நற்சந்தியுடையதும், நன்கு பிரிக்கப்பட்ட ராஜமார்க்க முடையதும், உயர்ந்த மாடமாளிகையுடையதும், சிறந்த பொதுமகளிர்களால் திகழ்வதும், ரதகஜதுரகபதாதிக ளடர்வ தும், திருத்த தேவாத்திய கோஷங்கள் முழங்குவதும், மங்கலங்களெல்லா

வற்றும் நிறைந்ததும், மகிழ்ந்து பூரித்த மஹாஜனங்கள் வசிப்பதும், பூஞ்சோலை மாஞ்சோலைகள் சூழ்ந்ததும், பலவகை யுற்சவங்கள் நடப்பது மாகி விளங்குகின்ற மஹாராஜா திருவயோத்தியில நல்வினையோர்க ளலல ரோ ? திரிந்து மகிழுவார்களா, யாங்கள் மீண்டு வருமளவும், மஹாராஜர் உயிர்வாழுவரோ? யாங்கள மீண்டுவந்து, அவரைக்கண்டு மகிழுவுறுவோமோ? பிரதிஜ்ஞை தீர்ந்த எம்மையருடன் திரும்பித் திருவயோத்தி சேர்ந்து வாழுவோமோ ? என்றிவவண்ணம துயரங்கொண்டு புலமபா நிற்கையில், அவ்விரவு நீங்கி, பொழுது விடிந்தது; இவ்வண்ணம், இளையபெருமாள் உண்மைகூறிப் புலம்பி யழுக்கண்டு, குஹப்பெருமானும அவாகளிடத்தி லுள்ள நேசத்தாலும, பக்தியாலும், மிகவுஞ் சோகமுற்று, ரோகங்கொண்ட நாகமபோலப் பதைத் திளைத்து, சோகநீர பெருக்கி வாடி வருந்தினா.

அயோத்தியாகாண்டத்தில ஐமபத்தொனறாவது சருக்கம்

முற்றிற்று

## ஐம்பத்திரண்டாவது சருக்கம்.

ஸ்ரீராமபிரான் சுமந்திரருக்கு விடைகொடுத்து தலைமயிரை ஜடைதரித்துக் கொண்டு சீதாலக்ஷ்மணாகளுடன் கங்காநதியைத் தாண்டி எழுந்தருளியது.

மறுநாள பொழுது விடிந்தபின, சக்கரவர்த்தித்திருமகன திருப்பள்ளி யுணர்ந்து, இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மண ! இரவுநீங்கிக கதிரவ னுதிக்குங் காலை யாயிற்று; குயிலினிமையாகக் கூவுகின்றது; மயில்களின் துவனியுங் கேட்கப் படுகின்றது; ஆதலின, வேகமுடைய இககங்கா நதியைத் தாண்டிச செலலுவோமென்றருளிச்செய்தனா. இளையபெருமாளு முடனே குஹப்பெருமானுடனும், ஸுமந்திரருடனும், ஓடம் சித்தஞ் செயயும்படி யருளிசசெய்து, ஸ்ரீராமபிரானருகில் வந்து நின்றனர். குஹப் பெருமானும் அவவண்ணமே செய்வேனெனறு, ஸ்ரீராமபத்திரருடைய ஆஜ்ஞையைச் சிரத்தில்கொண்டு, விரைவாகத தம் மந்திரிகளை யழைப் பித்து, அமைச்சர்களே! துடுப்புமுதலிய உறுப்புகளுடன்கூடியும், திறமை யுள்ள * கர்ணதார னுடையதும, இன்பந்தருவதும், ஸுகமாகத் தாண்டு விக்கத் தக்கதும், திடமுடையதுமாகி யுள்ள சிறந்த நாவத்தை விரைவில் துறைமுகத்தில் நிறுத்தக்கடவீர்களெனக் கட்டளையிட்டனா. அவர்களு முடனே யவ்வண்ணம் சித்தஞ்செயவித்து, இவருக்குத் தெரிவித்தனர்கள். அநந்தரம், குஹப்பெருமானும் கைகுவித்துககொண்டு ஸ்ரீராமசந்திரனை நோக்கி, ஸ்வாமி ரகுநந்தன! இந்த நாவம் ஸித்தஞ்செய்யப்பட்டு நிற்கின்

* கர்ணதாரன் என்பது, படகை யோட்டுகிறவன்.

றது; மீளவும் அடியேன் செய்யவேண்டுவது யாது? தேவர் இத்தரணியில் ஏறியருளக்கடவீர்கள். அடியேனே இந்நதியைத் தாண்டுவிப்பேனென்று விண்ணப்பஞ்செய்தனர். சக்கரவர்த்தித் திருமகனும் அவனை நோக்கித் தோழா! யானும் வ்ஸித்தமாகவே யிருக்கின்றேன்; ஸீதையின் ஆடையாபரணங்களையும், எமதாயுதங்களையும், ஓடத்திலேற்றக்கடவீரென்க கட்டளையிட்டனர். அனந்தரம் ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும், அம்பறாத்தூணீரங்களையும், வாள்களையுங் கட்டிக்கொண்டு கோதண்டங்களையுங் கையிலேந்தி, பிராட்டியாருடன் கங்காநதியின் வழிபற்றி நடந்தெழுந்தருளினார்கள். சுமந்திரர் அப்பொழுது வணக்கத்துடன் கைகுவித்து, ஸ்வாமி அடியேன் செய்யவேண்டும் வகையேதோ? அதை யருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர். சக்கரவர்த்தித் திருமகன் அவரைநோக்கி, வலது திருக்கரத்தினால் அவர் கரத்தைப்பற்றி, சுமந்திரரே! நீர் விரைவாக மீண்டு சென்று, மஹாராஜரருகில் ஊக்கமோடிருக்கக் கடவீராதலின், நீர் மீண்டு செல்லும், இதுவரையிலும் மஹாராஜா கட்டளையின்படி நாடுகளைத் தாண்டிக்கொண்டுவந்துவிட்டீரன்றோ? இனியாங்கள் ரதமின்றிக்கால்களினால் கடுங்கானங் கடந்து நடப்போமென றருளிச்செய்தனர். இவ்வண்ணம் தமக்கு ஸ்ரீராமபத்திரர் விடை கொடுத்து விட்டதை யறிந்து, ஸ்ரீராமசந்திரரை நோக்கி, ஸ்வாமி! தேவரீர் அற்பர் போலக் காடுகடந்து திரிவதை இவ்வுலகினில் ஒருவரும் நன்கென வுகந்து உடன்படார்; அத்தன்மையராகிய தேவரீர் வனவாஸ மெழுந்தருளுகையில், அடியேனுமுடன்வருவதற் கென்ன? தேவரீர் இத்துன்ப மடைந்தமையால், ப்ரஹ்மசரிய விரதத்திற்கும், வேதமோதுவதற்கும், பொறுமைகொள்வதற்கும், கபடமின்மைக்கும் பயனிலதென வுணர்கின்றேன்; தேவரீர் இளையபெருமாளுடனும், பிராட்டியாருடனும், வனத்தி லெழுந்தருளி யிருந்து, மூவுலகினையும் வென்றிகொண்ட ஸ்ரீமஹாவிஷ்ணுபோலப் பெரும்புகழ்பெற்று வாழ்வுறுவீர், அடியோங்களே தேவரை விட்டுப் பிரிந்தவர்களாகியும், பாவிகைகேயிக்கு வசப்பட்டவர்களாகியுந் துன்பமுற்றுக் கெடுவோமென்று தம்முயிர்க்கு நிகரான ஸ்ரீராமசந்திரர் தம்மைவிட் டெழுந்தருளுவதைக் கருதிக் கண்ணீர் பெருக்கி, நெடுநேர மழுது பின்பு தாமே தேறிக் கண்களைத் துடைத்துக்கொண்டு, ஆசமனஞ்செய்து சுசியாகிய பின் தொடரு மிவரை நோக்கி, ஸ்ரீராமபத்திரர் இனிமையாக மீளவு மருளிச்செய்கின்றனர். ஸுமந்திரரே! என் தந்தையார்க்கு, உமக்கு நிகராகிய இஷ்டர்க ளொருவரையுங் காண்கிலேன்; ஆதலின், சோகத்தினால் மனம் நொந்தவரும், மூப்புடையவரும், கைகேயியினால் பீடிக்கப் பட்டவருமாகிய அவர் என்னை நினைந்து துன்புற்றழுகுந்தாவண்ணம், நீர் அவரருகிலிருந்து தேற்றவேண்டு மன்றோ? ஆதலின், நானு மும்மை மீண்டு செல்ல உரைக்கின்றேன்; மஹாராஜர் கைகேயியின் இச்சையின்படி எப்பொழுது என்ன கட்டளையிடினும், தடையில்லாமல் உடனே அதனைச் செய்யக்கடவீர்.

ఏతదర్థం హి రాజ్యాని ప్రశాసతి నరేశ్వరాః
యదేషాం సర్వకృత్యేషు మనో న ప్రతిహన్యతే॥

ஏததாததமஹிராஜயாநி பரசாஸதிநரேசவராஃ
யதேஷாமஸர்வகருதயேஷு மநோநபரதிஹநயதே.

உலகததில அரசாகள அரசாடசி செயவதனபயன; அவர்களது விருபபம ஒரு காரியஙகளிலுங கெடுதி யடையாமல நிறைவேற வேண்டு மென்பதே யனறோ ? ஆதலின், மஹாராஜா துனபததிலல வருந்தாமலும, பிரியமினமையுறாமலும், இனபமுறுமாறு நீா செயயககடவீா. இது வரையும துனப மறியாதவரும, மூபபினரும, யாவரும பூசைசெயயத் தககவரும, எஙகள மீது மிகப பக்ஷமுடையவருமாகிய மஹாராஜனை என பொருடடுத் தணடம சமாபபிதது, நான விணணபபஞ் செயததாக விணணபபஞ செயயககடவீா என தந்தையரோ ! திருவயோததியை விட்டு வநதோமே யெனறும, வனததில வாசஞ்செயவோமே யென்றும், யான சிறிதும துனப முறறிலேன, லக்ஷ்மணனும சோகஙகொணடிலன்; ஸீதையும சிநதை செயதிலள, பதினாலு வருஷஙகள எளிதில் தீா்ந்த வுடன மீணடு வநத அடியோஙகளைக கணடு ஆநந்தமடையப்போகினறீா; எனறிவவணணம தநதையுடன விணணப்பஞ் செயத பின, கோஸலை சுமிததிரை கைகேயி முதலிய தாயமாாகளெலலோரையுமநோககி, நாஙகள மூவரும, ஆரோககியம விளஙகியதாக விண்ணபபஞ்செயது, பணிந்து மகிழவிதது, மீளவும மஹாராஜனை நோககி, எம பிதாவே ! விரைவாகச சிரஞ்சீவி பரதாழவானை யழைபபிதது, அபிஷேகஞ்செயது படடஙகட்டி இளவரசஞ்செய்தருளககடவீரெனறும, விணணப்பஞ்செயக; பரதாழ வானையுமநோககி, அடா பரதா! நீ மஹாராஜரிடததில எவவண்ணம பத்தி விசுவாஸ விநயஙகளுடன நடககினறனேயோ? அவவணணமே நம்மாதாககளெலலோாக ளிடததும, பக்ஷபாத மினறி, ஒரே சீராக நடந்து கொளளக் கடவை. உனககுக கைகேயி ஸுமிததிரையாகள எவ்வணணம அனபுசெய்யத தககவாகளோ ? என மாதாவாகிய கோஸலையாரும், அவ் வண்ணமே அனபுசெயயத தககவளனறோ ? அனறியும, மஹாராஜர் கட் டளையினபடி நீ இளவரசுப படடங்கொணடு, நீதிவழுவாது பாதுகாத்து வருவாயாயின், இமமை மறுமை இரணடிலும், உனக கழியா நன்மையுளா தாகுமெனறு இவ்வணணம உரை செயயக கடவீரென றருளிசசெயது, ஸுமந்திரருககு விடைகொடுத தருளினர். ஸுமந்திரா இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரரால திருபபபபடடவராகி, ஸ்ரீராமபததிர ரருளிச்செய்த வாக்கியங்களைக் கேடடும, ஸ்ரீராமசந்திரரிடத்தில் தமக்குள்ள பத்தியை யினால் திரும்ப மனமினறிச சக்கரவர்ததித் திருமகனை நோக்கி, ஸ்ரீராம சந்திரமூர்த்தியே !

యదహం నోపచారేణ బ్రూయాం స్నేహాదవిక్లబః
భక్తిమానితి తత్తావ ద్వాక్యం త్వం క్షన్తుమర్హసి॥

யத்ஹமநோபசாரேண ப்ருயாமஸ்நேஹாதவிக்லப:
பக்திமாநிதிதத்தாவத வாக்யந்தவமக்ஷந்துமாஹதி.

அடியேன் இப்பொழுது ஒருவிண்ணப்பம் பண்ணுகின்றேன்; இது ஸ்நேஹத்தினலன்றி, உபசாரமாகச் சொல்லுகின்றிலேன்; ஆதலின், அடியேன் எதிர்த்து உரைக்கின்றேனென்று சீறியருளன்மின்; இவன் நம்பக்கலில் பக்தியுடையவனென்பதைத் திருவுளம்பற்றி, அடியேன் செய்யுமிவ்வபராதத்தைப் பொறுத்தருளக்கடவீர். தேவர் பிரிந்தெழுந் தருளினமையால், பிள்ளையைப் பறிகொடுத்தவள்போல வொளியிழந்து பாழடைந்த அத்திருவயோத்தியைத் தேவரை விட்டு விட்டு அடியேன் மாத்திரம் எவ்வண்ணம் புகுவேன், புறப்படுங்காலையில் தேவர் வீற்றிருந்தலங்கரித்த இத்திருத்தேரை இப்பொழுது தேவரின்றித் தனியே புகக்கண்டு, சோகத்தால் அத்திருநகரி சிதறுண்டழியாதோ? போர்க்களத்தில் ரதிகளின்றித் தேரப்பாகன் மாத்திரம் தேரைத் திருப்பிக்கொண்டு செல்லுகையில், சேனைகள் அதனைக்கண்டு சோகமுழுவது போல வறியதாகச்செல்லும் இத்திருத்தேரைக் கண்டும், நகரிலுள்ளோர் கண்டு சோகங்கொண்டிறக்கார்களோ? இப்பொழுது தேவர் நெடுந்தூரமெழுந்தருளி யிருக்கினும், நிரந்தரம் சிந்தை செய்வதனால், எதிரிலிருப்பதுபோலக் கண்ணுறுமாறு தியானஞ் செய்பவர்களாகிய பிரஜைகளெல்லோரும், உணவுமின்றி வருந்தி இருப்பாரகளென்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை; சக்கரவர்த்தித்திருமகனே! தேவர் வநவாஸம் புறப்படுகையில், நகரத்திலுள்ளோர் யாவரும் சோகங்கொண்டழுது புலம்பிப் பட்டபாடுகளைத் தேவரே கண்டருளினீரல்லீரோ? முன்பே தேவர் பொருட்டுப் புலம்பி யழுத அவர்கள் இப்பொழுது தேவரை விட்டுப் பிரிந்து, திரும்பிய இத்திருத்தேரைக்கண்ணுற்று, நூறுமடங்கதிகமாகப் புலம்பியழுது வருந்தாரகளோ? நான் மீண்டு திருவயோத்தி சேரின், கோஸலையார் என்னைக்கண்டு ஸுமந்திரரே! என் பெற்றலரும் புதல்வனை எங்கேவிட்டு வந்தீரென்று வினவுவாராயின், அதற்கு நான் என்னவிடையுரைப்பேன்? அம்மா மஹாதேவி! நான் ஸ்ரீராமபத்திரரை மாதுலனாகிய கோஸலராஜனுடைய திருமாளிகையில் விட்டு வந்தேனென்று பொய்யுரைக்கவேண்டும்; ஒருபொழுதும் பொய்யென்பதை யறியாமல், சத்தியமாய்ப்பிழைத்த அடியேன் இவ்வண்ணம் பொய்ம்மொழியை எவ்வண்ணங் கூறுவேன்; அம்மா! உன் திருமகனை மலையுங் கரியும் பரிமாவுந் திரியுங் கானங் கடக்கச் செல்லவிட்டு வந்தேனென்று உண்மையுரைப்பேனாயின், அவர்கண்டே அச்சோகத்தைப் பொறாமல், மூர்ச்சைகொண் டிறப்

பாரோ அவ்வண்ணங் கொடுமைதங்கிய அம்மொழியை எவ்வண்ண முரை செய்வேன்; மிகவும் அறிவுள்ள இச்சிறந்த குதிரைகளும, இத வனையில், தேவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து, புகழும மகிழ்வுற்று, இப்பொழுது தேவரை விட்டுப் பிரிந்து தனியிருந்த இத் திருத்தேரை எப்படி இழுத்துக்கொண்டு மீண்டு செல்லும, ஆதலின, ஸ்ரீராமபத்திரனே! தேவரை விட்டுப் பிரிந்து, அடியேன மாத்திரம திரும் பிச் செல்லேன, அடியேனையு முடனகொண்டு வனவாஸஞ்செய்து, தன னியனுப்பும்படி யநுஜ்ஞைகொடுத் தருளக்கடவீர். இவ்வண்ணம் அடியேன வேண்டியும் இரங்காமல, அடியேனை யூருக்குத திருப்பி யனுப்பிக் கைவிடவே திருவுளங்கொண டிருப்பீராகில, தேவர் விட்டுச் சென்ற தக்ஷணமே பெருந்தீயை வளாதது இத்திருத்தேருடன அடி யேனு மதிலவீழ்ந் திறப்பேன, திருவரணியத்தில தேவர் தவமுயற்சி கொண்டு நியமந்தரித திருக்கப் போகின்றமையால, அடியேன அருகி லிருந்து தேவரது நியமங்களுக்கு விக்கினஞ்செய்யு முயிர்களைத் தடுத் தடித்து தோட்டுவேன, தேவருக்குத தோப்பாகனுக்கு இருதாததனுக்குவே. மென்னு மெண்ணததினுலேதான அடியேன தேரோட்டுஞ் செயலிற் பழக்கங்கொண்டு, தேவர் முன்னோர்களுக்கும தோப்பாகனுகி யிருந்தே னன்றோ! ஆதலின, தேவர்க்குச் சாரதியாகி யிருக்கும் பெறலரு மின்பத் தையும், தேவருடன வனவாஸஞ்சென்று மகிழ்ந்து வாழு மின்பத்தையும். அடியேன இப்பொழுது விரும்புகின்றேன; அரணியத்திலும் அடியேன தேவருடன வந்து பணி செய்து மகிழுமாறு அருள செய்து, ஸுமந் திரனே! நீ எனக்குத் துணையாயிருந்து, நமக்குக் குற்றேவல்களைச் செய்துகொண்டு வாவென்று அடியேனுக்கு மகிழ்ந்து அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்கின்றேன, இத்திருத்தேர் குதிரை களும, திருவரணியங்களிலும, தேவர்க்குச் செயத்தகிய கைங்கரியங் களைச் செய்து, புகழ்ச்சியும பெற்று, நற்கதியினையுமடையக் கடவன.

తవశుశ్రూషణంమూర్ధ్నా కరిష్యామివనేవసన్
అయోధ్యాంస్వర్గలోకంవా సర్వథాప్రజహామ్యహం ||

தவசுச்ரூஷணமமூர்தநா கரிஷ்யாமிவநேவஸன
அயோத்யாமதேவலோகம வாஸர்வதாபரஜஹாமயஹம.

தேவர் கட்டளையைச் சிரத்தில வைத்து வநத்திலுறைந்து ஸர்வவித கைங்கரியங்களையும செய்துகொண்டிருந்து மகிழ்வேன, இவ்வண்ணம மகிழ்கையில, திருவயோத்தியையாயினும, தேவலோகத்தையாயினும், மனத்திலும நினைந்து வருந்தேன; இப்பேரின்பத்தைவிட, அவ்வின்பங்க ளெல்லாம் சிற்றின்பங்களானமையால், அவை யறப்பமென விட்டு விடு கின்றேன்; தேவேந்திரன்து அமராவதி பட்டணம் பரிவஞ்செய்தவனும்

புகவொண்ணாததுபோலத் தேவரை விட்டுப் பிரிந்த அடியேனால், திரு வயோத்தி புகவொண்ணாது; இந்த வனவாஸம் தீர்ந்தபின்பு இத்திருத் தேரின்மீது, தேவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, மீண்டு திரு வயோத்தி புடபுகவேண்டுமென்பதே அடியேனுடைய சிறந்த விருப்பம்; தேவருடன் கூடி வாழ்கையில், அடியேனுக் கிப்பதினாலுவருஷங்களும் ஒரு கணப்பொழுதாகத் தீரும்; தேவரைப் பிரிந்திருக்கின், இப்பதினான்கு வருஷங்களே பலகோடி நூறாயிரம் வருஷங்களாக வளரும்; அடிமைப் பட்டோர்களுக்கு கருள்செய்தருளும் ஆராவமுதரே ! சக்கரவர்த்தித் திருக்குமாரரே ! தேவர்க்குப் பக்தனும், தொண்டனும், தேவர் சென்ற நன்னெறி பற்றி நடப்பவனும், தேவர் திருவுளத்திற்கு இசைவாக நடப்ப வனுமாகிய அடியேனைத் தேவர் இவ்விடத்தில் விட்டுவிட் டெழுந்தருளு வது தகுதியன்று;" ஆதலின், இவ்வண்ணம் திருவுளம் பற்றக்கூடாதென றிவ்வண்ணம் பலமுறை பணிந்து வேண்டிக்கொண்டு வருந்தி நின்றனர். சக்கரவர்த்தித் திருமகனாரும் பக்தவத்ஸலராகையால், அவரைச் சமா தானஞ்செய்யாமல் எழுந்தருளத் திருவுள்ளமின்றிச் சுமந்திரரை நோக்கித் "தோப்பரே ! உமக்கு எம்மிடத்திலுள்ள பத்திமையினையும், அன்பினை யும், நன்கறிவோம்; ஆயினும், உம்மை இங்கிருந்து திருவயோத்திக்குத் திருப்பியனுப்புங்காரணமுண்டாக்கின்றேம், கேளீர் நீர் என்னுடன் வருவீ ராயின், கைகேயித்தாயார் ! நான் வனமே சென்றேனென்பதை நம்பாமல், புறங்காகளில் சென்று வாழ்வேனென்றே எண்ணங்கொள்வர், நீர் மீண்டு செல்வீராயின், உம்மைக்கண்டு, நான் வனவாஸமே சென்றேனென்பதை நம்புவர்; இதனால் மிக மகிழ்வுற்று, தார்மிகராகிய மஹாராஜரைப் பெரியபொன்னையங்கொள்ளாமலும், துன்பப் படுத்தாமலு மிருப்பர். இவ்வண்ணம் என் திருத்தந்தையாரும், மகனால் பாதுகாக்கப்பட்ட சிறந்த ராஜ்ஜியத்தைக் கண்டு சந்தோஷமடைந்து வாழ்வாரென்பதே எனக்குச் சிறந்த கோரிக்கை, என்னுடைய நன்மையையும், மஹாராஜருடைய நன்மையையும் கருதி, மீண்டு செல்லக்கடவீர். அங்குச் சென்று நீர் சொல்லவேண்டிய சங்கதிகளை முன்னமே சொல்லி யிருக்கின்றேன்; அவ்வண்ணம் அங்கு விண்ணப்பஞ் செய்யக்கடவீரென் றிவ்வண்ண மருளிச்செய்து, பலமுறை தேற்றி யருளி, குஹப்பெருமானையும் நோக்கி, நிஷாதாதிபதி ! நானிப்பொழுது நாட்டார் நகரத்தார்களுடன் வாஸஞ்செய்வது தகுதியற்றது; தவசிபோலத் தனியே காட்டிலுறையும் படியே கைகேயியாரால் கட்டளையிடப்பட் டிருக்கின்றது; நானும் அவ் வண்ணமே யாகுகவென்று உடன் பட் டிருக்கின்றேன்; ஆதலின், நான் இப்பொழுது மாதவத்தோர்க் கணியாகிய ஜடை திரித்துக் கொள் வது முதலிய நியமங்களை மேற்கொண்டு, ஸீதாலக்ஷ்மணர்களுக்குந் தந்தைக்கும் ஹிதஞ்செய்பவனாகிச் செல்வேன்; ஆதலின், ஜடைதிரித்துக் கொள்வதன் பொருட்டு, ஆலின்பால் கொண்டுவந்தளிக்கக்கடவையென்று

கட்டளையிட்டருளினர். குஹப்பெருமானு முடனே அந்தப்பாலைக் கொணர்ந்து ஸமர்ப்பித்தனர். நீண்டுருண்ட திருத்தோள்களையுடைய ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் அந்தப்பாலினால் ஜடைதிரித்துக் கொண்டும், மரவுரி யுடுத்தும் நின்றமையால், சிறந்த மஹாயோகிகள்போலத் திகழ்ந்தனர்கள். இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரர் இளையபெருமாளுடன் வைகானஸவிரதம்பூண்டு, குஹப்பெருமானைநோக்கித் தோழனே! நீ படைகளிலும், பொருட்சாலையிலும், அரணிலும், நாட்டிலும், ஊக்கமற்றிருக்கறக; மிக ஊக்கங்கொண்டு தக்கபடி பாதுகாத்து வருக, ராஜ்ஜியமென்பது மிகத் திறமையுள்ளவர்களுக்கும், எளிதாகப் பாதுகாக்கத்தக்க தாகாதன்றோ ? என்றருளிச்செய்து, அவனையும் திரும்பும்படி விடைகொடுத்தருளி, ஸீதாலக்ஷ்மணர்களுடன் விரைவாக வெழுந்தருளிக் கங்கையின் கரையில் சித்தமாய் நிற்கின்ற சிறந்த ஓடத்தைக் கடாக்ஷித்து, அந்நதியைத் தாண்டி எழுந்தருளுவதன் பொருட்டு, இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! நீ இந்த நாவத்தில் மெதுவாக வேறிச் சீதையையும் ஏற்றுவிக்கக்கடவை யென்று கட்டளையிட்டருளினர். இளையாழ்வாரும், தமமையன் கட்டளையின்படி பிராட்டியாரை யந்நாவத்தில் முன்னமேற்றுவித்துப் பின்பு தாமுமேறி நின்றனர். சக்கரவர்த்தித் திருமகனும் உடனே அமர்ந்தருளக்கலத்திலேறியருளி, பிராஹ்மணர்கள் செய்யத்தக்கவையும், க்ஷத்திரர்கள் செய்யத்தக்கவையுமாயுள்ள மந்திரங்களை ஜபஞ்செய்தருளினர். குஹப்பெருமானும் அந்நாவத்தைக் கடத்தும்படி தம்பரிஜனங்களுக்குக் கட்டளையிட்டனர். இளையபெருமாளும் விதியின்படி யாசமனஞ்செய்து அந்நதியினை மகிழ்ந்து பணிந்தனர். பெருமாளும் பிராட்டியாருடன் பரிவாரங்களுடன் கூடிய குஹப்பெருமானுக்கும், ஸுமந்திரருக்கும், ஓடத்தைச் செலுத்திவிடும்படி நாவிகர்களுக்குங் கட்டளையிட்டருளினர். அநந்தரம் அந்நாவம் அந்நாவிகர்களாலோட்டப்பட்டுச் சிறந்த துடுப்புகளின் வேகத்தினால் விரைவாக அந்நீரினைக் கடந்து சென்றது. ஸீதாபிராட்டி ஆற்றினடுவில் செல்லுகையில், கைகூப்பிக் கங்கையை நோக்கித் தாயே! தசரதமஹாராஜா திருக்குமாரராகிய என் பிராணநாதர் தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணுவதன் பொருட்டு வனவாஸஞ் செல்லுகின்றனர். இவர் ஸுகமாக வாழ்ந்து பதினான்கு வருஷங் கழியுமளவும் நீ யருள்செய்து பாதுகாக்கக்கடவை. பதினான்கு வருஷங் கழிந்தபின் பதினான்கு வருஷங் கடந்து மீளும்படி நீ யருள்செய்து பாதுகாக்கக்கடவை.

கணும ஸுகமாகத் தீர்ந்து குறைவின்றி, நான் பாததாவுடனும், லக்ஷ்மணனுடனும், ஸுகமாக மீண்டு வருவேனாகில், மிக மகிழ்ந்து எல்லாக் கோரிக்கைகளு மீடேறி, உன்னைக் குறித்து யாகஞ்செய்விப்பேன், நீ மூவுலகங்களிலுஞ்சென்று, அங்கங்குள்ள ஜனங்களையும் வானேற்றிச் சமுத்திரராஜனுக்கும் பாரியையாகி மிகப் புகழ்பெற்றிருக்கின்றனையன்றோ ? என் கணவர் ஸுகமாக மீண்டெழுந்தருளிப் பட்டாபிஷேகங் கொள்வாராகில், உன்னைப் பலமுறை தொழுது துதிசெய்வேன்; உனக்குப் பிரியஞ் செய்

வதின் பொருட்டு, அநேகநூறாயிரம் பசுக்களையும், சிறந்த ஆடையாபரணங்களையும், அறுசுவையுள்ள அன்னங்களையும், வேதியர்களுக்கு அளிப்பேன்; நியமங்கொண்டு ஆயிரம் சாராயக் குடங்களினாலும், மாம்ஸமே முதலாகவுள்ள அன்னங்களினாலும், உன் பொருட்டு யாகஞ் செய்விப்பேன்; உன்னுடைய தீரங்களில் வாழுந் தேவர்கள் பொருட்டும், மற்றுமுள்ள புண்ணிய தீர்த்தங்களிலும், தேவாலயங்களிலும், * மணிகர்ணிகாதி கட்டங்களிலுமுள்ள தேவதைகளின் பொருட்டும் யாகஞ்செய்விப்பேன், ஆதலின், என் மாதா! இளையபெருமாளுடனும், என்னுடனும், ஒரு குறையுமின்றி வனவாஸந் தீர்ந்து, திருவயோத்திக் கெழுந்தருளுமாறு அருள்செய்து பாதுகாக்கக் கடவையென் றிவ்வண்ணம் வேண்டிக்கொண்டே அந்நதியின் தென்கரை வந்து சேர்ந்தனர். பகைவர்களை வெல்லுந் திறமையுள்ள ஸ்ரீராமபத்திரரும், ஸீதாலக்ஷ்மணர்களுடன் கங்கையின் தென்கரை சேர்ந்து, வங்கத்தை விட்டிழிந்து காட்டிற் புறப்பட்டெழுந்தருளி இளையபெருமாளை நோக்கி, ஸௌமித்திரா நந்தனா! இக்கானகம் மிகக் கொடியதாதலின், ஜனங்களிருக்கினும், இல்லாவிடினும், உபேக்ஷையாயிராமல், மிகவும் ஊக்கத்துடன் பாதுகாத்து வரக்கடவை. இதுவரையில், நாமிவ்வந்ததைக் காணுமையால், இவ்விடத்தி லென்ன தீங்கு நேருமோ? அன்றியும், அவசியம் ஊக்கமாகக் காத்துச் செல்லவேண்டும், நீ முன்பு செல்லக்கடவை. ஸீதை இடையில் செல்லக்கடவள்; யானுன்னையும், ஸீதையையும், பாதுகாத்துக்கொண்டு பின்றொடர்ந்து வருகின்றேன்; இவ்வண்ணம் நாம் ஒருவர்க்கொருவர் பாதுகாத்துச் செல்லவேண்டும்; எக்காலத்தில் எஃது செய்யத்தக்கதோ? அந்தக்காலம் கடந்தபின்பு, அதனைச்செய்வது மிக வருத்தமாகும்; இப்போழ்துதான் ஸீதை வனவாஸத்திலுண்டாகுந் துன்ப மிஃதென வுணர்வள். இஃது ஜனங்கள் ஸஞ்சாரமின்றியும், உத்யானம், நன்செய், புன்செய் நிலங்களல்லாமலும், மேடுபள்ளமாகவும், பெருங்காற்று வீசவும், கோரமாகிய வனத்தை இப்பொழுதுதான் புகப்போகின்றனளென் றருளிச்செய்தனர். இளையபெருமாளும் தம்மைய னருளிச்செயலைக்கேட்டு முன்னடந்தனர். அவரைத் தொடர்ந்து ஸீதாபிராட்டி யெழுந்தருளினர். அவர்களைத் தொடர்ந்து ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளினர். இவ்வண்ணம் இவர்கள் எழுந்தருளும்வரையில், ஸுமந்திரர் கங்கையின் வடகரையினின்று பார்த்துக்கொண்டிருந்து, ஸ்ரீராமபத்திரர் நெடுந்தூர மெழுந்தருளி விட்டமையால், கண்ணுக்குக் காணுமல் கடுந்துயரமடைந்து கண்ணீர்பெருக்கி யழுதனர். சக்கரவர்த்தித் திருமகனும், அம்மஹாநதியைத்தாண்டிப் பலவகைப் பொருள்கள் நிறைந்தும், நீர்வள நிலவளம் பொருந்தியும், மகிழும் ஜனங்களுடையதுமாகிய வற்சதேசத்தை யடைந்தனர். அப்பொழுது ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும், மாலைப்பொழுதாகு

* மணிகர்ணிகை யென்பது, காசியில் அறுபத்திநான்குபடித் துறையிலொன்று.

மனைவும், பிராட்டியாருடன் கூடி வழிநடந்து பசியினால் பீடிக்கப்பட்டவர்களாகி, க்ஷத்திரியர்களுக்கு குணவாக விதிக்கப்பட்ட சிறந்த வராஹத்தையும், கலைமானையும், புள்ளிமானையும், கறுப்புக் கலைமானையும், ஆக நான்கு மிருகங்களையும், அடித்தெடுத்துக்கொண்டு, பிராட்டியாரை யோர் மரத்தடியில் விட்டு, மிருகங்களைத் தேடிச்சென்றமையாலும், மாலைப்பொழுதாயினமையாலும், பசியதிகரித்தமையாலும், விரைவாகவந்து அம்மரத்தினடியி லிறங்கி, இன்புற்று மகிழ்ந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

---

இந்தச் சருக்கத்தில் இல்லறம் பூண்டிருந்த ஸ்ரீராமபத்திரர் வானப்பிரஸ்தாசிரம தரித்ததா யிருக்கின்றது, இவர் இல்லறத்தை விட்டே அதனை மேற்கொண்டனரோ? அல்லது, இல்லறத்திலிருந்தே அவ்வறத்திற் குரிய நியமங்களை மாத்திரம் செய்தருளினரோ? மேன்மேலுயர்ந்த ஆச்சிரமத்தை மேற்கொண்டவர், மறுபடியும் இழிமைப்பட்ட ஆச்சிரமத்திற்கு வரலாகாதென்றும், ஒருசாகையிலுள்ளவன் மற்றொரு சாகையின்படி நடந்தால், சாகாரண்டனென்னப்படுவதுபோல இவர் ஆசிரமரண்டரெனப் படுகின்ற ரென்றும் இருப்பதினால், ஸ்ரீராமசந்திரர் மீளவும் இல்வாழ்ந்து அரசுசெய்வது ஒக்குமோ? ஒவ்வாது, ஆதலின், முதற்பக்ஷமும், இரண்டாவ பக்ஷமும் கூடாவெனின், ஒரு ஆச்சிரமத்திலுள்ளவர் ஸத்தியபரிபாலனத்தின் பொருட்டாயினும், ஒருகாரியத்தை ஸாதனஞ்செய்துகொள்ளவேண்டி பொருட்டாயினும், தமக்குநேரும் ஆபத்தைப் போக்கிக்கொள்வதன்பொருட்டாயினும், வேறு ஆச்சிரமங்களுக்குரிய வேஷங்களைக்கொண்டு தந்த காரியங்க ளீடேறினபின்பு, முன்போலத் தந்தமக்குரிய ஆச்சிரமத்திலிருப்பது தருமமே, (ஸமயகஸங்கல்பஜ்ஞகாமோ தாமமூலமிதமஸமருதம) என்று, இவ்வண்ண மொக்குமென மறுநூலிலும் ஓதப்படுகின்றது, ஆதலால், தருமபுத்திரரும் அஜ்ஞாதவாஸத்தில் ஸந்யாஸியாயினர், அர்ஜுனனும் ஸுபத்திரையை விவாகஞ் செய்து கொள்வதன் பொருட்டு யதியாயினர், நம் அருள் வள்ளலாராகிய ஸ்ரீமத்பாஷ்யகாரரும் வெள்ளைசாத்தி யருளினர். அவ்வண்ணம் இங்கும் ஸ்ரீராமசந்திரர் வைகானஸ விரதங்கொள்வதும் தருமமென்றே யுணர்க. ஸ்ரீராமபத்திரர் மிகவும் பூதத்துயை புடையராகியும், தம் பசியின் ஆதிரத்தால் மிருகங்களைக் கொலைசெய்ய எவ்வண்ணந் துணிந்தனர். அப்படி கொல்வதும் தருமமாகுமோவெனின், தருமமாகும், க்ஷத்திரியர்கள் மிருகங்களைப் புசிக்கலாகுமென்று விதியிருக்கின்றமையால், வேதியர்களும், யாகாதிவிதிகளில் அஜத்தைக் கொன்று ஹோமமுதலியவை செய்வதுபோலத்தகும், (சஹஜேக்ஷிளஜேஷி ணிநதியேண ஹுசேகமமவி வஜ்ஜணீயயே, பசுமாளண கம்மதாளுணே அணுயம்பாமியு யெவவசொத்தியே) என்று, ஸ்ரீகாளிதாஸ மஹாகவி சொன்னபடி விதிப்படி செய்த இக்கொலையினால், ஸ்ரீராமபத்திரர் கொடியரென வொண்ணாதெனவு முணர்க.

## ஐம்பத்துமூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீராமபத்திரர் தம் மாதாவின் துயரத்தை நினைந்து தம்மை வெறுத்து வருந்துகையில் இளையபெருமாளை சோகந்தணியத் தேற்றியது.

அநந்தரம் சக்கரவர்த்தித்திருமகன் ஸீதாபிராட்டி வீற்றிருக்கின்ற மரத்தினடியி லெழுந்தருளி, மாலைச்சந்திககடன்களைசசெய்தருளி, இளைய பெருமாளை நோக்கி, கேளடா லக்ஷ்மணா! நாம தேசம விட்டுக் காடு சேர்ந்த தற்கு இன்றிரவே முதன்மையானது, இப்பொழுது ஸுமந்திரரும திரும்பி விட்டமையால், தனியே நின்றோமேயென்று நீ துன்புறற்க, இன்று முதல் நாமிருவருமே விழித்துக் காத்திருக்க வேண்டும், இப்பொழுது ஸீதை யைப் பாதுகாத் தளிக்கும் பாரம் நமக்கே மிகுந்த தன்றோ? இன்றிரவை இங்குள்ள புல முதலிய வற்றைப் படுக்கையாகப் பரப்பிப் படுத்துத் துயின்று, வருத்தப்பட்டாவது போக்குவோம், என்றருளிச்செய்து, பூமியின்மீது வீற்றருளி, இளையாழ்வானை நோக்கி, மீளவும் பற்பல கதை களை யருளிச்செய்யலுற்றனர். லக்ஷ்மணா! இப்பொழுது மஹாராஜா நம்மை நினைந்து துன்புற்றுப் படுத்திருப்பாரே யன்றி, இன்புற்றிரார். கைகேயி மாத்திரம் தம் விருப்ப மீடேறிற்றேயென்று மகிழ்ந்திருப்பள். அவள் மண் பொருளாசையினால், மஹாராஜனைச் சங்கைகொண்டு வருத்திக் கொலைசெய்யாமல், பரதனை யழைப்பித்து, அவனைக்கண்டு மகிழ்ச்சியுற் றிருப்பாளோ? மஹாராஜ ரிப்பொழுது அநாதராகவும், விருத்தராகவும், என்னைப் பிரிந்தவராகவும் இருக்கின்றமையால், கைகேயியினால் பீடிக்கப் பட்டவராகி என்செய்வாரோ? இவ்வண்ணம் நமக்குற்ற துன்பத்தையும், மஹாராஜருக்குக் காமத்தினாலுற்ற மதிமயக்கத்தையும் ஆராயுங்கால், அறம்பொருள்களைவிட இன்பமே சிறந்ததென வெனக்குத்தோற்றுகின்றது; இல்லையாகில், மஹாராஜா என்னைக் காட்டிற் விட்டதுபோல மூடனாயிருப் பவனாயினும், பெண்புத்திக் கிணங்கி, இனிய குமாரனை யோட்டி விடு வானோ? பரதன் மனையாளுடன் கூடி மகிழ்ந்து சிறந்து செழித்து மகிழ்ந்த கோஸல தேசங்களை யெல்லாம் மஹாராஜர்போலப் பாதுகாக்கப்போகின்ற னன். அவனொருவனே யன்றோ? நல்வினையினன். தந்தையும் மூப்பின ராகி, யானுங் காட்டைந்தமையால், அவனொருவனே எல்லா ராஜ்ஜியத் திற்கும் முதன்மையனாகுவான்.

అర్థధర్మౌ పరిత్యజ్య యః కామమనువర్తతే
ఏవమాపద్యతే క్షిప్రం రాజా దశరథో యథా

அர்த்ததர்மௌபரித்யஜ்ய யஃகாமமனுவர்த்ததே
ஏவமாபத்யதேக்ஷிப்ரம் ராஜாதசரதோயதா.

பொருள் அறங்களைவிட்டுக் காமத்தை மாத்திரம் யாவனொருவன் முதன்மையாகக் கொள்ளுகின்றானோ? அவன் நந்தந்தைபோல விரைவில் கடுந்துயரத்தை யடைந்தழிவான், நந்தந்தை இறப்பதன்பொருட்டும், நாம் காட்டடைவதன் பொருட்டும், பரதன் அபிஷேக மடைவதன் பொருட்டுமே கைகேயி வந்து சேர்ந்தனளென்று நான் நினைக்கின்றேன்; கைகேயி இப்பொழுது தானே அழகினளென்று மதமேறி மதிமயக்குற்று, கோஸலை யையும், ஸுமித்திரையையும், வருத்தமுறச் செய்யா திருப்பாளா? அடா லக்ஷ்மணா! ஸுமித்திராதேவியும், என்பொருட்டுத் துன்புறவேண்டாம்; ஆதலின், நீ பொழுது விடிந்தது மெழுந்து திருவயோத்திக்குப் போய்ச் சேர்ந்து தாயை மகிழ்விக்கக்கடவை. நானொருவனே ஸீதையை யுடன் கொண்டு தண்டகாவனஞ் செல்வேன், அநாதைபோல வருந்தும், என் மாதாவுக்கும் நீ தஞ்சமாகக்கடவை கைகேயி மிக்க கொடிய ளாதலால், அடிக்கடி காரணமின்றிப் பகைகொண்டு மாதாவை வருத்துவள், ஆதலின், நீ தரும முணர்ந்த பரதனிடத்திலே இவளை வருத்தாமல் பாதுகாத் தருளென்று என் தாயை யடைக்கலங் கொடுக்கக்கடவை என் தாய் முன்பிறப்பில் பெண்களைப் பிள்ளைகளுடன்கூட விடாமல் பிரித்து வருத்தி யிருப்பாள் அதனால், இப்பொழுது அவளுக்கித் துன்பம் நேர்ந்தது; நெடுங்காலந் தவஞ்செய்து பெற்றெடுத்து வளர்த்து ஸுகமுறுங் காலத்தில் கோஸலையார் என்னைவிட்டுப் பிரிந்தனளே? ஆதலின், என்னைவிடத் தீவினை செய்தவனு முளனோ?—

మాస్మ సీమన్తినీ కాచి జ్జనయేత్పుత్రమీదృశం
సౌమిత్రే యోఽహమమ్బాయా దద్మి శోకమనన్తకం

மாஸ்மஸீமந்திநீகாசி ஜ்ஜநயேத்புத்ரமீத்ருசம
ஸௌமித்ரேயோஹமம்பாயா தத்மிசோகமநந்தகம

நானிப்பொழுது என் அன்னையாக்கு முடிவிலாத்துயரத்தை விளைத் ததுபோல இவ்வண்ணந் துன்ப முறுவிக்கத்தக்க மகனை யொருத்தியும் பெறக்கடவளல்லள்.

మన్యే ప్రీతివిశిష్టా సా మత్తో లక్ష్మణ శారికా
యస్యాస్తచ్ఛ్రూయతే వాక్యం శుక పాదమరేర్దశ

மந்யேப்ரீதிவிசிஷ்டாஸா மத்தோலக்ஷ்மணசாரிகா
யஸ்யாஸ்தச்சரூயதேவாக்யம சுகபாதமரேர்தச.

என் தாயாரால் வளர்க்கப்பட்ட அந்தச் சாரிகைப்பறவையும், என்னை விடச் சிறந்ததென நினைக்கின்றேன், தாயாரின்மேல் இதற்கும், இதன்மேல் தாயார்க்கும், ப்ரீதி மிகுதியுள்ளதாகுமன்றோ? இஃது கூடியிருந்து ஊனை

வருவதைக் கண்டு கிளியை நோக்கி, அடா சுகா! நீ 'பகையாகிய இப்பூனை யின் காலினைக் கடி'யென்று உரைக்கும் வாக்கியத்தை அடா கிளியோ, லழகிய ராமா! நீ சத்துருவின மூலத்தைக் கணடிக்கக் கடவை யென்று என்னைநோக்கிச் சொன்னதாகவுமெண்ணி மகிழும்படி அஃது என் தாயார் கேட்க உரைகக் மனறோ? இவவண்ணம் நல்வினையின்றித துனபுறற அனனையாாக்கு நான ஒருதவியுஞசெய்யாமையால, அவருக்கும மலடிக்கும் வாசியென்ன? அவள் எனனைப்பிரிந்து சோககடலில் மூழகி இருககினற மையின், அவளை விட நல்வினை யற்றவர்களு முளரோ?—

ఏకోహ్యహమయోధ్యాంచ పృథివీంచాపిలక్ష్మణ ।
తరేయమిషుభిఃక్రుద్ధో ననువీర్యమకారణం॥

ஏகோஹயஹமயோதயாஞச பருதிவீஞசாபிலக்ஷமண

தரேயமிஷுபிஃகருததோ நநுவீாயமகாரணம்.

கேளாய லக்ஷமண! நான் தருமததை விடடுச் சினங்கொளவே னுகில், நான ஒருவனே பாணஙகளால அயோத்தியையும், மற்றுமுளள பூமணடலத்தையும் வென்று அபிஷேகஙகொளவேன, இபபொழுது சினங்கொணடு வீரஞசெய்வது தகுதியறற தன்றோ? அதருமத்துக்கும், பரலோகத்திறகும் அஞசி, இபபொழுது நான அபிஷேகஞ செயதுகொள் டிலேனனறி, திறமையினமையாலனறு, எனறிவவணணம், மற்றும் பற்பல மொழிகளை யருளிசசெயது, கண்ணீரபெருகவருந்தி, இரவில் மொழியற்று மவுனியாயினர். இவவண்ணம் அழுது வருந்தி, அனலறற நெருப்புப்போல வும், அலையினெலியற்ற ஆழகடல்போலவும் வீற்றிருககினற ஸ்ரீராமபத்தி ரனை இளையபெருமாள நோககி, ஸ்வாமி எம்மையனே! இபபொழுது திரு வயோத்தி முழுமதி நீங்கிய இரவுபோலத் தேவரை விட்டு நீஙகினமையால், ஒளியிழந்து இருளமூடி யிருக்கும், தேவா தீரோதாதத கம்பீர குணகண சாலியராயிருந்தும், இவவண்ணம் மனநதளாநது வருந்துவது தகுதியறறது; இதனல் பிராட்டியாரையும், அடியேனையும், துனபுறச்செயதலேதவிர வேறு பயனில்லை; தேவரை விட்டுப பிரியுஙகால், பிராட்டியாரும் பிழையார்; அடியேனும் பிழையேன; ஒருகால் பிழைக்கின, நீரினினறு மெடுத்துக் கரையில் போட்ட மீனகள போலத் துடிப்போமே யனறு, நெடுநேரம் உயியோம்; தேவரைவிட்டு அடியேன தந்தையையாயினும், தம்பியையாயி னும், தாயையாயினுங் காண விருபபுறேன், வானுலகம் பெறினும் வேண் டேன்; எனறிவவண்ணம் விண்ணப்பஞ்செய்து தேறறி மகிழவித்தனா. அநந்தரம் அவவிடத்தில் வீற்றிருந்த ஸீதா ஸ்ரீராமசந்திரர்களிருவரும், இளையபெருமாளால், ஆலமரத்தடியில தளிர்களா லியற்றப்பட்ட சயனத்தி லெழுந்தருளிப படுத்தருளினர்கள். இவவாறு இளையபெருமாள் விண் ணப்பஞ்செய்த இனியவாக்கியங்களை ஸ்ரீராமபத்திரா திருச்செவிசாத்திப்

பதினான்குவருஷமும் தன்னுடன் கூடி இருக்கும்படியே அநுமதிசெய்து துயில்கொண்டருளினர். இவ்விருவரும் மிகவும் தீரரும் வீரரும் சூரரும் ஆதலின், கிரிகந்தரத்தில் வாஸஞ்செய்யும் இரண்டு சிங்கங்களைபோல அந்தக் கோரமான கானகத்திலும் சிறிதும் பயமுறாமல் இனிதாகவாழ்ந்து மகிழ்ந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்துமூன்றாவது சருக்கம் முற்றிற்று

இந்த ஸ்ரீமத்ராமாயணமென்னும் இதிஹாஸமஹா காவ்யத்தில் ஸம்பரதா யார்த்தங்கள் சருக்கங்கள் தோறும், சுலோகங்கள் தோறும், பாதங்கள் தோறும், பதங்கள்தோறு மிருக்கின்றன; ஆகிலும், இதை ஆரம்பம் செய்தீர்கள், இவ்வர்த்தங் களையும் விவரித்து கோட்டைச் செய்யும் பக்ஷத்தில் மிக வளரு மென்பதனாலும், அவ் வார்த்தங்கள் குருமுகமாகக் காலக்ஷேபஞ்செய்தே அறிந்துகொள்ளவேண்டு மென்பத னாலும், இவ்விஷயத்தை முதலி லிருந்து உரைத்திலொன்று எண்ணுகின்றேன்; யானும அதனை யநுஸரித்தே இதுவரையில் செய்துவந்தபோதிலும், சில விடங்களில், சில விசேஷார்த்தங்களை மாத்திரம், சில துராக்ஷேபங்களுக்கு ஸமாதானமாகக் குறித் துரைசெய் திருக்கின்றேன், இங்ஙில சகல சாஸ்திரங்களினுடைய முக்கியார்த்தங் களும், சகல வேதங்களினுடைய முக்கியார்த்தங்களும், சுருங்க வருளிச்செய்யப்பட் டிருக்கின்றன, அறம்பொருளின்பம் வீடென்னும் நான்கு புருஷார்த்தங்களும், அவை களைப் பெறும் வகைகளும், நன்கருளிச் செய்யப்பட்டன அவற்றுள்ளும் ஸர்வதேசங் களிலும், ஸர்வ காலங்களிலும், ஸர்வாவஸ்தைகளிலும், ஸர்வஜநங்களுக்கும் ஸுலப மாகவும், விரைவில் பயன் தந்தே காப்பதாகவும், நிரந்தரஞ் செய்யத்தக்கதாகி வருத்தாமல், ஒரே தரத்தில் ஒரே க்ஷணத்தில் செய்யத்தக்கதாகவும், ஐந்தங்கங்களை யுடைய தாகவும், மந்திர விசேஷாநுஸந்தானமடியாகவு முள்ளது, பெரிய பிராட்டி யாருந் தாமுமொன்றாகிப் பரப்ரஹ்மமென்று ஓதப்பட்ட ஸ்ரிய:பதியாகிய ஸ்ரீமந் நாராயணருடைய திருவடியைச் சரணமடைவதெனபதே, இஃது இத்தன்மைத் தெனபது வேதாந்தங்களின் கடையி லோதப்படுகின்றது, பற்பல மஹாயோகிகளும் அருளிச்செய் திருக்கின்றனர்கள் இதனையே முதன்மையாக மதித்து, ஸ்ரீவான் மீகி பகவான் இந்தப் பிரபந்தத்தை யருளிச்செய் திருக்கின்றமையால், இதற்குச் சரணாகதி சாஸ்திரமென்று நம்பூர்வாசாரியர்களால் திருநாமம் சாற்றப்பட்டிருக்கின் றது, இவ்விசேஷார்த்தத்திலுள்ள நோக்கிலேதான் சில விடங்களில் வெளிப்படத் தோற்றும், பொருள்களில் விரோதம்போலத் தோற்றும், ஆங்காங்கு லோகரீதி யாகவே ஸமாதானமுங் கூறினோம், முற்றுங் குருமுகமாகவே அறிந்துகொள்ள வேண்டுமாயினும், முக்கியமான சில விசேஷார்த்தங்களைமாத்திரம் வந்தவிடங்களில் எடுத்துரைப்போம், எல்லாவிடங்களிலும் இவ்வண்ணமே ஊஹித்துக் கொள்க. இந்த ஸ்ரீமத்ராமாயணம் இதிஹாஸ மென்பதையும், மஹாகாவ்யமென்பதையும், அதனா லும், தருமங்காவ்யங்களிற் சிறந்த மஹாநாடகமாகு மென்பதையும், மற்று மிதற் குள்ள ஆக்ஷேபஸமாதானங்களையும், பிரமாணங்களுடனும், உதாரணங்களுடனும், வேறே கிரந்தமாக எம் திருத்தந்தைகள் அருளிச்செய்துகொண் டிருக்கின்றமையால், அவ்விஷயங்களை இதில் கூறுகின்றிலேம், ஓ ! ஓ ! திகைப்பூண்டை மிதித்து வழிதப்பி

நெடுகத்துரைஞ்சென்றோம்; இப்பொழுது இச்சருக்கத்திலுள்ள விசேஷங்களை யன்றோ எழுதமுயன்றோம்; ஆம் ஆம் இச்சருக்கத்தில் ஸ்ரீராமசந்திரர் தம் தந்தை தம்மை அநியாயமாகக் காட்டிலோட்டியதாகவும், அவர் மிகவுங் காமாதுரரென்றும் இகழ்ந்திருக்கின்றார். தாமும் பலவாறாகத் துயரங்கொண்டு அறப்பாபோலப் புலம்பி யழுகின்றார். ஆதலின், இவர் பரப்ரஹ்மமென்பதும், தீரோதாத்தகுணங்களை யுடையவரென்பதும், எவ்வண்ணம் பொருந்துமெனின் ? பொருந்தும்; (ஆத்மானம்மாநுஷம் மந்யே ராமந் தசரதாத்மஜம்) என்று யுத்தகாண்டத்தில் ஸ்ரீராமபத்திரரே பிரஹ்மருத்திரேந்திராதி தேவர்களைப் பார்த்தருளிச்செய்கிறபடி இவர் தம் பரத்துவத்தை வெளிப்படுத்தாமல் மனுஷ்யபாவனை செய்கின்றபடியால் ஸாதாரணமாக இதரஜனங்களுக்கு இவ்வண்ணந் துன்பம் நேருங்கால் எவ்வண்ணம் துன்பப்பட்டு வருந்துவார்களோ ? அவ்வண்ணமே இவர் அபிநயம் செய்தனரென்னவுமாகும். அன்றியும், இவர் தந்தையை இகழ்ந்து மிலர், தாம் துன்புற்று மிலர், அவ்விடங்களில் தோன்றும் உண்மையான பொருளை யடியில் எழுதுகின்றோம்; (ஸத்ய[illegible]) (ரமந்தே யோகிநோ நந்தே ஸத்யாநந்தே சிதாத்மநி, இதிராமபதேநாஸௌ பரம்ப்ரஹ்மாபிதீயதே) என்கிறபடி பரப்ரஹ்மமாகிய ஸ்ரீராமபிரான், (தவாஸ்யபாணோ[illegible]) சருதியி லோதப்படுகின்றபடி திவ்யசரீரத்தைத் திருவுளம் பற்றித் திருவநந்தாழ்வானைநோக்கி, க— (அத்யேயமித்யாதி) தம்பி லக்ஷ்மண ! சுத்தஸத்வமின்றி, இருள்கொண்டிருக்கின்றது இந்தப் பிரகிருதிமண்டலம், ஆதலின், நாம் வந்த காரியம் முடிவதன் முன்னமே நித்திய விபூதியை யடையவேண்டுமென்று விரும்புற்றாக, உ—(ஜாகாத்த வ்யமித்யாதி) கோபமின்றிச் சாந்தியுடைய ஸாதுபங்க்தியின் யோகக்ஷேமங்கள், (அநந்யாச்சிந்தயந்தோமாம் யேஜநா:பர்யுபாஸதே தேஷாம்நித்யாபியுக்தாநாம்) யோகக்ஷேமம் வஹாம்யஹமென்று நான் பிரதிஜ்ஞை செய்திருக்கிறபடி நம் மதீநங்களாக இருக்கின்றமையால், நாம் மிகவும் ஊக்கத்துடன் விழித்திருக்கவேண்டும்; ௩—(ராத்ரிமித்யாதி) நாம் காமவசிய ராகாமையால், என்னுடைய ஸங்கல்பமாத்ராயத்தங்களாகிய போகோபகரண போகஸ்தாநாதிகளை யநுபவித்து, ஸங்கல்பித்த காலத்தை இந்த லீலாவிபூதியிலே போக்குவோம், ச—(ஸதுஇத்யாதி) நித்யவிபூதியில் திருமாமணி மண்டபத்தில் திருவநந்தாழ்வான்மேல் யோகநித்திரைகொண்டருளத்தக்கவராயினும், பிரகிருதி மண்டலத்தின்மீது வீற்றிருந்தருளி இளையபெருமாளை நோக்கி, மேலும் அருளிச்செய்கின்றனர். ரு-(ருசத்ருவமித்யாதி) லக்ஷ்மண ! நானிப்பொழுது (ஸ்ருஷ்டிஸ்திதி) என்னு மிரண்டு [illegible]லைகளையே செய்தருளுகின்றமையால், மூலப்பிரகிருதியில் லீனமாயிருந்த ஜீவான்மா இப்பொழுது பூர்வகர்மாநுகுணமாகிய பலங்களையநுபவித்து மயங்கியுறங்கும், எனது மாயை மிகவளர்ந்து மகிழ்ந்துவாழும், சு—(ஸாஹி இத்யாதி) என்மாயை ஜீவான்மாவைப் பொருளாசையின்பொருட்டு நல்வினை வாயத்தை[illegible]கண்டும், அதனைச் சேரவிடாமல் தீவினையில் மூழ்கச்செய்து, அழிவுறாமற் செய்யாதிருக்குமா? எ—(அநாத இத்யாதி) ஜீவான்மாவானவன், நானெங்கும் நிறைந்தருகிலிருந்தும், மாயையின் மயக்குக் குள்ளாகி மயங்கி என்னை இழந்து நெடுங்காலஞ் சுழன்று [illegible]வாஸனை மேலிட்டுக் காமத்தன்மையிலுழன்று கதியற்றுத் தவிக்கின்றமையால், அவன் யாது செய்வான் ? (பரிஹாரார்த்தம்) என் தந்தை தாமபாசத்தினால் கட்டுண்டு, கைகேயியின் வசப்பட்டவரும், விருத்தரும், புத்திரப்பிரேம முடையவரு மாதலின், நானிப்போது பிரிந்தமையால், உயிரைவிடாமலிருக்க செய்வார்; அ—(இதம் இத்யாதி) ஜீவான்மா இவ்வண்ணம் மதிமயங்கி துன்பமடைகின்றமையால், அறம் பொருள்களை விடக் காமமே சிறந்ததென வென்னு[illegible]; மஹாராஜா பொருளிழக்கினும், தருமந் தவறினும், இவ்வண்ணம் துன்புறு

றென்று எண்ணுகின்றேன்; இவர் என்னைப் பிரியுங்கால், மிகவும் அன்புடைத்தமையால், மக்களாசை யறம்பொருளைவிடச் சிறந்ததென உணர்கின்றேன்; ௯—(கோஹி இத்யாதி) அகாரவாச்சியமாகிய பிரஹ்மத்தை யறிந்தவனாயினும், (மித்வாம்ஸமபிகர்ஷதி) என்கிறபடி காமத்தை யடக்க முடியாதாதலின், மாயையிலுழன்று வேங்கி மலைகளை யருள்செய்தளிக்கு மென்னை யாவன் விடாதானபோதும், எல்லோரும் விடடிழியார்களல்லரோ? இவ்வண்ணம் பற்றாசை மிகவும் சிறந்ததாயினும், என் தந்தை ஸத்தியவாக்கியத்தின் பொருட்டு, மிகவும் பிரியமுள்ள என்னை விட்டு விட்டாரன்றோ? இவ்வண்ணம் யாவன் புத்திரனை விட்டாவது ஸத்தியத்தைப் பாதுகாக்க விரும்புவானே, ௰—யாவனொருவன் ஸர்வசேஷியாகிய பரப்பிரஹ்மம்போலவே நித்தியமுக்தர்களுடன் கூடி, உயர்வற உயர்நலம்பெற்று, பரிபூர்ண பிரஹ்மானந்தானுபவம் பெற்று மகிழ்வரன்றோ? ஆனமீன்று யாகர்களுடன் நம்பக்கலில் பரஸமாப்பணஞ்செய்த அந்த மஹாபுருஷனன்றோ? ஸங்கியாவான், ௰௧—உலகத்தார்களது தந்தை முதலானோர் வயோதிகர்களாகச் [illegible]குலர்களாகின்றமையால், மைந்தர்களுக்கு இம்மையில் நன்மைசெய்வதையே முதன்மையாகக் கருதுகின்றமையாலும், யானும் அவர்களது காமாதுரன் பல பரதான ஸங்கல்ப முடையவனாகி யவர்கள் ளறியா வண்ணம் வேதாரண்யத்திடை புகுந்து, பரமயோகிகளுக்கும் வாங்மனஸாபரிச்சேதயுனாகி இருக்கின்றமையாலும், ஸகல சேதனர்களும் விஷயபரர்களாகிய பேரின்பத்தையிழந்து, பற்பல யோனிகளிற்பிறந்து வருந்துவதைக்கண்டு, அத்துயரம் தமக்கே நேர்ந்ததுபோலெண்ணி யவர்களுக்கு ஜ்ஞானோபதேசஞ்செய்து நற்கதிபெறச் செய்யும் ஆசிரியனன்றோ? எல்லாவுலகத்திற்கும் முதன்மையாகிய புருஷகாரஞ் செய்கின்றமையால், தந்தையாகின்றான் ௰௨—தன் பொருளையும், அஃதடியாக வர்த்த தருமங்களையும் விட்டுவிட்டாயினும், யாவனொருவன் நிருபாதிகமாகிய மோக்ஷகாமத்தை யாவாகத்து முண்டுபண்ணித் தானும் ஆசரிக்கின்றானோ? அவன் ராஜாதிராஜனாகிய ஸ்ரீகருடவாஹனனைப்போலவே புகழப்படுகின்றான். யாவனொருவன் அறம்பொருளின்பம் மூன்றினையும் விட்டு வீட்டின்கண் காக்கவல்ல எம்மை யநுவர்த்தித்து நடக்கின்றானோ? அவன் எம் தந்தைபோலவே புகழப்படுகின்றான் ௰௩—சேதனர் கடைசேர்வதன்பொருட்டும், எம்மைச் சரண மடைவிப்பதன்பொருட்டும், ஆசிரியனுக்குச் சிறப்பு வாய்ப்பதன்பொருட்டும், இம்மாயை பரிணமித்தது, ௰௪—குணங்களின் பரிணாமபேதத்தால் விகாரப்பட்டு மயங்குகின்ற இம்மாயை நம்மால் பேரின்பமளித்தருள்செய்தளிக்கப்பட்ட முக்தர்களது பங்தியிலும், ஆசாரியரூபமாய் அவதரிப்பித்தளித்த நித்யாமசசேதனர்களையும், வருத்தாதன்றோ? ௰௫—நாம் நித்திய விபூதியை விட்டு லீலாவிபூதியை யடைந்தோமாதலின், நித்ய ஸூரிகளது குழாமென்பொருட்டு ஒருக்கால் வருந்தினும் வருந்தும்; ஆதலின், நீயும் அர்ச்சிராதிவழியே சென்று வைகுந்தம் சேர்ந்து அவர்களை மகிழ்விக்கக் கடவை ௰௬—நானொருவனே பூமகளுடன் இவ்விபூதியிலு சிலநாள் வாழ்ந்து மீளுகின்றேன்; இப்பொழுது நாமிங் கிருக்கின்றமையால், நாதனற்ற நித்யவிபூதிக்கு நீயே நாதனாகிச் செல்லக் கடவை. அன்றியில், நான் லோகாலோகசரனாகிப் பிராட்டியுடன் சஞ்சரிக்கின்றமையால், என்னுடைய சங்கல்ப பாதீனமாகிய காமாதி குணமாக ஜநநமரணங்களி லுழன்றழியாவண்ணம் நீயே ரக்ஷகனாகிப் பாதுகாக்கக் கடவை. ௰௭—மாயை மிகவும் கொடுமையுடையதாதலின், நம் தொண்டர்களை மேன்மேலும் நீந்தப்பி வருந்தச்செய்யும், அவ்வண்ணம் வருத்தாமல் நம் மடியவர்களது திரளை ஆசாரி யாதிநஞ் செய்த பரஸமர்ப்பணஞ் செய்யும்படி செய்து பாதுகாக்கக்கடவை. ௰௮—முற்பிறப்பில் நம் தொண்டர்கள் மிகக் கொடிய தீவினைகள் செய்தமையால், இப்பிறவியில் அதன் பயனை ய[illegible]

கின்றனர்கள். ௧௯—நெடுநாளாகப் பிறவிகள் தோறும் நம்மைத் தொழுது, நம்மையே நினைந்து, நம்பியிருந்தபோதிலும், கர்மசேஷத்தால் பராந்நியாஸம் செய்யாமையால், அந்திமஸ்மரணமின்றிப் பலன் கைகூடுங் காலத்தில் நம்மை இழந்தமையால், ஸித்தஸங்கல்பனதைக்குப் பங்கம் வாராமைக்காக முத்தி கொடாமல் ஒழிகின்றமையால், என்னையே நான் நிந்தனை செய்து கொள்ள வேண்டும். ௨௰—நான் ஸர்வசக்தனாயிருந்தும், அடுத்தவர்களையும் கடைத்தேற விக்காமல், காமாநுகுணஸத்திய ஸங்கல்பாதீனமாய பலன்களை யளித்தும், ஏககாலத்தில் ஸர்வர்களுக்கும் முத்திகொடாமல் துன்பத்தையே விளைவிக்கின்றமையால், என்னைப்போன்ற பிள்ளையை இம் மாயை ஆசிரியனுக்குப் பெறுமல் அன்புகூர்ந்தவனைப் பெறக்கடவள். ௨௧—அடா லக்ஷ்மணா! (மத்தः) என்னைக் காட்டிலும் (சாரிகா) பிரணவமாகிய வில்லினுல், ஆத்துமாவாகிய சரத்தைப் பிரயோகஞ்செய்யும் ஆசிரியர்களது திரளே? பத்த சேதநர்களிடத்தில் மிகவும் அன்பு கூர்ந்ததென்று நம்புகின்றேன்; அஃது எம்மைச் சரணமடைந்து (ஹேசுக) கிரம்போன்ற பசிய திருமேனியையும் இனிய திருவாய் மொழியையும் உடைய ஸ்ரீமந்நாராயணா! (அரோः) பிரஹ்மானந்தம் பெறவிடாது தடைசெய்து சத்துருவாகின்ற இந்த ஸம்ஸாரத்தினுடைய (பாதம்) வேரை (தச) கண்டித்து நிவர்த்தி செய்தருள்க. என்று, பரஸமர்ப்பணஞ் செய்யப்பட்ட வாக்கியம் இனிமையாகக் கேட்கப்படுகின்றதன்றே? ௨௨—சேதனர்கள் நல்வினையற்று வருந்தியும், நான் அவர்களை நற்கதி யடைவிக்காமலிருக்கின்றமையால், என்னால் இவர்களுக்கென்ன உதவி செய்யப்பட்டதாயிற்று, ஒன்றுஞ் செய்திலேன். ௨௩—தொண்டர்கள் என்னை இழந்து மிக வருந்துகின்றமையால், அவர்களின் நல்வினை யற்பமாதலின், அதற்கு நாம் செய்யத்தக்கது யாது, ௨௪—நானொருவனே யாவரையும் முத்தி யடைவிக்கவும், அவர்களது தீவினைகளை மாய்க்கவும் வல்லேன், ஆயினும், புருஷகாரமின்றி ஸித்த ஸங்கல்பத்துக்கும் பங்கமுண்டாக்கி, லீலாவிபூதிக்கும் இடையில் அழிவு செய்வது தகுதியன்றன்றே? ௨௫—ஆதலின், என் ஸங்கல்பத்துக்குப் பங்கம் வாராமைக்காகவும், மற்று மநேக காரணங்களுக்காகவும், நானிப்பொழுது யாவரையும் முத்தி யடைவிப்பேனென்று ஸங்கற்பித்திலேன், ௨௬—இந்த ஐம்பத்து மூன்றாவது சருக்கத்தின் விதில் குறித்த கணக்கின்படி சுலோகத்தை முறையே பாரப்பவர்களுக்கு இக்கருத்து நன்கு பொருந்துமென்று மனமுகக்கும், இதனால், ஆக்ஷேபத்திற்கும் ஸமாதானம் கண்டு கொள்க. இவ்வண்ணமே மேலும் பொருள் ஊஹித்துக்கொள்க. இதற்கு முன்னும் பின்னும் இவ்வண்ணமே எல்லா விடங்களிலும் பொருள்தோற்றும், முக்கியமான இடங்களில் மாத்திரம் எடுத்துரைக்கப் படுகின்றது, இவ்வண்ண முரை செயின் மிக வளருமாதலின், மவுன மடைந்தோம்.

## ஐம்பத்துநான்காவது சருக்கம்.

### சக்கரவர்த்தித் திருமகன் பரத்துவாஜர் ஆசிரமத்துக்கெழுந்தருளியது.

அநந்தரம் ஸீதா ராம லக்ஷ்மணர்கள் மூவர்களும், அந்தச் சிறந்த மரத்தடியிலே அன்றிரவைப்போக்கி, மறுநாளுதயமான பின்பு புறப்பட்டுக் கங்கையும், யமுனையும் கூடுகின்ற பிரயாகக்ஷேத்திரத்தை யுத்தேசித்துப்

புறப்பட்டுக் கடுங்கானகத்தி னிடையிற்சென்று, இதுவரையும் காணாத பற்பல விநோதங்களைக் கடாக்ஷித்துக்கொண்டு, குறையென்பது சிறிது மின்றி, அர்த்தமண்டல காலம் வரையும், சுகமாகக் கானகங் கடந் தெழுந்தருளினர்கள். அப்பொழுது ஸ்ரீராமபத்திரர் இளையபெருமாளை நோக்கித் தம்பி ஸௌமித்திராதேவி நந்தனா ! இந்தப் பிரயாகக்ஷேத்திரத்தின் நாற்புறங்களிலும் பார், ஹோமதூமம் மேலெழுந்து சூழ்ந்து விளங்குகின்றது; ஆதலின், இங்கு மஹாமுனிவர் எழுந்தருளி யிருப்பாரென்று எண்ணுகின்றேன், கங்கா யமுனைகளின் பிரவாஹம் ஒன்றோடொன்று தாக்கி மிக வொலிக்கின்றமையால், கங்கா யமுனா ஸங்கமஸ்தானம் வந்து விட்டோம்; அங்குள்ள அநேகம் கட்டைகளும் வெட்டப்பட் டிருக்கின்றன; இங்கு பரத்துவாஜர் ஆச்சிரமமென்று கேட்டிருக்கின்றோமாதலின், இம்மரங்கள் அவரது ஆசிரமத்தில் சேர்ந்தனவே யென்றிவ்வண்ண மருளிச் செய்துகொண்டே அந்தப் பரத்துவாஜர் ஆசிரமத்துக் கெழுந்தருளித் தாம் வாள் கணை வில் முதலிய ஆயுதங்களுடன் எழுந்தருளுகின்றமையின், தம்மைக் கண்டங்குள்ள விலங்குகள் அஞ்சும்படியாகச் சிறிது தூர மெழுந்தருளி, அவ்வாசிரமத்தினுட்புகுந்து, அநேக சிஷ்ய ஜனங்களால் சூழப்பட்டு வீற்றிருக்கின்ற அந்தப் பரத்துவாஜமஹாமுனிவரைக் கண்டு பயபக்தியுடன் கைகுவித்துக்கொண்டு ஸீதா லக்ஷ்மணர்களுடன் தண்டம் ஸமர்ப்பித்து அவரை நோக்கி, மாதவச் செல்வரே ! நாங்க ளிருவரும் தசரதசக்கரவர்த்தித் திருக்குமாரர்கள். இவள் அடியேனுடைய பத்தினி, ஜனகமஹாராஜா திருமகள், அடியேன் தந்தையின் கட்டளைப்படி வனவாஸம் புறப்படுகையில், இவளிருவரும் என்னைப் பிரியோமென்று உடன் தொடர்ந்து வந்தார்கள் ஆதலின், நாங்கள் மூவரும் தபோவனஞ்சேர்ந்து, கந்தமூலபலங்களைப் புசித்து, வைகானஸதர்மத்தையே செய்து வாழ்வோமென்று விண்ணப்பஞ்செய்தருளினர். பரத்துவாஜமகாமுனிவரும் இவரது அருளிச்செயலைக்கேட்டு மகிழ்ந்து, அர்க்கியபாத்யாசமநீய மதுபர்க்காதிகளா லுபசரித்துப் பூஜைசெய்து, மிருகபக்ஷிகளுடனும், மற்றுள்ள முனிவர்களுடனும் வீற்றிருந்து, இவர்களை நோக்கி, நலவரவு வினவியருளினர். விநயத்துடன் அப்பூசனைகளைப் பெற்றுக்கொண்டு, சக்கரவர்த்தித் திருமகனும், ஸீதா லக்ஷ்மணர்களுடன் அம்மஹாமுனிவரது ஆஜ்ஞையால் வீற்றிருந்தருளினர். அப்பொழுது பரத்துவாஜமஹாமுனிவர் இவரை நோக்கி, ஸ்ரீராமசந்திரா ! நீ இவ்வண்ணம் அகாரணமாயக் காட்டுக் கெழுந்தருள்வாயென்று நான் முன்னமே யுணர்ந்திருக்கின்றேன்; இவ்விடம் மிகவும் ஏகாந்தமாயும், மனோஹரமாயும், புண்ணியகரமாயு மிருக்கின்றமையால், இவ்விடத்திலே எழுந்தருளியிருக்கத் திருவுள முள்ளதாயின், அவ்வண்ணமே எழுந்தருளி யிருந்தருள்க. நின் திருவுளம் யாதோ அதனை யருளிச்செய்தருள்க என்று அருளிச்செய்தனர். கௌஸல்யா நந்தனரும், அம்மஹாமுனிவரை நோக்கிக் குலபதியாகிய மஹாயோகி ! இவ்வாசிரமம்

நாட்டிற கருகி லிருக்கின்றமையால், இவ்விடத்திற்கு அடிக்கடி அடியோங் களைக் காண்பதன் பொருட்டு, நாடு நகரத்தோர்கள் வந்து சேர்வார்கள், ஆதலின், அடியேன் இவ்விடத்தில் வாஸஞ்செய்ய விருப்பங் கொண் டிலேன்; பிறர் புகவொண்ணும லேகாந்தமான விடம் யாதோ அதனை யரு ளிச்செய்யக்கடவீர். என்மனையாள் மிகவும் சுகமாக வாழ்வுறல ளாதலின், அவ்விடம் இவள் மகிழ்வுறத்தக்கதாக விருக்கவேண்டு மென்று விண்ணப் பஞ்செய் தருளினர். இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்த சக்கரவர்த்தித் திருமகனார் வாக்கியத்தைப் பரத்துவாஜமஹாமுனிவர் திருச்செவி சார்த்தி யவரைநோக்கி, ஸ்ரீராமபத்திரா! இவ்விடத்திற் கிரண்டுயோஜனை தூரத்தில் மிகவும் புண்ணியகரமாகியும், ரிக்ஷவாநர கோலாங்கூலாதி மிருகங்களா லும், தேவகந்தருவ கின்னராதிகளாலும், ஹம்ஸ பரமஹம்ஸ வானபரஸ் த்த வைகானஸாதி முனிகணங்களாலும் சூழ நிறைந்துள்ளதாகியும், கந்த மாதந மலைபோன்றதாகிய விருக்கின்ற சித்திரகூடமென்னு மோர் மலை யிருக்கின்றது; அதில் நீங்கள் ஏகாந்தமாக வாழ்ந்து மகிழ்வுறலாகும்; அந்தச் சித்திர கூடத்தின் சிகரங்களை எப்பொழு தொருவன் கண்டு களிக கின்றனனோ? அது முதல் அவன் நலவினையையே செய்வா னல்லது, தீவினை செய்யான்; அவன் மனமும் பாவச்செயலில் செல்லாமல் நிலைபெற் றிருக்கும்; அவ்விடத்தில் அநேகமகாயோகியர் நெடுங்காலந் தவஞ்செய்து நிரியாணதசையில் பிரஹ்மநாடிமுகமாகப் புறப்பட்டு முத்தியடைந் திருக் கின்றார்கள். அவ்விடம் நீங்கள் வாஸஞ்செய்யத்தக்க ஏகாந்தஸ்தலமென்று நினைக்கின்றேன், அல்லதாயின், இவ்விடத்திலேதானே என்னுடன் கூடி வாழ் ந்து மகிழக்கடவையென றருளிச்செய்து, மிகவும் பிரியமுள்ள அதிதியாத லர்ல், வேண்டும் பதார்த்தங்களைக்கொண்டு பலவித உபசாரஞ்செய்து கொ ண்டாடி யருளினர். இவ்வண்ணமே மற்றும் பற்பல கதைகளை மஹாமுனி யருளிச் செய்துகொண் டிருக்கையில், மாலைப்பொழுதாகி இரவுநோந்தது; ஸ்ரீராமசந்திரர் ஸீதா லக்ஷ்மணர்களுடன் அன்றிரவைச் சுகமாக அவ் வாசிரமத்திற் போக்கிப் பொழுது விடிந்தவுடன் எழுந்து நித்திய கருமங் களை முடித்துக்கொண்டு, பரத்துவாஜமாமுனிவர்க்குத் தண்டம் ஸமர்ப் பித்து அவரை நோக்கி, மாதவச் செல்வரே! தேவருடைய இந்த ஆசிரமத் தில் இன்றிரவைச் சுகமாகப் போக்கினோம், பொழுது விடிந்தமையால், சித்திரகூடாசிரமத்திற்குச் செல்ல அநுஜ்ஞைசெய்தருளகவென்று விண் ணப்பஞ் செய்தருளினர். அம்மஹாமுனிவரும் ஸ்ரீராமசந்திரரை நோக்கிக் கௌஸல்யாதேவி குமாரா! தேன் காய் கனி கிழங்குகளுடன் கூடி யழகிய சித்திரகூடத்திற் கெழுந்தருளக்கடவீர். அஃது நீங்கள் வாஸஞ்செய்யத் தக்கதென வெண்ணுகின்றேன்; அஃது நாநாவித மரங்கள் தளிர்த்து, மலர்ந்து, காய்த்துப் பழுத்துச் செழித்ததும், கின்னரோரகாதிகளா லுறை யப்பட்டும், யானை புலி சிங்கங் கரடி மான் முதலிய மிருகங்கள் சூழ்ந்தும், பற்பல பறவைகள் தொனிசெய்யப்பட்டும், அழகிய சிகரங்களை யுடையது

மாகப்புகழ்பெற்று விளங்குகின்றது, மேலும், அது பாவங்களைத்தீர்ப்பதும், புண்ணியந்தருவதும், கண்ணுறத்தக்கதும், நீர்வளம் நிலவளம் பொருந்தியதும், யானைக் கூட்டம், மான் கூட்டங்களால் எங்கும் ஸஞ்சாரஞ் செய்யப்பட்டு, காறு சுனைநீர்பெருகிய தாழ்வரையுடையதும், கயம் பள்ளம் குழைஞ முதலிய கமபிரஸ்தலங்களுடையதுமாக விளங்குவதைக் கண்டு, ஸீதாபிராட்டியுடன் நீ சந்தோஷமடைந்து வாழ்வாய்; ஆகலின், மதங்கொண்ட நானா குயில் முதலிய பறவைகளி னொலிபொருந்தியும், மான மதங்கொண்ட யானை முதலிய விலங்குகளால் சூழப்பட்டு முள்ள அந்தச் சித்திரகூட மலைசேர்ந்து, சுகமாக மகிழ்ந்து வாழ்ந்திருக்கக் கடவீரென்று அருளிச்செய்து அநுமதிகூறி யருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்துநான்காவது சருக்கம் முற்றிற்று.

## ஐம்பத்தைந்தாவது சருக்கம்.

பெருமாள் பரத்துவாஜர் ஆசிரமத்தினின்றும் யமுனைத் துறைசேர்ந் தருளியது.

பெருமாளிளையபெருமாளிருவரும், அந்தப்பரத்துவாஜர் ஆசிரமத்தில் அன்றிரவில ஸுகமாக வாஸஞ்செய்து, மறுநா ளுதயகாலையி லெழுந்து, நித்யகருமங்களை விதிப்படி செய்தருளிப் பரத்துவாஜமஹரிஷிக்குத் தன்னிடம் ஸமர்ப்பித்து விடைபெற்று, அந்தத் திருச்சித்திரகூடகிரியை நோக்கிப் புறப்படுகையில், அவருள்ள பல முனிகணங்களும் உடன் புறப்பட்டன. பரத்துவாஜமஹரிஷி அவர்களுக்குத் தந்தை தன் மக்களுக்குப் போலப் பிரியவசன மருளிச்செய்து விடைகொடுத்து வாழ்த்திச் சக்கரவர்த்திக் குமாரர்களைநோக்கி, ஸ்ரீராமலக்ஷ்மணர்களே! இங்கெதிரில் கங்கை யமுனை இரண்டு நதிகளுங் கூடுகின்றனவே அங்குச்சென்று, யமுனையினைக் கரையேறி, அங்கிருந்து குடதிசை நோக்கி செல்லக் கடவீர்கள். கடையில் பலர் நடந்து தேய்ந்த யமுனைத் துறைசேர்ந்து, தெப்பங்கட்டி அதன்மீதேறிச் சென்று அக்கரை சேர்ந்து, அங்குப் படர்ந் துயர்ந்து பருத்துக் கறுத்துத் தழைத்துள்ள ஆலமரத்தடி சேர்க. சீதை அதனை நோக்கிக் கைகுவித்து விருப்பங்களை வேண்டிக்கொண்டு நடந் திளைப்பினை யுற்றவளாயின், அதனடியில் இளைப்பாறக் கடவள். இலளாயின், முன்வழிபற்றி நடக்கக் கடவள். அங்கிருந்து ஒரு குரோசதூரத்தில், இருண்டு தழைத்த காநகத்தைக் காண்பீர்கள். அந்த யமுனைநீர் பெருகி

வளர்ந்தமையால், மிகக் கறுத்ததும், பலாசு இலந்தை முதலிய பலவகை மரங்கள் நிறைந்ததுமாகி யிருக்கின்றது; அதுவே திருச் சித்திர கூடத்திற்குக் குலகரடற்று மெத்துவாயுள்ள நல்வழி; யானும் அவ்வழியால் பலமுறை சென்றிருக்கின்றேன்; என்றிவ்வண்ணம் சிறிது தூரம் பின் சென்று, நல்வழிகாட்டியருளி, அவ்வண்ணமே செய்வோமென்று பெருமாளால தண்டம் ஸமர்ப்பித்துத் திருப்பப்பட்டவராகித் திரும்பி எழுந்தருளினர். பின்பு பெருமாள் இளையபெருமா ளிருவரும், பிராட்டியாருடன் ராம்முற்பிறப்பில் மிக நல்வினைசெய்தனம், இம்மஹாமுனிவர் நம்பால மிக அருள்செய்து, இவ்வண்ண மருளிச்செய்தனரல்லரோ ? என்று மகிழ்ந்து புகழ்ந்து, பிராட்டியாரை முன்னிட்டுத்தாங்கள் பின்னெழுந்தருளிக் கங்கையின் தடையினால் தேம்பி மேலெழாமல் விரைவாகப் பெருகும் அந்த யமுனையின் துறைசேர்ந்து, அந்நதியைத் தாண்டும் வகையைச் சிந்தை செய்து, அவ்விடத்தில முறிந் துலர்ந்துள்ள கட்டைகளையும், கோரை நெட்டி முதலியவைகளையும் கொணர்ந்து தெப்பமாகக்கட்டி, நாவலுசித் தழைகளையும், நாவலின் தழைகளையும்பரப்பிப் பிராட்டியார்க்கு ஆஸனம் போட்டுச் சித்தஞ்செய்தனர்கள் உடனே பெருமாள் பெரியபிராட்டிபோ லொளிவிடுகின்ற பிராட்டியாரை அந்தத் தெப்பத்திலேற்றி, அவரருகில் ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும், மணவெட்டி புட்டில் முதலிய கருவிகளையும் வைத்தருளிப் பின்பு இளையபெருமாளுடன் கூடி, அந்தத் தெப்பத்தைப் பற்றி, ஊக்கத்துடன் நடாத்தி யக்கரைசேர்ந் தருளினர். பிராட்டியாரும் அந்த யமுனாநதியினிடையிற் செல்லுகையில், அந்நதிக்கு வந்தனஞ்செய்து அதனை நோக்கி, அம்மா காளிந்தி ! உன்னை யான் தாண்டிச் செல்லுகின்றேன்; உனக்கு மங்கல முண்டாகக் கடவது என் பிராணநாதர் எளிதாக விரதத்தை முடித்துக் கரைசேர்ந்து மீளவெழுந்தருளக் கடவர். இவ்வண்ணம் என் கணவர் மீண்டு, திருவயோத்தி சேர்ந்து மகிழ்ந்து வாழ்வராகில், உன்பொருட்டு ஆயிரம் கோதானமும் செய்து, ஆயிரங்குடம் சாராயத்தால் யாகமும் செய்விப்பேன்; என்றிவ்வண்ணம் வேண்டிக்கொண்டே அந்நதியின் தென்கரை சேர்ந்து, பெருமாள் இளையபெருமாளுட னிறங்கி, அக்கரையிலுள்ள கடுங்கானத்திடையே யெழுந்தருளி, பரத்துவாஜமஹாரிஷி சுட்டிக்காட்டி யருளிய செழித்துத் தழைத்துக் குளிர்ந்து கறுத் திருண்டு நீண்ட அந்த ஆலமரஞ்சேர்ந்து, அதனைப் பிராட்டியார்நோக்கிச் சிறந்தமரங்களுக்கரசே ! உன் பொருட்டு வந்தனஞ் செய்கின்றேன்; என்பர்த்தா விரதக்கடலின் கரைசேரக்கடவர். யானும் அவருடன் மீண்டு திருவயோத்தி சேர்ந்து, கோஸலையாரையும், ஸுமித்திரா தேவியையும் கண்டு களிப்புறக்கடவேன்; இவ்வண்ணம் நீ யருள்செய்க; என்று கைகுவித்து வேண்டி வலம்வந்து நின்றனர். அப்பொழுது பெருமாள் இளையபெருமாளை நோக்கித் தம்பி ! நீ ஸீதைக்கு முன் செல்க; இவளிடையில்வருக; யானிருவருக்கும் பின் நடந்து பாதுகாத்து வருவேன்;

நடுவழியி லிவள் தளிர் பூ காய் கனி முதலியவைகளைக்கண்டு விருப்புற்றுக் கேட்புளாயின், உடனே அவைகளைத் தந்தளிக்கக்கடவை யென்று ஆஜ்ஞை செய்தனர். அவ்வண்ணமே எழுந்தருளுகையில, மதமேறித் திரிகின்ற களிறுகளி இரண்டினிடையிற் செல்லும், யானைப்பேடுபோலப் பிராட்டியார் திகழ்ந்தெழுந்தருளி, இதுகாறுங் கண்ணுறா மரஞ்செடி பூ கனி காய்களைக்கண்டு விருப்புற்றுக் கேட்கையில், இளையபெருமாள உடனே அவ்வவ்வஸ்துக்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்து மகிழ்வித்தனர். பிராட்டியாரும் பற்பல மணற்குன்றுகளை யுடையதும், ஹம்ஸஸாரஸ முதலிய நீர்ப் பறவைகளா லொலிக்கப்பட்டதுமாகிய பெருகிவருகின்ற அக்காளிந்தி நதியினையும், கரையிலுள்ள பற்பல விநோதங்களையுங்கண்டு மிகவு முளமகிழ்ந்தனா. பெருமா ளிளையபெருமா ளிருவரும இவ்விதமாக இரண்டுநாழிகை வழிநடந்தரு மெழுந்தருளி, தூய்மையுள்ள பற்பலமிருகங்களை யடித்தெடுத்துக்கொண்டு, மயிலினங்க ளாடிக்கூவியும, வாநரவாரணதிகளான விலங்குகளுலாவியும, மணங்கமழ்ந்தும, குளிர்ந்துமுள்ள அந்த யமுநாநதியின தீரத்தில் மேடுபள்ள மின்றிய பிராட்டியாரக் குகப்பாயுள்ள ஓரிடத்தி லிறங்கி இன்புற்று மகிழ்ந் தருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## ஐம்பத்தாறுவது சருக்கம்.

பெருமாள் திருச் சித்திரகூடத்திற் கெழுந்தருளியது.

அநந்தரம் இரவுநீங்கிய பொழுது விடிந்து கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைகையில், பெருமாள் துயிலெழுந்து, துயிலின்றிப் புறத்தில விழித்துக் காத்திருக்கும், இளையபெருமாளை யழைத்து லக்ஷ்மண ! இக் கானகத்திலுள்ள பறவை விலங்கு முதலியனவுந் துயிலுணர்ந்து காலையில் இனிது கூவுகின்றன கேளாய; ஆதலின், நாம் புறப்பட்டு வழிநடக்கும வேளை வாய்த்தமையால, நாம் புறப்பட்டுச் செல்வோம்;—

స సుప్తస్సమయే భ్రాత్రా లక్ష్మణః ప్రతిబోధితః
జహౌ నిద్రాఞ్చ తన్ద్రీఞ్చ ప్రసక్తఞ్చ పథిశ్రమం

ஸஸுப்தஸ்ஸமயேபராத்ரா லக்ஷ்மணஃபரதிபோதிதஃ
ஜஹௌநித்ராஞ்சதந்த்ரீஞ்ச ப்ரஸக்தஞ்சபதிஶ்ரமம்

தாம் அவதாரஞ்செய்தருளின பரயோஜனத்தை மறந்துறங்கிப் பெருமானுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய முயன்ற இளையபெருமாள் தமது

அவதாரத்தின் பிரயோஜனத்தைக் கடுக முடிக்கத் திருவுள்ளம்பற்றிக் கைகேயியை வியாஜமாகக்கொண்டு, திருவயோத்தியை விட்டுக் காட்டேற வெழுந்தருள நிச்சயங்கொண்ட காலையிலே தானே பெருமாளால், அறிவுறுத்தப்பட்டமையால், அப்பொழுதே துயிலையும், உணவினையும், மோகத்தையும், சோம்பலையும், கோபத்தையும், நிரந்தர கைங்கர்யலாப மஹாநந்தக்கடலில் மூழ்கி, மகிழப்போகின்றமையால், வனவாஸத்திற்குரோனறும் புல்லிய வருத்தத்தையும், உறங்காமையால கனவிலுங் காமுறாது பற்றற விட்டுவிட்டருளினவராதலின், முன்னடக்க ஸந்நத்தராயினர். உடனே எல்லோரும் துயிலெழுந்து பரதத்வாஜமஹாமுனிவர் சுட்டிக்காட்டிய நல்வழிபற்றிச் செல்லுகையில், பெருமாள் பிராட்டியை நோக்கிப் பாரட வைதேஹி! இப்பலாசமரங்கள் நாற்புறங்களிலும் செழித்துப் பூ மலரச் சூழ்ந்தொளிர்கின்றமையால், காட்டுத்தீப்பற்றி எரிகின்றனபோலக் காணப்படுகின்றன, அன்றியும், இவ்விடம் மானிடஸஞ்சாரமற்றதாதலின், இங்குச் செராய் மரங்களும தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கனித்துத் தழைத்திருக்கின்றன; இக்கனிகளைப் புசித்தாயினும, யான் காலத்தைப் போக்கிப் பிழைப்பேன்; அன்றியும், மரங்கள்தோறும இரண்டு மரக்காலளவுள்ள தேனடைகள் தேனீகளால் கட்டப்பட்டுத் தொங்குகின்றன காணுய, நச்சுக் குருவி இங்குக்கூவுகின்றது, மயிலதற்குப் பிரதியாகக் கூவுகின்றது; இவ்வரணியம் எங்கும் மலர்ந்து, மணங்கமழ்ந்து வீசுகின்றது; காட்டு யானைக் கூட்டங்கள் சூழ்ந்தும், பற்பல பசுபக்ஷி மிருகங்களொலித்தும், சிகரங்களுயர்ந்துமுள்ள இந்தத் திருச் சித்திரகூடகிரியையுங் கண்ணுற்று மகிழ்வுறுயென றருளிச்செய்து, இளையபெருமாளையும் நோக்கி, இளையோனே! நாமும் இம்மலைமிசையே மேடுபள்ள மின்றி, பற்பல மரங்கள் தழைத்துக் குளிர்ந்துள்ள விடத்திலேயே வாசஞ் செயவோமென் றருளிச்செய்து கொண்டே நடந்தெழுந்தருளி, அந்தத் திருச் சித்திரகூடகிரிசேர்ந்து, அதனழகினைக் கடாக்ஷித்து, மீளவும் இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணு! இவ்விடம் பற்பல கொடி பூண்டு செடிகளால் சூழப்பெற்றும், பலவகைக் காய கிழங்கு கனிகளால நிறைந்தும், குளிர்ந்து ருசியுள்ள நன்னீர் பொருந்தியும இருக்கின்றமையால், இங்குச் சுகமாக வாழ்ந்து மகிழ்ச்சியுறலாகுமென்று எனக்குத் தோற்றுகின்றது; அன்றியும், இம்மலையில் பல மஹா முனிவர்களும் வாசஞ் செய்கின்றனாகள். ஆதலின், இவ்விடத்திலே வாசஞ்செய் தினபுறுவோமென் றருளிச்செய்தனர் பின்பு ஸீதா ராம லக்ஷ்மணர்கள் மூவரும், அங்கிருக்கின்ற வான்மீகிமஹாமுனியின் ஆச்ரமத்தைக் கண்டு கைகுவித்துக்கொண்டு அதனுட்புகுந்து அந்த மஹாரிஷியைக்கண்டு தண்டம் சமர்ப்பித்து நிற்கையில், வான்மீகி மஹாயோகியும், இவர்களுக்கு அர்க்கியபாத்யாதியாகவுள்ள உபசாரங்கள் செய்து, ஆஸனமளித் தடக்காரும்படி யநுமதி யருளிச்செய்து நல்வரவு வினவி யருளினர். பெருமாளும் அம்மஹாரிஷியை நோக்கி, மாதவச்

செல்வரே! அடியேன் சக்கரவர்த்தியார் குமாரன்? இவள் என் பத்தினி இவன், அடியேனுக் கிளையோன்? அடியேன் ஸபத்நீ மாதாவின வரங்களிரண்டினையும் பூர்த்திசெய்து பிதாவை சத்தியவாதியாக்கி, தன்னியனாக நினைத்துக் காடேறப் புறப்படுகையில், இவர்களும் அடியேனை விட்டுப் பிரிய மனமின்றித் தொடர்ந்து வந்தனர்கள். ஆதலின், அடியே னிவவிடத்தில் சிலநாள் வாஸஞ்செய்ய விரும்புகின்றே னென்று விண்ணப்பஞ் செய்து, அம்மஹாமுனிவரது அநுமதிபெற்று, இளையபெருமாளை நோக்கி,

లక్ష్మణానయ దారూణి దృఢానిచవరాణిచ
కురుష్వావసథంసౌమ్య వాసేమేభిరతమ్మనః

*லக்ஷ்மணாநய தாருணி த்ருடாநிசவராணிச*
*குருஷ்வாவஸதம்ஸௌம்ய வாஸேமேபிரதம்மந:*

லக்ஷ்மணா! சிறந்தனவென விதிக்கப்பட்டனவும், வலிமை யுள்ளனவுமாகிய கட்டைகளைக் கொணர்ந்து பர்ணசாலை யியற்றக்கடவை, பர்ணசாலையில் வாஸஞ்செய்ய என்மனம் விரும்புற்றிருக்கின்றதென் றருளிச்செய்தனர். உடனே இளையபெருமாள் பற்பல மரங்களைக் கொணர்ந்து முறைப்படி பர்ணசாலை யியற்றினர், ஆழக் கடைக்கால் வெட்டி அஸ்திவாரம்போட்டுச் சுவர் வைத்து, வாசற்கால் தூண் முதலியன நிறுத்திச் சாந்திரலம் முதலியன மேலெடுத்து வலிமையாகக் கட்டித் தழை நிறைத்து நன்கு கட்டப்பட்ட அந்தப் பர்ணசாலையைக் கடாக்ஷித்து மகிழ்ந்து பேரருளான இளையபெருமாளை நோக்கித் தம்பி! மான் யாம்சங்கொண்டு வரக்கடவை நெடுநாள் வாழவுற்கக் கருதுபவர்கள் வாஸ்துஹோமஞ் செய்தே கடமையன்றோ? ஆதலின் விரைவாக மானை யடித்துக்கொண்டுவா! இவ்வண்ணஞ் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றமையால், இவ்விஷயத்தில் நம்மைப் பாவமணுகாது, நீயும் முன்னாலே நன்கா ராய்ந்துபாரென் றருளிச்செய்து, உடனே தன்கட்டளைப்படி மாமஸங்கொணர்ந்த தம்பியைநோக்கி, மீளவும் அடாலக்ஷ்மணா! நாம கிருஹப் பிரவேசஞ் செய்வதற்குரிய நல்ல முஹூர்த்தமும் தெய்வ வசமாகக் கூடி யிருக்கின்றமையால், விரைவாக இம்மாமஸத்தைப் பாகஞ்செய்க; வாஸ்துஹோமஞ் செய்வோமென் றருளிச்செய்தனர்.

இளையபெருமாளும் உடனே தீயைவளர்த்து அதனிடையில் அந்தக் கறுப்பிமான மாமஸத்தைப்போட்டு நன்குசமைத்துப் பக்குவமானவுடன் பெருமானைநோக்கி, எம்மையனே இந்தக்கறுப்பு மானினது மாமஸம் சிவப்புற்றிருக்கினும், நன்கு பக்குவ மானமையால் முன் போலவே கறுப்புற்று விளங்குகின்றது. ஆதலின் தேவர் வாஸ்துஹோமஞ் செய்யக்கடவீர்; தேவரே அதனை நன் குணர்ந்தவரென்று, விண்ணப்பஞ்

செய்தனர். பெருமாளும் அம்மொழிகேட்டு, நீராடி, நியமந்தரித்து அதற்குரிய மந்திரங்களை ஜபித்து, சுருக்கமாக அந்தச்சடங்குகளையெல்லாம் முடித்து, கிருஹ தேவதைகளைக் குறித்து யாகஞ்செய்து மன மகிழ்ச்சியுடன் கிருஹப்பிரவேசஞ் செய்தருளி, வைசுவதேவபலியுஞ் செய்தருளி, ருத்திரனைக் குறித்தும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக் குறித்தும், ஹோமஞ் செய்து கிருஹபீடைகளைப் போக்கவல்ல சாந்திகளையும், நன்மை பயக்கவல்ல புண்யாஹவசனம் முதலிய மந்திரங்களையும் அநுசந்தித்து, நீதிப்படி ஜபமுஞ் செய்தருளி விதியின்படி ருத்திரனைக் குறித்து ஹோமஞ் செய்தமையால், அந்த அசுசி நீங்கும்படி மீளவும் நதியில் ஸ்நானஞ் செய்தருளி, பாவங்கள்தொலையத்தக்க பலியினையும் நிறைவேற்றி, ஆசிரமத்திற்குத் தக்கவாறு அங்கதேவதைகளுக்கும், முக்கியமான ஸ்ரீமந் நாராயணனுக்கும் சுற்றிலும், ஆலயங்கள் செய்வித்துப் பிரதிஷ்டை செய்தருளி இளையபெருமாளுடனும், பிராட்டியுடனும், காட்டிலுள்ள மலர்களாலும், கனிகளாலும், கிழங்குகளாலும், பக்குவஞ் செய்யப்பட்ட மாமஸங்களாலும், நன்னீர்களாலும், ஜபங்களாலும், தாபங்களாலும், ஸமித்துக்களாலும், தூபபுற்களாலும், பூதங்களெல்லாவற்றையும் விதிப்படி பூஜித்து மகிழ்வித்து, மற்றுமுள்ள ரிஷிகணங்களுடன்கூடி, தேவதைகளுடன் தேவேந்திரன் ஸுதர்மாஸபாப்பிரவேசஞ் செய்வதுபோல நன்கியற்றப்பட்ட அந்தப் பர்ணசாலையினுட் புகுந்து வாழ்ந்து, பலவகைப் பறவைகளாலும் மிருகங்களாலுஞ் சூழப்பட்டும், பலவகைப்பட்டு விநோதமாயுள்ள பூ கனி காய்கள் நிறைந்த மரங்களால் செழிப்புற்றும், பாம்பு புலி காடி யானை சிங்கம் முதலியவற்றால் தொனிசெய்யப்பட்டும், கோரமாகியும், அழகாகியுமுள்ள அக்கானனத்தில் விஹாரஞ் செய்துகொண்டும், பற்பல நீர்ப் பறவைகளால் ஒலிக்கப் பட்டும், குளிர்ந்த நன்னீருடையதுமாகி, அங்குப் பெருகுகின்ற மால்யவதி நதியில் ஜலக்கிரீடைசெய்துகொண்டும், அந்தத் திருச்சித்திரகூடத்திலுள்ள விநோதங்களைக் கடாக்ஷித்துக் கொண்டும், பெரு மகிழ்ச்சியடைந்து திரு அயோத்தியைவிட்டு வந்தோமே யென்று சிறிதுந் துன்பமுறாமல் மிகவும் ஆநந்தமடைந்து வாழ்ந்திருந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தாறுவது சருக்கம் முற்றிற்று.

---

இந்தச்சருக்கத்தில (ஸஸ-பதசு) எனனும் சுலோகத்திற்குச் சிலர் இளையபெருமாள் இப்பொழுது துயில்கொண்டதாகவும், பெருமாள் எழுப்ப விழித்தத துயில்நீங்கியதாகவும், பொருள்கூறுகின்றனர். அஃதொருபொழுதும் ஒவ்வாது; இந்தக்காண்டத்தில் ஐம்பத்தொன்றாவது சருக்கத்தில, குஹப்பெருமாள் இளையபெருமாளைத் துயிலும்படி வேண்டுகையில், அதற்கிவர் (கதந்தாசரதௌபூமௌசயாநேஸஹஸீதயா, சக்யாநித்

ரமயாலபத்தஞ் சீவிதம்வாஸுகாங்க்ஷா.) என்று தொடங்கிப் பெருமாள் பிராட்டியு டன தரையில படுத்திருக்கையில, நானெவவண்ணந் துயில் கொள்வேனென்று புல ம்பி விழித்திருந்ததாகவே அருளிச்செய்த திருக்கின்றமையாலும், உத்தரகாண்டத் தில் பதினனகாண்டு துயிலுண வறறவனு லலலது மறறு யாராலும தனக்குக் கொ லை நேராதெனறு இநதிரஜித்து வரமபெற் றிருநததாகவும, இளையபெருமாள் அவ வண்ணமிருநதமையாலே அவனைக கொலைசெயதனனெனவு மிருக்கின்றமையாலும, இநதச சுலோகததிறகு நாம எழுதியவண்ணமே பொருளகொளள வேணடுமென றுணர்க.

: லக்ஷமணாய எனனுஞ சுலோகததின கருததுரை.

அடா லக்ஷமணா ! (தருடாங்கச) வலிமைதங்கி நெடுங்காலம அழிவறறிருக் கத தக்கனவும், (வராணிச) யாவரும் மகிழநது புகழநது பணிநது ஆச்ரயிக்கத் தக்க நல்வினை யுளளனவுமாகிய (தாருணி) காமசேஷததால பிரகிருதியுள ளினமா யக கட்டைபோலச செயலற றிருக்கின்ற சேதன விசேஷங்களை, (ஆநய) என கடா க்ஷததிறகுப பாததிரமாகுமபடி திருததிககொணா (ஆவஸதம) ததததது குணங்க ளான பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்ராதி பரிணதசரீர விசேஷங்களை (குருஷவ) இயறறு (மேமநஃ) எனமனம (வாஸே) ததது பாவேசததில (அபிரதம) மிகவும் விருப்புறறிருக்கின்றது, இதனால திருவநநதாழவானை ஸ்ரீபாஷ்யகாரராக அவதாரஞ் செயது விசிஷ்டாத்வைத ஸ்தாபனஞ்செயது, அநேகம ஆசிரியர்களை ஏறபடுததி யவாகளிடததும தாம அநுபரவேசிதது, மூடர்களைத திருததிப பணிகொணடு, பேரி னபமளிதது ஸம்ஸாரககடல கரைசேர்க்க ஸங்கறபமுடையவன பேரருளாளனென பது நன்குவிளங்கும, (தருடாநி) வலிமையுளளனவும (வராணிச) பினனமாகா மல அர்ச்சாரூபமாக வெழுநதருளப்பணணத தக்கனவுமாகிய (தாருணிச) கட்டை சிலை செமபு வெளளி தங்கம முதலானவைகளையும, (ஆநய) பிரதிமைகளாகசசெய (ஆவஸதம) கோபுரமணடப பராகார வாபிகூப தடாகாதிக ளடங்கிய கோயில்களை யும, (குருஷவ) நனகியறறு, (மேமநஃ) எனமனம (வாஸே) பிமபததில ஸாந நிதயங்கொண டிநத லீலாவிபூதியில யாவரு மெளிதில நமமைச சேவிதது நற்கதி பெறுமபடியாக வாழவதில, (அபிரதம) மிகவும் ஆஸததியுடைய தாகின்றது. இத னால ஸவயம் வ்யகத திவயாபிஷ மானுஷங்களாகிய அர்ச்சைகளில பகவதஸாந நித யம நிரநதரமுள தெனவும ததஸேவாதிகள யாவர்க்கும் விதியெனவும் நன்கு விளங்கும.

# ஐம்ப ழாவது சருக்கம்

ஸுமநதிரர் திருமபித ாததிசோநது, பெருமாள தனியே நடந தெழுந்தருளியமை யுரைசெயயச சக்கரவர்ததியார முதலானோர மிகவுந் துனபுற்றது.

அங்கே பெருமாள் குஹப்பெருமாளுக்கும, சுமந்திரருக்கும, விடை கொடுத்து நிறுத்திவிட்டு, இளையபெருமாளுடனும, பிராட்டியாருடனும், படவேறிக் கங்காநதியைத் தாண்டி எழுந்தருளுகையில, குஹப்பெருமா னும, சுமந்திரருடனகூடி நின்று, பெருமாள கட்புலனா கடந தெழுந்தருளு

மளவும், இமைக்காமல் கண்ணுற்றுக்கொண்டு, பெருமாளுடைய திருக்கல்யாண குணங்களையும் புகழ்ந்து, அவருக்குற்ற துன்பத்தை நினைந்து புலம்பிக் கடுந்துயரங்கொண்டு, தமக்குள்ளே தேர்ந்து, திருத்தேர்ப்பாகனாயு முடனழைத்துக்கொண்டு, தன்னரண்மனைவந்துசேர்ந்து, காட்டிலடிக்கடி ஸஞ்சரிக்கின்றவர்கள் முகமாய்ப் பெருமாள் பரத்துவாஜாசிரமத்துக் கெழுந்தருளி யதையும், அங்கிருந்து பிரயாகக்ஷேத்திரஞ் சேர்ந்ததையும், அங்கிருந்து திருச்சித்திர கூடம்வரையி லெழுந்தருளி யதையுங் கேட்டுணர்ந்து, அல்லும்பகலும் ஸ்ரீராமசந்திரனையே நினைந்துகொண்டிருந்தனர். ஸுமந்திரரும் பெருமா ளினி மீள வெழுந்தருளாரென்று நிச்சயித்து, நிஷாதபதியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, குதிரைகளைத் திருத்தேரில் கட்டி மிகவுஞ்சோகத்துடன் திருவயோத்தியை நோக்கிச்சென்று, மலர்ந்து மணங்கமழ்கின்ற காடுகளையும் நதிகளையும் தடாகங்களையுங் கடந்து, நாடுகளிலுள்ள கிராம நகரங்களைக் கண்ணுற்றுக்கொண்டு சிருங்கி பேரபுரம் விட்டதினத்திற்கு மூன்றாவது தினம் ஸாயங்காலத்தில் திருவயோத்தியை யடைந்து, ஒருயிருமின்றி, மருகாந்தாரம்போலத் தெரியா நிற்கக்கண்டு, சக்கரவர்த்தி முதலிய யாவரும் பெருமாளைப்பிரிந்த சோகவேகத்தைப் பொறுக்கத் திறமையற் றிறந்தனரோவென்று ஐயமுற்று, விரைவாகக் கோபுரவாயில் கடந்துட்புகுந்து வருகையில், நகரத்தோ ரெல்லோருங் கண்டு எதிர்கொண் டோடிவந்து, ஸ்ரீராமனெங்கே ஸ்ரீராமனெங்கேயென்று வினவினார்கள். ஸுமந்திரரும் அவர்களைநோக்கிக் கேளீர் நகரத்தோர்களே! நான் கங்காநதியின் தீரத்தில் விடைகொடுக்கப்பட்டு மீண்டெய்தினேன்; அவர் தருமவழிபற்றிக் கங்கையைக் கடந்து காட்டிற் கெழுந்தருளினரென் றுரைசெய்தனர். அவர்களும் மொழிகேட்டுப் பெருமாள் கங்கையையுந் தாண்டி யெழுந்தருளி விட்டனரோவென்று, கண்ணீர்பெருக்கி அந்தோ? ஸ்ரீராமா! என்றும் அய்யய்யோவென்றும் புலம்பினர்கள் அன்றியும் திரள் திரளாய் நின்று அந்தோ? ஸ்ரீராமனைக் காணாமையால், யாங்கள் நல்வினையற்றுக் கெட்டோம்; தானய்ஜ்ஞ விவாஹாதி காலங்களிலும், மஹோத்ஸவங்களிலும் சபை நடுவில் நாயகமணிபோலத் திகழும் ஸ்ரீராமனை மீளவு மொருக்காலுங் காணேமோ; இவர்க்கு நன்மை பயக்கத்தக்க தியாது? இவர்க்குப் பிரியமளிப்பதியாது? இவர்க்கு ஸுகந்தருவ தியாது? என்றிந் நகரிலுள்ள யாவரும் மக்களைப்போலவே ஸ்ரீராமனால் பாதுகாத் தளிக்கப் பட்டனர்களே என்று பலர் புலம்பவும், மாளிகைமேல் ஜாலகத்தினின்று திருத்தேரைக் கண்டு, ஸ்ரீராமனைக் காணாமல் வருந்தி யழுகின்ற வநிதையர் அழுகுரல் கேட்டுக்கொண்டே சோகத்தால் முகத்தை மூடிக்கொண்டு ராஜவீதி வழியாகவே சக்கரவர்த்தியிருக்குந் திருமாளிகைநோக்கியேசென்று, அதனைக்கிட்டித் திருத்தேரை விட்டிழிந்து அரண்மனைக்குள் புகுந்து, ஏழுபிராகாரங்களையுங்கடந்து, மாடமாளிகை விமானங்களில் காந்தையர்கள்கூடி ஸ்ரீராம

னைக் காணாமல் கண்ணீர்பெருக்கி அந்தோ அந்தோவென் றழக்கண்டு, சக்கரவர்த்தியார் தேவிமார்களும் மகாராஜர் மிக்க சோக முறுவாரோ வென்று, கூவாமல் மெதுவாகப் புலம்பி யழுது, சுமந்திரர் பெருமாளுடன் புறப்பட்டுப்போய அவரைவிட்டிவர்மாத்திரம் வருகின்றனரந்தோ? என் திருமகனெங்கேயென்று கோசலையார் கேட்பாராகில் அதற் கிவரென்ன பதிலுரை செய்வார்? திருமகன் காட்டேற வெழுந்தருளியும், கோஸலையார் உயிரை விடாமல் பிழைத்திருக்கின்றா ரென்பது மிகவும் அரிதென்றுங் கடினமென்று மெண்ணுகின்றேன்; மற்றொருத்தி இப்போதும் பிழைப்பளோ என்று; இவ்வாறு ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளுகின்ற வாக்கியத்தை மிகவும் யதார்த்தமெனவே யறிந்து, சோகாக்கினியால் அனல் பற்றி எரிகின்றதுபோலிருக்கின்ற எட்டாவது பிராகாரத்தினடுவிலுள்ள மகாராஜா திருமாளிகையையடைந்து, புத்திரசோகத்தாலெரிந்து வருந்தி வாடி வதங்கி இளைத்து வெளுத்துத் தவிக்கின்ற சக்கரவர்த்தியைக் கண்ணுற்று, வந்தனஞ் செய்து, ஸ்ரீராமசந்திரர் விண்ணப்பஞ் செய்யும்படி யருளிச்செய்த திருவாக்கியங்க ளெல்லாவற்றையும், ஒருமொழியும் விடாமல் விண்ணப்பஞ் செய்து நின்றனர். சக்கரவர்த்தியும் மௌனமாகி யசைவற்று வீற்றிருந்து, அவ்வாக்கியங்களை முற்றுஞ் செவிசாத்திச் சோகம்பெருகி மனந்தளர்ந்து கண்சுழன்று மூர்ச்சையடைந்து தரையில் வீழ்ந்தனர். அப்பொழுது அந்தப்புரத்திலுள்ள யாவரும் கூக்குரலிட்டுப் புலம்புகையில், கோஸலையார் சுமித்திராதேவியுடன் சக்கரவர்த்தியை எடுத்து தட்காரவைத்துத் தேற்றி, அவரை நோக்கி என் பிராணநாதா! நந்திருமகனைக் காட்டேற விட்டுத் திரும்பிவந்து பணிந்து நிற்கின்ற சுமந்திரருடன் ஏன் ஸல்லாபஞ் செய்கின்றிலீர், ரகுகுல துரந்தரராகிய தேவர் ராஜநீதிக்கு விரோதமேயாயிருக்கினும், ஸத்தியவாக்கிய பரிபாலனார்த்தமாக ஸ்ரீராமனை வனவாஸஞ் செய்யும்படி கட்டளையிட்டனுப்பி, இப்பொழுதேன் வெட்க முறுகின்றீர்; தேவர் செய்தது நற்செயலாகக் கடவதல்லது, வெட்கத்தக்க தீச்செயலன்று; ஆதலின், சோகக்கடலில் மனத்தை மூழ்த்தாமலெழுந்து மனமகிழ்க; பரதனை விட்டு ஸ்ரீராமனிடத்தில் மாத்திரம் இவ்வளவு பக்ஷம் வைத்திருக்கின்றாரோ வென்று கைகேயி கோபங்கொள்வாளென்று அஞ்சி, ஸ்ரீராமன செய்தியைப் பற்றிச் சாரதியைக் கேட்கின்றிலீரோ? இவ்வண்ணம் அஞ்சற்க; அக்கைகேயி இப்போ திங்கில்லள், ஆதலின், அச்சமற்றுச் சுமந்திரருடன் ஸம்பாஷிக்கக் கடவீரென றிவ்வண்ணந் தீரங்கொண் டுரைத்தும், சோகத்தை யுள்ளடக்க வாற்றலற்றுத் தரையில் வீழ்ந்து புலம்பினள். இவ்வண்ணஞ் சக்கரவர்த்தி கோஸலையா ரிருவரும் வருந்தக்கண்டு, ஆண் பெண்ணலி பாலவிருத்தர்க ளடங்கலும் கூடிக் கூவியழுகையில், புரமெங்கும் அந்தப் புலம்பலால் நிரம்பி யொலித்தது.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தேழாவது சருக்கம்
முற்றிற்று.

# ஐம்பத்தெட்டாவது சருக்கம்.

*ஸுமந்திரர் சக்கரவர்த்தியாரிடத்தில் பெருமாள் இளையபெருமாள் சீதை இவர்களின் வாக்கியத்தை விண்ணப்பஞ் செய்தது.*

அநந்தரஞ், சக்கரவர்த்தியார் மூர்ச்சை தெளிந் தெழுந்து மனந்தேறி, ஸ்ரீராமசந்திரனது சரித்திரத்தைக் கேட்பதனபொருட்டு ஸுதனை யழைத்தனர். ஸுமந்திரரும கைகுவித்துக்கொண டெதிரில் வந்து, ஸ்ரீராமசந்திரனையே நினைந்து, துன்பமும் சோகமுங்கொண்டு, மிகவும் தாபமடைந்து, அன்றைத்தினமே பிடிக்கப்பட்ட யானைபோல்ப் பெருமூச்செறிந்து, பிணிகொண்ட யானைபோலத் திகைத்துச் சிந்தைகொண்டு, மூப்பினாலு மிளைத்து வெளுத்து நரைத்து வீற்றிருக்கின்ற சக்கரவர்த்தியை நோக்கி நின்றனர். தசரதசக்கரவர்த்தியும், புழுதிபடிந்து கண்ணீர்ததும்பத் துன்புற்று நிற்கின்ற ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! என் திருமகன் காட்டிடையி லெவ்வண்ணம் பிழைக்கின்றான், எங்கு வாழ்கின்றான், இதுவரையில மஹாராஜ போகங்களை யநுபவித்த என் செல்வத்திருமகன் மரத்தடியில் படுத்து எவ்வண்ணந் துயில்கொள்வான், அவன் எதனைப் புசிக்கின்றான்; இதுவரையில் அவன் திருவரண்மனைவிட்டுப் புறப்படுகையில, நால்வகைப் படைகளும் அவனைச் சூழ்ந்து சென்றனவே? அத்தன்மையனாகிய என் திருமகன் நிர்ஜனமாகிய வனத்தில் எவ்வண்ணந் திருவடித்தாமரைகளைச் சிவப்புற நடப்பான்; மலைப்பாம்புகளாலும, பற்பல கொடிய மிருகங்களாலும் நிறைந்து கோரமான வனத்திடையில என் திருக்குமாரர்கள் ஸீதையுடன் எவ்வண்ணந் திரிவார்களந்தோ? மிகவும் ஸுகுமாரியான ஸீதையுடன் என் குமாரர்கள் திருத்தேரைவிட்டிழிந்து எவ்வண்ணம் நடந்து சென்றனர்கள். மந்தரமலையி னிடையில, அசுவினி தேவர்கள் சென்றாற்போலக் கடுங்கானகத் திடையில் என் குமாரர்கள் நடந் தெழுந்தருளக் கண்ட நீ ரொருவரோ யன்றோ? மிகவும் நல்வினையினர். வனத்திடை புகுகையில், ஸ்ரீராமசந்திரன் என்ன அருளிச்செய்தனன்; லக்ஷ்மணன் யாது கூறினன்; ஜனகமஹாராஜன திருமகள் யாது மொழிந்தனள்; அவர்கள் எவ்வண்ண மிருந்தனர்கள்; எவவாறு படுத்தனர்கள்; எவவண்ணம உண்டனர்கள்; இவையெல்லாம் உரைசெய்க. யயாதி வானுலகினின்றும, இந்திரனால் தள்ளப்பட்டும், ஸாதுஜநங்களிடத்தில் வீழும்படி இந்திரனை வேண்டிக்கொண்டு அவவண்ணமே வீழ்ந்துய்ந்ததுபோல யான ஸ்ரீராமனை விட்டுப்பிரிந்தும், ஸ்ரீராமன சரித்திரங்களைக் கேட்பதனாலாயினும், மகிழ்ந்துய்வே னென்று வினவினர். இவவண்ணம் சக்கரவர்த்தியாலேவப்பட்ட ஸுமந்திரரும், சக்கரவர்த்தியை நோக்கிக் கேட்டருளீர்; திருவயோத்தி மன்னரே! தேவர் திருமகன் காட்டிடையில் தேவரைக் குறித்துக் கைகுவித்துச் சிரத்தில் வைத்துத் தலைவணங்கித் தன்னிடம் ஸமர்ப்பித்து, என்னை

நோக்கி, ஸுமந்திரரே! நான் செய்ததாக என் தந்தையர்க்கு நீர் திருவடி தொழுது வணக்கஞ்செய்யக்கடவீர். அன்றியும், அந்தப்புரத்திலுள்ள யாவரையும்நோக்கி, அவரவர்களுக்குத்தக்கபடி மரியாதை செய்யக்கடவீர். என மாதாவை நோக்கிக் குசலங்கேட்டு வந்தனஞ்செய்து தாயே! நீர் எப்பொழுதும் ஊக்கத்துட னிருக்கக்கடவீர் அக்கினிஹோத்திரஞ் செய்யுங் காலங்களில், அங்கிருந்து தருமச்செயல்களைச் செய்யக்கடவீர் என் தந்தையின் திருவடிகளைத் தெய்வமென நம்பிப் பணிந்து பாதுகாக்கக் கடவீர். நாம் உயர் குலத்தின ளென்னுங் கர்வத்தையும், நாம் பட்ட மஹிஷி யென்னும் அஹங்காரத்தையும் விட்டு, எல்லாத் தேவிக ளிடத்திலும், அன்பு கூர்ந் திருக்கக்கடவீர். சக்கரவர்த்தியாரது திருவுள்ளத்தையும், கைகேயியின் எண்ணத்தையும், அநுஸரித்தொழுகக்கடவீர் இளவரசனாகிய பரதனிடத்தும், சக்கரவர்த்தியாரிடத்துப்போல மதிப்புக்கொண்டு நடக்கக்கடவீர்.

అర్థజ్యేష్ఠాహిరాజానో రాజధర్మమనుస్మర

*அர்த்தஜ்யேஷ்டாஹிராஜாநோ ராஜதர்மமநுஸ்மர.*

ராஜாக்கள் ஞானம் குலம் வயது புத்தி முதலிய வற்றுஞ் சிறியவர்களாயினும், செல்வமொன்றினாலே யாவரினு முயர்ந்தோ ரல்லரோ? அரசநீதியை நன்கு ஆராய்க வென்று விண்ணப்பஞ் செய்யக்கடவீர். பரதனையும் நோக்கிக் குசலம் கேட்டுக் கேகயீ நந்தனா! நீ மாதாக்களெல்லோர்களிடத்திலும், பக்ஷபாதமின்றிச் சரியாக நடந்துகொள்ளக்கடவை. நீ இளவரசனாயிருப்பினும்,சக்கரவர்த்தியார் திருவுளமுகக்குமாறு நடந்து பாதுகாத்தளிக்கக் கடவை. அவர் மிகவும் மூப்பினரா தலின், அவர் திருவுள்ளத்திற்கு, விரோதமாக நடந்து, அவரை வருத்தக்கடவையல்லை, அவரது கட்டளையின்படியே நீ இளவரசனாகி யொழுகக்கடவை. என தாயாரை யுன் தாய் போலவே எண்ணி நடக்கக்கடவை யென்றும், நான் சொல்லியதாக உரை செய்யக்கடவீ ரென்று கண்ணீர் ததும்பச் சோகங்கொண்டருளிச்செய்து சோகநீர்பெருக்கி நின்றருளினர்.

இளையபெருமாளும் மிகவும் கோபங்கொண்டு நெட்டுயிர்ப்புற்றவராகி என்னைநோக்கி, சுமந்திரரே! எம்மையரிடத்தி லென்ன குற்றத்தைக்கண்டு கொடிய கைகேயியின் புன்மதிகேட்டுச் சக்கரவர்த்தியார் திருமகனைக் காட்டேற வோட்டினார். எந்தச்செயலால் யாங்கள் மிக வருத்தப்பட்டோமோ? அச்செயல் தீச்செயலாயினும், நற்செயலெனவே செய்யப்பட்டதன்றோ? வரமென்பதை வியாஜமாகக்கொண்டு, பொருளாசையினாலே எம்மையனை யோட்டினமையால், அஃது எவ்விதத்திலும் தீச்செயலாகுமல்லது; நற்செயலாகாது? சக்கரவர்த்திதான் யாவர்க்கும் இறையென்பதுபற்றித் தம் மனம்போனபடி இந்தத் தீச்செயலைச் செய்தாரே யன்றி, எம்மையனைக் காட்டேறவிட வேறொரு காரணத்தையுங் காண்கிலேன்;—

అసమీక్ష్య సమారబ్ధం విరుద్ధం బుద్ధిలాఘవాత్
జనయిష్యతి సంక్రోశం రాఘవస్య వివాసనం

*அஸமீக்ஷ்யஸமாரப்தம் விருத்தம்புத்திலாகவாத்*
*ஜநயிஷ்யதிஸங்க்ரோசம் ராகவஸ்யவிவாஸநம்*

நன்காராயாமல் மதியின்மையால், தீச்செயலை நற்செயலென வுணர்ந்து விரைந்து செய்கையில், அஃது மிகவுந் துன்பத்தையே தருமன்றோ? அவ்வண்ணமே சக்கரவர்த்தியாரும் ஆராயாமல், 'எம்மையனைக் காட்டேற விட்டு, இப்பொழுது துன்புறுகின்றனர், (குரோர்ப்ய வலிப்தஸ்ய கார்யா காய மஜாநத: உத்பதம்ப்ரதி பந்நஸ்ய பரித்யாகோ விதீயதே) என்று, நீதிதப்பி நடக்கின்ற தந்தையையும், விட்டு விடக் கடவனென்று விதிக்கப்பட்டிருக்கின்றமையால், நீதிதப்பி எம்மையனைக் காடேறவிட்ட சக்கரவர்த்தியை யான் தந்தையென மதிக்கேன்; எனக்கு அண்ணன், இறைவன்; இனத்தார் சுற்றத்தார் தாய் தந்தை முதலிய யாவரும் எம்மையனே! எல்லாவுலகங்களுக்கும், இதஞ்செய்பவரும், பிரியமளிப்பவருமாகிய எம்மையனைக் காடேறவிட்டு, யாவர்க்கும் பகைபோல நின்ற உம்மைக்கண்டு யாவரும் எவ்வண்ணம் அன்புற்று மகிழ்ந்து, உமது கட்டளையின்படி நடப்பார்கள். நாடு நகரத்தோரெல்லோர்க்கு மினியராகிய எம்மையனை யோட்டிவிட்டு, நீ எவ்வண்ணம் அவர்களுக்கிறையாகி யரசாட்சி செய்வீ ரென்று தேவருடன் விண்ணப்பஞ் செய்யும்படி யருளிச் செய்தனர். ஸீதாபிராட்டியோ வெனனில், இதுவரையில் ஒரு துன்பத்தையு மறியாதவ ராதலின், மிகவுந் துன்பமடைந்தவராகி, யான் மீளுவதைக் கண்டும் யாதும் அருளிச்செய்யாமல், பெருமாள் திருமுக மண்டலத்தையே நோக்கிக் கண்ணீர்த்தளும்ப நின்றனர். இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரர் இளையபெருமாளால் பாதுகாக்கப்பட்டவராகித் திருவயோத்தியை நோக்கிக் கைமுகிழ்த்து நின்றருளினர். பிராட்டியும், தேவர் திருத்தேரினையும், அடியேனையுங் கண்ணுற்றுக் கண்ணீர்பெருகித் துன்புற்று நின்றனர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தெட்டாவது சருக்கம் முற்றிற்று.

---

இந்தச்சருக்கத்தில் இளையபெருமாள் சக்கரவர்த்தியாரை இகழ்ந்ததாகவிருக்கின்றது சரியோவெனின், உலகத்தில் இவ்விதத் துன்பத்தை யடைந்தவர்கள் இவ்வகையாக இகழ்வாக சொன்னதைத் திருவுளம்பற்றி, லோகபாவனை செய்தாரென்றுணர்க. இதன்கருத்தென்னெனில், ஓராசிரியன் உண்மையறியாமல் பகவானைத் துறந்து மண்ணாசை பெண்ணாசை பொருளாசை கொண்டு ஸம்ஸாரக்கடலில் மூழ்கிக்

# ஐம்பத்தொன்பதாவது சருக்கம்.

## ஸுமந்திரர் வாக்கியத்தைக்கேட்டு சக்கரவர்த்தியார் புலம்பியது.

கேட்டருளீர் சக்கரவர்த்தி, பெருமாள் காட்டேற எழுந்தருளிய பின்பு நான் திரும்பி வருகையில், திருத்தேர்க்குதிரைகளும் கண்ணீர் பெருக்கிக் கால்வெழாமல் தட்டித்தடுமாறி வந்தனவேயன்றி மகிழ்ந்தில. யானும் பெருமாளிளைய பெருமாளிருவர்க்குந் தண்டம் ஸமர்ப்பித்துக் கைகுவித்துக்கொண்டு சோகத்தை யுள்ளடக்கித் திருத்தேரைத் தேறிப் புறப்பட்டுக் குஹப் பெருமாளுடன் சிருங்கிபேரபுரஞ் சேர்ந்து பெருமாளொரு கால் மீளவு மென்னை யழைப்பரோ வென்று மாசையினால் அவ்விடத்திலே மூன்றுநாளிருந்து பார்த்தும் காணாமையால் திரும்பிவந்தேன்

---

கிடக்கின்ற சேதனர்களை யுஜ்ஜீவிப்பதன்பொருட்டு, தத்துவோபதேசஞ் செய்யவேண்டுவதை யருளிச்செய்கின்றார் (கோயம் இத்யாதி) ஸர்வாந்தர்யாமியாய ஸர்வபந்துவாய ஸர்வஸுலபரா யிருக்கின்ற பெருமானை என்ன காரணத்தினால் நீ துறந்தனை. (ராஜஞா இத்யாதி) நானே கர்த்தாவென்னும் அஹங்காரமுடைய சேதநனால் கைகேயியேர்லக் கொடிய மாயையின் மயக்கிலகப்பட்டு நீயெல்லோரும் துன்புறத்தக்க செயல்கள் செய்யப் படுகின்றன பரமாநந்தம் பெறுவிக்கத்தக்க எம்பெருமானைத் தொழாமல் துறப்பது இம்மையில் புன்மையான பொருளாசையினாலவதன்றோ? அஃது தீச்செய லாகுமல்லது நற்செயலாகுமோ? இவ்வண்ணம் பெருமானைத் துறப்பது தானே சுதந்திரனென்னும் அஹங்காரமடியாக வந்ததேயன்றி யதற்கு நாம் வேறோர் காரணத்தையும் காணகிலோம், (அஸமீக்ஷ்ய) இத்யாதி குருகுல வாஸஞ்செய்து வேதார்த்தங்களை யறிந்து நன்காராய்ந்து விதிப்படி செய்து இகழப்பட்டன துறப்பவர்களே கடையில் பேரின்பம் பெறுவாரல்லது தாமே வல்லோரென்று இறுமாப்புற்று நாஸ்திகர்களாகி நம்பெருமானைத் துறந்து மற்றொரு தெய்வத்தைத் தொழுது தொண்டு செய்வார்களாகில் இம்மையிலுங் கெட்டு மறுமையிலும் நரகில் வீழ்ந்து துன்பமடைவார்க ளென்பதிலும் ஐயமுளதோ? (அஹந்தாவத இத்யாதி) யாம் பிரகிருதி ஸம்பந்தத்தால் உறவினராகிய இத்தாய்தந்தை முதலியவர்களைத் தாய் தந்தை முதலானவர்களாக எண்ணேம், (பிதாத்வம் மாதாத்வம்) என்றபடி காரணமின்றி யுறவினராகிய பெருமானையே தாய்தந்தை தமையன் இனத்தார் சுற்றத்தார் முதலிய எல்லா வுறவினராக நினைப்போம், ஸர்வலோக இத்யாதி, நீ இவ்வண்ணம் நாஸ்திகனாகி நம் தெய்வத்தையே துறக்கின் இவ்வகைத் தீச்செயலினால் உன்னிடத்தில் யாவர் அன்புசெய்வார், யாவரும் பகைப்பார்களே! இவ்வண்ணந் தெய்வத்தையுந் துறந்து உலகத்தையும் பகைத்து நிற்கின் நீ எவ்வாறு உய்ந்தோதுவாய்; ஆதலின் நீ நம் பெருமானைச் சரணமடைந்து பெருவீடு பெறக் கடவையென்று ஆசிரியன் உபதேசஞ் செய்ய வேண்டும், முறையினை யருளிச்செய்தனர்.

విషయే తే మహారాజ రామవ్యసనకర్శితాః
అపి వృక్షాః పరిమ్లానాః సపుష్పాంకురకోరకాః

விஷயேதேமஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதாஃ
அபிவ்ருக்ஷாஃபரிம்லாநாஃ ஸபுஷ்பாங்குரகோரகாஃ.

மஹாராஜரே தேவருடைய இந்நாட்டில் அசேதநங்களாகிய மரங்களும், சேதனர்களைப்போலப் பெருமாளுக்கு நேர்ந்த வனவாஸ சோகத்தினால் இளைத்துத் தளிர்மொட்டு மலர் காய்கனிகளுடன் வாடி வதங்கிக் கருகிக் குன்றிப் பட்டுப்போயின, ஆறு குட்டை குளங்களும், வெயிலின்றியே வெம்மைகொண்டு கொதிக்கின்ற நீருள்ளனவாயின, காடு தோப்புத்தோட்டங்களும், உலர்ந்த இலைகளுள்ளன வாயின; அவ்வனத்திலுள்ள மான் புலி கரடி யானை சிங்கம் முதலிய ஜந்துக்களும் சஞ்சரிக்கின்றில, கொடிய ஜந்துக்களும் திரிகின்றில; அவ்வனமெங்கும், ஸ்ரீராம சோகக்கடலில் மூழ்கித் தொனியற்றதாயிற்று, தாமரை யோடைகளும், வாடிய பூமடலுள்ளனவாகவும் கலக்கமுற்ற நீருடையனவாகவும் வெப்பங்கொண்ட தாமரை பொருந்தினவாகவும், அடங்கிக் கிடக்கின்ற நீர்ப்பறவை மீன் முதலியன சூழ்ந்தனவாகவு மாயின, நீரிலுள்ள மலர்களும், நிலத்திலுள்ள மலர்களும், முன்போல மணங்கொண்டு மலர்ந்தில; கனிகளும் முன்போல உருசி கொண்டு பழுத்தில; எம்மிறையே! இவ்விடத்திலும் தோட்டங்கள், அடங்கிய பறவைகளுள்ளனவாகி வாடியிருக்கின்றன, முன்போலச் செழிப்பாக ஒரு தோட்டத்தை யாயினுங் கண்டிலேன், பெருமானை விட்டுத் தனியே புகுந்த என்னைக்கண்டு ஒருவராயினும், மகிழ்ந்திலர்; திருத்தேர் மீது பெருமானைக் காணாமல், எல்லோரும் பெருமூச்சுவிட்டுக் கண்ணீர் பெருக்கி நின்றனர்கள் மாடமாளிகைகளின் மேலிருந்த மங்கையர்களும், வெறுமையாகவந்த இத்திருத்தேரைக் கண்ணுற்று, அந்தோ அந்தோ வென்றுகூவி யழுதனர்கள் இவ்வண்ணம் யாவரும் என்னைக்கண்டு துன்புற்றினரேயன்றி இவர் அன்பர், இவர் பகைவர், இவர் உறவினர், இவர் உதாஸீநர், என்பதற்கு வேற்றுமைக்குறி யொன்றினையும் யான்கண்டிலேன; எம்மரசே! பெருமானைப் பிரிந்து கோஸலையார் எவ்வண்ணம் துன்புற்றிருக்கின்றனரோ? அவ்வண்ணமே இத்திருவயோத்தியும் மகிழ்வற்ற மனிதர்களுடையதும், சோகங்கொண்ட யானை குதிரைகளுள்ளதும், அந்தோ அந்தோவென்று எங்கும் தீனமான தொனி பரவியதும், எங்கும் நெட்டுயிர்ப்பின் ஒலி பொருந்தியதும், அழகு குலைந்ததுமாகி எனக்குத் தோற்றுகின்றதென்று ஸுமந்திரர் சக்கரவர்த்தியாரை நோக்கி, விண்ணப்பஞ்செய்து நின்றனர். தசரத சக்கரவர்த்தியாரும், இவருரைத்த மொழிகளை முற்றுங்கேட்டு மிகவுந் தீனமடைந்து கண்ணீர் ததும்பி வாய் தழுதழுத்துச் சுமந்திரரை நோக்கிச் "கேளாய் ஸாரதி! மிகவும்

பாவசிந்தை கொண்ட கைகேயியின் வாக்கியத்தைக் கேட்டு, மதிமயங்கி, ஆலோசனையில் திறமை யுடையவர்களும, ஞானத்தாலும் வயதினாலும் மூத்தவர்களும் ஆகிய நட்பினர்களுடனும, அமைச்சர்களுடனும், மற்றும் நாட்டிலுள்ள பெரியோர்களுடனும நன்காராயாமல, இவ்வண்ணம் பெண் புத்திகேட்டு மதிமயங்கி விரைந்து தீச்செயல செய்து மிக்காரையுங் கெடுத்து, நானுங்கெட்டழிந்தேன ; இதுவரையிலும் யாதொரு செயலும் ஆராயாமல செய்யாத யான் இக்குலம முழுதும அழியததக்க இந்தீச் செயலை யாராயாமல் செய்தது தெய்வச செயலெனவே நமப வேண்டும ; ஸுமந்திரரே ! இதுகாறும யான உம்முடைய விஷயத்தில செய்த நன் றியை யறிந்து என்மீது அன்புடையீராகில, என்னை விரைவில என திரு மக னிருக்குமிடங் கொண்டுபோய்ச சோகககடவீர், என பிராணனகள் விரைந்து செலலுகவென் றுரைக்கின்றன போலத் தூண்டுகின்றன. இப போழுதும் எனகட்டளையே பயன படுவதாகில் எனகட்டளையினபடி என் திருமகனைத் திருப்பியெழுந்தருளப பண்ணிக்கொண்டு வரககடவீர்; என திருமகனை விட்டு ஒரு முகூர்த்தகாலமாயினும, யான் பிழையேன் ; என திருமகன் இதுவரையில நெடுந்தூர மெழுந்தருளி யிருந்து, மீளானா கில், என்னையே இத்தேர்மிசை ஏற்றிக்கொண்டு என பெறலரும் புதலவ னிருக்குமிடங கொண்டுபோய்ச் சோகககடவீர், அரும்பு போன்ற பற்களை யுடையவனும, ஒப்பாரு மிக்காரு மில்லாத தனிவில்லி யாகிய வனும, இளையோனுடனும், சீதையுடனுங் கூடி மகிழ்பவனுமாகிய என் திருமகன எவ்விடத்தி லெழுந்தருளி யிருக்கின்றான்; அவனை யான கண் குளிரக் காணபேறுகில உயவேன, செந்தாமரை யிதழபோன்ற திருக் கண்களையும, நன்கிழைத்த மணிபொருந்திய குண்டலங்களையு முடைய என திருமகனை யான் கண்ணுறேனாகி லிப்பொழுதே யமலோகமபோய்ச் சேர்வேன ; இத்தருணத்திலும என்திருமகன திருமுக மண்டலத்தை இங்கே காண்கிலே னென்றால், இதனை விடக் கடுந்துயரமெனபது மொன றுளதோ ? ஆ ராமா ! ஆ லக்ஷ்மணா ! ஆ வைதேஹி ! நீஙகள நெடுந்தூ ரத்தி லிருக்கின்றமையால, கடுந் துனபங்கொண்டு அநாதனபோல இறக் கும் எனதன்னை நீஙகள காண்கிலீர், என்றிவ்வண்ணம் பலவாறு புலம் பிக் கோஸலையை நோக்கி, அடி என்பிராணநாயகி ! என திருமகனு லுண் டாகிய சோகமென்னும் விஸ்தாரத்தையும, சீதாதேவியின விரஹமென் னுங் கரையினையும் நெட்டுயிர்ப்புக்க ளென்னும் சுழிகளையும, கண்ணீ ரென்னும் நுரைஜலங்களையும், கைகளை யசைப்பதெனனும மீனகளையும், புலம்பலென்னும பேரொலியினையும, அவிழ்ந்த கூந்தலக ளெனனும் பாசியையும், கைகேயியென்னும படபாக்கினியையும உடையதும், என் னுடைய கண்ணீரென்னும் மழைமாரிக்குக் காரணமாகியதும், மந்த ரையின் வாக்கியமென்னும் பெரிய முதலையையுடையதும், கொடிய கை கேயியின் வரங்களென்னும் பெருக்கை யுடையதும ஆகிய இந்தச் சோக

மென்னும் பெருங்கடல் ஸ்ரீராமனென்னும், ஓடமின்றித் தாண்டிப் பிழைப்பது அரிதாதலின் யானிப்பொழுதே அக்கடலில் மூழ்கி யழுந்தி யிறப்பே னன்றோ? இத் தருணத்தில் நான் கண்ணுற விருப்புறும் லக்ஷ்மண னுடன் கூடிய என் திருமகனைக் காணகிலே னாதலின், இனி யான் எவ் வண்ண முய்வேன், என்றிவ்வண்ணம் அழுது வருந்தி யுடனே மூர்ச்சை கொண்டு தரையில் வீழ்ந்தனர் இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரன் பொருட்டுச் சோகமதிகரித்துப் புலம்பி மோகங்கொண்டு வருந்துகையில், கௌஸல்யாரும் அம்மொழிகளைக் கேட்டு இனி யிவருயிர் வாழாரெனத் தேர்ந்து மிகவும் பயங்கொண்டு வருந்தினார்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று

## அறுபதாவது சருக்கம்

ஸுமந்திரர் சோகங்கொண்டு புலம்புகின்ற

கௌஸல்யாரைத் தேற்றியது

அநந்தரம் கௌஸல்யார் பேய்பிடித்தவர்போல அடிக்கடி நடுக்குற்று, உயிர் மாய்ந்தவர்போலத் தரையில் வீழ்ந்து தேர்ப்பாகரை நோக்கி, ஸுமந்திரரே! என் திருமகன் சீதாலக்ஷ்மணர்களுடன் எவ்விடத்தி லிருக்கின்றானோ? அவ்விடத்தில் என்னை விட்டுவிடக் கடவீர், அவர்களை விட்டுக் கணப்பொழுதாயினும், நான் உயிர்வாழ்ந்து பிழையேன்; ஆதலின் திருத்தேரை மீளவும் திருப்பி, என்னையும் அவ்விடத்திற் சேர்க்கக்கடவீர். இப்பொழுது அவன்பின் செல்லேனாகில், யமலோகம் போய்ச்சேர்வேன்; என்று வேண்டிப் புலம்பினார் பிறகு ஸுமந்திரர் அதுகேட்டு மிக்க சோகங்கொண் டவரை நோக்கி, அம்மா கோஸலராஜன் திருமகளாரே! சோகத்தையும், மோகத்தையும், துன்பத்தாலாகிய இந்தப் படபடப்பை யும் விட்டுவிட்டு மகிழ்க் கடவீர், பெருமாள் ஸந்தாபம் சிறிதுமின்றி, யாரணியத்தி லினிது வாழ்வுறுவர், இளையபெருமாளும், தருமமுணர்ந்தவ ராதலின், அல்லும்பகலு மிடைவிடாது, தேவர் திருமகன் திருவடிகளைப் பணிந்து குற்றேவல்கள் செய்து, உயர்வற உயர்நல மடையத்தக்க நல் வினையினராகி மகிழ்கின்றார். சீதாதேவியும், பெருமாளிடத்திலே நிலை கொண்ட மனமுடையவ ராதலின், கோரமாகிய காட்டிடையிலும், தம் திருமாளிகையிற் போலவே இன்புற்று வாழ்ந்து, அச்சமென்ப தின்றி, விசுவாஸம் பூண்டிருக்கின்றனர். இவர் கொடுங்கானத்திடைப் புகினும்,

நெடுநாள் கானத்திலிருந்து பழக்க முடையவர்போல மகிழ்வுடன் சென்ற வரோ யன்றிச் சிறிதேனும், விகாரப்படக் கண்டிலேன்; ஸீதை இங்கே பூந்தோட்டத்தில் சென்று, எவ்வண்ணம் மகிழ்ந்தனரோ? அவ்வண்ணமே, கடுங்கானகத்திலும் மகிழ்ந்து, சஞ்சரிக்கின்றனர். பெருமா ளருகி லிருக்கின்றமையால், இராமையினர்போல மகிழ்ச்சிகொண் டிருக்கின்றனரே யன்றி, அவர் சிறிதும், அச்சங்கொண்டிலர், இவர் மனமும் பெருமாளைச் சேர்ந்தது, இவ ராவியும் அவரதீனம், ஆதலின், ஸ்ரீராமரின்றிப் பாழடைந்த இத் திருவயோத்தி யவருக்குக் கடுங்கானகமே! அக்கானகமும், இப்பொழுது திருவயோத்தியே யன்றோ? இவர் வழியில் ஊர்களையும், நகரங்களையும், ஆறுகளையும், பலவகை மரங்களையுங் கண்டு, பெருமாளை யாயினும், இளையபெருமாளை யாயினும் நோக்கி, இஃது எத்தன்மையது, என்னும்பெயருடைய தென்று கேட்டுணர்ந்து, மகிழ்ந்தே எழுந்தருளுகின்றனர். இத்திருவயோத்தி நின்றும் இரண்டு நாழிகைவழித் தூரத்திலேயே பெருமகிழ்வுகொண்டுசென்றனர். ஆதலின் நீர் அவர்களைக் குறித்துத் துன்புறற்க, என்றுரை செய்து, கைகேயி விஷயமாகப் பிராட்டி யருளிச்செய்த வாக்கியம், கோஸலையாரை மகிழ்விக்குமென்று மதிமயங்கி மொழியலுற்று, பின்பு இவ்வாக்கியம் இவரை மிகவும் துன்புறச் செய்யுமல்லது, மகிழச்செய்யாதென்றறிந்து, அம்மா கௌஸல்யாதேவி! அவ்வாக்கியத்தை இப்பொழுது மறந்துவிட்டேனென்னும், அஃது இப்போது தோன்றவில்லை யென்றும், சலம் கூறிக் கூறத் தொடங்கிய அந்த வாக்கியத்தை நிறுத்தி விட்டு, மீளவுங் கோஸலையாரை மகிழ்விக்கத்தக்க வாக்கியங்களை மொழிய நிச்சயங்கொண்டு, அவரை நோக்கிக் கேளீர் கோஸலராஜன் திருமகளாரே! வழிநடப்பதனாலாயினும், பெருங்காற்று வீசுவதினாலாயினும், புலி முதலிய கொடிய ஜந்துக்களைக் கண்ணுறுவதினாலாயினும், கதிரவன் கிரிகத்தின் வெப்பத்தினாலாயினும், பிராட்டியினுடைய முழுமதிபோலத் திகழும் திருமுகவொளி சிறிதும், நீங்கிற்றில்லது, மலர்ந்த தாமரைபோலவும், முழுமதிபோலவும், திகழ்கின்றது; செந்தாமரைபோன்ற அவரது திருவடிகளும், செம்பஞ்சிரஸம் பூசாவிடினும், பூசியனபோலவே இப்போதும் திகழ்கின்றன, பெருமாளுடன் விரைவாகப் பின் செல்லவேண்டுமென்னு மாசையினால், சிலம்பு தண்டைகளை யணிந்து கொள்ளாமல நடப்பவராயினும், அவற்றை யணிந்து கொண்டவர்போல விநோதமாகவே நடக்கின்றனர் (இப்பொழுதும் அணிகளை யணிந்து கொள்ளுவதி லாசையினால், தண்டைகளையு மணிந்துகொண்டு கல கல என்று விநோதமாக நடக்கின்றனர்.) பெருமாளுடைய திருத்தோள்களைப் பற்றி யிருக்கின்றமையால, யானையை யாயினும், சிங்கத்தையாயினும், புலியையாயினும் கண்ணுறினும், சிறிதேனும் அச்சமுற்றிலர்; ஆதலின், தேவர் அவர்களைக் குறித்தும், எங்களைக் குறித்தும், மஹாராஜரைக் குறித்தும், சிறிதும், சோகமுறக் கடவீரல்லீர்;

இந்த ஸ்ரீராமர் சரிதம் யாவருங்கேட்டு உய்யும்படி மூவுலகங்களிலும் நிலை பெற்று அழிவற்றிருக்கப் போகின்றது; அம்மூவர்களும், சோகமென்ன பதை விட்டு மனமகிழவுற்று, பெருந்தவச் செல்வர்கள் சென்றவழியே நடந்து, வனவாஸம் பூண்டு, காய் கனிகளை யுண்டு, தந்தையின் வாக்கியத் தைப் பரிபாலனஞ் செய்து, பதினான்காண்டுகள் சென்ற பிறகு, மீண்டிங் கெய்தி மகிழ்வுறுவாக என்றிவ்வண்ணம் உரை செய்து, மனந் தேறச் செய்தனர். கோஸலையா ரிவ்வண்ணம, தோபபாகரால தேறறப்பட்டவ ராயினும், புத்திரசோகத்தை யடக்க, ஆற்றலற்று; அடா என்னன்பா! அடா என திருக்குமாரா! அடா ரகுகுல நந்தனே! என்று, கூவி யழுத வாறே யனறிப் புலம்பலைவிட டொழிந்திலர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபதாவது சருக்கம்

முற்றிற்று

---

இந்த சருக்கத்தில் பிராட்டி கைகேயியை இகழ்ந்த வாக்கியத்தைச் சொல்லத் தொடங்கி, பின்பு அதனைக் கூறுதொழிந்ததாகவிருக்கின்றது, முன்பெங்கும் பிராட்டி யார் கைகேயியை இகழ்ந்ததாகக் கவி யருளிச்செய்திலர், ஆயினும், முன்பு இளைய பெருமாள் மஹாராஜனை இகழ்ந்ததாகக் கூறுவிடினும, ஸுமந்திரர் வாக்கியத்தால் அவ்வண்ணம் முன் இகழ்ந்திருப்பதாக ஒப்புக்கொள்ளவேண்டும, அவ்வாறே பிராட்டி யும், முன்பு கைகேயியை இகழ்ந் திருப்பரென வுடன்படுக. இவ்வண்ணம முன்பு கூறாது, பின்பு கூறலாகுமோ வெனில், இஃது நாடகச்சுவையை யனுஸரித் திருக்கின்ற மையால, நாடகலக்ஷணப்படி இவ்வண்ணம மொழிவது மொகருமெனக் காண்க. இவ்வாறே பலவிடங்களிலும வரும, பிராட்டியார் வாக்கியத்தை இங்ஙனங் கூறு தொழிந்தமையால, அஃது இஃதென றெவ்வண்ண மறியலாகுமெனின் கேட்க; யுத்த காண்டத்தில (விஜகாஹேதர கைகேயீம்கரோசந்தீ குரரீயதா) என்று தொடங்கி, (ஸகாமா பவகைகேயி ஹதோயங் குலநந்தநঃ) அடி கைகேயி! ரகுகுல நந்தனரான இந்த ஸ்ரீராமர் கொலைசெய்யப் பட்டன ராதலின், உன கோரிக்கை யீடேறிற்று; இனி நீ சந்தோஷ மடைவாய என்று, கைகேயியைப் பிராட்டியார் இகழ்ந்ததாக வருளிச் செய்கின்றமையால, அவ்வாக்கியத்தினாலே இங்கும கைகேயியைப் பிராட்டி யார் இகழ்ந்தார் எனறுணர்க. பரதனுக்கு ராஜ்ஜிய மளிக்கும்படி வரங்கேட்டதினாலே கைகேயிக்குத் தனபயன கிடைத்திருக்கப் பெருமாளைக் காடேற வெழுந்தருளும்படி வரங் கேட்டதற்குக் கருத்தென்னெனில், ஸ்ரீராமர் வனம்புகின், வைதேயும் அவர் பிரிவை யாற்றாமல் உடன்புகுவள்; இவள் மிகவும் கட்டழகியாதலின், யாவனேனுமோ ரரக்கனி வளைப்பற்றித் தோடிவிடுவன; மனைவியை யிழந்தபின், ஸ்ரீராமன இறப்பனல்ல தய்யான்; அவனிறந்தபின, பரதனுக்கு ராஜ்ஜியம் நிலைத்துவிடும்; ஸ்ரீராமன பிழைத் திருப்பனேல், எக்காலத்திலாயினும், ராஜ்ஜியத்திற்குத் தீங்கு நேருமல்லது, நிலை பெறாது, யாவரும் ஸ்ரீராமனுடைய திருக்கல்யாண குணத்தி லீடுபட்டு, அவனிடத்தி லன்புகூர்ந்திருக்கின்றமையால், அவனிறந்தாலல்லது சனங்கள் பரதனிடத்தில் அன்புள ராகார்; ஆதலின், ஸ்ரீராமர் அழிந் திறக்கும்படியாகக் காட்டி லோட்டிவிடக்கடவ னென்பதேயாகும்; இக்கருத்தினையே பெருமாள் ஆரணியகாண்டத்தில் [illegible]

# அறுபத்தொன்றாவது சருக்கம்.

## கௌஸல்யாதேவி சக்கரவர்த்தியை யிகழ்ந்து புலம்பியது.

யாவர்க்கு *மினியரான பெருமாள் காட்டேற வெழுந்தருளினானைக் கேட்டுக் கோஸலையார் மிகவும் வருந்தி யழுது பர்த்தாவை நோக்கி, என் பிராணநாதரே! தேவா. அருளுடையவனென்றும், பச்சாத்தாப முடையவனென்றும், கொடையாளனென்றும், பிரிய வாக்கியங்களையே அருளிச்செய்பவனென்றும், ரகுகுல துரந்தரனென்றும், மூவுலகிலும் தேவர்க்குப் புகழ் மிக வளர்ந்து பரவி யிருக்கின்றது, இதுவன்றியில், சுகமாக வளர்க்கப்பட்ட ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளிருவரும், ஸீதையுடன் இப்போது வனத்திடையில் துன்பங்களை எவ்வண்ணம் பொறுத் துய்வார்கள் முதிர்ந்த யௌவன முடையவளும், மிகவும் ஸுகுமாரமான திருமேனி யுடையவளும், எப

கைகேயீ ஸுகிதாஸா பவிஷ்யதி, யாந்துஷ்யதி ராஜ்யேந புத்ராஸ்ததே தீர்க்கதர்சிநீ) என்றும், (யதபிபரேத மஸமாஸு பரியமவாப ருதஞ்சயத, ஸீரகேயயாஸத தஸுஸம்வருத்தம க்ஷிப்ரமத்யைவ லக்ஷ்மண) என்றும், அருளிச்செய்கின்றார் மூன சருக்கத்தின் கடையிலும், பிராட்டியார் ஸுமந்திரர் திரும்புங்காலையில், அழுதும், மௌனமடைந்தும், முகவொளி குன்றியும், பெருமாளையும், ஸுமந்திரனையும் கண்ணுற்றும், கண்ணீர் பெருக்கியும், நின்றனளென்ன றருளிச்செய்திருக்கின்றமையால், பிராட்டியார் பெருமாளுக்குக் கூறி, மெல்லெனக் கைகேயியை இகழ்ந்திருக்கின்றாரென்று தோற்றுகின்றது, அங்கே பிராட்டியார் பெருமாளுக்குக் கேளாதபடி இகழ்ந்தமையால், கவியு மங்கு அருளிச்செய்யா தொழிந்தனர் அதைப்பற்றியே ஸுரதி, யாதும் உரைசெய்திலள் என்றனர் கோஸலையார் மீது தன்புறவென்பதை இங்கும் மறைத்தனர், உயுத்தகாண்டத்தில் பிராட்டியார் பெருமாளைவிட்டுத் தனியே யிருந்தமையால், அங்கு வெளிப்பட வருளினரென்றுணர்க

பிராட்டியார் இவ்வண்ணங் கைகேயியை யிகழ்ந்து, வருந்தலாகுமோ வெனில், லோக பாவனையென்று முன்னமே சொல்லினோமிறே? அன்றியின், கைகேயி! கொடிய மாயையே, (அயம்) இந்த (சேதநஜனஃ) நல்வழிபற்றிக் குல முக்குமாறு நற்பிறவி பூண்ட சேதனன், (ஹதஃ) உன்னால் மீளவும், இக்குழியி லிழிந்து, மாயோனை மறந்து, கெட்டலையுமாறு செய்யப் பட்டனன், ஆதலின், கோரிக்கை வீடேறிற்றென்று நீ மகிழ்வுறுக என்று சேதனர்கள் நற்கதிபெறாமல், மாயைக்குள்ளகப்பட்டுக் கெட்டலைவதைக் கண்டு, லோகமாதா வாதலின், மிக்க சோகங்கொண்டு, கண்ணீர்பெருக்கி, இவர்களை யொரு விரகால மீட்டுக்கொண்டு நற்கதி தந்தருள வேண்டுமென்று (யதபபரூபஙகாஃ பரமாணம ஸத்திரசாரசரார ரதம் பேமூராரோஃ) என்கிறபடி பெருமாளைக்கடாக்ஷித்து, மாயையையு மிகழ்ந்து, உப தேசஞ் செய்யும் வித்தை இளையபெருமாளே அருளிச் செய்து விட்டமையால், யாவர்யும் பேரின்ப முறுவிக்குங்கால மெப்பொழுதோவென்று சிந்தைகொண்டு நினைந்து நின்றனள். என்று மூன் சருக்கத்தின் கடையிலுள்ள பிராட்டியைப் பற்றி யுள்ள சுலோகங்களுக்கு உண்மையான பொருளெனத் தேர்க.

"பொழுதும் துன்பமென்பதை யறியாதவளாதலின், ஸுகமுறுவிப்பதற்கே தகுதியுள்ளவளும், ஜனகமஹாராஜன் திருமகளுமாகிய ஸீதை வனத்தில் வெம்மை தணமைகளை எவ்வண்ணம் பொறுத்து துய்வள், அவள் இதுவரையில் அறுசுவையுள்ள நல்லுணவுகளை யுண்டு, இப்பொழுது காய் கிழங்குகளை எவ்வண்ணம் புசிப்பள், அவள் இதுவரையில் மிகவும் செவிக்கினிய கீத வாத்திய கோஷங்களைக் கேட்டின்புற்றிப்பொழுது மிக்க கொடிய புலி கரடி யானை சிங்கம் முதலிய விலங்குகளின் ஒலிகளை எவ்வண்ணம் கேட்பள், மஹேந்திரன் த்வஜம்போன்றவனும், நீண்டுருண்ட திருத்தோள்களை யுடையவனும், சிறந்த பல முடையவனுமாகிய என் திருமகன் இப்பொழுது தன் திருக்கையையே தலையணையாக வைத்துக்கொண்டு எங்கே துயில்கொண் டிருக்கின்றானோ? தாமரை யிலைபோன்ற வண்ண முடையதும், மிக வழகிய அளகங்களை யுடையதும், தாமரைபோல மணம் வீசுகின்ற உயிர்ப்பினை யுடையதும், தாமரைபோன்ற திருக்கண்களை யுடையதுமாகிய என் திருமகன் திருமுகமண்டலத்தை நான் கண்டு களிப்பதெக்காலம்? என்னுடைய இந்த இதயம் வச்சிரம்போன்ற வலிமையுடையது போலும், என் திருமகனைக் காணாமலும், ஆயிரம் சிதறுண்டுபட் டழியாம லிருக்கின்றதன்றோ? என்று புலம்பி, சக்கரவர்த்தியையும் நோக்கி, "என் பிராணநாயகரே! இன்புறுவிக்கத்தக்க என் மைந்தர்கள் தேவரால் காட்டி லோட்டப்பட்டவர்களாகி, ஓடி யலைந்து திரிகின்றனர்களே? இவ்வண்ணம் செய்ததென்பது மிக்க கருணையற்ற செயலன்றோ? என் திருமகன் பதினான்காண்டு வனத்தி லுறைந்து, பதினைந்தாவதாண்டில் இங்கெழுந்தருளுவானாகிலும், பரதனா லனுபவிக்கப்பட்ட ராஜ்ஜியத்தையும், பொருளையும், விட்டு விடுவானே யல்லது, அங்கீகரிக்கான், உலகத்தில் ஒருவர் ஞானம் குலம் வயது நல்லொழுக்கம் இவைகளிற் சிறந்த வேதியர்களைச் சிராத்தத்தில் நிமந்திரணஞ் செய்து, பின்பு தம் முறவினர்களைக் கண்டு, அவர்களிடத்தில் பக்ஷத்தா லவர்களைத் துறந்து, அவர்களை முன்பு புசிப்பித்து, சிராத்தத்தை முடித்துப் பின் பிவர்களை இஷ்டபங்தியில் புசிக்கும்படி வேண்டி, அமிர்தம்போன்ற நல்லுணவுகளை யிடினும், இஃது தமக் கிழிவென வுணர்ந்த இப் பெருந்தன்மையினர்கள் அவருடன் கலந்த வுணவுகளை யுண்பார்களோ? மற்றொன்றினால் மேயப்பட்டு நுனிகளின்றிக் கட்டையாயுள்ள புற்களை நல்ல ரிஷபங்கள் மேயுமோ? இவ்வண்ணந் தனக் கிளையோனால் புசிக்கப்பட்ட இந்த ராஜ்ஜியத்தை மூத்தோனும் திறமையுள்ளோனுமாகிய என் திருமகன் ஏனிகழ்ந்து துறவான்; நீய நரிகளால் கொணர்ந் துண்ணப்பட்ட மாம்ஸங்களைப் புலி பசியுறினும் புசிக்க விரும்புறுமோ! அவ்வண்ணமே என் திருமகனும் மற்றொருவனால் புசிக்கப்பட்ட ராஜ்ஜியத்தைக் காமுறுவனோ? நாய் முதலியவற்றால் தாக்கப்பட்ட ஹவிஸ்ஸு நெய் புரோடாசம் (மாவினால் செய்யப்பட்டது) யூபஸ்தம்பம் முதலிய வைகளைப் பெரியோர்கள் யாகத்தில் மீளவும் உபயோகப் படுத்து

வாரகளோ? ஒருவனால் சுவைபெறவுணணப்பட்ட ஸூனாயை மற்றொரு, சூரன் உண்பானோ? ஸோமயாகத்தில் தாழ்ந்தோனால் முன் புன்லைப்பட்ட ஸோமரஸத்தை யுயர்ந்தோர் பின் புணபாரகளோ? அவ்வண்ணமே என் திருமகன் இவவவமதிபபைப் பொறுத்து, பரதனால புசிக்கப்பட்ட இந்த ராஜ்ஜியத்தைக் காமுறுவானோ? தன் வாலை யொருவன்பற்றி யிழுக்கின், வீரமுள்ள வேஙகைபபுலி பொறுத்திருக்குமோ? அவவணணமே என திருமகனும, இவவிகழவைப பொறுமல போர்செயய முயலுவனாகில், பதினன் குலகிலுமுளள தேவாஸுரர்கள முதலிய வெல்லா வுயிர்களு மொன்று சேர்ந்தும, அவனை வென்று வெற்றிகொள்ளுந திறமையின ராவாரகளோ? ஆகிலும், நாமே அதாமஞ செய்து தருமத்தை யழித்து உலகினைக கெடுப்பது தகுதியற்றதென வெண்ணி யனறோ? என திருமகன இவவவமதிபபையும பொறுத்துக காட்டேற வெழுந்தருளினன், இல்லாவிடின், சிறந்த வீரமும் தீரமும் வலிமையும கொணட என் திருமகன் தயகப் பூணணிநத சிறநத பாணஙகளால, ஊழிகாலத்திற போலவே எல்லாப பூதங்களையும், ஏழுகடல்களையும், எரித தழித்து விடானோ? சிஙகமபோனற பலமுடையவனும், காளைபோனற நோக குடையவனும், அததன்மையனுமாகிய என் திருமகன மீன் தன குட்டியைத் தானே கொல்வதுபோலத் தநதையினாலேயே யழிககப பட்டனனே? இவவண்ணம தருமவழி தவறாத என் திருமகனும, தேவரால காட்டிலோட்டப் பட்டனனென்றால, தேவரிடத்திலும, அரசநீதி யுளதோ?—

గతిరేకా పతిర్నార్యా ద్వితీయా గతిరాత్మజః
తృతీయా జ్ఞాతయో రాజన్ చతుర్థీ నేహ విద్యతే॥

கதிரேகா பதிர்நார்யாத் விதீயா கதிராத்மஜ:
த்ருதீயா ஜ்ஞாதயோ ராஜந சதுர்த்தீ நேஹ வித்யதே.

பெணகளுக்குப் பதியே முதலாவது கதி? இரணடாவது பிள்ளை? மூன்றாவது தாய தநதைகள? நான்காவது இஙகிலலை? (பிதாரக்ஷதி கௌமாரே பர்த்தாரக்ஷதி யௌவநே, வார்த்தகே த நயோரக்ஷந் நஸ்த்ரீஸ்வாதந்த்ரயமாஹதி) என்று வசன மிருக்கின்றதே, தேவா சக்களத்திககு ஆளாகி, என்னைப் பாது காவாமையால, முதலாவது கதியுமிலலை; என திருமகன நெடுந்தூர மெழுந்தருளி விட்டமையால், இரணடாவது கதியுமில்லை; தாய தநதையாகளும அருகிலின்மையால, மூன்றாவது கதியுமில்லை; தேவரிங கிருககினறமையால, தேவரை விட்டு வநம்புகவும் விருப்புறறிலேன; ஆதலின், யான் ஒருகதியு மின்றிப பலவகையாலும், தீவினையினளாகி யழிநதேன, தேவராலேயே நாட்டுடன் கூடிய இவ்விராஜ்ஜியமும் அழிக்கபபட்டது; மந்திரிகளுடன தேவருமழிநதீர்; என் திருமகனுடன யானும அழிநதேன், இந்நகரத்தோர்களு மழிந்தனர்கள்.

தேவருடைய பிள்ளை மனையா ளிருவருமே மகிழ்ந்தனர்கள். என்றிவ்வண் ணம் துன்ப மடங்காமல் புலம்பி யிகழுந் தழுதனர். சக்கரவர்த்தியும் மிகக் கொடிய இவ்வன்மொழிகளைக் கேட்டு மிகத் துன்புற்று, ஆராயாது தாம் செய்த தீச்செயலையும் நினைந்து சோக மதிகரித்து மயலகொண்டு திகைத்து மயங்கினர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தொன்றாவது சருக்கம்
முற்றிற்று.

## அறுபத்திரண்டாவது சருக்கம்.

*கோஸலையார் தாமுரைத்த வன்மொழியைப் பொறுத்தருளும்படி சக்கரவர்த்தியை வேண்டிக் கொண்டது.*

இவ்விதமாக சினமுற்று சோகமுங்கொண்டு கோஸலையாரால் உரைக் கப்பட்ட வன்மொழிகளைச் சக்கரவர்த்தியார் செவியுற்றுச் சிந்தைகொண்டு மூர்ச்சையடைந்து, நெடுநேரஞ் சென்று தெளிந் தெழுந்து, வெம்மை யாகவும், நெடுமையாகவும் உயிர்த்துக் கோஸலையாரை யருகிற் கண்டு, மீளவுஞ் சிந்தைகொண்டு, முன்பு தாம் செய்த தீச்செயலினா லுற்ற சாபத் தையும் நினைந்து, அத்துன்பத்தினாலும், ராமசோகத்தினாலும், மிகத் தாப முற்று, எரிக்கப்பட்டவராகி, நடுக்குற்று, நல்வார்த்தை சொல்லுதன் பொருட்டுக் கோஸலையாரை நோக்கிக் கைகுவித்துத் தலை குனிந்து, அடி என் பிராணநாயகி! யானுன்னைக் கைகுவித்துப் பணிந்து வேண்டு கின்றேன்; நீ கைகேயிபோலன்றிக்கே பிறரிடத்திலும் அன்பு கூர்ந்தவளும், கொடுமையற்றவளு மாகின்றனை யன்றோ?—

భర్తా తు ఖలు నారీణాం గుణవాన్నిర్గుణోఽపి వా
ధర్మం విమృశమానానాం ప్రత్యక్షం దేవి దైవతం
సా త్వం ధర్మపరా నిత్యం దృష్టలోకపరావరా
నార్హసే విప్రియం వక్తుం దుఃఖితాపి సుదుఃఖితం ॥

*பர்த்தா துகலு நாரீணாம் குணவாந்நிர்குணோபிவா*
*தர்மம்விம்ருசமாநாநாம் ப்ரத்யக்ஷந்தேவிதைவதம்*
*ஸாத்வந்தர்மபராநித்யம் த்ருஷ்டலோகபராவரா*
*நார்ஹஸேவிப்ரியம்வக்தும் துக்கிதாபிஸுதுக்கிதம்.*

தரும முணர்ந்த வனிதையர்களுக்குப் பர்த்தா நற்குண முடையவ னுயினும், குணமற்றவனுயினும், அவனே கட்புலனுகிய தெய்வ மன்றோ ?. ஆதலின், தருமமுட்பங்களை நன்கறிந் தொழுகிய நீயும் துன்புற்றவ ளாயி னும், மிகத் துன்பக்கடலி லழுந்தி வருந்திய என்னை நோக்கி இவ்வண்ணம் பிரியமற்ற வன்மொழி மொழிவது தகுமோ ? இவ்வண்ணம் வன்மொழியா லென்னை வருத்தற்க ; என்று வேண்டி யுரைசெய்தனர். இவ்வண்ணந் தீனமாகச் சக்கரவர்த்தி யுரைசெய்த நன்மொழியைக் கேட்டுக் கோஸலை யாரும் அநுதாபங்கொண்டு, தூம்பினின்றும் மழைநீர் தாரை தாரையாகப் பெருகுவதுபோலச் சோகநீரைப் பெருக்கி யழுது கொண்டே தம் பர்த் தாவை நோக்கிச் சிரத்தில் கரதலங்களைத் தாமரை மொக்குப்போல முகிழ்த் துப் பணிந்து, பர்த்தாவி னிடத்தில் இவ்வாறு அபசாரப் பட்டேனே யென்னும் மனக் கவலையினுல் பதைத்து நடுங்கி வாய் குழறுழுத்து, என் பிராணநாதரே ! தேவா இப்பிழையைப் பொறுத் தருளக் கடவீர். தரையில் வீழ்ந்து தண்டம் ஸமர்ப்பித்து வேண்டுகின்றேன், யான் தேவரால் வேண்டப் பட்டவளாகிக் கெட்டேன், மீளவும் வேண்டி என்னைப் பாவியாக் கற்க ;—

నైషాహిసాస్త్రీభవతి శ్లాఘునీయేనధీమతా
ఉభయోర్లోకయోర్వీర పత్యాయాసంప్రసాద్యతే।

நைஷாஹிஸாஸ்திரீபவதி சலாகநீயேநதீமதா
உபயோர்லோகயோர்வீர பத்யாயாஸம்பரஸாதயதே

யாவளொருத்தி மிகப் புகழத்தக்க சிறந்த புத்தியும், வீரமும், நல் லொழுக்கமு முடைய பர்த்தாவைத் தான் நலவார்த்தை சொல்லி வேண்டு வதை விட்டு, அவனுல் வேண்டி நன்மொழி கூறப்படு கின்றனளோ ? அவள் இம்மை மறுமை யிரண்டிலும், இன்பமமுறு அழிவா ளன்றோ ? இவ்வகைப் பட்ட தருமங்களையும் அறிவேன் ; தேவா ஸத்தியவாதி யென்பதையும் அறிவேன் ; ஆகிலும், நான் புத்திரசோகம் பொறுமல், மொழிதற் கரிய மொழிகளை மொழிந்தேன் ;—

శోకోనాశయతేధైర్యం శోకోనాశయతేశ్రుతం
శోకోనాశయతేసర్వం నాస్తిశోకసమోరిపుః॥

சோகோநாசயதேதைரியம் சோகோநாசயதேசருதம்
சோகோநாசயதேஸர்வம் நாஸ்திசோகஸமோரிபுஃ.

சோகமே தைரியத்தையும் அழிக்கின்றது ; சோகமே பல சாஸ்திரங் களையுங் கற்றுத் தேர்ந்த நல்லுணர்வினையும் அழிக்கின்றது ; சோகமே

மற்றுமுள்ளன வெல்லாவற்றையும் அழிக்கின்றது; ஆதலின், உயிர்களுக்குச் சோகத்திற்கு நிகரான பகையே யில்லை; சத்துரு சினத்தோடு நோக்கி யடித்த காயத்தைப் பொறுத்தாலும் பொறுக்கலாகும்; ஒருவர்க்கு நேருஞ் சோகம் மிகவும் அற்பமாயினும், அதனைப் பொறுப்பதுவும் அரிது தானே? என திருமகன் வனவாஸஞ் சென்று, இன்றைத் தினத்திற்கு ஐந்து நாளாயினும், மிகச் சோகங்கொண்ட வெனக்கு ஐந்து வருஷங்களபோலாயின; அல்லும் பகலும் அவனையே நினைந்துகொண் டிருக்கின்ற வெனக்குச் சோகம் நதிகளின் பிரவாஹ வேகத்தினால் கடல்நீர் மேலெழுந்து பெருகுவதுபோலப் பெருகுகின்றது; என்று பலவிதமாக வேண்டித் தம் பிழையைப் பொறுப்பித்துக் கப்பித்தனர். அப்பொழுது கதிரவனும் வெப்பமற்ற கதிருடையவனாகி மறைந்தனன். சந்தியும் நீங்கி இரவும் தோன்றிற்று; இவ்வாறு கோஸலையார் வாக்கியத்தினால் தேற்றப்பட்ட சக்ரவர்த்தியும் மிகச் சோகத்தினால் வருந்தப் பட்டவராகிக் கண் துயின்றனர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

---

இந்தச்சருக்கத்தில் (வனவாஸாய ராமஸ்ய பஞ்சராத்ரோத்ய கண்யதே), என்று சக்ரவர்த்தித் திருமகன் வனத்திற் கெழுந்தருளி, ஐந்துநாளே யானதா யிருக்கின்றது, ஐம்பத்தேழாவது சருக்கத்தில் (பரத்வாஜாபிகமனம் ப்ரயாகே ச ஸஹாஸனம், ஆகிரோ கமனம் தேஷாம் தத்ர ஸதைருபலக்ஷிதம்) என்றும், (தத ஸாயாஹ்ந ஸமயே த்ருதீயேஹநி ஸாரதி:, அயோத்யாம் ஸமநுப்ராப்ய நிராநந்தாம் ததர்ச ஹ) என்றும், ஸுமந்திரர் பெருமாள் திருச்சித்திர கூடம் வரையில் எழுந்தருளியதை யறிந்து, பின்பு புறப்பட்டு மூன்றாவது தினம் திருவயோத்தி சேர்ந்ததா யிருக்கின்றது; எவ்வண்ண மொக்கு மெனில், பெருமாள் கங்காநதியைத் தாண்டி எழுந்தருளின தினந்தான வனவாஸத்திற்கு முதலென்றும், முதல் ராத்திரி பெருமாள் கங்கையின் தென்கரையில் மரத்தடியி லெழுந்தருளி யிருந்தது; இரண்டாவது பிரயாகத்தில் பரத்துவாஜாசிரமத்தில், மூன்றாவது யமுனாநதி தீரத்தில், நான்காவது சித்திரகூட மெழுந்தருளியது; நான்காவது தினம் உதயத்திலேயே பெருமாள் சித்திரகூட மெழுந்தருளுவதையறிந்து, புறப்பட்டுச் சாயங்காலம் திருவயோத்திக் கெழுந்தருளியது; இந்தச் சருக்கத்தில் கோஸலையார் வாக்கியம் ஐந்தாவது தினமாதலின், விரோதமில்லை; (த்ருதீயேஹநி ஸாரதி:) என்பதற்குச் சுமந்திரர் புறப்பட்ட மூன்றாவது தினம் மாலையில் திருவயோத்தி சேர்ந்தாரென்று பொருளன்று, புறப்பட்ட தினம் பகல் மூன்றாவது யாமத்தில் திருவயோத்தி சேர்ந்தாரென்று பொருள்; என்று சிலர் கூறுகின்றனர்கள். சிலர் பெருமாள் திருவயோத்தியை விட்டுப் புறப்பட்ட தினம் முதலாகவே வனவாஸத்தின் கணக்கென்றும், ஸுமந்திரர் வந்தபின்பே கோஸலையார் ஐந்து தினமென்று சொல்லியதாக ஏற்படுகின்றமையால், அக்கணக்கின்படி நான்கு தினங்களாகின்றனவே யன்றி, ஐந்துதினமாகவில்லை யென்றும் மறுத்துரைத்து, பெருமான் திருவயோத்தியை விட்டுப் புறப்பட்டு முதல்ராத்திரி தமஸாநதியின் கரையிலும், இரண்டாவது ராத்திரி கங்கைக் கரையில் குஹப்பெருமாளருகிலும், மூன்று

வது ராத்திரி தென்கரையின் மரத்தடியிலும், நான்காவது ராத்திரி பரத்துவாஜாசிர மத்திலும், ஐந்தாவது ராத்திரி யமுனைக் கரையிலும், ஆறாவது ராத்திரி திருச்சித்திர கூடத்திலும் எழுந்தருளி யிருந்தார். நான்காவது தினம் பரத்துவாஜாசிரமத்திலே பெருமாள் எழுந்தருளியபொழுதே சித்திரகூட மெழுந்தருளப் போகின்றாரென்பதை யறிந்து, ஐந்தாவது தினங் காலையில் பெருமாள் அப்படியே புறப்பட்டதையும் அறிந்து, குஹன் தூதர்கள் வந்துரைத்தனர்கள். ஸுமந்திரர் மூன்று ராத்திரி யங்கிருந்து மறுநாளுதயத்திற் புறப்பட்டு ஸாயங்காலத்தில் திருவயோத்தி சேர்ந்தனர். இது ஆறாவது தினமாதலின், கோஸலையார் ஐந்து ராத்திரிகள் ஆயினவென் றுரைப்பதற்கு விரோத மில்லை யென்று பொருளுரைக்கின்றனர்கள். (தத்ஸாயாஹ்நஸமயே த்ருதீயேஹநிஸாரதி:) என்பதில், (அஹநித்ருதீயே) என்பதற்குப் பகல் மூன்றாவது யாமம் என்று பொருள் கூறின் (ஸாயாஹ்நஸமயே) என்னும் பதம் பயனற்றதாகின்றது, ஆதலின், அதற்குப் புறப்பட்ட மூன்றாவது தினமென்றே பொருளுரைக்க வேண்டும், சோகத்தால் குதிரைகளை இவர் தூண்டாமையால், குதிரைகளும் சோகங் கொண்டு மெல்ல நடந்தமையால், வர மூன்று நாளாகுவதும் பொருந்தும், அன்றியிலே (திவஸாந்) என்னும், பதமாத்திர மிருக்குமாயின், கபிஞ்சலாதி கரணத்தால் மூன்றுதினமேயென்று பொருள் கூறலாகும், (பஹூந்) என்றிருப்பதால் அந்த நியாய மிங்கு பொருந்தாது, ஆதலின், ஸாரதி! பெருமாள் திருச்சித்திர கூடத்தி லெழுந்தருளியதையுந் தெரிந்துகொண்டே நாலாந் தினம் அங்கிருந்து புறப்பட்டதாகவே பொருள் கூறவேண்டும், ஆதலின், பெருமாள் ஸுமந்திரரை விட்டுப் பிரிந்து கங்கையைத் தாண்டி முதல் ராத்திரி மரத்தடியில், இரண்டாவது ராத்திரி பிரயாகையில், மூன்றாவது ராத்திரி யமுனைக் கரையில், நான்காவது ராத்திரி சித்திர கூடத்தி லெழுந்தருளி யிருந்தனர். ஐந்தாவது தினம் தூதர்கள் வந்து குஹப்பெருமாளுக்கு அந்தச் செய்தியை யுரைத்தது, ஆக ஐந்து தினம் வரையில், ஸுமந்திரர் அங்கிருந்து, ஆறாவது தினம் புறப்பட்டு அதற்கு மூன்றாவதாகிய எட்டாவது தினம் மாலையில் திருவயோத்தி சேர்ந்தது; அன்றைத்தினமே கோஸலையார் ஸ்ரீராமபிரானை வனவாஸம் ஐந்துநாளாயிற்றென்றுரைத்தது, அஃது பெருமாள் திருச்சித்திரகூடஞ் சேர்ந்த தினம் முதல் கணக்கிட்டெண்ணப் பட்டனவே யன்றிப் புறப்பட்ட தினம் முதலன்று, ஆகப் பெருமாள் திருவயோத்தியை விட்டுப் புறப்பட்டுப் பத்துநாளாயிற்றென்றுஞ் சிலர் மொழிகின்றனர்கள். இதிற்கூறிய இரண்டாவதுபக்ஷமே மேலாகும்.

## அறுபத்துமூன்றாவது சருக்கம்

### சக்கரவர்த்தி தாம் முன்பொரு ரிஷிபுத்திரனைக் கொலை செய்ததைக் கோஸலையாருக் குரைத்தது.

அநந்தரந் துயில்கொண்ட சக்கரவர்த்தியார் துயிலுணர்ந்து, சோகத்தினால் வருந்திச் சிந்தைகொண்டு, பெருமா ளிளையபெருமா ளுடனும், பிராட்டியாருடனும், வநமெழுந் தருளியதையும், தமக்கு முன்புற்ற சாபத்தையும் நினைந்து, மயல்கொண்டு, கோஸலையாரை நோக்கி, அடி என் பிராண

நாயகி! என் திருமகன் வனஞ்சேர்ந் தின்றைத் தினத்துடன் ஆறுநாளாயி ற்று; இப்பொழுது நரோத்திரி யாயிற்று, இப்பொழுது முன செய்த தீவினை யொன்று நினைவில் தோன்றிற்று;—

యదాచరతికల్యాణి శుభంవాయదివాశుభం
తదేవలభతేభద్రే కర్తాకర్మజమాత్మనః
గురులాఘవమర్థానా మారంభేకర్మణాంఫలం
దోషంవాయోనజానాతి సబాలఇతిహోచ్యతే॥

*யதாசரதிகலயாணி சுபமவாயதிவாசுபம*
*ததேவலபதேபதரோ காதாகாமஜமாதமந:*
*குருலாகவமாததாநா மாரமபேகாமணமபலம*
*தோஷமவாயோநஜாநாதி ஸபால இதிஹோசயதே.*

எளியேனமீ தன்புள்ள நாயகி! யாவனொருவன நல்வினையையோ? தீவினையையோ? எதனைச் செய்கின்றனனோ? அவ்வவவினையின பலனையே யவனடைவ னல்லது, வேறு பலனை யடையா வனன்றே? யாவனொருவன, தான் செய்ய முயன்றவினைபபயன்களின ஏற்றத்தையும, தாழ்மையையும், அவ்வினையின எளிமையையும், வலிமையையும், அதனால் விளையும் நன்மையையும், தீமையையும், முதலிலே நன்காராயந் துணராமல் செய்கின்றனனோ? அவன் மூடனெனவே கூறப்படுகின்றன னலலனோ? யாவனாயினும் மாஞ்சோலையை யழித்து விட்டு, பலாச மரங்களுக்கு நீர பாய்ச்சி வளாப்பனோ? முதலில் பலாசங்களின் பூவினைக்கண்டு இதற்குத்தக்க நல்ல கனியும் பழுக்குமென் றெண்ணி யொருவன வளாப்பனே யாயினும், அவன் கடையில் கனியைக் காணாமல் துன்புறுவா னன்றோ? அவன் போலவே யாவனொருவன அதனால விளையும பயனை யறியாமல், ஒருவினையைச் செய்வானோ? அவனும் கடையில துன்பத்தையே யடைவான, யானும் என் திருமகனை யாலோசனை செய்யாமல் காட்டிற்ச செல்லவிட்டுப் பின்பு சோகங்கொண்டு வருந்துகின்றேனாதலின், மாமரத்தை வெட்டிப் பலாசினையே வளர்த்தேன; யான இளமையில் பறபல அஸ்திர ஸஸ்திரங்களையுங்கற்று, இவ்விளங்குமாரன் ஒருருவைக்கண்ணுறுவிடினும, அங்குத் தோன்றியசப்தத்தைச்செவியுறறே அவ்வுருவைக்கொல்லவல்ல சப்தவேதியென்னும் பாணத்தை யுடையவன என்று யாவராலும புகழப்பட்டேனாதலின், செருக்குக்கொண்டு ஒருகொடிய பாவஞ்செய்தேன், பாலவிஷமென் றறியாமல், பாலெனறுண்ணப்படினும், அவ்விஷத்தினாலவன உடனே இறப்பனாதலின, அதுபோல யானும் மோஹங்கொண்டுசெய்த கொடிய வினைப் பயனை (அத்யுத்கடை: புண்யபாபைரி ஹைஹவபலமச்நுதே) என்கிறபடி இம்மையிலேயே யநுபவிக்கின்றேன்; வேறொருவன் பலாசின் பூவினைக

கண்டு, மோசங் கொள்வது போலவே யானும் ஓரொலியைக் கேட்டு மோஹங் கொண்டமையால், காணுவிடினும், தொனிகேட்டடிக்குந் திமை கொண்ட தீவினையின் பயன இங்கு வாயததது ; எளியேன் தேவி ! யான முன்பு பாலகுமாரனுக இளவரசாகி யிருநதேன ; உன்னையும் திருமணஞ் செய்து கொள்ளடிலேன , அப்பொழுது மததுதையும, காமத்தையும், பெருக்கவல்ல மழைகாலமும் நோந்தது , கதிரவனும் கதிர்களினுல் நீர் களை வற்றச்செய்து, மாண்டோர்கள் திரியததகக கொடிய தெனறிசையினே யடைந்தனன். உடனே வெம்மை யெனபது உளளடஙகிறறு , கறுத திரு ண்ட நீருண்ட கொணடலகள விண்டல மெஙகும நிறைநது திகழநதன ; மண்டூகஙகளும், சாதகஙகளும், மயில்களும மகிழ்ந்தன , பறவைகளும், மழையினுல் நனைந்த சிறகுடையனவாகி, மூழகினபோல மிக வருந்தி, காற்று மழைகளினு லசைதது நனைககபபட்ட மரங்களி லடஙகின , பொழிந்தனவும, பொழிகினறனவுமாகியுளள மழைநீரகளினுல நனைக்கப் பட்ட மதயானையும, மலைபோ லசைவறறும, கடலபோலக கறுத்துத் திகழ நது நின்றது ; மலைகளினினறும, சில விடஙகளில் வெண்மையுளளனவும், சில விடங்களில் செம்மையுளளனவும, சில விடஙகளில் கலககற்றனவும சிலவிடஙகளில் துகள படிநது கலககுற்றனவுமாகிய அருவிகள பலவகைப பட்ட பாமபுகளபோலப பெருகின , அததருணத்திலே யான ஆயுதப் பயிற்சி செயய நிசசயஙகொண்டு, வில் கணைகளை எடுததுககொண்டு தோமீ தேறிச் சரயூநதியின் கரையிற சென்று, அஙகுத துறைகளில் நீர குடிகக வரும் மஹிஷஙகளையும், மதயானைகளையும, மற்றுமுள்ள புலி கரடி பனறி முதலிய கொடிய விலஙகுகளையும, அடிததுக கொலல நினைதது, அவ்வண் ணமே யடித்துக்கொண டிருநதேன் , அபபொழுது இரவுமாகி இருள மூடிக் கண்காணும லிருககும் வேளையில், ஒரு ரிஷி குமாரன குடத்தில் நீரை மொளளுகையில், அஃது யானை நீர் குடிககும் தொனிபோ லொலித தது; உடனே யான அஃது யானையெனறே எண்ணிச சரந்தொடுத்து அவவொலியுண்டாகிய இடத்தையும், அதன தூரததையும, ஊஹிதது்க் குறியிட்டு விடுததேன் ; இவவணணம யான் பாணம போட்டவுடன அவ் விடத்தில் ரிஷியின தொனி தோனறிக கேட்கப படடது ; அந்த ரிஷி மார் பில் பாணத்தினு லடிககபபட்டு, ஐயையோ வென்று கூவி நீரிலேயே விழுந் தனன. பினபும் அங்கிருந்து ஆநதோ ? என்போன்ற பிழையற்ற ரிஷிகளின மீதும் கூரிய கணை வந்து வீழவதறகுக் காரணம் யாது ? நான இரவில் நீரகொண்டு போவதன் பொருட்டே இஙகெயதினேனே ! என்னை யடித் தவன யாவன் ? ஏனடித்தனன ? யாரக்கு நான என்ன தீங்கு செயதேன் ? யான் தவம் பூண்டு புலனகளை வென்று காட்டில் காய் கிழங்குகளைப புசித துப் பிழைத்துக்கொண் டிருக்கின்றேனே ? என்னைப் போன்றவாகளையும், கொலை செய்யும்படி விதி யுளதோ ? ஜடைதிரித்து மாவுரியுடுத்துப பிழைக் கின்ற என்னைக் கொல்வதினுல் யார்க் கென்ன பயன் ? யான், அவர்க்கென்ன

பிழை செய்தேன்? பயனு மின்றித் தீமை விளைவிக்கத் தக்க இக்கொலை யினை யார்தான் நலமென வுகப்பார்கள்? குருவின் பத்தினியைப் புணர்ந்த கொடும்பாவியை யாவராகிலு முகப்பரோ? யான் உயிர்மாய்ந் திறக்கின் றேனே யென்று சிறிதுந் துன்புற்றிலேன்; என் தாயினையும், தந்தையினை யும், நினைந்தே மிகத் துன்புறுகின்றேன், என் தாய் தந்தைக ளிருவரும் மிக மூப்பினார்களாகி, என்னால் நெடுநாளாகப் பாதுகாத் தளிக்கப் பட்டனர் களே? இப்பொழுது யானொரு கணையினால் அடிபட்டு இறக்கின்றேனே? யானிறந்த பின்னர், அவர்கள் எவ்வண்ணம் பிழைத்திருப்பார்கள்; மிக மதிகெட்டவனும், பாவியுமாகிய யாவன் இவ்வண்ணம் நாங்கள் மூவரும் இறக்குமாறு செய்தவனோ? என்று கூவிப் புலம்பி யழுதனன். அம்மொழி கேட்டவுடனே யான் பிரஹ்மஹத்தி செய்தேனே யென்று மிகவும் பயமுந் துயரமுங்கொண்டு நடுங்கி வருந்தித் திகைத்து நின்றேன், எனது கையி னின்றும் கணையுடன் கோதண்டமும் நழுவித் தரையில் வீழ்ந்தது; யானும் அந்தச் சோகத்தினால் மதிமயங்கி, மகிழ்வுகுன்றி, ஒளியிழந்து, வருந்தி, அவ்விடத்திற் சென்று, ஸரயூநதியின் கரையில் பாணத்தினா லடிபட்டு வீழ்ந்திருக்கின்ற ஒரு ரிஷி குமாரனை ஜடை யவிழ்ந்து கவிழ்ந்து, நீர் பெரு கிய குடம் தரித்தும், தூளினாலும், இரத்தத்தினாலும் பூசப்பட்டும், மிகப் பீடைகொண்டும் படுத்திருக்கக் கண்டேன், அவனும் என்னைக்கண்டு யான் மிக நடுக்கங்கொண்டு வருந்துவதையு மறிந்து, என்னை நோக்கினாலே எரிப்பவன்போல நோக்கி, ஓய் ராஜனே! இவ்வனத்தில் வாழ்கின்ற என் னால் உனக்கென்ன தீங்கு செய்யப்பட்டது; என் தாய் தந்தையர்கள் கட் புல னழிந்தவர்களும், திறமை யற்றவர்களும், மூப்பினார்களும், மிக நீர் விருப்புற்றவர்களும், என்னை யொருவனையே தஞ்சமாக வுடையவர்களுமாகி யிருக்கின்றனர்கள் அவர்களுக்கு நீர் கொண்டு போவதன் பொருட் டே நானிங் கெய்தினேன்; இங்குனனா லடிக்கப்பட்டமையால், அவ் விருவர்களும் கூட அடிக்கப்பட்டவர்க ளாயினார்களே? யானிறந்த பின்னர் அவர்களை யார் பாதுகாத் தளிப்பார்கள், யானிவ்வண்ணம் சரத்தினா லடி பட்டுப் படுத்திருக்கின்ற என்னை என் தாய் தந்தையர்கள் காணாமல் மிகத் துன்புறுவ ராதலால், சிறந்த தவத்திறகும், பற்பல நூல்களைக் கற்ற தற் கும் பயனிலது போலும், யானிவ்வண்ணம் படுத்திருப்பதை என் பிதா அறிந்தவராயினும், திறமையற்று ஒடுங்கிய அவர் என் செய்வார்? ஒரு கொடியனால் வெட்டப்பட்ட மரத்தை மற்றொரு மரம் கண்ணுற்றினு மென் செய்யும் வேந்தே! நீயே விரைவாகச் சென்று இச்செய்தியை நீயே பணிந் துரைத்து வேண்டுக; அன்றிக் காட்டுத்தீ வனத்தைப்பற்றி எரிப்பது போல உன்னைக் கோபங்கொண் டெரிப்பர்; இங்கெதிரில் ஒரு கொடிவழி யிருக்கின்றதே? அதனைப் பற்றிச் செல்வாயாகில், எம்மாசிரமம்போய்ச் சேர்வாய்; அங்கெய்தி இச்செய்தியை யுரைத்து நல்வார்த்தை சொல்லி வேண்டுக; அன்றியில், உன்னைச் சபித்து விடுவார்; எனக் கிந்தச் சரம்

மார்பில் புதைந்து, நதியின வேகம் மணற் குன்றினில் தாக்கி யதனை யறுத் தழிப்பதுபோல என இதயத்தையும வருத்துகின்றது; ஆதலின், இக்கணையினை மேலெடுத்து என்னை வருத்த மற்றவனாகச் செய்து செல்வாய்; என்று மொழிந்து வருந்தினன். அடி என் பிராணநாயகி! யானம் மொழியைக் கேட்டு மிகத் துயரங்கொண்டு கணையை எடுக்கின் இவன் இறப்பான்; இவ்வண்ணமே செல்லவேணுமாகில், மிகவும் அவஸ்தைப் படுகின்றான்; யாது செய்வோ மென்று யான் மிகவும் சிந்தைகொண்டு முடிவு பெறாமல், மிகச் சோகக் கடலில் மூழ்கித் திகைத்து நின்றேன்; யானிவ்வண்ணஞ் சிந்தை யுற்றதை யம்முனி குமாரனு மறிந்து, மொழிவதற்குந் திறமையின்றி, மிக வருத்தத்துடன் என்னை நோக்கி, மரணாவஸ்தை யடைந்திருந்த போதிலும் தீரங்கொண்டு சக்கரவர்த்தி! நீ என்னைக் கொலைசெய்தேனே யென்று துன்புறற்க; தீரத்தினால் சோகத்தை நீயுள்ளடக்கி மனந் தேறுக; பிரஹ்மஹத்தி செய்துவிட்டேனே யென் றஞ்சற்க; அப்பாவம் உனக்குறாது? யான் அந்தண னல்லேன், ஆதலின், நீ மனக்கவலையுறற்க, யான் சூத்ரஸ்திரீயிடத்தில் வைசியனால் பிறந்தேன், என்றுரைத்து, அத் துயரத்தைப் பொறுக்க வாற்றலற்றுத் தவித்தனன் யானும் அதுகேட்டுக் கிஞ்சித்துச் சோகந்தணிந்து, அந்தப் பாணத்தை யவன் மார்பினின்றும் மேலிழுத் தெடுத்தேன்; உடனே யவன் என்னைக் கண்ணுற நோக்கி யுயிரை விட்டனன். அவ்வண்ணமவன் நீரினாலும், குருதியினாலும் நனைந்தவனும், நெடுநேர மழுது ஒழிந்தவனும, மார்பினில் கூரிய கணையினா லடிக்கப் பட்டவனும, அடிக்கடி நெட்டுயிர்ப்பு விட்டு வருந்துகின்றவனுமாகி யிறந்தனன், அவனைக் கண்ணுற்று, யான் மிகவுந் துன்ப மடைந்தே னென்று மொழிந்து புலம்பினார்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்துமூன்றாவது சருக்கம் முற்றிற்று.

## அறுபத்துநான்காவது சருக்கம்.

சக்கரவர்த்தி கோஸலையாருக்குத் தம் சாபத்தை யுரைத்துச் சோகமடைகாமல் தம் திருமகனையே நினைந்து வானுலக மடைந்தது.

இவ்வண்ணந் தவசியைக் கொலைசெய்தேனே யென்று மிக வருந்திப் புலம்பிய சக்கரவர்த்தியார் கோஸலையாரை நோக்கிக் கேளடி என் பிரிய நாயகி! யானறியாமையால் அக்கொலை செய்து மிக வருந்தி மயங்கி, இனி யாதுசெய்யின் நலமுளதாகுமென்று மிகச்சிந்தைகொண்டு தேர்ந்து, அந்த

ரிஷிகுமாரன் வைத்திருந்த குடத்தை யானெடுத்து நீர் நிறைத்துக் கொண்டு, அவனுரைத்த வழியே சென்று அவ்வாசிரமஞ் சேர்ந்து, அங்கு மிக மூப்பினர்களும், கட்புல னழிந்தவர்களும், திறமை யற்றவர்களும், தஞ்சமற்றவர்களும், சிறகையறுத்த பறவைகளைப்போல வருந்துகின்றவர்களுமாகிய அக்குமாரன் தாய் தந்தையர்களைக் கண்ணுற்று அருகிற் சென்று, அவர்கள் தம் குமாரன் இதுவரையில் ஏன் வந்திலனோ வென்று, அவனையே எதிர் பார்த்துக்கொண்டு, அவன் குணங்களையே புகழ்ந் துரைக்கக் கேட்டு, இவர்கள் எவ்வண்ணம் உய்வார்களோ? எவ்வண்ணம் தினம் புறு வார்களோ? எவ்வண்ண மென்னைச் சபிப்பார்களோ? என்று, இருமடங்கு அச்சமும் சோகமுங் கொண்டு, மெல்ல மெல்ல அவரைக் கிட்டிச் சென்றேன்; அவர்கள் என் காலடி யோசையைக் கேட்டு, அந்த ரிஷி தன் மகன் வருவதாகவே நினைத்து என்னை நோக்கி, அடா என்னருந் புதல்வா! நீ இதுகாறும் ஏன் தாமஸஞ் செய்தனை விரைவாக நீர் கொணர்ந்து தருக; நீ விளையாடிக்கொண்டு இதுவரையில் தாமஸஞ் செய்தனையோ? உன் மாதா இங்கே மிக நீர் விருப்புற்று வருந்து கின்றனளே? விரைவாக வந்து நீர் கொடு? யாங்கள் மூப்பினர்களும், திறமையற்றவர்களுமாதலால், ஒரு கால் உன் தாயாயினும், யானாயினும், வன்மொழி மொழிந்திருக்கினும், மனமுருந்து பொறுத் தகமகிழாய; கதியற்ற வெங்களுக்கு நீயே கதி; கட்புலனற்ற வெமக்கு நீயே கண்ணாகின்றனை, எம்முயிர்கள் உன்மீதே ஆயத்தங்களாயின; இனியன மொழிந்து ஏனெம்மை மகிழ்விக்கின்றிலை; என்று கூவி வேண்டி யழைத்தனர். யான் மிகவும் பயங்கொண்டு பதிலுரைக்க வாயெழாமல், மயக்குற்றவனாயினும், தீரங்கொண்டு, அம்முனியைநோக்கித் தவச் செல்வரோ! அடியேன் தேவர் குமாரனல்லேன், யான் தசரதனென்னும் அரசன்; பகவானே! நல்லோர்பழிக்கத் தீச்செயல்செய்து, சுயங்கிருதா னர்த்தமான இவ்வகைத் துன்பமடைந்தேன்; யான் வில்லெடுத்துக்கொண்டு கொடிய விலங்குகளை யடிப்பதன் பொருட்டுச் சரயூநதியின் கரையில் வந்து பல விலங்குகளையும் அடித்துத் துறைமுகத்தில் தேவர் குமாரன் குடத்தில் நீர் மொள்ளுந் தொனியைக் கேட்டு, யானை நீர் குடிப்பதாக வெண்ணி, ஓர் கணையைத் தொடுத் தெய்தேன்; உடனே யங்கெய்திப் பார்க்கையில், தேவர் குமாரன் அக்கணையினால் மார்பில் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்து கிடந்தனன்; யான் அறியாமல் தொனியைக் கேட்டே யானையென் றெண்ணி யடித்தே னல்லது, மனமறிந் தடித்திலேன்; அநந்தரம் தேவர் குமாரனது வாக்கியத்தினாலே தானே அக்கணையினை மார்பினின்றும் போக்கினேன்; உடனே யவனங்கே பொன்னுலக மடைந்தனன். நீங்க ளிருவரும் கட்புல னழிந்தவர்களே யென்றும், மூப்பினரே யென்றும், அவரினி எவ்வண்ண முய்வார்களோ வென்றும் புலம்பி யிறந்தனன். யானறியாமல் இப்பிழை செய்தமையால், தேவர் பொறுத்தருளக் கடவீர். என்றிவ் வண்ண முரைத்து வேண்டினேன்; அம்முனியும் எனது வாக்கியத்தைக்

கேட்டவுடனே கண்ணீர் விட்டுப் புலம்பிச் சோகத்தை யடக்கத் திறமை யின்றி, என்னை நோக்கி, அடா தசரதா! நீயே நேராகவந்து இச்செய்தியை யுரைத்திராயாகின், உன்தலை யாயிரஞ் சிதறுண்டு வெடித்துவிடும், க்ஷத்திரியன் வானப்பிரஸ்தனைக் கொலைசெய்த தென்பது, அவன் தேவேந்திரனிலும், அவனை யவ்வதிகாரத்தினின்றும் வீழ்வித் தழிக்கும், பிரஹ மாதியாகிய சிறந்த தவமுடைய ரிஷியை யாவனொருவன் கொலைசெய்யக் கருதி, மனமறிந்து, ஆயுதத்தை யெய்கின்றானோ? அவன் சிரம் பல சிதறுண்டு வெடிக்கு மென்பதி லையமில்லை; நீயும் அறியாமல் இக்கொலை செய்ததமையால், பிழைக்கின்றனை; அறிந்து செய்திருப்பாயாகில், இப்பொழுதே இக்ஷ்வாகுவின் குலமே யழிந்துவிடும், நீ யழிவா யென்பதில் கேட்கவேண்டுமோ? என்று, முனிந் துரைத்து, மீளவு மென்னை நோக்கி, அடா வேந்தா! எங்களை என் மகன் எங்கே இறந்திருக்கின்றானோ? அவ்விடத்திற் கழைத்துக் கொண்டுபோய்ச் சோகக் கடவை. அவ்விடத்தில் பாணத்தா லடிபட்டுக் குருதியி னனைந்து அவிழ்ந்து பரவி யசைந்த மாவுரி கூந்தல்களை யுடையவனும், லோகாந்தர மடைந்தவனுமாகிப் புவியில் படுத் திறந்து கிடக்கின்ற எம்மைந்தனைக் கண்ணுற விரும்புகின்றோ மென்று மொழிந்தனர். உடனே யானவர்களை யழைத்துக்கொண்டுபோய், அந்தக் குமாரனருகி லுட்கார வைத்து, அவர்கள் கைகளைப் பிடித்து, அக் குமாரனைத் தடவக் காட்டினேன், உடனே யவ்விருவரும் பிள்ளையைத் தடவிப் பார்த்து, அவனுடலின்மேல் வீழ்ந் தழுது புலம்பினார்கள். அப்பொழுது அவன் தந்தை யப்பிணத்தை நோக்கி, அடா எம்மருமைத் திருக் குமாரா! இப்பொழு தெம்மைக் கண்டு, நீ ஏன் பாதம் பணிந்திலை, ஏன் இன்மொழி மொழிந்திலை, அடா புதல்வா! தரையிற் படுத் துறங்குகின்றனையோ? அன்றி, சினங்கொண்டு பேசுகின்றிலையோ? யானுனக்குப் பிரியமுடையே னல்லனாகிலும், தாயையாயினுங் காண், அடா என்னருமை மைந்தா! ஏனென்னைத் தழுவிக் கொள்ளுகின்றிலை, இனிமையாக மொழியாய்; இவ்வண்ணம் நீ பேசாம லிருப்பையாகில், மற்று யாவன் பற்பல கலைகளைப் பயிலவுஞ் செவியுற்று மகிழ்வோம்? யாவன் காலையி லெழுந்து நீராடி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, புத்திர சோகத்தினால் வருந்துகின்ற எம்மைப் பணிவிடைசெய்து மகிழ்விப்பன்? ஒரு செயலுஞ் செய்யத் திறமையற்ற என் பொருட்டு யாவன் காய் கனி கிழங்கு முதலிய நல்லுணவுகளைக் கொணர்ந் தளித்துப் பசியாற்றுவான்? உன்மீது மிக அன்புடையவளும், கட்புலனற்றவளும், திறமை குன்றியவளு மாகிய இந்த உன் மாதாவை யான் எவ்வண்ணம் பாதுகாத் தளிப்பேன்? அடா என் மகனே! நீ இப்பொழுது என்னை விட்டு யமன் வீடு செல்லற்க நிற்க; நாளைத் தினம் என்னுடனும், தாயுடனுங் கூடியே மகிழ்வுற்றுச் செல்வாய், யாங்க ளிருவரும் காட்டிடையில் திக்கற்றவ ராதலின், நீ சென்றவுடனே உன்னைத் தொடர்ந்து யமலோகம் சேர்வோ மல்லது,

இங்குத் துன்புற றய்யோம்; அங்கு யமதாமராஜனேயுங் கண்டு தர்ம
தேவா! எம்மீ தருள செய்வு ய, இப்புதல்வன் எமமைப பாதுகாத் தளிக்
கக் கடவன். நீயே இவவுலகினுக் கிறைவ ஞகலின, இபபிள்ளேயை எமக்
களிகக, இததன்மையனுகிய எனக கிவ்வொரு வரமளித தருளக; என்று
வேண்டிக் கொள்வேன், என்றிவவண்ணம பலவாருகப புலமபி நின்றவும்,
மகனே நோக்கி, 'அடா என புத்திரா! பாவச் செயலினனுகிய இநத க்ஷத்
திரியனுல் நீ கொலலப பட்டமையால, முற்பிறபபில நீ ஏதேனும் பாவஞ்
செய் திருக்கினும், அபபாவமற நீஙகி தூயமையனுயினே; ஆதலின,
எனது ஸத்தியத்தினுல் போர்முகததில படை யெடுத்துப பின செலலாது
போாசெய திறந்தவாக ளெவவுலகினே யிடைகின்றனாகளோ? அவவுல
கினேயே நீயும அடைந்து மகிழ்ச்சியுறறு நெடுநாள வாழ்வுறக் கடவை;
அனறியில், ஸகரமஹாராஜன், சைபபயன், திலீபன், ஜனமேஜயன, நகூ-
ஷன, துந்துமாரன, இவர்கள் எககதியினே யடைந் தனாகளோ? வேத
மோதி யொழுகிய நலலோாகளும, சிறநத தவஞசெயதோாகளும், எககதி
வாய்ககின்றதோ? பூதானஞ் செயதவாகளும, எபபொழுதும அருமல்
செந்தீவளாப்போாகளும, பரதன்மையனாக கனவிலும காமுருது, தம்மனைவி
யுனை யனபுடன மகிழ்விபபவாகளும, எககதி பெறு கினறனாகளோ?
ஆயிரங் கோதானஞ் செயதோாகளும, தாய தநதைகளுககுப பணிவிடை
செய்து பாதுகாத தளிபபோாகளும, பிரயாகம் முதலிய தீாத்தஙகளிலும,
அககினியிலும, ஒரு விருபபததொ டுயிரை விடுபவாகளுககும், எககதி
விதிககப படுகின்றதோ? அவவக கதிகளே யடையக கடவை. எமீது
குலததில பிறநதோன நரகில் வீழான; யாவனெருவன் உனனேக கொலே
செயதனனே? அவனே நரகில வீழவான்; எனறிவவணணம பலமுறை
யுரைத் தழுது புலமபினா. பின்னா தோந் தெழுநது, பத்தினியுடன அக
குமாரனுக்குச் செய்யத்தகக கடனகளேச் செயது முடிததனா. அப
பொழுது அககுமாரன திவவிய தேஹந தரித்து, தேவேநதிரனுடன
திவ்விய விமானமேறி, வானுலகம செலல முயனறு, இநதிரனுடன் கூடித
தாய் தநதைகளே நோககி, மனநதேறி, எந தந்தையாகளே! தேவாகளுக
கடியேன பணிவிடை செயத நறசெயலினுல், அடியேன சிறந்த நறகதி
யடைநதேன்; தேவர்களும விரைவில எனனருகில வநது சோவீாக
ளென்று உரைசெயது, அவவிமானததுடன் இநதிராதியாகளால் பூஜிக்கப
பட்டவனகி. தேவலோகம்போய்ச சோநதனன். அம்முனியும், பாரியை
யுடன நீர்க கடனகளேயும் முடிதது விட்டு, பயபததியுடன் கைகுவித்து
நிற்கின்ற என்னே நோககி, அடா தசரத ராஜனே! என மகனே ஒரு கணே
யினு லடித்துக கொலேசெய்தனே யாதலின், என்னேக கொலே செய்யக
கடவை. இப்பொழு திறப்பதில் சிறிதுந் துனபுறறிலேன்; என் மகனே
நீ யறியாமல் கொன்றமையால், யானும் உன்னேச் சபிக்கப் போகின்றேன;
'அடா' யானிப்பொழுது புத்திரசோகத்தினுல் மாணமுறும்படி நீ செயத

மையால், நீயும் புத்திர சோகத்தினால் மரணமுறக் கடவை. க்ஷத்திரியனாகிய உன்னால் அறியாமையால், என் குமாரன் கொலைசெய்யப் பட்டமையால், உனக்குப் பிரஹ்மஹத்தி நேரவில்லை; இத் தன்மையதாகிய சேர்க்கம் உனக்கும், கொடையாளனுக்குக் கொடையென்பது விரைவில் நேர்வதுபோல நேரும்; என்றிவ்வண்ணம் தினமாகப் புலம்பிப் பத்தினியுடன் சிதையில் படுத்தெரிந்து பொன்னுலக மடைந்தனர். இப்பொழுது யான் மிகத் தீனப்பட்டுச் சிந்தைகொண் டிருக்கையில், இஃது என் நினைவில் தோற்றியது, அடி என் பிராணநாயகி! யான் இளமையில் செய்த அத்தீச் செய்வினை பயன் இப்பொழுது நேர்கின்றது, அபத்தியஞ் செய்து கொண்டு நல்லன்னத்தை யுண்ணினும், பிணி வளருமல்லது, நீங்குமோ? அவ்வண்ணம் யான் முன் விபரீதச் செயலைச் செய்துவிட்டுப் பின் யாது செயினும், அப்பயன் வாய்த்த தனுபவிக்காமல் திருமோ? யானிப்பொழுது புத்திரசோகத்தினால் இறக்கப்போகின்றமையால், அம்மஹாமுனியின் சாபம் பலிக்கின்றது, அடி கோஸலையே! யானுன்னையும் கண்களால் நன்கு காண்கிலேன்; கைகளால் என்னை நன்கு பற்றிக் கொள்ளாயென் றுரைத் தழுது; மீளவும் கௌஸலையாளை நோக்கி, அடி என் பிரிய மனைவி! மிகவுங் கொடிய யான் என்னருமைப் புதல்வனைக் காட்டிற் செல்லவிட்டேனென்பது எனக்கு மிகத் தகும், என் திருமகன் என் மொழி கேட்டு மறுமொழி கூறாமற் சென்றானென்பதும் அவனுக்கே தகும்,—

దుర్వృత్తమపి కః పుత్రం త్యజేద్భువి విచక్షణః
కశ్చ ప్రవ్రాజ్యమానో వా నాసూయేత్పితరం సుతః ||

துர்வ்ருத்தமபி க꞉ புத்ரம் த்யஜேத்புவி விசக்ஷண꞉
கச்ச ப்ரவ்ராஜ்யமானோ வா நாஸூயேத்பிதரம் ஸுத꞉

அறிவுள்ள யாவனாயினும், என்னைப்போல மகன் மிகத் தீச்செயலினனாயினும், அவனைக் காட்டிற் செல்ல விடுவனோ? தந்தையால் காட்டிற் செல்ல விடப்பட்ட எந்தப் புத்திரனாயினும், தந்தையினிடத்தில் அஸூயை கொண்டு மறுத்துரையானோ? இப்பொழுது என் திருமகன் இங்கெய்தி என்னைத் தடவித் தழுவிக் கொள்வானோ? கனவிலாயினும் வாய்ப்பனோ? யமலோகஞ் சென்ற மனிதர்கள் என் திருமகனை எப்படி காண்பார்கள்? காணார்களோ? அடி கோஸலையே! யான் உன்னைக் காண்கிலேன், எனக்குணர் வழிகின்றது; இந்த யமதூதர்களும் வந்தென்னைத் துரைப்படுத்துகின்றனர்கள். யானிவ்வண்ணம் இறக்குங் காலையிலும், தருமமறிந்தவனும், ஸத்திய முடையவனும், உண்மையாகிய தோளாண்மை யுடையவனுமாகிய என் திருமகனைக் காணப் பெற்றிலேனே? இதைவிட எனக்குத் துன்ப மென்பது முளதோ? என் திருமகனைக் காணாமையா லுண்டாகிய சோகத்தீ யென் னுயிரினை முதுவேனிற் பருவத்தில், வெயில் நீரைச் சோஷிக்கச்

செய்வதுபோலச் சோஷிக்கச் செய்கின்றது; பதினன்காண்டு தீர்ந்து, பதினேந்தாவ தாண்டில திரும்பி எழுந்தருளிய என திருமகனுடைய அழகிய காதணி விளங்குவதும, தாமரை யிதழபோன்ற திருக்கண்களை யுடையதும, மிக வழகிய புருவ முடையதும, குருக்கத்தி முகிழ்போன்ற பற்களேயும், எள்ளுப்பூப் போன்ற நாசியையும உடையதும், புன்னகை யுடையதுமாகிய திருமுக மண்டலத்தை யாவர் காணபார்களோ? அவர்கள மனிதாக எல்லா; தேவாகளோ யாவார்கள். முழுமதிபோலத் திகழந்தும், தாமரைபோல மலர்ந்து, மணங் கமழ்ந்து முள்ள என திருமகன திருமுக மண்டலத்தைக் கணடு மகிழவுறுவார்க ளலலரோ? மிக நலவினையினர்கள். வனவாஸந் தீர்ந்து மீணடெழுந் தருளி வககரகதியினை விட்டு, நலவழி சேர்ந்த சுக்கிரனைபபோலத் திகழந்து, திருவயோத்தி சோ்ந்த என் திருமகனைக் கண்டவாக ளலலரோ? இனபுறுவாாக ளென்று நினைந்து நினைந் தழுது, மீளவும கோஸலையாரை நோக்கி, அடி என் பிராண நாயகி! என் மனம் மோஹங்கொண்டு மிக வருந்துகின்றது; தொனி, பரிசம், உருசி, உருவம, மணம், இவைகளி லொன்றினையு முணாகின்றிலேன்; புலன்க ளொந்து மழிந்தன; எணணெயற்ற பின்னாத தீபத்தின் ஒளிகள் முன்போலத் திகழுமோ? நதியின வேகம கரையினைக கரையப்பதுபோல இத்துனபம் என்னைக கரைத தழிக்கின்றதென றுரைத்துத் தன் திருமகனை யுத்தேசித்து, அந்தோ? ராகவா! அந்தோ? நீண்டுருண்ட திருததோளா! அந்தோ? என துயரந் தீர்ததருளவல்ல கோமானே! அந்தோ? தந்தை யிடத்தில மிகப பிரிய முடையோனே! அடா எனக்குத தஞ்சமாகியவனே! அடா என திருமகனே! யானிபபொழு திறககுங் காலையில இஙகிராமல், எஙகெயதியிருககின்றனையென்று கூவிப பின்னும அடி கோஸலராஜன திருமகளே! யானிபபொழு திறககின்றேன; அடி ஸுமித்திரை! இறந்து விடுகின்றேன; அடி பாவி சண்டாளீ கைகேயி! குலததைக கெடுத்த கொடும்பாவீ! உன்னலே இறக்கின்றே னென்று புலம்பிக கோஸலையார! ஸுமித்திராதேவி! இருவரருகிலும், உயிர் வாழ்வின் முடி வடைந்தனர். சககரவர்த்தியார் இவ்வண்ணந் தம் சாபததை யுரைத்துத் திருமகனை நினைந்து புலம்பி, அன்றிரவு இரண்டியாமம் சென்றபின், மொழியற் றெபபொழுது ஒழிந்தனரோ? அப்பொழுதே யவர் உயிரை விட்டுத் துயில கொண்டவர்போலப் படுத்திருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில அறுபத்துநான்காவது சருக்கம் முற்றிறறு.

---

✓ வைசியனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்தில் பிறப்பவன் கரணனென்னும் ஜாதியுடையவனாகின்றான். அவனுக்கு வேதாதிகள் ஓதவுரிமையின்மையால், அவன நித்தியகருமம் செய்ததாகவும், ஹோமம் பண்ணியதாகவு மிருக்கின்ற தொக்குமோ

# அறுபத்தைந்தாவது சருக்கம்.

## சக்கரவர்த்தியார் இறந்ததை யுணர்ந்து யாவரும் புலம்பியது.

அநந்தரம் இரவு நீங்கிப் பொழுது விடிந்த பின்னர், மறுநாளுதயத்தில் ஸூத மாகதவந்திகளும், மங்கள பாடகர்களும், பாடுவோர்களும், சக்கரவர்த்தியார் திருமாளிகை சேர்ந்து, வெவ்வேறாக சக்கரவர்த்தியைப் புகழ்ந்து பாடித் துதி செய்கையில், அவ்வொலி எங்கும் பரவி யொலித்தது; தாளமுறையின்படி கைகளினால் பலவகை வாத்தியங்களை வாதிக்க வல்லவர்களும், யாவரும் வியப்புறத்தக்க நற்செயல்களைக் கவியாகப் பாடினர்கள்; அவ்வொலியாலும், அவ்வரணமனையுள் கூடுகளிலும், கூடங்களிலும், மரங்களிலு மிருக்கின்ற பறவைகளெல்லாந் துயிலுணர்ந்து தொனி செய்தன; பிராஹ்மணர்கள் புண்ணிய கதையும், காயகர்கள் வீணாநாதமும், சக்கரவர்த்தியார் விஷயமாகிய பதங்களின் கான தொனியும், ஒன்று சேர்ந்து அவ்வரணமனை யெங்கும் நிறைந்தன; உடனே பெண்கள் அலி கூனர் குறளர் முதலிய அரணமனையுள் புகத்தக்க பரிசாரகர்கள் தூய்மையராகிப் பொற் குடங்களில் நிறைந்துள்ள ஹரிசந்தனஞ் சேர்ந்து, மணங்கமழு நன்னீர்களையும், மற்றும் மங்கள வஸ்துக்களையும், சித்தஞ்செய்து நின்றனர்கள். இவ்வண்ணஞ் சக்கரவர்த்திக்குச் சித்தஞ் செய்யத்தக்க மங்கள திரவியங்கள் யாவும், எல்லா லக்ஷணங்களையு முடையனவும், விதியின்படி பூஜிக்கப்பட்டனவும், நற்குணங்களை யுடையனவாகித் திகழ்கின்றனவுமாக விளங்கின; அப்பொழுது யாவரும் வெய்யோ னுதயமாகு மளவுங் காத்திருந்தும், சக்கர

---

வெனின், அவனுக்கு வைதிக மந்திரங்களால், நித்திய கருமங்களும், ஓமமு மில்லையாயினும், தாந்திரிகமாக உளதென வுணர்க. (நமஸ்காரேண மந்த்ரேண பஞ்சயஜ்ஞான்ஸஹாவயேத்) என்று, சூத்திரனுக்கும், ஹோமாதிகாரம், தாந்திரிகமாயுளதென விதியிருக்கின்றமையால், அவனை விடச் சிறந்த கரணனுக்கு அவ்வதிகாரம் உளதென்பதில் ஐயமென்ன?

ரிஷிகுமாரன் ரிஷி யிருவரும், பிரஹ்மஜ்ஞானிகளா யிருக்க, இக்குமாரன் ஆயுதப்பயிற்சி யுற்றவர்களது கதியை யடையும்படி கோரிய தென்னெனில், (த்வாவிமௌபுருஷௌலோகே ஸூர்யமண்டலபேதிநௌபரிவராட்யோகயுக்தச்ச சரேணாபிமுகோஹத:) என்று, யோகியும், போரில் இறந்தவனும், ஒரே லோகத்தை யடைகின்றனர்கள். என வசன மிருப்பதால் விரோத மில்லை.

இதில் ஜனமேஜய னடைந்த கதியையும் அடைகவென்றிருக்கின்றது; ஜனமேஜயன், பரீக்ஷித்து மஹாராஜன் குமாரனாதலால், அவன் கலியுகாதியிலேயே யிருந்தமையால், இவனை முன் திரேதா யுகத்தில், எவ்வண்ணங் கவி கூறினரெனில், இவன் வேறொருவனே யன்றி, யவனல்லனென வுணர்க.

வர்த்தியா விழித்திலராதலின், ஏனினும் சக்கரவர்த்தியா ரெழுந்திலர்? துயிலே கொண்டனரோ ? மயலே கொண்டனரோ ? நெடுந் துயிலே கொண்டனரோ ? என்று, சங்கை கொண்டனர். அப்பொழுது சக்கர வர்த்தியா ரருகில் படுத்திருந்த வனிதையர்கள் வந்தும், வினயத்தினாலும், நீதியினாலும், தாரங்கினெழுப்பினர்களே யன்றி, இவர் படுக்கையைக் கிட்டித் தொட்டெழுப்பியிலர், ஆயினும், இவர் துயில்கொண்டனர்போ விலரோ ? இறந்தனரோவென் றவர்க ளையமுற்று, அலைகள் மோதுந் தோறும், புல்லின் நுனி நடுங்கி யசைவதுபோல் நடுக்குற்று வருந்தினர் கள். உடனே யவர்கள் மஹாராஜனை நன்குறக் கண்ணுறுகையில், எவ் வண்ணமு சங்கை கொண்டனரோ ? அதன் நிச்சயம் பிறந்து புலம்பினர் கள். கோஸலையார் ! சுமித்திராதேவி ! இருவரும், புத்திர சோகத்தால் நெடுநேரம் விழித்துத் துயின்றமையால், அக்காலையில் அவர்களும் விழித் திலர் ; அப்பொழுது கோஸலையார் சோகத்தால் மிக வருந்தி, முகவொளி குன்றி, இளைத்து, உற்பாத காலையில் தோற்றுந் தூமகேதுவால் மறைக் கப்பட்ட விண்மீன்போலத் திகழ்ந்திலர் ; மற்ற ஸந்நிதிகளெல்லோரும், மஹாராஜனருகில் கோஸலையாரும், அவரருகில் ஸுமித்திரா தேவியும் படுத்து, முக வொளியற்றுத் துயிலவதையும், சக்கரவர்த்தியார் துயின் றவராகியே நெடுந்துயில் கொண்டதையு மறிந்து, கூவி யழுதனர்கள். காட்டிடையில் யூதபதி யிறக்கையில், யானைப்பேடுகள் கூவிச் சூழ்வது போலச் சூழ்ந்து கூவுகின்ற அவர்களது அழுகுரலைக் கேட்டுக் கோஸலை யார் ஸுமித்திரையா ரிருவரும் கண்விழித்து, மஹாராஜனைக் கண்ணுற் றும், தொட்டெழுப்பியும், எழுந்திராம லிறந் திருப்பதை யறிந்து, ஹா ! பிராணநாதா ! என்று, கூவித் தரையில் வீழ்ந்து, புரண்டு, துகள் படிந்து, விண்ணினின்றும் வீழ்ந்த விண்மீன்கள் போலத் திகழ்ந் திலர் கள். இவ்வண்ணம் இவர்கள் வீழ்ந் தழுவதையுங் கண்டு, கைகேயி முதலிய தேவிகளும் வீழ்ந்து, மயல்கொண் டழுதனர்கள். இவ்வாறு தேவிக ளெல்லோருங் கூடி யழுகையில், அவ்வொலியால் அவ்வரண்மனை முழு தும் பிரதித்தொனி பொருந்தி யொலிக்கச் செய்கையில், வானுலக மடைந்த சக்கரவர்த்தியாரது திருமாளிகை முழுதும், அச்சங்கொண்டும், நடுக்குற்றும், தீனமாகப் புலம்பியும், வருந்தியும், இறந்த மஹாராஜனைச் சூழ்ந்து, ஒருவர்க் கொருவர் கைகளைப் பற்றிக்கொண்டு, சக்கரவர்த்தி தேவிகள் யாவரும் அநாதைகளாகிக் கூவிக் கேவிப் புரண் டுருண் டழுது புலம்பினர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தாறுவது சருக்கம்.

### சக்கரவர்த்தியார் தேவிகள் முதலிய வனிதையர்கள் எல்லோரும் புலம்பியது

அனந்தரம் அணைந்த அக்கினி போலவும், நீரற்ற பெருங்கடல் போலவும், ஒளிகுன்றிய வெய்யோன் போலவும், பொன்னுலக மடைந்து கிழவற்றுக் கிடக்கின்ற சக்கரவர்த்தியாரைக் கண்ணுற்றுக் கோஸலையார் பர்த்தாவின் சிரத்தை யெடுத்து மடியில் வைத்துக் கொண்டு, கண்ணீர் பெருக்கிக் கைகேயியை நோக்கி, அடி பாவி கைகேயீ! இப்பொழுது உனது கோரிக்கை யீடேறிற்றா? இனிப் பகையற்றுக் கைம்பெண்ணாகி, இவ்விராஜ்ஜியத்தை யாண் டனுபவித்து மகிழ்க, அடி கொடியாளே! தீச் செயலினளே! நீ ஒரே பிடிவாத முடையளாகி, பர்த்தாவையுந் துறந்து கொன்றனையே? என் திருமகன் என்னை விட்டுக் காட்டுக் கெழுந்தருளி விட்டனன். பர்த்தாவோ வானுலக மடைந்தனர். ஆதலின், கொடிவழியில் துணையற்றவள்போல யான் ஒரு பொழுதும் உயிர்வாழ விரும்பேன்,—

భర్తారం తం పరిత్యజ్య కా స్త్రీ దైవతమాత్మనః
ఇచ్ఛేజ్జీవితుమన్యత్ర కైకేయ్యాస్త్యక్తధర్మణః ॥

பர்த்தாரந்தம்பரித்யஜ்ய காஸ்த்ரீதைவதமாத்மன꞉
இச்சேஜ்ஜீவிதுமந்யத்ர கைகேய்யாஸ்த்யக்ததர்மண꞉.

கற்புடைய யாவள் தனக்குத் தெய்வமாகிய பர்த்தா! இறந்த பின்னர், அவருடன் அநுமரணஞ் செய்யாமல், அவரை விட்டு விட்டுப் பிழைத்திருக்க விரும்புவள்? தருமத்தை முற்றுந் துறந்த இந்தக் கைகேயி யொருத்தியே பர்த்தாவைத் துறந்து, உயிர்வாழ விரும்புவளன்றோ? பொருளாசை கொண்டவன் விஷந் தீண்டிய அன்னத்தையும், அறிய மனம் வராமல், அதைத் தினபதினால் வருந் தீங்கினையும் அறியாமல், அதைப் புசிப்பது போலவும், எட்டியைத் தின்றவன் விஷத்தினா லுண்டாகுந் தோஷங்களை யறியாமல், விஷ மேற்றமையால், பயமற் றிருப்பது போலவும், இக்கைகேயியும், கூனியினால் பொருளாசைகொண்டு, இதனால் விளையுந் தீங்குகளையு மறியாமல், பயமு மின்றி, இந்த ரகுகுலத்தையே கெடுத்தனளே பாவி? முன்பு கைகேயீ! இவ்விரண்டு வரங்களையும், கேட்டுக் கொள்ளாம லிருக்கையிலே, இப்பொழுது இவைகளையே வரமாகக் கொடுத்து, சக்கரவர்த்தியார் என் திருமகனைக் காட்டிற் கோட்டினரன்றோ? இச்செய்கையை ஜனக சக்கரவர்த்தியுங் கேட்டு என்போலவே

துன்புறுவாரோ ; செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையவனும் தருமநிலை தவறுதவனுமாகிய என திருமகன இவ்வண்ணம் அரசிழந்து காடு செலல நிகழ்ந்தமையால், யானிவ்வணணம அநாதையாகி வருந்து வதை யறியானோ ? ஜனகராஜன திருமகளாகிய ஸீதையும், இதுகாறுந் துன்புறாதவ ளாதலின, காடடில கொடிய மிருகங்களைக் கண டஞ்சுவளோ ? அவள இரவில் கொடுமையாகக கூவுகினற பசு பக்ஷிகளி னொலியைக் கேடபளாயின, மிக நடுங்கி என திருமகனையே தஞ்சமென வடைந் தணைத்துக கொளவள ; புத்திரனறறவரும, மூப்புடையவரும, மிக வன் பினருமாகிய அந்த ஜனக சக்கரவாததியும, இத்துன்பத்தைப பொறாமல் உயிரை விடுவா ரலலது, உயயார் ; ஆதலின், யானு மிபபொழுதே இந்த என் பாத்தாவின் திருமேனியை யாலிஙகனஞ் செய்துகொணடே சிதை யில் படுத்து, இறப்பேனே யலலது, உயிர் வாழேனென றிவ்வாறு புலமபினர். இவ்வண்ணஞ் சககரவர்ததியாரைத்தழுவியழுகின்ற கோஸலை யாரை யங்குளள காநதையாகளுள தலைமையானவாகள வந்து தேறறி விடுவித்துத் தனியே நிறுத்தினர்கள. உடனே மந்திரி முதலானோர்கள யோசனை செயது, மஹாராஜர் சரீரத்தை எணணெயக கொபபறையி லிடு வித்துப புத்திரனிலலாமல மஹாராஜரை தஹனஞ் செயவது தகுதியற்ற தெனறு, அந்தச சரீரததை யழுகாமலும, நாறாமலும் பாதுகாத்தனர்கள. சககரவாத்தியின்தேவிகள் அப்பொழுதும அநத சுணணெயககொப்பறை யைச சுற்றிக்கொண்டு, கைகளை யுயாத்திக கூவி, அந்தோ ? மஹாராஜனே! ஸததிய ஸந்தனும, இனிய மொழியனும, உருவ மழகியவனுமாகிய ஸ்ரீராமசந்திரனை விடடுப பிரிந்து வருந்திய எஙகளைத் தேவரும் விடடுச செலலு கினறீரோ ? குமாரனையும விட்டுத் தேவரையும விட்டுப பிரிந்து, அநாதையர்களாகிய யாங்கள பர்த்தாவையுங்கொனறு, திருமகனை யுங் காடுறச செயது, மிகப் பாவியாகிய கைகேயியுடன எவ்வண்ணம் வாழ்ந் துய்வோம் ? எங்களுககுந தேவர்க்குந தஞ்சமாகிய ஸ்ரீராமன ராஜ்ஜியததையுந் துறநது காடுறைந்தனன. அவனாலும, தேவராலும, பிரிககப்படடவர்க ளாகியும, கைகேயியின லிகழபபடடவர்க ளாகியும், எப்படி பிழைப்போம? ஸ்ரீராமன, ஸீதை, இலட்சுமணன, இவர்களையே துறந்த கொடும்பாவி யாகிய இந்தக கைகேயி ! எமமையுந துறப்பதி லைய முளதோ ? எனறிவ்வகையாகப புலம்பி, மகிழவு குன்றி, மோகங் கொண்டு, வருந்தித துடிததனாகள். அத்திருவயோத்தியும சககரவர்த்தி யார இறநதவுடன மதிமறைந்த இராபபோலவும, கணவனிறந்த பெண் போலவும், கண்ணீர் பெருககி யழுகினற ஜனங்கள் நிறைந்ததும், ஐயையோ வெனறு கூவுகின்ற குலமகளிர்களுடையதும், செயலற்றிருக கினற ஜனங்களுடையதும, ஜனஸஞ்சாரமறற நற்சந்தி தலைவாயில்களை யுடையதுமாகி முன்போலத் திகழ்கிலது ; இவ்வண்ணஞ் சக்கரவர்த்தி யும் பொன்னுலக மடைந்து, தேவிகளும் சூழ்ந் தழுது புலம்பிக்கொண

டிருக்கையில், மாலைப்பொழுதாகி, வெய்யோனும் கிரணவொளி சுருங்கி மறைந்து, இரவுந்தோன்றி வளர்ந்தது; அங்குக் கூடிய அன்பர்களும் புத்திரனை விட்டுச் சக்கரவர்த்திக்கு தஹநஸமஸ்காரஞ் செய்யக்கூடா தென்று தடுத்து, மஹாராஜனை எண்ணெயக் கொப்பறையிலேயே வைத்துப் பாதுகாத்து வந்தனர்கள் அந்நகரிலுள்ள ஆண் பெண்ணடங் கலும், கும்பு கும்பாகக் கூடிக் கைகேயியை யிகழ்ந்தும், ஸ்ரீராமபிரான் குணங்களைப் புகழ்ந்தும், கண்ணீர் சொரிந்து அழுது ஒடுங்கி நின்ற மையால், கதிரவன் மறைந் தொளி யிழந்த வாகாசம் போலவும், விண் மீன்கள் திங்களொன்றுமின்றி, இருள்கொண்ட இரவுபோலவும், அத் திருவயோத்தி விளங்கியது, அப்பொழுது எல்லோரும் துன்புற்றனர் களே யன்றி, இன்புற்றிலர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தாறாவது சருக்கம் முற்றிற்று.

## அறுபத்தேழாவது சருக்கம்.

எல்லோரும் பரதாழ்வானை யழைப்பிக்க வேண்டு மென்று வசிஷ்டமஹாரிஷியுடன் விண்ணப்பஞ் செய்தது.

அநந்தரம் கண்ணீர் பெருக்கி யழும் மஹாஜனங்களின் சோகத்தி னால் வளர்ந்த இரவு நீங்கி, ஸூரியோதய காலத்தில் ராஜகாரியங்களை நடாத்தவல்ல மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காச்யபர், காத்தியாயனர், கௌதமர், ஜாபாலி முதலிய வேதியர்களும், மந்திரிகளும் கூடி வசிஷ்டமஹாமுனிவரை நோக்கிக் கேட்டருளீர் நான்முகன் திருக் குமாரரே! சக்கரவர்த்தியார் புத்திர சோகத்தால் விண்ணுலக மடைந் தமையால், நமக்கு நூறுவருடம்போல வளர்ந்த இன்றிரவு கழிந்தது; சக்கரவர்த்தியார் வானேறினர், ஸ்ரீராமபிரான் காடேற வெழுந்தருளினர், இளையபெருமாளு முடனே சென்றனர், பரத சத்துருக்கர்க ளிருவரும், தம்மாதா மகன் திருமாளிகையி லிருக்கின்றனர்கள்; இப்பொழுதே இந்த ராஜ்ஜியத்திற்கு ஒருவன் அரசனாக விதிக்கப்படக் கடவன் நம் மிவ்விராஜ்ஜியம் அரசனற்றதாகி யழிந்து கெடவேண்டா; அரசனற்ற தேசத்தில் மழையும் பொழியாது, விதையும் நம்பி விதையார்கள்; தந்தைக்கு மக்களும், பர்த்தாவுக்குப் பத்தினியும், வசப்பட்டு நடவார்கள்; இருவருக்கும் பொருள் நிலைபெற்றிராது, இவனுக்கு இவள் மனையாளென் றும் ஒருத்தியும் நிலைத்திராள்; இவ்வண்ணம் நீதியழிந்துவிடின், சத்திய

மெங்குள தாகும்? அரசனற்ற தேசத்தில மனிதர்கள சிறந்த சபாமண்டபத்தையும், மாஞ்சோலை, பூஞ்சோலைகளையும், சிறந்த மாடமாளிகைகளையும், கட்டுவியார்கள. வேதியர்களும் வேதமோதார்கள, யாகமுஞ் செய்யார்கள, விரதாநுஷ்டானங்களும செய்யார்கள, யாகஞ் செய்வோர்களும், யாகங்களில் தக்கபடி தக்ஷிணைகொடுத்து மரியாதை செய்யார்கள, நாடு செழிக்கத்தக்க நல்லுற்சவங்களும, நல்லாலோசனை சபைகளும், நடாத்தக்காரியங்களையும் செழிப்புறு; வியாபாரஞ் செய்வோர்களும், அச்சமற்றுப் பண்டங்களை மாறார்கள. பௌராணிகர்கள புராண கதைகளும், சிந்தையற்றுரைசெயார்கள. பெண்களும சிறந்த ஆடையாபரணங்களை யணிந்து, மாலைப்பொழுதில் விநோதமாக விளையாடுவதன பொருட்டு, உத்தியானங்களுக்குச் செல்லார்கள. காமுகர்களும காமினியர்களுடன கூடி விரைவாகச் செல்லத்தக்க வாஹனங்களின் மீதேறிச் செல்லார்கள் மிகுந்த செல்வமுடையவர்களும், வாயிலைத திறந்து கொண்டு பயமற்றுத் துயில கொள்ளார்கள். அறுபது வயதுள்ளனவும, சிறந்த தந்தங்களை யுடையனவும், சிறந்த மணிகளை யுடையனவு மாகிய மதயானைகள ராஜவீதிகளிலு கணகணவென்று நடவா? சூரர்கள ஆயுதப்பயிற்சி செய்யுழித் தோன்றும் ஒலியும கேட்கப் படாது, பலவகைப பண்டங்களையுடைய வர்த்தகர்களும், நெடுந்தூரஞ்சென்று க்ஷேமமாகக் களவு கொடாமல் திரும்பிவந்து சேரார்கள. அரசனற்ற தேசத்தில் ஐம்புலன்களையு மடக்கி, நிரந்தரம் பரமாத்துமாவையே சிந்தை செய்து கொண்டு மாலைப்பொழுதான விடத்தில் படுத்து, ஒருதினமும் ஓரிடத்தில தங்காமல செல்லத்தக்க யோகியும, உபசாரஞ் செய்வோர் அகப்படா ராதலின, தனிவழி நடவான், அரசனிலனுகில், நன்மை பெறுவதற்கும, தீமையை நீக்குவதற்கும, ஒருவராலும் முடியாது, சேனையும் பகைவரை வெல்லத் திறமையுளதாகாது? மனிதர்களும, யானை தோ பரிமா இவைகளின்மீது பல கலன்களை யணிந்து மகிழ்ந்து வீதிகளிற செல்லார், கல்விகற்ற நுண்ணறிவாளர்களும், வனங்களிலாயினும், உபவனங்களிலாயினும், கலவிப்பயிற்சிசெய்து காலம் போக்கார்கள. ஜனங்களும நியமங்கொண்டு நன்மலர்களாலும், நல்லுணவுகளாலும், தேவபூசை செய்யார்கள. ராஜகுமாரர்களும, அலங்காரஞ்செய்து கொண்டு வஸந்தகாலத்தில விருக்ஷங்கள்போலத் திகழார்கள. நீரற்ற ஆறுகள போலவும, புல செடி கொடிகளற்ற காடு போலவும், கோபாலரற்ற பசுக்கள் போலவும், அரசனற்ற ராஜ்ஜியமும், செழிப்புற்று விளங்காது; தேர்க்குத் துவஜங் குறியாகும், அக்கினிக்குப் புகை குறிப்பாகும், அவ்வண்ணம நம்மெல்லோர்க்கும் அரசனே குறிப்பாகும; அத்தன்மையனாகிய அரசர் இப்பொழுது பொன்னுலக மெய்தி விட்டனர்; அரசனற்ற தேசத்தில் ஒருவனுக்கும் ஒரு வஸ்துவும், இப்பொருள என்னுடையதென்று சொல்லும்படி நிலைபெற்றிராது; பெருமீன சிறுமீன்களையே கொன்று பக்ஷிப்பதுபோலப் பலவான்களும் எளியோரைக்கொன்று பக்ஷிப்

பார்கள். ராஜா தண்டனை செய்வாரென்னும் பயத்தால் இதுவரையில் அடங்கி யிருந்த நாஸ்திகர்களும், சங்கையின்றி யுலகினைப் பீடைசெய்ய முயற்சி செய்வார்கள். கண்ணானது தீவழியை யகற்றி நம் சரீரத்தை நல்வழியிலேயே செல்லும்படி செய்வது போலவே, அரசனும் தீமைகளை யகற்றி, நன்மை களைச் செய்விக்கின்றா னன்றோ? —

రాజా సత్యంచ ధర్మశ్చ రాజా కులవతాం కులం
రాజా మాతా పితా చైవ రాజా హితకరో నృణాం ||

*ராஜா ஸத்யஞ்ச தர்மச்ச ராஜா குலவதாங் குலம்*
*ராஜா மாதா பிதா சைவ ராஜா ஹிதகரோ ந்ருணாம்.*

பிரஜைகளுக்கு இதஞ்செய்யும் ராஜனே ஸத்தியம்; அவனே தருமம், அவனே நற்குலத்தோர்க்கு நற்குலம், அவனே தாய், அவனே தந்தையு மாகின்றான். குற்றவாளிகளைத் தண்டனை செய்வதினாலும், ஏழைகளுக்குக் கொடை கொடுத்தலாலும், உலகினைப் பரிபாலனஞ் செய்வதினாலும், ஜனங்கள் நல்லொழுக்கந் தவறாது நடக்கும்படி செய்தலாலும், எப்பொழு துந் திரிந்துகொண்டு அங்கங்கே நடக்குஞ் செய்திகளை யறிதலாலும், சிறந்த ஞான முடைமையாலும், வேந்தனொருவனே யமன், குபேரன், இந்திரன், வருணன், வாயு, சிவன், இவர்களைத் தாழ்மை யாக்குகின்றான். இவ்வுலகினில் ராஜன் என்பவன் ஒருவனிராவிடில், ஜனங்கள் ஒன்றினையு மறியாமல், இருள் மூண்டதுபோலாகும். ஸ்வாமி வஸிஷ்ட பகவானே! சக்கரவர்த்தியார் பிழைத்திருக்குங் காலையிலும், தேவருடைய கட்டளை யையே யாங்கள் முதன்மையாகக்கொண்டு தவறியிலோ மாதலின், அரச னில்லாமல் ராஜ்ஜியம் நிலைகொள்ளா தென்பதை நன்காராய்ந்தருளி, மிகவுங் குணசாலியான பரதாழ்வாரையே யழைப்பித்து, தேவரே அவருக் கபிஷேகஞ் செய்தருள வேண்டுமென்று வேண்டி யுரை செய்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தேழாவது சருக்கம்
முற்றிற்று.

## அறுபத்தெட்டாவது சருக்கம்

வஸிஷ்டமஹாமுனி பரதாழ்வானுக்குத் தூதனுப்பியது.

அநந்தரம் வசிஷ்டபகவான் அவர்கள் வேண்டி யுரைத்த வாக்கியத் தைக் கேட்டு, அவர்க ளெல்லோரையும் நோக்கிக் கேளீர் அன்பர்களே! இப்பொழுது பரதாழ்வான் சத்துருக்கனாழ்வானுடன் தன் மாதாமகனுடைய

கேகயமஹாராஜன திருமாளிகையில், இனபுற்று வாழகின்றமையால், அவர்களை யழைத்து வரும்படித் தூதர்கள மிக வேகமுள்ள பரிமாக் களின்மீ தேறிச செல்லக் கடவாகள. நாமிங் கொருவாக கொருவா வீண் யோசனை செயவதி லெனன பயனென் றருளிச செயதனர். அவர்களும் அவவணணமே தூதர்களை செலலக கடவாகள. தேவர் கட்டளை செயயத் தடையாதெனமொழிந்தனாகள. உடனே வசிஷ்டபகவான சித்தாாததன் விஜயன, ஜயந்தன, அசோகன, நந்தனன எனனும் ஐந்து தூதாகளை யழைத்துக கேளீா தூதாகளே ! நீஙகள விரைவுளள வாஜிகளின மீதேறி விரைந்து சென்று, கேகயமஹாராஜ னரணமனை சேர்நது, பரதாழவானைக் கண்டு அவனை நோககிப பரதாழவானே ! வசிஷ்டபகவானும், மறறுளள மந்திரிகளும், உமமைக குசலங கேடடனாகள , தேவா திருவயோததிககு வந்து செய்யத்தகக செயல்கள் வெகுவா யிருககின்றன , ஆதலின, தேவர் உடனே புறபபடக் கடவீரென் றுரைத்து, உடனே யழைத்துவர்க கடவீர் கள். ஸ்ரீராமபிரான் வனவாஸ மெழுந்தருளியதையும, சககரவாததியார் பொன்னுலக மடைந்ததையும, பரதாழவானுககு அறிவிககக கடவீரலலீா கள. சிறநத ஆடையாபரணங்களைச் சககரவாததியாா கொடுததனுபபியதாக எடுத்துககொண்டு விரைவாகச செல்லக கடவீாகளென்று கடடளையிடடு. வழிச் செலவுககுங் கொடுபபித தருளினா. அவாகளு மதை வாஙகிக கொண்டு சிறநத குதிரைகளினமே லேறித தமதம மனைகள சோநது வேணடிய வஸ்துககளை எடுத்துககொண்டு புறபபட்டு அபரதாலமெனனும் மலைககும், பிரலமபமெனனும் மலைககும் நடுவில், மாலினீ நதியின கரை வழியாக வடக்கு முகமாகச சென்று, ஹஸ்தினபடடணததி னருகில், கங்காநதியைத தாண்டி மேறகுமுகமாகச் சென்று, பாஞசாலதேசஞ் சேர்ந்து, அதற்குங குருஜாங்கல தேசததிற்கும நடுவாக நடந்து, பறபல வாபீ தடாகநத நதிகளைக கணணுறறுககொணடு காரிய வசத்தால் மிகவும் விரைவாகச் சென்று, பறபல நீரபபறவைகளும், அநேகஜநஙகளும நிறைந்த சரதணடை யெனனும் நதியினையுந தாண்டி யககரையிலுளள தெய்வத் தன்மை பொருந்தித் தனனை வணஙகி வலஞ்செயவோா கோரிககைகளை நிறைவேற்றவல்ல சததியோபயாசனமெனனும விருக்ஷததை வலஞ்செய்து, குளிங்கை யெனனும் நகரிசோநது, அபிகாளமபோதி பவனமெனனும் கிராமங்கள் வழியாக வந்து, இக்ஷுமதிநதியினையுந் தாண்டிக கைகொணட நீரைமாத்திரம் உண்டு, உணவு நீங்கித தவஞ்செயகின்ற வேதியாகளையுங் கண்டு, பாஹலீகதேசத்தி னடுவே சென்று, ஸுதாமமெனனும பூருப்பதத் தில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமந்நாராயணனையும் ஸேவிததுவிபாசை யென்னும் நதியினையும், இலவமரத்தையும, மற்றுமுள்ள நதிகளையும், தடாகங்களையும், வாபிகளையும், குட்டை குளங்களையும், பறபல சிங்கம் புலி மான முதலிய விலங்குகளையும், கண்ணுற்றுககொண்டே விரைவாக நடந்து, பர்த்தாவுக்குப் பிரியஞ் செயவதன் பொருட்டும், குலத்தை ரக்ஷிப்

பதன் பொருட்டும், இக்ஷ்வாகு வம்சத்திற்குப் புகழுண்டாவதன் பொருட்டும், அநாதரவு செய்யாதவர்களாகி, அன்றியதினம் ராத்திரியே கிரிவ்ரஜமென்னும் அந்தப் பட்டணம்போய்ச் சேர்ந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தொன்பதாவது சருக்கம்

பரதாழ்வான் கெட்ட கனாக் கண்டது.

இந்தத் தூதர்கள் போய்ச் சேர்ந்த தினம் ராத்திரியே பரதாழ்வான் கொடிய கனவுகண்டு துயிலுணர்ந்து, மறுநாளுதய காலத்தில் மிகச் சோகங்கொண்டு வருந்துவதை நட்பினர்கள் கண்டு பற்பல நன்மொழிகளுரைத்தும், பற்பல கதைகள் கூறியும், துஸ்ஸ்வப்நம் சாந்தியாகும்படி வேதியர்களைக் கொண்டு மந்திரங்களை யோதுவித்தும், வாத்தியங்களை முழக்குவித்தும், வேசியர்களை யாடுவித்தும், நாடகங்களைப்பார்ப்பித்தும், ஹாஸ்யங்கள் செய்வித்தும், மகிழச் செய்தனர்களாயினும், பரதாழ்வான் மனஞ் சிறிதும் மகிழ்ந்திலது. அப்பொழுது தோழனொருவனவனை நோக்கித் தோழா! நாங்க ளெல்லோரும் கூடி விநோதமாயிருக்கையில், நீ மாத்திரம் ஏன் மகிழ்ச்சி கொண்டிலை, அதனை யுரைசெய்கவென வினவினன்; பரதாழ்வானும் அவர்களை நோக்கிக் கேளீர் தோழர்களே! யான் ராத்திரி கனவில் என் தந்தை தலை விரித்துக் கொண்டு, மலை முனையினின்றும், கோமயத்திரக் குட்டையில் வீழ்ந்து மூழ்கினர் அடிக்கடி நகைத்தும், கைகளினால் எண்ணெயை யள்ளி யள்ளி யுண்டும், எள்ளோரனையைப் புசித்தும், தலை முதல் கால் வரையில் எண்ணெயை வழிய வார்த்துக் கொண்டும், தலை கீழாக எண்ணெயுள் மூழ்கினர், கடல் வற்றியது, சந்திரன் தரையில் வீழ்ந்தனன், உலகமெல்லாம் இருளால் மூடப்பட்டது, சக்கரவர்த்தியின் பட்டத்து யானைக்குத் தந்தம் முறிந்தது, சூழ்ந்தெரிந்த ஹோமாக்கினி யுடனே யணைந்து விட்டது, பூமி யழுந்தியது, பலவகை மரங்களும் உலர்ந்து பட்டுப் போயின, மலைகளும் புகை சூழ்ந்து அசைவுற்றுச் சிதறி வீழ்ந்தன, என் தந்தை கரிய வஸ்திரந் தரித்து, எஃகினால் செய்யப்பட்ட பீடத்தில் வீற்றிருக்கையில், கருமை நிறமும், செம்பட்டை நிறமு முடைய பெண்கள் சூழ நின்று, நகைக்கின்றனர்கள்; செஞ்சாந்து பூசிச் செம்மலர் மாலை சூடிக் கழுதை கட்டிய தேரின் மேறித் தென்றிசை நோக்கி, என் தந்தையார் விரைந்து சென்றனர்; மிகவும் விகாரரூபமுடைய ராக்ஷசி செம்மலர் சூடி மஹாராஜரைப் பற்றி நகைத் திழுத்தனள்.

யானிவ்வண்ணங் கொடிய கனவு கண்டமையால், யானோ? ஸ்ரீராமனோ? சக்கரவர்த்தியோ? லக்ஷ்மணனோ? நால்வரி லொருவர் விரைவில், மரண மடையவேண்டும் ,—

నరోయానేనయస్స్వప్నే ఖరయుక్తేనయాతిహి
అచిరాత్తస్యధూమాగ్రం చితాయాంసంప్రదృశ్యతే ॥

*நரோயாநேநயஸஸ்வப்நே கரயுக்தேநயாதிஹி*
*அசிராத்தஸ்யதூமாக்ரஞ் சித்தாயாமஸம்ப்ரத்ருச்யதே.*

எந்த மனிதன் கழுதை கட்டிய வாஹனமேறிச் செல்வதாகக் கனவில் காணப்படுகின்றானோ? விரைவிலேயே அவனைச் சிதையில் கொளுத்த அப்புகை காணப்படும், இத்தப்படி யான கனவு கண்டமையால், என் மனம் மகிழ்ந்திலது, உங்களையும் இனிய மொழிகளால், மகிழ்வித்து மிலேன்; என் கண்டம் சோஷிக்கின்றது போலும், மனமும் நிலைகொண் டிலது; இக்கனவுக்குத் தக்க துன்பம் வருவதற்குக் காரணம் யாதுங் காண்கிலேன்; இக்கனவும் பயனற்றதாகாது, எனக்குத் தொனியும் ஒடுங் கிற்று; ஒளியும் குன்றிற்று; என்னை நானே வெறுத்துக் கொள்ளுகின் றேன்; இதற்குக் காரணத்தையோ காண்கிலேன், இவ்வண்ணங் கோர மாகிய கனவைக் கண்டும், எம் தந்தையாரை நினைந்தும், மிகவும் பயமானது என் மனதை விட்டு நீங்குகிறதிலது; என்று உள்ள செய்து துன்புற்று சிந்தித் கொண் டிருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று

## எழுபதாவது சருக்கம்.

*பரதாழ்வான் தூதர்கள் வார்த்தையைக்கேட் டுடனே சத்துருக்க னாழ்வா னுடன் திருவயோத்திக்குப் புறப்பட்டது.*

இவ்வண்ணம் பரதாழ்வான் தாம் கண்ட கனவினைத் தோழர்களுடன் சொல்லிக்கொண் டிருக்கையில், தூதர்கள் இளைப்பாறிச்சிறந்த அகழை யுடைய அவ்வரண்மனையுள் சென்று, கேகயமஹாராஜனையும், அவர் குமார னாகிய யுதாஜித்தையும் கண்டு, அவர்களால் பூஜிக்கப் பட்டவர்களாகி, பரதாழ்வானிடம் வந்து வந்தனஞ் செய்து, அவரை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரா! வசிஷ்டமஹாயோகியும், மற்றுள்ள மந்திரிகளும், உமக்குக்

குசல முரைத்தனர்கள். இந்த ஆடையாபரணங்களை வாங்கிக்கொண்டு அம்மானுக்குக் கொடுப்பித்து, அவர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு உடனே புறப்படக்கடவீர். அவ்விடத்தில் தேவர் வந்தே செய்யத்தக்க காரியங்கள் வெகுவாயுள்ளன; இதில் இருபதுகோடி வராகன் விலையுள்ள ஆடையாபரணங்கள் மாதா மஹானுக்கும், பத்துக்கோடி வராகன் மதிப்புள்ள ஆடையாபரணங்கள் அம்மானுக்கும், கொடுக்கும்படி கட்டளையிடப் பட்டிருக்கின்றனவென்றுரைத்து, அவைகளைக் கொடுத்தனர்கள். பரதாழ்வானும், தூதர்களுக்கும் மரியாதை செய்து, அவர்களை நோக்கித் தூதர்களே! எம் தந்தை சக்கரவர்த்தியார் குசலமும் செழுந்தருளி யிருக்கின்றனரா? எம்மையரான ஸ்ரீராமசந்திரர் பிலரியற் றிருக்கின்றனரா? இளைய பெருமாளும் க்ஷேமமுற் றிருக்கின்றனரா? மிகவும் தரும சிந்தையுள்ள கோஸலையாரும், ஸுமித்திராதேவியாரும், இன்புற்றிருக்கின்றனர்களா? எப்பொழுதும் பொருளாசைகொண்டவளும், காமவேட்கை யுடையவளும், எப்பொழுதுஞ் சினமுற்றவளும், செருக்குற்றவளுமாகிய கைகேயி யென்னும் என் மாதா! சினமற் றிருக்கின்றனளா? யாது கூறினள், இவைகளுக்கு விடை யுரையீரென்று வினவினர். தூதர்கள் இவ்வண்ணம் வினவப் பட்டவர்களாகிப் பரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்திக் குமாரா! தேவர் யாவர் யாவர்களுக்குக் குசலம் உளதாக வேண்டுமென்று வினவுகின்றீரோ? அவரெல்லாருங் குசலமுற்றே யிருக்கின்றனர்கள். தேவர்க் கிப்பொழுது நற்செல்வம் வாய்த்திருக்கின்றது, தேவர் இந்தக்ஷணமே தேரை யலங்கரித்துப் புறப்படக் கடவீரென் றுரைசெய்து துரைப்படுத்தினர்கள். பரதாழ்வானும் இவர்களை நோக்கி, மாதாமஹனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு வருகின்றேனென் றுரைத்து, விரைவாக மாதாமஹனருகிற் சென்று, அவனை நோக்கி, மஹாராஜரே! இந்தத் தூதர்கள் என்னைத் துரைப் படுத்துகின்றனர்கள் ஆதலின், யான் திருவயோத்திக்குச் செல்வேன், மறுபடியும், தேவர் கருதும்பொழுது வருவேன், விடை கொடுத் தருளவேண்டுமென்று வேண்டி யுரைசெய்து விடை கேட்டனர்.

இவ்வண்ணம் பரதாழ்வானால் வேண்டி யுரைசெய்யப்பட்ட மாதாமஹராகிய கேகயமஹாராஜரும், பரதாழ்வானை யாலிங்கனம் செய்து, உச்சிமோந்து அவனை நோக்கி, அடா சக்கரவர்த்தி குமாரா! யான் விடை கொடுக்கின்றேன்; நீ சுகமாகப் போய்வரக் கடவை உன் மாதாவுடனும், பிதாவுடனும், புரோஹிதராகிய வஸிஷ்டமஹாயோகியுடனும், மற்றுமுள்ள வேதியர்களுடனும், அந்த ராமலக்ஷ்மணர்களுடனும், யான் குசலங்கேட்டதாகப் பலமுறை யுரைசெய்யக் கடவையென்று கட்டளையிட்டுச் சிறந்த யானைகளையும், சித்திரமுள்ள கம்பளங்களையும், மான்தோல் புலித்தோல் முதலிய அஜினங்களையும், இரண்டாயிரம் மொகராமாலைகளையும், ஆயிரத் தறுநூறு குதிரைகளையும், மிகப் பொருள்களையும், வெகுமதியாகப்

பரதாழ்வானுக் களித்தது தமக்கு மிகவும் இஷ்டர்களாகிய மந்திரிகளையுந் துணைகூட்டி யனுப்பினார் மேலும் ஐராவதத்தின் குலத்திற் பிறந்த யானைகளையும், இந்திரசிரமென்னும் பர்வதத்திலும், இராவத்தென்னும் பர்வதத்திலும் பிறந்த யானைகளையும், மிகவும் விரைவாகச் செல்லத்தக்க ஒண்டைகளையும், கோவேறு கழுதைகளையும், அரணமனையிலேதானே வளர்க்கப் பட்டிப்புலிபோன்ற வீரமும் பலமும் பொருந்தியும், கோரப்பற்களையும் உற்றும், பயங்கரமாகியும, நீண்டிருண்டுயர்ந்து முள்ள வேட்டைநாய்களையும், அம்மானாகிய யுதாஜித்து ராஜன வெகுமதியாகக் கொடுத்தனன. பரதாழ்வா னிவைகளை யாவற்றையும பெற்றும் மனமகிழ்ந்திலா, கனுக கண்டது முதல மஹாராஜருக்கு என்ன தீங்கும் நிருகின்றதோவென்று அதனையே நினைந்து சிந்தைகொண்டு வருந்துவதினாலும், தூதர்கள் துரைப் படுத்துவதினாலும், விரைவாகப் புறப்படுவதிலேயே உறுதிகொண் டிருந்தனர். உடனே பரதாழ்வான நால்வகைப் படைகள் நிறைந்துள்ள தன திருமாளிகையை விட்டுப் புறப்பட்டு, நால்வகைச் சேனைகளும் நிறைந்துள்ள ராஜமார்க்கத்தில சென்று, அந்தப்புரத்தைக் கண்டு, அதனுள் புகுந்து, மாதாமஹனாகிய கேகயமஹாராஜனையும, அம்மானாகிய யுதாஜித்தையும், மறுபடியும் கண்டு விடைபெற்றுக்கொண்டு, சத்துருக்கனாழ்வானுடன கூடித் திருத்தேரமீ தேறிப் புறப்பட் டெழுந்தருளினர் உடனே பரிவாரங்களும தேர்களிலும, விலவண்டிகளிலும, ஒண்டைகளிலும், யானைகளிலும, குதிரைகளிலும, கோவேறு கழுதைகளிலும் ஏறிக்கொண்டு பின் சென்றன இவ்வண்ணம் பரதாழ்வான சேனைகளாலும, கேகய மஹாராஜாக்கு மிகவும இஷ்டர்களாகிய மந்திரிகளாலும, பாதுகாக்கப் பட்டவராகிச சத்துருக்கனாழ்வானுடன் திருத்தேரமீ தேறிக்கொண்டு சித்த தேவன் தேவவிமானத்தி லேறிக்கொண்டு தேவலோகத்தினின்றும் புறப்பட்டுச்செல்வதுபோல அம்மா நகரினின்றும் புறப்பட்டுச்சென்றனர்.

அயோத்தியாகாண்டத்தில எழுபதாவது சருக்கம்

முற்றிற்று

## எழுபத்தொன்றாவது சருக்கம்

பரதாழ்வான திருவயோத்திக்கு வந்து சேர்ந்தது.

அனந்தரம் பரதாழ்வான கேகயமஹாராஜா திருமாளிகையினின்றும் புறப்பட்டுக் கீழ்த்திசை நோக்கிச் சென்று, ஸுதாமையென்னும் நதியைக் கண்டு அதனையும் தாண்டி மிகவும் விசாலமாகிய ஹ்லாதினியென்னும் நதியையுந் தாண்டிப் பசிமவாஹினியாகியசதத்துருவென னும்நதியையும்,

ஏலாதான மென்னும் படடணத் தருகில தாணடி அபரபாப்பட மென்னுந் தேசஞ் சோநது, சிலேகளையு முருடடிககொண்டு போகத்தகக வேகமுள்ள சிலாவஹையென்னும் நதியினையும, அககினிமூலையிலுள்ள சல்லியகாத்தன மென னும் படடணததினருகில தாண்டி, பெரியமலேகளையுங கடந்து, சைத்திரரதமென்னும பெருங்கானகஞ் சோநது, சரசுவதிநதி சிந்துநதி இவவிரண்டின சங்கமவழியால சென்று, வீரமசிய தேசததிற்கு வட திசையில் பாருண்டமென்னும காடுசேர்ந்து, வேகமுடையதும, மகிழச் செயவதும், மலேகள் சூழநததுமாகிய குளிங்கையெனனும நதியினைத் தாண்டி, உடனே யமுனாநதியினையுந தாண்டிச சேனைகளை இளைபபாறச செயது, குதிரைகளையும குளிபபாட்டுவித்து மேயவிததுத தேறறித் தாமும் ஸ்நாநபாநஙகள செயது, தீாததமும் எடுப்பித்துககொணடு, ஈ காகைையு மினறிக கோரமாகிய காட்டிடையே செனறு, பத்திரமென்னும் சிறந்த யானையினமீதேறி வாயு ஆகாயத்தை விரைவில தாணடிச் செல்வது போல அவவரணயததைத தாண்டிசசெனறு, பாகீரதியெனனும மஹாநதி, அமசுதான மெனனும நகரினருகில் தாண்டிச செலவது வருத்தமாதலின, பிராகவடமெனனும் சிறநத நகரம வழியில கரைவழியே வந்து அஙகு ஆநநதியினைத் தாணடிக குடி கோஷடிகை யென்னும நதியினைக கணடு அதனையும் அவவிடததிலேதானே தாண்டித தாமிவாத்தனமெனனும கிரா மஞ் சேர்ந்து, அஙகிருநது தோரணமெனனும கிராமததின தெனபுற மாகச சென்று, ஜம்பூ பரஸதமெனனும கிராமததை யடைநது, அஙகிரு நது வருதமெனனும் அழகிய கிராமஞ் சோந்து, அன்றிரவு அஙகிருந்து மறுநாளுதயததில புறபபடடுக கிழககு முகமாகச செனறு, உஜ்ஜிஹானை யென்னும் படடணத தருகிலுள்ள உததியானஞ் சோநது, குதிரைகளைத திருத்தேரில் தடடியததி லேறிககொணடு சேனைகளை மெதுவாக வரும்படி கடடளையிடடுத் தாம் வேகமாகச செனறு, ஸாவதீாததமெனனும கிராமத் தில் அனறிரவு தஙகி, மறுநாளுதயத்தி லெழுந்து உததானிகையெனனும் நதியினைததாண்டி மற்றும பறபல அம்பநதிகளையும, காடடுக குதிரைகளி னுல தாணடி ஹஸ்திபிருஷடக மெனனும கிராமததினருகில் குடிகை யென்னும் நதியினையுந தாண்டி, லௌஹிததியமெனனும படடணத்தின் சமீபத்தில கபீவதியெனனும் நதிதனனைத தாண்டி, ஏகஸாலமெனனும் பட்டணத்தில் ஸ்தாணுமதியெனனும நதியினையும, விநதமெனனும் படடணத்தில கோமதியென்னும் நதியினையும தாணடிக கலிங்கநகரத்தின் சமீபததில் ஸாலவனத்தை யடைநது, அஙகுச் சிறிதுநேரம இளைபபாறி அனறிரவிலேயே அவவனத்தைதக கடநது சென்று, அருணோதயகாலத்தில் முனபு வைவஸ்வத மனுவினுல் இயறறபபடடுப பரம்பரையாகப படை வீடாயுள்ள திருவயோத்தியைக் கண்டனர். இவவண்ணம் ஏழுராத்திரி வழியில் தங்கி, எட்டாவதுநாளுதயத்தில் பரதாழவான திருவயோததியை எதிரில் கண்டு சாரதியை நோக்கித் தோப்பாகரே ! இப்பொழுது இத்திரு

வயோத்தியானது மிக மகிழ்ச்சியுள்ளதாகக் காணப்படுகின்றிலது ; முன்பு இத்திருவயோத்தியில் ஆண்பெண்ணடங்கலும் மிக மகிழ்வுகொண்டு பேசுகையில, அவ்வொலி எங்கும் பரவி யொலிக்கும் ; இப்பொழுது அத்தன்மைய தாகிய அவ்வொலியினையுங் கேட்கின்றிலேன் , முன்பு உத்தியான வனங்களில் காமிகள் சென்று, கேளிவிலாசமாக விருந்து, நிரந்தரம் வண்டி தோ யானை குதிரைகளின்மீதேறித் திரிவார்கள் ; இப்பொழுது ஒருவரு மின்மையால், அவ்வுத்தியானங்களே அழுகின்றனபோலும், இத்திருவயோத்தியே எனக்குக் காடுபோலத் தோற்றுகின்றது ; இப்பொழுது முன்போலச் சிறந்த பெரிய மனிதர்கள் யானைகளின்மேலும், குதிரைகளின்மேலும், சிவிகைகளின்மேலும் ஏறிக்கொண்டு, போகவும் வரவுங் காண்கிலேன் ; முன்பு உத்தியானங்கள் தோறும் காமினியர்களுடன் காமிகள் நிறைந்து கலவி இன்பத்தை யனுபவித்து மகிழ்ந்து வாழ்வார்களே ? இப்பொழுது ஒருவரு மின்றிப் பாழடைந் திருக்கின்றது , வழிகளிலும் மரங்கள் இலைகளை யுதிர்த்துத் துன்புறுகின்றனபோலும், பொழுதுவிடிந்தும் மிருக பக்ஷிகளின் தொனி கேட்கப் படுகின்றிலது ; முன்போல மாடமாளிகைகளில் அகிற்புகை கமழுகின்றிலது , வீதிகடோறுஞ் சந்தனச்சார்ந்தந் தெளித்த மணங்கமழ்ந்த வாயுவும் வீசுகின்றிலது ; பேரீ பட்ஹ வீணை வேணு முதலிய வாத்திய கோஷங்களும், முன்போலப் பரவி யொலியாமல் அடங்கி யிருக்கின்றன ; பற்பல அபசகுனங்களையுங் காண்கின்றேன் , அதனால் என் மனம் மிக வருந்துகின்றது ; எவ்விதத்திலும் என் பந்து ஜனங்களுள் யாருக்கோ கடுந்துயரம் நேர்ந்திருக்கின்றதென்பதில் சிறிது மையமில்லை , நன்மைகாண்ப தரிது ; துயரமுறுத்தக்க காரணமின்றியே என் மனம் மிகத் துயரமுறுகின்றது , என்றிவ்வண்ண முரைத்துக் கொண்டே மிகத் துன்பங்கொண்டு வருந்தி, இளைப்புற்றுப் புலன்களொடுங்கிச சிந்தைகொண்டே திருவயோத்தியின் மேல்திசையிலுள்ள வைஜயந்த மென்னுந் துவாரமார்க்கமாகச் சென்று, அங்குள்ள வாயில்காப்போர் முதலியவர்களால், ஜயவிஜயீபவவென்று வாழ்த்தப்பட்டவராகி, அவர்களுடன் கூடி யுள்ளே சென்று, தம்முடன் புகுந்த வாயில்காப்போரைத் திருப்பிவிட்டு, சஞ்சலசித்த முடையராகி, இளைப்புற்ற கேகயமஹாராஜா மந்திரியை நோக்கி, ஸசிவரே ! யான் தூதர்களால் அதிசீக்கிரமாக அழைத்துக்கொண்டு வரப்படவேண்டியதற்குக் காரணம் யாதோ தெரியுமா ? காரணமின்றி இவ்வளவு துரையாக அழைப்பிக்கமாட்டார்கள் ; இந்நகரில் அரசர் இறந்துவிடின், இந்நகர் எவ்வண்ண மிருக்குமென்று யான் கேட்டிருக்கின்றேனே ? இப்பொழுது அவ்வண்ணமே யிருக்கின்றது ; ஆதலின் என் மனம் அசுபத்தையே சிந்திக்கின்றது ; எனது சீலம் கெடுகின்றது போலும், புரமெங்கும் முன்போல விளக்கஞ் செய்திலர் ; கோபுரவாயில் கதவுகளையு மெப்பொழுதுந் திறந்திருக்கின்றனர்கள் ; தேவதாபூஜை முதலியவற்றையுஞ் செய்திலர் ; தூபங் கமழ்வித்திலர் ; மனைகள் தோறும்

ஒருவரும் ஙனகுன்டிலா ; ஒருவரும் மகிழ்வும் ஒளியும் கொண்டு திகழந்திலர் ; எலலாவீடுகளும் பாழடைநதனபோலாகித் திகழ்ந்தில, ஒருவருந தத்தம் வீடுகளைச சுததி செயதிலர் ; தேவாலயங்களும் பாழடைந்திருக்கின்றனவே யனறி, முனபோல விளஙகுகின்றில, தேவபூஜைகளும், யஜ்ஞயாகாதிகளும செய்யபபடுகின்றில ; கடைகளும முன்போலப பரபபப்படுகின்றில ; வைசியாகளும முன்போலத் திரிகின்றிலா, எல்லோருஞ் சிநதைகொணடு செயலற றிருக்கின்றனாகள ; பசுபக்ஷிகளும் அவ்வாறே உறஙகிக கிடககினறன, ஆண்பெணடங்களும கணணீர் பெருககிப் புலம்பி யழுகின்றனர்கள் ; என்ன தீஙகுற றிருககிறதோ ? அறிகின்றிலேன் ; எனறிவவணணம முணைததுககொணடே பாழடைந்த நறசந்தி மாடமாளிகை ராஜவீதிகளை யுடையதும், தூகள படிநது மலின மாகிய துவாரகவாடங்களை யுடையதுமாகி யிருககினற அமராவதி போனற அததிருவயோத்தியைக் கணணுற்று, மிகச சிநதைகொணடு, சககரவாத்தி திருமாளிகை நோககிச சென்று, முனபொருக்காலுங கணணுறாத அரிஷடஙகள பலவறறையுங கணடு மகிழவு குன்றித் தலை வணங்கிககொணடே மனநதளாந்து வருந்தித் தன தந்தையின திருமாளிகைககுச் சென்றனா.

அயோத்தியாகாணடததில எழுபதடுதொன்றாவது சருக்கம முற்றிற்று.

---

## எழுபத்திரண்டா[வ]து சருககம்

கைகேயி பரதாழவானுககு ஸ்ரீராமன் காடேற வெழுநதருளியதையும, சககரவர்த்தியா பொன்னுலக மடைநததையும, மகிழந துரைசெயதது

---

அநந்தரம் பரதாழவான தநதையை அவா திருமாளிகையில காணுமல், மாதாவைக கண்டு விசாரிப்போமெனறு அஙகிருந்து புறபபடடுத் தன் தாயின மாளிகைககு வநது, தாயைத் தூரத்தி லிருந்தே கண்டு விரைவாகவந்தனர். கைகேயியும் நெடுநாளாயத் தேசாந்தரம்போயிருந்து வந்த மகனைக கண்டு பெருமகிழவுகொணடு, பொனமணிகளாற செயயப் பட்ட ஆஸநத்தைவிட டெழுந்து எதிர்கொணடு வந்தனள. பரதாழ் வானும் அருகில் வந்து மாதாவுக்குத் தணடம ஸமர்பபித்து நினறனர். அந்தக கைகேயியும் அம்மைந்தனைத தழுவி உசசிமோந்து மடியி லுட் கார வைத்துக் கொணடு அவரை நோக்கி, அடா என்னருமைத் திரு

மகனே ! நீ யுன் மாதாமகன் திருமாளிகை விட்டுப் புறப்பட்டு எத்தனை தினங்களாயின ; வழிநடத்தலினால் இளைப்புற்றிலையா ? உன் மாதாமகனும், அம்மானாகிய யுதாஜித்தும், குசலமுற்று வாழ்கின்றனர்களா ? நீ இங்கிருந்து புறப்பட்டுப் போனது முதல் சுகமுற்று வாழ்ந்தனையோ ? இவை யாவையும் உரைக்கக் கடவை என்றிவ்வண்ணம் வினவினள். பரதாழ்வார் காதுகேட்டுத் தாயை நோக்கி, அம்மா ! யான் புறப்பட்டு இன்றையதினத்திற்கு ஏழுநாளாகின்றது, உம்முடைய தந்தையரும், உடன் பிறந்தாரும், இன்புற்று வாழ்கின்றனர்கள் அவர்கள் எனக்குக் கொடுத்த வெகுமதிகளெல்லாம் வழியில் வருகின்றன ; சேனைகள் இளைப்புற்றமையால் மெதுவாக நடந்து வருகின்றன ; யான் மாத்திரம் முன் னடந்து விரைவாக வந்தேன் ; தூதர்கள் என்னைத் துரைப் படுத்தினமையால், யான் முன்பு வந்தேன் ; யான் கேட்க விருப்புற்றதை நீ ரருளிச் செய்யக் கடவீர். தேவருடைய படுக்கையும், என் தந்தையரின்றிச் சூனியமா யிருக்கின்றது, இங்குள்ள ஜனங்களும் மகிழ்வுகுன்றி யிருக்கின்றனர்கள். சக்கரவர்த்தியார் தம் திருமாளிகையி லிலராயின், இங்கேயே பெரும்பாலும் எழுந்தருளி யிருப்பாரன்றே ? சக்கரவர்த்தியை அவர் திருமாளிகையில் காணும் லிங்கிருப்பா ரொன்று அவரைக் காண்பதன் பொருட்டிங்கெய்தினேன், என் தந்தையின் திருவடிகளில் தண்டம் சமர்ப்பிக்க வேண்டும் ; அவர் எங்கெழுந்தருளி யிருக்கின்றனரோ ? அதனை யருளிச்செய்யக் கடவீர் ஒருகால் கோஸலையார் திருமாளிகையி லெழுந்தருளி யிருக்கின்றாரோ ? என்றிவ்வண்ணம் வினவினர் கைகேயி அதுகேட்டு பரதாழ்வானுக்குப் பிரியமாகாததைப் பிரியமெனக் கருதி, அவரை நோக்கி, அடா என் பெறலரும் புதல்வா ! ஸர்வபூதங்களுக்கும் கடையில் எந்தக்கதி வாய்க்கின்றதோ ? உன் தந்தையரும் அந்தக் கதியினையே யடைந்தனர் உன் தந்தை மஹாத்துமாவும், புகழுடையவரும், தோள்வலி பொருந்தியவரும், சிறந்த யாகங்கள் செய்தவரும், பெரியோர்களுக்குந் தஞ்சமாகியவரு மாதலின், அவர்க்கு நற்கதி கிடைப்ப தரிதோ ? என்றுரைத்தனள். பரதாழ்வா னவ்வாக்கியத்தைக் கேட் டுடனே பித்ருசோகத்தால் பிடிக்கப்பட்டவராகி, அந்தோ ? அந்தோ ? கெட்டேனென்று தீனமாக மொழிந்து, கைகளை யுயர வெடுத்துக் கொண்டு தரையில் வீழ்ந்து புரண்டு மூர்ச்சை யடைந்து, பின்பு தெளிந் தெழுந்து மதிமயக்குற்றுச் சோகத்தால் விகாரமுற்று, அந்தோ ? இந்தச் சயனமானது முன்பு என் தந்தையினால் அலங்காரஞ் செய்யப்பட்டதாகி, முழுமதியினால் திகழும் ஆகாசம்போல விளங்குமே ? இப்பொழுது அந்தத் திருப்பள்ளி யறையே சக்கரவர்த்தியால் சூனியமாகி, முழுமதி நீங்கிய வானம் போலவும், நீர் வற்றிய அலைகடல் போலவும், திகழ்கின்றிலது ; என்று புலம்பிக் கண்ணீர் பெருக்கி, வஸ்திரத்தால் திருமுக மண்டலத்தை மறைத்துக்கொண்டு, காட்டிடையில் கோடாலியால் வெட்

டப்பட்ட ஸாலமரத்தின் கிளைபோலத் தரையில் வீழ்ந்து, சாபவசத்தால், வீழ்ந்து கிடக்கின்ற தேவகுமாரனைபோல், வாடி வருந்திக் கிடந்தனர். மதயானை போலவும், திங்கள் போலவும், சந்திரவன போலவும் திகழ்கின்ற தன் திருக்குமாரனைக் கைகேயி! தரையினின்றும் அணைத் தெடுத்து, அவனை நோக்கி, அடா என்னருமைத் திருக்குமாரா! எழுந்திரு? எழுந்திரு? ஏன் தரையில் படுத்திருக்கின்றனை? உன்னைப்போன்ற விவேகிகள் எவ்வளவு துன்பம் நேரினும் இவ்வண்ணம் சோகங்கொண்டு வருந்துவார்களோ? வருந்தார்களே, உன்னுடைய புத்தியானது மிகக் கொடை கொடுப்பதற்கும், சிறந்த யஜ்ஞயாகங்கள் செய்வதற்கும் உரியது, சீலமமைந்தது, சுருதிமொழிகளைத் தொடர்ந்தது, சந்திரனுக்குக் காந்தி போல உன்னைவிட்டு எப்பொழுதும் பிரியாததுமன்றோ? என்று நன்மொழி மொழிந்து தேற்றினள். பரதாழ்வாரும் நெடுங்காலம் தரையில் புரண்டழுது மனந்தேறி எழுந்து கைகேயியை நோக்கி, அம்மா! சக்கரவர்த்தியார் எம்மையருக்குப் பட்டாபிஷேகஞ் செய்விப்பாரெனவும், பிறகு சிறந்த யாகஞ் செய்விப்பாரெனவும், எண்ணி மனமகிழ்ச்சி கொண்டு யான் யாத்திரை போயினனே யன்றி வேறில்லையே? இப்பொழுது என்னுடைய எண்ணம் மாறி வேறாக விளைந்ததே? எப்பொழுதும் பிரியமும் இதமும் செய்கின்ற என் தந்தையாரை இப்பொழுது காண்கிலேனே? அம்மா மாதாவே! யான் வருவதன் முன்னமே என் தந்தையார் என்ன வியாதியினால் மரணமுற்றனர்? என் தந்தையார் மரணமுறுங்காலையில் அருகிலிருந்து ஸம்ஸ்காரஞ்செய்த ஸ்ரீராமபத்திரன் முதலானோர் கள்ளவல்லரோ? நலவினையினராகள் யானிப்பொழுது விரைவாக வந்ததையும், என்பிதா அறிந்திலரோ? யான் வந்ததை யறிவாராகில், என்னை யணைத்தெடுத்து உச்சி மோந்து மகிழ்வா ரன்றே? என் தந்தையின் திருக்கரத்தை மீளவும் நான் எங்கே காண்பேன்? என் தந்தையார் புழுதிபடிந்த என் மெய்யினைத் தன் திருக்கரத்தால் தடவி மகிழ்வாரோ? எனக்கு யாவரொருவர் அண்ணனும், தந்தையும், உறவும், ஆகின்றனரோ? யாவரொருவர்க்கே யான் நித்தியதாஸனாகின்றேனோ? அத்தன்மையராகிய ஸ்ரீராமசந்திரர் எங்கே எழுந்தருளி யிருக்கின்றனரோ? அதனை எனக்குரைசெயீர்; மூத்தோரே இளையோர்களுக்குத் தந்தையாகின்றனரல்லரோ? ஆதலின், தருமமுணர்ந்தவரும், எனக்குத் தந்தையருமாகிய எம்மையர் திருவடியிணைகளையே இப்பொழுது தண்டம் சமர்ப்பித்து மகிழ்வேன்; இப்பொழுது அவரொருவரானே எனக்குத் தஞ்சமாகின்றனர்; தருமமுணர்ந்தவரும், தருமவழிப்படியே நடப்பவரும், ஸத்தியவாதியும், அழியாவிரதம் பூண்டவருமாகிய என் தந்தையார் பொன்னுலகமடையுங் காலையில், என்னைவாக்கிய முருளிச் செய்தனர்; அவர் கடையிலருளிச்செய்த கட்டளையைக் கேட்க விரும்புகின்றேனென்று வினவினர். இவ்வண்ணம் வினவப்பட்ட கைகேயியும் பரதாழ்வானை நோக்கி,

அடா என் பெறலரும் புதல்வா! உன் தந்தை கடையில், அந்தோ ராமா
வென்றும், அந்தோ ஸீதாபிராட்டியென்றும், அந்தோ லக்ஷ்மணா வென்
றும், உரை செய்துகொண்டே லோகாந்தர மடைந்தனர். ஸீதா லக்ஷ்
மணர்களுடன் திரும்பித் திருவயோத்திக் கெழுந்தருளும் ஸ்ரீராமனைக்
கண்குளிரக் கண்டு சேவிப்பவர் எல்லரோ? நல்வினையினர்கள் என்னவும்
புலம்பி, உன் தந்தை இறந்தனரென்று கூறினள். பரதாழ்வான் இவ்வாக்கி
யத்தைக் கேட்டவுடனே ஸ்ரீராமாதிகளு மிங்கிலரென்றறிந்து, இருமடங்கு
சோக மதிகரித்து வருந்திப் புலம்பி, மீளவும் தாயை நோக்கி, என்
மாதாவே! கோஸலையார் திருமகனாரும், மிகவும் தருமாத்துமாவுமாகிய
என்னையர் ஸீதா லக்ஷ்மணர்களுடன் இப்பொழுது எங்கெய்தி யிருக்கின்
றனர்; இதனை யருளிச்செய்யக் கடவீரென்று வினவினர். கைகேயியும்
அதுகேட்டு இவருக்குத் துன்பந்தரும் வாக்கியத்தையே இன்பந்தருவ
தாக நினைத்து, இவரை நோக்கி, அடா பரதா! ராமன் ஸீதாலக்ஷ்மணர்க
ளுடன் மரவுரி யுடுத்துத் தவசிபோலத் தண்டகாவன மேறச் சென்றன
னென்றனள். பரதாழ்வான் அதுகேட்டவுடனே தமையனார் ஏதேனும்
தீச்செயல்செய்து காட்டிலோட்டப்பட்டனரோ வென்றெண்ணி, அச்சங்
கொண்டு, மீளவுந் தாயை நோக்கி, அம்மா! ஸ்ரீராமர் வேதியர்களின்
பொருளைப் பறித்துக் கொண்டனரோ? செல்வமுடையோனையாயினும்,
பொருளற்றோனையாயினும் குற்றமின்றியே கொலைசெய்தனரோ? ஒருக
கால் பரத்தையர்களைப் பலாத்காரஞ் செய்தனரோ? அன்றியில்,
கோஹத்தி, பெண் கொலை, சிசுவின் கொலை முதலிய மஹாபாதகஞ்
செய்தனரோ? என்ன காரணத்தினால் என்னையன் தண்டகாவனத்திற்
கோட்டப்பட்டனர். அக்காரணத்தை யுரைசெய்ய வேண்டுமென்று
வேண்டினர். இவ்வண்ணம் பரதாழ்வான் துன்புற்று வினவுகையிலும்,
இவரது மனோபாவத்தை யறியாமலே மடமையால் தான் செய்ததையே
நலமெனக் கருதி இவரை நோக்கி, அடா என் மைந்தா! ஸ்ரீராமனால்
வேதியர் பொருளும் பறிக்கப்பட்டிலது; குற்றமற்ற வொருவரையுங்
கொலை செய்து மிலன்; ஸ்ரீராமன் பரத்தையலார்களைக் கண்களாலும்
பார்த்திலன்; மற்று மொரு வகைக் குற்றமும் ஸ்ரீராமன் செய்திலன்
குற்றத்தினால் காட்டி லோட்டப்பட்டு மிலன்; சக்கரவர்த்தியார் ஸ்ரீராம
னுக்குப் பட்டாபிஷேகம் செய்யும்படி நிச்சயஞ் செய்தனர். அதனை
யானறிந்து உன் தந்தை எனக்கு முன் கொடுத்திருந்த் இரண்டு வரங்
களையும், உனக் கபிஷேகஞ் செய்து பட்டங் கட்டவேண்டு மென்றும்,
ஸ்ரீராமன் காட்டி லுறையவேண்டு மென்றுங் கேட்டுக் கொண்டேன்;
உன் தந்தை சத்தியவாதி யாதலின், அவ்வண்ணமே யாகுகவென்று
ஸ்ரீராமனைக் காட்டிற் கனுப்பி விட்டனர். ஸ்ரீராமன் ஸீதா லக்ஷ்மணர்க
ளுடன் காட்டேறச் சென்ற பின்பு, புத்திரசோகம் பொறாமல் உன் தந்தை
லோகாந்தர மடைந்தனர். ஆதலின், நீயே இப்பொழுது அரசனாகக்

கடவை. உன் பொருட்டே யானிவ்வண்ணம செய்து, ராஜ்ஜியத்தை உன்பாலாக்குவித்தேன்; ஆதலின், நீ சோகத்தையும், ஸந்தாபத்தையும் உற்றக; தீரத்தை மேற்கொண் டுமகிழக; இந்நாடு நகரமெல்லாம உன்னதீனமாயின; ஆதலின, நீ விரைவாக வஸிஷ்டபகவான முதலிய வேதியாகளுடன சககரவாததியாருககு ஸமஸ்காரஞ் செய்துவிட்டுப பட்டாபிஷேகஞ்கொணடு இவ்விராஜ்ஜியத்தைக கைப்பற்றி யாண்டு மகிழவுறக கடவையென்று மடத தன்மையால மகிழந துரைசெயதனள்.

அயோத்தியாகாண்டத்தில் எழுபத்திரண்டாவது ஸர்க்கமுற்றுவே. முற்றிற்று.

---

## எழுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

பரதாழ்வான தாயை யிகழ்ந்தது.

---

பரதாழ்வான இவ்வண்ணம் முரைதத மாதாவின் வாக்கியத்தால் தந்தை யிறந்ததையும, ஸ்ரீராமாதிகள வனவாஸஞ் சென்றதையு மறிந்து, மிகத் துனபுற்றுத தாயை நோககி, அடி! தந்தையையுமிழந்து, தந்தைககு நிகராகிய ஐயனையுந் துறந்து, மிகப பாவியாகிய எனககு இந்த ராஜ்ஜியத தால உண்டாகும பயன யாது? ஸ்ரீராமனையுங் காட்டிலோட்டித் தந்தை யையு மிறககுமாறு செயதா யென்பது, இரணததினமேல உப்புநீர் பூசி யதுபோல மிக வருததுகின்றது, அடி நீ இககுலம முழுதும அழியும் பொருட்டே காளராததிரிபோல நின்றனை, செழுந்தீயென்பதை யறியா மல மனையாளென்று மயங்கினன்றே? என் தந்தை யுன்னைத தழுவியிருந் தழிந் தெரிந்தனா அடி பாவி! என தந்தை யுன்னாலேதானே மரண முறுவிககப பட்டனா நீயும மோகங்கொண்டு இககுலததிற்குச சுகமென் பதை யழித்துவிட்டனை; அடி குலததைககெடுதத கொடும்பாவி! உன்னை மணஞ் செய்து கொண்டே என பிதா மரண மடைந்தனரோ? அடி பாவி! ஸ்ரீராமசந்திரனை என காட்டிலோட்டினை, அவர்தான என காட்டே றெழுந்தருளினா; அடி பாவி! கோஸலையாா ஸுமித்திராதேவி இருவரும உன பொருட்டுப புததிரசோகததினால உயயாாகளோ? அடி பாவி! நீ எனககுத் தாயாய நின்றனையே? அடி பாவி! தாமாத்துமா வாகிய எம்மையர் தமமாதா விடத்திற போலவே உன்னிடத்திலும மிகப பத்திகொண்டு பணிவிடைசெய்து வந்தனரன்றே? பட்டமகிஷியாகியும், கோஸலையாரும் உன்னிடத்தில உடனபிறந்தாளிடததிற்போலவே ஆதரஞ் செய்து வந்தன ரல்லரோ? அடி பாவி! அத்தன்மையராகிய கோஸலை யார் இருககுமாரரும், அத்தன்மைய ராகியவருமாகிய எம்மையனை

மாவுரியுடுத்துக் காட்டேற வெழுந்தருளும்படி செய்தும் துன்புற்றிலை யன்றோ? நாணமும் தோன்றிற்றிலதா? அடி பாவி! மிகவுஞ் சூரரும், தாமாத்துமாவுமாகிய அவனைக் காட்டிலோட்டத்தக்க காரணம் யாதுள்ளது? அடி பொருளாசை யுற்றவளே! எனக்கு ராஜ்ஜியம் வாய்க்கவேண்டு மென்று மொரு பிடியால், எம்மையன் திருக்கல்யாண குணங்களையும் மறந்து, நாணத்தையுந் துறந்து, இவ்வண்ணஞ் செய்தனையென றென்னு கின்றேன், அடி பாவி! மிகச் சூரர்களாகிய ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் காணாமல், என்ன திறமைகொண்டு இவ்விராஜ்ஜியத்தைப் பரிபாலனஞ் செய்வேன்? சக்கரவாத்தியாரும் ஸ்ரீராமர் தோளவலியினாலே பாதுகாக்கப் பட்டவராகி, மேருகிரி தன்னிலுள்ள வனத்தினால் பிறர் புகவொண்ணாது, பாதுகாக்கப் படுவதுபோலத் திகழ்ந்து மகிழ்ந் திருந்தனரோ? மிகத் திறமையுள்ள என் தந்தையினால் பரிக்கப்பட்ட இந்த ராஜ்ஜிய பாரத்தைப் பரிக்கப் பெருங்காளையினால் பரிக்கப்பட்ட சுமையைக் கன்றுக்குட்டி சுமக்கத் திறமையற்றதுபோலத் திறமையற்றவ னாகுவே னல்லது, எவ் வண்ணம் பரிப்பேன், அடி பாவி! உபாயங்களினாலும், புத்தி பலத்தி னாலும், ஒருகா லிவ்விராஜ்ஜியத்தைப் பாதுகாக்க யான் திறமையுடையே னாகிலும், ஒருகாலும் உன்னுடைய கோரிகையை யீடேற்றி இவ்விராஜ்ஜி யத்தைப் பெற்றுப் பாதுகாவேன், அடி பாவி! எம்மையர் உன்னிடத் தில் மாதாவினிடத்திற்போலப் பத்தி செய்திலராகில், யானும் உன்னைத் துறந்து விடுவேன்; அவர் திருவுள்ள மறியாமல் உன்னைத் துறக்க மனம் கொண்டிலேன், அடி பாவி! உனக்கு மிதத்தன்மைத்ததாகிய புத்தி எவ் வண்ணந் தோன்றிற்று; இனி நீ யாவராலும் இகழப்படுவா யன்றோ? அடி பாவி! எமது குலத்தில் மூத்தோர் அபிஷேகஞ் செய்யப் படுகின் றனர்கள், இளையோர்கள் அவர்க்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றனர்கள்; இதுதானே குலமுறை, இதனை நீ கெடுத்தமையால், நீ ராஜநீதியினையும், எமது குலமுறையினையும், அறிந்திலையென்றே எண்ணுகின்றேன், மூத் தோர்க்கு அபிஷேகஞ் செய்வதென்பது அரசர்க ளெல்லோருக்கும் பிரிய மாகும்; எமது குலத்தோர்க்கு மிகப் பிரியமாகும், இவ்வண்ணம் குல முறை வழுவாமல் முறை முறையே வந்த நல்லொழுக்க மானது, உன்னா லிப்பொழுது கெடுக்கப்பட்ட தன்றோ? நீ பிறந்த குலத்திலும், மிகவும் புத்தி யுடையோர்களாகவும், நல்லொழுக்க முடையோர்களாகவும், நற் புகழ் பெற்றோர்களாகவும், பிறந்திருக்கின்றனர்களே? உனக்குமாத்திரம் இக்கொடும்புத்தி எங்குள்ளதாயிற்றோ? அடி பாவி! நான் உயிர்விடத்தக்க துன்பத்தை எனக்கு விளைத்தனையே? அடி சண்டாளி! யான் உன்னு டைய கோரிகையை யொருபொழுதும் நிறைவேறச் செய்யேன்; அடி பாவி! உன் கோரிகையைக் கெடுப்பதன் பொருட்டே யானிப்படியே தண்டகாவனஞ் சென்று, எம்மையனை நல்வார்த்தை சொல்லி எழுந்தரு ளப் பண்ணிக்கொண்டு வருகின்றேன்; அநந்தரம் அவருக்குத் திருவபி

ஷேகஞ் செய்வித்துப் பட்டங் கட்டுவித்து, அவர் மஹாராஜராகி யரசாட்சி செய்கையில், யான் அவர்க்குத் தாஸபூதனாகிப் பெருமகிழ்வுகொண்டு பணி விடை செய்து வருவேன் ; என்றிவ்வண்ணம் வன்மொழிகளால் மாதாவை யிகழ்ந்தும், மலைக் குகையிலுள்ள சிங்கக்குட்டிபோல கர்ஜனை செய்து, சோகக் கடலில் மூழ்கிப் புலம்பினார்.

அயோத்தியாகாண்டத்தில் எழுபத்துமூன்றாவது சருக்கம் முற்றிற்று.

## எழுபத்துநான்காவதுசருக்கம்.

பரதாழ்வான் மீளவுஞ் சினமுஞ் சோகமுங் கொண்டு தாயை யிகழ்ந்தது.

பரதாழ்வான் தாயை இவ்வகையா யிகழ்ந்தும் சினமாறாமல், சோகமும் சினமும் பெருகி, மீளவுந் தாயை நோக்கி, அடி கைகேயி! கொடியவளே! தீச்செயலினளே ! நீ இப்பொழுதே இவ்விராஜ்யத்தை விட்டுச் செல்லக் கடவை. அடி சண்டாளி ! என்னை இறந்தவனென் றெண்ணி யழுது புரண்டு வருந்துக , அடி பாவி ! சக்கரவர்த்தியாயினும், என்னையனாயினும், உன்னை எப்பொழுதாயினு மிகழ்ந்தனரோ ? நீ ஏன் ஒருவரிறக்கவும், ஒருவர் வனம்புகவுஞ் செய்தனை யன்றோ ? அடி பாவி ! நீ இக்குலத்தைக் கெடுத்தமையால், கருவை யழித்த பாவத்தை யடைந்தவளாகின்றனை , ஆகலின், கொடிய நரகத்தையே யடைக , பர்த்தா அடைந்த பொன்னுலகினை யடையாய் , அடி பாவி ! நீ இவ்வண்ணம் மிகக் கொடிய செயல் செய்தமையால், ஸ்ரீராமபிரானைத் துறந்த எனக்கும் மிகப் பயந் தோற்றுகின்றது ; அடி பாவி ! உன் பொருட்டு என் பிதாவு மிறந்தனர் , என்னையரும் அரண்யத்தை யடைந்தனர் , உன்னு லெனக்கு இவ்வுலகினில் அழியாப் பழியும் நேர்ந்தது , அடி பொருளாசை கொண்ட பாவி ! நீ எனக்குத் தாயெனும் பெயரை யுடையவளே யன்றித் தாயல்லை , பகையே யாகினை ; அடி பாவி ! நீ பர்த்தாவையே கொலை செய்தமையால், இனி யுன்னுடன் பேசுவதும் மிகப் பாவத்துக் கிடமாகும் , அடி பாவி ! உன்னால் கோஸலையார் சுமித்திராதேவி முதலிய மாதாக்க ளெல்லோரும் துன்பமடைந்தனரன்றோ ? அடி பாவி ! மிகவுந் தருமசிந்தை யுடைய கேகயமஹாராஜருக்குப் பிறந்திலை , குலத்தைக் கெடுக்கத் தக்க ராக்ஷஸியே ! அக்குலத்தில் பெண்போலத் தோன்றினை ; உன்னால் மிகவுந் தார்மிகராகிய என்னையரைக் காட்டிலோட்டி, என் தந்தையுங் கொலைசெய்யப் பட்டன

ரன்றோ? அடி எனக்குப் பிரியமல்லாச் செயல் செய்து, என்னைப் பழிக்கு ளாக்கினவளே! நீ பாவச் செயல் செய்வதிலே தானே உறுதிகொண்டு செய்த உன் பாவம் என்னையும் பற்றி வருத்துகின்றதே! அடி நரகத்தை யுடையவளே! ஓரே பிள்ளையை யுடைய கோஸலையானை அந்தப் பிள்ளை யையும் விட்டுப் பிரியும்படி செய்து, எந்த லோகத்தை யடைவாயடி பாவி ஸ்ரீராமசந்திரர் பந்துஜனங்க ளெல்லோர்க்கும் மிகப் பிரிய முடைய ரெனவும், அவர் எனக்கு மூத்தோ ராதலின, என் தந்தைக்கு நிகரானவ ரெனவும், அறிந்திலையோ? பிள்ளை யென்பவன் தாயின் அங்கங்களின் ஸாராம்சங்களை யுடையவனாகப் பிறக்கின்றமையால், தாய்க்கு மகனைவிட வேறொருவரும் பிரியமுடைய ராகா ரன்றோ? ஆதலின், கோஸலையார் புத்திர சோகத்தை எவ்வாறு பொறுத் துயிர வாழ்வார்; ஒருகால் நடுப் பகலில் ஒரு கேதாரத்தில் பயிரிடுவோ னொருவ னிரண்டு காளைகளை ஏரில் கட்டி யுழுதுகொண்டு வருகையில, அக்காளைகள நெடுநேர முழுததி லுலும், வெயிலினுலும், மிகவும் இளைப்புற்றிருக்கையிலும், அந்த உழவினன், அக்காளைகளை இளைப்பாற விடாமல் மேன் மேலு முழுத கோல்கொண் டடித்து வருத்தினன், அப்பொழுது ஆகாயத்திற்சென்ற காமதேனு இதனைக கணணுற்று, அந்தோ? என பிள்ளைகள இவவண்ணம் வருத்தமுறுகின்றனவே யென்று சோககீர பெருக்கி யழுதது; அந்த கண்ணீர்க கணங்கள அப்பொழுது தற்செயலாய் அதன் கீழ்ச்சென்ற தேவேந்திரன்மேல் வீழ்ந்தன; தேவேந்திரனும் அந்த நீர்க்கணங்கள மிகவும் பரிமளங்கொண்டு தனமேல வீழ்கையில, இககண்ணீர்த் துளிகள காமதேனுவி னுடையனவே யெனறெணணி, நிமிர்ந்து ஆகாயத்தில் பார்க் கையில், காமதேனுவைக கண்டு அதனை நோககி, அம்மா காமதேனு! நீயே னிவ்வண்ணம் கண்ணீர்விட் டழுகின்றனை; எமக் கேதேனுந் தீங்கு நேர்ந் துளதோ? எனக் கொன்றும் தோன்றற்றிலதே? உளதாயின், உரைசெய்க வென்று வினவினன். அந்த வாக்கியத்தைக் காமதேனு கேட்டுத் தேவ ராஜனை நோக்கி, விண்ணவர் கோமானே! உமக் கொன்றுந் தீங்கு நேர்ந் திலது; யான என் பிள்ளைகள இவவண்ணம் உழுது வருந்துவதைக் கண்டு சோகங் கொண்டு கணணீர்விட் டழுகின்றேனே யன்றி வேறில்லை மக்களுக்கு நிகரானவ ரொருவரு மில ரன்றோ? என்றுரை செய்தது; வானவர் கோமானும், காமதேனு வுரைத்த அந்த வாக்கியத்தைக் கேட்டு, இககாமதேனுவுக்கு அநேகமாயிரம பிள்ளைகள உள்ளவ ரிருக்கின்றன; இவைகளினுலேதானே உலகமெங்கும நிறைந்துளது; அத்தன்மையதாகிய இக்காமதேனுவும், இவவிரண்டு பிள்ளைகள வருந்துவதையும் பொறாமல், இவ்வண்ணம் கண்ணீர்விட டழுகின்ற தன்றோ? ஆதலின், மகனுக்கு நிகராகியவ ரொருவரு மிலரென்று தானும் மனத்தினுள் நேர்ந்து, இம் தொக்குமென் றெண்ணிச் சென்றனன். இவ்வண்ண மநேகமாயிரம் பிள்ளை களை யுடையதும், மேன்மேலும் நினைத்தவாறு பிள்ளைகளை யுண்டுபண்ணத்

தக்க திறமையுடையதும், தெய்வத தன்மை பொருந்தியதும், நல்ல விவேக முடையதுமாகிய காமதேனுவே இவவண்ணந் துனபுற்றுக் கண்ணீர்விட் டழுத தெனின; ஓரே பிள்ளையை யுடைய கோஸலையார் அப்பிள்ளையை விட்டுப் பிரிந்து வருந்துவா ரெனபதி லைய முளதோ? அடி பாவி! இவ்வண்ணம் கோஸலையாரை நீ துன்புறச் செயதமையால, நீ இம்மை மறுமை யிரண்டிலும், அழியாத் துனபத்தை யடைவாய; யானோ? உன்னெண்ணத் தின்படி யொருபொழுதுஞ் செய்யேன; என் தந்தையும, என்னையரும், மகிழவுறுமாறு செய்து, அவாகளுக்குப பூஜைசெய்து நற்புகழினை வளர்ப் பேன; யானிப்பொழுதே சென்று, என்னையரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து, அவருககுப பட்டாபிஷேகஞ் செயவிததுப பாராளச் செய்து, யானே அவாககுப் பதிலாக வனவாஸஞ் செலவேன; அடி பாவி! நீ செய்த கொடும்பாவத்தைப் பொறுததுககொண்டு கண்ணீா பெருக்கி யழுகின்ற நாட்டார் நகரத்தாா முகததில் விழிதது, நாணமற றுய்யேன; அடி பாவி! நீ தீயில விழினும், விழுந தெரிக, தண்டகாவனம் புகினும், புகுந்தலைக; கழுத்தில உள சுருககுப் போட்டுக கொள்ளினும், போட்டுக கொண் டிறகக; உனக் கிவ்வுறை விட்டு, வேறு தஞ்சம கிடைப்ப தரிது; யானும் எம்மையரை யழைப்பித்துப பாராளசசெயது, பழி நீங்கி மகிழ்ந்து வாழவேன்; எனறிவவண்ண மிகழநது, காட்டிடையில் ஈட்டியினுல் குத் தப்பட்ட குஞ்சரம்போலச சினமகொண்டு தணியில் வீழ்ந்து நெட்டுயிரத் துக கண் சிவந்து, வஸதிர மவிழநது, அணிகளா சிதறி, உறசவத்தின முடிவில் இந்திரன துவஜம்போலச் சாயநது புரண்டு மூாசசை கொண் டனா.

அயோத்தியாகாண்டததில எழுபததுநான்காவது சருக்கம் முற்றிறறு.

## எழுபத்தைந்தாவது சருக்கம்.

பரதாழ்வான் கோஸலையாரைக் கண்டு ஸமாதான முரைத்தது.

அனந்தரம் பரதாழவான் நெடும்பொழுது சென்று, மூாச்சை தெளிந் தெழுந்து, கண்களில் நீரத்துளி ததும்பி வருந்தித் தீனயாகிச் சிந்தை யுறறு நிற்கின்ற தாயை நோககி, மந்திரிகள முதலானோா சூழ நிற்கவும், கோபத்தினுல் இகழ நினைத்து, அடி பாவி கைகேயி! யான் ஒரு நாளும் இராஜ்ஜியம் வேண்டுமெனறு விருபபங் கொணடுமிலேன; இவ் விஷயத்தைப் பறறி, உன்னுடன் ஒரு மொழியும் மொழிந்து மிலேன; சக் கரவர்த்தியார் என்னையருககு அபிஷேகஞ் செய்ய முயற்சி செய்ததையும் யானறிந்திலேனே? சத்துருக்கனுடன் கூடி யான் நெடுந்தூரத்தி லிருந்

தேனே ? எம்மையன் வனவாஸமெழுந்தருளுவதையும் யானறிந்திலேனோ? ஸீதாபிராட்டியும், லக்ஷ்மணனும், எம்மையருடன் சென்றதையும் யானறியேனே ? இவ்வண்ணம் யானொரு சங்கதியினையும் அறியா திருக்கையில், இப்பாவி கைகேயி ! எனக்கு அழியாப் பழியினை விளைத்தனளே ? என்றிவ்வகையாகப் புலம்பித் தாயை இகழ்ந்துகொண் டிருந்தனர். கோஸலையார் இவர் கண்டத்தொனியை யறிந்து, ஸுமித்திரா தேவியை நோக்கி, அடி கொடியளாகிய கைகேயியின் குமாரனாகிய பரதன் வந்தான் போலும், யானிப்பொழுதே அவனைக் காண விருப்புறுகின்றேனென் றுரைசெய்து, அவளுடன் கூடிப் பரதாழ்வா னிருக்குமிடம் நோக்கிப் புறப்பட்டனர். பரதாழ்வானும் தன் மாதாவைப் பலவாறாக இகழ்ந்து, கோஸலையாரைக் கண்டு தேறவேண்டு மென்று, சத்துருக்கனாழ்வானுடன் கூடிப் புறப்பட்டுக் கோஸலையார் திருமாளிகைக்கே வந்தனர். அப்பொழுது எதிராக வருகின்ற கோஸலையாரை இவர்கள் கண்டு, சோகத்தைப் பொறுக்க வாற்றலற்று, அவரைத் தழுவிக்கொண்டு கண்ணீர் விட்டு நெடுநேர மழுதனர்கள். கோஸலையாரும் துன்புற்றுப் பரதாழ்வானை நோக்கி, அப்பா கைகேயி குமாரா ! உன் மாதாவினால் உனக்குப் பகையற்ற ராஜ்ஜியம் நிலையுற்றதாக வாய்த்தது, உலகினில் யாவர்க்கும் பொருளாசை யுள்ளதாகு மாதலின், இவ்விஷயம் நீக்குமென வுடன்படுகின்றேன், என் திருக்குமாரனை மரவுரி யுடுத்துத் தவசியாக்கிக் காட்டி லோட்டினளே உன்தாய், அதனா லிவளுக் கென்ன பயன் வாய்த்ததோ ? கைகேயி என்னையும், என் திருமக னிருக்கு மிடத்திற் கோட்டி விடுவளாயின், எனக்குக் கப்பாகும், அன்றியில், யானே ஸுமித்திரையுடன் கூடி, அக்கினிஹோத்திரத்தை முன்னிட்டுக் கொண்டு, என் திருமக னிருப்பிடம் போய்ச் சேர்வேன், அன்றியில், நீயே யாயினும், என்னை யழைத்துக் கொண்டுபோய் என் திருமக னிருக்கு மிடத்தில் விட்டு விட்டு வரக் கடவை. நால்வகைப் படைகளை யுடையதும், தனதான்னியம் முதலிய நற்செல்வம் நிறைந்ததும், அளவற்றதுமாகிய இவ்விராஜ்ஜியம் உன்தாயினால் உன்பாலாக்கப்பட்டது, என்று, இவ்வண்ணம் வன்மொழிகளால், கோஸலையார் பரதாழ்வானை இகழ்ந் துரை செய்கையில், புண்ணை யூசியினால் குத்தினாற்போல மிகவும் வேதனை யுற்று வருந்தி, மதிமயங்கிக் கோஸலையார் திருவடிகளில் வீழ்ந்து, நெடுநேரம் புலம்பி மோக மடைந்து, பின்னர் தெளிந்தெழுந்து, மிகத் துயரங்கொண்டு துன்புறுகின்ற கோஸலையாரை நோக்கித் தாயே ! நானொரு பாவத்தையும் அறியா திருக்கையில், தேவரும் ஏன் என்னை இவ்வண்ண மிகழுகின்றீர், ஸ்ரீராமபிரானிடத்தில் எனக்குள்ள சிறந்த பக்தி தன்னைத் தேவரறிந்திலீரோ? ஸத்தியவாதியும், பெரியோர்களுள் சிறந்தவருமாகிய எம்மையர் வனவாஸமெழுந்தருளியதை யானறிந் திருப்பே னாயினும், அதனைக் கேட்டு யானுகப் புற்றே னாயினும், பல நூல்களை யோதி யுணர்ந்து தெளிந்த நற்புத்தி எனக்குக் கெட்டழிந்து விடக் கடவது.

ప్రైష్యంపాపీయసాంయాతు సూర్యఞ్చప్రతిమేహతు
హన్తుపాదేనగాంసుప్తాం యస్యార్యోనుమతేగతః ||

பரோஷ்யம்பாபீயஸாம்யாது ஸூர்யஞ்சப்ரதிமேஹது
ஹந்துபாதேநகாம்ஸுப்தாம் யஸ்யார்யோநுமதேகத:

தேவர் திருக்குமாரர் வனவாஸ மெழுந் தருளியதை யாவனொருவ னறிந் திருக்கிறானோ? அவன் மிகவும் பாபிகளுக்குத் தொண்டாகக் கடவன். ஸூர்யனுக் கெதிராக மல மூத்திரங்களை விடக் கடவன் இளைத்துப் படுத்துத் துயில்கொண்ட பசுவினைக் காலினா லுதைத் தெழுப்பக் கடவன் யாவ னொருவன் வேலை செய்வோ னிடத்தில் மிகவும் வேலை வாங்கிக் கொண்டு அவனுக்குக் கூலி கொடாமல் மோசஞ் செய்து விடுகின்றானோ? அவனுக் குற்ற பாவத்தையு மடையக் கடவன் பிள்ளைகளைப் போலப் பரிவுடன் பிரஜைகளைப் பாதுகாக்கின்ற நல்ல வேந்தனுக்கே துரோஹஞ் செய்கின்றவர்கள் அடையும் பாவங்களையும் அடையக் கடவன் பிரஜைக ளிடத்தில் ஆறிலொரு பங்கு கப்பம் வாங்கிக் கொண்டும், பிரஜைகளை நீதிப்படி பாது காவாமல் உபேக்ஷை செய்கின்ற ராஜனுடைய பாவத்தையு மடையக் கடவன். யாகத்தில் ருத்விக்குகளுக்கு ஒன்றானைத் தக்ஷிணையாகக் கொடுப்பேனென்று முன்பு பிரதிஜ்ஞை செய்து, பின்பு அதனைக் கொடாமல் மோசஞ் செய்வோருடைய பாவத்தையு மடையக் கடவன் க்ஷத்திரிய குலத்திற் பிறந்து, நால்வகைச் சேனைகளும் நிறைந்த போர்க்களத்தில் பகையாளிக் கெதிராகப் போர் செய்யும்படி நின்று, பின்பு பயந் தோடிப் போகின்றவனுடைய பாவத்தையு மடையக் கடவன் குருவினால் உபதேசஞ் செய்யப்பட்ட ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் மறந்து, அபார்த்தத்தை யுண்மையெனக் கொள்ளக் கடவன் தோழனென்னும் நம்புதலால் ஒருவனா லுரைக்கப்பட்ட கோளினை வெளியிட்டு, அவனுக்குக் காபத்தை விளைப் பவனுடைய பாவத்தையும் அடையக் கடவன் சந்திரன் போன்ற காந்தியும், ஸூர்யன் போன்ற பிரதாபமு முடைய என்னையன் ஸ்ரீராமன் யோத்திக் கெழுந் தருளிப் பட்டாபிஷேகஞ் கொண்டு சிங்காஸனத்தில் வீற்றிருக்கையில், கண்குளிரக் கண்டு களிப்புறாமல், தீவினையனுக் யாவராலும் பழிக்கப் படக் கடவன். அவன் பாயஸத்தையும், எள்ளோதனத்தையும், மாமஸத்தை யும், மற்றுமுள்ள நல்லுணவுகளையும், தேவதாதிகளுக்கு நிவேதனஞ் செய்யாமலே புசிக்கக் கடவன் ஆசிரியர்களையும் அவமானஞ் செய்யக் கடவன். அவன் பசுக்களையும் காலினா லுதைக்கக் கடவன் ஆசிரியர்களை யும் பழிக்கக் கடவன். நட்பினர்களையும் வஞ்சனை செய்யக் கடவன் அவன் நன்றியற்றவனும், பெரியோர்களால் பழிக்கப்பட்டவனும், நாணமற்ற வனும், யாவர்க்கும் பகையினனு மாகக் கடவன். பிள்ளை பெண்டாட்டியை தாய் தந்தை பிருத்தியர்கள் முதலானோர்கள் புசிக்கும்படி யுட்கார்ந் திருக்

கையில், அவர்களை வஞ்சனை செய்து தானொருவனே நல்லுணவைப் புசிக்கக் கடவன். அவன் நல்ல மனையாளைப் புணராமலும், நன்மக்களைப் பெறாமலும், நற்செயல்களைச் செய்து முடிக்காமலும், அற்பாயுவாக இறக்கக் கடவன். அவன் தன் மனையாளிடத்தில் நற்புதல்வனைப் பெறாமல், நல்ல பருவத்திலேயே இறந்துவிடக் கடவன். அவன் ராஜன் மனையாளைக் கொலை செய்த பாவத்தையும், பாலகர்களைக் கொலைசெய்த பாவத்தையும், மூப்பினர்களைக் கொலைசெய்த பாவத்தையும், நல்ல பிருத்தியனைப் பாதுகாவாமல் கைவிட்டவன் பாவத்தையும் அடையக் கடவன். அவன் * லாக்ஷை லவண மாம்ஸங்களை விற்றதனால் கிடைத்த லாபத்தைக் கொண்டு தாய் தந்தை முதலானோர்களைப் பாதுகாத்துத் தரிக்கக் கடவன். மிகவும் கோரமாகிய போர்க்களத்தில் பயந்தோடிப் போகின்றவனை யாவனொருவன் பிடித்தடிக்கின்றனனோ? அவன் பாவத்தையும் அடையக் கடவன்.

కపాలపాణిఃపృథివీ మటతాంచీరసంవృతః
భిక్షమాణోయథోన్మత్తో యస్యార్యోఽనుమతేగతః ॥

கபாலபாணிஃப்ருதிவீ மடதாஞ்சீரஸம்வ்ருதஃ
பிக்ஷமாணோயதோந்மத்தோ யஸ்யார்யோநுமதேகதஃ

எமமையன் வனவாஸமெழுந்தருளியதை யாவனொருவன் உகந்தனனோ? அவன் காபாலிக மதத்தில் சேர்ந்து, மண்டையோட்டைக் கையிலேந்தி யழுக்குத் துணி யுடுத்துப் பித்தேறினவன் போலப் பாருமுழுதும் பிக்ஷையெடுத்துத் திரியக் கடவன். அவன் மத்திய பானத்திலும், பரத்தையர்களிடத்திலும், சூதாடுவதிலும், மிக விருப்புற்றவனாகி, காமமும் சினமும் உற்றுக் கெட்டழியக் கடவன். அவன் தருமத்தைத் துறந்து, தீச்செயல் புரிந்து, அபாத்திரத்தில் கொடை செய்து தீயனாகக் கடவன். அவன் மிகவும் சேர்த்துவைத்த பொருள்களை யெல்லாம் கள்ளர்களுக்குப் பறிகொடுத்துத் துன்புறக் கடவன். காலைமாலை இரண்டு சந்தியிலும், யாவனொருவன் படுத்திருக்கின்றனனோ? அவன் பாவத்தையும், அவனடையக் கடவன். அவன் பிறர் வீட்டில் கொள்ளிவைத்தவன் பாவத்தையும், குருபத்தினியுடன் புணர்ந்தவன் பாவத்தையும், நட்பினனை வஞ்சனை செய்தவன் பாவத்தையும், அடையக் கடவன். அவன் தேவதைகளுக்கும், பிதிரர்களுக்கும், தாய்தந்தைகளுக்கும், பணிவிடை செய்யக்கடவனல்லன்; அவன் ஸத்புருஷர்களது லோகத்தினின்றும் விழக்கடவன், நற்புகழினை யிழக்கக் கடவன். நற்செயல்களைத் துறக்கக் கடவன். அவன் மாதாவின் பணிவிடையை விட்டுப் பயனற்றன செய்யக் கடவன். அவன் அநேகம் பிள்ளைகளை யுடையவனாகியும், செல்வமற்றவனும், பிணிகளால் பீடிக்கப்பட்டவனும், எப்பொழுதும் துன்புற்றவனுமாகக் கடவன்.

---

* லாக்ஷை என்பது, அரக்கு.

ఆశామాశంసమానానాం దీనానామూర్ధ్వచక్షుషాం
అర్థినాం వితథాం కుర్యాద్యస్యార్యోఽనుమతే గతః ॥

ஆசாமாசம்ஸமாநாநாம தீநாநாமூர்த்வசக்ஷுஷாம்
அர்த்திநாம விததாங்குர்யாத் யஸ்யார்யோநுமதேகதஃ.

யாவனொருவன் எம்மையன் வனவாஸமெழுந்தருளியதற் குடன்பட்டவனோ! அவன் ஒரு பயனைக்கோரித் தன்னை நெடுநாளா யடுத்துவந்த அதிதிகளுக்கு ஆசைகாட்டிப் பின்பு அவ்வாசையைப் பயனற்றதாகச் செய்யக்கடவன். அவனெப்பொழுதும் வஞ்சனைசெய்பவனாகியும், கோளுரைப்பவனாகியும், அரசன் தண்டனைக்கு அஞ்சி யொளித்துப் பிழைக்கக் கடவன்.

ఋతుస్నాతాం సతీం భార్యాం ఋతుకాలానురోధినీం
అతివర్తేత దుష్టాత్మా యస్యార్యోఽనుమతే గతః ॥

ருதுஸ்நாதாம ஸதீம் பார்யாம் ருதுகாலாநுரோதிநீம்
அதிவர்த்தேத துஷ்டாத்மா யஸ்யார்யோநுமதேகதஃ.

அவன் கற்புடைய தன்மனையாள் ருதுஸ்நானஞ் செய்து அருகி லிருக்கையில் அவளைப் புணராமல், துர்ப்புத்தியுடையவனாகி அவளை யிகழ்ந்தழியக்கடவன். அவன் தர்மபத்தினியைத் துறந்து பரத்தையைப் புணரக்கடவன். அவன் தன்மக்கள் மரணமுற்றுத் துன்புறுகின்ற அந்தணனுடைய கொடிய பாவத்தை யடையக்கடவன். அவன் நன்னீரையுண்டு பின்பதனை யிகழ்ந்தவன் பாவத்தையும், உணவில் விஷமிட்டுக் கொலைசெய்தவன் பாவத்தையும் அடைந்து நரகத்தில் வீழ்ந்துழலக்கடவன். அவன் வேதியாகளுக்குச் செய்ய முயன்ற பூசையைச் செய்யவிடாமல் தடைசெய்தழிக்கக்கடவன். இளங்கன்றினை யுடைய பசுவினைப் பாலகறந்து துன்னக்கடவன். ஒருவன் மிகப் பிரயாசமுற்றுப் பானீயமளிக்கும்படி கேட்கையில், பானீயமிருக்கையிலும் அதனைக்கொடுத்து அவன் தாகத்தைப் போக்காமல் வஞ்சனை செய்கின்றனனோ? அவன்பாவத்தை யடையக்கடவன். இருவர் ஒரு சங்கதியைக் குறித்து விவாதப்படுகையில் யாவனொருவன் ஒருவரிடத்தில் பக்ஷபாதத்தினால் அவன் ஜயமுறவேண்டு மென்று உண்மை கூறாமல் மொழியுற்று மௌனிபோல இருக்கின்றனனோ? அவனது பாவத்தையு மடையக்கடவன் என்றிவ்வண்ணம் கொடிய ஸத்யஞ்செய்து, பதியினையு மிழந்து, புத்திரனையுந் துறந்து வருந்துகின்ற கோஸலையாரைத் தேற்றித் தாமும் சோகத்தைப் பொறுக்கத் திறமையற்றுத் தரையில் வீழ்ந்தனர். பரதாழ்வான் இவ்வண்ணங் கொடிய சபதங்கள்செய்து துன்புறுகின்ற பரதாழ்வானை நோக்கிக் கோஸலையார், அடா என் புதல்வா! நீ

இவ்வண்ணம துன்புறுகின்றமையால, எனக்குத துன்பம் மேன்மேலும் வளாகின்றது. இவவண்ணம் கொடிய பிரதிஜ்ஞைகளினல என் பிராண னைத் தடைசெயது நிறுததுகின்றனே; நலவினையினுல உன மனம் தரு மததினின்றும வழுவாமல நிலையுற றிருககின்றது; லக்ஷ்மணனபோலவே ஸததியஸநதனுகி என் திருமகனிட்டததில பததியுளளவ ஞகின்றனே; ஆதலின, நீ நெடுநாள வாழநது நறகதி பெறுவாயாக; என்றுரைததுப் பரதாழவானை மடியினமீ து—கார வைத்துககொணடு புலமபி யழுதனா. பரதாழவானும் பலவாறுகப புலமபி யழுது, அடிககடி மோஹமுடைநது மதிமயஙகித தரையில வீழநது, வெமமையாக நெடடுயிாபபு விடடுத் துன்புறறு வருந்துகையில, அவரது சோ கததுடனே யன்றிரவு கழிந் துதயமாயிறறு

அயோததியாகாண்டததில எழுபததைநதாவது சருககம் முறறிற்று.

## எழுபத்தாறுவது சருக்கம்.

வஸிஷ்டபகவான பரதாழவானைத தேறறிச சககரவாத்திக்கு விதிபபடி ஸமஸகாரஞ் செய்வித் தருளியது

மறுநாளுதயததில வஸிஷ்டபகவா னெழுந்தருளிச சோககடலில மூழகிக கிடககின்ற பரதாழவானைக கணடு அவரை நோககிக கோாய ராஜகுமாரா! இனி நீ துனபுறறக, உனககு நலமுண்டாகக கடவது; சககரவாததிககு ஸமஸ்காரஞ் செயயவேணடிய காலம நிகழந்து விடுகின் றது, ஆதலின, அசசடா குகளைக குறைவறச செயக, எனறருளிச செயதனா இவவண்ண மருளிசசெயத வசிஷ்டபகவான வாககியததைக் கேடடுப் பரதாழவான் துனபத்தையடககிச சககரவாததிககுச செயயத தகக சடஙகுகளை முறறும செயய யத்தனஞ் செய்து, தைலகடாஹததி னின்றும எடுததுப பூமியில இடபபடுத துயில கொண்டவாபோ லிருக கின்ற மஹாராஜனை நவமணிக ளிழைததுச சிறந்த சயனத்தில் படுப பித்துச் சோகமடஙகாமல சககரவாத்தியாரை யுத்தேசித்து, எந் தந்தை யரே! உமது திருவுளம யாதோ? யானும், தேசாந்தரஞ் சென்று வராம லிருககையில், எமமையனையும், லக்ஷ்மணனையும், காடடிலோட்டிவிட்டு இவ்வண்ணம் துனபுற்ற என்னையும விடடுவிடடு எங்கே யெழுந்தருளு கின்றீர்; யான உமமையு மிழந்து, எமமையனையுந் துறந் தெவ்வண்ண முய்வேன்; இனி இத்திருவயோத்தியின் யோகக்ஷேமங்களைச் செய்து

பாதுகாக்க வல்லவர் யாவர்? தேவரும் வானுலகஞ் சேர்ந்து, எம்மையரும் வனத்திற் கெழுந்தருளிவிட்டமையால், இந்தப் பூமி மங்கல நாணிழந்தவள் போலத் திகழுகின்றிலது; முழுமதி மறைந்த இரவுபோல ஒளியிழந்திருக்கின்றது; என்றிவ்வண்ணம்புலம்பியழுதனர். அப்பொழுதுவசிஷ்டபகவான் மீளவும் அவனைநோக்கிச சக்கரவர்த்திதிருக்குமாரா! நீ இவ்வண்ணம் வருந்தறக; இப்பொழுது மஹாராஜர்க்குச் செய்யத்தக்க சடங்குகள் மிக வுள்ளன; ஆதலின், நீ அவைகளை யூக்கத்துடன செய்யக் கடவை யென்று தேற்றி யருளினர். பரதாழ்வானும அவவண்ணமே யாகுக வென்று சோகத்தைத யுளளடககி எழுந்து ரித்துவிக்குகள புரோஹிதர் ஆசிரியர் முதலானோர்களைத் துணைப படுததினர். உடனே ரித்துவிககுகளும், மஹாராஜருடைய மனையில் பிண மிருக்கின்றமையால், வெளியில இடப்பட்டிருந்த அக்கினிகளைக் கொணர்ந்தனர்கள். அநநதரம் மஹாராஜனைச் சிவிகையில் ஏற்றிக்கொணடு பரிசாரகாகள கண்ணீர்பெருக்கி யழுது கொண்டே அவனை முதுகாட்டிறகு வஹித்தனர்கள. பொன் தங்கம் பல வகைப்பட்ட ஆடைகள, இவைகளை வழியிலிறைத்துககொண்டே சிலர் சக்கரவர்த்திககு முன சென்றனர்கள. சிலர் சந்தனம் அகில் குக்குலு முதலிய வாஸனைத் திரவியங்களைப் பொடி செய்து இருபுறத்திலும் தூபம் போட்டுககொணடு சென்றனாகள. சிலா சந்தனம் முதலிய வாஸனையுடைய மரங்களின காஷ்டங்களைச் சிதை யடுக்கினர்கள். அநந்தரம் சககரவர்த்தியை ரிதது விக்குகள சிதையி லிடுவித்து, தீயை வளர்த்து மந்திரங்களை ஜபித்து சாஸ்திரபபடி ஸாமங்களையும கானஞ் செயதனர்கள. சக்கரவர்த்தியின தேவிகளும் சிவிகைகளிலும மறறும பமபல வாஹனங்களிலும் ஏறிககொண்டு நகரத்தினினறும புறபபட்டுப் பற்பல ஜனங்களாலும் சூழபபடடவாகளாகி மயானஞ் சோநது, அககினி சயனம் முதலிய யாகங்கள செயதிருக்கினற சககரவாததியையும, ரிதது விக்குகளையும், பிரதக்ஷிணமாக்வும், அப்பிரதக்ஷிணமாகவும் சுற்றி வந்து, கிரௌஞ்சபக்ஷியின் பேடுகளபோலப் புலம்பி யழுதனாகள அவவொலி எஙகும பரவி யொலித்தது; அநந்தரம் கோஸலையாா முதலிய தேவிகள அவவண்ணம புலம்பி யழுது, மீளவும் வாஹனஙகளி லேறிககொண்டு ஸரயூநதியின் கரைசேர்ந்திறங்கிப் பரதாழ்வான மந்திரி புரோஹிதா முதலியவாகளுடன தருப்பணஞ்செய்து நீக்கடனையும் முடிதது நகரஞ்சேர்ந்து ஆசௌசமுடைய பத்துத் தினங்களையும் தரையில்படுத் துனபத்தினால வருத்தப்பட்டுப் போககினாகள்.

அயோத்தியாகாண்டத்தில் எழுபததாறுவது சருககம்
முற்றிற்று.

---

இவ்விடங்களில் சவம் ஆசநதியிலிருககையிலேயே பிளளைகள முதலிய இனத்தார் மாத்திரம் சுறறி வருகினறனாகள; பெணகள சுறறுவதில்லையே யெனில், தேசாசார

## எழுபத்தேழாவது சருக்கம்.

### பரதசத்துருக்கர்கள் மீளவும் சோகம் பொறாமல் புலம்பியது.

அநந்தரம் பத்துநாள்சென்று பதினொன்றாவதுதினத்தில்பரதாழ்வான் தீட்டைக்கழித்து, ஏகாஹஸ்ராத்தஞ்செய்து பன்னிரண்டாவது தினத்தில் ஷோடசஸ்ராத்தம் ஸபிண்டீகரணஸ்ராத்தம் முதலிய சடங்குகளை நிறைவேற்றி, அந்தணர்களுக்கு நவமணிகள், பொருள், அன்னம், சிறந்த வஸ்திரங்கள், பலவகை மணிகள், அளவுகடந்த வெள்ளாடுகள், அநேகமாயிரம் பசுக்கள், தாதிகள், வாஹனங்கள், சிறந்த வீடுகள், இவை முதலிய வற்றைக் கொடை செய்து, சக்கரவர்த்தியின் சரம கைங்கரியங்களை முடித்துப் பதின்மூன்றாவது தினத்தில் உதயகாலத்தில் தந்தையின் எலும்புகளைப் பெறுகைக்குச் சோத்துச் சிதையைச் சுத்தி செய்வதன்பொருட்டு முதுகாட்டிற்கு வந்து சோகம் அடங்காமல் கண்ணீர் ததும்பத் துன்புற்றுத் தந்தையைக் குறித்து இவ்வண்ணம் முறைத்துப் புலம்பலுற்றனர். எந்தந்தையரே! எனக்கு எம்மையரோ தஞ்சமென றென்னை யவர்பொருட்டளித்து விட்டு, அவரையும் காட்டி லனுப்பி என்னைக் கதியற்றவனாக்கித் தேவரும் என்னை விட்டு விட்டுப் பொன்னுலக மடைந்தீரல்லீரோ? எம்மையர் வனவாஸஞ் சென்றமையால், தஞ்சமற்றுத் துன்புற்ற கோஸலையாரையும் விட்டுப் பிரிந்

---

பேதங்களாலும், கற்பஸூத்திர பேதத்தாலும், அவ்வண்ணஞ் செய்வதும் முறையே யென வுணர்க. அவ்வண்ணமே பெண்கள் தருப்பணஞ் செய்வதுமென வுணர்க. ஆகையாலே தானே வேணீஸம்ஹார நாடகத்தில் தாம்புத்திரர் தம்முடன் திரௌபதியையும் தருப்பணஞ் செய்யும்படி யுரைத்ததாகக் கவி யுரைத் திருக்கின்றனன், ஆசௌச முடையார்கள் தனித்தனியே தரையில் படுக்கவேண்டுமென்னும் விதி எல்லோர்க்கும் பொதுவே? (ஷோடசாஹேந பூபாலா) என்று ராஜாக்களுக்குப் பதினாறு தினம் வரையில் ஆசௌசமுள்ளதென்று வசன மிருக்கையில், (பூமௌதசாஹம வயனயந்தசோகம) என்று பத்துத்தினமே இவர்கள் ஆசௌசங்கொண்டிருந்ததாக இருப்பது ஒக்குமோவெனில், ஒக்கும்; (க்ஷத்திரியஸ்துதசாஹேந ஸ்வகர்மநிரதசுசிः) என்று க்ஷத்திரியவம்சத்திற் பிறந்து, தன் தருமத்தை வழுவாமல் செய்து வந்து தூய்மைகொண்டிருப்பவனுக்குப் பத்துநாளே ஆசௌசமென்று விசேஷவசன மிருப்பதால் தசரதசக்கரவர்த்தி அத்தன்மையராதலால், இவர்களுக்குப் பத்துநாளே தீட்டெனப் தோக்குமென வறிக; பரதாழ்வான் வருகிறவரையில் சக்கரவர்த்தியார் மாண்டேறிப் பத்துத்தினம் ஆயினமையால், அதுவரையில் வீட்டில் சவமிருக்கையில், கோஸலையார் முதலானோர் எப்படி யுண்டனர்கள். உணவின்றி எவ்வண்ணம் பிழைத்தனர்கள் எனில், அக்காலத்தவர்கள் மிகத் திறமையுள்ளவர்களாகி நெடுநாள் போஜன மின்றிப் பிழைக்க வல்லவர்க ளாதலின், உண்ணாமலே யிருப்பார்களென வுணர்க; திறமையற்ற பாலவிருத்தாதுரர்களுக்குச் சவமிருக்கையிலும், நித்தியகருமாதிகளுக்குப்போல அசக்தவிஷயத்தில் போஜனத்திற்கும் தத்காலஸுத்தியுள்ளதென வுணர்க.

தெங்கெயதி யருளினீர்; என்று புலம்பி நீறுகிக் கிடந்த தந்தையின் சிதையினைக் கண்ணுற்று மிகப் புலம்பித் துன்பமடைந்து, கயிற்கயிறுகளினால் மேலெடுத்துக் கட்டப்படுகிற இந்திரனுடைய துவஜம் யந்திரம் சாய்வதினால் சாய்ந்து வீழ்வதுபோலத் தந்தை யிறந்தமையால், தரையில் வீழ்ந்து புலம்பினர் பரதாழ்வான் அப்பொழுது இனத்தாரெல்லோரும் அவரைக் கண்டு நல்வினை நீங்கி, வானினின்றும் நழுவிவீழ்ந்த யயாதியென்னு மரசனுக்குத் தௌஹித்திரர்களாகிய ரிஷிகளும் உடன் வீழ்ந்து வருந்துவதுபோலப் பரதாழ்வானைச் சுற்றி வீழ்ந்து வருந்தினார்கள். சத்துருக்கனாழ்வானும், பரதாழ்வான் சோகிப்பதையும் கண்டு, தந்தையினையும் நினைந்து, சோகங் கொண்டு தரையில் மூர்ச்சைகொண்டு விழுந்து வருந்தினர். அப்பொழுது மந்தரையினின்று முண்டாகியதும், மிகக் கொடியதும், கைகேயியெனனும் முதலையை யுடையதும், வரதான மென்னப்படுகின்ற சோக ஸாகரமானது சத்துருக்கனாழ்வானை மூழ்த்தி வருந்தச் செய்தது; பின்பு அவர்கள் மிக வருந்தித் தந்தையை யுத்தேசித்து என் தந்தையரே! மிகவும் ஸுகுமாரரும், இளமைப்பருவம் நீங்காதவரும், எப்பொழுதுந் தேவரால் அன்பு செய்யப்பட்டவரும், இப்பொழு திவ்வண்ணம் புலம்புகின்றவருமாகிய பரதாழ்வானை விட்டு விட்டு எங்கே எழுந்தருளினீர்; தந்தையரே! உணவுகளிலும், பானங்களிலும், சிறந்த ஆடையாபரணங்களிலும், எம்மெல்லோரையும் நோக்கி, உங்களுள் எவரெவர்க்கு எதெது கோரப்படுகின்றதோ? அவரவர் அதனைப் பெற்றுக் கொள்ளுக வென்று அருளிச்செய்து மகிழ்வீரோ? இனி யிவ்வண்ணம் யாவர் செய்வார்கள். இந்தப் பூமியானது மிகக் கடினமாகியது, தேவர் பொன்னுலக மடைந்திருக்கையிலும், இஃது பிளப்புறாதிருந்ததன்றோ? தந்தையரும் வானடைந்து, எம்மையரும் காட்டிலுறைகையில், யானுய்வ தெவ்வண்ணம்? உய்யேன், தீயில் வீழ்ந் திறப்பேன், தந்தையரையு மிழந்து, எம்மையரையுந் துறந்து விட்டுப் பாழ்வீடாகிய இத்திருவயோத்தியு ளொருபொழுதும் புகேன், இங்கிருந்தே தபோவனம் புகுவேன், என்றிவ்வண்ணம் துன்பக்கடலின் கரைகாணாமல் புலம்பி வருந்துகையில், கூடவந்தோர்களும் மிகச் சோகமுற்று வருந்தினார்கள். இவ்விருவரும் இவ்வகையாகப் புலம்பி வருந்தி முறிக்கப்பட்ட கொம்புகளையுடைய காளைகள்போலத் தரையில் வீழ்ந்து புரண்டு வேதனையுற்று வருந்தினார்கள். அப்பொழுது மிகவும் தத்துவமுணர்ந்த வஸிஷ்ட பகவான் பரதாழ்வானை யெணத்தெடுத்து அவரை நோக்கி, ராஜகுமாரா! உன் தந்தையாருக்கு ஸம்ஸ்காரஞ் செய்து இன்றைத்தினத்திற்குப் பதின்மூன்றுநாள், அவருடைய அஸ்தி ஸஞ்சயனாதி சடங்குகள் முடிந்தில; அவை முடிவதன் முன்னமே நீ இவ்வண்ணந் துயரமடைந்தேன் தாமதஞ் செய்கின்றனை; பூதங்களுக்குப் பசிதாகம், சோக மோகம், மூப்பு மரணம் என்னும் மூன்றிரட்டைகள் பரிஹாரஞ் செய்ய வரியன; அவ வித்தையதில் நீ இவ்வண்ணந் துன்புறுவது தகுதியற்றது; என்றருளிச்

செய்து தேற்றி யருளினார். ஸுமந்திரரும் சத்துருக்கனை எடுத்தணைத்து உலகின் தன்மையினையும், தத்துவத்தையும் உரைசெய்து, சோகத்தைப் போக்கித் தேற்றினர். உடனே பரத சத்துருக்கர்க ளிருவரும் எழுந்து, சோகம் தெளிந்து, மழை வெயி லிவைகளினால் வலிகுன்றச் செய்த இந்திரத் துவஜங்கள்போல வாடி வருந்தித் திகழவுற்றுக் கண்ணீர்களைத் துடைத்துக்கொண்டு சிவப்புற்ற கண்களை யுடையவர்களும், தீனமாக மொழிபவர்களுமாகி, மற்றுள்ள சடங்குகளையும் விரைவாக முடிப்பதன் பொருட்டு மந்திரிகளைத் துரைப் படுத்தினார்கள். *

அயோத்தியாகாண்டத்தில் எழுபத்தேழாவது சருக்கம் முற்றிற்று.

## எழுபத்தெட்டாவது சருக்கம்.

சத்துருக்கனுழ்வான் மந்தரையைக் கூந்தலைப்பற்றி யிழுத்துப் சீர்பர்தங்களினூ லுதைத்துப் பரதாழ்வான் கட்டளை யினால விட்டு விட்டது.

அநந்தரம் பரதாழ்வான் எல்லாச் சடங்குகளையும் குறைமுற முடித்து விட்டுத் திருவாணியஞ் சென்று ஸ்ரீராமசந்திரனை நலவார்த்தைசொல்லி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரவேண்டுமென்று கருதத்துக்கொண்டனர். அப்பொழுது சத்துருக்கனுழ்வானும் அவரைநோக்கி, என்னையனே!

---

* இக்காலத்தி லெங்கும் எல்லோரும அஸ்திஸஞ்சயனம, (எலும்பு பெறுக குதல்) தஹனஞ்செய்த மறுநாளே செய்கின்றனர்கள்; தசரதசக்கரவர்த்திக்குப் பதின்மூன்றாவது தினம ஸஞ்சயனஞ் செய்ததாக மொழிந்திருப்பதோ தொக்குமோ வெனில், ஒக்கும்; தீமூற்று மணைந்து சிதை நீருகிய பினபே எலும்பைப் பெறுகக வேண்டு மென்று விதிக்கப்பட் டிருக்கின்றது; திரேதா யுகமாகிய அக்காலத்தில மனிதர்கள்; இக்கால மனிதர்களை விட மிகவும் உயரமும், பருமனும், வலியும், கொழுப்பு முடையவர்களாதலின், அவர்களுடைய சிதை மிகவும் பெரியதா யிருக்கு மாதலின், அந்தத்தீ முற்று மணைந் தாறி நீருவதற்கு ஏறக்குறைய ஏழெட்டு நாளுக்குக் குறையாமல் பிடிக்கும், அப்பொழுது கர்த்தாகிரியையைத் தொடங்கிச் செய்து கொண் டிருக்கையால், நடுவில் வேறுகிய இந்த ஸஞ்சயனக் கிரியையைச் செய்யக் கால மின்மையால், ஸபிண்டீகரண மளவும் செய்து அந்தக் கிரியையை முடித்து விட்டுப் பதின்மூன்றாவது தினத்திலேயே ஸஞ்சயனம் செய்வது அக்காலவழக்க மாருமென வுணர்க. இக்காலத்திற்குத் தக்கபடி முனிவர்கள் கல்பஸூத்திரங்களை செய்தருளி யிருக்கின்றமையால், இக்காலத்தோர் இரண்டாவது தினமே ஸஞ்சயனஞ் செய்கின்றனர்களென வுணர்க.

எல்லாப் பூதங்களுக்கும் துன்பம் நேருங்காலையில், அவர்களுக்குத் தஞ்சமாகியவர் துன்பத்தைப் போக்கவல்ல ஸ்ரீராமபத்திரர் தமக் குற்ற துன்பத்தைப் போக்கிக் கொள்ளாரோ? அத்தன்மையராகிய அவரும் ஒரு பெண்ணினால் காட்டிலோட்டப்பட்டன ரென்பது மிக வியப்புற்றத் தக்கது, பலமும் வீரமு முடைய இளையபெருமா ளாயினும், தந்தையை நிராகரித்து, ஸ்ரீராமசந்திரரை அத்துன்பத்தினின்றும் ஏன் விடுவித்திலரோ? சக்கரவர்த்தியார் பெண்மதிகேட்டு இச்செயல் புரிய எப்பொழுது முயலுகின்றனரோ? அதைக்கண்டு முன்னமே அவரை நிக்கிரஹஞ்செய் தடக்கவேண்டும்; என்றிவ்வண்ணம் முறைசெய்து கொண் டிருக்கையில், கீழவாயிலில் மந்தரை யென்னுங் கூனி பலகலனு மணிந்து, சிறந்த செஞ்சாந்தம் பூசி, ராஜ வஸ்திரங்களையே யுடுத்து, மற்றும் சிறந்த பூஷணங்களையும் பூண்டு, ஒட்டியாணம், அரைஞாண், இவைகளால் கட்டப்பட்டு, கயிற்றினால் கட்டப்பட்ட பெண் குரங்கு போன்றவளாகி வந்தனள். அவளைக்கண்டு வாயில்காப்போர்கள் அவளைப் பிடித்து வந்து சத்துருக்கனாழ்வானை நோக்கி, ராஜகுமாரா! இவளே ஸ்ரீராமபத்திரர் காட்டேறச் செல்லும்படி செய்தவளும், சக்கரவர்த்தியார் பொன்னுலக மடையும்படி செய்தவளுமாதலின், இவளைப் பிடித்துவந்து தேவரீரெதிரில் விட்டோம், இவள் மிகப் பாவியுங் கொடியவளு மாகின்ற னள், ஆதலின், திருவுள்ளப்படி செய்யக் கடவீரென் றுரைசெய்தனர் கள். அப்பொழுது சத்துருக்கனாழ்வான் கடுஞ் சினமும், துன்பமுங் கொண்டு, அவ்வந்தப்புரத்திலுள்ள யாவரையும் நோக்கி, எனக்கும், என் னையர்களுக்கும், என் தந்தையருக்கும், மிகத் துன்பஞ் செய்தவ ளிக் கொடிய கூனியே யாதலின், அத்தீச்செயலுக்குத் தக்க பயனை யனுப விக்கக்கடவள். என்றுரைத்துத் தோழிகளால் சூழப்பட்ட அக்கூனியைப் பிடித்துக்கொண்டு தரையில் புரட்டி யிழுக்கையில், அவள் தோழிமார்கள் எல்லோரும் மிக வருந்தி, சத்துருக்கருக் கஞ்சி யோடிச் சத்துருக்கனாழ வான் மிகச் சினமுற் றிருக்கின்றமையால், நம்மெல்லோரையுங் கூட இவர் கொலைசெய்வார்போலும்; ஆதலின், இவரைத் தடுத்து நம்மைப் பாது காத் தருளும்படி மிகவுந் தருமமறிந்த கௌஸல்யாதேவியையே சரண மடைவோமென் றொருவர்க் கொருவர் சொல்லிக்கொண்டு சென்றனர்; சத்துருக்கனாழ்வானும் கடுஞ்சினத்தால் கூவென்று கூவி யழுகின்ற கூனி யைக் கூந்தலைப் பற்றிக்கொண்டு தரையில்புரட்டி யிழுத்துத் திருத்தாள் களாலு முதைத்து நிற்கையில், அவளணிந் திருந்த அணிகள் சிதறுண்டு

அந்தப பூமியெங்கு முதிர்ந் திறைந்து திகழ்ந்தன ; அதனால அவ்வந்தப புரம் சரத்காலத்தில விண்மீனகளுடன் கூடிய ஆகாயமபோலத் திகழ்ந் தது ; சத்துருக்கனுழவான இவ்வண்ணங் கூனியைபபற்றி யிழுககையில், தடுக்கவந்த கைகேயியை நோககி, மிக வன்மொழி மொழிந்து அவ்ளை வெருட்டி யிகழ்ந்தனா. கைகேயி அமமொழிகளைக கேட்டு மனககவலை பூண்டு இவா என்னையுங கொலைசெயவாரோவெனறஞ்சி, மிகவுந் தார்மிக ராகிய பரதாழவானையே தஞ்ச மடைந்தனள. பரதாழவான கைகேயி தஞ்சமடைந்ததைக கணடு சினமுற்ற சததுருக்கனுழவானை நோககி, அடா தம்பி ! ஒருவரும பெணகொலை செயலாகாதெனறு விதியிருக் கினறமையால, பெணகளை கொலை செய்யத்தககவ ரலலர் ; ஆதலின், பொறுத்தருள ;—

హన్యామహమిమాంపాపాం కైకేయీందుష్టచారిణీం
యదిమాంధార్మికోరామో నాసూయేన్మాతృఘాతకం॥
ఇమామపిహతాంకుబ్జాం యదిజానాతిరాఘవః
త్వాంచమాంచహిధర్మాత్మా నాభిభాషిష్యతేధ్రువం॥

ஹநயாமஹமிமாமபாபாம கைகேயீநதுஷடசாரிணீம
யதிமாநதாாமிகோராமோ நாஸூயேனமாதருகாதகம
இமாமபிஹதாஙகுபஜாம் யதிஜாநாதிராகவஃ
தவாஞசமாஞசஹிதாமாதமா நாபிபாஷிஷயதேதருவம.

எம்மையன் என்னைத் தாயககொலை செய்தேனெனறு சினமுற்று என்மீது திருவுளங கலங்காராகில், யானும மிகப பாவியும, தீசெய லினளுமாகிய இககைகேயியைக கொலைசெயவேன் ; அவருககாகவே இப்பொழு திவளைக கொன்றிலேன ; இககூனியை நீ இவ்வணணம அடித்ததையும எமமைய னறிவாராகில, திருவுளங கலஙகி உன்னுடனும என்னுடனும் ஸமபாஷணஞ் செயயார் ; என றிவ்வணணம ஸமாதானஞ் செயதனர். உடனே சத்துருக்கனுழவான சினநதீாநது அககூனியை விட்டுத் தூரத்திவிடடனர் அவள் கைகேயியி னிடஞ்சென்று பெருமூச் செறிந்து, மிகத் துனபுறறுப புலமபி யழுதனள. இவ்வண்ணம் சததுருக்கனுழ்வானுல புரட்டி இழுத துதைதத தடிககபபட்டுக கண்சுழனறு மதிமயங்கி வலையி லகபபட்ட கிரௌஞ்சபக்ஷியின் பேடுபோல வருந்தி யச்சங்கொண்ட மந்தரையைக் கைகேயி தேறறிச் சமாதானஞ் செயது சோகத்தைத் தணித்தனள்.

அயோத்தியாகாண்டத்தில் எழுபத்தெட்டாவது சருக்கம் முற்றிறறு.

# எழுபத்தொன்பதாவது சருக்கம்

ஸ்ரீபரதாழ்வான் தம்மை யபிஷேகஞ் கொள்ளும்படி யுரைத்தவர்களுடன் யானே காட்டிலுறைவேன், என்னையனே அபிஷேகஞ் கொள்ளவேண்டுமென் றுரைத்துப் பிரயாணப் பட்டது.

அநந்தரம் பதினான்காவது தினம் உதயத்தில் மந்திரி, புரோஹிதர், நாட்டார், நகரத்தார் முதலிய முதன்மையாயினோர்கள் ஒன்று சேர்ந்து, பரதாழ்வானை நோக்கி, மஹாராஜா திருக்குமாரரே! சக்கரவர்த்தியார் இளையபெருமாளுடன் பெருமாளையும் காட்டிலோட்டி விட்டுத் தாமும் விண்ணுலகினை யடைந்தனர், ஆதலின், நீரே எங்களெல்லோர்க்கும் இறையாகக் கடவீர். இவ்விராஜ்ஜியம் அரசனற்றதாகித் தெய்வகதியால் அழிந்துவிடக் கடவதில்லது, ஆதலின், அபிஷேகத்திற்குரிய பதார்த்தங்க ளெல்லாவற்றையும் சித்தஞ் செய்துகொண்டு யாவரும் உம்மை எதிர் பார்த்து நிற்கின்றனர்கள்; ஆதலின், தாதை மூதாதைகளால் பாதுகாக் கப்பட்ட இவ்விராஜ்ஜியத்தைப் பெற்று அபிஷேகம்பூண்டு எம்மைப் பாதுகாத்தருள்க வென் றுரை செய்தனர்கள். பரதாழ்வான் அம்மொழி கேட்டு அபிஷேகத்திற்குரிய அப்பதார்த்தங்களை யெல்லாம் வலம் வந்து அவர்களை நோக்கிக் கேளீர் மஹாஜனங்களே! எமது குலத்தில் மூத் தோர் ராஜராகி யிருப்பதே தகுமல்லது, இளையோர் அரசனாவது தகுதி யற்றதன்றோ! நீவிர் எமக்கு இஷ்டமாகியும், இவ்வண்ணம் முறைசெய்வது தகுமோ? ஸ்ரீராமசந்திரரே எங்களுள் மூத்தோரல்லரோ? ஆதலின், அவரே ராஜராகத் தக்கவர்; யானே அவர்க்குப் பதிலாகப் பதினான்கு வருஷம் வனத்தி லுறைவேன்; ஆதலின், நால்வகைப்பட்ட சேனைகள் சித்தஞ்செய்யக் கடவன, யானே நேரிற்சென்று என்னையரைக்கண்டு தண்டம் சமர்ப்பித்து வேண்டி வனத்தினின்றும் திருவயோத்திக் கெழுந் தருளப் பண்ணிக்கொண்டு வருவேன், இந்த அபிஷேக பதார்த்தங்களை யும் உடன் கொண்டு சென்று, அரணியத்திலேதானே எம்மையருக் கபி ஷேகம் செய்வித்து, யாகத்தினின்றும் அக்கினியைப்போல எம்மையரை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவேன்; இந்த என் தாயென்னப்படுங் கைகேயியின் கோரிக்கையை யொருகாலு மீடேறப்பேறேன்; யானே வன வாஸஞ் செய்வேன்; என்னையரே ராஜனாகக் கடவர். சிற்பிகள் முன் சென்று காட்டு வழிகளைச் செவ்வைப் படுத்தக் கடவர்கள். காப்பவர் களும் அவருடன் சென்று காட்டில் காத்திருக்கக் கடவர்களென் று இனிமையாக மொழிந்தனர். மஹாஜனங்களெல்லோரும் அழு[illegible]

கேட்டு மனமகிழ்ந்து அவரை நோக்கி, ராஜகுமாரரே! வலுவில் வாய்த்த ராஜ்ஜியத்தை ஸ்ரீராமபத்திரர் பொருட்டளிக்க விரும்புகின்றீராதலின், உமக்குப் பெருஞ்செல்வமுண்டாகக் கடவதென றுரைத்து, ஆநந்த நீர்த்துளிகளைக் கண்களினின்றும் சொரிந்து, மீளவும் பரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரரே! உமது கட்டளையின்படி சிற்பிகள் வழியைச் செவ்வைப்படுத்துவதன் பொருட்டும், காப்புவர்கள் காட்டில் காத்திருப்பதன்பொருட்டும், கட்டளை செய்யப்பட்டனர்களென மொழிந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் எழுபத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று

## எண்பதாவது சருக்கம்.

சிற்பிகள் ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீராமசந்திரரிடம் செல்வதன் பொருட்டுக் காடுகளைத் திருத்தி வழி செவ்வைப்படுத்தியது.

அநந்தரம் பூமியின் தாரதம்மியங்களை யறிந்தவர்களும், சிற்பசாஸ்திரங்களை முற்று முணர்ந்தவர்களும், ஸுரங்கை முதலியவற்றை இயற்றுபவர்களும், சிறந்த யந்திரங்கள் செய்பவர்களும், இட்டவேலைகளைச் செய்து கூலிக்குப் பிழைப்பவர்களும், ஸ்தபதிகளும், யந்திரங்களை யறிந்தவர்களும், மரம் முதலிய வற்றைச் செதுக்க வல்லவர்களும், மேடு பள்ளங்களை நிரவ வல்லவர்களும், மரங்களை வெட்ட வல்லவர்களும், கிணறெடுக்க வல்லோர்களும், மாட மாளிகை கட்ட வல்லோர்களும், மூங்கில் களினால் பாய் புட்டி கூடை முதலியவற்றை முடையவல்லவர்களும், அவ்வழியை முன்புணர்ந்தவர்களும், காப்போர்களும் புறப்பட்டு முன் சென்று மிக மகிழ்வினால் மேன்மேலும் செல்லுகையால், பர்வகாலத்தில் கடல்போலப் பொங்கி யொலித்துத் திகழ்ந்தது; முன் சென்ற சிற்பிகளும் மண்வெட்டி புட்டி கோடாலி வாள் உளி ரம்பம் கல்லுளி முதலிய தத்தம் கருவிகளைக்கொண்டு செடி கொடி புதர் கட்டை கல் மரம் முதலியவற்றை வெட்டி வழியை யொழுங்காகச் செய்தனர்கள். சிலர் மரமற்ற விடங்களில் மரங்களை வைத்தனர்கள்; சிலர் கோடாலிகளாலும், கல்லுளிகளாலும், வாள்களாலும், பற்பல விடங்களில் வெட்டினர்கள்; மற்றும் சிலர் விலாமுச்சி முதலிய புதர்களைத் தீயினா லெரித்தனர்கள்; வேறு சிலர் வழியிலுள்ள பாழ்ங் கிணறுகளையும், பெரிய பள்ளங்களையும், மண்களைப்போட்டுத் தூர்த்தனர்கள்; சிலர் மேடுபள்ளங்களை நிரவிச் சம

மாக்கினர்கள்; சிலர் அணைகட்டியே செல்லுத்தக்க விடங்களில், அணைகள் முதலியன கட்டினர்கள்; சிலர் பொடி செய்யத்தக்க சிறுகற்கள் முதலியவற்றைப் பொடி செய்தனர்கள்; சிலர் பிளந்தே செல்லுத்தக்க பெருங்கற்களைப் பிளந்தனர்கள், சிலர் பலவகைப்பட்டுப் பெருகி வருகின்ற நன்னீர்களை யுடைய வாய்க்கால்களைப் பலவாறாக விரைவில் வியற்றினர்கள்; சிலர் நீருள்ள வாபீ கூப தடாகங்களிலும், ஆறுகளிலும், படித் துறை முதலியன கட்டிச் சுகமாக இறங்கும்படிச் செய்தனர்கள்; நீரற்ற விடங்களில் பற்பல சுனைகளையும், ஊற்றுண்டாக்கி நன்னீர் பெருகச் செய்தனர்கள்; இவ்வண்ணம் இவர்களால் இயற்றப்பட்ட அவ்வழியானது சுண்ணம்புபோட்டுக் கட்டடஞ்செய்யப்பட்ட தளவரிசைப் பூமியை யுடையதும், மலர்கள் மலர்ந்த பலவகை மரங்களை யுடையதும், மதமேறிக் கூவுகின்ற பறவைகளை யுடையதும், பதாகைகளினால் அலங்காரஞ் செய்யப்பட்டதும், சந்தன நீரால் நனைக்கப்பட்டதும், பலவகை மலர்கள் இறைக்கப்பட்டதும், மிகவு மழகியதுமாகி, தேவலோக மார்க்கம் போலத் திகழ்ந்தது; அவர்களுக் கெல்லாம் தலைவர்களாகிய அதிகாரிகள் இவ்வண்ணம் வழியைச் செவ்வைப் படுத்தும்படி யாஜ்ஞை செய்து, ஸ்ரீபரதாழ்வா ணிறங்கத்தக்க விடங்களில் தங்கக் கலசங்களை யுயர்த்தியும், மகர தோரணங்களைக் கட்டியும், மேல் கட்டுகளைக் கட்டியும், துவஜங்களை நாட்டியும், மற்றும் பலவகைப்பட்ட அலங்காரங்களைச் செய்தும், சிங்காரஞ் செய்வித்து விளங்கு வித்தனர்கள். சிறந்த நக்ஷத்திரங்களில், நன்முகூர்த்தங்களில், வாஸ்து நூலறிந்தவர்கள் ஸ்ரீபரதாழ்வானுக்குக் கூடாரங்களை யடித்தனர்கள், சில விடங்களில் மாட மாளிகைகளையு மியற்றினர்கள்; அந்த மாளிகைகள் நொய்ய மணல்களையுடைய அகழ்களால் சூழப்பட்டனவும், இந்திர நீலமலைக்கு நிகராயினவும், ராஜவீதிகளால் திகழப்பட்டனவும், மேல் மாளிகைகளாலும், பிராகாரங்களாலும், திகழ்கின்றனவும், பதாகைகளினால் அலங்காரஞ் செய்யப்பட்டனவும், நன்கியற்றப்பட்ட சிறந்த வழிகளை யுடையனவும், மேல் மாளிகைகளினால் ஆகாயத்திற் செல்லுகின்றன போன்றனவும், பலவகை மணிகளிழைத்துத் திகழ்ந் தொளிவிடுகின்றனவுமாகியிருந்தமையால், ஸ்ரீபரதாழ்வானிறங்கத்தக்க விடங்களெல்லாம் அமராவதிபோல விளங்கின, இவ்வண்ணம் அழகியதாகச் சிறந்த சிற்பிகளா லியற்றப்பட்ட அவ்வழி இரவில் நக்ஷத்திரங்களாலும், சந்திரனாலும், அலங்கரிக்கப்பட்ட ஆகாயம்போலத் திகழ்ந்து, பல மரங்களை யுடைய காடுகளடாந்தும், குளிர்ந்து நின்மலமாகிய நன்னீர் பொருந்தியும், பருத்த மீன்கள் நிறைந்தும், பெருகி வருகின்ற கங்காநதி யளவுஞ் சென்று விளங்கிறது.

அயோத்தியாகாண்டத்தில் எண்பதாவது சருக்கம் முற்றிற்று.

## எண்பத்தொன்றாவது சருக்கம்.

### வஸிஷ்டபகவான் ஸபை சேர்த்தது.

அநந்தரம் ஸ்ரீராமசந்திரனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவதன் பொருட்டு, மங்கல காரியங்கள் செய்யப்பட்டும், துன்பங்கள் தீரும்படி நற்செயல் செய்யப்பட்டுமுள்ள அவ்விரவு கழிந்து விடியற்காலையில் ஸூதமாகத வந்திகள் வந்து ஸ்ரீபரதாழ்வானை நற்கவிகளால் துதிசெய்து புகழ்ந்தனர்கள்; தங்கக் கோலினா லடிக்கப்பட்ட பேரியின் ஒலியும் ஒலித்தது; சங்குகளும் ஊதப்பட்டன; இவ்வொலிகள் கலந்து பரவி யுலகமெங்கு மொலிக்கச் செய்தன; இவ்வொலி பரதாழ்வானையும் விழிக்கச் செய்து வருத்தியது, உடனே ஸ்ரீபரதாழ்வான் விழித்தெழுந்து, யானரசனல்லேன், எம்மையனே அரசன், இவ்வாத்தியாதிகள் எனக்குரியனவல்ல என்று அவைகளைத் தடுத்து நிறுத்தி விட்டு, சத்துருக்கனாழ்வானை நோக்கிப் பாராய் சத்துருக்கா! கைகேயி இவ்வுலகினுக்கு மிகவும் அபகாரஞ்செய்தாள், சக்கரவர்த்தியார் என்னிடத்தில் துக்கங்களை வைத்துவிட்டு வானுலக மடைந்தனர்; மிகவும் தார்மிகராகிய அவருடைய தருமமூலமாகிய இந்த ராஜ்ஜிய லக்ஷ்மி ஆற்றிடையில் தளர்கோலற்ற ஓடம்போலச் சுழலுகின்றது; நம்மெல்லோர்க்கும் யாவரொருவர் நாதரோ? அந்த நம்மையர் என் தாயினால் தருமத்தைத் துறந்து, கொடுமை பூண்டு, காட்டி லோட்டப் பட்டனர்; என்றிவ்வண்ணம் புலம்பி யழுவதைக் கண்டு, அந்த அந்தஃப்புரத்திலுள்ள காந்தையர்களெல்லோரும் தீனமாகப் புலம்பினார்கள்; அப்பொழுது வசிஷ்டபகவான் தசரதமஹாராஜருடைய ஸபாமண்டபத்தை யடைந்து, தங்கத்தாலும், நவமணிகளாலும் இயற்றப்பட்டு, ஸுதர்மையெனனும் தேவஸபைபோன்ற அம்மண்டபத்தில் தங்கத்தினா லியற்றப்பட்ட சிறந்த ஆஸனத்தில் மஹாஜனங்களுடன் உட்கார்ந்து தூதர்களை யழைத்து அவர்களை நோக்கித் தூதர்களே! நீங்கள் விரைவாகச் சென்று அந்தணர்களையும், க்ஷத்திரியர்களையும், வைசியர்களையும், அமைச்சர்களையும், அவரவரினத்தோர் தலைவர்களையும், அழைத்துவரக் கடவீர்கள். செயற்குரிய செயல்கள் மிகுந்துள்ளன; அரண்மனை யுள்ளும் ஸ்ரீசத்துருக்கனாழ்வான், ஸ்ரீபரதாழ்வான், யுதாஜித்து, ஸுமந்திரர், மற்றுமுள்ள இஷ்டர்களையும் அழைத்துவரக் கடவீர்களென்று கட்டளையிட் டனுப்பினர்; உடனே தேர்களின்மீதும், குதிரைகளின் மீதும், யானைகளின் மீதும், எல்லோரும் வந்து சேர்கையில், அவ்வொலி மிகப் பரவி யொலித்தது; கடையில் ஸ்ரீபரதாழ்வான் வருவதைக்கண்டு தேவர்கள் தேவேந்திரனைக் கண்டது போலவும், தசரதசக்கரவர்த்தியைக் கண்டதுபோலவும், ஜனங்களெல்லோரும் மகிழ்ந் தெழுந் தெதிர்கொண்டு மரி

யாதை செய்தனர்கள்; அப்பொழுது ஸ்ரீபரதாழ்வானால் அலங்காரஞ் செய்யப்பட்ட அந்த ஸபை தசரதசக்கரவர்த்தியால் அலங்காரஞ் செய்யப்பட்டதுபோலத் திகழ்ந்து, மகரத்தாலும், நீர் யானையாலும் விளங்கி, அலைசலற்ற நீருடையதும், மணிகள் சங்கங்கள் நிறைந்துள்ளதுமாகிய கடல்போலத் தோன்றியது.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்தொன்றாவது சருக்கம் முற்றிற்று.

## எண்பத்திரண்டாவது சருக்கம்

ஸ்ரீபரதாழ்வான் வஸிஷ்டபகவான் முதலிய ஸபையோர்களுடன் தான் அபிஷேகங் கொள்ளேனென்றும், ஐயனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவேனென்றும், முடிவுகூறிப் பிரயாணமாகியது.

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் விண்மீன்கள் திகழ்ந்து விளங்குகின்ற ராத்திரியைப் பூர்ணசந்திரன் காண்பதுபோலப் பெரியோர்களால் நிறைந்த அந்த ஸபையைக் கண்டு தமக்குரிய ஆஸநத்தில் வந்து வீற்றிருந்தனர். அந்தச் சபையார்களது ஆடையாபரணங்களுடைய காந்தியினால் திகழ்ந்து, பண்டித ஜனங்களால் நிறைந்த அந்தச் சபையானது மழைகாலம் நீங்கி, சரத்காலத்தில் பூர்ண சந்திரனையுடைய இரவுபோல விளங்கிற்று; அப்பொழுது வஸிஷ்டபகவான் யாவரும் வீற்றிருக்கக் கண்டு ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்திகுமாரா! உன் தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி பொன்னுலகஞ் சேர்ந்தனர், தனதான்னியங்கள் நிறைந்து செழிப்புற்ற இவ்விராஜ்ஜியத்தை யுனக்களித்திருக்கின்றனர்; ஸ்ரீராமசந்திரனும் பிதருவாக்கிய பரிபாலனமென்னும் சிறந்த தருமத்தையே சிறந்ததென நினைந்து, சந்திரன் காந்தியை யொருபொழுதும் கைவிடாததுபோலத் தந்தையின் கட்டளையைக்கைவிடவிலன; அவனும் இவ்விராஜ்ஜியத்தை யுன்பொருட்டளித்திருக்கின்றனன்; ஆதலின், தந்தையினாலும், தமையனாலும் அளிக்கப்பட்டுப் பகையற்று மகிழ்ந்த மந்திரிகளையுடைய இவ்விராஜ்ஜியத்தை யனுபவிக்கக் கடவை; விரைவாக அபிஷேகஞ் செய்துகொள்ளக் கடவை; நாலு திசைகளிலுமுள்ள எண்ணிறந்த வேந்தர்கள் உன் பொருட்டுச் சிறந்த மணி முதலிய வஸ்துக்களைக் கப்பமாகக் கொணர்ந்தளிக்கக் கடவர்களென்றருளிச்செய்தனர். ஸ்ரீபரதாழ்வானம்மொழியைக் கேட்டு மிகத் துன்புற்று மிகவுந் தருமசிந்தையின ராத

வின், மனத்தில் ஸ்ரீராமபிரானையே தியானஞ்செய்து அன்னப்புள்போன்ற தொனியுடையவரும், யௌவன முடையவருமாயினும், ராஜ்ஜியத்தையும் விரும்பாது, போகத்தையுந் துறந்தவருமாகிக் கண்ணீர்பெருக்கிச சபை நடுவிலேதானே புலம்பி யழுது வஸிஷ்டபகவானை நோக்கி, ஆசிரியரோ! தேவர் யாவுமறிந்தவரும், என கருத்தை யுணர்ந்தவருமாகியும், என்னை நோக்கித் தேவா இவ்வண்ணம அருளிச்செய்தது தகுமோவென்று இகழ்ந்து, பின்னரும அவரை நோக்கி, ஸ்வாமி! வழுவுத லின்றிச செய்யப்பட்ட பிரஹ்மசரிய முடையவரும், கலவிகளை முற்று முணர்ந்தவரும, சிறந்த புத்தி யுடையவரும, தருமத்திலேயே முயற்சி யுடையவருமாகிய எம்மையனுடைய இராஜ்ஜியத்தை என்னைப்போன்றவன் எப்படி பறித்துக் கொள்வான?—

కథందశరథాజ్జాతో భవేద్రాజ్యాపహారకః
రాజ్యంచాహంచరామస్య ధర్మంవక్తుమిహార్హసి॥

கதந்தசரதாஜ்ஜாதோ பவேத்ராஜ்யாபஹாரகஃ
ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய தா்மம்வக்துமிஹாா்ஹஸி.

யான் கைகேயியி னிடத்திற பிறந்தே னாயினும, எனக்குத தந்தை தசரதமஹாராஜரோ யல்லரோ? அவர எம்மையர் விரஹத்தையே பொறு மல உயிரை விட்டன ரல்லரோ? யான அவர குமாரனாகிப் பிறந்து, எம் மையர் விரஹத்தையும் பொறுதது, அவாக்குரிய இவ்விராஜ்ஜியத்தையும எவ்வணணம் பறித்துக் கொளவேன? இந்த ராஜ்ஜியம யாம இருவரும் எம்மையர்க குரியோமே யலலது, யான ஒருபொழுதும் ஸ்வதந்திர னல்லேன், ஆதலின், தேவா இவ்விஷயத்தில தருமததை யருளிச செய்யக் கடவீ ரலலது, பிறர் போலத தருமலலன மொழியற்க; எனக்கு மூததோரும், என்னைவிடத் திறமையுடையோரும, தருமாததுமாவும், திலீப நஹுஷர்கள போனறவருமாகிய எம்மையரோ என் தந்தையா போல இவ்விராஜ்ஜியத்திற குரியவராகுவரன்றி, யானுரியவனாகுவேனோ? நீசர்கள் செயவதற் குரியதும, நற்கதியற்று நரகினை யடையத தக்கதும, மிகப் பாவந் தருவதுமாகிய இந்த ராஜ்ஜியத்தைப் பறிததுக் கொளவ தென்னுஞ் செயலினை யான் செயவேனுகில, இக்ஷ்வாகு குலத்தில யாரொருவனே யலலனோ? குலமுறை கெடுதத கொடும்பாவி யாகுவேன;

యద్ధిమాత్రాకృతంపాపం నాహంతదపిరోచయే
ఇహస్థోవనదుర్గస్థం నమస్యామికృతాంజలిః॥
రామమేవానుగచ్ఛామి రాజాసద్విపదాంవరః
త్రయాణామపిలోకానాం రాజ్యమర్హతిరాఘవః॥

யதிமாதராகருதம்பாபம் நாஹாதத்ப்ரோசயே
இஹஸ்ததோவனதாகஸ்ததம் நமஸ்யாமிகருதாஞ்சலி:
ராமமேவாநுகச்சாமி ராஜாஸதவிபதாமவர:
த்ரயாணுமபிலோகாநாம ராஜ்யமாஹதிராகவ.

எனக்குத் தெரியாமல் என் தாயினால் செய்யப்பட்ட தீச்செய லினையும் யானுகந்திலேன், யானிங்கிருக்கினும் காட்டினிடையி லெழுந் தருளி யிருக்கின்ற எம்மையனையே கைகூப்பித் தண்டம் ஸமர்ப்பிக் கின்றேன்; எம்மையனையே பின்தொடர்ந்து செல்வேன்; அவரோ எனக் கிறை; மூவுலகங்களையும் ஆளவதும் அவர்க்கே தகுதியாகும்; இவ்விராஜ் ஜியத்தை யாளவதற்கும் யான் தகுதியாகேனென்று யாவருங்கேட்டு வியப் பும் மதிப்பும் மகிழ்வு முறுமாறு மொழிந்தனர். சபையாரெல்லோரும் அம் மொழியைக்கேட்டு ஆநந்தநீர்பெருக்கி, ஸ்ரீபரதாழ்வானை போரவுகந்தனர் கள். ஸ்ரீபரதாழ்வானும் மறுபடியும் அவர்களை நோக்கிக் கேளீர் பெரியோர் களே! யானிப்பொழுது புறப்பட்டு வனஞ்சேர்ந்து, எம்மையனைப் பலவித மாகவேண்டித் திருப்பி எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவரும்படி முயற்சி செய்கின்றேன்; ஒருவேளைத் திருப்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரத் திறமையற்றவனாகுவேனாகில், லக்ஷ்மணனைப்போலவே யானும் அவ்விடத்திலேயே வாஸஞ்செய்வேன், தேவர்களுடைய முன்பாகவே எம்மையனைத் திருப்பப் பல முயற்சியும் செய்வேன், சிற்பிகளையும், காப் பவர்களையும் வழியைச் செவ்வைப்படுத்தும்படி யான் முன்னமே கட்டளை யிட்டனுப்பியிருக்கின்றேன், ஆதலின், இப்பொழுது நாம் பிரயாணமாகிப் புறப்பட வேண்டுமென்பதே எனக்குத் தோற்றுகின்றது; என்றிவ் வண்ணம் முறை செய்து, அருகிலுள்ள ஸுமந்த்ரனை நோக்கி, ஸுமந் திரரே! நீர் என்னுடைய கட்டளையினால் விரைவாகச் சென்று சேனா பதிகளை யழைப்பித்துப் பிரயாண மாகும்படி கட்டளை செய்து மற்று முள்ள யாவர்க்கும் இவ்வண்ணம் தெரிவித்து வரக்கடவீரென்று முறை செய்தனர். ஸுமந்திரரும் உடனே மிக மகிழ்வுகொண்டு ஸ்ரீபரதாழ்வான் கட்டளையின்படிச் செய்து வந்தனர். அநந்தரம் ஸ்ரீராமசந்திரனை எழுந் தருளப்பண்ணிக்கொண்டுவரும்படி ஸ்ரீபரதாழ்வான் கருத்துக்கொண்டன ரென்பதை யறிந்து, மிக மகிழ்ந்து பிரயாணம் புறப்படச் சித்தமாயினர்க ளனைவரும்; யோதர்களுடைய மனைவிகளும் இதனை யறிந்து தத்தம் பாத தாக்களை விரைவாகச் செல்லும்படி துரைப் படுத்தினார்கள். ஸேநாபதி களும் குதிரைகளின் மீதும், வண்டிகளின் மீதும், தேர்களின் மீதும் ஏறிக்கொண்டு, படர்களுடன் கூடிய படைகளைப் புறப்படும்படி ஏவினர் கள்; சேனை சித்தமாகியதை யறிந்து, ஸ்ரீபரதாழ்வான் வஸிஷ்டபகவா னெதிரில் ஸுமந்திரனை நோக்கி, என்னுடைய தேரையும் ஸித்தஞ் செய்து வாருமென்று கட்டளையிட்டருளினர் சுமந்திரரும் உடனே அந்த வாக்கியத்தைக் கேட்டு மிக மகிழ்ச்சி கொண்டு சிறந்த குதிரைகளைக்

கட்டிக்கொண்டு தேரை ஸன்னத்தஞ் செய்து கொண்டு வந்தனர். நற்குணங்கள் நிறைந்த ஸ்ரீபரதாழ்வாரும் கானகத்திலிட்டெழுந்தருளி யிருக்கின்ற தம்மையனார் நல்லார்தமை யுரைத்தெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரவேண்டுமென்று நிச்சயங்கொண்டு ஸுமந்திரனை நோக்கித் தேர்ப்பாகரே! நீர் விரைவாகச்சென்று சேனைகளைச் சித்தஞ் செய்வதன் பொருட்டுச் சேனாபதிகளுக்குக் கட்டளை செய்யக் கடவீர். ஸ்ரீராமபத்திரனை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வரக் கோருகின்றேனென்று கட்டளையிட்டருளினார். சூதரும் உடனே மகிழ்ந்து புகழ்ந்துசென்று கூட்டார் நகரத்தோர்களுள் தலைவர்களுடனும், ஸேனாபதிகளுடனும், இஷ்டஜனங்களுடனும், இனத்தார் சுற்றத்தார்களுடனும், கோஸலையார் முதலிய தேவிகளுடனும், ஸ்ரீபரதாழ்வானை கட்டளையை யுரைசெய்து பிரயாணப்படுத்தினார். அநந்தரம் மனைகள் தோறும் பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் முதலிய பலவகைச் சாதியோர்களும் ஒட்டை கோவேறு கழுதை தேர் யானை குதிரை முதலிய வாஹனங்களைக்கட்டி, அவைகளின் மேலேறிக்கொண்டு புறப்பட்டு மகிழ்ந்து திகழ்ந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.

---

வஸிஷ்டபகவான் நிகழ்ந்தனவும், நிகழ்கின்றனவும், நிகழ்வனவும், நன்குணரவல்ல யோக மஹிமை யுடையவ ராதலின், அவர் ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, ஸ்ரீராமபிரானை யழைத்துவரப் புறப்படவேண்டுமென மொழியாது ? அபிஷேகம் பூண்டு அரசாக்ஷி செய்யென வருளிச் செய்ததற்குக் காரணம் யாதெனில், ஒருவனுக்கு ராஜ்ஜியம் வருங்கால் யாவனாயினும் அதில் ஆசைகொள்ளாமல் வேண்டுவதில்லை யென் றுரைப்பரன்றோ ? ஸ்ரீபரதனுக்கும் தம் தாய் செய்தது உகப்பாகவே யிருக்கும், தம் பழியைக் கழித்துக் கொள்வதன் பொருட்டும், பிரஜைகளுக் கிஷ்டமிரா தாதலின், அபிஷேகங் கொண்டாலும் இராஜ்ஜியம் ஒருவழிப்பட் டிராதென்பதன் பொருட்டும், மேலுக்குத் தமக்கு ராஜ்யத்தில் விருப்பில்லாததுபோலப் பாவனைசெய்கின்றானென்று சிலர் நினைப்பார்கள்; ஆதலின், இவருடைய மனோபாவத்தை வெளியிட்டு எல்லோர்க்கும் மெய்ப்பிக்கவேண்டுமென்று அவ்வண்ண மருளிச்செய்தனரென வுணர்க. (ஜீவதோர்வாக்கியகரணாத் ப்ரத்யப்தம்பூரிபோஜநாத், கயாயாம்பிண்டதாநாச்ச த்ரிபி:புத்ரஸ்யபுத்ரதா) என்று, தந்தையின் கட்டளையின்படி செய்யவேண்டுமென்று விதி யிருப்பதால், தந்தையினால் அளிக்கப்பட்ட இந்த ராஜ்ஜியத்தை ஸ்ரீபரதாழ்வான் பெற்றுக் கொள்ளாமல் போவது, தருமத்தைத் துறந்ததாகு மன்றோ வெனில், தந்தை யுரைத்த நற்செயல்களைச் செய்யவேண்டுமென்று அவ்வசனத்திற்குத் தாற்பரியமேயன்றித் தீச்செயலுஞ் செய்யவேண்டுமென்று பொருளன்று; சக்கரவர்த்தியும் கைகேயி நிர்ப்பந்தத்தா லுரைத்தனரேயன்றி, ஆந்தர்மாக வுரைசெய்திலர்; நேராகவுங் கட்டளை செய்திலர்; (குரும்ரஹஸிபோதயேத்) என்று, ஆசிரியர்கள் தப்புரைக்கினும் ஏகாந்தத்தில் தப்பென வுரைசெய்வது ஒக்குமாயினும், அவையி லிகழ்ந்து தொகுமோ வெனில், இவர்க்குச் சோகாதி சயத்தால் கணப்பொழுது அவையெல்லா மொழிந்து கெட்டதென வுணர்க.

## எண்பத்துமூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் புறப்பட்டுக் கங்காநதியை யடைந் திறங்கியது.

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் மறுநாளுதயகாலத்தி லெழுந்து ஸ்ரீராம சந்திரனைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தால் திருத்தேரின்மே லேறிக்கொண்டு புறப்பட்டனர். அவர்க்கு முன் மந்திரி புரோஹிதர்க ளெல்லோரும் குதிரைகள் கட்டி, ஸூரியன் தேர்போலத் திகழ்கின்ற தேர்மேலேறிச் சென்றனர்கள். ஒன்பதினாயிரம் யானைகளும், அறுபதி னாயிரம் படர்களும், கோடி குதிரைகளும் பின் சென்றன; யானை குதிரைகளின்மே லேறிய படர்களும், நடக்கின்ற படர்களும், வில் வாள் முதலிய பலவகை யாயுதங்களையும் தாங்கிச் சென்றனர்கள். கைகேயி ஸுமித்திராதேவி கோஸலையார் இவர்களும் மகிழ்ந்து வாஹனங்களி லேறிக்கொண்டு சென்றனர்கள். மற்றுமுள்ள நாட்டார் நகரத்தார் வர்த்தி கர்கள் சுற்றிலுமுள்ள வேந்தர்கள் முதலிய யாவரும் மகிழ்ந்து, நீருண்ட கொண்டல்போன்ற திருமேனி யுடையவரும், முழங்கா லளவும் நீண்ட திருத்தோள்களை யுடையவரும், சிறந்த தோள்வலி யுடையவரும், அழியா விரத முடையவரும், உலகங்களின் சோகத்தையெல்லாம் போக்க வல்ல வருமாகிய ஸ்ரீராமசந்திரனை நாமெப்பொழுது கண்டு மகிழ்வோமோ? கதிரவன் உதயமாகும் பொழுதே உலகங்களி லெங்கு மடர்ந்த இருளை நீக்குவதுபோலவே ஸ்ரீராமபத்திரரும் கண்டபொழுதே நம்மெல்லோ ருடைய சோகங்களையும் நீக்கி இன்பமுறுவித் தளிப்பார்; என்றிவ்வண் ணம் ஸ்ரீராமபிரானுடைய குணங்களையே எடுத்துப் புகழ்ந்து கொண்டு சென்றனர்கள். இரத்தினவேலை செய்வோர்களும், குயவர்களும், குவிந் தர்களும், படைகள் செய்வோர்களும், மயிலிறகினால் குடை முதலியன செய்வோர்களும், ரம்பத்தினால் கட்டைகளை யறுத்துப் பிழைப்போர் களும், சாணைவேலைசெய்வோர்களும், மணி முதலியவற்றில் தொளைசெய் வோர்களும், தந்த வேலை செய்வோர்களும், சன்னகாரை வேலை செய் வோர்களும், சந்தனம் முதலிய பரிமள வஸ்துக்களை விற்போர்களும், தங்கவேலை செய்பவர்களும், கம்பளம் முதலியவற்றைத் தோய்த் தழுக் கெடுப்பவர்களும், வெந்நீரை தேய்த்து ஸ்நாநம் செய்விப்போர்களும், உடம்பைப் பிடித்து நோயைத் தீர்ப்பவர்களும், வைத்தியர்களும், தூபம் செய்வோர்களும், சாராயம் விற்போர்களும், வண்ணார்களும், தையற் காரர்களும், ஊர்களில் தலைவர்களும், இடைச்சேரியில் தலைவர்களும், வேஷங்கட்டி யாடுவோர்களும், பாடுவோர்களும், மனையாளைக் கூட்டிக் கொடுத்துப் பிழைப்போர்களும், வலைகாரர்களும், சிறந்த பற்பல வேதி யர்களும், இவர் முதலிய பலரோர்களும் வண்டிகளில் சென்றனர்கள்.

எல்லோரும் மகிழ்வுற்று நீரிலாடித் தூய்மைகொண்டு நல்ல வேஷம் பூண்டு, நற்சாந்தம்பூசி, நன்மலர்சூடித் திகழ்ந்தவர்களாகி, ஸ்ரீபரதாழ்வான் பின் சென்றனர்கள் எல்லோரும் இவ்வண்ணம் பற்பல வாஹனங்களிற் சென்று குஹப்பெருமாள் பட்டணமாகிய சிருங்கிபேரபுரத்தில் கங்கையின் கரைசேர்ந்தனர்கள் அப்பொழுது ஸ்ரீபரதாழ்வான் அர்தக்கங்காநதியைக்கண்டு மந்திரிகளைநோக்கி, அமைச்சர்களே! சேனைகளெல்லாவற்றையும் இவ்விடத்திலேதானே யிறக்கக்கடவீர்கள், இன்றைத்தின மிங்கிளைப்பாறி நாளைத்தினம் கங்கையைக் கடந்து செல்வோம்; இந்நதியில ஸ்நானம் செய்து பொன்னுலக மடைந்த என் தந்தையின் பொருட்டுத் தருப்பணஞ் செய்ய விரும்புகின்றே னென்று கட்டளை செய்தருளினார். மந்திரிகளும் அம்மொழிகேட்டு அவ்வண்ணமே யாகுக வென்று அந்தச் சேனைகளைத் தக்கபடி தனித்தனியேயிறக்கினார்கள் ஸ்ரீபரதாழ்வானும் ஸ்ரீராமசந்திரனைத் திருப்புவதையே சிந்தைசெய்துகொண்டு வாஸஞ்செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்துமூன்றாவது சருக்கம் முற்றிற்று.

## எண்பத்துநான்காவது சருக்கம்.

### ஸ்ரீகுஹப்பெருமாள் ஸ்ரீபரதாழ்வானைக் கண்டது.

அநந்தரம் சிருங்கிபேரபுரத்திற் கிறையாகிய ஸ்ரீகுஹப்பெருமாள் பரதாழ்வான் சேனைகள் வந்திறங்கி யிருப்பதைக் கண்டு தம்மினத்தோரைகளை யழைத்துப் பாரீர் கிராதர்களே! இப்பொழு திங்கிறங்கிய இச்சேனை கடல்போலவே எவ்வளவுதூரம் பார்க்கினும் முடிவுபெறாமல பரவியிருக்கின்றது; இதனது கடையை யானறிகின்றிலேன்; இச்சேனைகளுக்கு ராஜன் தசரதசக்கரவர்த்தியார் பிள்ளையாகிய பரதாழ்வானாக யிருக்க வேண்டும்; அவனொருவனே சிமை யத்திமரத்தைத் துவஜத்தில் குறியாகவுடையவன்; அக்குறி இத்தேர்மீது காணப்படுகின்றது; அவனொரு வேளை துர்ப்புத்திகொண்டு வந்திருப்பான்; இவன் வலைகாரர்களைக் கட்டிச் சிறையி லாக்குவானோ? அன்றியில், எம்மையே கொல்வானோ? அன்றியிலே, தன் தந்தை ஸ்ரீராமசந்திரனைக் காட்டிலோட்டித் தனக்கு ராஜ்ஜியத்தை யளித்திருக்கினும், ஸ்ரீராமபத்திரர் வனவாஸந் தீர்ந்து வந்து விடுவாராகில், மீளவும் ராஜ்ஜியத்தை யவர்பொருட் டளிக்கவேணடும்; ஆதலின், இப்பொழுதே காட்டிடையில் தண்டுகளுடன் சென்று அவரைக் கொலை செய்துவிடின், ராஜ்ஜியம் நிலைத்துவிடுமென்னு மெண்ணங்கொண்டு அதன்பொருட்டே வந்தனனோ?—

భర్తా చైవ సఖా చైవ రామో దాశరథిర్మమ
తస్యార్థకామాస్సన్నద్ధా గంగానూపే ప్రతిష్ఠత॥

*பர்த்தா சைவ ஸகா சைவ ராமோ தாசரதிர்மம*
*தஸ்யார்த்தகாமாஸ்ஸன்னத்தா கங்கானூபே ப்ரதிஷ்டத.*

சக்கரவர்த்தித் திருமகனாராகிய ஸ்ரீராமபத்திரர் எனக்குப் பர்த்தாவும் தோழரும் ஆகின்றனர்; ஆதலின், நீங்களெல்லீரும் அவர்க்கு நலம் செய்வதன்பொருட்டுக் கங்காநதியின் கரைசேர்ந்து ஊக்கங்கொண்டிருந்து பாதுகாத்திருக்கக்கடவீர்கள்; தாசர்களெல்லோரும் கங்கையின் கரையிலிருந்து இங்குள்ள நமது ஐந்நூறு படவுகளையும் ஒவ்வொரு படவுக்கு நூறு நூறு போர்கள் வீதம் சுற்றியிருந்து பாதுகாத்து நிற்கக்கடவர்கள்; இந்தப் படவுகளைக்கொண்டு சேனைகள் இந்தக் கங்கையைக் கடந்து செல்லாவண்ணம் காக்கக்கடவர்கள், பரதாழ்வான் கெட்ட எண்ணங்கொண்டு வந்திலனாகில், அதனை யறிந்துகொண்டு பின்பு இவர்களை நாமே தாண்டுவிப்போமென்று கட்டளையிட் டனுப்பிப் பரதாழ்வானைக் காண்பதன்பொருட்டு ஆடையாபரணம் தேன் முதலிய உபஹாரங்களை எடுத்துக்கொண்டு பரதாழ்வா னிறங்கியிருக்கு மிடத்திற்கு வந்தனர். ஸுமந்திரர் இவர் வருவதைக் கண்டு ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரரே! இவ்விடத்தில் அநேகமாயிரம் பந்து ஜனங்களுடன் கூடியவரும், இவ்விடத்திற் கிழியும், இந்தத் தண்டகாரணியத்தில் திரிந்து அங்கங்குள்ள விசேஷங்களை யறிந்தவரும், மூப்பினரும், பல நூல்களைக் கற்றவரும், ஸ்ரீராமசந்திரருக்குத் தோழரும், வேடர்களுக்கு ராஜருமாகிய குஹப்பெருமாளென்பவரொருவ ரிருக்கின்றனர், அவரே தேவரைக் காண்பதன்பொருட்டு வந்திருக்கின்றனர்; ஆதலின், அவர் தேவரைக் காணக்கடவர். ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளெழுந்தருளி யிருக்கு மிடத்தையும் இவர் நன்குணர்ந் திருப்பரென் றுரை செய்தனர். ஸ்ரீபரதாழ்வா னிவ்வாக்கியத்தைக் கேட்டவுடன் ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! குஹப்பெருமாளென்னை வந்து காணக என்றனர்; உடனே ஸுமந்திரர் குஹப்பெருமாளுக் கறிவிக்க, குஹப்பெருமாளும் அநுமதிபெற்று மகிழ்ந்து இனத்தாருடன் வந்து ஸ்ரீபரதாழ்வானைக் கண்டு விநயத்துடன் அவரை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரரே! தேவரெழுந்தருளுவதை யடியேனுக்கு முன்பே யறிவித்தால் எதிர்கொண்டுவந்து எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வாரேனோ? தெரியாமலே இவ்வண்ணம் வந்திறங்குவது தகுதியோ? எம்மை வஞ்சனைசெய்து இவ்விடத்தை யுத்தியான வனமாகச் செய்தருளினீர், அடியோங்கள் தேவர்க்குத் தொண்டர்களாதலின், எமது மனை தேவருடையதே யாதலின், இங்கு வாஸஞ் செய்தருள்க; வேடர்களாற் கொண்டு வரப்பட்ட வேர் கிழங்கு கனி காய்களும், புதிய மாம்ஸமும், பழைய மாம்ஸமும், மிகவும் மிகுதியா

யிருக்கின்றன; ஆதலின், நீவருடைய இந்தத் தானை இவைகளை நன்குண்டு இன்றிரவை இங்குத் துயினறு போக்கக் கடவதெனக் கோருகின்றேன் என்னால இஷ்டப்படி பூஜை செய்யப்பட்டவராகி நாளைத்தினம் சேனைகளுடன் எழுந்தருளக் கடவீரென்று வேண்டி யுரை செய்தனர்

அயோத்தியாகாண்டத்தில எண்பத்துநான்காவது சருக்கம்

முற்றிற்று.

## எண்பத்தைந்தாவது சருக்கம்.

குஹப்பெருமாள வருந்துகின்ற ஸ்ரீபரதாழ்வானைத் தேற்றியது.

ஸ்ரீபரதாழ்வானிவவணணம் குஹபபெருமாளாலுரைககப்பட்டவராகி யவரை நோக்கி, நிஷாதராஜரே ! எமமையா தோழரே ! நீ ரொருவரே என னுடைய மிகுந்த ஸேனையைப பூஜிக்க மிக விருபபுறுகின்றீரோ ? இவ வண்ண மாதரஞ் செய்வதினாலேயே யான் பூஜைசெய்யப்பட்டே னென்று உபசாரமாகவுரைத்து மீளவும் அவரை நோக்கி, வேடர் வேந்தரே ! இவ விடம் மிகவும மரங்களடர்ந்து புகுவதற் கரியதா யிருக்கின்றதே ? இக கங்காநதியும் தாண்டற கரிதாகிக காணபபடுகின்றது , ஆதலின, இந்நதி யினை எவவண்ணம் தாண்டி எவவழியால பரத்துவாஜர் ஆசிரமத்திற்குச் செல்வேன ; இதனை யுரைசெய்கவென்று வினவினர் குஹப்பெருமாள அதுகேட்டு அவரை நோக்கி, ராஜகுமாரரே ! விலலைக கையிலேந்திய வேடர்கள தேவருடன் வழி காட்டுவதன் பொருட்டு வருவார்கள ; யானும தேவருடன பினறொடர்ந்து வருவேன ; ஆதலின, தேவர் ஒன்றுககுஞ் சிந்தையுறறக ; அடியேன ஒன்று கேட்கின்றேன் , அதனைச் செவியுற்றுச சீற்றமுறாது மகிழ்ந்து விடை யுரைசெய்க , மிகவும் நற்செயலினராகிய ஸ்ரீராமசந்திரரிடத்தில பகைகொளளாது பததிகொண்டு செல்லுகின்றீரோ? தேவருடைய மிகுந்த இச்சேனையைக் கண்டதனா லெனக்குச சங்கை தோற்றுகின்றது ; ஆதலின, யான் வினவினேனேயன்றி வேறிலலை என்று கைகுவித்து விநயமாக வினவினர். இவவண்ணம் வினவிய குஹபபெருமானை ஸ்ரீபரதாழ்வான் நோக்கி, ஆகாயம்போல நிர்மலமாகியவ ராதலின், 'பிற்றற்று மொழியலுற்றனர்.

మాభూత్స కాలో యత్కష్టం నమాం శంకితుమర్హసి
రాఘవస్సహి మేభ్రాతా జ్యేష్ఠః పితృసమో మతః॥

மாபூத்ஸகாலோயத்கஷ்டம் நமாம்சங்கிதுமாஹஸி

ராகவஸ்ஸஹிமேப்ராதா ஜயேஷ்ட்ட்ஃபித்ருஸமோமதஃ.

கேளீர் நிஷாதாதிபரே எக்காலத்தில் நீ ரையமுற்றபடி துன்பம் வாயக்கின்றதோ ? அக்காலம் ஒருபொழுதும் நேரவேண்டாம் ; நீர் என் விஷயத்தில் இவ்வண்ணம் ஐயமுற்றாக ; ஸ்ரீராமசந்திரர் எனக்கு மூத்தோராதலின், தந்தைக்கு நிகராயினவ ரல்லரோ ? அவரைத் திருப்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவதன்பொருட்டே யான செல்லுகின்றேன் நீர் வேறென்னம் கொள்ளற்க , யான உம்முடன ஸத்தியமாக வுரைக்கின்றேனென் றுரை செய்தனர். குஹப்பெருமானும் அவ்வாக்கியத்தைக் கேட்டு மிக மகிழ்ந்து புளகாங்கிதராகி, ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரரே !—

ధన్యస్త్వం నత్వయాతుల్యం పశ్యామిజగతీతలే
అయత్నాదాగతంరాజ్యం యస్త్వంత్యక్తుమిహేచ్ఛసి॥

தனயஸதவமநதவயாதுலயம பசயாமிஜகதீதலே
அயதநாதாகதமராஜயம யஸதவநதயகதுமிஹேசசஸி.

முயற்சியின்றி வலுவில் வந்த ராஜ்ஜியத்தைத் துறந்துவிட நீர் இச்சைகொண் டிருக்கின்றமையால, இவ்வுலகினில் நீ ரொருவரே நல்வினையினர் இவ்வுலகில வேறொருவரையும உமக்கு நிகரானவராக கண்டிலேன் உமக்குச சிறந்த புகழ மூவுலகிலும அழிவற்று நிற்கும ; கானகத்தினைச் சேர்ந்து துன்புறுகின்ற ஸ்ரீராமசந்திரரைத் திருப்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரக் கோருகின்றீ ரல்லீரோ ? என்றிவ்வண்ணம் மகிழ்ந்து புகழ்ந் துரைசெய்துகொண் டிருக்கையில், கதிரவனும் ஒளிகுன்றி மறைந்து இரவுமவிளர்ந்தது; ஸ்ரீபரதாழ்வானும் சேனைகளை யவ்விடத்திலிறக்கிக் குஹப்பெருமாளால் புகழப்பட்டவராகிச் சத்துருக்கனாழ்வானுடன் சயனத்தில் படுத்துத் துயில்கொள்ளாமல் ஸ்ரீராமபிரானுடைய சிந்தையென்னும் சோகாக்கினி உள்ளே பற்றிய காட்டுத் தீயினால, செழித்து வளர்ந்த மரம் எரிக்கப படுகின்றதுபோலச் சுட்டெரிக்கப்பட்டவராகி வருந்தினர். அப்பொழுது அவருடைய அவயவங்களினின்றும் புழுக்கநீர் கதிரவன் கிரணங்களா லுருக்கப்பட்ட இமயமலையினின்றும் பனிநீர் பெருகுவதுபோலப் பெருகிறது ; சிந்தையென்னும் குகைபற்ற சிலைகளை யுடையதும், பெருமூச்சென்னும் தாதுக்களையுடையதும், தீனமென்னு மரங்க ளடர்ந்ததும், சோகாயாஸமென்னு முயர்ந்த சிகரத்தை யுடையதும், மோஹமென்னும் சிறந்த ஜந்துக்களை யுடையதும், ஸந்தாபமெனனும் ஒஷதி மூங்கில் இவைகளை யுடையதுமாகிய துக்கமென்னு மலையினால் மோதப்பட்டவராகி, ஸ்ரீய

தாழ்வான் பெருமூச்செறிந்து மிக வருந்தி மோஹமடைந்து மிகவும் ஆபத்தையுறநாத் துன்பககடலின் கரைகாணுமல, தன்னினத்தை விட்டுப் பிரிந்த ரிஷபம்போல மனக்கவலைபூண்டு தவித்தனர்; அப்பொழுது குஹப்பெருமாள பலவிதமாகச் சமாதான முரைத்துத் தேற்றினர்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பதைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## எண்பத்தாருவது சருக்கம்.

குஹபபெருமாள இளையபெருமாள துனபுறறுப புலமபியதை யுரை செய்தது.

அநந்தரம் குஹபபெருமான் ஸ்ரீபரதாழவானைநோக்கி, இளையபெருமாளுடைய நற்குணஙகளையும், ஸ்ரீராம பத்தியையும மொழியலுற்றனா, "கேளீர் சககரவர்த்தி குமாரரோ! இவவிடத்தில் ஸ்ரீராமபததிரா எழுந்தருளியிருக்கையில், இரவில பெருமாள திருபபளளியில் படுத்தருளியபின்னிளையபெருமாள துயிலற்று, வில் முதலிய படைகளைக்கையிலேநதி, உலாவிக்கொண்டு பெருமாளைப் பாதுகாத் திருககையில், யான் அவரைநோக்கி இளையபெருமாளே! தேவாபொருட் டிங்குப படுககை யியற்றுவித திருககின்றேன, இதில் படுத்துத் துயில்க; யாங்கள இரவிலும கண்விழித்து வருந்தத் தககவாக ளாதலின, கண்விழித் தூக்கததுடன பாதுகாககினறோ மென்று வேண்டினேன்; அதறகு இளையபெருமாள எம்மை நோக்கி, நிஷாதாதிபரோ! எம்மையர் பிராட்டியாருடன் பூமியில படுத்திருக்கையில், எனக்குத் துயிலாயினும், உயிர்வாழக்கையாயினும், ஸுகமாயினும், எவவண்ணம் நேருமா, இவா தேவா ஸுராதி ஸகல பூதங்களாலும் போரில் வெற்றிகொளள வொண்ணுத சூராராயிருந்தும், தருமத்தினல கட்டுண்டு புற்களால் செய்த படுககையில் பிராட்டியாருடன படுததிருககின்றனர் பாரீர்; இவா மிகுநத தவத்தினாலும், விரதோபவாஸாதி நியமஙகளினாலும் அவதரித்தனா; இவர் வனவாஸ மெழுந்தருளியபின் எம தந்தை நெடுநாள உயயார்; விரைவில அவர் பூமி கைம்பெண்ணுகும்; இன்றிரவில் யாவரும் புலம்பி யலுப்புற்று வருந்துவார்கள; கோஸலையார என் மாதா என் தந்தை இம்மூவரும் இன்றைத்தினம் பிழைத்திரார்கள்; என் தாய் சத்துருக்கனிடத்தில் அன்பினுல் பிழைக்கினும், கோஸலையார் எவ்வண்ணம் பிழைப்பர்; நிகழ்ந்தது நிகழ்ந்ததே யன்றி, நிகழுமதாகுமோ? என் தந்தை எம்மையருக் கபிஷேகஞ் செய்விக்காமலே தம் விரு

ப்ப மீடேறுந்து இறப்பாரந்தோ ! என் தநதையார் இறக்குங்காலையில் அருகி லிருந் தவருக் தச் *சரமகைங்கரியம் செய்பவர்க ளல்லரோ நல்வினையினர் ; மிகவும் செழிப்புள்ள திருவயோத்தியில் இனபுறறனாக ளல்லரோ வாழ் வார்கள ; எம்மையர் வனவாஸம் தீர்ந்து மீளவும் திருவயோத்தி சேருங் காலமும் நேருங்கொலோ ? என றுரைத்துப புலமபினா. இவவண்ண மிவர் புலம்பி நிற்கையிலே இரவும கழிந்து பொழுதும் விடிநதது ; மறுநா ளுத யத்தில் ஸ்ரீராம லக்ஷ்மணாக ளிருவரும ஜடை திரித்துககொண்டு என் னுலேதஙனே இக்கஙகாநதியினைத தாண்டுவிககப் படடவாகளாகி எழுந் தருளினாகள ; உடனே யவர்கள பிராட்டியாருடன தென்திசை நோக்கிச் செலலுகையில், சிறந்த ஆயுதங்களை யுடையவாகளும, ஜடை யுடையவர் களும், மரவுரி யுடுததவர்களும, சிறநத மத்தகஜம போனறவர்களும், சிறந்த தோளவலி யுடையவர்களுமாகி எமககு விடைகொாத்து மிக வூக்கத் துடன எழுந்தருளினாகள *

அயோத்தியாகாண்டததில் எண்பததாறுவது சருக்

முறறிறறு.

---

## எண்பத்தேழாவது சருக்கம்

குஹப்பெருமாள ஸ்ரீபரதாழவாலுககு விளவபபடடு, அவவிடததில் ஸ்ரீராமசநதிரா எழுநதருளியிருநத வகையை யுரைசெயதது.

---

என்றிவவண்ண முரைககப்படட குஹபபெருமாளுடைய வாககியத் தைக் கேட்டு ஸ்ரீபரதாழவான் அவவிடததிலேதானே திகைத்துச சிந்தை கொண்டு மிகவும் ஸுகுமாரரும், சிறநத தோளவலி யுடையவரும், நீணட புஜமுடையவரும, தாமரை யிதழ்போன்ற திருககணகளை யுடையவரும், யௌவன முடையவரும, கண்ணிற கினியவரு மாதலின், மிக வருந்திக் கணப்பொழுது சென்று தாமே தேர்ந்து, அஙகுசத்தினலடிககபபட்ட மத யானைபோலத தரையில் வீழ்நது வருநதினர் அருகிலுள்ள ஸ்ரீசத்துருக்க னழவான அவரைக் கண்டு மிகச சோகங் கொண்டு தாமும் தரையில் வீழ் ந்து அவரைக கட்டிக்கொண்டு புலம்பி யழுகையில், அந்த அழுகுரல்

---

* இச்சருக்கத்தில ஐம்பததொனறுவது சருக்கததிலுள்ள சுலோகஙகளே பல வாக அருளிச்செய்து, இளையபெருமாளுடைய வாககியததை யநுவாதஞ்செய் திருக் கின்றமையால், இதில் சில சுலோக தாறபரியம் விடடிருக்கினும், ஐம்பத்தொன்றுவது சருக்கத்தில் காணக.

கேட்டுக் கோஸலையார் முதலிய தேவிகளெல்லோரும் அவ்விடத்தில் வந்து இஃதென்னவென ஐயமுற்று, உபவாஸத்தாலும், சோகத்தாலும் மிளைப்புற்று, எல்லோரும் அவனிருவரையுஞ் சூழ்ந்து தழுவிப் புலம்பினார்கள். அப்பொழுது கோஸலையார் ஸ்ரீபரதாழ்வானைத் தம திருமகனைப்போலத் தழுவிக்கொண்டு அழுது கடையில ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, அடா அரும் புதல்வா! நீயேனிவ்வண்ண மிப்போழ்து அதிகமாக வருந்துகின்றனை; உனக்கேதேனும் பிணி தோன்றிற்றன்றே? இப்பொழுது எம்மெல்லோருடைய வாழ்வும் உன்னுடைனமன்றோ? என் திருமகன் தம்பியுடன் வனவாஸஞ் சென்றிருக்கையிலும், உனனைக் கண்ணுற்றே பிழைக்கின்றேன்; உன் தந்தையர் பொன்னுலக மடைந்து விட்டமையால், இப்பொழுது எமக்கு நீ யொருவனே கதியாகின்றனை; லக்ஷ்மணனுக்காயினும், என் திருமகனுக்காயினும், ஸீதைக்காயினும், ஏதேனும ஆபத்து நேர்ந்ததாகக் கேட்டனையோ? ஏனிவ்வண்ணம் துன்புறுகின்றனை என்று வினவி யழுதனர். ஸ்ரீபரதாழ்வானும் முஹூர்த்தகாலஞ்சென்று சோகத்தை யடக்கி மனந்தேர்ந்து, கோஸலையாரையுந் தேற்றி, குஹப்பெருமானை நோக்கி, கிராதராஜரே! என்னையா இங்கிரவில எங்கு வாஸஞ்செய்தனர்; ஸீதாதேவியாரும் எங்கிருந்தனர், லக்ஷ்மணன எங்குறைந்தனன; எம்மையர் என்ன வுணவை யுண்டனர், எங்கு துயின்றனர்; இவைகளை யுரைசெயீரென்று வினவினர். குஹப்பெருமானும் மகிழ்வுகொண்டு ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, ராஜகுமாரரே! ஸ்ரீராமபத்திர ரிங்கெழுந் தருளியதை யறிந்து நான் சென்று ஸேவித்து, சிறந்த அன்னம் முதலிய பற்பல உணவுகளைக் கொணர்ந்து ஸமர்ப்பித்தேன்; அவைகளை வேண்டுவதில்லையென்று ஸ்ரீராமசந்திரர் திருப்பழிக் கொடுத்துவிட்டு என்னை நோக்கி,—

> నహ్యస్మాభిఃప్రతిగ్రాహ్యం సఖేదేయన్తుసర్వదా।
> ఇతితేనవయంరాజన్ ననునీతామహాత్మనా॥

> நஹ்யஸ்மாபி:ப்ரதிக்ராஹ்யம் ஸகேதேயந்துஸர்வதா
> இதிதேநவயம்ராஜந் னநுநீதாமஹாத்மநா

தோழா! நாம் க்ஷத்திரியர்களாதலின, எங்களுக்கு ஒருவரிடத்தும் நின்றும், கொடை வாங்கிக்கொள்வது தகுதியற்றது; நாங்கள் நிரந்தரம் ஏற்போர்க்குக் கொடை கொடுப்பதே தகுதியாகியுள்ளது" என்றருளிச் செய்து, எம்மைச் சமாதானஞ் செய்தருளினர். பின்னர் பெருமாள் இளைய பெருமாள் கொணர்ந்து ஸமர்ப்பித்த தீர்த்தத்தையுண்டு பிராட்டியாருடன் வீற்றிருந்தனர். இளையபெருமாளும் பெருமாள் பிராட்டிகள் உண்டு மிகுந்த தீர்த்தத்தையே யுண்டு மகிழ்ந்தனர். பின்பு மூவரும் மௌனவிரதம்பூண்டு ஸந்தியாவந்தன ஜபாதிகள் செய்து முடித்தனர்கள். பின்பு இளையபெருமாள்

பெருமானுக்குத் தாமே இளம்புற்களையும், தளிர்களையுங் கொணர்ந்து திருப்பள்ளியியற்றி விண்ணப்பஞ்செய்து, பெருமாள் பிராட்டிகளை யதி லெழுந்தருளப்பண்ணி, அவர்கள் திருவடித்தாமரையிணைகளைச் சுத்திசெய்து துடைத்துவிட்டுப் புறமேசென்று வில்லுங் கையுமாக நின்று துயிலற்றுக் காத்திருந்தனர். பெருமாள் பிராட்டிகள் திருப்பள்ளிகொண்ட இங்குண மரத்தினடியிதுவே? இதுவே அவர்கள் படுத்த திருவணை? இதனைச் சுற்றியே இளையபெருமாள் வில்லில் கணையைத் தொடுத்து ஸித்தஞ் செய்துகொண்டு, துயிலின்றி வலஞ்செய்துகொண்டு, மிக ஊக்கத்துடன் இரவுமுழுதும் பாதுகாத்து நின்றனர். யானும் இனத்தார்களுடன் வில்லை ஏந்திக்கொண்டு இளையபெருமாளுடன் விழித்திருந்து பெருமானைப் பாது காத்து நின்றேனென்று ஸ்ரீபரதாழ்வானை விஞ்ஞாபனையைச் சுட்டிக்காட்டி நிகழ்ந்தவண்ணம் மொழிந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று

---

## எண்பத்தெட்டாவது சருக்கம்.

ஸ்ரீபரதாழ்வான் பெருமானுக்குற்ற துன்பத்தை

நினைந்து புலம்பியது

ஸ்ரீபரதாழ்வா னிவ்வண்ண முரைத்த குஹப்பெருமானுடைய வாக்கி யத்தைக் கேட்டு, மந்திரி முதலானோர்களுடன் அந்த இங்குண மரத்தடி சேர்ந்து, அந்தப் புல்லணையையுங் கண்ணுற்று, தம் தாய்களெல்லோரையும் நோக்கி, என் மாதாக்களே! எம்மையர் சிறந்த ராஜகுலத்திற் பிறந்தும் இவ்விடத்தில் தரையில் படுத்துத் துயின்றனர். சிறந்த ஹம்ஸதூலிகா மஞ்சத்தில் படுத்துத் துயில்கொண்ட என்னையர் இந்தத் தரையில் எவ் வண்ணந் துயில்கொண்டனரோ? சிறந்த மான்தோல் புலித்தோல் முதலிய வற்றை யடியில் பரப்பி மேலே விலையுயர்ந்த வஸ்திரங்களை விரித்து அதன் மேல் துயில்கொண்டவரல்லரோ? என்னையர் மேல் மாளிகையிலும், விமானங்களிலும், அதன் மேற்புறங்களிலும், பொன் வெள்ளி தங்கம் இவைகளா லியற்றப்பட்ட வீடுகளிலும், நன்மலர்கள் தூவி, நன்மணங் கமழ்வித்துள்ளதும், வெண்மைநிறமுடைய மேகம்போன்றதும், சுகசாரிகை முதலிய பறவைகளி னொலிபொருந்தியதும், குளிர்ந்தும், மணங்கமழ்ந்து முள்ள மேன் மாடங்களில் திருப்பள்ளிகொண்டு, தேவாத்திய கோஷங்களா லும், நல்லணிகளினொலியாலும், ஸங்கீதமாக தவந்திகளது துதியாலும், துயி

லுணர்ந்த என்னையர் இவ்விடத்தில் படுத்திருந்தனரென்பது நம்பத்தக்க தன்று; இஃது எனக்கு உண்மையாய்த் தோற்றுகின்றிலது; என் மனம் மயல்கொண்டிருக்கின்றது; இஃது கனவெனவே யானெண்ணுகின்றேன்;

ననూనందైవతంకించిత్ కాలేనబలవత్తరం
యత్రదాశరథీరామో భూమావేవశయీతసః॥

நநூநம்தைவதம்கிஞ்சித் காலேனபலவத்தரம்
யத்ரதாசரதீராமோ பூமாவேவசயீதஸ:.

காலத்தைக் காட்டிலும் சிறந்த தெய்வமொன்றுமில்லை; சக்கரவர்த்தி திருமகனாராகிய எம்மையரும் காலமகிமையினால் தரையிலேதானே துயில் கொண்டனரல்லரோ? ஜனகசக்கரவர்த்தி திருமகளாரும், யாவர்க்கு மினியவரும், சிறந்த உருவ முடையவரும், தசரதசக்கரவர்த்திக்கு மருமகப் பெண்ணுமாகிய ஸீதாபிராட்டியாரும், அவ்வண்ணமே தரையில் துயில் கொண்டன ரல்லரோ? எம்மையர் திருமேனியால் வாட்டப்பட்ட புல்லிணை யிஃது; எம்மையர் நித்திரையில் புரண்டு திரும்பிய விடமிஃது; இப்புல் லினைத்தும் எம்மையர் திருமேனியால் மர்த்தனஞ் செய்யப்பட் டிருக்கின் றது; பிராட்டியார் இவ்விடத்தில் திருவாபரணங்களைப் பூண்டவராகியே துயின்றவர்போலும், இத்திருவணையில் தங்கத் துகள்கள் பற்றித் திகழ் கின்றனவன்றோ? இவ்விடத்தில் பிராட்டியாரது உத்தரீயம் பற்றியது போலும், வெண்பட்டின் நூல்கள் இங்கிழுக்கப்பட்டு அறுபட்டிருக்கின்றன வன்றோ? பிராட்டியார் மிக்க கற்புடைய ராதலின், துன்பத்தைச் சிறிதும் பாராட்டாமல் பர்த்தாவின் திருவுள்ளத்திற் கிசைந்து மகிழ்ந்து துயில் கொண்டனரென வெண்ணுகின்றேன், அந்தோ? அந்தோ! யான் மிக்க கொடிய னாயினேன்; என்பொருட்டன்றோ? எம்மையர் பிராட்டியாருடன் புறப்பட்டு நாதனற்றவர்போல இத்தன்மையதாகிய சயனத்தில் படுத்துத் துயின்றனர். என்னையர் சக்கரவர்த்தி குலத்திற் பிறந்தும், எல்லாவுயிர்களு க்கும் இனியராயிருந்தும், ராஜ்யத்தையும், ஸுகத்தையுந் துறந்து, கருங் குவளைபோன்ற திருமேனி யுடையவரும், செந்தாமரை மலர்போன்ற திருக் கண்களை யுடையவரும், இன்புறுவதற்கே உரியவருமாயிருந்தும், இவ்வண ணந் துன்புறத் தரையில்படுத்துத் திருக்கண் வளர்ந்தனரோ?—

ధన్యఃఖలుమహాభాగో లక్ష్మణశ్శుభలక్షణః
భ్రాతరంవిషమేకాలే యోరామమనువర్తతే॥

தன்ய:க்லுமஹாபாகோ லக்ஷ்மணச்சுபலக்ஷண:
ப்ராதரம்விஷமேகாலே யோராமமனுவர்த்ததே.

இந்த ஆபத்துக் காலத்திலும் என்னையுமை விட்டு விடாமல் உடன் சென்று பணிவிடை செய்துகொண்டு மகிழ்ந்து வாழுகின்ற லக்ஷ்மண னொருவனே யன்றோ? மிகவும் நல்வினையினன்; பதியை விடும் பிரியா மல் வனத்திலு முடனெழுந்தருளிய பிராட்டியாரோ நல்வினையினர்; நாங்கள் எம்மையமை விட்டுப் பிரிந்து இவ்வண்ணம் உயிர்வாழ்க்கையும் நிலையின்றி வருந்துகின்றோம், இப்பொழுது இந்தப்பூமி நாவிகனற்ற வோடம்போலத் தோற்றுகின்றது; என் தந்தையரும் வானடைந்து எம்மையரும் வனம் சென்றிருக்கையில், இப்பூமியை யாவன் கோருவன்; இப்பொழுது இத்திருவயோத்தி பாதுகாப்பவரின்றியும், கட்டுவோரற்ற யானை குதிரைகளை யுடையதும், எப்பொழுதும் திறக்கப்பட்ட கோபுரத் துவார கவாடங்களை யுடையதும், மகிழ்வற்ற சேனைகளை யுடையதும், ஸஹாய மற்றதும், பெருங்கவலை பூண்டதும், வெளியில் காப்பவ ரற்றதும், திக்கற்றதுமாகி யிருக்கினும், எம்மையா வனத்தி லெழுந்தருளி யிருக்கினும், அவரது தோள்வலியை நினைந்தே யன்றோ? பகையாளிகள் இதனைக் கைப்பற்றிக்கொள்ள விருப்புறுமல் நஞ்சுகலந்த நல்லுணவினைப் போலத் துறந் திருக்கின்றனர்கள், ஆதலின், இப்போழுதும் இவ்வயோத்திமாநகர் எம்மையாலேதான் காக்கப்பட்டிருக்கின்றது; யானும் இன்று முதல் எம்மையனைப்போலவே தரையிலேயாயினும், புல்லணையிலேயாயினும் படுத்துத் துயில்வே னல்லது, ராஜசயனத்தில் படுக்கேன், காய் கனிகளையே யுண்பேன், ஜடை திரித்து, மரவுரி யுடுத்துத் தவசியாகுவேன், யானிவ்வண்ண மிருந்து எம்மையருடைய பிரதிஜ்ஞையை யானேற்றுக்கொண்டு பரிபாலனஞ் செய்வேன்; ஆதலின், என் தந்தையர் வாக்கியமும் பொய்யாகாது, இப்பொழுது எம்மையருக்கு லக்ஷ்மணன் உடன் சென்று பணிவிடை செய்வதுபோலச் சத்துருக்னனே என்னுடனிருந்து பணிவிடை செய்வான், எம்மையர் லக்ஷ்மணனுடன் திருவயோத்தியைப் பரிபாலனஞ் செய்வார்; அயோத்தியிலுள்ள வேதியர்களே எம்மையருக்குத் திருவபிஷேகஞ் செய்யக் கடவர்கள். இவ்வண்ணமாகிய என்னுடைய கோரிக்கையைத் தேவதைகள் நிறைவேற்றுவார்களா? யான் பலவகையாலும் எம்மையனை மீண்டெழுந்தருளும்படி தண்டம் ஸமர்ப்பித்து வேண்டுகின்றேன்; ஒருவிதத்திலும் மீண்டெழுந்தருளாராகில், யானும் திருவாரணியத்திலேயே என்னையர் மீண்டெழுந்தருளு மளவும் உடனிருந்து பணிவிடைசெய்து மகிழ்வேன்; லக்ஷ்மணனைப்போலவே தம்பியும் தாஸனும், பத்தியுள்ளவனுமாகிய என்னைமாத்திரம் உடனிருக்கக்கடவை யல்லையென்று மறுத் துபேக்ஷை செய்வரோ? ஒருபொழுதுஞ் செய்யார், என்றிவ்வண்ணம் புலம்பி யுரைத்து வருந்தினன்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்தெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## எண்பத்தொன்பதாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் சேனைகளுடன் கங்காநதியைத் தாண்டிச் சென்றது.

ஸ்ரீபரதாழ்வான் அன்றிரவு கங்காநதியின் வடகரையிலேயேயிருந்து மறுநாளுதயத்திலெழுந்து சத்துருக்கனை நோக்கி, அடா சத்துருக்கா! ஏனின்னும் துயிலுகின்றனை; விரைவாக வெழுந்து நிஷாதாதிபதியாகிய குஹப்பெருமாளை யழைப்பிக்கக்கடவை. உனக்கு மங்கல முளதாகக கடவது. அவரே நம் சேனைகளை நாவங்களினுல தாண்டுவிப்பாரென்றுரை செய்கையில், ஸ்ரீசத்துருக்கனாழ்வானும் ஸ்ரீபரதாழ்வானைநோக்கி, ஐயரே! யான எம்மையனை நினைந்துகொண்டே விழித்திருக்கின்றனனே யன்றித் துயிலகொணடிலேனென்றனர். இவ்வண்ணம் இவ்விருவரும் ஒருவர்க கொருவர் சம்வாதஞ் செய்துகொண் டிருக்கையில, குஹப்பெருமாள தாமே வந்து ஸ்ரீபரதாழ்வானைககணடு கைகுவித்து அவரைநோக்கிச் சக்கிரவாத்திகுமாரரே! தேவர் ராத்திரி இந்நதியின கரையில் சுகமாக வாழ்ந்து மகிழ்நதீரோ?சேனைகளுடன் தேவாசகுக குசலமுளதாயிற்றா?என்று வினவினா ஸ்ரீபரதாழ்வான அந்த வாககியத்தைககேட்டு அவரை நோக்கி, குஹப்பெருமாளே! இரவும எமககு சுகமாகக கழிந்தது; யாஙகளும் உம்மால பூஜிக்கபபட்டோம; இப்பொழுதே வலையாகள பறபல நாவங்களைக்கொணர்ந்து எம்மை இக்கங்காநதியின் அக்கரை சேர்ககக கடவர்க ளென்று கட்டளையிட்டனர். உடனே குஹப்பெருமாள் விரைவாகச் சென்று தம்மினத்தா ரெல்லோரையும எழுந்திரீர்; கண்விழியீர்; உங்களுக கெப்பொழுதும் மங்கல முளதாகக கடவது; நாவங்களை விரைவாக இழுத்துககொண்டு வரககடவீர்கள; எல்லோரையும தாண்டுவிப்போமென் றெழுப்பி யுரைத்தனர். உடனே யவர்க ளெல்லோரும் எழுந்து ஐஞ்ஞூறு நாவங்களை யங்கங்கிருந்து விரைவாக இழுத்துக்கொணடு வந்து வசித்தஞ் செய்தனர்கள். இவை யனறியும், ஸ்வஸ்திகமென்னும பெயருடையனவும், சிறநத கண்டைகளையுடையனவும், பதாகைகளினுல விளங்குகின்றனவும், பல கைகளினுல் சுவர்வைத்து நடுவில கவாக்ஷங்கள் வைத்திருப்பதினுல வேண்டு மளவும் காற்றினை யுபயோகஞ் செயது கொள்ளத் தக்கனவுமாகியுள்ள பெரிய படகுகளும் சித்தஞ்செய்யப் பட்டன; கடையில் ஸ்வஸ்திகமென்னும் பெயருடையதும், வெண்மை நிறமுள்ள கம்பளங்களால சுற்றப்பட்டதும், சுற்றிலும் சிறுகணடைகள கட்டி யொலிப்பதும், அரசர்கள் ஏறத்தக்கதும், மிக வழகியதுமாகிய மிகச் சிறந்தபெரிய நாவத்தைக் குஹப்பெருமாளே கொணர்ந்து சித்தஞ்

செய்தனர். இந்த நாவத்திலே ஸ்ரீபரதாழ்வாரும் ஸ்ரீசத்துருக்கனாழ்வாரும், கோஸலையார் முதலிய தேவிகளும், வஸிஷ்டபகவானும், மற்றுமுள்ள வாமதேவாதி முனிவர்களும், வேதியர்களும் ஏறிக்கொண்டனர்கள். பின்பு, உடன் வந்த வண்டிகளும், கடைச சாமான்களும் ஏற்றப்பட்டன; அநந்தரம் புறப்படுகையில், ஸேனாநிவேசத்தில் * தீயிட்டெரிப்பவர் கள், நீராடுவோர்கள், படகேறுவதன்பொருட்டு நீரிலிறங்கி மூழ்கு வோர்கள், தீத்தம பொருள்களைப் படவிலேற்றுவதன்பொருட் டெடுப்போர்கள், இவர்களது கூக்குரல் விண்ணுலகினை யணுகி யொலித்தது; இவ்வண்ணம் மிகுந்துள்ள ஜனங்களேறிய அந்த நாவங்கள் யாவும் வலையர்களால் செலுத்தப்பட்டனவாகி விரைவாக நீரில் சென்றன; சில நாவங்கள் பெண்களாலும், சில குதிரைகளாலும், சில வண்டி முதலிய வாஹனங்களாலும், சில காளை முதலியவற்றாலும், சில பொருள்களாலும், நிறைந்திருந்தன; அவையெல்லாம் அக்கரை சேர்ந்து, அவர்களை இறக்கி விட்டு மீண்டு வந்தன; பதாகைகளுடன் கூடிய கஜங்கள் கங்கையி லிறங் கித் தாண்டி வருகையில், துவஜங்களுடன் கூடிய மலைகள்போலக் காணப் பட்டன; சிலர் படவிலேறினர், சிலர் தெப்பத்திலேறித் தாண்டினர்கள்; சிலர் பானைகளை வைத்துக்கொண்டு நீந்தித் தாண்டினர்கள், சிலர் கைகளினாலேதானே தாண்டினர்கள்; இவ்வண்ணம் எல்லோரும் அந் நதியைத் தாண்டினர்கள் அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் நதியைத் தாண்டி, யதன் விளப்புறம் சேனைகளைச் சுகமாக இளைப்பாறும்படி கட்டளையிட்டு நிறுத்திவிட்டு, மைத்திரமென்னும் பகல் மூன்றாவது + முஹூர்த்தத்தில ரித்துவிக்குகளுடன் கூடிய பரத்துவாஜமஹரிஷியைக்கண்டு தண்டம் ஸமாப்பிப்பதன்பொருட்டுச் சென்று, மிக வழகிய பர்ணசாலைகளாலும், பலவகை மரங்களாலும் அழகாய அம்முனிவருடைய ஆசிரமத்தைக் கண்ணுற்றனர்.

அயோத்தியாகாண்டத்தில் எண்பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

---

* சேனைகள் ஓரிடத்திலிறங்கி யங்கிருந்து புறப்படுகையில், அவ்விடத்தில் தீயிட்டு எரித்துவிட்டுச் சென்றால் செல்வம் பெருகுமென்று அவ்வண்ணஞ் செய்வ துலக வழக்கம் முற்காலத்தில் ஆதலின், கவி யவ்வண்ணமே கூறினர்.

+ முகூர்த்தமென்றால் இரண்டிரண்டு நாழிகை காலம், பகல் முப்பதுநாழிகை யாதலின், பதினைந்து முகூர்த்தம், அவற்றின் பெயர் பிருஹஸ்பதியினால் கூறப்பட் டுள்ளன; அவையாவன, ரௌத்ரம் - ௧, ஸார்ப்பம் - ௨, மைத்ரம் - ௩, பைத்ரம்-௪, வாஸவம் - ௫, ஆப்யம்-௬, வைஸ்வம்-௭, ப்ராஹ்மம்-௮, ப்ராஜேசம்-௯, ஐந்த்ரம்-௰, ஐந்த்ராக்னம் - ௰௧, நைருதம் - ௰௨, வாருணம் - ௰௩, ஆர்யமம் - ௰௪, பகம் ௰௫, என்பவையேயாம்.

## தொண்ணூற்றுஒன்றாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் பரதத்துவாஜமஹாமுனியைக் கண்டு ஸேவித்தது

ஸ்ரீபரதாழ்வான இரண்டுநாழிகை வழித் தூரத்திலேயே ஸ்ரீபரத்துவாஜர் ஆசிரமத்தைக் கண்டு அவ்விடத்திலேயே சேனைகளை நிறுத்தி விட்டு, ஆயுதங்களையும், வெண்குடை வெண்சாமரை முதலிய விருதுகளையும் வைத்துவிட்டு, வெண்பட்டுடுத்துத் தூய்மையராகி, வேதியர்களுடனும், மந்திரிகளுடனுங் கூடி, ஸ்ரீவஸிஷ்டபகவானை முன்னிட்டுக் கொண்டு கால்களாலேயே நடந்து சென்று, நெடுந்தூரத்திலேதானே பரத்துவாஜ முனியைக்கண்டு மந்திரிகளையு மங்கு நிறுத்தி விட்டு, வஸிஷ்டபகவான் பின்றொடர்ந்து கிட்டிச் சென்றனர். பரதத்துவாஜமஹாமுனியும், ஸ்ரீவஸிஷ்டபகவானைக் கண்டவுடன் பெருமகிழ்வுகொண்டாஸநத்தை விட்டெழுந்து எதிர்கொண்டுவந்து சீடர்களை நோக்கி, அர்க்யம், அர்க்யம் என்று, கட்டளையிட்டுக்கொண்டே ஸ்ரீவஸிஷ்டபகவானருகில் வந்து, ஸ்ரீபரதாழ்வானால் தண்டம ஸமர்ப்பிக்கப்பட்டவராகி, இவரைத் தசரத குமாரனென்வுணர்ந்து, ஸ்ரீவஸிஷ்டபகவானுக்கும், ஸ்ரீபரதாழ்வானுக்கும், அர்க்யம், பாத்யம், ஆசமனீயம், கனிகள் முதலாகியுள்ள உபசாரங்கள் செய்து, இவரை நோக்கிப் பரதாழ்வானே! உமது திருமாளிகையிலும், திருவயோத்தியிலும், சேனைகளிலும், பொருண்மனையிலும், நட்பினர்களிலும், அமைச்சர்களிலும், மங்கலம் வளர்கின்றதாவென வினவி யருளினர். யோகமகிமையினால் தசரதசக்கரவர்த்தி பொன்னுலக மடைந்ததை யுணர்ந்திருக்கின்றமையால், சக்கரவர்த்தி குசலமுற்றிருக்கின்றனரோ வென்று வினவியிலர்; இவ்விருவரும் அவரை நோக்கி, மாதவரே! தேவரது திருமேனிக்கும், அக்கினிகளுக்கும், விருக்ஷங்களுக்கும், சீடர்களுக்கும், மான் முதலிய விலங்குகளுக்கும், பறவைகளுக்கும், பிணியொன்று மின்றிக் குசலம வளர்கின்றதாவென்று வினவினர்கள். இவ்வண்ணம் ஒருவர்க் கொருவர் யோகக்ஷேமம் விசாரித்துக் கொண்டபின், பரதத்துவாஜமஹாமுனி ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரா! நீ, அரசாக்ஷிசெய்வதைவிட்டிங்கே வந்ததற்குக் காரணம் யாதோ அதனை யுரைசெய்யக் கடவை. அக்காரணம் எமக்குத் தோன்றிற்றிலது; அதனால் என் மனம் தெளிவுற்றிலது; கோஸலையார் திருக்குமாரராகிய ஸ்ரீராமசந்திரன் உன் தாயின வாக்கியத்தால் கட்டுண்ட உன் தந்தையினால் பதினான்குவருஷம் வனவாஸஞ் செய்யக்கடவை யென்று காட்டிலோட்டப்பட்டு, இளையபெருமாள்

பிராட்டியோடுடன் வனத்தில் வாஸஞ் செய்துகொண் டிருக்கின்றன ரல்லரோ? அவர் விஷயத்தில் ஏதேனும் தீங்குசெய்ய நினைத்துச் செல்லுகின்றனையோ? அவரையு மிப்பொழுதே தம்பியுடன் கொலைசெய்து விட்டால் ராஜ்ஜியம் அழிவற்று நிலைத்துவிடு மென்றும் கருத்துக் கொண்டனையோ என்று வினவினர். ஸ்ரீபரதாழ்வான் அவ்வாக்கியத்தைக் கேட்டவுடன் கண்ணீர் பெருக்கி யழுது, பரத்துவாஜமஹாமுனியை நோக்கி, "முக்காலப் பொருள்களையு முணரவல்ல மாயோகியே! தேவரு மடியேனை நோக்கி, இவ்வண்ண மருளிச்செய்வ தொக்குமோ? யான் கொடும்பாவியாகிக் கெட்டழிவே னல்லேனோ? இவ்விஷயத்தில் யான் சிறிதும் பிழை செய்திலேன்; அடியேனை நோக்கி, இவ்வண்ணம் அருளிச் செய்யற்க; என்னை யறியாமல் என் தாய் இக்கொடிய செயல் செய்தனள்; அதற்கு யான் முனிந்தனனே யன்றி யுகந்திலேன், என் தாயின் வாக்கியத்தையும் யான் நன்கென உடன்பட்டுச் செய்யேன், அடியேன் என்னையரைக் கண்டு தண்டம் ஸமர்ப்பித்துச் சரணமடைந்து வேண்டித் திருவயோத்திக்குத் திருப்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதன் பொருட்டே வந்தேனே யன்றி, வேறெண்ணங்கொண்டு வந்திலேன்; ஆதலின், தேவர் அடியே னிடத்தில் அருள் செய்து, எம்மையா இப்பொழுது எங்கே எழுந்தருளி யிருக்கின்றனரோ? அதனை யருளிச் செய்க" என்று வேண்டி, வஸிஷ்டபகவான் முதலானோரைக் கொண்டும் வேண்டச்செய்து பணிந்தனர். பரத்துவாஜமஹாயோகியும் அதுகேட்டு உளமகிழ்ந்து, ஸ்ரீபரதாழ்வானைக் குளிரக் கடாக்ஷித்து அவரை நோக்கி, மஹாராஜா திருமகனே!—

> త్వయ్యేతత్పురుషవ్యాఘ్ర యుక్తం రాఘవవంశజే
> గురువృత్తిర్దమశ్చైవ సాధూనామనుయాయితా॥
> జానే చైతన్మనస్థం తే దృఢీకరణమస్త్వితి
> అపృచ్ఛం త్వాం తథాత్యర్థం కీర్తిం సమభివర్ధయ॥

> த்வய்யேதத்புருஷவ்யாக்ர யுக்தம்ராகவவம்சஜே
> குருவ்ருத்திர்தமச்சைவ ஸாதூநாமநுயாயிதா
> ஜாநேசைதந்மநஸ்தந்தே த்ருடீகரணமஸ்த்விதி
> அப்ருச்சந்த்வாந்ததாத்யர்த்தம கீர்திமஸமபிவர்த்தயன்.

தமையனுக்குத் தொண்டு பூண்டிருப்பதும், ஐம்புலன்களையு மடக்கிப் பெண்ணாசை பொருளாசை மண்ணாசைகளைத் துறப்பதும், பெரியோர்கள் சொற்படி நடப்பதும், ரகுகுலத்தில் பிறந்த உனக்கே இம்மூன்றுந் தகும்; கபடற்ற உன் மனோபாவத்தையும், யான் யோகமகிமையா லறிவேன்; ஆகிலும், அஃது மாறாமல் நிலையுறுவதற்காகவும்,

உனக்கு மெய்ப்புகழ் வளர்வதற்காகவும், அவ்வாறு விளுவினேன்; ஸ்ரீராமசந்திரர் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும், இப்போழ்து திருசித்திரகூடத்தி லெழுந்தருளி யிருக்கின்ருர்; நானைத் தினம் அவ்விடத்திற்குச் செல்லக்கடவை; இன்றைத்தின மிவ்விடத்தி லேயே வாழக; இந்த என் கோரிக்கையை யீடேறச்செல்க என்றருளிச் செய்தனர். ஸ்ரீபரதாழ்வான் அம்மொழி கேட்டு அவ்வண்ணமே ஆகுக வென் றுடன்பட்டு அன்றிரவும அவ்வாசிரமத்திலேயே வாஸஞ்செய்ய நிச்சயஞ் செய்தனர்.

ஆயோத்தியாகாண்டத்தில தொண்ணூற்ருவது சருக்கம்.

முற்றிற்று.

## தொண்ணூற்றென்ருவது சருக்கம்.

பரத்துவாஜமஹாமுனி ஸ்ரீபரதாழ்வான் சேனைகளுக்கு விருந்துசெய்து எல்லோரும் பரமாநந்த முறச்செய தருளியது.

ஸ்ரீபரதாழ்வான் அன்றிரவு அவ்விடத்திலே யிருக்க உடன்பட்ட பின்னர், பரத்துவாஜமஹாமுனி ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, ராஜகுமாரா! யான் உனக்கு ஆதித்தியம் செய்ய விரும்புகின்றேன்; அதனைப் பெற்றுக் கொள்க என்று அருளிச் செய்தனர். ஸ்ரீபரதாழ்வா னதுகேட்டு அம் முனிவரை நோக்கி, மாதவர் சிமானே! தேவர் அடியேனுக்கு அர்க்கியம் பாத்தியம் காட்டிலுள்ள காய கிழங்கு முதலியவற்ருல ஆதித்தியஞ் செய தருளினீ ரலலீரோ? இதன்மேலும் செய்யத்தக்கது யாதுளது என்று விண்ணப்பஞ் செய்தனர். பரத்துவாஜமஹாமுனி யதுகேட்டுப் புன்னகையுடன் ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி குமாரா! நீ மிகவும் என்னிடத்தில் சந்தோஷ முடையவனென்றும், யானளித்த காய் கனிகளினும் மகிழ்வுற்றனை யென்றும், யான் நனகறிவேன; ஆகிலும், யான் இந்த உன்னுடைய மிகுந்துள்ள சேனைகளுக்கு விருந்து செய்ய நினைக்கின்றேன்; நீ பூஜை பெற்றுக்கொள்ளத் தக்கவனுதலின, இவ்விஷயத்தில் எமக்கு மிக விருப்ப முளது; நீ இங்கு வருகையில சேனைகளுடன வாராமல் ஏன் சேனைகளைத் தூரத்தில் நிறுத்திவிட்டு வந்தனை என்றருளிச் செய்தனர். ஸ்ரீபரதாழ்வான் அம்மொழிகேட்டுக் கைகுவித்துககொண்டு அவரை நோக்கி, முனிவர் கோமானே! சேனைகளுடன் யானிங்கெய்தின் தேவர் சீற்றங்கொண்டருளுவீரென்றஞ்சிச் சேனைகளை நிறுத்திவிட்டு வந்தேன்; ராஜனுகிலும், ராஜகுமாரனுகிலும், மாதவர் வாஸஞ்செய்யு

மிடத்தில் ஆடம்பரத்துடன் செல்லக்கூடாதன்றோ? பகவானே! யானைகள் குதிரைகள் காலாளகள் என்னு மிவை யடங்கிய மிருக்துள்ள சேனை பூமி முழுதும் நிறைந் தென்னைத் தொடர்ந்து வந்திருக்கின்றது; அந்தச சேனை யிங்கெய்தின், மரஙகளை முறித்தும, நீரகளைக கலக்கியும், பாணசாலைகளை யழித்தும, பூமியை மிதித்தும, இவ்வாசசிரமத்திற்குப பீடை செயயுமென்று அடியே னொருவனே வந்து தண்டம ஸமர்ப்பித்தேன் என்று விண்ணப்பஞ் செயதனா. உடனே பரதத்துவாஜமஹாமுனியால் சேனைகளெலலா மிங்கழைப்பிககக கடவனவெனக கட்டளைசெய்யப்பட்டு ஸ்ரீபரதாழவான அவ்வண்ணமே அனைவாகளையும வரவழைத்தனா. பரத்துவாஜமஹாமுனியும் உடனே அககினி சாலைககுள சென்று காலகைகளைச சுததிசெயதுகொண்டு ஆசமனஞ் செயது ஆஸநத்தினமீ துட கார்ந்து தியானஞ் செயது யோகத் திறமையினால் இவாகளுககு விருந்து செயவதனபொருட்டு மநதிர பூர்வமாக விசுவகாமா, துவஷ்டா, இநதிரன, யமன், வருணன, குபேரன், அககினி முதலிய தேவர்கள், இவாகளை யழைப்பிதது அவர்களை நோக்கி, யான செய்யு மிந்த விருநதுககுச சஹாயஞ் செய்யக கடவீர்களென்று ஆஜ்ஞைசெயது, குணதிசையை நோககியும, குடதிசையை நோக்கியும், பெருகி வருகின்ற நதிகளையும அழைத்து, பூமியிலும், ஆகாயத்திலும், நாறபுறத்திலிருந்தும பெருகி வரக கடவீரகள. உஙகளுள சிலா காஜூரத்தின் மத்தியத்தையும, சிலர் கௌடீ, பைஷ்டீ, மாத்துவீ யென்று மூவகைபபட்ட சுரைகளையும, வேறு சிலர் கருப்பின சாற்றுக்கு நிகராகிய தண்ணீரையும பெருககக் கடவீர்களென்று ஆஜ்ஞைசெயது, விசுவாவஸு ஹாஹா! ஹூஹூ! முதலிய தேவகந்தர்வாகளையும, தேவவநிதையாகளையும, கந்தர்வப்பெண்களையும, கிருதாசீ, விசுவாசீ, மிஸ்ரகேசீ, அலம்புஸா, நாகதந்தை, ஹேமை, ஹிமை, அத்ரிகருதஸ்தலே இவாகளையும், மறறும இந்திரனையும், பிரஹ்மாவையும அடுத் திருககின்ற அப்ஸரப்பெண்களையும், தும்புரு நாரதர்களையும், வேணு வீணை தாள மிருதஙகாதி வாததியகாராகளுடன அழைப்பித்து, ஆடவும் பாடவும் கட்டளையிட்டு, ஆடையாபரணஙகளென்னும் இலைகளை யுடையதும், தேவவனிதையர்களென்னுங கனிகளையுடையதும், உத்தரகுரு க்ஷேத்திரத்தி லிருககினறதுமாகிய சைத்திராதமென்னும் குபேரனுடைய உத்தியானவன தேவதையையும் அழைத்து, நீ இவ்விடத்திலேயே யினறைத்தின மிருந்து பரதன்சேனையை மகிழவிததுசசெல்லுகவென்று ஆஜ்ஞைசெய்து, ஸோமதேவனையும் உததேசித்துப் பகவானாகிய ஸோமதேவனும் என கட்டளையினபடி சிறந்து மிருக்துள்ள அன்னத்தையும், பலவகைப்பட்ட அபூபம் முதலிய பக்ஷ்யத்தையும், ஓதனம் முதலிய போஜ்யத்தையும், வற்றல முதலிய சோஷ்யத்தையும், ரஸாயனம் முதலிய லேஹ்யத்தையும, மிகுதியாக அளிக்கக கடவன். விசித்திரங்களான மாலைகளையும், ஸுரா முதலிய பேயங்களையும், பலவகைப்பட்ட

மாம்ஸங்களையும் அளிக்கக் கடவனென் றுரைசெய்தனர். இவ்வண்ணம் கிழக்கு முகமாகக் கைகுவித்துக்கொண்டு பரத்துவாஜமஹாமுனி தியானஞ் செய்கையில், உடனே அந்தத் தேவதைக ளனைவர்களும் தனித்தனியே வந்து சேர்ந்தனர்கள். அநந்தரம் மலயமலையையும், தர்துரமலையினையுஞ் சார்ந்து வருகின்ற மந்தமாருதமானது எல்லோர்க்கு மினிதாக வீசிற்று; விண்ணினின்றும் தூமலர் மழை பொழிந்தது; தேவதுந்துபி முழங்கிற்று; சிறந்த காற்றுககள் வீசின; தேவப் பொதுமகளிர்க ளாடினார்கள்; தேவகந்தர்வர்கள் பாடினார்கள்; வீணை முதலிய வாத்தியங்களும் முழங்கின; இவ்வொலி விண்ணிலும் மண்ணிலும் மூவுலகிலோர் செவிகளிலும் பரவி யெழுந் தொலித்தது; இவ்வண்ண மொலித்த அவ்வொலி யடங்கியவுடன் ஸ்ரீபரதாழவான் சேனைகளால் விசுவகர்மாவினால் செய்யப்பட்ட திறமை காணப்பட்டது; நாற்புறங்களிலும் ஐந்து யோஜன தூரம் பூமி மேடுபள்ளங்களின்றிச் சமமாகச் செய்யப்பட்டு நீல வைடூர்யங்கள் போன்ற இளம்புற்களால் நிறைந்து திகழ்ந்தது; அவ்விடத்தில் இலவம், விளா, பலா, மாதளை, நெல்லி, மா முதலிய மரங்கள் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தழைத்து விளங்கின; உத்தர குரு க்ஷேத்திரத்தினின்றும், சைத்திரரதமென்னும் வனமும் வந்து திகழ்ந்தது, இருபுறங்களிலும் பலவகை மரங்கள் சூழ்ந்து தடர்ந்த தேவநதியும் வந்து பெருகிற்று, நாற்புறங்களிலும் தாழ்வாரங்கட்டிய வெண்மை நிறமுள்ள மாளிகைகளும், யானை குதிரைகள் கட்டத்தக்க உயர்ந்த மண்டபங்களும், மேல் மாளிகைகளில் தோரணங்கள் நாட்டிக் கட்டப்பட்டனவும், நீரற்ற வெண்மை பொருந்திய மேகம்போன்றனவும், கற்பக மலர் மாலைகளினால் அலங்காரஞ் செய்யப்பட்டனவும், நற்சந்தனநீர் தெளிக்கப்பட்டனவுமாகிய வேந்தர்களது மாளிகைகளும், பலவகை யலங்காரங்கள் நிறைந்த சயனம், ஆஸநம், வாஹன மிவைகளும், திவ்வியமாகிய அறுவகைச் சுவைகளை யுடைய நல்லுணவுகளும், விலையுயர்ந்த ஆடையாபரணங்களும், பலவகைப்பட்ட பாத்திரங்களும், அளவுகடந்து நிறைந்து திகழ்ந்தன; பரத்துவாஜமஹாமுனி இவ்வண்ணம் எல்லாபபண்டங்களையும் நிறைத்து, ஸ்ரீபரதாழவானை நோக்கி, அனைவர்களுடனும் அங்கெய்தி, விருந்துண்ணும்படி கட்டளைசெய்தருளினர். ஸ்ரீபரதாழவானும் மந்திரிகள் புரோஹிதர் முதலியவர்களுடன் தமக்காக வியற்றப்பட்ட சிறந்த மாளிகையினுட்புகுந்து அங்குள்ள செல்வங்களைக்கண்டு களிப்புற்று அங்கு ஸபாமண்டபத்தி லிடப்பட்டிருந்த ராஜாஸநத்தையும், வெண்சாமரை வெண்குடை முதலியவற்றையும் கண்டு, அவை எம்மையருக் குரியனவே யன்றி, எமக்குத் தகாவென்று எண்ணி மந்திரிகளுடன் அவ்வாஸநத்தின்மீது ஸ்ரீராமபத்திரர் வீற்றிருப்பதாகத் தியானஞ்செய்து கொண்டு அவைகளை வலஞ்செய்து அவ்வாஸனத்திற்குத் தண்டம்ஸமர்ப்பித்துத் தாம் ஸ்ரீராமதாஸனென்பது யாவர்க்கும் வெளிப்படும்படி

வெண்சாமரைக் கையிலேந்திக்கொண்டு அருகிலுள்ள மந்திரிக்குரிய ஆசனத்தில் வீற்றிருந்தனர் பின்பு முறைப்படி புரோஹிதர்கள் மந்திரிகள் சேனாபதி படைத்தலைவர் முதலிய யாவரும் உட்கார்ந்தனர்கள். உடனே பரத்துவாஜமஹாமுனிவரது ஆஜ்ஞையினால், பாயஸங்களையே சேறாகவுடைய பாலாறுகள் பெருகின, அவற்றின் இருகரைகளிலும் ஸுன்னகாரை பூசி மெழுகிய சிறந்த மாடமாளிகைகளும் தோன்றின, உடனே சிறந்த ஆடையாபரணங்களை யணிந்து சிறந்த உருவம்பொருந்தி யழகிய இருபதினாயிரம் பெண்கள் வந்தனர்கள், இப்பெண்களை அடைந்த மனிதர்கள் பித்தர்போல மயல் கொண்டனர்கள்; இவை யாவும் திசைமுகத் தேவனால் அருள்செய் தனுப்பப் பட்டன, நந்தன வனத்தினின்றும் இருபதினாயிரம் பொதுமகளிர்கள் வந்தனர்கள்; நாரதர், தும்புரு, கோபன முதலிய சந்திரனைப்போன்ற காந்தியுள்ள கந்தர்வராஜர்கள் ஸ்ரீபரதாழ்வானெதிரில் கானஞ்செய்தனர்கள்; அலம்புஸை, மிச்ரகேசி, புண்டரீகை, வாமனை, இவர் முதலியவர்க ளாடினர்கள், தேவர்க ளிடத்திலும், சைத்திரரத வனத்திலுமுள்ள மலர்மாலைகள் யாவும் பிரயாகத்தில் காணப்பட்டன, அங்குள்ள பில்வமரங்களே மாத்தளகாரர்களாயின, தானிமரங்கள் தாளம்போடுகிறவர்களாயின; அரசுமரங்கள் நர்த்தகர்களாயின, பின்பு தேவதாரு பனை மஞ்சாடி புங்கம் முதலிய மரங்கள் மகிழ்வுகொண்ட கூனர்களும், குறளர்களுமாகக் காணப்பட்டன, சிம்சுபை நெல்லி நாவல் முதலிய செடிகளும், மாலதி மல்லி ஜாதி முதலிய கொடிகளும், பெண்ணுருக்கொண்டு அங்கு விருந்துண்போர்களை நோக்கி, மஹாஜனங்களே! ஸுரா வேண்டியவர்கள் ஸுரையைப் பானஞ்செய்க, பசி யுடையவர்களே! பாயஸத்தை யுண்க; மாம்ஸம் வேண்டியவர்களே! மாம்ஸத்தைப் புஜித்து மகிழ்க என்றுரை செய்தன; ஒவ்வொரு மனிதர்களுக்கு ஏழு எட்டுப் பெண்கள் வீதம் வந்து சூழ்ந்துகொண்டு அழுக்குத் தேய்த்து நதிகளில் ஸ்நானம் செய்வித்தனர்கள்; சிலர் ஸ்நானஞ் செய்தவர்களின் உடம்புகளைத் துடைத்து நல்லுணவுகளை யுண்ணச் செய்தனர்கள், யானைகள் குதிரைகள் ஒண்டைகள் கோவேறு கழுதைகள் காளைகள் முதலியவற்றையும், அவ்வவற்றைக் காப்போர்கள் அவைகளுக்குத் தக்க உணவுகளைப் போட்டுக் கரும்பின் சாறுகளையும், தேன்களையும் குடிப்பித்தனர்கள்; சிலர் கரும்புகளையும், தேன்கலந்த பொரிகளையும் தின்பித்தனர்கள்; இவ்வண்ணம் எல்லோரும் மஹாநந்தமுற்றுத் தேவபோகங்களை யநுபவித்து மதிமயங்கினமையால், குதிரைக்காரன் குதிரையையு முணர்ந்திலன், யானைக்காரன் யானையையு மறிந்திலன்; அந்தச் சேனை முழுதும் மதங்கொண்டும், மயல்கொண்டும், களிப்புக்கொண்டும், கோரிக்கைக ளெல்லாவற்றையும் பெற்றுச் செஞ்சாந்த மப்பித் தெய்வப் பொதுமகளிர்களுடன் புணர்ந்து பரமானந்த மடைந்து,—

నైవాయోధ్యాంగమిష్యామో నగమిష్యామదణ్డకాం ।
కుశలంభరతస్యాస్తు రామస్యాస్తుతథాసుఖం ॥

நைவாயோத்யாமகமிஷ்யாமோ நகமிஷ்யாமதண்டகாம
குசலம்பரதஸ்யாஸ்து ராமஸ்யாஸ்துததாஸுகம்

யாங்கள் அயோத்திக்குஞ் செல்லோம், தண்டகாவனத்திற்குஞ் செல்லோம், ஸ்ரீபரதாழ்வான் எங்கேயாகிலும் சென்று குசலமுற்று வாழ்க, ஸ்ரீராமசந்திரரும் இன்புற்று எங்கேயாகிலும் வாழ்க, யாங்கள் மாத்திரம் இவ்விடத்திலேதானே இவ்வன்னம் ஆனந்தங்கொண்டு வாழ்வோமென்று கூவி யுரைசெய்தனர்கள் ஸ்ரீபரதாழ்வானைப் பின் தொடர்ந்து வந்த எல்லோரும் இதுதான் விண்ணுலக மென்றனர்கள், சிலர் ஆநந்தக கடலில் மூழ்கி மதிமயங்கி ஆடினர்கள்; சிலர் நகைத்தனர்கள், சிலர் பாடினர்கள், சிலர் நாற்புறங்களிலும் ஓடினார்கள்; சிலர் எல்லாச சேஷ்டைகளையுஞ் செய்தனர்கள், அங்கே மூக்களவும் குறைவற உண்டவர்களும், நிறைந்துள்ள தேவபோஜனங்களைக்கண்டு ஆசைகொண்டு மேன்மேலும் புஜிக்கவே நினைத்தனர்கள். வேலைக்காரர்கள் தீதிகள் குலமகளிர்கள் ராஜாகள் வேதியர்கள் மற்றும் சேனையிலுள்ளோர்கள் யானை குதிரை முதலிய வாஹனங்கள் மற்றுமுள்ள பசு பக்ஷி மிருகங்கள் முதலிய எல்லோரும் பரத்துவாஜமஹா முனியினாலளிக்கப்பட்ட நல்லுணவுகளை யுண்டே மகிழ்ந்தனர்களே யன்றி, ஒருவராயினும் வேறுணவை யுண்டிலர்; அப்பொழு தங்கே வெண்பட்டுடுக்காதவரும், பசிதாக முற்றவரும், ஸ்நானஞ்செய்யாம லழுக்குடம்பினரும், அழுக்குற்ற கூந்தலுடையவரும், ஒருவரு மில்லர்; ஆட்டு மாமஸங்களாலும், வராஹமாம்ஸங்களாலும், சிறந்த வியஞ்சனங்களாலும், ரஸாயனங்களாலும், நன்கு சமைத்த பருப்பு வகைகளாலும், வெண்மை நிறமுள்ள அன்னங்களாலும், நிறைக்கப்பட்ட பொற்கலங்களும், நன்மலர் நறசாந்தம் முதலியவைகள் நிறைந்த தங்க பாத்திரங்களும், அளவற்றனவாகக் கிடப்பதைக் கண்ணுற்று, எல்லோரும் வியப்பும் மகிழ்வும் கொண்டு திகைத்து நின்றனர்கள் அந்த வனத்தின் பக்கங்களில் பாயஸத்தையே சேறாகவுடைய கிணறுகளும் காணப்பட்டன; அங்குள்ள பசுக்களே காமதேனுப்போல வேண்டுமளவும் பால் கொடுப்பன வாயின; அங்குள்ள மரங்களே நிரந்தரம் தேன் பொழிந்தன; வாபிகளும் மிகுந்துள்ள நல்ல மாம்ஸங்களுடன் கூடிய மத்தியங்களினால் நிறைந்து விளங்கின; அன்னம் நிறைந்த ஆயிரம் பாத்திரங்களும், கறிகள் நிறைந்த அநேகலக்ஷம் ஸ்தாலிகளும், அநேகம் கோடி போஜன பாத்திரங்களும், பெரிய சொம்புகளும், பானஞ்செய்யத்தக்க சிறு சொம்புகளும், வாய்கன்ற தயிர் நிறைந்த பாத்திரங்களும் விளங்கின; நடுத்தர மாதலின், கொஞ்சம புளித்தும், வெண்மை நிறமுடையதும், விளங்கனியின் பரிமளமுள்ள கபித்த

மென்னும் மோரால் சில மடுக்களும், இளநீர்த் தோய்ச்சலைக் கடைந்து சுக்குத் திப்பிலி மிளகுப் பொடிகளுடனே கூடியதும், ஏலம் லவங்கம் தக்கோலம் நாகபுஷ்பங்களுடனும், சர்க்கரை இஞ்சி இவைகளுடனும் கூடிய ரஸால மென்னும் மோரால் சில மடுக்களும், தயிர்களினால் சில மடுக்களும், பால்களினால் சில மடுக்களும் நிறைந்து திகழ்ந்தன; சர்க்கரைகளின் குவைகளும் விளங்கின; அரைத்த நெல்லி சீக்காய் முதலியவைகளும், உழுத்தமா முதலிய சூர்ணங்களும், காய்ச்சின சீக்காய் முதலிய கஷாயங்களும், வெந்நீர்களும், பாத்திரங்களில் நிறைந்து காணப்பட்டன, பல்லுக் குச்சிகளும் சித்தஞ் செய்யப்பட்டன; சந்தனக் குழம்புகளும் தொன்னைகளில் வைக்கப்பட்டன; சிறந்த கண்ணாடிகளும், நிர்மலமாகிய வஸ்திரங்களும், பாதுகைகளும், பாதரக்ஷைகளும், மைச்சிமிழ்களும், சீப்புக்களும், ஆஸனங்களும், பலவகை ஆயுதங்களும், வில்லுகளும், கவசங்களும், படுக்கைகளும், பீடங்களும் விளங்கின; யானை குதிரை முதலியவைகள் நீர் குடிக்கத்தக்க மடுக்களும், நெய்தல் தாமரை முதலிய மலர்கள் மலர்ந்த ஸ்நாநம் பண்ணத்தக்க ஓடைகளும், நீலம் வைடூரியம் போன்ற இளம்புற்களின் கட்டுகளும், பசுக்களின் பொருட்டுச் சித்தஞ் செய்யப்பட்டன; இவ்வகையாக எங்குங் கண்டு, அங்குள்ள யாவரும் இஃது கனவோ? என்று ஐயுற்றுத் தோன்று, மிகவும் வியப்புற்றுத் தேவர்கள் நந்தன வனத்திற்போலப் பரத்துவாஜாச்ரமத்தில் மிக இன்புற்று வாழ்ந்து அவ்விரவினைக் கணப்பொழுதாகப் போக்கினார்கள் இவ்வண்ணம் அங்கெய்திய தேவ நதிகளும், கந்தர்வர்களும், தெய்வப்பெண்களும், மற்றுள்ள யாவரும் ஸ்ரீபரதாழ்வான் சேனையை யானந்தக்கடலில் மூழ்த்துவிட்டுப் பரத்துவாஜமஹா ரிஷியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வந்தவாறு சென்று தத்தமிடஞ் சேர்ந்தனர்கள். இவ்வண்ணம் அச்சேனையி லுள்ளவர்களும் மத்தியபானஞ் செய்து மதமேறித் திவ்வியமாகிய அகரு சந்தனங்களைப் பூசி இன்புற்று அவ்வாறே படுத் திருந்தனர்கள். அவர்க ளணிந்திருந்த நன்மலர் மாலைகளும் புணர்ச்சியில் துவைக்கப்பட்டனவாகி வாடி மலர்கள் உதிர்ந்து தனித் தனி யவிழ்ந்து வீழ்ந் திருந்தன;—

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றொன்றாவது சருக்கம் முற்றிற்று

---

பரத்துவாஜமஹாமுனி பெருமா ளெழுந்தருளி யிருக்குங்கால், அவர்க்கு இவ்வண்ணம் விருந்து செய்யாமல் ஸ்ரீபரதாழ்வான் ஸேனைக்கு இவ்வண்ணம் விருந்து செய்தது என்னெனில், (ஆராதநேஷு ஸர்வேஷு விஷ்ணோராராதனம் பரம், தஸ்மாத்பரதரம்ப்ரோக்தம் ததீயாராதனம்பரம) என்கிறபடி பகவதாராதனத்தைவிடப் பாகவதாராதனமே சிறந்த தென்பதை யறிவிப்பதற்காகவும், தவத்திறமையைவிட அரசாண்மை யொரு பெரிதன் றாதலின், ஸ்ரீராமபிரான் காட்டிலுறை

## தொண்ணூற்றிரண்டாவது சருக்கம்.

ஸ்ரீபரதாழ்வான் பரத்துவாஜமஹாரிஷியிடத்தில விடைபெறறுக்கொண்டு திருச்சித்திரகூடத்திறகுப புறப்பட்டு.

ஸ்ரீபரதாழ்வா னிவவண்ணம் ஸ்ரீபரத்துவாஜமகாமுனியால பூஜிக்கப பட்டவராகி, மகிழ்ந்த பரிஜன பரிவாரங்களுடன் அன்றிரவை யங்குப் போககி, மறுநாளுதயத்தி லெழுநது பரத்துவாஜமஹாமுனியைக் கண்டு தன்டம் ஸமர்பபித்தனா. அம்மஹாமுனியும் இவரை நோக்கி, மஹாராஜர் திருக்குமாரா! நம்முடைய இந்த ஆஸ்ரமத்தில் இரவு ஸுகமாக நீங்கிற்ற? சேனைகளும் நாஞ்செயத விருந்துணடு மகிழநதனவா? என்று வினவினர். ஸ்ரீபரதாழ்வானும் அவரை நோககிப பணிநது மாதவப்பெருமானே! தேவருடைய திருவருளினுல் என சேனையிலுள்ள யாவரும் மிக நல்லுணவு களையும், நற்போகங்களையு மடைநது மிக மகிழச்சியுற்று வாழந்தனாகள. அடியே னிப்பொழுது எம்மைய ரெழுந்தருளி யிருக்கு மிடததிற்குப் புறப்பட்டவனுகித் தேவரை விடைகேட்கினறேன; அடியேனுக்கு விடை மொழி கூறிக குளிரக கடாக்ஷித தருளக; எமமையருடைய ஆஸ்ரமம எங்கிருககினறது? அதறகுச செல்லும் வழியாது? எவவளவு தூரத்தி லிருககின்றது? இவைகளை யருளிச செயக எனறு வினவினா. அமமுனி வரும் இவரை நோக்கி, ராஜகுமாரா! இஙகிருந்து இரணடரையோஜன தூரத்துககு மேலே மிகவும் அழகிய கானகத்தை யுடைய திருச்சித்திர கூட மெனனும் மலை யிருககின்றது; அதனது வடபுறத்தில மந்தாகினி யென்னு மோா நதியிருககினறது; அந்நதிககும் அததிருச்சித்திரகூடத் திறகும் நடுவில் பாணசாலை கட்டபபட் டிருககின்றது, அதில் பெருமாள முதலானோர்கள வாஸஞ் செய்கின்றனாகள; இஙகே நமமுடைய ஆஸ்ர மத்திற்குத் தெனபுறததில் ஒரு கொடிவழி செல்லுகினறதே? இந்த வழி யிலே சிறிதுதூரம் சேனைகளுடன் செல்வாயாகில், நடுவில் தெனமேறகாகக் கிளைவழி பிரிகினறது; அந்த வழியைச சாரந்து செல்வாயாகின, ஸ்ரீராம சந்திர னெழுந்தருளி யிருக்குமிடஞ் சோந்து அவரைக் கண்டு மகிழவாய்

---

தலால் குறைவொனறு மிலலை யெனபதையும், ஸ்ரீபரதாழ்வான் இநத எணணத்தை விட்டு மீளவும் தாமே ராஜராஜனும் மேணமை விளையாதெனபதையும், கைகேயி முதலானோர்க்கு னகறிவிப்பதற்காகவும், இவ்வணணம் மஹாரிஷி செய்தனரென வுணர்க.

பெருமான் தாபஸவிரதங் கொண்டிருநதமையால், அவர் நல்லுணவை யுண்ணுரென்பதாலும், (பத்ரம்புஷ்பம் பலம்தோயம) இதயாதிப்படி யவா காயு கனிகளினுலேயே திருபதியடையுந தன்மையராதலாலும், பெருமாளுக்கிவ்வண்ணம் விருந்து செய்திலரெனவு மறிக.

என்றருளிச் செய்தனர். தசரதசக்கரவர்த்தியின் தேவிகளும் பிரயாணம் புறப்படுவதை யுணர்ந்து வாஹனங்களை விட்டிழிந்து பரத்துவாஜமஹா முனியைச் சூழ்ந்து பணிந்தனர்கள். அவர்களுள் கோஸலையார் ஸுமித்திரா தேவியுடன் வந்து முன்பு முனிவருக்குத் தண்டம் ஸமர்ப்பித்தனர். பின்பு கைகேயியும் யாவரு மிகழ்வதினால் நாணமுற்றுப் பணிந்தனள். அப்பொழுது அம்முனிவர் ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, ராஜகுமாரா! இவர்களைத் தனித்தனியே இவரின்னாரெனக் கேட்டுணர விரும்புகின்றேன்; இவரெல்லோரும் உன் தாய்களென்பதை யானறிவேன், ஆதலின், தனித்தனி யுணர்செய்கவென்று வினவினர். ஸ்ரீபரதாழ்வானும் இங்கே மிக வாடி வருந்தி நிற்கின்றனரோ? இவரே கோஸலையென்னுந் திருநாம முடையவரும், எம் தந்தையருக்குப் பட்டமஹிஷியரும், எம்மையனைப் பெற்றெடுத்த பொற்கொடியாரு மாகின்றனர். இவரது வலது தோளினைச் சார்ந்து நிற்கின்றனரோ? இவருடைய குமாரர்களே மிகவுஞ் சூரர்களும், உருவ மழகியவருமாகிய லக்ஷ்மண சத்துருக்கனர்கள் இங்கே நிற்கின்றனரே? இவள்தான் சீற்ற முடையாள், புன்மதியினள், கட்டழகியென்னுஞ் செருக்குடையாள், பொருளாசை யுற்றவள், மிக்க கொடியவள், கைகேயியென்னும் பெயருடையாள், இவளாலேதான் எம்மையர் சீதா லக்ஷ்மணர்களுடன் கொடிய கானகஞ் சேர்ந்து துன்பமடைந்ததும், என் தந்தையார் பொன்னுலக மடைந்ததும் நேர்ந்தன; இக்கொடியவளே என் தாய், யானிவ்வுண்மை இகழ்வுறுவதற்கு மிவளே காரணம், என்றறிவண்ணம் விண்ணப்பஞ்செய்து கோபத்தாலும் துன்பத்தாலும் சீற்றமுற்ற நாகம்போலப் பெருமூச்செறிந்து கண்ணீர் பெருக்கித் துன்புற்று நின்றனர். பரத்துவாஜ மஹாமுனி யதுகேட்டு ஸ்ரீபரதாழ்வானை நோக்கி,—

న దోషేణావగన్తవ్యా కైకేయీ భరత త్వయా
రామప్రవ్రాజనం హ్యేతత్ సుఖోదర్కం భవిష్యతి ||

*நதோஷேணாவகந்தவ்யா கைகேயீபரதத்வயா*
*ராமப்ரவ்ராஜனம்ஹ்யேதத்ஸுகோதர்கம்பவிஷ்யதி.*

கேளாய் பரதாழ்வானே! இவ்விஷயத்தில் கைகேயியே தோஷமுடையவளென்று நீ எண்ணற்க, கைகேயி ஸ்ரீராமனை இவ்வண்ணம் வனவாஸஞ் செய்யும்படி செய்தனளென்பது தேவ தானவ கந்தர்வ கோப்ராஹ்மணாதிகளுக்கு மிகச் சுகந் தருவதற்கே ஆகப்போகின்றது; இஃது தெய்வச் செயலே யன்றி, இவள் செயலன்று; என்றருளிச் செய்தனர். ஸ்ரீபரதாழ்வானும் அதைக்கேட்டு மகிழ்ந்து பரத்துவாஜமஹாமுனிக்குத் தண்டம் ஸமர்ப்பித்து வலஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு சேனைகளைப் புறப்படும்படி கட்டளையிட்டுத் தாமும் சிவிகையின் றேறிக்கொண்டு புறப்பட்டனர். உடனே யாவரும் தத்தமக்குரிய வாஹனங்களி லேறிக்

கொண்டு சென்றனர்கள். காலாளகள் மாத்திரம் நடந்து சென்றனர்கள். இவவண்ணம் அந்தச சேனைகள மஹாமேகமபோலத் திகழ்ந்து தென்திசையினை நோககிச சென்று பலவகைப் பறவைகளும் விலங்குகளும் நிறைந்த காடுகளைக கடந்து அங்கங்குள்ள ஜந்துககளைப பயமுற் றோடும்படியாக விரைந்து சென்று விளங்கிறறு,—

அயோத்தியாகாணடத்தில தொண்ணூற்றிரணடாவது சருககம முற்றிறறு.

---

## தொண்ணூற்றுமூன்றாவது சருக்கம்

ஸ்ரீபரதாழ்வான திருச்சித்திரகூடத்தைக கண்டு ஸ்ரீராமபிரானெழுந்தருளி யிருக்கு மிடத்தைத தேடியது.

---

இவ்வண்ணஞ் செல்லுகின்ற அந்தச சிறந்த சேனையைக் காட்டிலுள்ள யானைக் கூட்டங்களும கண்டு அச்சங்கொணடு நெடுந்தூரமோடின; மற்றுமுள்ள மான புலி கரடி முதலிய ஜந்துக்களும், காடுகளிலும் மலைகளிலும் ஆறுகளிலும் காணப்பட்டன; இவவகையாக ஸ்ரீபரதாழ்வானும் மகிழவுடன் சென்றனர்; மழைகாலத்தி லாகாயம மேகஙகளால் நிறைந்து மறைக்கப் படுவதுபோல மிகுநதுள்ள சேனையால் மறைக்கப்பட்ட பூமி அப்பொழுது காண்பதற கரியதாயிற்று; ஸ்ரீபரதாழ்வா னிவவண்ணம் நெடுந்தூரஞ் சென்று ஸ்ரீவஸிஷ்டபகவானை நோக்கி, ஆசிரியரே! ஸ்ரீபரத்துவாஜமஹாமுனி எநதவிடததி லெம்மையர் எழுந்தருளி யிருபபதாக வருளிச செயதனரோ? இந்த விடம் அதுவென்றே யான் குறிகளா லுணாகின்றேன், இதுவே திருச்சித்திரகூடம், இதுதான மநதாகினிநதி, கருமுகில்போலக கறுத்த வனமிதோ விளங்குகின்றது, இவையே சித்திரகூடமலையின சிகரங்கள், இங்குள்ள மரங்கள நமது சேனையிலுள்ள யானைகளால் முறிககப்பட்டனவாகி மலாகளைச் சொரிகின்றன என்றுரைதது, சத்துருககனாழ்வானையும நோககி, தம்பி! இந்தச சித்திரகூடகிரியானது தேவகணஙகளுக் குறைவிடமும், மான்கள நிறைந்ததுமாகி ஸாகரம் மகரங்களால நிறைந் திருப்பதுபோலத் திகழுகின்றது; இந்த மான் கூட்டங்களும் மழைகாலத்தில் வானில் வாயுவினுல் மோதப்பட்ட மேகங்கள்போல விரைவாக வோடுகின்றன;—

కర్ణ నికుసుమాపీడా శిరస్సురభీనమీ
మేఘప్రకాశైఃఫలకైః దాక్షిణాత్యయథానరాః॥

*ஜ்வாலாதிகுஸுமாபீடான சிரஸ்ஸு ஸுமாபீடமீ*
*மேகப்ரகாசை: பலகை: தாக்ஷிணாத்யா யதாநரா:.*

இங்குள்ள படர்களும் மேகம்போலக் கறுத்த கூந்தல்களை மேலெடுத்துக் கட்டித் தென்னாட்டு மனிதர்கள்போல மிகப் பரிமளமுள்ள மலர் மாலைகளை அவற்றில் சுற்றி யலங்காரஞ்செய்துகொள்ளுகின்றனர்கள். கோரமாகிய இந்த வனம் முன்பு ஒளியற்றிருந்து இப்பொழுது ஒளிகொண்டிருக்கின்றமையால், ஜனங்கள் நிறைந்த திருவயோத்தியைப்போல எண்ணுகின்றேன்; சிறந்த பரிமாக்கள் கட்டிய நமது சேனையிலுள்ள தேர்களும், விரைவாகச் செல்லுகின்றன பாராய்; இங்குள்ள மயில்களும் அஞ்சிச் செல்லுகின்றன; பறவைகளுங் கூடி யொலிக்கின்றன, இவ்விடம் மிக வழகியதும், வானுலகம் போன்றதும், மாதவர்களுக் குறைவிடமுமாதலின், மிகச் சிறந்ததாகத் தோற்றுகின்றது, மான் முதலிய பலவகை விலங்குகளும் தத்தம் பேடுகளுடன் கூடி மகிழ்ந்து திரிகின்றன என்றுரைசெய்து, சேனைகளையும் நோக்கி, அன்பர்களே! இவ்விடத்தில் முற்றும் சுற்றித் தேடக் கடவீர்கள், ஸ்ரீராம லக்ஷ்மணர்களை யாம் விரைவில் கண்டு ஸேவிக்குமாறு தேடக் கடவீர்களென்று கட்டளை யிட்டனர். அவர்களும் ஸ்ரீபரதாழ்வான் வாக்கியத்தைக் கேட்டு அந்தக் காடுமுழுதுந் தேடி யொருவனையும் காணாமல் தூரத்தில் மேலெழுகின்ற புகைதன்னைக் கண்ணுற்று விரைவாக வந்து ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, எம்மிறையே! மனிதரற்ற விடத்தில் நெருப்புள்ளதாகாதன்றோ? ஆதலின், அவ்விடத்தில் ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் எழுந்தருளியிருப்பார்கள்போலும், ஒருவேளை யவர்க ளிராவிடினும், அவர்களைப் போன்ற யோகிக ளிருப்பார்க ளென்பதில் ஐயமில்லையென் றுரைத்தனர்கள். ஸ்ரீபரதாழ்வானும் அதுகேட்டுச் சேனைகளை நோக்கி, நீங்களிவ்விடத்திலே தானே யிருக்கக் கடவீர்கள். இதற்குமேல் செல்லற்க, யானும் வஸிஷ்ட பகவானும் ஸுமந்திரரும் ஆகிய யாங்களே முன் சென்று எம்மையனைக் காண்போமென்று கட்டளையிட்டுத் தாம் அந்தப் புகை எங்குத் தோற்றுகின்றதோ? அதனையே நோக்கிக்கொண்டு சென்றருளினர். அச்சேனைகளும் ஸ்ரீபரதாழ்வான் கட்டளையின்படி யவ்விடத்திலேயே சுற்றி நின்று, அந்தப் புகையினை நோக்கி, ஸ்ரீராமபிரானங்கிருப்பதாகவே நிச்சயங்கொண்டு ஸ்ரீபரதாழ்வான் முதலிய தங்களுக்கும், ஸ்ரீராமபத்திரருக்கும் தடையின்றிச் சமாகமம் நேருமெனவும், நாம் பெருமானைக் கண்டு தண்டம் ஸமர்ப்பித்துத் தன்னிய ராகுவோமென்றும் நினைத்து மகிழ்ந்து பார்த்துக் கொண்டே யிருந்து திகழ்ந்தன.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றுமூன்றாவது சருக்கம்
முற்றிற்று.

## தொண்ணூற்றுநான்காவது சருக்கம்.

### பெருமாள் பிராட்டியார்க்குத் திருச்சித்திரகூடத்தின் அழகினைக் காட்டி மகிழ்ந்தது.

அங்கே பெருமாளும் திருச்சித்திரகூடத்தில் சேர்ந்து தொருமாஸம் வாழ்ந்து அதிலுள்ள வியப்புகளைக் கண்டு களிப்புற்றவராயினும், அதிலுள்ள விநோதங்கள் பலமுறை கண்டோராகினும் புதுமைபோலக் கௌதுகந் தருவதாதலால், பிராட்டியாரையும் மகிழ்வித்துத் தமது திருவுளத்தையும் மகிழ்விப்போமெனத் திருவுளங்கொண்டு, பிராட்டியாருக்கு அந்தத் திருச்சித்திரகூடத்தைச் சுற்றிலுங் காட்டி அவளை நோக்கி, அடி என் பிராண நாயகி! யானிந்த மலையிலுள்ள விநோதங்களைக் கண்ணுற்றபின், ராஜ்ஜியத்தை இழந்தோமேயென்றும், நட்பினரைகளை விட்டுப் பிரிந்தோமேயென்றும், துன்பஞ் சிறிதேனுந் தோன்றி என் மனத்தை வருத்துகின்றிலது; பலவகைப் பறவைகளையுடையதும், பலவகைத் தாதுக்கள் நிறைந்துயர்ந்த சிகரங்களை யுடையது மாகிய இம்மலையைப் பாராய், இம்மலையில் சில விடங்கள் வெள்ளி போன்றனவும், சில விடங்கள் உதிரம் போன்றனவும் சில விடங்கள் பசுமையுள்ள மஞ்சிட்டை போன்றனவும், சில விடங்கள் நீலமணி போன்றனவும், சில விடங்கள் புஷ்யராகம் போன்றனவும், சில விடங்கள் படிகம் போன்றனவும், சில விடங்கள் தாழைமடல் போன்றனவும், சில விடங்கள் விண்மீன் போன்றனவும், சில விடங்கள் பாதரஸம் போன்றனவுமாகி விளங்குகின்றன; இந்த விடம் பலவகை மிருகங்களின் கூட்டங்களாலும், வேங்கைப் புலிகளாலும், சிறுபுலிகளாலும், கரடிகளாலும், மற்றுமுள்ள விலங்குகளாலும் சூழப்பட்டிருக்கினும், அவைகள் அங்குள்ள யோகிகளின் மஹிமையால் கொடுமையும் பகையும் நீங்கி யிருக்கின்றமையால், மிக வினிதாகி விளங்குகின்றது, மா, நாவல், வேங்கை, வெள்ளலத்தி, முள்ளம், பலா, கொன்றை, அழிஞ்சில், திணிசம், பிலவம், தும்பை, மூங்கில், குமிழம், வேம்பு, மாவலிங்கம், இருப்பை, மஞ்சாடி, இலந்தை, நெல்லி, கடம்பு, பரம்பு, இந்திரம், மாதளை முதலிய மரங்கள் தளிர்களடர்ந்தும், மலர்கள் மலர்ந்தும, பழங்கள் பழுத்தும், தழைத்தும், நிழல் நிறைந்தும், குளிர்ந்தும், மணங்கமழ்ந்து மிருப்பதால் இம்மலை மிகவு மழகுற்றிருக்கின்றது; அடி விதேகராஜன் திருமகளே! இம்மலையின் தாழ்வரைகளில் கின்னர மிதுனங்கள் இன்புற்று விஹாரஞ் செய்கின்றன; கண்ணுறுக; வித்தியாதரர்கள் வாள் முதலிய தம்படைகளையும், சிறந்த வஸ்திரங்களையும், கிளைகளில் தொங்கவிட்டு மனைவிகளுடன் கிரீடைசெய்யுமிடங்களையுங் காண்க; தரையைப் பிளந்து பெருகுகின்ற அருவிநீர்கள் சில விடங்களில் தேங்கியும், சில விடங்களிலு பெருகியும் வருகின்றமை

யால், இம்மலை மதம்பெறற களிறுபோலத் திகழுகின்றது ; மணங்கமழ்ந்து குளிர்ந்து வீசுகின்ற இக்குற்ற காற்று எந்தமனிதனைத்தான் மகிழ்ச்செய்யாது ? இவ்விடத்தில் உன்னுடனும, தம்பியுடனும, பலவாருணடு வாழ்வேனாயினும், சிறிதும் துன்புறேன் , பல்வகை மலர் மணங்கமழ்ந்தும், பலவகைப் பறவைகளின் ஒலி பரவியும, மிக வழகிய சிகரங்கள் பொருந்தியுமுள்ள இம்மலையில் மிகவும விருப்பங்கொண்டு மகிழ்வுற்று வாஸஞ்செய்தேன்,; நான் செய்த இந்த வனவாஸத்தால் இரண்டு பயன்கள் கிடைத்தன ; அதிலொன்று பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்வது, இரண்டாவது பரதனுக்குப் பிரியஞ்செய்வது, அடி ஜனகராஜன் திருமகளே! இந்தச் சித்திரகூடத்தில் என்னுடன் வாஸஞ்செய்து இன்புற்றிருக்கின்றனையா ? மனோவாக்காயங்களையும் மடக்கிப் பலவகை விநோதங்களையுங் கண்டனையா ?—

ఇదమేవామృతంప్రాహూ రాజ్ఞి రాజర్షయఃపరే
వనవాసంభవార్థాయ ప్రేత్యమేప్రపితామహాః ||

*இதமேவாம்ருதம்ப்ராஹூ ராஜ்ஞிராஜர்ஷயஃபரே*

*வனவாஸம்பவார்த்தாய ப்ரேத்யமேப்ரபிதாமஹாஃ.*

வைதேஹிய ராஜகுமாரி ! இந்த வனவாஸ மிவ்வண்ணமிம்மையி லின்பந்தருவது மாத்திரமே யன்று, எம்முன்னோர்களும், பற்றுமுள்ள ராஜரிஷிகளும, மறுமையிலும் இது வானுலகையாயினும, மோக்ஷத்தையாயினும் பயக்குமெனக் கூறினார்கள். இந்த மலையின் சிலைகளும, பற்பல நிறமுள்ளனவாக விளங்குகின்றன; இம்மலையில் இரவில் எரிகின்ற கொடிகள் அக்கினிஜ்ஜுவாலைபோலத் தோற்றுகின்றன , இம்மலையில் சில விடங்கள் மாளிகை போலவும், சில விடங்கள் உத்தியான வனம் போலவும, சில விடங்கள் கல்லுகள் நிறைந்தனவாகவும் விளங்குகின்றன , இம்மலையின் நடுவிலுள்ள சிகரமானது பூமியைப் பிளந்து மேலெழுந்ததுபோ லிருக்கின்றது , இதோ நெல்லி புன்னை மலர் தகரமலர் பூர்ஜஜமரவுரி இலைகளினாலியற்றி, அதன் மேல் தாமரை யிதழ்களைப் பரப்பிச் செய்யப்பட்ட படுக்கைகள் விளங்குகின்றன ; காமிகளினால் தரிக்கப்பட்ட மாலைகளும வாடி வதங்கி எறியப்பட்டுக் கிடக்கின்றன , இந்த மலை இந்திரன் நகரியையும், அளகாபுரியையும், மானஸமென்னும் ஸரோவரத்தையும விடச் சிறந்து விளங்குகின்றது; அடி என் பிராணநாயகி ! உன்னுடனும தம்பியுடனு மிங்கு வாழ்ந்துகொண்டு முன்னோர்கள் சென்றவழியைக் கைவிடாதவனும், சிறந்த நியமங்கொண்டவனுமாகி இதுவரையில் மிகவும மகிழ்வுற்று வாழ்ந்தேன் , இனிமேலும் மிக மகிழ்வேனென் றருளிச்செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றுநான்காவது சருக்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றைந்தாவதுசருக்கம்.

### பெருமாள் பிராட்டியார்க்கு நதியிலுள்ள விநோதங்களைக் காட்டி மகிழ்வித்தது

அநந்தரம் பெருமாளந்தத் திருச்சித்திரகூடத்தினின்றும் புறத்திற் சென்று மிகவு மழகுடையதாய்ப் பெருகி வருகின்ற மந்தாகினியென்னும் நதியைப் பிராட்டியார்க்குக்காட்டி அவளைநோக்கிப் பாராய் ஜனகமகாராஜன் திருமகளே! இந்த மந்தாகினிநதியானது மிகவும் அழகிய மணற்குன்றுகளை யுடையதும், ஹம்ஸம்ஸாரஸம் முதலிய நீர்ப்பறவைகளா லொலிக்கப் பட்டதும், தாமரை செங்குவளை கருங்குவளை முதலிய மலர்களால் மிக வழகியதும், இருகரையிலும் வளர்ந்துள்ள பலவகை மரங்களாலும் சூழப் பட்டதும், குபேரனுடைய மானஸஸரோவரம் போன்றதுமாகித் திகழ் கின்றது, இப்பொழுது இந்த நதியின் நீர் விலங்குகளின் நிரைகளினு லுண்டு கலக்கப்பட் டிருக்கின்றது; இஃது மிகவும் வியக்கத்தக்கதாகின்ற மையால், எனக்கு மிக வேட்கையை வளரச்செய்கின்றது, மரவுரி மான்தோலுரி களையு முடித்துச் சடைதிரித்துக்கொண்டிருக்கின்ற மாமுனிவர்கள் இந் நதியில் மூன்றுகாலங்களிலும் நீரிலாடுகின்றனர்கள், சில முனிவர்கள் கைகளை யுயர்த்திக் கதிரவனை நோக்கித் தவஞ்செய்கின்றனர்கள், இந் நதியி னிருபுறங்களிலும் காற்றினு லசைக்கப்பட்டு இலை மலர் கனிகளை யுதிர்க்கின்ற மரங்களினுல் இம்மலை யாட்டமாடுவதுபோலும், இந்நதி சில விடத்தில் முத்துப்போலத் தெளிவுற்ற நீருடையதும், சில விடங்களில் மணற்குன்றினை யுடையதும், சில விடங்களில் ஸித்தஜனங்களால் நிறைந் ததுமாகி விளங்குகின்றது, பாரிலும் நீரிலும் மலர்கள் காற்றினு லுதிர்ந்து வீழ்ந்து திகழ்கின்றன; அம்மலர்களின் மீது சக்கரவாகப் பறவைகள் செவிக் கினிமையாக வொலி செய்துகொண்டு படுத்திருக்கின்றன, அடி என் பிராணநாயகி! இந்தத் திருச்சித்திரகூடம் ஏகாந்தமாகிப் புணர்ச்சி இன்பம் இடைவிடாது அநுபவிக்கத்தக்கதாகி யிருக்கின்றமையால், இதுவே திருவயோத்தியிலுஞ் சிறந்ததெனவும், இந்நதியும் மிகவும் காமத் தந்த யுத்தீபனஞ் செய்கின்றமையால், இதுவே உனனிலும் சிறந்த தென வும் யான் அறிகின்றேன்; மிகத் தூய்மையினர்களாகிய மஹாரிஷிகளும் இங்கு வாஸஞ்செய்து நீரிலாடி மகிழ்கின்றமையால், நீயும் இந்த மந்தா கினியில் மூழ்கி மகிழ்வாயாக, செந்தாமரை வெண்டாமரைகளும் மலர்ந் திருக்கின்றன; அடி சீதையே! இங்குள்ள ஜந்துக்களை நாட்டார்களாகவும், இம்மலையைத் திருவயோத்தியாகவும், இந்நதியினையே ஸரயூநதியாகவும் எண்ணிக்கொண்டு களிப்புறுவாயாக, லக்ஷ்மணனும் பணிவிடை செய்து

கொண்டு நிரந்தரம் இடைவிடா திருக்கின்றனன், நீயும் எனக்கு அநுகூலையாகி யிருக்கின்றனை, ஆதலின், நீங்களிருவரும் எனக்கு மிகவும் மகிழ்ச்சியை யுறுவிக்கின்றீர்கள்,—

ఉపస్పృశం స్త్రిషవణం మధుమూలఫలాశనః
నాయోధ్యాయైనరాజ్యాయ స్పృహయేద్యత్వయాసహ ||

உபஸ்பருசம ஸத்ரிஷவணம மதுமூலபலாசனः
நாயோத்யாயைந ராஜ்யாய ஸ்பருஹயேத்யத்வயாஸஹ

அடி வைதேஹி! யானுன்னுடன் இந்நதியில் தினந்தோறும் மூன்று காலங்களிலும் ஸ்நாநம் செய்து, தேனோ கிழங்கு கனி காய்களை யுண்டு மகிழ்ந்திருக்கின்றேன், இப்பொழுது திருவயோத்திக்குச் செல்லவும் விருப்புறேன்; அரசாட்சிசெய்யவும் கோரேன், பறவைகள் ஒலித்தும், மலர்கள் மலர்ந்தும், குளிர்ந்தும், மணங் கமழ்ந்தும் பெருகிவருகின்ற இந்நதியினைக் கண்டு எவன்றான் இளைப்புத் தீர்ந்து மனமகிழ்ந் தின்புறான் கண்டோரெல்லோரும் மகிழ்வார்கள், ஆதலின், யானும் மிக மகிழ்கின்றேன், என்றிவ்வண்ணம் பிராட்டியார் மகிழும்படி யருளிச் செய்து கொண்டே திருச்சித்திரகூடத்தில் உலாவிக்கொண்டிருந்தருளினார்

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றாறாவது சருக்கம்.

இளையபெருமாள் ஸ்ரீபரதாழ்வாரைக் கண்டு பகைகொண்டு வருவதாக எண்ணிப் பெருமாளுடன் அவர்களைக் கொலை செய்வே னென்று முனிந்து கூறியது.

பெருமாள் பிராட்டியாரைக் கிவ்வண்ணம் அந்த மந்தாகினிநதியைக் கண்ணுறுவித்து, அந்த மலையின் தாழ்வரையில் எழுந்தருளியிருந்து பிராட்டியாரை மாம்ஸத்தைப் புஜிப்பித்துக்கொண்டு அவளை நோக்கி, அடி நாயகி! இந்த மாம்ஸம் மிகத் தூய்மையுடையது, மிகவும் உருசியுற்றது, அக்கினியில் நன்கு சமைக்கப்பட்டது; என்றருளிச் செய்துகொண் டிருக்கையில், அருகில் வருகின்ற ஸ்ரீபரதாழ்வாருடைய சேனைகளின் தூளிகள் மேலெழுந்து திகழ்ந்தன; ஒலியும் மிகப் பரவி யொலித்தது; காட்டி

ளுள்ள யானைக்கூட்டங்களும் அச்சங்கொண்டு மூலைக்குமூலை குலைகுலை
யாக வோடின; பெருமான் அவைகளைக் கண்டு இளையபெருமாளுக்குங்
காட்டி அவரை நோக்கி, அடா லக்ஷ்மணா! ராஜனோ ராஜன் போன்றவனோ
யாவனோ, ஒருவன் வேட்டை யாடுவதன்பொருட்டு இங்கு வருகின்றனன்
போலும், அல்லது வேறே துஷ்டமிருகமாயினும் இங்கு வந்திருக்கின்றது
போலும், இல்லையாகில், இவ்வண்ணம் ஒலியும் தூளியும் தோற்றுமோ?
ஆதலின், இதனை நீ நன்குணாக; இம்மலை பறவைகளும் பறப்பதற்கும்
அரியதாதலின், இதனை நீ நன்குணர்க, என்றருளிச் செய்தனர். இளைய
பெருமாளும் இவ்வாக்கியத்தைக் கேட்டு அருகிலுள்ள உயர்ந்ததோர் ஸால
மரத்தின்மேலேறி நாற்புறங்களையும் சுற்றிப் பார்த்துக் கீழ்த்திசையில் வட
கிழக்காகத் திரும்பி சிறந்த சேனைகள் அடர்ந்து நிற்பதையுங்கண்டு பெரு
மாளை நோக்கி, எம்மையனே! கேட்டருளீர் ஸந்தானஞ் செய்யப்பட் டிருக்
கின்ற அக்கினியை யாற்றுக, பிராட்டியாரும் குகையைப் புகுக, வில்லை
நாண்கட்டிக் கணைதொடுத்துச் சித்தஞ் செய்க; கவசத்தை யணிந்து
கொள்க; என்றுரை செய்தனர். பெருமாளும் அதுகேட்டு இளையபெரு
மாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! இந்தச் சேனையை யாருடையதாக நினைக்
கின்றனை; நன்கு பாராயென் றருளிச் செய்தனர். இளையபெருமாளும்
அதுகேட்டுக் கன்னுற்றுப் பெருமாளை நோக்கி, எம்மையனே! கைகேயி
மகனாகிய பரதன் அபிஷேகங்கொண்டு நாமிருவரும் வாழு மளவும்
தனக்கு ராஜ்ஜியம் நிலைப்ப தரிதென வெண்ணி, அது நிலைப்பதன்பொருட்டு
நம்மைக் கொலைசெய்யக் கருதியே சேனைகளுடன் வருகின்றனன்போலும்,
அவனுடைய தேர்க்குக் குறி மலையத்தித் துவஜமன்றோ? அஃது வருகின்ற
தேரின்மீது காணப்படுகின்றது, இந்தப் படர்கள் குதிரைகளின்மேலேறி
வருகின்றனர்கள்; யானைக் காரர்களும் யானைகளின்மேலேறி மகிழ்கின்றனர்
கள்; ஆதலின், நாமிருவரும் வில்லைக் கையிலேந்தி மலையி னுச்சியிலேறி
நிற்போம் அல்லது, படைகளைச் சித்தஞ் செய்து கொண்டு இங்கேயாயி
னும் நிற்போம், பரதன் இப்பொழுது நம்முடைய வசத்தி லகப்படுவானோ?
அவனை யான் கண்ணுறுவேனோ? அவனாலன்றோ நமக்கு இவ்வண்ணம் துன்
பம் நேர்ந்தது; ஆதலின், நமக்குப் பகையாகிய இந்தப் பரதன் கொலை
செய்வதற் குரியவனே? அவனைக் கொலைசெய்வதினால் பாவஞ் சிறிது மணு
காது; முன்பு அபகாரஞ் செய்தவர்களைக் கொன்றால் பாவமும் விதிக்கப்
பட்டிலது; பரதனும் நம் விஷயத்தில் அபகாரஞ் செய்தவனேயல்லனோ?
பரத னிறந்த பின்பு இந்தப் பார் முழுதும் ஆண் டின்புறக் கடவீர். இப்
பொழுது மிகப் பொருளாசைகொண்ட கைகேயி யானையினால் முறிக்கப்
பட்ட மரம்போலப் போரில் என்னா லடிக்கப்பட்ட மகனைக் காணக்கடவள்.
கைகேயியையும் இனத்தார் சுற்றத்தார்களுடன் கொலை செய்வேன், இப்
பொழுது பூமி மிகுந்த பாரங் கழிந்து மகிழக் கடவது. இப்பொழுது
அவர்கள் பேரிலுள்ள கோபத்தைப் புதரில் நெருப்பைவைத் தெரிப்பது

போலப் பகைகளின்மேல் பரவச்செய்து கொலைசெய்வேன், இப்பொழுது கூரிய கணைகளினால் பகைகளின் காயங்களைப் பிளந்து இந்தச் சித்திரகூடத்தின் காட்டைக் குருதியால் நனைந்ததாகச் செய்வேன்; என்னால் அடிக்கப்பட்டுக் கிடக்கின்ற யானை குதிரை காலாள்களை நாய் நரி கழுகு முதலியவை பற்றி யிழுக்கக் கடவன. இப்பொழுது போரில் சேனைகளுடன் பரதனைக் கொலைசெய்து வில்லின் கடனையும், பாணங்களின் கடனையும், தீர்த்துக்கொள்வேனென்று மிக முனிந்து கூறியருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றாறாவது சருக்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாவது சருக்கம்.

*பெருமாள் இளையபெருமாளைத் தேற்றி, ஸ்ரீபரதாழ்வான் தம்மிடத்தில் பத்திகொண்டு வந்திருப்பதாக நிச்சயித் தருளியது*

---

இளையபெருமாளிவ்வண்ணம் மிகக் கோபமுற்று உரைசெய்ததைப் பெருமாள் கேட்டு அவரை நோக்கி, அடா லக்ஷ்மணா! மிகவும் சூரனும், மிகவும் புத்தியுடையவனுமாகிய பரதன் தானே இங்கே வருகையில், வில்லினாலாயினும், வாளினாலாயினும், இப்பொழுது செய்யத்தக்க பயன் யாது?—

పితుస్సత్యం ప్రతిశ్రుత్య హత్వా భరతమాగతం
కింకరిష్యామి రాజ్యేన సాపవాదేన లక్ష్మణ ॥
యద్ద్రవ్యం బాంధవానాం వా మిత్రాణాం వా క్షయే భవేత్
నాహం తత్ప్రతిగృహ్ణీయాం భక్షాన్ విషకృతానివ ॥
ధర్మమర్థం చ కామం చ పృథివీం చాపి లక్ష్మణ
ఇచ్ఛామి భవతామర్థే ఏతత్ప్రతిశృణోమి తే ॥

பிதுஸ்ஸத்யம்ப்ரதிஶ்ருத்ய ஹத்வாபரதமாகதம்
கிங்கரிஷ்யாமிராஜ்யேந ஸாபவாதேநலக்ஷ்மண
யத்த்ரவ்யம்பாந்தவாநாம்வா மித்ராணாம்வாக்ஷயேபவேத்
நாஹந்தத்ப்ரதிக்ருஹ்ணீயாம் பக்ஷாந்விஷக்ருதாநிவ
தர்மமர்த்தஞ்சகாமஞ்ச ப்ருதிவீஞ்சாபிலக்ஷ்மண
இச்சாமிபவதாமர்த்தே ஏதத்ப்ரதிஶ்ருணோமிதே

அடா லக்ஷ்மணா! நான் பதினான்காண்டு தேவர் கட்டளையின்படி வனவாஸஞ் செய்வேனென்று தந்தைக்கு பிரதிஜ்ஞை செய்து கொடுத்து அதையும் நிறைவேற்றாமல், தானே வந்த பரதனையுங் கொலைசெய்து யாவரும் பழிக்கும்படி இந்தப் பாரை யாளுவதினா லென்ன பயன்? யாது ஸுகம்? இனத்தாரைக் கொலைசெய்தாயினும், சுற்றத்தாரைக் கொலைசெய்தாயினும், நட்பினர்களைக் கொலைசெய்தாயினும், யாதொரு செல்வம் வாய்க்கின்றதோ? அதனை விஷங்கலந்த அன்னத்தைப்போலவெண்ணித் துறப்பேனல்லது, கைக்கொள்ளேன், அறம்பொருளின்பம் ராஜ்ஜியம் இவைகளையுங்கள் பொருட்டு யான் கோருகின்றே னல்லது வேறில்லை, இவ்வண்ணம் யான் உனக்குச் சத்தியஞ் செய்து கொடுப்பேன், என் சகோதரர்களெல்லோரும் பொருளுடையோ ராவதன் பொருட்டும், இன்புற்றோராவதன் பொருட்டுமே யான் இந்த ராஜ்ஜியத்தையும் கோருகின்றேன்; இது விஷயத்தில் ஸத்தியமாக ஆயுதத்தைக் கையிலேந்தி யானையிடுவேன்,—

నేయమ్మమమహీసౌమ్య దుర్లభా సాగరాంబరా
నహీచ్ఛేయమధర్మేణ శక్రత్వమపిలక్ష్మణ ॥

நேயமமமமஹீஸௌமய துாலபாஸாகராமபரா
நஹீசசேயமதாமேண சகரதவமபிலக்ஷமண

அடா லக்ஷ்மணா! யான் நினைத்தேனாகில், கடல் சூழ்ந்த இம்மண்ணுலகமும் எனக்கு பெறற்கரிய தாகுமோ? ஒருபொழுது மாகாது, ஆகிலும், தருமத்தைத் துறந்து தீமையினால் தேவேந்திரன் பட்டங் கிடைக்கினும் அதனை யான் விரும்பேன், அடா தம்பி! உன்னை விட்டாவது, பரதனை விட்டாவது, சத்துருக்கனை விட்டாவது, எனக்குச் சிறிதும் ஸுகமுளதாகாது; ஒருகாலுளதாயின், அதனைத் தீபற்றி எரிகக்கடவது, அடா லக்ஷ்மணா! பரதன் இப்பொழுது திருவயோத்திக்கு வந்து யான் உன்னுடனும், ஸீதையுடனும், தவசியாகக் காடணீந்ததைச் செவியுற்று மிகச் சோகமடைந்து நம்மீதுள்ள நேசத்தினால் நம்மைக் கண்டு வேண்டியழைப்பதன் பொருட்டு வந்தனனே யன்றி, வேறெண்ணங் கொண்டு வந்திலன், தன் தாயாகிய கைகேயிமீது மிகச் சினமுற்று வன்மொழியும் மொழிந்து, நம் தந்தையையும் ஸமாதானஞ் செய்து, ராஜ்ஜியத்தை என் பொருட் டளிக்கக் கோரி வருகின்றனன்; "இப்பொழுது பரதன் இவ்வெண்ணங்கொண்டு வருவதற்கே தக்க காலம், அடா லக்ஷ்மணா! பரதன் நம்மேல் தீங்கு செய்ய மனத்திலுங் கருதான்; அடா பரதன் நம விஷயத்தில் எப்பொழுதாயினும் சிறிதேனும் தீங்குசெய்திருக்கின்றனனோ? செய்திலனே? தீங்குசெய்திருக்கின்றனனாகில், அதனைக் கூறுக; அத்தன்மையனாகிய அவன் விஷயத்தில் நீயேன் இவ்வண்ணம் பகை நினைக்கின்றனை,

నహి తే నిష్ఠురం వాచ్యో భరతో నాప్రియం వచః
అహం హ్యప్రియముక్తస్స్యాం భరతస్యాప్రియే కృతే ॥

நஹிதே நிஷ்டுரம் வாச்யோ பரதோ நாப்ரியம் வச:
அஹம் ஹ்யப்ரியமுக்தஸ்ஸ்யாம் பரதஸ்யாப்ரியே க்ருதே

அடா லக்ஷ்மணா! நீ பரதனைக் கண்டு சிறிதும் வன்மொழி மொழியற்க, பரதனுக்கு நீ வன்மொழி மொழிந்து தீமை செய்வாயாகில், யானே உன்னால் தீமை செய்யப்பட்டேனாகுவேன், அடா லக்ஷ்மணா! ஒருவன் தன்னுயிர்க்கு நிகராகிய தந்தையை யாயினும், உடன் பிறந்தோனை யாயினும், எவ்வண்ணம் கொலை செய்வான்? ஒருகால் ராஜ்ஜியத்தின் பொருட்டே நீ இவ்வண்ணம் முனைசெய்வாயாகில், யான் பரதனுடன் அடா பரதா! நீ ராஜ்ஜியத்தை இந்த லக்ஷ்மணனுக்கு அளிக்கக்கடவை யென்று உரை செய்கின்றேன், யானிவ்வண்ணம் உரைத்தவுடன் அவன் அவ்வண்ணமே யாகுக வென்றே மகிழ்ந்துரைசெய்வானல்லது, சிறிதும் மறுமொழி கூறானென்றருளிச் செய்தனர். இவ்வண்ணம் அருளிச் செய்த பெருமாள் வாக்கியத்தைக் கேட்டு இளையபெருமாள் வெட்கமுற்றுத் தம்முள்ளேயே தாமே யடங்கி யருளினர். பின்பு பெருமாளை நோக்கி, ஸ்வாமி! நம் தந்தையாரோ தேவரைக் காணும் பொருட்டு வருகின்றார் போலு மென்று நாணமுற்றிளையபெருமாளுரை செய்தனர். பெருமாளும் இளையபெருமாள் நாணமுற்றமையை யறிந்து அவரை நோக்கி, அடா லக்ஷ்மணா! பரதன் நம்மைக் காண்புதன் பொருட்டே வருகின்றானென்று யானெண்ணுகின்றேன்; அன்றியும், நாம் துன்புறத்தகாதவாக ளொன்றும், இன்புறத் தக்கவாக ளொன்றுமெண்ணி, நம்மை யழைத்துக்கொண்டு போவதன் பொருட்டு வருகின்றான், அல்லது, இந்தச் சீதையை மாத்திர மாயினும், என் தந்தை திருவயோத்திக் கழைத்துக்கொண்டு போகுவார், வாயுவேகமுள்ள சிறந்த எம் தந்தையரது இரண்டு குதிரைகளும் விளங்குகின்றன, சேனைக்கு முன்பு எம் தந்தையரது சத்துருஞ்சயமென்னும் யானை வருகின்றது; இவ்வண்ணம் எம் தந்தையரது வாஹனங்களைக் காண்கின்றேனாயினும், அவருடைய வெண்குடையினைக் காண்கின்றிலேன், ஆதலின், எனக்கு மிகவும் ஐயந் தோன்றுகின்றது; அடா லக்ஷ்மணா! நீ மரத்தின் நுனியினின்றும் இழிக; எனது வாக்கியத்தின்படி கேட்க என்றருளிச் செய்தனர். இளையபெருமாளும் பெருமாளுடைய வாக்கியத்தைக் கேட்டு, ஸாலமரத்தினின்றும் கீழேயிறங்கிக் கைகுவித்துக்கொண்டு பெருமாளருகில் நின்றனர். அங்கு ஸ்ரீபரதாழ்வானால் எல்லீரும் குடியாகிய பீடைசெய்யக் கடவீரல்லீரென்று கட்டளையிடப்பட்ட சேனைகளும், அந்தத் திருச்சித்திரகூடகிரியைச் சுற்றியிருந்தன; இவ்வண்ணம் ஸ்ரீபரதாழ்வானால் மதமின்றி வினயமுண்டு

தருமத்தையு முணர்ந்து, பெருமானைச் சமாதானஞ் செய்வதன் பொருட்டு நிறுத்தப்பட்ட அந்தச் சேனை அந்தத் திருச்சித்திர கூடத்தைச் சுற்றி யிருந்து திகழ்ந்தது.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றேழாவது சருக்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றெட்டாவது சருக்கம்.

ஸ்ரீபரதாழ்வான் பெருமானெழுந்தருளி யிருக்கின்ற ஆச்ரமத்தை யறிந்து வாஹனத்தினின்று மிறங்கிக் கால்களால் நடந்து சென்றருளியது.

ஸ்ரீபரதாழ்வான் சேனைகளை நிறுத்தி விட்டுக் கால்களாலேயே நடந்துபோகக் கருதிச் சேனைகள் தம் கட்டளையின்படி நின்றவுடன் சத்ருக்நாழ்வானை நோக்கி, அடா தம்பி! நீ விரைவாகப் பல ஜனங்களுடன் மிகவும் புகற்கரிய இவ்வனத்தில் நம்மைய ரெழுந்தருளி யிருக்கு மிடத்தைத் தேடக் கடவை. குஹப்பெருமாளும் தன்னினத்தார்களுடன் தேடக் கடவர். யானும் அமைச்சர்களுடனும், ஆசிரியர்களுடனும், வேதியர்களுடனும், நகரத்தார்களுடனும் தேடுகின்றேன். எம்மையரையாயினும், லக்ஷ்மணனையாயினும், பிராட்டியையாயினும் காணு மளவும், என் மன மின்புறாது; முழுமதிபோன்ற எம்மையர் திருமுக மண்டலத்தைக் காணேனாகில், நானின்புறேன், ராஜலக்ஷணங்களையுடைய எம்மையருடைய திருவடித் தாமரை யிணைகளைப் பணிந்து சிரத்தில் தரிக்கேனாகிலும், யானின்புறேன், எம்மையர் எதுவரையில் தாதை மூதாதை முறைப்படி வாய்த்த ராஜ்ஜியத்தில் திருவபிஷேகங்கொண்டு அரசாக்ஷி செய்கின்றிலரோ? அதுவரையில் என் சித்தம் நிலை கொள்ளாது, முழுமதிபோல நின்மலமான திருமுக மண்டலத்தையும், செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுமுடைய எம்மையரை நிரந்தரம் சேவித்துப் பணிவிடை செய்யும் லக்ஷ்மண னொருவனே யல்லனோ நல்வினையினன்? இந்தப் பூமி முழுதும் பாதுகாத் தளிக்கவல்ல எம்மையரை விட்டுப் பிரியாமல் அடவிக்கு முடன் சென்ற வைதேஹி யல்லளோ பெண்களுள் நல்வினையினள்.

సంభగశ్చిత్రకూటో஽సౌ గిరిరాజోపమో గిరిః
యస్మిన్వసతి కాకుత్స్థః కుబేర ఇవ నందనే ||

ஸுபக்ச்சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோகிரிঃ
யஸ்மின்வஸதிகாகுஸ்தঃ குபேரஇவநந்தநே.

மிகவும் ஸந்தோஷ முறுவிக்கத்தக்க சைத்திரரதமென்னும் உத்தியானத்தில் குபேரன் வீற்றிருப்பதுபோல எம்மையர் மிக வழங்கிய இந்தத் திருச்சித்திரகூடத்தி லெழுந்தருளி யிருக்கின்றமையால், இஃது மிக வொளியுற்றதும், இமயகிரிபோலச் சிறப்புற்றதுமாகித் திகழுகின்றது; இவ்வநத்தி லெம்மையர் எழுந்தருளி யிருக்கின்றமையின், இஃதொன்றுமே நலவினை யுற்றது; எனறிவ்வண்ண முரைசெய்து விடுத் தாம் கால்களினாலேயே நடந்து அந்த வனத்தினிடை புகுந்து, அங்குள்ள மரங்களின் நிரையையும், லதைகளின் வரிசையினையும் பார்த்துக் கொண்டே யதனிடையிற்சென்று ஸ்ரீராமபத்திரருடைய ஆச்ரமத்தில மேலெழுகின்ற புகையைக் கண்டு மிக மகிழ்ந்து, இவ்விடத்தில் பெருமா ளெழுந்தருளி யிருக்கின்றாரென்றறிந்து, கடலைக்கடந்து செல்ல விரும்பி நீரில் வீழ்ந்து மூழ்கி வருந்திக் கடையி லதின் அக்கரையைச் சார்ந்தவன்போல மிகக் களிப்புற்று, மீளவும் சேனைகளுக்குக் கட்டளையிட்டு நிறுத்தி விட்டு ஸுமந்திரர் குஹப்பெருமாள் முதலியவர்களுடன் கூடி விரைவாகச் சென்று மிக மகிழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றொன்பதாவது சருக்கம்.

ஸ்ரீபரதாழ்வான் பெருமாளைக் கண்டு தண்டம ஸமர்ப்பித்தது.

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் சேனைகள் நின்ற பின்பு, ஸ்ரீராமசந்திரரை எப்பொழுது காண்பேனென்று பேராவாகொண்டு ஸ்ரீசத்துருக்கனாழ்வானுடன் புறப்பட்டு அவருக்கு ஸ்ரீராமாச்ரமத்திலுள்ள விநோதங்களைக் காட்டிக்கொண்டு, ஸ்ரீவஸிஷ்டபகவானை நோக்கித் தம் மாதாக்களையும் விரைவாக அழைத்துக்கொண் டெழுந்தருளும்படி விண்ணப்பஞ்செய்து, தாம் விரைவாக முன்னே சென்றனர். ஸுமந்திரரும் ஸ்ரீசத்துருக்கனாழ்வானைச் சார்ந்து சென்றனர் அவர்க்குப் பெருமாளைக் காணவேண்டுமென்னும் ஆசை ஸ்ரீபரதாழ்வானுக்குப் போலவே மிகுதியாயிருந்தது; ஸ்ரீபரதாழ்வான் நடந்து கொண்டே பெருமா ளெழுந்தருளியிருக்கின்ற பர்ணசாலையைக் கண்ணுற்று, அதற்கெதிரில் முதிக்கப்பட்ட

கட்டைகளையும், பறிக்கப்பட்ட புஷ்பங்களையுங் கண்டு மகிழ்ந்து, பர்ண சாலையினின்று மந்தாகினிநதிக்குப் போய்வரும் வழியில் இடையிடையில் மரங்களில் தாப்புல் மரவுரிகளா லிடப்பட்ட குறிகளையும், குளிர் காய்வதன் பொருட்டுக் குவை குவையாக நடப்பட்ட ஆடு மாடுகளின் எரிமுட்டைகளையுங்கண்டு, ஸ்ரீசத்துருக்கனுழவானையும், மற்றுமுள்ள மந்திரிகளையும் நோக்கிப் பாரீர் அன்பர்களே! ஸ்ரீபரத்துவாஜமஹாமுனி யருளிச்செய்த எம்மைய ரெழுந்தருளி யிருக்கின்ற இடத்தையே யாம் வந்து சேர்ந்தோமென்று எண்ணுகின்றேன்; இவ்விடத்திற்கு மந்தாகினி யாறும் அருகி லிருக்கின்றது போலும், இங்கு மரங்களினுனியில் கட்டப்பட்ட மரவுரிகளும் லக்ஷ்மணனாலேயே கட்டப்பட்டனபோலும், இக்குறிகளினால் இரவிலும் வழி தப்பாமல் போய் வருவா ரன்றோ? நீண்ட தந்தங்களை யுடையனவும், வேகமுள்ளனவும், மதமேறினவுமாகிய காட்டி யானைகள் ஒன்றுக் கொன்று பகை கொண்டு போர் செய்து கர்ஜனை செய்துகொண் டிருக்கின்றன; லக்ஷ்மணன் இக்குறியிடானாகில், போய் வரும் வழி இந்த யானைகளால் மிதிக்கப்பட் டழிந்துவிடு மன்றோ? ரிஷிகள் இவ்விடத்தில் ஆதானஞ் செய்கின்றனர் போலும், அவர்களால் வளர்க்கப்பட்ட தீயின் புகை மேலெழுந்து தோன்றுகின்றதே? பிதிருவாக்கிய பரிபாலனஞ் செய்துகொண் டிருக்கின்ற ரிஷிபோன்ற எம்மையனை இவ்விடத்திலே தானே கண்டு தண்டம் ஸமர்ப்பித்து மகிழ்வேனென் றுரை செய்துகொண்டே சிறிது தூரம் நடந்து மந்தாகினி நதி சேர்ந்து, மீளவும் அவர்களை நோக்கி, நேசர்களே! எம்மையர் மனிதரற்ற கானகத் திடை சேர்ந்து தரையிலேயே வீராஸனத்தி லெழுந்தருளி யிருக்கின்றனரோ? என்னுடைய பிறவியையும், என்னுடைய பிழைப்பையும், மிக விகழுகின்றேன்; என்னாலன்றோ எம்மையர் எல்லாப் போகங்களையுந் துறந்து காடுறைந்து வருந்துகின்றனர் இவ்வண்ணம் யான் உலகத்தவராலும் பழிக்கப் படுகின்றேன்; ஆதலின், யான் ஸீதா லக்ஷ்மணர்களுடன் கூடிய எம்மையர் திருவடிகளில் வீழ்ந்து நன்மொழிகளால் வேண்டிக் கொள்வேன்; என றிவ்வண்ணம் புலம்பி வருந்தி நடந்து மிகப் புண்ணியகரமாகிய பெருமானுடைய பர்ணசாலையைக் கண்டனர். அஃது ஸாலம்பனை, அசுவகர்ணம் இவைகளின் தழைகளால் நிறைக்கப்பட்டிருக்கின்றது; அதனுள் இந்திரன் வில் போன்ற சிறந்த கோதண்டங்கள் திகழ்கின்றன; ஸூரிய கிரணங்கள் போன்ற அம்பறாத் தூணிகளில் நிறைந்துள்ள கணைகளாலும், அஃது நாகங்களால் போகவதி பட்டணம் போல விளங்கிற்று; தங்கத்தாற் செய்யப்பட்ட உறையுடைய வாள்களினாலும், தங்கத்தினால் அழகின்பொருட்டு பூணபோட்டலங்காரஞ்செய்யப்பட்ட கேடயங்களினாலும், உடும்புத் தோல்களால் செய்யப்பட்டு, தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கைவிரல்களின் கவசங்களாலும் திகழ்கின்றதும், பகைவர்கள் பீடைசெய்ய வொண்ணாததும், வடகிழக்குப் பாகத்தில

முறைமைய தாழ்ந்துள்ளதும, எரிகின்ற அக்கினியை யுடையதும், மிகத் தூய்மையதுமாகிய வேதிகையையுங் கண்டனர். ஸ்ரீபரதாழ்வா னிவ்வண்ணம் முன்பே பார்த்துக்கொண்டு அருகில வருகையில், பர்ணசாலையில வீற்றிருக்கின்றவரும், ஜடாமண்டலத்தை யுடையவரும், மரவுரி யுடுத்தவரும், அக்கினிபோலத் திகழ்கின்றவரும, சிங்கத்தினதுருபபோன்ற தோளிணை யுடையவரும், நீண்டிருண்ட புஜங்களை யுடையவரும, செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையவரும, உலகமனைத்துக்கும நாதரும், தருமம் தவறாதவரும, திசைமுக தேவன் போன்றவரும, தூப்புல்லினால் பரப்பப்பட்ட பூமியின்மேல எழுந்தருளி யிருப்பவரும, பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் திகழ்பவருமாகிய பெருமாளைச் சேவித்து மிகத் துன்பமடைந்து ஓடி வந்து கண்ணீர பெருக்கி வாய் தழுதழுத்து அத்துன்பத்தை யடக்க வாற்றலற்று, அந்தோ ? அந்தோ ? யாவரொருவர் சபைநடுவில எல்லோருந் தொழும்படியாகத் திருவயோத்தியில் சிங்காஸனத்தி லெழுந்தருளி யிருந்தனரோ ? அந்த என்னையரோ இப்பொழுது காட்டிடையில பசு பக்ஷிகளினால சூழப்பட்டவராகி, வீற்றிருக்கின்றனரோ ? யாவரொருவர் விலையுயர்ந்த மிகச் சிறந்த பீதாம்பரத்தை யுடுத்தனரோ ? அந்த எம்மையரோ மரவுரி யுடுத்திருக்கின்றன ரந்தோ ? யாவரொருவர் மிக மணமுள்ள பலவகை மலர் மாலைகளை யணிந்தனரோ? அந்த எம்மையரோ ஜடை தரித்துக்கொண்டு வீற்றிருக்கின்றனரோ ? யாவரொருவர்க்குச் சிறந்த தருமத்தின் திரள் விதிப்படி செய்யப்பட்ட யாகங்களுடன கூடினவோ ? அந்த எம்மையரோ தருமத்தைத் தேடுகின்றனரோ ? மிகச் சிறந்த சந்தனங்களால யாவருடைய திருமேனி பூசப்பட்டதோ ? அந்த எம்மையருடைய திருமேனியே இப்பொழுது தூள் படிந்து மலினமாகிய தந்தோ ? எம்மையா என் பொருட்டே யன்றோ ? இவ்வண்ணம மிகத் துன்புற்றனர. மிகப் பாவியும, கொடியனுமாகிய என உயிர வாழ்க்கையையும், பிறப்பினையும் இகழக ; என்றிவ்வண்ணம மிகவும் தீனமாகப் புலம்பித் திருமுகத்தில் வேர்வை நீருற்று அழுதுகொண்டே, பெருமாள திருவடியில விரைவாக வீழ்கையில, அத்திருவடிகளைப் பற்றாமலே தரையில வீழ்ந்து மிகத் துன்பத்தினால அந்தோ ? எம்மையரோ ! என்றொருதரம் முறைத்துப் பின் பொன்றும் கூறாது திகைப்புற்றுப் பின்னரும், பெருமாளது திருமுக மண்டலத்தைக் கண்ணுற்றும், எம்மையரோ யென்று கூவினரோ யன்றி, வேறு மொழிவதற்குத் திறமையுற்றிலர்; உடனே ஸ்ரீசத்துருக்கனாழ்வானும அவ்வண்ணமே துன்புற்று வந்து வீழ்ந்து பெருமாள் திருவடிகளில தண்டம ஸமாப்பித்தனர். பெருமாளும் இவ்விருவர்களையும் ஆலிங்கனம் செய்து கொண்டு கண்ணீர்பெருக்கி யிருந்தனர். அநந்தரம் ஸ்ரீராமலக்ஷ்மணர்க ளிருவரும் சுமந்தருடனும், இளையபெருமாளுடனும் சேர்ந்து, ஆகாயத்தில சூரியசந்திரர்களிருவரும் சுக்கிரபிருஹஸ்பதிகளுடன் கூடினாற்போலத் திகழ்ந்தனர்கள். இவ்வண்ண

மிவர்கள் கூடி எல்லோரும் வருந்துவதைக் கண்டு அக்காட்டிலுள்ள யாவரும் கண்ணீர் பெருக்கி யழுதனரே யன்றி, மகிழ்ந்திருந்தவ ரொருவருமிலர்.

அயோத்தியாகாண்டத்தில் தொண்ணூற்றொன்பதாவது சருக்கம முற்றிற்று.

---

## நூறாவது சருக்கம்.

### பெருமாள ஸ்ரீபரதாழ்வானை நோக்கிக் குசலம விஞவியருளியது.

அநந்தரம் பெருமாள் தம்மைப் போலவே ஜடைதிரித்து மரவுரியுடுத்துக் கைகுவித்துக்கொணடு தரையில் வீழ்ந்து வருந்தி யூழிகாலத்திலுள்ள சூரியன்போல வொளியற்றுக் கிடககின்ற ஸ்ரீபரதாழவானைக் கடாக்ஷித்து, மிகவும் இளைத்து வேறறுமுகம் பட்டிருககின்றமையால, மிகவுந் ஸ்ரீபரதனென் றையுற்றுக் கடையில பரதனென வுணர்ந்து தம் திருககரஙகளினுல பற்றி மேலெடுத்துத் தழுவிக்கொண்டு உச்சிமோந்து தமது மடியி லுட்கார வைத்துககொணடு தேறறித் தாழுந் தேர்ந்து, அவரை நோக்கிக குசலம் விஞவலுற்றருளினர். அடா என் னருமை இளையோனே ! என் திருத்தந்தையார் எங்கெழுந்தருளினர், பொன்னுலக மடைந்தனரோ ? அவர் பிழைத்திருக்கையில, நீ இவ்வண்ணந் தனியே இவ்வரணியத்திற கெய்தா யன்றே ? உன்னை யான் கண்ணுற்று நெடுநாளாயினவே ? நெடுநாளைககுப்பின் நெடுந்தூரத்திலிருந்து வந்த உன்னை இன்று கண்டு மகிழ்ந்தேன ; இப்பொழுது நீ இந்தக கானகத்திற்கு ஏன் வந்தனை; என் தந்தையர் சோகத்திஞல் தீனமுறறு லோகாந்தரமடையா திவ்வுலகினைத் திகழ்விக்கின்றனரா ? அடா என தம்பி ! நீ பாலனுதலின், உனக்குற்ற ராஜ்ஜியம் அழியாமல நிலையுற் றிருககின்றதா ? மிகவும் ஸத்தியவாதியும், உண்மையான தோள்வலியு முடைய தந்தையருக்குப் பணிவிடை செயகின்றனையா ? எந்தந்தையுர் துன்புறு இன்புற்று வாழ்கின்றனரா ? ராஜஸூயம் அச்வமேதம் முதலிய யாகஙளை யெல்லாம் செய்விக்கின்றவரும், தருமத்தில் நிலைகொண்டவரும், மிகப் புலவரும், இக்ஷ்வாகு முதல் நங்குலத்திற்கு உபாத்தியாயருமாகிய ஸ்ரீவஸிஷ்டபகவானும் குசலமுற்று வாழ்ந்து நம்மால் பூஜைசெய்யப் படுகின்றனரா ? அடா பரதா ! என் மாதாவாகிய கோஸலையாரும், ஸுமித்திரையாரும், உயிர்வாழ்ந் திருக்கின்றனரா ? உனது மாதாவாகிய கேகயியாரும் மகிழ்கின்றனரா ? மிக விநய முடையவரும், பல நூல்களைக

கற்றுணர்ந்தவரும், நற்குல முடையவருமாகிய உன்னுடைய புரோஹி
தரும் பணியப் படுகின்றனரா? அவர் உன்னுடைய கார்ஹபத்யாஹவநீய
தக்ஷிணாக்கினிகளில் ஹோமஞ் செய்யத்தக்க காலமறிந்து ஹோமஞ்
செய்கின்றனரா? அடா தம்பி! தேவர்களையும், பிதிராகளையும், மாதாக
களையும், ஆசிரியர்களையும், தந்தைக்கு நிகராயுள்ள பெரியோர்களையும்,
மூப்பினர்களையும், வைத்தியர்களையும், பண்டிதர்களையும், வேதியர்களை
யும் கணிசித்து, அவரவர்களுக்குத் தக்கவாறு நடந்து மகிழ்விக்கின்ற
னையா? நமக்குத் தநுர்வேதத்தை யுபதேசஞ் செய்த மிகவும் நீதிசாஸ்
த்ர முணர்ந்த ஸுதன்வா என்னும் உபாத்தியாயரையும் பணிந்து மகிழ்
விக்கின்றனையா? அடா பரதா! உனக்கு நிகரானவர்களும், சூரர்களும்,
நூல்களை யுணர்ந்தவர்களும், புலன்களை வென்றவர்களும், நற்குலத்த
வரும், இங்கித முணர்பவர்களுமாகிய சிறந்தவர்களை யமைச்சராக வைத்
துக்கொண்டு அரசாட்சி செய்கின்றனையா? அடா பரதா! ராஜர்களுக்கு
ஆலோசனை யென்பதே ஜயம் பெறுவதற்கு முதற்காரண மன்றோ?
அஃது மந்திரிகளால் நன்காராய்ந்து யாரு மறியாவண்ணம் அடக்கப்பட்
டுப் பயன் படுவதாகின்றதா? காலமல்லாத காலங்களில் துயில்கொள்ளா
திருக்கின்றனையா? தக்க காலங்களில் கண்விழிக்கின்றனையா? அபராத்
திரியில் எழுந்து ராஜ்ஜிய காரியங்களைச் சிந்தை செய்கின்றனையா?
நீ தனியே யாலோசனை செய்யாமலும், பலர்களுடனும் ஆலோசனை
செய்யாமலும், தக்க மந்திரிகளுடன் மாத்திரம் ஏகாந்தமாய் ஆலோசனை
செய்கின்றனையா? நீ யாலோசனை செய்திருக்கின்ற விஷயத்தைப் பிற
ருணர்ந்திலரா? அற்ப முயற்சியால் மிகப் பொருள் விளையத்தக்கதாக
வாலோசனை செய்து தாமஸஞ் செய்யாமல் விரைவாக அச்செயல் செய்ய
முயற்சி செய்கின்றனையா? அடா என்னருமைத் தம்பி! உன்பகைவர்கள்
நீ யாலோசனை செய்து முடித்துப் பயனுற்ற செயலினை மாத்திரம் அறிய
வல்லராகி, செய்கின்ற செயலினையும், செய்யப்படுஞ் செயலினையும், அறி
யா திருக்கின்றனர்களா? நும்மால் யோசனை செய்யப்பட்ட வொரு செய
லினை நீங்கள் கூறுமலே இங்கிதங்களினாலாயினும், யுக்தியினாலாயினும்,
பிறருணர்ந்திலரா?—

కచ్చిత్సహస్రాన్మూర్ఖాణా మేకమిచ్ఛసిపండితం
పండితోహ్యర్థకృచ్ఛ్రేషు కుర్యాన్నిశ్శ్రేయసంమహత్ ॥
సహస్రాణ్యపిమూర్ఖాణాం యద్యుపాస్తేమహీపతిః
అథవాప్యయుతాన్యేవ నాస్తితేషుసహాయతా ॥

கச்சித்ஸஹஸ்ரான்மூர்க்காணா மேகமிச்சஸிபண்டிதம்
பண்டிதோஹ்யர்த்தக்ருச்ரேஷு குர்யான்னிஶ்ரேயஸம்மஹத்.
ஸஹஸ்ராணயபிமூர்க்காணாம் யத்யுபாஸ்தேமஹீபதிஃ
அதவாப்யயுதாநயேவ நாஸ்திதேஷுஸஹாயதா.

ஆயிர மூர்க்கர்களைவிட ஒரு பண்டிதனே சிறந்தவனென்பதை யுணர்ந்து, அவனையே கோருகின்றனையா? பண்டிதனே வங்கட காலங்களில் நன்காராய்ந்து நலம் விளையுமாறு செய்வானன்றோ? அநேகமாயிர மூர்க்கர்களை யாயினும், அநேகம பதினாயிர மூர்க்கர்களை யாயினும், அரசன் சஹாயத்தின பொருட்டுச் சேர்த்துக கொள்வானாயினும, [illegible]ாயம் செய்யவேண்டும் காலங்களில் அவர்களால ஒருதவியு முண்டாகாது? நற்புத்தியுள்ள ஒருமந்திரி யிருப்பானாயினும், அவனொருவனே ராஜர்களுக்கு மிகப பொருள விளையுமாறு பேருதவி செய்து பாது காப்பான்; முதன்மையா யுள்ளவர்களை முதன்மையாயுள்ள காரியங்களிலும, நடுமையானவர்களை நடுமையாயுள்ள காரியங்களிலும், கடையானவர்களைக கடையாயுள்ள காரியங்களிலும் ஏவுகின்றனையா? கபட மற்றவர்களும, பரமபரையா யுள்ளவர்களும, சிறந்த புததி யுள்ளவர்களும, பரிசுததர்களு மாகிய மந்திரிகளைச சிறந்த காரியங்களில ஏவுகினறனையா? அடா கைகேயி குமாரா! நீ கொடிய தணடனை செயது பிரஜைகளைப பயமுறச செய்யா திருககின்றனையா? ஒருகால நீ செயயினும் மந்திரிகள அதறகுடன் படாது மறுககினறனர்களா? தகாதாரிடத்தில கபபம வாங்குவதினாலும், கொடிய தானங்களை வாங்கும்படி செயவதினாலும், யாசகர்கள் உன்னை இகழாதிருககுமாறு நடககின்றனையா? விருப்பறற காமினியர்கள் விருப்புற்று காமியை யிகழந்து அலக்ஷியஞ் செயவதுபோலப பெரியோர்கள் உன்னை யிகழந் தலக்ஷியஞ் செயயா திருக்கின்றனர்களா? ஸாம தான பேததணடங்கள் செயவதில திறமை யுற்றவனும், கபடநூலகளை யுணர்ந்தவனும், பிருதயர்களிடததில் மிததிரபேதஞ்செயது பகைக்கச செயபவனும், அசசமற்றவனும, பொருளாசை யுள்ளவனுமாகிய கொடியவனை யரசன தண்டனை செய்யாமல் உபேக்ஷையாயிருப்பானாகில, பினபு அவனாலேதானே இவன் கொலை செய்யப் படுவான்; தீரமுடையவனும, சூரனும், முதுமையுடையவனும், ராஜபக்தியுள்ளவனும், நற்குலத்தவனும, பாவத்தொழிலில் அசச முடையவனும், மிகத் திறமை யுளளவனு மாகியவனைச் சேனாபதியாகச் செய்திருக்கின்றனையா? சூரர்களும், பலமுறை போரில் வெற்றி கொண்டவர்களும், இஷ்டர்களுமாகிய முதன்மையானவர்கள் உன்னால் மரியாதை செய்யப் படுகின்றனர்களா?—

కచ్చిద్బలస్యభక్తంచ వేతనం చయథోచితం
సంప్రాప్తకాలం దాతవ్యం దదాసినవిలంబసే॥

கச்சித்பலஸ்யபக்தஞ்ச வேதநஞ்சயதோசிதம்
ஸம்ப்ராப்தகாலம்தாதவ்யம் ததாஸிநவிளம்பஸே.

சேனைகளுக்குக் கொடுக்கத்தக்க காலங்களில் நல்லுணவும், வேதனமும், விளம்பஞ் செய்யாமல் கொடுக்கின்றனையா? விளம்பஞ் செயவதி

ஞல் பிருத்யர்கள் வருத்தமுற்று ராஜாகளின்மேல பகைகொள்வார்கள ; ஒருகால், பகைவரோச்சோந்தெதிர்ப்பார்கள ; அதனுல் மிகவும் தீங்கு விளையுமன்றோ ? குல புத்திரர்களும, சூரர்களுமாகிய படர்கள் உன்னிடத்தில மிகப் பத்தி விசுவாஸங்கொண்டு உன்பொருட்டுப் போரில உயிரை விடவும் ஸித்தமாயிருக்கின்றனர்களா ? நமது தேசத்திற பிறந்தவனும், பிறர்களது இங்கிதங்களை யறிபவனும, மிகத திறமையுள்ளவனும், காலத்துக்குத் தக்கவாறு உறைற செயயவலல புத்தி யுடையவனும், சொன்ன வண்ணமே செயபவனும, பண்டிதனு மாகியவனைத தூதாக வைததுக் கொண்டிருக்கின்றனையா ? அடா பரதா ! பகையாளிகளுடைய மந்த்ரி, புரோஹித, யுவராஜ, ஸேநாபதி, தௌவாரிக, அந்தா வம்சிக, காராகாராதிக்ருத, அர்த்தஸஞ்சயக்ருத, கார்யநியோஜக, ப்ராடவிவாகஸேநாநாயக, நகராத்யக்ஷ, கர்மாந்திக, ஸப்ய, தாமாதயக்ஷ, தண்டபால, துர்க்கபால, ராஷ்ட்ராந்த பாலர்களென்னும் பதினெட்டிடங்களிலும, உனபக்ஷத்தில ஸேநாபதி முதலிய பதினைந்து இடங்களிலும், அவரவர்களுடைய கருத்தினை யறியவலல மாறு வேஷங்கொண்டு செல்லததக்க சாரர்களை ஒவ்வொருவர்க்கு மூன்றுமூன்று சாரர்களவீதம் காவலிட்டு எல்லோர்களுடைய எண்ணங்களையும நன்குணர்ந்துகொண்டிருக்கின்றனையா ? முதலில உன்னுல துரததப்பட்டுப் பின்பு வந்து சேர்ந்த ராஜாகளிடத்தில அலக்ஷ்யமாயிராமல உக்கத்துட னிருக்கின்றனையா ?—

కచ్చిన్న లోకాయతికాన్ బ్రాహ్మణాం స్తాత సేవసే
అనర్థకుశలా హ్యేతే బాలాః పండితమానినః ॥
ధర్మశాస్త్రేషు ముఖ్యేషు విద్యమానేషు దుర్బుధాః
బుద్ధిమాన్వీక్షికీం ప్రాప్య నిరర్థం ప్రవదన్తి తే ॥

கச்சின்னலோகாயதிகான ப்ராஹ்மணாம்ஸ்தாதஸேவஸே
அநர்த்தகுசலாஹ்யேதே பாலா: பண்டிதமானின:.
தர்மசாஸ்த்ரேஷு முக்யேஷு வித்யமானேஷு துர்புதா:
புத்திமானவீக்ஷிகீம்ப்ராப்ய நிரர்த்தம்ப்ரவதந்திதே.

நாஸ்திகர்களாகிய பௌத்த சார்வாகர்களை யருகிற் சேரவிடாமல் உபேக்ஷை செய்கின்றனையா ? இவர்கள மூர்க்கர்களாயினும தமமைப் பண்டிதர்களாகத் தாமே நினைத்துக்கொண்டு மிகவும அநர்த்தங்களை விளைக்கின்றனராக ளல்லரோ ? மூர்க்கர்களாகிய அவர்கள தருமத்தை புணர்த்துகின்ற வேதம் ஸ்மிருதி சாத்துவிக புராண இதிஹாஸாதிகள் முதலிய சித்தந்த நூல்களிருக்கையிலும் நிலையுறுத கேவல தர்க்க யுக்திகளைக்கொண்டு பயன் சிறிதுமின்றிப் பலவாகப் பேசி மூடர்களை மயக்குவார்கள்; மிகவும் சூரர்களான நம் முன்னோர்களால் யாதுகாக்கப் பட்ட

தும், பகைவர்கள் வெல்லவொண்ணாததலின், அயோத்தியை யென்னும் யதார்த்த நாம முடையதும், மிக வலிய துவாரங்களை யுடையதும், நால் வகைப் படைகள் நிறைந்துள்ளதும், தத்தம் கருமங்களை வழுவதலின்றிச் செய்கின்ற பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்ரர்களால் மகிழப்பட்டதும், பலவகை மாடமாளிகைகளா லழகுற்றதும், மிகச் செழிப்புற்றதும், சிறந்த செல்வம் நிறைந்துள்ளதுமாகிய திருவயோத்தியைக் குறைவறப் பாதுகாத்து வருகின்றனையா? யாகசாலைகளினாலும், தேவாலயங்களாலும், தண்ணீர்ப்பந்தல்களினாலும், வாபீகூப தடாகங்களினாலும் திகழ்வுறறும், மிக மகிழ்ந்த ஜனங்கள் சூழ்ந்தும், நன்குழப்பட்ட நிலங்கள் பொருந்தியும், மிகுந்த பசுக்கள் நிறைந்தும், பீடையென்பது நீங்கியும், ஆற்றுநீர்ப் பாய்ச்சலுற்றும், கொடிய ஜந்துக்களற்றும், ஒருவகை யச்சமு மின்றியும், புதையல்கள் நிறைந்தும், தீமையுள்ள ஜனங்களைத் துறந்தும், நம் முன்னோர்களால் பாதுகாக்கப்பட்டும், நீர்வளம் நிலவளமுற்றும், செல்வம் நிறைந்து செழிப்புற்று மிருக்கின்ற நங்கோஸலநாடு இன்புற்றிருக்கின்றதா? எல்லோரும் உன்னிடத்தில் அன்புகூர்ந் திருக்கின்றனர்களா? வியாபாரஞ் செய்பவர்களும் லாபமடைந் தின்புறுகின்றனர்களா? அவர்களுக்குத் துன்பத்தைப் போக்கி இன்பத்தை யளிப்பதினால் அவர்களை நன்று பாதுகாத்தனையா? ராஜர்கள் தம் நாட்டில் வாஸஞ்செய்யும் அனைவர்களையும் தருமமாகப் பாதுகாக்கவேண்டு மென்பது கடமையன்றோ?—

కచ్చిత్ స్త్రియస్సాంత్వయసి కచ్చిత్తాశ్చ సురక్షితాః
కచ్చిన్న శ్రద్దధాస్యాసాం కచ్చిద్గుహ్యం న భాషసే ||

*கச்சித்ஸ்த்ரியஸ்ஸாந்த்வயஸி கச்சித்தாச்ச ஸுரக்ஷிதா:*
*கச்சின்ன ச்ரத்தாஸ்யாஸாம் கச்சித்குஹ்யந்நபாஷஸே.*

மனைவிகளைத் துன்புறுத்தாது நன்மொழி மொழிந்து பாதுகாக்கின்றனையா? அவர்களிடத்தில் நம்புதலுற்று அவர்களுடன் ரஹஸ்யங்களை யுரையாமலிருக்கின்றனையா? மிகுந்துள்ள யானைகளை நன்கு பாதுகாக்கின்றனையா? உனக்கு மிகுந்த பசுக்களுளவா? தாதி குதிரை யானை முதலியவைகளைச் சேர்ப்பதன் பொருட்டுத் திருப்தியடையாமல் மேன்மேலும் வளர்க்க முயற்சி செய்கின்றனையா? சிறந்த அணிக ளணிந்துகொண்டு தினந்தோறும் மனிதர்களுக்குத் தரிசனங் கொடுக்கின்றனையா? காரியமுள்ளவர்களை நிரந்தர மருகி லழைக்காமலும், தரிசனங் கொடாமலும், அவர்கள் காரியத்தை விசாரிக்கு மளவே தரிசனங்கொடுத்து மரியாதை குன்றாமல் பெருமதிப்புடன் இருக்கின்றனையா? உனது கோட்டைகளெல்லாம் தனம், தான்யம், ஆயுதம், உதகம் இவைகளாலும், யந்திரங்களாலும், சிற்பிகளாலும், வில்லாளிகளாலும் நிறைந்திருக்கின்றனவா?

நீ செய்த முயற்சியை விடப் பயன் மிகுந்திருக்கின்றதா ? லாபத்தை விடச் செலவு குறுகி யிருக்கின்றதா ? அடா பரதா ! அபாத்திரங்களில் கொடை கொடா திருக்கின்றனையா ? உன்னுடைய செலவென்பது தேவதைகளின் பொருட்டும், பிதிரர்களின் பொருட்டும், அதிதிகளின் பொருட்டும், வேதியர்களின் பொருட்டும், படர்களின் பொருட்டும, நட்பினர்களின் பொருட்டும் செல்லுகின்றதா? மிகத் தூய்மையுள்ள நல்லோரை யபவாதத்தினால் வருத்துவோர் நன்கு விசாரணை செய்யாமலே கொல்லப்படுகின்றிலரா ? கள்ளனைப் பிடித்துக் கொண்டுவந்து விசாரணைசெய்து ருஜுவாகிக் குற்றஞ் சார்த்தப்பட்டுத் தண்டனைசெய்யவேண்டுங்காலத்தில் பொருளாசையால் அவனை விட்டு விடாமல் தண்டனை செய்கின்றனையா ? பொருளுடையோனுக்கும், பொருளற்றவனுக்கும் விவாதம் நேருகையில், உன்னுடைய மந்திரிகள் பொருளாசை யற்றவர்களாகி விசாரணை செய்து பக்ஷபாத மின்றி நடக்கின்றனர்களா ?—

యాని మిథ్యాభిశస్తానాం పతన్త్యస్రాణి రాఘవ
తాని పుత్రపశూన్ఘ్నన్తి ప్రీత్యర్థమనుశాసతః ॥

யாநிமித்யாபிசஸ்தாநாம பதந்த்யாஸ்ராணிராகவ
தாநிபுத்ரபசூனகனந்தி ப்ரீத்யாத்தமனுசாஸத:

யாவனொருவன் நன்கு விசாரணை செய்யாமல பிழையொன்று மற்றவர் பேரில் மதியினமையால குற்றஞ்சாத்தித் தண்டனை செய்கின்றனனோ ? தருமத்தைத் துறந்து தான் இன்புறுவதன் பொருட்டே அரசாட்சி செய்கின்ற அந்தக் கொடிய ராஜனுடைய பிள்ளை பெண்சாதி பசு முதலிய நற்செல்வங்களும் மிகத் துயரங்கொண்டழுகின்ற அந்தப் பிழையற்றுப் பொய்யான குற்றத்திற் காளான அவர்களுடைய கண்ணீர்த் துளிகளினால அழிக்கப்படுகின்றன ; மூப்பினர்களையும், பாலர்களையும், புலவர்களையும், மனோவாக்காயங்களினாலும், வேண்டுவன கொடுத்தும, அன்புசெய்தும், இனிமை கூறியும மகிழ்விக்கின்றனையா ? ஆசிரியர்களையும, பெரியோர்களையும், முனிவர்களையும், தேவதைகளையும, அதிதிகளையும, தெய்வத் தன்மையுள்ள நற்சந்தி மரங்களையும,வேதியர்களையும வணங்குகின்றனையா? பொருளினால் தருமத்தையும், தருமத்தினால பொருளையும, மகிழ்ச்சி யுறுவிக்கத்தக்க இன்பத்தினால் அறம்பொரு ளிரண்டினையும் தடைசெய்யாமல் அதனதனுக்குத் தக்க காலங்களில் அதனதனைக் குறைவறச்செய்து, மூவகைப்பட்ட புருஷார்த்தங்களையும் அனுபவிக்கின்றனையா ? நாட்டார் நகரத்தார்களுடன் பல நூல்களையும் கற்றுணர்ந்த வேதியர்கள உன்பொருட்டு நன்மையினையே கோருகின்றனர்களா ? தெய்வம் பரலோகம் ஒன்றுமில்லையென்று நாஸ்திகவாதம் செய்வதும், பொய்ம்மொழி மொழிவதும், பெரி

யோர்க ளிடத்திலும் சினமுற்றுவதும், ஊக்கமற்றிருப்பதும், விரைவில் முடியாச் செயலுடைமையும், பெரியோர்களைக் கண்டு இறுமாப்புற்றிருக்கையும், கள் முதலியவற்றைக் குடித்து மயக்குறுவதும, ஐம்புலன்களையு மடக்காமல் அதன் வழியே செல்லுகையும, அமைச்சர்களை இகழ்ந்து தானொருவனே ஆராய்ந்தொரு செயலைச் செய்வதும், நன்மை யுணராமல் தீமை விளைவிக்கத்தக்க மூடர்களுடன் ஆராய்வதும், ஆலோசனையிலே செய்யும்படி நிச்சயஞ்செய்யப்பட்டதைச் செய்யாமல் தாமதஞ் செய்வதும், தாம் செய்த ஆலோசனையை யடக்காமல் வெளிவிட்டு அதனைக் கெடுத்தலும், நன்மைவிளையுஞ் செயல்களைச் செய்யாமையும், நல்லோர் தீயோர் இருவர்களுக்கும் சரியாக மரியாதை செய்கையும, அநேகது பல விடங்களில் ஏககாலத்தில் போர் செய்ய முயற்சி செய்வதுமாகிய இப்பதினான்கு ராஜ தோஷங்களையும் நீ துறந்திருக்கின்றனையா? வேட்டையாடுதல், சூதாடல், பகலில் துயிலுகை, பழித்தல், எப்பொழுதும வனிதையர்களுடன் வாழ்தல், கள் முதலியவற்றைக் குடித்தல், ஆட்டம் பாட்டு வாத்தியங்களிலேயே ருசிகொள்ளுகை, பயனின்றித் திரிதல் என்னும தசவர்க்கமென்பவைகளையும, (காமம், க்ரோதம, ஆலஸ்யம், பொய், ஊக்கமின்மை, அச்சம், மனத்தளர்ச்சி, மடமை, நீதியின்மை, பிறரை யவமதித்தல் என்னும பத்துவர்க்கங்களெனபவைகளையும்) ஜல துர்க்கம், கிரி துர்க்கம், வன துர்க்கம, இரிண துர்க்கம், மரு துர்க்கம் என்னும் ஐந்துவர்க்கங்களையும, (பகைவரா லுண்டாகிய பகை, பெண்ணா லுண்டாகிய பகை, பொருளா லுண்டாகிய பகை, சொல்லினா லுண்டாகிய பகை, குற்றத்தினா லுண்டாகிய பகை என்னும் ஐந்துவிதமாயுள்ள பகையென்னும ஐந்துவர்க்கங்களையும) ஸாமம், தானம், பேதம, தண்டம என்னும நான்குவர்க்கங்களையும், (தேஹஸம்பந்தமுடையோர், பொருள் ஸம்பந்த முடையோர், குலபரம்பரையாகவே ஸம்பந்த முடையோர், ஆபத்தில் காக்கப்பட்டோரென்னும் நால்வகை நேசர்களென்னும் நான்குவர்க்கங்களையும்) அரசன், அமைச்சர், நாடு, கோட்டை, பொருள், சேனை, நட்பினர் என்று ஸப்தாங்கமென்கிற ஏழுவர்க்கங்களையும், (தன்னினத்தோன், நட்பினனைச் சேர்ந்தோன், பிழைக்கவந்து சேர்ந்தோன், சுற்றத்தாரைச் சேர்ந்தோன், வேதனம்வாங்கிப் பிழைப்பவன், வேண்டுமவைகளைக் கொடுத்துப் பாதுகாக்கப் பட்டோனென்னும் எழுபக்ஷங்களெனப்படுகின்ற ஏழுவர்க்கங்களையும்) (ச்யேனம், ஸூசீ, வச்சிரம, சகடம், மகரம், தண்டம், பதுமம் என்னும முதன்மையாயுள்ள ஏழுவகையணி வகுப்புக்களெனப்படும் ஏழுவர்க்கங்களையும்) க்ருஷி, வாணிஜயம், கோட்டை, அணை, யானைத்தறி, புதையல், கப்பம் வாங்குதல், பயனற்றவர்களைச் சேர்த்தல் என்னும் எட்டுவர்க்கங்களையும், (கோளுரைத்தல், ஸாஹஸம் செய்தல், வஞ்சனை, பிரண்யகோபம், பொறாமை, பொருளையிகழ்தல், வன்மொழிகூறல், கடுந்தண்டனைசெய்தல் என்னும் எட்டுவர்க்கங்களையும்) தர்மார்த்தகாமங்க ளென்னும் மூன்று வர்க்கங்களையும், (உற்சாஹப் பிரபு,

மந்திர சத்திகளென்னும் மூன்றுவர்க்கங்களையும்) பிறர்களுடைய குறைதல் வளர்தல் இருத்தலென்னும் மூன்றுவர்க்கங்களையும், (செய்தற்கரிய செயல் செய்ய முயலுதல், செயற்குரிய செயல்களைத் துறத்தல், செயற்குரிய செய லைக் காலமல்லாத காலத்தில் செய்கை யென்னும் மூன்றுவர்க்கங்களையும்) சுருதி வார்த்தை தண்டநீதி யென்னும் மூன்றுவித்தைகளையும், ஐம்புலன் களை யடக்கலையும், ஸந்தி போர் செல்லல் இருத்தல் பிரிதல் சேர்தலென னும் ஆறு குணங்களையும், தீ நீர் பிணி க்ஷாமம் இறப்பு என்னும் ஐவகைத் தெய்வத் துன்பங்களையும், அதிகாரிகள், கள்ளர், பகைவர், அரசனுக்கு இஷ்டர், அரசர் என்னு மிவர்களிடத்து நின்று முண்டாகும் ஐந்து மானுஷ வியஸனங்களையும், மித்திரபேதம் முதலிய செயல்களையும், பாலன், மூப்பினன், தீராப்பிணியாளன், இனத்தாரால் துறக்கப்பட்டவன், அச்ச முற்றவன், அச்சமுற்ற ஜன முடையோன், பொருளாசை யுற்றவன், பொருளாசை கொண்ட ஜன முடையோன், ஆசையுற்ற ஜன முடையோன், விஷயங்களில் மிகவும் ஆசையுடையோன், பலவகைப்பட்ட யோசனை யுடை யோன், தேவர்கள் வேதியர்கள் இவர்களை நிந்தை செய்பவன், பெரியோர் களால் சபிக்கப் பட்டோன், தெய்வத்தின்மேல் பாரம் வைத்துத் தான் ஒரு முயற்சியும் செய்யா திருப்பவன், மழை யின்மையால் துன்புற்றவன், சேனைகள் மடிந்தவன், தேசாந்தரம் சென்றவன், அநேகம்பேர்களுடன் பகைகொண்டவன், கொடிய கோசார முடையவன், சத்தியம் தர்மம் இரண் டையும் துறந்தவன் என்னும் ஸந்திசெய்யாமல் போர் செய்யத்தக்க இரு பது வர்க்கங்களையும், (ராஜ்ஜியம், பெண், ஸ்தானம் தேசம், இனத்தார், பொருள், இவைகளைப் பறித்துக் கொள்வது, மதம், மானம், விஷயபீடை, மதியின்மை, சக்தியின்மை, குணமின்மை, தெய்வத்தையிகழ்தல், நேசரை யிகழ்தல், பொருளை யிகழ்தல், சுற்றத்தாரைக் கொலை செய்தல், கருணை யின்மை, தேசத்தை யிகழ்தல், பொருளொன்றிலேயே மிக விருப்புறுதல், தான் கோரிய விஷயத்திலேயே ஆசையுற்றிருத்தல் என்னும் இருபது வர்க்கங்களையும்) மந்திரி தேசம் கோட்டை கோசம் தண்டம் என்னும் பிரகிருதிகளையும், நடுவில் அரசன், முன்னர் அவனுக்குச் சத்துரு, தன மித்திரன், சத்துருவின் மித்திரன், தன் மித்திரனுக்கு மித்திரன், சத்துரு வின் மித்திரனுக்கு மித்திரன் என்னும் ஐவர்கள், பின்னர் பார்ஷ்ணி க்ரா ஹன், ஆக்ரந்தன், பார்ஷ்ணி க்ராஹாஸாரன், ஆக்ரந்தாஸாரன் என்னும் நால்வர்கள், பக்கத்திலிருப்பவன், மத்தியமன், புறத்திலிருப்பவன், உதாசீன னென்னும் பன்னிரண்டு மண்டலங்களையும் பகைத்துச் செல்லுதல், நேசித் துச் செல்லுதல், பலர்களுடன் கூடிச் செல்லுதல், வஞ்சனை செய்து செல்லுதல், அலக்ஷியஞ்செய்து செல்லுதலென்னும் ஐந்துவித யானங்களை யும், இரண்டுவகைகளாயுள்ள சந்தி விக்கிரஹங்களையும் நன்காராய்ந்து, செய்யத்தக்கன செய்தும், துறக்கத்தக்கன துறந்தும் இருக்கின்றனையா? நால்வர் அல்லது, மூவர்களாகி யிருக்கின்ற மந்திரிகளுடன் தனித்தனி

யாகவும் கூடியும் ஆலோசனை செய்கின்றனையா ? நீ யோதி யுணர்ந்த வேதங் களும, நீ செயத செயல்களும், உன மனைவியர்களும், நீ கற்ற நூற்பயிற்சி யும் பயன்படுவன வாயினவா ? அடா என தம்பி ! யானுரைத்தவண்ணம் நற்புத்தி யுடையவனுகி நம் தந்தையரும், முன்னோர்களும் நடந்தவாறு நீயும் நல்வழி துறவாமல் நடக்கின்றனையா ? நலவுணவுகளை நீ யொருவனே யுண்ணுமல் மித்திரர்களுககும் கொடுக்கின்றனையா ? ராஜன தருமபபடி பூமியைப் பாதுகாப்பானுகில், இம்மையிலும் மிக வின்புற்று, மறுமை யிலும் நற்கதிபெற்று மகிழுவான் ; எனறிவவண்ணம் சக்கரவர்த்தித் திரு மகன் ஸ்ரீபரதாழவானை நோககிக குசலம் வினவி யருளினர்.

அயோததியாகாண்டத்தில நூறுவது சருககம்

முறறிறறு

## நூற்றொன்றுவது சருக்கம்.

ஸ்ரீபரதாழ்வான் பெருமாளுக்குச் சககரவாததியாா விண்ணுலக *நணணியதைத் தெரிவித் துரை செயதது.

இவ்வண்ணம் சக்கரவர்த்தித் திருமகனு ரருளிசசெய்த வாக்கியத்தை ஸ்ரீபரதாழ்வான் கேட்டுத் துனபமடைந்து பெருமாளை நோக்கி, எம்மை யனே ! சிறந்த தருமங்களை யெல்லா மிழந்த எனக்கு ராஜதருமம் யாது பயன் செயய வல்லது ? நம் குலத்தில மூத்தகுமார ரிருக்கையில், இளை யோன் அரசனுகுவதில தெனனும் சிறந்த தருமம் நிகழந்துளதன்றே ? ஆதலின், அந்தத் தருமத்தைப் பாதுகாப்பதன்பொருட டிப்போழதே

* மநதிரி - அமைசசன, புரோஹிதன் - உபாததியாயா, யுவராஜன - இளவரசு, ஸேனுபதி - படைததலைவன, தௌவாரிகன - வாயல காபபோர்களுள் தலைவன, அநதர் வமசிகன் - அரணமனையிலுளள காரியங்களை நிறைவேறறுபவன, காராகாரா திக்ருதன - சிறைச்சாலைக் கிறைவன், அர்ததஸஞசயக்ருத் - பொருள்களுக் கிறைவன, காரய நியோஜகன் - அரசன கட்டளையைப் பிரசாரஞ் செய்பவன, ப்ராட்விாகன - நியாயத்தைக் கேட்பவன், ஸேநாநாயகன் - ஸேனைகளுக்கு வேதனங் கொடுப்பவன், நகராத் த்யக்ஷன் - நகரசோதனை செய்பவன், காமாநதிகன் - வேலைக்காரர்களுக்குக கடையில் கூலிவாங்கிக் கொடுப்பவன, ஸப்யன் - ஸபையை யலங்காரஞ் செய்து வரத தக்கவர்களை வரவழைத்துப் பிறர்களைத தடைசெயய வல்லவன், தாமாத தய க்ஷன் - நியாயாதிபதி, தண்டபாலன் - குற்றவாளிகளைக் காப்பவர்களுக் கிறைவன, துர்க்கபாலன் - கோட்டையைக் காப்பவர்களுக் கிறைவன், ராஷ்ட்ராந்த பாலன - தம் நாட்டின் எல்லையின் கடையில் பிறர் சேனைகளை யுட்புகவிடாமல் காத்திருககும சேனைகளுக் கிறைவன்.

அடியேனுடன் புறப்பட்டுத் திருவயோத்திக் கெழுந்தருளி யபிஷேகங் கொண்டு உலகினைப் பரிபாலனஞ் செய்தருளக:—

రాజానంమానుషంప్రాహు దేవత్వేనమతోమమ
యస్యధర్మార్థసహితం వృత్తమాహురమానుషం ||

ராஜாநம்மாநுஷம்ப்ராஹு: ந்தேவத்வேநமதோமம
யஸ்யதர்மார்த்தஸஹிதம வருத்தமாஹுரமாநுஷம

உலகத்தில யாவரும் ராஜனை மனிதனெனக் கூறுகின்றனர்கள், யான் அவனைத் தெய்வமெனவே கூறுவேன், தர்மார்த்த யுக்தமாகிய ராஜன் செயல் தெய்வச் செயலாகவே தோற்றுகின்றதன்றோ? யான் கேகயநாட்டி லிருக்கையில, தேவரும திருவரணியத்துக் கெழுந்தருளி விடுகையில், நம் தந்தையார் துன்பமடைந்து சோகத்தினால பொன்னுலகை யடைந்தனர், ஆதலின், தேவரெழுந்து தந்தைக்குத் தருப்பணஞ் செய்தருளக, யானும் இந்தச் சத்துருக்கனனும் முன்னமே தருப்பணங்கள் செய்திருக்கின்றோம்:

ప్రేయేణఖలుదత్తంహి పితృలోకేషురాఘవ
అక్షయ్యంభవతీత్యాహుః భవాంశ్చైవపితుఃప్రియః ||

பரியேண்கலுதத்தமஹி பிதருலோகேஷுராகவ
அக்ஷய்யமபவதீதயாஹு: பவாமஶ்சைவபிது:பரிய:

தேவரோ தந்தையர்க்கு மிகவும பிரியமுடையவ ராதலின், தேவரோ தருப்பணஞ் செய்யக் கடவீர் பிரியமுடைய புத்திரனால் கொடுக்கப்பட்ட தே பிதருலோகத்தில் பிதிரர்களுக்கு அக்ஷயமாகின்றதென மொழிகின்ற னர்களே? நம தந்தையார் தேவரைக் காணாமலே துன்புற்றுத் தேவரையே நினைந்துகொண்டு பிழைக்க வாற்றலற்றுப பொன்னுலகை யடைந்தன ரன்றோ? ஆதலின், தேவரோ தந்தையருக்குப் பிரியமுடையரென்பதற் கையமுளதோ என்றும் மொழிந்து வருந்தி யழுதனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றொன்றாவது சருக்கம் முற்றிற்று

## நூற்றிரண்டாவது சருக்கம்

சக்கரவர்த்தித்திருமகனார் சக்கரவர்த்திக்குச் செயற்குரியகடன்களைச் செய்தருளி எல்லோருடனுங் கூடிப் புலம்பியது.

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வா னுரைசெய்த வாக்கியத்தால் சக்கரவர்த்தி லோகாந்தர மடைந்ததைப் பெருமானுணர்ந்து மிகத் துன்பமடைந்து

மூர்ச்சைகொண்டு வச்சிராயுதத்தினால் அடிபட்டவர்போல வருந்திக் கைகளை மேலெடுத்துக் கோடாலியால் வெட்டுண்டு வனத்திடையில் தழைத்து பூலர்ந்த மரம்போலச் சாய்ந்து தரையில் விழுந்து தவித்தனர். கரை கொந்தி வருந்திக் கிடக்கின்ற குஞ்சரம்போலப் படுத்திருக்கின்ற பெருமானைக் கண்டு ஸ்ரீலக்ஷ்மண பரத சத்ருக்நர்களும் பிராட்டியாருடன் புலம்பிக் கண்ணீர் பெருக்கிப் பெருமானை நனைத்தனர்கள். பெருமானும் மூர்ச்சைதெளிந் தெழுந்து கண்களில் நீர்த்துளிததும்பப் புலம்பியழு முயன்றனர். சக்கரவர்த்தியார் வானேறியதைக் கேட்டு ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, அடா தம்பி! நம் தந்தையார் விண்ணுடைநண்ணிய பின்னர், யான் திருவயோத்திக்குச் சென்றுதான் பயன் யாது? அங்கு யான் யாது செய்வேன்? ராஜாதி ராஜனாகிய நம் தந்தையினறிப் பாழடைந்த அப்படை வீட்டைப் பாதுகாக்க வல்லவன்தான் யாவன்?—

కిన్నుతస్యమయాకార్యం దుర్జాతేనమహాత్మనః
యోమృతోమమశోకేన మయాచాపినసంస్కృతః॥
అహోభరతసిద్ధార్థో యేనరాజాత్వయానఘ
శత్రుఘ్నేనచసర్వేషు ప్రేతకృత్యేషుసత్కృతః॥

கிந்நுதஸ்யமயாகார்யம் துர்ஜாதேநமஹாத்மந:
யோம்ருதோமமசோகேந மயாசாபிநஸம்ஸ்க்ருத:
அஹோபரதஸித்தார்த்தோ யேநராஜாத்வயாநக
சத்ருக்நேநசஸர்வேஷு ப்ரேதக்ருத்யேஷுஸத்க்ருத:

என்பொருட்டே மரணமடைந்த என் தந்தையர்க்கு யான் சரமகைங்கரியமும் செய்திலேனாதலின், இகழத்தக்க பிறப்பினையுடைய என்னால் மஹாத்துமாவாகிய என் பிதா யாது பயனை யடைந்தனர், அந்தோ! அடா என் தம்பி! என் தந்தையர்க்குச் சரமகைங்கரியங்களைக் குறைவறச்செய்து முடித்த நீ சத்ருக்நன் என்னு மிருவரு மலவீரோ? நல்வினை யுடையீர்; அரசனற்றதும், ஆகுல மடைந்ததுமாகிய திருவயோத்திக்கு யான் வனவாஸம் தீர்ந்த பின்னரும், திரும்பிவர விருப்புறுகின்றிலேன்; அந்தோ! தந்தையர் லோகாந்தர மடைந்து விட்டமையின், யான் வனவாஸந்தீர்ந்து வந்த பின்னர், இஃது நன்மை, இஃது தீமை யென்று இதமுரைப்பவர் யாவருளர்; முன்பு நம் தந்தைய ருரைசெய்த செவிக்கினிய இன்மொழிகளை இனி யாருரைசெய்யக் கேட்டு மகிழ்வேன்; என்றிவ்வண்ணம் ஸ்ரீபரதாழ்வானுடனுரைசெய்து புலம்பி பிராட்டியாரிடம் வந்து அவளை நோக்கி, அடி வைதேஹி! உன் மாமனார் மரண முற்றனரென்று கூவிப் புலம்பி யுரைத்து, இளையபெருமானையும் நோக்கி, அடா லக்ஷ்மணா! நீ தந்தை யற்றவனாயினை; இவ்வண்ணம் பரதன் மொழிகின்றனனென் றுரைசெய்தரு

ளினர். அநந்தரம் எல்லோரும் தாரைதாரையாகச் சோகநீர்பெருக்கியழுது, கங்கையில் மற்றெல்லோரும் பெருமாளைத் தேற்றி வானேறிய தந்தையின பொருட்டுத் தருப்பணம் செய்யும்படி யுரைத்தனர்கள். பிராட்டியாரும் மாமனாரிறந்தன ரென்பதை யுணர்ந்து சோகநீர் பெருக்கிப் பதியைக் கண்களால் கடாக்ஷிப்பதற்கு திறமையற்று வருந்தினர். பெருமாளும் அவளைத் தேற்றி, மிகத் துன்புற்றிருக்கின்ற இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா ! விரைவாக மரவுரியையும், இங்குணப் புண்ணாக்கையும், விரைவாகக் கொணர்க; நந்தந்தைக்குத் தருப்பணஞ் செய்வதன பொருட்டுச் செல்வேன்; ஸீதை முன்னே செல்லக் கடவள், நீ யவளைப் பின்றொடர்ந்து செல்லுக; யானே உங்களிருவருக்கும் பின் புறத்தில் வருகின்றேன்; இந்த வழி மிகக் கொடியதன்றோ என்றருளிச் செய்தனர். அநந்தரம் பரம்பரையாகத் தொண்டு பூண்டவரும், மிகவு முணர்ந்தவரும், சிறந்த புத்தி யுடையவரும், புலன்களை வென்றவரும், பத்தி யுடையவருமாகிய ஸுமந்திரரும் அந்த ராஜகுமாரர்களுடன் கூடிப் பெருமாளைத் தேற்றி எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து, மந்தாகினிநதியில் இழிந்து நீரிலாடும்படி சோதித்தனர். பெருமாள் முதலானோர்களும் தாமரை மலர்ந்து மணங்கமழ்ந்து குளிர்ந்து தெளிந்து விரைந்து பெருகி வருகின்ற அந்த மந்தாகினிநதியில் ஸ்நானஞ்செய்து இந்த நீர் வானுலகை யடைந்த தேவர் பொருட்டாகக் கடவதென்று தந்தையைக் குறித்து மொழிந்து தர்ப்பணஞ் செய்தனர்கள். பெருமாளும் தென்முகமாக நின்று அஞ்சலியில் நீரை நிறைத்துக்கொண்டு தந்தையை யுத்தேசித்து, என் பிதாவே ! இப்போழ்து என்னா லளிக்கப்படுகின்ற இந்த நீர் தேவருக்குப் பிதுர்லோகத்தில் அக்ஷயமாகக் கடவதென மொழிந்து தருப்பணஞ் செய்தருளி, அனைவருடனும் அந்நதியின் கரையேறித் தீரத்திலுட்கார்ந்து இலந்தைக் கனிகளுடன் கூடிய இங்குணப்பொடியைப் பிண்டஞ் செய்து கரையில் தருப்பத்தைப் பரப்பி யதன்மேல் அந்தப் பிண்டத்தை வைத்துச் சக்கரவர்த்தியை யுத்தேசித்து ;—

ఇదం భుఙ్క్ష్వ మహారాజ ప్రీతో యదశనా వయం
యదన్నః పురుషో భవతి తదన్నాస్తస్య దేవతాః ||

இதம்புங்க்ஷ்வமஹாராஜ ப்ரீதோயதசநாவயம்
யதன்னஃபுருஷோபவதி ததன்னாஸ்தஸ்யதேவதாஃ.

மஹாராஜரே ! யாங்க ளிப்போழ்து உண்ணுகின்ற இவ்வுணவையே தேவர் பொருட்டு வைத்திருக்கின்றேன், இதனையும் தேவர் மகிழ்ந்துண்ணக் கடவீர்; உலகத்தில் யார் எந்த உணவை யுண்பார்களோ ? அவர் தெய்வங்களும் அந்த உணவையே யுண்டு மகிழ்கின்றன வல்லவோ ?

என்றுரைசெய்து, விதியின்படி ஸபிண்டீகரணஞ்செய்து முடித்துப் பின்பு வந்தவழியாலேயே திருச்சித்திரகூடஞ் சேர்ந்து தம் பர்ணசாலையின் வாயிலில் ஸ்ரீபரத லக்ஷ்மணர்களிருவரையும், தம் திருத்தோள்களால் தழுவிக்கொண்டு புலம்பினர். இவ்வண்ணம் பிராட்டியாருடன் இவரெல்லோரும் புலம்பி யழுகையில், சிங்கத்தின் த்வனிபோன்ற இவர்களது த்வனியினால் மலையில் ப்ரதித்வனி யுண்டாகித் திசைகளெங்கும் பரவியொலித்தது, ஸ்ரீபரதாழ்வானது சேனையிலுள்ள யாவரும் இந்தத் த்வனியைக் கேட்டு அச்சங்கொண்டு கேளீர் நேசர்களே! ஸ்ரீபரதாழ்வான் சக்கரவர்த்தித்திருமகனைக்கண்டு பணிந்தனர்போலும், அவர்களது புலம்பலே இங்குக் கேட்கப் படுகின்றதென்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு உடனே புறப்பட்டு அந்தத் த்வனி தோன்றிய இடத்தைக் குறிப்பிட்டுக் குவையாகி யோடி வந்தனர்கள். அவர்களுள் சிலர் யானைகளிலும், சிலர் குதிரைகளிலும், சிலர் தேர்களிலும் ஏறிக்கொண்டும், சிலர் கால்களால் நடந்தும், பெருமாளைப்பிரிந்து சிலநாள்களே யாயினவாயினும், பலகோடி வருஷங்கள் பிரிந்துள்ளவர்கள்போல மிகவும் அவாவுற்று ஓடிவருகையில், மழைகாலத்தில் வானம் முழங்குவதுபோலப் பூமியும் த்வனியுற்று முழங்கிற்று; அதனால் அச்சமுறுத்தப்பட்ட யானைகளும், பிடிகளுடன் ஓடி வேறுவனஞ் சேர்ந்தன; அக்காட்டிலுள்ள பன்றி, பசு, காளை, எருமை, மஹிஷம், புலி, கரடி, பாம்பு, குரங்கு, மான் முதலிய விலங்குகளெல்லாம் பயந்தோடின, சக்கரவாகம், நாரை, ஹம்ஸம், கலஹம்ஸம், கொக்கு, குயில், க்ரௌஞ்சம் முதலிய பறவைகளும் பறந்தோடின; அப்பொழுது ஆகாயம் பறவைகளாலும், பூமி மனிதர்களாலும் நிறைந்து விளங்கின; உடனே எல்லோரும் அருகிற்சென்று தரையில் வீற்றிருக்கின்ற பெருமாளைக்கண்டு மிகத் துன்புற்றுக் கைகேயியையும், கூனியையும் இகழ்ந்துகொண்டு கண்ணீர்விட்டழுதனர்கள். பெருமாளும் அவர்களைக்கண்டு தாய்போலும், தந்தையர்போலும், ஆதரஞ்செய் தருகிலழைத்துத் தழுவிக்கொண்டு மகிழ்வித்தனர். அப்பொழுது அந்த ஜனங்களுள் சிலர்களை யணைத்து மகிழ்வித்தனர்; சிலரைத் தண்டம் ஸமர்ப்பித்து மகிழ்வித்தனர், இவரெல்லோரையும் அவரவர்களுக்குத் தக்கபடி மரியாதைசெய்து பெருமாள் தாமும் மகிழ்ந்து அவர்களையும் மகிழ்வித்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றிரண்டாவதுசருக்கம்

முற்றிற்று.

---

பெருமாள் சக்கரவர்த்தியார் விண்ணுலகெண்ணியதைக் கேட்டவுடன் மூழ்கி ஸபிண்டீகரணம் செய்ததாக விருக்கின்றது; இச்சருக்கத்தில் மாதா பிதாக்கள் இறந்துபோனதைப் பிள்ளைகள் எப்போது கேட்கினும், அதுமுதல் பத்துநாள் நீட்டிருந்து பின்பே ஸபிண்டீகரணஞ் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது;

## நூற்றுமூன்றாவது சருக்கம்.

**கோஸலையார் முதலிய தேவிகள் பெருமாள் இளையபெருமாள் பிராட்டியார் இவர்களைக் கண்டு மிகவும் துன்பமடைந்து புலம்பியது.**

---

அநந்தரம் ஸ்ரீவஸிஷ்ட பகவானும் கோஸலையார் முதலாயுள்ள சக்கரவர்த்தியார் தேவிகளை யழைத்துக்கொண்டு பெருமாளை எப்போது காண்போமென்னும் ஆவலுற்று விரைவாக வருகையில், வழியில் மந்தாகினிநதியின் கரையில் பெருமாளால் தந்தையின்பொருட்டு வைக்கப்பட்ட பிண்டத்தைக் கோஸலையார் மற்றுள்ளவர்களோடு கண்டு ஸுமித்திரா தேவியை நோக்கி, பாராய ஸுமித்திராய்! காட்டிற்கு செல்லவிட்ட நம் திருக்குமாரர்கள் இங்கே இறங்கி ஸ்நாநஞ்செய்யுந் துறைபோலும், இங்கிருந்தே உன் புத்திரனாகிய லக்ஷ்மணன் என் திருமகன் பொருட்டு தினந்தோறும் நீர் கொண்டு செல்வான், உன் மைந்தன் இவ்வண்ணம் செயற்கரிய செயல்களைச் செய்யினும், இகழ்வுறுகின்றிலன்; தந்தைக்கு நிகராகிய தன் தமையன் பொருட்டுச் செய்யும் செயல்களும், இகழத்தக்கன வாகுமோ? அவனுக்குத் தகாத இந்தச் செயல்கள் இப்போழ்தாயினும் நீங்குங்கொலோ என்று சோகத்தினால் உரை செய்துகொண்டே செல்லுகையில், அந்தப் பிண்டத்தையுங்கண்டு சக்கரவர்த்தியின்பொருட்டுப் பெருமாளால் வைக்கப் பட்டதெனத் தேர்ந்து, மற்றுள்ள தேவிகளை நோக்கிப் பாரீர்கள் ஸகிகளே! தெற்கு நுனியாகப் போடப்பட்ட தர்ப்பபுல்லின்மேலே இங்குணத்தாற் செய்யப்பட்ட பிண்டம், இக்ஷ்வாகு குலத்திற்கு நாதராகிய

---

இவ்விதிக்குப் பெருமாள் செய்தருளியது பொருந்துமோவெனில், யாகதீக்ஷையிலும், விவாஹம் முதலிய தீக்ஷைகளிலும் தீட்டில்லையென்று விசேஷவிதி யிருக்கின்றமையால், பெருமாளும் பிதருவாக்கிய பரிபாலன ரூபமாகிய சிறந்த தீக்ஷைகொண்டிருந்தமையால், தீட்டில்லையென்பதை யுணர்ந்தும், ஸ்ரீபரதாழ்வானால் எல்லாச் சடங்குகளும் நிறைவேற்றப்பட்டிருந்தமையின், தாம் முக்கியமாயுள்ள தருப்பணத்தையும், ஸபிண்டீகரணத்தையும், செய்தருளினற் போதுமென்று திருவுளங்கொண்டும், தீட்டுக்கொண்டிராவிடினும் இகழ்விலதென வுணர்க. அன்றியின், பெருமாள் தீட்டுக்கொண்டிருந்திலரென்பதற்கு பரமாண மொன்றுமில்லாதலின், தீட்டுக் கொண்டிருந்ததாகக்கொள்ளினும் விரோதமில்லை, தீட்டில ஸபிண்டீகரணஞ் செய்ததாக விருப்பது விரோதமன்றோ வெனில், நைவாபமென்று மூலத்தி லிருப்பதற்கு வியாக்கியானத்தில் ஸபிண்டீகரணமென்று பொருள் கூறப்பட்டுளதேயன்றி, மூலத்திலில்லை; ஆதலின், நைவாபமென்னும் பதத்திற்கு நித்யவிதியில் செய்யத்தக்க பிண்டமென்று பொருள் கூறக் குறையில்லை, அஃது தீட்டிலேயே செய்யப்படுகின்றது; தீட்டில்லையெனக்கொண்டு வியாக்கியானத்தில் ஸபிண்டீகரணமெனப் பொருள் கூறப்பட்டுளதெனவும் கொள்க. இந்தப் பக்ஷத்தைக்கொண்டே பட்டமுராரியும், அநர்க்கராகவ நாடகத்தில் பெருமாள் தீட்டுக்கொண்டிருந்ததாகவே கூறி இருக்கின்றனன்.

நம் பதியின்பொருட்டு என் திருமகனால் வைக்கப்பட்டுள்ளது, சிறந்த நல் லுணவுகளை யுண்டு பார் முழுதும் ஆண்டு பாதுகாத்த மஹாராஜருக்கு இஃது தகுமென யான் கருதுகின்றிலேன், பார் முழுதும் பாதுகாத்து நல்லுணவையுண்ட மஹாராஜா இந்தப் பிண்டத்தை எவ்வண்ணம் புசித்து மகிழ்வாரோ? மிக்க செல்வங்களை யடைந்து பாராளவல்ல என் திருமக னும் தந்தைக்கு இந்தப் பிண்டத்தை யிட்டன னென்றால், இதைவிடத் துன்பமென்பது மொன்றுளதோ? இதனை யான் கண்ணுறுகையிலும், என்து இதயம் ஆயிரஞ் சிதறாக ஏன் பிளந்திலதோ? எந்த மனிதன் எவ் வுணவை யுண்கின்றானோ? அவ்வுணவினையே அவன் தெய்வங்களும் உண் பார்களென்னும் யாவராலும் அறியப்பட்ட சுருதி யுண்மையெனவே இப் போழ்து தோற்றுகின்றது, என்றிவ்வண்ணம் புலம்புகையில், மற்றுள்ள தேவிகளும் இவளைத் தேற்றி யழைத்துக் கொண்டுபோய ஆஶ்ரமத்தில் சாபத்தினால் வானுலகினின்று வீழ்ந்த வானவன்போலவும், போகங்களை முற்றுந் துறந்து துறவறம் பூண்டவன்போலவும் எழுந்தருளியிருந்த பெரு மானைக் கண்டவுடனே சோகம் பெருகிக் கண்ணீர்விட்டுக் கூவி யழுதனர் கள். பெருமானும் அவர்களைக் கண் டெழுந்து எல்லோர்களையும் தனித்தனி திருவடி தொழுது நிற்கையில், அவர்களும் தமது மெதுவாயுள்ள பாணி தலங்களினால் பெருமாள்மீது படிந்துள்ள தூள்களைத் துடைத்துக் கண் குளிரக் கண்டு மகிழ்ந்தனர்கள். இளையபெருமாளும் அவர்களைக் கண்டு பலமுறை பணிந்து, நின்றனர். அவர்களும் பெருமாளிடத்திலேபோல இவரிடத்திலும் மிகவும் அன்புகூர்ந்து தழுவி மகிழ்ந்தனர்கள். பின்பு பிராட்டியாரும் முறையே யவர்களைப் பணிந்து துன்பத்தினால் கண்ணீர் ததும்ப எதிரில் நின்றனள். அப்போழ் தவளைக் கோஸலையார் தாய் மகளைப் போலத் தழுவிக்கொண்டு அந்தோ? ஜனகசக்கரவர்த்தியின் திருமகளும், தசரதசக்கரவர்த்தியின் மருமகளும், ஸ்ரீராமசந்திரன் தருமபத்தினியு மாகிய ஸீதாதேவியும் இவ்வனத் துன்புறுமாறு நேர்ந்ததந்தோ? அடி என் மருமகளே! வெயிலினால் வாட்டப்பட்ட கமலம்போலவும், அழுக் கடைந்த கண்ணாடிபோலவும், மேகங்களினால் மறைக்கப்பட்ட சந்திர பிம்பம்போலவும், ஒளிகுன்றிய உன் திருமுக மண்டலத்தைக் காண்கையில், சோகம் தீப்போல என்னைப் பற்றி எரிக்கின்றதே? என்றிவ்வண்ணம் புலம் பிக்கொண் டிருக்கையில், ஸ்ரீராமசந்திரர் அக்கினிபோலத் திகழும் ஸ்ரீவசி ஷ்டபகவானை இந்திரன் பிருஹஸ்பதியைப்போலப் பணிந்து, அவரை ஓரா ஸனத்தில் எழுந்தருளியிருக்கச்செய்து, மற்றுள்ளோரையும் கூட்டாருமபடி நியமித்துத் தாமும் வீற்றிருந்தருளினர். நாட்டார் நகரத்தார் சேனைகள் அமைச்சர்கள் முதலிய யாவருட்னும் வந்த ஸ்ரீபரதாழ்வாரும் யாவருடனும் பெருமானுக் கருகில் வீற்றிருந்தனர். அப்பொழுது ஸ்ரீபரதாழ்வான் அநேக தேவகந்தர்வாதிகளுடன் திசைமுகத் தேவனருகில் வீற்றிருந்த தேவேந்திரன்போலக் திகழ்ந்து கைகுவித்துப் பெருமானை நோக்கி இருந்

தனர். அப்பொழு தெல்லோரும் இப்பரதாழ்வான பெருமாளைப் பணிந்து மரியாதைசெய்து யாதுனாகப்போகின்றனரோவென்று மிகவுங்குதூஹலத்துடன் எதிர்நோக்கி யிருந்தனர் எதிர்நோக்குகின்ற காலையில் பெருமாளிளையபெருமாள் ஸ்ரீபரதாழ்வான இவர்கள் மூவரும் நட்பினர்களால் சூழப்பட்டவர்களாகி, யாகசாலையில் சபையார்களால் சூழப்பட்ட கார்ஹபத்திய ஆஹவநீய தக்ஷிணம் என்று மூன்று அக்கினிகள்போல விளங்கினர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுமூன்றாவது சருக்கம்

முற்றிற்று

## நூற்றுநான்காவது சருக்கம்.

பெருமாள் ஸ்ரீபரதாழ்வானால் வேண்டப்பட்டு யான் வனவாஸமே செல்வேனென்பதற்குக் காரண மருளிச்செய்வது

அநந்தரம் பெருமாள் இளையபெருமாளைப்போலவே ஸ்ரீபரதாழ்வானைத் தம்மிடத்தில் பக்தியுள்ளவனென வுணர்ந்து அவனை நோக்கி, அப்பா பரதா! யானென்று நீ கூறக் கேட்டுணரக் கோருகின்றேன், நீ இப்பொழுது அரசாட்சிசெய்வதையும் விட்டு ஜடைதரித்து மணாயுரி மரவுரிகளை யுடுத்துக்கொண்டு இவ்விடத்திற்கு வந்த காரணம் யாது? அதனை நீ யுரைசெய்கவென்று வினவி யருளினர் என்றிவ்வண்ணம் அன்புகூர்ந்து தழுவி யுரைசெய்யப்பட்ட ஸ்ரீபரதாழ்வானும் மீளவும் பெருமாளை நோக்கிக் கைகுவித்துக்கொண்டு எம்மையனே! நம் தந்தையார் தேவரைக் காட்டுக்கனுப்பிச் செயற்கரிய செயல்செய்து புத்திரசோகத்தினால் வானேறி விட்டனர். அவர் என் தாயாகிய கொடிய கைகேயியினால் ஏவப்பட்டவராகித் தம் புகழையுங்கெடுத்து, என்னையும் இகழ்வுறச்செய்து, தாமும் கெடும்படியான இப்பாவத் தொழிலைச் செய்தனர் அத்தன்மையளாகிய என் தாயும் தன் கோரிகை யீடேறாமல் கைம்பெண்ணாகி நரகில் வீழ்ந்தனள், ஆதலின், தேவர்க்கே தொண்டனாகிய அடியேனிடத்தில் அருள் பூண்டு இப்பொழுதே தேவேந்திரன்போலத் திருவபிஷேகங்கொண்டு இந்த நாதனற்ற பிரஜைகளையும், நம் மாதர்களையும் மகிழ்வித் தருள் செய்து, பரமபனாயுக வாயத்ததும், தேவர்க்கே தக்கதுமாகிய இந்த ராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொண்டருள்க, நட்பினர்களையும் மகிழ்வித் தருள்க; ஶரத்காலத்தில் இரவு முழுமதியினால் திகழ்வதுபோல இந்தப் பூமியும் அரசனாகிய தேவரால் திகழ்க்கடவது. இந்தச் சாமந்த மந்திரி புரோஹிதாதிகளுடன் கூடித் தேவர்க்குச் சீடனும், தொண்டனுமாகிய அடியேனால் தண்டம ஸமர்ப்

பித்து வேண்டப்பட்டவராகி அடியேனிடத்தில அநுக்கிரஹஞ் செயதருள்க; நாட்டிலுள்ள எலலோரும் இவ்வண்ணம வேண்டுகின்றனர்கள், ஆதலின, மரியாதை செய்யத்தக்க அவர்களது வாக்கியத்தை இகழற்க; என்றிவ்வண்ணம் மொழிந்து மறுபடியும் பெருமாளுடைய திருவடித் தாமரைகளில் தலைவணங்கித் தண்டம் சமர்ப்பித்தனர். இவ்வண்ணம் வணங்கி மதமேறிய யானைபோல அடிக்கடி பெருமூச செறிநது வருந்துகின்ற ஸ்ரீபரதாழவானைப் பெருமாள தழுவிக்கொண்டு அவரை நோக்கி, அடா என்னருமைத் தம்பி!—

కులీనస్సత్త్వసంపన్నస్తేజస్వీ చరితవ్రతః
రాజ్యహేతోః కథం పాపమాచరేత్త్వద్విధో జనః ॥

குலீநஸ்ஸத்வஸம்பனன ஸதேஜஸ்வீசரிதவரத:
ராஜயஹேதோ:கதம்பாப மாசரேதவதவிதோஜன:

நற்குலத்திற் பிறந்தவனும், ஸத்துவகுண முடையவனும், தோளவலியுடையவனும், பறபல விரதங்கள செயது நறபுகழ பெறறவனுமாகிய உனனைப் போன்றவன் அறபமாகிய ராஜ்ஜியத்தினபொருட்டு ஏன் பாவத் தொழில் செயவான, ஒரு பொழுதும் செய்யான; ஆதலின, உனனிடததில சிறிதேனும் தோஷத்தைக் காணகின்றிலேன்; பாலத்தனமையால நீ தாயையும் இகழற்க;—

కామకారో మహాప్రాజ్ఞ గురూణాం సర్వదానఘ
ఉపపన్నేషు దారేషు పుత్రేషు చ విధీయతే ॥

காமகாரோமஹாபராஜஞ குரூணாம்ஸாவதாநக
உபபனனேஷு தாரேஷு புதரேஷு சவிதீயதே

அடா நறபுத்தி யுடைய பரதா! சீடர்களிடத்தில் ஆசிரியர்களுககும், தொண்டர்களிடத்தில காப்பவர்களுக்கும, மனைவிகளிடத்தில் பர்த்தாக்களுக்கும, மக்களிடத்தில தாய தந்தையர்களுக்கும், எப்பொழுதும் தம் மிச்சையின்படி கட்டளை செய்ய விதியுள தன்றோ? அவ்வாறே நாமும மஹாராஜர் தம் திருவுளத்தின்படி கட்டளைசெயயத்தவர்க ளலலோமோ? ஆதலின், இவ்விஷயத்தில் மாறுபாடு கொளளாமல் உடன்பட்டு மகிழக,

వనే వా చీరవసనం సౌమ్య కృష్ణాజినాంబరం
రాజ్యే వాపి మహారాజో మాం వాసయితుమీశ్వరః ॥
యావత్పితరి ధర్మజ్ఞ గౌరవం లోకసత్కృతం
తావద్ధర్మభృతాం శ్రేష్ఠ జనన్యామపి గౌరవం ॥

வநேவாசீரவஸநம ஸௌம்யகருஷ்ணாஜிநாம்பரம்
ராஜ்யேவாபிமஹாராஜோ மாமவாஸயிதுமீஶ்வர:.
யாவத்பிதரிதாமஜ்ஞ கௌரவமலோகஸதக்ருதம
தாவததாமபருதாமஶ்ரேஷ்ட ஜனனயாமபிகௌரவம்.

மஹாராஜர் என்னைச சீர ஜடாஜினதாரியாகித் தண்டகவனத்தில் வாஸம் செயவிக்கவாயினும, பீதாம்பர மணிமகுடதாரியாகி ராஜ்ஜியத்தில வாஸம் செய்விக்கவாயினும வல்லவர், அடா தருமமுணர்ந்தவர்களுள் சிறந்த பரதா! தந்தையினிடத்தில எவ்வளவுக கௌரவம உலகத்தில புகழப்படுகின்றதோ? அவ்வளவுக் கௌரவம மாதாவினிடததிலும் இருக்க வேண்டு மென்றும கூறபபடுகினற தன்றோ? ஆதலின, அவ்விருவர்களாலும், அடா ராமா! நீ காடேறச செலக என்று கட்டளையிடப்பட்டயானும் அதைத் தவிர்ந்து எவ்வண்ணம வேறு செயவேன், நீ திருவயோத்தியிலும், யான தணடக வனத்திலும், இப்போழுது வாஸஞ் செய்ய வேண்டுவதே கடமை, இவ்வண்ணமே மஹாராஜர் சபைநடுவில நம்மிருவருககும நியமஞ்செய தளிததுவிட்டுப பொனனுலகமடைந்தனர். உலகததோாககும், எமககும பிரபுவாகிய மஹாராஜர் நமக்குப பிரமாணமே யலலது, வேறொருவரும் பிரமாண மாகார; ஆதலின, தந்தையினால் பகிர்ந் தளிககப்பட்ட பாகத்தையே நீ யநுபவிக்கத் தகக[illegible] பதினான்குவருஷம தணடகவனததில வாஸஞ்செயது என் பொருட்டளிககப்பட்ட பாகத்தை யானும அநுபவிதது மகிழ்வேன்; யாவராலும் புகழப்படடவரும், மஹாததுமாவும், தேவேந்திரனுககு நிகரானவருமாகிய என பிதா! என்னை நோக்கி, எதனைச செயயுமபடி கட்டளை யிட்டனரோ? அதனையே யான நனகு மதிப்பே னலலது, அதனைத் துறந்து இந்திரன் பட்டம் வாயககினும விருபபுறே னெனறு அருளிசசெயது ஸ்ரீபரதாழ்வானைத் தேறறி யருளினர்.

அயோத்தியாகாண்டததில நூற்றுநான்காவது சருக்கம்
முற்றிறறு

## நூற்றைந்தாவதுசருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வானுககுப பெருமாள் இத மருளிச் செய்தது.

அநந்தரம் நட்பினர்களுடன் கூடிய பெருமாள் முதலிய யாவரும் துன்பப்பட்டுக்கொண் டிருக்கையிலேயே அன்றிரவு நீங்கிப் பொழுது

விடிந்தது, உடனே யாவரும் மந்தாகினிநதியில் நீராடி ஜபம் ஹோமம் முதலிய நித்தியகருமங்களைச் செய்து முடித்துப் பெருமானெழுந்தருளி யிருக்குமிடஞ் சேர்ந்து சுற்றிலு முட்கார்ந்து மௌனமடைந் திருந்தனர்கள். அப்போழுது ஸ்ரீபரதாழ்வான் பெருமானை நோக்கி, ஸ்வாமி எம்மையரே! தேவர் அருளிச்செய்தபடியே என் மாதாவும் வரதானத்தால் ஸமாதானஞ் செய்யப்பட்டனள், ராஜ்ஜியமும் எனக்கு அளிக்கப்பட்டது, அந்த ராஜ்ஜியத்தையே அடியேனிப்பொழுது தேவர் பொருட்டு ஸமாப்பிக்கின்றேன், தேவரருள்செய்து இதனை யங்கீகரித்துப் பகை யின்றிப் பரிபாலனஞ் செய்க; மிகப் பெரிய இந்த ராஜ்ஜியமானது மேன்மேலும் பெருகி வருகின்ற நதியின் வேகத்தினால் பிளக்கப்பட்ட அணைபோலத் தேவரைத் தவிர வேறொருவராலும் கட்ட முடியாது; குதிரையின் வேகத்தைக் கழுதை போலவும், பெரிய திருவடியின் வேகத்தை மற்றுள்ள பறவைகள் போலவும், தேவருடைய சக்தியைத் தொடர்ந்து பின் செல்லவும் அடியேனுக்குச் சிறிதும் சக்தியில்லது, யாவனொருவன் பிறர்களால் அடையப்பட்டு அவர்களையும் அளித்துப் பாதுகாக்கின்றனனோ? அவன் பிழைப்பே யன்றோ? நல்ல பிழைப்பு; யாவனொருவன் பிறரை யடைந்து பிழைக்கின்றனனோ? அவன் பிழைப்பே யன்றோ? கெட்ட பிழைப்பு; ஆதலின், தேவர் இந்த ராஜ்ஜியத்தை யங்கீகாரஞ்செய்து எம்மைப் பாதுகாத்தளித்து மகிழ்விக்காமல், காட்டேற வெழுந்தருளுவது தகுதியாகுமோ? ஒருவனால் வைத்து நீர் வார்த்து வளர்க்கப் படடுக் குறளர்க ளேறவொண்ணாம லுயர்ந்து வேரூன்றித் தழைத்துச் செழித்த பெரிய மரம் பூத்துப் பழுக்காமலும், தனனை வளர்த்தவனுக்கு மகிழ்ச்சியை யுண்டு பண்ணாமலும் போயிற்றாயின், அந்த மரமே தேவருக்கு உவமையாகும்; இதனைத் தேவரே ஆராய்ந் துணர்க, எம்மையரே அபிஷேகங்கொண்டு ஜொலிக்கின்ற சூரியன்போலத் திகழ்கின்ற தேவரை நாட்டார் நகரத்தோ ரெல்லோரும் கண்டு மகிழ்க; தேவர் திருவயோத்தியில் மதமேறிய களிறுகளும், தேவர் பின் சென்று பிளிறக் கடவன. அந்தப்புரத்திலுள்ள காந்தையர்க ளெல்லோரும் மகிழ்வுறக்கடவார்கள். எனறிவ்வண்ணம் ஸ்ரீபரதாழ்வான் பெருமானைப் பணிந்து வேண்டினர். அவருடன் வந்த ஜனங்க ளெல்லோரும் அதற் குடன்பாடு கூறிப் புகழ்ந்தனர்கள். இவ்வண்ணம் வேண்டி வருந்திப் புலம்புகின்ற ஸ்ரீபரதாழ்வானை நோக்கிப் பெருமாள் தேற்றி யருளலுற்றனர். அடா பரதா!—

నాత్మనః కామకారో౽స్తి పురుషో౽యమనీశ్వరః
ఇతశ్చేతరతశ్చైనం కృతాన్తః పరికర్షతి ॥
సర్వే క్షయాన్తా నిచయాః పతనాన్తాః సముచ్ఛ్రయాః
సంయోగా విప్రయోగాన్తా మరణాన్తం చ జీవితం ॥

நாத்மனஃகாமகாரோஸ்தி புருஷோயமநீஸ்வர:
இதஸ்சேதரதஸ்சைநம் க்ருதாந்த: பரிகர்ஷதி.
ஸர்வே க்ஷயாந்தா நிசயா: பதநாந்தா: ஸமுச்சரயா:
ஸம்யோகா விப்ரயோகாந்தா மரணாந்தஞ்ச ஜீவிதம்.

உலகினில், யாவரும் தெய்வத்தாற் கட்டப்பட்டவர்களே யன்றி, சுதந்த்ரரல்லராதலின், ஒருவன் தற்செயலாகச் செய்யத்தக்க தொன்றுமில்லது, தெய்வமே இவனைத் தன் தேசத்தினின்றும் தூரதேசத்திற்கும், மீளவும் அங்கிருந்து தன் தேசத்திற்கும் செல்லும்படி இழுக்கின்றதன்றோ? ஆதலின், தாய் தந்தைகளின்மேல் நீ சிறிதும் சினமுறற்க; தெய்வச் செயலாதலின், துன்பமும் உறற்க, மேன்மேலுயர்ந்த பொருள்களின் குவைகளும் அழியுமளவிருக்குமே யல்லது, அழிவற்றிரா? எவ்வளவு மேன்மையும், தாழ்மையுறுமளவே யாமல்லது, தாழ்மையின்றியேயிராது, புத்ர மித்ராதிகளுடன் கூட்டமெனப்படுவது பிரியுமளவே யாகுமல்லது, பிரிதலேயின்றியிராது, நல்வாழ்வும் சாகுமளவே யாகுமல்லது, சாவற்றிராது; ஆதலின், நீ தந்தையாகினவனுலகமடைந்தனரோ யென்று சிறிதுந் துன்புறற்க, மரத்து நுனியில் பழுத்திருக்கின்ற கனிகளுக்குத் தரையிலிற்று விழுவதைவிட வேறு பயம் எவ்வண்ணமிலதோ? அவ்வண்ணமே பிறப்புற்ற மனிதனுக்கு மரணத்தை யிட வேறுபயமிலது; மரணமென்பது தவிர்த்தற்கரியது; ஒரு வீடு எவ்வளவு வலிய தூண்களை நிறுத்தி வலிமையாகக் கட்டப்படினும், நாள் செல்லச் செல்லப் பழையதாகி வலிமைகுறைந்திடிந்து விழுகின்றதோ? அவ்வண்ணம் மனிதன் எவ்வளவு திறமையினனாயினும், மூப்புற்றுத் திறமையொடுங்கி மரணமுறுவான், மனிதர்க்கு யாதொரு இரவு நிகழ்ந்ததோ? நிகழ்ந்தது நிகழ்ந்ததே யன்றி, நிகழுமதாகுமோ? யமுனாநதியின் வெள்ளம் பெருகிறதாயின், அஃது பெருகிக் கடலையே போய்ச் சேருமல்லது, மீண்டெதிர்த்துப் பெருகுமோ? இராப்பகல்கள் மனிதர்களது ஆயுளைக் கழித்துக்கொண்டே செல்லுகின்றனவே யன்றி, வாளாச் செல்லுகின்றனவோ? ஆதலின்,

ఆత్మానమనుశోచ త్వం కిమన్యమనుశోచసి
ఆయుస్తే హీయతే యస్య స్థితస్య చ గతస్య చ ॥

ஆத்மாநமநுசோச த்வம் கிமந்யமநுசோசஸி
ஆயுஸ்தே ஹீயதே யஸ்ய ஸ்திதஸ்ய ச கதஸ்ய ச.

நீ யுன்னைக் குறித்தே சோகமுறுக; பிறனைக் குறித்தேன் துன்புறுகின்றனை; நீ நிற்கினும், செல்லினும், உட்காரினும், படுக்கினும்,

ஆயுள் குறைகின்றதே யன்றி, வளர் கின்றதோ? மனிதன் எங்கேகினும் மருதயுவும் உடனே யேகின்றது; உட்காரின உடனே உட்கார்கின்றது; யமலோகம் போகு மளவும், உடனே சென்று, பின்பு திரும்பு மல்லது, முன்பு திரும்பிச செல்லுமோ? மனிதன் மூப்புற்று, மெய நலிந்து, மயிர் நரைத்து, திறமை குன்றி, மதி மயங்கியபின் யாது செயது பிழைப் பன, ஆதலின், முன்னமே தான் உயயுமுபாயததைத் தேடிக்கொளளக கடவன்.

నన్దన్త్యుదితఆదిత్యే నన్ద్యస్తమితేరవౌ
ఆత్మనోనావబుధ్యన్తే మనుష్యాజీవితక్షయం ॥

நநதநதயுதிதஆதிதயே நநதநதயஸதமிதேரவௌ
ஆத்மனோநாவபுதயநதே மனுஷயாஜீவிதக்ஷயம.

எல்லோருமெ யயோதுதிபபதையும், மறைவதையும் கண்டு வியப புற்று மகிழகின்றனர்களே யன்றித் தமதாயுள குறைந் தழிவதை யொரு வரும் அறிந்தில ரந்தோ? பருவஙகளதோறும அவற்றின அழகினைக் கண்டு எல்லோரும் மகிழகின்றனாகளே? அந்தோ? அப்பருவஙகள அவர்களது ஆயுள்களைக குறைததுககொண்டே செல்லுகின்றனவே? அலைகடலில தனியேயுளள இரண்டு கட்டைகள அலையினால் கூட்டப் பட்டுப் பினபு பிரிக்கப படுகின்றனபோலக காலததினால் தாய தநதை மக கள முதலானோர்கள கூட்டப்பட்டும், பிரிக்கபபடடும அலைகின்றனர்கள. ஆதலின், இவர்கள கூடுவதரிதேயன்றிப் பிரிவ தரிதன்று; பிரிவதே நிச்சயம்; இந்த பரஹ்மாணடத்திலுள பிரஹ்மா முதலாகியுளள உயிாக ளெல்லோரும தத்தம முன வினையின்படி நடபபவர்க ளாதலின், ஒருவ ராயினும தம் மனததின்படி யொருவருடன் சேரவும, பிரியவும், வல்லு ரல்லர்; ஆதலின், ஒருவரிறந்ததைப்பற்றி மற்றொருவர் கண்ணீர் பெரு க்கி யழுவதினால் அவரை மீட்கு முபாய முண்டாகுமோ? ஆகாது, தூரஞ்செல்வோ னொருவன் துணையாகச செல்வோனை நோககி, யானு முடன் வருவேனென றுரைத்துப் பின்தொடர்நது சென்று எவவண்ண மின்புறுவானோ? அவ்வண்ணமே தம் முன்னோர்கள் சென்றவழியே சென்று நடப்பவன எப்படி துன்புறுவான? ஒருகாலும் துன்புறான; ஆற்று வெள்ளம்போல மீளாது செல்லுகின்ற ஆயுளை நோக்கி, விவேக முடையோன் நனமை விளையத்தக்க தருமச்செயலிலேதானே முயலக கடவன். உயிர்களெல்லோரும் இன்பத்தையே கோருகின்றனர்களல்லரோ? ஆதலின், தருமாத்துமாவாகிய நம் தந்தையரும், சிறந்த யாகங்கள செய வதினாலும், பாதுகாத்தளிக்கத் தக்கவர்களைக் காத்தளித்தமையாலும், உலகினை நீதிவழுவாது பரிபாலனஞ் செய்தமையாலும், தருமமாகவே கப்பம்வாங்கி வேதியர்களுக் களித்தமையாலும், பொன்னுலகமே யடைக்

தனர். இருக்கையிலும் தானதருமங்களை செய்து நெடுநாள் வாழ்ந் தின்புற் றிருந்தனர். ஆதலின், அவரைக் குறித்துத் துன்புறத்தக்க காரணம் சிறிது மிலது; அத்தன்மையராகிய நம் தந்தையர் மூப்புடைய இந்த மானிட சரீரத்தை ஒழித்து விட்டுப் பிரஹ்மலோகத்தில் இன்புறத்தக்க திவ்விய சரீரத்தைப் பெற்று மகிழ்கின்றமையின், விவேகமுடையோ னாயின், ஒருவனும் அவரைப்பற்றித் துயருறான், நீயும் பற்பல நூல்களைக் கற்றவனும், சிறந்த புத்தி யுடையவனு மாதலின், நீ நம் தந்தையைப் பற்றித் துயருறற்க; தீரமுடையவன் ஒருகாலும் ஊனீறக் குறித்தும் சிறிதும் துன்புறானன்றே? ஆதலின், நீ துயரற்க; தீர முறுக; நந்தந்தையர் உன்னைத் திருவயோத்தியில் அபிஷேகம்பூண்டு அரசாட்சிசெய்யும்படி கட்டளையிட் டிருக்கின்றமையின், நீ திருவயோத்திக்குச் சென்று அங்கு வாழ்க; எம் தந்தையர் எனக்குக் கட்டளையிட்டபடி யானும் வனத்தி லுறைவேன்; நீயும் தந்தையின் கட்டளைப்படி நடக்கக் கடவை யல்லது, அதனைத் தவறற்க; யான் தந்தையின் கட்டளையைத் துறப்பது ஒருபொழுதும் நீதியன்று, வனவாஸஞ் செய்வதினாலேயே துன்பமின்றித் தந்தையாரது வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்து மகிழ்வேன்; தருமமுணர்ந்தவனும், கொடுமை யற்றவனுமாகிய புத்திரன் தந்தையின் வாக்கியத்தைச் செய்யாது துறப்பானோ? அவ் வண்ணந் துறப்பவன் நற்கதி பெறுவானோ? பெறான்; ஆதலின், நீயும் தருமநுட்பத்தை யாராய்ந்து அபிஷேகங்கொண்டு வாழ்க; நம் தந்தையின் சரிதத்தைப் பார்; அவர் சிறிதேனும் தருமத்தைத் துறந்து நடந்தனரோ? ஆதலின், நீ துன்பத்தை விட்டு மகிழ்ச்சியுற்றுத் திருவயோத்திக்குச் செல்க, என்றிவ்வண்ணம் பெருமாள் பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்வதன்பொருட்டு ஸ்ரீபரதாழ்வானுக்கு இதோபதேசஞ்செய்து மௌன மடைந் தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றைந்தாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றாறாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் பெருமாளை மீளவும் தனியே வேண்டியது.

பெருமா ளிவ்வண்ணம் முடிவுகூறி முடித்தபின்பு, ஸ்ரீபரதாழ்வான் மந்தாகினிநதியின் தீரத்தில் தனியே எழுந்தருளியிருக்கின்ற பெருமாளை நோக்கி, ஸ்வாமி எம்மையுரோ! தேவரைப்போல இவ்வுலகினில் யாவர்

பற்றற்றிருப்பார்கள்; தேவரைத் துன்பமும் வருத்தாது; இன்பமும் களிப்பிக்காது, பிறப்பிலும், உய்விலும், இறப்பிலும், பொருளுடைமையிலும், பொருளின்மையிலும், எவன் புத்தி மாறுபா டுறுகின்றிலதோ! அவன் எதனால் வருத்த முறுவான்? தேவர் மஹாயோகி போன்றவராதலின், தேவர்க்குத் துன்பமென்பதே திருவுளத்தி லிலது, ஆயினும், தேவர் இவ்வண்ணம் துன்பத்தை யடைந்து வருந்துவது தகுதியற்றது; தேவர் தேவர்க்கு நிகரான தோள்வலி யுற்றவரும், மஹாத்துமாவும், உண்மையாயுள்ள பிரதிஜ்ஞை யுடையாரும், யாவும் உணர்ந்தவரும், யாவற்றையும் அறிபவரும், சிறந்த புத்தி யுடையாரு மாகினீர், ஆதலின், தேவர்க்கும் இத்தன்மையதாகிய கொடிய துன்பம் வாய்த்தது மிகத் தகுதி யற்றது; யான் தேசாந்தரத்தி லிருக்கையில், என் மாதா! என் பொருட்டே மிக்க கொடிய பாவஞ் செய்தனள், அதற்கு யான் சிறிது முடன் பட்டிலேன்; ஆதலின், தேவர் அடியேன்மீது சீற்றமுறாது அன்புகூர்ந் தருள் செய்யக் கடவீர். என் தாய் மிகப் பாவியும், கொலைக்குரியவளு மாகினவளாயினும், தாயைக்கொலை சால்புடைத்தன் றாதலின், ஒருபாசத்தினால் கட்டுண்டு தாயைக் கொலை செய்கின்றிலேனேயன்றி, அன்பினால் விட்டிலேன், நின்மலமாகிய குலத்திற் பிறந்த தசரதசக்கரவர்த்திக்கு யான் பிள்ளையாகவும், தேவர்க்குத் தம்பியாகவும் பிறந்து, தருமங்களையு முணர்ந்து, தருமமல்லாத இந்தத் தாயக் கொலையை எவ்வாறு செய்வேன்?—

గురుః క్రియావాన్ వృద్ధశ్చ రాజా ప్రేతః పితేతి చ
తాతం న పరిగర్హేయం దైవతం చేతి సంసది ||

குரு꞉க்ரியாவான்வ்ருத்தச்ச ராஜாப்ரேத꞉பிதேதிச
தாதம்நபரிகர்ஹேயம் தைவதஞ்சேதிஸம்ஸதி.

சக்கரவர்த்தி குருவென்பதினாலும், யஜ்ஞயாகாதி நற்செயல்கள் செய்தவ னென்பதினாலும், ஜ்ஞானத்தினாலும், வயதினாலும், வித்தையினாலும், முதிர்ந்தவனென்பதினாலும், நீதிவழுவாமல் யாவரும் மகிழ்வுறும்படி யரசாட்சி செய்த ராஜனென்பதினாலும், எம்மைப்பெற்ற தந்தை யென்பதினாலும், நமக்குத் தெய்வ மென்பதினாலும், இப்பொழுது இறந்து விட்டனனென்பதினாலும், அவரை இப்போழ்து யான் இகழ்கின்றிலேன்; அறம் பொரு ளிரண்டு மின்றி, இவ்வண்ணம் கொடிய பாவஞ் செயலை ஒரு பெண்ணின் பிரியத்தின் பொருட்டு மற்றெவன் செய்வான்? மரண முறுங் காலையில் எல்லோரும் மதிமயக் குறுகின்றன ரென்னும் பழமொழி நம் தந்தையிடத்தி லிப்போழ்து காணப்பட்டது; ஆதலின், என் தாயிடத்தில் சினத்தினாலும், மோஹத்தினாலும், ஆராயாமையினாலும்,

கம் தந்தையால் செய்யப்பட்ட தீச்செயலை வழிப்படுத்துவதற்காகத் தேவர் திரும்பி எழுந்தருள்க. தந்தை யொரு தீச்செயல் செய்து விடினும், யாவனொருவன் அதனைத் திருத்தி நலமாக்கு கின்றனனோ? அந்தப் புத்திரனே யன்றோ? சற்புத்திரனாவான்; அவ்வண்ணம் செய்யாதான் கொடியமகனாகின்றனன்; ஆதலின், தேவர் தந்தைக்குச் சற்புத்திரராகக் கடவீரல்லது, கொடியராகக் கடவீரல்லீர், இந்த வனவாஸமெங்கே? தேவர்க்குரிய க்ஷத்திரதர்மமெங்கே? இந்த ஜடையெங்கே? உலகாண்மை யெங்கே? ஆதலின், தகுதியற்ற இந்த ரிஷி தர்மத்தைத் துறந்து ராஜ தர்மத்தையே செய்யக் கடவீரல்லது, தகுதியற்ற இச்செயல்களைச் செய்யற்க; இவ்வண்ணம் அரசராகிக் கைகேயியையும், அடியேனையும், தந்தையினையும், நட்பினர்களையும், சுற்றத்தார்களையும், இனத்தார்களையும், நாட்டார் நகரத்தார்களையும், இகழ்வுறு தின்புறுமாறு காத்தருள்க. எம்மையரே! அபிஷேகம்பூண்டு பிரஜைகளை நீதிப்படி பாதுகாப்பதென்பதே யன்றோ? ராஜர்களுக்கு முதன்மையான தருமம்;—

> కశ్చప్రత్యక్షముత్సృజ్య సంశయస్థమలక్షణం
> ఆయతిస్థం చరేద్ధర్మం క్షత్రబంధురనిశ్చితం ||

> *கச்சப்ரத்யக்ஷமுத்ஸ்ருஜ்ய ஸம்ஶயஸ்தமலக்ஷணம்*
> *ஆயதிஸ்தம் சரேத்தர்மம் க்ஷத்ரபந்துரநிஶ்சிதம்*

க்ஷத்திரியனாகிய வொருவன் நன்மை தருவதென்று பிரத்யக்ஷமாகக் காணப்பட்ட க்ஷத்திரியதருமத்தைத் துறந்து இம்மையில் துன்பந் தருவதும், மறுமையில் இன்பந் தருமோவென ஐயுறத்தக்கதும், குறியுற்றதும், காலாந்தரத்தில் பலனைத்தருவதும், அரசன் செய்யத்தகுமென வொரு விதியினாலும், நிச்சயஞ் செய்யப்படாததுமாகிய ரிஷி தருமத்தைச் செய்வானோ? தேவர்க்கு மெய் வருத்த முறத்தக்க தருமமே செய்யவேண்டுமென்னும் உறுதி யுளதாயின், அரசாட்சிசெய்தே மெய் வருந்தி யுலகினைப் பாதுகாத் தருள்க.--

> చతుర్ణామాశ్రమాణాంహి గార్హస్థ్యం శ్రేష్ఠమాశ్రమం
> ప్రాహుర్ధర్మజ్ఞధర్మజ్ఞాః స్తంకథంత్యక్తుమర్హసి||

> *சதுர்ணாமாஶ்ரமாணாம்ஹி கார்ஹஸ்த்யம் ஶ்ரேஷ்டமாஶ்ரமம்*
> *ப்ராஹுர்தர்மஜ்ஞதர்மஜ்ஞா: ஸ்தங்கதம் த்யக்துமர்ஹஸி.*

தருமங்களை முற்று முணர்ந்த எம்மையரே! தருமமறிந்தோர்கள் நான்காஶ்ரமங்களுள் இல்லறமே சிறந்ததெனக் கூறுகின்றனர்;

தேவர் அதனைத் துறபப தொக்குமோ ? கல்வியினாலும், தகுதியினாலும், வயதினாலும், தேவர்க்கு அடியேன் இளையோனாகின்றேன் ; ஆதலின், தேவர் எழுந்தருளி யிருக்கையில், அடியேன் எவ்வண்ணம் பூமியைப் பாதுகாப்பேன் ; மதியின்றிப் பணபறறு, இளமையுற்றுத் தகுதியுற் றிருக்கின்ற அடியேன் தேவரை விடடு வாழ்வுறவும் விரும்பேன ; ஆதலின், தேவரோ பரமபரையாயுள்ள இந்த ராஜ்ஜியத்தை யங்கீகரித்துப் பந்து ஜனங்களுடன் கூடி வாழ்ந்து தருமந் தவறாமல் பரிபாலனஞ் செய தருளக்கடவீர். இவ்விடத்திலேயே தேவர்க்குப பிரகிருதிகளெல்லோருந் திருவபிஷேகஞ் செய்யக் கடவர்கள். பினபு திருவயோத்திக் கெழுந் தருளிப் பகைவர்களை வெற்றிகொண்டு தேவேந்திரனபோல அரசாட்சி செய்தருளி முக்கடன்களையுந் தீரத்து, தெவ்வேந்தர்களை வென்று, நட் பினர்களைப் பாதுகாத்து அடியேனுக்குஞ் செய்யவேண்டுவன கட்டளை செய்தருளக கடவீர். எம்மையரே ! இப்பொழுதே தேவர்க்குத் திருவபி ஷேகஞ் செயகையில், நட்பினர்கள் கண்ணுற்று மகிழ்க ; பகைவர்களும் அச்சங்கொண்டு பத்துத் திசைகளிலும் ஓடி யொளித்துக் கொள்ளுக ; என்னுடைய தாயகுறற இகழ்வினையுந் தீர்தது, தந்தையினையும் பாவத்தி னின்றும பாதுகாத் தருள்க ; இவ்வணணம் அருள்செய் தருளவேண்டு மெனத் தலை வணங்கி வேண்டு கினறேன் ; பெருமாள் பூதங்க ளெலலா வற்றி னிடத்திலும அன்புசெய் தருள்வதுபோல அடியேன்மீதும் அனபு செய் தருளக ; இவ்வண்ணம் அடியேன் வேண்டியும் அருள் செய்யாமல அடியேனுடைய வேண்டுதலைப் பின்புறத்திவிட்டு, தேவர் திருவரணியத திற்கே எழுந்தருளுமாயின், அடியேனும் தேவருடன் வனமே வருவே னல்லது, மீளேன் ; என்றிவ்வண்ணம் பலவாறாக வேண்டிப் பலமுறை தண்டம் ஸமர்ப்பித்து வாடி வருந்துகையிலும், பெருமாள பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்வதிலேயே உறுதி கொண்டனரே யன்றி, மீண்டேகத் திருவுளம் பற்றிலர் , அங்குள்ள ஜனங்களெல்லோரும் பெருமாள திரும்பி எழுந்தருளத் திருவுளங்கொண்டிலரேயென்று துன்பத்தையும், பிரதிஜ்ஞை தவறாமல் ஒரே பிடியாக உறுதிகொண் டிருக்கின்றனரே யென்று மகிழ்வினையும், வியபபையு மடைந்து திகைத் திருந்தனர்கள் அப்பொழுது மந்திரியர், புரோஹிதர், நாட்டார், நகரத்தார், தேவிகள முதலிய யாவரும் நன்கு நன்கென ஸ்ரீபாதாழ்வானைப் புகழ்ந்தும், பெரு மாளைத் தலைவணங்கி வேண்டியும் வருந்தினர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றாறாவது சருக்கம்

முற்றிற்று.

## நாற்றேழாவது சருக்கம்.

பெருமாள் ஸ்ரீபரதாழ்வானைத் தேற்றி யருளியது.

மீளவும் ஸ்ரீபரதாழ்வான் அவ்வண்ணமே யுரை செய்து வணங்கி வேண்டுகையில், பெருமாள் அவனை நோக்கி, அடா தம்பி! நீ சக்கரவர்த்திக்குக் கைகேயியிடத்திற் பிறந்தமையினால், நீ இவ்வண்ணமுரைசெய்வது தகும்; ஆகிலும், நம் தந்தை யுன் மாதாவை விவாஹஞ் செய்து கொள்ளுங் காலையில், உன் மாதா மஹனாகிய கேகயமஹாராஜர் என் பெண் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைக்குப் பட்டங் கட்டுவிப்பீராகில், யான் பெண்ணை விவாஹஞ் செய்து கொடுப்பேனென்று கூறினர். நம் தந்தையரும் அவ்வண்ணமே யாகுகவென்று பிரதிஜ்ஞை செய்து கொடுத்துத் திருமணஞ் செய்துகொண்டருளினர். அன்றியும், தேவாஸுரயுத்தத்திற் சக்கரவர்த்தி மகிழ்ந் திரண்டு வரங்களையும் உனது மாதாவுக் களித்திருந்தனர். உன் மாதாவும் யான் காட்டி லுறையும்படியும், நீ யரசாளும்படியும், அவ்விரண்டு வரங்களையே கேட்டனர். சக்கரவர்த்தியும் ஸத்தியந் தவறாமைக்காக அவ்வண்ணம் வரமளித்து, எனக்குங் காட்டுக்கும்படி கட்டளையிட்டருளினரேயன்றி, காமத்தினாலாயினும், மோஹத்தினாலாயினும், இவ்வண்ணஞ் செய்திலர், ஆதலின், நீ தாய் தந்தையர்களை இகழற்க, யானும் அவ்வண்ணமே பதினான்குவருஷம் வாஸஞ் செய்யும் பொருட்டு, ஸீதா லக்ஷ்மணர்களுடனிங்கெய்தினேன், நீயும் அபிஷேகம் பூண்டு பிதாவின் கடனைத் தீர்த்து, அவரை ஸத்தியவாதியாகச் செய்தருள்க; என் பொருட்டு இவ்வண்ணம் தந்தையினையும் பாதுகாத்து, தாயினையும் மகிழ்விக்கக் கடவை முன்பு கயாக்ஷேத்திரத்தில் பிதிரர்கள் பொருட்டு யாகஞ் செய்துகொண் டிருந்த கயனாலே யுரைசெய்யப்பட்டதொரு சுலோக முளதன்றோ? அதனையும் கூறுகின்றேன் கேள்;—

పున్నామ్నోనరకాద్యస్మా త్పితరం త్రాయతేసుతః

తస్మాత్పుత్రఇతిప్రోక్తః పితౄన్యఃపాతివాసుతః॥

ఏష్టవ్యాబహవఃపుత్రా గుణవన్తోబహుశ్రుతాః

తేషాంవైసమవేతానా మపికశ్చిద్గయాంవ్రజేత్॥

புன்னாம்னோநரகாத்யஸ்மாத் பிதரந்த்ராயதேஸுத:

தஸ்மாத்புத்ரஇதிப்ரோக்த: பித்ருன்யத்பாதிவாஸுத:

ஏஷ்டவ்யாபஹவ:புத்ரா குணவந்தோபஹுஸ்ருதா:

தேஷாம்வைஸமவேதாநா மபிகஸ்சித்கயாம்வ்ரஜேத்.

பிள்ளையானவன் தந்தையையாயினும், பிதிரர்களையாயினும், அவர்கள் பொருட்டுத் தான் செய்த நற்சடங்குகளினால் நரகில் வீழ்ந்தழுந்தாமல் நற்கதியேறறிக் காக்கின்றமையின், புத்ரனென்னப்படுகின்றனன், ஆதலின், நற்குணமுடையவர்களும், பல நூல்களை யறிந்தவர்களுமாகத் தக்க பல பிள்ளைகள் உண்டாகக் கடவாகளென்று யாவராலும் கோரப்படுகின்றனர்கள் அவர்களுள் ஒருவனாகிலும் கயைக்குச் செல்வானோ வென்பதே அவர்களது கருத்து; என்றிவ்வண்ணமுணர்த்தகிய சுலோகங்களையும் நீ கேட்டுணர்ந்திலையோ? இவ்வண்ணமே ராஜரிஷிகளெல்லோரும் பித்ருவாக்கிய பரிபாலனஞ்செய்து புகழ் பெற்றனர்கள். ஆதலின், நீயும் தந்தையை நரகத்தினின்றும் பாதுகாக்கக்கடவை. நீ இங்கிருந்து திருவயோத்தி சேர்ந்து, பிரஜைகளையும் மகிழ்வித்து, சத்துருக்கனுடனும், வேதியர்களுடனும் வாழ்ந்து மகிழ்வாயாக, யானும் ஸீதா லக்ஷ்மணர்களுடன் தாமஸமின்றித் தண்டகாவனஞ் சேர்வேன், நீ நாட்டார்களுக்கு ராஜனாகுக, யான் காட்டார்களுக்கு ராஜனாகுவேன், நீ இப்பொழுது படைவீடு செல்க, யானும் காடு செல்வேன்; நீ ராஜனாகி வெண்குடை நிழலைச் சார்க; யானும் தண்மர நிழலைச் சேர்வேன், சத்துருக்கனன் உனக்குத் துணையாகின்றனன், லக்ஷ்மணன் எனக்குத் துணையாகின்றனன்; ஆதலின், நாம் நான்கு குமாரர்களும் தந்தையை ஸத்தியந்தவறாது பாதுகாத்துக் காப்போம், நீ வாளாத துயருறற்க; என்றருளிச்செய்து தேற்றியருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றேழாவது சருக்கம்

முற்றிற்று

---

(யதிகஞ்சிதகயாமவ்ரஜேத) என்றிவருக்குக் கூறப்பட்டமையாலும், கயா மாஹாத்மயத்தில் கயாச்ராத்தஞ் செய்தவர்களது பிதிராகளெல்லோரும் நற்கதி பெறுகின்றனர்களெனக் கூறப்பட்டமையாலும், கயையில் ச்ராத்தஞ்செய்தவர்கள் பின்பு ச்ராத்தஞ் செய்யவேண்டுவதில்லையென்று சிலர் கூறுகின்றனர்கள். சிலர் ச்ராத்தத்தையுந் துறந்தனர்கள். இஃதெதகுமோவெனில், ஒருகாலும் ஒவ்வாது, கருமங்கள், நித்யம், நைமித்திகம், கேவல காம்யமென மூவகைப்பட்டிருக்கின்றன, நித்யங்களாவன - ஸந்தியா வந்தனம் முதலியன, நைமித்திகங்களாவன - ச்ராத்தம் முதலியன; கேவல காம்யங்களாவன - நோம்பு முதலியன; அவைகளுள் முதலிலுள்ள இரண்டும் செய்யா தொழியின் பாவத்தை விளைக்கும், கேவல காம்ய மென்பது செயின், தன் பயனைத்தரும்; செய்யாதொழியின் பயனை விளைக்காதே யன்றிப் பாவத்திற் கிடமாகாது: ஆதலின், கேவலகாம்யந் தவிர மற்றிருவகைக் கருமங்களும் யாவராலும் செய்யத் தக்கனவே யன்றி, விடத்தகாவென முடிவு செய்யப்பட்டுள்ளன; ஆங்காயின், பிரபன்னர்களுக்கு மோக்ஷங்கிடைப்பது நிச்சயமாதலின், அவர்கள் நித்ய கருமாதிகளை ஏன் துறந்திலர்; ஆதலின், அவ்வண்ண முணைப்பவர்களும், ச்ராத்தங்களைத் துறந்து வேண்டியவாறுண்டு திரிபவர்களும், கெடுவார்களேயன்றிக் கடையேறார்கள்; ஆதலின், நித்திய நைமித்திகங்களை யாவருஞ் செய்யவே வேண்டுமெனத் தேர்க.

## நூற்றெட்டாவது சருக்கம்.

### ஜாபாலிமஹாமுனி பெருமானை நோக்கிச் சார்வாகவாதம் மொழிந்தது

இவ்வண்ணம் ஸ்ரீபரதாழ்வானைத் தேற்றியருளுகின்ற பெருமானை நோக்கி, ஜாபாலியென்னும் மஹாரிஷி மொழியலுற்றனர் கேளீர் சக்ரவர்த்தித் திருமகனாரே! தேவர் இப்போழுது கொண்டிருக்கின்ற எண்ணம் பயனற்றது, ஆகலின், அது நலந்தருவதாகாது; அவ்வெண்ணத்தைத் துறக்கக் கடவீர்; மூடனன்றோ? இவ்வண்ணம் நினைப்பான்; யார்க்கு எவன் பந்துவாகின்றனன்? யார்க்கு எவனால் என்னபயன்? ஒருவன்றான் தனியே பிறக்கின்றனன், தனியே இறக்கின்றனன்; ஆதலின், எவன் தாய் தந்தை பிள்ளை முதலானோர்களிடத்தில் பாசம் வைக்கின்றனனோ? அவன் பித்தனெனவே கூறப்படுகின்றனன்; ஒருவர்க்கொருவர் ஒருறவுமிலர்; வழி நடப்பவன் ஒருநாள் ஓரூரிலிறங்கி யன்றைத்தினம் இருந்து மறுநாள் வேறிடஞ் செல்வதுபோல மனிதனும் ஒருவர்க்கு மகனென்று பிறந்து சரீரத்திலுறைந்து கடையில் அதனைவிட்டு வேறொருவர்க்கு மகனெனப் பிறந்து வேறு சரீரத்திலுறைகின்றனன்; ஆதலின், தாயென்பதும், தந்தையென்பதும், பொருளென்பதும், வீடென்பதும், பொய்யா மாத்திரமேயன்றி, உண்மையாகா, ஆதலின், உணர்ந்தோர்கள் அவைகளை நம்பி மதிப்புக் கொள்ளார்கள், ஆதலின், நீர் கிரமமாக வாய்த்த ராஜ்யத்தைத் துறந்து கொடியதும், துன்பந் தருவதும், பல பீடைகளுடையதுமாகிய அவ்வழியைச் சார்ந்து செல்லற்க; மிகச் செல்வம் நிறைந்த திருவயோத்திக்குச் சென்று அபிஷேகங் கொள்க, கணவனை விட்டுப் பிரிந்த கற்புடையாளைப்போலவே திருவயோத்தியும் ஒரு வேணியுடையதாய் உம்மை எதிர் பார்த்துக்கொண் டிருக்கின்றது; ஆதலின், நீர் திருவயோத்தி சேர்ந்து சிறந்த ராஜபோகங்களை யனுபவித்து மகிழ்க, புருஷனுக்குத் தந்தை நிமித்த மாத்திரமேயன்றி, முதற் காரணமாகான், ரிது நீராடியுள்ள தாயினால் தரிக்கப்பட்ட சுக்ல சோணிதங்களே முதற்காரணமாகும், உன் தந்தை எங்கே செல்வது தகுமோ? அவ்விடமே போய்ச் சேர்ந்தனர். பிறப்புடையோர்க் கிறப்பும் நிச்சயமன்றோ? நீர் மாத்திரம் தாய் தந்தையாகவொன்று பொய்யாயுள்ள பற்றையெண்ணி வாளா வருந்திக் கெடுகின்றீர், அறம்பொருளிரண்டினுமே எவரெவர் விருப்பங்கொண் டிருக்கின்றனர்களோ? அவர்களைக் குறித்தே யான் மிகத் துயர முறுகின்றேன், அத்தன்மையர்கள் இம்மையிலும் துன்புற்று மரணமுற றழிந்தனராக ளல்லரோ? ஸ்ரீராமசந்திரரே! மனிதர்கள் அஷ்டகையென்றும், அன்வஷ்டகையென்றும், இறந்தின

மென்றும், ஶ்ராத்தஞ்செய்ய முயன்று வீணாகத் தனக்குள்ள அன்னத்தை யழித்துக் கொள்ளுகின்றனர்கள்; யாரீர் இறந்த பின்னர், எவன் எதனை யுண்பான்? ஒருவனாலுண்ணப்பட்ட அன்னம் மற்றொருவனைச் சேர்ந்து பசியைத் தணிப்ப துண்மையாயின், தேசாந்தரஞ் சென்ற ஒருவன் பொருட்டு இங்கு மற்றொருவனுக்கன்னமிட்டால் அவ்வன்னமும் தூரத்தி லிருப்பவன் சரீரத்தையடைந்து அவன் பசியைத் தணிக்கக்கடவதாமோ? பொருளற்ற மதியுடையோர் பலர் கூடிப் பொருளுடையவனைத் தானஞ் செய்யும்படி செய்து, அப்பொருள்களைத் தாம் கைக்கொள்ளுவதன் பொருட்டு யாகஞ் செய்யெனவும், தானஞ் செய்யெனவும், தீக்ஷை கொள்ளென வும், தவஞ் செய்யெனவும், பொருளாசையை விட்டு விட்டு ஏற்போர்க் களியெனவும், வசனங்களை யுண்டுபண்ணிப் பெரிய புத்தகமாகச் செய்திருக்கின்றனர்களே, யன்றி, உண்மையாகச் சிறந்த புத்தி யுடைய ஸ்ரீராம பத்திரரே! இம்மையேயன்றி, மறுமையிலவேறுலகமிலதென நன்குணர்ந்து மறுமையைத் துறந்து பிரத்தியக்ஷ மாகியுள்ள ராஜ்ஜிய போகாதிகளையே யநுபவிக்கக் கடவீர். இவ்வண்ணம நீர் நனகு தேர்ந்து ஸ்ரீபரதாழ் வாராலே வேண்டி யளிக்கப்பட்ட ராஜ்ஜியத்தைப் பெற்று இன்புற்று வாழ்க வென்று ஜாபாலிமஹாரிஷி மொழிந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றொன்பதாவது சருக்கம்

பெருமாள் ஜாபாலி மொழிந்த சார்வாக வாதத்திற்குச் சீற்றங்கொண்டு ஸமாதான மருளிச் செய்தது.

உண்மையான புத்தி யுடையவர்களுள் சிறந்த பெருமாள் ஜாபாலி யுரைசெய்த வாக்கியத்தைக் கேட்டுச் சினமுற்று, வைதிக தருமங்களி லுள்ள சிரத்தையினாலும், இயல்பாகவே கெடுதியுறாது நிலைத்திருக்கின்ற தன் புத்தியினாலும், அவரை நோக்கிக் கேளீர் ஜாபாலி மஹாமுனிவரே! தேவர் எனக்குப் பிரியஞ் செய்வதன் பொருட் டுரைசெய்த வாக்கியம் செயற்குரிய தாகாதாயினும், செய்தற் குரியதுபோலவும்; இதமளிப்ப தாகாதாயினும், இதமளிப்பதுபோலவும் காணப்படுகின்றது; மரியாதை தப்பிப் பாவச்செயல் புரிந்து நல்லொழுக்கத்தைக் கெடுத்த மானிடன் பெரியோர்களிடத்தில் மரியாதை பெற்றுப் புகழ்ச்சியுறுன்;—

కులీనమకులీనం వా వీరం పురుషమానినం
చారిత్రమేవ వ్యాఖ్యాతి శుచిం వా యది వాశుచిం ||

*குலீநமகுலீநம்வா வீரம்புருஷமாநிநம்*
*சாரித்ரமேவவ்யாக்யாதி சுசிம்வாயதிவாசுசிம்.*

உயர் குலத்தோனாயினும், இழி குலத்தோனாயினும், வீர முடையோனும், தீர முடையோனும் ஆயினும், தூய்மை யுடையோனாயினும், தூய்மை யற்றவனாயினும், ஒருவனை தன்னை நன்னடக்கையே புகழுற்று விளங்கச் செய்யும், தீயொழுக்கமோவெனின், இகழவும்றழியச்செய்யும்; யானோ நல்லோர் போன்றவனாகியும், தீயோனாகவும்; தூய்மையர் போன்றவனாகியும், தூய்மையற்றவனாகவும், நல்லோர்களது குறியுடையோன் போன்றவனாகியும், தீக்குறி யுடையோனாகவும், நல்லொழுக்கமுற்றோனை போன்றவனாகியும், தீயொழுக்க முடையோனாகவும், கெட்டழியும்படியாக உலகினெல்லோரும் நிலை தப்பிக் கெடுவதற் கிடமாகியதும்; நற்செயல்களைத் துறந்ததும், நல்விதியைக் கடந்ததுமாகிய உம்மா லுரைசெய்யப்பட்ட இந்த தருமமல்லாச் செயலை தருமச் செயலெனவே கொண்டு நன்மையைத் துறந்து செய்வேனாகில், இவ்வண்ணம் தீச்செயல் புரிந்து உலகங்களைக் கெடுத்த என்னை யறிவுடைய எவன்தான் நன்கு மதிப்பான்? யான் பிரதிஜ்ஞையையுந் துறந்து நும்மா லுரை செய்யப்பட்ட தீச்செயலை யாது பயனைத் தருவதாக நினைத்துச் செய்வேன், யான் நற்கதி எவ்வாறு பெறுவேன்;—

కామవృత్తస్త్వయం లోకః కృత్స్నస్సముపవర్తతే
యద్వృత్తాస్సన్తి రాజానః తద్వృత్తాస్సన్తి హి ప్రజాః ||

*காமவ்ருத்தஸ்த்வயம்லோக: க்ருத்ஸ்நஸ்ஸமுபவர்த்ததே*
*யத்வ்ருத்தாஸ்ஸந்திராஜாந: தத்வ்ருத்தாஸ்ஸந்திஹிப்ரஜா:.*

ராஜர்கள் எவ்வண்ண மிருக்கின்றனர்களோ? பிரஜைகளும் அவ்வண்ணமே யிருப்பார்களாதலின், யான் நீருரைத்தவண்ணம் செய்யின், ஜனங்களெல்லோரும் நிலைகடந்து தத்தம் இச்சையின்படி செய்வார்களன்றோ? ஆதலின், வேந்தர்களுக்கு ஸத்தியமும், கொடுமையின்மையும் முதன்மையாகிய தருமம், ராஜ்ஜிய மென்பதே ஸத்திய முடையது, இவ்வுலகங்களும் ஸத்தியத்திலேதானே நிலைத்திருக்கின்றன; ரிஷிகளும், தேவர்களும், ஸத்தியத்தையே யன்றோ? முதன்மையாக வெண்ணி யிருக்கின்றனர்கள்; ஸத்தியவாதியாகியவனே நற்கதி பெறுகின்றனன்; எல்லோரும் பொய்யுரைப்பவனைக் காணின், நச்சரவத்தைக் கண்ணுற்றாற்போல அச்சமுற்று

நடுங்குகின்றனர்க ளல்லரோ ? ஸத்தியமே சிறந்த தருமம் ; அதுவே நற கதிக்குக் காரண மாகக் கூறப் படுகின்றது , உலகினில் ஸத்தியமே ராஜ னும், தெய்வமுமாகும் , செல்வமும், ஸத்தியத்திலேதானே நிலைகொண டிருக்கும் , ஆதலின், யாவும் ஸத்தியத்தையே காரணமாகவுள்ளன , ஸத்தியத்தை விட்டு வேறு சிறந்த தொன்று மிலது , தானம், யாகம், ஹோமம், தவங்கள், வேதங்கள் இவையெல்லாம் ஸத்தியத்திலேயே நிலைத் திருக்கின்றன ; ஆதலின், யாவரும ஸத்தியந்தவறா திருக்கக் கடவர்கள். ஒருவன் உலகினை யாளுகின்றான் ; மற்றொருவன் குலத்தைப் பாதுகாக் கின்றனன் ; ஒருவன் நரகில் அழுந்திக் கிடக்கின்றனன் , ஒருவன் வானேறி மகிழுகின்றனன் ; இவைகளுக் கெல்லாங் காரணம் அவரவர்களது முன் வினைகளே யல்லவோ ? ஆதலின், யான பிதருவாக்கிய பரிபாலனமென்னும சிறந்த தருமத்தை ஏன செய்யா தழிவேன ; பொருளாசையாலாயினும, மதிமயக்கத்தினாலாயினும, மதியின்மையாலாயினும, யான ஸத்தியத்தின் மரியாதையைத் தவிர்ந்து செல்லேன் , ஸத்தியந் தவிர்ந்தும, மதிநிலை கொள்ளாமலு மிருப்பவனுக்குத் தேவர்களும, பிதிரர்களும அருள் செய்ய மாட்டரென்று கேட்டிருக்கின்றேன் ; இந்தப் பிதருவாக்கிய பரிபாலனத் ரூபமான தருமம எல்லா வுயிர்களையும் குறித்தது விதிக்கப்பட்டதென யானுணர்ந்தே யதனை யாசரிக்கின்றேன் , அறபர்களாலும், கொடியர்க ளாலும, மூவகைப் பற்றுடையோர்களாலும, நனகுமதிக்கப்பட்ட க்ஷத்திர தருமத்தை யானிப்போழது துறக்கின்றேன ; அஃது தருமம்போலத் தோறறுமே யன்றி, ஆராயுங்கால் அதருமமேயாகும ,—

కాయేనకురుతేపాపం మనసాసంప్రధార్యచ
అనృతంజిహ్వయాచాహ త్రివిధంకర్మపాతకం ||

காயேநகுருதேபாபம மனஸாஸமபரதாரயச
அந்ருதமஜிஹவயாசாஹ த்ரிவிதமகாமபாதகம.

மனதில் கெடுதியைச் செய்ய நினைப்பதும, காயத்தினால் அதனைச செய்தலும், வாயினால் பொய்யுரைப்பதுமாகிய இமமூன்றும மூவகைப பாதகங்களெனப் படுகின்றன , பூமி கொடையாளனென்னும் புகழ், சூர னென்னும புகழச்சி நிறைந்த செல்வம, இவையே ஸத்தியமுள்ள புருஷ னைக் கோருகின்றன ; அவனை யடைந்து வானுலகினை யடையவனையுந் தொடர்கின்றன , ஆதலின, யாவரும் ஸத்தியத்தையே மேற்கொள்ளக் கடவரல்லது, அதனை துறக்கக் கடவரல்லர் ; தேவர் இதுவே சிறந்ததென வுணர்ந்து அடியேனுக்கு எதனைச் செய்யும்படி கேவல யுக்திவாதஞ் செய் தீரோ ? அஃது மிகவுந் தாழ்ந்ததாகுமல்லது, உயர்ந்ததாகாது; யான, தந்தையின் வாக்கியத்தையே பரிபாலனஞ் செய்வேனென்று பிரதிஜ்ஞை செய்து விட்டு இப்போது அதனைத் துறந்து பரதனுடைய வாக்கியத்தின

படி எவ்வண்ணம் செய்வேன், முன்பு யான் பிரதிஜ்ஞை செய்ததைக்
கேட்டுக் கைகேயியாரும் மிக மனமகிழ்வுற்றிருந்தனர். ஆதலின், யான் அவ்
வண்ணமே வனவாஸஞ்செய்து கந்தமூல பல புஷ்பங்களினால், தேவர்
களுக்கும், பிதிரர்களுக்கும், திருப்திசெய்வித்து மகிழ்ந்து கபடற்று விசு
வாஸமும் ச்ரத்தையுடன் விஹித கருமங்களைச்செய்து காலத்தைக்கழிப்
பேன். இந்தக் கர்மபூமியில் எவனெவன் எந்தெந்தக் கருமத்தைச்செய்கின்
றானோ? அந்தந்தக் கருமங்களுக்குத்தக்க பலன்களே வாய்க்கும். அக்கினி,
வாயு, சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன், அரன் முதலிய எல்லோரும்
தத்தஞ் செயல்களுக்குத் தக்க பலன்களாகவே தத்தமதிகாரங்களைப்
பெற்றனர்கள். நூறுயாகஞ் செய்தவனே தேவேந்திரனாயினன். சிறந்த
தவங்களை செய்தே மஹாரிஷிகள் விண்ணுலகை நண்ணினார்கள். ஆதலின்,
சார்வாக வாதம் ஒருகாலும் நிலையுறாதென்று ஸமாதான மருளிச் செய்கை
யிலும், ஜாபாலி மறுத்துரைசெய்தமையின், மீளவும் கடுஞ்சினங்கொண்டு
அவரை நோக்கிக் கேளீர் ஜாபாலி! ஸத்தியம், தருமம், பராக்ரமம்,
உயிர்களிடத்திலருள், இனியமொழி மொழிதல் என்னு மிவைகளையும்,
தேவ ப்ராஹ்மணதிதி பூஜைகளையும், விண்ணுலகஞ் செல்லும் வழி
யென்ப பெரியோர்கள் நினைக்கின்றனர்கள். ஆதலின், வேதியர்களெல்லோ
ரும் இவ்விஷயத்தில் மதபேதமின்றி யொன்று சேர்ந்து ஸத்கதி பெறுவிக்
கத்தக்க இத்தருமத்தைச் செய்கின்றனர்கள். யான் என் தந்தையார் செய்த
செயல்களுள் ஒரு செயலினையே யிகழுகின்றேன்; கெடுமதிகொண்டு ஆஸ்
திகர்போலிருந்து நாஸ்திகவாதஞ்செய்து உலகினை யழிக்கின்ற உம்மையும்
ஆஸ்திகர்களுள் சேர்த்து என் தந்தையார் ஆதரஞ்செய்து வைத்துக்கொண்
டிருந்தன ரல்லரோ?—

యథాహి చోరస్స తథాహి బుద్ధః తథాగతం నాస్తికమత్ర విద్ధి
తస్మాద్ధి యశ్శంక్యతమః ప్రజానాం న నాస్తికేనాభిముఖో బుధస్స్యాత్ ||

யதாஹி சோரஸ்ஸ ததாஹி புத்த: ததாகதம் நாஸ்திகமத்ர வித்தி
தஸ்மாத்தி யச்சங்க்யதம: ப்ரஜாநாம் ந நாஸ்திகேநாபிமுகோ புதஸ்ஸ்யாத்.

புத்தர் சார்வாகர்களிருவரையும் கள்ளர்களெனவே யுணர்க. பிரஜை
களுக்குச் சோரர்களிடத்தினின்றும் போலவே இவர்களிடத்தினின்றும்
அச்சமுண்டாகின்றது; ஆதலின், உணர்ந்தவன் அவர்கள் முகத்தில் விழி
யான்; உம்மைவிட ஜ்ஞானத்திலும், வயதிலும், வித்தையிலும், புத்தி
யிலும், சிறந்தவர்களெல்லோரும் ஆஸ்திக கருமங்களையே செய்து இம்மை
மறுமை இரண்டினையும் பெற்றுச் சோதியுருக்கொண்டு திகழுகின்றனர்க
ளல்லரோ? ஆதலின், வேதியர்கள் யஜ்ஞயாக ஜபதப தான தர்மாதிகளைச்
செய்கின்றனர்கள். தயா, ஸத்தியம், தமம், தவம் முதலிய சிறந்த குணங்

களா லல்லவோ ? வேதியர்கள் முனிவர்களெனப் புகழ்ப் படுகின்றனர்கள். என்றிவ்வண்ணமாகப் படபடவென் றருளிச்செய் தருளினர்

ஜாபாலி யதுகேட்டுப் பெருமானை நோக்கிக் கேளீர் ரகுகுல சுந்தரரே ! யான் நாஸ்திகவாதஞ் செய்பவனு மல்லேன் ; நாஸ்திகனு மல்லேன் ; பரலோகாதிகளொன்றும் இல்லையென்பது மில்லை ; யாவு முள்ளனவே ? யான் காலத்திறகுத் தக்கபடி யாஸ்திகனும், நாஸ்திகனுமாகுவேன் ; இப்பொழுது நாஸ்திகவாதஞ் செய்யத்தக்க காலமாதலின், நாஸ்திகனாயினேன் ; நாஸ்திகவாதஞ் செய்தாயினும், உமக்குத் திருவயோத்திக் கெழுந்தருள வேண்டுமென்னும் புத்தியை யுண்டுபண்ணி ஸமாதானப் படுத்தித் திருப்பி உம்மை யழைத்துக் கொண்டு போவதன் பொருட்டே இவ்வண்ண முரைசெய்தேனே யன்றி, வேறே கருத் தொன்று மிலது ; நீர் மதிமயங்காமல் ஒரே பிடியாக யிருக்கின்றமையின், இப்போது ஆஸ்திகனே யாயினேன் ; நீர் சீற்ற முறற்க என்று இனியமொழி மொழிந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

---

தெய்வம், பாவம், புண்ணியம், சுவர்க்கம், நரகம் என்னும் இவைகளுள் ஒன்று மிலது ;—க. கல்லினையும், உலோகத்தையும், தெய்வமெனத் தொழுவது பயனற்றது ;—உ. இறந்தவர்கள் லோகாந்தரங்களிலிருந்து இங்குச்செய்யும் தருப்பணாதிகளினால் திருப்தியடைகின்றனர்க ளென்பது மடமை ;—ந. யாவரும் கடவுளினாலியற்றப்பட் டிருக்கையில், யாவரினும் வேதியர்க ளுயர்ந்தோர்க ளென்பது தகுதியற்றது ;—ச. என்று யுக்திவாதஞ் செய்யும் நாஸ்திகர்கள் முக்கியமாக நம்மைக் கேட்கும் கேள்விகள் இந்நான்கே ? இதற்கு விடை என்னெனில், தெய்வமிலதெனில், படைப்பவரில்லாமையின், இவ்வுலகே இல்லாதிருக்கவேண்டி வரும் ; யாமே படைப்பவர்களெனில், கடல் மலை முதலியன செய்யவும், மழை பொழிவிக்கவும், யாம் வல்லோமா ? யாமே கடவுளர்களாயின், யாமெண்ணும் எண்ணங்கள் ஏன் நிறைவேறு கின்றில ; மரம் மலை முதலிய வளருந் தன்மை யுடையன ; மனிதர் பிறந்து வளருந் தன்மையர் ; நீர் பெருகுந் தன்மையது, நெருப்புச்சுடுந் தன்மையதென இவ்வண்ணம் தன்மையே கடவுளெனக் கூறுவோமெனில், ஒன்றுக்கு ஒரேதன்மை யியல்பாகுமல்லது, இரண்டு மூன்று தன்மைகளில ; ஆதலின், வளருந் தன்மையுடையது, வளரா தொழிவதற்கும், பிறக்குந் தன்மையுடைய திறப்பதற்கும், பிரமாணம் யாதனை ; ஒரேகாலத்தில் பிறந்த பலர் வெவ்வேறு காலங்களில் அழிவதேன் ; ஆதலின், தெய்வத்தையுளதென உடன்படுக. பாவ புண்ணியங்க ளிலவாயின், ஒருவர் தீவினையேறவும், மற்றொருவன் அவனைச் சுமக்கவும் காரணம் யாது ; ஆதலின், நல்வினை தீவினைகளையு முடன் படுக. இதனால் உயிர்கள் இதற்கு முன் பிறந்திலவென்னும் வாது மழிந்தது ; பரலோக மில்லையெனில், அவர்களைக் கொலைசெய்பவர்களை யரசர்களும் தண்டனை செய்யாது விட்டு விடுவார்கள். அப்பொழுது கொலை செய்யா

மைக்கே தண்டனையென்வும், கொலைக்கே வெகுமதியெனவும், சட்டம் பிறக்கவேண்டு மன்றோ? ஆட்டினைக் கொல்லல், மாட்டின் கொலைகள்போலாகாது; மானிடர்களது கொலைமாத்திரம் தண்டனைக்கிடமாக வேண்டுவதென; ஆதலின், பரலோக மூன்றெனவே கொள்க;—க. கல்லினையும், உலோகங்களையும், தெய்வமெனத் தொழுவது பயனற்றதன்றோவெனில், அவர்கள் தம்மையும் பணிந்துகொண்டிருந்தவர்களுக்குந் தமக்குமேற்பட்ட அதிகாரம் வாய்க்குங்கால் அவர்களைத் தாமே ஏன் பணிந்து நிற்ப் படிந்து நிறகின்றார்களந்தோ? ராஜன் ஆஜ்ஞையினால் அவ்வண்ணம் செய்கின்றோமெனில், ஆ! ஆ! பாமரனாகிய ஒருவன் ஆஜ்ஞையினாலேயே தாழ்ந்தவனையும் பணியும்படி நேர்கின்றதாயின், ஸ்ரீபகவானுடைய கட்டளையின்படி மந்திரங்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பிரதிமைகளைத் தொழுவதொன்றுமோ? பயனற்றதாக வேண்டும்; ஆயினும், நடக்கவும், பேசவும் திறமையற்ற அதனைப் பூஜிப்பதினால் பகவானுக்கென்ன சந்தோஷமெனில், மூடர்களே! நீங்கள் உங்கள் படங்களையெழுதி உயரக்கட்டிச் சிங்காரித்து வைத்திருப்பவர்கள்மேல் ஏன் அன்பு செய்கிறீர்கள்; அந்தப் படத்தைக் காலினாலுதைத்துத் தைசத்தவர்கள்மேல் சினமுற்று திருப்பீர்களா? ஆதலின், பகவானே யதனுள் ஆவிர்ப்பாவஞ் செய்திருக்கையில், பிரதிமையை ஏன் பூஜைசெய்யாதொழியவேண்டும்; இறந்தவர்கள் தருப்பணாதிகளால் எவ்வண்ணம் மகிழ்வார்களெனில், கனம்பொருந்திய மஹாராணிகள் லண்டன் பட்டணத்திலிருக்கையிலும், அவர்க்கு இந்தியா சக்ரவர்த்தினியெனும் பட்டங் கட்டியது முதலாயுள்ள நாள்களில் புறங்களில் குண்டுகள் ஏன் போடப்பட்டன, இவ்வொலி யவள் காதில் புகுமோ? புகாதே, இந்தத் தினத்தில் நம கட்டளையின்படி யாவரும் செய்திருப்பார்களென்னும் எண்ணம் மாத்திரத்தினாலன்றோ? அவருக்கு மகிழ்வு; இதையுடன்பட்ட நீங்கள் பிதிர்கள் கடன்கள் செய்யும் நாள்களில் கட்புலனாகாமல் எதிரிக வந்து தம்பொருட்டளித்தவைகளை யனுபவித்துச் செல்வார்களெனக் கூறப்பட்ட விதியின்படி செய்யப்பட்ட வைதிக சடங்குகள் மாத்திரம் பயனற்றனவென ஏன் எண்ணுகின்றீர்கள், அது மடமையோ? யாம் செய்வது மடமையோ? ஆராய்ந்துணர்க. சாதிகளுள் உயர்வு தாழ்வு என்பது தகுதியற்றதன்றோ வெனில், அவ்யவங்களெல்லாம் ஒன்றாகத் தோன்றி யிருக்கையில், காலினும் கையேன் சிறப்புடையது, கைகளால் வருடமகிழ்கின்ற நீங்கள் காலைத் தலையின்மேலிட ஏன் கூசுகின்றீர்கள்; மற்றும் பற்பல திருஷ்டாந்தங்களுள் அவை கிரந்தங்களுள் அவை கிராமயதோஷத்திற் கிடமாகுமென மொழிந்திலேம், நீங்களே ஸுஹிதத்துடன் ஆராய்ந்து கெடுமதியைத் துறந்து நன்மதி பூண்டு தொல்லைவழிகோணு தொழுகி இன்புற்று மகிழ்க.

## நூற்றுப்பத்தாவது சருக்கம்.

### ஸ்ரீவஸிஷ்டபகவான் மனுவம்ஸத்தை யருளிச் செய்வது.

சக்கிரவர்த்தித் திருமகனார் ஜாபாலி யுரைத்த ஸமாதானத்தைக் கேட்டும் சினந்தணியாதிருக்கையில், ஸ்ரீவஸிஷ்டபகவானதுகண்டு பெருமானை நோக்கி, ஸ்ரீராமபத்திரா! இந்த ஜாபாலி மஹாரிஷியும் உலகங்களின் பிறப்பிறப்பு முதலிய தத்துவங்களை நன்குணர்கின்றனர்; உன்னைத் திருப்பு

வதன் பொருட்டே இவா இவ்வண்ண முரைத்தனரேயன்றி, வேறில்லை; இவ்வுலகின பிறப்பினை யுரைசெய்கின்றேன்; கேளாய் முன்பு பூமி எங்கியற்றப் பட்டதோ? அது முழுதும் ஜலமாகவே யாயிற்று; அந்த ஜலத்தினின்றும் பிரஹ்மா தேவர்களுடன் தோன்றினர்; அநந்தரம் பிரஹ்மாவினுல் துதிசெய்யப்பட்ட ஸ்ரீமந்நாராயணன வராஹாவதாரஞ் செய்தருளிப பூமியை நீரினின்றும மேலெடுத்தருளினா. அநந்தரம் ஸர்வ சப்த வாசசியரான ஸ்ரீமந்நாராயணருடைய நாபீ கமலத்திற் பிறந்தப் பிரஹ்மா தன் புத்திரர்களுடன் கூட உலகங்களை யியற்றினா அந்த வேதாவின் குமாரர் மரீசி, அவா குமாரா காசியபா, அவர் பிள்ளை விவஸ்வான், அவனுக்கு மனுவும், மனுவுக்கு இக்ஷ்வாகுவும பிறந்தனர்கள அந்த மனுவே முதலில் அந்தத் திருவயோத்தியை இயற்றி, இக்ஷ்வாகுவின பொருட்டளித்தனா. இக்ஷ்வாகுவுககு குக்ஷி, குக்ஷிககு விகுக்ஷி, விகுக்ஷிக்குப் பாணன், பாணனுக்கு அநரணயன், அநரணயருக்கு ப்ருது, ப்ருதுவுககு த்ரிசங்கு, த்ரிசங்குவுககு துந்துமாரன என்பவாகள பிறந்தனர்கள. துந்துமாரனே யுவனாஸ்வன, யுவனாஸ்வனுககு மாந்தாதா, மாந்தாதாவுக்கு ஸுஸந்தி என்பவர்கள பிறநதனாகள, ஸுஸந்திக்கு த்ருவஸந்தி, பரஸேனஜித்து எனறு மிருவர்கள தோன றினர்கள. த்ருவஸந்திக்குப் பரதன, பரதனுககு அஸிதன் என்பவாகளும் பிறந்தனாகள இந்த அஸிதனுக்கே ஹேஹயா, தாலஜங்கர், சூராகள, சசிபிந்துக்கள என்பவாகள பகைவராக ளாயினர்கள. இவன் தோலவியுற்றுக் காட்டில் வாழுகையில, இவனுடைய இரண்டு மனைவியாகளும் கருவுடைய ராயினாகள. இளையாள மூத்தாளுக்குப பொறாமையால் விஷமிட்டனாள. அநத இமயமலையின காட்டி லெழுந்தருளியிருந்த பார்க்கவசசியவன மஹாமுனியின் வரத்தினுல காளிந்தியென்னும் மூத்தாள் விஷத்துடன கூடினமையின், ஸகரர் எனனும் பிள்ளையைப் பெற்றனள். அந்த ஸகரரே யாகஞ் செயது இந்த ஸாகரத்தையுந் தோண்டுவித்தனர். அவாக்கு அசமஞ்சன், அசமஞ்சனுக்கு அம்சுமான், அம்சுமானுக்குத் திலீபன, திலீபனுக்குப் பகீரதன, பகீரதனுககுக ககுத்தன, ககுததனுக்கு ரகு, ரகுவினுக்குப் புருஷாதகன, கல்மாஷபாதன், பிரவருததன் என்னும் பெயர்களை யுடைய ஸௌதாஸன், ஸௌதாஸனுக்கு ஶங்கணன, ஶங்கணனுககு ஸுதர்சனன, ஸுதர்சனனுக்கு அக்கினி வர்ணன், அககினிவர்ணனுககுச சீகரகன, சீக்ரகனுக்கு மரு, மருவினுககுப் பிரசுஶ்ருகன, ப்ரசுஶ்ருகனுககு அமபரீஷன், அம்பரீஷனுககு நஹுஷன், நஹுஷனுக்கு நாபாகன் எனபவர்களும பிறநதனர்கள. நாபாகனுக்குஅஜன், ஸுவ்ரதன் என்னும் இருவர் பிறந்தனர்கள. அஜமஹாராஜனுக்கு உன் தந்தை தசரதசக்கரவர்த்தி பிறந்தனர். அடா ராமசந்தரா! அந்தத் தசரதருக்கு நீ மூத்த திருக்குமாரனுகின்றனை; ஆதலின், உனக்கே யுரிய இந்த ராஜ்யத்தை யங்கீகரித்துப் பிரஜைகளைப் பரிபாலனஞ் செய்க; இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர்களுள் மூத்தோனே யரசனுகுவது முறையன்றே? ஆதலின்,

ராகவர்களுக்குக் குலதாமமாயுள்ள இந்த ராஜ்யத்தைத் துறந்து செல்லற்க; தந்தைபோலவே இவ்வுலகினை யாண்டு புகழ்பெற்று மகிழ்ந்து வாழ்கவென றருளிச் செய்தனர்

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பத்தாவது சருக்கம்

முற்றிற்று

## நூற்றுப்பதினொன்றாவது சருக்கம்

பெருமாள் தன்னைத் திரும்பும்படி வேண்டிய எல்லோர்க்கும் வாரேனென்ற ஒரே முடிவு அருளிச் செய்தது.

ஸ்ரீவஸிஷ்டபகவான் அப்பொழுதும் மீளமனமின்றி, ஓரே பிடியா யிருந்த பெருமாளை நோக்கி, அடா சக்ரவர்த்தி திருக்குமாரா!—

పురుషస్యహిజాతస్య భవన్తిగురవస్త్రయః
ఆచార్యశ్చైవకాకుత్స్థ పితామాతాచరాఘవ ||

புருஷஸ்யஹிஜாதஸ்ய பவந்திகுரவஸ்த்ரய:
ஆசார்யஸ்சைவகாகுத்ஸ்த பிதாமாதாச ராகவ

புருஷர்களுக்கு ஆசிரியன் தாய் தந்தை என்னும் மூவர்களும் குரு வாகின்றனர்கள், தாய் தந்தைகள் பெறுகின்றனர்கள், ஆசிரியன் ஞானத்தை யளித்துப் துயவிக்கின்றனன், ஆதலின், இம்மூவரும் குருவென்னப் படுகின்றனர்கள், யான் உனக்கும் உன் தந்தைக்கும் ஆசிரியனாகின்றேன்; ஆதலின், நீ என் வாக்கியத்தின்படி செய்வாயாகில், நல்லொழுக்கத்தைத் துறந்தவனாகாய், அன்றியும், உனக்குக் குருவும், மூப்பினனும், தருமமுடையளுமாகிய மாதாவின் சொல்லைத் தவிர்வதும் நலமன்று, இந்தப் பிரஜைகளைப்பாதுகாத்தளிக்கின்றமையின், தொல்வழியைக்கடந்தவனாகாய்; பரதனும் பாதம்பணிந்து வேண்டுகின்றமையாலும், அவன் வாக்கியத்தைத் தவறற்க என்றருளிச் செய்தனர். பெருமாளும் தம் மாசிரியர் வாக்கியத்தைக் கேட்டும் நிலை குலையாமல் அவரை நோக்கி, பகவானே!—

యన్మాతాపితరౌవృత్తం తనయేకురుతస్సదా
నసుప్రతికరంతత్తు మాత్రాపిత్రాచయత్కృతం ||

யன்மாதாபிதரௌவ்ருத்தம் தனயேகுருதஸ்ஸதா
நஸுப்ரதிகரந்தத்துமாத்ரா பித்ராசயத்க்ருதம்.

தாய் தந்தைகள் பிள்ளை பிறப்பதன் முன்னும், பிறந்தபின்னும் செய்யும் உபகாரங்களை மற்றொன்றினாலும் தீர்க்கத்தக்கவரோ? அத்தன்மைய ராகிய தந்தை கட்டளையிட்டு அவர் முன்பாகவே யானும் செய்வேனெனப் பிரதிஜ்ஞை செய்துகொடுத்த பின்னர், அது பொய்யாக்கத் தகுமோ? ஒருகாலும் பொய்க்கலாகாது; ஆதலின், இது விஷயத்தில் தேவரும் மறுத்தருளுவது தகுதியற்றதென்று கைகுவித்து விநயமாக விண்ணப்பஞ்செய்தருளினர். ஸ்ரீபரதாழ்வானு மிவ்வண்ண மருளிச்செய்த பெருமாள் வாக்கியத்தைக் கேட்டு மிகவும் மனக்கவலைபூண்டு அருகிலுள்ள சுமந்திரனை நோக்கி, சூதரே! நீர் விரைவாக இவ்விடத்திலேயே தர்ப்புற்களைக் கொணர்ந்து பரப்புக; யானிங்கே பிராயோபவேசஞ்செய்து எம்மையர் அருள்செய்யுமளவும் படுத்திருப்பேன்; இந்தச் சாலையின் வாயிலில் கடன் கொடுத்தவன்போலப் படுத்து உணவு நீங்கிக் கிடப்பேனல்லது, என்னை யருள்செய்யுமளவு மெழேன் என்றுரைசெய்தும், சுமந்திரர் பெருமாள் திருமுக மண்டலத்தை நோக்கிக் கொண்டு அவர் திருவுளத்தை யறிய வேண்டு மென்று எதிர்பார்த்து நின்றமையின், தாமே புற்களைப் பரப்பிக் கொண்டு தரையில் படுத்தனர். அது கண்டு பெருமாள் அவரை நோக்கி, அடா குழந்தாய் பரதா! யானென்ன அபகாரஞ் செய்தேனென்று என்னெதிரில் பிராயோபவேசஞ் செய்கின்றனை,—

బ్రాహ్మణో హ్యేకపార్శ్వేన నరాన్ రోద్ధుమిహార్హతి
నతుమూర్ధాభిషిక్తానాం విధిః ప్రత్యుపవేశనే ॥

பராஹ்மணோஹ்யேகபார்ஶ்வேந நராந்ரோத்துமிஹார்ஹதி
நதுமூர்தாபிஷிக்தாநாம் விதி:ப்ரத்யுபவேஶநே.

இவ்வண்ணம் ப்ராயோபவேசஞ்செய்து மனிதர்களைத் தடைசெய்வது அந்தணர்களுக்கே தகுமல்லது, பட்டாபிஷேகம் பூண்ட க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்தோர்களுக்குத் தகுமென விதிக்கப்படவில்லை; ஆதலின், இந்தக் கொடிய விரதத்தை விட்டெழுந்திராய; இங்கிருந்து விரைவாகத் திருவயோத்திக்கே போய்ச் சேராயென மருளிச் செய்தனர். ஸ்ரீபரதாழ்வான் இவ்வண்ணம் பெருமா ளுரைசெய்யக் கேட்டு எழுந் துட்கார்ந்தவராகியே எல்லோரையும் நோக்கி, நேசர்களே! ஏன் என்னையரை வேண்டித் திருப்பாமல் பார்த்திருக்கின்றீர்களென் றுரைசெய்கையில், அவர்களும் பெருமாளை நோக்கி, ஸ்வாமி! தேவரோ ஓரேபிடியாயிருக்கின்றீர்; பரதாழ்வானோ வருந்துகின்றனர்; யாங்கள் தேவரைத் திருப்ப வல்லமையுற்றவராகுவோமோ? யாங்கள் யாது செய்வோ மென்றனர்கள். பெருமா ளது கேட்டுப் பரதாழ்வானை நோக்கி, அடா பரதா! தருமமறிந்த இவர்களின் வாக்கியத்தைக் கேட்டுணர்ந்தனையா? யான் பித்ருவாக்கிய பரிபாலன மென்னும் தருமத்தை யொருபொழுதுந் துறவேன்; ஆதலின், நீ எழுந்து

காய் கைகளைச் சுத்தி செய்து கொள்க. இவ்வண்ணம் செய்யாயாகில், எல்லோருக்கும் ஆணையுண்டு, என்றருளிச் செய்தனர். உடனே பரதாழ்வா னெழுந்து துயமையராகி எல்லோரையும் நோக்கிக் கேளீர் அன்பர்களே! என்னையறியாத காட்டி லனுப்புமபடி யான தந்தையையும் கேட்டிலேன் ; கேட்கும்படி தாயக்கு முறைத்திலேன் ; வனம் செல்லும்படி என்னைய ருக்கும் உடன்பா டுரைத்திலேன், ஆதலின், என்பொருட்டு எனையர் வனவாஸஞ் செய்யத்தக்க தொன்று மிலது, ஆயினும், பித்ருவாக்கி யத்தை யவசியம் பரிபாலனம் செய்யவேண்டுமாயின், யானே பதினான்கு வருஷம் வனத்தி லுறைவேன், என்னையா திருவயோத்தி சேர்ந்து அபிஷேகங் கொள்ளக் கடவரென்று உரைசெய்து வேண்டினர். பெரு மாள் அதுகேட்டு மகிழ்ந்து எல்லோரையும் நோக்கிக் கேளீர் பிரகிருதி களே! என் தந்தை பிழைத்திருக்கையில், முதலில் அளித்த ராஜ்ஜியத்தை வாங்கிக்கொண்டு வனவாஸத்தை யதற்குக் கிரயமாகக் கொடுத்திருக் கின்றமையின், அதனை யானுங் கெடுப்பதாகாது, இரண்டு வரங்களையும் வாங்கிக்கொண்டு ராஜ்ஜியத்தைப் பரதனுக்கு விற்றிருக்கின்றமையின், பரதனும் அதனைத் துறப்பதாகாது, எனக்குத் தந்தையின் வாக்கியத் தைப் பரிபாலனஞ்செய்ய வல்லமை யிருக்கையி லதனைச் செய்யா தொழிவேனோ! கைகேயியாரும் என் சக்தியை யறிந்தே தருமென வனம் புகும்படி யுரைசெய்தனர், பிதாவும் நலமே செய்தனுப்பினர், பரதன் மிகப் பொறுமையுடையனென்பதையும், பெரியோர்களைப் பூஜிக்கும் தன்மையனென்பதையும் நனகறிவேன், இவ்வண்ணம் பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்வதினால் பரதனுக்கும் நன்மையே யுண்டாகும் ; யான் வனவாஸந் தீர்ந்த பின்பு, திருவயோத்திக்கு வந்து தார்மிகனாகிய பரத னுடன் கூடி யரசனாகி வாழ்வேன் ; கைகேயியார் என் பிதாவை வரங் கேட்டனர், அவரும் ஸத்தியவாதி யாதலின், அவ்வண்ணமே யாகுக வென்று வர மளித்தனர், யானும் அவ்வண்ணமே செய்வேனென்று பிரதிஜ்ஞை செய்தேன், ஆதலின், வனவாஸஞ் செய்து தந்தையைப் பொய்யராக்காமல் பாதுகாத்து மீளுவேனே யல்லது, இப்போது மீளேன் ; ஆதலின், எல்லீரும் திருவயோத்தி போய்ச்சேர்க என்று முடிவாக அருளிச் செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பதினொன்றாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றுப்பன்னிரண்டாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீபாதுகைகளைப் பெற்று மீண்டது.

இவ்வண்ணம் பெருமாளும் பரதாழ்வானும் கூடி யுரைத்த ஸல்லா பங்களை யங்கே கூடிய தேவகந்தர்வ மஹாரிஷி ராஜரிஷிகள் முதலானோர் கள் இவர்களுக்குக் கட்புலனாகாமலிருந்து கேட்டுணர்ந்து, வியப்படைந்து இவர்களைப் புகழ்ந்து, இந்த ஸ்ரீராம பரதர்களைப் பெற்ற தசரதசக்கர வர்த்தி யொருவரோ யல்லரோ? நலவினையினர்; இவர்களுடைய வாக்கி யங்களைக் கேட்கையில், எமக்கும் இவ்விருவர்மீதும் அன்புளதாயிற் றன்றோ? என்று மகிழ்ந்து, பெருமாள் ஒருவேளை மீண்டெய்தி விடுவ ராயின், ராவணாதி ராக்ஷஸ ஸம்ஹாரம் தடைபடுமே என்றாராய்ந்து, யாவர்க்கும் கட்புலனாகி ஸ்ரீபரதாழ்வானை நோக்கிக் கைகேயி குமார! நீ தந்தை நற்கதிபெற்று மகிழவேண்டுமென விரும்புவாயாகில், ஸ்ரீராம பிரானுடைய வாக்கியத்தின்படி செய்க; ஸ்ரீராமபிரான் தந்தையின் கட னைத் தீர்த்து மீளவேண்டுமென்றே யாங்களெல்லேமும் கருதுகின்றோம், உன் தந்தை கைகேயியின் கடனைத் தீர்த்தமையாலேதான் வானேறி மகி ழ்ந்தனர். ஆதலின், நீ மீண்டெய்துக, என்றுரைத்துவிட்டுத் தத்தமிடம் சேர்ந்தனர்கள். பெருமாள் அந்த வாக்கியத்தைக்கேட்டு மகிழ்ந்து அவர் களையும் புகழ்ந்து திகழ்ந்தனர். அந்த வாக்கியத்தை ஸ்ரீபரதாழ்வானுங் கேட்டுத் துன்புற்று மெய்ந் நடுங்கிக் கைகுவித்துப் பெருமாளை நோக்கி, எம்மையரே! ராஜநீதியையும், குலமுறைமையையும் நன்காராய்ந்து, யானும் என் மாதாவும் வேண்டுதலுக் கிரங்கி யருள்க; மிக நெடிய இந்த ராஜ்ஜியத்தைப் பாதுகாக்கச் சிறுவனாகிய யானொருவன் வல லேனோ? எல்லோரும் தேவரிடத்தில் ஆதரங்கொண் டிருக்கின்ற மையின், இவர்களை யான் எவ்வாறு மகிழ்விப்பேன்; உழுநர்கள் மழையினையே எதிர்பார்த்திருப்பதுபோல யாவரும் தேவரையே எதிர் பார்த் திருக்கின்றனர்கள். ஆதலின், இந்த ராஜ்ஜியத்தைத் தேவரே பாதுகாத்தருள்க; பாதுகாக்குந் திறமையும் தேவருக்கே உளது; என் றுரைத்துப் பெருமாள் திருவடித் தாமரை யிணையின்மேல் வீழ்ந்தழுத னர். பெருமாளும் அவரைத் தழுவி எடுத்து மடியி லுட்கார வைத்துக் கொண்டு அவரை நோக்கி, அடா குழந்தாய்! உனக்கு இயல்பாகவும் நற் புத்தியுளது; பல நூல்களைப் பயின்றமையாலும் புத்தி தோன்றுளது, ஆதலின், இப்பார் முழுதும் பாதுகாக்குந் திறமை யுனக்குமுளது, மிகக் கூரிய மதியுடைய மந்திரிகளுடனும் ஆராய்ந்து, ராஜகாரியங்களைச் செய்யக் கடவை,—

> లక్ష్మీశ్చంద్రాదపేయాద్వా హిమవాన్వా హిమంత్యజేత్
> సాగరోఽత్యయాద్వేలాం నప్రతిజ్ఞామహంపితుః॥

'லக்ஷ்மீஶ்சந்த்ராதபேயாத்வா ஹிமவான்வாஹிமம்த்யஜேத்
ஸாகரோப்யதியாதவேலாம் நப்ரதிஜ்ஞாமஹம்பிது:.

நிலவு திங்களை விட்டு நீங்கினும் நீங்கும், இமயமலையைப் பனி நீங்கினும் நீங்கும், அலைகடல் கரை கடந்து செல்லினும் செல்லும், யான் மாத்திரம் இட்ட பிரதிஜ்ஞையை யொருகாலுந் தவிரேன்; காமத்தினாலாயினும், பொருளாசையினாலாயினும், உன் பொருட்டுத் தாயார் செய்த இந்தக் காரியத்திற்காக நீ யவர்மேல் சினமுற்றிகழற்க; முன்போலவே கௌரவஞ் செய்யக் கடவை; என்றருளிச்செய்து தேற்றினர். ஸ்ரீபரதாழ்வான் அதுகேட்டு மனந்தேர்ந்து பெருமானை நோக்கி, எம்மையனே! தங்கத்தினால் சிங்காரிக்கப்பட்ட இந்தப் பாதுகைகளின்மேலேறியருளி இவைகளை யடியேனுக்க களித் தருளுக, இவைகளே அரசாகி யுலகாண்டு யோகக்ஷேமங்களைச் செய்யுமென்று ஸ்ரீவஸிஷ்டபகவானுடைய ஏவுதலின்படி வேண்டி யுரைத்தனர். பெருமானும் அப்படியே ஸ்ரீபாதுகைகளைத் திருவடிகளிற் சாத்தி யருளிப் பின் பிறங்கி யவ்விரண்டு பாதுகைகளையும் ஸ்ரீபரதாழ்வானுக்கு அனுக்கிரஹஞ் செய்தருளினர். ஸ்ரீபரதாழ்வானும் அந்த ஸ்ரீபாதுகைகளைப் பணிந்து பெற்றுக்கொண்டு பெருமானை நோக்கி, எம்மையனே! அடியேன் [illegible]னன்கு வருஷம் வரையில் திருவயோத்தியுள்ளே புகாமல் புறத்திலிருந்து ஜடாசீரதாரியாகி ராஜ்யபாரத்தை ஸ்ரீபாதுகைகளின்மீதேற்றித் தேவரீரையே எதிர் பார்த்துக் கொண்டிருப்பேன், பதினனகாவது வருஷத்தின் முடிவுத்தினத்தின் மீறுநாள் தேவரீரைக் காணேனாகில், யான் உடனே தீயில் வீழ்ந்திறப்பேனென் றுரைசெய்தனர். பெருமானும் அவ்வண்ணமே யாகுகவென்று பிரதிஜ்ஞைசெய்தருளி அவரைத் தழுவிச் சத்துருக்கனாழ்வானையும் ஆலிங்கனஞ் செய்துகொண்டு, ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, அடா தம்பி! 'மாதா [illegible] கைகேயியாரிடத்தில் நீ சிறிதும் சினமுறற்க; என்மேலும் ஸீதைமேலும் ஆணையிட்டிருக்கின்றேன்; என்றருளிச் செய்து விடைகொடுத்தனுப்பி யருளினர். ஸ்ரீபரதாழ்வானும் விடைபெற்றுக்கொண்டு பெருமானைத் தண்டம் ஸமாப்பித்து வலம் வந்து அந்த ஸ்ரீபாதுகைகளைப் பட்டத்து யானையின்மே லெழுந்தருளப்பண்ணி மகிழ்ந்தனர். பெருமானும் அங்கே வந்த யாவருக்கும் தக்கவாறு மரியாதை செய்து விடைகொடுத்தனுப்பி மகிழ்வுகொண்டு திகழ்ந் தருளினர். அப்போழ்து தேவிகளெல்லோரும் துன்பத்தினால் விடை கேட்கவும் வாயெழாமல் நின்றனர்கள். பெருமானும் அவர்களை முறையே பணிந்து விடைகொடுத்தனுப்பித் தாமும் துன்பமடைந் தழுது கொண்டே பர்ணசாலையி னுட்புகுந்து மனந்தேர்ந்து மகிழ்ந்து வாழ்ந் தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப் பன்னிரண்டாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றும்பதின் மூன்றாவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் திருவயோத்திக் கெழுந்தருளியது.

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் அந்த ஸ்ரீபாதுகைகளைத் தம் சிரத்தின்மே லெழுந்தருளப் பண்ணிக்கொண்டு சத்துருக்கனாழ்வானுடன் திருத்தேர்மீதேறி, வசிஷ்ட வாமதேவ ஜாபாலி முதலிய யோகிகளையும், மந்திரிகளையும் முன்னிட்டுக்கொண்டு, ஸேனைகளுடன் அந்தத் திருச்சித்திரகூடத்தை வலமாக வந்து பற்பல விநோதங்களைப் பார்த்து மகிழ்ந்து கொண்டு வந்த வழியே சென்று ஸ்ரீபரத்துவாஜாச்ரமஞ் சேர்ந்து; தேரினின்று மிறங்கி, ஸ்ரீபரத்துவாஜமஹாமுனிவருக்குத் தண்டம் ஸமர்ப்பித்து நின்றனர். பரத்துவாஜமஹாமுனியும் ஸ்ரீபரதாழ்வானை நோக்கிச் சக்கரவர்த்தி திருக்குமாரா! நீ சென்ற காரிய மாயிற்றா? ஸ்ரீராமசந்திரனைக் கண்டு மகிழ்ந்தனையா? என்று வினவி யருளுகையில், ஸ்ரீபரதாழ்வானும் அவரை நோக்கி, ஸ்வாமி! எம்மையா னென்னாலும், எம்மாசிரியராலும் பலமுறை வேண்டப்பட்டவராயினும், பிதருவாக்கிய பரிபாலனஞ் செய்தல்லது, மீளேனென்று ஸ்ரீவஸிஷ்டபகவானை நோக்கி, முடிவருளிச் செய்தனர். ஸ்ரீவஸிஷ்டபகவா னதுகேட்டு எம்மையனை நோக்கி, ராமா! இந்த ஸ்ரீபாதுகைகளைப் பரதனுக் களித்தருளாய், இவையே திருவயோத்திக் கிறையாகுமென் றருளிச் செய்தனர். எம்மையரும் அது கேட்டுக் கிழக்கு முகமாக நின்று, ஸ்ரீபாதுகைகளின்மேலேறியருளிப் பின் பிறங்கி ராஜ்ஜியத்தின் பொருட்டு ஸ்ரீபாதுகைகளை அடியேனுக் களித்தருளினர். அடியேனும் அந்தப் பாதுகைகளைப் பெற்றுக்கொண்டு திரும்பித் திருவயோத்திக்கே செல்லுகின்றேனென்று விண்ணப்பஞ் செய்தனர். பரத்துவாஜமஹாயோகி! இந்த வசனத்தைச் செவிசாத்தி மகிழ்ந்து, பரதாழ்வானைநோக்கி, அடா மைந்தா! நற்குலத்திற் பிறந்து நல்லறிவுடைய உன்னிடத்தில் அகாதமாயுள்ள தடாகத்தில் நன்னீரிருப்பதுபோல நற்குணமிருப்பதும் வியப்போ? உன் தந்தை இப்போழ் திறந்திலர், அவர்க்கு இத்தன்மையனாகிய நீ ஸற்புத்திரனாக விருக்கின்றனை யன்றோ? என்று புகழ்ந் தருளினர். அநந்தரம் பரதாழ்வானும் ஸ்ரீபரத்துவாஜமாஹாமுனிவரைப் பணிந்து விடைபெற்றுப் பலமுறை வலம் வந்து புறப்பட்டு மந்திரிகளுடன் கூடித் திருவயோத்தியை நோக்கிச் சென்றனர். உடன் வந்த நாலவகைச் சேனைகளும் பற்பல வாஹனங்களின்மீதேறித் திருமியமுனையையும், கங்காநதியையும் தாண்டி யுடன் சேர்ந்தன; ஸ்ரீபரதாழ்வானும், சிருங்கிபேரபுரஞ் சேர்ந்து, குஹப்பெருமாளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, திருவயோத்தியைக் கிட்டி வருகையில், தந்தையினாலும், தம்மையராலும் நீங்கிப் பாழடைந்த அந்தத் திருவயோத்தியைக் கண்டு துன்புற்று ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! பாரீர் இந்நகரியை;

உருவம் மாறி, மகிழ்வு குன்றி, இளைமுற்றுத் தொனியொடுங்கிப் பாழ டைந்திருக்கின்றதே யன்றித் திகழ்கின்றிலது ; என்றுரைத்துக் கண்ணீர் ததும்ப வருந்திப் புலம்பினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப் பதின்மூன்றாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினான்காவது சருக்கம்.

### ஸ்ரீபரதாழ்வான் திருவயோத்தி பாழாகியதைக் கண்டு புலம்பியது

அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் கணகணவென்று மணிக ளொலிக்கின்ற திருத்தேரூர்ந்து, திருவயோத்திக்குள் புகுந்து, பூனை கோட்டான் முதலியவைகளால் நிறைந்ததும், அடங்கிய மனிதர்களை யுடையதும், இருள் மூடிய இரவு போன்றதும், தூமகேதுவினால் பிடிக்கப்பட்ட ரோகிணி போன்றதும், முதுவேனிற் பருவத்தில் அற்பநீரை யுடைய வெப்பங் கொண்ட தாமரையோடை போன்றதும், ஹவிஸ்ஸினால் அணைக்கப் பட்டு மேலெழும்பித் தரிக்கின்ற யாகாக்கினியின் சிகை போன்றதும், போரில் மடிந்த சேனைபோன்றதும், மேலெழுந்து மடிந்த கடலின் திரைபோன்ற தும், யாகம் முடிந்த பின்னர், யாகக்கருவிகளாலும், ஜனங்களாலும் பாழா யுள்ள யாகவேதி போன்றதும், இனத்துடன் சேரவிடாமல் நூதனமாகக் கொண்டு வந்து தொழுத்தி னிடையில் பிணைத்துக் கட்டப்பட்ட பசு போன்றதும், சிறந்த முத்துக்களும், மணிகளும் நீங்கிய முத்துவடம் போன்றதும், நல்வினை தீர்ந்து விண்ணினின்றும் நழுவி வீழ்ந்த விண் மீன்போன்றதும், முதுவேனிற்பருவத்தில் காட்டுத்தீயினால் பற்றி எரிக் கப்பட்ட பூங்கொடி போன்றதும், மேகங்களால் மறைக்கப்பட்ட ஆகாயம் போன்றதும், மழைகாலம் வருகையில் முறிக்கப்பட்ட தண்ணீர்ப்பந்தல் போன்றதும், இடிக்கப்பட்ட பூமி போன்றதும், அறுக்கப்பட்ட வில்லின் நாண் போன்றதும், யுத்தத்திற் சூரியதன்றென்று குதிரைப்பாகனால் நீக் கப்பட்ட அலங்காரத்தையுடைய குதிரைக்குட்டி போன்றதும், நீர்வற்றிய வாவி போன்றதும், மனக்கவலைபூண்டு சிங்கார மின்றி யழுக்கடைந்த சரீ ரம் போன்றதும், மழைகாலத்தில் மேகத்தினால் மறைக்கப்பட்ட சூரிய னுடைய காந்தி போன்றதுமாகி, ஒளியிழந்த திருவயோத்தியைக் கண் ணுற்று, சுமந்திரனை நோக்கி, ஸாரதியே ! இப்போது முன்போலக் கம் பீரமாகிய தொனியேன் எழுந் தொலித்திலது ; மத்தியகந்தமும், நறு மலர்களின் கந்தமும், பலவகைத் தூபங்களின் கந்தமும் கலந்து காற் றெங்கும் வீசுகின்றிலது; இப்பொழுது களிறுகளின் பிளிறல்களும், குதிரை

களின் கனைப்புகளும், ரதங்களி னொலிகளும், நரவீரர்களது சிங்க நாதங்களும் முனபோல ஒலிககின றிலவே? காமுகர்களும் துயரத்தினால் கற்சாந்த மப்பி, நறுமாலை சூடிக களிக்கின்றிலர்கள. திருவிழாககளும் நிகழகின்றில; நாரகளும விநோதமாகத் திரிகின்றிலர்கள்; மழை பொழிந் திருள்மூடிய சுக்லபக்ஷ ராத்திரிபோலத் திருவயோத்தி இப பொழுது திகழ்கின்றிலது; எம்மைய ரிங்குத் திருவிழாப்போலெப்பொ ழுது எழுந்தருளி மகிழவிப்பாரோ? இபபொழுது சிறந்த மனிதாகளால ராஜவீதிகள் திகழ்கினறிலவே? எனறிவ்வாறு பலவாறாக மொழிந்து கொணடே தந்தையின திருமாளிகை சேர்ந்து, அங்கு அவரினறி, வெய்யோனற்ற பகலபோலப் பாழடைந்த அத்திருமாளிகையைககண்டு கண்ணீர்பெருக்கி யழுது புலம்பினா.

அயோத்தியாகாண்டததில நூறறுப பதினொன்காவது சருக்கம் முற்றிறறு.

## நூற்றுப்பதினைந்தாவதுசருக்கம்.

### ஸ்ரீபரதாழவான் ஸ்ரீபாதுகைகளுக கபிஷேகஞ் செய்தருளியது.

அநந்தரம் ஸ்ரீபரதாழவான் தம மாதாக்களை யந்தபபுரததி லிறக்கி யஙகிருககுமபடி யவாகளுக் குறைதது விடடு, வஹிஷ்டபகவான் முதலா னோரை நோககி, யாசிரியர்களே! யான நந்தி கராம்மபோய வாஸஞ் செய்து கொண்டு இந்தத் துன்பத்தை யங்குப் பொறுபபேன்; என் தந் தையா வானேறினா; எமமையர் காடடைந்தனர்; ஆதலின், அங்கிருந் தே எம்மையரை எதிர்பாரத் திருபபேனென றுரைததனர். வஹிஷ்டபக வான் முதலானோரும் அதுகேட்டு ஸ்ரீபரதாழவானை நோககி, ராஜகுமாரா! நீ யுரைசெய்த வாக்கியம் மிகவும் புகழத்தக்கது; இவ்வண்ண முரைப பது உனககே தகும்; நீதி தவறாமல தருமமறிந்து நற்செய்கைகளைச செய்வேனெனில, அதறகெவன்தான் உடன்படானெனறு புகழ்ந்து மகி ழ்ந்து மொழிந்தனாகள். ஸ்ரீபரதாழவானும் அது கேட்டு ஸுமந்திரனைத் தேரைககடடும்படிகட்டளையிடடு ஆசிரியர்களையும், தாயமார்களையும்பணி ந்து, சததுருக்கனாழ்வானுடன் திருத்தேர்மேலேறி யாவருடனும் கிழககு முகமாக நந்தி க்ராமத்தை நோக்கிச சென்றனா; அபபொழுது நகரத தோர்களும, சேனைகளும் அழைககாமலே பின் சென்றனர்கள; ஸ்ரீபர தாழ்வானும், ஸ்ரீபாதுகைகளைச சிரததில் வைத்துக்கொண்டே நந்திக் கிராமம்போய்ச சேர்ந்து, தேரினின் றிழிந்து, ஆசிரியர்களை நோககி, யாசிரியர்களே! எம்மையர் இந்த ராஜ்ஜியத்தை நியாஸம்போ லளித்தரு

ளினர்; இந்த ஸ்ரீபாதுகைகளே இறையாகி, இதின் யோகக்ஷேமங்களைச் செய்யக் கடவன வென்றுரைத்து, அந்த ஸ்ரீபாதுகைகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு எல்லோரையும் நோக்கி, பிரஜைகளே! எம்மைய ருடைய இந்த ஸ்ரீபாதுகைகளே இப்போது அரசாகி யிருக்கின்றமையின், இவைகளுக்கே வெண்குடை பிடிக்க; இவையே எம்மையா திருவடிக ளெனப்படுகின்றன; இவைகளினால் எம்மையருடைய ராஜநீதி இங்குக் குறைவுறாதிருக்கும், அடியேனிடத்தில் வைத்த அருளினால் எம்மையா இவை களை வைப்பாக அளித்தருளி யிருக்கின்றனர், ஆதலின், எம்மையர் எழுந் தருளுமளவாயில், இவற்றைப் பாதுகாத்து, எழுந்தருளியபின், என்னை யரிடத்தில் ஸமர்ப்பித்து விட்டு, ஸ்ரீபாதுகைகளுடன் கூடிய எம்மைய ருடைய திருவடிகளைக் கண்டு, வைப்பை யவரிடத்தில் திருப்பி யளித்துப் பாரம் நீங்கி எம்மையருக்குக் குற்றேவல் செய்து மகிழ்வேன்; இந்த ராஜ்ஜியத்தையும், ஸ்ரீபாதுகைகளையும் எம்மையரிடத்தில் ஸமர்ப்பித்த பின், பாவநீங்கி பழிக்காளாகாமல் பிழைப்பேன்; எம்மையர் அபி ஷேகங் கொள்வராயின், பழிநீங்குமாதலின், ராஜ்ஜியத்தைப் பெறுவதை விட, நான்குமடங்கு அதிகமாக மகிழ்ச்சியையும், புகழினையும் பெறுவேன், என்றிவ்வண்ணம் மொழிந்து, ஜடாசீரதாரியாகி முனிவேஷம் பூண்டு, நந்தி க்ராமத்திலேதானே ராஜ்யபரிபாலனஞ்செய்து பெருமாள் எழுந்தருளு வதை எதிர்பார்த்துக்கொண்டே யிருந்தனர், —

పాదుకేత్వభిషిచ్యాథ నన్దిగ్రామేవసత్తదా
భరతశ్శాసనం సర్వం పాదుకాభ్యాంన్యవేదయత్ ॥

பாதுகேத்வபிஷிச்யாத நந்திக்ராமேவஸத்ததா
பரதச்சாஸநம்ஸர்வம் பாதுகாப்யாம்ந்யவேதயத்

ஸ்ரீராமபிரானுடைய ஸ்ரீபாதுகைகளுக்கு ஸ்ரீபரதாழ்வான் அநந்தரம் திருவபிஷேகஞ்செய்து, எல்லாக்காரியங்களையும் அவைகளுக்கு அறிவித்து, அவைகளுக்குக் கீழ்ப்படிந்து ராஜ்ஜியபாரத்தை நடாத்தி வந்தனர். அப்பொழுது அவர் யாது செயினும், சிறந்த உபாயனம்வரினும், எல்லாவற்றையும் முதலில் ஸ்ரீபாதுகைகளுக்கு அறிவித்தே பின்பு தக்கபடி செய்து வந்து பழிநீங்கிப் புகழ்பெற்று மகிழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப் பதினைந்தாவது சருக்கம்
முற்றிற்று.

---

ஸ்ரீபாதுகையென்பது கட்டையே யாதலின், அதற்கபிஷேகஞ் செய்வதும், அதனைப் பணிவதும் தகுமோவெனில், ஸ்ரீபாதுகைக்கும், அர்ச்சைக்குப்போலப் பிரதிஷ்டை யுள்ளதாதலின், அதிலும் அதற்கபிமானியாகிய நித்ய ஸூரிகளு ளொருவரது அனுப்ரவேச மிருப்பதால், குறையொன்று மிலதென வுணர்க.

## நூற்றுப்பதினொருவது சருக்கம்.

பெருமாளை ரிஷிகள் அந்த வனத்தைவிட்டெழுந்தருளும்படி யுரைத்தது.

அங்கே ஸ்ரீபரதாழ்வான் திரும்பிச் சென்றபின், பெருமாள் அங்குள்ள முனிவர்கள் அந்த இடத்தைவிட்டு வேறிடத்திற்குச் செல்ல விரும்பியதை யறிந்து, அதற்குக் காரணந் தெரியாமல் யோசித்துக் கொண்டிருக்கையில், அவர்களும் பெருமாளை யுற்றுப் பார்த்துப் பார்த்து ஒருவர்க்கொருவர் ஏகாந்தமாக வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தமையின், பெருமாள் மிகவும் ஐயமுற்று, அந்த ரிஷிகளுக்குள் முதல்வராகிய குலபதியை நோக்கிக் கைகுவித்து மாதவர் கோமானே! தேவர்கள் எங்களைக்கண்டபொழுது அச்சமுடையீராகக் காண்கின்றேன், அடியேனாயினும், என் தம்பியாயினும், என் பத்தினியாயினும், தேவர்களிடத்தில் ஏதேனும் அபராதப் பட்டிருக்கின்றனமோ? ஏதேனு முளதாயின், அருளிச் செய்தருள்க, என்று வினாவி வேண்டி யருளினர். மூப்பினராகிய அம்முனிவர் கோமானும் பெருமாளை நோக்கி, ஸ்ரீராமசந்திரா! மிகக் கற்புடையளாகிய ஜனக[illegible]ராஜன் திருமகளும் தீச்செயல் புரிவளோ? நீங்களும் எம் வி[illegible] வேறுமனங் கொள்வீர்களோ? ஆயினும், உன்னைப் பற்றி, ராக்ஷஸர்களிடத்தினின்றும் எங்கட்குப் பயம் தோன்றியுளது; ஆதலின், அரக்கர்களுக் கஞ்சியே இவர்கள் ஏகாந்தமாக ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ளுகின்றனர்கள். ராவணனுக்குத் தம்பியொருவன் கரனென்பவன் ஜனஸ்தானத்திலிருந்துகொண்டு அங்குள்ள தாபஸர்களெல்லோரையுங் கொலைசெய்து கொடியனாகி யிருக்கின்றனன், அவன் மிகத் தீரமுடையோனும், வெற்றி பெற்றவனும், கொடியனுமாகின்றனன்; அவன் நீ இவ்வண்ணம் தோள்வலிகொண்டிருப்பதைப் பொறுக்கின்றிலன்; அடா ஸ்ரீராமா! நீ இந்த ஆஶ்ரமத்திற் கெப்பொழுதெழுந்தருளினையோ? அது முதல் அரக்கர்கள் ரிஷிகளை மிகவும் வருத்துகின்றனர்கள்; பலவகைக் கொடிய உருவங்களைக் காட்டியும், தூய்மையுள்ள இடங்களில் அசுத்தி செய்தும், சிலரை யடித்தும் பீடிக்கின்றனர்கள்; ஆஶ்ரமங்கள் தோறும் கட்புலனாகாமல் அடங்கி யிருந்து அவர்கள் முனிவர்களைக் கொலை செய்கின்றனர்கள்; ஹோமபாத்திரங்களை எடுத்தெறிகின்றனர்கள்; யாகத்தீயை யணைக்கின்றனர்கள்; யாக கும்பங்களை யுடைக்கின்றனர்கள்; ஆதலின், இந்த தேசத்தை விட்டோடிப் போவோமென்று இவர்கள் என்னைத் தூண்டுகின்றனர்கள்; கொடியர்களாகிய அவர்கள் எம்மைக் கொலை செய்வார்களாதலின், யாங்களிந்த ஆஶ்ரமத்தை விட்டுச் செல்வோம்; இதற்கு நெடுந்தூரத்தில் காய் கனிக

ளுடைய சிறந்த வன மிருகங்கின்றது, அவ்விடத்திற்கே முன்போலப் போய்ச் சேர்வோம், ஆடா குழந்தாய்! அந்தக் கரனென்பவனும் உன் விஷயத்தில் தீங்குசெய்ய முயலுவான்; ஆதலின், உனக் கிஷ்டமிருக்கின் னெங்களுடனேதாய், நீ பாரியையுடனே கூடி யிருக்கின்றமையின், நீ திறமை யுள்ளவனாயினும், நீ இங்கிருப்பது துன்பத்தையே விளைக்குமென் றுரை செய்தருளினார். அவர் மிகவும் அச்சங்கொண் டிருந்தமையின், அவர்க்குத் தைரிய முரைத்து நிறுத்தப் பெருமாள் திருவுளங் கொண்டில ராதலின், அம்முனிவர் பெருமானைப் புகழ்ந்து விடை பெற்றுக்கொண்டு ரிஷிகளுடன் புறப்பட்டுச்சென்றருளினார். சக்கரவர்த்தித்திருமகனும் அந்த ரிஷிகணங் களைப் பணிந்து வழிவிட்டனுப்பி யவர்களால் இதமுரைக்கப்பட்டவராகித் தம் மாசிரமம் வந்து சேர்ந்து அங்குள்ள ரிஷிகளிடத்திலுள்ள அருளினால் அவர்கள் சென்ற பின்னும், க்ஷணமுங்கூட அந்த ஆச்ரமத்தைவிட்டு எழுந் தருளிற்றிலர், அந்த ரிஷிகளும் பெருமாளுடைய சௌர்ய தைர்யாதி குணங்களுக்கு மெச்சிப் பெருமாளை விட்டுக் கணமும் பிரிந்திலாக ளல்லரோ?—

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப் பதினாறாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினேழாவது சருக்கம்

### பெருமாள் அத்திரிமஹாரிஷி ஆச்ரமத்திற்கு எழுந்தருளியது

அநந்தரம் பெருமாளும் இவ்விடத்தில் பரதன் தாயர்களோடு நாட்டார் நகரத்தாராக ளெல்லோரும் வந்து கண்டனராகளாதலின், இங்கு அவர்கள் நினைவே வருகின்றது; சேனைகளும் இங்கே இறங்கி யானை குதிரைகளின் புரீஷங்களினால் இவ்விடம் பிடிக்கப்பட்டுளது, ஆதலின், இனி இவ்விடத் தில் வாஸஞ்செய்வது தகுதியற்றதென்று ஆலோசனைசெய்து, ஸீதா லக்ஷ் மணர்களுடனே புறப்பட்டு அத்திரிமஹாமுனி ஆச்ரமஞ் சேர்ந்து அவரைப் பணிந்து நின்றனர். அத்திரிமஹாமுனியும் பெருமாளிடத்தில் பிள்ளையிடத்திற்போலவே ஆதரஞ்செய்து, மூவருக்குந் தாமே அதிதி பூஜைசெய்து மகிழ்வித்துத் தம் பத்தினியும், மூப்பினளுமாகிய அநஸூ

யையை யழைத்து, அடி நீ இந்த ஸீதாப்பிராட்டியாரை யழைத்துப் பூஜை செய்யென்று ஆஜ்ஞைசெய்து, பெருமானையும் நோக்கிக் கேளாய ஸ்ரீராமா! இவளுடைய மஹிமையை நீ யறிகின்றனையா? இவள் முன்பு பத்துவருஷம் மழையின்றி, உலகமெல்லா மெரிக்கபபட்டிருக்கையில், காய கனி கிழங்கு களையு மியற்றிக் கங்காநதியையும பெருகச் செய்தனள். இவள் பதினாயிரம் வருஷம் இடைவிடாது கொடிய தவ மியற்றினள்; சிறநத விரதோப வாஸாதிகளினால தவங்களுககுரிய இடையூறுகளும் இவளால் போக்கப பட்டன; தேவ காரியார்த்தமாக இவள் ஓரிரவைப் பத்துநாளாக வளாத் தனள். ஆதலின், இந்த அனஸூயை யுனக்கு மாதாவுக்கு நிகராகி யுள்ள வள; யாவராலும பணியப்பட்ட இவளிடத்தில் ஸீதைசென்று பூஜையைப் பெறறுக்கொள்ளக் கடவள. தன்னுடைய நற்செய்லினாலே தானே இவள் அநஸூயையென் றுலகினில் புகழபபடுகினறனளென் றரு ளிச செய்தனர். பெருமானும் அதற் குடனபட்டுப பிராட்டியை நோககி, அடி வைதேஹி! இம்மஹாமுனிவர் அருளிச செயத வாககியத்தைக கேட்டனையே? ஆதலின, நீ நலம பெறுவதன பொருட்டே இந்தத் தாபசி யிடஞ் சென்று பூஜை பெறறுககொளளென அருளிச் செய்தனர். ஸீதா பிராட்டியாரும் அவ்வாக்கியத்தைக கேட்டு மூப்பினால் காற்றினால் கதலி போல அசைகின்ற அந்த அநஸூயையைக கிட்டித் தன் பெயரை யுரைத் துக்கொணடே வந்தனஞ்செயது கைகுவித்துககொண்டு குசலம வினவி யருளினள. அநஸூயையும ஸீதாதேவியைக கணடு மகிழநது அவளை நோக்கி, அடி ஜனகமஹாராஜன் திருமகளே! நீ நலவினையினால கறபழிந திலை; பதிவிரதா தருமத்தையும் நன்குணாந்தனை, பந்துஜனங்களையும, மிகுந்த செல்வத்தையும் துறந்து, துனபுறுங்காலையில கணவனைத துறவா மல் கொடிய காட்டிலும உடன வந்தனை யல்லையோ?—

నగరస్థో వనస్థో వా పాపో వా యది వా శుభః
యాసాం స్త్రీణాం ప్రియో భర్తా తాసాం లోకా మహోదయాః ॥
దుశ్శీలః కామవృత్తో వా ధనైర్వా పరివర్జితః
స్త్రీణా మార్యస్వభావానాం పరమం దైవతం పతిః ॥

நகரஸ்த்தோவனஸ்ததோவா பாபோவாயதிவாசுபஃ
யாஸாம்ஸ்த்ரீணாம்ப்ரியோபர்த்தா தாஸாம்லோகாமஹோதயா:
துஶ்ஶீலஃகாமவ்ருததோவா தனைர்வாபரிவர்ஜிதஃ
ஸ்த்ரீணாமார்யஸ்வபாவானாம் பரமம்தைவதம்பதிஃ.

பர்த்தா காட்டி லுறையினும், வீட்டி லுறையினும், நல்லோனாயினும், தீயோனாயினும், செல்வ முடையோனாயினும், செல்வ மற்றவனாயினும், அவனே தமக்குச் சிறந்த தெய்வமென நம்பிப் பணிவிடைசெய்யுங் கற்புடைப் பெண்டிர்களுக்குச் சிறந்த நல்லுலகங்கள் வாய்க்கின்றன; யான் எவ்வாறா ராயினும், இம்மை மறுமை இரண்டிலும் இன்பமளிப்பவன் கணவனொருவனே யனறிப் பெண்களுக்கு அவனைவிடச் சிறந்தவரை யான் காணகின்றிலேன்; கற்பிழந்த பெண்களோவெனில், இதனை யறியாமல் தம்மிச்சையின்படி நடந்து கணவனுக்குக் கட்டளையிடுபவர்களாகி யழி கின்றனர்கள், அவர்கள் இகழ்வினையும், தருமத்தாழ்வினையும் அடைகின் றனர்கள், *உன்னைப் போன்றவர்களோவெனில், வானேறி மகிழ்கின்றனர் கள், ஆதலின், நீ இவ்வண்ணமே கனவிலும் கணவனைத் துறவாமல் தரு மத்தைப் பாதுகாத்து வருவாயாகில், புகழினையும், தருமத்தையும் பெற்று நெடுங்காலம் வாழ்வாயென்று அருளிச்செய்து ஸீதாபிராட்டியாரையும் புகழ்ந்து மகிழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பதினேழாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினெட்டாவது சருக்கம்.

ஸீதாபிராட்டியாருக்கும் அநஸூயைக்கும் ஸம்வாதம்.

அநந்தரம் அந்தப் பிராட்டியாரும் அநஸூயையார் இவ்வண்ணம் முறை செய்யப்பட்டவராகி, அவனை நோக்கி, மெதுவாக மொழியலுற்றனர். கேளீர் கற்புடையாராகிய அநஸூயாதேவி! நீர் இவ்வண்ணம் இதமுரைப்பதும் வியப்பாகுமோ? வியப்பாகாது; பெண்களுக்குப் பதியே குருவென்பதை யானு மறிவேன்; என் பர்த்தா தீச்செய லுற்றவ ராயினும், வேற்றுமை யின்றிப் பத்தியுடன் பணிவிடைசெய்யத் தக்கவரே? நற்குண முடையோ ரும், பூதத்தை யுற்றவரும், ஐம்புலன்களை வென்றவரும், அழியா வருள் பூண்டவரும், தரும மறிந்தவரும், தந்தைபோல இதஞ் செய்பவரும், தாய் போலப் பிரியம் செய்பவரும், தன்னைப் பெற்றதாயாகிய திருக்கோஸலையா ரிடத்திற்போலவே மற்ற தாய்களிடத்திலும் பணிவிடைசெய்து வணங்கு

ருவரும், சிறந்த ப்லமுடையவரும், நல்லொழுக்க முடையவருமாகிய என் பர்த்தாவினிடத்தில் யான் பத்திகொண்டு பணிவிடைசெய்யத் தவறு யாதுள்து ? யான் திருக்கல்யாணஞ் செய்துகொள்ளுங் காலையில், என மாதாவினு லுரைக்கப்பட்ட உபதேசத்தையும், காட்டிற்குப் புறப்படுங் காலையில், என் மாமியாரா லுரைசெய்யப்பட்ட உபதேசத்தையும், மறவாது இதயத்தில் திடமாக வைத்துக்கொண் டிருக்கின்றேன் ; இப்போழ்து உம முடைய வாக்கியத்தைக் கேட்டவுடன அந்த வாக்கியங்கள் புதியனபோ லாயின ; பெண்களுக்குப் பதியின் பணிவிடையைவிட வேறு தவமு முளதோ ? ஸாவித்திரிதேவியும், பதி ஸேவையினுலேயே வானேறினள், நீரும் அதனுலேயே சோதி யுருக்கொண்டு வானேறித் திகழுகின்றீர் ; விண மீன்களுள் சிறந்த ரோஹிணியும், பதியை விட்டுப பிரிந்திலள், இவவண்ணமே பெண்கள பலர் கற்பினுலே விண்ணுலகை நண்ணி மகிழுகின்ற னர்கள். ஆதலின், பெண்களுக்குப் பதியைவிட்டு வேறே தெய்வமுளதோ? இல்லை ; என்றிவவணண முரைசெய்த பிராட்டியாரது வாக்கியத்தை யநஸூயை கேட்டு மகிழ்ந்து பிராட்டியாரைத் தழுவி யுச்சிமோந்து அவரை நோக்கி, ஜனகராஜன திருமகளே ! யானுன்னிடத்தில மிகவு மக மகிழ்ந்து நெடுநாளாகி யியற்றப்பட்ட தவத்திறமையினு லுனக்குச சிங்கா ரஞ் செய்வேன் ; நீ யுரைசெய்த வாக்கியம் மிகத் தகுதியுற்றதும, இனியது மாகின்றது , உனமீது யான மிக மகிழந்தேன் ; யானுனக்கு வேண்டுவ தியாதோ ? அதனைச் செயவே னுரைசெய்க , என்று வினவுகையில, பிரா ட்டியார் அதுகேட்டு வியப்பும புன்சிரிப்பும் மதிப்பும் கொண்டு அவரை நோக்கி, அம்மா ! நீர் இவவண்ணம அன்புகூர்ந் துரைசெய்ததினுலேயே யான உம்மால் யாவும் செய்வித்துக்கொண்டவ ளாயினேனென்று இனிமை யாக மொழிந்தனர். அநஸூயையும அதுகேட்டு இருமடங்கு மகிழவு பெருகி யவரை நோக்கி, ஸீதாதேவி ! எனக் குனமேலுற்ற மகிழவினைப் பயன் படுவதாகவே செய்வேன் ; தேவர்களுக் குரிய சிறந்த மாலையையும், ஆடையாபரணங்களையும், குங்குமம், ஹரிசந்தனம் முதலியவும், காப்பூ ராதிகளையும் உனக களிப்பேன் ; இவை யாவும உன் னவயவங்களைத திகழ விக்கும் ; இவை யுனக்குத் தகுதியாயினவும, அழிவுறாதனவுமாகும் , இந்த அங்கராகத்தைப பூசிக்கொண்டு பெரிய பிராட்டியார் ஸ்ரீமஹாவிஷ்ணு வைப்போல நீ ஸ்ரீராமசந்திரரை விளங்கு விப்பாயென்று மொழிந் தளித் தருளினள். ஸீதாபிராட்டியாரும் அவைகளைப் பெற்று மகிழ்ந்து பணிந்து கைகுவித்து நின்றனர்.

அநஸூயையும் இவ்வண்ணம் தன்னைத் தொழுது நிற்கின்ற பிராட்டியினை நோக்கி, அடி கோஸலையார் மருமகளே! ஸ்வயம்வரத்தில் ஸ்ரீராமசந்திரன் உன்னைத் திருமணஞ் செய்துகொண்டனனென்னும் கதையினை யான் தொகுதியாகக் கேட்டிருக்கின்றேன்; அதனை நீ விரிவாக உரைசெய்க; அதனை நிகழ்ந்தவாறு கேட்டுணர யான் கோருகின்றேனென்று வினவினள். பிராட்டியாரும் அதுகேட்டு அவளை நோக்கிக் கேளீர் அநஸூயா தேவியாரே! மிதிலைக் கிறையும், ஜனகசக்கரவர்த்தியெனனும் புகழ் பெற்றவரும், தருமமுணர்ந்தவருமாகிய மஹாராஜா இப்பொழுது நீதி வழுவாமல் அரசாட்சி செய்துகொண்டிருக்கின்றனர்; அவர் யாகஞ் செய்வதன் பொருட்டுப் பூமியை யுழுகையில், யான் அப்பூமியைப் பிளந்து கொண்டு பிறந்தேன், அப்பொழுதவர் என்னைக்கண்டு வியப்படைந்து மக்கட்பேறற்றிருந்தமையின், என்னை எடுத்துப் பெண்ணென மொழிந்தனர். அப்பொழுது என் தந்தையை நோக்கி, ஜனகமஹாராஜரே! இப்பெண் உமக்கு மகளே யாகின்றனளென்னும் ஆகாசவாணி தோன்றிற்று, அவர் அதைக்கேட்டு மிக மகிழ்ந்து, தம் பட்டமஹிஷியிடத்தில் என்னை வளர்க்கும்படி யளித்தனர் அவளும் பெருமகிழ்வுகொண்டு மகளெனவே மதித்து வளர்த்து வந்தனள். பின்பு யான் திருமணத்திற்குரிய பருவமுற்றிருப்பதைக் கண்டு என்னைப்பற்றி மிகச் சிந்தையென்னும் கடலில் மூழ்கினர் என் தந்தையார் —

సదృశాచ్చాపకృష్టాచ్చ లోకే కన్యాపితా జనాత్
ప్రధర్షణామవాప్నోతి శక్రేణాపి సమో భువి ॥

ஸத்ருஶாச்சாபக்ருஷ்டாச்ச லோகேகந்யாபிதாஜநாத்
ப்ரதர்ஷணமவாப்நோதி ஶக்ரேணாபிஸமோபுவி.

இப்பூமியில் கன்னிகைக்குத் தந்தையாயினன், இந்திரனுக்கு நிகரானவனாயினும், உயர்ந்தோர் தாழ்ந்தோர் நிகராயினோரென்னும் பிரிவின்றி எல்லாஜனங்களிடத்தினின்றும் இகழ்வினையுறுவானன்றோ? யான் அயோநிஜை யாதலின், எனக்குத் தக்கபதி யொருவனு மிரானென்று மிகச் சிந்தை தோன்றிற்று; இவ்வண்ணம் என் தந்தை சிந்தை செய்கையில், தான் செய்த மஹாயாகத்தில் வருணதேவனா லளிக்கப்பட்ட ருத்திர தனுவினை என் திருமணத்திற்கு ஸுல்கமாகச் செய்யவேண்டுமென்று தேர்ந்து அரசர்களெல்லோரையும் அழைப்பித்து அவர்களை நோக்கி, வேந்தர்களே! இந்த வில்லைக் கையிலேந்தி யாவனொருவன் நாணேற்றி வளைக்கின்ற

னன்றோ ? அவன் பொருட்டே என் மகளாகிய இந்த ஸீதை விவாஹஞ்செய தளிக்கப் படுவளென்று மொழிந்தனர். அந்த ராஜர்களும் அதுகேட்டு அந்த வில்லை எடுத்து வளைக்கும்படி முயன்றும் திறமையின்றிக் கைகுவித்துப் பணிந்துசென்றனர்கள். பின்பு நெடுநாளைக்குப்பின் விஸ்வாமித்ரமகாமுனி ஸ்ரீராம லக்ஷ்மணர்களை யழைத்துக்கொண்டு என் தந்தை செய்த யாகத்திற்காக எழுந்தருளினர். அப்பொழுதவர் அந்த வில்லை ஸ்ரீராமருக்குக் காட்டுமென்று என் தந்தைக்குரைத்தனர். அவ்வண்ணமே என் தந்தை யந்த வில்லைச் சபைநடுவி லழைப்பித்திடுகையில், ஸ்ரீராமபிரானும் அரைநொடியில் அதனை எடுத்து நாணேற்றி வளைக்கையில், அது நடுவிற்று இருதுண்டாக வீழ்ந்தது; அப்பொழுது வானம் முழங்கி இடி வீழ்ந்தாற்போலப் பேரொலி தோன்றிற்று, உடனே என் தந்தை என்னையவர் பொருட்டுத் திருமணஞ் செய்தளிக்க முயற்சி செய்கையில், பெருமாள் தம் தந்தையாரது திருவுளத்தை யறியாது என்னைத் திருமணஞ் செய்து கொள்ள விருப்புற்றிலர்; என் தந்தை அதையறிந்து உடனே தசரதசக்ரவர்த்தியாரையும் அழைப்பித்து அவருடைய உடன்பாட்டின்மேல் என்னை விவாகஞ் செய்தளிக்கையில், எனக்குத் தங்கையாகிய ஊர்மிளை என்பவளையும், இளையபெருமாளுக்கு விவாஹஞ் செய்து கொடுத்து மகிழ்ந்தனர். கேட்டீரோ அநஸூயாதேவியரே! யானிவ்வண்ணம் அந்த வீரஸ்வயம்வர காலத்தில் மிகச் சிறந்த தோள்வலியுற்ற ஸ்ரீராமசந்திரர் பொருட்டு யான் திருமணஞ் செய்தளிக்கப்பட்டு, அது முதல் இவரிடத்தில் பத்தியும் ஆசையுங் கொண்டு தருமவழிகோணாமல் பணிவிடை செய்து வருகின்றேனென்று இனிமையாக மொழிந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பதினெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## நூற்றுப்பத்தொன்பதாவது சருக்கம்.

பெருமாள் அத்திரிமஹாமுனி யாஸ்ரமத்தினின்றும் தண்டகாவன மேற வெழுந்தருளியது.

இவ்வண்ணம் பிராட்டியார் அருளிச்செய்த அந்தச் சிறந்த கதையை யநஸூயை கேட்டு மகிழ்ந்து பிராட்டியாரைத் தழுவி யுச்சிமோந்து புகழ்ந்து

அவளை நோக்கி, அடீ ஜனகராஜன் திருமகளே! நீ இந்தச் சுயம்வரக் கதையினை நிகழ்ந்தவாறு விஸ்தாரமாகக் கூறினை, இதனால் யானும் மிக மகிழ்ந்தேன்; வெய்யோன் மறைந் திரவை நிகழ்வித்தனன், பகலின் உண்வின் பொருட்டு அங்கங்குச் சென்று மாலைப்பொழுதில் உறங்குவதன் பொருட்டுக் கூடுகள்வந்தடைந்த பறவைகளின் ஒலி மிக வொலிக்கின்றது; இந்த முனிவர்களும் நீரிலாடிப் பூர்ணகலசங்களைக் கையிலேந்திக் கூடி வருகின்றனர்கள்; ரிஷிகளால் செய்யப்பட்ட அக்கினி ஹோத்திரங்களின் புகை மாடப்புறாவினுடல்போலச் சிவப்புற்றதாகிக் காற்றினால் மேலெழுகின்றது; இருள்மூடியிருக்கின்றமையின், இலை யுதிர்ந்த மரங்களும், இலைகளடர்ந்தனபோலத் தோற்றுகின்றன, ஆதலின், இவ்விடத்தில் திசைகளும் காணப்படுகின்றில; இரவில் திரிகின்ற ஜந்துக்களும் எங்கும் திரிகின்றன; தபோவனத்திலுள்ள இந்த மான்களும், வேதியின் ஓரங்களில் படுத்திருக்கின்றன; இந்த இரவு விண்மீன்களால் அலங்காரஞ் செய்யப்பட்டதாகி வளர்கின்றது; சந்திரனும், நிலவெனனும் வெண்பட்டுடுத்து வானிடைக் காணப்படுகின்றனன்; ஆதலின், யான் விடை கொடுக்கின்றேன், நீ சென்று ஸ்ரீராமபிரானுக்கு அநுசரணையாகுக; நீ யுரைத்த மதுரவாக்கியங்களினாலே யான் மிக மகிழ்ந்தேன், ஆதலின், யானளித்த ஆடையாபரணாதிகளை என்னெதிரிலேயே யணிந்துகொண்டு திகழ்க; என்று மொழிந்தனள். பிராட்டியாரும் அதுகேட்டு அவ்வண்ணமே சிங்காரித்துக்கொண்டு அநஸூயையைப் பணிந்து, விடை பெற்றுக்கொண்டு பெருமானை நோக்கி, யருகிற்சென்று நின்றனர். பெருமானும் பிராட்டி இவ்வண்ணம் சிங்காரங் கொண்டிருக்கக் கண்டு மகிழ்ந்து வினவுகையில், பிராட்டியார் நிகழ்ந்தவண்ண முரைத்தனர். மனிதர்கள் பெறற்கரிய அநஸூயையின் அந்தப் பூஜையைக் கண்டு இளையபெருமாளுடன் பெருமாள் மகிழ்வுகொண்டு அவ்விரவை யங்குப்போக்கி மறுநாளுதயத்திலெழுந்து நீரிலாடி ஹோமஞ் செய்து விளங்குகின்ற ரிஷிகளைக் கண்டு குசலம் வினவி யருளி விடை கேட்டனர். அந்த ரிஷிகளும் பெருமானை நோக்கிக் கேட்டருளீர் சக்கரவர்த்தித் திருமகனே! இவ்விடத்தில் ராக்ஷஸர்கள் அல்லும் பகலும் எங்குந் திரிந்து, அசுசியாயிருப்பவர்களையும், ஊக்கமற்றிருப்பவர்களையும் கொல்லுகின்றனர்கள்; பலவகை யுருவங்கொண்டு யாவரையும் வெருட்டுகின்றனர்கள்; குருதியை யுண்ணத்தக்க கொடிய விலங்குகளும் ப்ரவிசிக்கின்றன; இவைகள் எங்களைத் தின்ன வருத்துகின்றன; ஆதலின், ஸ்ரீராமசந்திரா! இவைகளைக் கொலைசெய்து எம்மைப் பாதுகாத் தளிக்கக்

கடவை. மஹாரிஷிகாள் காட்டில் கந்தமூலபலங்கள் கொண்டு வருவதன் பொருட்டுச் செல்லும் வழி இதோ காணப்படுகின்றதே! இந்த வழியினாலேயே நீ யடர்ந்தவன மேற வெழுந்தருளுவது தகும்; இவ்வழியே எழுந்தருளிக் கொடியவர்களைக் கொலைசெய்து எம்மைப் பாதுகாக்கக் கடவையென்று வேண்டியுரைத்தனர்கள் என்றிவ்வண்ணம் அம்முனிவர்களால் வேண்டியாசீர்வாதஞ்செய்து பின்றொடர்ந்து வழிவிட்டனுப்பப் பட்ட பெருமாளும் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனுங்கூடி, கதிரவன் மேகமண்டலத்தினுட்புகுவதுபோல அந்தக் கொடிய தண்டகாவனத்தினுட் புகுந்தருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

# அயோத்தியாகாண்டமும்

## முற்றுப்பெற்றது!

ஸ்ரீஸீதா லக்ஷ்மண ஸமேத ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயண வசனம்

# ஆரண்ய காண்டம்

ஸ்ரீமத் உபய வேதாந்த

எடூரீம்மடி திருமலை லக்ஷ்மீகுமார கோடி கன்னிகாதானம்,

வித்வான் அஷ்டாவதானம்,

மேல்பாக்கம்,

தாததேசிக தாதாசாரிய சுவாமியவர்களால்,

வடமொழியினின்றும், தென்மொழியில் வசனநடையாய்

மொழி பெயர்ப்பித்து,

இராயவேலூர்-கன்னைய்ய நாயுடு அவர்களும்,

இராயவேலூர்-நா-இராமசாமி நாயுடு அவர்களும்,


சென்னை மவுண்டுரோடு வெஸ்ட் அண்ட் கம்பெனி

முத்திராக்ஷர சாலையில் பதிப்பித்தது.

இரண்டாம் பதிப்பு.

கலி. ௫௦௦௪-௧௫ - சோபகிருது

1903.

ஸ்ரீராமஜயம்.

# ஆரண்யகாண்டத்தின் அட்டவணை.

ஆரணியகாணடத்தின் அட்டவணை

— முற்றிற்று. —

ஸ்ரீ

# படத்தின் அட்டவணை.



படததின அட்டவணை

முறறிறறு.

ஸ்ரீ

ஸீதாலக்ஷ்மண ஸமேத

ஸ்ரீரகுநந்தன ப்ரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத்வால்மீகிராமாயணம்

# ஆரண்யகாண்டம்.

---

தியானஸ்லோகம்.

నీలాంభోదనిభం నిశాచరచమూ నిర్మూలనోద్యోగినం
కోదండం శరధిం శరం సునిశితం నిస్త్రింశమాబిభ్రతం।
వైదేహీసహితం జటాలమజినం చీరం వసానం శుభం
తాదృక్షేణచలక్ష్మణేనసహితం శ్రీరామచంద్రం భజే॥

நீலாம்போதநிபம்நிசாசரசமூ நிர்மூலநோத்யோகிநம்
கோதண்டம்சரதிம்சரம்ஸுநிசிதம் நிஸ்த்ரிம்சமாபிப்ரதம் |
வைதேஹீஸஹிதம்ஜடாலமஜிநம் சீரம்வஸாநம்சுபம்
தாத்ருக்ஷேணசலக்ஷ்மணேநஸஹிதம் ஸ்ரீராமசந்த்ரம்பஜே ||

---

ப்ரஹ்மாண்ட புராணத்தில் நூற்றெழுபத்து நான்காவது அத்தியாயத்தில் (காகபக்ஷதரந்தேவம் வநமாலாவிபூஷிதம் | ஸ்ரீராமம்பால்கந்த்யாயேத் பாலகாண்டே முனீச்வர: || ஸீதாதேவியுதம்வீரம் ஸர்வாபரணபூஷிதம் | ஸீதாபதிம் ஹரிந்த்யாயே த்யோத்யாகாண்ட உத்தமே || ஜடிலஞ்சீரவஸநம் தண்டகாரண்யவாஸிநம் | முனிவேஷதரந்த்யாயே தாரண்யேகாண்ட உத்தமே || ஸுக்ரீவாதியுதம் ஸ்ரீராமம் பஸுழாங்காவ்ருதமீச்வரம் | மஹேச்வரஸமந்த்யாயேத் கிஷ்கிந்தாகாண்ட உத்தமே || சந்த்ரபிம்பஸமாகாரம் வாஞ்சிதார்த்த ப்ரதாயகம் | ஹநூமத்ஸேவிதந்த்யாயேத் ஸுந்தரேகாண்ட உத்தமே || ராவணாதி நிஹந்தாரம் ப்ரஹ்மருத்ராதிஸேவிதம் | ஸீதாதேவியுதம்யௌத்தே ராமந்த்யாயேத் த்ருதம்புஜே || அகஸ்த்யாதிமுனிஸ்துத்யம் வாஞ்சிதார்த்த ப்ரதாயகம் | ஸர்வதேவோத்தமந்த்யாயே துத்தரேகாண்ட உத்தமே || என்று காண்டங்கள் தோறும் தியானபேதங்கள் கூறப்பட்டிருக்கின்றமையின், அயோத்தியாகாண்டத்தி லெழுதப்பட்ட ச்லோகமே ஆரண்யகாண்டத்தின் தியான ச்லோகமெனவுணர்க

## பாலகாண்டத்தின் தியானஸ்லோகம்.

ఖేలాన్దోళిత కాకపక్షలసితం నీలాళకం బాలకం
లోలాంగం వనమాలికామధికళం డోలాయితాంఘ్రిభ్రమం।
పాలాఞ్ఛన్మృగనాభిసారతిలకం కాలాన్తకాద్యైస్సుతం
లీలామానవవిగ్రహం రఘుపతిం శ్రీలాఞ్ఛితం చిన్తయే॥ (1)

கேலாந்தோளிதகாகபக்ஷலஸிதம நீலாளகமபாலகம
லோலாங்கமவநமாலிகாமதிகளம் டோலாயிதாங்க்ரிப்ரதம் |
பாலாஞ்சனம்ருகநாபிஸாரதிலகம காலாந்தகாதயைர்ஸ்துதம
லீலாமானுஷவிக்ரஹமரகுபதிம் ஸ்ரீலாஞ்சிதஞ்சிந்தயே || (க)

## அயோத்தியாகாண்டத்தின் தியானஸ்லோகம்.

కన్దర్పాయుతకోమలావయవకం కంబుకణ్ఠం కటాక్షైః
కారుణ్యార్ద్రైః కలితవచసాం కామితం కల్పయన్తం।
భూషాభేదైర్దివ్యవస్త్రైః భూషితం భూషితాఙ్గ్యా
సీతాదేవ్యాదరహసితయా సేవితం రామమీడే॥ (2)

கந்தர்பாயுதகோமலாவயவகம கம்புகண்டம்கடாக்ஷை
காருண்யார்த்ரை: கலிதவசஸாம் காமிதம் கல்பயந்தம் |
பூஷாபேதைர்திவ்யவஸ்த்ரை: பூஷிதம்பூஷிதாங்க்யா
ஸீதாதேவ்யாதரஹஸிதயா ஸேவிதம்ராமமீடே || (உ)



ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# ஆரண்யகாண்டம்

## முதலாவதுஸர்க்கம்.

சக்கரவர்த்தித் திருமகனார் மகரிஷிகளது ஆச்சிரமங்களிலெழுந்தருளி அவர்களால் பூஜிக்கப் பட்டனரென்பது.

எவராலும் வெல்லுதற்கரிய வீரராகிய சக்கரவர்த்தித்திருமகனார் அநந்தரம் ஸீதா லக்ஷ்மணர்களுடனே மஹாரணியமான தண்டகாரணியத்தினுட் புகுந்து, அங்குள்ள அநந்தமான தவசிகளின் ஆச்சிரமங்களைக் கண்ணுற்றனர். அவ்வாச்சிரமங்களிலெங்கும் தர்ப்பைப்புற்களும், மரவுரிகளும் மிகுதியாகக் காணப்பட்டன; பிரஹ்மதேஜஸு விசேஷமாகவிளங்கியது; விண்ணிடையில் விளங்குகின்ற ஸூரியமண்டலம்போலக் கண்ணுற்றுப் பார்ப்பதற்கு மரியதாகத் தோற்றின; ஸர்வபூதங்களுக்குஞ் சரணமாகி மிக்க சுத்தி செய்யப்பெற்ற அங்கணங்களையுடையனவாய், பலவகை மிருகங்களாலும், பலவகைப் பறவைகளாலும் சூழப்பட்டிருந்தன; யாவராலும் பூஜிக்கப்பட்டும், நிரந்தரம் அப்ஸரஸ்திரீகளாடப்பெற்றும் அற்புதமாயிருந்தன. விசாலங்களாயுள்ள அக்கினிஹோத்திர மாளிகைகளாலும், ஹோமபாத்திரங்களாலும், மான் புலிகளின் அஜினங்களாலும், யாகவேதியில் பரப்பப்பட்ட தர்ப்பைப்புற்களாலும், பலாசின ஸமித்துக்களாலும், பூர்ணகும்பங்களாலும், காய் கனி கிழங்குகளாலும் விசேஷமாக விளங்கின; பத்ரமான கனிகள் நிறைந்த மஹத்தான பற்பல சிறந்த வனவிருக்ஷங்களால் எங்கும் சூழப்பட்டிருந்தன; ஒருபுறம் பூதபலிவைஶ்வதேவம் முதலான பூஜைகள் நடந்தன, ஒருபுறம் வேதகோஷங்கள் ஒலித்தன; காட்டிலுள்ள பலவகை மலர்கள் எங்கும் படிந்திருந்தன; தாமரைத்தடாகங்கள் எங்குமடர்ந்திருந்தன; கனி கிழங்குகளையே உணவாகக்கொண்டவர்களும், ஐம்புலன்களை வென்றவர்களும், மரவுரி மரையுரிகளையுடுத்தவர்களும், வெய்யோனையும் வைஶ்வாநரனையும் நிகர்த்தவர்களும், உண்டிசுருங்கினவர்களும், பிரஹ்மத்தை யறிந்தவர்களும், நெடுநாள் வாழ்ந்தவர்களுமாகிய மகிமைபெற்ற முனிவர்களினால் மிகவும் விசேஷமாகத் திகழ்ந்தன.

பிரம்ம கோஷம் ஓயாது ஒலிக்க, பிரம்ம வித்துக்களான மஹானுபாவர்களாகிய பிராமணர்கள் எங்கும் நெருங்கிப் பிரம்மலோகமென விளங்கிய அந்தத்தாபஸாச்சிரம மண்டலங்களைக் கண்ணுற்று ஸ்ரீமானுமி

சக்ரவர்த்தித் திருமகன் கட்டிய நாணை யவிழ்த்துக் கார்முகத்தைத் தோளில் பூட்டிக்கொண்டு விநயத்துடன் ஆங்கு எழுந்தருளினர். திவ்ய ஜ்ஞானமுடையவர்களான அங்குள்ள மஹரிஷிகள் இவர்களை ஆசையுடனெதிர்கொண்டுவந்து சந்திர னுதயமானதுபோலத் திகழ்ந்தெழுந்தருளிய பெருமாளையும், பிராட்டியாரையும், இளையபெருமாளையுங் கண்டு கொண்டாடி, அவர்களது சோதியையும் அழகினையுங் கண்டு தீங்குவருமோவென ஸந்தேகங்கொண்டு தீமை நீங்கி நன்மையுற்றுக கூடி வாழ்கவென்றாசிர்வாதஞ்செய் தழைத்துக்கொண்டு போய்ப் பூஜித்துப் பெருமாளுடைய ஸௌகுமார்யத்தையும், அழகினையும், அவயவங்களின் இசைவையும், காந்தியையும், சிங்காரத்தையும் கண்டு வியப்புற்று, பிராட்டியாரையும், இளைய பெருமாளையுங் கண்டு கண் கொட்டாமல் பார்த்துத் திகைத்து நின்றனர். பின்பு அக்கினி தேவனுக்கொப்பான முதன்மையாயுள்ள முனிவர்கள் அதிதியாகவந்த பெருமாளைப் பர்ணசாலையி லெழுந்தருளப்பண்ணி, அர்க்ய பாத்யாசமனீயங்களையும், கந்தமூலபலங்களையும், கொண்டு வந்து விதியின்படி பூஜைசெய்து அஞ்ஜலிஹஸ்தராய் அவரை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! நீரே எங்களுடைய தருமங்களைப் பாதுகாப்பவரும், எங்களுக்குச் சரணமானவரும், எங்களால் பூஜிக்கத் தக்கவரு மாகின்றீர்; துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ் செய்து உலகங்களைப் பாதுகாக்கின்ற அரசனே குருவாகின்றான். (நாவிஷ்ணு: ப்ருதிவீபதி:) என்றபடி விஷ்ணுவின் அம்சமின்றிப் பாதுகாக்குங் குணமுள்ள தாகாமையினாலும், (அஷ்டாபிர் லோகபாலானாம் மாத்ராபிர்நிர்மிதோந்ருப) என்றபடி இந்திரனுடைய அம்சமுடைமை யற்றியே போகங்களை யனுபவிக்கின்றமையாலும், இந்த்ராஜனும் பூஜைக்குரிய னாகின்றான்; ஸ்ரீமந்நாராயணனுடைய நாலிலொரு அம்சமுடையராகிய தேவரீர் திருவவதரித் திருக்கின்றீராதலின், நீர் உலகங்களைப் பாதுகாத்து உலகங்களினால் வணங்கப்பட்டவராகி, எல்லாப் போகங்களையும் அநுபவிக்கின்றீரென்பதற் கையமுண்டோ? தேவரீர் நகரத்தி லெழுந்தருளி யிருக்கினும், காட்டி லெழுந்தருளி யிருக்கினும், நித்ய விபூதியி லிருக்கினும், லீலாவிபூதியி லிருக்கினும், தேவரீரே எங்களுக் கிறையாவீர்; ஆதலின், உம்முடைய நாட்டிலுள்ளவர்களும், ஸம்ஸாரவிஷயங்களைத் துறந்து உம்மிடத்திலேயே குடிகொண்ட மன முடையவர்களும், காமக்குரோதங்களை வென்றவர்களும், பிறரைச் சபித் தழிக்கும் செயலை விட்டவர்களும், (தாஸபூதாஸ்வதஸ்ஸர்வேஹ்யாத்மான: பரமாத்மன:) என்கிறபடி உமக்குத் தொண்டு பூண்டவர்களும், உமக்குப் பிள்ளைகள் போன்றவர்களுமாகிய எங்களை நீர் பாதுகாத் தருளக் கடவீரென்று கைகுவித்துக்கொண்டு வேண்டிப் பற்பல ஆகாரங்களினால் ஸீதாராமலக்ஷ்மணர்களைப் பூஜித்தனர்கள். மற்றுமுள்ள முனிவர்களும் விதிமுறைப்படி பெருமாளைப் பூஜித்து மகிழ்ந்தனர்கள்.

ஆரண்யகாண்டத்தில் முதலாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## இரண்டாவது ஸர்க்கம்.

காகுஸ்தன் காட்டிடையில் விராதனைக் கண்டதும், பிறகு விராதன் வைதேஹியை யெடுத்துச் சென்றதை நோக்கி விசன முறுகையில் ஸௌமித்ரி ஸமாதானப் படுத்தியதும்.

இவ்வாறு அவ்வாரணியத்து முனிவர்களால் அதிதிபூஜை செய்யப் பெற்ற ஸ்ரீராமபிரான் அன்றிரவை யங்குப் போக்கி, மறுநாளுதயத்தில் எழுந்து முனிவர்களைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டு அவ்வாரணியத் தினிடையே புகுந்தனர். அந்த ஆரணியம் எத்தன்மைய தென்றால், பலவகை மிருகங்களு நிறைந்துள்ளது; புலி கரடி செந்நாய் முதலியவை களாற் சூழப் பெற்றது; முறிக்கப்பட்ட மரஞ் செடி கொடிகளை யுடையது; காணற்கரிய மடுக்களை யுடையது, கூவுகின்ற பற்பல பக்ஷிகளை யுடையது; இத்தன்மைத்தாகிய மிகப்பயங்கரமான காட்டினுள் ஸ்ரீராமபிரான் ஸீதா லக்ஷ்மணர்களுடனே கூடிச்சென்று, அங்கே மலைச் சிகரம் போலப் பெருத்து உயர்ந்தவனும், மனிதர்களைப் பிடித்துப் புசிப்பவனும், கோரமாகக் கூவுகின்றவனும், மிகவும் ஆழ்ந்த கண்களை யுடையவனும், பெரிய தலையை யுடையவனும், பருத்த வயிற்றை யுடையவனும், அருவருப் புறத் தக்கவனும், பயங்கரனும், குருதியினாலும் நிணத்தினாலும் நனைக்கப்பட்ட புலித் தோலை யுடுத்தவனும், வாயினைத் திறந்து உலகினை விழுங்க முயலும் யமன் போன்றவனும், எஃகினால் செய்யப்பட்ட நெடிய சூலத்தில் மூன்று சிங்கங் களையும் நான்கு புலிகளையும் இரண்டு செந்நாய்களையும் பத்து மான்களை யும் தந்தங்களுடன் கூடிய நிணந்தோய்ந்த பெரிய யானையின் தலை யொன் றினையும் கோத்தேந்திக்கொண்டு சிங்கநாதம் செய்பவனுமாகிய விராத னென்னும் ஒரு ராக்ஷஸனைக் கண்டனர்.

அந்த ராக்ஷஸனும் இவர்களைக் கண்டு சினங்கொண்டு, காலாந்தகன் போலவோடி வந்து ஸீதையை இடையிற் பற்றி எடுத்துக்கொண்டு திரும்பி யொதுங்கி, ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நோக்கி, 'மானிடர்களே! நீங்கள் யாவர்கள்? ஜடைதரித்து மரவுரியுடுத்து முனிவேடம் பூண்டு தண்டகாவ னத்தை யடைந்திருக்கிறீர்கள், பெண்ணொருத்தியை யுடன் அழைத்துக் கொண்டு வந்திருக்கின்றீர்கள்; எனனுடைய இவ்வனத்தை யடைந்து பின் நீங்கள் உய்வீர்களோ? தவசிவேடம் பூண்டவர்களான நீங்கள் பெண்ணு டன் வாழ்வ தெவ்வண்ண மொக்கும்? இவ்வண்ணம் நீங்கள் அதருமஞ் செய்து பாவிகளாகி முனிவர்களை யிகழ்பவராகின்றீர்கள்; நீங்கள் யாவரோ உரைசெய்மின்? யான் விராதனென்னு மரக்கன்; இவ்விடத்தில் என்றும் ஆயுத பாணியாய் ரிஷிகளது மாம்ஸங்களைப் புசித்துத் திரிகின்றேன்;

பீரன் உங்களையும் கொலை செய்து உங்களுடைய உதிரத்தையும் பானஞ் செய்வேன்; இந்தப்பெண் எனக்கே பாரியையாகுவாள்' என்றிவ்வண்ணம் அச்சமற்றுச் செருக்குற்று மொழிந்தனன்.

ஸீதாபிராட்டியார் அம்மொழியைக் கேட்டுப் பெருங்காற்றில் அகப்பட்ட வாழைமரம்போல நடுங்கினள். இவ்வண்ணம் விராதன் கையிலகப்பட்டு நடுங்குகின்ற சீதையை ஸ்ரீராமபிரான் கண்ணுற்று மிகத் துன்பமடைந்து இளையபெருமாளை நோக்கி 'பாராய் லக்ஷ்மணா! ஜனகமஹாராஜன் செல்வ மகளாய் மிகுந்த பாக்கியத்தில் அருமையாக வளர்ந்தவளும், தசரதச் சக்கரவர்த்தியின் மருமகளும், என்னுடைய பாரியையுமாகியும், ஸீதை இப்பொழுது விராதனால் அபஹரிக்கப்பட்டு வருந்துகின்றனள்; நாம் இவ்வகையாகிய தீமைகளையுற பிறப்போமென்பதை யறிந்தேயன்றோ கைகேயி என்னைக்காட்டிலுறையும்படி வரங்கேட்டனள்? அவளுடைய கோரிக்கை இப்பொழுதே விரைவில் நிறைவேறி விட்டது; கைகேயி தீர்க்காலோசனையுடையவளானதுபற்றியே தன் மகனுக்கு ராஜ்ஜியம் வாய்ப்பது மாத்திரத்தில் திருப்தியடையாமல், யாவருக்கும் நலத்தையே நாடுகின்றவனான என்னையும் அரணியத்திற்கனுப்பினள். இப்பொழுது கைகேயி தன் மனமீடேறி மகிழ்ந்தனள். ஸீதை பரபுருஷனால் பரிசிக்கப்பட்டதினும் கொடுந்துயரம் எனக்கு வேறுளதோ? யான் தந்தையையு மிழந்து, ராஜ்ஜியத்தையுந் துறந்து, பாரியையும் பறிகொடுக்கும்படி நோர்ந்தேனே' என்றிவ்வண்ணம் கண்ணீர் ததும்பத் துன்புற்றுரை செய்தனர். அதுகேட்டு இளையபெருமாள் மந்திரத்தினால் தடையுண்டு நெட்டுயிர்ப்பு விடுகின்ற நாகம்போலச் சினங்கொண்டு பெருமாளை நோக்கி விண்ணப்பஞ் செய்யலாயினர்.

అనాథ ఇవ భూతానాం నాథస్త్వం వాసవోపమః।
మయా ప్రేష్యేణ కాకుత్స్థ కిమర్థం పరితప్యసే॥

'அநாத இவ பூதாநாம் நாதஸ்த்வம் வாஸவோபம:।
மயாப்ரேஷ்யேண காகுஸ்த்த கிமர்த்தம் பரிதப்யஸே ||

'எம்மையரே! தேவரீர் ஸர்வபூதங்களுக்கும் நாதராகிய, ஸ்ரீமந்நாராயணனாகியும், இந்திரனுக்கு நிகரான பராக்கிரம முடையவராகியும், திக்கற்றவன் போல ஏன் இவ்வண்ணம் தவிக்கின்றீர்? தேவரீருக்குத் தொண்டன் அடியேனிருக்கையிலும், ஸந்தாப முறுவ தொக்குமோ? இப்பொழுது யான் சினமுற்று எய்யும் கணையினாலடிபட்டு இந்த விராதனிறந்து வீழ்கையில், இவனுடைய உதிரத்தை இந்தப் பூமி பானஞ் செய்யப்போகின்றது; வீரமின்ற வஜ்ராயுதத்தை வரைமீது விடுத்தவாறு, ராஜ்ஜியம் விரும்பிய பரதனிடத்தில் யான் முன் கொண்ட கோபத்தைத் இப

போழ்து இந்த விராதனிடத்தில் விடுவேன். இப்பொழுது யான தொடுக்கின்ற சரம் விராதன மார்பில் வீழக்கடவது; அவன் மார்பினின்றும் உயிர் வெளிச்செல்லக்கடவது; அவனுமுடனே சுழன்று தரையில் வீழக்கடவன்,' என்றுரைத்துத் தேற்றினார்.

ஆரண்யகாண்டத்தில் இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று

பெருமாள் பிராட்டியார் இளையபெருமாள் ஆகிய இவர்கள் துன்புறுவது மனுஷ்ய பாவனையெனறு முன்பே கூறியிருக்கின்றோம் பிராட்டியாரை விராதன் தொட்டமையால் கற்பழியாதோவெனில், அழியாது பெண்கள் தாமே ஒருவனைக் காமித்துத் தொடுவார்களாயின், அப்பொழுது கற்பழியுமே யல்லது, ஆபத்தை யடைந்த காலத்தில் பெண்களது ஸம்மதமின்றி, வலுவில் பிறர் தொட்டமாத்திரத்தில் கற்பழியாது. ஆகையாலேயே சுந்தரகாண்டத்தில் பிராட்டியார் ஸ்ரீமதாஞ்சநேயர் முதுகிலேறிக்கொண்டு ஸ்ரீராமபிரானிடம் சேர்வதற் குடன்பட்டிலர், இவ்வண்ணமே யங்குப் பிராட்டியார் உரைசெய் திருக்கின்றனர்

(ஸார்த்தம் லக்ஷ்மணம்) என்பது முதலாயுள்ள சுலோகங்களுக்கு இப்படிப் பட்ட விரோதமான அர்த்தமில்லாமல், உண்மையான அர்த்தமொன்றுண்டு அஃதென்னவெனில், அங்கேந என்பதற்கு இடையென்றும் மடியென்றும் பொருளன்று; ஸமீபமென்பது பொருள் (அங்கேநாதாய) என்பதற்கு, அங்கே அநாதாய என்று பதம், சீதையை எடாமல் என்று பொருள் (ஸபார்யௌ) ஸபையில் பூஜிக்கத்தக்கவர்கள், (க்ஷீணஜீவிதௌ) பிறருயிரை மாய்த்தவர்கள், (சுதம்பார்யௌ, முனிதூஷகௌ) என பாவிகளாகுவீர்கள், (அதர்மசாரிணௌ) அதர்மத்தை நாசம் செய்பவர்கள், (பாபயோ:) பாவஞ்செய்கின்ற கைகளால், (பார்யா) காந்தியினுற சிறந்தவள், (பாஸ்பார்த்த) விராதன சமீபத்திற் சென்றிருப்பதால், என்று இப்படிச் சில பொருளுரைத்துப் பெருமாளை விராதன புகழ்ந்ததாகவும், ஸீதையைப் பரிசிக்காமலே நின்றதாகவும் கூறுகின்றனர்கள் இப்பொருள் நியாயமாகத் தோற்றாது; க்ரமமான பொருளில் குற்றமில்லாமையின், இவ்வளவு பிரயாஸம் பயனற்றது.

ஸம்ப்ரதாயார்த்தம் யாதெனில், பிராட்டியார் விராதனிடத்தில் யாதுசெய்வானோ வென் றச்சங்கொண்டு நடுக்குறறிலர், மகன் கொடியனாயிருக்கினும், தாய் அம்மகன்மீ தருள்புரிந்து, இவன் பர்த்தாவினால் சிக்ஷிக்கப்படுவனே என்றஞ்சி நடுக்குறுவதை யுலகில் யாம் கண்ணால் கண்டிருக்கின்றோ மல்லோமோ? இவ்வண்ணமே லோகமாதாவாகிய பிராட்டியாரும் விராதன இவ்வண்ணம் தீச்செயல் புரிவானாகில் பெருமாளால் கொலைசெய்யப்படுவனே என்றச்சங்கொண்டே நடுக்குற்றனள், ஆகையாலேயே அவனைக் காண்கையிலும், தன்னை யவன் பற்றுகையிலும் அச்சமுற்றிலள்; அவனுடைய கொடிய மொழியைக் கேட்டபின்னரோ நடுங்கினள், ஆதலின், இவ்வுரையே சிறப்புடைத்தெனக்கொள்க.

பெருமாளும் பிராட்டியாரை விராதன கொண்டுபோயவிடுவனோ என்றாவது, நம்மை இவன் கொலைசெய்து விடுவனோ என்றாவது, அவனைக் கொலைசெய்யுந்திறமை இல்லையே என்றாவது பரிதாப முற்றிலர், இப்பொழுது யாம் [illegible]

## மூன்றாவது ஸர்க்கம்.

*விராதன் ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் விடுத்த வாளிகளால் வதையுறாது, அவர்களை எடுத்துத் தோளில் தாங்கி நடந்தது.*

அநந்தரம் மீளவும் விராதன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நோக்கி, மானிடர்களே! நீங்கள் யாவர் எங்குச்செல்லுகின்றீரென யான் கேட்கையிலும், பதிலேன் உரைக்கின்றிலீர்கள்; பதிலுரைமின் என்று வினவினன். பெருமாள் அவனை நோக்கி, 'அடா விராதா! யாங்கள் இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவர்கள்; யாங்கள் நல்ல சீலமுடையவர்களாகி இவ்வநத்தை யடைந்து சஞ்

---

சரிக்கின்றமையின், இத்தருணத்தில் ராஜதருமத்தை யங்கீகரித்து வில்லெடுத்து இவனைக் கொலைசெய்வது தருமமாகுமோ வென்னும் ஐயத்தினாலும், இவனை யான் கொலைசெய்து விடுவேனோவென்று ஸீதை இவ்வண்ணம் அச்சங்கொண்டு நடுங்குகையில், இவளை நிராகரித்து அவனை எவ்வண்ணங் கொலைசெய்வ தென்பதினாலும், பெருமாள் பரிதாபமுற்றனரேயன்றி வேறில்லை, ஆகையாலேயே பிராட்டியாரை விராதன் எடுத்துக்கொள்ளும்போது துன்புறாமல், பிராட்டியார் நடுங்குவதைக் கண்டபின் துயரங் கொண்டனர்.

இளையபெருமாளும் பெருமானை நோக்கித் தேவரீர் ஸ்ரீமந்நாராயணனே யாதலின், தேவேந்திரன்போலத் தேவரும் மூவுலகங்களுக்கும் நாதரா யிருக்கையில், அறமாகிய கோஸல ராஜ்ஜியத்தை மானிடபாவனையில் துறந்தமைபற்றி அநாதராகுவீரோ? ஒருபோதும் ஆகமாட்டீர். நாதரே யாதலின், இவனைக்கொலைசெய்வது தருமமே என்று விண்ணப்பஞ்செய்து, பின்னும், பிராட்டியார் தாக்ஷிண்யத்தினால் தேவரீர் ஒருவேளை இவனைக்கொல்ல மனமுறீராகில், தேவர்க்குத் தாஸனாகிய அடியேனுக்கு ஆஞ்ஞை செய்க, யானே இவனைக் கொலைசெய்வேனென்னவும் விண்ணப்பஞ்செய்தனர். ஆதலின், இதுவே பெருமாள் திருவுளமென்றுணர்க. பெருமாளும் இளையபெருமானை நோக்கித், தம்பி! பாராய், (விராதாங்கே) விராதனுடைய வாழ்வில் (ப்ரவேசிதாம்) ஆதரங்கொண்டிருக்கின்ற ஸீதையை, கைகேயி என்னப்படும் மாயையும், யானருகிலிருக்கின் க்ஷத்ரதருமத்தலைத் துறவேனாதலின், தன் மக்களாகிய உயிர்கள் ஸமஸார மென்னும் ராஜ்ஜியத்தைப் பெறுவார்களாயினும், என்னால் திருத்தப்பட்டு விரைவில்தன்னைக் கடந்து செல்வார்கள் என்று ஆலோசனை செய்தேயன்றோ என்னைக் காடு புகும்படிப் பிரித்தனுப்பினள்? ஆதலின், அவளுடைய எண்ணம் இந்த விராதன் விஷயத்தில் இப்போழ்தே நிறைவேறுகின்றதன்றோ? (மமமாதாஸ்ஸமத்யமா) மம, மா, தாஸ்ய, மத்யமா-என்று பதம்; என்னுடைய திருவாகிய ஸீதையும், அந்த மாயை முதலானோர்களது நடுவிற் சேர்ந்தவளே; இவளும் இவனைக் கொலைசெய்வதில் வருந்துகின்றனளல்லளோ? என் ஸீதைக்கு (பரஸ்பர்சாத்து) பகைத்த கொடிய இந்த விராதன் பிழைப்பதாலும், (நத்து: கதரம்) மிகவும் மகிழ்வு, (அஸ்தி) உளது-என்பது பொருள். இவள் தந்தையைப் பிரிந்து வந்ததற்கும், ராஜ்ஜியத்தை விட்டு வந்ததற்கும் துன்புறாது, இவனைக் கொலை செய்வதில் துன்புறுகின்றனளே என்று கருத்துக்கொண்டே யிவ்வண்ணமருளிச்செய்தனரென்பது மதம்.

சகின்றனம்: யாங்கள் உன்னை யின்னானென்ன வறியவிரும்புகின்றோம்; நீ யா வன்? இவ்வாரணியத்தில் ஏன் திரிகின்றனை? உரையாய், என்றருளிச்செய்த னர். விராதன் அதுகேட்டு ஸத்திய பராக்கிரமரான பெருமானை நோக்கி நகைத்து, 'ஆ ராஜனே! நீ என்னையோ அறிய விரும்புகின்றனை? ஆயின் உரைக்கின்றேன் கேளாய்: யான் ஜயனென்பவனுக்குச் சதஹ்ரதை என்ப வளிடத்திற் பிறந்தவன்; என் பெயர் விராதனென்பார்கள்; யான் தவஞ் செய்து சஸ்திரங்களினால் அழிவுறாதவாறும், பிளப்புஞ் சிதைப்பும் அடை யாதவாறும், பிரஹ்மதேவனிடத்தில் வரம்பெற்றிருக்கின்றேன்; ஆதலின் நீங்கள் என்னை எதிர்க்காமல் இந்தப் பெண்ணை விட்டுவிட்டு விரைவாகவந் தவழி பற்றிச்செல்லுக; இவ்வண்ணம் நீங்கள் ஓடி விடுவீர்களாயின், உங் களை யான் கொலைசெய்யாது விடுகிறேன்' என்று மொழிந்தனன். இவ்வண் ணம் செம்மதிகொண்டு கூறிய விகாரவடிவமுடையோனான விராதனை நோக்கி ஸ்ரீராகவன் சினத்தினால் கண்கள்சிவந்து 'அடாபாபி, அற்பப பயலே! நீ வலு வில் யமனைத் தேடுகின்றனை போலும்; போரில் என்னெதிரில் நின்றபின்பும் பிழைத்துச் செல்வாயோ? மரணமுறுவாய்; நிற்க' என்றருளிச்செய்து கோதண்டத்தில் நாணை ஏற்றி, விரைவாகக் கூறிய கணைகளைத் தொடுத்து, கருடவேகம் வாயுவேகங்களையுடையனவும், தங்கக்கட்டமைந்தனவுமாகிய சிறந்த ஏழு பாணங்களையுமெய்து விராதனமேல் நாட்டினர். அந்தச் சரங் களும் விராதனுடலைப் பிளந்து குருதி தோய்ந்து தரையில் வீழ்ந்தன; விராதனும் சினமுற்றுச் சீதையை விட்டு விட்டுக் காலாந்தகன் போலச் சூலத்தை ஏந்திக்கொண்டு ஸ்ரீராம லக்ஷ்மணர்களை எதிர்த்தோடி வருகை யில், ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் சரமாரி பொழிந்து அவனை யடித்தனர்கள். அந்த விராதனும் அதற்கு நகைத்து நின்று உடலை உலுக்குகையில், அந்தப் பாண ங்கள் யாவும் உதிர்ந்து வீழ்ந்தன. விராதன் வரதானத்தினால் இவர்களு டைய பாணங்களுக்கிறக்காமல் உயிரை நிலைக்கச்செய்துகொண்டு சூலத்தைச் சுற்றி இவர்களமேல் எய்தனன். பெருமானதனை யாகாயத்திலேயே இர ண்டு பாணங்களினால் மூன்று துண்டாகச் செய்தருளுகையில், வச்சிராயுதத்தி னாலறுக்கப்பட்ட மேருசிகரம் போல அந்தச் சூலம் தரையில் வீழ்ந்தது; உடனே விராதன் சினமுற்றருகிலோடி வருகையில், ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் கருநாகங்கள் போன்ற வாள்களை யுருவிக்கொண்டு வீசினார்கள். அவன் அதனை லக்ஷ்யஞ் செய்யாமல் ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவர்களையு மெடுத்துத் தன் தோள்களில் வைத்துக்கொண்டு செல்லுகையில், பெருமா ளிளைய பெருமாளை நோக்கி, அடா தம்பி! இவன் நாம் போகவேண்டிய வழியிலே தானே செல்லுகின்றனன்; ஆதலின், இவன் நம்மைச் சுமந்து செல்லுக; காட்டில் செல்வோமென்றருளிச் செய்தனர். அவனும் இவர்களைக் குழந்தைகளைப் போலவே எளிதாகத் தாங்கிக்கொண்டு சிங்கநாதம் செய்து பலவகை மரங்களடர்ந்து மஹா மேகம் போன்றதும், பலவகைப் பறவை

களினா லொலிக்கப் பட்டதும், பற்பல விலங்குகள் சூழ்ந்துள்ளதுமாகிய பெருந் தண்டகாவனத்தி னிடையிற் சென்றனன்.

ஆரண்யகாண்டத்தில் மூன்றாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## நான்காவது ஸர்க்கம்.

பெருமாளும் இளையபெருமாளும் விராதனைக்
கொலைசெய்து புதைத்தருளியது.

இவ்வண்ணம் விராதன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களைத் தோளில் வைத்துக்கொண்டு செல்லுகையில், பிராட்டியார் கண்டு கைகளை யுயரவெடுத்துக்கொண்டு, அந்தோ! என் பிராணநாதா தம்பியுடன் கொடிய வரக்கனா லெடுத்துக்கொண்டு போகப்படுகின்றனரே? என்னைச் செந்நாய் புலி கரடி முதலிய கொடிய மிருகங்கள் தின்னும்; அடா அரக்கர் கோமானே! அவர்களை விட்டு விட்டு, என்னையே எடுத்துக்கொண்டு செல்லடா என்று கூவுகையில், ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவரும் அதுகேட்டு விராதனை விரைவில் கொலை செய்யக் கருதிப் பெருமாள் விராதனுடைய வலது தோளையும், இளையபெருமாள் இடது தோளையும், வாள்களினால் வெட்டி விட்டனர். உடனே விராதன் தோள்கள் அறுப்புண்டு, அசனியாலடிபட்ட மலைபோலத் தரையில் சாய்ந்து விழுந்தனன். ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் அவனைக் கால்களினாலும், முழங்கால்களினாலும், முஷ்டிகளினாலும் மிதித்தும், இடித்தும், குத்தியும், உயரவெடுத்துத் தரையிலடித்தும், தரையில் புரட்டியும், துகைத்தும் கொன்றனர்கள். இவர்களால் விராதன் இவ்வண்ணம் பீடை செய்யப்பட்டும் இறக்காமல் வருந்துவதைப் பெருமாள் கண்டு இளைய பெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! இவன் வரதானத்தால் நம் மாயுதங்களால் மரணமுறுகின்றிலன்; ஆதலின், இவனைக் குழி தோண்டிப் புதைத்துச் செல்வோமென் றருளிச் செய்தனர். விராதன் அந்த வாக்கியத்தைக் கேட்டுப் பெருமாளை நோக்கிப் புருஷ சிங்கமே! இந்திரனுக்கு நிகரான பலமுடைய உம்மால் யான் அடிக்கப் பட்டேன்; யான் மோஹத்தினால் முன்பு தேவரீரை யறிந்திலேன்; இப்போது தேவரீர் ஸ்ரீராமரெனவும், இவர் இளையபெருமாளெனவும், இவர் பிராட்டியாரெனவும், நன்குணர்கின்றேன்; யான் சாபத்தினால் இவ்வண்ணம் கொடிய அரக்கனாயினேன், யான் தும்புருவென்னுங் கந்தருவன்; குபேரனாலிவ்வண்ணம் சபிக்கப்பட்டேன்; சாபமுறுங் காலையில், யான் வைஸ்ரவணனை வேண்டுகையில், அவன் என்னை நோக்கி, ஸ்ரீராமசந்திரர் போரில் உன்னைக் கொலைசெய்வார்

அப்பொழுது நீ சாபந்தீர்ந்து வானடைக்கடவையென்று மொழிந்திருந்தனன். யான் அவனிடத்திற் சேவை பண்ணும் வேளையில், யான் ரம்பையிடத்தில் மோஹங்கொண்டு சோர்ந்திருந்தமையின், எனக்கிவ்வண்ணம் சாபம் நேர்ந்தது; தேவரீருடைய அருளினால் அந்தக் கொடிய சாபத்தினின்றும் விடுபட்டேன்; இனி யான் என்னுடைய லோகம் போய்ச் சேருவேன்; உங்களுக்கு மங்கள முளதாகக் கடவது. இங்கிருந்து ஒன்றரையோஜனை தூரத்தில் சரபங்கமஹாமுனி எழுந்தருளியிருக்கின்றனர்; தேவர்கள் அங்கெழுந்தருளவீர்களாயின், அவரே உங்களுக்கு நன்மை யளித்தருளுவார்; என் சரீரத்தையும் குழியில் தள்ளிப் புதைத்துச் செல்க;—

రక్షసాంగతసత్వానా మేషధర్మస్సనాతనః|
అవటేయేనిధీయంతే తేషాంలోకాస్సనాతనాః||

ரக்ஷஸாங்கதஸத்வாநா மேஷதாமஸ்ஸநாதனஃ|
அவடேயேநிதீயந்தே தேஷாமலோகா மஹோதயாஃ||

சவத்தைக் குழியில் புதைக்கவேண்டுமென்பதே ராக்ஷஸதர்மம்; எந்த ராக்ஷஸர்கள் குழியில் புதைக்கப்படுகின்றனர்களோ அவர்கள் அழிவற்ற உலகங்களை யடைகின்றனர்கள்; என்றிவ்வண்ண முரை செய்துவிட்டு வானேறினன். பெருமாளும் அந்த வாக்கியத்தைக்கேட்டு இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! யானைபோன்ற இந்த விராதனுடைய உடலைப் புதைக்கப் பெரிய குழியைத் தோண்டக் கடவையென் றுரைத்து, விராதன் கழுத்தைக் காலினால் மிதித்து நின்றனர். அநந்தரம் இளையபெருமாளும் அந்த விராதனருகில் மண்வெட்டி முதலிய கருவிகளினால் பெரிய குழிதோண்டிக் கழுத்தைத் திருகிக் கொன்று குழியில் தள்ளினர். அப்பொழுது அவன் பயங்கரமாகக் கூக்குரலிட்டனன்; அந்த விராதனை ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவருமெடுத்துக் குழியில் தள்ளி, இவன் வரத்தினால் சஸ்திராதிகளுக்குச் சாகாவிடினும், இவனைக் கொல்லு முபாயம் இதுவேயென்று தேர்ந்து மகிழ்ந்தனர்கள். அந்த விராதனும் தான் நற்கதி பெறுவதன் பொருட்டுத் தானே தன்னைப் புதைக்கும்படி வேண்டிக் கூவியிருந்து கொள்கையில், அவ்வனமெங்கும் அவ்வொலியினொலித்தது; ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் அவ்வண்ணம் அவனைப் பள்ளத்தில் தள்ளி சிலைகளினால் அக்குழியை நிறைத்து மூடி மகிழ்ந்து, பிராட்டியாரையும் அழைத்துக்கொண்டு விண்ணிடையில் சந்திர சூரியர்கள்போலக் கானிடையில் சஞ்சரித்துத் திகழ்ந்தனர்கள்.*

ஆரண்யகாண்டத்தில் நான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

* ஸ்ரீ பிராட்டியார் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை விராதன் கொலைசெய்வானோவென்று ... கண்டிலர்; விராதனை யவர்கள் கொன்று விடுவார்களென்றே ...

## ஐந்தாவது ஸர்க்கம்.

சரபங்கர் பெருமாளைக் கண்டு மகிழ்ந்த பின்பு, விண்ணுலகடைந்தது.

இவ்வண்ணம் பெருமாள் விராதனைக் கொலைசெய்து விட்டுப் பின்பு, சீதையை யாலிங்கனஞ் செய்து கொண்டு துன்புறாதேயென்று தேற்றி, இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! இந்த வனம் மிக்க கொடியது, காட்டு மனிதர்களு மொருவரிலர்; ஆதலின், விரைவாகச் சரபங்கமஹா முனியிடம் செல்வோமென்று அருளிச்செய்து, அவ்வாறே சரபங்காஸ்ர மஞ்சேர்ந்து பார்க்கையில், அங்கே தேவலோகத்தினின்றும் தேவேந்தி ரன் தேரிமீதேறிவந்து அத்தேரினின்று மிறங்கிக் கால் தரையில் படா மலே நிற்கவும், சிறந்த வாடையாபரணங்களை யணிந்து, தன்னைப்போன்ற வர்களினால் அந்த இந்திரன் சூழப்பட்டுத் திகழவும், சிறந்த குதிரைகள் கட்டி வானிடையிலேயே நிற்கின்ற அந்த இந்திரனுடைய ரதம் நிற்கவும், முழு மதி மண்டலம் போன்ற வெண்குடை விளங்கவும், தெய்வப் பொதுமகளிர் களிருவர்கள் அந்த இந்திர னிரு புறத்திலும் நின்று வெண்சாமரை வீசவும், கந்தர்வ ஸரஸாதி தேவர்கள் வானில் நின்று அந்த இந்திரனைப் புகழவும் அத்தன்மையவாகிய இந்திரனுடன் சரபங்கமஹாமுனி ஸல்லாபம் செய்து கொண்டிருக்கவுங்கண்டு, இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மண! பாராய் ஆகாயத்தில் ஆதித்தனுதித்தாற் போல ரதம் திகழ்கின்றது; முன்பு யாம் இந்திரனுடைய தேர்க்குதிரைகள் எவ்வாறிருக்குமெனக் கேட்டிருக்கின்றன மோ, அத்தன்மையனவாகிய குதிரைகளே இந்தத் தேரில் கட்டப்பட்டி ருக்கின்றன; இந்த ரதத்தைச் சுற்றி நிற்கின்றவர்களும் குழைகளணிந்தும், யௌவனமுற்றும், வாள்களைப் பிடித்தும், நீண்டகன்ற மார்பினில் அக்கினி போல ஒளிர்கின்ற மாலைகளைப் பூண்டும், பீதாம்பரங்களை யுடுத்தும், வீர முற்றும், இருபத்தைந்து வயது பொருந்தியும், நூறு நூறு கணக்குகளை யடைந்தும், நாற்புறங்களிலும் திகழ்கின்றனர்கள். பெரும்பாலும் தேவர் கள் எப்பொழுதும் இருபத்தைந்து வயதுடையவர்கள் போலவே விளங்கு வார்கள்; இவ்விடத்திலேதானே நீ சீதையுடன் முகூர்த்தகாலம் நிற்கக் கடவை. இவன் யாவனோ அதனை யறிகின்றேனென்றருளிச்செய்து

---

கொண்டு அவர்களைத் தம்மிடத்தில் அழைப்பதன் பொருட்டே தம்மைப் புலிமுத லானவை தின்னுமென்று கூவினர். பின்பு அவர்கள் மீளாமையினால், விராதனை நோக்கி, அடா இவர்களை நீ எடுத்துக் கொண்டுபோய் அழியற்க, அவர்களை விட்டு விட்டு, (நாம்) செல்வத்தையுற்று வாழ்க, என்றுரைத்தனர். ஸ்ரீராமலக்ஷ்மணர் தன் இவர்து பாவத்தை யறிந்தே விரைவாக அவனை வெட்டிக்கொன்றனர்கள். சீதை [illegible] 'அவனைக் கொல்லும் பக்ஷத்தில்,' முன்பே அவனைக் [illegible].

சீதையுடன் இளையபெருமாளை யங்கே நிறுத்திவிட்டுத் தாம் மாத்திரம் சரபங்காஸ்ரமத்திற்குள்ளெழுந்தருளுகையில், இந்திரனும் இவரைக் கண்டு சரபங்க மஹாமுனியை நோக்கி, மாதவா சீமானே! ஸ்ரீராமபிரானிங்கே ஏகாந்தமாக எழுந்தருளுகின்றனர்; இவர் இப்பொழுது என்னைக் காண்பது தகுதி யற்றது; இவர் தம் பிரதிஜ்ஞையை முடித்த பின்பு, என்னைக் காண்க; பிறரொருவராலும் செய்தற்கரிய காரியங்கள் இம்மஹாநுபாவராலேயே செய்தற் குரியனவாகியிருக்கின்றன; ஆதலின், இவர் இக்காரியங்களை முடித்த பின்பு, யானும் இவரைக் கண்டு மகிழ்வேனென்றுரைத்து விடைபெற்றுக்கொண்டு தேரூர்ந்து வானேறினன்; இந்திரன் சென்ற பின்பு, உபகரணங்கள் நிறைந்த அக்கினிஹோத்திரஞ் செய்து கொண்டிருக்கின்ற சரபங்கமஹாமுனிவரிடம் பெருமாளெழுந்தருளிப் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் அவரைப் பணிந்து, அவரால் பூஜிக்கப்பட்டவர்களாகிப் பர்ணசாலையி லிறங்கி மகிழ்ந்து, பின்பும் சரபங்கமஹாமுனிவரை நோக்கி, ஸ்வாமி! இப்பொழுதிங்கு விண்ணினின்றும் வந்தெய்தினவன் யாவனென்ன வினவி யருளினர். சரபங்கமஹாமுனியும் பெருமாளை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! தேவேந்திரன் என்னைப் பிரஹ்மலோகத்திற் கழைத்துக் கொண்டு போவதன் பொருட்டு வந்திருந்தனன்; யான் பிறர் செய்தற்கரிய தவஞ்செய்து, அவ்வுலகஞ் செல்லும் புண்ணியத்தைப் பெற்றிருக்கின்றேனாதலின், இப்பொழுது மஹாத்துமாவாகிய உம்முடன் ஸல்லாபஞ்செய்து மகிழ்ந்து விண்ணுலகம் செல்வேன்; நீர் ஸமீபத்தில் எழுந்தருளுவதை யுணர்ந்தே யான் இந்திரனுடன் பிரஹ்மலோகஞ் சென்றிலேன்; யான் தவத்தினால் வென்ற பிரஹ்மலோகங்களையும், தேவலோகங்களையும், தேவரீர்க்குக் காணிக்கையாகச் சமர்ப்பணஞ் செய்வேன்; ஏற்றுக்கொள்க; தேவரீர்க்கு அர்ப்பணஞ் செய்யாச் செயல்கள் பயன்படா வல்லவோ? என்று அருளிச்செய்தனர். சரபங்கமஹாரிஷியினால் இவ்வண்ண முரைசெய்யப்பட்ட பெருமாளும் அவரை நோக்கி, மாதவா கோமானே! யானே தேவரீருடைய காமபலங்களை யாதரயாமியாயிருந் தனுபவிப்பேன்; யான் இப்பொழு திக்காட்டில் வாஸஞ் செய்யத்தக்க இடம் யாதோ? அதனை யருளிச் செய்வீரென்று வினவினர். சரபங்க மகாயோகியும், மீளவும் பெருமாளை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! இந்தக் காட்டிடையில் ஸுதீக்ஷ்ணரென்னும் மஹாமுனி எழுந்தருளி யிருக்கின்றனர். நீங்கள் அங்கெழுந்தருள்வீர்களாகில், அவர் உங்களுக்கு நன்மைசெய்தருளுவர்; இந்த நதிக் கெதிராகச் சென்றால் அவருடைய ஆஸ்ரமஞ் சேர்வீர்கள்; இங்கே காணப்படுகின்றதே இதுவே நீங்க ளெழுந்தருளத்தக்க நல்வழி; நீர் இங்கே முகூர்த்தகால மெழுந்தருளி யிருக்கக்கடவீர். யானிந்த மூப்புற்ற சரீரத்தைப் பாம்பு புற்றுரியைவிடுவதுபோலவிட்டு வானேறுவேனென்று அருளிச்செய்து, செந்தீயை வளர்த்து விதியின்படி நெய் யாகுதிசெய்து அத்தீயில் குதித்து

ஜோதியாகி எரிந்தனர். உடனே யவர் அந்த ரூபயுக்த சரீரத்தை நீக்கி, திவ்விய ரூபங்கொண்டு அந்தத் தீயினின்று மெழுந்து திகழ்ந்தனர். பெருமாளும் இளையபெருமாளுடனும், பிராட்டியாருடனும், அதனைக் கண்ணுற்று வியப்படைந்து மகிழ்ந்தனர். சரபங்க மஹாமுனிவரும், ஆஹிதாக்நிகளின லோகங்களையும், ரிஷிகளின லோகங்களையும், தேவலோகங்களையுந் தாண்டிப் பிரஹ்மலோகம்போய்ச் சேர்ந்து, பரிஜன பரிவாரங்களுடன் கூடி எழுந்தருளி யிருந்த வாணிமணாளரைக் கண்டு பணிந்தனர். பிரமனும் இவரைக் கண்டு உனக்கு நல்வரவாகக் கடவதென் றுரைத்து ஸத்காரஞ் செய்து மகிழ்ந்தனர்.

ஆரண்யகாண்டத்தில் ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஆறாவது ஸர்க்கம்.

பெருமாள் சரணமடைந்த ரிஷிகளுக்கு அபயமளித்தது.

சரபங்கமஹாமுனிவர் பிரஹ்மலோகஞ் சேர்ந்த பின்னர் வைகானஸர், வாலகில்யர், ஸம்ப்ரக்ஷாளர், மரீசிபர், அஸ்மகுட்டர், பத்ராஹாரர், தந்தோலூகலர், உன்மஜ்ஜகர், காத்ரசய்யர், அசய்யர், அப்ராவகாசகர், ஸலிலாஹாரர், வாயுபக்ஷர், ஆகாசநிலயர், ஸ்தண்டிலசாயிகள், ஊர்த்வவாஸிகள், ஆர்த்ரபடர், ஸஜபர், தபோநிஷ்டர், பஞ்சதபர் என்னும் பேதங்களையுடையவர்களும், பிரஹ்மதேஜஸ்ஸால் விளங்குபவர்களும், யோகத்திறமையுடையவர்களும், ஐம்புலன்களை வென்றவர்களுமாகிய மஹாயோகிகள் பெருமான் சரபங்காச்ரமத்தி லெழுந்தருளியிருப்பதை யுணர்ந்து எல்லோருங் கூடி யங்கெழுந்தருளிய பெருமாளைக் கண்டு இவரை நோக்கிக் கேளாய் ஸ்ரீராமா! நீர் இக்ஷ்வாகு குலத்திற்கும், இந்தத் தேசத்தார்களுக்கும், பிரதானரும், நாதரு மாகின்றீர்; தேவர்களுள் தேவேந்திரன்போல நீர் புகழினாலும், தோள்வலியினாலும், புகழ்ப்பட்டிருக்கின்றீர்; தந்தையினிடத்தில் பக்தியும், ஸத்தியமும், தருமமும், உம்மிடத்தில் நிறைந்து விளங்குகின்றன; தருமமுணர்ந்தவரும், தருமத்தில் சிரத்தையுடையவரும், பரமபுருஷருமாகிய உம்மைச் சரணமடைந்த யாங்கள் ஒன்றை வேண்டுகின்றோம்; நீர் ஸ்வயமாகவே எங்களைப் பாதுகாக்கச் சித்தராகி யிருக்கையில், யாங்கள் உம்மை யுதாஸீனரைப்போல வேண்டுவது தகுதியற்றது; ஆயினும், யாங்கள் ஆர்த்தியினால் செய்யும் இப்பிழையைப் பொறுத்தருள்க; யாவனொருவன் அரசனாகி யாறில் ஒருபங்கு கப்பம் வாங்கிக் கொண்டும், பிரஜைகளைப் பிள்ளைகளைப்போலப் பாதுகாக்கின்றிலனோ, அவனுக்கு மிகப் பாவமிளையும்; யாவனொருவன் தன்னுடைய ஜனங்களைத் தன்னுயிர்களைப் போலவும், தன் மக்களைப் போலவும், பாதுகாத்தளிக்கின்றனனோ அவன் அழிவற்ற புகழ்

லைப் பெற்று, கடையில் பிரஹ்மலோகஞ் சேர்ந்து, பிரஹ்மாவினாலும் பூஜிக்கப் படுவான்; அன்றியும், உயிர்களைத் தருமத்தினால் பாதுகாக்கின்ற அரசன் முனிவர்கள் செய்யுந் தவங்களின் நாலிலொருபங்கு பெற்று ரக்ஷிய்யெனப் படுவான்; எங்களெல்லோர்க்கும் நீர் நாதராயிருக்கையிலும், யாங்கள் ராக்ஷஸர்களினால் கொலைபடுகின்றனம்; எழுந்தருளக; ராக்ஷஸர்களினால் கொல்லப்பட்ட முனிவர்களது சரீரங்களைக் கண்ணுறுக; சில அரக்கர்கள் பம்பாநதியின் கரையில் வாஸஞ் செய்பவர்களையும், இந்த மந்தாகினியினருகில் வசிப்பவர்களையும், சித்திரகூடத்தில் வாழ்பவர்களையும், கொன்றுவருகக் கொல்லுகின்றனர்கள்; இவ்வண்ணம் யாங்கள் படும் அவஸ்தையைப் பொறுக்கின்றிலோம்; ஆதலின், தஞ்சமடையத்தக்க உம்மையே சரணமாக வந்தடைந்தனம்; ஆதலின், நிசாசரர்களால் கொலைபடுகின்ற எங்களைப் பாதுகாத்தருளக; இவ்வுலகினில் இந்தத் துன்பத்தைப் போக்க வேறொரு வரும் தஞ்ச மாகார்; ஆதலின், எங்களெல்லோரையும் ராக்ஷஸர்களிடத்தினின்றும் பாதுகாத்தருளக; என்று மொழிந்து சரணமடைந்தனர்கள். பெருமாளும் அந்த முனிவர்களது வாக்கியத்தைக் கேட்டு அவர்களெல்லோரையும் நோக்கி முனிவர்களே! பெரியோர்களாகிய நீங்கள் சிறியனான என்னை நோக்கி, இவ்வண்ணம் அருளிச் செய்யத் தக்கவர்களல்லீர்கள்; யான் உங்களுக்குக் குற்றேவல் செய்யத்தக்கவனாகின்றேன், அரசன் எல்லோரையும் பாதுகாக்கவேண்டுமாதலின், என்னுடைய காரியத்தினாலேயே யான் இந்த வனத்திற்கு வரத்தக்கவன்; தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்பவனாகவும், இந்த வனமெய்தினேன்; தற்செயலாய்த் தேவர்களுடைய காரியத்தைச் செய்பவனாகவுமாயினேன்; ஆதலின், யான் இந்த வனத்தில் வாஸஞ்செய்வதினால் என்னுடைய தருபமும், பிதருவாக்கிய பரிபாலனமும், சரணாகதர்களாகிய உங்களுடைய ஸம்ரக்ஷணமும் சித்தித்தன,—

తపస్వినాం రణే శత్రూన్ హన్తుమిచ్ఛామి రాక్షసాన్ ।
పశ్యన్తు వీర్యమృషయస్సభ్రాతుర్మే తపోధనాః ॥

*தபஸ்விநாம் ரணே சத்ரூந் ஹந்துமிச்சாமி ராக்ஷஸாந் |*
*பஸ்யந்து வீர்யம்ருஷயஸ்ஸ ப்ராதுர்மே தபோதநா: ||*

கேட்டருளீர் தபோதனர்களே! உங்களுக்குப் பகைவர்களாகிய அரக்கர்களெல்லோரையும் போரில் கொலைசெய்யச் சங்கற்பித்தேன்; இனி என்னுடைய ஆண்மையையும், என் தம்பியினுடைய வலியையும் பாரீர்கள்; என்றருளிச்செய்து, தபோதனர்களெல்லோர்க்கும் அபயமளித்து, அவர்களால் பூஜிக்கப்பட்ட செயலுடையராகிப் பிராட்டியார் இளையபெருமாள்களுடன் ஸுதீக்ஷ்ண மகா முனிவரது ஆஸ்ரமத்தை நோக்கி எழுந்தருளினர்.

ஆரண்யகாண்டத்தில் ஆறுவது ஸர்க்கம்

முற்றிற்று.

## ஏழாவது ஸர்க்கம்.

### பெருமாள் ஸுதீக்ஷ்ண முனிவரால் பூஜிக்கப்பட்டது.

அநந்தரம் பெருமாள் ஸீதா லக்ஷ்மணர்களுடனும், அந்த முனிவர்களுடனும், ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரது ஆஸ்ரமத்தை நோக்கிப் புறப்பட்டுப் பற்பல நதிகளைத் தாண்டிப் பெரிய மலையைக் கண்டு அதனைக் கடந்து சென்று, அதற்குமேல் பற்பல மரங்களடர்ந்துள்ள அந்த ஸுதீக்ஷ்ணாஸ்ரமத்தினுட்புகுந்து, ஜடாமண்டலதாரியும், தபோவருத்தருமாகிய ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரைக் கண்டு பணிந்து அவரை நோக்கி, மாதவரே! யான் சக்கரவர்த்தி குமாரனான ராமனாகின்றேன்; தேவரீரைக் காண்பதன் பொருட்டிங்கெய்தினேன்; ஆதலின், தேவரீரெனக் கிதமருளிச்செய்க; என்றருளிச் செய்தனர். ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரும் பெருமாளைக்கண்டு ஆலிங்கனஞ் செய்துகொண்டு பெருமாளை நோக்கி, அடா வீரனும், தன்மிகனுமாகிய ஸ்ரீராமசந்திரா! உனக்கு நல்வரவாகக் கடவது. இந்த ஆஸ்ரமத்தில் நீ பொன்னடி சாத்தினமையின், இப்பொழுதே இந்த ஆஸ்ரமம் நாதனுடையதும்போலும், நீ இங்கெழுந்தருளுவதை எதிர்பார்த்தே இந்தச் சரீரத்தை விட்டு வானேறியிலேன்; நீ ராஜ்ஜியத்தைத் துறந்து, திருச்சித்திரகூடஞ் சேர்ந்திருக்கையில், தேவேந்திர னிங்கெய்தி உன்னுடைய செய்தியையுமுரைத்து, யான் தவங்களினால் பற்பல பொன்னுலகங்களைப் படைத்திருக்கின்றேனெனவும், அவ்வுலகங்களுக்கு எழுந்தருளீரெனவு முரைத்து அழைத்தனன்; அந்த நல்லுலகங்களில் என்னிடத்தில் அருளினால் ஸீதா லக்ஷ்மணர்களுடன் விஹாரஞ் செய்தருள்க; என்று காம பலஸங்கத்தைத் துறந்து தம்முடைய கருமங்களை பகவானுக்கு காப்பணஞ் செய்தனர். பெருமாளும் அம்மஹா யோகியை நோக்கிப் பகவானே! யானே அந்த லோகங்களை யங்கீகாரஞ் செய்வேன்; யான் இப்போழ்திங்கே வாஸஞ் செய்வதற்குரிய தேசத்தை யருளிச்செய்க; சரபங்க மஹாமுனிவர் தேவரீரிடஞ் செல்லும்படி யருளிச்செய்திருக்கின்றனரென் றருளிச்செய்தனர். ஸுதீக்ஷ்ண மஹாமுனியும் மீளவும் ஸ்ரீராமசந்திரரை நோக்கி, ஸ்ரீராமா! இந்த என்னுடைய ஆஸ்ரமமே மிகவும் வாஸயோக்கியமா யிருக்கின்றது; ஆனால் சிங்கம் புலி முதலிய கொடிய விலங்குகள் அடிக்கடி இங்கெய்தித் திரிகின்றன; இவ்விடத்தில் அந்த மிருகங்களினால் மாத்திரமே பயமன்றி, வேறொருவராலும் பயம் நேர்ந்திலது; என்றருளிச் செய்தனர். பெருமாள் அந்த வாக்கியத்தைக் கேட்டவுடன் வில்லை ஏறிட்டுக் கணைதொடுத்துச் சித்தஞ் செய்துகொண்டு அம்முனிவரை நோக்கி, மஹாயோகி! யானிங்கே வாழ்ந்து, கொடிய மிருகங்களைக் கணையினா லடிப்பேன்; அப்பொழுது தேவரீர் அதைக் கண்டு வருத்தமுறுவீர்; இவ்வண்ணம் தேவரீர் வருந்த நானிங்கு செய்வதை விடக் கொடுமை

புள்ளீரோ? ஆதலின், யான் இவ்விடத்தில் நெடுங்காலம் வாழ விரும்புகின்றிலேன் என்றருளிச்செய்தனர். பின்பு, மாலைப்பொழுதாயினமையின், ஸந்தியாவந்தனம் முதலிய நித்யகருமங்களை முடித்துக்கொண்டு,* ஸீதாலக்ஷ்மணர்களுடன் அந்த ஆஸ்ரமத்திலேயே எழுந்தருளியிருந்தனர். பின்பு, ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரும் தவசிகள் புசிப்பதற்குரிய கந்தமூலபலங்களைத் தாமே நேராகக் கொணர்ந்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்கு அர்க்யபாத்யாசமனீயாதிகளினால் பூஜித்தளித்து மகிழ்வித்தருளினர்.*

ஆரண்யகாண்டத்தில் ஏழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எட்டாவது ஸர்க்கம்.

பெருமாள் ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டது.

பெருமாள் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரால் பூஜிக்கப்பட்டவராகி, அங்குத் துயில்கொண்டனர். இரவைப் போக்கி, மறுநாளுதயத்தில் துயிலுணர்ந்து, ஸீதாலக்ஷ்மணர்களுடன் நித்யகருமங்களை முடித்து, அக்கினியையும், தேவர்களையும் விதிப்படி பூஜித்து, வெய்யோன் உதயமாகுகையில், உபஸ்தானஞ் செய்து விட்டு, ஸுதீக்ஷ்ண மஹாரிஷியைக் கண்டு பணிந்து, அவரை நோக்கித் தபோநிதியே! யாங்கள் பூஜிக்கத்தக்க தேவரீரால் யாங்களே பூஜிக்கப்பட்டவர்களாகித் தேவரீருடைய ஆஸ்ரமத்தில் இன்புற்று வாழ்ந்தோம்; உடன் வந்த முனிவர்கள் எங்களைத் துரைப்படுத்துகின்றனர்கள்; ஆதலின், விடை கேட்கின்றேன்; போய் வருகிறோம்; யாங்களும் எல்லா ஆஸ்ரமங்களையுங் கண்டு களிப்புறத் துரைப்படுகின்றோம், ஆதலின், எங்களெல்லோர்க்கும் அன்பு கூர்ந்து விடை கொடுத்தருள்க;—

అవిషహ్యాతపో యావ త్సూర్యో నాతివిరాజతే।
అమార్గేణాగతాం లక్ష్మీం ప్రాప్యేవాన్వయవర్జితః॥

அவிஷஹ்யாதபோ யாவத் ஸூர்யோ நாதிவிராஜதே।
அமார்கேணாகதாம் லக்ஷ்மீம் ப்ராப்யேவான்வயவர்ஜித:।

---

* இளையபெருமாள் உணவு துயில்களைத் துறந்தவராதலின், முனிவர் அளித்த காய்கனிகளைப் பெருமாளுக்களித்து விட்டனர். பெருமாளும் அதுபோல் [illegible] தாமுண்டு; முனிவர் தமக்களித்ததைப் பிராட்டியார்க்களித்தனர். ஆதலால், முனிவர்கள் பிராட்டியார்க்களித்திலரென்றறிக.

இழிகுலத்தோன் அநியாயத்தால மிகப பொருளை யடைந்து, பிறரைத் தவிக்கச் செய்வதுபோல, இந்த வெய்யோன கதிர் விரிந்து உலகங்களைத் தவிக்கச் செய்வதற்கு முன்னமே யாங்கள் வழியைக் கடந்து செலல விரும்புகின்றோமென றுரைசெய்து, மீளவும பணிந்து நின்றனர். இவ்வண்ணம பணிந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கரங்களாலெடுத்து அணைத்துக்கொண்டு, ஸுதீக்ஷ்ணமுனிவரும இவர்களை நோக்கி, ஸ்ரீசக்கரவர்த்திதிருக்குமாரர்களே! நீங்கள வழியில இனபுற்று மகிழ்ந்து செலலக் கடவீர்கள; தண்டகாரண்ய வாஸிகளாகிய இந்த முனிவர்களது ஆஸ்ரமங்களையுங் கண்டு மகிழ்க; மிகுந்த காய் கனிகள நிறைந்தும, நறுமலர்கள மலர்ந்தும, சிறந்த மிருக நிரைகள சூழ்ந்தும, பகை நீங்கிய பறவைகள நெருங்கியும, மலர்ந்த கமலங்களையுடையதும, குளிர்ந்து தெளிந்த நன்னீரைப பெற்றதும, நீர்ப பறவைகள நிறைந்துமுள்ள தடாகங்கள பொருந்தியதுமாகிய கானன மண்டலத்தையுங் காண்க; இப்போழ்து சென்று மீளவும இங்கெய்துக என்று அருளிச்செய்து விடைகொடுத்தருளினர். அநந்தரம பெருமாள இளைய பெருமாளுடன அம்முனிவரை வலம வந்து புறப்படுகையில, பிராட்டியார் இருவர்க்கும அம்பறாத் தூணிகளையும, கோதண்டங்களையும, வாள்களையுங் கொடுத்தனர். இவ்விருவர்களும அவைகளை வாங்கிக்கொண்டு தூணீரங்களைக் கட்டிக்கொண்டும, வாள்களை கச்சையிலிறுக்கிக்கொண்டும, கோதண்டங்களை நாணேறிட்டுக் கரத்தி லேந்திக்கொண்டும, பிராட்டியாருடன கூடி, அந்த ஆஸ்ரமத்தை விட்டுப புறப்பட்டருளினர்கள.

ஆரண்யகாண்டத்தில எட்டாவது ஸர்க்கம முற்றிற்று.

---

## ஒன்பதாவது ஸர்க்கம்.

பிராட்டியார் பெருமாளை நோக்கி, அரக்கர்களைக் கொலைசெய்வது தருமமோவென்று வினவி யருளியது.

இவ்வண்ணம ஸுதீக்ஷ்ணமஹாமுனிவரிடத்தில விடை பெற்றுக் கொண்டு புறப்பட்ட பெருமாளைப பிராட்டியார் நோக்கி, ஸ்வாமி, என் பிராண நாயகரே! தேவரீர இப்போழ்து செய்யும்படி மேற்கொண்டிருக்கின்ற முனை தருமம் மிகவும் ஸூக்ஷ்ம மார்க்கத்தினால் சித்திக்கின்றது; இஃது காமத் தோதாதிகளினா லுண்டாகிய துன்பத்தைத் துறந்தவர்க்கெளிதே யன்றிச மின்மூன்றோர்களுக் கெளிதன்று;—

త్రీణ్యేవవ్యసనాన్యత్ర కామజానిభవన్త్యుత॥
మిథ్యావాక్యంపరమకం తస్మాద్గురుతరావుభౌ।
పరదారాభిగమనం వినావైరంచరౌద్రతా॥

த்ரீண்யேவவ்யஸநாந்யத்ர காமஜாநிபவந்த்யுத।
மித்யாவாக்யம் பரமகம் தஸ்மாத்குருதராவுபௌ।
பரதாராபிகமனம் விநாவைரஞ்சரௌத்ரதா॥

பொய்ம்மொழியை மொழிவது, பரத்தையைப் புணர்வது, பகையின்றி யொருவனைப் பகைத்தடிப்பது என்னும் இம்மூன்றும், காமத்தினால் பிறந்த வியஸனங்களெனப் படுகின்றன; இவைகளுள் பொய்ம்மொழியைத் தேவரீர் இதுவரையில் உரைத்திலீர்; இப்போதும் உரைக்கின்றிலீர்; இனியுரையீர்; பிறர் மனைவிகளையும் தேவரீர் கனவிலும் விரும்புகிறிலீர்; இனிமேலும் விரும்புறீர்; எப்பொழுதும் ஸ்வபாரியையினிடத்திலேயே ஆஸக்தியுறுகின்றீர்; தருமம் மறிந்தவரும், ஸத்தியவாதியும், பிதருவாக்கிய பரிபாலனஞ் செய்பவருமாகின்றீர்; இவை முதலிய நற்குணங்கள் ஐம்புலன்களை வென்றவர்களுக்கு அரியனவல்ல; தேவரீர் ஜிதேந்திரியரென்பதையும் அறிவேன்; ஆகிலும், பகைமையின்றி யொருவனைக் கொலை செய்வதென்னும் கொடுமையே தேவரீருக்கிப்போது நேருகின்றது; தண்டகாரண்ய வாஸிகளாகிய ரிஷிகளைப் பாதுகாப்பதன்பொருட்டு, ராக்ஷஸர்களைக் கொலை செய்வேனென்று பிரதிஜ்ஞை செய்தருளினீரல்லீரோ? இதன்பொருட்டேயன்றோ, தேவரீர் தம்பியுடன் வில்லைக் கரத்திலேந்திப் புறப்பட்டிருக்கின்றீர்; ஆதலின், யான் தேவரீருடைய இந்தச் செய்கைச் சிந்தை செய்கையில், இஃதெனக்கு நலமெனத் தோன்றுகின்றிலது, என் மனமும் சிந்தாகுலமாகின்றது; ஆதலின், யாம் இப்பொழுது தண்டகாவனத்தினுட் புகுவது தகுதியற்றது; இது நலமென யானுடன்படேன்; அதற்குக் காரணமுரைக்கின்றேன் கேட்டருளீர்; தேவரீர் ஆயுதத்தைக் கையிலேந்திச் செல்லுகையில், வனசரங்களைக் கண்டு பாணங்களைத் தொடுத்தடிப்பீர்; கையில் ஆயுதமிருக்கின், அஃது வாளாவிருக்க விடாது; க்ஷத்திரியர்களுக்கு வில்லும், அக்கினிக்கு விறகும் அருகிலிருக்கையில், தேஜஸ்ஸையும், பலத்தையும் பெரும்பாலும் வளரச் செய்யும்; முற்காலத்தில் ஒரு மஹாமுனிவர் காட்டிடையில் தவஞ் செய்துகொண்டிருக்கையில், அவருடைய தவத்தைக் கெடுப்பதன் பொருட்டு, இந்திரன் வாளைக் கையிற்பிடித்துக்கொண்டு ஏவலாளன் வேஷம் பூண்டங்கெய்தி, அந்த முனியை நோக்கி ஸ்வாமி! யான் ஒரு காரியமாக ஓரிடம்போய் வருவேன்; யான் வருமளவும் இந்த வாளைத் தேவரீர் பாதுகாத்தளிக்க; மீளவும் யான் வந்து பெற்றுக்கொள்வேனென்றுரைத்து, அந்த வாளை வைப்பாக அவரிடத்தில் கொடுத்து

விட்டுப் போய் விட்டனன். அந்த முனிவும் அந்த வாளை வாங்கிக்கொண்டு வைப்பாதலால், அதனை யோரிடத்திலும் வைத்துச் செல்ல நமபுதலின்றி, எப்பொழுதும் அதனைக் கையில் வைத்துக்கொண்டே திரிந்தனர்; அதனை விட்டு எங்கும் சென்றிலா இவ்வண்ண மிருகையில், தவமுயற்சியில ஊக்கந்தப்பிக் கொடுமைபூண்டு வாளினால பறபல உயிர்களைக் கொன்று கடையில நரகத்தை யடைந்தனர். இவ்வண்ணம் கேழ்ந்ததென்று பெரியோர்கள் கூறுகின்றனர்கள். ஆதலின், ஆயுதம் அருகிலிருக்கின், இத்தன்மைய தாகிய தீமையை விளைக்கும்; ஆயுதமென்பது நெருப்புப்போலச் சேர்ந்தவரைப் பற்றி எரிக்கும்;—

స్నేహాచ్చబహుమానాచ్చ స్మారయేత్వాంనశిక్షయే॥

ஸ்நேஹாச்சபஹுமாநாச்ச ஸ்மாரயேத்வாம் நசிக்ஷயே।

தேவரீர் யாவுமுணர்ந்தவரும், எனக்குக்குருவு மாகினீர் ராதலின், தேவரீர்க்கு யான உபதேசஞ் செய்கின்றிலேன்; ஸ்நேஹத்தினாலும், பஹுமானத்தினாலும், தேவரீருக்கு நினைவூட்டுகின்றேனே யன்றி, சிக்ஷிக்கின்றிலேன்; தேவரீர் இப்பொழுது வில்லேந்தி வைரமின்றி யொருவரைக் கொலைசெய்வதென்பது ஒருநாளுமாகாது; பகையின்றி யொருவரைக் கொலைசெய்ய யானுடன்படேன், வீராகி யரசாட்சிசெய்கின்ற க்ஷத்திரியர்களல்லரோ வில்லேந்தி யார்த்தர்களைப் பரிபாலனஞ் செய்யவேண்டியவர்கள்; தேவரீருக்கு இது தகுதியற்றது; ஆயுதமெங்கே? வனவாசமெங்கே? க்ஷத்திரிய தருமமெங்கே? தவமெங்கே? இவ்வண்ணம் ஒன்றுக்கொன்று விரோதமாயுள்ள தருமங்களை மேற்கொள்வதாகாது; தேச தர்மமாகிய தவமொன்றே பூஜிக்கப்படக் கடவது. இப்பொழுது வில் கையிலிருக்கையில், புத்தி கலக்கமுறும், மீளவும் திருவயோத்தி சேர்ந்தபின்பு, வில்லேந்தி க்ஷத்திரதருமத்தைப் பாதுகாக்கக் கடவீர். தேவரீர் இவ்வண்ணம் முனியாகுவீராகில், கைகேயி தசரதர்களும் மிக மகிழ்வார்கள்,—

ధర్మాదర్థఃప్రభవతి ధర్మాత్ప్రభవతేసుఖం।
ధర్మేణలభతేసర్వం ధర్మసారమిదంజగత్॥

தர்மாதர்த்தப்ரபவதி தர்மாத்ப்ரபவதேஸுகம்।
தர்மேணலபதேஸர்வம் தர்மஸாரமிதஞ்ஜகத்॥

தருமத்தினாலேதானே பொருளின்பங்கள் உண்டாகின்றன; பிறவுமுள்ள யாவும் தருமத்தினாலே பெறப்படுகின்றன; ஆதலின், இவ்வுலகமே தருமமூலமாகின்றது; அந்தத் தருமமும், பறபல நியமோபவாஸாதிகளினால மெய்யை வருத்தித் தவஞ்செய்பவர்களால பெறப்படுகின்றது; ஸுகத்தினால் ஸுகங்கிடைக்குமோ? ஆதலின், தேவரீர் நியமமுடன் பூண்டு தவமோ,

வனத்தில் முனிதிரமத்தையே யநுஷ்டிக்கக் கடவீர். தேவரீர் திருவுள்ளத்தில் மூவுலகங்களும் இயல்பாக விளங்குகின்றன; ஆகலின் தேவரீருக்குத் தருமோபதேசஞ் செய்பவர் யாவருளர்? தேவரீரே தம்பியுடனே நன்காராய்ந்து தக்கவண்ணஞ் செய்தருள்க என்று விண்ணப்பஞ் செய்தனர்.

ஆரணியகாண்டத்தில் ஒன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## பத்தாவது ஸர்க்கம்.

பெருமாள் பிராட்டியார்க்கு ராக்ஷஸ ஸம்ஹாரம்
தருமமென வருளிச் செய்தது.

அநந்தரம் ஸ்ரீராமபிரான் பிராட்டியா ரிவ்வண்ணம் முறைசெய்த வாக்கியத்தைக் கேட்டு மகிழ்ந்து, பிராட்டியாரை நோக்கி, அயி ஜனகராஜன் திருமகளே! நீ விண்ணப்பஞ்செய்த வாக்கியம் உன் குலத்திற்கும், உன் குணத்திற்கும், என்னிடத்திலுள்ள ஸ்நேஹபஹுமானங்களுக்கும் மிகவும் தகுதியுள்ளதே யாகின்றது; ஆகிலும், யான் உரைசெய்யும் வாக்கியத்தை நன்கு கேட்டிணா, க்ஷத்திரியர்கள் ஆர்த்த ஜனபரிரக்ஷணத்தின் பொருட்டு வில்லெடுத்துக் கொடியர்களைத் தண்டிப்பது தருமமேயென்று நீயே யுரைத்தனை யல்லையோ? தண்டகாரணிய வாஸிகளாகிய அந்த முனிவர்களும், ராக்ஷஸர்களால் கொலைசெய்யப்பட்டு ஆர்த்தி யடைந்து என்னைச் சரணமடைந்தனர்கள்; அவர்கள் நாடோறும் ராக்ஷஸர்களால் பீடிக்கப் பட்டவர்களாகி இன்பமுறுகின்றிலர்கள்; அவர்களே என்னிடம் வந்து எங்களைப் பாதுகாத்தளிப்பீர் என்று வேண்டினார்கள்; யானும் அவர்களது வேண்டுகோளுக்கிரங்கி, அவர்களைப் பணிந்து, அவர்களை நோக்கி, ஹே யோகிகளே! தேவரீர் என்மீது அன்புற்றருள்க; யானே தேவரீர்களிடம் வந்து பணிந்து குற்றேவல்களைச் செய்து செல்லவேண்டியிருக்க, தேவரீர்களே என்னிடம் வந்திவ்வண்ணம் வேண்டுவதற்கு யான் மிகவும் நாணமுறுகின்றேன்; அடியேன் இப்பொழுது செய்யவேண்டியது யாதோ வென்று வினவினேன்; அவர்களும் என்னை நோக்கி, ஸ்ரீராமா! கொடியர்களும், வலியர்களும், காமரூபிகளுமாகிய அரக்கர்கள் ஹோமாதிகாலங்களில் வந்து எங்களைப் பீடிக்கின்றனர்கள்; அவர்களைக் கொன்று எங்களை ரக்ஷிக்கக் கடவை. எமக்கு யார் கதியென்று தேடிக் கொண்டிருக்கையில், நீயே தற்செயலாயிங்கெழுந்தருளினை; ஆதலின்,

நீயே எங்களுக்குத் தஞ்சம்; யாங்களும் தவத்திறன்மையினால் அரக்கர்களை நாசஞ்செய்ய வல்லோம்; ஆகிலும், நெடுநாள் செய்த தவங்களின் பலன்களை இது விஷயத்தில் அழித்துக்கொள்ள விரும்புகின்றிலோம்; தவமென்பது பற்பல விக்கினங்களையுடையது; செய்வதற்கும் எளிதன்று; ஆதலின், அரக்கர்களால் யாங்கள் பக்ஷிக்கப்படுகையிலும், அவர்கள்மேல் சாபமிடுகின்றிலோம்; நீயே தம்பியுடன் கூடி எங்களை ரக்ஷிக்கக் கடவை. யாங்கள் உன்னையே நாதனாக உடையோமேயன்றி, எமக்கு வேறே தஞ்ச மிலதென்று அருளிச் செய்தனர்கள். யானும் அது கேட்டு அவர்களை நோக்கி, முனிவர்களே! யான் உங்களுக்கு விரோதிகளாகிய ராக்ஷஸர்களெல்லோரையும் கொலைசெய்து உங்களெல்லீரையும் பாதுகாத்தருளவேனென்று பிரதிஜ்ஞை செய்துரைத்தேன்; யான் பிரதிஜ்ஞை செய்துவிட்ட பின்பு, உயிருள்ள வரையில் எப்படியாவது அதனை நிறைவேற்றுவேனேயன்றி, பிரதிஜ்ஞையை யொருபொழுதுந் தப்பி நடவேன்; எனக்குச் சத்தியமே மிகப் பிரியமுடையது.

అప్యహంజీవితంజహ్యాం త్వాంవాసీతే సలక్ష్మణాం
నతుప్రతిజ్ఞాంసంశ్రుత్య బ్రాహ్మణేభ్యోవిశేషతః॥

அப்யஹம்ஜீவிதஞ்ஜஹ்யாம் த்வாம்வாஸீதே ஸலக்ஷ்மணாம்।
நதுப்ரதிஜ்ஞாம்ஸம்ஸ்ருத்ய ப்ராஹ்மணேப்யோவிஸேஷத:॥

கேளடி ஸீதையே! யான் பிரதிஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்வதன்பொருட்டு எல்லோர்க்கும் மிகப் பிரியமாகி யிருக்கின்ற உயிரையாயினும் விட்டு விடுவேன்; உயிரினும் பிரியமுள்ள உன்னையாயினும் விட்டு விடுவேன்; உன்னிலும் பிரியமுடைய லக்ஷ்மணனையாயினும் விட்டு விடுவேனே யன்றி, பிரதிஜ்ஞையை யொருகாலையிலும் முடிக்காது விட்டுவிடேன்; முனிவர்கள் பொருட்டுச் செய்த பிரதிஜ்ஞையை மிகவும் கைவிடேன்; அடி வைதேஹி! முனிவர்கள் அரையாதிருக்கினும், யான் அவர்களைப் பரிபாலிப்பது கடமை; அவர்களாலும் வேண்டப்பட்டு என்னாலும் பிரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கையில், யான் அவர்களை ரக்ஷிக்கவேண்டுமென்பதற்குக் கேட்கவும் வேண்டுமோ; ஆதலின், யான் முனிவர்களைப் பாதுகாப்பதன் பொருட்டுப் பலாசர்களைக் கொலை செய்ய வேண்டுமென்பதே தருமம்; நீயு மிதனை யறிவாயாயினும், என்னிடத்தில ஸ்நேஹத்தினாலும், பஹுமானத்தினாலும் இவ்வண்ணமுரைத்தனை; அதற்கு யான் மிக மகிழ்ந்தேன்; பிரியமிலாதார்க்கு ஒருவர் இதமுரைப்பாரகளோ? நீ யிவ்வண்ண முரைத்தது உனக்கும், உன் குலத்திற்கும் மிகத் தகுதியுள்ளது; நீ இவ்வண்ணம் தரும சிந்தையுற்று என்னுடன் கூடித் தருமவழிகோணாமல் நடக்கின்றமையின், நீ எனக் குயிரினுமி

பிரியமுடையானாயினை; என்றிவ்வண்ணம் அருளிச்செய்து மைதிலியைப் புகழ்வித்துத் தம்பியுடன் சாப பாணதாரியாகி மிகவும் அழகிய தபோவனங்களை நோக்கி எழுந்தருளினார்.

ஆரண்யகாண்டத்தில் பத்தாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## பதினோராவது ஸர்க்கம்.

பெருமாள் ரிஷிகளது ஆஸ்ரமங்களைச் சுற்றிக்கொண்டு, மீளவும் ஸுதீக்ஷ்ணாஸ்ரமம் வந்து, அங்கிருந்து அகஸ்த்ய ப்ராதாவின் ஆஸ்ரம வழியாக அகஸ்த்யாஸ்ரமத்திற் கெழுந்தருளியது.

---

అగ్రతః ప్రయయౌ రామః సీతామధ్యే సుమధ్యమా|
పృష్ఠతస్తు ధనుష్పాణిః లక్ష్మణోనుజగామహ||

அக்ரத꞉ ப்ரயயௌ ராம꞉ ஸீதா மத்யே ஸுமத்யமா
ப்ருஷ்டதஸ்து தனுஷ்பாணி꞉ லக்ஷ்மணோநுஜகாமஹ ॥

அனந்தரம் பெருமாள் முன்னும், பிராட்டியார் நடுவிலும், இளைய பெருமாள் பின்னுமாக எழுந்தருளினார்கள். இவ்வண்ணம் ஸ்ரீராமலக்ஷ்மணாக ளிருவரும் பிராட்டியாருடன் சென்று பற்பல மலைகளையும், வனங்களையும், நதிகளையும், ஸாரஸ சக்கரவாகம் முதலிய நீர்ப்பறவைகளையும், தாமரை யோடைகளையும், நிரை நிரையாகக் கூடித் திரிகின்ற மான்களையும், மதமேறிக் கொம்பை யசைத்துத் திரிகின்ற மஹிஷங்களையும், காட்டுப்பன்றிகளையும், மரங்களை முறிக்கின்ற யானைகளையும் கண்ணுற்றுக் கொண்டே நெடுந்தூரஞ் சென்று, மாலைப்பொழு தாகுகையில், ஒருகாதவழி நீளமுள்ளதும் தாமரை மலர்ந்தடர்ந்து யானைக் கூட்டங்கள் திகழ்ந்ததும், ஸாரஸ ஹம்ஸ காதம்பாதி ஜலசர பக்ஷிகள் நிறைந்ததும், தெளிந்து குளிர்ந்த ஜலம் நிரம்பியுள்ளதுமாகிய ஒரு தடாகத்தின் கரை சேர்ந்து, ந்ருத்த கீதவாத்யங்களின் தொனியைக் கேட்டும், ஒருவரு மில்லாமையைக் கண்டும் வியப்படைந்து, தம்முடன் வருகின்ற முனிவர்களுள் தாம்பிருத்தனென்பவரை நோக்கி, மாதவரே! வாத்தியங்களின் ஒலிமாத்திரம் மிகவும் இனிமையாகக் கேட்கப்படுகின்றதேயன்றி யொருவரையுங் காண்கின்றிலோம்; ஆதலின், மிக வியப்புற்றிருக்கின்றோம்; இந்தத் தொனி எங்கிருந்தொலிக்கின்றது? இது யாதோ? இவ்விடை யாங்கள் கேட்கத் தகுமாயின், அருளிச் செய்கவென்று வினவியருளினர்கள். அம்முனிவரும் அதுகேட்டு, இவர்களை நோக்கிக் கேளீர்

ராஜகுமாரர்களே! இந்தத் தடாகம் பஞ்சாப்ஸரமென்னும் பெயருடையது; அழிவற்றிவ்வண்ணமே எப்பொழுதும் நிறைந்துள்ளது; மாண்டகர்ணியென்னும் முனிவர் தவத்திறமையினால் இயற்றப்பட்டது; அந்த ரிஷி பதினாயிரம் வருஷம் வாயுபக்ஷராகி, உணவு நீங்கிக் கடுந்தவஞ் செய்கையில், இந்திராக்கினிகள் முதலிய தேவர்களெல்லோரும் அச்சங்கொண்டு, இம்முனிவர் நம்முள் யாருடைய பட்டத்தைக் கோரித் தவஞ் செய்கின்றனரோ, என் றொருவர்க்கொருவர் உரைத்துக்கொண்டு, இவருடைய தவத்தைக் கெடுப்பதன்பொருட்டு, அப்ஸரஸர்களுள் சிறந்தவர்களாகிய ஐந்துபேர்களை யனுப்பினார்கள்; அந்த அப்ஸரஸர்களும் இவரிடம் வந்து இவரை மயக்கிக் கேளிக்கையாளாக்கி விட்டனர்கள். பின்பு அந்த மாண்டகர்ணியும், இவர்களைக் காமுற்று மணஞ் செய்துகொண்டு தம் யோக மஹிமையினால் யுவராகி இந்தத் தடாகத்தையும், இதன் நடுவில் மாடமாளிகையையும் இயற்றி, அல்லும் பகலும் அந்த அப்ஸரஸர்களுடன் புணர்ந் தின்புறுகின்றனர்; அந்த மனையும், இந்தத் தடாகத்தினுள் மறைந்திருக்கின்றது; அந்த அப்ஸரஸர்களே ஆட்டமாடியும், பாடியும், அம்முனிவரை மகிழ்விக்கின்றனர்கள், அந்த வொலியே இங்கே கேட்கப் படுகின்றதென்று முனி செய்தனர். ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் பிராட்டியாருடன் அதைக் கேட்டு மகிழ்ந்து, ரிஷிகளுடனும் பிரஹ்மதேஜஸால் விளங்குகின்ற ஆஸ்ரமமண்டலங்களைக் கண்டு புகுந்து பூஜிக்கப்பட்டவராகி வாழ்ந்தனர். இவ்வண்ணம் பெருமாள் அந்த ஆஸ்ரமங்களில் எல்லாருடனும் வாழ்ந்து; முறையே யங்கங்குள்ள ஆஸ்ரமங்களுக்கு யெழுந்தருளி, சில விடங்களில் பத்து மாஸங்களும், சில விடங்களில் ஒரு வருஷமும், சில விடத்தில் நான்கு மாஸமும், சில விடத்தில் ஐந்து மாஸமும், சில விடத்தில் ஆறு மாஸமும், சில விடத்தில் ஒரு மாஸமும், சில விடத்தில் ஒன்றரை மாஸமும், சில் விடத்தில் மூன்று மாஸமும், சில விடத்தில் எட்டு மாஸமும் சுகமாக வாசஞ் செய்கையில், பத்து வருஷங்கள் சென்றன; பின்பு, பெருமாள் மீளவும் திரும்பி ஸுதீக்ஷ்ணாஸ்ரமத்திற் கெழுந்தருளி, அவரால் பூஜிக்கப் பட்டவராகிச் சிலகால மிருந்து, ஒருநாள் ஸுதீக்ஷ்ண மஹாமுனியைப் பணிந்து, பகவானே! இந்த அரணியத்திலே அகஸ்த்யமஹாமுனி யெழுந்தருளி யிருக்கின்றனரென்று முனிவர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன், ஆகிலும், இவ்வரணியம் மிகப் பெரிதாதலின், அவருடைய ஆஸ்ரமம் எங்கிருக்கின்றதோ அறிகின்றிலேன்; அவருடைய ஆஸ்ரமம் எங்கிருக்கின்றதோ அருளிச் செய்க; தேவரீருடைய அருளினால் ஸீதாலக்ஷ்மணர்களுடன் கூடி யகஸ்த்ய மஹாமுனிவரைக் கண்டு பணிந்து மகிழ்வேன்; அம்முனிவரை யான் கண்டு பணிந்து குற்றேவல் செய்யு

வேண்டுமென மிக விரும்புகின்றேனென்று வினவினர். ஸுதீக்ஷ்ண
மஹாமுனியும் அதுகேட்டு மகிழ்ந்து பெருமானை நோக்கி, அடா ராமா!
யானே உன்னை நோக்கி, அகஸ்தியாஸ்ரமத்திற்கு ஸீதா லக்ஷ்மணர்களுடன்
செல்லுகவென் றுரைசெய்யவேண்டுமென விருந்தேன்; தைவாதீனமாக
நீயே வினவினை; ஆதலின், யான் அகஸ்த்யாஸ்ரமம் இருக்குமிடத்தை
யுரைக்கின்றேன் கேளாய்; இங்கிருந்து தெற்காக நான்குயோஜனம் செல்
வாயாகில், அங்கே அகஸ்த்ய ப்ராதாவின் ஆஸ்ரமமிருக்கின்றது; அவ்விடத்
தில் பிப்பலிக் காடுள்ளது; அதில் கனிகள் பழுத்தும், மலர்கள் மலர்ந்
தும், பற்பல பறவைகள் ஒலித்தும், தாமரை பூத்தும், தண்ணீர் நிறைந்
தும், பலவகைப்பட்ட நீர்ப்பறவைகள் சூழ்ந்தும் திகழும்; அவ்விடத்தில்
ஓரிரவுதங்கி, மறுநாளுதயத்தி லங்கிருந்து புறப்பட்டு அதற்குத் தெற்கில்
அடர்ந்த வனத்தின் பக்கமே சென்று ஒருயோஜனம் தாண்டுகையில்,
அங்கு அகஸ்த்யாஸ்ரம மிருக்கின்றது; அதனைக் கண்டு நீங்களெல்லீரும்
மகிழ்வுறுவீர்கள்; அந்த அகஸ்தியமஹாமுனியைக் கண்டு பணிய ஆவலு
ள்ளதாயின், இப்பொழுதே புறப்பட்டுச் செல்க; என்றருளிச்செய்தனர்.

பெருமாளும் அதுகேட்டு உடனே ஸீதா லக்ஷ்மணர்களுடன் அவ
ரைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டு, அகஸ்த்யாஸ்ரமத்தை நோக்கிப்
புறப்பட்டு, ஸுதீக்ஷ்ணர் உரைத்த மார்க்கமே பற்றிச் சென்று பற்பல
வனங்களையும், மலைகளையும், ஆறுகளையுங்கண்டு மகிழ்ந்து, இளையபெரு
மாளை நோக்கிப் பிரிய லக்ஷ்மணா! இதோ அந்த அகஸ்த்ய ப்ராதாவின்
ஆஸ்ரமங் காணப்படுகின்றது; பழுத்த பிப்பலிகளின் மணங்கமழ்ந்த மந்த
மாருதம் வீசுகின்றதன்றோ? அங்கங்குக் கட்டைகளும் வெட்டிக் குவிக்
கப்பட்டிருக்கின்றன; தர்ப்பைகளும் அறுக்கப்பட்டிருக்கின்றன; இந்த
ஆஸ்ரமத்தின் நடுவில் ஹோம தூமமும் மிக்க கறுத்து மேலெழுகின்றது;
பரிசுத்தியுள்ள தீர்த்தங்களில் நீராடித் தூய்மைகொண்ட முனிவர்களும்,
பகவதா ராதனத்தின் பொருட்டு மலர் கொய்கின்றனர்கள்; ஆதலின்,
ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரால் கூறப்பட்ட அகஸ்திய ப்ராதாவின் ஆஸ்ர
மமே இதுவாகும்; உலகங்களுக்கு இதஞ்செய்வதன்பொருட்டே இவர்க்கு
ப்ராதாவாகிய அகஸ்த்யமஹாமுனிவர் இந்தத் தென்திசையை யடைந்து
மிருத்யுவைப் போக்கி யருளுகின்றனர்; இங்கே முன்பு இல்வல வாதா
பிகளென்னும் இரண்டு அஸுரர்கள் வாஸஞ்செய்துகொண்டு, ப்ராஹ்
மணர்களைக் கொலை செய்துகொண்டிருந்தனர்கள். அவர்களுள் இல்வலன்
ப்ராஹ்மணவேஷம் பூண்டு ஸம்ஸ்க்ருத பாஷையுரைத்துக்கொண்டு, வேதி
யர்களை ஸ்ராத்தமென்று நிமந்த்ரணஞ்செய்து ஆட்டினுருவங்கொண்ட
வாதாபியை யறுத்துச்சமைத்து உண்டிகளில் கலந்து, அந்த வேதியர்
களைப் புசிப்பித்து, மந்திர பூர்வமாகத் தம்பியை யுத்தேசித்து, அடா

வாதாபி! எழுந்துவாவென்றுகூவி யழைக்கையில், உடனே வாதாபியும் ஆடுபோலக் கத்திக்கொண்டு அந்த வேதியர்களது குடலைப் பீறிக்கொண்டு வெளியே வருவான். இவ்வண்ணம் அவர்களால் அநேகமாயிரம் பிராஹ்மணர்கள் கொலைசெய்யப்பட்டனர்கள். அநந்தரம் தேவர்களெல்லோரும் அகஸ்த்யமஹாமுனிவரை வேண்டி, அந்த வசுரர்களைக் கொலைசெய்யும்படி யுரைத்தனர்கள். அகஸ்திய மஹாயோகியும் அதற்குடன்பட்டிங்கு வருகையில், இல்வலனை இவரைக்கண்டு வழக்கப்படி நிமந்தரணஞ்செய்து ஆட்டினுருவங்கொண்ட தம்பியைப் புஜிப்பித்து, ஸகலம் ஸம்பூர்ண மென்றுரைத்த பின்பு, உத்தரா போசன மளித்துத் தம்பியை யுத்தேசித்து, வாதாபியே! எழுந்திராயென் றுரைத்தனன். அகஸ்திய மஹாமுனிவர் அது கேட்டு (வாதாபே ஜீர்ணோபவ) என்றுரைசெய்து இல்வலனை நோக்கி, அடா இல்வலா! என்னால் புஜிக்கப்பட்ட பின்பும், வாதாபி எழுந்துவருந் திறமையுள்ளனோ வென்று நகைத்துரைசெய்தனர். இல்வலனது கேட்டு அவரைக் கொலை செய்யும்படி எதிர்த்து வருகையில், அகஸ்தியமுனிவரும் வெகுண்டு விழிக்கையில், இல்வலன் பக்கென் றெரிந்திறந்தனன். அத்தன்மையராகிய அகஸ்திய மஹாயோகியின் ப்ராதாவினுடைய ஆஸ்ரமமீதடா தம்பி! என்றிவ்வண்ணம் உரைத்துக்கொண்டிருக்கையில், ஆதித்தன் அஸ்தகிரி யடைந்தனன், சந்தியா பொழுதும் தோன்றிற்று; பின்பு, பெருமாள் இளையபெருமாளுடன் ஸந்த்ய கருமங்களை முடித்துக்கொண்டு ஆஸ்ரமத்தினுட் புகுந்து அகஸ்த்ய ப்ராதாவைக் கண்டு பணிந்தனர். அம்முனிவரும் இவர்களைக்கண்டு மகிழ்ந்து பூஜித்தனர். பெருமாளும் சுகமாக அன்றிரவை யங்குப்போக்கி, மறுநாளுதயத்தி லெழுந்து செய்கடன்களை முடித்துக்கொண்டு அகஸ்த்ய ப்ராதாவைக் கண்டு பணிந்து அவரை நோக்கி, மாதவரே! தேவரீருடைய ஆஸ்ரமத்தில் இரவைச் சுகமாகப் போக்கினேன்; தேவரீருடைய தமையனா ராஸ்ரமஞ் செல்வோம் விடை கொடுத்து வாழ்த்தியருளுக என்றுரைத் தருளினர்.

அம்முனிவரும் அது கேட்டுப் பெருமாளை நோக்கி, ஸ்ரீராமா! நீங்கள் சுகமாகப் போய் வாரீர்களென்று விடைமொழி மொழிந்து வாழ்த்தியனுப்பினர். பெருமாளும் விடைபெற்றுக்கொண்டு ஸுதீக்ஷ்ணமஹாமுனிவர் அருளிச்செய்த வழியேபற்றிச் சென்று, அருகிலுள்ள வனத்திலிருந்த நீவார பனஸ தாலத மாலதி நிசுள குளவஞ்சுள தவ மதூக பில்வ சிரிபில்வ திந்துகம் முதலிய மரங்களையும், அம்மரங்களில் படர்ந்து மலர்ந்துள்ள வல்லிகளையும், யானைகளின் துதிக்கைகளினால் முறிக்கப்பட்ட கிளைகளையும், குரங்குகளினா லசைக்கப்பட்ட நுனி மரங்களையுங் கண்டு மகிழ்ந்து, பின்புறத்தில் வருகின்ற இளையபெருமாளை நோக்கித் தம்பி! இங்கே மரங்கள் யானை முதலியவைகளால் முறிக்கப்படாமல் அடர்ந்த இலைகளை யுடையன வாத

லாலும்; விலங்குகளும், பறவைகளும், பகை நீங்கி யடங்கி இருக்கின்றமையாலும், அகஸ்தியமஹாமுனிவரது ஆஸ்ரமம் அருகிலிருக்கின்றது போலும், அந்த மஹாமுனிவர் தம்முடைய தவமஹிமையினாலேயே அகஸ்தியர் அகஸ்தியரென்றெங்கும் புகழப்படுகின்றனர்; ஆதலின், அவருடைய ஆஸ்ரமமே இது; இவ்வனம் மிகுந்த புகை சூழ்ந்தும், மரவுரிகளினால் விளங்கியும், பகையற்ற விலங்குகள் பொருந்தியும், பலவகைப் பறவைகள் ஒலித்தும் விளங்குகின்றது; இந்த அகஸ்திய மஹாமுனியினிடத்தில் அச்சங்கொண்டே அரக்கர்கள் இங்குச் சேர்கின்றிலர்கள்; அம்முனிவர் இந்தத் தென்றிசைக்கு எதுமுதலெழுந்தருளினரோ, அதுமுதல் அரக்கர்களும் பகைநீங்கிச் சாந்தியடைந்திருக்கின்றனர்கள். இம்மஹாமுனிவரால் இத்தென்றிசை பீடையற்றிருக்கின்றமையின், இது அகஸ்தியதிசையென்றே கூறப்படுகின்றது; வெய்யோனுடைய வழியையுந் தகையும்படி மேலெழுந்து வளர்ந்த விந்திய சைலமும், இவருடைய ஆஜ்ஞைக்கு உட்படிந்தே அடங்கி வளராதிருக்கின்றது; அத்தன்மையருடைய ஆஸ்ரமமாதலின், இது மிக விருப்புற்ற ஜனங்களினால் அடையப்பட்டிருக்கின்றது; இம்மஹாமுனிவரே நாம்வந்ததையறிந்து ஆதரஞ்செய்து நமக்கு நலஞ்செய்தருள்வர்; யான் அவரைப் பூஜைசெய்துகொண்டே வன்வாஸசேஷத்தையும், அங்குவாஸஞ்செய்துபோக்குவேன்; இவ்விடத்தில் தேவகந்தர்வ ஸித்த சாரணாதிகளும்வந்து அகஸ்தியமஹாமுனிவரைப் பணிகின்றனர்கள்; இவ்விடத்தில் பொய்யுரைப்பவன், கொடுமையுடையோன், ஏகாந்தமாகத் தீமைசெய்பவன், பீடை செய்பவன், மனம்போனபடி நடப்பவன், காமங்கொண்டவன் இவர்களுள் ஒருவனும் இவ்விடத்தில் பிழைத்திரான், இம்மஹாமுனிவர் அத்தன்மையரல்லரோ? இவ்விடத்தில் தேவாதிகளும் ஆகாரநியமமுடையவர்களாகித் தவஞ்செய்கின்றனர்கள்; இவ்விடத்தில் தவஞ்செய்தவர்கள் சித்தியடைந்து திவ்விய விமானங்களிலேறி விண்ணுலகஞ் சேர்கின்றனர்கள்; இவ்விடத்தில் தவஞ்செய்பவர்களுக்குத் தேவர்கள் யக்ஷலோகத்தையும், விண்ணுலகினையும், இம்மையில் பற்பல ராஜ்ஜியங்களையும் அளிக்கின்றனர்கள், அடா லக்ஷ்மணா! யாம் இந்த ஆஸ்ரமம் வந்துசேர்ந்தனம்; ஆதலின், நீ முன்னேசென்று யான் ஸீதையுடன் வந்திருக்கின்றேனென்று அகஸ்தியமகாமுனிவருக்கு அறிவிக்கக்கடவையென்றருளிச்செய்தனர்

ஆரணியகாண்டத்தில், பதினோராவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

அயோத்தியாகாண்டத்தில் பெருமாள் காடு புகுகையில், இளைய பெருமாளை முன்னும், பிராட்டியாரை இடையிலும், தாம் பின்னும் செல்லும்படி ஏற்பாடு செய

## பன்னிரண்டாவது ஸர்க்கம்.

### பெருமாள் அகஸ்திய மஹர்முனியைக் கண்டு பணிந்து அவரால் பூஜிக்கப் பட்டது.

அநந்தரம் இளையபெருமாள் அகஸ்தியாஸ்ரமத்தினுள்ளே சென்று அகஸ்த்யசிஷ்யரொருவரை நோக்கி, முனியே! ஸ்ரீதசரத சக்கரவர்த்தியின் மூத்தகுமாரரும், சிறந்த தோள்வலியுற்றவருமாகிய ஸ்ரீராமபத்திரர், பாரியையாகிய ஸீதாபிராட்டியாருடன் உம்மாசிரியரைக் கண்டு வந்தனஞ்செய்வதன்பொருட்டெழுந்தருளியிருக்கின்றனர்; யான் அவர்க்குத் தம்பியும், அநுகூலனும், பக்தியுடையவனும், லக்ஷ்மணனென்னும் பெயருடையோனுமாகின்றேன்; நீர் எங்களைக் கேட்டிருக்கின்றீரோ? அந்த நாங்கள் மூவரும் பிதாவினாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்வதன்பொருட்டு, இந்தத் தண்டகாவனத்தை யடைந்தோம்; ஆதலின், நாங்கள் அகஸ்தியபகவானைக் காணக்கோருகின்றோம், இச்செய்தியை நும்மாசிரி

[illegible]ருளிச்செய்து, அவ்வண்ணமே தாம் எழுந்தருளினர். இங்கே (அக்ரத:ப்ரயயௌராம:) என்று பெருமாள் தான் முன்னே எழுந்தருளி இளையபெருமாளைப் பின்னே வரும்படி செய்ததென்னெனில், முன்பு துணையின்றி, பூர்வமே புறப்பட்டமையாலும், அக்காட்டில் எவ்விடத்தில் எவர்களிருப்பதையும் அறிந்திராமையாலும், தாமே முன்னே செல்லுங்கால், பின்புறத்தில் யாரேனும் ஒளித்திருந்து பிராட்டி இளையபெருமாள் இவர்களுக்குத் தீங்கு செய்வார்களோ வென்றையமுற்றுப் பெருமாள் இவ்விருவர்களையும் பாதுகாக்கும்படி தாம் பின்னே எழுந்தருளினர். இங்கே எல்லா விடங்களிலும் திரிந்து அங்கங்குள்ள விசேஷங்களை யறிந்திருக்கையாலும், முனிவர்கள் பின்னே துணையாக வருகின்றமையாலும், அச்சமின்றித் தாம் முன்னே எழுந்தருளினர். ஸ்திரீயாதலாலும், முன்னுகிலும் பின்னுகிலும் பெருமாளைச் சார்ந்தே இருக்கவேண்டியவராதலாலும், பிராட்டியார் எப்பொழுதும் இடையிலேயே வந்தாரென்றுணர்க. ஸம்பிரதாயார்த்தமேதெனில், குருவந்தனம் செய்பவர்கள் ஸ்வாசார்ய ப்ராசார்யன் முதலாகப் பிராட்டியார் பெருமாளளவாகவாவது பெருமாள் தொடங்கி ஸ்வாசார்யனளவாகவாவது வந்தனம் செய்யவேண்டுமென்பதை யறிவிப்பதற்காக அங்கே பின்னும், இங்கே முன்னுமாகப் பெருமாளெழுந்தருளினரென்றறிக, லக்ஷ்மணசப்தம் ஸ்ரீ உடையவரிடத்திலும் வர்த்திக்கின்றமையின், ஆசார்ய ஸம்பிரதாயத்தையும், தாற்பரிய லக்ஷணையால் அறிவிக்கின்றது, அன்றியும், பெருமாளைச் சரணமடைவோர் ஆசார்யனை முன்னிட்டுக்கொண்டே தன்னைச்சரணமடையவேண்டுமென்பதை யறிவிப்பதற்காக அங்கே இளையபெருமாளை முன்னே செல்லவிட்டுத் தாம் பின்னெழுந்தருளினர் இங்கே ஆசிரியரானுபதேசஞ்செய்யப்பட்டு மூலமந்திரத்தின் முதலெழுத்தின் பொருளின்னிலையை வெளியிடுவதன்பொருட்டு முன்னே எழுந்தருளினரெனவும் உணர்க; ஸ்ரீமத் வேதாந்த தேசிகரால் இங்குற்ற ச்லோகமே எட்டெழுத்தின் முதலெழுத்தின் பொருண்முறைக்குத் திருஷ்டாந்தமாக வருளிச் செய்யப்பட்டது.

பரீக்கு அறிவிக்கக் கடவீரென் றுரைத்தருளினர். அம்முனிவரும் அது கேட்டு அக்கினி ஹோத்திராலயத்தி லெழுந்தருளியிருந்த அகஸ்திய பகவானை நோக்கி, ஆசிரியரே! தாசரதிகளாகிய ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் ஸீதாபிராட்டியாருடன் வந்திருக்கின்றனர்கள்; தேவரீரைக் கண்டு பணிய விரும்புகின்றனர்கள்; இதைத் திருச்செவிசாத்தி மேலே நடக்க வேண்டு வதை யருளிச் செய்க வென்று விண்ணப்பஞ் செய்தனர்.

அகஸ்தியபகவானும் பெருமாளெழுந்தருளியதைக் கேட்டு மகிழ்ந்து, அஹோ? ஸ்ரீராமபிரான் ஸீதா லக்ஷ்மணர்களுடன் தண்டகாவனத்திற்கெழுந் தருளி நெடுநாளாகியும், இப்பொழுதே எமது நல்வினையினால் இங்கெழுந் தருளினர்; யானும் அவர் எப்பொழுது இங்கெழுந்தருளுவரோ வென்றே எதிர்பார்த்திருந்தேன்; நீர் விரைவாகச் சென்று ஸீதா லக்ஷ்மணர்களுடன் ஸ்ரீராமபிரானைப் பூஜித் தெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருக, என இது வரையில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வாராமல் ஆலஸ்யஞ் செய்தீர் என்று அருளிச்செய்தனர். சீடரும் அதுகேட்டு ஆசிரியரைப் பணிந்து, ஸ்வாமி! அவ்வண்ணமே ஸ்ரீராமாதிகளை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவேனென்று கைகுவித்து விண்ணப்பஞ் செய்து விட்டு விரைவாக வெளி யில் வந்து இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணரே! ஸ்ரீராமபிரான் எங்கே? எங்கே? விரைவாக எழுந்தருளுக, ஸ்வாமியைப் பார்க்க என்று வினவினர். இளையபெருமாளும் அது கேட்டு அம்முனிவரை ஆஸ்ரமத்தின் வாயிலில் அழைத்துக்கொண்டு வந்து பெருமாளைக்காட்டினர். அம்முனிவரும் பெரு மாளைக் கண்டு அகஸ்தியபகவான் அருளிச்செய்த வாக்கியத்தை யுரைத்துத் தக்கபடி பூஜைசெய்து உள்ளே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றனர். பெருமாளும் ஸீதா லக்ஷ்மணர்களுடன் ஆஸ்ரமத்தினுட்புகுந்து, அங்கே அகஸ்தியாதிகளினால் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்ற பிரஹ்மா, அக் கினி, ஸ்ரீமஹாவிஷ்ணு, மஹேந்திரன், விவஸ்வான், ஸோமன், பகன், குபே ரன், தாதா, விதாதா, வாயு, திருவநந்தாழ்வான், காயத்ரி, வஸுதேவர்கள், வருணன், கார்த்திகேயன், தாமன் என்னும் இப்பதினேழு தேவர்களது ஸ்தா னங்களைக் கண்ணுற்றுக்கொண்டே எழுந்தருளினர். அகஸ்தியபகவானும் சீடர்களுடன் கூடிப் பெருமாளை எதிர்கொண் டெழுந்தருளினர்.

பெருமாள் அவரைக் கண்டு இளையபெருமாளை நோக்கிப் பரத லக்ஷ்மணா! அகஸ்த்யபகவான் ஆஸ்ரமத்தினின்றும் புறப்படுகின்றனர்; இவ் விடத்திலுள்ள தேஜோவிசேஷத்தினால் இவரே அகஸ்த்ய பகவானென்று நினைக்கின்றேனென்றருளிச்செய்து, அகஸ்தியமஹாமுனிவரைக் கிட்டித் திருவடி களைத்தொழுது ஸீதா லக்ஷ்மணர்களுடன் கைகுவித்து நின்றனர். அகஸ் திய பகவானும் இவர்களை யழைத்துக்கொண்டு வந்து அர்க்யபாத்யாஸநாதி களினால் பூஜித்து, நல்வரவு வினவிப் பின் புடைசூழவென்று அருளிச்

செய்து, அக்கினியில் ஹோமஞ் செய்து வானப்பிரஸ்த விதியின்படி பூஜித்துப் போஜனமும் அளித்தனர். பின்பு, கைகுவித்து நிற்கின்ற பெருமாளை அகஸ்தியமுனிவர் நோக்கி, கேளாய் ஸ்ரீராமா! தவசியாயினோன் முதலில் ஹோமஞ்செய்து, பின்பு அதிதியை யாகயாதிகளினால் பூஜிக்கக் கடவன். இவ்வண்ணஞ் செய்யானாகில், தப்புஸாக்ஷி சொன்னவன்போல நரகில் வீழ்ந்து, தன்னுடைய மாமிஸங்களையே தானுண்பான்; நீ எல்லா வுலகங்களுக்கும் நாதனும், தருமமுடையோனும், மஹாரதனும், யாவர்க்கும் பிரியமுடையோனுமாகி யதிதியாக வந்தமையின், நீ பூஜைக்குரியவனென்றுரைத்துக் காய் கனி மலர் முதலியவற்றால் பூஜித்துப், பின்பும் பெருமாளை நோக்கி, ஸ்ரீராமசந்திரா! இங்கே பாராய், இந்த வில் விஸ்வகர்மனால் இயற்றப்பட்ட ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய கோதண்டம்; இந்தக் கணையோவெனில் சூரியன்போல விளக்க முடையது; பிரஹ்மாவினால் அளிக்கப்பட்டது; இது ஒருகாலும் பயனற்றதாகாது; எரிகின்ற அக்கினிகள் போன்ற பாணங்கள் நிறைந்த அம்பறாத்தூணிகளிவை யிரண்டும்; தங்கத்தினாற்செய்த உறையுடையதும், தங்கக்கட்டமைந்ததுமாகிய கூரியவாளிஃது; இந்த வில்லினாலேயே முன்பு ஸ்ரீமஹாவிஷ்ணு போரில் அஸுரர்களை வெற்றிகொண்டு தேவர்களைப் பாதுகாத்தருளினார், இவைகளைத் தேவேந்திரன் உன் பொருட்டு என்னிடத்தில் வைத்துச் சென்றனன், ஆதலின், நீ வெற்றிகொள்வதன் பொருட்டிவைகளைப் பெற்றுக்கொள்க; என்றருளிச்செய்து, அவைகளை எடுத்தளித்து, மீளவும் பெருமாளை நோக்கி யருளிச்செய்யலுற்றனர்.

ஆரண்யகாண்டத்தில் பன்னிரண்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

இந்தச் சருக்கத்தில் அகஸ்தியாஸ்ரமத்தில் எல்லாத் தேவாலயங்களும் இருக்கையில், சிவாலயம் மாத்திரம் இருந்ததாகக் கூறாமையின், ஸாத்விகர்களுக்குச் சிவன் பூஜைக்குரியரல்லரென்று விளங்குகின்றது, பூஜைக்குரியரேல் அகஸ்தியமஹாயோகியும் அவரைப் பூஜித்திருக்கவேண்டுமன்றோ? ஆதலின், சிவபூஜை செய்பவர்கள் தாமஸர்களே யாகுவாரென்று அறிஞர் கூறுகின்றனர்கள். ஸாத்விகர்கள் பிரஹ்மாதிகளைமாத்திரம் பூஜிப்பதொக்குமோவெனில், ஸ்ரீமத் பரமவைதிகர்கள் தேவதாந்தரங்களைத் தொழார்களே யன்றி, அப்ரபன்னர்கள் தொழுவார்கள். பிரபன்னர்களும், இங்குரைக்கப்பட்ட பதினேழு தேவர்களும், யாகவிசேஷத்தி லுரைக்கப்பட்ட பதினேழு மந்திராக்ஷர தேவர்களாதலின், தத்தச் சரீரக பரமாத்ம புத்தியால் பூஜிப்பார்கள். ஸர்வ பதங்களும் முக்கிய விருத்தியால் ஸ்ரீமந்நாராயண வாசகமென்று ஸூத்ரகாரராலேயே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றதெனவறிக; பெருமான் ஸ்ரீபரசுராமனிடத்திலிருந்து விஷ்ணுதனுஸ்ஸை வாங்கி வருணனிடத்தில் கொடுத்ததாகப் பாலகாண்டத்திலே கூறப்பட்டிருக்கின்றது, இந்திரன் அந்த வில்லையே வாங்கிக்கொண்டு வந்து அகஸ்திய பகவானிடத்தில் வைத்தனன்; இதனையே பெருமான் அங்கீகரித்தனர். ஜனஸ்தான யுத்தத்திலே இதற்குபயோகமாதலின், இதுவரையில் சுமையே யென்று பெருமான் முன்னே வருணனிடத்தில் கொடுத்தருளினரெனவுணர்க.

## பதின்மூன்றாவது ஸர்க்கம்.

### பெருமாள் அகஸ்தியமுனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பஞ்சவடிக்குப் புறப்பட்டது

கேளாய் ஸ்ரீராமா! யான் மிகவும் மகிழ்வுகொண்டேன்; என்னைக் காண்பதன் பொருட்டே ஸீதா லக்ஷ்மணர்களுடன் இங்கெழுந்தருளினை யல்லையோ? வழிநடந்த ஸ்ரமம் உங்களை மிகவும் வருத்துகின்றது; இந்த ஸீதையும், ஜனகராஜன் திருமகளும், காட்டுவாகைப் பூவினும் மெதுவாகிய திருமேனி யுடையவளும், இதுவரையில் துக்க முறாதவளுமாதலின், அவள் பெரும்பாலும் வருத்த முறுவாள்; வனமென்பது பற்பல தோஷங்களை யுடையது; பர்த்தாவினிடத்திலுள்ள ஸ்நேஹத்தினால் இத்துன்பங்களைப் பொறுத்து இங்கெய்தினாள்; இவள் இவ்வண்ணம் உன்னுடன் வந்த தென்பது மிகச் செயற்கரியது; ஆதலின், இவள் துன்புறாவண்ணம் செய்யத் தக்கவை.—

ఏషా హి ప్రకృతిః స్త్రీణా మాసృష్టే రఘునన్దన ।
సమస్థమనురజ్యన్తి విషమస్థం త్యజన్తి చ ॥

ஏஷா ஹி ப்ரக்ருதி: ஸ்த்ரீணா மாஸ்ருஷ்டே ரகுநந்தந ।
ஸமஸ்தமனுரஜ்யந்தி விஷமஸ்தம் த்யஜந்தி ச ॥

கேளாய் ஸ்ரீரகுநந்தனா! ஸ்திரீகள் பர்த்தா செல்வமுற்றிருக்கையில், காமுறுவராய்ச் சேர்கின்றனர்கள், ஆபத்துற்றகாலையில், துறக்கின்றனர்கள்; இதுதான் பெண்களுக்கியல்பாயுள்ள பண்பு, பெண்கள் மின்னலின் நிலையின்மையினையும், வாளின் கூர்மையினையும், கருடாநிலங்களின் வேகத்தையும் அநுஸரிக்கின்றனர்கள்; உன் பாரியையாகிய இச்சீதையோவெனில், இத்தன்மையனவாகிய தோஷங்களின்றி, அருந்ததிபோலப் புகழத்தக்கவளாகின்றனள்; ஸ்ரீராமா! நீ ஸீதா லக்ஷ்மணர்களுடன் இங்கெழுந்தருளியிருக்கின்றமையின், இவ்விடம் அலங்காரஞ் செய்யப்பட்டதுபோல விளங்குகின்றது;" என்றிவ்வண்ணம் அகஸ்தியமுனிவர் பெருமாளை நோக்கியருளிச் செய்தனர். பெருமாளும் எரிதழல் போன்ற அம்முனிவரை நோக்கிக் கைகுவித்து, அகஸ்திய மஹாயோகியே!—

ధన్యోస్మ్యనుగృహీతోస్మి యస్య మే మునిపుంగవః ।
గుణైస్సభ్రాతృభార్యస్య వరదః పరితుష్యతి ॥

தன்யோஸ்ம்யநுக்ருஹீதோஸ்மி யஸ்ய மே முநிபுங்கவ: ।
குணைஸ்ஸப்ராத்ருபார்யஸ்ய வரத: பரிதுஷ்யதி ॥

முனிவர் கோமானாகிய தேவரீர் ஸீதா லக்ஷ்மணர்களுடன் கூடிய அடியேனிடத்தில், அன்புகூர்ந்து மகிழ்கின்றமையின், யான் தன்யனும்,

யருள்செய்யப் பட்டவனு மாகின்றேன்; அடியேன் வாஸஞ் செய்வதற்குரிய நீர்வளமுள்ள இடம் எங்குளதோ அதனை யருளிச் செய்க; அவ்விடத்தில், யான் பர்ணசாலை கட்டிக்கொண்டு வாழ்வேனென்ற றருளிச் செய்தனர். அகஸ்தியபகவானும் பெருமாளருளிச்செய்த வாக்கியத்தைக் கேட்டு முகூர்த்தகாலம் தியானம் செய்து, முன்பு நடப்பதை ஞானக் கண்ணினால் கண்டு பெருமாளை நோக்கி, ஸ்ரீராமா! இதற்கிரண்டுயோஜன தூரத்தில் பஞ்சவடியெனனும் பெயருற்ற ஒரு ஸ்தானமுளது; அது காய் கனிகளுடையதும், நீர்வள முற்றதுமாக விளங்குகின்றது; அவ்விடத்தில் நீ பர்ணசாலை கட்டிக்கொண்டு ஸீதா லக்ஷ்மணர்களுடன் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருக்கக்கடவை. காகுத்தா! தந்தை யுனக் குறித்த காலமும் பெரும்பாலும் சென்று விட்டது; இனி யற்பகாலமே யுளது; ஆதலின், நீ விரைவில் பிரதிஜ்ஞையை முடித்து விட்டுச் சுகமாக ராஜ்ஜியத்தை யடைந்து மகிழ்வாய்; உன் தந்தை யொருவரே யல்லரோ நல்வினையினர்; அவர் மூத்தகுமாரனாகிய உன்னால் யயாதி போலக் கடை யேற்றப்பட்டு மகிழ்வுற்றனரல்லரோ? யான் தபோமகிமையினாலே நீ பிறந்தது முதல் இதுவரையிலும் நிகழ்ந்த சரித்தங்களையும், உன்னுடைய திருவுள்ளத்திருக்கின்ற பாவத்தையும் அறிந்திருக்கின்றேன்; ஆகிலும், இங்கே என்னுடன் சிலநாள் வாஸஞ்செய்து, பின்பு பஞ்சவடிக் கெழுந்தருள லாகுமேயென றிவ்வண்ண முரைத்தேன்; உன் பாவத்தை யான் அறிகின்றமையாலேயே பஞ்சவடிக் கெழுந்தருளுக வென்று உரைக்கின்றேன்; அந்தப் பஞ்சவடியும் மிகவழகிய தாதலின், ஸீதாபிராட்டி யங்கே மகிழ்வுறுவள்; அந்த இடம் கோதாவரிநதியினருகிலிருக்கின்றது; அதில் காய் கனிகள் நிறைந்தும், பலவகைப் பறவைகளொலித்தும் விளங்குகின்றன; அவ்விடம் ஒருவருமின்றி, ஏகாந்தமாயுளது; அவ்விடத்தில் தீமை நேரின், அதனைப் போக்கிக்கொள்ள நீயே வல்லவன்; ஆகிலும், இங்கே வாழ்ந்து தாபஸர்களைப் பாதுகாத்தருள்வாயென் றுரைத்தேன்; இப்பொழுதே யங்கே எழுந்தருளவேண்டுமென்று திருவுளமுளதாயின், இதோ இலுப்பைமரக் காடு தோற்றுகின்றதே, இதற்கு வடக்காக அதோ பெரிய ஆலமரத்தைச் சேருமவழிபற்றிச் செல்வீர்களாகில், அந்த மலையின் ஸமீபத்தில் பெரியமேடு எதிர்ப்படும்; அதனமேலேறிச் செல்க; அவ்விடத்திலேயே பஞ்சவடியென்பது இருக்கின்றது; அது எப்பொழுதும் மலர்கள் மலர்ந்தும், கனிகள் பழுத்தும், தளிர்கள் தளிர்த்தும், தழைத்தும் விளங்குமென் றுரைசெய்தனர். பெருமாளும் அந்த வாக்கியத்தைக் கேட்டுமகிழ்ந்து, அவரைநோக்கி, முனிவரே! எங்களுக்குப் பஞ்சவடிக்குச்செல்வதன்பொருட்டு விடைகொடுத்தருள்கவென்று விண்ணப்பஞ்செய்து

விடை பெற்றுக்கொண்டு, ஸீதா லக்ஷ்மணர்களுடன் அவனைப் பணிந்து அந்த ஆஸ்ரமத்தை விட்டுப் பஞ்சவடியை நோக்கிப் புறப்பட்டருளினர். இவ்வண்ணம் ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவரும் வில்லைக் கையிலேந்தி அம்பறாத்தூணிகளைக் கட்டிக்கொண்டு, அச்சமின்றி, நிரம்புறாப் பிராட்டியாரோடு ஊக்கமுடையாராய்ப் பஞ்சவடியை நோக்கி எழுந்தருளினார்கள்.

ஆரண்யகாண்டத்தில் பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதினான்காவது ஸர்க்கம்.

பெருமாள் பஞ்சவடிக்குப் போகும் வழியில்
ஜடாயுவைக் கண்டது

அநந்தரம் ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவரும் பிராட்டியாருடன் பஞ்சவடிக்கு எழுந்தருளுகையில், நடுவழியில் பெரிய ஆலமரத்தின் மீதுட்கார்ந்திருந்த கிருத்திர ராஜனாகிய ஜடாயுவைக் கண்டு, மிகப் பெரிய உருவமுற்றிருந்தமையின், அரக்கனே இவ்வுருவங்கொண்டிருப்பதாக வெண்ணி, அவனை நோக்கிப் புள்ளிறையே! நீயாரென்று வினவினார்கள்; ஜடாயுவும் இவர்களை நோக்கிக் குமாரர்களே! யான் உங்கள் தந்தைக்குத் தோழனென்றுணர்கவென்று இனியமொழியினாலேயே இவர்களை மகிழ்வித்தனர். பெருமாளதுகேட்டுத் தந்தைக்குத் தோழனென்று மதிப்புக்கொண்டு, பின்பவனை நோக்கிக் குலத்தையும், நாமத்தையும் வினவினர்.

---

அகஸ்தியமஹாமுனி பெருமாளைத் தம்முடன் வாஸஞ்செய்யும்படி உரைசெய்கையிலும், பெருமாள் அதனை மறுத்து, வேறிடம் காட்டும்படி கேட்டதினாலும், அகஸ்தியபகவானும் இவர் நம் வார்த்தையை ஏன் மறுக்கின்றனரென்று தியானஞ்செய்து பார்த்து, ஞானத்தினால் இவர் திருவுள்ளத்தையறிந்து, சினமுறாமல் மகிழ்ந்து புகழ்ந்தமையாலும், பெருமாள் ஸ்ரீமந்நாராயணனே யென்றும், காரிராக்ஷஸ ஸம்ஹாரம் ஸங்கல்பித்திருந்தமையின், அகஸ்தியாஸ்ரமத்தில் வாசஞ்செய்ய உடன்படாமல் மறுத்துக்கேட்டனரென்றும், இந்த எண்ணத்தை யவரும் ஞானத்தினாலுணர்ந்தே பஞ்சவடிக்குப் போவென்று உரைக்கின்றேனென்று பெருமாளை நோக்கி யுரைத்தமையின், இவர் திருவுள்ள மிதுவே யென்றும் நன்கு விளங்குகின்றது; ஆதலின், பெருமாள் தான் பரதெய்வமென்பதை மறைப்பதற்காகவே மனுஷ்யபாவனையால் ஆங்காங்குச்சோக முற்றவர் போலவும், சினங்கொண்டவர் போலவும், மூடர்களுக்குத் தோற்றுகின்றனர்; தத்துவமுணர்ந்த அகஸ்தியர் முதலானோர்களுக்குப் பரதெய்வமாகவே விளங்கினர். இவரே பரப் பிரஹ்ம மென்பதுவும், அங்கங்கே நன்றாக விளங்குகின்றது; ஆதலின், முற்றும் நன்றாக வுணர்ந் தையந்தீர்ந்து மகிழ்க:—

## ஆரண்யகாண்டம் கச—வது ஸர்க்கம்.

ஜடாயுவும் ஸ்ரீராமபிரானுடைய வாக்கியத்தைக்கேட்டு அவரை நோக்கி, ஸ்ரீரகுநந்தனா! கேளாய்; முற்காலத்தில் கர்தமர், விக்கிரிதர், சேஷர், ஸம்ஸரயா, ஸ்தாணு, மரீசி, அத்திரி, க்ரது, புலஸ்தியர், அங்கிரர், பிரசேதர், புலஹர், தக்ஷர், விவஸ்வான், அரிஷ்டநேமி, காஸ்யபரென்னும் பிரமர்கள் உலகினைப் படைத்தனர்கள். அவர்களுள் தக்ஷருக்கு அறுபது பெண்கள் பிறந்தனர்கள். அவர்களுள் எட்டுப்பெண்களைக் காஸியபர் விவாஹஞ்செய்து கொண்டனர். அவர்கள் அதிதி, திதி, தனு, காளிகை, தாமிரை, க்ரோதவசை, மனு, அநலை என்னும் பெயருடையார்கள்; காஸியபர் இவர்களை நோக்கிப் பத்தினிகளே! மூவுலகங்களுக்கும் இறைவர்களாகத்தக்க பிள்ளைகளைப் பெறுக வென்று கட்டளையிட்டனர். இதில் அதிதி திதி காளிகை என்பவர்களே விருப்புற்றனர்கள். இதரர்கள் விருப்புக்கொண்டிலர்கள்; ஆதலின் அதிதி ஆதித்தர்கள் பன்னிருவர், வஸுதேவர்கள் எண்மர், ருத்ரர்கள் பதினொருவர், அஸ்விநர்கள் இருவர்கள் ஆக முப்பத்துமூன்று பிள்ளைகளைப் பெற்றனள்; திதி தைத்யர்களைப் பெற்றனள்; முன்பு இப்பார் முழுதும் அவர்களுடையதாகவே யிருந்தது; தனுவென்பவள் அஸ்வகரீவனைப்பெற்றனள்; நரகன் காலகன் என்பவர்களைக் காளிகையும் பெற்றனள்; தாமிரை என்பவள் க்ரௌஞ்சி, பாஸி, ஸ்யேனி, த்ருதராஷ்டரீ, சுகி என்னும் ஐந்து பெண்களைப் பெற்றனள்; அவர்களுள் க்ரௌஞ்சி உலூகங்களையும், பாஸி பாஸங்களையும், ஸ்யேநி பருந்துகளையும், கிருத்ரங்களையும், த்ருதராஷ்டரீ ஹம்ஸங்கள் ஹம்ஸ சக்ரவாகங்களையும், சுகி நதையையும் பெற்றனர்கள். இந்த நதைக்கு விநதை பிறந்தனள்; க்ரோதவசை என்பவள் ம்ருகி, மிருகமந்தை, ஹரி, பத்ரமதை மாதங்கி, சார்த்தூலி, ஸ்வேதை, ஸுரபி, ஸுரஸை, கத்ரு என்னும் பத்துப் பெண்களைப் பெற்றனள். ம்ருகி என்பவள் மிருகங்களையும், மிருகமந்தை என்பவள் கரடி, சமரம், ஸ்ருமரம் என்பவைகளையும், ஹரி என்பவள் சிங்கம் வானரம் இவைகளையும், பத்ரமதை என்பவள் இராவதியையும் பெற்றனர்கள். இராவதி ஐராவதத்தைப் பெற்றனள்; மாதங்கி யானைகளையும், சார்த்தூலி என்பவள் புலி கோலாங்கூலங்களையும், ஸ்வேதை என்பவள் திசாகஜங்களையும் பெற்றனர்கள். ஸுரபி என்பவள் ரோஹிணி கந்தர்வி என்பவர்களையும் பெற்றனள்; ரோஹிணி பசுக்களையும், கந்தர்வி குதிரைகளையும் பெற்றனர்கள்; ஸுரஸை பல தலையுடைய நாகங்களையும், கத்ரு ஒரு தலையுடைய பன்னகங்களையும் பெற்றனர்கள். மனு வென்பவள் மனுஷியர்களைப் பெற்றனள்; அநலை என்பவள் புண்யதரமாகிய கனிகளையுடைய விருக்ஷங்களை யுண்டுபண்ணினள்; அந்தக் கத்ரு வென்பவளே பூமியைத் தலைமிசை யேந்திக்கொண் டிருக்கின்ற ஆயிரம் படங்களையுடைய திருவனந்தாழ்வானைப் பெற்றனள்; விநதை புத்திரர்கள் அருணன் பெரிய திருவடி யென்னு மிருவர்கள், அந்த அருணன் பிள்ளையே, நான்; ஜடாயுவென்னும்

பெயருடையோன்; என் தமையன் ஸம்பாதி; மகனுக்குத் தாய ஸ்யேநி யென்பவள். இத்தன்மையனாகிய யான் கொடிய மிருகங்களும், ராக்ஷஸர்களும் திரிகின்ற இக்காட்டில் உனக்குத் துணையாக இருந்து, நீ லக்ஷ்மணனுடன் புறத்திற செல்லுங் காலையில், யான ஸீதையைப பாதுகாப்பேனென்று உயிர்களின உறபததியுடன தன பிறபபினையு முரைததனா. பெருமாளும அதுகேட்டு மகிழ்ந்து, ஜடாயுவைத தழுவி வணங்கித் தன் தந்தைக்குத் தோழனெனபதைப பலமுறைகேட்டுப பிராட்டியாரைப பாதுகாத தருளும படி யொபபுவித்து, ஸீதா லக்ஷ்மணாகளுடனும், அந்த ஜடாயுவுடனுங கூடப பஞ்சவடிக கெழுந்தருளினா.

ஆரணயகாண்டத்தில பதினனகாவது ஸாககம

முற்றிற்று.

## பதினைந்தாவது ஸர்க்கம்.

பெருமாள இளையபெருமாளால பஞ்சவடியில கட்டப்பட்ட பாணசாலையில் பிராட்டியாருடன் எழுந்தருளி யிருந்தது

அநந்தரம பெருமாள பஞ்சவடி சோந்தருளி, இளையபெருமாளை நோக்கித தமபி லக்ஷ்மணா! அகஸ்தியமஹாயோகியால அருளிசசெய்யப் பட்ட பஞ்சவடி வந்து சோநதோம; இவவிடத்திலெஙகும கண்ணுறவுப் பாராய், எவவிடம நாம பாணசாலை கட்டிககொணடு வாழவதற குரியதாகின றது; அந்த இடம ஸீதை நீ நான மூவரும மகிழ்வுறததககதாகவேண்டும்; அநத இடமும அழகுறறதாகவேணடும; அதனைசசாநத காடும் மிகவழ குறறிருககவேணடும; தாபபுல, ஸமித்து, மலா, காய், கனி, கிழஙகுகளும் நிறைந திருக்கவேண்டும; நீரும அருகி லிருககவேணடும; இபபடிப்பட்ட இடத்தைத தேடாயென் றருளிச செயதனா. இளையபெருமாளும அது கேட்டுக கைகுவித்துககொணடு, ஸீதாபிராட்டியாக கெதிரிலேபெருமாளை நோக்கி, எமமையரே! தேவரீா நெடுநாள எழுநதருளியிருந்து அடியேனு க்கு ஆஜ்ஞை செயதுகொணடிருககையில, அடியேன தேவரீா கட்டளையின் படி நடப்பவனே யன்றி, ஸ்வதநதரனேன; தேவரீரே இவ்விடத்தில் பர் ணசாலை கட்டென்று சுட்டிக காட்டிக கட்டளை செய்தருள்வீராகில், யான் அவ்வண்ணமே செய்வேன்; ஆதலின், தேவரீரே ஆஜ்ஞை செய்தருள்க வென்று விண்ணப்பஞ் செய்தனர். பெருமாளும அதுகேட்டு போர வுகந் தருளி, தாமே ஆராய்ந்து, நலல தோரிடத்தைககண்டங் கெழுந்தருளி, இளை யபெருமாளுடைய் இரண்டு கரங்களையும, தமது திருக்கரத்தினால் பற்றி, அவரை நோக்கி, அடா லக்ஷ்மணா! இந்த இடம மேடு பள்ள மின்றிச் சம

மாகவும், மலர்ந்த மரங்கள் சூழ்ந்தும், குளிர்ந்து மிருக்கின்றது; ஆதலின் இவ்விடத்திலேயே பர்ணசாலை கட்டக்கடவை. இதற்கருகில் மலர்ந்து, மணங் கமழ்ந்து, மிகுதோய்ந்த கமலங்களையுடைய புஷ்கரிணியும் விளங்குகின்றது; அகஸ்தியமுனிவரா லுரைக்கப்பட்ட கோதாவரி நதியும் அருகில் பெருகி யோடுகின்றது; இதுவும் மலர்ந்த கமலங்கள் நிறைந்தும், ஹம்ஸஸாரஸாதி நீர்ப்பறவைகளொலித்துத் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தழைத்த மரங்களடர்ந்த கரைகள் பொருந்தியும் விளங்குகின்றது; நெடுந்தூரத்திலு மிருக்கின்றிலது; மிக வருகிலும் இருக்கின்றிலது; மான்களின் கூட்டங்கள் நிறைந்தும், மயில்களினால் கேகாத்வனி செய்யப்பட்டும், பற்பல குகைகள் பொருந்தியும், உயர்ந்துமுள்ள மலைகள் சுற்றிலுமுள்ளன; வெள்ளி தங்கம் முதலிய தாதுக்களினால் சூழப்பட்ட யானைஜாலகங்களையுடையன போல விளங்குகின்றன; ஸாலதாலதமால கர்ஜூரபநஸாம்ரக நீவாரதிமிச நாகபுந்நாகரஸால தமாலாசோகதிலக சம்பககேதக சந்தனஸ்பந்தன நீப பனஸலிகுசதவாஸவகர்ண கதிரஸமீகிம சுகபாடலாதிகளா லடர்ந்து குளிர்ந்துள்ள இவ்விடத்திலேயே இந்த ஜடாயுவுடன் கூடி வாஸஞ் செய்வோம்; ஆதலின், இவ்விடத்திலே பர்ணசாலை இயற்றுகவென் றருளிச் செய்தனர்.

இளையபெருமாளும் அது கேட்டு உடனே சுவரெடுத்துத் தூண்கள் நாட்டித் தூலங்களையேற்றி, மூங்கில்களைப் பரப்பிக் கயிறுகளா லிறுக்கி, வன்னித் தழைகளை நிரைத்து, தருப்பம், நாணல், விழல்களை நிரப்பிக் காற்றும் புகாவண்ணம் வேய்ந்து, தரையைச் சமமாக நிரவிக் கட்டணைசெய்து, கோதாவரிக்குச் சென்று நீரிலாடி மலர் காய் கனிகளைப் பறித்துக்கொண்டு வந்து, விதியின்படி புஷ்பபலியும், சாந்தி ஹோமமுஞ் செய்து, சிங்காரித்துப் பெருமாளை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து காட்டினர்; பெருமாளும் பிராட்டியாருடனெழுந்தருளிப் பர்ணசாலையின் அழகினைக் கண்டு, திருவுளமுகந்து, இளையபெருமாளைத் தழுவிக்கொண்டு அவரை நோக்கி, அடா தம்பி! நீ இந்தப் பர்ணசாலையை மிகவும் அழகாகக் கட்டி யிருக்கின்றனை; இதனால் யான் மிக மகிழ்வுற்றேன்; நீ செய்த இந்தச் செயலுக்கு வெகுமதி கொடுக்கவேண்டுமாதலின், இந்த ஆலிங்கனமே வெகுமதியாகக் கடவது; பாவமுணர்ந்தவனும், தருமமுணர்ந்தவனும், நன்றி யுணர்ந்தவனுமாகிய உன்னால் என் தந்தை இறந்திலரென்று அருளிச்செய்து, அவ்விடத்திலேயே ஸீதா லக்ஷ்மணர்களுடன் கூடி விண்ணுலகில் சசியுடனும், உபேந்திரனுடனும் கூடிய தேவேந்திரன்போலச் சிறிதுகாலம் வாஸஞ்செய்து மகிழ்ந் தின்புற்றனர்.

ஆரண்யகாண்டத்தில் பதினைந்தாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## பதினாறுவது ஸர்க்கம்

### பெருமாள் ஹேமந்த காலத்தில் பரதாதிகளை நினைந்துகொண்டு கோதாவரியில் நீராடியது

பெருமா ளிவ்வண்ணம் பஞ்சவடியில் எழுந்தருளி யிருக்கையில், சரத்காலம் சென்று, பனிக்காலம் நிகழுகையில், ஒருநாளிரவு நீங்கிப் பொழுது விடிந்த பின்னர், நீராடுவதன் பொருட்டுக் கோதாவரி நதிக்கெழுந்தருளினர். இளையபெருமாளும் கலசத்தைக் கையிலேந்திக்கொண்டு பிராட்டியாருடன் பின்றொடர்ந்து செல்லுங்காலையில், பெருமாளை நோக்கி, எம்மையரே! தேவரீர்க்கு மிகப் பிரியமுள்ள ஹேமந்தருது தோன்றிற்று; இதனாலேயே வருஷம் அலங்கரிக்கப்பட்டது போலத் திகழுகின்றது; இக்காலத்தில் உலகம் பனியினால் கொடியதாகின்றது; பூமி பயிர்களால் செழித்து விளங்குகின்றது; ஜலங்கள் பரிசிப்பதற்கு அரியன; செழுந் தீ மிக வினியது; இக்காலத்தில் இல்லறத்தோர்கள் ஆக்ரயணமென்னும் யாகஞ் செய்து, தேவபிதிரர்களைத் திருப்தியுறுவித்து மகிழுகின்றனர்கள்; நாட்டிலுள்ளோர்கள் பெருகிய காமுடையோர்க ளாகின்றனர்கள்; அரசர்களும் பகைவர்மேல் படையெடுத்துச் செல்லுகின்றனர்கள்; வெய்யோன் தென்றிசையினைச் சேர்ந்து திகழுகின்றமையின், வடதிசை நன்கு விளங்குகின்றிலது; இப்பொழுது வெய்யோன் இமயமலைக்கு நெடுந்தூரத்தி லிருப்பதினால், இமயமலை இப்பொழுதே ஹிமவானென்னும் பெயரை யதார்த்தமாக்கிப் பனியைப் பெருக்கி விளங்குகின்றது; பகல்கள் நடப்பதற்குரியனவும், இனிய வெயிலை யுடையனவும், இனிய அக்கினியை யுடையனவும், பிரியமல்லாத நீர் நிழல்களை யுடையனவு மாகுகின்றன, பனி மிகுந்தும், சீதம் வளர்ந்தும், காற்றுப் பெருகியு மிருக்கின்றன; இரவுகளும் புறத்தில் துயில்வதற்றும், பனிகள் தோய்ந்தும், பகலினும் வளர்ந்தும் நிகழுகின்றன; திங்களும் ஆதித்தனிடத்திற் பற்றிய அழகினையுடையவனும், பனியினால் மலினமடைந்த மண்டல முடையவனுமாகி நெட்டுயிர்ப்பினால் அழுக்கடைந்த கண்ணாடிபோல விளங்குகின்றிலன், பௌர்ண மாஸியிலும், நிலவு பனியினால் மலினமடைந்து, நன்கு நிலவுகின்றிலது, நிலவுற்ற இரவும் வெயிலில் வாடிய பிராட்டியாரைப்போலவே காணப்படுகின்றது; இயல்பாகவே குளிர்ச்சியுள்ள மேல்காற்றும், பனியினாலிருமடங்குற்ற குளிர்மையுடையதாக வீசுகின்றது; வெய்யோன் உதிக்கையில், காடுகள் ஜலதூமங்களினால் மறைக்கப்பட்டிருக்கின்றன; சம்பாப் பயிர்களும், கர்ஜூர புஷ்பங்கள்போன்று நுனிகளில் முதிர்ந்த கதிர்கள் திகழ்ந்தும், சாய்ந்தும், தங்கநிறமுற்றும் விளங்குகின்றன; கதிரவனும், பனி தோய்ந்த கிரணங்களையுடையனாகிச் சந்திரன்போலக் காணப்படுகின்றனன்; அவன் காலையில் வெப்பமற்றும், மத்தியான்ன

தில இனிமையாகிய வெப்பம் பொருந்தியிருக்கின்றனன்; செவ்வப்புறமும், கொஞ்சம் வெண்மைபொருந்தியிருக்கின்ற வெயிலும் பூமியில் விளங்குகின்றது; உத்யான பூமியும், பனிபடிந்து நனைந்த இளம்புற்களையுடையதாகின்றது; காட்டு யானை மிகவும் பிபாஸையுறுவும், நீர் குடிக்கும்படியாகத் துதிக்கையை நீரில் நீட்டி மிகத்தண்மையால் நீரைக்கொள்ளாமலே துதிக்கையை வாங்கிக்கொள்ளுகின்றது; இந்த நீர்ப்பறவைகளும், குளிரினால் அச்சமுடையோர் போரில் புகாமைபோலவே நீரில் புகுகின்றில; வனராஜிகளும், பனியினால் மறைக்கப்பட்டும் மலர்களின்றியும் உறங்குகின்றன போலும்; ஜலதூமத்தினால் மூடப்பட்ட நீருடையனவும், த்வனியாலே அறியத்தக்க ஸாரஸப்பறவைகளையுடையனவும், பனியினால் நனைந்த மணலுள்ள தீரங்களுடையனவுமாக நதிகளும் விளங்குகின்றன; பனி படிவதினாலும், வெய்யோன் விளங்காமையினாலும், குளிர்மையினாலும், மலை நுனியிலுள்ள நீரும் விஷம்போலாகின்றது; கமலங்கள் பனிபடிந்து, மடலுதிர்ந்து, நாளமாத்திரம் மிகுந்திருக்கின்றமையின், தாமரையோடைகளும் விளங்குகின்றில; இக்காலத்தில் ஸ்ரீபரதாழ்வான் தேவரீரிடத்தில் பக்தியால் தவஞ்செய்துகொண்டிருக்கின்றனர்; அவர் ராஜ்ஜியங்களையும், போகங்களையும் துறந்து, தவமுற்றாக குளிர்மை பொருந்திய சிலாதலத்தில் படுத்திருக்கின்றனர்; அவரும் இப்பொழுது பிரகிருதிகளினால் சூழப்பட்டு ஸரயூநதிக்குச் செல்வர்; மிகவும் ஸுகமாக வளர்ந்தவரும், ஸுகுமாரருமாகிய அவர் பின்மாலைகளில் எவ்வண்ணம் குளிர்ந்த ஸரயுவில் முழுகுவர்; செந்தாமரை போன்ற கண்களையுடையாரும், வீரரும், நீலமேகம் போன்ற திருமேனியரும், தர்மமறிந்தவரும், ஸத்யவாதியும், நாணமுற்றவரும், புலன்களை வென்றவரும், இனியவை மொழிபவரும், தீர்க்கபாகுவும், மதிரருமாகிய அவர் தேவரீரிடத்திலுள்ள பத்தியால், போகங்களைத் துறந்து, தேவரீரையே தஞ்சமடைந்திருக்கின்றனர்; தேவரீர் பிராதாவாகிய ஸ்ரீபரதாழ்வானாலன்றோ, விண்ணுலகம் ஜயிக்கப்பட்டது; தேவரீர் காட்டிலெழுந்தருளியிருக்கையிலும், அவர் நாட்டிலிருந்தே தேவரீரைப்போலத் தவசியாகித் தேவரீரையே யநுஸரிக்கின்றனர்; உலகினில் புத்திரர்கள் தாயைக்கொள்வார்களேயன்றித் தந்தையைக் கொள்ளாரகளென்று பழமொழியுளது; ஸ்ரீபரதாழ்வானால் அது பொய்யாகச் செய்யப்பட்டது; ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாயும், ஸ்ரீதசரத சக்கரவர்த்திக்குப் பத்தினியுமாகிய கைகேயி இவ்வண்ணம் கொடுமைகொண்டதேனோ? என்றுரை செய்தனர்.

பெருமாளதுகேட்டுக் கைகேயியை இகழ்ந்ததைப் பொறுமல் இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! நீ கைகேயியாரை யொருபொழுது மிகழற்க; பரதனுடைய குணங்களையே பெரும்பாலும் புகழ்ந்துரையாய்; யான் வனவாஸம் தீர்ந்த பின்பே திருவயோத்திக்குச் செல்லவேண்டுமென்று

நிச்சயங்கொண்டிருக்கையிலும், பரதனிடத்திலுள்ள அன்பினால் இப்பொழுதே போவோமென்று மனம் கலக்கமுறுகின்றது; மிகவும் பிரியமுள்ளனவும், மதுரமுள்ளனவும், மனத்தை மகிழ்விக்கத் தக்கனவும், அமிழ்தம் போன்றனவுமாகிய பரதனுடைய வாக்கியங்களையே யான் நினைந்து மகிழ்கின்றேன்; யான் பரதனுடனும், சத்துருக்கனனுடனும், உன்னுடனும் கூடி மகிழ்வேனோ?, என்றிவ்வண்ணம் முறைத்துப் புலம்பி, கோதாவரியை யடைந்து நீராடி, தேவரிஷி பிதிரர்களைக் குறித்துத் தருப்பணஞ்செய்து, ஸந்த்யோபாஸநத்தானஞ் செய்து தேவர்களையுந் துதித்தருளினர். இவ்வண்ணம் ஸீதா லக்ஷ்மணர்களுடன் நீரிலாடித் தூய்மையராகிய பெருமாள், பார்வதி நந்திகளுடன் ஸ்நானஞ் செய்த சங்கரன்போல விளங்கினர்.

ஆரண்யகாண்டத்தில் பதினாறாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

இந்தச் சருக்கத்தில் இளையபெருமாள் ஹேமந்தருதுவை வர்ணனை செய்கிற வியாஜத்தால் ராவணனால் உலகம் மிகப் பீடிக்கப்படுகின்றமையின், அவனை விரைவில் கொலைசெய்ய முயற்சி கொள்ளவேண்டுமென்று பெருமாளுடன் ஸூசனை செய்கின்றனர், அதெங்ஙனே யெனனில், (அயம்ஸகால:) என்றதனால் காலன்போன்ற ராவணன் என்றும், (அலங்க்ருத:) என்றதனால் அவனால் அழிக்கப்பட்டதென்றும், பனி மூடிற்றென்பதனால், உலகம் மோகமுற்றிருக்கின்றதென்றும், பூமி (ஸஸ்ய ஸாலினி) என்பதினால் பாரம் மிகுந்ததென்றும், (ஜலாந்யநுபபோக்யாநி) என்பதினால் போகங்கள் துறக்கப்பட்டனவென்றும், அக்கினியும் ராவணபயத்தால் வெப்பம் நீங்கினவென்றும், (நவாக்ரயணபூஜாபி:) ந, வா, என்று பத மாதலின், ஸாதுக்கள் யாகாதிகள் செய்கின்றிலர்களென்றும், எல்லோரும் காமமே மேற்கொண்டனர்களென்றும், ராஜாக்கள் அலைகின்றனர்களென்றும், வெய்யோனும் தென்றிசையிலிலங்கையில், ராவணஸேவை செய்கின்றனனென்றும், அரக்கர்கள் பயமற்றுப் பகலிலும் திரிகின்றனர்களென்றும், வீரர்களடங்கினர்களென்றும், தியாக ரொழிந்தனர்களென்றும், காடுகளும் முனிவர்களின்றிச் சூனியமாயினவென்றும், இரவில் தேவர்களும் போகத் துறந்தனர்களென்றும், ராவணன் வெய்யோன்போலத் திகழ்கையில், சந்திரன்போல நீர் விளங்குகின்றிலீரென்றும், நிலவுற்ற ராத்திரிபோலச் சீதையும் விளங்குகின்றிலளென்றும், கானமேல் காற்றுப்போல வீசுகின்றன னென்றும், காட்டிலுள்ள முனிவர் கண்ணீர்விட்டழுகின்றனர்களென்றும், அவர்கள் சமபாப பயிர்கள்போலத் தலை வணங்கி யும்மைச் சரணமடைந் திருக்கின்றனர்களென்றும், ராவணனைக் கொலைசெய்யாமல் சந்திரன்போல நீ ஒளிகுன்றி இருக்கின்றீரென்றும், பனித்துளிபோல முனிவர்கள் கண்ணீர்பெருக்கி யழுகையில், தேவரீர் கருணைகொண்டு கடாக்ஷித்திருக்கின்றீரேயென்றும், காட்டு யானைபோன்ற இந்திரனும் ஆசைகொண்டும் பயத்தால் போகின்றிலனென்றும், நீர்ப்பறவைகள் போன்ற முனிவரும் நிஷ்டை குலைந்தனர்களென்றும், வநராஜிபோன்ற வநிதையர்களும், ராவணனால் வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருக்கி மோகமடைந்தனர்களென்றும், நதிகள்போலவும் நாரிகளிருக்கின்றனர்களென்றும், ராவணனிவ்வண்ணம் வருத்தினும், தேவரீர் வீரங்கொள்ளாமல் வெய்யோன்போல ஒளிகுன்றி இருக்கின்ற

# பதினேழாவது ஸர்க்கம்.

## சூர்ப்பணகை பெருமாளைக் கண்டு காமுற்றுப் பதியாகும்படி வேண்டியது

பெருமாளிவ்வண்ணம் ஸீதா லக்ஷ்மணர்களுடன் கோதாவரியில் ஸ்நாநஞ்செய்து, ஆஸ்ரமத்திற் கெழுந்தருளி நித்யகர்மங்களை முடித்துக் கொண்டு பர்ணசாலையில் வீற்றிருந்து, பற்பல கதைகளை யருளிச் செய்து கொண்டு, பிராட்டியினால் சித்திரா நக்ஷத்திரத்துடன் கூடிய சந்திரன்போல் விளங்கினார். அத்தருணத்தில் ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுக்கு உடன் பிறந்தாளாகிய சூர்ப்பணகை யென்பவள் தற்செயலாய் அங்கு வந்து தேவ குமாரனுக்கு நிகரானவரும், அகன்ற மார்பினையும், ஜாநுவளவும் நீண்ட திருத்தோள்களையும், செந்தாமரை இதழ்போன்ற திருக்கண்களையும், முழு மதிபோன்ற திருமுகமண்டலத்தையு முடையவரும், மிகவும் காண்பதற் கினியவரும், மதயானைபோன்ற நடை யழகினை யுடையவரும், ஜடை தரித்துக்கொண் டிருப்பவரும், காட்டுவாஸகபோக்ற ஸௌகுமார்ய முற்ற வரும், சிறந்த பல முடையவரும், ராஜ லக்ஷணங்கள் பொருந்தியவரும், கரு நெய்தல்போன்ற திருமேனி யுடையவரும், கந்தர்ப்பனுக்கு நிகராகிய அழ கினை யுடையவருமாகிய ஸ்ரீராமசந்திரரைக் கண்டு, வடிவழகில் ஈடுபட்டு மயங்கி, ஸுமுகரைத் துர்முகியாகியும், நுண்ணிடையரை மஹோதரியாகி யும், தாமரை மடல்போலகன் றழகிய திருக்கண்களை யுடையவரை இடுங்கி யாழ்ந்து கோரமாகிய கண்ணுடையளாகியும், கறுத்து நீண் டழகிய கேசத் தை யுடையவரை சிவந்து சுருண்டு விரிந்த தலைமயிரை யுடையவளாகியும், இனிய ரூப முடையவரைக் கொடிய ரூப முடையவளாகியும், செவிக் கினியமொழி யுடையவரைக் கழுதை குரல்போலப் பயங்கரமாகிய த்வனி யுடையவளாகியும், யௌவன முடையவரை மிகக் கொடிய மூப்பினளா கியும். பேசுந்திறமையினரைப் பிதற்றுபவளாகியும், நல்லொழுக்க முடையவரைத் தீயொழுக்க முடையவளாகியும், பிரியமுடையவரை அப் பிரிய முடையவளாகியும், பெருமாளை நோக்கி, மஹாபுருஷா! நீர் ஜடை

---

மையின், ரிஷிகள் மிக வருந்துகின்றனரென்றும், மூப்பினர்களும், பொருளுள்ள வர்களும், எல்லாவற்றையுந் துறந்து தனியே நின்றனரென்றும், பரதகுண வர்ண நத்தால் விபீஷணாழ்வான் உம்மிடத்தில் பக்திகொண் டிருக்கின்றன னெனவும், கைகேயீ நிந்தையினால் ஸீதையை ரக்ஷிக்கின்ற ராக்ஷஸீ நிந்தையும், சூர்ப்பணகை யின் நிந்தையும், பரதகுணாநு மோதநத்தால், விபீஷணகுணாநு மோதனமும், பெருமாள் கோதாவரியில் அபிஷேகங் கொண்டதினாலும், ருத்ரோபமானத்தாலும், ராவணனை ஸம்ஹாரம் செய்து பட்டாபிஷேகங் கொள்வாரென்றும் நன்கு விளங்கு கின்றது; அன்றியும், ராவணன் சாங்காலம் கிட்டிற்றென்றும், இவைகள் அபசகுனங் குறிக்கின்றனவென்றும் தோற்றுகின்றது;—

திரிந்தும் தவசிவேஷம் பூண்டும், மனைவியுடனே கூடி வில்லும் கணையும் கையிலேந்திக்கொண்டு ராக்ஷஸர்கள் திரிகின்ற இங்கெழுந்தருளியதற்குக் காரணம் யாது? உண்மையாக உரைசெய்கவென்று வினவினள். பெருமானும் சூர்ப்பணகையால் இவ்வண்ணம் வினவப்பட்டவராகிக் கபடமற்றவராதலின், உண்மையாக மொழியலுற்றனர். இவர் எப்பொழுதும் பொய்யுரைகளைத் திருவுளமுறுகின்றிலராதலின், தாபஸவேஷத்தில் பெண்களுடன் பொய்யுரைத்தருள்வரோ? கேளாய் பெண்ணே! தசரதரென்னும் மஹாராஜா தேவேந்திரனுக்கு நிகராக எழுந்தருளியிருந்தனர். யான் அவர்க்கு மூத்தகுமாரன், ராமனென்னும் பெயருடையேன், என்பாரியையாகிய இவளும் ஜனகமகாராஜன் திருமகள், ஸீதையென்னும் பெயருடையாள், யாங்கள் தாய்தந்தையர்களது கட்டளையினால் இக்காட்டையடைந்து தருமம் செய்கின்றோம்; நீ யாவள்? யார் பெண்? யாருடைய பாரியை? இவற்றைக் கேட்டுணர விரும்புகின்றேன்; உன்னுருவம் மிகவழகுற்றிருக்கின்றமையின், நீ ராக்ஷஸியல்லையென்று எண்ணுகின்றேன்; ஆகலின், நீ இவ்விடத்திற்கேன் வந்தனை? நீயும் உண்மையுரையாயென்று பெருமாள் வினவியருளினர். அவ்வாறு வினவப்பட்ட சூர்ப்பணகையும் பெருமானை நோக்கிக் காமமோஹிதையாகி, கேளீர் மிகவழகரே! உண்மையாக உரைசெய்வேன்; யான் சூர்ப்பணகையென்னும் ராக்ஷஸி ஆதலின், யான் இச்சையின்படி கண்டோர் அச்சமுறும்படி காமரூபிணியாகி இக்காட்டில் திரிகின்றேன்; எனக்குடன் பிறந்தவன் ராவணனென்னப்பட்டவன், அவன், அரக்கர்களெல்லோர்க்கும் ராஜன், மிகப் பராக்கிரமமுடையவன், அவன் பெயரை நீரும் செவியுற்றிருந்ததலாகும். அவன் தம்பி கும்பகர்ணன், எப்பொழுதும் உறக்கமுடையோன், அவன் தம்பி விபீஷணன், இவன் மாத்திரம் ராக்ஷஸசேஷ்டையுடையோனல்லன்; மிக நல்லோன்; அன்றியும், கரதூஷணர்களென்னும் இருவர்கள் ஸஹோதரர்களிருக்கின்றனர்கள்; உம்மை யான் கண்டதுமுதல் யான் அவர்களை மீறி ஸ்வதந்த்ரையாகின்றேன்; ஆதலின், உம்மைக்கண்டு புருஷோத்தமராகிய உம்மையே பர்த்தாவாக எண்ணி வந்தடைந்தேன்; யான் மிக வலிமையுற்றவள், சிறந்த பலமுற்றவள், வேண்டுமிடத்திற்குச் செல்லவல்லவள்; ஆதலின், நீர் எனக்கு பர்த்தாவாகி நெடுநாள் வாழ்ந்திருப்பீராக; இந்தத் திறமையற்ற சீதையாலென்னபயன்? இவள் மிகவும் விகாரமுற்றவள்; ஆதலின், இவள் உமக்குத் தக்கவளல்லள்; யானே உமக்கு மிகவுந் தகுதியுற்றவள், என்னை நன்றாகக் கண்ணுற்றுப் பாரீர்; உமக்குத் தகுதியற்ற இவளையும், உம்முடைய தம்பியையும், யான் பக்ஷித்து விடுகின்றேன்; பின்பு, நீர்புனையுற்று என்னுடன் கூடி இன்புற்றும் பற்பல மலைகளையும், காடுகளையும் கண்ணுற்று மகிழ்ந்து வாழ்கவென்று பிதற்றினள். பெருமானும் இந்த

வார்த்தையைக் கேட்டு நகைத்து, அவளை நோக்கி, மேற்கூறுமாறு மொழிய லுற்றனர். *

ஆரண்யகாண்டத்தில் பதினேழாவது ஸர்க்கம்.

## பதினெட்டாவது ஸர்க்கம்.

ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் சூர்ப்பணகையை யலைத்து மூக்குஞ் செவிகளை யரிந்து தோட்டிவிட்டது.

அநந்தரம் பெருமாள் காமவேட்கைகொண்ட சூர்ப்பணகையை நோக்கி, அடி சிறந்த வழகுடையாளே! யானிந்தச் சீதையை மனைவி யாகக் கொண்டிருக்கின்றேன்; உன்னைப் போன்றவர்களுக்குச் சக்களத்தி யிருப்பது மிக்க துன்பத்திற் கிடமன்றோ? என் தம்பியாகிய இந்த லக்ஷ்மணனும், மிக வழகினனும், சீல முடையோனும், திறமையுடைய வனு மாகின்றனன்; யௌவனமுடையவன், மனைவியில்லாதான், ஆதலின், மனைவியும் கோருகின்றவன், கண்ணுக்கு மினியவன், அவனே யுனக்குத் தக்க பாத்தா வாகுவான்; ஆதலின், நீ யவனை யடைந்து சக்க ளத்தியின்றி, வாழ்க வென்று நகைத்துரைத்தனர். சூர்ப்பணகையும் அதனை யுண்மையெனவே யெண்ணிப் பெருமாளைவிட் டிளையபெருமா ளிடம் வந்தவரை நோக்கி, லக்ஷ்மணரே! உம்முடைய அழகினுக்கும், என்னுடைய அழகினுக்கும், மிகத் தகுதியாகின்றது; ஆதலின், யான் உம க்கு மனையாளாகின்றேன்; நீர் என்னுடன் கூடி இன்புற்று வாழ்கவென் றுரைத்தனள். இளையபெருமாளதுகேட்டு நகைத்து, சூர்ப்பணகையை நோக்கி, அடி பெண்மணியே! யான் ஸ்ரீராமபிரானுக்குத் தொண்டனாகிப் பணிவிடை செய்கின்றேனாதலின், அடிமைபூண்ட எனக்கு நீ பாரியை

---

* சூர்ப்பணகை காமரூபிணி யாதலின், பெருமாளைக் கண்டவுடன் காமுற்று, அவர் தன்னைக் கண்டு காமுறவேண்டுமென்று நல்லுருவங்கொண்டன ளென்றறிக, கவி யவளுக் கியல்பாயுள்ள உருவத்தையே வர்ணனை செய்தனரென்றனர். வியாக்கி யாதா, சூர்ப்பணகை காமாதிசயத்தால் மதிமயங்கி, ராக்ஷஸபுத்தியால் தன்னையே அழகினளாக வேண்டை வேம்பினையே மதுரமாக வெண்ணுவதுபோல எண்ணி, அவ் வுருவத்தோடே வந்தனள் ராக்ஷஸரூபத்தையே நீதெனறறிந்தவளாயின, பிராட்டி யாரை இகழ்வளோ? இவளும் அவளைப்போலன்றோ? உருவங்கொண்டிருப்பள், (ஸஹீதாவன்மனோஜ்ஞாங்கீ ராக்ஷஸீப்ரதிபாதிமே) என்பதற்கு நீ யழகிய உருவ முடையாளல்லை; ஆதலின், நீ எனக்கு ராக்ஷஸியாகவே தோற்றுகின்றனையென்று பொருள் கூறவேண்டும்; இவள் தன்னை இகழ்ந்து துறவாமைக்காகவும், தன்னுடன் பிறந்தோர்களைப் புகழ்ந்தனள். சூர்ப்பணகை என்பது; முறம்போன்ற நகமுடைய ளென்று காரணவிடுகுறிப்பெயராகின்றது:—

யாருவது தகுமோ? ஆதலின், மிகச் சிறந்த உருவமுடைய நீ எமக்கைய ருக்கே பாரியையாகக் கடவை. மிகவுங் குரூபியும், மூப்பினளுமாகிய சீதையை விட்டுவிட்டு, இளையாளாகிய உன்னிடத்திலேயே மோகமுற்றின்புறுவார்; ஆதலின், அவரை மணஞ்செய்து கொள்ளாய்; சிறந்த வலிமை கொண்ட இந்த ராக்ஷஸரூபத்தை விட்டுவிட்டுத் திறமையற்ற மானிடரூபத்தில் யாவன் விருப்புறுவானென்ன றுரைத்தனர். சூர்ப்பணகை பரிஹாஸமென்பதை யறியாமல், இந்த வாக்கியமும் உண்மையெனவே எண்ணி, மீளவும் பர்ணசாலையில் வீற்றிருக்கின்ற பெருமாளிடம் வந்து, காம மோஹிதையாகி, மீளவும் அவரை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! இந்தச் சீதை மிகவுங் குரூபியாயிருக்கையிலும், இவளிடத்தில் ஆசையுற்று என்னை மணஞ்செய்து கொள்ளுகின்றிலீர்; ஆதலின் இவளை இப்பொழுதே பக்ஷித்து விடுகின்றேனென்னறுரைத்து, தூமகேது ரோஹிணி நக்ஷத்திரத்தைப் பிடிக்கச் செல்வதுபோல ஸ்ரீசீதாபிராட்டியாரைப் பக்ஷிக்கும்படி யோடினள். பெருமாளவளைக் கண்டு ஆவென்றதட்டி இளையபெருமாளை யழைத்து, அடா லக்ஷ்மணா!—

క్రూరైరనార్యై స్సౌమిత్రే పరిహాసః కథంచన ।
నకార్యః పశ్యవైదేహీం కథంచిత్సౌమ్యజీవతీం. ॥

க்ரூரைரநார்யைஸ்ஸௌமித்ரே பரிஹாஸ: கதஞ்சந ।
நகார்ய: பஶ்யவைதேஹீம் கதஞ்சித்ஸௌம்யஜீவதீம் ॥

கொடுமையுற்றவர்களுடனும், மூடர்களுடனும், ஒருபொழுதும் பரிஹாஸமுஞ் செய்யலாகாது; யாம் இவளைப் பரிஹாஸஞ்செய்து உபேக்ஷையாயிருந்ததினாலன்றோ இவள் இவ்வண்ணஞ் சீதையைக் கொலைசெய்ய முயன்றனள்? சீதையைப் பாராய், நல்வினையால் இவளிடத்தில் தப்பிப் பிழைத்தனள். ஆதலின் கொடிய இவ்வரக்கியை கொலை செய்யாமல் நாசியையறுத்தோட்டாயென்னறருளிச்செய்தனர். இளையபெருமாளதுகேட்டு மிகச் சினமுற்று வாளையுருவிச் சூர்ப்பணகையின் செவிநாசிகளை யரிந்து, வெருட்டியோட்டிவிட்டனர். அவளும் செவி நாசிகளிலறுப்புண்டு, கோரமாக வீறிட்டழுது ரத்தத்தை வழியில் பெருக்கிக் கொண்டே வந்தவழியே யோடிக் கைகளை யுயரவெடுத்துக் கூவி யழுது ராக்ஷஸர்களால் சூழப்பட்ட கரனிடஞ் சென்று, விண்ணினின்றும் இடிவிழுந்தாற் போலத் தரையில் வீழ்ந்து, ஸ்ரீராமபிரான் ஸீதா லக்ஷ்மணர்களுடன் இங்கு வந்திருப்பதையும், தன் செவி நாசிகளை யரிந்ததையும், கரனுக்குக் குருதி பெருகப் பெருக வொண்ணவொண்ணவென்னறுரைத்தனள்.

ஆரண்யகாண்டத்தில் பதினெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

# பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## சூர்ப்பணகை பெருமாளிடத்துக்குப் பதினாலாயிரம் ராக்ஷஸர்களை அழைத்துக்கொண்டு வந்தது

அநந்தரம் கரன் இவ்வண்ணம் மூக்கறுப்புண்டு, குருதியைப்பெருக்கித் தரையில் வீழ்ந்து புலம்பிய சூர்ப்பணகையைக் கண்ணுற்றுக் கடுஞ்சினங்கொண்டவளைநோக்கி, அடி ஸஹோதரி! எழுந்திராய்; நிகழ்ந்தவாறுரைசெய்யாய்; பதைப்பை விடுக; நீ யாவனால் இவ்வண்ணம் அங்கவீனமுற்றனை; வெளிப்பட உரைசெய்க; யாவன் பகையின்றிப் படுத்திருந்த கொடிய கருநாகத்தைத் தவறுதலில் விரலினால் தூண்டி எழுப்புகின்றனன்; யாவன் மதிமயக்கினால் காலபாசத்தைத் தானே கழுத்தில் சுற்றிக்கொள்ளுகின்றனன்; யாவனொருவனிப்பொழுது உன்னை யணுகிக் கொடிய நஞ்சினை யுண்டனன்; பலமுற்றவளும், பராக்கிரம முடையவளும், நினைத்தவிடஞ்செல்ல வல்லவளும், நினைத்தவாறுருவந் தரிப்பவளும், யமனுக்கு நிகராகியவளுமாகிய நீ யாவனால் இவ்வங்கபங்கத்தையுற்றனை, உன்னை இவ்வகையாகச் செய்தவன் தேவர்களுள் சிறந்த தோள்வலி யுற்றவனோ? அல்லது, கந்தருவனோ? அல்லது பூதமா? அல்லது, ரிஷியா? என்னுடன் பகைத்திவ்வண்ணந் தீங்கு செய்ய வல்லவன் ஆயிரங்கண்ணனே யாகுவானல்லது, வேறொருவனுமாகான்; உனக்குத் தீங்கு செய்தவன்மேல் கூரிய கணைகளைத் தொடுத்து, அன்னப்பறவை நீரினின்றும், பாலைப் பிரித்தெடுப்பதுபோல அவன் உடலினின்றும், உயிரைப் பிரித்தெடுப்பேன், அவன் என் கணையினாலடிபட்டு, நுரையுடன் குருதியைக் கக்க, அது தரையில் படியக் காண்பாய்; என்னாலடிபட்ட யாவனுடைய மெய்யைப் பறவைகள் சூழ்ந்து மாமஸத்தைக் கடித்திழுத்துத் தின்னப் போகின்றன; என்னாலெதிர்க்கப்பட்டவனைத் தேவ கந்தர்வ பிசாச ராக்ஷஸாதிகளுள் ஒருவரும் பாதுகாத்தளிக்க வல்லவராகார்; ஆதலின், நீ மனந்தேறி, யாவனால் அவமதிப்புற்றனையோ, அவனை யுரைசெய்யாயென்று பகைவர்மேல் சினமுற்று வினவினன்; சூர்ப்பணகை அதுகேட்டு அவனை நோக்கிக் கேளப்பா சகோதரா!—

తరుణౌ రూపసంపన్నౌ సుకుమారౌ మహాబలౌ।
పుణ్డరీకవిశాలాక్షౌ చీరకృష్ణాజినామ్బరౌ॥

*தருணௌ ரூபஸம்பன்னௌ ஸுகுமாரௌ மஹாபலௌ*
*புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ*

நித்ய யௌவன முடையவர்களும், காமனுக்கு நிகரான ஸௌந்தர்ய முடையவர்களும், காட்டுவாகைப் பூவுக்கு நிகரான மேனியுடையவர்களும், சிறந்த புல முடையவர்களும், தாமரை இதழ்போல அகன்ற

திருக்கைகளை யுடையவர்களும், மரவுரி மான்தோல் தரித்தவர்களும், காய் கனி கிழங்குகளை யுண்பவர்களும, புலன்களை வென்றவர்களும், தவஞ் செய்பவர்களும், தருமவழி கோணாமல நடப்பவர்களும, ஸோதரர்களும், ஸ்ரீராம லக்ஷ்மணர்களென்னும திருநாம முடையவர்களுமாகிய இருவர் தசரதசக்கரவர்த்திக்குப புத்திரராக விருக்கின்றனர்கள். அன்றியும், அவர்கள் கந்தர்வ ராஜனுக்கு நிகரானவர்கள், ராஜலக்ஷணங்கள் நிறைந்துள்ளவர்கள், அவர்கள் தேவர்களோ? மனிதர்களோ? யான தெளிகின்றிலேன்; அவர்களுடைய அருகில் யௌவன முடையவளும, சிறந்த கட்டழகுற்றவளும, பல கலனும் அணிந்தவளுமாகிய ஒரு பெண் காணப்பட்டனள். அந்தப் பெண்ணின பொருட்டு அவ்விருவர்களாலும நாதனற்றுக் குலங்கெடுத்த பெண்போல இவ்வண்ணம் அங்கவீனஞ் செய்யப்பட்டேன்; ஆதலின், அவளுடையவும், அவ்விருவர்களுடையவும, உதிரத்தைப போர்க்களத்தில பானஞ் செய்யக் கருதுகின்றேன்; அம்மூவர்களுடைய ரத்தத்தைப பானஞ்செய்வேனென்பதே என்னுடைய சிறந்த கோரிக்கை; இஃது உன்னாலேதான் நிறைவேறறக் கடவதென்று கண்ணீர் ததும்ப வழுது உரைத்தனள்.

கரனும இவவண்ணம் முறையிட்ட தங்கையின மொழி கேட்டு மிக முனிவுகொண்டு பதினாலாயிரம் சேனைகளுக்கும தனித்தனி ஸேனாநாயகர்களாகிய பதினாலுபேர்களையும அழைத்து அவர்களை நோக்கிக் கேளீர் சேனாநாயகர்களே! மரவுரி மானதோல் புனைந்தவர்களாகியும், ஆயுதந் தரித்தும, பெண்ணொருத்தியை உடன்கொண்டும, மானிடரிருவர் தண்டகாரணியம புகுந்து திரிகின்றனர்கள்; நீங்கள் விரைவாகச்சென்று, அவவிருவரையும கொலைசெய்து, அவர்களையும, அப்பெண்ணையும கொணர்க; அவர்களது சோணிதத்தை இந்த என் தங்கை பானஞ் செய்வாள்; கேளீர் அரக்கர்களே! இதுதான என தங்கையின கோரிக்கை; எனக்கும இஷ்டம்; ஆதலின, நீங்கள் இவவண்ணம் விரைவில செய்து முடிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டனன். அப்பதினாலவரும அதுகேட்டு காற்றினாலலைக்கப்பட்ட மேகங்கள்போலக் கர்ஜித்து, அந்தச் சூர்ப்பணகையுடன அங்கெய்தினார்கள்; இவர்கள் கூரிய கணைகளை யுடையவர்களும, ராக்ஷஸ ஜாதியர்களும, கொடியர்களுமாகியும, பெருமாள விலாமானுஷ விக்ரஹராகியும, அதிமானுஷ தேஜோபல பராக்கிரம முடையவ ராதலின, அவர்களிவரை வெல்லத் திறமைகொண்டிலர்கள்; காட்டிடையில மதமேறிப பிளிறித் திரியுங் களிறுகள் பல கூடியும, மிகப பறறி எழுந்தெரியுங் காட்டுத் தீயினை யணைக்க வல்லன வாகுமோ? ஆதலின, அவர்கள் பெருமானைக் கண்டு அஞ்சங் கொண்டு நின்றனர்கள்.

ஆரணியகாண்டத்தில பத்தொன்பதாவது ஸர்க்கம

முற்றிற்று.

தனிஸ்லோகி ஸஹிதேவைருந்நீர்ணஸ்ய ராவணஸயவதார்த்தினி: ஆர்த்திதோ மாறுக்ஷேலோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதன:) என்கிறபடியே தசகண்ட குண்டித சக்திகளான தேவர்கள் ராக்ஷஸர்களுடைய ரஜஸ்ஸைப் போகரும்படி ரஜோ துலர மான வடிவுகளும, ராக்ஷஸஸ்திரீகள மாஙகல்யங்கள் வாஙகுமபடி கழுத்திலே கட்டின கபபடங்களும, ராவண பநீகருதைகளான தஙகள் ஸ்திரீகளுடைய விரித்த தலை, (விமுகதகேஸயோ துஃக்கார்த்தா:) என்று ராக்ஷஸிகள் தலையிலே யாம்படி தாங் கள விரிதத தலைமயிரும், (ஹாபுத்ரேதிசவாதின்யோ ஹாநாதேதிசஸர்வஸ:) என் கிறபடியே யவர்கள முகஙகளிலே விலாபாக்ஷரஙகளாமபடி தஙகள் முகங்களிலே ஸ்பபுரிககிற சரணுக்ஷரஙகளும, (உததருதயசப்புஜெளகாசித) எனகிறபடியே அவர் கள் கைகளை எடுததுக கூப்பிடுமபடி தாங்கள தொடுதத அஞ்சலி பதுமஙகளும், (ஸநாபயநதிமுகமபாஷ்பை ஸதுஷாணாரிவபஙகஜம) என்கிறபடியே அவாகள் கண் களிலே கண்ணீா பாயுமபடி தாஙகள கணணுங கண்ணீருமாய, (சாயாவருக்ஷ மிவாத்தவகா:) எனறும, (சகோரா இவசீதாம் சுஞ்சாதகா இவதோயதழு, அநாதா இவதாதாரம தேவாஜகமூாஜஞாதனம) எனறும சொலலுகிறபடியே அததவ்ஸ்ராநத ரானவாகள் சாயாவ்ருக்ஷததைசசென்று சேருமா போலேயும, சகோரஙகளானவை சாசசநத்ரனை யணுகுமா போலேயும, சாதகஙகளானவை வாஷுகவலாஹகங்களைச சென்று கிடடுமா போலேயும, தரிதராானவாகள் தாதாவைச சென்று கிட்டுமா போலேயும, ஸ்ரீய:பதியைச சென்று கிட்டி, (தமப்ருவன்ஸுராஸஸாவே ஸமபிஷ்டு யஸந்தா:) என்று ஸ்தவ பரியஞானவனை ஸதோததிரம பணணுவாாகளாகத தொட ஙகி, (ஸதைகருபரூபாய) என்று அவிகருதரான தேவா நாட்டிற பிறநது படாதன பட்டு மனிசறகாய எனகிறப்டியே அழிவுககிட்டு, தரிபாத விபூதியிலே இருககககடவ தேவா சதுஷபாததாய ஹிரண்யாக்ஷக்ஷபணம பண்ணுததும, கேவலம் திாயக த்வத தாலே போராதெனறு நாஙகலநத சிங்கமாய ஹிரண்ய நிரஸனம் பண்ணுற்றும, மஹததுக்கும மஹததாயுள்ள வடிவைக் குறளுருவாககி, அல்லி மலாமகன் போக மயககுகளை மறநது, ப்ரஹ்மசாரியாய (ததயானன பாதி கருஹணீயாத்) என்றும, (கோஸஹஸரபராதாதாரம) எனறும, அலமபுரிநத நெடுநதடககை யெனறும் சொல்லுகிறபடியே ப்ரஹ்மாதயநேக பதப்ரதரான தேவா மஹாபலி பககலிலே பத தாயததை யாததிததும, பிரஹம க்ஷதரஙகளுககு உறபாீதகரென்று ஓதப்பட்ட தேவா (பித்ராயமமசமுபவீதலக்ஷணம மாதருகஞசதனுரூாஜிதமததத) என்கிறபடியே ஜமதகனி ரேணுகைகள பககலிலே பிரஹமக்ஷததிரியராய வநது தோனறி இருபத தொருபடிகால துஷட க்ஷததிரியரைப பரசுவுககுப பிராதாசனமாககியதும, (பக்தாநாம்) எனறும, (வாதஸகலமேததஸம ஸருதாாததஞசகர்தத) என்றும, அடியோங்களுககாகவனறேயென்று ஸதோதரமபண்ணி, சாபமானயவெனறு கையிலே ஆயுதமெடுககும்படி தஙகளுடைய வஜ்ரபாசு தண்டபாசாத் யாயுதங்களைப போகவிட்டும், அவன (ஸாகரம சோஷயிஷ்யாமி) எனனுமபடி கணணீராக காட்டி, (ஸுகரீவம் சரணஙகத:) என்றும், (ஸமுதரம்ராகவோராஜா சரணம கநதுமாஹதி) என்றும், அவன் சரணம் புகும்படி தாங்கள் சரணம புக்கும, (அஞ்சலிம்ப்ராங முக:க்ருத்வா) எனறு அவன் அஞ்சலி பண்ணும்படி தாஙகள் அஞ்சலி பண்ணியும, (ப்ரஸீதநதுபவநதோமே) என்று அவன் ஸ்தோதரம பண்ணும்படி தாஙகள் ஸதோத ரம் பண்ணியும, (ஸர்வேஸநாிஹிதா:) என்று தமையனான இந்திரனும முறபாடனும படி திருவடிகளிலே நமஸ்ராய, (நமோயம்) என்றிருககிறவர்களைத் தலையழித்தத நர

வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பரமகாருணிகனான ஸர்வேஸ்வரனும் நித்யாநபாயினியான பிராட்டியாரும், (பிதாமரோச யாமாஸத்தா தசாதம்ருபம்) என்றும், (ஜனகஸ்யகுலேஜாதா) என்றும் சொல்லுகிறபடியே தாம் தாசரதியாயும், அவள் ஜனககுல ஸுந்தரியாயும் திருவவதரித்து, இருவரும் இரண்டிடத்திலுமாக வளர்ந்தருளுகிற காலத்திலே, இம்மிதுனம் இப்படி யகலவிருக்கப் பொறாது, இப்படி யகலவிருந்தபோது, ரக்ஷகரானவை யனறிக்கே (ஜகத்ஸர்வம் பரிவர்த்தயாமி) என்றும், (விதூஸாகரமேகலாம மஹீந்தஹூதி) என்றும், இவர்கள் தங்களாலே ஜகத்துக்கு அழிவுவருமென்றும், சோந்தபோது (ஆவாபயாங்காமாணிகா தவயாப்ராஜ்ஞஸ்சோதபரீதிதவயா) என்றும், உபேத்மஸீதயாபூயஸ சிதாயாசசினமயதா) என்றும், ஜகத்துக்கு மங்களாவஹமாயிருக்கையாலும், இம்மிதுனத்தைச் சேர்க்கவேண்டுமென்கிற அபிஸந்தியாலும், (விநாசாய சதுஷ்கருதாம) என்றும், (ஸம்பவாமி) என்றும், (யஜுஞவிகனகரமஹனயாம) என்றும், அவருடைய அவதார ரஹஸ்ய ஸங்கல்பத்தை யடியொற்றினவனாகையாலும், விஸ்வாமித்ரபகவானானவன் தசரதனுகத்தைக் கிட்டி ராமரத்தத்தை யபேக்ஷிக்க, அவனும் வாத்ஸல்யத்தாலே மதியெல்லா முளகலங்கிப் பெருமாளை யுள்ளபடி யறியாதே (ஊநஷோடசவர்ஷோமே) என்றும், இன்னம் பதினாறு பிராயம் நிரம்பிறதில்லை, (பாலஆஷோடசாதவர்ஷாத பௌகண்டஸேதிகீர்த்யதே) என்கிறபடியே அபாரபத்வய வஹார ராகையாலே, தனித்தொரு காரியத்துக் காளல்லா, (சதுரங்கபலாயுக்தம மயாசஸ ஹநிஷ்யந்ய) முதுகண்ணுகை வென்னையும் கூட்டிக்கொண்டு போவென்ன, விஸ்வாமித்திரரும் இவர் பருவத்திற சிறுமைகண்டோ நீர் வார்த்தை சொல்லுகிறது, சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச்சென்று ஸாக்ஷிபாவித்துப் போய்க் கேட்க, முறித்தாயாகில், (வஸிஷ்டோபிமஹாதேஜா யேசேமேதபஸிஸ்ததிதா:) என்றறியு மவர்களுமாய, ஸந்நிஹிதருமாயப பலருமான இவர்களைக் கேட்கமாட்டாயோவென்றீடேற்றி இசைவிக்க, இவனு மிசைந்து, (தஷௌகுசிசபுத்ராய) என்று இவனுக்கு இஷ்டவிநியோகாராஹமாகப் பிள்ளைகளிருவரையுங் கொடுக்க, அவனும் ராம லக்ஷ்மணர்களைக் கொண்டுபோய, காமஜ்ஞானங்களாலே அவித்யையை நிரஸிக்குமாபோலே அவர்களை இடுவித்துத் தாடகையை நிரஸிப்பித்து, அநந்தரம் அவித்யாசஞ்சிதமாயப் புண்ய பாபரூபமான உபயவித காமங்களையும்போலே தாடகாஜனிதரான ஸுபாஹு மாரீசர்களையு மழித்து, அது தனனில், (உத்தரபூர்வாகயோரஸலேஷவிநாசௌ) என்னுமாபோலே, ஒருத்தனைக்கொன்று, ஒருத்தனை யகலவடித்து, விஸ்வாமித்ராத்தவரதாரணம் பண்ணி, (ஸ்ரீயமிசசேதத்தாசனுத) என்று லக்ஷ்மியைப் பெறும்போது அக்னி புரஸ்ஸரமாகப் பெறவேண்டுகையாலே, (விஸ்வாமித்ரேண ஸஹிதோ யஜ்ஞந்தாஷ்டுமஸமாகதா:) என்று ஜனகனுடைய யஜ்ஞஸமயத்திலே சென்று, அக்னித்ரயங்களையும் உபாஸித்து, விலவிறுத்து, மெல்லியல் தோள் தோய்ந்தாயென்றுஞ் சொல்லுகிறபடியே ரௌத்ரமான வில்லை யழைப்பித்து, தேவதாந்த்ரஸ்பர்சத்தாலே வந்த அதினுடைய தோஷம் போம்படி திருக்கையிலே வாங்கி குணாரோபணம் பண்ணி பங்கஸலகையான பிராட்டியாரையுங் கைபபிடித்து, மீண்டு வருகிற வழியிலே, ராமத்வம் ஈராக பட்டதோவென்று அதிகுபிதனாய வந்த பரசுராமனைக் கண்டு, புத்ரவத்ஸலனான சக்ரவர்த்தி சகிதனாய, (அபயம ஸர்வபூதேப்யோ ததாமி) என்னுகைக்கடவ; பெருமாள் தமக்க திருச்சங்கைப்பண்ணி, (பாலாநாமமமபுத்ராணா மபயந்தாது மர்ஹஸி) என்று போ வாசிக்கும் பிணங்கி வந்தவனுகையாலே, பெருமாள் திரு

கோர்த்துமவத் த்யமானேன் கீசாசணா:) என்று எனக்கீ ரக்ஷிக்கவேண்டுமென்று , சரணம்
புக (பவதாமாத்த ஷிதயாதமாக தோஹ்மயதருசசயா) என்று ஓம கொடுத்து, (ஜகாம
சாஸிமாமல் தேஷாம பரியாயேணதயஸ்விநாம) என்கிறபடியே சரபங்க ஸுதீக்ஷ்ண
கலத்ய தத்ப்ராதருபாமுகரான ரிஷிகளாஸ்ரமதகிலே பாயாயேண வெழுநதருளி
யிருக்கிற பெருமாள் அகஸ்த்யோபதேசததாலே கோதாவரீதீரமான பஞ்சவடீபரி
ஸரததிலே பர்ணசாலேயுக சமைதது, (ஸாமஃபாணசாலாயா மாவிநஸஸஹவீதயா,
விரராஜமஹாபாஹுஸ்ஸிதராயாசநதரமா இவ, லக்ஷ்மணே நஸஹப்ராதரா) என்று நாசசி
யாரோடு யிளையபெருமாளோடுங கூட இனி தமாந தெழுநதருளியிருககிற வளவிலே,
(தநதேசம்ராக்ஷஸீகாசி தாஜகாமயதருசசயா, ஸாதுசூாப்பணகீநாம) எனறு சூர்ப்பண
கியாயிருக்கிற ராக்ஷஸி யானவள் யாதருசசிக ஸுகருதமடியாக வநது கிட்டி, ப்ராப்த
விஷயமாயிருககசசெயதேயும், கட்கனொஓராசாரயனடியாகவிசேஷஜ்ஞாநமபிறவாமை
யாலும், புருஷகாரம முன்னாகப பறறுதவ ளவளன்றிககே? அவவிஷயததிலே அஸ
ஹ்யாபசாரமபண்ணி, நக்ஷமாமிககிலககாக (இதயுக்தோலக்ஷ்மணஸதஸயாஃ கருதோ
ராமஸயபஸயதஃ, உததருதயகட்கம சிசசே தகாணநாஸௌமஹாபலஃ) என்றும்,
கூராாநத வாளால கொடி மூககுங காதிரணடும மீராவிடுததெனறும, காதொடு
கொடி மூககனறுட னறுதத கைததலததாவெனறும சொல்லுகிறபடியே • தக்ஷி
ணபாஹுவான இளையபெருமாளாலே தாங கைகொடாாாய வைரூப்யததை
விளைப்பிகக, (விரூபணஞ்சாதமநிசோணி தோக்ஷிதா சசமஸஸாவமபகினீ கரஸ
யஹா) எனறு வாாநத மூககும, வடிகிற உதிரமுமாயத தன ப்ராதாவான கரனுக
கறிவிகக, அவனும குபிதனாய (வயகதமாகயாஹிகே நதவமேவமரூபாவிரூபிதா) என்று
•உன்னை இபபடிச செயதவாகளார்? அவாகளைத் தெளியக சொல்லென்று கேட்க, அவ
ரகளை இனனாரென்று அடையாளந தெரியச சொலலுகிறுள (தருணௌ) எனறு
தொடஙகி (புதரௌதசரத ஸயாஸதாம, பராதரௌராமலக்ஷ்மணௌ) என்று, இன்
னாமகனெனறும, இன்னபேரா யுடையவரெனறும சொல்ல ப்ராபதமாயிருகக,
(தருணௌரூபஸமபனனௌ) எனறு பருவததையிட்டுச சொல்லுவது, வடிவழகை
•யிட்டுச சொலலுவதாவ தெனனெனனில, இவளுககு வைரூபயம பிறநத திததனை
போககி, வைராககியம பிறநத திலலையிறே, ஆகையாலே, (காமமோஹிதா) என்கிற
தனனபிநிவேசம வடிவிட்டு பராதாககள முனனெனறு பாராதே தனனுடைய ஹ்ருத
கததைதச சொலலுகிறுள அநுகூலராகிலுயாம, பிரதிகூலராகிலுமாம, இவவிஷயத
தில அகப்பட்டவாகளுககுப பணியிறேயிது, (யாநிராமஸயசினஹாநி) என்று அடை
யாளந தெரியச சொல்லெனறு பிராட்டியாா திருவடியைக கேட்க, (கரிஸததிரஸத
ரிஃப்ரலமபஸீச) என்று சொலலுவதறகு முனனே (ராமஃகமல பதராக்ஷஸஸாவஸதவம
ஞேஹாஃ) எனறு சொனனுனிறே, இவை தனககு பரயோஜகரூபநாமங்கள் சொல்ல
வென்று முண்டிறே, அதிலே ரூபஙகளைததேடியே பினபு பெயரிட்டுச சொல்லுகின்
றனரெனறு சுருதியின கடையில் கூறபபட்ட காமததிலே பரதமபாவியான ரூபத்தை
முற்பட்டச சொல்லுகிறுளாகவுமாம, அன்றியிலே, (ஸுபதப்ரமததகுபிதாநாம் பாவஜ்
ஞாநம்தருஷ்டம) எனறு குபிதையாகையாலே, ஹ்ருதகதாாததததை அவசமாக
வெளியிடுகிறுளாகவுமாம், இதிலே (ராமமிநதீவரஸயாமம கநதாபபஸதருசப்ரபம், பதூ
வேதர்போபமநத்ருஷ்டவா ராக்ஷஸீகாமமோஹிதா) என்கிறபடியே தானவனைக்கண்டு
[illegible] கடியாயிருபபதொரு [illegible]மான ஆகாரமும், தன் [illegible]
[illegible] தோபாதிசயத்தாலே (தயோஸ்தவ்யாக்சருதிரம்பிபேயமஹம்), என்றுந்

சொல்லுகிறவ னாகையாலே, (தேஜஸ்வினௌ மஹாவீர்யௌ) என்றிவர்களை அனுபவிட மாட்டாதே அருகிருக்கிற ப்ராதாவான காகுக்கு(பலமூலாசினௌ தாந்தௌ தாபஸௌ தர்மசாரிணௌ) என்றவர்கள் எளிமைசொல்லுகிற தொரு ஆகாரமும், (ராமஸ்ய சமஹத்கர்ம மஹான்ஸ்த்ராஸோபவேன்மம்) என்றிவர்களுக் கஞ்சினவ ளாகையாலும், அவன் நெஞ்சிலே எரிச்சல் பிறக்கைக்காகவும், (புதயாஹமனுமஸ்யாமி நத்வம்ராமஸ்ய, ஸம்ப்ரதி ஸ்த்தாதும்ப்ரதி முகேசக்தஸ் ஸசாபஸ்யமஹாராணே)என்று கையும் வில்லுமாய் அவ்வாண்பிள்ளை புறப்பட்டால் நீயோ அவர் முன்னே நிற்கிறாயென் றவர்களுடைய வூண்மை சொல்லுவ தொரு ஆகாரமுமாக, ஆகாரத்ரயமும் விவக்ஷிதம், அதில் முற்பட்டவாகாரத்தில் யோஜனையிருக்கிறபடி(தருணௌ ரூபஸம்பன்னௌ ஸுகுமாரௌமஹாபலௌ, புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜினாம்பரௌ, அவர்களுடைய பருவமிருக்கிறபடியும், வடிவழகிருக்கிறபடியும், செயலிருக்கிறபடியும், மிடுக்கிருக்கிறபடியும், கண்ணழகிருக்கிறபடியும், ஒப்பனையழ கிருக்கிறபடியும், அவர்க ளிருவருக்கு முண்டித்தனைபோக்கி வேறொருவர்க்கு மில்லைகாணென்கிறாள் என்னை இதுவிளைத்த வீரிரண்டுமால் வரைத்தோள் மன்னவனென்றும், என்னை யகப்பட விப்படி யாக்கிற்று, அந்தக் குணஸமுதாய மன்றோ? (தருணௌ) யுவாகுமாரௌ என்றும், (யவீயஸே) என்றும், (அருமபினையலனை) என்றும், வேதாந்தஸித்தமான அர்த்தத்தை இவளொரு ராக்ஷஸிகை யாட்சியாகச் சொல்லுகிறாளிறே? இதுதான் ராக்ஷஸிகளுக்குப் பணியாயிருந்ததிறே? (வயகத மேஷமஹாயோகீ பரமாத்மாஸநாதநஃ, தமஸஃபரமோதாதா சங்கசக்ரகதாதரஃ) என்றாளிறே, மண்டோதரியும் (தருணௌ) முக்தரானவர்களோடு பத்தரானவர்களோடு தசரதவஸு தேவாதிகளோடு வாசியற, கரியானொரு காளை யென்றும், காளை புகுதக்கனாக் கண்டேனென்றும், ப்ரணயினிகளை யகப்படுத்திக்கொள்ளுவது பருவத்தை யிட்டிறே? அப்பருவத்திலே யாயத்திவளும், முற்பட வீடுபட்டது, (தருணௌ) இவள் பத்தபாவையாயத்து பெருமாள் பக்கலிலேயாகில், வைரூப்யம் விளைத்தாள். இளையபெருமாளாகிலிரண்டு பக்ஷத்திலும் ஒருத்தரேயமைந்திருக்க, த்விவசனாந்தமாகச் சொல்லுவா னென்னென்னில், (அநபோநயஸதருணௌவீரௌ) என்றழகுக்கும் ஆண்பிள்ளைத்தனத்துக்கும், ஒருவர்க்கொருவர் குறையாமையாலும், (க்ருததாரோஸ்மிபவதீ பாரயேயமதயிதாமம) என்றும், (ஸ்ரீமாநக்ருததாரஸ்ச லக்ஷ்மணோநாம வீர்யவான், அபூர்வபார்யாபார்த்தீ தருணஃப்ரியதாசனஃ ஏகம்பஜவிசாலாக்ஷிபாத்தாரம) என்று நான் க்ருதவிவாஹனுமாய ஸ்நிக்தபார்யனுமாகையாலே, உனக்கு யோக்யனல்லன், இவன் அக்ருதவாஹனுமாய விவாஹம் பண்ணவேண்டுமென்கிற வாசையையுமுடையனாயிருக்கிறான் பின் பிவளைப் பாத்தாவாகவரியென்று பெருமாள் திருவுள்ளமாக, அவ்வழியாலே இளையபெருமாள் பக்கலிலே இவள் பத்தபாவையாக (கதம்தாஸஸ்யமே தாஸீபார்யாபவிதுமாஹஸி, ஆர், யஸ்யதவம் விசாலாக்ஷீ பார்யாபவயவீயஸி) என்றவர் அடிமையான வெனக்கு ஸ்ரீயானால் நீயு மடிமையா வாயித்தனை, அது வணங்கவி லரக்கரான் உங்களுக்குச் சேராது; நாசியாராக வாழலாம்படி அவர் தமக்கு இளைய நங்கையாராகப் பாராயென்று இளையபெருமான் சொல்ல, பெருமான் பக்கலிலே துவக்குண்டுமாக; இருவர் பக்கலிலுந் துவக்குண்டு இப்படி பத்தபாவை யாகையாலும் வைரூப்யகாரணத்திலும் (விரூபிதும்ர்ஹஸி) என்று ப்ரயோஜக கர்த்தாவாயும், (உத்த்ருத்யகட் கஞ்சிச்சேத [illegible]) என்றிளையபெருமாள் [illegible] இப்படி [illegible] இமா

மவஸ்த்ரம்சீதளம்) என்றிருவரையும் கூட்டாகச் சொல்லுகிறவ னாகையாலும் இவ் விருவரையும் ஒக்கசொல்லுகிறான; (தருணௌ) (இருவராய் வந்தானொன்றுமுன்னே நின்றார்) என்னுமாபோலே ஒருவர் இருவராய் வந்தன்றோ? என்னை யீடழித்தது; (தருணௌ) தம்பி தமையனுனல் பருவத்திலேயும் சிறிது வேறுபாடு காணலாமிறே? அப்படியன்றி, ஒருபடியாயக காணிருககிறது, புனர்ப் பூசம் பூசமாய் பின்னுனு முன்னுனுமானுல் அதத்னை வாசி தெரியாதிறே? இப்படி பருவததையிட்டு மயக்கு மித்தனையாய வடிவுதன்னைப் பாரததால் போலியா யிருககுமோ வெனனில், (ரூபஸம் பன்னௌ) ரூபத்தைப் பாரததால் அழகுவேண்டியிருப்பார்க்கு அவர்கள் பக்கலிலே இரநதுகொண்டுபோக வேண்டுமபடியாயகாண் கூடுகுறிததுககிடநதபடி (ரூபஸம் பன்னௌ) காமனாதாலதயென்று அநதககாமனகப்பட இவா திருமேனியி லேக தேசத்திலே உத்பநதனுகையனறே? அவவழகுதானுணடாயிற்று, (ரூபஸமபன்னௌ உதபநநமதரவயம க்ஷணமஸிரககுணமதிஷடதி) எனகிறபடியே முற்பட வாஸ்ரயமுண்டாய, பின்பு அவ்வாஸ்ரயத்திலே குணங்களுண்டாகையனறிககே (ரூபதாக்ஷிண்ய ஸமபநநௌப்ரஸூதௌ) என்கிறபடியே ரூபததாஸரயஙகள ஸஹோதபநநங்களாயக்காண், அவர்கள்பக்கலிருககிறது, (ரூபஸமபன்னௌ) வடிவுடைவானோ தலேவனேயெனறும அசசோ வொரு வழகியவாவெனறும, எனமுலேயாள ஒருநாளுனனகலததாளோ யெனறும, (காரார திருமேனிக கண்டதுவே காரணமாய, போரப்பிதறறுத திரிதருவன்) என்றும, (ராமேதிராமேதிஸதைவபுதயா) எனறும,பெண் பிறநதாரைப் பிச சேற்றி வாயவெருவப் பண்ணும் வடிவுகாண வருவது அவா தம்பியா ரன்றோ? மற்ற யாவரிவர்க ளிருவருடைய வடிவழகிலேகாண நானுழலுகிறது; இவவழகேயாயினைத்துப் பார்த்தால் உறைததிருககுமோ வெனனில், (ஸுகுமாரௌ) முரட்டு இராக்ஷசராள உஙகளைப்போல யன்றுகாண்; அவாகள் மார்தவ மிருககிறபடி பூவிலே யணைததாப்போலே காணிருப்பது தருஷ்டாநதஞசொல்லு மவாகளும (அதஸீபுஷ்ப ஸம்காச) மென்றும், (ராமமிநதீ வரஸ்யாமம) என்றும, பூவைப பூவண்ணா வென்றும, காயாம்பூ வண்ணா வென்றும, புஷபததை இட்டிறே சொல்லிறறு, (ஸுகுமாரௌ) வடிவினை இல்லா மலர்மகள் மற்ற நிலமகள் பிடிககு மெல்லடியென்றும், பூவிற பரிமளத்தையும், மண்ணில் பரிமளத்தையும், உபாதானமாகவுடைய பிராட்டியாரும அகப்பட்டவனைக் கையின்றிக்கே அடுத்தடுததுப்பாககவும போராதபடியாயக காண்; அவர்கள் மார்த்வம் இருக்கும்படி (ஸுகுமாரௌ) நடநத கால்கணொநதவோவென்றும், அடியாரல்லல் தவிர்த்த வசைவோ வென்று மிபபடி தான் நீண்டு தாவிய வசைவோவென்றும், தாளா லுளகமளநத வசைவேகொலெனறும, ஸ்வாபாவிகமான வியாபாரம் அகப்படத் திருமேனிககுப் பொறுதென்று அனுகூலர் வயிறுபிடிககும படியாயக்காண் அவர்கள் மார்த்தவ மிருக்குமபடி (ஸுகுமாரௌ) திவ்யஞான காம னொருவனிறே? இவர்க ளிளமையைப் பாரீர்; இரண்டு காமராயககாண் தோற்றுகிறது; (ரூபஸம்பன்னௌ ஸுகுமாரௌ) அவனனங்கனுயிறே யிருப்பது, (கநதர்ப்ப இவமூர்த்திமாந்) என்கிறபடியே ரூபவான்களாய காணிநதக்காமர் களிருப்பது (ராம மந்மதலரேணதாடிதா துல்ஸஹோதஹ்ரு ருதயேநிஸாசரீ) என்று காமனுயிவே பரிக்ஷித்துச் சொன்னுளிறே? இப்படி எழிலுமழகுமாய்த் தாத்திலே மகப் படுத்துமவேயாய்க்கிட்டி யனுபவிக்கப் பார்த்தால் உடற் கொடுக்க [illegible] [illegible] அம்பலார்யோ விருப்பதென்னில், (மஹாபலௌ) [illegible] [illegible] [illegible] செம்பெருமானுானதென்றும், [illegible]

விழுந்தேனென்ன ரிவளை யென்றும், பெண்பிறந்தார் தொந்தெழுதிச் சேர்க்கும்படி யாய்க் காணிருப்பது (மஹாபுஜௌ - ராமஸௌமித்ரீ தயாஸார்த்தம் விஜ்ஞாபயாமிரு னானை, மைந்தனை மலராள் மணவாளனை) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ருங்காரத்தில் வந்தால் அநேக குறுககளை யொருபடிப்பட நடத்தா நின்றாலும், எதிர்த்தலைப்ரதா னமாயது தாமே ப்ரதானராமபடிகாண்; அவர்கள் ப்ராபல்லிய மிருக்கும்படி யன்றிக்கே (மஹாபலௌ) (காதற்கடல்புரைய விளைவித்த காரமர்மேனிநங்கண்ணன்) என்கிறபடி பருவத்தையும், வடிவழகையும், சிவப்பையுமிட்டுப் பிறரைப் படுகொலைபடுத்தித் திரி க்கும்படி பண்ணிப் பின்னை யவர்க ளினைவிலோடியும் புகுராதபடியாயக காணவர்கள அத்தியவ்ஸாய பராபல்லிய மிருக்கும்படி என்னவுமாம், ஆக இப்படி சமுதாய சோ பையிலும் அவயவசோபை மட்டமா யிருக்குமோ வென்னில், (புண்டரீகவிஸாலா க்ஷௌ) அது கண்ணழகைத் தப்பிலுவன்றோ? வேறொரு அவயவத்தில் விழியவொட்டு வது (புண்டரீகவிஸாலாக்ஷௌ) அவையெல்லாம் கிட்டினு லழிக்குமவை இனி இது அங்ஙனன்றிக்கே தூது செய்யக் கண்கள் கொண் டொன்று பேசி யென்றும், தாம ரைக் கண்கள் கொண்டழிதி யாலோ வென்றும், தூதிலே தோற்றினபோதே அழிக் கும்படியாயக்காண் கண்களிருப்பது; (புண்டரீகவிஸாலாக்ஷௌ) புண்டரீகம விதாம போழுமிறே? (ஸமாகதாயதாகோரா:) என்றுங்களைப்போலே எரிவிழியா யிருக்கையன் றிக்கே சுப்ரஸந்தவளமான வக்கணகளிருந்தபடிகாண்; (புண்டரீகவிசாலாக்ஷௌ) ரக்ஷோபயோகியான கருவிழியும், செவ்விழியும், கண பர்ப்பும, தமோகுணத்ரேகத் தாலே நித்ராகஷாயிதமாதல, ரஜோகுண த்ரேகத்தாலே கோபஸமரக்தமாத லன் றிக்கே, ஸத்வப்சுர ராகையாலே, அவர்களுடைய தருவ்ஷடி ப்ரஸாத மிருந்தபடிகாண், (புண்டரீகவிசாலாக்ஷௌ) அவர் தாம (ஆத்மாநம மாநுஷம மந்யே) என்று தம்மை மறந்தாராகிலும், அகவாயிற்கிடந்த பரத்வத்தைக் கோட்சொல்லித் தாராநின்ற தா யிற்றுக் கண்கள்தான், (புண்டரீக விசாலாக்ஷௌ) பாற்கடல்போலே யக்கண்களுக் குள்ள அகலம ஒருவரால் கரைகாண வொண்ணாதபடியாயக்காண் கண்களிருப் பது, (புண்டரீக விசாலாக்ஷௌ) கண்ணிலுண்டான தெளிவுக்குப் புண்டரீகத் தை யொருபோலி சொன்னது மித்தனைபோக்கி அகலத்தைப் பார்த்தால கடலிற் புக்கார், கரைகாண மாட்டாதே மயங்குமாபோலே புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரிய வாய கண்களென்று மித்தனைபோக்கி வேறொரு பாசுர மிட வொண்ணாதுகாண், (புண்டரீக விசாலாக்ஷௌ) உயிர்க ளெல்லாக் தாயாய அளிக்கின்ற தண்டாமரைக் கண்ணனென்றும், தடங்கொள் தாமரைக் கண்விழித்து இடங்கொள் மூவுலகும் தொழ விருந்தருளாயென்றும் சொல்லுகிறபடியே பத்த முக்த நித்யாத்மகமாய த்ரிவித கோடியான உபய விபூ தியும், ஏகோத் யோகத்திலே கடாக்ஷிக்க வைத்தாய காண் கண்களிருப்பது, (மஹாபலௌ - புண்டரீகவிசாலாக்ஷௌ) பலத்தைக் காட்டி யவர்களைத் தோற் பித்து, அவர்களை (ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்றும், தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனை என்றும், எழுதிக்கொள்வது கண்ணழகையிட்டிறே? (மஹாபலௌ புண்டரீக விசாலாக்ஷௌ) அவர்களையிலே யீடுபட்டவர்கள் கோ தங் [illegible] மாட்டாதே (அவலோகநதாநேந பூயோமாம் பாலய) வென்றும், (புண்டரீகாக்ஷமமாம்) என்றும், தாமரைக் கண்களாலே நோக்காயென்றும், திரி [illegible], கண் [illegible] இக்கண்களில் [illegible], [illegible]

சொல்லிற்றிறே? ஆனால் புஷ்பபாணராகவேண்டுமோ? அப்படிக்கும் கண்ட தென் னென்னில், நடைகண்டென்றும் சிறைக்கோலால் செஞ்சுருவேவே வுண்டு சிலையுந் தானுந் கைவேனை என்னும்படி என்னை நிலை குலைத்த புஷ்பபாணங்களி ருக்கிறபடி காண், அவயவ சோபாமாதரத்தாலேயோ அகப்படுத்துவ தென்னில், (சீக்ருஷ்ணஜிநாம்பரௌ) ஒப்பனையழகாலும, அழிபபார்கள் காண் அவர்களென் கிறான்; (சீகருஷ்ணஜிநாமபரௌ) செவ்வாதத வுடையாடை யதன் மேலோா செவ்வரிகைக்கச சொல்லுகிறபடியே உள்ளுடுப்பது மரவுரி, மேற்சாததுவதுகலை த்தோலுமாயத்திருப்பது, (சீகருஷ்ணஜிநாமபரௌ) தாருண்யாதியான குணஸ முதாயத்தைப் பொதிந்த தொரு கிழிசசீரை இருநதபடிகாண், (தருணௌரூபஸம் பன்னௌ சுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ சீகருஷ்ணா ஜிநாம்பரௌ, கிமிவஹிமதுராணும மண்டனநா கருதிநாம) எனகிறபடியே வரை முழுகலான ரிஷிகளுமகப்பட விகருதமாமபடி யிருகக்கடவ, அமமாவுரியுந தோலும் அவாகள் வடிவிலே சோநத வடியாலே அழகுபெறறிருநதபடி காண், (சீ க்ருஷ்ணஜிநாமபரௌ) ஏதேனுமாக வஙகே சாறற வமையுமிறே? ஆகாஷகமாகை கரு (தாஸாமாவிரபூசசௌரிஸ ஸமயமான முகாமபுஜ:, பீதாமபரதரஸ ஸ்ரகவீ ஸா க்ஷான்மனமத மனமத:) எனகிறபடியே பீதகவாடையுடைதாழ விருநதாவன த்தே கண்டோமே யெனறும, செயயவுடையுந திருமுகமும, செஙகனிவாயுங குழலுங கண்டெனறும, பெண் பிறநதா வாய புலாததுமபடியாயககாண, இடைய ழகிருப்பது (சீகருஷ்ணஜிநாமபரௌ) உடுததுக களைநத நின பீதகவாடையுடுத்து என்று ஸவரூபஜ்ஞ ராசைபபடுவதும, பெருமாளையிற பீதகவணண வாடை கொண்டெனனை வாடடந தணிய வீசிறே யெனறு போகபாராசைப்படுவதும, பரியட்டதறையாயதது, (சீகருஷ்ணஜிநாமபரௌ) (ரூபஸம ஹநநமலக்ஷ்மீம ஸௌ குமாரயம சுவேஷதாம, தத்ருசுாவிஸமிதாகாரா:) எனறும, ஸவரூப தயானபராான ரிஷிகளகப்பட இவ்விகாரஹ குணததிலே யுடை குலைபபடா நினறாாகள், (கன யாகாமயதேரூபம) எனறு பெறறக காலவளுகம பெண பிறநதோ மயயோமோ வென்றும, உடமபை யுகபபிககககடவ, ஸதரீகளாழங காறபடச சொலல வேண் டுமோ? எளிமை சொல்லுகிற யோஜனையில, (தருணௌ) அவாகள் பகக லிலே சரக்குண்டாக நினைததிருகக வேணடாகாண், (நயுதத யோகய தாமஸ்ய பஸ்யாமி) எனகிறபடியே பூசறகு ஆளாகாதாா சில பாலராயக காணிருபபது நானே யோ விது சொனனேன; (பாலோஹய கருதவிதயஸ சஙசவேத்தி பலாபலம, நசாஸ்தர பலஸமபனனோ நசயுததவிசாரத:) எனறு பெற்ற தகப்ப னகப்பட செஞ்சாறல் பட்டிலனோ? (தருணௌ - யௌவநேவிஷயைஷிணம) எனகிறபடியே விஷயபராவணராய அனயபாராயத திரிகிறவாகளுககும ஒரு பூசலுணடோ போரு வது; யாஸான விவவளவு மனறுகாண, (ரூபஸமபனனௌ) கனயாகாமயதேரு யம என்றும, ரூபேணவஙிதாஜுனமெனறும, ஸதிரீக ளகப்படுகைககு மேனி மினுக கித்திரியுமததனை போக்கி, புருஷாக ளகபபடுமபடியான வாண்மை யுடையவர்க ளல்லர்காண், (ரூபஸமபன்னௌ) சூங்கிற் பொநதுபோலே தோலில் பசசையித் தனை போக்கி யகவாயிலுள் ளீடில்லைகாண், அதுககடி என்னென்னில், (சுகுமாரௌ) ஸ்ரீமத் புத்ரர்களாகையாலே, செலவபபிள்ளைகளாயக் காணிருப்பது, (சுகுமாரௌ) (ஸாவ்வபௌமஸ்யாத்ய மஹதப்ராணஸ்யபூதலே) என்கிறபடியே நடைக்கண் சிவந்து, சியாக்கும் பார்வையிலே மாயும்படி இருகரு மவர்களோ உன்னுடைய அத்யுக்ர

மர்ஜு வாயுதங்களைப் பொறுக்கப் புகுகிறான்; வடிவைப் பார்த்தால் திறவியரல்லரா கிலும், கார்யத்தில் வந்தால் திறவியரா யிரார்களோவென்னில், (மஹாபலௌ) பல ஹீநரான வளவே யன்றுகாண், க்ரமாகதமான ராஜ்யத்தைத் கொடுக்கச் செயதேயும், அகப்பட ஆளமாட்டாதே யொதுங்கிப் பெண்டாட்டிக் கஞ்சிப் போகட்டுப் பேரா ருமபடி அத்யந்தம பாலராய காணிருப்பது, அன்றியிலே, (மஹாபலௌ) பலவான்கள் தானானும், இவாக ளிருவரு மித்தனை போகக், இவர்களுக்குமேல் பலமாய் வரப்புகுகிறார்களுண்டோ? (தருஷ்டாதத்ரமயாநாரீ தயோர்மதயே சுமத் யமா) என்கிறபடியே காற்கட்டாமபடி குழைசசரக்கா விருப்பா ளொரு பெண் டாட்டியைய்யும் முதுகிலேகொண்டு திரிகிறவாகளோ? பூசலாடப புகுகிறாகள், பூச லாட மாட்டார்களென்றும, அறிநதபடி எனனெனனில, (புண்டரீக விசாலாக்ஷௌ) விளைவ தறியாமையாலே இவனுககு வைருப்யம விளைதேதாம, மேலெனனுகப் புகுகிறதோவெனறு அவாகள் வெளுககவெளுகக விழிக்கிறவிழியிலே கண்டேன்காண், புண்டரீகம விதாம்போஜம்ிறே? (புணடரீக விசாலாக்ஷௌ) நீரிற்றுமுடிமையை வறளிலே இழுப்பாரைபபோலே தனனிறமான நாடடுக கவாகளாளிததனைபோகக், வெற்று நிலமான காட்டுக காளலலரென்னு மிடம அவாகள் கண்கள் தாமே சொல் லித் தருகின்றனகாண், அவா தாஙகள சகதரானுல் ஐஸவாயததாலே படையாண்டு போரத்தட்டெனனென் றிருககவேணடா? (சீரகருஷ்ண ஜிநாமபரௌ) உடுககைக கொரு புடவை யகப்பட வனறியிலே, காட்டில மரததோலையும, மானதோலையு முடுத்துத் திரிகிறவாகளோ? காசு நோநது படையாளபபுகுகிறாகள (சீரகருஷ்ண ஜிநாமபரௌ) உடுககிற புடவை இரணடுமே கஜாதீயமாகப பெற்றதோ? உளளு டையொனறும, மேலுடையொனறுமாயன்றோ யிருககிறது, (சீரக்ருஷ்ணஜிநாம பரௌ) ஸ்தாவரமொன்று கொடுகக, ஜஙகமமொனறு கொடுகக, இப்படி பலா பககலாக விரநதன்றோ? இது தானு முடுககிறது, பௌருஷோப பாதன யோஜனையில், (தருணௌ-ஊநஷோடஸவாஷ:) எனறுமபடியான பிளளைப பரு வமு மன்றியிலே; (அநேகவாஷஸாஹஸரோ வருததஸ்தவ மஷிபாாததிவ) என் னும்படி முதிர்நத பருவமு மனறியிலே, பூசலென்றால் காட்டு காட்டெனறு வரும் படியான நல்ல பருவங்காண், (தருணௌ - யௌவநே விஷயைஷிணும) என் றும், (ராஜ்யகாமவிஷயாவிபேதிரே பவதவிஷயவாஸிந:) எனறும, விஷயஸப்தம் ராஜ்யவாசி யாகையாலே, இனனம ராஜயங கொளளவேண்டுமென்று மேலே விஜ யைஷுககளாம பருவங்காண, (தருணௌ) இப்பவருவ முடையாரொருவா அமை மைநதிருக்க, இருவர் கூடினால் இயலாத துணடோ? இப்பருவமும யோகய தையு மறிய வடிவு பார்ததால் இவர்களென்ன பூசல் போருவ தென்னும்படி ஆபாஸமா யிருக்குமோ வென்னில், (ரூபஸம்பநனௌ - விக்ரமோரஸ்கம் மஹா பாஹும்) என்கிறபடியே வேறொரு ஆயுதம வேண்டாதபடி அவர்களுடைய தோளையும், மார்பையுங்கண்டபோதே எதிரிகள் கால்வாஙகும்படியாயக் காணிருப்பது (ரூபஸம்பன்னௌ) ரூபமென்னும் மதிப்பா யிப்பருவஙகொண்டு அறமிச்சைய்ன் திக்கே, (கத்வாஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்யநிவர்ததே) என்றும், (யஸ்ஸங்கைகபா ஜநம்) என்றும், சொல்லுகிறபடியே அயோத்யா பரிஸரந் தொடங்கி, சுபாகு மாரீசாதி விரோதிவதம் பண்ணினத்தாலே பெருமதிப்பாயிருப்பவர்களல்லரோ வென்றுகவு மாம்; இப்படி விரோதிவதம் பண்ணுமிடத்தில் வருத்தத்தோடே க்லேசித்தே பண் ணுகிறார்களில், (சுகுமாரௌ) அவர்கள் ஆண்மைத்தனத்தில் வந்தால் ஒரு வகைக்

குச் சிறிது சொல்லிலா மித்தனை போக்கி வடிவழகைப் பார்த்தால் பகுமுகமாய்ப் பொ ல்லாதா யிருக்கை யன்றிக்கே? அத்யந்த மபிரூபமாய் காணிருப்பது; (சுகுமாரௌ)• அவர்களுமாயச சீறிப் பார்ததார்களாகில, முன்னே வந்த நாலிரண்டுபெயரைக் கொண றுவிடுமளவேயோ?(ஸதேவகந்தாவ மனுஷ்ய பன்னகம ஜகதஸசைலம பரிவர்த்தயாமி) என்றும், (ஸாகரமேகலாம மஹீந்தஹிகோபேந) எனறும, பூமியை இருந்தே குடி யாக நசிப்பியார்களோ? இப்படி நசிப்பிப்பது எது கைமமுதலாக வெனனில், (மஹா பலௌ) மஹச்சப்தததாலே கேவலம பாகுபலமே யனறு, மநோபலமு முடையவர்கள, கேவலம் மனோபலமே யன்று, பாகுபலமும, மனோபலமு முடையவாகளென்று இரண டையும் நினைத்துச சொல்லுகிறள் (மஹாபலௌ) உன்னுடைய சதுரங்க பலமும் அஸ்தகல்ப மாமபடி காண், அவாகள பலத்தின் மிகுதி யிருக்குமபடி (மஹாபலௌ) நெடுமபோது யுத்தம பண்ணினலும, ஸ்ரமந்தட்டாதபடி பலாதி பலகளெனகிற வித தைகளை யுடையாரயக காணிருபபது, இபபடிககு ஸ்ராநதி தட்டாதெனறு அறிநதபடி என்னென்னில், (புணடரீக விசாலாக்ஷௌ) வெறறு நிலமான விககாட்டிலே திரியச செயதேயும, தனனிலததிலே நினறதாமரைபோலே அககண்ணிற செவ்விதானே சொல்லா நின்றது காண, (புணடரீக விசாலாக்ஷௌ) எதிரிகளெனறு லவர்கள பககலிலே ஒரு கௌரவததைப பணணி, சிறுததல பருததல் செயகை யன்றிக கே? அவிகருதமாய காண கணகளிருப்பது, (புணடரீக விசாலாக்ஷௌ) ப்ரீதவிஸ்ப பாரிதேக்ஷணம என்று எதிரிகளைக கணடாலு ராவுகை•யனறிககே? சேஷணிப் பாலே ஒருகாலைக கொருகால விஸதருதஙகளாயககாண கணகளிருபபது, (புணடரீ கவிசாலாக்ஷௌ) எதிரிகளைக கணடா லிபபடி முக மலருகைக கடியெனன? பூசலுக கெனறு கட்டி யுடுதது ஸந்ததராளுலனறோ? அபபடியே இருககலாவது, அநவஸரத் திலே வநது தோறறினருணடாகில, செயயும தெனனெனனில், (சீரகருஷ்ணஜிநாம பரௌ) (ஸநதௌவிசரிஷ்யதஃ) எனகிறபடியே உள்ளுடையு மிறுககி உடமபுககிடு மிட்டு, ஸநததராயக காண அவாகளிருபபது, (சீரகருஷ்ணஜிநாம்பரௌ) காட்டிலே ஸர்வவித ஸதவஙகளையும வேட்டையாடித திரிகிறவாக ளாகையாலே உடைததோ லும மரசசட்டையுமாயககா ணவர்களிருபபது, ஆக விபபடி (ஸதயேந லோகான்ஜய தி நான்தாநே நராகவஃ, குருனஸுஸ்ருஷயாவீரோ தனுஷாயுதிஸாதரவான்) என கிறபடியே அபலைகளை யழகாலே யழிததும, அரிகளை யமபாலே யழிததும, அகதிகளை யருளாலே யளிததும, தககாாககுத தகக கருவிகளை யுடையாராயக் காணவர்களிருப் பது, ஆனபினபு, (வலலாளனதோளும, வாளரககன்முடியும, தஙகை பொல்லாத மூக கும போககு விததா) னெனகிறபடியே நான மூககறுப் புண்டாபபோலே நீயும முடி யறுப்புண்டுபோ மிததனைபோககி, அவாகளோடு புககால் பலியாதுகாணென்று பரிப விததுச சொலலுகிறள ஸ்ரீமதபெரியவாசசானபிளளை யருளிசசெயத வியாகயா னம முறறிறறு

## இருபதாவது ஸர்க்கம்.

பெருமாள் பதினனகு படைததலைவாகளையுங
கொலைசெய தருளியது.

அனந்தரம் கொடியளாகிய அந்தச்சூர்ப்பணகையும், பெருமாளெழுந் தருளி யிருக்கின்ற பர்ணசாலைக்கு அந்தப் பதினன்கு படைத்தலைவர்களையு

மழைத்துக்கொண்டு வந்து, பெருமாளையும் இளையபெருமாளையுங் காட்டி, இவர்களே என்னுடைய செவி நாசிகளை யறுத்தவர்களென்று கூறினள்.

பெருமாளும் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும், அவர்களையும், அந்த அரக்கியையுங் கண்டு, இளையபெருமாளை நோக்கிப் பாரடா, லக்ஷ்மணா! நம்மால் மூக்கறுப்புண்ட இந்த அரக்கி இவ்வரக்கர்களை யழைத்து வந்தனள்; ஆதலின், முகூர்த்தகாலம் ஸீதையை யருகிலிருந்து பாதுகாவாய்; யான் இவ்வரக்கர்களைக் கொலை செய்து வருவேனென் றருளிச்செய்தனர். இளையபெருமா ளதுகேட்டவ்வண்ணமே யாகுகவென் றுடன்பட்டுப் பிராட்டியாரைப் பாதுகாத்து நின்றனர். பெருமாளும் தங்கக்கட்டமைந்து சிறந்த கோதண்டத்தைத் திருக்கையிலேந்தி நாண்கட்டி லிதத்தனுஞ் செய்துகொண்டு, அந்தராக்ஷஸர்களை நோக்கிக் கேளீர் பலாசனர்களே! யாங்கள் ஸ்ரீதசரதச்சக்ரவர்த்தி திருக்குமாரர்கள்; ஆயினும், ஸீதையுடன் காய் கனிகளையுண்டு தவசிவேஷம் பூண்டு கொடிய இத்தண்டகாவனம் புகுந்துறைகின்றனம்; ஆதலின், நீங்கள் எம்மையேன் பீடைசெய்யக் கருதுகின்றீர்கள்; முனிவர்களது கட்டளையினால் பாவிகளாகிய உங்களைக் கொலைசெய்வதன் பொருட்டே யானிங் காயுதமேந்தித் திரிகின்றேன்; ஆதலின் நீங்கள் வீறமுறப் போர்செய்ய விருப்பங் கொள்ளுவீர்களாயின், செல்லற்க; நிற்க; உயிர்வாழ விரும்புவீர்களாயின், மீண்டோடுக; என்று தீரமுற வருளிச்செய்தனர்.

அந்த வரக்கர்க ளிம்மொழிகேட்டு மிக வெகுண்டு, சூலத்தைக் கையிலேந்திப் பெருமாளை நோக்கிக் கேளடா மானிடப் பயலே! எங்களுக்கிறையாகிய கரனுக்குத் தீங்குசெய்த பின்னும், நீ உயிர்வாழ்வுறுவாயோ? நீயே எங்களால் அடிபட்டுயிர்மாய்ந் திறப்பாய்; நீ யொருவனாகிப் பதினால்வராகிய எங்கள் முன்னே நிற்க வாகிலும் வல்லையோ? அங்ஙனமாயின், போர் செய்ய எங்ஙனம் வல்லாய்; ஆண்பிள்ளையாகில், வெளியே வாடா? எங்களுடைய படைகளினா லடிபட்டு உயிர் விடுவாயென் றுரைத்து, எல்லோரும் ஒருமைப்பட்டே சூலங்களை யோங்கி எறிந்தார்கள். பெருமாளும் உடனே அந்தப் பதினான்கு சூலங்களையும், பதினான்கு கணைகளைத் தொடுத்தறுத்து விட்டுப் பின்னும் கூரிய பதினான்கு நாராசங்களைத் தொடுத்து, அவ்வரக்கர்களது மார்பைக் குறித்திட்டெய்யப் பொன்கட்டமைந்த அக்கணைகளும் இந்திரனால் விடுக்கப்பட்ட வச்சிராயுதம், மலைகளைப் பிளப்பதுபோல அவ்வரக்கர்களது மார்பினைப் பிளந்து, குருதிதோய்ந்து, வேகத்தினால் தரையினும் வீழ்ந்தழுந்தின; அவ்வரக்கர்களும் வேரில் அறுப்புண்ட மரங்கள் போலத் தரையில் சாய்ந்து வீழ்ந்து உயிர்மாய்ந்திறந்தனர்கள். சூர்ப்பணகி இவ்வண்ண மவர்க ளிறந்ததைக் கண்டு பெருங்கூச்சலிட்டுச் சினமும் அச்சமுங் கொண்டு, திரும்பிப் [illegible] கரனைக் கண்டு கிட்டிக் கொழுஞ்சமும் உலர்ந்து உதிரமுடையாளாய் [illegible] பெருகிப் புலியின் கட்டிய [illegible] மரம்போல வீழ்ந்தாள்.

அடிக்கடிக் கீழ் முனிஞ்சுளித்துக் கண்ணீர் பெருக்கிப் புலம்பி, அந்தப் பதினால்வரும் போரில் மடிந்திறந்ததைக் கூறலுற்றனள்.

ஆரண்யகாண்டத்தில் இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தோராவது ஸர்க்கம்.

### சூர்ப்பணகை கரனை மீளவும் போர்செய்யத் தூண்டியது.

இவ்வண்ணம் மேன்மேலும் தீங்குசெய்பவளாகி வந்து வீழ்ந்து புலம்பிய சூர்ப்பணகையைக் கரன் கண்டு இருமடங்கு வெகுண்டு அவளை நோக்கி, அடி அருமைத் தங்கையே! உனக்கு நலம் செய்வதன் பொருட்டே சூரர்களும், கொடியர்களும், அன்புடையோர்களும், எக்காலத்திலும் எனக்கு இதம் செய்பவர்களும், பிறரைக் கொலைசெய்வோர்களும், பிறரால் கொலைசெய்யத் தகாதவர்களுமாகிய பதினாலுவரை யுன்னுடன் கூட்டி அப்பொழுதே யனுப்பி இருந்தேனல்லனோ? மீளவும் ஏன் தனியே வந்து வீழ்ந்து அழுகின்றனை? இதென்ன காரணம்? உன்னைப் பாதுகாப்பவன் யான் இருக்கையில், நீயேன் இவ்வண்ணம் அநாதையைப்போலப் புலம்புகின்றனை? எழுக; எழுக; அஞ்சற்க; துன்புறற்க; என்று இனிமையாகத் தேற்றி வினவினன். சூர்ப்பணகையும் அதுகேட்டு மனந்தேர்ந்து, கண்களைத் துடைத்துக்கொண்டு கரனை நோக்கிக் கேளடா அண்ணா! யானிப்பொழுதே மூக்கறுப்புண்டோடிவந்து உனனிடத்தில் முறையிட்டு, உன்னாலும் தேற்றப்பட்டு, என்பொருட்டே பதினான்கு படைத்தலைவர்களையும், என்னுடன் கூட்டியனுப்பினை யல்லையோ? அவர்களும் அந்த ராமனுடைய கூரிய கணைகளால் மடிப்பட்டிறந்தனர்கள்; கணப்பொழுதில் ராமனொருவனாலேதானே யவர்கள் மடிந்ததைக்கண்டு அச்சமுற்றோடிவந்து உன்னையே தஞ்சமடைந்தேன்; ஆதலின், துயரமென்னும் முதலை யுடையதும், பேரச்சமென்னும் அலைபொருந்தியதும், கரைகாணப்படாததுமாகிய சோகக்கடலின் மூழ்கிய என்னை ஏன் பாதுகாத்தளிக்கின்றிலை? என்னைப் பற்றி இப்பதினாலுவரும், ராமனால் கொலைசெய்யப்பட்டு வீழ்ந்திருக்கின்றனர்கள்; என்மீதும், அவ்வரக்கர்மீதும், உனக்குக் கருணையும் அன்புமுளவென்பது உண்மையாயினும், ராமனுடன் போர்செய்ய உனக்குத் திறமையுண்டாயினும், உனக்குத் தோள்வலியும் வீரமும் தீரமும் உளவாயினும், அரக்கர்களுக்குப் பகையாகிய அந்தக் கொடிய ராமனைக் கொலை செய்யாய்; எமக்கும் பகையாகிய அந்த ராமனை நீ இப்போழ்து கொலை செய்யாயாயின்; யானிப்பொழுதே உன்னெதிரில் உயிரை மாய்த்து இறப்பேன்; நீ சதுரங்க சேனைகளுடன் கூடிப் போரில் செல்வையாயினும், நீ ராமனுக்கெதிரில் நிற்க வல்லமை கொள்ளாயென்று எண்ணுகின்றேன்; யான் மிகுந்த தோள்வலியுடை

யுள்ளனவும், வீரமுடையோனெனவும், வாளாச் செருக்குற்றிருக்கின்ற னையே யன்றி, நீ யுண்மையாகச் சூரனாகாய்; மானிடர்களாகிய அவ்விருவர் களையும், நீ கொலைசெய்யத் திறமை கொள்ளுகின்றிலை யல்லையோ? ராமனு டன் போர்செய்யத் திறமையுள்ளாயென்பது உண்மையாயின், இப்பொழுதே சென்றவனை வெற்றி கொள்ளாய்; வீரமும் தீரமுமின்றி, அற்பனாகிய நீ இவ் விடத்தில்வாழ்வதென்பதெவ்வண்ணம்? ஆதலின், விரைவாக, இனத்தார்சுற் றத்தார்களுடன் கூடி இந்த ஜனஸ்தானத்தை விட்டோடிச் செல்க; இவ் வண்ண மின்றிருப்பாயாகில், ராமனுடைய தேஜஸ்ஸினால் எரிக்கப்பட்ட வனாகி, நீ விரைவில் அழிவாய்; தசரத சக்கரவர்த்தித் திருமகனாகிய அந்த ராமன் மிகவும் தேஜஸ்ஸுற்றிருக்கின்றனன; அவன் தம்பியாகிய லக்ஷ்மண னும் மிகவும் பராக்கிரம முடையோன; அவனாலேயன்றோ யான் மூக்கறுப் புண்டேன்; என்றிவ்வண்ணம் பலமுறை மொழிந்து திகழ்ந்து, கைகளினால் வயிற்றி லடித்துக்கொண்டு மிக வருந்திய புலம்பி யழுதனள்.

ஆரண்யகாண்டத்தில் இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

கரன் பெருமாளுடன் போர்செய்யப் படை எடுத்தது.

கர னிவ்வண்ணம் சூர்ப்பணகியால் இகழ்ந்து மொழிந்து போர்செய யத் தூண்டப்பட்டவனாகி, அரக்கர்களது நடுவில் தங்கையைநோக்கிக் கேளடி நங்காய்! உனக்குற்ற அவமானத்தினால் பெருகிய எனது கோபம் பொங்கோதம்போலத் தடைசெய் தடக்குவதற கரியதாகி மேலெழுகின்றது; தான்செய்த தீச்செயலினாலே யாவனொருவன் என்னால் இப்பொழுதே யடிபட் டிறக்கப் போகின்றனனோ? அத்தன்மையனாகிய அம்மானிடனுக்கு யான அச்சமுறுகின்றிலேன்; அந்த ராமன் எனக்கு நிகராகுவானோ? யான அவனைப் போரில மதிக்கின்றிலேன்; ஆதலின், கண்ணீர் விடற்க; பதைப்பை விடுக; யானிப்பொழுது தம்பியுடன் ராமனை யமனிட மனுப்புவேன்; ராமன் கோ டாலியா லடிபட் டிறந்து தரையில வீழ்கையில், நீ யவனுடைய வெப்பம் கொண்ட உதிரத்தைப் பானஞ் செய்வாய்; தேறி எழுந்திராயென்றுரைத் தனன்.

சூர்ப்பணகியு மதுகேட்டு மகிழ்ந்த தவனைப் புகழ்ந்தெழுந்தனள். தங்கையினால் தூண்டப்பட்ட கரனும், மீளவும் அவளால் புகழப்பட்டவனாகி மகிழ்ந்து தூஷணனை நோக்கிக் கேளாய் ஸேனாபதி!, என மனத்துக் கிசை ந்தவனும், கொடிய வேக முடையவனும், போர்க்களத்தில் வெற்றி கொள் ளு[illegible]தனவும், நீண்ட கொண்டல்வண்ணமுடையனவும், [illegible]

னவும், உயிர்களை வருத்தி மகிழ்வனவும், சிறந்த தோள்வலி யுற்றனவும், புலிபோலப் பாயுந் தன்மையனவும், கொடியனவுமாகிய அரக்கர்களது பதினாலாயிரஞ் சேனைகளையும், சந்நத்தஞ்செய்க; விரைவில் வில் முதலிய படைகளையும், தேரையும் கொணர்க; வில், கணை, வாள், சக்தி இவ்வாயுதங்களைப் பலவாகத் தேரி லேற்றுக; யான் 'இப்படைகளுக்கு முன்னாக அந்தக் கொடிய ராமனைக் கொலைசெய்வதன் பொருட்டேகக் கோருகின்றேனென்று கட்டளையிட்டனன். தூஷணனும் உடனே வெய்யோன்போலத் திகழ்ந்து, பற்பல வண்ணம் பொருந்திச் சிறந்த குதிரைகள் கட்டிய தேரைக் கொணர்ந்து கரனுக்கறிவித்தனன். கரனும் மேருகிரியின் சிகரம்போல உயர்ந்தும், சிறந்த பொன்னணிகளால் அலங்காரஞ் செய்யப்பட்டும், பொன்னாலியற்றிய சக்கரம் பூட்டியும், நெருக்கமின்றியும், வைடூரியத்தாற் செய்த ஏர்க்கால் அமைந்தும், மீன் மலர் மரம் செடி கொடி மலை இரவி மதி விண்மீன் பறவைகள் தங்கத்தினாற்செய்து சிங்காரிக்கப்பட்டும், துவஜம் நாட்டியும், சதங்கைகள் கணகணவென் றொலித்தும், குதிரை கட்டியும், சித்தமாய் நிற்கின்ற அந்தத் தேரின்மேலேறினன். சேனைகளும் இவனைக்கண்டு படை யேந்தி வந்து, இவனையுந் தூஷணனையுஞ் சுற்றி நின்றன; கரன் தேர்நடுவி லிருந்தே எல்லா வரக்கர்களையும் நோக்கிச் செல்லுக செல்லுகவென்று கட்டளைசெய்கையில், தானைகளுமுடனே புறப்பட்டுச் சிங்கநாதஞ்செய்து, ஈட்டி தடி வாள் சூலம் சக்தி பரிகம் கோடாலி வில் உலக்கை முதலிய கொடிய படைகளைக் கரங்களிலேந்திக் கரன் கருத்தின்படி பஞ்சவடியை நோக்கிச் சென்றன; இவ்வண்ணம் பதினாலாயிரம் சேனைகளும் விரைந்து செல்லுவதைக் கண்டு, கரனுடைய ஸாரதியும் யஜமானனுடைய மனமறிந்து தேரை மெல்ல நடாத்தினன். அப்பொழுது அந்தத்தேரி னொலி பத்துத் திசைகளிலுமெழுந் தொலித்தது; இவ்வண்ணஞ்செல்லுகையில், கரன் சினமும் தீரமும் அதிகரித்துப் பகைவரைக்கொலை செய்வதில் விரைவுகொண்டு சிம்மநாதஞ்செய்து யமன் போலப் பயந் தருபவனாகி, கற்களையும் வீசி எறிகின்ற பெருங்காற்றாக கருமுகிலைத் தாக்கியோட்டச் செய்வதுபோலச் சாரதியைத்தூண்டித் தேரைவிரைவாகச் செல்ல விட்டனன்.

ஆரண்யகாண்டத்தில் இருபத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## இருபத்துமூன்றாவது ஸர்க்கம்.

### கரனுக்கு வழியில் அவசகுனங்களாகியது.

இவ்வண்ணம் கரன் பதினாலாயிரம் சேனைகளுடன் போர்செய்யப் புறப்படுகையில் தீமை தருவதும், கண்ணுறற் கரியதும், கழுதையின்வண்ணம் பொருந்தியதும், கொடுமைகொண் டொலிப்பதுமாகிய மேகம் குருதி

[illegible]ப்பொழுதிர்ந்தது; மேடுபள்ளமின்றி கருமுலர்ந்தவிய ராஜவீதியிலே அவனே
ஏர்க்குதிரைகள் ஆவமடிந்து வீழ்ந்தன; ஸூரியனைச்சுற்றிலும் கறுத்தும்,
முனையில் சிவந்தும், கொறைக்கொள்ளிபோலப் பரிவேஷ முண்டாயிற்று; அவ
னுக்குரியதுடைய தேர் துவஜத்தின்மேல கொடிய கழுகுவந்து உட்கார்ந்தது;
பூமிதுண்டனும் பறவைகளும், விலங்குகளும், ஜநஸ்தானத் தருகில் வந்து
கோரமாக வொலித்தன; தற்செயலாய் எரிகின்ற தென்றிசை நோக்கி, நரி
கள் நிரை நிரையாகக் கூடி யூளையிட்டன; இந்திரனால் சிறகுகளறுபட்டுண்டு
குருதி பெருகிய மலைகள் போன்ற செம்மேகங்களும், ஆகாசமெங்கும் பரவி
மழைத்தன; மயிர்க்கூச்செறியத்தக்கதாகிக் காரிருள் மூடிற்று; திக்கு
களாயினும், விதிக்குகளாயினும், நன்கு விளக்கமுற்றில; ரத்தம்போலச்
செவந்த சந்தியுங் காலமல்லாக் காலையிலே தோன்றிற்று; கரனுக் கெதிரா
கப் பறவைகளும், விலங்குகளும், கோரமாகக்கூவின; கழுகு நரி கூளி முத
லிய பறவைகள் அச்சமும் தீமையுந் தருவனவாகி யொலி செய்தன; நரிகள்
தீயுமிழுந்தொலிக்கின்ற முகங்களுடன படைகளை நோக்கி ஊளையிட்டன;
பரிகம்போன்ற தலையற்ற உடல் கதிரவனருகில காணப்பட்டது; பருவ
மல்லாக்காலையிலும், ராகு ரவியைவிழுங்கினன்; பெருங்காற்றெதிர்த்து வீசி
ற்று; வெய்யோனும் ஒளி யிழந்தனன்; இரவன்றியும், விண்மீன்கள
மின்மினிப் பூச்சிகள்போல வீழ்ந்தன; தாமரை யோடைகளும், அடங்கிய
மீன் பறவைகளை யுடையனவும், உலர்ந்த தாமரைமலர்க ளுள்ளனவுமாகக்
காணப்பட்டன; மரங்களும் தளிர் மலர் காய் கனிகளை யுதிர்த்தன; காற்றின்
றியே செந்தூளி எழுந்தது; சாரிகைகளும் வீசிக கூசியென்று கூவின; கொ
ள்ளியும ஒலியுற்ற சுழல்காற்றுடன வீழ்ந்தது; மலை செடி காடு கடல்களு
டன் கூடிய பாரும அசைந்தது; கரனுடைய இடது புஜமும நடுக்குற்றது
ஒலியும் கண்டத்தில் தடையுற்றது; கணணும சோகநீருற்றது; தெற்றியிலும்
நோயுளதாயிற்று; இவ்வண்ணம பல அவசகுனங்கள் காணப்படினும், கரன்
மதிமயக்கினுல் திரும்பிச சென்றிலன்; அன்றியும, அவன் அந்த அவசகுன
ங்களைக் கண்டு கனகனவென்று நகைத்து, தன்னுடன வந்த அவ்வரக்கர
ெல்லோரையும் நோக்கிக் கேளீர் வீரர்களே! யான் மிகுந் திறமையுற்ற
வனாயிருக்கையில், இவ்வுற்பாதங்களைக்கண்டச்ச முறுவேனோ? ஒருக்காலு
மச்சமுறேன்; கூறிய கணைகளினுல் விண்மீனையும், விண்ணினின் றறுத்து
வீழச் செய்வேன்; யான் சின முறுவேனுகில, யமனையுங் கொலை செய்வேன்
ஆதலின், அற்பர்களாகிய இந்த ராம லக்ஷ்மணர்களைக் கூரிய கணைகளினு
கொலை செய்யாது மீண்டு செல்ல விரும்புகின்றிலேன்; என் தங்கையும அவ
களுடைய ரத்தத்தைப் பானஞ்செய்து கோரிக்கை யீடேறி மகிழ்க; அவ
[illegible] யல்லவோ ராம லக்ஷ்மணர்கள் தீமை செய்தனர்கள்? யான
[illegible] லெங்கும் போரில் தோல்வியுற்றிலேன்; இவ்விஷயத்தை நீங்க
[illegible] கண்டிருக்கின்றீர்களல்லீரோ? யான் பொய்யுரையேன்; வசி

வெற்றி வைபவமுடையோர்க் கெதிர்க்கும் பிரதாபமுடையான் வெல்வேனுகில், இம் முனிவர்களிவனை வெல்வேனோ? என்று வீரவாதஞ்செய் துரைத்தனன். அப் படைகளும் ஆயுள்மாய்ந்தமையின், அம்மொழிகேட்டு மகிழ்ந்து சென்றன; அப்பொழுது தேவகந்தர்வ ஸித்தசாரணாதிகளாயுள்ள தேவகணங்களும் இவர்களுடைய போரைப் பார்க்கவேண்டுமென்று கௌதூஹலங் கொண்டு அங்கு வந்து சேர்ந்து அப்படைகளைக்கண்டு பெருமான் ஜயமுறுமோ வென் றையுற்றனர்;—

స్వస్తిగో బ్రాహ్మణేభ్యోస్తు లోకానాం యేభిసంగతాః।
జయతాం రాఘవస్సంఖ్యే పౌలస్త్యాన్ రజనీచరాన్॥

ஸ்வஸ்திகோப்ராஹ்மணேப்யோஸ்து லோகாநாமயேபிஸங்கதாঃ|
ஜயதாம்ராகவஸ்ஸங்கயே பௌலஸ்தயான்ரஜநீசரான||

ஆனிரைகளின் பொருட்டும், அந்தணர்கள் பொருட்டும், உயிர்களுக் கிதங்கருதும் நல்லோர்கள் பொருட்டும், நலமுண்டாகக் கடவது. புலஸ்திய மஹாமுனியின் குலத்தில் தோன்றிய இவ்வரக்கர்களை ரகுகுலதுரீணரான பெருமாள் வெற்றிகொள்ளக்கடவர். சக்கரபாணியாகிய ஸ்ரீமந்நாராயணன் போரில் அஸுரர்களை மடிப்பதுபோலவே இவரும் பகைவரைவென்று நற்பு கழ் பெறக்கடவர் என்றிவ்வகையாக ஆசீர்வசனஞ்செய்து சூழ்ந்து நின்று பார்த்திருந்தனர்கள். அவ்வண்ணம் கரனும் தேரூர்ந்து விரைவாக வருகை யில், அவனைச் சேர்ந்த ராக்ஷஸர்கள் எல்லோரும் புறப்பட்டு விரைவாக வந்த னர்கள். அவர்களுள் சியேநகாமீ, பிருதுக்ரீவன், யஜ்ஞசத்ரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், காலகார்முகன், மேகமாலீ, மஹாமாலீ, ஸர்ப்பாஸ்யன், ருதிராசனன் என்னும் பன்னிரண்டு மந்திரிகள் கரனுக்கு நாற்புறங்களிலுஞ் சென்றனர்கள்; மஹாகபாலன், ஸ்தூலாக்ஷன், ப்ரமாதி, திரி சிரன் என்னும் நான்கு சேனாபதிகள் தூஷணனுக்குப் பின்புறத்திற் சென் றனர்கள்; போர்செய்யக் கருதிச் சிறந்த வேகமுற்றுச் செல்லுகின்ற அந்தப் பதினாலாயிரம் அரக்கர் படைகளும், விண்ணிடையில் விண்மீன்கள் சந்திர ஸூரியர்களைச் சேர்வனபோல ஸ்ரீராம லக்ஷ்மணர்களைச் சேர்ந்தனர்கள்.

ஆரண்யகாண்டத்தில் இருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்து நான்காவது ஸர்க்கம்.

### பெருமாள் போர்செய்யச் சன்னத்தராகி யருளியது.

இவ்வண்ணம் கரன் போர்செய்யப் புறப்பட்டு வருகையில், அவனுக்கு நேர்ந்த அபசகுனங்களைப் பெருமாள் பர்ணசாலையிலிருந்தே கடாக்ஷித்து, இளையபெருமாளை நோக்கி, பரதா தம்பி! இந்த உற்பாதங்கள் எல்லாவுயிர்களி

யும் அழிக்கத் தக்கனவும், அரக்கர்களுக்கு மிகவும் தீமை தருவனவு மாகின்றன; இம்மேகங்கள் செவப்புற்றுக் குருதிபொழிகின்றனவாகி, வான் முழுதும் பரவிக் கழுதை போலக் கடுவொலி யொலிக்கின்றன; என்னுடைய கணைகளும் புகையெழுந்து மின்னுகின்றன; கோதண்டங்களும் அசைகின்றன; இப்பறவைகளின் ஒலிகளும் நமக்குக் கணப் பொழுதிலேதானே மஹாபயந் தோன்றுமெனச் சூசனை செய்கின்றன; ஆதலின், பெருஞ்சண்டை விளையப் போகின்றதென்பதில் ஐயமில்லது; என்னுடைய இந்த வலது தோளும் அடிக்கடி துடிப்புற் றிருக்கின்றமையின், எமக்கு ஜயமும், எதிரிக்குத் தோல்வியும் நேருமென வுரைக்கின்றது; உனது முகமும் ஒளியுற்று விளங்குகின்றது;—

ఉద్యతానాంహి యుద్ధార్థం యేషాం భవతి లక్ష్మణ।
నిష్ప్రభం వదనం తేషాం భవత్యాయుః పరిక్షయః॥

உதயதாநாமஹியுததார்ததம் யேஷாமபவதிலக்ஷமண|
நிஷப்ரபமவதநமதேஷாம பவதயாயுஃபரிக்ஷயஃ||

'போர்செய்ய முயலுங்காலையில், யாவருடைய முகம் ஒளியிழந்து வாடுகின்றதோ? அவர்களே ஆயுள்மாண் டிறப்பார்கள்; எமது முகம் அவ்வண்ணம் ஒளி இழந்திலதாதலின், யாமே வெற்றி கொள்வோம்; ரணபேரியின் முழக்கமும், அரக்கர்களது சிம்ஹநாதமும், கலந்து தொனிக்கின்றன; ஆதலின், விரைவில் பெரும்போர் விளையும்,—

అనాగతవిధానన్తు కర్తవ్యం శుభమిచ్ఛతా।
ఆపదం శంకమానేన పురుషేణ విపశ్చితా॥

அநாகதவிதாநது கர்தவ்யம் சுபமிச்சதா|
ஆபதம்சஙகமானேன புருஷேண விபசிதா||

அறிவுடையோன் நன்மைபெற விரும்புவானாகில், துன்பம் வருமெனவறிந்தபின், அத்துன்பம் நேர்வதன் முன்னமே அத்துன்பம் தன்னையணுகாவண்ணம் முயற்சி செய்யத்தக்கவன்; ஆதலின், நீ இப்பொழுதே வில்லினை நாணேற்றிட்டுக் கணைதொடுத்து ஊக்கங்கொண்டு வைதேஹியை யழைத்துக் கொண்டுபோய் மரங்களடர்ந்து நெருங்கிய இம்மலையின் குஹையினுட்புகுந்து பாதுகாத்தளிக்கக் கடவை. என்னுடைய இக்கட்டளையை மறுத்துரையற்க; என்னுடைய திருவடிகளின்மேலே ஆணையிட்டிருக்கின்றேன்; தாமஸஞ் செய்யாமல் செல்லுக; நீ மிகத் தோள்வலியுற்றவனும், வீரமுடையோனு மாதலின், இப்படைகளைக் கொல்ல நீ யொருவனே வல்லை; ஆயினும் யானே இவ்வரக்கர்களெல்லோரையுங் கொலைசெய்யக் கோருகின்றேனென்று கட்டளைசெய் தனுப்பி யருளினர்.

இளையபெருமாளு மதுகேட்டு அங்ஙனமே யாகுகவென்று வில்லைக் கையிலேந்திப் பிராட்டியாரையு மழைத்துக்கொண்டு பிறர் புகுதற்கரிய குகையிலுட்புகுந்தனர். உடனே பெருமாளும இவர்களை நலவுபாயஞ்செய்தனுப்பிவிட்டேனென்று மகிழ்ந்தது, கவசம்பூண்டு, நள்ளிருளில புகைநீங்கி எரிகின்ற செந்தழல்போலத் திகழ்ந்து, கோதண்டத்தைத் திருக்கரத்திலேந்தி, கூரிய கணைகளையும் ஸந்நதஞ்செய்து, வில்லின் டங்காரத்தினுல திசைக ளெல்லாவற்றையும் ஒலிக்கச்செய்து நின்றருளினர். முன்புற்றதேவ கந்தர்வ வித்தவித்யாதர சாரண கின்னர கிம்புருஷாதி தேவகணங்களும, தேவரிஷி பிரஹ்மரிஷிகளும் வந்துகூடி, கோபுராஹமணாகளுக்கு மங்கல முண்டாகுக வென்றும, ஸ்ரீமந்நாராயணன் அஸுராகளைபபோலப பெருமாளும அரக்கர்களை வெல்லுகவென்று ஆசிர்வாதஞ்செய்து (தெருச்சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி) என்னும், பழமொழியின்படியே இவாகளுடைய சண்டையைக கணணுறக கருதிச சுற்றிலும அடாந்து நின்றனாகள; அவாகளுள சிலா அரக்காபதினாலாயிரவர்களுடன் ஸ்ரீராமபிரா னொருவனே எவவண்ணம போாசெயது வெற்றி கொள்வாரோவென்று வியந்தனாகள. யுததததிறகுச சிததமாகி மஹாவொளிபொருந்திய போாககளததின முன னிறகிற பெருமாளைக கண்டு எலலாபபூதஙகளும நடுங்கின; அபபொழுது பெருமாளுடைய திருமேனியும ஊழிகாலத்தி லுருததிரனுடைய உடலபோலததிகழநதது; உடனே அவ்வரககாகளது சேனைகளும, பறபல படைகளை ஏநதியும, சிமஹநாதஞ செய்தும, தனுஷடஙகாரஞ செயதும, வீரவாத முரைததும, பேரிகளை முழககியும, விரைநது வநது சுறறிக கொணடன; அவவொலிகள் யாவும ஒன்றுசோந தொலிததன; அவவொலியைச செவியுறறு, அவவநததிலுளள விலஙகு பறவைகள யாவும பயநதோடின; பெருமாளும தனமே லெதிாதது வருகினற அநதச சேனை முழுவதும கடாக்ஷிததுக கோதண்டததில நாணைககட்டி யமபறாத தூணிகளினினறும கணைகளை யெடுததுக கடுஞ்சினம மேற்கொண்டு ஊழிகாலததீபோலக கணணுறற கரியராகி விளஙகினா. பெருமாளுடைய அவவுருவததைககண்டு வநதேவதைகளும அஞ்சி யோடின; அந்த ரூபம தக்ஷயாகத்தையழிகக வநத பினாகியின ரூபமபோலக கோரமாய் விளங்கிற்று; அவ்வுருவததை எலலாப பூதஙகளும கண்டஞ்சி யோடின; அநத அரக்காகளது தானையும, காாமுகஙகளினாலும, அணிகளினாலும், துவஜங்களினாலும் சூழப்படடதாகி, உதயகாலததில கருமுகிலகளின் திரள்போல விளங்கிற்று.

ஆரண்யகாண்டத்தில் இருபத்துநான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

பெருமாளுக்கும் அரக்கர்களுக்கும் தமுல்யுத்தம் நிகழ்ந்தது.

அநந்தரம் கரனும் சேனைகளுடன் சூழ்ந்து வந்து, விற்பிடித்துச் சின்முறுப் பகைவரைக் கொலைசெய்பவராகி நிற்கின்ற பெருமானைக் கண்டு தானும் வில்லை மேலெடுத்துக் கணைதொடுத்துத் தேரை ராமனுக் கெதிராக நடாத்துகவென்று சாரதியை ஏவினன்; சாரதியும் அவ்வண்ணமே தேரை ஸ்ரீராமபிரானுக் கெதிராகவோட்டுகையில், அமைச்சர்களும் அந்தக் கரனைச் சுற்றியே வீரவாதஞ்செய்துகொண்டேகினர்; கரனும் அவர்களுக்கு நடுவில் விண்மீன்களினிடையி லங்காரகன்போலத்திகழ்ந்து, ஸ்ரீராமபிரானைக்கிட்டி யாயிரம் கணைகளைத் தொடுத்து, ஸ்ரீராமசந்திரன்மேலே விடுத்துச் சிம்ஹநாதஞ்செய்து நிற்கையில், மற்றுள்ள அரக்கர்களும் பற்பல படைகளினால் பெருமானையடித்தனர்கள். அவர்களுள் சிலர் தேரினும், சிலர் யானைகளினும், சிலர் குதிரைகளினும் ஏறிக்கொண்டு பெருமானை எதிர்த்துக் கருமுகில்கள் பெருமலையைப்போலச் சரமாரி பொழிந்து மகிழ்ந்து கர்ஜ்ஜித்தனர்கள். பெருமாளும் அவ்வரக்கர்களது படைகளைக் கணைகளினால் நதிகளின்பெருக்குகளை யாழ்கடல் அலைகளினால் தடுப்பதுபோலத் தடுத்துத் தம்முள்ளடக்கி யருளி, அவ்வாயுதங்களினால் பிளக்கப்பட்ட திருமேனியுடையராயினும், துயருற்றிலர்; ஆயினும், பலவகைப்பட்ட ஆயுதங்களினால் அடிபட்டுத் திருமேனியெங்கும் இரத்தம்பெருகி, வச்சிரங்களினால் பிளக்கப்பட்டுக் காவித்துகளெழுந்து பரவிய மகாமலைபோலவும், மாலைப்பொழுதில் சிவந்த மேகங்களினிடையில் திகழுங் கதிரவன் போலவும் காணப்பட்டனர். இவ்வண்ணம் பதினாலாயிரம் சேனைகள் சூழ்ந்து ஒருவரையே குறியிட்டடிக்கக்கண்டு தேவ கந்தர்வ ஸித்த சாரண மஹாரிஷி முதலிய யாவரும் துயரமடைந்தனர்.

பெருமாளிவ்வண்ண மடிபட்டுக் கடுஞ்சினத்தை மேற்கொண்டு, நூறுயிரம் பதினாயிரமாகப் பாணங்களைத்தொடுத்து விடுத்தருளுதலும், அக்கணைகள் காலபாசங்கள் போலப் பகைவர்களுடைய உயிர்களைப்பறறி இழுத்துக்கொண்டு அவர்களினுடலையும் பிளந்து குருதி தோய்ந்து வானிற்சென்று செந்தழல்போலத் திகழ்ந்து வீழ்ந்தன; இவ்வண்ணங் கணக்கிறந்த பாணங்கள் பெருமாளுடைய கோதண்டத்தினின்று மிடைவிடாது புறப்பட்டு வானெங்கும் நிறைந்தன; இவ்வண்ணம் பெருமாள் அந்தக்கணைகளினால், பகைவர்களது வில் கணை துவஜம் கவசம் தலை கை கால் தொடை முதலியவற்றைப் பலவாக வறுத்தும், ஸாரதியுடன் தேர்க்குதிரைகளையும், யானைப் பாகர்களுடன் யானைகளையும், குதிரைக்காரர்களுடன் குதிரைகளையும், காலாள்களையும் கொலைசெய் தருளுதலும், அரக்கர்களெல்லோரும் பலவகைப்பட்ட பாணங்களினா லடிபட்டுக் கூவென்றலறி, முறுவென்றிப்பருவத்தில் நீயின்

லெரிக்கப்பட்ட காடுகள் போல மடிந்தழிந்தனர்கள். அவர்களுள் சூரர்களாகிய சிலர் பெருமாளுக் கெதிராகவந்து கூரிய சூலம், வாள், கோடாலி முதலிய வாயுதங்களை எய்தனர்கள்; பெருமாளும பாணங்களினால் அவர்களுடைய ஆயுதங்களையுந் தடுத்து அறுத்துத் தலைகளையும அரிந்தருளுகையில், அவர்களெல்லோரும பெரிய திருவடி எழுந்தருளுங்காலையில, சிறகின் காற்றினால் முறிபட்ட மரங்கள் போலச் சாய்ந்து மாய்ந்தனர்கள். தப்பிப் பிழைத்தோரும், அச்சத்தினால் திரும்பி யோடிக்கரனையே தஞ்சமென் றடைந்தனர்கள். தூஷணன அவர்களைக் கண்டு தேறுதல் செய்து திருப்பி யான வந்து போர்செய்வேன் வாரீங்களென்றழைத்து வந்தனன்; அவர்களும இவனுதவியினால் வெற்றி பெறுவோமென்றெண்ணி, மரம மலைகல முதலியவைகளையும், பாணங்களையும், மற்றுள்ள ஆயுதங்களையும், பெருமாள்மேல சொரிந்து சூழ நின்றடர்ந்தனர்கள். பெருமாளும இவர்களெங்குஞ் சூழ நின்று பொருவதைக்கண்டு காந்தர்வாஸ்திரம பிரயோகஞ் செய்கையில, அதினின்றும் கணக்கிறந்த கணைகள் தோன்றித் திசைகளெங்கும் நிறைந்து, வெய்யோனையும மறைத்தன; அப்பொழுது தவவரக்கர்கள் பெருமாள் கணைகளை எடுப்பதையும், தொடுப்பதையும், விடுப்பதையும் அறியாமல, திகைத்து நின்று மடிபட்டு இறந்தனர்கள். இவ்வண்ணம இவர்களால போர்க்களம் முழுதும நிறைந்து, பற்பல வணிக ளணிந்த ரத கஜ துரக பதாதிகளின அவயவங்களும, சூலம் வாள் முதலிய ஆயுதங்களும அறுபட்டு, எங்கும நிரம்பி இருந்தமையின், கண்டோர் அச்சமுறத்தக்கதாகி விளங்கிறது.

ஆரணயகாண்டத்தில இருபத்தைந்தாவது ஸர்க்கம

முற்றிற்று.

## இருபத்தாறுவது ஸர்க்கம்.

பெருமாள தூஷணன முதலிய சேனைகளைக் கொலைசெய்தருளியது.

இவ்வண்ணம சேனைகள் போரில மடிந்திறந்ததைத் தூஷணன் கண்டு, மிகக்கொடியவர்களாகிய ஐயாயிரம ராக்ஷஸர்களுக்குப போர் செய்யும்படி கட்டளையிட, அவர்களும சுற்றி நின்று, பற்பல படைகளையும், மரம கல் முதலியவைகளையும், சரமாரியையும், பெருமாள்மேல சொரிந்து கர்ஜனை செய்தனர்கள். பெருமாளும பாணவர்ஷத்தினால அவைகளைத் தடுத்துச் சிலவற்றை மழைமாரியைக் காளைபோலக கண்களை மூடிககொண்டு பொறுத்துடனே சரமாரிபொழிந்து சேனைகளை யடித்துக கொலை செய்கையில, தூஷணன் மிக முனிந்து, பேரிடிக்கு நிகரான பாணங்களைப பெருமாள்மேலே சொரிந்து மகிழ்ந்தனன்; பெருமாளும உடனே மிக வெகுண்டு ஒரு கணை

யின்றவன் வில்லை யறுத்து, நான்கு பாணங்களினால் நான்கு தேர்க்குதிரைகளையும், மற்றொரு பாணத்தினால் சாரதியையுங் கொன்று, மூன்று சரங்களைத் தூஷணன் மார்பில் நாட்டினர். தூஷணனும் முனிந்தெழுந்து மலையின் சிகரத்தை நிகர்த்ததும், பொன்கட்டமைந்ததும், எஃகின் முளைகள் நிறைந்ததும், பிறரைப் பிளப்பதும், கருநாகத்தைப் போன்றதுமாகிய பரிகத்தைக் கையிலேந்திப் பெருமாளை எதிர்த்தோடிவந்தனன். பெருமாளவனைக் கண்டு இரண்டு கணைகளைத் தொடுத்து கங்கணங்கள் தங்களை யணிந்த அவனுடைய இரண்டு புஜங்களையும் அறுத்துத் தள்ளுகையில், அந்தப் பரிகம் அறுபட்ட இந்திரத்துவஜம்போல நழுவி வீழ்ந்துவிட்டது; அவனும் இரண்டு தந்தங்களையும் முறித்தடிக்கப்பட்ட மதயானைபோலத் தரையில் வீழ்ந் திறந்தனன். இவ்வண்ணம் அவனிறந்ததைக் கண்டு எல்லாப் பூதங்களும் நலம் நலம் என்று பெருமாளைப் புகழ்ந்து மகிழ்ந்தன; இதற்குள்ளே தூஷணனைக்கொலை செய்தனரே யென்று மிகவும் சினங்கொண்டு மஹாகபாலன், ஸ்தூலாக்ஷன், பிரமாதி என்னு மூவர்களும், முறையே சூலம், பட்டஸம், பரசு என்கிற மூன்று படைகளையுங் கையிலேந்திச் சாருங்காலங் கிட்டினமையின், ஒரே காலத்தில் பெருமாளை எதிர்த்தோடி வந்தனர்கள்; ரணவீரரான ஸ்ரீராமசந்திரரும் அவர்களைக் கண்டு கூரிய கணைகளினால் அதிதிகளைப் போல எதிர்கொண்டங்கீகரித்து, மஹாகபாலனுடைய சிரத்தைப் பாணங்களினா லரிந்து, கணக்கிறந்த பாணங்களினால் பிரமாதியை மாத்தித்துக் கொலைசெய் தருளினர்; அவர்கள் வேரிலறுப்புண்ட தழைத்த மரங்கள்போலச் சாய்ந்து வீழ்ந்தனர்கள். ஸ்தூலாக்ஷனுடைய ஆழ்ந்துபருத்த தகன்ற கண்களிரண்டையும், சரமாரி பொழிந்து நிரப்பி யமலோகமனுப்பித் தூஷணனாலேவப்பட்ட ஐந்தாயிரம் அரக்கர்களையும், ஐயாயிரம் பாணங்களினாலடித்து, மடித்து, யமபுரி சேர்த் தருளினர்.

கரன் இவர்களெல்லோரு மிறந்து விட்டதைக் கண்டு, மிக்க முனிவு கொண்டு, சேனாத்தியக்ஷர்களை நோக்கிக் கேளீர் அன்பர்களே! இந்தத் தூஷணன் ஒரு அற்ப மனிதனுடன் போர் செய்து மிகுந்த சேனைகளுடன் மடிந்தனன்; ஆதலின், நீவிரெல்லீரும் பற்பல படைகளினால் அம்மானிடப் பயலைக் கொலை செய்க வென்று கட்டளை செய்தனுப்பித் தானும் பெருமாளை எதிர்த்தோடினன்; உடனே சியேநகாமீ, பிருதிக்கிரீவன், யஜ்ஞசத்துரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், கால காமுகன், மேகமாலீ, மஹாமாலீ, ஸர்பாஸ்யன், ருதிராசனன் என்னும் பன்னிரண்டு பலசேனாதிபதிகளும், சேனைகளுடன் பெருமாளையே எதிர்த்துச் சரங்களைத் தொடுத்தெய்தனர்கள். பெருமாளும் கடுஞ்சினம் பூண்டு, வச்சிரத்துக்கு நிகரான கணைகளினால் மிகுந்த சேனைகளெல்லாவற்றையும் அடித்தருளினர். அந்தக் கணைகளும் புகைசூழ்ந்த தீபோலப் பாய்ந்து, பேரடிகள் சிறந்த மரங்களை எரிப்பதுபோல அவ்வரக்கர்களைப் பற்றி எரித்தன; இவ்வண்ணம் பெருமா

ளும், அரக்கர் நூற்றுவரை நூறு கணைகளாலும் ஆயிரவரை ஆயிரங் கணைகளாலும், அடித்தருளுகையில், அவ்வரக்கர்கள் பாணங்களினால் பிளக்கப்பட்டு, வில்லறுந்து, கவசம் சிதறிக் கூந்தலவிழ்ந்து, தரையில் வீழ்ந்திறந்தமையின், அப்போர்க்களம் தூப்புல் முதலியவற்றால் பரப்பப்பட்ட யாகவேதி போலத் திகழ்ந்தது; இவ்வாறு ஒரு கணப்பொழுதில் அவ்வனம் முழுதும் மாம்ஸ சோணிதங்களினால் நிறைந்து, நரகம்போலாயிற்று; காலாளாகியும், மானிடனாகியு மிருக்கிற ஸ்ரீராமபிரானொருவனாலேதானே கரன், திரிசிரன், இவ்விரண்டு பேர்கள் தவிர மற்றுள்ள வீரர்களும், கொடியார்களுமாகிய பதினாலாயிரம் அரக்கர்களும் அடிக்கப்பட்டிறந்தனர்கள். இவ்வண்ணம் எல்லோரும் இறந்துவிட்டதைக் கரன் கண்டு மிகச் சினமுற்றுப் படையைக் கையிற்பிடித்து, வச்சிராயுதத்தைக் கையிலேந்தி எதிர்க்கின்ற விண்ணுலகாளிபோலப் பெருமாளை எதிர்த்துத் தேருடனோடி வந்தனன்.

ஆரணியகாண்டத்தில் இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருப்த்தேழாவது ஸர்க்கம்.

பெருமாள் திரிசிரனுடைய தலைகளை யரிந்தருளியது

பின்பு, கரன் பெருமாளை எதிர்த்து வருவதைத் திரிசிரன் கண்டோடி வந்து தடுத்துக் கரனை நோக்கி, மஹாபிரபு! ராமனைக் கொலைசெய்யுந் தொழிலில் என்னை ஏவி நீர் மீண்டு நின்று கண்ணுறுக; நான் ஒருவனே ராமனைப் போரில் மடிப்பேன்; யான் படையைக் கையிலேந்திப் பிரதிஜ்ஞை செய்வேன்; நம்மெல்லோர்க்கும் பகையான ராமனைக் கொல்வேன்; யானே அவனுக்கு மிருத்தியுவோ, அவனே எனக்கு மிருத்தியுவோ, இரண்டிலொன்று இப்போழ்தே முடிவாகின்றது; யானே வெற்றிகொள்வேனாகில், நீ மகிழ்ந்து ஜனஸ்தானஞ் செல்லுக; அவனே என்னைக் கொன்று வெற்றி பெறுவானாகில், அடாத்தவனுடன் போர் செய்க; ஆதலின், முகூர்த்தகாலம் சாக்ஷியாக நிற்க; யானே சென்று பொருவேனென்று சாருங்காலம் கிட்டினமையின், வேண்டி யுரைத்தனன். கரன் அதுகேட்டு மகிழ்ந்து, அவ்வண்ணமே சென்று போர் செய்யாயென்று அநுமதிசெய்தனுப்புதலும், திரிசிரன் சிறந்த குதிரைகள் கட்டிய தேர்மீதேறி, மும்முடியுடைய மாமலைபோலத் திகழ்ந்து பெருமாளை எதிர்த்தோடி, மஹாமேகம் போலச் சரமாரி பொழிந்து, நீரில் நனைந்த துந்துபிபோலக் கர்ஜித்து மகிழ்ந்தனன். பெருமாளும் திரிசிரன் இவ்வண்ணம் ஓடி வருவதைக் கடாக்ஷித்துக் கோதண்டத்தில் கணைகளைத் தொடுத்து, அவனை எதிர்த்து விடுத்தனர். இவ்விருவர்களுக்கும் சண்டை மிக வளர்ந்தது; பின்பு, திரிசிரன் கூரிய கணைகள் மூன்றினால், பெருமாளுடைய

நெற்றியில் நாட்டி யடிக்கப் பெருமாள் மிகவும் திருவுள்ளம் சீறி யவனை நோக்கி, அடா திரிசிரனே! நீ யரக்கர் குலத்திற்பிறந்தோனும், மிகவும் பராக்கிரமமுடையோனுமாயினும், மூன்று பாணங்களையும் மலர்களைப்போலவே என் நெற்றியில் தாக்கினையே? அந்தோ? உன் திறமையே திறமை; இந்த என்னுடைய கணைகளையும், தாங்கிக்கொள்ளென்று இகழ்ந்தருளிச்செய்து, பதினான்கு கணைகளை யவனுடைய மார்பில் நாட்டி, நான்கு ஸாயகங்களினால் தேர்க்குதிரைகள் நான்கினையும் அடித்து மடித்து, எட்டுப்பாணங்களினால் சாரதியைக் கொலை செய்து, தோத தட்டிலேயே சாய்த்து, ஒரு சரத்தினால் துவஜத்தையும் அறுத்துத் தள்ளுகையில், திரிசிரன் அந்தத் தேரைவிட்டோடிவந்தனன்; அது கண்டு பெருமாள் மீளவும், பல பாணங்களை யவன் மார்பில் நாட்டினார். அதனால் திரிசிரன் ஜடனாகித் திகைத்து நிற்கையில், விரைவாக மூன்று கூர் கணையங்களை எய்து, அவனுடைய மூன்று சிரங்களையும் அறுத்துத் தள்ளியருளினர். உடனே யவனும் குருதி பெருகச் சாய்ந்து தரையில் வீழ்ந்தனன். மிகுந்துள்ள அரக்கர்களும், இவனிறந்ததைக் கண்டு புலியைக்கண்டஞ்சிய மான்களைப்போல நாற்புறங்களிலும் பயந்தோடினார்கள். கரனவர்களைத் தேற்றித்திருப்பி, ராகு சந்திரனைக் கண்டோடுவதுபோல ஸ்ரீராமசந்திரரைக் கண்டு வெகுண்டெதிரத் தோடினன்.

ஆரண்யகாண்டத்தில் இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

பெருமாளுக்கும் கரனுக்கும் போர் விளைந்தது.

பெருமாள் பதினாலாயிரம் ராக்ஷஸர்களுடனும், தூஷண திரிசிரர்களையும், ஸம்ஹாரஞ் செய்தருளியதைக் கண்டு, கரன் தானும் அச்சங் கொண்டும் தீரத்தை விடாமல், நமுசிதானவன் வாஸவனை எதிர்ப்பதுபோலப் பெருமானை எதிர்த்து, சீறிய நாகங்களைப்போன்ற கூரிய விஷமூட்டிய பாணங்களை வில்லில் தொடுத்தெய்து, மேன்மேலும் ஆயுதப் பயிற்சியின் திறமையினால், பற்பல அஸ்திரங்களையும் தொடுத்து, திக்கு விதிக்குகளெல்லாவற்றையும் சரமாரிகளினால் நிரப்பினன்.

பெருமாளும் அது கண்டு தாமும் கோதண்டத்தை இழுத்துச் சரமாரி பொழிந்து வான்முழுதும் நிறைத்தருளினர். இவ்வண்ணம் இருவர்களுடைய பாணங்களாலும், பத்துத்திசைகளும் ஊசிமுனை நுழையவும் இடமின்றி நிறைந்தமையின், கதிரவனும் கதிர் விரிந்து திகழ்ந்திலன்; அத்தருணத்தில் பலவகைப்பட்ட கூரிய கணைகளைக் கரன் தொடுத்துப் பெருமானைப பாகன் மாவெட்டியினால் மதக்களிற்றினைப்போல அடித்துக் கினமூட்டினன்.

அப்பொழுது எல்லாப் பூதங்களும கரனைக் கண்டு இவனே காலாந்தகனென்றஞ்சஙகொண்டன; ஸ்ரீராமன் இதுகாறும போர்செய் திளைப்புற்றிருக்கின்றமையாலும், தான் இளைப்புறாது தேர்மீதிருக்கின்றமையாலும், வெற்றியே பெறுவானென்று கரன் நினைததிருந்தனன். கரன் மிகக் கொடியனாகி எதிர்த்துவரினும, தாம இளைத திருககினும, பெருமாள அவனைச சிறிதும் மதித்திலர்; சிங்கம இளைபபுறறிருககினும, அறப மிருகங்களைக கண்டு அச்சமுறுமோ? அனநதரம கரன விரைவாக வோடி வநது விளககு, வெட்டுப் பூச்சி செநதழலை யணுகுவது போலப பெருமாளைக கிட்டி, இவருடைய பாணததுடன் கூடிய கோதணடததைப பிடிககு மிடததி லடித திருதுண்டாக வறுததது, மேலும ஏழு பாணஙகளினால கவசததி லடித்துச சிதறுண் டது வீழ்கையில, மேனமேலும அநேகமாயிரம சரஙகளை விடுத்துப பெருமாள் மெய்முழுதும நாட்டி காஜ்ஜிததனன. இவவணணங கரனால பெருமாள் துயருற்று மிகவும திருவுளஞ சீறி மிகக கமபீரமாக வொலிககின்ற வேறு சராஸநததைத திருககரததிலேநதி, இநதிரனிடததில வாஙகி யகஸதிய பகவானளிதத அநத விஷ்ணுவிலலில நாணகட்டிக கணைதொடுததுக கரனுடைய துவஜததை யறுததுத தளளுகையில, அது தேவாகளது கட்டளையினால ரவியேவீழ்வதுபோலப பொனனொளி திகழ வீழநதது; கரன துகணடு முனிநது, நான்கு பாணங்களினால பெருமாளை யடிததது, மேனமேலும பல பாணஙகளினால வருததினன. பெருமாளும இவவணணம வருததபபட்டவராகி, ரததம் பெருகித திருமேனி நனைநது மிக முனிநது, ஆறு பாணஙகளைத தொடுதது, ஒன்றினைச சிரததிலும, இரணடினை இரணடு புஜஙகளிலும, மறற மூன்றினை மார்பிலும நாட்டி, மீளவும பதின் மூனறு பாணஙகளைத தொடுதது, ஒன்றினால நுகதத தடியையும, நானகினால நானகு குதிரைகளையும, ஆறினால் சாரதியின் சிரததையும, மூனறினால ஏககாலையும, இரணடினால இருசையும, ஒன்றினால நாணுடனை கூடிய வில்லையும அறுததுத தளளிப பதின்மூன்றாவதான மற்றொரு கணையினால கரனை யடித்தருளினா.

கரன் உடனே வில முறிநது, தோ சலிநது, குதிரை யிழநது, சாரதி யழிநது, மெய் வருநதித தேரைவிட டெழுநது கதாபாணியாகித தரையில நின்றனன்; பெருமாளுடைய இசசெயலைத தேவகநதாவ ஸிததசாரணவைமானிக பரமரிஷி முதலானோா கண்டு, கைகூபபித் தொழுது மகிழ்நது புகழ்ந்தனாகள்.

ஆரண்யகாண்டத்தில இருபததெட்டாவது ஸாக்கம

முற்றிற்று.

## இருபத்தொன்பதாவது ஸர்க்கம்.

பெருமாள் கரனுடைய கதையைப் பிளந் தருளியது.

தேரிழந்து கதாபாணியாகித் தரையில் நிற்கின்ற கரனைப் பெருமான் கடாக்ஷித்து, இனிமையும் கொடுமையும் கொண்ட வாக்கியங்களினால் அருளிச்செய்யலுற்றனர். 'கேளடா கரா! ரதகஜ துரகபதாதிகளை மிகப் புடை சூழ்ந்திருக்கையில், நீ எல்லோரும் அருவருப்புறத்தக்க தீச்செயல்களைப் புரிந்தனை;—

ఉద్వేజనీయో భూతానాం నృశంసః పాపకర్మకృత్
త్రయాణామపి లోకానా మీశ్వరోపి న తిష్ఠతి॥
కర్మ లోకవిరుద్ధన్తు కుర్వాణం క్షణదాచర।
తీక్ష్ణం సర్వజనో హన్తి సర్పం దుష్టమివాగతమ్॥

உத்வேஜநீயோ பூதாநாம் ந்ருசம்ஸ: பாபகர்மக்ருத்|
த்ரயாணாமபி லோகாநா மீச்வரோபி ந திஷ்டதி ||
கர்ம லோகவிருத்தந்து குர்வாணம் க்ஷணதாசர|
தீக்ஷ்ணம் ஸர்வஜநோ ஹந்தி ஸர்பம் துஷ்டமிவாகதம் ||

பூதங்களை யச்சமுறச் செய்பவனும், கொடுமையுடையோனும், பாவச் செயல் செய்வோனுமாகிய வொருவன், மூவுலகங்களுக்கு மிறையாயினும் அழிவானேயன்றி நிலையுறான்; உலகத்தார்க்கு விரோதஞ்செய்து கொடுமை கொண்டவனை நச்சரவத்தைப்போலக் கண்டோ ரெல்லோரும் அடிக்கின்றனர்கள்; யாவனொருவன் பொருளாசையினாலாயினும், பெண்ணாசையினாலாயினும், பாவங்களைச் செய்து, இவை நலமல்லாதனவென வறிகின்றிலனோ, அவன் கடையிலழிந் திகழ்வுற்றுத் துன்ப மடைந்த பின்னே நமக்கே தீங்குசெய்து கொண்டோமே யென்று மழையில் விழுகிற ஆலங்கட்டிக் கல்லைத் தனக்கு மரணந் தருமென் றுணரா துண்ட செய்யானைப் போல வருந்த முறுவான்; அடா பாபி! இந்தத் தண்டகாவனத்தில் காய் கனிகளை யுண்டு தவஞ்செய்து கொண்டிருந்த யோகிகளைக் கொலை செய்து நீ நற்பயன் பெறுவாயோ ?—

నచిరం పాపకర్మాణః క్రూరా లోకజుగుప్సితాః।
ఐశ్వర్యం ప్రాప్య తిష్ఠన్తి శీర్ణమూలా ఇవ ద్రుమాః॥

நசிரம்பாபகர்மாண: க்ரூரலோகஜுகுப்ஸிதா:||
ஐச்வர்யம்ப்ராப்யதிஷ்டந்தி சீர்ணமூலா இவத்ருமா:||

கொடுமை கொண்டு தீச்செயல் செய்து உலகத்தாரா லிகழப்பட்ட பாவிகள் முன்வினையினால் மிகச் செல்வமுறினும், வேரறுந்த மரங்கள்போலத் தாழ்வுற்றுச் செல்வம் நீங்கி யழிவார்களேயன்றி, நெடுங்காலம் பொரு

ளுடன் வீழ்வார்கள்; பாவிகள் தாம் செய்த தீச்செயலின் பலனை விரைவில் அடை வார்களே யன்றி, அச்செயல் வீண் போகாது; மரங்கள் தத்தம காலங்களில் மலரை யுறுகின்றன வல்லவோ? மிகக் கொடிய பாவங்களின் பலன்கள் விரைவிலேதானே யடையுமே யன்றித் தாமஸப்படா? விடங்கலந்த சோற்றை யுண்டவர்கள் உடனே இறக்கின்றனரே யன்றி, யுய்வார்களோ? தீச்செயல புரிந்து உலகங்களை வருத்துபவர்களைக் கொலைசெய்வதன் பொருட்டே மானிடனாய்ப் பிறந்தேன்; இப்பொழுது என்னால் விடப்பட்ட பாணங்கள் புன்னகங்களைப் புற்றினுட் புகுவனபோல உன்னுடலில் புகப்போகின்றன; நீ முன் பிங்கே எவ்வெவர்களைக் கொலை செய்தனையோ, அவ்வவர்களை, நீயு மிப்பொழுது என்னால் கொலை செய்யப்பட்டவனாகி, எல்லாச் சேனைகளுடனும் பின் தொடர்ந்து செல்வாய்; முன் உன்னால் கொலை செய்யப்பட்ட பரமயோகிகளெல்லோரும், திவ்விய விமானத்திலிருந்து, என்னாலடிபட்டிறந்து நரகில் வீழ்கின்ற உன்னைக் கண்டு மகிழ்க் கடவர்கள் அடா பாவி! நீ இப்பொழுதுன் விருப்பின்படி என்னை எதிர்த்துப் பொருக; உன் தலையைப் பனம்பழத்தைப்போல அரிந்து தள்ளித் தரையிலுருளச் செய்வேன்; என்றிவ்வண்ணம் பெருமாள் இகழ்ந்துரைத் தருளினார். இவ்வாறிகழ்ந்துரை செய்யப்பட்ட கரனும் மிக முனிந்து, கண்கள் சிவந்து, கோபத்தினால் நகைத்துப் பெருமானை நோக்கி, அடா தசரதன் மகனே! அற்பர்களாகிய சில வரக்கர்களைக் கொலை செய்தமையின், திறமையற்றவனென்ன இகழ்ந்து கொள்ளத்தக்க உன்னையே நீ புகழ்ந்து கொள்ளுகின்றனை;—

విక్రాన్తాబలవన్తో వా యేభవన్తి నరర్షభాః ।
కథయన్తి న తే కిఞ్చిత్ తేజసా స్వేన గర్వితాః ॥
ప్రాకృతాస్త్వకృతాత్మానో లోకే క్షత్రియపాంసనాః ।
నిరర్థకం వికత్థన్తే యథారామ వికత్థసే ॥

*விக்ராந்தாபலவந்தோவா யேபவந்திநராஷபாஃ|*
*கதயந்திநதேகிஞ்சித் தேஜஸாஸ்வேநகர்விதாஃ||*
*ப்ராக்ருதாஸ்த்வக்ருதாத்மானோ லோகேக்ஷத்ரியபாம்ஸநாஃ|*
*நிரர்த்தகம்விகத்தந்தே யதாராமவிகத்தஸே||*

பல பராக்கிரமமுடைய நரவீரர்கள் யாவருளரோ, அவர்கள் தமது திறமைக்குத் தாமே இறுமாப்புற்று யாதும் கூறார்கள்; விவேகமின்றி யற்பர்களாகிய ராஜர்களில் கடையோர் யாவருளரோ, அவரே அடா ராமா! நீ பிதற்றுவதுபோலப் பயனின்றிப் பிதற்றுவார்கள்; நற்குலத்திற் பிறந்த வீரன் யாவன் தான் தன்னைப் புகழ்ந்து கொள்வான்? ஒருவன் தான் மரணமுறுங் காலையிலேயே மதிமயங்கிப் புகழத்தகாத காலத்தில் தானே புகழ்ந்து கொள்வான்; அவ்வண்ணமே நீயும் புகழ்ந்து கொள்ளுகின்றனை; நீ இவ்வண்ணம்

புகழ்ந்து கொள்வதினாலே உன்னுடைய திறமையின்மையே நன்கு விளக்கப்பட்டது; திறமையுடையோன் தன்னைப் புகழ்ந்து கொள்வானோ? புல்லில் பற்றிய தீ போன்றே போலச் செவந்து காணப்படினும், அது தன் மேனியை மினுக்கிக் கொள்ளுமேயன்றிச் சுடுமோ? கதையைக் கையிலேந்திப் பல்வகைத் தாதுக்கள் நிறைந்த மாமலைபோல் அசைவற்று நிற்கின்ற என்னைக் காண்கின்றிலையோ? உன்னைக் கொலை செய்ய யானொருவனே போதுமானவனல்லேனோ? யமனொருவனே மூவுலகங்களையும் கொலை செய்கின்றானல்லனோ? யானும் உன்னை நோக்கி, உரை செய்யத்தக்கன பலவாகவுள; ஆயினும், உரைக்கின்றிலேன்; வெய்யோன் மறைந்துவிடுவானாகில், சண்டைக்குத் தடை நேருமன்றோ? பதினாலாயிரம் ராக்ஷஸர்களை நீ கொன்றமையின், உன்னையான் கொன்று அவர்களது துன்பத்தைப் போக்கி, மகிழ்வேனென்றுரை செய்து, அந்தக் கதையைச் சுழற்றிப் பெருமாள் மேலெறிந்தனன்; அந்தக் கதையும் எரிகின்ற அக்னிபோல மரங்களையும், புதர்களையும் எரித்துக்கொண்டு பெருமாளைக் கிட்டி வந்தது, பெருமாள் துகண்டு பாணங்களை எய்து, அதனைப் பல துண்டுகளாக அறுத்துச் சிதற வடித்தனர். உடனே அந்தக் கதை மணிமந்திரௌஷத பலத்தினால் நச்சரவம் சிதறுண்டு வீழ்வது போலச் சிதறுண்டு தரையில் வீழ்ந்தது.

ஆரண்யகாண்டத்தில் இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பதாவது ஸர்க்கம்.

பெருமாள் கரனைக் கொலை செய்து ஸாது ஜனங்களைப் பாதுகாத்தளித்தருளியது

பெருமாள் அந்தக் கதையைக் கணைகளினால் பிளந்து புன்னகைகொண்டு கரனை நோக்கி, அடா பலாசனே! உன் திறமை இவ்வளவேயன்றோ? உன்னுடைய திறமை முழுதும் காட்டப்பட்டதா? திறமையின்றியும் மதங்கொண்டு வாளாப் பிதற்றினையல்லையோ? மொழிவதற்கே திறமைகொண்ட உன்னுடைய இக்கதை என்னுடைய பாணங்களினால் பிளக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்து கிடக்கின்றதே? உன்னையான் கொலை செய்து, உன்னால் கொலை செய்யப்பட்ட பதினாலாயிரம் சேனைகளின் துன்பத்தைப் போக்கிக்கொள்வேனென்றுரைத்தனையே அவ்வுரையும் பொய்யாயிற்றன்றோ? நீசனும், அற்பச் செயலினனும், பொய்யனும், அரக்கனுமாகிய உன்னுடைய உயிர்களைப் பெரிய திருவடி யமிழ்தத்தைப்போல அபஹரிப்பேன்; யானிப்போழ்து உன் தலையை யறுக்கையில், நுரை குமிழிகளுடைய உன்னுடைய ரத்தத்தைப் பூமி பானஞ் செய்யப்போகின்றது; நீயுமுடனே துகள் படிந்த மேனியனாகி, அச்சத்தினா

விருக்ஷங்களையுந் *தரையிலூன்றி, மனத்துக் கினிய மனையாளைப்போலப் பூமி யை யணைத்துக்கொண்டுறங்குவாய்; நீ இவ்வண்ணம மீளாத் துயில் கொள்ளின் தஞ்சமின்றியலைந்த ஸாது ஜனங்களுக்கு இந்தக்காடுகள் தஞ்சமாகக் கடவன; என்து சரங்களினால் நீ இறந்த பின்னர், முனிவர்கள் அச்சமின்றி, ஜனஸ் தானத்தில உறைவார்கள்; உங்களுடைய மனைவியர்களாகிய அரக்கிகளெல் லோரும், கைம்பெண்களாகிக் கண்ணீர் பெருக்கிப் புலம்பிக்கொண்டு அச்சங் கொண்டோடப் போகிறார்கள்; உனக் கனுரூபர்களாகிய உன் மனைவியர் களும், *இதுவரையில துயரமென்பதையே அறியார்களாயினும, இப்போழ்து துயரமென்பதின் தன்மையென்னவென்று உணர்ந்தனுபவிப்பார்கள். அடா நீச! கொடிய அற்பா!! வேதியர்களுக்குப் பகைவா!!! உன்னிடத்தி லச்ச முற்றேயன்றோ, முனிவர்கள் செந்தீவளர்த்து ஹோமஞ்செய்யவும, ஏகாந்த தேடி நீற்றிசைகளையும நோக்கித் திரிந்தனரென்றருளிச் செய்தனர்; கரனதுகேட்டுப் பெருமானை வெருட்டி, அடா ராமா! நீ மிகச்செருக்குற் றிருக்கின்றனை; அச்சமுறுங் காலையிலும் மச்சமற்றிருக்கின்றனை; ஆதலின், நீ இது உரைக்கத் தக்கது, இது உரைக்கத் தகாததென்றுணர்கின்றிலை;—

> కాలపాశపరిక్షిప్తా భవన్తి పురుషా హియే।
> కార్యాకార్యం న జానన్తి తే నిరస్తషడిన్ద్రియాః॥
>
> காலபாசபரிக்ஷிப்தாபவந்தி புருஷாஹியே।
> காயாகாரயமஞ்ஜாநந்தி தேநிரஸ்தஷடிந்தரியாः॥

யாவர் சாகுங்காலங்கிட்டிக் காலபாசத்தினால் கட்டுண்டிருக்கின்றனர்களோ, அவர் புலன்களழிந்த அவர்கள் செய்வனவும், செய்தற்கரியனவு முணரார்களன்றே! என்றிவ்வண்ணம் உரைத்துப் பருவத்தை நெரித்து, அருகி லுள்ள நெடியதொரு ஸாலமரத்தைக் கண்ணுற்று, அதனை இருகரங்களி னாலும பற்றி, உதட்டைக் கடித்துக்கொண்டு வேருடன் பிடுங்கிச் சிஹ்மநா தஞ்செய்து, ஸ்ரீராமபிரானை நோக்கி, அடா ராமா! நீ இறந்தனையென் றுரைத்த கம்மரத்தை எறிந்தனன். பெருமாளும அதனைப்பல பாணங்களினால் முறித்தறுத்துத் தள்ளி, மிகத் திருவுளஞ்சீறி, திருமேனி புழுங்கிக் கன் சிவந்து, கரனை யாயிரம் பாணங்களினால பிளந்தனர். அவனுடலினின்றும ரத்தங்கள் மலையினின்றும அருவிகள் போலப் பெருகின; கரனும கணப் பொழுது திகைத்து நின்று தெளிவுற்று, விரைவாகப் பெருமாளருகில் லோடி வந்து விட்டனன்; பெருமாளும கோதண்டத்தில் கணைதொடுத் திழுக்க முன்னே இடமின்மையால, இரண்டு மூன்றடி பின்னே * எழுந்தருளி, உருக் கொண்ட வேதியர்களது சாபம்போன்றதும, செந்தழல் போன்றதுமாகிய

---

* பெருமான் இரண்டு மூன்றடி பின் சென்று, கரனைக் கொலைசெய்தருளி னரே! இவ்வண்ணம் முன்னிட்ட காலைப் பின்னிடுவது, வீரத்தன்மைக்குக் குறை

வோர் சரத்தைத் தொடுத்து விடுத்தருளினார். தேவேந்திரனால் அளிக்கப்பட்ட அந்தச்சரமும் ஸ்ரீராம கோதண்டத்தினின்றும் புறப்பட்டு இடிபோல முழங்கிக்கொண்டு கரனுடைய மார்பில் வீழ்ந்து, புதைந்தது; கரனுடனே அந்தப் பாணத் தீயினால் எரிக்கப்பட்டு சவேதாரண்யத்தில் ருத்திரனால் எரிக்கப் பட்ட அந்தகன் போலவும், இந்திரனுடைய வச்சிரத்தினாலடிபட்ட விருத்திராஸுரன் போலவும், நுரையினாலடிபட்ட நமுசி போலவும், அசனியாலடிபட்ட வலாஸுரன் போலவும், தரையில் வீழ்ந்திறந்தனன்.

அநந்தரம் ராஜரிஷிகள், தேவரிஷிகள், பிரஹ்மரிஷிகள் முதலிய யாவரும் சேர்ந்து, பெருமாளைப் புகழ்ந்து மகிழ்ந்தவரை நோக்கி, ஸ்வாமி சக்கரவர்த்தித் திருமகனாரே! இவ்வரக்கர்களைக் கொலை செய்வித்தற் பொருட்டே மஹேந்திரன் சரபங்காசிரமம் வந்து விண்ணப்பஞ்செய்து சென்றனன்; முனிவர்களும் உபாயத்தினால் முறையே தேவரீரை இவ்விடமெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்தனர்கள்; எங்களுடைய இந்தக்காரியம் தேவரீரால் நிறைவேற்றப் பட்டது, இனிமேல் முனிவர்கள் இவ்வனங்களில் அச்சமின்றிச் சுகமுற்றுத் திரிவார்களென்று உரைத்தனர்கள். அத்தருணத்திலே தேவ் கந்தர்வ சித்த சாரணாதியர்களும் ஒன்று சேர்ந்து, தேவதுந்துபிகளையும் முழக்கி, வியந்து மகிழ்ந்து பெருமாள்மேலே நறுமலர் மழை பொழிந்தனர்கள். அந்தோ! மூன்று நாழிகைகளுள்ளே பதினாலாயிரம் சேனைகளுடன் தூஷண திரிசிரர்களையும், கரனையும் பெருமாள் கொலை செய்தனரே! இவருடைய செய்கை மிக வியக்கத்தக்கதும், செயற்கரியதுமாகின்றது; இவருடைய திறமை யந்தோ! இவருடைய வலிமை யந்தோ! ஆராயுங்கால் இவர் ஸ்ரீமந்நாராயணனாகவே காணப்படுகின்றனரென்று எல்லோரும் புகழ்ந்து மகிழ்ந்து நிகழ்ந்தனர்கள். அப்பொழுது இளையபெருமாளும் பிராட்டியாரைக் குகையினின்றும், பர்ணசாலைக் கெழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து, பெருமாளுடன் ஆஸ்ரமஞ் சேர்ந்தனர்.—

తం దృష్ట్వా శత్రుహన్తారం మహర్షీణాం సుఖావహమ్।
బభూవ హృష్టా వైదేహీ భర్తారం పరిషస్వజే॥

தந்த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்|
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே||

இவ்வண்ணம் பெருமாள் அவ்வரக்கர்களெல்லோரையும் கொலை செய்து, முனிவர்களை மகிழ்வித்துச் சிறிதேனும் சிரமமின்றி, ஆண் சிங்கம

வன்றோவெனில், குறை வன்று, அச்சத்தினால் முன்னிட்ட காலைப் பின்னிட்டோடி விட்டால் குறைவேயன்றிப் பகையை வெல்லு முபாயத்திற்காகப் பின் செல்லினக் குற்றமாகாது; கரனோடியி லெதிரில் வந்து விட்டமையில், சரந்தொடுத்து காலை இழுப்பதற்கு இடமின்மையால், பின்னடி இட்டனரேயன்றி, அச்சமுற்று மீண்டிலர்; இதுவும் தோஷமாகுமாயின், மல்லர்கள் பொருங் காலையில் முன்னும் பின்னும் சுற்றித் திரிந்து, எதிரியைச் சாய்க்கு முபாயந் தேடுவதும், குற்றமே யாகவேண்டுமன்றோ! ஆதலின், பெருமாள் கரனைக் கொலை செய்வதன் பொருட்டுப் பின்னெழுந்தருளியது குற்றமாகாதென் றுணர்க.

பெருமாளைப் பிராட்டியார் ஆலிங்கனஞ்செய்துகொண்டது. வழி

யேல வெற்றிகொண்டு வந்து நிற்கப் பிராட்டியார் கண்டு மிக மகிழ்ந்து, தம் திருக்கரங்களினால் ஆலிங்கனஞ் செய்துகொண்டு, மீளவும் அவ்வரக்கர்கள் மடிந் திருப்பதையும், பெருமாள வருத்தமின்றி நிற்பதையும், மஹாரிஷிகள் மகிழ்ந்து பெருமாளைப் புகழ்வதையுங கண்டு மகிழ்வு மிகப்பெருகி, முழுமதிபோலத திருமுகந திகழ்ந்து, பெருமாளுடைய சிரமந்தீர ஆலிங்கனஞ் செய்து கொண்டு பெருமகிழ வுற்றனள.

ஆரண்ய காண்டத்தில முப்பதாவது ஸர்க்கம

முற்றிற்று.

---

தனிஸ்லோகி, (சதுர்தசஸஹஸ்ராணி) இதிஹாஸிகரிலேயயாலே ராக்ஷஸவேட்டையாடின பெருமாளுடைய யுத்தாயாஸசரம பரிஸவினனமான திருமேனியில் ராட்சஸ சாஸ்த்ர வ்ரணாரோபண நிவ்யௌஷதமான காடாலிங்கனத்தைப்பண்ணி, பிராட்டி ஸததைய பெறருளென்கிறது, (தம) ஸதரியமபுருஷவிகரஹம, என்று விண்ணப்பஞ் செயய வேணடுமபடி ராட்சஸ பூயிஷ்டமான தேசத்தி லுனனைக கொணடுபோக அஞசுவேனென்றவரை, (தம) ஸ்தரியமபுருஷ விகரஹமென்று பிராட்டி வாயாலே, அநுமதமாக அன்று தொடங்கித்திருவுள்ளததிலே கறுவியிருந்து, பதினாலாயிரம ராட்சஸரையும முடியும உடலுமாகத தெறித்து, உதிர வெள்ளத்திலே மிதககவிட்டுப் பிராட்டியாரைக கையைப பிடித்துககொணடு காட்டினவரை, (தம) ஆதித்யஇவதேஜஸவி, இத்யாதிப்படியே வீரபபாட்டுககுச சிறுவிரல முடககும்படி அவதீரணரானவரை, (தம்) படுககைத தலையில இடு பூ விழுந்து திருமேனி சிவககும ஸௌகுமார்யாதிசயத்தை யுடையவரை, (தம) உகபபாலே அடுத்துப பாரககில நயமான தேஜஸ்ஸுக்கும் ஸ்தானமான திருமேனி யுடையவரை, (தம) ரிஷிகளுககுப பணணின ப்ரதிஜ்ஞையைக் கடலோசை யாகாதபடி தலைக கட்டுகையாலே, பூர்ணரானவரை, (தம) ரத்ன கசிதமான பொன்னரிமாலைபோலே சத்துருசரவராதவரணாங்கிதமான திவ்ய மங்கள விகரஹத்தை யுடையவராயுள்ளவரை, (தருஷ்டவா) கருமுகைமாலையைப பனி நீரிலே தோயத தெடுப்பாரைப்போலே யுத்தாயாஸ பரிஸவினமான திருமேனியைத் தம பார்வையான பனி நீராலே வழிய வாரத்து (தருஷ்டவா) ஆதபாபி பூதருடைய சீததடாக ப்ரவேசமபோலே ராட்சஸாசங்காபி பூதமான திருமேனியைத தம பார்வையாகிற பூர்ணதடாகத்திலே தோயததெடுத்து, (சத்ருஹந்தாரம்) ப்ரதிபட்ச நிரஸனத்தாலே வந்த புகருடைமை, ஸம்மோஹமஸாவபூதேஷு, என்கிற பெருமாளுக்குச சத்துருக்களுண்டோ வென்னில், ஜ்ஞாநீதவாதமைவ, மமப்ராணஹி, இத்யாதிகளாலே ஆச்ருத விரோதிகள் தமககு விரோதிகளாமிததனையிறே, (மஹர்ஷீணம சுகாவஹம்) புத்தாரம்பம் தொடங்கி, கிம்பவிஷ்யதி, என்று வயிறுபிடித்துத திகைத்திருந்த மஹரிஷிகளுடைய பயந்தீரச சத்ருககளடங்கக கொன்று அவர்களுககு ஸுகாவஹராயுள்ளவரை, (மஹர்ஷீணம ஸுகாவஹம்) தம்முடைய போக்ய குடும்பத்துக்குச் சுகத்தைப்பண்ணித் தம்முடைய ஸத்தைக்கு ஆபாதகரானவரை, (பபூவ) மாலையும் மணமும்போலே அத்யந்தம் சுகுமாரமான விக்ரஹத்தையும், ஸ்வபாவத்தையுமுடைய பெருமாள் கடினதரஸ்வபாவரான முரட்டு ராட்சஸரோடே யுத்தம் ப்ராரம்பித்த

[illegible] தொடங்கி ப்ரேமாதிசயத்தாலே ஸத்தை மாறும்படியான பிராட்டியார் திருமேனியிலொரு நீங்கன்றி நின்றபெருமாளைக் கண்டு ஸத்தைப் பெற்றாளென்கிறது; (த்ருஷ்டா) தர்மி யுண்டானால் தர்மம் பிறக்கக் கடவதிறே, ராமஸௌந்தர்யத்தை முழுக்கக் கண்டு திருவுள்ள மீடுபட்டபடி (வைதேஹீ) அயோநிஜையா வயிற்றிலே பிறந்திலேனாகில், எனக் கிப்பேறில்லையே (வைதேஹீ) இக்குடியிற் பிறந்திலேனாகில், பெருமாளென்னைக் கைப்பிடியாரே, (வைதேஹீ) இந்நிலத்திற் பிறந்திலேனாகில், இவ்வில்லோட்டை ஸௌப்ராதரம் கிடையாதே, அவ்வில்லோட்டை ஸௌப்ராதர மில்லையாகில் வீர்ய சுல்கையாக விவ்வாகாரங் கூடாதே (வைதேஹீ) தந்தையார் கையாலே என்னையும், தம்முடைய வம்சத்தையும், பெருமாளுக்கு அடிமையாக வெழுதிக் கொடுத்த அய்யா இத்தை யாகாரங்கண்டா லென்னப்படுகிறாரோ? (வைதேஹீ) (புமாம்ஸாமத த்ருஷ்டி சித்தாபஹாரிணம்) என்கிறபடியே ஸர்வலோகாகர்ஷகமான விந்நிலையை அயர்வையொழிய மானை காண்பதென்று, பித்ருஸம்ருதி பண்ணுகிறாள் (பர்தாரம்) பாணிக்ரஹணம் ஜீவித்தது, (பரிஷஸ்வஜே) ஆலிங்கனம் பண்ணினாள், பரிபூர்ணமாகத் தழுவினாள், பர்யாப்தமாகத் தழுவினாள், தழும்பு மாறுமளவுந் தழுவினாள், சர்வ்ரணங்களாலே வந்த தழும்பெல்லா மாறுமளவும் திருமுலைத் தடத்தாலே வேது கொண்டார், தாம் கைக்கொண்ட மருந்திறே, சரவ்ரணங்களுக்கு ஆலிங்கனமாமிடத்தி லந்தோடைந்நீரே [illegible] யில்லையே? அந்தரங்கருள்ளூற வெய்த புண்ணுக்கு மருந்தான விதுதோல் புரைபெய்தப் புண்ணுக்கு மருந்தாகச் சொல்லவேண்டுமே என்றிருந்தார், ஒரு கொடியாகிறது, கொழுகொம்பைத் தழுவியல்லது, நில்லாதிறே? (பர்தாரம் பரிஷஸ்வஜே) நித்ய ஸம்யோக ஸ்திதிரூபமான பர்த்ருத்வாகாரம், ஒரு கொழு கொம்புகளுண்டானால், தத்தாரமாய்க்கொண்டு கொழு கொம்பை முட்டப்படாந்து அத்தைச் சிறப்பித்துக் கொண்டல்லது, ஸ்வரூபமில்லையோ? பாரார்யாதவாகாரமான கொடிக்கு, (பர்தாரம் மநுலம்ப்யைவ பார்யாயா ஸ்திதிரிஷ்யதே, அவலம்ப்ய தருமவல்லீ ஸ்தீயதே நவிநாத்ருமம்) என்னுமாபோலே (தம்) என்கிற பதம் பெருமாளுடைய ஸர்வாகாரங்களையும் காட்டுகிறது, (த்ருஷ்ட்வா) என்கிற பதத்தாலே பெருமாளுடைய ஸர்வாகாரங்களையும் நோக்கிக் காணக் கண்ணுடையாள் பிராட்டி யென்கிறது, சத்ருஹந்தாரம் (மஹர்ஷீணாம் சுகாவஹம்) என்கிற பதங்களாலே தன்னோடு கூடல் துவக்குண்டான சேதனர்க்கு அநிஷ்ட நிவ்ருத்தியையும், இஷ்ட ப்ராப்தியையும் பண்ணினபோதல்லது, இவரைக் காணக் கண்ணில்லை யென்கிறது; (பபூவ) அத்தலைக்கு அதிசயாவஹையாய ஸத்தை பெற்றபடி (ஹ்ருஷ்டா) ஸதிதாமிணி தர்மாசரிந்த்யந்தே (வைதேஹீ உபகார ஸ்ம்ருதி பண்ணுகிறாள்) தங்காயம் சுமந்து நடத்துகையாவது, பிதுர்தச குணமமாதா வென்கையாலே தம புத்ரரக்ஷணம் பண்ணுகையிறே, (பர்தாரம் பரிஷஸ்வஜே) ஆர்த்த ரக்ஷணத்தால் வந்தகளிப்புக்குப் போக்கு வீடு ஆலிங்கனம்போலே யிருந்தது, அவர்க்கும் ப்ரயோஜனம் அதுபோலே காணும், (ஆதாரத்தே முநிதே ஹ்ருஷ்டா) என்கிற [illegible] ரக்ஷணத்திற்கு ப்ரதமோதாஹரண பூதை யாகையாலே, பிராட்டி வெற்றியாலே மோதமடைந்த பெருமாளைக் கண்டு மகிழ்ந்து தழுவினர்.

ராவணனை நோக்கிக் கேளீர் அரக்கர் கோமானே! ஸ்ரீராமனுக்குத் தேவர்க
ளாது உதவி வேண்டுவதில்லை; அவனுடைய பல பராக்கிரமங்களை யுரைசெய்
வேனென்று மொழியலுற்றனன்; மஹாராஜரே! ஸ்ரீராமனென்பவன் மிக
வும் பராக்கிரமமுடையோன்; வில்லாளிக ளெல்லோர்க்குஞ் சிறந்தவன்;
திவ்யாஸ்திரங்கள் யாவும உணர்நதவன; போரில புரந்தரனை நிகர்த்தவன்;
அவனுக்குத் தம்பி யொருவ னிருக்கின்றான்; அவனும் இவனுக்கு நிகரான
ரூப பல பராக்கிரம முடையோனும, செந்தாமரைக் கண்ணனும், துந்துபி
முழக்கம்போன்ற நாத முடையோனும், மதிமுகத்தோனும, லக்ஷ்மணனெ
ன்னும் நாம முடையோனு மாகின்றனன்: ஸ்ரீராமன அந்தத தம்பியுடன்
சேர்ந்து, தீயுடன் சேர்ந்த பெருங்காற்றுப்போல வொளியுற்றவனாகி, ஜன
ஸ்தானத்தி லுள்ளவர்க ளெல்லோரையுங் கொலை செய்தனன். தேவர்க
ளிவ்விஷயத்தில் சேர்ந்திலர்; ஐயமுறறக; உண்மையாகக கூறுவேன்; ஸ்ரீராம
னால் விடப்பட்ட சரங்களே வாயைத திறநது கொணடு ஐந்தலை நாகங்களாகி
யரக்கர்களை யுண்டன; உன்னைச் சேர்ந்த அரக்கர்கள ஸ்ரீராமனுக் கஞ்சி எங்
குச செல்லுகின்றனர்களோ, அங்கும அச்சத்தினால ஸ்ரீராமன்போலக் கண்டு
மற்றோரிடத்திற கோடித திரிகின்றனர்கள்; அந்த ஸ்ரீராமசந்திரனால உன்னு
டைய ஜனஸ்தானம் நாசஞ்செய்யப்பட்டது; என்றிவ்வண்ணம மொழிந்தனன்.

அகம்பனன் வாக்கியத்தை ராவணன கேட்டு, அடா அகம்பனா!
யானிப்பொழுதே ஜனஸ்தானஞ்சென்று, தம்பியுடன ராமனைக் கொலை
செய்வேனென்ன றுரைசெய்து புறப்படுகையில, அகம்பனன மீளவும அவனை
நோக்கிக் கேளீர கொற்றவேந்தே! ஸ்ரீராமனுடைய பல பௌருஷங்களைக
கண்டவண்ணம உரை செய்வேன; ஸ்ரீராமன உள்ளஞ சீறுவானாயின், பிறரால்
வெல்ல வொண்ணான்; மேன்மேலும நிறைநது விரைவாகப பெருகிவரும
மஹாநதியின் வேகத்தையும, சரங்களால தடை செய்வான; கிரஹங்களுட
னும், விண்மீன்களுடனும கூடிய விண்ணையும அழிப்பான; இப்பூமி யூழிகா
லத்தில் கடல நீரில மூழ்கினிடினும, மேலெடுக்க வல்லான்; கடலின் கரை
யைப் பிளந்து உலகினை மூழ்த்தினும மூழ்த்துவான்; கடலின் வேகத்தை
யாயினும், வாயுவின் வேகத்தையாயினும தடுப்பான; அனைத்துலகங்களையு
மழித்து, அவ்வண்ணமே படைக்கவும வல்லான்; கேளீர தசகண்டரே!
ஸ்ரீராமன் உம்மால் வெல்லத தக்கவனல்லன்; மற்றுள்ள ராக்ஷஸசேனைகளா
லும், வெல்லத்தக்கவனல்லான்; சுவர்க்கம பாவிகளால வெற்றி கொள்ளப்ப
டுமோ? ஸ்ரீராமசந்திரனைத் தேவாஸுரர்க ளெல்லோரும ஒன்று சேர்
ந்து போர்செயினும, அவன் தோல்வியுறுவானென்ன யான நினையேன்; ஆயி
னும் அவனைக் கொலை செய்யு முபாயத்தை யுரை செய்வேன்; கேளீர், அவ
னுடைய [illegible] சீதையென்னும் மனத்துக் கினிய மனைவி [illegible] உலகில்
[illegible]
[illegible]

[illegible]த்தாள்; அவளுக்கு நிகராகியவள் தெய்வப் பெண்களுள்ளும், கந்தர்வப் பெண்களுள்ளும், அப்ஸரஸ்களுள்ளும், தானவப் பெண்களுள்ளும், நாக கன்னியர்களுள்ளும், ஒரு பெண்ணு மிலள்; மானிடப் பெண்களுள் அத்தன்மை யுளளோ ளென்னும் ஐயம் யார்க்கேனுந் தோற்றுமோ? அந்தச் சீதையை யவர்களுக்குக் காணாமல் எடுத்துக் கொண்டு வந்து விடுக; பின்பு, மனையாளைத் துறந்தும், காமியாகிய ராமன் உய்யான்; இவ்வண்ணம் துன்புற்று அவன் இறக்கவேண்டுமே யன்றிப் போரில் ஒருவரிடத்திலும் தோல்வியுறா னென்று உரைத்தனன்.

ராவணனு மதுகேட்டு, இதுவே நல்லுபாயமெனத் தேர்ந்து, முன்பு தனக்கு ஸநத்குமாரபகவா னருளிச்செய்திருந்த வாக்கியத்தையும் * நினைந்து அகம்பனனை நோக்கி, அடா அகம்பனா! நீ யுரைசெய்தவண்ணமே செய்வேன்; நாளைத்தினம் உதயத்தில் யான் தனியே ரதமேறிச் சென்று சீதையைக் கொணர்ந் திந்நகரி சேர்ப்பேனென் றுரைசெய்து, மறுதின முதயத்தில் கோவேறு கழுதைகள் கட்டிய தேர்மீதேறி, விண்ணிடையிற் செல்லுகையில், மேகத்திடையில் தோன்றுஞ் சந்திரன் போலத் திகழும்படி மாரீசனாச்ரமஞ் சேர்ந்து, அவன் செய்த பூஜோபசாரங்களைப் பெற்றுக் கொண்டு ஆஸநத்தில் உட்கார்ந்தனன். அப்பொழுது மாரீசன் ராவணனை நோக்கி, ராக்ஷஸராஜரே! உங்களெல்லோர்க்கும் குசலம் நன்கமைந்திருக்கின்றதா? நீர் இங்கு விரைவாக வந்தமையின், யாதோ மனத்தில் சிந்தையுற்றிருப்பதாக நினைக்கின்றேன்; அதனை யுரைசெய்கவென்று வினவினன். ராவணனும் அது கேட்டவனை நோக்கிக் கேளடா மாரீசா! என்னுடைய எல்லையைப் பாதுகாப்பவர்களாகிய கரன் முதலிய ராக்ஷஸர்களெல்லோரும் மிக வீரனாகிய ராமனென்பவனால் கொலைசெய்யப்பட்டனர்கள்; ஆதலின், அவன் பாரியையை யான் பறித்துவரக் கருதுகின்றேன்; நீ யுதவிசெய்யக் கடவையென்று மொழிந்தனன்.

மாரீசனு மவ்வாக்கியத்தைக் கேட்டு ராவணனை நோக்கி, வேந்தே! அந்தச்சீதையை யபகரிக்கும்படி யுமக்குரைத்தவன் யாவன்? அவன் மித்திரன் போலிருக்கினும், சத்துருவேயாகுவான்; யாவன் உன்னால் தீமையுற்று, நீ வாழ்ந் தின்புறுவதைப் பொறுக்கின்றிலன்? அவனை யுரைசெய்வீர்; சீதையை யபஹரிக்கும்படி யுரைத்தவனை மாத்திரம் எனக்குரைசெய்க; அரக்கர்களெல்லோரும் புகழுற்றுச் சிறந்திருப்பதை யாவன் அழிக்க நினைக்கின்றானோ, உம்மை யாவ னிவ்வண்ணம் ஏவுகின்றானோ, அவன் உமக்குச் சத்துருவேயென ஐயமில்லை; உம்மைக் கொண்டு நச்சரவத்தின் வாயினின்றும், நச்சுப் பல்லைப் பிடுங்குவிக்க நினைப்பவன் யாவன்? உம்மை இவ்வண்ணந் தீச்செயலில் தூண்டிவிடுப்பவன் யாவன்? பகைநீங்கி, இன்புறுந் துயில்கொண்ட உம்தலையில் [illegible] கொண்டடித்தவன் யாவன்? அடா ராவணா! நின்மலமாகி நற்குலத் [illegible] என்னும் துதிக்கையையும், தேஜஸென்னும் மதத்தையும்,

* [illegible] ஜெயத்தில் ராவணன் ஸநத்குமாரரைக் கண்டு பூஜை[illegible]

உயர்ந்த தோள்களென்னும் தந்தங்களையும் பொருந்திய ராமனென்னும் மதயானையைக் கண்டெடுத்துப் பார்க்கவும் தகுமோ? போரில் அச்சமுற்றோட்டமலை நிலத்திருப்பதென்னும் அங்கஸந்தி வாலங்களை யுடையதும், சிறந்த ராக்ஷஸர்களென்னும் மான்களைக் கொலைசெய்வதும், பாணங்களென்னும் அங்கங்களமைந்ததும், வாளென்னும் கோரப்பலலுடையதுமாகிய ஸ்ரீராமனென்னும் சீரிய சிங்கம் படுத்துறங்குகையில், அதனை யுடித்தெழுப்புவது முமக்குத் தகுமோ? வில்லென்னும் முதலையையும், புஜவேகமென்னும் பங்கத்தையும், சரங்களென்னுந் தரங்கங்களையும், பெருஞ்சண்டையென்னும் வெள்ளத்தையுமுடையதாகி, மிகக் கொடிய ராமனென்னும் பாதாளமுகத்தில் வீழ்வது தகுதியற்றது; கேளீர் ராக்ஷஸ ராஜரே! யானிவ்வண்ண முரைத்ததேயென்னச் சிறக்க; அருள செய்க; மனந்தேர்ந்து மீண்டெய்தி லங்கைசேர்ந் தின்புறுக; நீர் உம்முடைய மனைவியர்களிடத்திலே

---

ஸ்ரீமஹாவிஷ்ணுவினால் கொலை செய்யப்பட்டவர்கள் எங்குச்செல்லுகின்றனரோ, அருளிச்செய்கவென்று வினவ, அவரும் இவனை நோக்கித் தசானனா! ஸ்ரீமந்நாராயணனால் கொலை செய்யப்பட்டவர்க ளெல்லோரும் நிச்சய வின்ப வீட்டையே யடைந்து மகிழ்வார்கள்; பகவானுடைய சீற்றமும், வரத்துக்கு நிகரெனவே யறிக, எனறருளிச்செய்தனர். ராவண னதுகேட்டு எனக்கும் ஸ்ரீமந்நாராயணனுடன் சண்டை நேர்ந்து, நற்கதி வாய்க்குமோ வென்று சிந்தையுற, ஸநத்குமாரர் அதனையறிந் தவனை நோக்கி, ராவணா! நீ சிந்தையுறற்க, உனக்கும் அம்மூதற்பெருந்தேவுடன் போர் விளையும்; நெருங்காலத்தை எதிர்பார்த்திருவென்று அருளிச்செய்து, மேலும் அடா ராவணா! அதனை வெளிப்பட அறிய விரும்புவாயாயி னுரை செய்வேன்; இந்தக் கிருதயுகஞ்சென்று திரேதாயுகத்தின் கடையில், ஸ்ரீதசரத சக்கரவர்த்தியென்னு மொருவர் இக்ஷ்வாகுகுலத்தில் பிறப்பர், அவருக்கு ஸ்ரீராமபத்திரரென்னும் திருநாம முடையவராகி, ஸ்ரீமந்நாராயணரே அவதாரஞ் செய்யப்போகிறார், நீ யவருடன் போர் செய்திறந்து, அழிவிலா வீட்டைப் பெறுவாயென வருளிச்செய்திருந்தனர். அந்த வாக்கியத்தை நினைந்தே ராவணன் தான் நற்கதி பெறுவதன்பொருட்டுச் சீதையை யபஹரித்தனன். இவ்வண்ணமே உத்தரகாண்டத்தில் பெருமானை நோக்கி, அகஸ்தியமுனி வருளிச் செய்கிறார். ராவணனும் ஜயனென்னும் துவாரபால காமச மாகையால், உண்மையறிந் திவ்வண்ணம் செய்வதில் தடையில்லை, இவன் பெருமாள் பிராட்டியார்களை யுத்தேசித் துரைசெய்யும் வாக்கியங்கள் தூப்பாஷணமாகத் தோற்றினும் ஆராயுங்கால் நற்பொருளுள்ளனவே யாகும், அதனை யங்கங் குரை செய்வோம்;—

சரணாகதி மந்திர விவரண ரூபமான இந்த ஸ்ரீராமாயணத்தில் இதுவரையில் அம்மந்திரத்தின் உத்தரகண்டத்தின்பொருள் கூறப்பட்டது; அம்மந்திரத்தை யனுஸந்திக்குங்கால், பூர்வகண்டார்த்தம் முதன்மையா யிருப்பதாயினும், பொருளை யறியுங்கால், உத்தரகண்டார்த்தமே முதன்மையாகக் கூறத்தக்கது; பலனை யறிந்த பின்பே உபாயத்தில் முயற்சி கொள்வது வழக்கமன்றோ? ஆதலின், உத்தரகண்டத்தின் பொருள் முதலில் விவரிக்கப்பட்டது; எங்ஙனே யென்னில், பாலகாண்டத்தில் திருமந்திரத்தின் உத்தரகண்டத்தினுடைய முதல் பதத்தின் பொருளாகிய புருஷார்த்த [illegible]மும், அயோத்தியாகாண்டத்தில் இரண்டாவதுபதத்தின்பொருளாகிய [illegible]

இன்புற்று வாழ்க; ஸ்ரீராமனும் தன் மனைவியைச் சேர்ந்தின்புறுக; நீர் அனி பரவநிதையைக் காமுற்றுக் கெடுகின்றீர்; கெடற்க வென்று வேண்டியுரைத்தனன். ராவணன் இம்மொழிகேட்டு, இதுவும் நலமெனவே கருதி மகிழ்ந்து, மீளவும் லங்காபுரி யுற்றுத் தன் மனை சேர்ந்தனன்.

ஆரண்யகாண்டத்தில்* முப்பத்தோராவது ஸர்க்கம்.

முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்.

### சூர்ப்பணகை யோடிவந்து ராவணனைக் கண்டது.

அநந்தரம் அங்கே சூர்ப்பணகையும், ஸ்ரீராமனொருவனே பதினாலாயிரம் ராக்ஷஸர்களுடன் கராதிகளையும் கொலைசெய்து வெற்றி கொண்டதைக் கண்டு, நீருண்ட கொண்டல்போலக் கர்ஜித்து, மிக வருத்தமுற்று விரைவாக வோடிவந்து லங்காபுரி சேர்ந்து, புஷ்பகவிமானத்தின் நடுவில் மந்திரி புரோஹிதாதிகள் சூழ்ந்திருக்க வீற்றிருந்து, தேவர்கள் சூழ வீற்றிருந்த தேவேந்திரன்போலத் திகழ்ந்து, தங்கச் சிங்காஸனத்தில் பொன் வேதியில் செழுந்தீபம்போல வொளிகொண்டு, தேவ கந்தர்வாதிகளால் வெற்றிகொள்ள வொண்ணாமல், வாயைத்திறந்து ஆலகினை விழுங்கு மந்தகன்போல அச்சந் தந்தும், தேவாஸுரர்களுடன் போர் செய்து, அவர்களுடைய வஜ்ரம், அசனி, இவைகளினா லடிபட்டுக் காயம் பொருந்தியும், ஐராவதத்தின் தந்தத்தினால் மோதப்பட்டு மார்பில் காயப்புற்றும், இருபது தோள்களையும், பத்துச் சிரங்களையு முடையவனாகி, வெண்குடை கவிய, வெண்சாமரங்களால் வீசப்பட்டும், அகன்ற மார்பினையுற்றும், வைடூரியத்தைக் கோத்தும், சிறந்த பொன்னாற் செய்த குண்டலங்களை யணிந்தும், நீண்டுருண்ட புஜங்களையும், வெண்மை பொருந்திய பற்களையும், பருத்த முகங்களையு முடையவனாகியும், விஷ்ணுவின் சக்ராயுதத்தாலும், தேவர்களுடைய பற்பல படைகளாலு மடிபட்டும், கலக்கமற்ற கடல்களையும் கலக்குந் திறமையுற்றும், எத்தொ

குண யோகமும், ஆரண்யகாண்டத்தில் சூர்ப்பணகை வருவதன்முன் வரையில், நான்காவது வேற்றுமையின் பொருளாகிய கிங்கர வ்ருத்தியும், அதுமுதல் கரவதம் வரையிலுள்ள வ்ருத்தாந்தத்தால் கடைப்பதத்தின் பொருளாகிய விரோதி நிவ்ருத்தியும் கூறப்பட்டன, மேல் முடியும் வரையில், பூர்வகண்டார்த்தங் கூறப்படுகின்றது, அதனுள் இதுமுதல் ஆரண்யகாண்டம் முடியும் வரையில், விபீஷணருக்குப் புருஷகார ஸாந்நித்யமும், கிஷ்கிந்தாகாண்டத்தில் நாராயண பதப்பொருளான வாத்ஸல்யமும், ஸுந்தரகாண்டத்தில் சரணபதோபாத்த திவ்ய மங்கள விக்ரஹ யோகமும், யுத்த காண்டத்தில் சரணாகதியும், உத்தரகாண்டத்தில் சரணாகத நிஷ்டையும் கூறப்படுகின்றன; இந்தசர்க்கத்தின் பொருளை நன்காராயுங்கால், ஸ்ரீராமபிரானே தசாவதாரஞ் செய்தருளிய ஸ்ரீமந்நாராயணரென்பதும், ஜகஜ்ஜனனஸ்திதி ஸம்ஹாரகர்த்தா வென்பதும் நன்கு விளங்கும்.

ழியிலும் விரைவில் செய்யும் வல்லமை பொருந்தியும் திகழ்பவனும், மாமலை போன்றவனும், சிறந்த மலைகளையு மசைப்பவனும், தேவர்களையும் அடிப்பவனும், தருமங்களைக் கெடுப்பவனும், பரத்தையல்களைப் புணர்பவனும், திவ்யாஸ்திரங்க ளெல்லாவற்றையும் உணர்ந்தெய்பவனும், யாகங்களைத் தடுப்பவனும், போகவதி பட்டணஞ் சென்று, வாஸுகியை வென்று, தக்ஷகனையும் நிராகரித்து, அவனுடைய மனத்துக்கினிய மனையாளைப் பிடித்துக்கொண்டு வந்தவனும்; கயிலைமலைசேர்ந்து குபேரனை வென்று புஷ்பகவிமானத்தைப் பறித்தவனும், சைத்திரரதம் நந்தனம் முதலிய தேவோத்தியானங்களை யழித்தவனும், உதிக்கின்ற ஸூர்ய சந்திரர்களையும் கைகளினால் தடுப்பவனும், பதினாயிரம் வருஷம் திசைமுகத்தேவனைக் குறித்துத் தவஞ்செய்து, தன் தலைகளையே கொய்து ஹோமஞ் செய்தவனும், தேவ தானவ கந்தர்வ பிசாசோரகபக்ஷகாதி பூதங்களாலும், மிருத்யுவினாலும், மற்றுள்ள உயிர்களாலும் இறவேனென்ன வரம்பெற்றவனும், அப்பொழுது மானிடரைமதியா திகழ்ந்து உபேக்ஷை செய்தவனும், வேதியர்களால் மந்திர பூர்வமாகக் கலங்களில் பிழியப்பட்ட ஸோமங்களை யுண்டழிப்பவனும், கொடியனும், வேதியர்களைக் கொலை செய்பவனும், தீச்செயலினனும், தயா தாக்ஷிண்ய மற்றவனும், பிரஜைகளுக்குத் தீமை விளைப்பவனும், தனக்குப் பிராதாவுமாகிய ராவணனைக் கண்டு கிட்டியவனை நோக்கிக் கொடுமை கொண்டு மொழியலுற்றனள்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

சூர்ப்பணகை ராவணனை யரசாட்சி நன்கு செய்கின்றிலையென இகழ்ந்தது.

அநந்தரம் மிகவும் தீனமுற்ற சூர்ப்பணகை யுலகங்களையெல்லாம் கூவி யழச் செய்யும் ராவணன் மந்திரிகள் நடுவில் வீற்றிருக்கக் கண்டு அவனை நோக்கிக் கேளடா ஸோதரா! நீ வேறகனா கலவி இன்பத்திலே மூழ்கி மயக்குற்றுக் கேட்போரின்றி நீதி தப்பித் தடையின்றித் திரிகின்றனை; இப்பொழுதிங்கு விளையுமென்று முன்னமே பாராய்ந்தறிய வேண்டியதை யறியாதிருப்பது மன்றி, தீமை நேர்ந்த பின்னரும், அறிகின்றிலை யந்தோ?—

సక్తం గ్రామ్యేషు భోగేషు కామవృత్తం మహీపతిం।
లుబ్ధం న బహుమన్యన్తే శ్మశానాగ్నిమివ ప్రజాః॥
స్వయం కార్యాణి యః కాలే నానుతిష్ఠతి పార్థివః।

సతువై సహరాజ్యేన. తైశ్చ కార్యైర్వినశ్యతి॥
అయుక్తచారం దుర్దర్శ మస్వాధీనం నరాధిపం।
వర్జయన్తి నరాదూరా న్నదీపంక మివద్విపాః॥

ஸகதம்க்ராமயேஷுபோகேஷு காமவருததமமஹீபதிம்|
லுபதமநபஹுமனயநதே சமசாநகமிவப்ராஜா:||
ஸ்வயஙகாயாணியஃகாலே நாநுதிஷடதிபாாதிவஃ|
ஸதுவைஸஹராஜயேநதைச சகாாயைாவிநசசதி||
அயுகதசாாநதுாதாச மஸவாதீநமநாாதிபம|
வாஜயநதிநராதூராந நதீபஙகமிவதவிபாஃ||

கிராமயபோகஙகளில ஆசததியுறறவனும, தன மனதுக்குத் தோன்றி
ன்படி செய்பவனும, லோபமுடையவனுமாகிய, ராஜனை பிரஜைகள முதுகாட்டி
லுள்ள தீயைப்போலககண்டிகழ்வாாகளேயனறி, உகவார்கள்; யாவனொருவன்
தக்ககாலததில் செயயத்தககன செய்கினறிலனோ, அநத ராஜன அந்த ராஜ்ஜி
யததுடனே அநதக காரியஙகளினாலேயே யபபொழுதே யழிநது விடுவான்;
சாராகளை யேவாதவனுமு, சுளித்தமுகததனுகிக காணற் கரியனும, ஸ்வாதீன
னைகாதானுமாகிய ராஜனை யானைகள நதியின சேறறைப்போலப் பிரஜைகள்
துரக்கின்றனாகள்; அநத அரசாகள ஸ்வாதீனம தபபித தேனமொழியா
ரதீனராகிப பாதுகாககினறிலரோ, அவாகள கடலிலாழநத மலைகள்போல
மேன்மையுறறு விளஙகாாகள; மிகத திறமையுளள தேவகநதாவ தானவாதி
களுடன பகையுறறும, சாராகளை ஏவிச செயதி யறிநது கொள்ளாமல்
சபலனுகத திரிகினற நீ எவ்வணணம ராஜஜியததை யாளவாய? அடா நீ மதியி
ன்றி, மடித்தன்மைகொண்டு, அறிநது கொளளததக்க காரியஙகளை யறிநது
கொளளுகினறிலை; ஆதலின், நீ எவவணண மரச னுகுவாய்; எநத ராஜா
களுக்கு வேவுகாராகளும, பொருளகளும, நீதிகளும, திடடங்களும்,
ஸ்வாதீனங்க ளலலவோ, ஸ்வாதீனமறற அநத ராஜாகள் அற்பாகளுக்கு
நிகரானவர்களே யாகினறனாகள்; வேநதாகள சாரணாகளைக கொண்டு
தேசா தேசங்களிலுமுள்ள சமாசாரஙகளை யறிநது கொளளுகினறமையின்,
அவாகள் தூரதிருஷடிகளெனபபடுகினறனாகள; ஜனஸ்தானததிலுளள
கரன் முதலிய யாவருய அழிநதிருககையில, நீ இதுவரையில தெரிநது
கொள்ளாமையால், அற்பாகளான மநதிரிகளுடன கூடியவனெனவும்,
சாரணனில்லாதானெனவும, உன்னை யானெண்ணுகின்றேன், பதினாலாயிரம்
ராக்ஷஸர்களுடன் கரன் முதலானோர்களும், ஸ்ரீராமனொருவனாலே தானே
கொலை செய்யப்பட்டனர்கள. அந்த ஸ்ரீராமன ரிஷிகளுககும் அஞ்சற்க
என் றபயங்கொடுத்தனன.

ஆதலின், தணடகாரண்யங்க ளின்புற்றன; இவ்வண்ணம் அந்த
ஸ்ரீராமனால் ஜனஸ்தானம்பாழாளாக்கப்பட்டது; இவ்வண்ணம் நின்கு நேர்

திருக்கையிலும், அதனை யுணராமல் லோபமும், மதமும், காமமும் கொண்டு ஸ்வாதீனமின்றி, மடமை கொண்டிருக்கின்றனை; கொடுமை கொண்டவனையும், அற்பமாகக் கொடுப்பவனையும், மதமுற்றவனையும், காவமடைந்தவனையும், வஞ்சனைசெய்பவனையும், பிரஜைகள் சேரார்கள்; அவனுக்கு இடையூறு வருங்கால் நீங்கிச் சென்று மகிழ்வார்கள்; அகங்கார முற்றும் நிலைமையற்றும், தன்னைத்தானே புகழ்ந்தும், சினமடைந்தும், கொடுமை கொண்டிருக்கின்ற ராஜனைத் தன் ஜனமே ஸமயம்பார்த்துக் கொல்லும்; பயம் நோக்கையிலச்சமின்றியும், செயற்குரிய காரியங்களைச் செய்யாமலுமிருக்கின்ற ராஜன் விரைவில் அரசிழந்து, புல்லுக்கு நிகராகுவான்; உலர்ந்த கட்டைகளினாலும், உடைந்த சிலவி யோடுகளினாலும், தூள்களினாலும் கூடப்பயன் நேரும்; அரசிழந்த ராஜாக்களாலே மாத்திரம் ஒருபயனும் இல்லது; உடுத்துக் கிழிந்த துணிபோலவும், அணிந்துவாடிய மலர் மாலைபோலவும், அரசிழந்த வேந்தன் திறமை யுற்றவனாயினும், திறமை யற்றவனே; ஊக்கமுடையோனும், யாவுமுணர்ந்தோனும், புலன்களை வென்றவனும், நன்றி யுள்ளவனும், தார்மிகனுமாகிய ராஜனே நெடுங்காலம் உலகாண்டு வாழ்வான்; கண்களில் துயிலுற்றவனாயினும், நீதியென்னும் கண்களால் விழித்திருப்பவனும், பயன்படும் சினம், அருள்களை யுடையவனுமாகிய ராஜனே யாவராலும் கொண்டாடப் படுவான்;' அடா ராவணா! நீயோவெனில், மதிமயங்கி யானுரைத்த நற்குணங்களை யிழந்து, தீக்குணங்களை மேற்கொண்டு, சாரர்களினால் கராதிகள் இறந்ததையு முணரா திருக்கின்றனை; பிறர்களை யிகழ்ந்தும், விஷயங்களிலாழ்ந்தும், தேசகாலங்களுக்குரிய செயல்களை யிழந்தும், குணதோஷங்களை யறியு முணர்வைத் துறந்து மிருக்கின்றமையின், நீ விரைவில் அரசிழந்து துன்புறுவாய்; என இவ்வண்ணம் சூர்ப்பணகையாலுரைக்கப்பட்ட வாக்கியத்தை ராவணனும் நன்காராய்ந்து, செல்வமும், செருக்கும், பலமும் உற்றவனாதலின், நெடுநேரஞ் சிந்தையுற்றிருந்தனன்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்து நான்காவது ஸர்க்கம்.

சூர்ப்பணகி ராவணனுக்குப் பெருமாளிளையபெருமாள் இவர்களுடைய திறமையையும், பிராட்டியின் அழகினையு மறிவித்துச் சீதையை யபஹரிக்கும்படி யுரைத்தது.

அநந்தரம் ராவணன் பகைமேல் சினமுற்றுத் தன்னை வன்மொழிகளால் இகழ்ந்த சூர்ப்பணகியை நோக்கிச் சொல்லுவது: சூர்ப்பணகி! ஸ்ரீராமனென்பவன் யாவன்? எத்திறமையன்? எவ்வுருவத்தவன்? எத்தன்மையன்? அவன்

புகழ்தாங்கிய தண்டகாவனத்து ளேன் புகுந்தனன்? எப்படையினன்? அரக்கர் களை எதனால் மடித்தனன்? விரைவி லுரையாயென வினவினன். சூர்ப்ப ணகையு மிந்த வாக்கியத்தைக் கேட்டு ராவணனை நோக்கிக் கேளாய் ஸோதரா! நீண்டுருண்ட திருத்தோள்களும், அகன்ற திருக்கண்களு முடையவனும், மரவுரி மரையுரிகளை யுடுத்தவனும், காமகோடி சுந்தரனுமாகிய ஸ்ரீராமனென் பவன் தசரத சக்கரவர்த்தியின் திருக்குமாரன்; பொன்கட்டமைந்த தேவேந் திரன் வில்லை நிகர்த்த திருக்கோதண்டத்தைக் கையிலேந்தி இழுத்து நச்சர வங்கள் போன்ற கணைகளை எய்கின்றனன்; அவன் கணைகளை எடுப்பதும், தொடுப்பதும், இழுப்பதும், விடுப்பதும், யாராலுங் கண்ணுறப்பட்டில; சர மாரிகளாலடிபட்டு மடிந்த சேனைகளை மாத்திரமே கண்டேன்; மழைக் கல்லுகளி னடிபட்டு மடிந்த நெற்பயிர்களைப் போலச் சரமாரிகளால் பதினாலா யிரம் ராக்ஷஸசேனைகளும் அடிபட்டு மடிந்து சாய்ந்தன; இவ்வண்ணம் மூன்று நாழிகைக்குள் அந்த ஸ்ரீராமனொருவனே எல்லாப் படைகளுடன் கரதூஷணத் திரிசிராக்களையும் கொலை செய்தனன்; ரிஷிகளுக்கும் அபய மளித்தனன்; யாவரு மின்புற்றனர்கள்.

அந்த ஸ்ரீராமன் மிகவும் சூரனும், தருமமுணர்ந்தவனு மாதலின், பெண் கொலை தீதென வுணர்ந்து தென்னை யவமானஞ்செய்து கொல்லாது விட்டுவிட்டனன் ஆதலின், யானொருத்தியே தப்பிப் பிழைத்து வந்தேன்; அவனுக்குத் தம்பி யொருவன் மிகவும் தேஜஸ்ஸுடையவனும், ரூபௌ தார்ய பல பராக்கிரமங்களினால் அண்ணனுக்கு நிகரானவனும், அன்பும் பத்தியு முடையோனும், பிழையைச் சிறிதேனும் பொறுத்தருளாதானும், பிறரால் வெல்லவொண்ணாதானும், பகைவரை வெல்லுபவனும், கூரிய புத்தி யுடையோனும், ஸ்ரீராமனுக்கு வலது திருத்தோளெனவும், வேறாகக் கொண்டு புறத்தி லுலாவுகின்ற உயிரே இவனெனவு முரைக்கப்பட்டவனும், மிகத் தோள்வலியுற்றவனுமாகி, இலக்ஷ்மணனென்னப் பேருற்று விளங்குகின் றனன்; ஸ்ரீராமனுடைய மனையாளொருத்தியும், அகன்ற திருக்கண்களையும், முழுமதிபோன்ற திருமுக மண்டலத்தையும் பொருந்தி, மிகப் பெரிய முலை யாளும், மிக வழகிய சுரிகுழலினளும், அழகுற்ற நாசி யுடையாளும், கட்ட ழகியும், புகழ்பெற்றவளும், அந்த வனதேவதையோவென வெண்ணப்பட்ட வளும், மற்றொரு மஹா லக்ஷ்மியோவென ஐயுறத்தக்கவளும், உருக்கிய தங்கம்போன்ற வண்ண முற்றவளும், சிவந்துயர்ந்த நகங்களை யுடையவளும், நுண்ணிடையினளும், சீதையென்னும் திருநாமமுடையவளு மாகின்றனள்; தேவகந்தர்வ யக்ஷ ராக்ஷஸ பதகோரகாதிப பெண்களுள்ளும், இவ்வண் ணம் வண்ணமழகியபெண்ணை எங்கும் கண்டிலேன்;—

యస్య సీతా భవేద్భార్యా యం చ సీతా పరిష్వజేత్ ।
అతిజీవేత్స సర్వేషు లోకేష్వపి పురన్దరాత్ ॥

யஸ்யஸீதாபவேத்பார்யா யஞ்சஸீதாபரிஷ்வஜேத்|
அதிஜீவேத்ஸஸர்வேஷு லோகேஷ்வபிபுரந்தராத்.||

யாவனொருவனுக்குச் சீதை மனையாளாகுவாளோ? யாவனொருவனைச் சீதை யாலிங்கனஞ் செய்துகொள்ளுவாளோ? அவ்விருவரே எல்லோரையும் விடச் சிறந்த பிறப்புடையோரும், இந்திரனினுஞ் சிறந்த போகமுற்றோருமாகி வாழ்வார்கள்; நல்லொழுக்க முடையவளும், உருவத்தி லொப்பற்றவளுமாகிய அந்தச் சீதை யுனக்குத் தக்கவளாகுவாள்; நீயு மவளுக்குத் தக்கவனாகுவாய்; அவளை யானுனக்குப் பாரியார்த்தமாக வெடுத்தோடி வர முயன்றேன்; அப்பொழுது கொடியனான லக்ஷ்மணன் முனிந்தென்னைச் செவி நாசிகளை யரிந்தோட்டி விட்டனன்; அவளை நீ கண்ணுறுவாயாகில், மன்மத பாணங்களுக்குக் குறியாகுவாய்; அவ்விஷயத்தி லுனக்கு மனமுள்ளதாயின், ஜயார்த்தமாக வலதுகாலை யிப்பொழுதே முன்னெடுத்திடுக; ஸ்ரீராமனைக் கொலைசெய்வதினால் அவ்வரக்கர்களுக்குப் பிரியஞ் செய்க; அந்த ஸ்ரீராமனையும், லக்ஷ்மணனையும் கூரிய கணைகளினாலடித்துப் பதியற்ற சீதையைச் சுகமாகவெடுத்து வந்தின்புறுக; யானுரை செய்த இவ்வாக்கியம் உனக்கிதமெனத் தோற்றுமாயின், உடனே யவ்வண்ணஞ் செய்க; உன்னுடைய திறமையையும் நன்குணர்ந்து சீதையை எடுத்தோடி வருக; என் வாக்கியத்தைச் செவியுற்று, ஸ்ரீராமனால் கரதூஷணத் திரிசிரர்களும், பதினாலாயிரம் சேனைகளும் அழிந்தனரென்பதை யறிந்து, மேல்செய்யத்தக்க காரியத்தை நன்காராய்ந்து செய்யக்கடவை யென மொழிந்தனள்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்துநான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

ராவணன் தேரூர்ந்து கடலையும், ஸுபத்திரமென்னும் ஆலமரத்தையும்
பார்த்துக்கொண்டுபோய் மாரீசனைக் கண்டது.

அநந்தரம் ராவணன் சூர்ப்பணகையின் வாக்கியத்தைக்கேட்டு, மந்திரிகளுடனாராய்ந்து தேர்ந்து, மந்திரிகளை யனுப்பிவிட்டுத் தானுந் தனியே

* யஸ்ய என்னும் சுலோகத்தின் கருத்துரை

எவனுக்குச் சீதை பாரியை யாகுவாள்? எவனைச் சீதை மகிழ்ந்து தழுவிக் கொள்வன்? அவன் ஸ்ரீராமனே யல்லனோ? அவனே எல்லோர்க்கும் சிறந்த புருஷோத்தமன்; அவனே இந்திரனுக்குப் பின்னவதரித்த உபேந்திரன்; ஆதலின், சீதையை

ஆலோசனை செய்து, குணதோஷங்களையும், பலாபலங்களையு மறிந்து, இவ்வண்ணமே செய்யவேண்டுமெனத்தோந்து, யானசாலைக்குட்புகுந்து ஒருவருமறியாமல் சாரதியைநோக்கித் தேரைச் சித்தஞ்செய்யும்படி கட்டளையிட்டு, அவனால் சித்தஞ்செய்யப்பட்ட சிறந்த பொனனாற்செய்த தேர்மீதேறிப் பிசாசமுகம்போன்ற முகங்களுள்ள கோவேறு கழுதைகளைத் தூண்டி விண்மிசைசென்று வெண்குடைபிடித்தும், வெண்சாமரங்கள் வீசியும், மற்றும் பற்பல உபசாரங்களும் செய்கின்ற பரிஜனங்களுடன் கூடி, பத்துத்தலைகளையுடையனாகி வைடூரியத்தைநிகாத்தமையில, பத்துச் சிகரங்களையுடைய மாமலைபோனறவனாகி, மினனலுடன் கூடிய பலாகைகளினால் சூழப்பட்ட மேகம்போலும் விளங்கி, மலையுடன் கூடிய கடற்கரையையும், பலவகை மரங்களடர்ந்து திகழுக கண்ணுறறு குளிர்ச்சியுறறுப பாவனமாகிய நீர்களையுடையனவும், தாமரை மலர்ந்து மணம வீசுகினறனவுமாகிய தாமரை யோடைகளினாலும், யாகவேதிகளுடன் கூடிய விசாலமான ஆசிரமங்களினாலும் திகழ்ந்தும, வாழை பலா தெங்கு பனை ஆச்சா பச்சிலை முதலிய மரங்கள் மலர்ந்து கனிந்துச் சூழ்ந்தும, நாக கந்தாவ ஸோபாண கின்னரர்களும், பிறப்பறற யோகிகளும், வைகானஸாகளும, (பிரஹ்மத்தின நகத்திற பிறந்தோரும) மஷரெனபவா குலத்தவாகளும, வாலகில்யாகளும, (பிரஹ்மத்தின வாலிற பிறந்தோரகளும) வெயிலையுணடே தவஞ்செயபவாகளும, உணவு நீங்கிய யோகிகளும நிறைநதும, சிறந்த ஆடையாபரணங்களை யுடைய அபஸரஸர்கள் நிரந்தரம கிரீடைசெய் தினபுறறும, தேவாகளும தெயவபபெண்க

லக்ஷ்மியெனறே வுணாக எனபது கருததா, மேல் வாக்கியங்களிலும வேறே யொருபொருளும தோறறுகினறது, அவள நலலொழுககமுடையா ளாதலின, அவளுனககுத தககபாரியை யாகுவாளோ? ஒருகாலும ஆகாள, நீதான அவளுககுப் பதியாகுவாயோ? ஆகாய, நீ பாரியையைத துறநது, வைராககியமுறறும விஷயததில யானவளை எடுததுவர முயனறேன, லக்ஷ்மணன என மூககை யரிந்தான, நீ யவளைக கண்ணுறுவாயாகில், (மனமதஸ்ய) என மூககை யறிந்து மாததனஞ் செயத அந்த லக்ஷ்மணன் சரங்களுககுக குறியாகுவாய, பாரியையைத துறககும விஷயததில உனககபிலாஷிருககுமாயின, (ஜயாததம) முனபோல விஷ்ணுலோகததில ஜயனெனனும துவாரபாலனாகும் விஷயததில மகிழநது வலதுகாலை முனனிடாய, கூரிய கணைகளினால் பகைவரைப் பிளநது நிறகிற பெருமாளையும், திருவனநதாழ்வானையும், (ஹதநாயகாம்) அடையப்பட்ட நாயகனையுமுடைய பெரிய பிராட்டியாரையும (அதாவத) முன்போலவே சேர்ந்து சுகமாக வாயில காபபோனாகி இனபுறுவாய, அவவாககாகளுடைய வததினால் (நருசமஸஸய) மனிதாகளால புகழபபட்ட அந்த ராமனுககுப் பிரிய மனிக்கக்கடவை. என வாககியம இதமெனத தோறறுமாயின, ஸ்ரீராமன, நீ, நம்மிருவருடைய சகதியை நனகுணாநது, சீதையை எடுததுவா? யானுரைததனதையுங் கேட்டு, ஸ்ரீராமனால் காாதிகள மடிநததையு முணர்ந்து தககவணணம செயயா யென்றும் பொருள் தோற்றுகினறனமையின, ராவணன் பெருமாளை எதிாததுப் போர்செயயாமல், மறைவில் எடுததோடி வநதானென்பது அமைகினறது.

ளும் திகழ்ந்தும், மற்றுமுள்ள தேவதானவகணங்கள் நெருங்கியும், அன்னம் கிரௌஞ்சம் நீர்க்கோழி வெண்ணாரை முதலிய நீர்ப்பறவைகள் ஒலித்தும், வைடூரியக்கற்களடர்ந்தும் விளங்குகின்ற காடுகளையும், வெண்மை நிறமுற்றகன்று திவ்விய மாலைகள் பொருந்தி கீதவாத்தியங்கள் முழங்கித் திகழும் வைமானிகர்களது விமானங்களையும் கிட்டி, அங்கங்குள்ள கந்தர்வாப்ஸரர்களையும், மற்றுள்ள விநோதங்களையும் கண்ணுற்றுச் சந்தனக்காடுகளையும், அகிற்காடுகளையும், தக்கோலக்காடுகளையும் கண்டு மகிழ்ந்து, தமால புஷ்பங்களையும், மிளகு புதர்களையும், கரையிலலைகளினால் ஒதுக்கப்பட்ட முத்துகளையும், சங்குகளின் திரளையும், பவளங்களின் குலைகளையும், பொன்மலை வெள்ளிமலைகளையும், மலையருவிகளையும், மடுவுகளையும், தனதான்யங்கள் நிறைந்து, மிக வழகிய பெண்கள் திகழ்ந்து, யானை குதிரை தேர்களடர்ந்துமுள்ள பட்டணங்களையும் கண்டு களித்து, அந்தக் கடலோரத்தில் பருத்துயர்ந்த ஒரு ஆலமரத்தையும் கண்டனன்.

அம்மரத்தின் கிளைகள் சுற்றிலும் நூற்றுக்காதவழி வளர்ந்துள்ளன; அம்மரத்திலேதானே பெரிய திருவடிகள் கஜகச்சபங்களைக் கால்களிலிடுக்கிக் கொண்டவைகளை யுண்பதின் பொருட்டுப் பறந்து வந்துட்கார்ந்து, உடனே தாமுட்கார்ந்த கிளைமுறியத் தக்ஷணமே அதன் கீழே தவஞ்செய்கின்ற வாலகில்யர் முதலிய யோகிகளிறப்பார்களென் றஞ்சி, அந்தக் கிளையினையும் மூக்கில் கொந்தியெடுத்துப் பறந்தெழுந்து நெடுந்தூரமெழுந்தருளி, அந்தக் கஜகச்சபங்களையும் பக்ஷித்து, நூறுயோஜன நீளமுள்ள அந்தக் கிளையை வேடுவச் சேரியிலெறிந் தங்குள்ளோரையும் கொலைசெய்தருளி மகிழ்ந்து, முனிவர்களையும் பாதுகாத்தளித் துடனே தேவலோகஞ்சென்று, அங்குள்ள எஃகினாற்செய்த யந்திரங்களை முறித்து, மணிமாடங்களையுமிடித்து, அங்கு ஏகாந்தமாய்ப் பாதுகாக்கப்பட்ட அமிர்தகலசங்களையுமெடுத்துக்கொண் டெழுந்தருளினார். பற்பல மஹாமுனிவர்கள் நிறைந்த ஸுபத்திரமென்னும் அந்த ஆலமரத்தையும் தாண்டிக் கடலின் அக்கரை சேர்ந்து, மிக வழகிய வோ ராசிரமத்தில் மரவுரியுள்ளுடுத்து மரையுரி மேல் கட்டிச் சடைதரித்து உண்வடக்கித் தவஞ் செய்துகொண்டிருக்கின்ற தாடகா புத்திரனான மாரீசனைக் கண்டு கிட்டிச் செல்லுகையில், மாரீசனும் இவனைக் கண்டு எதிர்கொண்டழைத்துவந்து, விதியின்படி அர்க்கியபாத்தியம் முதலிய உபசாரங்களினால் பூஜித்து, ராவணனை நோக்கி, அரக்கர் கோனே! இலங்கையிலெல்லோரும் இன்புற்று வாழ்கின்றனர்களா? விரைவாக மீளவும் இங்கெய்திய செய்தி யாதோ? அதனை யுரைசெய்யென்று வினவினன். பின்பு ராவணனும் மாரீசனை நோக்கி, மொழியலுற்றனன்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்தைந்தாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## முப்பத்தாறுவது ஸர்க்கம்.

*ராவணன் மாரீசனை மானுருக்கொண்டு, சீதையைத் தான் எடுத்து வருவதற்கு உதவி செய்யென உரைத்தது.*

அந்தக்க்ரூரன் ராவணன் மாரீசனை நோக்கிக் கேளடா என் மொழியை! நான் மிகவும் துன்பமடைந்திருக்கின்றேன், இத்தருணத்தில் நீயே எனக்குத் தஞ்சம்; எனக்குப் பிராதாவாகிய கரன், தூஷணன் திரிசிரன் முதலிய பதினாலாயிரம் ராக்ஷஸர்களுடனும், சூர்ப்பணகையுடனும், என் கட்டளையின்படி ஜனஸ்தானத்திலுறைந்து, அங்குள்ள முனிவர்களைப் பீடித்துக் கொண்டிருந்தனரென்பதை நீ யறிந்தே யிருக்கின்றனையல்லவோ? அந்தக் கரன் முதலிய ராக்ஷஸர்க ளெல்லோரும் ராமனால் கொலை செய்யப்பட்டிறந்தனர்கள். இப்பொழுது தண்டகாவனம் அச்சமற்றதாகச் செய்யப்பட்டது; அந்த ராமனும் தந்தையினால் பெண்டாட்டியுடன் அடித்தோட்டப்பட்டுக் காடுசேர்ந்தும், மதியின்மையாளனாகி அவ்வரக்கர்களைக் கொலை செய்தனன்; ஆதலின், அவன் ராஜாக்களுள் கடையவனும், தீச்செயலினனும், கொடுமைகொண்டவனும், அருளற்றவனும், மடமைகொண்டவனும், லோப முடையோனும், தவமியற்றிப் புலன்களை வெல்லாதவனுமாகின்றனன்; ஆதலின், அவன் தருமத்தைத் துறந்து அதருமத்தையே மேற்கொண்டு உயிர்களுக்குத் தீமைசெய்யவே முயன்றனன்; பகையொன்றுமின்றியே பலமத்தினால் அவன் என் ஸஹோதரியான சூர்ப்பணகையின் செவி நாசிகளை யரிந்து விட்டனன்; ஆதலின், அவன் மனையாளாகிய மிக வழகிய சீதையை எடுத்துக்கொண்டு வரப்போகிறேன்; இவ்விஷயத்தில் எனக்கு நீ ஸஹாயமாகக் கடவை. நீ என்னுடன் வந்துதவி செய்வாயாகில், கும்பகர்ணன் முதலிய தம்பிகளுடனுங் கூடிய யான் போரில் தேவர்களெல்லோரும் எதிர்த்து வரினும் யான் இலக்ஷியஞ் செய்யேன், ஆதலின், நீ எனக்குத் துணையாகக் கடவை. வீரியத்திலும், மதத்திலும், உனக்கு நிகரானவனொருவனுமிலன்; நீயே உபாயமறிந்தவன், சௌரியமுள்ளவன், மாயைகளெல்லாவற்றையு மறிந்தவன், இதற்காகவே யானிங்கெய்தினேன்; நீ செய்யவேண்டிய காரியம் யாதோ, அதனையு முரைசெய்வேன் கேளாய்; நீ வெள்ளிமயமான புள்ளிகளை யுடையதும், பொன்மயமாகி, மிகவழகியதுமாகி மானுருக்கொண்டு அந்த ராமனிருக்கின்ற ஆசிரமத்தி லுலாவுக; சீதையுன்னைக் கண்ணுறுவாளாயின், அவாவுற்று ராம லக்ஷ்மணர்களை நோக்கி, இம்மானைப் பிடித்தளிக்கக் கடவீர்களென உரை செய்வாள்; உடனே யவ்விருவர்களும் உன்னைப் பிடிக்கும்படி வருவார்கள்; அவர்கள் சென்ற பின்னர், தனியே யிருக்கின்ற அந்தச் சீதையைத் தடையொன்றுமின்றியே சுகமாக எடுத்துக் கொண்டுவந்து விடுவேன்; பின்பு, பெண்டாட்டியைப் பறிகொடுத்து மிக

யருநதி இளைத்துத் துயருற்ற ராமனை சுகமாக்க் கொலை செய்வேனென்
றுரைசெய்து முடித்தனன்.

மாரீசன் அநத வாக்கியததைக் கேட்டு, ஸ்ரீராமபிரானுடைய பிரபா
வத்தையும் நினைநது, உதடுகளுலாநது, அவற்றை நாககினுல வருடி, இமை
நீங்கிக கண்கள மருள விழிதது, சவமபோல நினறு, துயருறறுததேர்நது,
ராவணனை நோக்கி, மனங்கலங்கிச சிநதைகொண்டவனுகிய பெருமாளுடைய
தோள்வலியையறிநதவனுகலின, ராவணனவாககியம நலமற்றதெனவறிநது,
கைகளைக் கூப்பி ராவணனுககும தனககும இதமுறததககதாக ஒரு மொழி
மொழியலுற்றனன.

ஆரண்யகாண்டததில முப்பததாறுவது ஸர்ககம
முற்றிறறு.

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸீதாபிராட்டியை யபஹரிபபாயாகில எல்லொவரககர்களுடனும
நீ யழிவாயாதலி னிவவெண்ணததை விட்டு
வாழெனறு மாரீசன ராவணனுககு இதமுரைததது

அநநதரம ராவணனுரைதத அநத வாககியததை மாரீசன் கேட்டு
ராவணனை நோககி,—

సులభాః పురుషా రాజన్ సతతం ప్రియవాదినః।
అప్రియస్య చ పథ్యస్య వక్తా శ్రోతా చ దుర్లభః॥

ஸுலபா: புருஷா ராஜன ஸததமப்ரியவாதிந:|
அப்ரியஸயசபதயஸய வகதாசரோதாசதுரலப:||

கேளீர ராக்ஷஸர் கோனே! பினபு, துனபம விளைவிககததக்கனவும்,
கேட்பதற கினியனவாகத தோறறுகினறனவுமாகிய மொழிகளை மொழி
வோாகள் உலகினி லெபபொழுதும பெரும்பாலு முளாகள்; கேட்பதறகி
னியன வலலனவாயினும, மேலே நலமளிககததககனவாகிய வன்மொழிகளை
மொழிவோனும, இவன் மொழிவது நலமேயென மகிழநது கேடபோனும,
நமக்கு மிவன் உபதேசஞ் செய்கிறுனென்று செருககினுல சினமுறுமல
அவ்வண்ணமே நடபபவனும, எஙகும கிடையாாகள; பிரியமலாதுரை
செயின், கேட்போாசுளிபபாாகள; இதமும பிரியமுமாகியது அரிது; ஆதலின,
யாவரும் தாக்ஷிணியததால பிரியமே மொழிவாாகள; நீா சாரர்கள
முகமூாய்ப் பிறர் தன்மையை யறிநதுகொளளாமலும், வேற்கணர் வலையில
கட்டுண்டு மிருக்கின்றமையின், ஸ்ரீராமன் பிறரால 'வெல்லுதற்கரிய தோள
வலியுற்றவனெனவும், சிறநத நற்குணமுண்டயோ னெனவும், மஹேநதிர

னுக்கும், வருணனுக்கும், நிகரானவனென்னவு மறிந்திலீர்; அந்தோ! வேந்தே! இவ்வுலகினி லரக்கர்களெல்லோர்க்கும் நன்மை விளையுமா? ஸ்ரீராமன் சினமுற்றால் இலங்கையை யரக்கர்களற்றதாகச் செய்யாதருள்செய்வனோ; ஜனகராஜன் திருமகளாகிய சீதையும் குலத்தை யழிப்பதன் பொருட்டுப் பிறந்திலளா? சீதையின் நிமித்தம் யானும் இறக்கும் மாயுள்வேனோ? காமவேட்கையுற்று மரியாதை கெட்டுத் திரிகின்ற உம்மை ராஜனாகப்பெற்று இலங்கை பாழாளாகாமல் சீருறுமா? உம்மைப்போலக் காமமுற்றுச் சீலமழிந்து தீயோர்சொற் கேட்டு மதிகெட்டுத் திரிகிற ராஜன் தானுமழிந்து, தன்னினத்தாரையு மழித்து, நாட்டையு மழிப்பான்; ஸ்ரீராமன் தந்தையினால் துறக்கப்பட்டவனு மல்லன், மரியாதை தப்பினவனு மல்லன், லோபியு மல்லன், தீச்செயலினனு மல்லன், ராஜர்களுள் பாவியுமல்லன், தருமகுணமற்றவனுமல்லன், கொடியனுமல்லன், உயிர்களுக்கு இதமல்லாச் செயலினனு மல்லன், அவன் நற்குணங்களெல்லாவற்றாலும் சிறந்தவனே; கைகேயி தந்தையை வஞ்சனை செய்து வரம்பெற்றுக் கொண்டமையால், பிதாவைப் பொய்யினின்றும் பாதுகாப்பதன் பொருட்டே பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்வேனென்றே கைகேயிக்குப் பிரியமுரைத்து, அரணியத்துக் கெழுந்தருளினன். ஆதலின், ஸ்ரீராமன் கொடியனுமல்லன், அறிவிலனுமல்லன், புலன்களை யடக்காதானு மல்லன், ஸ்ரீராமனிடத்தில் நீ பொய்யும், வன்மொழியு மிவ்வண்ண முரையற்க; ஸ்ரீராமன் உருவங்கொண்ட தருமம்போலும், நற்குணமுடையோனும், உண்மையான தோள்வலியுற்றவனு மாகின்றனன்; அவன் தேவர்களுக்கிந்திரன்போல அனைத்துலகங்களுக்கும் ராஜனாதலின், ஒளி ஸூரியனை விட்டு நீங்காததுபோல ஸ்ரீராமனை விட்டுப் பிரியாத பிராட்டியை நீ எவ்வண்ணம் வலுவில் எடுத்துவரக் கருதுகின்றனை, கணைகளெனனும் ஜ்வாலையுற்று, வில் வாள்களென்னும் விறகைச் சேர்ந்து, தகதகவென்று பற்றி எரிகின்ற ஸ்ரீராமனென்னும் தீயில் வலுவில் வீழ்ந்தழியற்க; வில்லென்னுந் திறந்தமுகத்தைப்பெற்றுக் கணையென்னும் ஜ்வாலைபொருந்திச் சினங்கொண்டு பகைவர் சேனைகளை மடிக்கின்ற கோதண்டமெனனும் யமனுடன் சேர்ந்து திகழு மிராமனை ராஜியத்தையும், சுகத்தையும் துறந்து வலுவில் கிட்டி உயிரைவிட்டழியற்க; அவனுடைய பலம் அளவற்றதாதலின், அவனுக்குயிரினும் பிரியமுள்ள பாரியையை யபஹரிக்க நீ எவ்வண்ணந் திறமை யுறுவாய்? எரிகின்ற தீயின் அனல்போலச் சுடுகின்ற சீதையை நீ சேர்வதென்பது, நீயழிவதற்கே ஏதுவாகும்; ஆதலின், பயனற்ற இம்முயற்சியை ஏன் வாளாசெய்கின்றனை? ஸ்ரீராமன் போர்க்களத்தி லுன்னைக் காணுமளவே உனவாழ்வு, பின்பு உனனுயிரும், இன்பமும், ராஜ்ஜியமும், உனக்கு நிலைப்பதரிது; நெடுங்காலம்வாழ்ந் தின்புறக்கோருவாயாகில், ஸ்ரீராமனுக்குத் தீங்கு செய்யற்க; ஸ்ரீவிபீஷணன் முதலிய தருமபுத்தியுள்ள மந்திரிகளனைவர்களுடனும் கூடி நன்காராய்ந்து, குணதோஷங்களையும்,

ஸ்ரீராமனை, நீ, உம்மிருவருடைய பலத்தினளவையும் நன்குணர்ந்து, இது இதம் இது இதமலாதெனத் தேர்ந்து, பின்பு தக்கவண்ணஞ் செய்க; நீ ஸ்ரீராமனுடன் போர்செய்வாயாகில், தோல்வியுற்றழிவாயென்று யான் நம்புகின்றேன்; இதமாயும், யுக்தமாயும், மீளவுமொரு வாக்கிய முரைப்பேன் கேளாயென்று மொழியலுற்றனன்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்.

*மாரீசன் விசுவாமித்திரயாகத்தில் தான் பட்ட பாட்டை யுரைத்துப் பெருமானுடன் நீ பகைகொள்வாயாகில் சித்தமாக அழிவாயென ராவணனுக்கு வுரைத்து மறுத்தது*

கேளாய் ராக்ஷஸ கோமானே! யான் முன்பொருகாலையில், ஆயிரம் யானைப்பலமுடையேனென்றும், மலைபோலப் பருத்து துயர்ந்தேனென்றும் மதங்கொண்டு, நீருண்ட கொண்டல் வண்ணனும், சிறந்த பொற்குழையினனும், உலகங்களை யச்சமுறுவிப்பவனும், கிரீட மணிந்தவனுமாகிப் பரிகாயுதத்தைக் கையிலேந்தி, ரிஷிகளைக் கொலைசெய்து, அவர்கள் மாமிசத்தைப் புஜித்துக்கொண்டு, தண்டகாவனத்திற் றிரிந்துகொண்டிருந்தேன்; அப்பொழுது தருமாத்துமாவான விசுவாமித்திர மஹாயோகி யென்னைக்கண்டச்சங் கொண்டு, தானே நேராகத் திருவயோத்திக் கெழுந்தருளித் தசரதசக்கரவர்த்தியைக் கண்டு, வேந்தர் கோமானே! யான் யாகஞ் செய்கையில், மாரீசன் வந்து தடைசெய்து பீடிக்கின்றனன்; ஆதலின், அச்சங்கொண்டோடி வந்தேன்; தேவரீர் திருக்குமாரனாகிய ஸ்ரீராமசந்திரன் என்னுடன் வந்து, யாகத்தை முடிப்பித்து, என்னைப் பாதுகாக்கக் கடவனென்றுரைத்து ஸ்ரீராமனை யாசனை செய்தனர். தசரத சக்கரவர்த்தி யதுகேட்டு அவரை நோக்கி, மாதவச் செல்வரே! என் திருமகன் பாலனும், ஆயுதப்பயிற்சி யற்றவனும், பன்னிரண்டு வயதுள்ளவனு மாகின்றனன்; ஆதலின், யானே மிகுந்துள்ள சதுரங்க சேனைகளுடன் வந்து, அரக்கர்களைக் கொலைசெய்து, தேவரீருடைய யாகத்தை நிறைவேற்றுவேன்; இவ்வண்ண மருள்செய்க; என வேண்டினர். விசுவாமித்திர மஹாமுனியும் அதுகேட்டு அவரைநோக்கிக் கேளீர் தசரத சக்கரவர்த்தி! நீர் தானவர்களுடன் போர்செய்து வெற்றி பெற்றுத் தேவர்களையும் பாதுகாத்தளிக்குந் திறமையுற்றவராயினும், அந்த அரக்கர்களைக் கொலை செய்யுந் திறமை ஸ்ரீராமபத்திரனை விட்டு மற்றொருவரிடத்திலு மிலது; நீரிது வரையிலும் பிறர் செயற்கரிய செய்கைகளைச் செய்து மூவுலகிலும் நிலைத்த புகழ் பெற்றே யிருக்கின்றீர்; ஆதலின், நீர் சேனைகளுடன் இவ்விடத்திலே தானே சுகமாக வாழ்க; இந்த ஸ்ரீராமன் பாலனாயினும், அளவற்ற பராக்கிரம

முடையவ னாதலின், அவ்வரக்கர்களைக் கொல்ல வல்லவனே யாகின்றனன்; யான் ஸ்ரீராமனையே யழைத்துக்கொண்டு செல்வேன்; உமக்கு மங்கல முண்டாகுக; என்றிவ்வண்ண முரைசெய்து ஸ்ரீராமனை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு தனதாசிரமத்தைச் சேர்ந்து யாகதீக்ஷை பூண்டு யாகஞ் செய்யத் தொடங்கினார்.

ஸ்ரீராமனும் ஸ்ரீகோதண்டத்தில் நாணகட்டி டங்காரஞ் செய்பவனும், தோன்றாத யௌவன லக்ஷணங்களுடையவனும், மிக வழகுற்றவனும், செந்தாமரை இதழ்போன்ற திருக்கண்களை யுடையவனும், ஒரே வஸ்திரத்தை யுடுத்தவனும், சிகை யுடையவனும், பொன்னூலணிந்தவனும், தன் காந்தியினாலே தானே அந்தத் தண்டகாவனமெங்கும் திகழச்செய்பவனும், அப்பொழுதே உதயமான பூர்ணசந்திரன் போன்றவனுமாக விளங்கினன். யானும் அப்பொழுது வரத்தினால் ஆயிரம் யானை பலமுற்றிருக்கின்றேனென்னச் செருக்குற்றங்கெய்தினேன்; அவனும் என்னைக் கண்டு கணையை வில்லில் தொடுத்தெதிர்த்தனன். யானவனை இளமையுற்றவனென்ன உபேக்ஷைசெய்து, விசுவாமித்திரனுடைய யாகவேதியை பழிக்குமாறு சென்றேன்; ஸ்ரீராமன் உடனே ஒரு பாணத்தை எய்து, என்னைக் கொலை செய்ய எண்ணங் கொண்டிலனாதலின், அந்தப் பாணத்தினாலே என்னைத் தள்ளிக்கொண்டுபோய் நூறு யோசனை தூரந் தாண்டுவித்து, நடுக்கடலில் விழுத்திவிட்டனன். யானுமப்பொழுது நெடு நேரம் மூர்ச்சையடைந்திருந்து, பின்பு தெளிந்தெழுந்து வருந்தி லங்காபுரியிற் சேர்ந்தேன்; யானிவ்வண்ண மப்பொழுது விட்டுவிடப் பட்டுய்ந்தேன்; எனக்குச் சஹாயமாயிருந்த ஸுபாகு முதலிய அரக்கர்களெல்லோரும் அவ்விடத்திலேதானே கொலைசெய்யப்பட்டனர்கள்; ஸ்ரீராமன் பாலனாகவும், ஆயுதப்பயிற்சி யில்லாமலும், இருக்கும் காலத்திலேயே இவ்வண்ணஞ்செய்திருக்கையில், இப்பொழுது அவன் திறமை எத்தன்மையதாகவேண்டும்; ஆதலின், நீ இப்பொழுது பகை யுறற்க; என் சொற்கேளாமல் பகை கொள்வாயாகில், விரைவில் நாசமுற்றழிவாயென்பதில் சிறிதேனு மையமில்லது, எப்பொழுதுந் துயரமற்று இன்புற்றிருக்கின்ற ராக்ஷஸர்களெல்லோர்க்கும் தீங்கு விளையும்; மணிமாடங்கள் நெருங்கியும், பற்பல மணிகள் திகழ்ந்தும் மிக வழகிய இலங்கையும் அழியக் காண்பாய், நீ யொருவன் தீச்செயல் புரியினும், உன்னைச் சேர்ந்த பற்பல ரெல்லோரும் நச்சரவமுடைய மடுவிலுற்ற மீன்கள்போல அழிவார்கள், (ஏகঃபாபாநிகுருதே பலம்புங்க்தேமஹாஜனঃ) என்னும் பழமொழியை யுண்மையாகச் செய்யற்க; உன்னுடைய தோஷத்தினால் திவ்யகந்தம்பூசி நறுமலர்மாலையணிந்தின்புற்றவரெல்லோரும் அழியக் காண்பாய்; இறந்தவர்போக மிகுந்தவர்கள் மனைவியற்றவர்களும், மனையாளுடன் கூடியவர்களுமாகிப் பத்துத் திசைகளிலும் அச்சமுற்றோடக் காணுவாய்; இலங்காபுரியை ஸ்ரீராமனுடைய பாணங்கள் நிறைந்து, தீப்பற்றி யெரிந்தழியவுங் காண்பாய்; இதற்கையமில்லது;—

పరదారాభిమర్శాత్తు నాన్యత్పాపతరం మహత్

பரதாராபிமர்சாத்து நாந்யத்பாபதரம்மஹத்

உலகினில் பரதாரைகளைச் சேர்வதைவிடச் சிறந்த பாவமொன்றுமிலது; உனக்கு அளவற்ற சிறந்த பெண்கள் காமித்திருக்கின்றனர்கள்; ஆதலின், தீச்செயலைத் துறந்து உன் மனைவிகளிடத்திலேதானே இன்புற்று நீயும் வாழ்ந்து குலத்தையும் பாதுகாக்கக் கடவை. இவ்வண்ணஞ் செய்வாயாகில் மானம், செல்வம், ராஜ்ஜியம், உயிர் இவை நிலையுறும்; இல்லாவிடின் இவை யழியும்; மனைவியர்களுடனும், நட்பினர்களுடனு மின்புற்று நெடுங்காலம் வாழ விரும்புவாயாகில், ஸ்ரீராமனுக்குத் தீங்குசெய்யற்க, இவ்வண்ணம் யான் தடுத்து இதமுரைசெயினும், என்மொழியைக் கேளாமல் சீதாபிராட்டியை யபஹரிப்பாயாகில், உடனே சேனைகளழிந்து, இனத்தார் சுற்றத்தார்களிறந்தும், ஆயுள்மாண்டு யமலோகம் போய்ச் சேர்வாய்; இதில் சிறிதும் சந்தேஹ முறற்க; என்று மாரீசன் ராவணனுக்கிதமுரைத்தனன்.

ஆரண்யகாண்டத்தில் முப்பத்தெட்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

மாரீசன் ஸ்ரீராமபிரான் பஞ்சவடியிலெழுந்தருளி யிருக்கையிலும், இரண்டு
ராக்ஷசர்களுடன் மானுருக்கொண்டு ஸ்ரீராமபிரானைக் கொலை
செய்யமுயன்று, ஸ்ரீராமபாணத்தால் மற்றிருவரிறக்கத்
தான் ஓடிவந்து விட்டேனென்ன ராவணனுக்
குரைத்து அவனை மறுத்தது.

மீளவும் மாரீசன் ராவணனை நோக்கிக் கேளாய் லங்காபுரீ நாயகா! இவ்வண்ணம் முன்பு ஸ்ரீராமனால் அடிபட்டிறவாமல் தப்பிப் பிழைத்தேன்; இப்போழ்தும் நிகழ்ந்த செய்தி யுரைப்பேன்; பதிலுரையாமல் கேட்க; ஸ்ரீராமன்மேல் பகைகொண்டு, யானிப்போழ்து இரண்டு ராக்ஷஸர்களுடன் மான் வேஷம் பூண்டு தண்டகாவனஞ்சேர்ந்து, எரிகின்ற நாவுடையவனும், பருத்தமேனியனும், கூரிய கோரப்பற்களை யுடையவனும், மாமஸத்தைப் புஜிப்பவனுமாகி மிருகவேஷம் பூண்டு ரிஷிகள் ஹோமஞ்செய்யு மிடங்களிலும், நீராடுமிடங்களிலும், நற்சந்திமரங்களிலும் சென்று, முனிவர்களைக் கொன்று தின்று கோரமாகத் திரிந்தேன்; இவ்வண்ணம் முனிகளைக் கொலைசெய்து மாம்ஸங்களைப் புசித்து, உதிரத்தைப் பானஞ்செய்து, யாவரையு மச்சமுறச் செய்து, மதமேறித் தருமங்களை யழித்துக்கொண்டு, இளையானுடனும், ஜானகியுடனுங் கூடித்தவசியாகி எழுந்தருளி யிருந்த ஸ்ரீராமனைக்கண்டு, முன் பகையை நினைந்து, இவன் இப்போழ்து தவம் பூண்டிருக்கின்றமையின்,

கொலைத்தொழில் புரியாமென்ன வெண்ணிச் சினமுற்றுக கிட்டியோடிக் கூரிய கொம்புகளினால் முட்டிக் கொந்திக் கொலைசெய்ய முயன்றேன்; ஸ்ரீராமனும் எங்களைக் கண்டு, சினமூண்டு மூன்று சரங்களைத் தொடுத்து விடுத்தனன். யானந்தப்பாணங்களைக் கண்டு அவனுடைய பாணங்களின் பிரபாவத்தை யான்முன்னே யனுபவித்தவனாதலின், உடனே யச்சங்கொண்டு நெடுந்தூர மோடியொளித்துக்கொண்டு தப்பிப் பிழைத்தேன்; மற்றிருவரும் அவ்விரண்டுபாணங்களினாலடிபட்டிறந்துவிட்டனர்கள். யான் மாத்திரம் அதிகப் பிரயாஸத்தால், அந்தப் பாணத்துக்குத் தப்பிப் பிழைத்து, இனித் தீச்செயல் புரியேனென உறுதிகொண்டு பற்றற்றுத் தவசியாகித் துறவறம் பூண்டு நியமங்கொண்டிருக்கின்றேன்; யான் அச்சத்தினால் மரஞ் செடிமலை முதலிய தாணு விடங்களதோறும் ஸ்ரீராமன் சீரகிருஷ்ணாஜின தாரியாகிக் கோதண்டத்தைத் திருக்கரத்திலேந்திப் பாசத்தைக் கையிற்கொண்ட யமனைப்போல எதிரில் நிற்பதாகக் காண்கின்றேன்; எங்கும் ஆயிரமாயிரவராக ஸ்ரீராமனைக் கண்ணுறுகின்றேன்; இக்கானகமெல்லாம் ராமமயமாகவே காணப்படுகின்றது; துயிலுங்காலையிலும் கனவில் ஸ்ரீராமனையே கண்டச்சங்கொண்டு திடுக்கிட்டு விழித்தெழுகின்றேன்;—

రకారాదీని నామాని రామత్రస్తస్య రావణ।
రత్నాని చ రథాశ్చైవ త్రాసం సంజనయన్తి మే॥

ரகாராதீநிநாமாநி ராமத்ரஸ்தஸ்யராவண|
ரத்நாநிசரதாச்சைவ த்ராஸம்ஸஞ்ஜநயந்திமே||

கேளாய் ராவணா! ஸ்ரீராமனால் அஞ்சுகின்ற எனக்கு ரத்நம், ரதம், ராவணன் என்பவை முதலிய ரகரத்தை முதலிலுள்ள பதங்களில் முதலெழுத்தைச் செவியுறும் காலையிலே, ராமனென்னும் பெயர் நினைவில் தோன்றச் செய்கின்றமையின், அப்பதங்கள் அச்சத்தைப் பெருகச் செய்கின்றன; யான் அவனுடைய பிரபாவத்தை நன்கறிவேன், ஆதலின், நீ யவனுடன் போர்செய்வது மிகவும் தகுதியற்றது, ஸ்ரீரகுநந்தனன் பலிச்சக்கரவர்த்தியை யாயினும், நமுசியையாயினும், போரில் கொலைசெய்வான்; இனி நீ யவனுடன் போர் செய்யினுஞ்செய்க, சராதிவதத்தைப் பொறுக்கினும் பொறுக்க; என்னை நீ காண விரும்புவாயாகில், என்னுடன் மாத்திரம் ஸ்ரீராமன் கதையை யுரையற்க; உலகினில் ஒருவனுடைய தீச்செயலினால் பற்பல நல்லோர்களும், இனத்தாருடன் அழிந்தனர்கள்; அவவண்ணம் யானும் உன்னுடைய தீச்செயலினால் அழிவேன்; ஆதலின், யான் உன் மதப்படி இசைந்து பினனெய்தேன்; நீ யுன்மனத்துக்கிசைந்தவண்ணஞ் செய்க; ஸ்ரீராமன் அளவற்ற தேஜஸும், தோள்வலியும், மனோபல காயபலமுமுடையவன்; அவன் அரக்கர்களெல்லோர்க்கும் மிருத்தியுவாகாதவாறு செய்வாய்; மேலும் ஒன்று கேட்கின்றேன், பதிலுரையாய்; சூர்ப்பணகை முதன் முதல் ஸ்ரீராமனிடஞ்சென்று

பண்ணத்தமையின், அவன் அவளுடைய செவி நாசிகளை யறிந்தனன்; கரன வளுக்காகப் பரிந்து படையெடுத்து வந்தமையின், அவன் அவர்களையும் கொலைசெய்தனன். இவ்விஷயத்தில் ஸ்ரீராமன்மீதென்ன பிழையுளது? அதனை யுரையாய்; உனக்கு இத சிந்தையினு லிவ்வண்ண முரைக்கின்றேன்; இதனை நீ கேட்டு நலமெனவுணரா துன்மனப்படியே செய்வாயாகில், விரைவி லினத்தார் சுற்றத்தார்களுடன் கூரிய ராமபாணங்களினு லடிபட்டு, ஆயுள் மாண் டுயிரைவிடடழிவாயென்று பலவாறாக உரைத்தனன்.

ஆரணியகாண்டத்தில் முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பதாவது ஸர்க்கம்.

ராவணன் மாரீசனை இகழ்ந்து வெருட்டித் தன் மதப்படி துணையாகும்படி யுடன்படுத்தியது

அநந்தரம் ராவணன் இவ்வண்ணம் மாரீசனுரைத்த வாக்கியத்தை யாயுள் மாண்டவன் மருந்தைப்போல மனத்துட் கொள்ளாமல், இதமுரைத்த அம்மாரீசனை நோக்கி, ஆயுள் மாளுங்காலங் கிட்டினமையின், வன்மொழி மொழியலுற்றனன்; கேளாய் மாரீசா! நீ என்னிடத்தி லெனக்குப் பிரியமல்லாச் சொற்களை இப்போது மொழிவது ஊஷரபூமியில் விதை விதைப்பது போலப் பயனற்றதாகும்; உன்னுடைய வாக்கியங்களினால், யான் ராமனுக் கஞ்சி மீளுவேனே? அவன் பாப சீலனும், மூர்க்கனும், மானிடனும், சஹாய மற்றவனு மாதலின், அவன் போரிலெனக்கு நிகராகுவானே? அவன் ஒரு பெண்வார்த்தை கேட்டு ஆராயாமல், தாய் தந்தை ராஜ்ஜியம் நட்பினர் முத லிய வெல்லாரையுந் துறந்து, விரைவாகக் காடு வந்து சேர்ந்தனனே அவன் மூர்க்கனே யல்லனோ? அன்றியும், அவன் கரனையுங் கொலை செய்தமையின், அவனுக் குயிரினு மினியளான சீதையை யான் உன்னெதிரில் அவசியமாய் எடுத்தோடிவருவேன்; இவ்வண்ணம் யான் மனத்தி லுறுதிகொண்டிருக்கின் றேன்; அவ்வுறுதியை இந்திரன் முதலிய தேவாஸுரர்களாலும் விடுவிக்க முடியாது; யான் இவ்வண்ணஞ் செய்வது நலமா? தீதா என்று வினவி இருப்பேனாகில், நீ இவ்வண்ண மெனக் கபாயத்தையோ உபாயத்தையோ, உரை செய்யவேண்டும்; யான் வினவாதிருக்க நீ இவ்வண்ணம் மொழிந்தது மதியற்றது, யாவனொருவன் செல்வமுற்று வாழ்வுற விருப்பங் கொள்வானோ, அவன் வேந் தன் கேட்டதற்குக் கைகுவித்து அடங்கி, பதிலுரைக்கவேண்டுமேயல்லது, இவ்வகையாக மொழியத்தக்கவனல்லன்; உரைசெய்யுமிடத்திலும் வேந்தனுக் கனுகூலமாகவும், இதமாகவும், இனிதாகவும், மெதுவாகவும், உபசாரத்து டன் மரியாதையாக உரைக்கவேண்டும்; பூஜைக்குரிய ராஜன் தன்னை எதிர்த் துரைத்த மொழியைச் செவிகொடுத்துக் கேட்டு, மகிழ்ந்தாதரஞ்செய்யான்;

அடோ மாரீசா! ராஜாக்கள் அக்கினியின் வெம்மையினையும், இந்திரனுடைய விக்கிரமத்தையும், சந்திரனுடைய தண்மையையும், வருணனுடைய தண்டத்தையும், தருமனுடைய அருளையு முடைந்து சிறப்புற் றிருக்கின்றனர்கள்; ஆதலின், அரசர்கள் எல்லாத் தருணங்களிலும் ஆதரஞ்செய்து பூஜிக்கத்தக்கவர்கள், நீயோவெனில் தருமத்தைத் துறந்து, மோஹமடைந்து, அதிதியாக வந்த என்னைத் தூரமாக்கத்தகாத வன்மொழிமொழிந்திகழ முயன்றனை; யானுன்னை இவ்விஷயத்தில் குணதோஷங்களையாயினும், யாதுசெய்யின் தகுமென்றாயினும், வினவுகின்றிலேன்; யான் உரைத்தது என்னுடைய சிறந்த இக்காரியத்தில் துணையாயிருந் துதவிசெய்யவேண்டு மென்றேயன்றோ? அந்த உதவியாவது எத்தன்மைத்தோ, அதனை மொழிகின்றேன் கேளாய்; நீ ரஜதமயமான புள்ளிகளையுடைய பொன்மானுருவாகி அந்த ஆசிரமத்தில் சீதையின்னெதிரி லுலாவுக; அங்குச் சீதையை யாசையுறும்படி செய்து, ராமலக்ஷ்மணர்களைப் புறப்படுத்திப் பின்புணமனப்படி செல்லுக; பொன்மானுருவமடைந்த தழகிய உன்னைச் சீதை கண்ணுற்று, இதனைப் பிடித்தளிக்கவென்று ராமனை யேவுவாள்; அவ்வண்ணமே ராமன் உன்னைத் தொடர்ந்து வருகையில், நெடுந்தூரஞ் சென்றபின்னர், அந்தோ ஸீதா! அந்தோ லக்ஷ்மணா! என்று ராமனுரைத்தாற்போ லுரைசெய், அம்மொழியைச் சீதைகேட்டு ராமனுக்கேதோ தீங்கு நேர்ந்ததென்றெண்ணி, லக்ஷ்மணனைப் போய்ப் பார்த்து வரும்படி யேவுவள்; லக்ஷ்மணனும் அவ்வண்ணமே அண்ணன்மீதுள்ள நேசத்தினால் செல்வான், இவ்வண்ணம் இருவருமின்றிச் சீதை தனித்திருக்கையில், இந்திரன் சசியைப்போல யானவளைக் கொணர்ந்து விடுவேன், இவ்வண்ணம் நீ யுதவிசெய்தபின்பெங்கேயாகிலும் செல்லுக, என்னுடைய ராஜ்ஜியத்தில் பாதிராஜ்ஜிய முனக்களிப்பேன்; ஆதலின், இக்காரியம் நிறைவேறும்படி நலவழிபற்றிச் செல்லுக, யானும் உன்னைப் பின்தொடர்ந்தே தேருர்ந்து தண்டகாவனம் வந்து சேர்வேன், யானிவ்வண்ணம் போரின்றி, ராமனை வஞ்சனைசெய்து சீதையைப் பறித்துக்கொண்டு உன்னுடன் கூடி லங்காபுரி சேர்வேன்; நீ இதற் குடன்படாயாகில், யானிப்பொழுதே யுன்னைக் கொலை செய்வேன், ஆதலின், இக்காரியத்தை நீ பலாத்காரத்தினாலாவது செய்யப்போகின்றனை, ராஜனை எதிர்த்து நடப்பவன் ஒருக்காலும் இன்புறான்; நீ மானுருக்கொண்டு ராமனுக் கெதிரில் செல்வாயாகில், நீ இறக்கினும் இறப்பாய்; உய்யினும் உய்வாய், நீ இப்பொழுதெதிர்த்துரைப்பாயாகில், யானுன்னை யுடனே கொல்வ துண்மை, நீ என் சொற்படி கேட்கி னிறப்பதோ சந்தேஹம்; என் சொல்லை மறுக்கின் இறப்பதோ நிச்சயம், இவ்விரண்டில் எது நலமோ நீயே மதியினால் நன்காராய்ந்து, எது நலமாகுமோ, அதனையே நீ செய்க; என்றிவ்வகையாக ராவணனால் மாரீசன் உரைத்துப் பயமுறுத்தப்பட்டனன்.

ஆரண்யகாண்டத்தில் நாற்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

### மாரீசன் மீளவும் ராவணனை நோக்கித் துயாந்துரைத்தது

ராவண னிவ்வண்ணம் வேந்தன்போலப் பிரதிகூலமாக மொழிகையில், மீளவும் மாரீசன் ராவணனை நோக்கிக்கேளாய் ராக்ஷஸர் கோமானே! எந்தப் பாவி யுனக் கிவ்வண்ணம தீச்செயல் புரிந்தழியும்படி யுபதேசம் செய்தனன்? இதனால் புத்திர மித்திர களத்திராதிகளுடன் நீ யழிவாய், எந்தப் பாவி நீ இன்புற்று வாழ்ந்திருப்பதைப்பொறுக்கின்றிலன்? எவன் உபாயமாக யமலோகத்தின் வழியைநல்வழியென மொழிந்தவன்? உன்மீது பொறாமையும், பகையும், கொண்டவர்கள் தாம் நேராக வெதிர்த்துன்னை வெல்ல வொண்ணாமல், இதஞ் செய்பவர்போலப் பலவானுடன் உனக்குப் பகை மூட்டி, உன்னைக் கொல்விக்க நினைக்கின்றனர்கள்; நீ யுன்னுடைய தீச்செயலினாலேதானே யழியும்படி எந்தப் பகையாளி யுனக் கிதமபோ லுரைசெய்தான்? நீ இவ்வண்ணம் நல்வழி கடந்து செல்லுகையிலும், இதமுரைத் துன்னைத் திருப்பாமல் அழிந்திறக்கினு மிறக்கவென றுன்னை யாவர் உபேக்ஷை செய்கின்றனர்களோ, அந்த மந்திரிகள் கொலைக் குரியர்களாயினும், கொல்லப்படுகின்றிலர்கள், அமைச்சர்கள் நல்லோர்களாயின், தனனிச்சை யாய்த் தீச்செயல் புரிய முயன்ற உன்னைத் தடுக்கா மிராக்களந்தோ? ஸசிவர்கள் அறம்பொருளின்பம் புகழ்களையும், ராஜனருளினாலேதானே யடைகின்றனர்களல்லரோ? ராஜனருளிலானாயினும், தனனிச்சையாய்த் தீச்செயல் புரிவானாயினும், அவர்களுக் கவையெல்லாம் பயனற்றன வாகின்றன வல்லவோ? அரசனுடைய தீச்செயலினால் மற்றுள்ள ஜனங்களும் துன்புறுகின்றனர்கள்; தருமம் புகழ் முதலிய யாவும் அரசனடியாக வருவன வாதலின், ராஜர்கள் தீச்செயல் புரியாதிருக்கும்படி யாவரும் செய்யக்கடவர்கள். ராஜன் கொடியனாயினும், பிரதிகூலனாயினும், விநயமற்றவனாயினும், அரசுசெய்ய வல்லவனாகான்; எந்த மந்திரிகள் கெட்ட ஆலோசனை யுற்றவர்களோ, அவர்கள் துன்பம் நேருங்காலையில், வேந்தனுடன் கூடிக் கடுவேகமுள்ள குதிரைகள் திறமையற்ற பாகர்களுடன் கூடி மேடு பள்ளமுள்ள விடங்களிற்போல வீழ்ந்தழிவார்கள்; உலகினில் பற்பல நல்லோர்களும் பிறர் செய்த பிழையினா லழிந்திருக்கின்றனர்கள்; பிரஜைகள் கொடிய ராஜனால் பாதுகாக்கப் படுகின்றவர்களாயினும், நரியினால் பாதுகாக்கப்பட்ட ஆடுகள் போல அழிவார்கள்; ராக்ஷஸர்கள் யாவரும் விரைவிலழிவார்களென்பதில் சிறிதேனும் ஐயமில்லது; அவர்களுக் கிறையாகிய நீ கொடியனும், கெடுமதியினனும், காமுகனு மாயினை யல்லையோ? யானுமிங்குன்னால் மரணமுறுகின்றேன்; காகதாளீயமாக (காகமவரவும் பனம்பழம் விழவும் காகம் தற்செயலாய் வீழ்ந்துடைந்த அப்பழத்தை யுண்டதுபோல) யானிங்கிருக்கத் தற்செயலாய் [illegible] ஆபத்து நேர்ந்தது யானிறக்கின்றேனென்று

யானே சிறிதுந் துன்புறுகின்றிலேன், நீ சேனைகளுடன் விரைவி லழிவாயே யென்றே மிகவுந் துன்புறுகின்றேன்; ஸ்ரீராமன் என்னைக் கொலை செய்துவிட்டவுடனே யுன்னையுங் கொல்வான்; யான் ஸ்ரீராமனு லடிபட்டு இறக்கின்றமையினை, தீவினை யழிந்து நல்வினையனுகிய பொன்னுலகமடைவேன்; யான் ஸ்ரீராமனுக்குக் கட்புலனாகுமளவே என்னைக் காப்புள்ளவனாக, அவனைக் கண்டவுடனே யானழிந்தேனென்று நம்புக, சீதையைப் பறித்து வந்த பின்பு, நீ யுன்னையும், இனத்தார் சுற்றத்தார்களுடன் அழிந்தவனாகவே எண்ணுக; நீ என்னுடன் சீதையைக் கொணர்வாயேயாகில், நீயு முய்யாய், யானுமுய்யேன், இனத்தார் சுற்றத்தார்களு முய்யார்கள், இலங்கையு மழியும்; யானிவ்வண்ண முனக்கிதங்கருதி யுரைத்த இந்த என் வாக்கியத்தை நலமெனக் கேட்டு மகிழ்கின்றிலை, சுளிக்கின்றனை, ஆயுளமாண்டவர்கள், நட்பினர்களுரைக்கு மிதத்தைக் கேட்கின்றிலர்களன்றோ? என்று பலவகையாகப் பயமுறுத்தியும், இதங்காட்டியும், கூறி முடித்தனன்.

ஆரணியகாண்டத்தில் நாற்பத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்.

மாரீசன் மானுருக்கொண்டு ஸ்ரீராமபிரானிடமேகியது.

இவ்வண்ண முரைக்க மாரீசன் மீளவும் ராவணனை நோக்கி, அவன் வாக்கியத்திற் கிசையாவிடின், இப்பொழுதே கொலை செய்வானென்றும், செல்லின், அங்கு ராமன் கொல்வானென்றும் நினைந்துகொண்டும், வேறு கதியின்மையால், செல்வோம் வாராயென்றுரைத்து, மேலுங் கேளாய் ராவணா! யான் மீளவும் ராமன் கண்ணிற் றென்படுவேனாகில், உடனே என்னுயிர் மாய்ந்ததே! ஸ்ரீராமனைச் சினமுறுத்தி எதிர்த்தபின் ஒருவனும் பிழைத்து மீளான், ஆயுளமாண்ட உனக்கு யானும் நிகராயினேன்; நீ இவ்வண்ணந் தீயோனாகுகையில், யான் என்செய்யத் தக்கது, யானிப்படியே செல்வேன்; உனக்கு நலமுண்டாகுக, என்று கடையில் உடன்பட்டுரைத்தனன். ராவணனு மதுகேட்டு மகிழ்ந்தவனைத் தழுவி, அடா மாரீசா! இப்பொழுதென் மனப்படி வீரத்தன்மையுற்று மொழிகின்றமையின், இப்பொழுதே மாரீசனாகின்றனை, இதற்கு முன் வேறோரரக்கனாயினை, மணிகளிழைத்தும், பிசாசங்கள் போன்ற முகங்களையுடைய கோவேறு கழுதைகள் கட்டியும், அழகிய என்னுடைய இத்தேரிமீ தேறுக, என்னுடன் அங்குச் சென்று, சீதையை யாசையுறுத்தி, வஞ்சனை செய்தபின்பு, உன்னிச்சையின்படி செல்லுக; ராம லக்ஷ்மணர்களின்றிச் சீதைதனியே யிருக்கையில், யானும் அவளை எடுத்தோடி இலங்கை சேர்வேனென்றனன். அநந்தரம் ராவணன் மாரீசனோடு விரைந்து வரும் தேவவிமானம்போல விண்ணிடையிற் செல்லவல்ல அத்தேர்மீதேறி

அங்கிருந்து புறப்பட்டு விரைவாகச் சென்று, பற்பல நாடுகளையும், நகரங்களையும், வனங்களையும், நதிகளையும், மலைகளையும், பட்டணங்களையும், கிராமங்களையும், அக்கிரஹாரங்களையும் கண்ணுற்றுக்கொண்டே தண்டகாரண்யஞ் சேர்ந்து, ஸ்ரீராமாச்சிரமத்தைக் கண்டு தேரினின்று மிறங்கினார்கள்; அப்பொழுது ராவணன் மாரீசன் கையைப் பிடித்துக்கொண்டு அவனை நோக்கி, அடா மாரீசா! இதோ பார் வாழைகளடர்ந்த ராமாச்சிரமங் காணப்படுகின்றது; யாமிங் கெதன்பொருட்டு வந்தோமோ, அக்காரியத்தை நிறைவேற்றக்கடவை; என்று மீளவும் வேண்டியுரைத்தனன்.

உடனே மாரீசனும் இந்திரநீலமயமான கொம்புநுனியுடையதும், வெண்மையுங் கருமையுஞ் சேர்ந்த முகவொளியுற்றதும், செந்தாமரைபோலவும், உற்பலம்போலவும் விளங்கும் முகமுடையதும், இந்திரநீலம்போன்ற வண்ணமும், உற்பலம்போன்ற உருவமுமமைந்த செவியுற்றதும், கொஞ்சமுயர்ந்த கந்தரமுடையதும், இந்திரநீலம்போன்ற கீழுதடு பொருந்தியதும், குந்தம் சந்திரன் வச்சிரம் இவைகள்போன்ற வயிற்றையுடையதும், இலுப்பைப் பூவினுக்கு நிகரான பார்சுவங்களையுடையதும், தாமரைமலர்த்தாதுகளுக்கு நிகரானதும், வைடூரிய ரத்தினத்தை நிகர்த்த குரங்களையுடையதும், நுண்ணிய முழங்கால்களையுடையதும், மிகவுமிசைந்த அவயவங்களையுடையதும், இந்திராயுதத்தை நிகர்த்த புச்சத்தைமேலசைப்பதும், மனத்துக்கினிய வண்ணமுடையதும், பற்பல மணிகள் பொருந்தியதுமாகிய மானுருவங்கொண்டு, தன்னொளியினாலந்த ஸ்ரீராமாச்சிரமமெங்கும் விளங்கச் செய்பவனாகிப் பிராட்டியை யாசைப்படுத்தி வஞ்சிப்பதன் பொருட்டுப் புற்களை மேய்ந்துகொண்டும், மரங்களின் தளிர்களை முறித்துத் துண்டித்துத் திரிந்து, வாழைத்தோட்டத்திலும், கோங்குமரங்களிலும், அங்கு மிங்குமாகச் சஞ்சரித்து, மெதுவாக நடந்து ஸ்ரீராமாச்சிரமத்தினருகில் முன்சென்றும், மீண்டும் விரைவாக வோடியும், மீண்டெழும்பியும், சிலவிடத்தில் குதித்தும், சிலவிடத்தில் துள்ளியும், சிலவிடத்திலுட்கார்ந்தும், சுற்றுமோடியும், ஸ்ரீசீதாபிராட்டி தன்னைக் காணும்பொருட்டுப் பலவிதமாக விளையாடினன்; இம்மானுருவை யங்குள்ள மான்களெல்லாங் கண்டு, அருகிலோடி வந்து மோந்துபார்த்து உடனே யச்சங்கொண்டு, பத்துத் திசைகளிலு மோடின; இம்மானுருவமைந்த மாரீசனும் அவைகளைக் கொன்று தின்பவனாயினும், தன் தன்மையை மறைப்பதன்பொருட்டு, அவைகளைத் தின்னாமல் பார்த்திருந்தனன். அந்தத் தருணத்திலேதானே சீதாபிராட்டியார் நறுமலர்களைக் கொய்வதன் பொருட்டுப் பூந்தோட்டத்தில் வந்து, மலர்களைக் கொய்து, கொண்டு வருகையில், மிகவும் அழகுற்ற அம்மாயா மிருகத்தைக் கண்டு, வியப்படைந்து, பெருமையாலும் பார்த்து நின்றனர்; அம்மாயா மிருகமும் அவரைக் கண்டு மிக விநோதமாக விளையாடி யவ்விடத்தை யிகழ்வித்துப் பிராட்டியையும் மகிழ்வித்துத் தன்மீது விருப்பமுறச் செய்தது; பிராட்டியாரும் அதைக்கண்ட

அம்மானை நோக்கி, மிக வியப்பும், மகிழ்ச்சியுங்கொண்டு அதனைப் பிடிப்பித்துத் தம்மாசிரமத்திலே தாமே வைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினர்.

ஆரணியகாண்டத்தில் நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

இளையபெருமாள் அம்மானை மாரீசனேயாக வேண்டுமென்றுரைசெய்ததும், பெருமாள் பிராட்டியாருடைய சொற்படி யதைப் பிடிக்கத் திருவுள்ளங் கொண்டு, பிராட்டியாரைப் பாதுகாத்திருக்கும்படி திருத்தம்பிக்குக் கட்டளையிட்டருளியதும்.

அனந்தரம் நறுமலர் கொய்துகொண்டிருந்த பிராட்டியும் அந்த மானைக் கண்டு, ராமலக்ஷ்மணர்களைக் கூவி அழைத்துக் காட்ட விரும்பினர். ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் அங்கெய்தி அம்மானைக் கண்டனர். அப்பொழுது இளையபெருமாள் பெருமானை நோக்கி, எம்மையனே! முன்பு மானுருக்கொண்டு வந்து தபசிகளை வதைக்கத் தேடின மாரீசனே இப்போதும் இம்மானாக வந்திருக்கின்றானென்று யான் எண்ணுகிறேன்; பற்பல ராஜாக்கள் வேட்டையாடக் காடு சென்று மானுருக்கொண்ட இப்பாவியினால் கொலை செய்யப்பட்டிருக்கின்றனர்கள்; இம்மாரீசன் மிகவும் மாயை செய்பவன்; இம்மான் மாரீசனுடைய மாயையன்றி, வேறன்று; இது கந்தர்வபுரத்துக்கு (வானிடையில் பல உருவாகக் காணப்பட்டுக் கணத்தில் அழியும் மேகத்திரளுக்கு) நிகரானதேயன்றி, உண்மையன்று, இத்தன்மையதாகிய மான் இப்புவியிலேயேயில்லை, ஆதலின், இது மாயை யென்பதற்குச் சிறிதும் ஸந்தேஹமில்லையென்று உரைசெய்தனர். பிராட்டியார் அதுகேட்டு இளைய பெருமாளைத் தகைந்து மைத்துன! உன் சொல்லிங் கமையாதென்று மறுத்துப் பெருமானை நோக்கி, எம் பிராணநாதரே! இம்மான் மிக அழகியது, என் மனத்துக் கினியது, இதனைப் பிடித்துக்கொணர்ந்தருளுக; இது யாம் விளையாடுவதற்கு உபயோகமாகும்; இவ்வாசிரமத்தில் ம்ருகம், ஸ்ருமரம், சமரம், கரடி, புள்ளிமான், குரங்கு, கின்னரம் முதலிய விலங்குகள் மிகவழகுற்றனவாகத் திரிகின்றன; ஆயினும், இந்த மானுக்கு நிகரான மானை யான் முன் எங்கும் கண்டிலேன்; இஃது ஒளியினாலும், பொறுமையினாலும், தேஜஸ்ஸினாலும், மற்ற ம்ருகங்களினுஞ் சிறந்தது; இதனது ரூபமும், காந்தியும், ஒலியும் மிக வினியன, இது என் மனத்துக்கு மிகவு மினியதாகி, என் மனத்தைக் கவர்கின்றது; இதனைத் தேவரீர் உயிருடனே பிடித்தெழுந்தருள்வீராகில், மிகவும் ஆச்சரியமுறத்தக்கதாகும்; யாம் வனவாஸந் தீர்ந்து திருவயோத்திக்குச் செல்லுங்காலும், இதனையுடன் கொண்டுபோனால், அங்குள்ளோரெல்லோருங் கண்டு வியப்புறுவார்கள்; இதனை யுயிருடன் பிடிப்

பது அரிதாயினும், இதனைக் கொலைசெய்து இதன் தோலைக்கொணர்க; அருப்பாஸனத்தினமே இந்தத் தோலைப் பரப்பி வீற்றிருக்க விரும்புகின்றேன்; குலமகளிர்கள் கணவனுக்குக் கட்டளை செய்வது மிகத் தகாதசெயலாதலின், யான் தேவரீரை இவ்வண்ணம் ஏவுதல் மிகக் கொடியதும், தகாததுமாகின்றது; ஆயினும், இதன் அஜினத்தைக் கண்டு வியப்படைந்து இவ்வண்ணம் மொழிந்தேன்; இம்மான் பொன்னின் வண்ணம் பொருந்தியதும், இந்திரநீலம்போன்ற கொம்புகளையுடையதும், பாலசூரியன்போல் வொளிசெய்கின்றதும், விண்மீன்களைப்போன்ற புள்ளிகளுள்ளதுமாகி யிருக்கின்றதன்றோ என்று மொழிந்தனள்.

பெருமாளும் அம்மானைக் கண்டு வியப்படைந்து ஸ்ரீபிராட்டியாரது வாக்கியத்தைக்கேட்டு ஆராய்ந்து இளையபெருமாளை நோக்கிப்பாரட் லக்ஷ்மணா! சீதையோ இம்மானை விரும்புகின்றனள். இம்மானோ மிகச் சிறந்த உருவமமைந்திருக்கின்றமையின், மாயையேயன்றி, உண்மையெனத்தோற்றாது; இதற்கு நிகரானமான் நந்தவனத்திலுமிலது, சைத்திரரதத்திலுமிலது; ஆதலின், இப்புவியிலுளதாகுமோ? நேராகவும் எதிராகவுமுள்ள இதன் மயிர்கள் முழுதும் பொன் புள்ளிகளினாலும், வெள்ளிப்புள்ளிகளினாலும், சித்திரமாக விளங்குகின்றன; இது கொட்டாவி விடுகையில், வாயிலுள்ள எரிகின்ற நெச்சுடர்போலவும், நீருண்ட மேகத்திடையில மின்னுகின்ற மின்னற்கொடிபோலவும் நாவொளிவிடுகின்றது; முகம் இந்திரநீலக் கிண்ணிபோன்றது, சங்கு முத்துகளுக்கு நிகராகி வயிறு விளங்குகின்றது; இம்மானைக் கண்ணுற்ற எவர்தாம் வியப்புறார்கள்? இஃது எவரைத்தான் வியக்கச்செய்யாது? அரசர்கள் மாம்ஸத்தின் பொருட்டாயினும், விநோதத்திற்காயினும், வேட்டையில் மானை யடிக்கின்றனர்களன்றே? இவ்வண்ணம் நவமணிகளும், பொன்னுமமைந்த மிக வழகிய இம்மானைப் பிடிப்பதற்குக் கேட்கவேண்டுமோ? மணிகளையும், தங்கம் வெள்ளி முதலியவற்றையு மளிக்கத்தக்க பலவகை தாதுக்களும், காட்டில் மிகக் முயற்சியால் கிடைக்கப்படுகின்றன; நாட்டிலுள்ளவைகளைவிடக் காட்டிலுள்ளவை அரியனவாதலின், சிறந்த பொருளாகின்றன வல்லவோ? கோரப்பட்ட பொருள்களைச் சுக்கிரன்போலப் பெறுவதெனப்படுதும் சிறப்புற்றதன்றோ? ஒரு பொருளை யொருவன் எப்பொழுது கோருகின்றனனோ, அப்பொருளை யப்பொழுதே முயற்சிசெய்து பெறுவானாயின், அப்பொருளே சிறந்த தெனவும நீதியுணர்ந்தோர் மொழிகின்றனர்கள்; சிறந்த பொன்மயமாகிய இம்மானின் அஜினத்தில் சீதை என்னுடன் வீற்றிருந்து மகிழ்வாள்; மெதுவும், நுட்பமும், உயர்வும், பலவகை வண்ணமும், கரிய முனையுமுள்ள மயிருடைய கதளி யென்னும் மானின் தோலும், மெதுவும், உயர்வும், பருமனும் பொருந்திய மயிருள்ள பிரியகமென்னும் மானின் தோலும், பிரவேணியென்னும மான் தோலும், அவியென்னும் ஆட்டின் தோலும், மெதுவில் இம்மானின்

சீதைக்கு நகைக்காவென்று யான் நினைக்கின்றேன்; புவியில் சிறந்த இம்மானும், விண்ணில் விண்மீன்களுள் சேர்ந்த மிருகசீரிஷமென்னும் மானும், ஆகிய இவ்விரண்டுமே உலகங்களில் சிறந்தன; கேளாய் லக்ஷ்மணா! ஒருகால் நீ யுரைத்தவண்ணம் மாரீசனே மாயையினாலிவ்வுருக்கொண்டு வந்திருப்பவனாயினும், இதனைக் கொலைசெய்யவேண்டுவது அவசியமன்றோ? இந்தக் கொடிய மாரீசனாலேதானே முன்பு பலயோகிகள் மாயையால் கொலைசெய்யப்பட்டனர்கள்; மற்றும் பற்பல வேந்தர்களும் வேட்டையாடுகையில், இவனால் கொலைசெய்யப் பட்டனர்களன்றோ? ஆகலின், இவனைக்கொலைபுரியவேண்டுவதே முக்கியம்; இவ்விடத்திலேதானே முன்பு வாதாபியானவன் ஆட்டுக்கறியாகிப் பிறரால் புஜிக்கப்பட்டு, அவர்களுடைய குக்ஷியையடைந்து, தேளின் கருவு தான் பிறக்கும்போது தாயைக் கொல்வது போலப் பற்பல வேதியர்களைக் கொலைசெய்தனன். இவ்வண்ண மிருக்கையிலொருநாள் அந்த வாதாபி யகஸ்தியபகவானால் புஜிக்கப்பட்டு, அவரைப் பிளந்து வெளியில்வர முயலுகையில், அவர் இதனையறிந்து நகைத்து, அவனை நோக்கி, அடா வாதாபி! நீ சிறிதும் லக்ஷியஞ் செய்யாமல் பல வேதியர்களைக் கொன்றனையாதலின், நீ இப்பொழுதிறக்கின்றனை; என்றருளிச்செய்து, ஜரிக்கச்செய்தருளினர். இம்மாரீசனும் அவ்வண்ணம் என்னை வஞ்சனை செய்வானாகில், இவனும் அவன் போலவே பிழையாதிறப்பான்; ஆதலின், நீ இவ்விடத்திலேதானே மிகவும் ஊக்கத்துடன் சீதையைப் பாதுகாத்திருக்க; நாம் செய்வதற்குரிய செயல்கள் (ராவணாதிகளைக் கொலை செய்வது முதலியவைகள்) யாவும் இந்தச் சீதையின் அதீனங்களே யல்லவோ? இம்மான் மாரீசனாயின், கொலை செய்வேன்; மானேயாயின், பிடித்து வருவேன்; யானிதனைப் பிடிக்கச் செல்வதன் முன்னமே இந்தச் சீதை இம்மான் தோலின் மிக விருப்பங்கொண்டிருக்கின்றனள்; பாராய் இதனது தோல் மிகச் சிறந்திருக்கின்றமையின், இது மானன்று; ஆதலின், நீ சீதையுடனிங்கிருந்து மிகவும் ஊக்கங்கொண்டு வாழ்வாய்; யானுமொரு கணையினாலிதனைக்கொன்று தோலையுரித்தெடுத்துக்கொண்டு விரைவாக வருவேன்; நீ மிக்க திறமையுள்ளவரும், நட்பினரும், மதியுடையோருமாகிய ஜடாயுவுடன்கூடிக் கணப்பொழுதாயினும் ஊக்கமற்றிராமல், நாற்புறங்களையும் பார்த்துக்கொண்டு சீதையைப் பாதுகாத்துக்கொண்டிருக்கக் கடவையென்றருளிச்செய்தனர்.

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்தச் சருக்கத்தில் பெருமாளுடைய வாக்கியங்களாலும், இளையபெருமாளுடைய வாக்கியங்களாலும், மாரீசனே மாயாமிருகமாக வந்திருப்பதை யவர்கள் நன்குணர்ந்தார்களெனவும், ராவணாதிகளைக் கொலைசெய்வதன்பொருட்டே சீதையின் விருப்பத்திற் குடன்பட்டனர்களெனவும் நன்குவிளங்கும்; சீதாபிராட்டியாரு மிதனை

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்.

### பெருமான் மானுருக்கொண்ட மாரீசனை நெடுந்தூரம் தொடர்ந்து கொலைசெய்து மீண்டருளியது

பின்பு பெருமா னிளையபெருமாளுக்கு இவ்வண்ணம் கட்டளை யருளிச் செய்து, பொன் பிடியுள்ள வாளைக் கச்சையி லிறுக்கிக் கட்டி, மூன்று வளைவுள்ள கோதண்டத்தையுந் திருக்கரத்திலேந்தி, அம்பறுத் தூணீரங்களையு மிருபுறத்திலு மிறுக்கி, விரைவாக மானைத் தொடர்ந் தெழுந்தருளினார். மானுருக்கொண்ட அந்த மாரீசனும், பெருமானை வஞ்சனை செய்பவனாகியும், பெருமானைக்கண் டச்சங்கொண்டு மறைந்தும், மறுபடியும் கட்புலனாகியும், தன்னைக்கண் டோடிவரும் பெருமானைக் காணுந்தோறும் நெடுந்தூர மோடியும், பின்பு கிட்டியும், சிலவிடத்தில் பாணம் பாயுந்தூரங் கடந்தும், சிலவிடத்தி லகப்படுவான்போல வாசையுறுவித்தும், அச்சங்கொண்டு கடலோரம் வரையில் துள்ளிப் பாய்ந்தும், கண்டங்கண்டமாயுள்ள மேகங்களி னிடையில் வருஞ் சந்திரன்போல அடிக்கடி மறைந்தும், கட்புலனாகியும், இவ்வண்ணமே முகூர்த்தமாத்திரத்தில் பெருமானை நெடுந்தூர மிழுத்துக்கொண்டு போயினன், பெருமாளு மிவ்வண்ணம் மாரீசனால் நெடுந்தூர மிழுக்கப்பட்டுத்

யறிந்தே யதனைப் பிடித்துவரும்படி யவினனெனவும் நனகு தோன்றும், எங்ஙனே யென்னில், சீதை இளையபெருமாள் வாக்கியத்தைக்கேட்டுப் புன்னகையுடன் தகைந்து, பெருமானை நோக்கி, (ஆநயைநமமாஹாபாஹோ க்ரீடார்த்தம் நோபவிஷ்யதி) மிகநதோள்வலியுற்ற பெருமானே இதனை (இமமாரீசனை) கொணர்க, இது விளையாட்டின்பொருட்டு (நோபவிஷ்யதி) ஆகாது, நாம் விளையாடுவதற்கு இக்காட்டில் பற்பல மிருகங்களுள, ஆயினும், இதைப்போன்ற மிருகங்களைக் கண்டிலோம், இது உண்மையான மானன்றாதலின், இதனை யுயிருடன் பிடித்துவரின், மிக வியப்பாகும், நம்மிற் போலவே ஸ்ரீபரதாழ்வான் கோஸலையார் முதலானோர்களுக்கும், நாட்டார்களுக்கும் எதிரில் இவ்வண்ணம் மாயை செயினும் செய்யும், ஆதலின், துயிருடன் அகப்படாவிடினும், இதனைக் கொலை செய்து தோலைக் கொணர்க, அதன்மீதுட்காரவேன், (காமவ்ருத்த மிதம்ரௌத்ரம் ஸ்த்ரீணாமஸத்ருசம்மதம்) (இதம்) இம்மான (ரௌத்ரம்) கொடியது, (காமவ்ருத்தம்) நீதியற்றுப் பாவச்செயல் புரிவது, (ஸ்த்ரீணாம்) பெண்களுக்கு (அஸத்ருசம்) தகாதது, ஆயினும் இந்த ஸத்வத்தின் சரீரத்தினால் எனக்குக் குதூகல முண்டாயிற்று, இவனைத் தேவர்களு மாராயந்து செய்க, என்று மொழிந்தன ரல்லரோ? ஆதலின், இம்மூவாக்கும் இதனது உண்மை தெரியுமெனவும் —

கடையில் பெருமாளும் இளையபெருமாளை நோக்கி, (பச்யலக்ஷ்மணவைதேஹீம் ம்ருகத்வசிகதஸப்ருஹாம்) அடா தம்பி! சீதையை இம்மானதோலில் (கதஸ்ப்ருஹாம்) ஆசையுற்றவளாகவே (பச்ய) அறி, என்று சீதையின் பாவத்தையும் வெளிப்பட வருளிச்செய்தனனெனவும், முடிவில் (ப்ரதக்ஷிணேநாதிபலேநபக்ஷிணாஜடாயுஷாபுத்திமதாச) என்று ஜடாயுவின் பெயரை எடுத்தமையாலும், நாம் தூரத்திற் சென்றபின், ராவணன் சீதையை எடுத்தோடுகையில், ஜடாயு ராவணனுடன் போர் செய்வானென்பதும், பெருமான் முன்புணர்ந்தே அருளிச்செய்தனனெனவு முணர்க.

திருவுளஞ்சிறி, இலைதழைநிறைந்த புற்றரையில் நின்றருளினர்.* அம்மானும் காட்டிலுள்ள மிருகங்களினால் சூழப்பட்டுப் பெருமானருகில் மீளவும் வந்தது; பெருமாள் பிடிக்க வருகையில், விரைவாக வெழும்பித் தூரத்திற்சென்றும், பயங்கொண்டு மறைந்தும், மீளவும் மரங்களினிடையினின்றும் தோன்றிக் கட்புலனாகியும், பெருமானை யலைத்தது; பெருமாளும் இவ்வண்ணம் இது அலைப்பதைக்கண்டு முனிந்து அதனைக் கொலைசெய்ய நிச்சயித்து, இரவியின் கிரணம்போல வெளிவிடுகின்ற கூரிய கணையை வலிய வில்லில் தொடுத்து, பிரஹ்மாஸ்திர மந்திரத்தால் அபிமந்திரித்து வலுவாக இழுத்தெய்தனர். உடனே யந்த அஸ்திரமும் அந்தப் பொய்ம்மானினுடலைப் பிளந்துகொண்டு மாரீசனுடைய மார்பினிற் பாய்ந்து பிளந்து புதைந்தது; உடனே யவன் பனைமர வுயரமெழும்பித் தரையில் வீழ்ந்து கோரமாகக் கூவி யானிப்பொழுது யாதுபாயஞ்செயின், சீதை விரைவாக லக்ஷ்மணனை இங்கனுப்புவாள்; தடையின்றி, ராவணனும் சீதையை எடுத்துக்கொடுவானென்று ஆலோசனை செய்து தேர்ந்து அந்தோ சீதையே! அந்தோ லக்ஷ்மணா! என்று ஸ்ரீராமபிரானே ஆயுளமாண டழுதாற்போலக் கூச்சலிட்டு, ஆயுளமாணடு மானுருவைவிட்டு நவமணிகளிழைத்த புஜகீர்த்தி யுடையதும், பலகலனுமணிந்ததும், பொன்மாலை பூண்டதும், நீண்ட கோரப்பல்லுடையதும், மிகப் பயந்தருவதுமாகிய தன்னுடைய நிஜரூபத்தை யடைந்து, பாணவேதனையினால் துடித்து மரணமடைந்தனன். பெருமாளும் இவன் இவ்வண்ணமிறந்ததைக்கண்டு சீதையைச் சிந்தித்து, இம்மான் உண்மையன்று; மாரீசன் செய்த மாயையே; ஆதலால் இம்மானைப் பிடிக்க வேண்டுவதில்லை என்று முன்பு லக்ஷ்மணன் உரைத்த வாக்கியமே யதார்த்தமாயிற்றேயென்று எண்ணி, என்னைவ்வண்ணமே கொலைசெய்யப்பட்ட இந்த மாரீசனும் என்னுடைய கண்டவொலிபோலக் கூவி யழுதனனே! இதனைச் சீதையும் லக்ஷ்மணனுங்கேட்டு என் செய்வார்களோ! என்றெண்ணி, அச்சத்தினால் மயிர்க்கூச்செறிந்து கடுந்துயருற்று, மற்றொருமானையும் அடித்து அதன் மாமிஸத்தை எடுத்துக்கொண்டு மீண்டு ஜனஸ்தானத்தை நோக்கி, விரைவாகப் புறப்பட்டெழுந்தருளினர்.

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்துநான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

பிராட்டி இளையபெருமாளை முனிந்தவள்போல வன்மொழிமொழிந்தனுப்ப இளையபெருமாளும் பிராட்டியைத் தனியே விட்டுப் பெருமாளை நோக்கி, எதிராகச் செல்லுதல்

இங்கே பிராட்டியும் மாரீசனிட்ட கூக்குரலைக் கேட்டுப் பெருமான் தொனிக்கு நிகராக விருப்பதை யறிந்து, இளையபெருமாளை நோக்கி, மைத

* இந்தச் சருக்கத்திலும் சீதை லக்ஷ்மணனை யனுப்பாளோ வெனவும், லக்ஷ்மணன் அவள் சொற்படி வாரானோ வெனவும், பெருமாள் சிந்தித்துத் துயருற்றன ரென்றே யுணர்க.

ஜனரே! நீர் விரைவாகச் சென்று உம்மையரைக் காண்க; மிகத் துயருற்றுக் கூவுகின்ற உம்மையரின் தொனியைக் கேட்டபின்னர், என்னுயிர் என்னி தயத்தில் நிலைக்கின்றிலது; நீர் சென்று உம்மையரைப் பாதுகாத்தருள்க; உம்மையர் தஞ்சம் வேண்டிக் கூவுகின்றமையின், நீர் விரைந்தோடுக; காளை சிங்கங்களின் வசத்தி லகப்பட்டாற்போல உம்மையர் அரக்கர்களது வசத்தி லகப்பட்டனர்போலும்; என்று செல்லும்படித் தூண்டினள். இளைய பெருமாள் அதுகேட்டுப் பெருமாளுடைய திறமையையும், பிராட்டியையே பார்த்துக் காத்திருக்கும்படி யவர் தமக்குச் செய்த கட்டளையையும், மாரீசன் கபடத்தையும் ஆராய்ந்து, செல்லாது நின்றனர். பிராட்டி யதுகண்டு மிகச் சுளித்து, இளையபெருமாளை நோக்கி, மைத்துனரே! நீர் துகாறும் நட்பினர்போலிருந்தும், உம்மையர்க்கு நீர் மாற்றுத்தாய் குமாரராதலின், பகையாளிபோலக் காணப்படுகின்றீர்; அல்லீராகில், உம்மையரிவ்வண்ணந் துன்புற்றிருக்கையிலுஞ் செல்லீரோ? நீரென்னை யடைவதன்பொருட்டு ஐயரிறக்கவே நினைக்கின்றீர் போலும்; என்மீது மக்கு வேட்கையில்லதாயின், நீரிப்பொழுதும் செல்லீரோ? என் பர்த்தர் துன்புறுவதே யுமக்குப் பிரியமென நினைக்கின்றேன்; அவர் மீது மக்கன்பேயில்லது; ஆதலாலேதானே நீர் சிந்தையின்றி, இங்கு நிற்கின்றீர்; என் பிராணநாயகர் இறந்தபின், இங்கெனக்குமுமக்கு யாதுபயன் கிடைக்கும்? என்று கடுமொழிகள் கூறினர். இளையபெருமாளும் இவ்வண்ணந் துயருற்றுக் கண்ணீர்பெருக்கிக் கொடுமைகொண்டுரைத்த வாக்கியத்தைக் கேட்டுப் பிராட்டியாரை நோக்கிக் கேளீர் அன்னையே! உமது பர்த்தாவாகிய என்னையர் பன்னகாசுர கந்தர்வ தேவமானுஷ ராக்ஷஸாதிகளெல்லோரும் ஒன்று கூடி எதிர்த்த விடத்திலும் வெல்லப்படுவரோ? இவ்விஷயத்தி லையமேயில்லது; போரில் என்னையரை எதிர்த்து நிற்பவன் தேவர்களுள்ளும், மனிதர்களுள்ளும், கந்தர்வர்களுள்ளும், பறவைகளுள்ளும், ராக்ஷஸபிசாச கின்னராதிகளுள்ளும், மிருகங்களுள்ளும், தானவர்களுள்ளும், ஒருவனுமில்லன்; என்னையர் போரி லொருவராலும் கொலைசெய்யப்படுபவரல்லர்; ஆதலின், நீர் இவ்வாறு மொழியற்க; பெருமாளை விட்டுத் தேவரீர் தனியே எழுந்தருளியிருக்கையில், யான் விட்டுச் செல்லேன்; என்னையரது பலம் ஒருவராலும் தடைசெய்யத்தக்க தன்று; மூவுலகத்தோரெல்லோருமொன்று சேரினும், என்னையரே வெற்றி யுறுவாரல்லது, தோல்வியுறார்; நீர் துயருறற்க; மகிழ்ந்திருக்க; உமது பர்த்தர், அம்மாரீசனைக் கொலைசெய்து விரைந்தெழுந்தருள்வர் பாரீர்; அந்த வொலியும் என்னையரது கண்டத் தொனியேயன்று; யான் நன்குணர்வேன்; வேறொருவன் மாயையால் அவ்வண்ணங் கூவினன். அந்த மாரீசனுடைய மாயையேயிது; கந்தர்வநகரம் போன்றது; உண்மையன்று; என்னையர் உம்மை என்னிடத்தில் வைப்பாக அளித்து விட்டெழுந்தருளினர்; ஆதலின், யான் உம்மைத் தனியே விட்டேயேன்; என்னையர் கரன் முதலிய வரக்கர்களைக்

கொலைசெய்தமையின், மற்றுள்ள அரக்கர்களெல்லோரும் நம்மேல் பகை கொண்டு ஸமயம்பார்த்திருக்கின்றனர்கள்; அவ்வரக்கர்களே கொடுமை கொண்டு பலபேர்களது தொனிபோலக் கூவுகின்றனர்கள்; நீர் இவ்வண்ணஞ் சிந்தையுறற்க; என்றிவ்வண்ணம் பலவாறாக மொழிந்து தேற்றினர். பிராட்டியார் அதுகேட்டும் மனந்தேறாமலிருமடங்கு முனிவுகொண்டு கண்கள் சிவந்து இளையபெருமாளை நோக்கி, அடா நீச! அருளற்றவனே! கொடியவனே! குலங்கெடுப்பவனே! பெருமாளிடத்தே யுனக்குப் பிரியமென்றெண்ணுகின்றேன், என் பதி இறக்குகவென்றே நீ இவ்வண்ணம் ஸமாதானம்போல உரைக்கின்றனை! நீ யவாகப்ருச சக்களத்திமகனாதலின், நீ இவ்வண்ணம் நினைத்ததும் வியப்புறத்தக்கதன்று; உன்னைப் போன்றவர்கள் உள்ளத்திற் கொடுமை கொண்டும், புறத்தில் நட்பினர்போல இருக்கின்றனர்களல்லரோ? நீ என் பொருட்டே காட்டில் தனியே பெருமாளைப் பின்றொடர்ந்து வந்தனை; ஒருவேளை பரதனே பெருமாளைக் கொலைசெய்து என்னை எடுத்துவரும்படி யுன்னை ஏவியிருக்கின்றனன்போலும்; இவ்வண்ணம் உன்னெண்ணமும், பரதன் எண்ணமும், முடியுமெனக் கருதற்க; கருநெய்தல் போன்ற திருமேனி யுடையவரும், தாமரையிதழ்போன்ற திருக்கண்களை யுடையவருமாகிய என் பர்த்தாவைச் சேர்ந்தபின், மற்றொருவனை யான் காமுறுவேனோ? அடா லக்ஷ்மணா! உன்னெதிரிலேதானே யான் உயிரை விட்டுவிடுவேனல்லது, பெருமாளின்றிக் கணப்பொழுதும் பிழையேனென்று மிகக்கொடுமையாக மொழிந்தனர். ஐம்புலன்களையும் வென்ற இளைய பெருமாளும் சீதாதேவி மொழிந்த அந்த வன்மொழியைச் செவியுற்றுப் பிராட்டியாரை நோக்கிக் கைகுவித்துக் கேளீர்பிராட்டியாரே! நீர் மொழிந்த வல்லுரைக்குப் பதிலுரைக்க விரும்புகின்றிலேன்; நீர் எனக்குத் தெய்வமல்லீரோ? நீரிவ்வண்ணம் மொழிந்ததும் வியக்கத்தக்கதன்று; நீரும் பெண்ணாகின்றீரல்லீரோ?—

స్వభావస్త్వేష నారీణా మేవం లోకేషు దృశ్యతే।
విముక్తధర్మాశ్చపలా స్తీక్ష్ణా భేదకరాః స్త్రియః॥

ஸ்வபாவஸ்த்வேஷ நாரீணா மேவம்லோகேஷு த்ருச்யதே |
விமுக்ததர்மாச்சபலாஸ் தீக்ஷ்ணா பேதகராஸ்த்ரிய: ||

இவ்வண்ணம் வன்மொழி மொழிவது பெண்களின் இயல்பேயன்றோ? இவ்வாறே யுலகங்களிலும் காணப்படுகின்றது; பெண்கள் தருமத்தைத் துறந்தவர்களும், சபல முடையவர்களும், கொடுமை யுற்றவர்களும், மித்திர பேதஞ் செய்பவர்களுமே யாகின்றனர்களல்லரோ? நீருரைத்த இம்மொழியைக் கேட்டு யான் பொறுக்கின்றிலேன்; அம்மொழி என் செவிகளிரண்டிலும் காய்ச்சின் நாராசம்போலப் புகுந்தது; இக்காட்டிலுள்ள எல்லாப் பூதர்களும் கேட்கக்கடவர்கள்; யான் உண்மையாக நியாயத்தை யுரைக்கி

நிலைகையிலும், இவரென்னை நோக்கி, நீதிதப்பி மொழிந்திருக்கின்றனர்; ஜனகராஜன் திருமகளாரே! நீர் இகழ்த்தக்கவராயினீர்; இப்பொழுதே நீர் கெடுதி யுறுக; என்மீதும் இவ்வண்ணம் சங்கைகொண்டு மொழிந்தீரல்லீரோ? பெண்மையென்பதே கொடியது; அது இயல்பாகவே தகாச் சொற்களை யுரைக்கச் செய்கின்றது; என்னையாள் எழுந்தருளி யிருக்கின்றனரோ, அங்கே யான் செல்லுகின்றேன், உமக்கு மங்கலமுண்டாகுக; வனதேவதைகளெல்லோரும் உம்மைப் பாதுகாத்தளிக்கக் கடவர்கள். மிகவுழ கோரமான் அவசகுநங்களாகின்றனவே! யான் மீளவு மிங்கெய்தி, ஐயருடன்கூடி நீர் வீற்றிருக்கக் காண்பேனோ! என்று துயருற்று மொழிந்தனர். பிராட்டியார் மீளவும் இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! நீ செல்லாதிருப்பாயாகில், யான் கோதாவரியில் வீழ்வேன்; உடசுருக்கையாயினும் மோட்டுக் கொள்வேன்; மலையினுச்சியினின்றாயினும் வீழ்வேன்; கடுவிஷத்தையாயினும் உண்பேன்; தீயிலாயினும் குதிப்பேன்;—

నత్వహం రాఘవాదన్యం పదాపిపురుషం స్పృశే॥

நத்வஹமராகவாதன்யம் பதாபிபுருஷமஸ்ப்ருசே||

"பெருமாளை விட்டு மற்றொரு புருஷனைமாத்திரம் காலினாலும் தொடேன்; என்றிவ்வண்ணம் முரைத்துக் கைகளினால் மார்பிலடித்துக் கொண்டழுதனர். இளையபெருமாளும் இவ்வண்ணம் பிராட்டியார் வருந்தி யழுவதைக் கண்டு, பலவாறாக இனிய வாக்கியங்களினால் தேற்றினர்; ஆகிலும், பிராட்டியார் மனந்தேறாமலும், இவரை நோக்கி, யாதுமுரை செய்யாமலும், வருந்தி யழுதனர். பின்பு, இளையபெருமாள் இனியிருப்பது தகாதென்றாராய்ந்து, பிராட்டியார்க்குக் கைகூப்பித் தண்டம் ஸமர்ப்பித்துப் புறப்படுக் கண்மறையுமளவும், பிராட்டியாரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு தீரங்கொண்டு, பெருமாளெழுந்தருளி யிருக்கும் இடம் நோக்கிச் சென்றருளினர். *

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

* இளையபெருமாள் யாவு மறிந்தவராயினும், பெண்கள் கொடியவர்களென்பதை வெளிப்படுத்துவதற்காகவும், ராவணன் வந்தெடுத்துக்கொண்டு போனபின்பு, இவர் மனம் எவ்வண்ணமாகுமோவென்றெண்ணி, அவருடைய மனவுறுதியை யறிவதன்பொருட்டும், பெருமாளுடைய மாஹாத்மியத்தை வெளியிடுவதன் பொருட்டுமே தாம் பிராட்டியாரை விட்டுச் செல்லேனென்றனர். பிராட்டியாரும் தம்மனவுறுதியை யவர்க் கறிவிப்பதன் பொருட்டும், ஒருவேளை இவர் செல்லாதிருப்பாராகில், இலங்கை யழிவதற் கிடமில்லையே யென்றும் கருதிச் சினமுற்றவர் போலவும், துயருற்றவர் போலவும் பாவித்து, வன்மொழி மொழிந்தனர். அதுவும் இலக்ஷ்மணரை வியாஜமாகக்கொண்டு, ராவணனை யுத்தேசித்தே இகழ்ந்தனரென வுணர்க. இவர்கள் கருத்து இவ்வண்ணமன்றாயின், இளையபெருமாள் வன் பிராட்டியார் வாக்கி

## ராவணன் முனிவேடம் பூண்டு பிராட்டியிடஞ் சென்றது.

## நாற்பத்தாறுவது ஸர்க்கம்.

பிராட்டியார் முனிவேஷம் பூண்டு வந்த ராவணனை முனி
யெனவே எண்ணிப் பூஜைசெய்தருளியது

இளையபெருமாளிவ்வண்ணம் பிராட்டியாரால் வன்மொழியுரைத்
தேவப்பட்டுச் சினமுற்றுப் பெருமாளை நோக்கி, விரைவாகச் செல்லுகையில்,
இங்கே ஸமயம்பார்த்திருந்த ராவணனும் இதுவே நல்ல ஸமயமென்று
மெதுவான காஷாயத்தை யுடுத்துச் சிகைபொருந்திக் குடைபிடித்துப் பாது
கையேறி, இடதுதோளில் திரிதண்டத்தையும், கமண்டலுவையும் பூட்டித்
துறவறத்தோன் வேஷங்கொண்டு, சந்திர ஸூரியர்களினீங்கித் தனியே
நின்ற சந்திப்பொழுதை நள்ளிருள் கிட்டுவதுபோல ஸ்ரீராம லக்ஷ்மணர்க
ளினீங்கித் தனியேயிருக்கின்ற பிராட்டியாரைக்கிட்டி, திங்களை விட்டுப்
பிரிந்த ரோஹிணியைக் கொடிய அங்காரகன் காண்பதுபோலக் கண்டனன்;
அப்பொழுது ஜனஸ்தானத்திலுள்ள மரங்களும், அவனைக் கண்டு அசைந்
தில; காற்றும் வீசிற்றில்லது; விரைந்து பெருகுகின்ற கோதாவரிநதியும்,
அவனைக்கண்டஞ்சி, மெல்லெனப்பெருக முயன்றது, மிகவுந் தீயனான ராவண
னும் மிகவும் நல்லாராகிய சீதாபிராட்டியாரை முனிவுருவங்கொண்டு கிட்டி,
சனி சித்திரா நக்ஷத்திரத்தை எதிர்த்துச் செல்வதுபோல வெதிர்ப்பட்டுப் புல்
மூடிய பாழுங்கிணறுபோல உள்ளத்தில் தீமைகொண்டு, புறத்தில் இனிமை
பூண்டு, மிகப் புகழுற்றவரும், நல் மனியவரும் அழகிய தந்தோஷ்டங்களை
யுடைய முழுமதிபோன்ற முகத்தவரும், துயருற்றுக் கண்ணீர் பெருக்கி
யழுபவருமாகிய பர்ணசாலையில் வீற்றிருக்கின்ற பிராட்டியாரைக் கண்டு
தீயொழுக்க முடையோனாதலின், காமவேட்கைகொண்டு திகைத்து நின்று,
பின்பு தேர்ந்து, வேதாந்த வாக்கியங்களை யுரைத்துக்கொண்டு, அருகில்
வந்து, பிராட்டியாரை நோக்கிப் பெண் மணியே! நீ தாமரை மலரை நீங்
கிய மலர்மகள் போலத் திகழ்கின்றனை, இவ்வுலகினில் உனக்கு நிகரான பெண்
ஒருத்தியு மில்லள்; நீ யாவள்? தங்கக்கொடி போன்றனை; பீதகவாடை யுடுத்
தனை; தாமரையோடைபோலத் தாமரைமலர் மாலை பொருந்தியிருக்கின்றனை;
நீ நிலமகளோ? பூமகளோ? நாமகளோ? ரதியோ? காந்தியோ?
கீர்த்தியோ? அப்சரஸோ? நற்செல்வமோ? நீ யாவள்? தன்னிச்சையாய்
இங்கெய்தினை, உன்னுடைய பற்கள் ஏற்றத்தாழ்வற்றனவும், நுனியுள்ள
னவும், நயமுற்றனவும், வெண்மைகொண்டனவு மாகின்றன; கண்களோ
அகன்றனவும், அழகுற்றனவும், செவ்வரி படர்ந்தனவும், கருமையுற்றன
வுமாகி விளங்குகின்றன, தொடைகளிரண்டும் யானைத்துதிக்கைகள் போன்

---

யத்தைமறுத்தனர், பிராட்டியாரும் என மறுத்துரைத்தனர், இளையபெருமாளும்
பிராட்டியாரையும் அழைத்துக்கொண்டு ஏன் ஸ்ரீராமபிரானிடஞ் சென்றிலர், ஆதலின்,
இவ்யாவும் மனுஷ்யபாவனையெனவே யறிக,-

றீனை; குசங்களும் பனம்பழம் போன்றன, மணிவடங்க ளணிந்தன, அடி யழ கிய புன்னகையினளே! அழகிய கணைகளை யுடையவளே! நீ என மனத்தை நதிகரையைப்போல அழிக்கின்றனை, பிடிக்குள் ளடங்கிய நுண்ணிடைப்பி னளே! நீ அழகிய கூந்தலுடையவளும், பெண்ணிலக்கணங்கள் யாவும் பொருந்தியவளு மாகின்றமையின், உன்னைப்போன்ற பெண்ணைத் தெய்வப் பெண்களுள்ளும், கந்தர்வப் பெண்களுள்ளும், யக்ஷப்பெண்களுள்ளும், கின்னரர்களுள்ளும், ஒருத்தியையும் இப்புவியில் யான் கண்டிலேன்; உன்னுடைய சிறந்த அழகும், அங்கங்களின் மேன்மையும், நற்பருவமும், இக்காட்டில் நீ தனியே வாஸஞ்செய்வதும், என் மனத்தை மயக்குகின்றன, அத்தன்மையளாகிய நீ கொடிய அரக்கர்கள் வாழ்கின்ற இவ்விடத்தில் வாழத்தக்கவளல்லை. ஆதலின், இங்கிருந்து மீளுக; உனக்கு மங்கல முண்டாகுக; அழகிய மேன் மணிமாடங்களிலும், நகரங்களின்ருகிலுள்ள உத்தியான வனங்களிலும், மணங்கமழ்ந்து மலர்ந்த பூந்தோட்டங்களிலும், நீவாழ்வது தகும்; நீ யணிந்த மாலை! நீ யுண்ட உணவு! நீ யுடுத்த ஆடை! நீ மகிழ்ந்தணைந்த பர்த்தா! இந் நாலவரே சிறப்புற்றோரென யான் நினைக்கின்றேன், நீ ருத்திரர்களுள் சேர்ந்தவளோ? மருத்துகளுள் சேர்ந்தவளோ? வஸுக்களுள் சேர்ந்தவளோ? யாவள் உன்ரயாய், நீ தேவதையெனவே யான் நினைக்கின்றேன், இவ்விடத்தில் தேவகந்தர்வ கின்னராதிகள் ஒருவரும் வருகின்றிலர்கள்; இராக்ஷதர்களே பெரும்பாலும் திரிகின்றனர்கள்; இவ்விடத்தில் நீ தனியே எவ்வண்ணம் வந்தனை; இங்குக் குரங்குகளும், சிங்கங்களும், ஓநாய்களும், வேங்கைப் புலிகளும், மான்களும், கரடிகளும், நரிகளும், மற்றும் கொடிய விலங்குகளும், கழு முதலிய பறவைகளும் உலாவுகின்றன; அவைகளைக்கண்டும் நீ எவ்வண்ணமும் அஞ்சுகின்றிலை; மதமேறித் திரிகின்ற காட்டியானைகளைக்கண்டும் நடுங்குகின்றிலை; நீ யாவள்? யாருடையவள்? எங்கிருந்து வந்தனை? இங்குறைவதற்குக் காரணம் யாது? ஏன் தனியே யிருக்கின்றனை? இவைகளை முற்று முறைசெய்யாயென வினவினன். பிராட்டியாரிவ்வண்ணம் ராவணனால் புகழ்ந்து வினவப்பட்டு, அவனை யுண்மையாகவே வேதியனென்ன வெண்ணி, அர்க்கியம் பாத்தியம் முதலிய பூஜோபசாரங்களினால் பூஜிப்பதற்காக முதன் முதல் தவிசு தந்தளித்து, பாத்தியங்கொடுத்து, அன்னமும் சித்தமாக இருக்கின்றதென வுரைத்து, அவன் அஞ்சாமைக்குரிய முனிவேஷம் பூண்டிருக்கின்றமையின், அமுதுசெய்ய வாரீரென மொழிந்து, காய் கனிகள் முதலிய நல்லுணவுகளையும் தந்தளித்தருளினார். பிராட்டியாரிவ்வண்ணங் கசட்டற்று மொழியினும், ராவணன் தான் தனனினத்தாருடன் மடியுங்காலம் கிட்டினமையின், அவரை எடுத்தோட வேண்டுமென்றே நிச்சயங்கொண்டனன். பிராட்டியாரும் காடெங்கும் திரும்பித்திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தனராயினும், ஸ்ரீராம லக்ஷ்மணர்களை மாத்திரம் கண்டிலராயினர்.

ஆரணியகாண்டத்தில் நாற்பத்தாறுவது ஸர்க்கம்

முற்றிற்று.

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

ராவணன் பிராட்டியார் வாக்கியத்தைக் கேட்டு முனிந்து, தன் திறமையினையும், உறைவிடத்தையும், நற்செல்வத்தையுங்கூறி, அவரைத் தனக்கு மனைவியாகும்படி மொழியப் பிராட்டியாரும் அவனைச் சீறி இகழ்ந்தது

துறவறத்தோன் வேஷங்கொண்ட ராவணனால் இவ்வண்ணம் வினவப்பட்ட பிராட்டியாரும் இவன் தவசியும், அதிதியுமாகின்றமையின், யான் உண்மை கூறாவிடின், சாபமிடுவானென்று அஞ்சி, முகூர்த்தகாலந் திருவுள்ளத்தில் எண்ணியபின்பு, ராவணனை நோக்கிக் கேளீர் மாயோகி! யான் மிதிலைக்கிறைவனாகிய ஜனகசக்ரவர்த்தியின் திருமகள்; சீதையென்னும் பெயருடையேன்; உனக்கு மங்கலமுண்டாகுக; ஸ்ரீராமபிரான் மனையாளாகின்றேன்; யான் திருமணஞ்செய்துகொண்டபின்னர், திருவயோத்தியில் பன்னிரண்டாண்டு பதியுடன் கூடிச் சிறந்த போகங்களை யனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருந்தேன்; பதின்மூன்றாவது வருஷத்தில் என் மாமனார் என் பர்த்தாவுக்குப் பட்டங்கட்டும்படி ஆலோசனைசெய்து, அதற்குரிய பண்டங்களைச் சேகரிக்கையில், கைகேயியென்னும் எனது இளைய மாமியார் அச்செய்தியைக்கேட்டுத் தம் பர்த்தாவாகிய என் மாமனாரைக் கண்டு, அவர் தமக்கு முன்பளித்திருந்த இரண்டு வரங்களுக்கும், என் பர்த்தாவைக் காட்டிலனுப்புவதையும், தம் புத்திரராகிய பரதாழ்வானுக்குப் பட்டங்கட்டுவதையும் கோரி, இவ்விரண்டுவரங்களையும் நீர் எனக்களித்திராவிடில், யானிப்பொழுது உணவும் உண்ணேன், உறங்கலுஞ் செய்யேன், நீர் பருகலுஞ் செய்யேன்; ராமனிப்பொழுது அபிஷேகங் கொள்வானாகில், இதுவே என்னுயிர் வாழ்க்கையின் முடிவாகும், என்று விரும்பியுரைத்தனர். என் மாமனாரும் ஸத்தியவாதியாதலின், அவரைப் பலவிதமாக வேண்டியும், அவருடன்படாமையினால், மிகச் சிந்தையுற்று நின்றனர். அப்பொழுது என் பர்த்தா இருபத்தைந்து திருநக்ஷத்திரமுடையவர், யான் பதினெட்டு வயதுடையாளெனப்பட்டேன், அப்பொழுது என்பர்த்தா ஸ்ரீராமன் ஸ்ரீராமனென்று எங்கும் புகழப்பட்டவரும், நற்குணமுடையோரும், ஸத்தியமுடையோரும், தூய்மை கொண்டவரும், அகன்ற திருமார்புற்றவரும், செந்தாமரை இதழ்போன்ற திருக்கண்களையுடையோரும், நீண்டுருண்ட திருத்தோள்களையுடையோரும், எல்லாவுயிர்களுக்கும் இனியரும், மிகுந்த தோள்வலியுற்றவருமாகி விளங்கினர். ஆயினும், என் மாமனார் காமுகராகிக் கைகேயியாருக்குப் பிரியஞ்செய்வதன் பொருட்டுத் தாம் அவரை நிராகரித்து, என் பர்த்தாவுக்கு அபிஷேகஞ் செய்வித்திலர்; அபிஷேகத்தின் பொருட்டே என் பர்த்தா தந்தையினருகிற் செல்லுகையில், கைகேயி என் பர்த்தாவை நோக்கி, அடா ராமா! உன் தந்தை கட்டளையிட்டதை யானே மொழிகின்றேன் கேளாய்; இந்த ராஜ்ஜியம் பரதனுக்களிக்கக்கடவது; நீ ஒன்பதும் ஐந்தும்

கூடிய வருஷங்களில் வனத்திலுறைந்த; இவ்வண்ணம் நீ செய்து தந்தையைப் பொய்மையினின்றும் பாதுகாத்தளிக்க; என்று நாணமற்று, மண்ணுரை செய்யுற்று மொழிந்தனர். என் பர்த்தாவாகிய ஸ்ரீராமபிரானும் அச்சமற்றவரும், தோள்வலி பெற்றவருமாதலின், அவ்வண்ணமே யாகுகவென்றுடன்பட்டுக் கைகேயியாரின் வாக்கியத்தின்படி விரதம் பூண்டு தண்டகாரணியமடைந்தருளினர்.

దద్యాన్న ప్రతిగృహ్ణీయాత్ సత్యం బ్రూయాన్న చానృతం।
ఏతద్బ్రాహ్మణ రామస్య ధ్రువం వ్రతమనుత్తమం॥

தத்யாந்ந ப்ரதிக்ருஹ்ணீயாத் ஸத்யம் ப்ரூயாந்ந சாந்ருதம்
ஏதத்ப்ராஹ்மண ராமஸ்ய த்ருவம் வ்ரதமநுத்தமம்||

கேட்டருளீர் அந்தணரே! என் பர்த்தாவொருவர்க்கு வேண்டியவைகளைக் கொடை செய்வாரே யல்லது, ஒருவரிடத்தினின்றும், தாம் ஒரு பொருளைக் கோரிக்கை கொள்ளார்; உண்மையுரைப்பாரே யன்றிப் பொய்யுரையார்; என் பர்த்தாவுக்கு இதுவே சிறந்த அளவற்ற விரதமாகும். இவர்க்குத் தம்பியும், மாற்றுத்தாய் குமாரரும், மிக்க தோள்வலி யுற்றவரும், இலக்குமணனென்னும் திருநாமமுடையோருமாகிய என் மைத்துனர், இவர்க்கெக்காலங்களிலுந் துணையாகி யிருக்கின்றனர், ஆதலின், யாங்கள் மூவரும் கைகேயியார் பொருட்டு, ராஜ்ஜியத்தைத் துறந்து, இக்கானகஞ்சேர்ந்து, திறமையின் லச்சமின்றித் திரிகின்றனம், என் பர்த்தாவும் தம்பியுடன் காட்டிலுள்ள உணவுகளை மிகுதியாகச் சேர்த்துக்கொண்டு கணப்பொழுதில் இங்கெழுந்தருள்வார், தேவரீர் இங்குமுகூர்த்தகாலம் இளைப்பாறுக, இவ்விடம் நும்மைப் போன்றவர்க ளிளைப்பாறுவதற்குரியதே; நும்முடைய திருநாமத்தையும், மரபினையும், திருமாளிகையையும் அருளிச்செய்க, நீர் ஒருவராக இந்தத் தண்டகையிலேன் திரிகின்றீர், உண்மையாக மொழிக, என்று இனிமையாக வினவினர்.

கபடவேஷம் பூண்ட அக்கொடிய ராவணனும், அம்மொழி கேட்டுப் பிராட்டியாரை நோக்கிக் கேளடி பெண்மணி! யாவனால் தேவாஸுர பன்னகர்களுடன் கூடிய மூவுலகங்களும், அச்சமுற்றுத் தவிக்கும்படி செய்யப்பட்டனவோ, யாவன் அரக்கர்களெல்லோர்க்கு மிறைவனோ, அவனே யான், ராவணனென்னும் பெயருடையேன், குற்றமேது மற்ற கட்டழகி! பொன்னின் வண்ண முடையவளும், வெண்பட்டுடுத்தவளும், இனியாளுமாகிய உன்னைக் கண்ணுற்ற பின்னர், என் மனைவிகளிடத்தில் ஆசையுறுகின்றிலேன், யான் எல்லாவுலகங்களினின்றும், சிறந்த பெண்களை எடுத்துவந்திருக்கின்றேன், அவர்களெல்லோர்க்கும் எனக்கும் ராணியாகி, எனக்குப் பட்டமஹிஷி யாகுக; உனக்கு மங்கல முண்டாகுக, கடலினிடையில் இலங்கையென்னும் நகரியே யானுறையும் இடம்; அது கடலினால் சூழப்

பட்டும்; திரிகூட மலையினுச்சியில் கட்டப்பட்டிருக்கின்றது; அவ்விடத்தில் பற்பல உத்தியான வனங்களில் என்னுடன் கூடி விளையாடுக; அவ்விடத்தை நீ கண்ணுறுவாயாகில், இக்காட்டிலுறைய விருப்புறாய்; பலகலன்களாலுமணிந்தழகிய ஐயாயிரந்தாதிகள் உனக்குப் பணிவிடை செய்வார்கள்; ஆதலின், நீ எனக்கு பாரியை (ஒளியிற் சிறந்தவள்) ஆகுக; என்று வன்மையாகக் கூறினன். பிராட்டியாரும் அம்மொழியைக் கேட்டு முனிந்து, அவனை எதிர்த்திகழ்ந்து, அவனை யுத்தேசித்துக் கேளடா ராவணா! மலைபோல அசைக்கவொண்ணாதவரும், மகேந்திரனுக்கு நிகரானவரும், பெருங்கடல்போலக் கலக்கவொண்ணாதவரும், ராஜலக்ஷணங்களெல்லாம் நிறைந்தவரும், ஆலமரம் போல் உயர்ந்து படர்ந்து தழைத்துத் தண்மையுற்று, எல்லாக்காலையினும் எல்லாவுயிர்களுக்கும் இனியவரும், ஸத்தியந்தவறாதவரும், சிறந்த பாக்கியமுடையவரும், நீண்டுருண்ட திருத்தோள்களை யுடையவரும், அகன்றுயர்ந்த திருமார்புற்றவரும், சிங்கத்தை நிகர்த்த பராக்கிரமமுடையவரும், மானிடரெல்லோர்க்கும் சிறந்தவரும், முழுமதிபோன்ற திருமுகமண்டலமுடையவரும், புலன்களை வென்றவரும், சிறந்த புகழுற்றவரும், மஹாத்துமாவும், முதல் தேவுமாகிய ஸ்ரீராமசந்திரனையே சேர்ந்து, மற்றொருவரையும் கனவிலுங் கருதேன், நீயோவெனில், நரி பெண்சிங்கத்தைக் கோருவதுபோல என்னைக் கோருகின்றனை, யானுனக்கு வாய்ப்பேனோ? கதிரவன் ஒளிபோல யான் உன்னால் தொடுவதற்குமுரியளாகேன், நீ யாவுள மானுங்காலம் கிட்டினமையின், ஒரு மரத்தைப் பல மரங்களாகவும் பொன்னிறமுடையதாகவும், காண்கின்றனைபோலும்; இவ்வண்ண மலையாயின் ஸ்ரீராமபிரானுக்கினிய மனையாளாகிய என்னை எடுத்தேகட விருப்புறுவாயோ? இவ்வெண்ணங் கொண்ட நீ பசியுற்றுச் சினங்கொண்டு படுத்திருக்கின்ற சிங்கம், நச்சரவம் இவற்றினுடைய பற்களை வாயினின்றும் பிடுங்கி எடுக்க முயலுகின்றனை போலும்; சிறந்த மந்தரமலையைக் கையிலேந்தக் கருதுகின்றனை; காலகூட விஷத்தை யுண்டும் பிழைத்து நலமுறவிரும்புகின்றனை, கண்களை யூசியினால் துடைத்துக்கொள்ளுகின்றனை, கூரிய வாளினை நாவினால் நக்குகின்றனை; பெருங் கல்லைக் கழுத்தில் கட்டிக்கொண்டு ஆழ்கடலைக் கடந்து செல்ல நினைக்கின்றனை; ஸூரிய சந்திரர்களிருவரையும் இரண்டு கைகளினால் பற்றி எடுக்க நினைக்கின்றனை, சூழ்ந்தெரிகின்ற தழலைத் துணியில் சுற்றி எடுக்கத் துணிகின்றனை, எஃகினால் செய்யப்பட்ட கூரிய சூலங்களின் நுனிகளின் மீதோடக் கருதுகின்றனை, ஸ்ரீராமனுக்கு மிக இனியளும், கற்பினளும், நன்னடக்கையினளுமாகிய என்னை யபஹரிக்க நீ நினைக்கின்றனை யல்லையோ? சிங்கத்திற்கும், நரிக்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? சிறந்த மத்தியத்திற்கும், கழுநீர்க்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? சிறந்த தங்கத்திற்கும், ஈயத்திற்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? சந்தனக்குழம்புக்கும், சேற்றுக்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? யானைக்கும், பூனைக்கும், எவ்வளவு ஏற்றத்

தாழ்வோ? கிழனுக்கும், காகத்துக்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? மயிலுக்கும், நீர்க்காக்கைக்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ? அன்னப்புள்ளுக்கும், கழுகுக்கும், எவ்வளவு ஏற்றத்தாழ்வோ அவ்வளவு ஏற்றத்தாழ்வு என் பர்த்தாவுக்கும், உனக்குமுளது; அத்தன்மையராகிய என் பர்த்தா கோதண்டத்தைத் திருக்கரத்திலேந்தி, இந்திரனுக்கு நிகரான பிரபாவமுடையராய் எழுந்தருளி யிருக்கையில், நீ என்னை வலுவில் திருடிக்கொண்டோடினையாயினும், என் கற்பினை யழிக்க நீ வல்லவனாகாய், அரிசியென்று வச்சிரமணியை எறும்புகள் மொய்த்துக்கொள்ளினும், அது அதனைப் புஜித்து ஜீரணித்துக் கொள்ளுமோ? கொள்ளா, ஈயானது நெய்யைக்குடித்தாலும், அது வமனமாகிவிடுமேயன்றி, ஜீரணிக்குமோ? என்றிவ்வண்ணம் அவன் நலமுறுமாறு கூறி, அவன் யாது செய்வானோவென்று காற்றினலைக்கப்பட்ட வாழைமரம்போல நடுங்கித் துயருற்றனர். ராவணனும் இவர் இவ்வண்ணம் அச்சங்கொண்டு நடுங்குவதைக்கண்டு மேன்மேலும் அச்சுறுத்துவதன் பொருட்டுத் தனது குலத்தையும், பலத்தையும், பெயரையும், செயலையும், மொழியத் தொடங்கினன்.

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

*ராவணன் சினமுற்றுத் தன் திறமையை யுரைத்துத் தன்னைத் தானே புகழ்ந்து, தன்னைச் சேரும்படி யுரைக்கையில், பிராட்டியாரும் இருமடங்கு முனிந்து, அவனை எதிர்த்துரைத்திகழ்ந்தது*

பிராட்டியார் இவ்வண்ணம் முறைசெய்கையில், ராவணன் கேட்டுச் சினங்கொண்டு புருவத்தை நெரித்துப் பிராட்டியாரை நோக்கிக் கேளடி ஜானகி! என்னை நீ யாரென்று நினைத்தனை? யான் குபேரனுக்குத் தம்பியும், ராவணனென்னும் பெயர் பெற்றவனும், பத்துத்தலைகளை யுடையோனும், மிகத் தோள்வலி யுறவோனுமாகின்றேன்; தேவகந்தர்வபிசாச பதகோரகாதிகளும் என்னைக் கண்டு அச்சங்கொண்டோடுகின்றனர்கள், முன் ஒருகால் குபேரனும் என்னுடன் போர்செய்து தோல்வியுற்றனன். அது முதல் என்னிடத்தில் அச்சத்தினால் லங்காபுரியையும் விட்டுவிட்டுக் கைலாஸமலை சேர்ந்து சங்கரனுக்கருகில் வாஸஞ்செய்கின்றனன், அவனுடைய புஷ்பகமென்னும் திவ்விய விமானத்தையும் யான் பறித்துக் கொண்டேன்; அதன் மீதேறிக்கொண்டே யான் நினைத்த விடங்களுக்கெல்லாம் ஆகாசமார்க்கமாகச் செல்லுகின்றேன்; இந்திரன் முதலிய தேவர்களும், யான் சினங்கொள்ளுங்காலையில் கண்டு, அஞ்சி யோடி யொளித்துக் கொள்ளுகின்றனர்கள்;

யான் எவ்விடத்தி லிருக்கின்றேனோ, அவ்விடத்தில் வாயுவும் அச்சத்தினால் மெதுவாக வீசுகின்றனன்; சந்திரனும் வெம்மையுற்ற கிரணங்களைத் தணித்து ராங்கி நிலவுகின்றனன்; மரங்களும் அசைவற்று நிற்கின்றன, ஆறுகளும் வேகமின்றி, மெதுவாகப் பெருகி வருகின்றன, எனக்கு நடுக்கடலில் லங்கையெனனும் ராஜதானி யரக்கர்களால் நிறைந்து, இந்திரனுக் கமராவதி போல விளங்குகின்றது; அது வெள்ளியாலும், தங்கத்தினாலும் செய்யப்பட்ட கோட்டைச் சுவர்களை யுடையதும், வைடூரிய ரத்தினங்களால் செய்த தோரணங்களை யுடையதும், ரத கஜ துரகபதாதிகளினால் நிறைந்ததும், நிருத்த கீத்வாத்தியங்களினொலி பரவியதும், கோரியவைகளையெல்லாம் அளிக்க வல்ல கற்பகமரங்கள் செழித்த தோட்டங்களை யுடையதுமாகி யிருக்கின்றது, அவ்விடத்தில் நீ என்னுடன் கூடி விநோதமாயிருப்பாயாகில், இவ்விடங்களையும், மானிடப் பெண்களையும், கனவிலுங் கருதாய்; அன்றியும், அங்கே திவ்விய போகங்களையும், மானுஷ போகங்களையும் நுகர்ந்து மகிழ்வாயாகில், அற்பனான ராமனையும் நினையாய், தசரதமஹாராஜன் தனக்குப் பிரியனான பரதனுக்குப் பட்டங் கட்டுவித்து, மூத்தோனாயிருந்தும் ராமனைக் காட்டிலோட்டிவிட்டனனன்றோ! ஆதலின், அரசிழந்தும், தேசந்துறந்தும், உற்றோரிழந்தும், காட்டடைந்தும், துன்பம் நிகழ்ந்தும் வருந்துகின்ற ராமனுனக்கு யாது பயன் வாய்க்கும்? அவன் முற்றுந் துறந்து தவசியாகிக் காட்டில் திரிகின்றனனே? ஆதலின், அரக்கரெல்லோர்க்கும் வேந்தனும், மிக்க செல்வமுற்றோனும், புகழ் மலிந்தவனுமாகிய யானே உன்னைக் காமித்து வந்திருக்கையில், இப்பொழுது நீ என்னை யுபேக்ஷை செய்வது தகுதியற்றது; என்னை நீ இப்பொழுது நிராகரிப்பாயாகில், துன்புறுவாய்; புரூரவனை யூர்வசி காலினாலுதைத்து மிகத் துன்புற்றனளல்லளோ? ராமன் போரில் என் சுண்டுவிரலுக்கும் நிகராகான்; யான் அரக்கனும், அவன் மானிடனுமல்லனோ? யான் வலிவில் வந்து வேண்டுகிறது, உனது பாக்கியமே யென்று எண்ணி, என்னைச் சேர்க்கடவை, என்று தன்னைப் புகழ்ந்துரைத்தனன்.

பிராட்டியாரும் ராவணனிவ்வண்ணமுரைத்த வாக்கியத்தைக் கேட்டுச் சினமதிகமாகியவனை நோக்கி, ஒருவருமின்றித் தனியேயிருக்கினும் அச்சமின்றிக் கேளடா ராவணப் பயலே! எல்லோர்க்கும் இதஞ்செய்பவனும், நற்குண நற்செய்கை யுடையோனுமாகிய வைசிரவணனே எனக்கு அண்ணனென்று உரைக்கின்றாயே, நீ யவன் தம்பியாகியும், இவ்வண்ணந் தீச்செயல் புரிய எவ்வண்ணம் நினைக்கின்றனையோ? அடா அரக்கரெல்லோரும் விரைவில் அழிவாரென்பதில் சிறிதுமையமில்லது; மிக்கக் கொடியவனும், காமுகனும், தீச்செயலினனுமாகிய நீயோ யவர்களுக் கரசனாயினை யல்லையோ? இந்திரன் மனைவியாகிய இந்திராணியை யெடுத்துக்கொண்டுபோயினும், நீ யொருவேளை பிழைக்கினும் பிழைப்பாய்; ஸ்ரீராமபத்திரன் தேவியாகிய என்னை யெடுத்தும் பிழைப்பாயோ மூடா? பிழையாய், நீ என்னை யெடுத்தோடி யமிழ்தத்தை யுண்பா

யீராயினும், நீ பின்பு, கணமும் பிழையாய்; இதனை யுறுதியாக நம்புக; என்று இகழ்ந்துரை செய்தனர். *

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

ராவணன் நிஜரூபங்கொண்டு பிராட்டியாரை எடுத்தோடுகையில், பிராட்டியார் நடுவழியில் ஜடாயுவைக்கண்டு ஸ்ரீராமனுக் கறிவிக்கும்படி யருளிச் செய்தது.

இவ்வண்ண முரைத்த, பிராட்டியாரது வாக்கியத்தை ராவணன் கேட்டு மிகவும் முனிந்து, கையைத்தட்டி முறுக்கித் தன்னுருவத்தைப் பெரிதாக்கிக்கொண்டு பிராட்டியாரை நோக்கி, வைதேஹி! நீ உன்மாதங்கொண்டு யானுரைத்த என்னுடைய பல பராக்கிரமங்களைக் கேட்டிலைபோலும், யான் விண்ணிடையில் நின்று பூமியையும் கைகளினால் மேலெடுக்க வல்லேன்; கடல்நீரையும் முற்றும் குடிப்பேன்; மிருத்யுவையும் அடிப்பேன்; கணைகளினால் கதிரவனையும் தகைவேன்; பூதலத்தையும் பிளப்பேன்; மலைகளையும் அசைப்பேன்; யான் காமரூபியும், காமித்தவைகளை யெல்லாங் கொடுப்பவனு மாகின்றேன்; என்னைக் கணவனாகுக; (யான் நித்திய ஸூரிகளுள் சேர்ந்தமை* யின், காமரூபியும், கோரினவைகளை யளிக்கவல்ல திவ்விய தம்பதிகளை யுடையவனு மாகின்றேன் பாரீர்) என்றுரைத்தனன். அப்பொழுது அவன் கண்கள் சூரியாக்கினிகள்போல ஜொலிக்கின்றனவாயின; உடனேயவன் கபடஸந் யாஸிவேஷத்தை விட்டுக் காலாந்தகனுக்கு நிகரான தன்னுடைய நிஜரூபத்தையடைந்து, செவந்த கண்களையும், பொன்மணிக் குழைகளையணிந்த காதுகளையும், பத்துத் தலைகளையும் பொருந்தி, வில் கணைகளைக் கையிலேந்தி, நீருண்ட மேகம்போலக் கறுத்து விளங்கிப் பிராட்டியாரை நோக்கிக் கேளாய் மைதிலி! மூவுலகிலும் சிறப்புற்ற பதியை நீர் விரும்புவீராகில், என்னைச்

---

* ராவணன் வாக்கியத்தில் தோற்றும் பொருளாவன; (மானுஷஸதியா) லீலா மானுஷரூபியான பெருமாளால் (நஃ) எம்மை (கதாயுஷஃ) ஆயுள்மாண்டவர்களாக நினைப்பீர்; ஸ்ரீராமனுடன் சேர்ந்த மனமுடன் கூடினவராதலின், உமக்கு ஆற்பமான ராஜ்ஜியத்தினால் ஒரு பயனுமில்லது, அகன்ற கடாக்ஷத்தை ஸ்ரீராமனுடன் செய்வீரேயன்றி, என்போன்றவர்களைப் பார்ப்பீரோ? காமத்தினால் மன்மத பாணங்களுக்குக் குறியாகிய என்னைக் குறித்து, நீர் மொழிவதற்குத் தக்கவரல்லீர், என்னை யொரு பொருளாகக் குறித்துரைசெய்தபின், (பரிதாபம்) லங்காத்தீவை யடைவீர், ஸ்ரீராமனை (அம்) ஸ்ரீமாஹாவிஷ்ணுவென்றே (குல்யாஃ) (குர்யாஃ) எண்ணுக, ஸ்ரீராமன் (நஸமஃ) ஒப்பற்றவர்; என்னுடன் போர்செய்வதன் பொருட்டே அவர் மானிடராயினர்; உமமுடைய பாக்கியங்களுடன் கூடிய லங்கா நகரியை யடைக, என்பது முதலியனவாக வறிந்து கொள்ளுக;—.

சேர்க; யான் உமக்குத்தக்க பதியாகின்றேன்; (யான் உம்மைப் பாதுகாத்துப் பெருமானிடத்திலளிப்பேன்) யானுமக்குப் மிகப்பிரியஞ் செய்வேனே யன்றி, ஒருகாலையிலும் தீமை செய்யேன்; மானிடனிடத்தில் விருப்பதைத் துறக்க; (மானிடபாவத்தைத் துறந்து தெய்வத்தன்மையை மேற்கொள்ளுக) (மயி, மே, அயி) சீதையே! என்னுடைய உண்மை யறியப்படக் கடவது. அரசிழந்து, ஆயுள்குன்றிய ராமனிடத்தில் என்ன குணங்களைக் கண்டு ஆசையுற்றிருக்கின்றனை? (அரசிழவாதவனும், தன்னுடைய ஸங்கல்பஸித்தமான பலன்களையுடையவனும், பிறர்களனைவரையுங் கணக்கிட்டவனுமாகிய ஸ்ரீராமனை (பரி) துறந்து, மட்டமையும், அகங்காரமுங்கொண்ட மானிடத்தில் எந்தக் குணங்களைக் கண்டு நீ ஆசையுறுவீர்) அந்த ராமன் பெண்ணின் வாக்கியத்தைக் கேட்டு ராஜ்ஜியத்தைத் துறந்து, இந்தக் கொடிய கானகத்தை யடைந்தனனல்லனோ? என்றுரைசெய்து, பிரியஞ்செய்வதற் குரியாரும், பிரிய முரைப்பவருமாகிய பிராட்டியாரைக் கிட்டிக் காமமோகிதனாதலினால்,—

జగ్రాహ రావణస్సీతాం బుధః ఖే రోహిణీమివ॥
వామేన సీతాం పద్మాక్షీం మూర్ధజేషు కరేణ సః।
ఊర్వోస్తు దక్షిణేనైవ పరిజగ్రాహ పాణినా॥

ஜகராஹராவணஸ்ஸீதாம புதஃகேரோஹிணீமிவ||
வாமேநஸீதாமபதமாக்ஷீம மூாததஜேஷு கரேணஸஃ|
ஊாவோஸதுதக்ஷிணேநைவ பரிஜகராஹபாணிநா||

அந்த ராவணன் செந்தாமரை யிதழ்போன்ற திருக்கண்களையுடைய பிராட்டியாரை ஆகாயத்தில் புதன் ரோஹிணியைப் போலப்பிடித்தனன். பிடிக்கையிலும், இடதுகையினால் தலைமயிர்களையும், வலதுகையினால் தொடைகளையுஞ் சேர்த்துப் பிடித்தெடுத்தனன். அப்பொழுது வனதேவதைகளும் அச்சங்கொண்டோடின; இதுவரையில் கண்ணுக்குக் காணப்படாமலிருந்த கோவேறுகழுதைகள்கட்டி, நவமணிகளிழைத்துத் திகழ்கின்ற அந்த ராவணனுடைய தேரும் கட்புலனாயிற்று; ராவணன் உடனே பிராட்டியாரைத் தேரிலேற்றிக்கொண்டு புறப்பட்டனன். அப்பொழுது பிராட்டியாரும் ராமா! ராமா! என்று கூவினார். நெடுநேரமாகியும் ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் எழுந்தருளாமையின், கருடனால் பிடிக்கப்பட்ட நாகக்கன்னிபோலச் சீதா பிராட்டியார் நடுங்கித் துயரங்கொண்டு ராவணனை நோக்கி, அடா ராவணா! நீ ராஜனாதலின், தீத்தொழில் செய்பவர்களையும் தண்டித்து அடக்கவேண்டியவனல்லையோ? அவ்வண்ணமாயின், நீயே இவ்வண்ணம் தீத்தொழில்செய்வது தகுமோ? என்றிகழ்ந்து, பெருமானை யுத்தேசித்து, என் பிராணநாதரே! தேவரீர் லோகநாதரும் தருமத்தின் பொருட்டே ராஜ்ஜியபோகங்களைத் துறந்தவருமாகின்றமையின், கொடிய இந்த ராவணனை ஏன் தண்டனை செய்கின்றிலீர்; தேவரீர் என்னை ஏன் காண்கின்றிலீர்; தீச்செயல் உடனே

தவிட்ட பலனை யனுபவிக்கவேண்டுமன்றோ? காலமும் கூடினால் பயிர்களும் முதிர்வது போலக் கொடியார்களுக்குக் காலமும் ஒத்துவருமன்றோ? ஆதலின், இந்த ராவணனும் ஞானழியத்தக்க காலத்திற்குத் தக்கபடியே தீச்செயல் செய்தனன் என்று கூறி மீளவும் ராவணனை நோக்கி, அடா ராவணா! நீ இப்போது ஸ்ரீராமனால் அழிவாயன்றோ! என்று புலம்பி, மீளவும் அந்தோ! இப்பொழுதுதான் கைகேயியாரது எண்ணம் நிறைவேறிற்று; யானிப்பொழுது ராவணனாலே பறிக்கப்படுகின்றேனல்லேனோ? பாரீர் கோங்கு மரங்களே! நீங்களெல்லீரும் யான் ராவணனால் பறிக்கப்பட்டேனென்று விரைவாகப் பெருமாளுடனுரைக்கக் கடவீர்கள்; மால்யவந்தமலையையும், பிரஸ்ரவணகிரியையும் தொழுது வேண்டுகின்றேன்; நீங்களும் ராவண்னென்னை எடுத்தோடினானென்று விரைவாக ஸ்ரீராமனுக்கு அறிவிக்கக்கடவீர்கள் ஹம்ஸகாரண்டவாதிகளான நீர்ப்பறவைகள் நிறைந்த கோதாவரிநதியினையும் வணங்குகின்றேன்; அம்மா! நீயும் ஸ்ரீராமனுடன் சொல்லாய், இவ்வனத்திலுள்ள தெய்வங்களெல்லோரையும் தொழுகின்றேன்; நீங்களும் ஸ்ரீராமனுக்குரையீர்; இக்காட்டிலுள்ள உயிர்களெல்லோரையும் சரணமடைகின்றேன்; நீங்களும் பெருமாளுக்கிச்செய்தியைத் தெரிவிக்கக்கடவீர்கள். என் பர்த்தா மாத்திரம் இச்செய்தியைக் கேட்பாராகில், ராவணன் என்னை விண்ணுலகிற்குக் கொண்டேகினும், யமபுரிக்கேகினும், அவனைக் கொன்று என்னை யழைப்பித்துக் கொள்வார்; என்றிவ்வண்ணம் தீனமாகப் புலம்பிக்கொண்டு செல்லுகையில், பருத்துயர்ந்த ஓர் மரத்தின்மேலே ஜடாயு உட்கார்ந்திருக்கக் கண்டு, கேளீர் ஜடாயுவே! என்னை ராவணன் பறித்தோடுகின்றான் பாரீர்; இவன் மிகக் கொடியனும், தோள்வலியுற்றவனுமாதலின், இவனைத் தடுப்பது உம்மால் முடியாது; ஆதலின், நீர் பெருமாளையும், இளையபெருமாளையுங் கண்டு, என்னை ராவணனெடுத்தோடிவிட்டானென்பதை யுரைசெய்யக் கடவீரென்று கூறி யருளிச் செய்தனள்.

ஆரண்யகாண்டத்தில் நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

ராவணன் ஸீதாபிராட்டியாரைத் தலைவணங்கி வேண்டித் தொடாமலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போனானென்றும், அவன் பிராட்டியாரைப் பிடித்தெடுத்துக்கொண்டு போனானென்றும், சுலோகத்திற்கே பொருளுரைக்கின்றனர்கள், சிலர்,அத்தியாத்தும ராமாயணத்தில் மாரீசன்வருவதன்முன்னமே, சீதாபிராட்டியார் தன்னைப்போல ஒரு மாயா சீதையை யுண்டுபண்ணி அங்கே வைத்துவிட்டுத் தானே அக்கினிப்பிரவேசம் செய்து விட்டதாகவும், யுத்தகாண்டத்தில் கடையில், இந்த மாயா சீதையாரே தீயில்வீழ்ந்துவிட, நிஜமான சீதையாரே வெளியேவந்து பெருமாளுடன் சேர்ந்தாரெனவு மிருக்கின்றது, சீதாதேவியாரை மண்ணுடன் பேர்த்தெடுத்துக்கொண்டு போனதாகக் கம்பநாட்டாழ்வார் சொன்னார். மற்றுஞ்சில கவிகள் மேகத்தினால் மறைத்தெடுத்துக்கொண்டேகினதாகவுரைத்தார்கள். இவர்களெல்லோரும்

# ஐம்பதாவது ஸர்க்கம்.

ஜடாயு ராவணனுக் கிதமுரைத்தும் கேளாமையால், போர்செய்யத் தகைந்தது

குறைத்தூக்கமாய்ப் படுத்திருந்த ஜடாயுவும், ஸீதாபிராட்டியாரது கூக்குரலைக்கேட்டெழுந்து, ராவணனையும், பிராட்டியாரையும் கண்ணுற்றுக் கூரிய மூக்குடையோரும், மலையின் சிகரம்போலப் பருத்துவார்ந்தவரும், மிகத் தோள்வலியுடையவருமாதலின், மரத்தின்மேலிருந்தே ராவணனை நோக்கி, அடா ராவணா! என்னை யாரென்று நினைத்தாய்? யான் தொலையாயுள்ள தருமத்தில் நிலைகொண்டவனும், சத்தியந்தவறாதவனும், கழுகுகளுக்கெல்லாம் அரசனும், அளவற்ற தோள்வலியுடையோனுமாகிய ஜடாயுவாகின்றேன்; மகேந்திர வருணர்களுக்கு நிகரானவரும், எல்லாவுலகங்களுக்கும் அதிபதியும், எல்லாவுயிர்களுக்கும் இதஞ்செய்பவரும், ஸ்ரீ தசரதசக்கரவர்த்தியாரது திருக்குமாரருமாகிய ஸ்ரீராமன் இங்கே எழுந்தருளியிருக்கி

---

குலமகளைப் பரபுருஷன் தொட்டமாத்திரமே கற்பழியுமெனனும் எண்ணத்தாலும், பிராட்டியார்மேலுள்ள பக்திமையாலும், உரைத்தனாகவென்வே தோற்றுகின்றது, என்னில், ஸுந்தரகாண்டத்தில் சிறிய திருவடி பிராட்டியாரை நோக்கி, அம்மா! தேவரீரை யடியேன் முதுகிலேற்றிக்கொண்டொருவரும் அறியாவண்ணம் பெருமாளருகிலெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய்ச் சேர்ப்பேனென்றுபிரார்த்தித்ததற்குப் பிராட்டியார் அதுகேட்டு அவரை நோக்கி, அனுமானே! யான் மனமறிந்து பரபுருஷன்மேற்படேன், ராவணன் என்னைத் தொட்டெடுத்துவந்தானே யெனின், அவன் பலவானும், யான் அபலையுமாதலால், அவன் என்னைப் பலாத்காரமாய் எடுத்ததற்கு யான் யாதுசெய்வேன், என்னுடைய தேஹம் பராதீனமாதலின், அவன் தொடும்படி நேர்ந்தது, என் மனம் என் வசத்திலிருந்தமையின், அப்போதும் அது அவனைச் சேர்ந்திலது, ஸ்ரீராமனிடத்திலேதானே நிலைகொண்டிருந்தது, ஆதலின், யான் உன்னுடன் வர உடன்படேன், என்று அருளிச்செய்கிறபடியால், ராவணன் தொட்டே எடுத்துக்கொண்டு போனானென்று நன்கு தோற்றுகின்றது, சாயாக்கிரஹண சக்தியுடையனாதலின், நிழலையும்பிடித்தெடுத்தானென்னவும், சிலர் கூறுவார்கள். தமயந்தி தன்னைச் சேர வந்த வேடனை எரித்திருக்கப் பிராட்டியார் மாத்திரம் ஏன் ராவணனை எரித்திலர், அத்திறமையே பிராட்டியார்க்கிலதோவென்று சிலர் ஆக்ஷேபிப்பார்கள், பிராட்டியார் திறமையுடையாராயினும், (அனுகாஹமயீமவந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்) என்கிறபடியே கருணை கூர்ந்த திருவுள்ளமுடையாராதலின், ராவணனை எரித்திலரென்றறிக, மகன் துஷ்டனாகித் தாயாரைப் பிடிக்கினும், தந்தையுடன் சொல்லி யின்னைத் தண்டிக்கும்படி செய்வேனென்று தாயார் மிரட்டுவாரேயல்லது, கருணையுள்ள தாயார் மகனையடிப்பாரோ? அடியார், ஜகன்மாதாவல்லரோ பிராட்டியாரும், பிராட்டியார்க்குத் திறமையுள்ளதென்பது முதலானவை, சுந்தரகாண்டத்தில், பிராட்டியார் ராவணனை நோக்கி யுரைத்த (அஸந்தேசாத்து ராமஸ்ய தபஸஸ்சாநுபாலநாத், நத்வாம்குர்மிதசக்ரீவ பஸ்மபஸ்மார்ஹதேஜஸா) என்கிற சுலோகத்தினால் நன்றாக விளங்குமெனவுணர்க

ஸ்ரீர்; யாவளொருத்தியை நீ யபஹரிக்க நினைக்கின்றனையோ, அந்த இப் பெண்மணி, அந்த லோகநாதனான ஸ்ரீராமனுடைய தாமபத்தினி; மிகவும் கற்புடையாள்; மிகப் புகழ்மலிந்தவள்; ஸீதையென்னுந் திருநாமமுடை யாள்; தார்மிகனான ராஜன் பரத்தையலைச் சேர எவ்வண்ணம் விரும்புறு வான்? ராஜர்கள் பரத்தையல்களையே பாதுகாக்கவேண்டும்; ராஜபாரியை களையோவெனில், பெரும்பாலும் பாதுகாக்கவேண்டுமன்றோ? ஆதலின், நீ இந்தக் கெடுமதியைத் துறந்து, நன்மதியுற்று வாழ்க; மதியுடையோன் பிறர் கண்டு இகழ்ந்து நகைசெய்யத்தக்க செயலைச் செய்வானோ? மதியுடை யோன் தன் மனைவிகளைக் கற்பழியாது பாதுகாப்பதுபோலவே, பரத்தையல் களையும் கற்பழியாது பாதுகாக்கக்கடவன். ராஜாக்கள் தர்மசாஸ்திரத்தில் கூறப்படாத அறம்பொருளின்பங்களையே அநுபவிக்க விரும்பார்கள்; இக ழப்பட்டதை எவ்வண்ணம் கோருவார்கள்; அரசனே தருமம், அரசனே காமம், அரசனே பொருள், நன்மையாயினும், தீமையாயினும், அரசனடி யாகவே உலகில் நிகழுமன்றோ? அடா ராவணா! நீ இவ்வண்ணம் பாவியும், காமியும், கொடியனுமாகியும், பெருஞ் செல்வத்தை எவ்வண்ணமடைந்த னையோ? பாவிகள் விண்ணுடு சேர விமானம் பெற்றாப்போலாயிற்றே?—

కామం స్వభావో యో యస్య న శక్యః పరిమార్జితుం।
న హి దుష్టాత్మనామార్య మావసత్యాలయే చిరం॥

காமமஸ்வபாவோயோயஸ்ய நசக்யஃபரிமார்ஜிதும்|
நஹிதுஷ்டாத்மனாமார்ய மாவஸதயாலயேசிரம்||

எவனுக்கு எந்தப் பண்பு இயல்பாகவே உளதோ, அதனைப் போக்க வொருவரானும் முடியாது; ஆதலின், நீசர்களின் இதயத்தில் நலமெண்ணம் நிலையுற்று நெடுநாள் நிற்காது; அடா ராவணா! தாமாத்துமாவாகிய ஸ்ரீராமன் உன்னுடைய நாட்டிலேயாயினும், நகரிலேயாயினும், யாருக்காயினும் தீமை செய்த னனோ? அவன் விஷயத்தில் நீயேன் தீமைசெய்கின்றனை? சூர்ப்பணகை யின் பொருட்டுக் கரன் தாமாகக்கமாக எதிர்த்துத் திறந்தனனே யன்றி, ஸ்ரீராமன் வலுவில் சென்றடித்தனனோ? நீ இப்பொழுது ஸ்ரீராமன் பத்தினி யைக் களவாடி யோடுகின்றனை; இவ்விஷயத்தில் ஸ்ரீராமனிடத்தில் குற்றம் யாதுளதோ? உரையாய்; விரைவாகப் பிராட்டியாரை விட்டுவிடாய்; விடாமற் செல்வாயாகில், விருத்திராஸுரனை இந்திரன் வச்சிராயுதத்தினால் எரித்தாற் போலப் பெருமாளுன்னைத் தீக்கு நிகராகக் கண்களை முனிந்து விழித்தெரிப் பார்; ஸீதையாரை நீ எடுத்தோடுவது நச்சரவத்தை யுத்தரீயத்தில் மடித்து தெடுத்தோடுவதுபோலவும், காலபாசத்தைக் கழுத்தில் பூட்டிக்கொண்டோ டுவது போலவுமாகும்; இதனை நீ யறிகின்றிலையோ? எந்தச் சுமையை யொரு வன் சுமந்தால், அது தன்னை அழுத்தி யழிக்காமலொழிதாகுமோ, அந்தச் சுமையையே யவன் சுமக்கவேண்டுமே யன்றி, சுமப்பதற்கரிய சுமையை

எடுப்பது தகாது; எவ்வளவு அன்னம் புசிப்பானாகில், மந்தஞ் செய்யாது ஜீரணமாகுமோ, அவ்வளவு அன்னமே புசிக்கக் கடவன். எந்தச் செயலைச் செயின், தருமமாகாதோ, கீர்த்திவிளையாதோ, இகழ்வேவிளையுமோ, மெய்யுமவாடித் துன்புறுமோ, அத்தன்மையதாகிய செயலை எவன்றான் செய்வான்? அடா ராவணா![1] நான் பிறந்து தேவமானத்தால் அறுபதினாயிரம் வருஷமானபடியால், மிகவும் மூப்புற்றிருக்கிறேன்; பிறப்புமுதல் குலமுறையாக வந்த பக்ஷிராஜ்ஜியத்தை நீதிவழுவாமல் பாதுகாத்து மிளைத்தேன்; நீயோ யௌவனமுடையோனும், வில்லாளியும், கவசம்பூண்டவனுமாகின்றனை; ஆயினும், யான் பார்த்துக் கொண்டிருக்கையில், என்னை நிராகரித்து, வைதேஹியை எடுத்துக் கொண்டு தப்பிச் செல்ல வல்லமை கொள்ளாய்; வேதார்த்தங்கள் முற்றுமுணர்ந்தவனொருவனிருக்கையில், அவனெதிரில் நிலைகொள்ளாத ஹேதுவாதங்களினாலே பிரமாணமான ச்ருதியை யழிக்க முடியுமோ? அடா ராவணா! நீ சூரனாகில் என்னுடன் போர் செய்து, முகூர்த்தகாலம் நிற்க; கண்பொழுதில் என்னால் கொல்லப்பட்டவனாகிக் கரன்போலவே தரையில் வீழ்வாய், அடிக்கடி தைத்தியதானவர்கள் எவராலே கொலைப்பட்டனர்களோ, அந்த ஸ்ரீராமசந்திரனே உன்னையும் விரைவில் கொல்வார்; இப்பொழுதந்த ராஜபுத்திரர்களிருவரும் நெடுந்தூரஞ் சென்றனர்களே, யானிப்பொழுது யாது செய்வேன், அவர்களைக்கண்டஞ்சுங்கொண்டே நீ விரைவிலிறப்பாயென்பதிலுமையமில்லை; யான் பிழைத்திருக்குமளவும், இவளை நீ எடுத்தோட வல்லவனாகாய்; உயிரை வழங்கியாயினும், மஹாத்துமாவாகிய அந்த ஸ்ரீராமபத்திரனுக்கு உபகாரஞ்செய்வேன், தசரதசக்கரவர்த்தியும் எனக்குத் தோழராதலின், இவ்வண்ணம் அவசியம் செய்வேன், நில்லடா ராவணா! கண்பொழுது பாரடா! யானுனக்குப் போரென்னும் பூஜையை யளித்து மகிழ்விப்பேன்; காம்பினின்றும் பனம்பழங்களை யுதிர்ப்பதுபோல உன்னை இத்தேரினின்றும் கீழேதள்ளியுருட்டுவேன், என்று வீரங்கொண்டு நெடிதாகக் கூவியுரைசெய்தனன்.

ஆரணியகாண்டத்தில் ஐம்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

[1] ராவணன் ஐம்பதுலக்ஷம் வருஷங்களுக்குக் குறையாமல் ஜீவித்தானென்பதற்குப் பல திருஷ்டாந்தங்களிருப்பதினால், ஜடாயு தனக்கறுபதினாயிரம் வயதே ஆயிற்றென்றும், தன்னைவிட ராவணன் சிறியவனென்றும் உரைத்தது பொருந்தாதென்று, தேவமானத்தால் ஜடாயு அறுபதினாயிரம் வயதுடையேனென்றுரைத்ததாகப் பொருள் கொள்ளப்பட்டது. அவருடைய வயது மனுஷ்யமானத்தால் இரண்டு கோடி பதினாறுலக்ஷம் வருஷங்களாகின்றமையின், தன்னைவிட ராவணன் சிறியவனென்பது அமையுமெனக் கொள்க. இதுவும் இந்த வைவஸ்வத மன்வந்தரத்திலேயே பிறந்தானென்னும் பக்ஷத்திலேதான் அமையும், இந்த மன்வந்தரத்துக்கும் முன்பு பிறந்தானென்னும் பக்ஷத்தில்தான் அரசாட்சிசெய்த காலமே இவ்வளவென்றுரைத்தானெனப் பொருள் கொள்ளவேண்டும்;—

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

ஜடாயு ராவணனைப் பலவாறாக வருத்தித் தான் அவனால் துன்புண்டு பிராட்டியாரால் சோகிக்கப்பட்டது

ஜடாயு இவ்வண்ணம் நீதிப்படி யுரைசெய்கையில், ராவணன்கேட்டு மிக முனிந்து, இருபது கண்களினுந் தீப்பொறிகளெழ விழித்துக் கண்களூ செவந்து ஜடாயுவை எதிர்த்தோடிவந்து போர்செய்தனன். இவ்விருவர்க ளுக்கும் அந்தப் போர் மிகவும் காணப்போகக்கூசாந்தருவதாகி, கீழ்காற்று மேல்காற்றிரண்டினாலும், ஒன்றாகவொன்று மோதப்பட்ட மேகங்களின் சேர்க்கை போலவும், சிறகுகளுடன் கூடிய மால்யவந்தங்களென்னும் இரண்டு மலைகளும் போர்செய்தாற் போலவும் விளங்கிற்று; பின்பு, ராவணன் கூரிய பலவகைப்பட்ட கணைகளினால் ஜடாயுவை யடித்தனன். ஜடாயுவும் அவைக ளைப் பொறுத்துக்கொண்டு மூக்கினாலும், கால்களினாலும், ராவணனைக் கடித் துக் கீறி வருத்தினர் பின்பு, ராவணன் முனிந்து மிகவுங் கொடிய பத்துச் சரங்களினால் ஜடாயுவைப் பிளந்து மகிழ்ந்தனன். ஜடாயுவும் பிராட்டியார் ராவணன் தேர்மீது அழுது வருந்துவதைக் கண்டு, அந்தப் பாணங்களையும் லக்ஷி யஞ்செய்யாமல் விரைவாகவோடிக் கால்களினாலேதான் ராவணனுடைய வில் லையும், கணையையும் முறித்துத் தள்ளினர். ராவணனும் வேறுவில்லை யெடுத்துக் கொண்டு சினமூண்டு, ஆயிரம் பதினாயிரமாகக் கணக்கிறந்த பாணங்களை எய்து ஜடாயுமேலே நிறைத்தனன். ஜடாயுவும் கூட்டினிடையிலுறையும் பறவைபோல விளங்கி யந்தப் பாணங்களைக் கால்களாலும், துண்டத்தினாலும், சிறகுகளாலும் தடுத்துதைத்து துதறி, விரைவாக அந்த வில்லையும், கால்களினால் முறித்துப் பக்ஷங்களினால் உதறித் தள்ளிவிட்டு, பிசாசம்போன்ற முகங்களை யுடைய தேரில் கட்டிய கோவேறு கழுதைகளையும் கொன்று, சிறந்த அத் தேரையும் முறித்து, வெண்குடையையும், வெண்சாமரைகளுடன் முறித்துத் தள்ளித் தன்னைப் பிடிக்க வந்த ராக்ஷஸர்களையும் கடித்துக் கீழேதள்ளி மிதித்து, சாரதியின் பருத்த தலையையும் மூக்கினால் கடித்தறுத்துத்தள்ளி, ராவணனை யச்சமுறச் செய்தனர். ராவணனும் தேர் முறிந்து, வில்லொடிந்து, வாஹனமழிந்து, சாரதியிழந்து, சீதையை மடியிலேந்திக்கொண்டு, (தான் தொடாமலெடுத்துக்கொண்டு) தரையில் வீழ்ந்தனன். இவ்வண்ணம் ராவணன் விழக்கண்டு, எல்லாப் பூதங்களும் நன்கு நன்கென்று, ஜடாயுவை மகிழ்ந்து புகழ்ந்தன; ஜடாயுவும் மூப்புடையராதலின், இவ்வண்ணம் போர் செய்து இளைப்புற்று உட்கார்ந்தனர். ராவணனதுகண்டு மகிழ்ந்து, ஸீதா தேவியை யங்கத்தில் வைத்துக்கொண்டு விரைவாக வோடினன். ஜடாயு வீம அவனோடுவதைக் கண்டு, பறந்தோடி எதிர்த்துத்தகைந்து, அவனை நோக்கி, அடா ராவணா! வச்சிராயுதத்தையொத்த பாணங்களையுடைய ஸ்ரீராம

னுடைய பாரியையை நீ பிடிப்பதன்பொருட்டே யன்றோ, எடுத்தோடுகிறாய்? நீ புன்மதி யுடையோனாதலின், அறிகின்றிலை; பிரானை யுடனாலை விஷபானஞ் செய்வதுண்டோ மூடா! நீ இந்தச் சீதையை எடுப்பது, புத்திர மித்திர களத்திராதிகளுடன் விஷபானஞ் செய்வதை யொக்கும்; தாம்செய்யும் வினைகளினால் விளையும் பலனை யறியாதார்கள் விரைவி லழிவார்கள். இப்போழுது நீயே அவர்களுக்கு உதாரணமாகின்றனை, இப்பொழுது நீ கால பாசத்தினால் கட்டுண்டமையின், நீ எங்கே செல்லின் விடுபடுவாய்; மீனானது தானழிவதை யறியாமலே பசையூட்டிய தூண்டி முள்ளைக் கவ்வி யழிகின்றதன்றோ? மிகவும் சூரர்களாகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் நீ செய்த இந்த அபகாரத்தைப் பொறுப்பார்களோ? நீ யவர்களுக்கு அச்சங்கொண்டே கள்ளன் போலக் களவாடினை; இது மானமற்றோர்கள் செய்தற்குரியதேயன்றி, சூரர்கள் இவ்வண்ணம் செய்வார்களோ? நீ சூரனாகில் போர் செய்க; கண்டபொழுது நிற்க, கரன் போலவே நீயும் அடிபட்டிறப்பாய்;—

పరేతకాలేపురుషో యత్కర్మప్రతిపద్యతే।
వినాశాయాత్మనోఽధర్మ్యం ప్రతిపన్నోఽసికర్మతత్॥

பரேதகாலேபுருஷோ யத்கர்மப்ரதிபத்யதே
விநாசாயாத்மநோதர்ம்யம் ப்ரதிபந்நோஸிகர்மதத்||

(விநாசகாலே விபரீதபுத்தி:, யானை வருமபின்னே மணியோசை வரு முன்னே கேடுவருமபின்னே மதிகெட்டுவருமுன்னே) என்கிறபடியே மானிடர் ஆயுள்மாளுங்காலத்தில், தாமழிதற்கே ஏதுவான தீச்செயல்களையே நற்செயல்களென்னச் செய்வார்கள், அத்தன்மையதான தீச்செயலையே நீ இப்போது செய்தனை, எந்தச்செயல்செயினும், நன்மைவிளையுமோ, அச்செயலை லோகாதிபதியாயினும் செய்வானோ? என்றிவ்வண்ணம் இதமுரைத்தும் அவன் கேளாமையின், அவனது முதுகில் பாய்ந்து நகங்களினிடுக்கிக் கொண்டு கடித்துக் கீறிக் கிழித்து, மதமேறி வசப்படாத யானையை யதன் மேலேறிய கஜபாலன் போலப்பிடித்துத் தலைமயிர்களைக் கவ்வி யிழுத்துப் பிடுங்கி வருத்தினர். ராவணனிவ்வண்ணம் அவமானத்தையும், பீடையையும், மனவருத்தத்தையுமடைந்து, கோபத்தினால் உதடு துடித்துச் சீதையை இடது தொடையில்வைத்துக் கொண்டு கைகளினாலணைத்து, வலதுகைகளினால் ஜடாயுவை யறைந்தனன். ஜடாயுவும் அவனைச் சுற்றிப்பறந்து கடித்து, இடதுகைகள் பத்தையும் கடித்துத் தறித்துத் தள்ளினர். உடனே அக்கைகளும் புற்றிலிருந்து பாம்புகள் புறப்பட்டாற்போல முளைத்தன; பின்பு, ராவணன் சீதாபிராட்டியாரைத் தரையில் விட்டுவிட்டு முட்டிகளாலும், கால்களாலும் ஜடாயுவைக் குத்தி யுதைத்து மிதித்து வருத்தினன். பின்பிரு வருக்கும் முகூர்த்தகால்ம பெருஞ்சண்டை விளைந்தது; அநந்தரம் ஸ்ரீராம பத்திரனுக்கு உபகாரஞ்செய்வதன் பொருட்டே போர்செய்கின்ற ஜடாயு

வினுடைய சிறகுகளையும், பார்சுவங்களையும், பாதங்களையும், வாளினால் அரிந்து தள்ளிவிட்டனன். உடனே ஜடாயு ஆயுள் மாண்டு தரையில் விழுந்தனர். இவ்வண்ணம் பொருது குருதியில் நனைந்து விழுந்த ஜடாயுவைப் பிராட்டியார் கண்டு தன் தந்தை விழுந்தாற்போல மிகவும் துன்புற்றோடி வந்து, நீருண்ட கொண்டல்போன்றவரும், மூப்பினால் வெளுத்த மார்பினையுடையவரும், மிகவும் சூரமுடையவருமாகிய அவரைக்கட்டி யோடிவந்து தழுவிக்கொண்டு கூவி யழுதனர் *

ஆரண்யகாண்டத்தில் ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

மீளவும் ராவணன் ஸீதாபிராட்டியாரை எடுத்துக்கொண்டு செல்லுகையில், எல்லாவுயிர்களும் துன்பமடைந்து வருந்தியது.

பின்பு, ராவணன் ஜடாயு தரையில் விழுந்து மரணத்தசையை யடையக்கண்டு மகிழ்ந்தனன். முழுமதிபோன்ற திருமுகமண்டலத்தையுடைய பிராட்டியார் அவ்வண்ணமே ஜடாயுவைத் தழுவிப் புலம்பிப் பெருமாளைக் குறித்து, என் பிராணநாதா!—

నిమిత్తంలక్షణజ్ఞానం శకునిస్స్వరదర్శనం।
అవశ్యంసుఖదుఃఖేషు నరాణాంప్రతిదృశ్యతే॥

நிமித்தம்லக்ஷணஜ்ஞாநம் சகுநிஸ்வரதர்சநம்
அவச்யம்ஸுகதுக்கேஷு நராணாம்ப்ரதிதருச்யதே

கண்துடிப்பது முதலிய அங்கக்குறிகளும், கனவிலே மோர் முதலியவைகள் எதிரில் வருவதும், காக்கை முதலிய பறவைகள் தொனிசெய்வதும், மனிதர்களது இன்பதுன்பங்களையே உண்மையாக வறிவிக்கின்றனவல்லவோ? தேவரீர் எனக்குற்ற இத்துன்பத்தை யறிகின்றிலீரோ? என்பொருட்டே இப்பறவைகள் தேவரீரை நோக்கிக் கூவிப் பறக்கின்றனவே? என்னைப் பாதுகாப்பதன் பொருட்டே இந்த ஜடாயுவும் இந்தப் பாவியுடன்போர் செய்து அடிபட்டுத் தரையில் விழுந்தனரே? காகுத்தரே! என்னைப் பாதுகாத்தருள்க; லக்ஷ்மணா! என்னைக் காத்தருள்; என்று கூவி யழுது புலம்பினர். இவ்வண்ணம் மாலை வாடி யுதிர்ந்து வருந்தி அநாதைபோலப் புலம்புகின்ற பிராட்டியாரை எடுப்பதன் பொருட்டு, ராவணனோடிவந்து, கூவி யழு

---

இந்தச் சருக்கத்திலும் ராவணன் சீதாதேவியாரைத் தொட்டே எடுத்துக்கொண்டோடினனென்பது நன்கு விளங்கும்; குலமகளிர்க்குப் பலாத்காரமாய் ஒருவன் தொட்டமாத்திரத்தால் கற்பழியாது; பெண்கள் பிறரைச் சேரக் கருதினாலும், கற்பழியுமென வுணர்க

கொண்டு, கொடிபோல மரங்களைத் தழுவிக்கொண்டு வருந்துகின்ற பிராட்டியாரை விடுக விடுகவென்றுரைத்துத் தலைமயிரைப் பற்றியிழுத்துப் பிடித்தெடுத்தனன். பிராட்டியாரும் ராமா ராமாவென்று கூவியழுது புலம்பினர்; அப்பொழுது உலகமெல்லாம் நிலைகடந்து தவித்தன; எங்கும் இருளெழுந்து பரவிற்று; காற்றும் வீசிற்றிலது; கதிரவனும் ஒளியிழந்தனன்; சத்தியலோகத்தில் திசைமுகத்தேவனும் ஞானக்கண்ணால் இந்தச் செய்தியையறிந்து கொண்டு இனித்தேவகாரியம் நிறைவேறிற்றென்றுரைத்தனர். அங்குள்ள பரமயோகிகளெல்லோரும் துன்பமும் மகிழ்வுங்கொண்டனர்கள்; ராவணனும், ராமா ராமா! லக்ஷ்மணா லக்ஷ்மணா! என்று புலம்புகின்ற பிராட்டியாரை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்திற் சென்றனன்; பிராட்டியாரும் அணிமணியொளிபொருந்தி மின்னற்கொடிபோலத் திகழ்பவரும், பீதகவாடையுடுத்தவருமாகி, ராவணனை யனல்பற்றி எரிகின்றமாமலையைப்போல விளங்கச்செய்தனர். அவரணிந்த மாலையினின்றும் தாமரையிதழ்களுதிர்ந்து ராவணனைச் சுற்றிலும் வீழ்ந்தன; காற்றினாலசைக்கப்பட்ட பொன்பட்டும் கதிரவனது கதிரொளிபொருந்திய மேகம்போலத் திகழ்ந்தது. அப்பொழுது பெருமானைப் பிரிந்தமையின், பிராட்டியாரது திருமுகமண்டலம் காம்பினைக் கிள்ளிக் கரையிலெறிந்த கமலம்போல விளங்கியது. அழகிய நெற்றியும், அழகிய குந்தளங்களும் பொருந்திக் கமலத்தை நிகர்த்து வெண்மைபொருந்திய பற்களையுமுடையதாகிய பிராட்டியாரது திருமுகமண்டலமும், வானில் மேகத்திடையிற் செல்லுகின்ற முழுமதிபோலத் திகழ்ந்தது. ஆகிலும், ராவணனால் பீடைசெய்யப்பட்டமையின், பகலில் தோன்றிய சந்திரன்போலக் காணப்பட்டது; கரிய ராவணனருகில் பொன்னொளிகொண்ட பிராட்டியார் மேகத்திடையில் மின்னல் போலவும், யானை யணிந்த பொன்மாலை போலவும், பச்சிலை மரத்தில் படர்ந்த பொற்கொடிபோலவும் விளங்கினர். பிராட்டியார் சாத்திய மாலைகளினின்றும் நறுமலர்களுதிர்ந்து வரிசையாகத் தரையில் வீழ்ந்தன; அப்பொழுது திருவடியினின்றும் மணிகளிழைத்து மின்போல மின்னுகின்ற சதங்கைத்தண்டையும், இனிமையாக வொலித்துக்கொண்டு வீழ்ந்தது. பிராட்டியாரணிந்த மணியணிகளும், விண்மீன்கள்போலச் சிதறி வீழ்ந்தன; திருமார்பில் சாத்திக்கொண்டிருந்த முத்துவடமும், விண்ணினின்றும் கங்கைபோல் வீழ்ந்தது; அப்பொழுது உற்பாத வாயுவினாலசைக்கப்பட்டும், பலவகைப் பறவைகளினொலிக்கப்பட்டுமுள்ள மரங்கள் பிராட்டியாரை நோக்கி, அஞ்சேலென வுரைத்தனபோலவும், அசைக்கப்பட்ட கமலங்களை யுடையனவும், அச்சங்கொண்டு தவிக்கின்ற மீன் முதலிய ஜந்துக்களை யுடையனவுமாகிய தாமரையோடைகளும், தோழிகள் போலப் பிராட்டியாரைக்கண்டு துன்புற்றனபோலவும் விளங்கின; புலி கரடி முதலிய விலங்குகளும், பிராட்டியாரது நிழலைத் தொடர்ந்து பின்னோடி ராவணனைக் கடிக்க மேலெழும்பின; மலைகளும் அருவிகளென்னும் கண்ணீர்பொங்கிச்

சிறகுகளென்னும் கைகளை மேலெடுத்துப் பிரதித் தொனிகளினால் கூவி யழுதன; கதிரவனும் பிராட்டியாரைக் கண்டு ஒளிகுன்றி வெண்மைகொண்டு வெப்பந்தணிந்தனன்; ராவணன் தருமம், சத்தியம், ஃசடின்மை, அருள் இவை முதலிய நற்குணங்களுள் ஒன்றுமிலாதானாதலின், பிராட்டியாரைப் பற்றித்தானென்று எல்லாப் பூதங்களும் குவைகுவையாகக் கூடி யழுதன. மான் குட்டிகளும் அச்சங்கொண்டு தீனமுற்றுக் கூவின, வனதேவதைகளும் பிராட்டியாரைப் பார்த்துப்பார்த்துக் கண்ணீர்பெருக்கி மெய்ந்நடுங்கி வருந்தி யழுதன; இவ்வண்ணம் ராவணனும், தலைவிழுந்து, திலகமழிந்து, மனங்குன்றி, நாற்புறமும் நோக்கி, ஸ்ரீராமா! லக்ஷ்மணா! என்று கூவிக் கண்ணீர் பெருக்கி யழுகின்ற பிராட்டியாரை எடுத்துக்கொண்டோடினன். பிராட்டியாரும் பெருமாளிளையபெருமாள் இருவருமின்றித் தனியே யிருந்தமையின், ராவணனாலெடுக்கப்பட்டு, தம்மவரைக்காணாமல் முகவொளிகுன்றி யச்சங்கொண்டு சிந்தையுற்று வருந்தினர்.

ஆரண்யகாண்டத்தில் ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

பிராட்டியார் ராவணனை இகழ்ந்தது

இவ்வண்ணம் ராவணன் கோரரூபமுடையனாகிப் பிராட்டியாரை யெடுத்துக்கொண்டு ஆகாயத்திற் செல்லுகையில், பிராட்டியார் அச்சமும், துன்பமும், சினமுங்கொண்டு ராவணனை நோக்கி, அடா சண்டாளப்பயலே! நீ இவ்வண்ணம் நீசத்தொழில் புரிந்தும், நாணமுறுகின்றிலையந்தோ! யான் தனியே யிருப்பதையறிந்து, கள்ளன்போலக் களவாடி யோடுகின்றனையே? அடா நீசா! நீ என்னை யபஹரிப்பதன்பொருட்டே ஸ்ரீராமபத்திரனுக்கஞ்சி, மாயையினால் மான்செய்து, என்பர்த்தாவை நெடுந்தூரம் ஓட்டினைபோலும், என் மாமனாருக்குச் சகாவும் மிகவும் மூப்புடையாருமாகிய இந்தச் சடாயுவும், என்பொருட்டுப் போர்செய்து கொல்லப்பட்டனர். நீ மிகச் சூரன் போலும்; ஆகிலும், இவ்வண்ணம் கபடம் செய்யாமல் யான் ராவணனென்றுரைத்து எதிரில் நின்று என் பர்த்தாவுடன் போர்செய்து வெற்றிகொண்டு என்னை எடுத்துவருவாயாகில், சூரனே யாகுவாய்; இவ்வண்ணம் என்னைக் களவுசெய்தும் நாணுகின்றிலையே? பர்த்தாவின்றித் தனியேயிருக்கையில், பரத்தையலை எடுத்துவருவதென்பது மிக்க தீதென்யாரு முரைக்கின்றிலரோ? மிக்க கொடுமை கொண்டதும், தருமமற்றதுமாகிய உன்னுடைய சௌரியத்தையும், பலத்தையு மிகழ்க; நீ யுன்னை என் முன்னாகப் பொய்யாகவே புகழ்ந்து கொண்டனையே; பல குலத்தோர் அழிந்தழும்படியான் உன

னுடைய இச்செய்கையைச் சுடுக; நீ இப்பொழுது ஓட்டமாகவே ஓடுகின்றமையின், யாதுசெய்யக்கூடும்; நீ யொருகணப்பொழுதாயினும் நிற்க; பின்பு நீ பிழைத்துச் செல்லமாட்டாய்; நீ ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்கு முன்பாகப் படைகளுடன் கூடிப் போர்செய்வாயாயினும், பிழைத்து மீளமாட்டாய்; பற்றி யெரிகின்ற காட்டுத்தீயின் வெம்மையைப் பறவை பொறுக்காததுபோல அவ்விருவர்களது பாணவேகத்தை நீ பொறுக்க வல்லவனல்லை, நீ நன் காராய்ந்து என்னை விட்டு விட்டு உய்யும் வழி தேடிக் கொள்வாய்; என்னை நீ எடுத்துக்கொண்டு போவாயாகில், என் பர்த்தா முனிந்து தம்பியுடன் கூடி யுன்னைக் கொல்வர், நீ என்ன எண்ணங்கொண்டு என்னை எடுத்துக்கொண் டோடுகின்றனையோ? அந்த எண்ணம் ஒருகாலும் நிறைவேறாதென வுணர்க; தேவர்க்கு நிகராகிய என் பர்த்தாவைக் காணாமல் பகைவர்களுக்கு வசமாகிக் கணப்பொழுதும் உயிரை வைத்துக்கொள்ள விரும்பேன்; நீ மாளுங்காலங் கிட்டினமையின், இது நல்லதெனவும், இது தீதெனவும் உணர்கின்றிலை;—

మృత్యుకాలే యథా మర్త్యో విపరీతాని సేవతే।
ముమూర్షూణాం హి సర్వేషాం యత్పథ్యం తన్న రోచతే॥

*ம்ருத்யுகாலே யதா மர்த்யோ விபரீதாநி ஸேவதே*
*முமூர்ஷூணாம் ஹி ஸர்வேஷாம் யத்பத்யம் தந்ந ரோசதே॥*

மனிதர்கள் எல்லோரும் மரணகாலத்தில் தீமைகளையே செய்வார்கள்; அக்காலையில், அவர்கட்கு எல்லோர்க்கும் யாது நலமோ அது தோற்றாதன்றோ? இப்பொழுது உன் கழுத்தில் யமன் காலபாசங்களைப் பூட்டிக்கட்டுகின்றனென்ன நம்புகின்றேன், இப்பொழுது அச்சமுறவேண்டுகையிலும் அச்சமுறுகின்றிலையல்லையோ? விரைவில் மரணமுறுவார்கள்போல நீயும் எல்லாமரங்களையும், பொன்மயமுள்ளனபோலக் காணுகின்றனை போலும்; விரைவில் குருதிகளைப்பெருக்குகின்ற வைதரணீநதியையும் பலவகைப்பட்ட கோரமான நரகங்களையும் காணுறுவாய், இவ்வண்ணந் தீமைசெய்தும் பிழைப்பாயோ? விடத்தை யுண்பவனும், வாழ்வுற்று மகிழ்வானோ? அடா ராவணா! நீ காலபாசத்தினால் கட்டப்பட்டமையின், நீ எங்கே ஓடி யொளித்துக்கொள்ளினும், தப்பாய், ஒரு முகூர்த்தகாலத்திலேதானே என் பர்த்தாவினால் பதினாலாயிரம் ராக்ஷஸர்களுடன் கரதூஷணாதிகள் கொல்லப்பட்டனர்களல்லரோ? அவ்வண்ணம் மிகச்சூரராகிய என் பர்த்தா உன்னைக்கொலை செய்யாரோ? என்றிவ்வண்ணம் பலவாறாகவுரைத்து இகழ்ந்து தீனமாகப் புலம்பினர். ராவணனும் அந்த வார்த்தைகளை யொன்றும் கேளாமல் நடுக்குற்றுப் புலம்பி யழுகின்ற பிராட்டியாரை எடுத்துக்கொண்டோடினன்.

ஆரணியகாண்டத்தில் ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## ஐம்பத்து நான்காவது ஸர்க்கம்.

*பிராட்டியார் மஹாராஜா முதலிய ஐந்து வானரர்களைக்கண்டு ஆபரணங்களைக் கட்டி நழுவவிட்டதும், ராவணன் பிராட்டியாரை யசோக வனத்தில் வைத்து ராக்ஷஸிகளைப் பாதுகாக்கும்படி கட்டளையிட்டதும்.*

இவ்வண்ணம் ராவணனால் அபஹரிக்கப்பட்ட பிராட்டியாரும் தஞ்சமொருவரையும் காணாமல் மிக்க துன்பக்கடலில் மூழ்கிச் செல்லுகையில், ஒரு மலையின் உச்சியில் ஐவர் வானரர்கள் வீற்றிருக்கக் கண்டு தம் முந்திரியமான வெண்பட்டையும், நல்லணிகளையும், இவர்கள் இதனை எடுத்து வைத்திருந்து பெருமாளுக்களித்துச் செய்தி யுரைப்பாரகளென வெண்ணி, அவர்களினிடையில்விழ நழுவவிட்டனர். ராவணன் வேகத்தாலும், அச்சத்தினாலும், அதனை யுணர்ந்திலன்; அந்த வானரர்களும் பிராட்டியார் கூவி யழுவதைக் கேட்டுக் கண்டனர்கள். ராவணனும் பிராட்டியாரை எடுத்துக் கொண்டு பம்பாநதியைத் தாண்டி மகிழ்ந்து லங்கையை நோக்கிச் சென்று மடியில் நச்சரவத்தைக் கட்டிக்கொண்டானென்பதை யறியாமல், காடுகளையும், ஆறுகளையும், மலைகளையும், தடாகங்களையும், ஆகாயமார்க்கத்தினால் கடந்து, வில்லினின்றும் புறப்பட்ட பாணம்போல விரைவாகச் சென்று, திமிதிமிங்கிலாதிகள் சூழ்ந்தாழ்ந்த ஸாகரத்தையும் தாண்டினன். அப்பொழுது ஸாகரமும் கரைபுரண்டு மேலெழுந்த அலைகளை யுடையதும், தடையுற்ற மீன் முதலைகளை யுடையதுமாயிற்று; விண்ணிடையிலுள்ள சித்தசாரணரியர்களும், ராவணனுக்கு ஆயுள் இவ்வளவேயென்று மொழிந்தனர்கள்; மிருத்யுவே உருவங்கொண்டதோ வென்று ஐயுறத்தக்க பிராட்டியாரை ராவணன் மடமையினால் எடுத்துக் கொண்டு இலங்காபுரி சேர்ந்து, அந்தப்புரத்தினுட்புகுந்து, மயன் மாயையைப்போலப் பிராட்டியாரை யங்கெழுந்தருளப்பண்ணி, அங்குள்ள பிசாசங்களை நோக்கிக் கேளீர் பெண்களே! இந்தச் சீதையை மற்றொரு ஆணாயினும், பெண்ணாயினும், கண்ணுறுவண்ணம் பாதுகாத்தளிக்க; அணிகளையோ, ஆபரணங்களையோ, எவற்றை இவள் கோருகின்றனளோ? அவைகளை யளிக்க, அறிந்தாயினும், அறியாமையினாலாயினும், இவளை நோக்கி, யாவள் வன்மொழி மொழிவாளோ, அவள் உடனே கொலை செய்யப்படுவாள்; என்றிவ்வண்ணம் முரைத்துவிட்டு, அந்தப்புரத்தினின்றும் புறப்பட்டு இனி யாதுசெய்யத்தக்கதெனச் சிந்தை செய்து, எட்டு அரக்கர்களைக் கண்டு வரதானத்தினால் அகங்காரமுற்றவனாதலின், அவர்களை நோக்கிக் கேளீர் அன்பர்களே! நீங்கள் பற்பல படைகளையுமேந்தி இங்கிருந்து புறப்பட்டு முன்பு கரர்திகளிருந்திறந்த ஜனஸ்தானஞ் சேர்ந்து வாழ்க; அங்கே ராமனென்பவன் அவர்களைக் கொலை செய்தமையின், அவன்மேல் 'மிகச் சினங்கொண்டிருக்கின்றேன்; அந்தப் பகையையும்

னிராவில தீர்க்க முயல்கின்றேன்; அவனைக் கொல்வதன்முன்னம் யானி துயிலுங் கொள்ளேன்; பொருளற்றவன் பொருளையடைநதாபபோல யான் அந்த ராமனைக கொலைசெய்தின்புறுவேன்; நீஙகளஙகிருநதுகொண்டு அடிக் கடி எனக்குச செய்தி யனுபபுவதுமனறி, மிகவும ஊக்கததுடன ராமனைக் கொலலும வழியையே தேடுக; நீஙகள மிகவும சூரமுடையோர்களாதலின், உஙகளது திறமையையறிநதே ஏவுகின்றேனெனறு புகழ்ந்துரைததனன். அந்த எட்டு ராக்ஷஸாகளும அதனைககேட்டு மகிழ்நது அவ்வண்ணமேயாகுக வென்றுடன்பட்டு ராவணனைத தொழுது விடைபெற்றுககொணடு புறப் பட்டு ஒருவாககுஙகாணுமல ஜனஸ்தானம வநது சோநதனாகள, ராவண னுடைய பிராட்டியாரைப பறிததுப பெருமாளுடன் பகைததும, மடமையினுல மகிழ்ந்திருநதனன.

**ஆரணயகாணடததில ஐமபததுநானகாவது ஸாககம முறறிறறு.**

---

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்.

*ராவணன தன் செலவஙகளைப் பிராட்டியாாககுக காட்டித தனனைச சேருமபடி வேணடியது*

ராவணன மிகச சூராகளாகிய அநத எட்டு ராக்ஷஸாகளையும அனுப்பி விட்டு, தனனுடைய காரியஙகள் யாவுங கைககூடினவென மகிழ்நது வைதேஹியை நினைநது காமவேட்கைகொணடு மறுபடியும அநதப்புரஞ் சென்று ராக்ஷஸிகளின நடுவில எழுநதருளியிருநத பிராட்டியாா சோகங் கொணடு; கணணீாபெருககி, ஒளிகுனறி, அலைகடலில வாயுவினலலைத்து மூழ்ததபபட்ட மரககலமபோலவும, தனனினத்தை விட்டு நாயகளின் இடை யிலகபபட்ட மானபேடுபோலவும துனபமடைநது தலைகுனிநது சிநதையுறறு வருநதக் கணடு, பலாத்காரமாய அழைதது கொண்டுபோய் மாடம மேல் மாடங்கள் அடாநது, பறபல உயாநத பெணகள நிறைநது, பற்பல பறவைக ளொலிததுப பறபல மணிகளிழைதது, பொன, வெளளி, படிகம, வைடூரி யம், வைரம இவைகளினுல செய்யபபட்ட கமபஙகள நாட்டி, தேவதுநதுபி களை முழக்கி, தங்கத்தோரணங கட்டிக காணறகினிய தன வீட்டினுட் புகுந்து தங்கபபடியேறிப் பிராட்டியாாககுச சுட்டிக காட்டினன். அங்கு சில கவாக்ஷங்கள் தநதஙகளாலும, சில கவாக்ஷஙகள் தங்கஙகளாலும், சில வெள்ளிகளாலும் செய்யபபட்டுள்ளன; தரைகள நவமணிகளிழைத் தொளி கொண்டன; நடவாபிகளும, தாமரையோடைகளும், மலர்கள் மலர்ந்து, சுற் றிலும் மரங்களடர்ந்து திகழ்நதன; இவ்வண்ணம் பறபல விநோதங்களையும், ராவணன் பிராட்டியாக்குக்காட்டி ஆசையுறச்செய்யவேண்டு மென்னும் எண்ணத்தினுல் பிராட்டியாரை நோக்கிக் கேளடி பெண்மணி! மிக்கும்

கொடியவர்களாகிய முப்பத்திரண்டுகோடி ராக்ஷஸர்கள் என் வசத்திலிருக்கின்றனர்கள்; அவர்களெல்லோர்க்கும் யானொருவனே இறைவன்; மூப்புடையோரும், வாலிபர்களுந் தவிர ஒவ்வொரு வேலைக்கும் ஆயிரம் ஆயிரம் பேர்களிருக்கின்றனர்கள்; இத்தன்மையதாகிய இந்த ராஜ்ஜியமும், என்னுயிரும், யாவும் இனி யுன்னதீனமாயின; நீதான் எனக்குயிரினும் சிறந்தவள், இந்த அந்தப்புரத்தில் எனக்கு அநேகமாயிரம் பெண்கள் மனைவியர்களாயிருக்கின்றனர்; அவ்வெல்லோர்களுக்குங்கூட நீயே இறைவியாகக் கடவை; வேறெண்ணத்தைத் துறந்து என்மொழியைமகிழ்ந்து என்னை யங்கீகரித்தருள்க; அநேகமாயிரம் அரக்கர்களால் சூழ்ந்து காக்கப்பட்டுக் கடலிடையிலிருக்கின்ற இவ்விலங்கையும், இந்திரன் முதலிய தேவாஸுரர்களாலும் புகழப்படுமே. தேவயக்ஷகந்தர்வ பக்ஷிபன்னகாதிகளிலும், என்னை எதிர்ப்பவனொருவனையுங் கண்டிலேன்; அரசிழந்து, தீனமுற்றுத் தவம்பூண்டு, ஆயுள் குன்றி, அற்பமனிதனான ராமன் என்னை எதிர்ப்பானோ? இனி யவனால் யாதுசெய்வாய்? ஆதலின், என்னையே யடைக, யானே உனக்கு நிகராகுவேன்; யௌவனம் நிலையற்றதாதலின், என்னுடன் கூடி மகிழ்க, இனி ராமனைக் காண்பதில் மனமுறற்க; ராமன் இங்கு வரவேண்டுமென்று எண்ணுவதற்காயினும் வல்லனோ? அவனுக்கத்திறமை எங்குளது? காற்றினை யாகாயத்தில் கயிற்றினால் கட்ட முடியுமோ? தீ பற்றியெரிகையில், அதன் ஜ்வாலையைக் கையினால் பிடிக்க முடியுமோ? என்வசத்திலகப்பட்ட உன்னை விடுவிப்பவன் எங்குளன்? மூவுலகிலும் யான் எங்குங்காண்கின்றிலேன்; இந்த லங்காராஜ்ஜியம் மிகப்பெரிது, இதனை நீ பாதுகாக்க விரும்புறுக; என்போன்றவர்களும், தேவர்களும், மற்றுள்ள யாவர்களும் உனக்குப் பணிவிடை செய்வோர்களாகுவார்கள், நீ திருவபிஷேகம்பூண்டு மகிழ்ந்து, என்னையும் மகிழ்வித்தருள்க; நீ முற்பிறவியில் செய்த தீவினை வனவாஸஞ் செய்ததோடழிந்தது; இனிநல்வினையின் பலத்தை யனுபவிக்கக்கடவை; இங்குச் சிறந்த மாலைகளும், நற்சாந்தங்களும், நல்லணிகளுமுள; என்னுடன் கூடி இவைகளை யனுபவிக்கக்கடவை; என் பிராதாவாகிய குபேரனை வென்றிக்கொண்டு அவனிடத்திலிருந்த புஷ்பகமென்னும் திவ்விய விமானத்தைப் பறித்துக்கொண்டேன்; அதிலும் என்னுடனேறி விளையாடுக; தாமரைமலர் போல மலர்ந்த உன்னுடைய திருமுகமண்டலம் துன்புறுகையில் திகழ்கின்றிலது; என றிவ்வண்ணம் பிதற்றினன். பிராட்டியாரதுகேட்டுத் திருமுகமண்டலத்தை யாடையின் நுனியினால் மறைத்துக்கொண்டு கண்ணீர்பெருக்கிப் பெருமானையே நினைந்து ஒளிகுன்றி வருந்தினர். ராவணன் மீளவும் பிராட்டியாரை நோக்கி, அடி வைதேஹி! நீ இனி நாணமுறற்க; இதனால் தர்மலோபமொன்றுமில்லது; உனக்கும் எனக்கும் இப்பொழுது தெய்வத்தினாலே சேர்க்கை நேர்ந்தமையின், இதுவுந் தருமமேயாகும்; இஃது ரிஷிகளாலும் உகக்கப்பட்டது; யான் உனது திருவடிகளிரண்டிலும் தலைவணங்கி

வேண்டுகின்றேன்; அருள் செய்க; யான் உன்னுடைய தாஸனுமாகின்றேன்; யான் உன்னைப் பணிவேனென்று காமத்தீயினால் எரிக்கப்பட்டு வருந்துகின்றமையின், தீனமாகமொழிந்தேன்; ராவணனும் ஒரு பெண்ணைத் தலைவணங்கி வேண்டுவனோ? ஒருகாலும் வேண்டியிலன்; இப்பொழுது உன்னை மாத்திரமே வணங்கி வேண்டினேன்; என்றிவ்வண்ணம் உரைத்து மாளுங் காலங்கிட்டினமையின், இவள் எனக்கே உரியவளென்றெண்ணினன்.*

ஆரணியகாண்டத்தில் ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## ஐம்பத்தாறாவது ஸர்க்கம்.

*பிராட்டியார் ராவணனையிகழ்ந்து பெருமாளைப்புகழ்தலும், ராவணன் பிராட்டியார்க்குப் பன்னிரண்டுமாதம் கெடுவிட்டு வெருட்டி யசோகவனத்தில் வாழும்படி சேர்த்ததும்*

பிராட்டியார் ராவணனிவ்வண்ணமுரைத்த வாக்கியங்களைச் செவியுற்று மிக்க கோபங்கொண்டு ஒரு புல்லை நடுவிற்போட்டு அச்சமின்றி, யதனையே ராவணனாக எண்ணி, அதனை நோக்கி, அடா ராவணத்துரும்பே கேளடா! தசரதரென்னும் சக்கரவர்த்தியார் தருமத்திற்கழிவற்ற ஸேது போன்றவரும், சத்தியந்தவறாதவரும், மிகப் புகழுற்றவருமாகியிருந்தனர். அவருடைய திருக்குமாரரே ஸ்ரீராமபிரானென்பவர்; மூவுலகங்களிலும் புகழ் பெற்றவர்; நீண்டுருண்ட திருத்தோள்களையுடையவர்; செந்தாமரையிதழ் போன்ற திருக்கண்களையுடையவர்; அவர்தான் என் பதி, என் தெய்வம்; இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவர், சிங்கம் போன்ற தோள்களையுடையவர்; சிறந்த தோள்வலியுற்றவர், அவர்தான் லக்ஷ்மணனென்னும் தம்பியுடன் கூடிவந்து உன்னுயிரை மாய்க்கப்போகின்றனர், நீ என்னை யவர் திருமுன்பே எடுத்துவருவாயாகில், கரன்போலவே நீயும் அப்பொழுதே யடிபட்டு ஜனஸ்தானத்திலேகானே வீழ்ந்திறந்திருப்பாய்; அநேக கோடி ராக்ஷஸர்களிருக்கின்றனரென்று எண்ணற்க; அவர்களெல்லோரும் என் பர்த்தாவினிடத்தில் திறமையற்றவர்களாகுவார்கள்; நச்சரவங்கள் பிறரைக் கடித்துக் கொல்லினும், கருடனிடத்தில் விஷமற்றனவாகின்றனவல்லவோ? என் பர்த்தாவின் வில்லினின்றும் விடப்பட்ட கூரிய கணைகள் உன்னுடைய சரீரத்தில் வீழ்ந்து கங்கையின் வெள்ளம் கரையை மோதி யழிக்கின்றது போல உன் சரீரத்தையும் அழித்துக் களைக்கப்போகின்றன; தேவாஸுரர்

---

* கீழ் ஸர்க்கத்திலும், இந்த ஸர்க்கத்திலும், ராவணன் பிராட்டியாரை வேண்டித் தன்னை முன்போலவே தாஸனாகச்செய்துகொள்ளும்படி விண்ணப்பம் செய்து, அவ்வண்ணமே நிறைவேறுமென நினைத்தனனென்னவும் கருதத்தோன்றும்; கூர்மதியோர் ஆராயின் இது நன்கு விளங்கும்.

களைப் பகைத்து நீ வெற்றிகொள்ளினும், இவர்க்குத் தீங்கு செய்தபின்பு, நீ உய்யாய்; உன்னுடைய மிகுந்துள்ள ஆயுளை மாய்ப்பதற்கு என் பர்த்தாவே காரணமாகின்றனர்; யாகவேதியில் யூபஸ்தம்பத்தில் கட்டப்பட்ட ஆட்டுக்குட்டிபோல் உனக்கும் இனி உயிர்வாழ்தலரிது; என் பர்த்தா உன்னை இப்பொழுது சீறிக் கடாக்ஷிப்பாராகில், நீயுடனே எரிந்தழிந்து விடுவாய்; என் பர்த்தா சந்திரனை விண்ணினின்றும் தரையில்விழச்செய்யினும் செய்வார்; அழிக்கினும் அழிப்பார்; கடலை உலர்த்தினும் உலர்த்துவார்; அத்திறமையுடைய அவர் என்னை விடுவிக்கமாட்டாரோ? நீயரசிழந்து பலமொடுங்கி, வலிமைகுலைந்து, மதிமயங்கி, ஆயுள்மாளும் காலம் கிட்டினமையின், என்னைப் பறித்தோடிவந்தனை, உன்னால் இவ்விலங்கையே கைம்பெண்ணாகப்போகின்றது; நீசெய்த இத்தீச்செயல் ஒருக்காலும் நலந்தருவதாகாது; என்னை நீ பலாத்காரமாக எடுத்தோடி வந்தனையே? யான் உன்மேல் ஒருக்காலும் இச்சைகொள்ளேன்; அந்த ஸ்ரீராமபிரானே எனக்குத் தெய்வமும், பர்த்தாவும் ஆகுவார்; அவர் மிகச் சிறந்த காந்தியுடையவர்; அச்சமற்றவர்; தோள்வலியினாலேதானே தனியே தண்டகாவனத்தில் வாசஞ்செய்து கொண்டிருக்கின்றனர்; அவர் உன்னுடைய வீரத்தன்மையையும், மதத்தையும், தோள்வலியையும், இறுமாப்பையும் போக்கப்போகின்றனர்; எல்லாவுயிர்களும் விநாசகாலத்தில் நற்செயலைத்துறந்து தீச்செயலில் விருப்பங்கொள்ளுகின்றன; என்னை நீ இவ்வண்ணம் அநியாயமாய் எடுத்துவந்தமையின், அந்த விநாசகாலம் உனக்கும் கிட்டியிருக்கின்றது; நீ விரைவில் இனத்தார் சுற்றத்தார் முதலிய யாவருடனும் அழிவாய்; ஹோமத்திரவியங்கள் நிறைந்து, வேதியர்களால் சூழ்ந்து, மந்திரிக்கப்பட்ட யாகவேதியைச் சண்டாளனால் தீண்ட முடியாததுபோலப் பதிவிரதையான என்னைக்கிட்ட உன்னாலும் முடியாது; மலர்ந்த தாமரை மலர்மிசை ராஜஹம்ஸத்துடன் கூடி மகிழ்கின்ற அன்னப்பேடு புற்குவையின்மேலிருக்கின்ற நீர்க்காக்கையைக் கண்ணெடுத்துப் பார்க்குமோ? உணர்வற்ற என்னுடைய இந்தச் சரீரத்தைக் கட்டினுங்கட்டுக, கடித்துத் தின்னினும் தின்க; எனக்கு இச்சரீரமும் உயிரும் பாதுகாக்கத்தக்கனவல்ல; இவ்வுலகில் அழிவற்ற புகழெனனும் சரீரமொன்றே இகழ்வுறாது காக்கத்தக்கது; ஆதலின், யான் ஒருகாலும் பழிக்குரியவளாகேன்; என்றிவ்வண்ணம் வன்மொழிமொழிந்து மேலொன்றும் மொழியாது மௌனமடைந்தனர். ராவணனும் அந்த வாக்கியங்களைக்கேட்டு மிகவும் முனிந்து பிராட்டியாரை நோக்கி, கேளாய் மிதிலாதிபதியின் திருமகளே! யான் உனக்கு இன்றுமுதல் பன்னிரண்டுமாதம் கெடுவுகொடுத்திருக்கின்றேன்; அதற்குள் உடன்பட்டு என்னை நீ சேராயாகில், பின்பு உன்னை யான் தின்பதன்பொருட்டுப் பாசகர்கள் வெட்டித்துண்டித்துச் சமைக்கக் கடவர்களென்று முடிவுரைத்து, அருகிலிருந்த அரக்கிகளை நோக்கி, விரைவாக வருக; தாதிமார்களே! நீங்கள் இவளை யழைத்துக்கொண்டுபோய் இவளு

கட்டிய தர்ப்பத்தைப் போக்குக என்று கட்டளையிட்டனன். உடனே அந்தக் கொடிய ராக்ஷஸிகளும் அவ்வண்ணமே செய்வோமென்று கைகுவித்துப் பதிலுரைத்துப் பிராட்டியாரைச் சூழ்ந்துகொண்டு நின்றனர்கள். ராவணன் மீளவும் அவர்களை நோக்கி, அரக்கிகளே! இவளை யசோகவநிகையின் நடுவில் அழைத்துக்கொண்டு போய்ச் சேர்க்கக் கடவீர்கள். அங்கிவளைச் சூழ்ந்து பாதுகாத்து வருக; அங்கிவளை வெருட்டியும், நன்மொழியுரைத்தும் அன்று காட்டினின்றும் பிடித்துவந்த யானைப்பெட்டையைப்போலப் பழக்கி, என்வசமாகும்படி செய்க; என்று கட்டளையிட்டு, அடிவைப்பினாலேதானே பூமியைப் பிளப்பவன்போல நடந்து தன் மனை சேர்ந்தனன். அவ்வரக்கிகளும் அந்தப்படியே பிராட்டியாரை யழைத்துக்கொண்டு அசோகவனம் சேர்ந்தனர்கள். பிராட்டியாரும் புலிக்கூட்டத்திலுள்ளகப்பட்ட பெண்மான்போல அவ்வரக்கிகளால் சூழப்பட்டு நடுங்கித் துன்புற்றுச் சிறிதும் மனந்தேறியிலா; அந்த அசோகவனமும் எக்காலையிலும் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தழைத்த பலவகை மரங்களடர்ந்து எப்பொழுதும் மதுவுண்டு மதங்கொண்ட பற்பல பறவைகளினொலிக்கப்பட்டு விளங்கிற்று; அப்பொழுது பிராட்டியாரும் அங்கிருந்து மிகத் துன்புற்றுப் பெருமாளையே தியானஞ்செய்துகொண்டு வேறொன்றினையும் கண்ணுறாமலும் நினைக்காமலழுது, மயக்கங்கொண்டு எழுந்தருளியிருந்தனர்.

ஆரண்யகாண்டத்தில் ஐம்பத்தாறாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

பெருமாள் மாரீசனைக் கொலைசெய்து மீண்டு வருகையில், இளையபெருமாள் வந்துவிட்டதையும் அபசகுனங்களையும் கண்டு, பிராட்டியார்க்குத் தீங்குநேர்ந்திருக்குமென்று சிந்தையுற்றது.

அங்கே பெருமாளும் மானுருக்கொண்ட அந்த மாரீசனைக் கொலைசெய்து விரைவாக மீண்டுவருகையில், தன் பின்புறத்தில் நரி கோரமாக ஊளையிட்டுக்கண்டு அந்தோ! யாதோ தீங்குநேர்ந்திருக்கின்றது; வைதேஹி ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்படாமல் இன்புற்று வாழ்ந்திருப்பாளா? மாரீசன் என்னைப்போலக் கூவி யழுதத்தொனியை லக்ஷ்மணன் கேட்டிருப்பானாகில், ஸீதையை யங்கே விட்டுவிட்டோடி வருவான்; ஸீதையும் அந்தத்தொனியைக் கேட்டவுடன் மிகத் துன்புற்று லக்ஷ்மணனை யுடனே என்னிடமனுப்பிவிடுவாள்; ஸீதையை யந்தத் தருணம்பார்த்து ராக்ஷஸர்கள் பலர்கூடிக் கொலைசெய்ய நினைப்பார்கள்; இந்த எண்ணத்தினாலேதானே மாரீசன் மானுருக்கொண்டு என்னை நெடுந்தூரம் இழுத்தலைத்தனன்; ஸீதாலக்ஷ்மணர் களிருவர்க்கும் மங்களமுண்டாகுமா? கராதிகளைக் கொலை செய்ததுமுதல்

ராக்ஷஸர்கள் எனமேல் பகைகொண்டுசமயம பார்த்திருக்கின்றனர்கள்; இப்பொழுது பறபல அபசகுனங்களும காணபபடுகின்றன; என றிவ்வண்ணஞ் சிநதை செய்துகொண்டே விரைவாக வருகையில், இளையபெருமாள் தனியே வரககண்டு கிட்டியவரை நோககி, அடா லக்ஷ்மணா! ராக்ஷஸர்கள் நிறைநத இநதககொடிய கானகததில சீதையைத தனியே விட்டு வரலாகுமோ? நீ இப்பொழுது சீதையை விடடு வநதது இகழத தககதேயனறி, உகககததககதாகாது; இனி நமககு நல மெவவணணம உளதாகும? சீதை ராக்ஷஸாகளால கொலலபபடடனளோ? பக்ஷிககப படடனளோ? அலலது, பறிததொளிககப படடனளோ? இனியாம சீதையை யாசிரமததில காணோம; இவவிஷயததில யான சிறிதும ஐயமுறுகின்றிலேன்; மிகவும அபசகுனஙகளே யாகினறன; அடா லக்ஷ்மணா! சீதை யழி வறறிருககவும காணபோமா? நரி முதலிய விலஙகுகளும, பறவைகளும கோரமாக நாறபுறங்களிலும கூவுகினறனவே; சீதை நலமுறறிருபபாளா? இநத மாரீசனும மானுருககொணடு எனனை மோசஞ்செயது நெடுநதூரமலைததுக கடையில் என்னால கொலைசெய்யபபட்டு இறக்குமபொழுது அரககனாயினன்; என்னுடைய மனமும மகிழவறறு வருநதுகினறது; இடககணணும துடிககினறது; அடா லக்ஷ்மணா! சநதேஹமேயிலலை; சீதை பறிககப படடனளோ? அலலது, கொலலபபட்டனளோ? அலலது, நடுவழியில இழுககபபடுகினறனளோ? நாம இனிச சீதையைக காணமாட்டோம; நீ சீதையை விடடு வநதது தகுதியறறது; எனறு லக்ஷ்மணருடைய கையைப பிடிததுககொண்டு உரைதது இகழநது வருநதினா.

ஆரணயகாணடததில ஐமபததேழாவது ஸாககம முற்றிறறு.

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

பெருமாள இளையபெருமாளுடன் திருமபிவநது பிராட்டியாரை எங்குஙகாணாமல மிகவும துயருறறு வருநதியது.

பெருமாள் மீளவும பிராடடியாரைவிடடுத தனியே வநத இளையபெருமாளை நோக்கி, அடா தமபி லக்ஷ்மணா! யான் திருவயோததியை விட்டுத தண்டகாரணியததுககுப புறப்படுகையில, யாவளொருததி முறறுந துறநது என்னையே நம்பிய பின்றொடாநதனளோ, அநதச சீதை இப்போது எங்கிருககினறனள் உரையாய்; யான் அரசிழநது தீனமுறறுக காடுறைநது வருந்துகையில, யாவள் துணையாயினளோ, அநத என தருமபத்தினி எங்கே? அவளைப்பிரிநது யான் கணபபொழுதும இனபுறேன் வாழேனே; அநத நாயகி எங்கே? இநதப் பார்முழுதும ஆளுகையாயினும், இநதிரன்பட்டததையாயினும, யான் அநதச சீதையின்றி விரும

பேன்; எனதுயிரினும் பிரியமுள்ள அந்த ஜாநகி பிழைத்திருக்கின்றனளா? யான் பதினாலாண்டு வனவாஸஞ் செய்வேனென்று செய்த பிரதிஜ்ஞை, பொய்யாகாமல் நிறைவேறுமா? (சீதையைக் காணேனாகில், உடனே இறப்பேன்; அப்போது பதினான்குவருஷம் பூர்ணமாகாமல் போய்விடுமே) அடா லக்ஷ்மணா! சீதையை யிழந்து, யானிறந்து, நீ மாத்திரம் படைவீடுபோய்ச் சேர்வாயாகில், கைகேயி மனமீடேறி இன்புற்று வாழ்வாள்; தன்மகன் பாராளுகின்றனனென்னச் செருக்குற்றிருக்கின்ற கைகேயியை மகனையிழந்த என் மாதா தினந்தோறும் வந்து வந்து பணியவேண்டுமே; காலமே! நெருமந்தோ! அவ்வண்ணம் நேராமல் நமை விடாயுமா? சீதை யாசிரமத்தில் பிழைத்திருக்கின்றனளாயின், ஆச்சிரமத்திற்கு வருவேன்; இறந்திருப்பாளாயின், யான் இவ்விடத்திலே தானே உயிர் விடுவேன்; யான் ஆச்சிரமத்திற்குச் செல்லுகையில், சீதை புன்னகையுடன் இனியமொழி மொழியாளாயின், உடனே இறப்பேன்; அடா லக்ஷ்மணா! நீ யுண்மை யுரையாய்; சீதை பிழைத்திருக்கின்றனளா? இல்லையா? ஒருவேளை நீ யூக்கமற்றிருக்கையில், அரக்கரால் பக்ஷிக்கப்பட்டனளோ? அவள் மிகவும் ஸௌகுமார்யமுடையவளும், இளமையுற்றவளும், துன்புறத்தகாதவளுமாதலின், என்னைப் பிரிந்ததனால் மிகவும் துன்புற்றே யிருப்பாளென நம்புகின்றேன்; அந்தக்கொடிய மாரீசன் இறக்குஞ் சமயத்தில் என்னைப்போலக் கூவி யழைத்தமையின், அதைச் செவியுற்று நீயும் அச்சமுற்றிருப்பாய்; சீதையும் அந்தத்தொனியைக் கேட்டுத் தன்புற்று உன்னை யனுப்ப நீயும் அந்த வாக்கியத்தைத் தவறாமைக்காக அவளை விட்டு வந்தனையென எண்ணுகின்றேன்; எவ்விதத்திலும் நீ சீதையை விட்டு வந்ததினால் மிகவும் கஷ்டம் நேர்ந்தது; அந்தக் கொடிய ராக்ஷஸர்கள் நம்மேலுள்ள பகையைத் தீர்த்துக்கொள்வதற் கிடங்கொடுத்துவிட்டனை; கரன் வதத்தினாலே துன்புற்றுப் பகைகொண்டிருந்த ராக்ஷஸர்கள் இத்தருணத்தில் சீதையைக் கொலைசெய்திருப்பார்களென்பதிலையமில்லது; அடா லக்ஷ்மணா! இனியான் துன்பக்கடலில் மூழ்கினேன்; இனிச்செய்யத்தக்கதென்ன? விதிவசம் இத்தன்மையதெனவே எண்ணுகின்றேன்; என றிவ்வண்ணம் முரைத்துச் சீதாதேவியையே நினைந்துகொண்டும், இளையபெருமாளை இகழ்ந்து கொண்டும், பசியினாலும், சிரமத்தினாலும், சோகத்தினாலும், பெருமூச்செறிந்து கொண்டும், முகம்வாடி, ஒளிகுன்றி, விரைவாக வாசிரமத்திற்கு வந்து சீதையைக்காணாமல், மற்றும் பற்பல இடங்களிலும் தேடி யெங்குங்காணாமையினால், இதுதான் அது (யான் எண்ணபடியேயாயிற்று) இதுதான் (யான் இங்குவந்ததற்கு மூலம்) என்று நினைந்து மயிர்க்குச்செறிந்து துன்புற்று வருந்தினர்.

ஆரண்யகாண்டத்தில் ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

பெருமாள் இளையபெருமாளை நோக்கி, ஏன் சீதையைவிட்டுத் தனியே வந்தனையென்று வினவியருள, இளையபெருமாள் பிராட்டியாருரைத்த வன்மொழியால் வந்தேனென்ன உரைத்தருளியது

இது முன்பு சுருக்கியுரைத்ததையே மீளவும் விரிவாக வுரைத்தது.

அநந்தரம் ஆசிரமத்தினின்றும் பிராட்டியாரைவிட்டுத் தனியேவந்த இளையபெருமாளைப் பெருமாள் நோக்கி, அடா லக்ஷ்மணா! நீ சீதையைத் தனியே விட்டு விட்டு ஏன் வந்தாயடா? உன்னை நம்பியே நான் அவளை விட்டு வந்தேனே; நீ தனியே வந்ததைக்கண்டு என்மனம் மிகவும் நடுங்குகின்றது; என்னுடைய இடக்கண்ணும், இடத் தோளும், இதயமும் துடிக்கின்றன; சீதையை ஏன் விட்டு வந்தனை யுரையாயென்ன வினவுதலும் இளையபெருமாள் பெருமாளை நோக்கி, ஸ்வாமி எம்மையரே! யான் சுயமாகவே பிராட்டியாரை விட்டு விட்டு வந்திலேன்; பிராட்டியார் மிகவும் கொடிய வன்மொழிகளினாலென்னை இங்கு நீங்கவிண்மையின் வந்தேன்; தேவரீர்ஸ்வரப்போல அந்த மாயா மாரீசனால் அந்தோ? லக்ஷ்மணா! அந்தோ? வைதேஹி! காத்தருள்க; என்று கூவின கூக்குரலைப் பிராட்டியார் செவியுற்று, தேவரீருக்கே தீங்குநேர்ந்ததாக எண்ணி, மிக வருந்தி, அச்சங்கொண்டு, கண்ணீர்பெருக்கி யழுது போபோவென்று என்னை ஏவினார். அதற்கு யான் உடன்படாமல் அம்மா! இது பெருமானுடைய தொனியேயன்று; யாரோ வஞ்சனை செய்வதன்பொருட்டுக் கூவுகின்றனர்; அஞ்சற்க; என்று யான் பெரும்பாலும் தேற்றி மறுத்துரைத்தேன்; தேவர்களையும் பாதுகாக்கவல்ல எம்மையர் இவ்வண்ணம் அற்பன்போலக் கூவுவாரோ? என்றும், உறுதியாகவுரைத்து வேண்டினேன்; பிராட்டியார் அதனைக்கேட்டும் தீரமுறாமல் மீளவும் ஏவினார்; மீளவும் யான் அவரை நோக்கி, அம்மா! நீர் ஏன் வீணுக்குத்துயருறுகின்றீர்; தேவரீரும் இவ்வண்ணம் துன்புறலாகுமோ? யாவனோ ஒரு அரக்கனே என்னையர் போலக் கூவினன்.

నసోఽస్తి త్రిషులోకేషు పుమాన్వై రాఘవం రణే ।
జాతో వా జాయమానో వా సంయుగే యః పరాజయేత్ ॥

நஸோஸ்திதரிஷுலோகேஷு புமான்வைராகவமரணே ।
ஜாதோவாஜாயமானோவா நம்யுகேயஃபராஜயேத். ॥

என்னையரைப் போரில் எதிர்த்து வெற்றிகொள்ளத்தக்க திறமையுடையோன் மூவுலகங்களுள்ளும், பிறந்தவர்களுள்ளும், பிறக்கிறனவர்களுள்ளும், ஒரு ஆண்பிள்ளையுமிலன்; இந்திரன் முதலிய தேவர்களாலும் வெற்றிகொள்ளப்பட்டாரென்று பலவிதமாகவுந் தேற்றினேன்; அதற்கும்

மனந்தேறாமல் மனங்கலங்கிக் கண்ணீர்பெருக்கி என்னை நோக்கி, ஸௌமித்துரு! நீ என்மீது மிக விருப்பங்கொண்டிருக்கின்றனை; ஆதலின், அண்ணன் இறக்கவேண்டுமெனவே நீ நினைக்கின்றனை; என்னை நீ ஒருபொழுதும் அடையாய்; சமயம்பார்த்து ராமனைக் கொலைசெய்து என்னைக் கொண்டு வரும்படி பரதன் ஸங்கேதஞ்செய்தே உன்னை யனுப்பியிருப்பான்; ஆதலாலே, என் பிராணநாயகர் துன்புற்றுக் கூவுகையிலும், நீ விரைந்தோடிப் பாதுகாக்கின்றிலை; என்னைப் பெறுவதன் பொருட்டே நீ கஷ்டங்கொண்டு உடன் வந்தனை; ஆதலின், நீ பகைவனே யாகின்றனை; என்றிவ்வண்ணம் பிராட்டியார் என்னைப் பழித்துரைத்தமையின், யான் சினங்கொண்டு, கண் சிவந்து, உதடு துடித்து, வெறுப்புற்றோடி வந்தேனென்று மொழிந்தனர். பெருமாள் அம்மொழியைக்கேட்டுப் பின்னும் இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! நீ யாதுரைக்கினும் சீதையைத் தனியே விட்டுவந்ததென்பது குற்றமேயாகும்; எல்லா ராக்ஷஸர்களையும் யான் கொலை செய்வேனென்பதை யறிந்தும், சீதையின் கோபவாக்கியத்தைக்கேட்டு வந்தது தகுதியற்றது; நீ சீதையை விட்டு வந்ததை யான் தகுமென வுகவேன்; பெண்கள் சினமுறுவதும், வன்மொழி மொழிவதும் இயல்பேயாதலின், அதற்காக நீ வந்தது தகாது; சீதை முனிந்துரைத்த வன்மொழியைக்கேட்டு நீயும் முனிவுகொண்டு என் கட்டளையை மீறிவந்ததென்பது உனது குற்றமேயாகும், மான்வேஷங்கொண்டு யாவனொருவன் என்னை நெடுந்தூரமழைத்தனனோ, அந்த மாரீசன் என் கணையினாலடிபட்டு இதோ வீழ்ந்திருக்கின்றனன் பாராய்; யான் வில்லைப் பிடித்து நாணையிழுத்துக் கணைதொடுத்தெய்கையில், உடனே இவன் மானுருவை விட்டுக் கேயூரகுண்டலாதியாயுள்ள வணிகளை யணிந்த ராக்ஷஸசரீரத்தை யடைந்திறந்தனன்; அவனே என்னைப்போலத் தொனிகொண்டு கூவினன்; அதைக்கேட்டு நீயும் சீதையைத் தனியேவிட்டு வந்தனை யந்தோ! என்றருளிச்செய்தனர்.

ஆரண்யகாண்டத்தில் ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## அறுபதாவது ஸர்க்கம்.

பெருமாள் பிராட்டியாரைக்காணாமல் தேடியலைந்து வருந்தல்.

அனந்தரம் பெருமாளிளையபெருமாளுடன் விரைவாக எழுந்தருளுகையில், இடக்கண் துடித்துக் காலிடறி மெய்நடுங்கி மனங்குன்றினமையின், இந்த அவசகுனங்களினால் யாதோ தீது நேர்ந்ததென எண்ணி, சீதைக்கு க்ஷேமமும் நேருமாவென்று உரைத்துக்கொண்டே வந்து ஆசிரமத்தில் பிராட்டியாரைக்காணாமல் வருந்தி, வேகத்தினால் மேலெழுபவர்போலவும், கைகளை யுயரவெடுத்துக்கொண்டு எங்கெங்கே பிராட்டியார் வீற்றிருக்கும்

ட்டமோ, அங்கங்கே எழுந்தருளிய பிராட்டியாரைக் காணாமல் பனிக்காலத்தில் சோபையிழந்து மடலுதிர்ந்த தாமரைபோலவும், வாடி வருந்திய பூ பறவை விலங்குகளையுடைய மரங்களினால் அழுகின்றது போலவும் ஒளியிழந்து, வன் தேவதைகளினால் துறக்கப்பட்டும், அங்கங் கிறைக்கப்பட்ட தருப்பை, மரவுரி, தவிசு, பாய் முதலியவற்றை யுடையதுமாகிய பாழடைந்த பர்ணசாலையைக் கண்டு புலம்பலுற்றனர். அந்தோ வைதேஹி! அரக்கர்களால் பறிக்கப்பட்டனளோ? அல்லது, கொல்லப்பட்டனளோ? அல்லது, வழிதப்பி எங்கேயாயினும் சென்றனளோ? அல்லது, பக்ஷிக்கப்பட்டனளோ? அல்லது, அச்சமுற்று மறைந்திருக்கின்றனளோ? அல்லது, காய் கனி மலர் தளிர்களைக் கொய்வதன்பொருட்டுக் கானிடைச் சென்றனளோ? அல்லது, தீர்த்தம் கொணர்வதன்பொருட்டுக் கோதாவரிக் கெய்தினளோ? என்றிவ்வண்ணம் எண்ணிப் புலம்பி யங்கங்குச்சென்று தேடியும் பிராட்டியாரைக் காணாமல் சோகத்தினால் கண்சிவந்து பித்தேறினவன்போல ஒரு மரத்தினின்றும் மற்றொரு மரத்துக்கும், மலையினின்றும் மலைக்கும், நதியினின்றும் நதிக்குமாக வோடி யலைந்து, கடப்பமரத்தை நோக்கி, அடா கதம்பா! சீதை யுன்மேல் மிகப் பிரியமுடையளாகுவாள்; அவளை நீ எங்கேயாயினும் கண்டாயா? அறிவாயாகில், உரையாயென்று வினவி, பில்வமரத்தையுங் கிட்டி அடா பில்வா! என் பாரியை உன்னுடைய இளந்தளிர்போலக் கோமளத்தமமான திருமேனியுடையாள், பீதாம்பரமுடுத்திருப்பாள், உன்கனியையொத்த கொங்கையுடையாள், அவளை யறிவாயாகில், உரையாயென்று வினவி, வெண்பாலை மரத்தையுங் கிட்டி, அடா வெண்பாலைமரமே! உனது மலர்மேல் மிகப் பிரியமுடைய என்னாயகி பிழைத்திருக்கின்றனளோ? இல்லையோ? உரையாயென்று வினவிக் குரா மரத்தையுங் கிட்டி அடா மருதமரமே! உன்னைப்போன்ற தொடையையுடைய என் பத்தினியை யறிவாயல்லையோ? எங்கிருக்கின்றனளுரையாய் என்று வினவி யொன்றும் பதிலுரையாமையின், மஞ்ஞாடி மரத்தைக் கிட்டி யது தளிர்த்துப் பூத்து வண்டுகளொலித்து விளங்கினமையின், இது சீதையை யறிந்ததுபோலும் என்று நினைந்து அதனை நோக்கி, அடா திலகமரமே! திலகப்பிரியையான என் பிரியையை நீ யறிவாயாகி லுரையாயென வினவி, அசோகமரத்தைக்கிட்டி அசோகமரமே! சோகத்தைப் போக்குகின்றமையின், அசோகமெனனும் பெயருண்டையோய், என் பிரியையைக்காட்டி என்னையும் உன்னைப்போல அசோகனாக (சோகமற்றவனாக) விரைவில் செய்யாயென்று வினவிப் பனைமரத்தையும் நோக்கித் தாலமரமே! என்பாரியை உன்னுடைய பழம்போன்ற கொங்கையுடையாள், அவள் எங்கிருக்கின்றனள்? என்மீதுனக்கருளுளதாயின், உரையாயென்று வினவி, ஜம்பூமரத்தை நோக்கி, நாவல்மரமே! என்னாயகி உன்னுடைய பழம்போலத் தளதளவென்று மின்னுந் திருமேனியுடையள், அவளை யறிவாயாகில், ஐயமின்றி யுரையாயென்று வினவிக் கோங்குமரத்தை நோக்கிக

கர்ணிகாரமே! உனது மலர்மேல் மிகவும் பிரியமுடைய என்னாயகியைக் கண்டனையாகிலுரையாயென்று வினவி, இவ்வண்ணமே மா, கடம்பு, ஆச்சா, பலா, மருதாணி, மாதளை, வேங்கை, முதலிய மரங்களையும் வினவி, அவ்வண்ணமே மல்லிகை, சிறுமல்லிகை, சம்பகம், தாழை முதலிய செடிகளையும் வினவி; ஒன்றும் பதிலுரையாமையின், விலங்குகளையும் நோக்கி, அடா மானே! உன்னைப்போலவே கண்ணோக்குடைய என்மனையாளைக் கண்டனையோ? அடா யானையே! உனது துதிக்கைபோன்ற தொடையையுடைய என் பாரியையைக் கண்டனையோ? அடா புலியே! என்னாயகியுன்னைக் கண்ணுறின், அச்சமடைவாள்; அவளை நீ கண்டனையோ என்று வினவி உன்மத்தங்கொண்டு நாற்புறங்களிலும் தேடி யலைந்து அதுவே சிந்தையாயிருந்தமையின், எங்கும் பிராட்டியாரிருப்பார்போலக் கண்டு, அடி நாயகி! நீயேன் நெடுந்தூரம் ஓடுகின்றனை, உன்னை யான் கண்டுகொண்டேன்; மரங்களின் இடையில் மறைந்து மறைந்து ஓடாதே; நிற்க நிற்க; உனக்கென்மீதருள் இல்லையா? ஏன் பதிலுரைக்கின்றிலை? நீ நெடுங்காலம் பரிஹாஸஞ் செய்ததில்லையே; ஏன் என்னை யுபேக்ஷை செய்கின்றனை பீதாம்பரத்தினால் அறிந்துகொண்டேன், என்மீதன்புள்ளதாயின், ஓடாது நிற்க; அந்தோ! இவள் சீதை யல்லள்போலும், அரக்கர்களால் கொலைசெய்யப்பட்டனள்போலும், பிழைத்திருப்பாளாயின், இவ்வண்ணம் யான் வருந்துகையிலும் உபேக்ஷை செய்வாளோ? யானில்லாதிருக்கையில், அரக்கர்கள் சீதையின் அவயவங்களைப் பங்குபோட்டுக்கொண்டு பக்ஷித்தார்கள். அப்பொழுது முழுமதிபோன்ற நாயகியின் திருமுகமண்டலம் ஒளியிழந்திருக்குமந்தோ! சம்பகம்போன்ற நாயகியின் கண்டத்தை அவள் கூவியழுகையில், அரக்கர்கள் கடித்துப் பக்ஷித்திருப்பார்கள்; தளிர்போன்ற கைகளும் முறிக்கப்பட்டுப் பக்ஷிக்கப்பட்டிருக்குமந்தோ! என் பிராணநாயகி அரக்கர்களுக் குணவாவதன்பொருட்டே என்னை விட்டுப் பிரிந்து, லக்ஷ்மணனும், மற்றுள்ள வழிப்போக்கர்களாலும் துறக்கப்பட்டு, இனத்தார் சுற்றத்தார்பலபேர்களை யுமுடையளாகியும், அநாதையாகிப் பக்ஷிக்கப்பட்டனள். அடா லக்ஷ்மணா! என் பிராணநாயகியைக் காண்கின்றனையா? அடி சீதா தேவி! நீ என்னை விட்டெங்கெய்தினையோ? என்றிவ்வகையாக அடிக்கடி கூவி யழுது, ஒரு காட்டினின்று மற்றொருகாட்டுக் கோடியும், சில விடங்களில் வேகத்தினால் சுழன்றும், சிலவிடத்தில் மயங்கியும், சிலவிடத்தில் பித்தேறினவன் போலவலைந்தும், பிராட்டியாரையே தேடிக்கொண்டு காடுகளையும், நதிகளையும், மலைகளையும், அருவிகளையும், சுனைகளையுங்கடந்து, எங்கும் நிலைகொள்ளாமல் காடெங்குந்திரிந்தும் பிராட்டியாரைக்காணாமல் மேன்மேலும் தேட முயன்று மிக வருந்தினார்.

ஆரண்யகாண்டத்தில் அறுபதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

### பெருமாள் பிராட்டியாரைக்காணாமல் புலம்பியதும், இளையபெருமாள் தேற்றியதும்.

சக்கரவாத்தித்திருமகனுரிவ்வண்ணம் தேடிப் பிராட்டியாரை யாசிரமத்தில் காணாமல் எங்குமலைந்து கூவிக் கைகளை யுயரவெடுத்து, அடா லக்ஷ்மணு! சீதை எங்கே யிருக்கின்றனள்; இங்கிருந்து எங்கேயாவது சென்றனளோ? யாவனுயினும் எடுத்தோடினனே? எவனாலேயாவது பக்ஷிக்கப்பட்டனளோ? அடி வைதேஹி! என்னைப் பரிஹாஸஞ்செய்வதன்பொருட்டு மரத்திடையில் மறைந்திருக்கின்றனையோ? அடி என் பிராணநாயகி! என்னைப் பரிஹாஸஞ்செய்தது போதும்; எதிரில் வருக; நீ எந்த விலங்குகளுடனும், பறவைகளுடனும் விளையாடுவாயே! அவையெல்லாம் இங்கே உன்னைக் காணாமல் கண்ணீர்பெருக்கிச் சிந்தையுற்றிருக்கின்றன; அடா லக்ஷ்மணு! சீதையின்றி, யான் பிழையேன்; சீதாசோகத்தினுலிறந்த என்னை வானுலகில் சக்கரவர்த்தியார் காண்பார்; அப்பொழுதவர் என்னை நோக்கி, அடா ராமா! பதினுன்குவருஷம் வனவாஸம் செய்வேனென்றுடன்பட்டுப் பின்பு, அதனைத் தீர்க்காமலே இங்கெய்தினை யல்லையோ? இவ்வண்ணம் பொய்யனுன உன்னை யிகழ்க; என்று என்னை நோக்கி யுரைப்பார்; அந்தோ! அடி வைதேஹி! மிகவும் சோகக்கடலிலாழ்ந்த என்னைப் புகழ்க்கபடமுடையோனைத் துறப்பதுபோலத் துறந்து எங்கெய்தினை? என்னைத் துறவற்க; யான் உன்னைப் பிரிவேனுகில், உயிரையே விட்டுவிடுவேன்; என்றிவ்வண்ணம் புலம்பிப் பிராட்டியாரைக்காணாமல் துன்புற்றுச் சேற்றில் புதைந்த குஞ்சரம்போல வருந்துகையில், இளையபெருமாள் நோக்கி, எம்மையரே! இவ்வண்ணந் துன்புறற்க; என்னுடன் கூடி மேன்மேலு முயற்சிசெய்க; இந்தக்கானகமும் பற்பல குகைகளையுடையதும், விஸ்தாரமுடையதுமாகின்றது; பிராட்டியாரும் காட்டிலுலாவுகையில், மிகப் பிரியமுடையவராதலின், எங்கேயாயினும் சென்றிருப்பார்; அன்றியில், கோதாவரிக்காயினும் சென்றிருப்பார்; அல்லது, பரிஹாஸத்தின்பொருட்டு எங்கேயாவது மறைந்திருப்பார்; அல்லது, மறைந்து நம்மை அச்சமுறச்செய்ய நினைத்திருப்பார்; தேவரீரையும், அடியேனையும் தேடுவதன்பொருட்டாயினும் சென்றிருப்பார்; ஆதலின், அவரைத் தேடுவதன்பொருட்டே முயற்சி செய்வோம்; காடெங்குந்தேடிப் பிராட்டியாரிருக்குமிடத்தை யறிவோம், சீதாபிராட்டியாரைத் தேடத் திருவுள்ளமுறுவீராகில், துன்புறற்க; என்றுரைத்துத் தேற்றினர். பெருமாளும் அதுகேட்டுச் சோகத்தையடக்கித் திருத்தம்பியாருடன் காடு மலை யாறு குளங் குட்டை மலைத்தாழ்வரைகள் குகைகள் சிகரங்கள் முதலிய எல்லாவிடங்களிலும் தேடியும் பிராட்டியாரைக் காணாமல் தம்பியை நோக்கி, அடா லக்ஷ்மணு! இவ்விடங்களிலெங்கும்

ஜானகியைக் காண்கின்றிலேனே! இனி யாதுசெய்வோமென்ன வினவினர். இளையபெருமாளும் அது கேட்டுத் துன்புற்றுப் பெருமாளை நோக்கி, ஐயரே! மீளவும் தேடுவோம்; தேவரீர் பிராட்டியாரைக் கண்டு மகிழ்ந்து அவரை எடுத்தோடின பகைவனையும் கண்ணுற்று, ஸ்ரீமஹாவிஷ்ணு பலி சக்கரவர்த்தியைக் கட்டினாற்போலக் கட்டியருளவீரென்று மொழிந்தனர். பெருமாளும் அதுகேட்டு இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! காடெங்குந்தேடினோமே; இம்மலையும், தாமரையோடையும் தேடப்பட்டன; என்னுயிரினும் பிரியமுடைய வைதேஹியை மாத்திரம் கண்டிலேன்; இனித் தேடவேண்டிடம் யாங்குளது, என்றிவ்வண்ணம் முறைத்தருளிச் சோகக்கடலில் மூழ்கி முகூர்த்தகாலம் மோஹங்கொண்டு வெப்பமாக நெட்டுயிர்ப்பெறிந்து தீனமடைந்துட்கார்ந்து, மீளவும் மோகந் தெளிந்து, அந்தோ பிராணநாயகி! எங்குறைகின்றனையென்று கூவிப்புலம்பி வருந்தினர். பின்பு, இளையபெருமாளும் பலவிதமாக விநயம் பூண்டு வணக்கமாகக் கைகூப்பி மெய்யாய் இனியனமொழிந்து தேற்றினர். பெருமாள் அதனைக் கேளாமல் பிராட்டியாரைக்காணாமல் அடிக்கடிக் கூவியழுதனர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்.

பெருமாள் பிராட்டியாரைக்காணாமல் சோகக்கடலில்மூழ்கிப் பலவாறுகப்
புலம்பி உயிரைவிடுவேனென்ன வருத்திச்செய்ய, இளைய
பெருமாளும் மிகத் துன்புற்றது.

பெருமாளிவ்வண்ணம் தேடியும் பிராட்டியாரைக்காணாமல் பலவிதமாகப் புலம்பி சிந்தையினால் பிராட்டியார் எதிரில் நிற்பதாக வெண்ணியாராய்ந்து, பின்பு காணாமல் வருந்திக் காமவேட்கையால் துன்புற்று அடி நாயகி! நீ மலர்மேல் மிகப் பிரியமுடையையாதலின், அசோகமரத்திடையில் மறைந்தனையோ? உனது தொடைகள் வாழைத்தண்டுகளுக்கு ஒப்பானவை யாதலின், வாழைமரத் திடையில் மறைந்தனையோ? உன்னால் மறைய முடியாது, யான் கண்டு கொள்வேன், அடி வைதேஹி! பரிஹாஸஞ் செய்வதன் பொருட்டுக் கோங்குமரத்திடையில் மறைகின்றனையே? பரிஹாஸஞ்செய்ததுபோதும், எனக்குத் துன்பம் வளர்கின்றதே; அடி பிராணநாயகி! பரிஹாஸஞ்செய்வதினால் யாதுபயன்? யான் மிக வருந்தியிருக்கின்றேனல்லேனோ? என்னுடன் பரிஹாஸஞ்செய்வதே தகுதியற்றது; அன்றியும், தவசியாகிக் காட்டிலுறைகையில், இது மிகவுந் தகுதியற்றது; உன்னுடைய இயல்பும் பரிஹாஸஞ்செய்வதிலே மிக விருப்பமுடையதெனவுமறிவேன்; அடி யகன்றகண்களையுடைய நாயகி! நீ

யின்றி, இவ்வாச்ரமம் பாழடைந்திருக்கின்றது, விரைவாக 'இங்கெய்தாய்; அந்தோ! சீதை ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்பட்டனளென்பதில் ஐயமில்லை; அல்லது, புரிந்தொளிக்கப்பட்டனளோ? அடா லக்ஷ்மணா! அவள் இங்கே பிழைத்திருப்பளாயின், யானிவ்வண்ணம் கூவி யழுகையிலும், இங்கெய்தா திருப்பளோ? இம்மான்கூட்டங்களும் கண்ணீர்பெருக்கி வருந்துகின்ற மையின், சீதை ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்பட்டனளென உரைக்கின்றன போலும், அந்தோ! என் பிராணநாயகி! எங்கெய்தினை, அந்தோ! உன்னாலே கைகேயியார் மனம் ஈடேறிற்று, சீதையுடன் புறப்பட்டுத் தண்டகாவனஞ் சேர்ந்தேனே; இப்பொழுது சீதையின்றித் தனியே எவ்வண்ணம் மீளவும் திருவயோத்திக் கெய்துவேன், யான் சீதையை இழந்தமையின், திறமை யற்றவனெனவும், அருளற்றவனெனவும், அச்சமுடையோனெனவும், யாவரும் என்னை இகழ்வார்களந்தோ! யான் வனவாஸந்தீர்ந்து மீண்டெய்து வேனாகில், ஜனகசக்கரவர்த்தியார் என்னை நலவரவு வினவுவாராயின், யான் யாதுரைப்பேன், எவ்வண்ணம் அவரைக் காண்பேன், சீதையை யிழந்து தனியே வந்து நின்ற என்னையவர் கண்டவுடனே மோஹமடைந்து வருந்துவாரந்தோ! ஆதலின், யான் இனிப் பரதனாலே காக்கப்பட்ட திருவயோத்திக்குப் போய்ச் சேரேன்; சீதையின்றி எனக்குப் பொன்னுலகும் பாழே யாகின்றது, அடா லக்ஷ்மணா! நீ என்னை இவ்விடத்திலேதானே விட்டு விட்டுத் திருவயோத்திக்குச் சென்று வாழ்க, யான் சீதையின்றி, ஒரு பொழுதும் பிழையேன், நீ யங்கே பரதனைக் கண்டு தழுவி யான் அநுமதி கொடுத்தமையின், நீயே பாராண்டு வாழ்க, என்று யான் உரைத்ததாக வுரையாய், கைகேயி சுமித்திரை கோஸலையார் முதலிய மாதாக்களையும், யான் வணங்கி வந்தனஞ்செய்ததாக வுரையாய், கோஸலையாருடன் இந் குற்றச்செயல்களையெல்லாம் விரிவாகவுரைத்து, அவர் துன்புற்று வருந்தா வண்ணம் தேற்றிப் பாதுகாத்து வருக, என்றிவ்வண்ணமொழிந்து புலம்பி வருந்துகையில், இளையபெருமாளும் அதுகேட்டு மிகவும் துன் புற்று வருந்தினார்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

இதுவும் பெருமாள் இளையபெருமாளுடன் பலவிதமாகப்
புலம்பி வருந்தியது.

அந்தச் சக்கரவர்த்தித் திருக்குமாரர் இவ்வண்ணம் மங்கையாக்கரசி யாரையிழந்து காமத்தினாலும், சோகத்தினாலும் வருந்தித் தம்பியும் மிகத் துயருறும்படியாகப் பெரும்பாலும் துன்பக்கடலில் மூழ்கி கெட்டுயிர்ப்பு

விட்டு இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! எனக்கு நிகரான தீவினை யோர் இவ்வுலகினில் வேறொருவருமில்லரென நம்புகின்றேன், துன்பங்கள் மேன்மேலுந்தோன்றி இடைவிடாது என்னிதயத்தைப் பிளக்கின்றனவே; முற்பிறப்பில் யான் பற்பல தீவினைகள் செய்தேன்போலும், அத்தீவினை களின் பலன்களே இப்பிறப்பில் மேன்மேலும் விளைகின்றன; ராஜ்ஜியத்தை யிழந்தேன்; இனத்தார் சுற்றத்தாரகளைப் பிரிந்தேனு, தந்தையாரு மிறந் தனர், தாயாரும் பிரிந்தனர்; மனையாளையும் பறிகொடுத்தேன்; அடா தம்பீ! இத்துன்பங்களை நினைக்கையில், சோகக்கடல் கரைபுரண்டெழு கின்றது, முன்புற்ற சோகங்கள் யாவும் என் சரீரத்தைப்பற்றி எரிந்தணைந் திருந்து, இப்பொழுதுற்ற சீதையின் விரஹத்தினால் உலர்ந்த கட்டையைப் பற்றிக் காட்டுத்தீ பின்னும் எழுந்தெரிவதுபோல எரிகின்றது, எனப்பத்தினி யாகிய அந்தச் சீதையும், அரக்கனால் பறித்து ஆகாயத்தி லெடுத்தோடு கையில், இனிமையாகவும், கொடுமையாகவும் புலம்பி, அடிக்கடி யா சங்கொண்டு வருந்தி யிருப்பாளன்றோ! இவ்விஷயத்திலையமில்லை; சிறந்த செஞ்சாந்தம் அப்புவதற்குரிய என்னுயிரின் கொங்கைகளும், குருதி பெருகி விளங்கியிரா; இனிமையாகவும், மெதுவாகவும், ஐயமறவும் மொழி யப்பட்ட நன்மொழியை யுடையதும், கரிகுழலைப் பொருந்தியதுமாகிய என் பிராண நாயகியின் திருமுகம் ராக்ஷஸனெடுத்தோடுகையில், ராகுவினால் பிடிக்கப்பட்ட சந்திரனைப்போலத் திகழ்ந்திராது; சிறந்த முத்துவடங்கள் அணிவதற்குரிய சீதையின் கண்டத்தை யரக்கர்கள் பிளந்து குருதியைப் பானஞ்செய்திருப்பார்களாக ஐயயோ! அவள் நம்மொருவருமின்றித் தனியே யிருக்கையில், அரக்கர்களால் பிடிக்கப்பட்டு, அச்சமும் துன்பமுமுற்று நாற்பக்கங்களிலும் நோக்கித் தஞ்சமின்றி, அழுகுரல் பறவைபோலக்கூவி யழுதிருப்பாளே! அடா லக்ஷ்மணா! இந்தச் சிலையின் மேலே யன்றோ, சீதை என்னுடன் வீற்றிருந்து புன்னகையுடன் உன்னை நோக்கிப் பற்பல இனியமொழிகள் மொழிந்தனள்; அடா லக்ஷ்மணா! இந்தக் கோதாவரிநதி என் மனையாளுக்கு மிகப் பிரியமுடையதாதலின், அங்கே சென்றிருப் பாளோ என்று எண்ணுகின்றேன், அவள் என்னை விட்டுத் தனியே யொருகாலும் சென்றிலளே; தாமரைமலர்போன்ற திருமுகமண்டலத்தை யுடையாளும், செந்தாமரையிதழ்போலக்கன்ற திருக்கண்களை யுடையாளும், தாமரைமலர்மேல் மிக விருப்புடையாளுமாகிய என் சீதை என்னைவிட்டு மலர்கள் கொய்யவு மேகாளே, இந்த வனமும் தளிர்த்துப் பூத்துக் காய்த் துப் பழுத்துத் தழைத்தடர்ந்த பற்பல மரங்களை யுடையதாயினும், அங்கும் என்னைவிட்டுத் தனியே யுலாவாள், மிக நாணமும் அச்சமும் உடையாளல்லளோ அவள், அடா கதிரவனே! நீ கடவுளது கட்டளையினால் எல்லாவுயிர்களுடைய நற்செயல் தீச்செயல்களுக்குச் சாக்ஷியாகி நிரந்தரம் திரிகின்றனையே; என் பிரியை எங்கெய்தினள்? பறிக்கப்பட்டனளோ?

மிரணமுற்றனளோ? உண்மையாக வுரையாய்; யான் மிக்வும் துன்புறு கின்றேன், ஓ வாயுபகவானே! அனைத்துலகங்களிலும் நீ அறியாச்செய லொன்றுமில்லை, ஆதலின், என் மனைவி பறிக்கப்பட்டனளோ? மரித்தன ளோ? நடுவழியிலிலைகின்றனளோ? உரைசெய்க; எனறிவ்வகையாகப் புலம் பித் துன்பக்கடலிலழுந்தி, மெய்வாடி மூர்ச்சையடைந்து வருந்துகையில், இளையபெருமாள் கண்டு சோகத்தையடக்கித் தீரங்கொண்டு, பெருமாளை நோக்கி, ஐயரே! தேவரீரும் இவ்வண்ணம் துன்புறலாகுமோ? சோகத் தைத்துறக்க; தீரமுறுக, சீதாபிராட்டியாரைத் தேடுவதில், உற்சாகங் கொள்க; உற்சாகமுடையோர்களே யல்லரோ, எவ்வித்க் கொடிய துன் பங்களிலும் வருந்துகின்றிலர், என்று அக்காலத்திற்குத் தக்கவண்ணம் விண்ணப்பம் பண்ணியருளினர். பெருமாளது கேட்டும் சோகந்தணியா மலும், தீரமுறாமலும், மிக்க துன்புற்று வருந்தினர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்துநான்காவதுஸர்க்கம்.

பெருமாள் பிராட்டியார் போனவழியை யுரைக்கும்படி கோதாவரி பறவை விலங்கு முதலியவற்றைவினவ, விலங்குகள் தென்திசையைநோக்கிச் செல்ல, இளையபெருமாள் அதையறிந்து, பெருமாளுடன் அத் திசையிற்செல்லுகையில், ராவண ஜடாயுக்கள் போர்க் களத்தைக்கண்டு நிற்க, பெருமாள் சீதை இறந்த தாக நினைந்து சீறி யருளியது

பெருமாள் இவ்வண்ணந் துயரங்கொண்டு இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! சீதை யொருவேளை தாமரைமலர்கள் கொணர்வதன் பொருட் டுக் கோதாவரிக்குச் சென்றிருப்பாள், நீ யங்கே போய்ப்பாராயென்றருளிச் செய்தனர். இளையபெருமாள் அதுகேட்டு விரைவாகக் கோதாவரிக்குச் சென்றெங்குந் தேடித் திரிந்து வந்து பெருமாளை நோக்கி, ஐயரே! நான் கோதாவரியெங்குந் திரிந்து கூவினேன், பிராட்டியாரை எங்குங் கண்டி லேன்; அவர் எங்கிருக்கின்றனரோ அறியேனென்று விண்ணப்பஞ்செய் தனர். பெருமாள் அதுகேட்டு மிக வருந்தித் தாமே நேராகக் கோதா வரிக்கெழுந்தருளித் தேடியும், பிராட்டியாரைக்காணாமல் அந்நதியை நோக்கி, அம்மா கோதாவரி! சீதை எங்கிருக்கின்றனளோ? உரையாயென்று வின வினர். அதுகேட்டும் அங்குள்ள பூதங்களும், கோதாவரியும் ராவணனுக் கச்சமுற்றுச் சீதையின் செய்தியை யுரைத்தில; பூதங்களெல்லாவற்றாலும் ஏவப்பட்டும் கோதாவரி யுரைசெய்திலது; ராவணனுடைய அந்தக்கொடிய ரூபத்தையும், செயலையும் நினைத்து, அஞ்சி நமெனின்று; பின்பு, பெருமாள்

ஆசையுற்று இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! இந்தக் கோதாவரி நதியும் பதிலுரைத்திலது; யான் யாதுசெய்வேன்? ஜனகசக்கரவர்த்தியாருக்கு யாது சமாதானமுரைப்பேன்? சீதையை விட்டு யான் தனியே போய்க் கோஸலையாரை எவ்வண்ணங் காண்பேன்? யான் வனத்தில் காய் கனிகளையுண்டு வருந்துகையிலும், சீதையே யுடன்வந்து துயரைத் தீர்த்து மகிழ்வித்துக் கொண்டிருந்தனளே; இனித் தாய் சுற்றத்தார் மனையாள் ஒருவருமின்றித் தனியேயிருக்கின்ற எனக்கு இரவுகள் இனிக் கல்பகோடி காலமாக வளருமே; சீதையைக் காணுமளவும் கோதாவரியிலும், ஜனஸ்தானத்திலும், இந்தப் பிரஸ்ரவணமென்னும் மலையிலும், மற்றுள்ள எல்லா இடங்களிலும் சீதையைத் தேடுவேன், இந்த மிருகங்களும் என்னையடிக் கடி நோக்கி நோக்கிச் சீதையின் செயலுரைக்க முயலுகின்றனபோலிருக்கின்றன, என்று புலம்பி, அம்மிருகங்களை நோக்கி, அன்பர்களே! சீதை எங்கே? உரைசெய்க; என்று கண்ணீர்த்ததும்ப வருந்தி வினவினார். அம்மிருகங்களும் அதுகேட்டவுடனே எழுந்து, தென்திசையாக ஆகாயத்தை நோக்கிக்கொண்டே ஓடி யடிக்கடிப் பெருமாளைப் பார்த்தன; இளையபெருமாள் அம்மிருகங்களின் இங்கிதங்களையறிந்து, பிராட்டியார் இந்தவழியாலே தானே போயிருப்பாரென்று ஊகித்து, பெருமாளை நோக்கி, ஐயரே! இம் மிருகங்கள் தேவரீரால் வினவப்பட்டு, உடனே தென்திசையை நோக்கி யோடுகின்றன; ஆதலின், நாமும் அவ்வழியே செல்வோம்; சீதாதேவியையாயினும் காண்போம், செய்தியையாயினுங் கேட்போமென்று மொழிந்தருளினார். பெருமாளும் அவ்வண்ணமே யாகுகவென்று இளையபெருமாளுடன் கூடித் தென்திசையை நோக்கிப் பிராட்டியாரைத் தேடிக்கொண்டு எழுந்தருளுகையில், பிராட்டியாரணிந்த மலர்களுதிர்ந்து வழியில் வரிசையாக வீழ்ந்திருக்கக் கண்டு, துன்புற்று இளையபெருமாளை நோக்கிப் பாரடா லக்ஷ்மணா! இந்த மலர்கள் சீதை யணிந்தனவே; என்னாலேதானே கொணர்ந்தளிக்கப்பட்டன; இவைகளை வாட்டாமையால் வெய்யோனும், தூற்றாமையால் வாயுவும், அழுந்தாமலேந்திக்கொண்டிருக்கின்றமையின் மேதினியும் பாதுகாத்து, என்பொருட்டு உபகாரஞ்செய்தனர்கள் போலுமென்றுரைத்தருளி, அருவிகளினால் ஒலிக்கின்ற அந்தப் பிரஸ்ரவணமென்னும் மலையை நோக்கி,—

కచ్చిత్క్షితిభృతాం నాథ దృష్టా సర్వాంగసుందరీ।
రామా రమ్యే వనోద్దేశే మయా విరహితా త్వయా॥

கச்சித்க்ஷிதிப்ருதாம்நாத த்ருஷ்டாஸர்வாங்கஸுந்தரீ।
ராமாரம்யேவனோத்தேசே மயாவிரஹிதாத்வயா॥

மலைகளுக்கிறையாகிய பிரஸ்ரவணமே! ஸர்வாங்கஸுந்தரியும், என்னால் பிரிக்கப்பட்டவளுமாகிய (என்) பத்தினி, உன்னால் (உன்னுடைய)

அழகிய வனத்திடையில் காணப்பட்டனளோ? என்று வினவ, தம்முடைய வினைசுலோகமே பிரதித்தொனியாக வொலிக்க, அதைக்கேட்டு ராஜாகளுக் கிறையாகிய ஸ்ரீராமசந்திரரே! அங்கமெங்கும் அழகுற்றவளும், உம்மால் பிரிக்கப்பட்டவளுமாகிய (உம்முடைய) பத்தினி, (என்னுடைய) அழகிய வனத்திடையில், என்னால் காணப்பட்டனள்; உம்மால் பிரிக்கப்பட்ட னளோ? என்று பதிலுரைத் திகழ்ந்ததாக எண்ணிச் சினமுற்று, சிங்கம் அற்பமிருகத்தைப் பார்ப்பதுபோலப் பார்த்து, மீளவும் அதனை நோக்கி, அடா மாமலையே! பொன்னிறமுடைய என்மனையாள் எங்கிருக்கின்றனளோ விரைவாகக் காட்டாய்; தாமஸஞ்செய்வாயாகில், உன் தாழ்வரைகளை முற்றும் பிளந்தழிப்பேனென்றுரைத்தருளினார். அதுகேட்டும் அம்மலை பிர திதத்தொனியினால் பதிலுரைப்பதுபோலிருந்தும் பிராட்டியாரைக் காட்டியதிலது; பெருமாள் மீளவும் வெகுண்டு அதனை நோக்கி, அடாமலையே! என் பாணத்தீயினால் எரிக்கப்பட்டு நீறுருகுவாய்; புல் புதல் மரஞ் செடி குளங் குட்டைகளொன்றுமின்றி, ஒருவரும் சேர்வதற்கரியதாகி யழிவாய்; அடா லக்ஷ்மணா! இந்த நதியையாயினும் சுண்டும்படி செய்வேன்; இது வென் சீதையை யுரைக்கின்றிலது; என்றிவ்வண்ணம் உரைத்துக்கொண்டே தேடுகையில், மிக்க கொடிய அரக்கனுடைய பெரிய காலடியையும், அவனுக் கஞ்சி நாலுபக்கங்களிலும் ஓடித்திரிந்த பிராட்டியாரது திருவடிகளையும், முறிந்து வீழ்ந்த வில் அம்பறாத்தூணிகளையும், பலபிளவாகச் சிதறுண்டு முறிந்த தேரையும் கண்டு, மிகவும் அச்சங்கொண்டு தம்பியை நோக்கிப் பாரடா லக்ஷ்மணா! சீதை யணிந்திருந்த திருவாபரணங்களினின்றும் உதிர்ந்த பொன் தகடுகளும், அவிழ்ந்த மாலைகளுமிருக்கின்றன; இவ்விட மெங்கும் செங்குருதி படிந்துளது; ஆதலின், ராக்ஷஸர்கள் பலர் கூடிச் சீதையைக் கண்டங்கண்டமாகத் துணித்துப் பகிர்ந்து பக்ஷித்தார்களென் றெண்ணுகிறேன்; அவள் பொருட்டு இரண்டு ராக்ஷஸர்கள் இங்கே கோரமாகப் போர்செய்தனர்போலும், முத்துவடங்களினால் அலங்காரஞ் செய்யப்பட்ட சிறந்த வில்லிங்கே முறிக்கப்பட்டுளதே; இது யாவனுடையதோ? அப்போதுதித்த ஸூரியன்போன்றதும், வைடூரியமணிகளிழைத்ததுமாகிய கவசமும் பிளக்கப்பட்டுளது; நூறு சலாகைகள்பொருந்தி, திவ்விய மாலைகளணிந்து திகழ்ந்த வெண்குடையும் முறிக்கப்பட்டுளது; யாவனுடையதோ? தங்கக்கவசம் பூண்டனவும், பிசாசமுகமுள்ளனவும், மிகப் பெரிய உருவமுடையனவுமாகிய கோவேறுகழுதைகளிறந்திருக்கின்றனவே? இவை யாவனுடையன; செழுந்தீக்கு நிகராகிய சிறந்த தேரும் முறிந்து கிடக்கின்றது; தங்கக்கட்டமைந்த கணைகளும் முறிக்கப்பட்டன; அம்பறாத் தூணிகளும் ஒடிந்து கிடக்கின்றன; சாரதி கசையையும், கடிவாளத்தையும், கையில் பிடித்துக்கொண்டே மடிந்து கிடக்கின்றனன்; பலவகை மணியணிகளையுமணிந்த இரண்டு சாமரம் வீசுவோரும் இறந்திருக்கின்றனர்; இந்த

அடிவைப்பும் அரக்கனுடையதேயாகும்; அரக்கருக்கே நம்மேல் மிக்க பகை யுள்ளதன்றோ? ஆதலின், கொடிய ராக்ஷஸர்களே சீதையைப் பறித்துக் கொன்று பக்ஷித்திருப்பார்களோ? இவ்வண்ணம் சீதை துன்புறுகையிலும், தருமம் தலைகாத்திலதே! எனக்குத் தீமைசெய்ய வானவரும் திறமைகொள் ளார்களே! யான் எல்லாவுலகங்களுக்குங் காத்தலும், அழித்தளிக்க வல்லவ னுமாயினும், கருணையினால் பொறுமை கொண்டிருக்கின்றமையின், எல்லோ ரும் மடமையால் மதிக்கின்றிலர்; அடா லக்ஷ்மணா! நான் புலன்களை யடக் கித் தயைபொருந்திச் சாந்தகுணமுற்றிருக்கின்றமையின், தேவர்கள் என் னைத் திறமையற்றவனென்றே நினைக்கின்றனர்போலும்; அடா லக்ஷ்மணா! நற்குணமும் என்னைச் சேர்ந்து தோஷமாயிற்று பாராய்; எல்லாவுயிர்களையும், எல்லா அரக்கர்களையும் கொலைசெய்வதன்பொருட்டுப் பொறுமை முதலிய நற்குணங்களையுள்ளடக்கிப் பராக்கிரமத்தையே மேற்கொள்வேன்; கதிரவன் சந்திரனுடைய குளிர்ந்த நிலாவையுள்ளடக்கியே தன் தேஜஸ்ஸை விரித்து விளங்குகின்றானல்லனோ?—

నైవయక్షానగన్ధర్వా నపిశాచానరాక్షసాః।
కిన్నరావామనుష్యావా సుఖంప్రాప్స్యన్తిలక్ష్మణ॥
మమాస్త్రబాణసంపూర్ణ మాకాశంపశ్యలక్ష్మణ।
నిస్సంపాతంకరిష్యామి హ్యద్యత్రైలోక్యచారిణాం॥

நைவயக்ஷாநகந்தர்வா நபிசாசாநராக்ஷஸா:
கிந்நராவாமனுஷ்யாவா ஸுகம்ப்ராப்ஸ்யந்திலக்ஷ்மண||
மமாஸ்த்ரபாணஸம்பூர்ண மாகாசம்பச்யலக்ஷ்மண|
நிஸ்ஸம்பாதம்கரிஷ்யாமி ஹ்யத்யத்ரைலோக்யசாரிணாம்.||

கேளடா லக்ஷ்மணா! என் சீதையைக் கொடார்களாயின், தேவகந் தர்வ பிசாசராக்ஷஸ யக்ஷகின்னரமனுஷ்யபந்நகோரகாதிகளுள் ஒருவரும் இன் புறார்கள்; என்னுடைய பாணங்களினாலும், அஸ்திரங்களினாலும், உலகமெங் கும் நிரம்பி மூவுலகத்தவரும் அழியும்படி செய்வேன்; விண்மீன் சந்திரன் முதலானோரையும் தகைந்து, தீ வாயு சூரியர்களது வெம்மை வேகங்களையும் அழித்து, மலைகளைப் பிளந்து நீரையும் கண்டசெய்து, மரஞ் செடி கொடி புதல் முதலியவற்றையும் அழித்து, கடலையும் வற்றச் செய்து, மூவுலகினை யும் அழிப்பேன்; இறைவர்கள் என் சீதையை யளிக்கின்றிலர்; இப்பொழுது எனது திறமையை யாவரும் கண்ணுறக்கடவர்கள். இனியொரு பூதமும் மேலெழாது; என் கோதண்டத்தினின்றும் புறப்பட்ட பாணங்களினால் மடிக் கப்பட்டு, அச்சமுற்று நடுங்குகின்ற பசு பக்ஷிகளையுடையதாகிய மூவுலகி னையும் நிலைகெட்டழியச்செய்வேன் பார்த்திராய்; சீதையின்பொருட்டே இவ் வுலகினைப் பிசாசராக்ஷஸப் பூண்டற்றதாக்குவேன்; யான் சீற்றங்கொண்டு

பரிணங்களை எய்வேனாகில், அதன் வேகத்தைத் தேவாதிகளெல்லோரு மொன்றுசேர்ந்தும் பொறுப்பார்களோ? என் பலத்தை எல்லோரும் பார்க்க; யான் சீற்றத்தால் மூவுலகினையும் அழிக்கையில், ஒருயிரும் உய்யாது; தேவ தானவயக்ஷராக்ஷஸாதியர் லோகங்களையும், கணைகளினால் சிதறவடிப்பேன்; நிலையை யழிப்பேன்; சிறிதும் வாட்டமின்றிச் சீதை முன்போலவே மகிழ்ந்து திகழுமாறு கடவுளர்கள் என் கொணர்ந்தளிக்கின்றிலர்; எனறிவ்வண்ண முரைத்தருளிக் கோதண்டத்தைக் கையிலபிடித்துக் கூரியகணையைத் தொடுத்து, ஊழிகாலத்தீப்போல வெரிந்து கேளடா லக்ஷ்மணா! மூப்பு, மிருத்யு, காலம், விதி இவை எவ்வண்ணந் தடுக்கப்படாவோ, அவ்வண்ணமே யான் சினமுறுவேனாகில், ஒருவராலும் தடைசெய்தெதிர்க்கப்படேன்; முன் போலவே புன்னகைகொண்டு மகிழ்ந்த சீதையை வானவர்கள் அளியாராக ளாயின, எல்லாவுயிர்களுட்டனும் கூடிய ஜகத்தையெல்லாம் அழித்துவிடுவே னென்று அருளிச்செய்தனர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

இளையபெருமாள் பெருமாளைச் சமாதானப்படுத்திச் சினந்தணியச்செய்தது.

பெருமாளிவ்வண்ணம் பிராட்டியாரையிழந்து, சோகமும் சினமும் கொண்டு, ஊழிகாலத்தீப்போல மூவுலகங்களையும் எரிக்குமபடி விளங்கிப் பெருமூச்செறிந்து அடிக்கடி கையிலேந்திய கோதண்டத்தைக்கண்ணுற்று, காலாந்தகனைப்போலத்திகழ்கையில், ஸ்ரீராமாநுஜர் இவ்வண்ணம் ஒருகாலத்து மின்றி, இப்போழ்தே பெருமாள் மிகத் திருவுளங்கலங்கி யுலகத்தையழிக்க நினைத்ததற்கு ஆச்சரியமடைந்து, பெருமாளை நோக்கிக் கைகூப்பி ஐயரே! தேவரீர் இதுவரையில் எல்லாவுயிர்களுக்கும் இனியராகிச் சாந்தகுணம் பொருந்தியிருந்தருளி இப்பொழுது சினமடைந்து, இயல்பாயுள்ள நற்குணத் தைத் துறப்பது தகுதியற்றது; சந்திரனிடத்தில் நிலவும், கதிரவனிடத்தில் வெயிலும், காற்றினிடத்தில் கதியும், பூமியிடத்தில் பொறுமையும், எப்போ தும் மாறாது நிலைத்திருப்பனபோலத் தேவரீரிடத்திலும் சிறந்த நற்புகழ் நிலை கொண்டிருக்கின்றது; ஒருவன் செய்த குற்றத்திற்காக எல்லாவுயிர்களையும் கொலைசெய்வது நீதியற்றது; முறிக்கப்பட்ட இந்தத் தேரும் எவனுடை யதோ? எவனால் முறிக்கப்பட்டதோ? என்னகாரணத்தால் போர் நடந் ததோ? ஒரு செய்தியையும் அறிகின்றிலேன்; இவ்விடமும் குருதிதோய்ந்து, தேர்ச்சக்கரம் புதைந்து கோரமாகி விளங்குகின்றது; இங்கே ஓரேகாலடியா யிருக்கின்றதேயன்றி, பலர் நடந்திலர்; சேனையும் சென்றிலது; ஆதலின்,

ஒருவனுக்காக லோகங்களையெல்லாம் அழிப்பது தகாதது; ராஜர்கள் கூடு பாதமின்றி, அவரவர்க்குத்தக்கபடி தண்டனைசெய்வார்களே யன்றிக் குற்ற மற்றவர்களை வருத்தார்கள்; தேவரீரே எல்லாப்பூதங்களுக்கும் தஞ்சமா யின்றீர். ஆதலின், எவன்தான் பிராட்டியாரைப் பறித்துக்கொண்டு போன வனையுகப்பான்; தேவரீர்க்குத்தீமைசெய்ய ஆறு மலை யலைகடல் தேவகந்தர்வ தானவாதியர்களும் துணியார்கள்; யாகதீக்ஷைகொண்டவனுக்கு நல்லோர் கள் தீமை செய்யார்களல்லரோ? ஆதலின், பிராட்டியாரைப் பறித்தவன் யாவனோ அவனைத் தேடுக; யாம் ரிஷிகளையும் துணையாகக்கொண்டு கடல் காடு மலை குகையாறு குளங் குட்டைகளிலும், தேவகந்தர்வாதிகளது உலகங் களிலும் போய்த்தேடுவோம்; தேவர்களைக்கண்டும் கேட்போம்; நல்வார்த் தையில் அவர்கள் பிராட்டியாரைக் கொணர்ந்து கொடாராயின், பின்பு தேவரீர் திருவுள்ளத்தின்படிச் செய்தருள்க, சீலத்தினாலும், நல்வார்த்தையி னாலும், விநயத்தினாலும், நீதியினாலும், தேவரீர் பிராட்டியாரைப் பெற்று மகிழ்வுறீராகில், அநந்தரம் தங்கக்கட்டமைந்த கூரிய கணைகளினால் உயிர் களை வருத்திப் பிராட்டியாரைப் பெறுக; என்று விண்ணப்பஞ்செய்து வேண் டிச் சினந்தணியச் செய்தனர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்தைந்தாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## அறுபத்தாறுவது ஸர்க்கம்.

இதுவுமது

• இளையபெருமாளிவ்வண்ணம் வேண்டியும், சோகமும் சினமுந் தணி யாமல், திறமையற்றவர்போலப் புலம்பி மோஹமடைந்து வருந்துகின்ற பெருமாளை நோக்கித் தண்டம் சமர்ப்பித்து, ஐயரே! சக்கரவர்த்தியார் பற் பல தவங்களினாலும், பற்பல தானதர்மங்களினாலும், தேவர்கள் அமிழ்தத் தைப் பெற்றாற்போலத் தேவரீரைப் பெற்றனர். அவர் தேவரீருடைய திருக் கல்யாணகுணங்களிலீடுபட்டும், சத்தியந் தவறாமைக்காக ராஜ்ஜியத்தைப் பர தாழ்வானுக்களித்துத் தேவரீரைவிட்டுப் பிரிந் திறந்து வானேறினர். அளவற் றபராக்கிரமமுடையாரும், மஹானுபாவருமாகிய தேவரீரே இத்தன்மைத் தாகியதுன்பத்தைப் பொறுத்திலீராயின், திறமையற்ற மற்றுள்ள உயிர்கள் தந்தந்துன்பங்களை எவ்வண்ணம் பொறுப்பார்கள். தேவரீர் துன்புற்றுச் சின த்தினால் உலகங்களை எரித்து வருத்துவீராயின், குற்றமற்ற உயிர்களெல்லாம் எங்குச்சென்று நலமுறும்; எவ்வளவுச் சிறப்புற்றவராயினும், துன்புறுவது புண்பே; நஹுஷன், இந்திரன் பட்டத்தை யடைந்தும் பாம்பாயினன்; யயாதி இந்திரனுடன் ஒரு ஆசனத்திலிருந்தும் வீழ்ந்தனன்; ஆதலின், தீ ய்ப்புவது ஒருவர்க்கும் தகாது; நந் தந்தைக்குப் புரோகிதராகிய வசிஷ்

புகலானும், ஒரு தினத்திலேதானே நூறு பிள்ளைகளைப்பெறுவது, பின்பொரு தினத்திலேதானே அவர்களிறக்கக்கண்டனர். எல்லா வுயிர்களுக்கும் தாயாகிய இந்தப் பூதேவியும் அசைவுற்று நடுங்குகின்றது; மிகச் சிறந்த சூரிய சந்திரர்களும், ராகு கேதுக்களினால் பிடிக்கப்படுகின்றனர்கள்; எவ்விதப் பெரிய பூதங்களாயினும், தேவாதியர்களாயினும், ஸ்ரீபகவானுடைய சங்கல்பத்தைக் கடந்து நிற்க வல்லமைகொள்ளார்கள்; தேவாதியர்களும் இன்பமும் துன்பமுமடைகின்றனர்கள்; ஆதலின், தேவரீர் துன்புறற்க; பிராட்டியார் பறிக்கப்படினும், இறக்கினும், தேவரீர் தீரமுற்றிருக்கவேண்டுமல்லது, அற்பர்போலத் துன்புறுவது தகாது; தேவரீர்போன்ற தீரர்கள் எவ்வித்தத் துன்பம் நேரினும் வருந்தார்களல்லரோ? தேவரீர் புத்தியால் நன்காராய்க; ஆராய்பவர்களே நன்மை தீமைகளை நன்குணர்வார்கள், முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகள் தத்தம்பலன்களினாலறியப்படுமே யன்றி, முன்புணரப்படா; இவ்வண்ணம் அடியேனுக்குத் தேவரீரே பல முறைகளில் உபதேசஞ் செய்தருளினீரே? தேவகுருவாயினும் தேவரீருக்கு நிகராகுவரோ? தேவரீருக்கும் உபதேசஞ்செய்பவன் யாவனுளன்? தேவரீருடைய திருவுள்ளமும் தேவர்களாலும் அறியப்படாது; சோகத்தினால் உள்ளடங்கிய தேவரீருடைய தெய்வத்தன்மையை யான் நினைவூட்டுகின்றனே யன்றி, உபதேசஞ்செய்கின்றிலேன்;—

దివ్యఞ్చమానుషఞ్చైవ మాత్మనశ్చపరాక్రమం।
ఇక్ష్వాకువృషభావేక్ష్య యతస్వద్విషతాంవధే॥

திவ்யஞ்சமானுஷஞ்சைவ மாத்மனச்சபராக்ரமம்
இக்ஷ்வாகுவ்ருஷபாவேக்ஷ்ய யதஸ்வத்விஷதாம்வதே॥

இக்ஷ்வாகு குலதிலகரே! தேவரீருடைய தெய்வத்தன்மையையும், மானிட பாவனையையும், தோள்வலியையும் நன்காராய்ந்து, பகைவர்களைக் கொலைசெய்யும்பொருட்டு முயலுக; எல்லோரையும் கொலைசெய்வதினால் தேவரீர்க்குப் பயன் யாது? பிராட்டியாரைப் பறித்தவன் யாவனோ, அவனையே தேடிப் பிடித்துக் கொலைசெய்தருளுக; என்று வேண்டிச் சினத்தை யாற்றியருளினர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தேழாவது ஸர்க்கம்.

பெருமாளிளையபெருமாளுடன்திரிந்து ஜடாயுவைக்கண்டு பிராட்டியாரது விருத்தாந்தத்தையறிந்து துன்பப்பட்டருளியது.

இவ்வண்ணம் இளையபெருமாள் செய்த விண்ணப்பத்தைப் பெருமாள் திருச்செவிசாத்தி, ஸாரத்தை யறிபவராதலின், மிகவும் ஸாரமான

அந்த வாக்கியத்தை ஏற்றுக்கொண்டு, தாம் வருவித்துக்கொண்ட கோபத்தை யடக்கி, கோதண்டத்தைத் திருக்கரத்தில் பிடித்துக்கொண்டருளி இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! நாம் இப்போது எங்கே செல்வோம்? யாது செய்வோம்? எந்த உபாயத்தால் சீதையின் சரித்திரத்தை யறிவோம்? நன்றாக ஆராய்ந்து சொல்லாய், என்று வினவி யருளினார். இளையபெருமாள் அதுகேட்டுப் பெருமாளை நோக்கி, ஐயரே! இந்த ஜனஸ்தானத்திலேதானே மறுபடியும் தேடியருள்க; இவ்விடத்தில் பற்பல ராக்ஷஸர்களும் நிறைந்திருக்கின்றனர்கள்; காடும் அடர்ந்திருக்கின்றது; மலைகளும் பலவாகவுள; பிளவுகளும், குகைகளும், பள்ளங்களும், பலவகைகளாயிருக்கின்றன; கின்னர கிம்புருஷ கந்தர்வாதிகளும் வந்து வாழ்கின்றனர்கள்; அங்கெல்லாம் என்னுடன் கூடித் தேடியருள்க; தேவரீர்போன்ற மஹாத்துமாக்கள் எவ்வகைத் துன்பம்நேரினும் நடுங்கார்கள்; பெருங்காற்றிலும் மாமலைகள் அசையுமோ என்று விண்ணப்பம் பண்ணினார். பெருமாள் அதுகேட்டு இளையபெருமாளுடன் கூடி யவ்விடங்களில் தேடிக்கொண்டு வருகையில், ஜடாயு மலையின் சிகரம்போலத் தரையில் வீழ்ந்து குருதிபடிந்து படுத்திருக்கக்கண்டு, இளையபெருமாளை நோக்கிப் பாரடா தம்பி! இந்தப் பெரிய பறவையினாலேதானே சீதை பக்ஷிக்கப்பட்டிருப்பாள்; இவ்விஷயத்தில் ஐயமேயில்லை; இக்கானகத்தில் கழுகின் உருவம் பூண்டு ஒரு அரக்கனே இங்குப் படுத்திருக்கின்றனன்போலும், இதுவே சீதையைப் பக்ஷித்துச் சுகமாகப் படுத்திருக்கின்றது; ஆதலின், இதனைக் கூரிய கணைகளினால் கொலைசெய்வேனென்றுரைத்துக் கோதண்டத்தில் கணையைத்தொடுத்து, ஜடாயுவைக் கிட்டிவருகையில், ஜடாயு பெருமாளைக் கண்டு நுரையுடன் குருதியைக் கக்கிக்கொண்டே கூவி யழைத்து அடா ஸ்ரீராமபத்திரா! நீ திவ்விய மூலிகையைப்போல எந்தப் பிராட்டியை இக்காட்டில் தேடுகின்றனையோ அவளும், என்னுடைய உயிர்களும் ராவணனால் பறிக்கப்பட்டன; நீங்களிருவருமின்றித் தனியேயிருந்த சீதையை ராவணன் வந்தெடுத்தோடினன்; அப்பொழுது நான் அவனைக் கண்டு சீதையைக் காப்பதன்பொருட்டு ராவணனைத் தகைந்து போர்செய்து, அவனுடைய வில் தேர் முதலியவற்றையும் முறித்து, அவனையும் தரையில் விழச் செய்தேன்; என்னால் முறிக்கப்பட்ட வில், அம்பறாத்தூணிகள், பாணங்கள், தேர் முதலியவை இங்கே கிடக்கின்றன பாராய், தேர்ப்பாகனும் கொலை செய்யப்பட்டனன்; குதிரைகளும் கொல்லப்பட்டன; அவ்வண்ணம் யான் ராவணனுடன் போர்செய்து இளைத்திருக்கையில், அவன் என்னுடைய சிறகுகளை யறுத்துத் தள்ளிவிட்டுச் சீதையை எடுத்துக்கொண்டோடிவிட்டனன். இவ்வண்ணம் ராவணனால் கொலைசெய்யப்பட்ட என்னை நீயும் கொல்லுறுக; என்றுரைத்தனர். பெருமாள் அந்த வாக்கியத்தைக் கேட்டவுடன் துன்பம் இருமடங்குபெருகி, வில்லைத் தரையில் போட்டுவிட்டு,

ஜடாயுவைத் தழுவிக்கொண்டு தரையில் வீழ்ந்து, இளையபெருமாளுடன் கூடிக் கூவியழுது புலம்பிச் சரமதசையையடைந்து களைத்து மிக வருந்தி மூச்செறிந்து பிராணனைவிடுகின்ற ஜடாயுவைக்கண்டருளி, பெருந்துயர மடைந்து, இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! நாம் ராஜ்ஜியத்தையுமிழந்தோம், காட்டிலும் உறைந்தோம், சீதையையும் பறிகொடுத்தோம், ஜடாயுவையுமிழந்தோம், என்னுடைய தீவினை இத்தன்மையதாயிற்றே? இது பெருந் தீயையும் பற்றியெரிக்கும்; யான் இப்பொழுது ஆழ்ந்து நிறைந்த பெருங்கடலில் வீழ்வேனாயினும், என்னுடைய தீவினையால் அதுவும் வற்றி யுலர்ந்துவிடும்; என்னிலும் தீவினையோர் இவ்வுலகினில் வேறொருவருமிலர்; இத்தன்மையதாகிய பெருந்துயரேன்னும் வலையுள் மற்றெவராயினும் அகப்பட்டார்களோ? இந்த ஜடாயு என் தந்தைக்குத் தோழரும், மூப்பினரும், அன்புடையோருமாயிருந்தும், என் தீவினையாலிறந்தனரந்தோ! என்றிவ்வண்ணமுரைத்தருளிப் புலம்பி, ஜடாயுவைத் தந்தையைப்போலெண்ணித் தழுவித் தந்தையின் தோழரே! மைதிலி எங்கிருக்கின்றனளோ? உரையீரென்று கூவித் தரையில் வீழ்ந்து வருந்தினர்.

ஆரண்யகாண்டத்தில் அறுபத்தேழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

ஜடாயு சீதாபிராட்டியாரது சரிதத்தைச் சுருக்கமாக விடையுரைத்து
மரணமடைகையில், பெருமாள் அவர்க்கு நல்லுலகங்களில்
வாழும்படி அருள்செய்து, ஸம்ஸ்காரஞ்
செய்து முடித்தருளியது.

பின்பு, பெருமாள் கொடிய ராவணனால் அடிக்கப்பட்ட ஜடாயுவைக் கடாக்ஷித்து, மீளவும் இளையபெருமாளை நோக்கிப் பாரடா லக்ஷ்மணா! என் பொருட்டே இந்த ஜடாயு போர்செய்து ராவணனால் அடிபட்டு, விடுவதற்கரிய உயிரை விடப்போகின்றனர். உயிர் இவரது சரீரத்தில் இன்னுமிருக்கின்றது; ஒளிகுன்றியும் தீனமாயும் நோக்குகின்றனரென்றுரைத்து, ஜடாயுவை நோக்கிப் பெருந்தகையோரே! மொழியுந்திறமை யுடையீராயின், மொழியீர்; சீதையை ராவணன் ஏன் பறித்தனன்? அவன் விஷயத்தில் யான் யாதுபிழைசெய்தேன்? அப்பொழுது சீதை எவ்வண்ணமிருந்தனள்? யாது மொழிந்தனள்? அந்த ராவணனுடைய தோள்வலி, திறமை, உருவம், செயல், இவை எத்தன்மையுடையன? அவன் வாழும் வீடு எவ்விடத்திலுளது? இவைகளை யுரைசெய்கவென்று வினவினர். ஜடாயு அதுகேட்டுப் பெருமாளை நோக்கிக் கேளாய் ஸ்ரீராமா! மிகவும் கொடிய ராவணன் மாயையினால் காற்று மழைபொழியச்செய்து சீதையை எடுத்துக்கொண்டாகாயத்திலோடினன்;

யான் அவனுடன் நெடுநேரம் போர்செய்திளைத்திருக்கையில், அவன் என்னுடைய சிறகுகளை யறுத்துவிட்டுச் சீதையை எடுத்துக்கொண்டு தென் திசையை நோக்கிச் சென்றனன். அடா ராமா! இனி வார்த்தைசொல்லத் திறமையில்லை; உயிர் தடுமாறுகின்றது; கண் சுழலுகின்றது; யானிப்பொழுது மரங்களைப் பொன்மயங்களாகவும், குருவேர்களால் செய்யப்பட்ட தலைமயிர்களையுடையனவாகவும் காணுகின்றேன், முடிவொன்று கூறுகின்றேன் கேளாய்; ராவணன் சீதையை எடுத்தோடின முகூர்த்தம் விந்தமென்னும் பெயருடையது; அதில் பறிகொடுத்த பொருளை யஜமானன் மீளவும் பெறுவான்; ராவணன் அதனை யறியாமல் சீதையைப் பற்றிச்சென்றனன், தூண்டில்முள்ளைக் கவ்விய மீன்போல அவன் விரைவில் இறப்பான், ஆதலின், பிராட்டியாரைக் குறித்துத் துன்புறற்க, அவனை நீ விரைவில் போரில் மடித்துச் சீதையுடன் கூடி மகிழ்வாயென்றுரைத்துக் கொண்டிருக்கையில், வாயினின்றும் மாம்ஸத்துடன் ரத்தம் பெருகிற்று; அப்போதும் அவர் அடா ராமா! அந்த ராவணன் விச்ரவசு மஹாரிஷியின் புத்திரன்; குபேரனுக்குத் தம்பி என்று மொழிந்துகொண்டே உயிரை விட்டுவிட்டிறந்தனர். அப்பொழுது பெருமாள் கைகுவித்துக்கொண்டு உரையீர் உரையீரென்று வினவிக்கொண்டிருந்தும், ஜடாயுவின் உயிர்கள் சரீரத்தைவிட்டு ஆகாசத்திலேறின; உடனே ஜடாயு தலையைத் தரையில் சாய்த்துக் காலைப்பரப்பித் துவளத் தரையில் வீழ்ந்திறந்தனர். இவ்வண்ணம் ஜடாயு இறந்ததைப் பெருமாள், கண்டு, மிகச் சோகங்கொண்டு, இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா! மிகக் கொடிய ராக்ஷஸர்கள் நிறைந்த இந்தத் தண்டகாரணியத்தில் ஜடாயு நெடுநாளாய துன்பமின்றி, இன்புற்று வாழ்ந்து, இப்போழ்திறந்துவிட்டனர். இவர் அநேகமாயிரம் வருஷம் பிழைத்திருந்தும் இப்போழ்திறந்துவிட்டனரய்யோ! காலமென்பது ஒருவராலும் கடக்கத்தக்கதன்று, பாரடா லக்ஷ்மணா! இவர் என்பொருட்டுபகாரஞ்செய்ய வந்து மடிந்தனர். எவ்விடங்களிலும், எந்தச் சாதியிலும், எவ்வுயிரிலும், சூரர்களும், தாமமுடையோரும், நன்றி செய்பவரும், கருணை கூர்ந்தவருமிருப்பார்கள்,—

సీతాహరణజన్దుఃఖం న మే సౌమ్య తథాగతం।
యథా వినాశో గృధ్రస్య మత్కృతే చ పరన్తప॥

ஸீதாஹரணஜந்துக்கம் நமே ஸௌம்ய ததாகதம்।
யதாவிநாசோ க்ருத்ரஸ்ய மத்க்ருதே ச பரந்தப ||

அடா லக்ஷ்மணா! யான் சீதையைப் பறிகொடுத்த துன்பம் அத்தன்மையதாகவில்லை; என்பொருட்டே இவர் இறந்தனரே என்னும் துன்பமே எனக்கு மிகுந்துளது; நமக்கிவர் சக்கரவர்த்தியார்போலவே பூசிப்பதற்கும், மரியாதை செய்வதற்கும் உரியவர்; ஆதலின், நீ விரைவாகக் கட்டைகளைக் கொணர்க. கட்டையைக் கடைந்து தீ வளர்த்து, என்பொருட்டே மரணமுற்ற இவர்க்குத் தகனஸம்ஸ்காரஞ் செய்வேனென்றுரைத்துக் கட்டை

யிட்டனுப்பி, ஜடாயுவை நோக்கிப புள்ளிறையாகிய சக்கரவர்த்தியார் தோழரே!—

యాగతిర్యజ్ఞశీలానా మాహితాగ్నేశ్చయాగతిః।
అపరావర్తినాంయాచ యాచభూమిప్రదాయినాం॥
మయాత్వంసమనుజ్ఞాతో గచ్ఛలోకాననుత్తమాన్।
గృధ్రరాజమహాసత్త్వ సంస్కృతశ్చమయావ్రజ॥

*யாகதிர்யஜ்ஞசீலாநா மாஹிதாக்னேச்சயாகதி:|*
*அபராவர்த்தினாம்யாச யாசபூமிப்ரதாயினாம்||*
*மயாத்வம்ஸமனுஜ்ஞாதோ கச்சலோகானனுத்தமான*
*க்ருத்ராராஜமஹாஸத்வ ஸம்ஸ்க்ருதச்சமயாவ்ரஜ.||*

மஹாபலமுடைய் மஹாத்துமாவே! நீர் என பொருட்டுயிரை விட்டமையின், என்னுலேதானே ஸம்ஸ்காரஞ் செய்யப்பட்டவராகி, பற்பல யாகங்கள் செய்தவர்கள் அடையும் லோகங்களையும், ஆஹிதாக்கினிகள் (அக்கினியணையாமலே தாம சாமளவும் தினந்தோறும் ஹோமஞ் செய்துகொண்டு அக்கினியை வளர்ப்பவர்கள்) அடையும் லோகங்களையும், போரில் பயந்தோடாமல் தீரங்கொண்டு போர் செய்பவர்களும், அவ்வண்ணம் போர்செய்திறப்பவர்களும் அடையும் லோகங்களையும், பூதானம் செய்தவர்கள் அடையும் லோகங்களையும் அடைந்து, கடையில் மிகச்சிறந்த என்னுடைய நித்திய நிரதிசயானந்த ரூபமான ஸ்ரீ வைகுண்டத்தையும் அடையக்கடவீர். இவ்வண்ணம் யான் அனுக்கிரகஞ் செய்கின்றேனாதலின், தடையின்றி யடைந்து மகிழ்க; என்றுரைத்துச் சிதையடுக்கி ஜடாயுவை யதன்மேல் வைத்துத் தம்மினத்தாரைப்போல எண்ணித் துன்புற்று ஸம்ஸ்காரஞ்செய்து, தம்பியுடன் சென்று, பருத்த பெரு மிருகங்களையடித்து ஜடாயுவைக்குறித்துத் தூப புற்களைத் தரையில் பரப்பி, மாம்ஸங்களை யறுத்தெடுத்துப் பிண்டம்பிடித்து, இளம்புல்முளைத்த பூமியில் பிண்டப் பிரதானஞ்செய்து, இறந்தவர்களை வானேறறத்தக்க யாம்யஸூக்தம் முதலிய மந்திரங்களை ஜபித்து, கோதாவரிக்குச்சென்று, தம்பியுடன் நீரிலாடி ஜடாயுவைக் குறித்துத் தருப்பணஞ் செய்து முடித்தருளினார். அந்த ஜடாயுவும் பிறர்செய்தற்கரிய செய்கைகளைச் செய்து, புகழ்பெற்றிறந்து, மாதவர்க்குநிகரான பெருமாளால் விதிப்படி ஸம்ஸ்காரஞ்செய்தனுக்கிரகிக்கப்பட்டமையின், அப்பொழுதே நற்கதியடைந்து மகிழ்ந்தனர். பின்பு, பெருமாளிளையபெருமாளிருவரும் ஜடாயுவுக்குச் செய்கடன்களை முடித்து ஜடாயுவின் வாக்கியத்தையே நம்பிப் பிராட்டியாரைத் தேடுவதில் முயற்சியுற்று, இந்திரோபேந்திரர்களைப்போலத் திகழ்ந்து அங்கிருந்து புறப்பட்டருளினார்கள்.

**ஆரண்யகாண்டத்தில் அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

## அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

பெருமாளிளையபெருமாள் இருவரும் பற்பல காடுகளில் திரிந்து,
அயோமுகியென்னும் அரக்கியைச் சூர்ப்பணகையைப்
போலப் பங்கஞ்செய்து, கபந்தாசுரனுடைய கைகளின்
நடுவில் அகப்பட்டுக்கொண்டது

இவ்வண்ணம் பெருமாளிளையபெருமாளிருவரும் ஜடாயுவுக்குத் தருப்பணஞ்செய்து முடித்துப் புறப்பட்டுக் காடெங்கும் பிராட்டியாரைத் தேடிக்கொண்டே சிறிதுதூரம் மேற்றிசையாகச் சென்று, தெற்கே திரும்பி ஜனஸஞ்சாரமின்றி, மரஞ் செடி கொடி புதர்கள் அடர்ந்து மிகவும் அச்சந்தருவதும், புகற்கரியதுமாகிய வழியிற்சென்று, புலி கரடி முதலிய கொடிய விலங்குகள் நிறைந்த அக்காட்டை வேகமாகத் தாண்டி, ஜனஸ்தானத்துக்கு ஒரு காதம் தூரத்திலுள்ள நீருண்ட கொண்டல்போன்றதும், எங்கும் மலர்களால் மலிந்தது போன்றதும், பற்பல பறவைகளும், விலங்குகளும் நிறைந்ததும், அடர்ந்ததுமாகிய க்ரௌஞ்சாரண்யமென்னுங் காடெங்கும் பிராட்டியாரைத்தேடி, அங்கிருந்து காதவழித்தூரம் கிழக்காகச்சென்று, அந்தக் க்ரௌஞ்சாரணியத்தையும் தாண்டி, இதற்கும் மதங்காசிரமத்துக்கும் நடுவில் மிக்க கொடிய பலவகைப் பசு பக்ஷிகளுடையதும், பற்பல ஜந்துக்கள் நிறைந்ததும், புகற்கரியதுமாகிய காட்டில் மிகவும் ஆழ்ந்த பெருங்குகையைக்கண்டு, அது பாதாளம் வரையில் ஆழ்ந்திருப்பதையும், நள்ளிருள் சூழ்ந்திருப்பதையுமறிந்து, அதற்கருகில் பருத்துயர்ந்தவளும், பயங்கரமான முகத்தையுடையவளும், அற்பர்களுக்குக் கோரமாயிருப்பவளும், வெறுப்புறத்தக்கவளும், கோரரூபமுடையவளும், கூரிய கோரப்பற்களையுடையவளும், பருத்து மடிந்து தொங்குகின்ற வயிற்றினளும், கடினமான தோலையுடையவளும், கொடிய மிருகங்களைத் தின்பவளும், விரித்த தலையினளும், மதங்கொண்டவளுமாகிய ஒரு ராக்ஷஸியைக் கண்டனர்கள். அவளிவர்களைக் கண்டவுடனே ஓடிவந்து பெருமாளுக்கு முன்னெழுந்தருளிக்கொண்டிருந்த இளையபெருமாளைப் பற்றித் தழுவிக்கொண்டு, அவரை நோக்கிக் கேளீர் மஹாபுருஷரே! வாரீர் நாமிருவரும் புணர்ந்தின்புறுவோம்; யான் அயோமுகியென்னும் பெயருடைய ராக்ஷஸி; யானுமக்கு வாய்த்தேனென்பதே உமக்கு மிகுந்த லாபம்; நீரெனக்குப் பிரியராகின்றீர்; மலைச்சிகரங்களிலும், ஆறுகளின் மணற்குன்றுகளிலும், நீர் என்னுடன் கூடி யின்புற்று ஆயுளின் மிகுதி காலங்களைப் போக்கி வாழ்கவென்றுரைத்தனள். இளையபெருமாள் அம்மொழியைக் கேட்டவுடனே மிக முனிந்து, வாளையுருவி அவளுடைய முலை மூக்குச் செவிகளையரிந்து, வெருட்டி யோட்டிவிட்டனர். அவளும் கூவென்று கூவி வீறிட்டுக்கொண்டு வந்தவழிபற்றியோடினள். பின்பு ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் மிகக்கொடிய மற்றொரு காட்டினுட்புகுந்து செல்லுகையில், இளையபெரு

பூளை பெருமானை நோக்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு எம்பெருமையரே! என்னுடைய இடது தோள் மிகவும் துடிக்கின்றது; என் மனமும் நடுங்குகின்றது; மற்றும் பலவகையான கெட்ட சகுனங்களுமாகின்றன; இந்த அபசகுனங்கள் உடனே தீங்குவருமென வுரைக்கின்றன; ஆதலின், தேவரீர் மிகவும் ஊக்கமுற்றெழுந்தருளுக; வஞ்சுளமெனனும் இப் பறவை போரில் நாம் ஜயம் பெறுவோமென உரைக்கின்றதுபோலக் கூவுகின்றது; என்றிவ்வண்ணம் உரைத்துக்கொண்டே செல்லுகையில், அந்தக் காட்டையெல்லாம் முறிப்பது போல மிக்க கொடிய ஒரு பேரிரைச்சலுண்டாயிற்று; ஊழிகாலத்திற்போலப் பெருங்காற்றுண்டாயிற்று; இவ்வொலி எங்கிருந்து தோன்றிற்றென்று சுற்றிப்பார்க்கையில், நெடுந்தூரத்தில் ஒரு புதரில் மிகப் பருத்த வயிற்றினனும், மிகவும் கோர ரூபியுமான ஒரு ராக்ஷஸனைக்கண்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் எதிராகச் சென்று அவன் தலையின்றி, வயிற்றில் வாயுடையவனாகிக் கபந்தனென்னும் பெயர் யதார்த்தமாகி, மிக்க கூரிய மயிர்களை யுடையவனாகி, மாமலைபோ லுயர்ந்து, காளமேகம்போலக் கறுத்துக் கோரமாகக் காஜ்ஜித்து, நெற்றியில் அக்கினி ஜ்வாலைபோல எரிகின்ற ஒரு கண்ணும், மார்பில் ஒரு கண்ணுமாகப் பொருந்தி, நீண்ட கோரப் பற்களையுடைய அந்த வாயினை யடிக்கடி நாவினால் துழாவி நக்கிக்கொண்டு, சிங்கம் கரடி புலி மான் யானை முதலியவற்றைப் பக்ஷித்துக்கொண்டும், ஒவ்வொரு காத தூரம் நீண்ட இரண்டு கைகளையுஞ் சோதத்தணைத்துப் பற்பல பசுபக்ஷிகளையும் பிடித்துப்பற்றி யிழுத்துக்கொண்டிருப்பதை யொரு கோசதூரத்தில் கண்டனர்கள்.

அத்தருணத்தில் அந்தக் கபந்தனும் கைகளை நீட்டி இவ்விருவர்களுடன் கூடவே நடுவிலுள்ள எல்லாவற்றையும் வலுவாகப் பற்றி யிழுத்தனன். அப்பொழுதும் பெருமாள் மூத்தவராதலாலும், மிகச் சூரத்தனமையினராதலாலும், சிறிதும் அச்சமுற்றிலர்; இளையபெருமாள் பெருமாளுக்கெங்கே தீங்குநேருமோவென்று மிகத் துன்புற்றனர். அப்பொழுதவர் பெருமாளையும் நோக்கி, ஐயரே! யான் ராக்ஷசனுக்கு உணவாகுவேன் போலும், ஆதலின், தேவரீரைப் பாதுகாக்கத் திறமைகொண்டிலேன்; தேவரீர்க்குறு துன்பம் நோந்ததேயென்று யான் மிகத் துயருறுகின்றேன்; கடாக்ஷித்தருள்க; ஆதலின், தேவரீர் அடியேனை இவ்வரக்கனுக்குப் பலியாகக் கொடுத்துவிட்டருளித் தேவரீர் தப்பிச்சென்றருள்க; தேவரீர் விரைவாகவே பிராட்டியாரையடையப் போகின்றீர்; ஆதலின், தேவரீர் பிராட்டியாரைப்பெற்று, வனவாஸமுந்தீர்ந்து, திருவயோத்திசேர்ந்து, திருவபிஷேகம் பூண்டு, அடியேனை நினைந்தருள்கவென்றுரைத்தனர். பெருமாள் அது கேட்டிளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! நீ சிறிதும் அச்சமுறற்க; உன்னைப்போன்ற சூரர்களும் அச்சமுறுவாரன்றோவென்று தைரிய முரைத்தருளினர். அந்தச் சமயத்தில் அந்தக்கபந்தன் இவர்களை நோக்கிக் கேளீர் மானிடர்காள்! நீங்கள் எவர்கள்? ரிஷபம

போன்ற தோள்களை யுடையார்களும் சிறந்த வில் வாள்களை யுடையார்களு மாகிக் கோரமான இக்கானகத்தில் ஏன் வந்தீர்கள்? எனக்கு நீங்கள் இரையானீர்கள்; நீங்கள் இங்கெய்திய காரியம் யாது? அதனை யுரையீர்கள்; மிகவும் பசித்துள்ள என் வாயிலகப்பட்ட பின்பு, நீங்கள் பிழைப்பதரிதென்று உரைத்தனன். பெருமாள் அதுகேட்டு முகம்வாடித் துன்புற்று இளைய பெருமாளை நோக்கிப் பாரடா தம்பி! துன்பத்திலும் மிகத் துன்பமே நேர்ந்தது; அந்தச் சீதையைமாத்திரம் அடைந்திலோம்; காலமென்பது மிகத்திறமையுடையது; அதனை வெல்ல வொருவராலும் முடியாது; நீயும் நானும் ஒருசேரத் துன்பங்களினால் மோகமுற்றேமல்லோமோ? காலம் செய்வதற்கரிய செயலொன்றுமிலது; சூரர்களும், பலவான்களும், ஆயுதப்பயிற்சி யுடையார்களும், மிக்க சேனை யுடையோர்களாயினும், கெடுங்காலத்தில் போர்க்களத்தில் மணலணைகள்போல அழிந்திருக்கின்றனர்களல்லரோ? என்றிவ்வண்ணம் அருளிச்செய்ததும், இளையபெருமாள் பௌருஷமுற்றிருக்கக்கண்டு, தாமும் தமக்கியல்பாயுள்ள தீரத்தையும், மதியையும் மேற்கொண்டு உற்சாகத்துடன் நின்றருளினர்.

ஆரணியகாண்டத்தில் அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## எழுபதாவது ஸர்க்கம்.

பெருமாளிளையபெருமாளிருவரும் கபந்தனுடைய தோள்களிரண்டினையும் வாள்களினலரிந்தருளியது

பின்பு, ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் சிறிதுமச்சமின்றி நிற்பதைக் கபந்தன் கண்டு, மீளவும் இவர்களை நோக்கிக் கேளீர் மானிடர்களே! யான் பசித்துக் கைகளினால் பற்றி விழுங்குகையிலும், சிறிதும் அச்சமின்றி நிற்கின்

எவ்வளவு தீரமுடையோர்களும் சோகமாயினும், கோபமாயினும் நேருங்காலையில், தீரத்தையும், பொறுமையையும், தருமத்தையும் விட்டுவிடுவார்களென்பதையும், அப்படி நேரினும், தருமத்தைத் துறப்பது தகாதென்பதையும், யாவர்க்கும் அறிவிப்பதன்பொருட்டே பெருமாளிளையபெருமாளிருவரும் சோகமுற்றவர்போலவும், சினமுற்றவர்போலவும் பாவனைசெய்தனர்களே யன்றி, அவர்கள் அவ்வண்ணம் செய்தது உண்மையன்று, உண்மையாயின், இருவர்களும் ஒரேகாலத்தில் சினமுற்றுலகங்களை யழித்தாவதிருக்கவேண்டும், சோகமுற்றுத் தாமே யழிந்தாவதிருக்கவேண்டும், அப்படியின்றி, இளையபெருமாள் சினமாவது சோகமாவது கொள்ளுங்காலையில், பெருமாள் தேற்றியும், பெருமாள் கோபசோகங்களை யுறுங்கால் இளையபெருமாள் தேற்றியும், தருமத்தைத்தவறாமல் பாதுகாத்து வந்தனர்களல்லரோ? மேலேயும் இவ்வண்ணமேயிருக்கின்றது; இவர்கள் சோகமுறுவதுண்மையாயின், இந்தச் சர்க்கத்தில் கபந்தனைக்கண்டே அச்சமும் சோகமுங்கொண்ட இளையபெருமாள் மேல் ஸர்க்கத்தில் தீரமுற்றுப் பெருமானைத் தேற்றுவதும், இச்சர்க்கத்தில் அச்சமும் சோகமுமுற்று வருந்துவதும் எவ்வண்ணம் ஒக்கும், ஒருக்காலும் ஒவ்வாது; ஆதலின், இவர்கள் துன்புற்றது மாயையெனவே யுணர்க.

நீர்களோ? நீங்கள் யாவா? நீங்கள் அரசாகள்போலும, தெய்வமெனக்குண வாக உங்களை யளிததுவிடடது; இனி நீங்களுய்யீாகளென்று மொழிந்த னன. அதைசகேடடப பெருமாள் சிநதையுறறிருக்கையில், இளையபெரு மாள் நோக்கி, ஐயரே! இனி யாம சோகததை மேறகொண்டு சிநதையுறு வது தீது; இபபோழ்தே இநத ராக்ஷஸன தேவரீரையும், எனனையும விரைவில விழுஙகி விடுவான; ஆதலின, விரைவாகவே வாளகளினலிவனது தோள்களி ரண்டினையும அரிநது விடுவோம; இவன மிகக்கொடியவனும, கைகளமாத திரததிலேதானே திறமையுறறவனுமாகினறனன்; இதுவரையில பற்பல ஜன ஙகளையுங கொலைசெயதது, இபபோழது நமமையுங் கொலைசெயய முயலு கின்றனன; ஒரு தீசசெயலுமினறி, அடஙகி யிருபபவாகளைக கொலைசெய்வ தொன்றுமே க்ஷத்திரியாகளுககு அசுவமேதயாகததில காடடினினறும கொண்டுவரபபடட யாகததுககுரியதாகாத பசுககளைக கொலவதுபோலவே தீதாகும்; கொடியாகளைக கொலலுவது யாகபசுவைக கொலலுவதுபோலவே தருமமாகும; எனறு அககாலததிறகுத தககபடியுரைததனா.

கபநதன அமமொழியைச செவியுறறுச சினமுறறு வாயைததிறநது, இவாகளை விழுங்க முயனறனன உடனே காலதேசஙகளையறிநத ஸ்ரீராம லக்ஷ்மணாகளிருவரும முறையே அவ்வரககனுடைய வலததோளையும, இடததோளையும, வாள்களையுருவி யொரே வெடடாக வெடடித துணிதது விடடருளினாகள. உடனே யவவரககன கைகளறுநது ஊழிகால மேகம் போல காஜ்ஜனைசெய்து மூவுலகிலும ஒலியெழசசெய்து, தரையில வீழ்நது, தனது கைகளறுபடடு வீழநது குருதி பெருககககண்டு துயருறறு, இவாகளை நோககி மகானுபாவாகளே! தேவரீாகள் யாவரோ? அருளிசசெய்கவெனறு வினவினன. அதுகேடடு இளையபெருமாளவனை நோககிக கேளடா ராக்ஷஸா! இவர் இக்ஷ்வாகு குலததவா; ஸ்ரீராமரெனனுந திருநாமமுடையோா; யான் இவருடைய தமபி; லக்ஷ்மணனெனனும பெயருடையேன; இவருடைய பத தினியாகிய சீதாபிராடடியாரை யோரரககன களவுசெய்துகொணடு ஓடிவிட் டனன்; அவனைத தேடிககொணடே யாங்களிஙகெயதினோம; யானு முன்னை வினவுகினறேன் உரையாய்; நீ யாவன? என தலையின்றிக கபநதமாக இககா ட்டிலுறைகினறனை? நீ கணுக்கால முறிநது, வயிற்றில வாயினைப பொருந தியபுாளுகின்றனையெனறு வினவினா. கபநதன் அநத வாக்கியததைககேட் டவுடன் தேவேந்திரன தனக குரைததிருநத வாக்கியம் கனைவில தோன்றி மகிழ்வுற்று இவர்களைநோககி,மஹாபாகாகளே! தேவரீாகளுககு நலவரவாகக் கடவது. எனது நல்வினையினலேதானே தேவரீாகள எனது தோள்களை வாளினலறுத்தருளினீர்கள்; என்னுடைய நல்ல ரூபமும் அழிந்து இந்தக் கோரரூபமும் எனது தீசசெயலினல் சேர்நதது; அதனை யுண்மையாக விண் ணப்பஞ்செய்வேன் கேட்டருள்க; என்று மொழிந்து மகிழ்ந்தனன்.

ஆரண்யகாண்டத்தில் எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தோராவது ஸர்க்கம்.

### கபந்தன் தன் முன் வினையை யுரைசெய்தது.

அநந்தரம் கபந்தன் சக்கரவாத்தித் திருமகனை நோக்கிக் கேட்டருளீர் மஹாபல பராக்கிரமமுடைய ஸ்ரீராமசந்திரரே! யான் முற்காலத்தில் சூரிய சந்திரர்கள்போல மிகச்சிறந்த ரூபமுடையனாயிருந்தேன்; அப்போதும் பல மதத்தினால் இந்தக் கொடிய ரூபத்தை யெடுத்துக்கொண்டு காட்டிலுள்ள முனிவர்களெல்லோரையும் பீடை செய்துகொண்டு வருவேன்; ஒரு நாள் ஸ்தூலசிரரென்னும் மஹாரிஷி, காய் கனி முதலிய பண்டங்களை யிகுதியாகச் சேர்த்து வைத்திருக்கையில், அவைகளை யான் கெடுத்துவிட்டேன்; அதுகண்டு அவர் என்னை நோக்கி, அடா! தனுவின் புத்திரனான கொடியா! நீ எனக்கு இவ்வண்ணம் தீங்குசெய்தமையின், உனக்கெப்போதும் இந்த ரூபமே நிலைத்திருக்கக்கடவது என்று முனிந்து சாபமிட்டனர். உடனே நான் அவரை வணங்கி வேண்டுகையில், மீளவும் அவர் என்னை நோக்கி, அடா அஸுரா! ஸ்ரீராமசந்திரர் எப்பொழுதிங்கெழுந்தருளி உன்னுடைய தோள்களை யறுத்து உன்னைத் தீயிலிட்டெரித்தருள்வாரோ, அப்பொழுது தான் இந்தக் கோரரூபத்தை விட்டு முன்போலச் சிறந்த ரூபத்தை யடைவாய், என்று அருளிச்செய்தனர். பின்பிந்திரனுடன்போர்செய்து இவ்வண்ணம் கபந்தனாயினேன்; அதற்கு முன்னமே யான் கொடியதவஞ்செய்து நான்முகன் நாதனைச் சாக்ஷாத்தாகக்கண்டு நெடுங்காலம் வாழும்படி வரம்பெற்றுக்கொண்டு இனி எனக்குச் சாவில்லையால் இந்திரன் என்னை யாதுசெய்ய வல்லானென்று கர்வமடைந்து தேவேந்திரனைச் சண்டைக்கிழுத்துப் பொருதேன்; இந்திரன் கடுஞ்சினமுற்று வஜ்ராயுதத்தால் என் தலைமேலடிக்கையில், என்து தலையும் நிதம்பங்களும் சரீரத்தினுள்ளடங்கி யழுந்திவிட்டன, அப்பொழுது என்னுடைய யாசனையாலும், பிரஹ்மதேவன் வரத்தினாலும், என்னை இந்திரன் யமலோகத்திற்கனுப்பவில்லை, மேலும் யான் இந்திரனை நோக்கி, விண்ணவர் கோமானே! யான் வேதாவின் வரத்தினால் நெடுங்காலம் உய்வேனோ? காலுந்தலையுமின்றி. எவ்வண்ணம் பிழைப்பேனென்று வேண்டினேன்; அப்போதிந்திரன் என்மீதருள்செய்து, வயிற்றில் வாயினையும், ஒவ்வொருகாதம் நீளமுள்ள கைகளையும் வரமளித்து, என்னையும் நோக்கி, அடா தானவா! ஸ்ரீராமசந்திரர் உனது தோள்களை எப்போழ்தறுத்தருள்வாரோ, அப்பொழுதே நீ வானேறுவாயென்று முரைத்தனன். ஆதலின், யான் கைகளிலகப்பட்ட சிங்கம் புலி கரடி முதலிய எல்லாவுயிர்களையும் பக்ஷித்துக்கொண்டிருந்தேன்; இக்கொடிய ரூபத்துடனிருக்கையில், கண்ணிற்காணப்பட்டவைகளையெல்லாம் பிடித்துத் தின்னல்வேண்டுமெனத் தோற்றுகின்றது; இந்தக் கபந்தரூபம் எப்போது நீங்குமோவென்றும், தேவரீர் எப்போது எழுந்தருளுவீரோ வென்றும் எண்ணிக்கொண்டிட ...

ீருள்க; சுக்ரீவனென்னும வானராகோமான தமககு மூத்தோனும், இந்திரன் புத்திரனுமான வாலியினல் துரததி யோட்டபபட்டு நான்கு வானராக ளுடன் ரிசியமூகமலையில பமபாசரசினருகில வாழ்கின்றனன, அவன் மிகத் தோள்வலியுற்றவன; மஹாபலமுடையவன; மிகவொளிகொண்டு திகழ்பவன்; சததியம தவருதவன; விநயமுடையவன; தீரமுடையவன், நனமதி பூண்ட வன், மொழிவதிலும செயவதிலும மிகசசிறப்புடையோன; அவனா ராஜ்ஜியத் தினபொருட்டுத தமையனுல துரததபபட்டு ஈனதசையை யடைநதிருககின் றனன்; அவன் தேவரீருடன நேசமுறறுப பிராட்டியாரைத தேடியளிபபன். ஆதலின, தேவரீா துனபுறறக; எசசெயல எவவணணம ஆகவேணடுமோ, அசசெயல அவ்வண்ணமே யாகவேணடுமலலது, அதனை மாறறுவதரிது, காலததை யொருவரும மீறி நடககககூடாதனறே? தேவரீா இஙகிருநது விரைவாக வெழுநதருளக, அநதச சுகரீவமஹாராஜனைக கணடு நேசமுமாறி மோசம செயயாமலிருபபதறகாக அககினிசாக்ஷியாக அவனுடனதோழமை கொளளுக; அவன குரஙகேயாதலின, அவனுல எமககு யாது பயனென்று இகழநது அவமதி செயயறக, அவன நனறி யுடையவனும, நினைததபடி ரூபநதரிததுககொள்ள வலலவனும, தேவரீரைபபோலவே ஈனதசையுறறுச சகாயததைக கோருபவனும, வீரமுடையவனு மாகினறனன, அவனுடைய காரியததை இபபோழ்தே முடிததுக கொடுககத தேவரீாகளும வலலீாகள்; அவன தேவரீாகளுடைய காரியததையும, தான நனறிபெறினும, பெருவிடினும, தபபாமல செய்வான; அவன ரிக்ஷரஜசு எனபவா குமாரன, சூரியபக வானுடைய புததிரன, வாலியினுல பகைககபபட்டு அவனுககஞ்சிப பமபைக கருகில திரிநதுககொணடிருககின்றுன், ஆதலின, ஆயுதஙகளை மறைத்துக் கொண்டுபோய அவனைககணடு உணமையாக நேசஙகொளக; அவன தேவ தானவ ராக்ஷஸாதிகளது லோகஙகளை முறறுமுணாவான, அவன அறியாத இடமேயிலலது; ஆதலின, அவன் வானராகளுடன கூடித்தேடி சூரியகிரணம் செலலுமளவும சென்று பிராட்டியாரைககணடு கொணாநதளிபபான; நாறறிசைகளுககும வானராகளையும தேடுமபடி யனுபபுவான; பிராட்டியாா ராவணன் வீட்டிலிருககினும, மகாமேருவிலிருககினும, பாதாளததிலிருககினும, அவனறிநது அரககாகளைககொன்று தேவரீாககுக கொணாநது சமாபபிபபான்; ஆதலின, அவனைத தோழனுககிககொளக, என்று முடிவாக மொழிநதனன.

ஆரண்யகாணடததில எழுபததிரணடாவது ஸாககம

முற்றிற்று.

## எழுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

*கபந்தன் பெருமாளுக்கு நல்வழிகாட்டித் தானும் வானேறியது.*

கபந்தனிவ்வண்ணம் ஸுக்ரீவருடன் தோழமைகொள்ளும்படி யுரைத்து, மீளவும் பெருமாளை நோக்கி, கேட்டருளீர் ஸ்ரீராமபத்ரரே! தேவரீர் ரிச்யமூகத்தற் கெழுந்தருளவேண்டிய மார்க்கம் இங்கே செல்லுகின்றதே பார்த்தருள்க, இங்கே மேல்திசையில் நாவல், பாதிரி, பலா, அரசு, பலாசு, ஆல், தேக்கு, மருதம், மா, திலகம், நெல்லி, கடம்பு, அசோகம் முதலிய பற்பல மரங்களடர்ந்து மலர்ந்திருக்கின்றனவே, அவ்வழியாகவே சென்று அங்குள்ள கனிகளை யடித்தாயினும், பறித்தாயினும், புசித்துக் கொண்டெழுந்தருளுக; அக்காட்டைத் தாண்டிச்செல்லின், உத்தரகுருக்ஷேத்திரம்போல மிக வழகிய மற்றொரு காடிருக்கின்றது, அவ்விடத்தில் ஆறு பருவங்களும் எப்பொழுதும் விளங்குகின்றன, சைத்ரரதமெனனும் குபேரனுடைய உத்தியானவனம்போன்ற அந்தக் காட்டிலுள்ள மரங்கள் மேகம்போலவும், மலைபோலவும் விளங்கும், அவ்விடங்களிலும் இளையபெருமாள் அமிர்தம்போன்ற கனிகளை யடித்தாயினும், பறித்தாயினும் ஸமர்ப்பிப்பார்; அங்கிருந்து தேசங்களையும், காடுகளையும், மலைகளையுங்கடந்து பம்பையெனனும் புஷ்கரிணியைச் சேர்க; திருவடிகளை வருத்தத்தக்க சிறிய கல்லுகளின்றியும், கரைகளழியாமலும், பாசியின்றியும், இறங்குந்துறைகளில் ஆழமின்றியும், நொய்ய மணல்கள் படிந்தும், செந்தாமரை, வெண்டாமரை, செங்குவளை, வெண்குவளை முதலிய மலர்கள் மலர்ந்தும், ஹம்ஸ காரண்டவ ஸாரசம் முதலிய நீர்ப்பறவைகள் ஒலித்தும் விளங்கும்; அப்பறவைகள் தேவரீர்களைக்கண்டும் அச்சமுறா, அப்பறவைகளையும், பலவகை மீன்களையும் கண்டு மகிழ்க; அங்கே இளையபெருமாள் தாமரையிலையில் வெள்ளிபோலும் படிகம்போலும் விளங்குகின்ற அந்தப் பம்பா தீர்த்தத்தைக் கொணர்ந்து தேவரீர்க்குச் ஸமர்ப்பிப்பார்; அங்கு நீர் குடிப்பதன் பொருட்டு மலைக்குகையினின்றும் வந்த பற்பல வராகங்களையுங்கண்டு, மகிழ்வீர்; மாலைப்பொழுதில் அக்காட்டிலுலாவுவீராகில், மிக மகிழ்ந்து சோகத்தை மறந்து விடுவீர்கள்; அங்குள்ள மலர்களைக் கொய்பவரும் ஒருவருமிலர்; அம்மலர்களும் வாடுவதும், வதங்குவதும், உதிர்வதுமின்றி நிரந்தரம் விளங்கும்; அவ்விடத்தில் முன்பு, மதங்கமஹாமுனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தனர்; அவர் சீடர்கள் அக்காட்டில் காய் கனி கிழங்குகளை மிகுதியாகக் கட்டிக்கொண்டுவருகையில், அந்தச் சுமை சுமந்த வருத்தத்தால் சரீரத்தில் வேர்வைவிட்டு, அந்நீர்த்துளிகள் தரையில் வீழ்ந்தன; அத்துளிகளே அவர்களது தவத்தின் மகிமையினால் நறுமலர் மாலைகளாயின; அம்மாலைகள் ஒருக்காலும் அழிகின்றில; அவர்களுக்குப் பணிவிடை

செய்துகொண்டிருந்த தாதி சபரி என்பவள் இப்போழுதும் அங்கிருக்கின்றனள்; அவள் துறவறம்பூண்டு நெடுநாளாய்ப் பிழைத்திருக்கின்றனள்; அவள் தேவரீரைக்கண்டு தண்டம் சமர்ப்பித்துவிட்டே பொன்னுலகம் பெறவேண்டுமென்று காத்திருக்கின்றனள், அந்த ஆச்ரமமும் அந்தப் பம்பா புஷ்கரிணியின் மேற்குக்கரையைச் சார்ந்திருக்கின்றது, அக்காட்டிலும், அங்குள்ள மலைகளிலும், ஆனைகள் மிகுதியாகவுள்ளன, ஆயினும், அவ்வாச்ரமத்துக்குள் புகுகின்றில, இவ்வண்ணம் மதங்கமஹாமுனிவர் ஏற்பாடு செய்திருக்கின்றனர்; அவ்வாச்ரமத்திற்குத் தேவரீர் எழுந்தருளுவீராயின், நந்தனவனத்தில் வாழ்வதுபோல எண்ணி யானந்தமுறுவீர், ரிசியமூகமலையும் அந்தப் பம்பையின் கீழ்த்திசையிலிருக்கின்றது; அங்கு யானைகள் மிகுந்துள்ளவாதலின், அதன்மேலேறுவது வருத்தம்; அது முன்பு நான்முகத்தேவராலே தானே இயற்றப்பட்டது; அம்மலையின்மேல் படுத்துத் துயில்கொண்டு ஒருவன் கனவில் எப்பொருளைக் காணுகின்றனனோ, அதனை யவன் விழித்தவுடன் பெறுவான், அதன்மேல் தீவினையோர்கள் ஏறார்கள்; ஒருக்கால் ஏறித் துயில்வானாகில், அரக்கர்கள் வந்து கொலைசெய்து விடுவார்கள்; அவ்விடத்திலே தானே யானைக்குட்டிகளின் பிளிறல்கள் பலவாறாகக் கேட்கப்படும்; அங்குத்திரிகின்ற யானை கரடி புலி மான் முதலியவைகளைக் கண்டும் மகிழ்வீர்கள், அம்மலையி லொருபெரிய குகையும் கல்லினால் மூடப்பட்டுளது, அதனுள் புகுவது மிகவும் அரிது, அக்குகையின் கீழ்ப்புறத்தில் ஒரு பெரிய தடாகமுமிருக்கின்றது, அவ்விடத்திலேதான் சுக்கிரீவன் நால்வருடன் வாழுகின்றனன், ஒருக்கால் அம்மலையினுச்சியிலுமிருப்பான் அங்கெழுந்தருளுக, என றிவ்வண்ணமுரைத்து விடைகொடுத்துத் தானும் அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மீளவும் சுக்கிரீவனுடன் தோழமைகொள்ளுக வென்றுரைத்து மகிழ்ந்து வானேறினன். ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் அதுகேட்டு மகிழ்ந்து அவனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் புறப்பட்டருளினார்கள்.

ஆரண்யகாண்டத்தில் எழுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்துநான்காவது ஸர்க்கம்.

பெருமாள் இளையபெருமாளுடன் சபரியினால் பூஜிக்கப்பட்டு அவளை வானேற்றியருளியது.

அநந்தரம் ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் கபந்தன் காட்டியவழியைப் பற்றி மேல்திசை நோக்கி நடந்து, காய் கனிகள் நிறைந்த பற்பல மரங்களை

யுற்று பார்த்துககொண்டே அங்குள்ள மலைமேல் அனறிரவைப்போக்கி, மறு நாளெழுந்தருளி நடந்து பம்பாபுஷ்கரிணியின மேற்புறத்திலுள்ள சபரியின் ஆசிரமததைச்சேர்ந்து, சபரியைக் கண்டருளினார்கள்; சபரியும் இவர்களைககண்டவுடனே கைகளைக் கூப்பிக்கொண்டெழுந்து எதிர்கொண்டு வந்து, இவ்விருவர்களுக்கும் தண்டமசமர்ப்பித்து அர்க்கியபாத்தியாசமனீயம் முதலிய பூஜைகளை விதிப்படிசெய்து மகிழ்ந்தனள், பெருமாளும அந்தச் சபரியை நோக்கி, மாதவமுடையாளே! உனக்கு விக்கினங்கள் நீங்கித் தவம வளர்கின்றதா? உணவு சுருக்கிச் சினமும அடங்கியுள்ளதா? விரதங்கள் இடையூறின்றி முடிந்தனவா? உன மனம மகிழ்கின்றதா? நீ ஆசிரியர்க்குச்செய்த பணிவிடைகள் பயனபெற்றனவா? என்றிவ்வண்ணம குசலம விஞவியருளுதலும, மாயோகினியாகிய அந்தச் சபரியும பெருமாளை நோக்கி, ஸ்வாமி! தேவதேவோத்தமா! தேவசார்வபௌமா! லீலாமானுஷவிக்கிரகா! மாயோகிகளினுல உபாசிக்கப்பட்ட பரப்ரஹ்மமாகிய ஸ்ரீராமா! தேவரீரை அடியாள் தண்டமசமர்ப்பித்துப் பூஜைசெய்தேனுதலின், இன்றுதான் தவமும் சித்தித்தது, இன்றுதான் எனது தவமும் பயனபட்டது, இன்றுதான ஆசிரியர்களும பூஜிக்கப்பட்டனர்கள், இன்றுதான் என் பிறப்பும் நற்பயன பெற்றது, மீளவிந்தனையில், நித்திய ப்ரவத்திய நிரதிசயமான தனிவீடும்பேறும வாய்க்கின்றது;—

చక్షుషా తవ సౌమ్యేన పూతాస్మి రఘునన్దన।
గమిష్యామ్యక్షయాన్ లోకాన్ త్వత్ప్రసాదాదరిన్దమ॥

சக்ஷுஷா தவ ஸௌமயேந பூதாஸமி ரகுநந்தன।
கமிஷ்யாமயக்ஷயானலோகான தவதப்ரஸாதாதரிந்தம॥

கருணைகூர்ந்து குளிர்ந்த தேவரீருடைய கடாக்ஷத்தினுலயான தீவினைகள் முற்றுநீங்கது தேவரீருடைய அருளினலேதானே அழிவற்ற பற்பல பொன்னுலகங்களையும்பெற்று, பரமானந்தமுற்றுவேன, தேவரீர் திருச்சித்திரகூடத்திற் கெழுந்தருளுங்காலையிலே மதங்கமாமுனிவரது சீடர்களாகிய என்னுசிரியர்கள் திவ்விய விமானத்தின்மீதேறி வானேறினார்கள், அப்போதவர்கள் அடியாளை நோக்கி, அடி சபரி! உன்னுடைய இந்த ஆசிரமத்திற்குப் பெருமாள் இளையபெருமாளுடன எழுந்தருளுவார்; நீ யவரைக்கண்டு தண்டம சமர்ப்பித்துப் பூஜைசெய்து, அவருடைய அருளினல் வைகுந்தம பெறுவாயென்று உரைத்துச் சென்றனர்கள், யான் அதுமுதல தேவரீர் பொருட்டுப் பம்பாதீரத்திலுண்டாகிய பற்பல காய் கனிகளைச் சேர்த்துவைத்திருக்கின்றேனென்று விண்ணப்பஞ்செய்தனள். பெருமாளும அதுகேட்டவளை நோக்கி, மாயோகினி! உன்னுடைய மகிமையைக் கபந்தாசுரன உரைசெய்யக் கேட்டிருக்கின்றேன, அதனை இப்போழ்து நேராகக்கண்டு மகிழ

விரும்புகின்றேன்; உனக்கிஷ்டமுளதாயின், கட்புலனுக்குக என்று அருளி செய்தனர். சபரி யதுகேட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களை யவ்வனத்திற் றன்னுடன் திருளப்பண்ணிக்கொண்டுசென்று, அங்கங்கு சுட்டிக்காட்டிப் பெருமாளை நோக்கிக் கடாக்ஷித்தருள்க, ஸ்ரீராமசந்திரரே! நீருண்ட கொண்டல் போன்றதும், பற்பல பசுபக்ஷிகள் நிறைந்ததுமாகிய இவ்வனத்திற்கு மதங்கவன மென்றே பெயர், இவ்விடத்திலேதான் எமமாசிரியர்கள் விதியின்படி யாகஞ் செய்தனர்கள், அவர்கள் மிகவும மூப்புடையர்களாகி, அங்கங்கெழுந்தருளுந் திறமையற்றமையின், எழுகடல்களையும் தியானஞ்செய்தனர்கள். உடனே அக்கடல்களேழும வந்து வீழ்ந்தன, இங்கே கடாக்ஷித்தருள்க, எம்மாசிரியர்களால் அங்கே ஸ்நானஞ்செய்து மரங்களமேல உலர்த்தப்பட்ட மரவுரிகள இப்போழ்துங்காணப்படுகின்றன, தேவபூஜார்த்தமாக அவர்களால கொணடுவரப்பட்ட தாமரை நெய்தல முதலிய மலர்களும் வாட்ட முறுகின்றில, இவ்வனத்தை முன்பு கேட்டும அருளினீர், இப்போழ்து, கடாக்ஷித்தும அருளினீர், இனித் தேவரீரிடத்தில அனுமதிபெற்று, இச்சரீரத்தை விட்டு விட்டு, எமமாசிரியர்களுக்குச் சமீபத்திற்சேர்ந்து மகிழ்வுறக் கோருகின்றேனென்று விண்ணப்பஞ்செய்தனள். பெருமாளும இளையபெருமாளுடன் அவ்வாச்சரியத்தைக் கேட்டும கண்டும மகிழ்ந்து சபரியை நோக்கி, மாயோகினியே! நான உன்னால எனக்கு பூஜைசெய்யப்பட்டு மிக மகிழ்ந்தேன; இனி யுனது விருப்பின்படிச் செய்க; என்றருளிச்செய்தனர். சபரியும உடனே மகிழ்ந்து தீயை வளர்த்து அதில வீழ்ந்து மூப்புற்ற அச்சரீரத்தைத் துறந்து திவ்வியரூபமடைந்து, திவ்வியமான ஆடையாபரணங்களையும், நறுமலர் மாலைகளையும, நற்சாந்தங்களையுமுடையளாகி, மின்னற்கொடிபோல அவ்விடங்களை எங்கும விளங்கச்செய்து, தமமாசிரியர்கள் மகிழ்ந்து வாழும ஸ்ரீவைகுந்தத்தையடைந்து மகிழ்ந்து வாழ்ந்தனள்.

ஆரண்யகாண்டத்தில எழுபத்துநான்காவது ஸர்க்கம
முற்றிற்று

---

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்.

பெருமாளிளையபெருமாளுடன் சபரியின் ஆசிரமத்தினின்றும
பம்பா புஷ்கரிணிக் கெழுந்தருளியது.

---

இவ்வண்ணம் அந்தச் சபரி வானேறின பின்னர், பெருமாள் கணப்பொழுதாராய்ந்து, அம்முனிவர்களது மகிமையை நினைந்து வியப்படைந்து இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! இவ்வாசிரமமெங்கும் நன்றாகப்

...தம்; இது மிகவும் ஆச்சரியமுற்றத்தக்கது; இவ்விடத்தில் பசுபக்ஷிகள் ... அச்சமற்றுக் கூடி வாழ்கின்றன; இந்த ஏழுகடலுங் கூடிய தீர்த்தத்தில் ஸ்நாநமுஞ்செய்தோம்; பிதிரர்களுக்குத் தருப்பணஞ் செய்தோம்; ஆதலின், நமது தீவினைகள் தொலைந்தன, நல்வினைகள் வாய்த்தன; என் மனம் கலக்கமற்று மகிழ்கின்றது, இனி நமக்கு நலமே விளையும்; விரைவாகப் பம்பாஸரோவரத்தைச் சேர்வோம் வருக, அதனருகிலுள்ள ரிசியமூகத்திலேதான் சுக்கிரீவன் நான்கு மந்திரிகளுடன் வாழ்கின்றான்; அவன் வாலியின் பயத்தினால் வருந்துகின்றனன், அவனை விரைவில் காணவேண்டுமென என் மனம் துடிக்கின்றது, நமது காரியமாகிய சீதையைத் தேடுவதும் அவனாலன்றோ? என்றருளிச் செய்தனர். இளையபெருமாளதுகேட்டு அவரை நோக்கி, எம்மையரே! செல்வோம் எழுந்தருளுக; என் மனமும் துரைப்படுகின்றது என்று விண்ணப்பம் பண்ணினர். உடனே பெருமாள் அவ்வாசிரமத்தினின்றும் புறப்பட்டு எழுந்தருளி, நல்வினை தருவதும், ஆழ்ந்து நின்மலமான தீர்த்தத்தையுடையதும் பற்பல மரஞ் செடி கொடிகள் சூழ்ந்ததும், செந்தாமரைச்செங்கழுநீர் மலர்களினால் சிவந்ததும், வெண்டாமரை வெண்குவளைகளினால் வெளுத்ததும், கருங்குவளை கருநெய்தல்களினால் கறுத்தது மிருப்பதால் சித்திராஸனம் போன்றதும், நீரைப் பெருக்குவதுமாகிய அந்தப்பம்பையைத் தூரத்திலிருந்து கடாக்ஷித்துக்கொண்டே நடுவிலுள்ள மதங்க ஸரஸ்ஸில் ஸ்நாநஞ்செய்தருளி, கமல குவலய குமுத புண்டரீக கல்ஹாரங்கள் மலர்ந்தும், ஹம்ஸஸாரஸாதி நீர்ப்பறவைகள் ஒலித்தும் விளங்கிய அப்பம்பைக்கு நாற்புறங்களிலும் மலர்ந்த மாஞ்சோலையுற்றதும், மயில் குயில்கள் ஒலிப்பதும், திலகாமல காசோகமாலதீ குந்தநிந்துக நாகபுந்நாகசம்பக சாம்பேய நிசுள வகுள தாலத மால ஹிந்தால கரவீர பீஜபூர கரவீர காணிகார பாண்டூர ஸப்தபர்ண பாடலீகுட ஜகேதகி முதலிய மரஞ்செடி கொடிகள் மலர்ந்தும், தளிர்த்தும், கனித்தும், தழைத்தும், சுகசாரி காதி பறவைகள் கூவியும் திகழ்கின்ற சிறந்த வனத்தையும் கடாக்ஷித்துக்கொண்டே பம்பாநதியைச் சேர்ந்து மகிழ்ந்து பல பறவைகள் ஒலித்தும், பல மரங்களடர்ந்துமுள்ள பற்பல காடுகளையும், தடாகங்களையும் பார்த்துக்கொண்டே அப்பம்பையைக்கிட்டி, பற்பல மலர்கள் மலர்ந்தும், வண்டுகளொலித்தும், படிகம்போல நின்மலமான தீர்த்தத்தையுடையதாகியும், நொய்ய மணல் உற்றும் திகழ்ந்த அந்தப்பம்பையை நன்றாகக்கடாக்ஷித்துக் காமவேட்கையுற்று இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! இதனருகிலே தான் ரிசியமூகமிருக்கின்றது; அதிலேதானே ரிக்ஷராஜஸ்ஸின் புத்திரனான சுக்கிரீவன் வாழ்கின்றனன், ஆதலின், நீ யந்தச் சுக்கிரீவனிடம் செல்லுக நான் ராஜ்ஜியத்தையுமிழந்து, சீதையையும் பிரிந்து, யான் எவ்வண்ணமுய்வேனென்றருளிச்செய்து பம்பையிலிழிந்தருளினர்.

తతోమహద్వర్త్మసుదూరసంక్రమం క్రమేణగత్వా ప్రతికూలధన్వనం।
దదర్శ పంపాం శుభదర్శకాననాం అనేకనానావిధపక్షిజాలకాం॥

ததோமஹத்வாத்மஸுதூரஸங்க்ரமம் க்ரமேணகத்வாப்ரதிகூலதன்வனம்।
ததர்சபம்பாம்சுபதர்சகானனாம் அநேககாநாவிதபக்ஷிஜாலகாம்॥

இவ்வண்ணம் பெருமாளிளையபெருமாளுடன் சீர் பறவை மரஞ்செடி கொடிகளின்றி மிக கோரமான பெருவழியைக் கடந்து காணற்கினிய காடுகளை யுடையதும், பற்பல பசு பக்ஷிகளை யுடையதுமாகிய பம்பாஸரோவரத்தைக் கண்டருளினார்.

ஆரண்யகாண்டத்தில் எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஆரண்யகாண்டம்

முற்றுப்பெற்றது.